உ

சிவமயம்.

# திருக்குறட் குமரேச வெண்பா.

# காமத்துப் பால்.

( மூலமும் உரையும். )

ஆசிரியர்
ஜெகவீரபாண்டியன்.



தூத்துக்குடி,
வேலாயுதம் பிரிண்டிங் பிரஸில் பதிப்பிக்கப் பெற்றன.

வெகுதானிய-௵ ஆடி-௴

1938.

# இதன் பொருளடக்கம்.

## காமத்துப்பால்.

## நூற்சிறப்பு.

ஆன்றதிருக்குறள்களெனும் அரும்பெறல்மாமணிகளைமெய்ச்சரிதமென்னுஞ்
ஊன்றபசும்பொன் குயிற்றி யினிதியற்றிக் குமரேச வெண்பா வென்னும்
சான்றவெழில் மணிமுடியைத் தமிழ்த்தாயின் புறஅணிந்தான் தயவினெங்கும்
தோன்றுபுகழ் பரப்பியொளிர் ஜெகவீரபாண்டியனும் சுகுணவேளே. (௧)

கடல்கண்டோமென்றாலும் கரையாழ முதலியன காண்ட லின்றித்
திடல்கொண்டோர் படியாகத் தெரிந்தாச் செப்பிநிற்போம் திண்டோள்
வீர, அடல்கொண்ட மன்னருயர் குலத்தோன்றலான ஜெக வீரமாறன்
மிடல்கொண்ட நூலளவை விண்ணவரும் தெரியாராய் வியப்பரம்மா.

வெண்பா.

சிந்தாமணி யென்பர் தீங்கற்பகமென்பர்
நந்தாச் சுரபி யென்பர் நாவலர்கள்—செந்தமிழ்தேர்
மன்னன் ஜெகவீர மாறனுயர் நூலெலாம்
இன்னமிர்தம் என்பேம் எதிர்த்து. (எழிலியார்)

# மூன்றாவது
# காமத்துப் பால்.

அறத்துப்பால் பொருட்பால் என முன்னர் இரண்டு பால்கள் கூறப்பட்டுள்ளன ஆதலால் இது மூன்றாவதென நின்றது. அறம் பொருள் இன்பம் வீடு என்ற முறைப்படி இதனை இன்பப் பால் என்னாது காமத்துப்பால் என்றது என்னை? எனின், "காதல் இருவர் கருத்தொருமித்து ஆதரவுபட்டதே இன்பம்" என்றபடி அது, இனிதமைந்திருக்கும் நிலை கருதி என்க. என்னை நிலை? எனின், மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐம்பொறிகளும் ஐம்புலன்களின் வாயிலாகத் தமக்கினியபொருள்களைப்பற்றி நுகருங்கால் தனித்தெழுந்த சுவை யுணர்ச்சியே இன்பமாம். இஃது அருந்தல் பொருந்தல் என இருவகையுள் அடங்கும். அருந்தலாவது உணவு முதலியவற்றால் நிகழும் புறஇன்பம்; பொருந்தல் என்பது புணர்தல் முதலியவற்றால் எழும் அக இன்பம். ஆகவே ஐம்புலன்களை நிலைக்களமாக் கொண்டு இருவகை நிலையில் இது நிலவுவதாகும். காட்சி இன்பத்தைக் கண் துய்க்குங்கால் செவி முதலியன வறிதே யிருக்கும்; கேள்விச் சுவையைச் செவி நுகருங்கால் கண் வாய் முதலியன யாதும் அதனைக் காணலாற்றா. இங்ஙனமே ஒவ்வோர் இன்ப நுகர்ச்சியும் தனித்தனியே முனைத்தெழுவதாம். காமமோ ஒரு காலத்தே ஒரு பொருளிடத்தே ஒருங்கே நின்று இருபாலு மியைந்து ஐம்புல இன்பங்களும் ஆரத்துய்க்கும் அமைவுடைத் தாம் ஆதலால் இவ் இன்பப்பகுதி காமத்துப்பால் என நின்ற தென்க. "கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் ஐம்புல னும் ஒண்டொடி கண்ணே உள" (குறள் 1101) என்று அடிகள் அருளியுள்ளதும் ஈண்டு அறியத்தக்கது.

அறம் முதலிய நான்கு உறுதிப் பொருள்களையும் தொடர்ந் தெண்ணுங்கால் வடமொழியாளர் இவ் இன்பத்தைக் காமம் என்றே உரைத்துள்ளதும் உணர்க. காமம் என்பது அத்துச்

சாரிணை பெற்றுப் பாலொடு புணர்ந்து காமத்துப்பால் என நின்றது.

காமம் எல்லாத் தீமைகளுக்கும் மூலமாயுள்ளது; ஆகலால் அதனை ஒழித்தொழுக வேண்டுமென்று பலர் சொல்லவும் உணர்த்தி நிற்ப, நம் தேவர் இதனை விதியாக வகுத்து இங்ஙனம் விரித்துரைத்தது என்னை? எனின், நன்று கடாயினாய்! பாவங்களுக்கு காமமே தீமை பயப்பதாம்; புண்ணியத்தின் பயனுறுள்ள இது மக்கட்கு இன்றியமையாததாய் நின்று இனிய போகங்களை விளைத்து, அரிய சந்ததிகளை உளவாக்கி, உரிமையுறவுகளை வளர்த்து, பெருமைகள் பல பெருக்கி முடிவில் வீட்டின்பத்தையும் கூட்டிவிடுமாதலால் உயிர்க்குரிய உறுதிப் பொருள்களுள் ஒன்றாக வைத்து ஓம்பப்படும் என்க. உடம்பை விட்டு அகன்று போய் மறுமையில் அனுபவிக்கும் துறக்க இன்பங்கள் எவற்றினும் வீட்டின்பம் உயர்ந்தது; அதுபோல் உடம்பை ஒட்டி இங்கு அனுபவிக்கும் எல்லா இன்பங்களினும் இக் காம இன்பம் மிகச் சிறந்ததாம்; அது பேரின்பம் எனப் பிறங்கியுள்ளது; அதன் நேரினமாயுள்ள இது சிற்றின்பம் என இயன்று சிறந்து நிற்கின்றது.

ஆண்மை பெண்மை என இரு கூறாய் இணைந்து நின்று இயங்கி வரும் இவ்வுலகம் உவந்தணைந்து நுகர்ந்து உயர்ந்து திகழ்தற்கு அமைந்த நலமாயிசைந்துள்ள இக் காமம் அவ்வுலகத்தும் சிறந்து திகழ்ந்துள்ளதென்க.

காமப் பகுதி கடவுளும் வரையார்
ஏனோர் பாங்கினும் என்மனார் புலவர். (தொல்காப்பியம்)

"ஓவருந்தவம் இயற்றிய முனிவரில், உலகத்
தேவர் தங்களில், பாதலத்தோர்களில், சிறந்த
மூவரொன்றுபேர் பெற்றிடு முதல்வர்கள் தம்மில்,
எவர் மங்கையர் முலைத்தலைப் போகம் விட்டிருந்தோர்? (1)

ஆகம் கோவுற வருந்தியே ஐம்புலன் அவித்து
மோகமாதிய மூவிரு குற்றமும் முருக்கி
யோகு செய்திடு மேலையோர் பெரும்பய னுரைக்கின்
போகமன்றி யொன்றில்லை காண் எல்லைதீர் புகழோய். (2)

மயிலியல் துவலான் மதிமுக மடந்தையர் புணர்ப்பினைச்
சிறிய இன்பம் என்றனர் செய்யர்; அன்னதன் சிறப்பினை
அறிவரேல் எனின் துய்த்திடு பேரின்பமாரதும்;
இறைவ! கேளது கெட்டிபேயல் மொழிதருவன் என்றான்.''(௩)
(கந்தபுராணம்)

''பெண்ணலத்தினைப் பேறுதவர் மணியினைப் பெறுதார்;
பெண்ணலத்தினைப் பெற்றவரே மகப் பெற்றார்;
பெண்ணலத்திறுதன் மையுமெய்த் திருமையும் பெயவார்;
பெண்ணலத்திறலன் றியேயார் பெறுப் பொருளுண்டோ?''
(பிரமோத்தரகாண்டம்).

காமத்தின் இயல்பும், உயர்வும், அது கருதி நிற்கும் குறிக்கோளும், அதனால் எய்தும் பயனும் இவற்றால் இனிதறியலாகும். இக்காமத்தின் மாட்சியைக் குறித்து இன்னவாறு பல நூல்களும் கூறியுள்ளன.

அறத்தால், பொருளும்; அப் பொருளால், இன்பமும்; அவ் இன்பத்தின் நிலையறிந்து தலைமையோடு எழுதலால் வீடும் எய்தலாம் என்பது தோன்ற முறையே ஒன்றன்பின் ஒன்றாய்த் தொடர்ந்து புருடார்த்தங்கள் நின்றுள்ளன காண்க. அந்த அந்தமிலின்பத்தை எய்துமாறு இந்தச் சிந்தையினின்பத்தை இங்குப் பெய்து வைத்துள்ளார் என்க. என்னே வைப்பு? எனின், பின்னே நோக்குக.

இந் நில உலகில் உருவும் திருவும் அறிவும் செறிவும் குலமும் குணமும் அழகும் அன்பும் உண்மையும் திண்மையும் முதலிய உயர் நலங்கள் யாவும் ஒருங்கே அமைந்து எந்நன்றும் இளமைச் செவ்வியோடு நிலவி நிற்கும் ஓர் தலைமகனும், அத்தகைய ஓர் தலைமகளும் தாம் பண்ணிய புண்ணிய வசத்தால் இருவரும் தனியிடத்தே தலைப்பட்டு ஒருவரை ஒருவர் உவந்து நோக்கித் தான்வேறு அவள் வேறு என்னும் ஊனமையின்றி உள்ளமுருகிப் புனலொடு புனல் கலந்தாற்போல் உயிரொடு உயிர் கலந்து அன்பு மயமா யனுபவிக்கும் உயரின்பமே இங்கு உரைக்கப்பட்டுள்ளது. இதனை உணரவே இத்தகைய இன்பத்

தைத் தான் பெற்று அநுபவிக்கவேண்டுமென்று ஒரு மகன் எண்ணுவன்; எண்ணவே அதனை எவ்வாற்றான் எய்தலாம் என ஆராய்வன்; ஆராய அது, புண்ணியத்தால் நண்ணும் என்று தெளிவன்; தெளியவே "வேண்டிய வேண்டியாங் கெய்தலால் செய்தவம் ஈண்டு முயலப்படும்" என்னும் இயல்பினையுணர்ந்து தவமுயன்றுகொள்வன்; கொள்ளவே கருதிய இவ் வுயரின்பம் கைவந்து கூடும்; கூடவே இதனைக் கடைபோகத் துய்ப்பான்; துய்த்துக்கழித்தபின் இறுதியில் இதனியல்பெல்லா முழுதுந் தெரிவன்; தெரியவே இதனினும் வேறாய் என்றும் மாறாது நிற்கும் பேரின்ப நிலையை நாடி மெய்யுணர்வெய்தி அதனைப் பெற்றுப் பெருமகிழ்வுற்று நிற்பன் என்க.

> "காமஞ் சான்ற கடைக்கோட் காலை
> ஏமஞ்சான்ற மக்களொடு துவன்றி
> அறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியும்
> சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே." (தொல்காப்பியம்)

தலைவியும் தலைவனும் காமம் நுகர்ந்து கடைக்காலத்தில் அறம்புரி சுற்றமாகிய ஒக்கலோடும் மக்களோடும் உடனமர்ந்து நின்று சிறந்ததாகிய வீட்டின்பத்தை அடைந்து கோடற்கு அமைந்த சாதனமாய் இயைந்து நிற்பதே இவ் இன்பத்தின் பயன் என இது விளக்கி நிற்றல் காண்க. இனி இவ்வாறன்றிக்

> "குடருங் கொழுவுங் குருதியும் என்பும்
> தொடரும் நரம்பொடு தோலும் — இடையிடையே
> வைத்த தடியும் வழும்புமாம் மற்றிவற்றுள்
> எத்திறத்தாள் ஈர்ங்கோதை யாள்"

எனப் பெண்ணலத்தினை யிகழ்ந்துவிட்டு ஒரேயடியாக அப் பேரின்பத்தினைப் பேணிச்செல்லலாகாதோ? எனின், அச் செலவும் பல பிறவிகளிலும் அடிப்பட்டு நின்று இவ் இன்பத்தை நுகர்ந்து முடிவான பிறவியில் அரிதாகத் தோன்றுமாதலால் அங்ஙனம் தோன்றிச் செல்வார் அணித்து செல்க; அது பரி பக்குவமான மிகச் சிலர்க்கேயன்றிப் பலர்க்கும் அமையாது; என்னை? பல்லூழி காலம் பெண்ணும் ஆணுமாய்ப் பிறந்து கண்

றும் ஒளியும் போற் கலந்து காதலின்பத்தை நுகர்ந்து வாசனை யைத் தராய்ப் போந்துள்ள மாந்தர் இப்படி முறையைச் சார்ந்து நின்றே பெரும்பாலும் சேர்ந்து வாழ்வர் ஆகலால் இக்காமப் பாலை வரம்பாளராக மேலோர் கருதியுள்ளார் என்க.

பசியைப்போல் மக்கட்கு இன்பப்பயனாவதாய் இயற்கை யில் அமைந்துள்ள இக்காமத்தை வரம்பு செய்து அறம்புரி கொள்கையோடு இறப்படைத்து இங்ஙனம் உணர்த்தவில்லை யாயின் விலங்கினங்கள்போல் கண்டபடி நுகர்ந்து கழித்து திரிந்து இருபாலாரும் இழிந்து போவாராதலால் அங்ஙனம் போய்த் தொலையாதபடி இவ் இன்பத்தை அன்புத்தளையால் அமைத்துச் சுவை பெருக அருட்பெருக்கோடு அடிகள் இப் பாலில் விளக்கி வைத்துள்ளார். இவ்வைப்பு முறையை உய்த்து நோக்கி உணர்ந்துணரின் இவ்வுண்மை இதில் இனிது புலனாம். பசிக்கு மருந்தாகிய உணவினைச் சுவைபெறச்செய்து அமிர்தென வைத்தால் அதனை உண்டவர் தேவர்போலச் சிறந்து விளங்கு வர்; தெய்வத்தன்மையை எய்தினலன்றி அதனை உண்ணமுடியா தென அமைந்து, உயர்த்திவிடும்; அதுபோல் காமத்தின் மருந் தாகிய கலவி நிலையைத் தலைமையுறத் திருத்தி உயர் நிலையில் வைத்தால் அதனைத் தோய்ந்தவர் கந்தருவர்போல் சுந்தரமுடை யராய்ச் சிறந்து திகழ்வர்; அதனைத் தோய்தற்குரிய விழுமிய தகுதியை விழைந்தெய்தி மேன்மை மிக்கு மேலும் மேலும் மக்கள் உயர்ந்துபோவர் என்க.

இதன் சிறப்பையும் குறிக்கோளையும் அளித்து நோக்கா மல் காமம் என்ற பெயரைக் கேட்டவுடனே கொச்சையாக நினைத்து சிலர் குப்புறுகின்றனர்; இழிந்த இச்சையில் அழுந்திக் கிடக்கும் கழிந்தவுணர்வினர் சிலர் தம் கைபொழுக்கமாக இத னைக் கருதிக்கொண்டு களித்துத் திரிகின்றனர்; சிலர் இதற்குத் தத்துவ அருத்தங் கூறித் தாவி விழுகின்றனர்; இன்னவாறு வேறுவேறாக மாறுபடக் கருதிப் பலர் கூறுபடுதற்குக் காரணம் தங்கள் அனுபவத்தில் கண்டதுபோல் நின்று உண்மையில் வேறு நிலையில் காட்சியுற்றிருக்கும் இதன் மாட்சியேயாம்.

ஆண் பெண் என்னும் இருபாலார் கண்ணும் இயல்பாக எழுகின்ற இன்ப நிகழ்ச்சியை அன்பு என்னும் சொற்பொருண்மையில் நிகழச்செய்து தெய்வப்பெற்றி தோன்றச் சீர்பெற வைத்துள்ளமையால் இதனை அன்பொழுக்கம் என்பர்.

புறத்திற் புலனாகாமல் அகத்தில் நிகழ்கின்றமையால் இஃது அகப்பொருள் எனவும் படும். "அகத்தெழு சுவையை யான் அகமெனப் படுமே" (சயந்தம்). இதன் இயல்வகைகளைத் தெளிவுற விளக்கித் தொல்காப்பியனார் அழகுற அமைத்து வைத்துள்ளார்.

பரமனை நினைந்து உளமுருகி நின்ற பெரியவராகிய மாணிக்கவாசகர் இறைவனைத் தலைவனாகவும் தன்னைத் தலைவியாகவும் வைத்து அகப்பொருட்சுவை ததும்ப இவ் அன்பொழுக்க நிலையில் ஓர் இன்ப நூலை நன்கு இயற்றியுள்ளார்; அது **திருக்கோவையார்** என வழங்கப் படுகிறது. நம்மாழ்வாரும் அவ்வாறே இவ்வகையில் ஓர் அருமை நூலை ஆக்கியிருக்கிறார். அமரர் குருவாகிய வியாழபகவானும் இவ் இன்ப நிலையை இனிது விளக்கி இந்திரனுக்கு உணர்த்தியுள்ளான். அந்நூல் வியாழமாலை என விளங்குகின்றது. பரமனும் தன் பெயரால் இக் காமப்பாலின் இயல் நலங்கள் யாவும் இனிது விளங்க ஓர் அரிய நூலை ஆக்கி அருளியுள்ளார்; அஃது இறையனாரகப் பொருள் என்னும் பெயரால் நிலவுகின்றது. இங்ஙனம் முனிவரும் அமரரும் முழுமுதற் பரமனும் தனி மிக விழைந்து நயந்து பேணியுள்ள இன்ப நிலையமாகிய இவ் அன்பொழுக்கத்தைக் களவு, கற்பு என இருவகையாக வகுத்துக்கொண்டு இருபத்தைந்து அதிகாரங்களான் அடிகள் இதில் உணர்த்துகின்றார் என்க.

முதலாவது

## களவியல்

களவு என்பது பிறருடைய பொருளை அவர் அறியாவகை ஒருவன் கவர்ந்து கொள்வதன்றோ? இப்பெயரை ஈண்டு இட்டது என்னை? எனின், நன்று கூறினாய்! "உள்ளங்கவர் கள்வன்

என்று இறைவனை நோக்கிக் கூறியிருத்தலும், வேதத்தை மறை என்றலும் போல் இப்புனித ஒழுக்கத்தில் நிகழும் ஓர் இனிய நிலையின் இயைபு நோக்கி இப்பெயர் எய்தியுள்ளது என்க. என்னை இயைபு? எனின், மேற்குறித்தபடி ஒப்புயர்வற்ற சிறப்பினையுடைய தலைவனும் தலைவியும் ஊழ்கூட்டக் கூடிக் கொடுப்பாரும் அடுப்பாருமின்றி உழுவலன்போடியைந்து பிறரறியாவண்ணம் ஒழுகும் ஒழுக்கத்தை இதில் உணர்த்துகின்றதாதலால் இது களவியல் என நின்றதென்க.

இவர் வந்து கூடும் விதத்தைக் கல்வி வீராகிய நக்கீரர் களவியலில் அழகுறக் கூறியுள்ளார். அவரது விழுமிய உரை நடையின் அருமை பெருமைகளும், அக நிலையின் எழிலமைதிகளும், பொழில் நிலைகளும் அறிந்து மகிழத்தக்கன.

நிறைந்த அன்பினர் இருவர் பிறந்த இடமாகிய சிறந்த நிலையிலுள்ள பெற்றவரும் அறியாவகை காத்துநின்று நுகர்ந்து வருதலால் இது களவென வந்தது.

"களவெனப்படுவது யாதெனின்
வளைகெழு முன்கை வளங்கெழு கூந்தல்
முளையெயிற் றமர்நகை மடநல் லாளொடு
தளையவிழ் தண்டார்க் காமன் அன்னோன்
விளையாட்டிடமென வேறுமலைச் சாரல்
மானினங் குருவியொடு கடிந்து விளையாடும்
ஆயமும் தோழியு மருவி நன்கறியா
மாயப் புணர்ச்சி என்மனார் புலவர்" என்பதும் காண்க.

இக் களவொழுக்கத்தைக் கந்தருவ வழக்கம் என்பர். அன்பினால் நிகழ்வதாகலின் இஃது அன்பொழுக்கம் எனவும் அழைக்கப்படும். இஃது எண்வகை மணங்களுள் ஒன்றாகும்.

அன்பின் ஐந்திணைக் களவெனப் படுவது
அந்தணர் அருமறை மன்றல் எட்டனுள்
கந்தருவ வழக்கம் என்மனார் புலவர்.

(இறையனாரகப்பொருள்)

உளமலி காதற் களவெனப் படுவது
ஒருநான்கு வேதத்து இருநான்கு மன்றலுள்
யாழோர் கூட்டத் தியல்பின தென்ப.
(அகப்பொருள் விளக்கம்)

இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கிற்
காமக் கூட்டம் காணுங் காலை
மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்
துறையமை நல்யாழ்த் துணைமையோர் இயல்பே.
(தொல்காப்பியம்)

இம்மணத்தைக் குறித்து இவை உணர்த்தி யிருத்தல் காண்க.

இருபாலாரும் உரு திரு முதலியவற்றால் பொருவிறந்து பேரழகுவாய்ந்து என்றும் இளமையோடு போகந்துய்த்து நிற்கும் புண்ணிய சீலினராதலால் காதலின்பத்தில் எல்லையாளராக் கந்தருவர் எண்ண நின்றனர். காமதேவராய் நிலவி நிற்கும் அவரது உலகம் போக பூமியென்று புகலப்படும்.

"இருவரே தோன்றி என்றும் ஈறிலா ஆயுள் எய்தி
ஒருவரோடொருவர் உள்ளம் உயிரொடும் ஒன்றேயாகிப்
பொருவரும் இன்பந்துய்த்துப் புண்ணியம் புரிந்தோர்வைகும்
திருவுறை கமல மன்ன நாட்டையும் தெரியக்கண்டான்."
(இராமாயணம்)

காதல் நலங்கனிந்து ஐம்புல இன்பங்களும் ஆர நுகர்ந்து சுந்தரமுடையராய் நிலவும் கந்தருவர் நிலையைக் குறித்துக் கம்பர் இதில் உணர்த்தியிருத்தல் காண்க.

உற்றார் ஊரார் அறிய அக்கினியங்கடவுள்முன் மங்கலச்சடங்குகள் ஆற்றிப் பெற்றோர் கொடுப்பதும் பேணிக்கொள்வதுமாகிய ஏனைமுறை யாதும் இன்றிக் காதலிருவரும் தாமே எதிர்ப்பட்டு ஆர்வம்பெருக நின்று கந்தருவர் அணைந்துவாழும் இயல்பினராதலால் அவர்போல் இணைந்தொழுகும் இது காந்தருவம் என நின்றது. இது வேதத்தில் விதிக்கப்பட்ட எண்வகை மணங்களுள் ஐந்தாவதாகக் கருதப்பட்டுள்ளது. அவ் எண்வகையாவன பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், ஆசுரம், இராக்கதம், பைசாசம் என்பனவாம்.

"பிரமம் தெய்வம் பிரசாபத்தியம்
ஆரிடம் காந்தருவம் ஆசுரம் இராக்கதம்
பைசாசம்மிவை எண்வகை மணமே" (பிங்கலந்தை)

இங்ஙனம் வேதவொழுக்கமாயமைந்துள்ள இதனைக் களவு என்றது உலகம் அறிய மணந்துகொள்ளுதற்கு முன்னரே இருவரும் கலந்தொழுகும் திறங்கருதி என்க. பிறரறிய மணந்து இரு முதுகுரவரும் கற்பித்த வழியே நடத்தலான் பின்னியது கற்பு என நின்றது. கற்பினும் முற்பட்டுத் தோன்றிப் பொற்புமீக் கூர்ந்து அன்புநலங் கனிந்து இன்பம் சார்ந்து நிற்கும் இயல்பினது ஆதலால் அத்தலைமைதோன்றக் களவியல் முதலில் நின்றது. களவினின்றும் வெளிப்பட்டு உலகறிய மணம் புரிந்து மனை யமர்ந்து வாழுதல் கற்பாம் என்க.

தகையணங்குறுத்தல், குறிப்பறிதல், புணர்ச்சி மகிழ்தல், நலம்புனைந்துரைத்தல், காதற்சிறப்புரைத்தல், நாணுத்துறவுரைத்தல், அலரறிவுறுத்தல், என்னும் ஏழு அதிகாரங்களால் இக் களவியலை அளவுசெய்து உளவறிய உரை செய்கின்றார்.

## 109-ம் அதிகாரம் தகையணங்குறுத்தல்.

அஃதாவது மேற்குறித்தபடி ஊழ்வகையால் வந்து தலைவியை எதிர்ப்பட்ட தலைமகன் அவளது அழகுமுதலியவற்றைக் கண்டு அளவிலுவகைகொண்டு ஆசைமீக் கூர்ந்து வருந்துதல். தகை என்பது அழகு பெருமைகளை யுணர்த்திவரும். "தகையென்பதழகு பண்பு தகையொடு பெருமை நாற்பேர்" (நிகண்டு) என்றபடி அது தலைவியினது எழில் நிலையைக் குறித்து நின்றது. அணங்கு = வருத்தம். உறுத்தல் = உறுவித்தல்; ஊன்றி யுடற்றல். தகையணங்குறுத்தல் என்பதற்குப் பொருள் தலைமகளது அழகு தன்னை வருத்தி நிற்றலைத் தலைமகன் தனக் குள்ளேயே சொல்லிக்கொள்ளுதல் என்பதாம். அங்ஙனமாயின் அழகணங்கு என்னாது தகை என இங்ஙனம் வகைசெய்து வைத்தது என்னை? எனின், குலம் குணம் பருவம் உருவ முதலிய

வற்றால் தகவுடையளாய் நின்று தலைமகனை நிலைசெய்து நிற்கும் அவளது தகுதிதோன்ற என்க. தாக்கணங்குபோலத் தகவின்றி ஒழியாது தனக்குரிமையாய்த் தகவமைந்து நிற்றலால் இது தகையணங்கு என நின்றது. கண்ணுற்றபோழ்தே நிகழ்வதாகலின் இது முன் வைக்கப்பட்டது. இராமனைப்போல் ஓர் விழுமிய தலைமகனையும், சீதையைப்போல் ஓர் அழகிய தலைமகளையும் புதுவதாகப் படைத்துக்கொண்டு புலமைச்சுவை கனிய நம் தேவர் இவ் இன்பச் சுவையை உலகம் நலமுற உணர்த்தியுள்ளார் என்க. இல்லாததை இங்ஙனம் கற்பித்துக் கூறலாமோ? எனின், இல்லதாயினும் உயிர்கள் நல்ல நிலையை யடையும்படி இனியதாகப் புனைந்து வனைந்து சொல்லலாம் என்க. உள்ளதை உள்ளபடி உரைத்தல் உலகியல் எனவும், ஒன்றை உள்ளதாக உணர வுரைத்தல் புனைந்துரை எனவும் உணர்ந்து கொள்க.

> "புனைந்துரை உலகியல் எனுந்திறம் இரண்டினும்
> தொல்லியல் வழாமல் சொல்லவும் படுமே" (அகப்பொருள்)

இயல்நெறி வழாமல் இங்ஙனம் அலங்காரமாக ஒன்றைப் புனைந்து சொல்லின் உள்ளம் இனிதாகவும் தெளிவாகவும் உணர்ந்து கொள்ளும் ஆதலால் புனைந்துரை முதலில் நின்றது. இவ்வண்ணம் புனைந்து கூறுவதில் ஒருவனும் ஒருத்தியும் என்றது தலைவனும் தலைவியும் என்றது குலம் நல முதலியவற்றால் எவரினும் தலைமையுடையர் என்னும் அவர் நிலைமை தோன்ற. இவ் இருவரும் தெய்வகதியாய் ஓர் தனியிடத்தே வந்து ஒருவரை ஒருவர் சந்திக்கின்றனர். சந்தனம் சண்பகம் தேமா தீம்பலா ஆசினி அசோகம் கோங்கு வேங்கை புன்னை புன்கு பாதிரி முதலிய அரிய இளமரங்களடர்ந்து, மல்லிகை முல்லை பிச்சி முதலிய இனிய மலர்கள் நறுமணங்கமழ்ந்து, எழிலமைந்துள்ள பொழிலினிடையே சீர் பல நிறைந்த ஓர் நீர் நிலை மருங்கு பேரழகுடைய அக் கன்னி ஆரணங்குபோல் தனியே நின்றாள்; அங்கு அடுவிலையேந்தி வடிவுகொண்ட மன்மதன்போல் வந்த தலைமகன் அவளைக் கண்டான்; கண்ட அவன் அவளது காமர் நிலையை வியந்து வியந்து நோக்கி வருந்தி நின்றதும், பின்பு குறிப்பு அறிந்து அ—

ளைக் கூடி மகிழ்ந்ததும், குலாவிப் புகழ்ந்ததும், காதல்நலங் கூறிக் கருதி மொழிந்ததும், ஆதரம் பெருக அருமணம் புரிந்ததும முறையே இவ் இயலில் அறியலாகும். இவ் இன்ப நலங்களெல்லாவற்றிற்கும் ஏதுவாக முன்புறக் காட்சி நிகழ்ந்ததாதலால் அம் மாட்சியால் அது முதலில் நின்றது. இக்காட்சி நேர்ந்தபோது தலைமகன் கருத்தில் நிகழ்ந்த காதல் இயல்பும், காதலி நிலையைக் குறித்துத் தன்னுள்ளேயே அவன் ஓதி நின்ற நிலையும் இவ்வதிகாரத்தில் இனிது உணரலாகும்.

---

1081. கண்டணங்கோ கார்மயிலோ கன்னியோ என்றுமால்
கொண்டுநின்றாய் என்னே குமரேசா — கொண்ட
அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலுமென் னெஞ்சு. (க)

இ—ள்.

குமரேசா! வள்ளித்தாயைக் கண்டபொழுது அணங்கோ மயிலோ கன்னியோ என வியந்து ஐயுற்று ஏன் மயங்கி நின்றாய்? எனின், கனங்குழை அணங்குகொல்? ஆய்மயில்கொல்? மாதர்கொல்? என் நெஞ்சு மாலும் என்க.

இது, தலைமகளைக் கண்டபொழுது தலைமகன் இன்னபடியாக எண்ணி நின்றான் என்கின்றது.

குழை = காதணி. "குழையணி காதிற் குளிர்மதி முகத்தி" (பெருங்கதை) "அருமணிக் குழை ஓர் காதிற் கதிர் விடு திருவில் வீச" (சிந்தாமணி) "செம்பொன்செய் சுருளும் தெய்வக் குழைகளும் சேர்ந்து மின்ன" (இராமாயணம்) இவற்றுள் குழையுணர்த்தி நிற்றல் காண்க. கனம் என்னும் அடை அதன் பெருமைதோன்ற நின்றது. குழைந்து ஒளி தழைத்து விலைவரம்பின்றி மிகு மேன்மையுடையதாய் நிலவி நிற்ப தென்பதாம்.

கனங்குழை என்றது கனத்த குழையினையுடையாள் என விரிந்து கன்னியை உணர்த்தி நின்றது. "காண்பாம் கனங்குழை பண்பு" (கலித்தொகை) என்பதும் காண்க. இயற்பெய

ராய் நின்று குழையை புணர்த்தாமல் அதனை யுடையவளது உருவினைக்குறித்து நின்றமையால் இது, ஆகுபெயர் என்க.

கணங்குழை எனவும் பாடம். அங்ஙனம் கொள்ளின் திரண்ட குழையள் என்று கொள்க. கணம் = திரட்சி, கூட்டம். அணங்கு = தெய்வமகள். இவள், காமகலங் கனிந்து கண்டவருள்ளங்களைக் கவர்ந்து நிற்கும் ஏம உருவினள் என்க.

ஆய்மயில் என்றது ஆய்ந்துநோக்கத் தக்கதோர் அழகிய மயில் என்றபடி. இனி, அயன் ஆய்ந்து படைத்த மயில் எனவும், மயில் சாதியுள் ஆராய்ந்து தேர்ந்தெடுத்தது எனவும் காணலாகும். எழிலுற நிலவி, ஒயிலுடன் அசைவிப், பொலிவுடன் நிற்கும் இயல்பினதாகலான் இங்கு மயிலும் உடனெண்ண நின்றது.

கனவிய குழையையுடைய இவள் வானுறை மகளோ? நாணுயர்மயிலோ? அல்லது ஓர் மானுடமாதோ? இன்னதெனத் துணிந்துகொள்ளாது என் மனம் மயங்கா நின்றதே என்பதாம்.

கொல் மூன்றும் ஐயத்தின் மேலதாய் அங்கினில் அமர்ந்து நின்றன. ஓகாரம் ஆற்றாமை தோன்ற நின்றது. அணங்குகொல்? என முன் துணிந்து நின்ற உள்ளம் அவளது சாயலை நோக்கி மயில் கொல்லோ? என்று வியப்பெழுந்த வேகநிலையை ஓகாரம் உணர்த்தி நிற்றல் காண்க.

அணங்கு, மயில், மாதர் என மூவகையாக நினைத்தது உருவம் சாயல் செயல்களை நோக்கி. என்னை? வியக்கத்தக்க வகையில் அழகொழுக நிற்கும் உருவ நிலையைக் கண்டவுடனே தலைமகன் உள்ளமுருகி இவள் தெய்வ மகளோ? என்று முன்னுற எண்ணினான்; பின்பு அவளது சாயலைப் பார்த்து ஆய்மயிலோ? என ஐயம் இயங்கினான்; அதன்பின் அவள் கண் இமைத்தல், புன்னகை புரிதல் முதலிய செயல் நலங்களைக் கண்டு மானுட மாதுகொல் என்று மறுகி நின்றான் என்க. இவ் ஐயப்பாட்டினை மகிழ்ச்சியோடு கூடிய மருட்கை என்பர். "புதுமை பெருமை சிறுமை ஆக்கமொடு, மதிமை சாலா மருட்கை நான்கே" (தொல்காப்பியம்) என்றபடி புதுமையாயதோர் அரிய பொருளைக் கண்டால்

ளவரும் மருண்டு நின்று வியந்து நோக்குவாராதலால் அவ் வகையில் நேர்ந்த தலைமகளைக் கண்டவுடன் தலைமகன் உளநிலை திரிந்து இங்ஙனம் பலபடியாகக் கருதி நின்றான் என்க.

"போதோ விசும்போ புனலோ பணிகளது பதியோ
யாதோ அறிகுவது? ஏதும் அரிது; யமன் விடுத்த
தூதோ அனங்கன் துணையோ இணையிலி தொல்லைத் தில்லை
மாதோ? மடமயிலோ? என நின்றவர் வாழ்பதியே"

(திருக்கோவையார்)

"பாரணங்கோ? திருப்பாற் கடலீன்ற பங்கேருகத்தின்
ஆரணங்கோ? வெற்புறையணங்கோ? உயர்பாவலர்க்கு
வாரணம் கோடி தருந்தஞ்சைவாணன் தென்மாறை வையை
நீரணங்கோ? நெஞ்சமே தனியே யிங்கு நின்றவரே"

(தஞ்சைவாணன் கோவை)

இன்னவாறு இவ் ஐயத்துறையைக் குறித்து வரும் கோவைப் பாவினங்கள் பல வுள்ளன.

கண்டவுடனே அணங்கோ? மயிலோ? எனக் கருத நேர்ந்தது இடவகையான்; என்னை? தலைவி தனியே யெய்தி நின்ற இடம் பொழில்புடை சூழ்ந்த சுனையுடை மலைச்சாரலாதலால் என்க. "அணங்குடைச்சாரல், மஞ்ஞையாலும் மரம் பயில் இறும்பு" (பெரும்பாண்). என்பதும் ஈண்டெண்ணத் தக்கது.

யான் மாலுமன் என்றது "என் நெஞ்சு மாலும்" என்றது, மாலுதற்கு இடனாய் நிற்கும் அதன் நிலைமை தோன்ற. மாலும் = மயங்கும். மால் என்னும் பெயரடியாய்ப் பிறந்த ஒருமை வினைமுற்று.

தலைவன் அறிவு நிலையமாய் நிற்பவனாதலால் மனத்தை வேறு பிரித்து இங்ஙனம் உரைத்து நின்றான்.

தனக்கு உரிமைப் பொருளாய் வந்து வாய்த்து நின்ற தலைமகளைக் கண்டபொழுது தலைமகன் தனக்குள்ளேயே கருதி நின்ற படியை உலகமறிய உருக்கொடுத்து இங்ஙனம் உணர்த்தியருளினார். காதலியல்பின் மேதகவு இதில் காணலாகும்.

குலம் குணம் அறிவு திரு உருவம் பருவம் அன்பு அமைதி
அருள் அடக்கம் மானம் வீரம் முதலிய உயர் நலங்களெல்லாம்
ஒருங்கே வாய்ந்து காளைப்பருவத்தனை கட்டழகுடைய தலை
மகன் ஒருவன் தன்னையொத்த தோழர் பலர் புடை சூழ வேட்
டம் நோக்கி யெழுந்து குளிர்மலைச் சாரலை யடைந்து அங்கு
அரிகளோடு கரிகள் ஆருயிர் அடுதொழிலாற்றிக் கடு வேகத்
துடன் ஒரு கலைமானைத் துரத்திச் சென்றான்; செல்லவே உடன்
வந்த இளைஞர் இடையே பிரிந்து இடமறியாது நின்றனர்;
சென்ற இவன் தன்னைப்போலவே குல நல முதலியன யாவும்
குறைவறவமைந்து நிறை பேரழகியாய் விளங்கியிருந்த ஓர் குல
மகளை எழில் மிகு அப் பொழிலின் இடையே கண்டான்; அவள்
எவ்வாறு அங்கு வந்தாள்? எனின், தோழிகள் புடைசூழ
அன்று அச்சாரலிடை வந்து பெருவகையோடு அருவியாடல்
அஞ்சனை குடைதல் வாசமலர்க்கொடியின் ஊசலாடல் முதலிய
நேச ஆடல்கள் பல நிகழ்த்திய பின்னர்த் தத் தமக்குரிய வினைத
நோக்கால் தையலாளையரும் பிரிந்துபோக நறுமலர் நிறைந்த
ஓர் இளமரச் சோலையில் தனியே நின்றாள். அங்ஙனம் நின்ற
அவளை இவன் இனிது வந்து கண்டான்; காணவே அவளது
அழகொழுகு உருவ நிலையை உவந்துவந்து நோக்கி வியந்து
நின்று தெளிந்து தேறமுடியாமல் அணங்குகொல் என்பது முத
லாக நினைந்து புலம்பி நெஞ்சுருகி நின்றான் என இனிமையுறப்
புனைந்து ஒரு குலமகன்மேல் வைத்து அன்பு ததும்ப இன்ப
நிலையை இங்ஙனம் கூறியுள்ளார் என்க.

இங்ஙனம் வந்து தலைக் கூடல் எளிதிலமைவதன்று; தண்
கதிர் மதியமும், வெங்கதிர் ஞாயிறும் தங்கதி வழுக்கித் தலைக்
கூடியது போலவும், வடகடலில் இட்ட நுகத்தடியின் துளை
யுள் தென்கடலில் போட்ட நோன்கழி மூன்று தான் தனி
யடைந்து நுழைந்தது போலவும் மிகவும் அதிசயமாயதோர் அரு
மைப்பாடுடையதாம் என்க.

"வளைபயில் கீழ்கடல் நின்றிட மேல்கடல் வானுகத்தின்
துளைவழி நேர்கழி கோத் தெனத் தில்லைத் தொல்லோன் கயிலைக்

கிளைவயினினீக்கி இச் செண்டையங் கண்ணியைக் கொண்டுதந்த
விளைவையல்லாமல் வியவேன் நயவேன் தெய்வ மிக்கனவே”
(திருக்கோவையார்).

அத்தலைவியைத் தான் எய்தும்படி செய்த தெய்வத்தை வியந்து தலைமகன் புகழ்ந்துள்ளபடி இதில் அமைந்துள்ளமை காண்க.

ஊழ்கூட்டவந்து தலைப்பட்டு நின்ற தலைமகளைக் கண்ட போது தலைமகன் உளமிக வுருகி அவளது எழிலுருவங்களை வியந்து நோக்கி மயங்கி நிற்பன் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை குமாரமூர்த்தியால் உணரப்படும்.

## கதை.

அமரர் வேண்டுகோட்கிரங்கி அருளுருவமைந்து இந்நில வுலகில் வந்து அசுரவேட்டையாடிச் சூரர் இடர்களைந்து திருத் தணிகையை யடைந்து மன்பதை இன்புற எம்பெருமான் மன்னி வீற்றிருந்தார். அக்காலத்தில் திருமாலின் அருமைத் திருமக ளாய் அவதரித்திருந்த சுந்தரி என்னும் நங்கை இப்பெருமானைத் திருமணஞ்செய்யக் கருதி அருநோன்பியற்றி முன் அருளி யிருந்தபடி இங்கு மானுடமகளாய் ஓர் மானிடமாக வந்து தோன்றினார். அவ்வமயம் தொண்டைமண்டலத்திலே வள்ளி மலை யருகேயிருந்த சிற்றூரில் விளங்கியிருந்த வேடர்குலத் தலை வனாகிய நம்பி என்பவன் இந்நங்கையைக் கண்டெடுத்துப் போய் வளர்த்து வந்தான். பருவம் நிரம்பி உருவினும் அறிவினும் பொருவிறந்து இவ்வருமைத் திருமங்கையார் உயர்ந்து விளங்கி னார். வள்ளிமலைச் சாரலில் வள்ளிக்கிழங்கு அகழ்ந்த குழியில் பிள்ளையுருவாய்ப் பிறந்திருந்தமையால் இக் கிள்ளைமொழி யார்க்கு வள்ளி எனப் பெயர் வைத்து உள்ள மகிழ்ந்து எல்லா ரும் உவந்து போற்றி வந்தார். ஒருநாள் தோழியர் பலர் புடை சூழ எழுந்து அச்சாரலை யடைந்து தினைப்புனங் காத்து விநோத மாகத் தனியகன்று இனிய பூஞ்சோலையை யெய்தி அங்கோர் இளமயில் ஆடுவதைக்கண்டு இக் குலமகள் அளவி லுவகை கொண்டு அமர்ந்து நோக்கி நின்றாள். அவ்வேளையில் செவ்

வேள் கட்டழகுடைய ஓர் காளைவடிவந் தாங்கி அவ் வேடுருவம் விண்ணோர் நோக்க வில்லுங் கையுமாய் விரைந்து வந்து அப் பெரும் வியலை யடைந்தார்.

> "காலிற் கட்டிய கழலன்; கச்சினன்;
> மாலைத் தோளினன்; வரிவில் வாளியன்;
> நீலக்குஞ்சியன்; நெடியன்; வேட்டுவக்
> கோலத்தைக்கொடு குமரன் தோன்றினான். (க)
>
> இன்னை யன்னதோர் இளவி மங்கைமாட்டு
> உள்ளமோகம் தன் உள் அகந்தனைத்
> தள்ள எம்பிரான் தணிகை வெற்பொரீஇ
> வள்ளியங்கிரி வயின்வந் தெய்தினான்" (உ) (கந்தபுராணம்)

இங்ஙனம் எய்தி அத்தலைமகளைத் தலைப்பட்டு விழிகளிப்ப நோக்கி உளமிக வுருகிக் களியலுக்கு ஓர் அளவியல் காண மொழி பல கூறினார்: "சாமளவடிவில் கோமளமெய்தி நிற்கும் இப் பூமகள் உளாவணங்கோ? கலாப மயிலோ?" என இன்னவாறு ஐயுறவோடு வியந்து தம் அகத்துள் மொழிந்தார். பின்பு வெளிப்படையாக நெருங்கிக் காதல்நலம் கனிந்து ஆதரம் பெருக அருளுரையாடினார். சில அடியில் வருவன காண்க.

"பூமஞ்சார் மின்கொல் என்னைப் பொருப்பினில் ஏனல் காக்கும்
காமஞ்சால் இளமையாளைக் கடம்பமர் காளைநோக்கித்
தாமஞ்சால் விரகச் செந்தீச் சுட்டிடச் சோர்ந்துவெம்பி
ஏமஞ்சால்கின்ற நெஞ்சன் இதனினைக் கனியன் சொன்னான்.

நாந்தகமனைய வுண்கண் நங்கைகேள்! ஞாலந்தன்னில்
ஏந்திழையார்கட்கெல்லாம் இறைவியாயிருக்கும் நின்னைப்
பூந்தினை காக்கவைத்துப் போயினர் புளினராமோர்க்கு
ஆய்ந்திடும் உணர்ச்சி ஒன்றும் அயன்படைத்திலன்கொல் என்றான்.

வாரிருங்கூந்தல் நல்லாய்! மதிதளர் வேனுக்கு உன்றன்
பேரினையுரைத்தி; மற்றுன் பேரினை யுரையா யென்னில்,
ஊரினையுரைத்தி; ஊரும் உரைத்திட முடியாதென்னில்
சீரிய நின் சீறூர்க்குச் செல்வழி யுரைத்தி என்றான்.

மொழியொன்று புகலாயாயின், முறுவலும் புரியாயாயின்,
விழியொன்று நோக்காயாயின், விரகமிக் குழல்வேன் உய்யும்
வழியொன்று காட்டாயாயின், மனமுஞ் சற்றுருகா யாயின்
பழியொன்று நின்பாற் சூழும் பராமுகந் தவிர்தி என்றான்.”

(கந்தபுராணம்)

உள்ளமுருகி இவ்வண்ணம் இவ்வள்ளல் உரையாடி நின்று பின்பு உயிரொடு உயிர்கலந்தாற்போல் அம்மயிலையலே உவந்து முயங்கி மணந்து அருள் புரிந்தார்.

தெய்வகதியாயெய்தி நின்ற தலைமகளைக் கண்டபொழுது அணங்கோ? மயிலோ? அணிமலர்க்கொம்போ? அன்னமோ? என இன்னவகையாக எண்ணி வியந்து காமநலங்கனியத் தலைமகன் ஏமுற்று நிற்பன் என்பதை உலகம் காண இம்மூர்த்தி அன்று உணர்த்தி நின்றது. விரிவைக் கந்தபுராணத்தில் வள்ளியம்மை திருமணப்படத்திலும், தணிகைப்புராணத்திலும் காண்க.

தலைமகளைக் கண்டபொழுது தலைவன் கொண்டுநின்ற நிலை இதனால் கூறப்பட்டது.

---

1082. பண்டெதிர்ந்த தத்தைதன் பார்வையினால் ஏறுதயன்
கொண்டழிந்தான் உள்ளம் குமரேசா — மண்டிநின்று
நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு
தானைக்கொண் டன்ன துடைத்து. (உ)

இ-ள்

குமரேசா! வாசவதத்தை நோக்கினின்றபொழுது உதயணன் ஏன் உள்ளழிந்து உடைந்து நின்றான்? எனின், நோக்கினாள் நோக்கு எதிர் நோக்குதல் தாக்கணங்கு தானைக் கொண்டன்னது உடைத்து என்க.

இது, தலைமகள் நோக்கின் நிலைமை கூறுகின்றது.

நோக்கினாள் என்றது அழகினாள் என்றபடி. நோக்கு = அழகு. “நோக்கு என்பது அழகு பார்வை” (நிகண்டு)

இனி, நோக்கினாள் என்பதைத் வினையாலணையும் பெயராக் கொண்டால் நான் நோக்க நின்றவள்; அல்லது என்னை நோக்கி நின்றவள் என்று கொள்க.

நோக்கு எதிர் நோக்குதல் என்றது தலைவன் நோக்கிய நேரே தலைவி எதிர்த்துப் பார்த்தல் என்றவாறு.

தாக்கணங்கு = தாக்கிவருத்துந் தெய்வமகள். இவளை மோகினி என்பர். முன்பு அழகால் தாக்கி வருத்திப் பின்பு நோக்கால் நடுங்கச் செய்கின்றாளாதலால் தானையுடன் நோக்க நின்றாள். தானை = சேனை.

மேல், தலைவியினது உருவழகை கண்டு தலைமகன் உளமுருகி நின்றான்; இதில், அவளது பார்வையில் கடுபட்டுப் பரிந்து நிற்கின்றான்.

இவ் அழகினாள் என்னை எதிர்த்துப் பார்த்தல் தானே கொல்லவல்லதொரு மோகினித் தெய்வம் படையையும் உடன் இரட்டி வந்தது போன்றதோர் அடலினையுடையது என்பதாம்.

முதலில் அவளது அழகினைக் கண்டு உளமுருகி நின்றான்; பின்பு அவள் கனிந்துபார்த்த பார்வையில் அங்கிலையும் குலைந்து காமந் தலைக்கேறி அலமராலுற்றானாதலால் "நோக்குதல் தானைக் கொண்டன்னது உடைத்து" எனத் தன்னுள்ளேயே தத்தளித்து இங்ஙனம் தயங்கிக் கூறினான். கொண்டன்னது உடைத்து = கொண்டுவந்தாற் போன்றதோர் கொடுந்தன்மை யுடையது. பார்வையைப் படையோடு ஒப்பவைத்தது அதன் அடல் நிலை க(

தலைவியினது எழில் நலனோடு அவளது விழி நிலையையும் கண்டு தலைவன் உளநிலை குலைந்து உரைத்தபடி யிது.

தான் எதிர்ப்பட்ட தலைவியை அணங்கு முதலாகப் பல பட எண்ணி ஐயுற்று நின்ற தலைமகன் அவள் விழியிமைத்தலைக் குறிப்போடு குளிர்ந்து பார்த்ததைக் கண்டு ஐயந் தெளிந்து மகிழ்ந்து நின்றானாயினும் தான் உள்ளழிந்துள்ளபடியை இவ் வண்ணம் உளைந்துரைத்தான் என்க.

"பாயும் விடையரன் தில்லையன்னாள் படைக்கண் இமைக்கும்
தோயும் நிலத்தடி தூமலர்வாடும் தூயபரமெய்தி
ஆயுமனனே, அணங்கல்லள்; அம்மா முலைசுமந்து
தேயுமருங்குற் பெரும்பணைத் தோளிச் சிறுநுதலே"
(திருக்கோவையார்).

மையார் குவளைவயல் தஞ்சை வாணனை வாழ்த்தலர்போல்
கையா தொழிமதி நன்னெஞ்சமே யினி நம்மிலுந்தன்
செய்யார் கருங்குழற் செம்மலர்வாடின; நீலவுண்கண்
கையால் அழைப்பனபோல் இமையாநிற்கும் காரிகைக்கே.
(தஞ்சைவாணன்கோவை)

அணங்கு அல்லள் என்று அகங்தெளிந்த தலைவன் அவளது குணங்களை நோக்கிக் கடுங் காதல் கொண்டு நுடங்கி நிற்கும் திறனை இவை நுவன்று நிற்றல் காண்க.

தலைவியின் குறிப்பு நோக்கம் தலைவனைத் தயங்கச் செய்யும் என்பது கருத்து. இவ்வுண்மை வாசவதத்தைபால் உணரப் படும்.

### கதை.

வாசவதத்தை என்பவள் அவந்தி வேந்தனாகிய பிரச்சோதனனுடைய அருமைத் திருமகள். இந்திரன் அருளால் இந் நிலவுலகில் வந்து தோன்றினவள். இயலிலும் இசையிலும் உயரிசை பெற்றவள். பேரழகுடையவள். பெண்ணோர் உருவம் பிறர் தனக்கில்லா நுண்ணோர் மருங்கினள். "ஒண்மையும் நிறையும் ஓங்கிய ஒளியும், பெண்மையும் பெருமையும் பிறவுமுடைமையிற், பாசிழையாயத்துப் பைபென நின்ற, வாசவதத்தை; அரும் பெறல் மடமகள் அமிழ்துபடு தீஞ்சொல் ஏசவதில்லா எழில் படு காரிகை; மதிக்கவினழித்த மாசறு திருமுகத்து அணிக் கவின் கொண்ட ஐயரித் தடங்கண், வனப்பு வீற்றிருந்த வாசவதத்தை;" என இன்னவாறு எவரும் ஏத்த நின்றவள். இத் தகைய இவளை ஒருநாள் உதயணன் கண்டான். அவன் வத்தவ தேயத்து மன்னன். இவ்வுத்தமியினது உருவநிலையை நோக்கி

உள்ளமுருகினன். இவளும் அவனைக் காதலோடு களித்து எதிர் நோக்கினள். இவளது உளக்குறிப்பினை விழிக்குறிப்பினால் ஓர்ந்து ஆராக்காதலனாய் அவன் ஆர்வமீக் கூர்ந்தான். இருவரும் ஒருவரை ஒருவர் பருகலாம்படி உருகப்பார்த்து உள்ளுவந்து நின்றார். அன்றெதிர்ப்பட்டு இவர் நின்றபடியைக் கொங்கு வேளிர் என்னும் புலவர் பெருமானார் மிக வியந்து கூறியுள்ளார். அடியில் வருவது காண்க.

"தென்கடல் இட்டதோர் திருமணி வான்கழி
வடகடல் நுகத்துளை வந்துபட் டாஅங்கு
நனிசேணிட்ட நாட்டின ராயினும்
பொறைபடு கருமம் பொய்யா தாகலின்
சிறைபடு விதியிற் சென்றவட் குறுகி
மதியமும் ஞாயிறும் கதிரிற் றோடிக்
கடனிற விசும்பி னுடனின் றாங்குப்
பைந்தொடிச் சுற்றமொடு தந்தை தலைத்தாள்
ஆயத்திடையோள் பாசிழைப் பாவை,
யானை மிசையோன் மாமுடிக் குரிசில்,
இருவரும் அவ்வழிப் பருகுவனர் நிகழ
மன்னவன் முகத்தே மாதரும் நோக்கி
உள்ளமும் நிறையும் தள்ளிடக் கலங்கி
வண்டுபடு சடாஅத்த வலிமுறை பொப்பன
பண்டுகடம் படாஅ பறையினும் கனல்வன
விடற்கருந் தெருவினுள் விட்ட செவ்வியுள்
அடக்குவரை நில்லாது தோட்டி திமிர்த்து
மதக்களிறு இரண்டுடன் மண்டியா அங்கு
இல்வழி வந்ததம் பெருமை பீடறத்
தொல்வழி வயத்துத் தொடர்வினை தொடா
வழுவில் போகமொடு வரம்பின்றி நுகரும்
உழுவலன்பின் உள்ளந் தாங்கி
இழையினும் கொடியினும் இடியினும் பிணைஇத்
தேனினும் பாலினும் தீஞ்சுவைத் தாகி

குலத்தினும் குணத்தினும் கூடிய அன்பினும்
இனத்தினும் பிறவினும் இவ்வகை யிசைந்த
அமைப்பருங் காதலும் இமைப்பினுள் அடக்கி
ஒருவயிற் போல வுள்ளமொடு நோக்கமொடு
இருவயின் ஒத்தவை நிறைந்த பின்னர்த்
தாரணி வேந்தன் தலைத்தாள் நிகழ்ந்தது
காரணமாகக் காதல் தேறி
ஓர்ப்புறு நெஞ்சம் தேர்ச்சியிற் றிருத்தி'' (பெருங்கதை)

உதயணனும் வாசவதத்தையும் ஒருவரை ஒருவர் எதிர் நோக்கிப் பருகுகாதலினராய் உருகிநின்றபடியும், அத்தாணி மண்டபத்தில் அரசன் முதலாயினோர் இடையே நிற்றலால் இவர் தடையுற்றமர்ந்த தன்மையும், பின்பு இவளது பார்வையின் நிலையறிந்து நெஞ்சுணர்ந்து தேறி அம்மன்னன் நினைந்து நின்ற விதமும், பிறவும் இதன்கண் ஊன்றி உணர்ந்துகொள்க. தாக்கணங்கு தானையுடன் வந்ததுபோல் இவ்வொருத்தி நோக்கம் என் ஊக்கம் குலைத்து உள்ளம் உருக்கி ஊன்றி நிற்கின்றதே எனக் காதலன் உணர்ந்து நிற்பன் என்பதை உலகம் இவன்கண் அன்று உணர்ந்து நின்றது.

காதல் நோக்கின் திறம் இதனால் கூறப்பட்டது.

---

1083. கூற்றென்றேன் உள்ளங் குலைந்தான் இவிட்டன்முன்
கோற்றொடிகண் கண்டு குமரேசா — தோற்றுத
பண்டறியேன் கூற்றென் பதனை யினியறிந்தேன்
பெண்டகையாற் பேரமர்க் கட்டு. (௩)

இ—ள்.

குமரேசா! இவிட்டன் சயம்பிரபையைக் கண்டபொழுது உளநிலை குலைந்து கூற்றென ஏன் உணர்ந்து நின்றான்? எனின், கூற்று என்பதனைப் பண்டு அறியேன்; இனி அறிந்தேன் பெண் தகையான் பேரமர்க் கட்டு என்க.

இது, தலைவியின் கண்ணின் நிலை கண்டு தலைவன் கலங்கியது.

கோல் தொடி என்றது அழகிய வளையினை யுடையாள் என்றபடி. கோல் = அழகு. தொடி = வளையல்.

கூற்று = இயமன். இது உயர்திணை குறித்து வந்த அஃறிணைச் சொல். பெண்தகை = பெண்தன்மை. அஃதாவது நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்னும் குணங்கள்.

அமர்க்கட்டு = அமர் செய்யும் கண்களை யுடையது. பேர் என்றது "பெருந்தடங்கண்" (இராமாயணம்) என்பது போல அக் கண்ணின் பெருமை தோன்ற நின்றது. கண்ணுக்கு அமர் என அடைகொடுத்தது "கள்ளவிழ் போதை" என்றபடி அது பொருது நிற்கும் உறுதிநிலை கருதி.

கண் என்பது டு என்னும் விகுதி பெற்றுக் கட்டு என நின்றது. இது, ஒன்றன்பாற் குறிப்புவினைமுற்றில் வரும். "மைக் குறிப்பினதும்" (நன்னூல்). பொருட்டு என்பது பொருளையுடையது என விரிதல்போல் கட்டு என்பது கண்ணை யுடையது என விரியும்.

மேல், தாக்கணங்கு தானையுடன் வந்ததுபோல் தலைவி நோக்கு நின்றதென்றான்; இதில், அவள் நிலைமை மறலியை யொத்துள்ளதென மறுகி நிற்கின்றான்.

கூற்று என்று சொல்வதனை இதன்முன் கண்டு அறியேன்; இதுபொழுது நேரில் அறிந்தேன்: அது பெண்டன்மையுடனே பெரியனவாய் அமர் செய்யும் கண்களையுடையது என்பதாம்.

கூற்று, கண்டவருயிரைக் கலக்கச்செய்யும் இயல்பினது ஆதலால் அது, உள்ளத்தைக் கொள்ளைகொண்டு நிற்கும் உருவத் தோற்றத்தையுடைய பெண் என ஈண்டு எண்ண நின்றது.

இன்பநிலையமாயமைந்திருக்கும் பெண்ணினை எமன் என இங்ஙனம் இசைத்தது என்னை? எனின், கைக்கு எட்டாமல் அகலநின்று, கண்வலை வீசிக் கடுந்துயர்செய்யும் அவள் கொடுந் தன்மையை நினைந்தென்க.

கறுத்தவடிவும், பெருத்தவுருவும், சிவந்த கண்ணும், கவிந்த நுதலும், அகன்ற மார்பும் திரண்ட தோளும் இருண்ட குஞ்சி

யும் வெகுண்ட நோக்குமுடைய தாய்க் கூற்று விளங்கி நிற்குமென நூல்கள் வழங்கி நிற்பினும் யான் இன்று கண்டது அவ்வண்ணம் அன்று; நல்லியல்பமைந்த கண்ணினையுடைய மெல்லிய பெண்ணுருவேயாம் என்பான் பெண்தகையால் பேரமர்க் கண்ணினையுடையதோர் கூற்றை அறிந்தேன் என்றான்.

மற்ற உறுப்புக்களையெல்லாம் விடுத்துக் கண்ணை மட்டும் இங்குக் கருதிக்கொண்டது என்னை? எனின், முன்னதாக நின்று தன் கருத்தைக் கொள்ளைகொண்டது அதுவேயாகலான் என்க.

"வண்ணமேகலைத் தேர் ஒன்று, வாள்நெடுங்
கண்ணிரண்டு, கதிர்முலை தேரிரண்டு,
உண்ணிலவிய நகையும் உண்டாம்; எனில்
என்னுங் கூற்றினுக்கு இத்தனை வேண்டுமோ?"

(இராமாயணம்)

இது, மிதிலை நகரில் சீதையின் உருவத் தோற்றத்தை முதலில் கண்ட இராமன் பின்பு சனகன் மாளிகையில் இரவு தனித்திருந்தபோது நினைந்து வருந்தியது. அத் தேவியின் உருவ நிலையை உருகி யுன்னிக் கூற்றெனக் கூறிக் காதல்மீக் கூர்ந்து அவ் வீரமூர்த்தி கருத்துடைந்து கலங்கி நின்றபடியையும், காம நலனோடு பொருந்தி நின்ற நிலையையும் இதில் ஊன்றி யுணர்ந்து கொள்க.

தலைவியின் குறிப்பு நோக்கால் உளநிலை குலைந்து நின்றவன் அவள் கொடுந் தன்மையள் எனப் பலபட நினைந்து புலம்புவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சயம்பிரபை பால் உணரப்படும்.

## கதை.

சயம்பிரபை என்பவள் இரதநூபுரம் என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்த சடிமன்னனுடைய அருமைத் திருமகள். மெல்லியலார்க்குரிய நல்லியல்புகள் யாவும் இவள் நன்கமையப் பெற்றவள். இவள் பிறந்தபொழுது நன்மையான சிறந்த குறிகள் பல இவ்வுலகில் நிகழ்ந்தன ஆதலால் பெற்றோர் முதலாக எல்

லாரும் பெருமகிழ்ச்சி யடைந்தார். அழகிலும் குணத்திலும் அறிவிலும் நாளும் இவள் பெருகி வளர்ந்தாள். எவரிடமும் இன்னுரையாடும் புன்னகை வாயினள். நிலாமலை, நித்திலநிலயம், வயந்த மாளிகை முதலிய சிறந்த தோழிகள் பலர் உவந்து சூழ்ந்து உடனமர்ந்திருப்ப இவள் மகிழ்ந்து வந்தாள். பெண்மைக்கே பீடு பெற நின்றாள் என இவளைப் பார்த்தவரெவரும் பாரா மகிழ்ந்து பலபடப் புகழ்ந்து நின்றார்.

"தங்கைமீளன ஞான்ற கதிரினத்
திங்களால் தொழப்பட்டது செக்கர்வான்;
மங்கைமார் பிறப்பும் மடமாதரிந்
நங்கையால் தொழப்பாடு நவின்றதே. (௧)

வண்டிருந்மலர் போன்றனைக் கொடி
கொண்டு சூழ்ந்தது குண்டல வாண்முகம்,
கெண்டைகண், இளரும்புருவஞ் சிலை,
உண்டுகொல்லென உண்டி மருங்குலே. (௨)

விண்ணணைங்க விழித்து விளங்கொளி
மண்ணணைக்குறவே வளர்வெய்திய
பெண்ணணைங்கிது தோன்றிய மின்கொலோ
கண்ணணைக்குறு காரிகை கண்டதே." (௩) (சூளாமணி)

இன்னவாறு கண்ணுற்றவர் பலரும் எண்ணி வியந்த இவள் இசைபெற்று நின்றாள். பருவம் எய்திப் பெருகலோடு மருவி வருங்கால் ஒருநாள் மாலைப்பொழுதில் பதுமினி என்னும் இனிய உலவனத்தில் இவள் தனியே உலாவி நின்றாள். அவ் வமயம் இனிட்டன என்பவன் தெய்வகதியாய் அங்கு வந்தான். அவன் போதனபுரத்து அரசிளங் குமரன். பேராற்றலுடையவன். மானமும் வீரமும் மருவிய மாண்பினன். உருவவேள் என ஒரு தனிவந்த அவன் இப்பருவ மங்கையைக் கண்டான். இவளும் பருகநோக்கினள். நோக்கவே அவன் பெருங்காதல் கொண்டு பேதுற்று நின்றான். எவரும் வெல்லுதற்கரிய உயர்குல வீரனாகிய அவன் இவளது உருவநிலையை நோக்கி உள்ள

முருகினான், காதல் வெள்ளத்தில் மூழ்கிக் கருத்தழிந்து நின்று அவளது எழில் நலனையும், விழி நிலையையும் எண்ணி எண்ணி எமனோ இவளென ஏங்கி மொழிந்தான். பின்பு இணைந்து நுகர்ந்து உலகறிய இவளை மணந்து வாழ்ந்தான். தமக்குக் காமவாதையை உண்டுபண்ணுதலால் கைவருமுன் காதலிகளை எமன்கள் எனக் காதலர் களிப்போடு கருதி வருந்துவர் என்பதை உலகம் இவன்கண் உணர்ந்து நின்றது.

காமமீதூர்ந்தபோது காதலர் கருத்தழிந்து நோவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1084. உள்ள முருகி உலைந்தார் இலக்கணைகண்
கொள்ளுகின்ற போதேன் குமரேசா — மெள்ளவந்து
கண்டா ருயிருண்ணுந் தோற்றத்தாற் பெண்டகைப்
பேதைக் கமர்த்தன கண். (௪)

இ—ள்.

குமரேசா! கண்டவர் கரைந்துருகும்படி இலக்கணை கண்கள் ஏன் இயைந்திருந்தன? எனின், கண்டார் உயிர் உண்ணுந் தோற்றத்தான் பெண்டகைப்பேதைக்குக் கண் அமர்த்தன என்க.

இது, தலைவியின் கண்கள் உள்ளத்தைக் கொள்ளை கொள்கின்றன வென்கின்றது.

கண்டார் = தம்மைப் பார்த்தவர். தம்மை என்றது இங்குக் கண்களை. காணுவழிக் காதல் நிகழாது; ஆகவே அதனால் வரும் ஏதம் யாதும் இல்லையாமாதலால் அவள் கண்கள் உயிருண்டற்கு இவன் காண்கை காரணமாய் நின்றது.

உயிர் உண்ணும் தோற்றத்தான் = உயிரைக் குடிக்கும் உருவப் பொலிவோடே. கண் அமர்த்தன = கண்கள் அமர்ந்திருந்தன. அமர்தல் = பொருந்தியிருத்தல். இனி, அமர்த்தன என்பதற்கு அமர் நிலையில் வீறு பெற்றிருந்தன எனினுமாம். அமர்ந்தன எனவும் பாடம்.

பெண்டகை = பெண்மைத் தன்மை. அஃதாவது நாண முதலிய நற்குணமுடைமை. பேதை = ஆராய்தலின்றி யாது மறியாமை. மென்மை, வஞ்சமின்மை முதலிய நல்லியல்புகளுடைய இம் மெல்லியலாட்குக் கண்கள் கொல்லும் இயல்புடையனவாய்க் கூடியிருக்கின்றனவே இஃதொரு வியப்பிருந்தவாறென்னே என்று தன்னுள் எண்ணித் தலைவன் வருந்தி நின்றபடியிது.

மேல், தலைவி கண்கள் தன்னைக் கொலைசெய்தமையால் அவற்றைக் கூற்றென்று தலைவன் குறித்தான்; இதில், அவை உயிரை யுண்ணுகின்றன என்கின்றான்.

பெண் தகைமையுடைய இப் பேதைக்கு இணையாகவுள்ள கண்கள் தம்மைக் கண்டவருயிரை யுண்ணுந் தோற்றத்துடனே அமர்ந்திருந்தன என்பதாம்.

தலைவியைக் கண்ட அளவிலே அவளது கண்ணழகில் ஈடுபட்டுக் காதல் வெள்ளத்தில் மூழ்கித் தன்னுள்ளத்தைப் பறிகொடுத்து நின்றுழலுதலால் அந் நிலையில் நின்ற தலைவன் அக் கண்கள் கொலைசெய்யும் இயல்பின என்று இங்ஙனம் குறித்து மொழிந்தான். உயிர் உண்ணும் என்றதனால் அவற்றின் பேரழகும், பெருமிதமும் தோன்றும். விழுமிய குலமகளின் கண்களைக் கொலைபுரியும் தொழிலுடையன என்று இவ்வண்ணம் குறிக்கலாமோ? எனின், அக் குறிப்புக் குறித்தவன் கொண்டுள்ள வருத்தத்தையும், உள்ளக் காதலையும் உணர்த்தி நிற்றலோடு அவளது வனப்பின் பெருக்கையும் விளக்கி நிற்றலால் இது மனத்துக்கினியதோர் மாட்சிமையுடையதென்க.

"குமிழ்மிசை மறிந்து குழையெதிர் நடந்து கொலைத்தொழில் மறலியைப் பயிற்றி, அமிழ்தினின் விளைந்தும் நஞ்சினிற் கரிய ஐயரி சிதறி மைதோய்ந்து, கமலமென் மலரை வனம் புகுத்திய வேற் கண்ணினை மான்பருள் நோக்கம், தமதெனக் கவர்ந்து கொண்டவோ? மடமான் தடங்கணின் செயல் கவர்ந்தனவோ?"

(நைடதம்)

இது, தமயந்தியின் கண்ணழகைக் குறித்துக் கூறியது. கொலை செய்தலில் கூற்றினும் அவள் கண்கள் கொடியன என இதில் குறித்திருத்தல் காண்க.

தலைவியின் எழில்நிலை நோக்கி உளமுடைந்து நின்ற தலைமகன் அவள் புன்னகையோடு பார்த்த இனிய பார்வையில் தன் வசமழிந்து முழுவதும் அவள் மயமாகி உயிர் பறிபோயதே எனப் பரவசமடைந்து கூறியபடி யிது. இங்ஙனம் என் உயிரை யுண்ட கண்களையுடையாளை யான் கொண்டு நுகர்வது என்று கொலோ? என்று ஆற்றாமை மீதூரத் தலைமகன் அலமந்து நிற்கின்றான் என்க.

குலமங்கையர் கண்கள் பேரழகுடையனவாய்க் குலவி நிற்கும் ஆதலால் அவற்றை நோக்கினவர் உளமிகவுருகி நிலைகுலைந்து நிற்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இலக்கணையால் உணரப்படும்.

## கதை.

இலக்கணை என்பவள் கோவிந்தன் என்னும் குறுநில மன்னனுடைய அருமைத் திருமகள். விதேகநாட்டிலே ஆவுந்தி என்னும் நகரிலிருந்தவள். அழகினும் அறிவினும் பெயர்மிகப் பெற்றவள். யாதொரு பங்கமுமின்றி அங்கங்கள் யாவும் நன்கமையப் பெற்றுத் தன் பெயரியல்புக்குத் தக்கபடி இயலினும் இசையினும் இவள் உயர்வெய்தி நின்றாள். விழுமிய பெண்மைக்குரிய இலக்கணங்களெல்லாம் இவள்பால் இனிதமைந்திருந்தன. ஆதலால் இலக்கணை என்னும் பெயர் இவட்குப் பொருந்தும் பொருந்தும் என அருந்தவர் சிலர் ஒருமுறை உவந்துரை யாடினர். இக்கட்டழகியைச் சிவக மன்னன் ஓர் காவிடைக் கண்டான்; காதல்மீக் கொண்டான்; இயல்பாகவே தனக்கு மாமன் மகளுமாயமைந்திருந்த அப்பூமனைக் கண்டபொழுது காமனோ! என்று இவளும் கலங்கிநின்று காமக்குறிப்போடு கனிந்து நோக்கினாள். இருவர் நோக்கும் ஒன்றோடொன்று இணைந்து மகிழ்ந்தன. கந்தருவ முறையில் கலந்து பிரிந்தனர். பின்பு இவளைத்

மேல், காதலி கண்ணினைக் காலன் என்றிருந்தான்; இதில், அதனை வேறு சிலவாகவும் கூறி நிற்கின்றான்.

இம் மடமங்கையின் நோக்கமானது கூற்றம், கண், பிணை என்னும் இம் மூவகை இயல்புகளையும் உடையது என்பதாம்.

கூற்றின் இயல்பும், கண்ணின் செயலும், பிணையின் வெற்றியும் அவள் நோக்கம் பெற்றிருந்தபடியைத் தலைமகன் உற்றறிந்து உணர்த்தியபடி யிது.

நோக்கத்தைக் கூற்றம் என்றது அதன் கொலைவுறுதி. என்னை? தனக்கு ஆற்றமுடியாதபடி அருந்துயரம் தோற்றி நிற்றலால் அதனைக் கூற்றம் என்றான்.

கண்ணே என்றது இமைத்து விழிக்கும் இயல்பு நோக்கி.

பிணை என்றது மருண்டு நின்று வெருவுதலுற்று வெருண்டு நோக்குதல் கருதி. மூன்றிலும் அணிவு தோன்றுமாறு பிணை முதலாகப் பல்பட எண்ணி ஐயுறவோடு தொடுத்து நின்றுரைத்தலால் ஓகாரங்கள் வினாவில் வந்தன.

கூற்றத்தையும் கண்ணையும் பிணையையும் குறித்தெண்ணியது வன்மை தன்மை மென்மைகளான் என்க. என்னை? வருத்தி நிற்கும் வன்மையால் கூற்றமும், அருத்தி நோக்கின் தன்மையால் கண்ணும், வெறித்து விழிக்கும் மென்மையால் பிணையும் ஆகிய இம் மூவகை யியல்பும் அவள் பார்வையில் படிந்துள்ளபடியை அழுந்தி அனுபவித்துள்ளானாதலால் "மடவரல் நோக்கம் இம் மூன்றும் உடைத்து" என முழங்கி நின்றான். பிணையை இறுதியில் எண்ணியது முதலில் கலங்கி நின்று, பின்பு உணர்ந்து தேறி, முடிவில் தெளிந்து நோக்கியபொழுது அவள் நோக்கம் வெருவுதலுடையதாய் மருண்டு நின்றபடியை மனங்கொண்டு என்க.

திரண்டு உருண்டு நீண்டு அகன்று ஐயரிபடர்ந்து மதர்வையோடு மருண்டு நோக்கும் இயல்பினவாதலான் மான் கண்கள் பெண்கள் கண்களுக்கு உவமையாகப் பெரிதும் நூல்களில் வழங்கப்பட்டு வருகின்றன.

"மானினேர்விழி மாதராள் வழுதிக்கு மாபெருந்தேவி" (தேவாரம்) "மானயர்நோக்கியர் மருங்குல்போல்வது" (சிந்தாமணி), "மான் நோக்கின் மடமொழி" (கைந்நிலை), "மாழைமான் மடநோக்கியுன் தோழி" (பெரிய திருமொழி), "மடமான்பிணையியல் வென்றாய்" (கலித்தொகை), "மானமர்நோக்கியோர் மதுகை வேந்தன்பால்" (இராமாயணம்) இவற்றுள் மான் வந்துள்ளமை காண்க.

> "நோக்கினால் நம்மை நோக்கழி கண்டநுண்மருங்குல்
> தாக்கணங்கருந் சிதைக்குத் தாக்கநர் துயரம்
> ஆக்கினான் நமது உருவினொன்று அரும் பெறல் உவகை
> வாக்கினால் உரையாமெனக் களித்தன மான்கள்"
>
> (இராமாயணம்)

இது, மதங்கமலையிலிருந்த மான்களைக் குறித்துக்கூறியது. கார்காலத்தில் புல் எழுச்சியைக்கண்டு உளங்களித்துநின்ற மான்களின் நிலையினை வருணித்தபடியிது. கண்ணழகில் பெருமை பெற்றிருந்த தம்மைச் சீதைதோன்றி அவள் நோக்கினால் சிறுமையுறச் செய்தாள்; அத்தோல்வியை நினைந்து யாதும் செய்யலாற்றாது அவை நெடிது வருந்தியிருந்தன; முடிவில் தமது வடிவில் சென்று மாரீசன் அவளுக்குக் கொடுந்துன்பத்தை விளைத்தான்; அவ்வினைவினை நினைந்து பழிக்குப்பழி தீர்த்தோம் எனப் பேருவகை யுடையனவாய் இருமையும் ஆடாமல் மான்கள் களிப்புற்றிருந்தன; என்று இதில் உணர்த்தியிருக்கும் அழகை யூன்றிப் பார்க்க.

> "நகம் தருங்கொடி கண்களை நாணியே
> முகம் திரும்பு முறையில் திரும்பு மான்;" (பிரபுலிங்கலீலை)

பரமன் கையிலிருந்த மான் உமாதேவி கண்ணழகிற்கு நாணி முகம்திரும்பி நின்றது என இஃதுணர்த்தி நிற்றல் காண்க. நகம் = மலை. பெண் நோக்கிற்கு இணையாகப் பிணை நோக்கம் பிணைக்கப்பட்டுள்ள உண்மையை இன்னவாறு பலவகை நிலையிலும் வைத்துக் கவிகள் வருணித்துள்ளார்.

தாம் கண்ட மங்கையின் கண்ணழகில் ஈடுபட்டுக் காதலர் பலபட அதனை எண்ணி வியப்பாரென்பது இதில் உணர்த்தப்பட்டது. 'இவ்வுண்மை சகுந்தலைபால் உணரலாகும்.

## கதை.

சகுந்தலை என்பவள் மேனகையின் புதல்வி. விசுவாமித்திரருக்குப் பிறந்தவள். அவர் அருந்தவசாதகமாய் இவளை விழைந்து பேணுமல் துறந்துபோயினர். தாயும் இவளை விண்ணுலகத்திற்குக் கொண்டுபோகமுடியாமையால் இங்கேயே இட்டு விடுத்து அங்கு அகன்றுபோயினள். இருவரையும் இழந்து ஓர் இனியபூஞ்சோலையில் இளஞ்சந்திரன்போல் ஒளிதவழ்ந்தொழுகி இவள் தனியே கிடந்தாள். அவ்வமயம் சகுந்தம் என்னும் சில பறவைகள்வந்து தம் சிறகர்களை விரித்து இவள்மெல்லிய மேனியில் வெயில் படாவண்ணம் விழைந்து காத்து உறவுரிமைகள் செய்து உவந்திருந்தன. அவ்வமயம் அவ்வழியே வந்த கண்ணுவ முனிவர், இவளைக் கண்டார். அவர் பேரருளாளராதலால் இவளைப் பேணியெடுத்துக் கொண்டுபோய்த் தமது ஆச்சிரமத்தில் வைத்து வளர்த்துவந்தார். அறிவினும் உருவினும் சிறந்து பருவம் நிரம்பி அழகு குடிகொண்டு நிலவு விழைவு நீங்கிநேர்நோக்க விழைந்து நோக்க எழில் கலந்தொளிர் அப்பொழிலின்கண் இவள் இனிதமர்ந்திருந்தாள். இங்ஙனம் இருப்ப ஒருநாள் அத்தேசமன்னனாகிய துஷியந்தன் வீரர் புடைசூழ வேட்டைமேல் நோக்கி எழுந்து வினைமுடித்து மீண்டு உடன்வந்த படைகளை ஒருங்கு நிறுத்திவிட்டு மாலைப்பொழுதில் தனியே கண்ணுவரைக் காண வந்தான். அம்முனிவர் அப்பொழுது அங்கு இல்லை; அயலே சென்றிருந்தார்; ஒரு பாதிரிமாநிழலில் நிலமணித்தலத்தில் பொலிவோடு பிறங்கி நிற்கும் இப் பெண்ணரசியைக் கண்டான். காணவே காதல் வெள்ளம் கரைபுரண்டோட உளமுருகி நின்றான். இவளும் ஆர்வக்காதலுடன் அவ் அழகனை நோக்கினாள். இருவர் விழிகளும் ஒன்றை ஒன்று கவ்விப்பருகு காதலைப் பரிந்து நின்றன. முனிவர் பள்ளியில் இங்ஙனம் உள்ளத்தைக் கொள்ளைகொள்ளும் உயிரோவியம் ஒன்று உறைந்திருக்கின்றதே என்று அவ்வேந்தன்

பெரிதும் வியந்து மயங்கி நின்றான். தன் கருத்து முற்றுமோ? முற்றாதோ? என்று வருத்தமீக் கூர்ந்தான். இவளது குறிப்பு நோக்கினை அருத்தியுடன் பார்த்தான். உண்மை தெரிந்து சிறிது உள்ளந்தேறி உரையாட முந்தினான். முந்தவே அவள் வெருவு தலையடைந்து வெருண்டு விழித்தாள். இவன் பருவரலடைந்து பரிந்து பார்த்தான். பின்பு பெருகிய காதலோடு இருவரும் ஒருவராய் மருவி மகிழ்ந்தார். குறிப்பறியுமுன் கூற்றோ? கண்ணோ? பிணையோ? என இவள் நோக்கினை நினைந்து நடுங்கி நின்றானாதலால் "மடவரல் நோக்கம் இம்மூன்றும் உடைத்து" எனக் காதலர் கலங்கிநிற்பரென்பதை உலகம் காண அவன் அன்று உணர்த்தி நின்றான். பின்பு கண்ணுவரிடம் உண்மையை யுணர்த்திக் கடிமணம் புரிந்து உலகறிய இருவரும் உவந்து வாழ்ந்தார். வடமொழியில் காளிதாச மகாகவி இவள் பெயரால் இயற்றியுள்ள சாகுந்தலம் என்னும் நாடகத்தில் இத்தம்பதிகளின் வரலாற்று முறைகளை நன்கறியலாகும். பொழிலிடைத் தலைப்பட்டுப் பருகு காதலினராய் உருகி நின்று இவர் உரையாடிய படியை அக்கவி குலதிலகர் அழகுற விளக்கியுள்ளார். அவ்வுரை நலங்கள் உணர்ந்து மகிழத் தக்கன.

விண்ணவர்க்கருள்புரி விமலனாகிய
அண்ணலந் துளவினாற் கன்புசான்றமெய்க்
கண்ணுவன் சாலைசூழ் சோலை கண்டவண்
நண்ணினான் நல்வளை நாட்டினானரோ. (க)

புகுந்தனை யுறைந்தெழு புயங்கத்தாடியோர்
மிகுந்தனையருந்துமெய்ப் பொருளுநக்கண்பினன்
நகுந்தனை யவிழ்மலர்ச் சோலை நாடுவோன்
சகுந்தலை என்பவள் தன்னைக்கண்டனன். (உ)

கண்டனன் கண்ணினை களிப்பக் காமநோய்
கொண்டனனென மனங்கொண்ட தன்மையான்
மண்டமர் தடங்கரான் மன்னர் தங்குலத்து
ஒண்டொடியாகும் என்றுள்ளத் துள்ளினான். (ங)

அண்ணலங் களிறனான் ஆரை நீ எனத்
தண்ணறுங்குழலினாள், தவஞ்செய் கோசிகன்

இ—ள்.

குமரேசா! பிரிதிமதியின் நெடிய கண்ணைக் கண்டு விசயாருத்தன் ஏன் துயரமெய்தி நின்றான்? எனின், கொடும்புருவம் கோடா மறைப்பின் இவள் கண் நடுங்கு அஞர் செய்யல என்க.

இது, தலைவியின் புருவநிலையை நோக்கி உருகி யுரைத்தது.

கொடும்புருவம் = வளைந்த புருவங்கள். கொடுமை ஈண்டு வளைவின் மேற்று. "எண்ணாட்டிங்களனைய கொடுங்கரை" (புறம் 118) "கொடுங்குழாய்! தெளியெனக் கொண்டதன் கொளை யன்றோ" (கலித்தொகை) "கொடுங்காற் சிலையர்" (திருவிருத்தம்) இவற்றுள் கொடுமை குறித்து நிற்கும் பொருளை யறிக.

கோடா = கோடாது; நேர்மையுடையனவாய் நின்று என்க. மறைப்பின் = தடுப்பின். "புருவம் மறைப்பின், கண் அஞர் செய்யல" என்று இதனால் அவை மறையாது நின்றன; இவை துயர்செய்து தீர்த்தன; என்பது தெளிய நின்றது.

நடுங்கு அஞர் = நடுங்கும்படியான துன்பம். கொடுந்துயரம் என்றபடி. அஞர் என்பது உள்ளக்கவற்சியை உணர்த்தி வருமாதலால் அது ஈண்டு உடல் நடுங்குமாறு உற்றிருந்ததென அதன் பெருநிலையின் பெற்றி தோன்ற இங்ஙனம் அடை கொடுத்துரைத்தார். தலைவியின் கண்ணழகு தன்னை வருத்தி நின்றபடியைத் தலைமகன் அழுந்தி யனுபவித்து வருந்தியுரைத்த படியிது. "நீரலர் நீலம் என அவர்க்கு அஞ்ஞான்று பேரஞர் செய்த என் கண்" (கலித்தொகை 143) என ஓர் தலைமகள் உரைத்துள்ளமை ஈண்டுணரத்தக்கது.

மேல், தலைவி கண்களின் இயல்பினை நினைந்து வியந்து நின்றான்; இதில், அவற்றின் செயலினையறிந்து வருந்தி நிற்கின்றான்.

வளைந்த புருவங்கள் நேர்மையுடையனவாய் நின்று விலக்கின் இவளுடைய கண்கள் எனக்குக் கொடுந்துயரங்களைச் செய்யா என்பதாம்.

அவள் என்னாது இவள் என்றதனால் அண்மைநிலை அறியலாகும். நெருங்கி நின்று அவள் கனிந்து நோக்கவே 'இவன் நெஞ்சங் கரைந்து இவ்வண்ணம் நிலைகுலைந்து கூறினான் என்க.

தலைவியின் காதற்பார்வை தலைவன் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது; கொள்ளவே எனது "உளமுதல் பறிபோயதே" என்று அவன் அலமாவெய்தி அவள் திருமுகத்தை உற்று நோக்கிப் புருவங்களைப் பார்த்து நீங்காப் பிணையாய் எப்பொழுதும் அருகமர்ந்து நிற்கும் இவைகளாவது இடைநின்று விலக்கலாகாதா? அங்ஙனம் விலக்கியிருப்பின் இங்ஙனம் கலக்கமடைந்து யான் கடுந்துயர் அடையும்படி இக் கண்கள் செய்திருக்க மாட்டாவே என்று வெய்துயிர்த்துக் கூறுகின்றபடியிது.

வலியவரிருவர் வந்து ஒருவனை வளைத்தடிக்கும்பொழுது அருகே நின்றவர் இடைபுகுந்து விலக்காமல் அலைவுற்றபாயின் நடுநிலையில்லாத கொடியர் என அவர் இழிப்பாதல் போல் புருவங்கள் ஈண்டு புகலப்பட்டன.

புருவத்தைக் குறிப்பானேன் கொடும் இமை என இமையைக் குறித்தால் என்னை? எனின், ஒருவனுக்கு அமைச்சனைப் போல் கண்ணோடு அமர்ந்து எழுந்து குனிந்து இனிய துணையாய் இயைந்திருத்தலால் அதனைத் தடுத்து விலக்கமாட்டாதென்பது கருதிக் கட்டாளியாய அதனை இங்குக் குறியாது விட்டான் என்க. கண்ணினும் மேலான இடத்தில் புருவம் இனிதமர்ந்திருத்தலால் அதனை இடித்து மொழியவும், தடுத்து நிறுத்தவும் அது வல்லதாம் என உள்ளி நின்றமையால் இங்ஙனம் உரைக்க நின்றது.

கொடும் என்பது வளைந்த என்னும் பொருளினதாய்ப் புருவத்திற்கு அடையாக அமர்ந்திருப்பினும் தனக்கு அருள் செய்யாது நின்ற கொடுமை நோக்கிக் கொடியன எனவும் பொருள் படும்படி கூறியிருக்கும் அழகைக் கூர்ந்து பார்க்க.

புருவம் குழைந்து வளைந்திருப்பதே சிறந்த அழகாம்; உடலிலக்கணப்படி இங்ஙனம் பேரழகுடையனவாய் இனிதமர்ந்திருக்கும் புருவங்களும் கண்களும் கடுங்காதலை விளைத்துத் தலைவனுக்கு உயிர்வாதனை செய்கின்றன வாதலால் இவ்வண்ணம் அவன் உளைந்து கூறினன் என்க.

கோடிய புருவம் கோடாது நிமிர்ந்து, குறுக்கே கண்மீது ஓடியிருப்பின் நான் இங்ஙனம் வாடியிரேன் என்று அவன் பாடிநிற்கின்றான். இதனால் அவளது உறுப்புக்களின் இயல்பும், எழிலமைதியும் இனிது புலனாம்.

"தேகொக்கின் அன்றி ஒன்று இணைத்திறை நிமைத்தாமே
கோலொக்கும் என்னினல்லால் குறிப்பாக் கூறிற்றன்றால்;
வாளொக்கும் வடிக்கணாள்தன் புருவத்துக்கு உவமை வைக்கில்
தாளொக்க வளைந்து நிற்ப இரண்டில்லை அநங்க சாபம்."

(இராமாயணம்)

இது, சீதையின் புருவங்களைக் குறித்து இராமன் கூறியது. இரு நுனிகளும் அளவொத்து வளைந்து நிற்பனவாகிய இரண்டு விற்கள் மன்மதனுக்கு இருக்குமாயின் அப்புருவங்கட்குச் சிறிது உவமை கூறலாம்; அங்ஙனம் இல்லையாதலால் அவற்றிற்கு ஒப்பாக வேறு யாதும் சொல்லலாகாதென அவ் வில்வீரன் உள்ளமுருகிச் சொல்லியிருத்தல் காண்க.

"கண்ணவர் வனப்பிற் சிந்தூரத் திட்டிக்கனின்செய் பொற்சிறந்த தாய்ச் சிறந்த, தண்பிறைக் கொழுந்தொன்று உளதெனில் நிகர்த்தையல்வாணுதலினை நிகர்க்கும், தெண்கடலமிழ்தின் கனிந்த அந்தீஞ்சொற் சேயிழை முகத்தொளிர் புருவம், வெண்கதிர்க் குடையில் இரதியும் மதனும் வைத்தவை வில்லினை பொருவும்."
(நைடதம்) எனத் தமயந்தியின் நுதலினையும் புருவங்களையும் குறித்து இது நுதலி நிற்றல் காண்க. உருவ நலனைக்கண்டு உள்ளங்கரைந்து நின்ற காதலர், காதலிகளுடைய புருவவில்லை நோக்கி உருகி நிற்கும் நிலையை இங்ஙனம் உணர்த்தியருளினர்.

குலமங்கையரின் புருவமும் கண்களும் பேரழகுடையன வாயமைந்திருக்குமாதலால் அவை ஆண்மகனுக்கு அருநோய் செய்யும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை ஸ்ரீமதியால் உணரப்படும்.

## கதை.

ஸ்ரீமதி என்பவள் வமாங்கநாட்டிலே இளசை என்னும் நகரிலிருந்து அரசபுரிந்த தருமசேனன் என்னும் குலதில மன்

னுடைய அருமைத் திருமகள். உருவ நிலையிலும் அறிவமை திகளிலும் உயர் புகழுடையளாய் இளமை நலங்கனிந்து இவள் வளமையெய்தி நின்றாள். தரும மங்கையர் பலர் உடனமர்ந்து போற்ற இப்பருவ மங்கை இயல் இசை முதலிய அரிய கலைகளை இனிது பயின்று அழகிய மணிமாடத்தில் இனிதமர்ந்திருந்தாள். ஒருநாள் மாலைப்பொழுதில் காமதிலகை என்னும் தோழியுடன் கூடிப் பூஞ்சோலையுட் புக்குலாவிக் கொத்தலர் கொய்து தத்தைமொழி பயிற்றி விநோத நோக்கோடு விழைந்து திரிந்தாள். முடிவில் தாமரை அல்லி முதலிய மாமலர்கள் மலர்ந்துள்ள இனிய நீர் நிலை மருங்கு இவள் தனிவந்து நின்றாள். அவ்வமயம் அங்கு விசயதத்தன் என்னும் விழுமிய குலமகன் வந்தான். அவன் பேரழகன்; வச்சர் என்னும் சிற்றரசர் மரபினன்; அந்நாட்டு மன்னனுக்கு இன்னுயிர் நண்பன்; மதிநலமிக்கவன்; அதி மதி நுட்பமோடு அதிகலை கற்றவன். வருவது சூழ்ந்துரைக்கும் மதி மந்திரிகள் பலர் அரசகாரியங்களைக் குறித்து ஆலோசனை செய்யுங்கால் முடிவாக உறுவது தெளிய அவனிடம் வருவது வழக்கம். அத்தகைய அவன் மாதுளங்கனி மூன்று கொய்து அவ் வழி வருங்கால் இச் செவ்வியளைக் கண்டான். காதல்மீக்கொண்டு கனிந்து நோக்கிக் கருத்தழிந்து நின்றான். இவளும் காமக் குறிப்போடு எதிர்ந்து நோக்கினாள். நோக்கவே ஓட்டுப் பட்ட சிட்டுப்போல் அவன் உள்ளந்துடித்துப் பள்ளம் வீழ்புனல் போல் காமவெள்ளத்தில் நிலைசரிந்து வீழ்ந்து நிலைமாறி நின்றான். இவளது கண்ணழகில் ஈடுபட்டுத் தன்வசமிழந்து அவன் தயங்கி மொழிந்தான்.

> "வாளும் கணையும் கதிர்வேலும் மானும் மதர்விழியால்
> நீளும் துயர்செய்து வாளா நின்றீர்! இது நீதியன்றே"

என இன்னவாறு பல பன்னி மொழிந்து அவன் இரந்து பின்னின்றான்; இவள் இரங்கி யருளினாள். கந்தருவ முறையில் இருவரும் கலந்து நுகர்ந்து பின்பு உலகறிய மணந்து இல்வாழ்க்கை புரிந்து தேவதத்தன் என்னும் திருமகனைப்பெற்று இருமையிலும் பெருமையெய்தி இன்புற்றிருந்தார்.

"பொன்னகருள் வேந்தன் பெயராற் பொறியும் பெற்றான்
வின்னரியதோள் விசயதத்தன் உயிர்க்கவசம்
பின்னரிய கற்பினவள் பிரீதிமதி காதற்
றன்மகனென் யானடிகள் தேவதத்தன் என்பேன்"

(சிந்தாமணி)

இவனுடைய மகன் ஒருமுறை தனது இருமுது குரவரை யும் குறித்து இவ்வண்ணம் உரைத்து நின்றுள்ளான். தலை நாளில் பொழிலிடை எதிர்ப்பட்டு இவள் விழியழகால் வெந் துயர் எய்தி அவன் வெய்துயிர்த்து நின்றபடியை பின்னர் என் றும் வியந்து கூறி நின்றான். "கொடும் புருவம் கோடா மறைப் பின், நடுங்கஞர் செய்யல மன் இவள் கண்" என்னும் உண்மையை இவள்கண் காட்டி நின்றது.

உள்ளமெலாங் கொள்ளைகொண்டேன் ஊனுருக நின்றதே
கள்ளமிலா வுள்ளமிவள் கண்.

காதலி விழிநிலையைக் கண்டு காதலன் உளநிலை கொண்ட படி இதனால் கூறப்பட்டது.

---

1087. மங்கைநல்லாள் தோன்ற மனமுடைந்தான் வில்விசயன்
கொங்கைநிலை கண்டேன் குமரேசா — பொங்கும்
கடாஅக் களிற்றின்மேற் கட்படாம் மாதர்
படாஅ முலைமேற் றுகில். (எ)

இ—ள்

குமரேசா! சித்திராங்கதை தோன்றியபொழுது அவ ளது கச்சணிந்த கனதனத்தை நோக்கி விசயன் ஏன் மனமுடைந் தான்? எனின், மாதர் படாமுலைமேல் துகில் கடாக்களிற்றின் மேல் கட்படாம் என்க.

இது, தலைவியின் முலைகளை நோக்கி நிலை குலைந்தது.

கடாக்களிறு என்றது மதயானையை. கடாம் = யானை மதம். களிறு = ஆண்யானை. "வரிஞிமிறார்க்கும் வாய்புகு கடாஅத்துப், பொறிநுதற் பொலிந்த வயக்களிறு" (அகநானூறு)

"கடுஞ்சினத்த கமழ் கடாஅத்து அளறுபட்ட நறுஞ்சென்னிய" (மதுரைக்காஞ்சி) "துன்னருந் திறற்கமழ் கடாஅத்து எயிறு படையாக" (புறநானூறு) இவற்றுள் கடாம் உறைத்து நிற்றல் காண்க.

கட்படாம் = கண்ணைமறைக்கும்படி யிடுகின்றபடாம். அஃதாவது முகபடாம் என்க. முலைமேல் துகில், கட்படாம் என்றது தான் ஊறுபடாதபடி அஃது உற்றிருக்கும் உறுதிகருதி.

முலைமேல் துகில் என்றது கச்சினை. இக்காலத்தார் இதனை இரவிக்கை என்பர். படா என்றது சாயாத என்றபடி. படுதல் = தளர்ந்து சாய்தல். படாமுலை என்றது இளமை நலங்கனிந்து இறுமாந்திருக்கும் அவற்றின் எடுப்பு நோக்கி. அளபெடை இசை நிறைக்க வந்தது. தருண மங்கையர் கச்சணிதல் இயல்பாகலான் அதனை முலைமேல் துகில் என்றார்.

"விலைவரம்பறி யாமணிக் கோவைசூழ் விளிம்பு
கலையணிந்தொரு தலை முலைமேல் அலங்கரித்தான்
முலையொடுந்துகில் கண்ட நாள்முதல் தொடர்ந்தன்றே
விலகுறுங்கலை வல்லவர் கடபடாம் என்றல்" (பிரபுலிங்கலீலை)

முலைமேல் துகிலைக் குறித்து இது கூறியிருக்கும் அழகைப் பார்க்க.

மேல், கண் வனப்பில் ஈடுபட்டுக் கலங்கி நின்றான்; இதில், முலைநிலையை நோக்கி நிலைகுலைகின்றான்.

மகளிரது இளமுலைமேல் இட்ட துகில் மதயானையின் நுதல் மேலிட்ட முகபடாம் போல்வது என்பதாம்.

பொழிலிடை நின்ற எழிலுடையாளை விழிகளிப்ப நோக்கி உளமுருகிநின்ற தலைமகன் அவளது உருவம் கண் புருவமுதலிய உறுப்பு நலங்களையும், குறிப்பு நோக்கையும் கூர்ந்து நோக்கி ஆர்ந்த காதலோடு அலமந்துழன்று ஒருவாறு அமர்ந்து நின்று சிறிது கீழ் உவந்து பார்த்தான்; பார்க்கவே "வேலை வென்ற விழிச்சியர் வெம்முலை, ஆலை நின்று முனிந்திடும் அங்கோர்பால்" (இராமாயணம்) என்றபடி பொங்கி இடையிடை புகாது புடை

பசந்தோங்கி யாண்டும் தளராதெழும்படி வளர்நிலை யமைந்து வனப்புமிக் கூர்ந்து நிமிர்ந்து இமிர்ந்து நிற்கும் அவள் முலைகளைக் கண்டு உளநிலை குலைந்து இங்ஙனம் உரைத்து நின்றான் என்க.

முலைகளை மதயானையாகவும், அவற்றின் மேலிட்டுள்ள துகிலை அதன் தலைமேல் படிந்துள்ள முகபடாம் ஆகவும் இதில் குறித்துள்ளமை காண்க. மகளிர் முலைகளை மதக்களிற்றோடு இங்ஙனம் ஒப்பவைத்தது மதக்களிப்புடையனவாய் மதர்த்து நிற்றலோடு கண்டவர் நெஞ்சம் கலங்கி யுழலும்படி பிறங்கி நிற்கும் அவற்றின் பீடுநோக்கி என்க.

"கோவையார் வடக் கொழுங்கவடு ஒடிதர நிவந்து
ஆவிவேட்டன வரிசிலை அனங்கன்மேற் கொண்ட
பூவை வாய்ச்சியர் முலைசிலர் புயத்தொடும் பூட்டத்
தேவதாரத்தும் சந்தினும் பூட்டினர் சிலமா" (இராமாயணம்)

முலைக்கும் யானைக்கும் சிலேடைப் பொருள்பட இனிது ணர்த்தி நிற்றல் காண்க.

மதயானையை முகத்தை மூடிவிட்டதுபோல் இவள் முலைகளைத் துகில் மூடியுள்ளது; இது தடையாய் இல்லையேல் அவை என்னை உடனே கொல்லும் என்று உள்ளமுடைந்து தலைமகன் சொல்லுகின்றான் ஆதலால் "முலைமேல் துகில் களிற்றின்மேல் கட்படாம்" என்றான்

"கறையடிக் களியானையின் வரவினைக் கண்டு
மறுகினுற்றவர் இரிதரமணி மருங்கிடல்போல்
உறுதவத்தினர் அறிந்தனர் ஓட ஒன்றுதற்கு
நறுமலர்ப்பதத் தணிந்தனள் சிலம்பொரு நங்கை"

மகளிரோடு மதயானை யீண்டு எண்ணப்பட்டிருக்கும் எழிலைப் பார்க்க. மாதரது மையல் வேகத்தின் வெய்யநிலையை விளக்கியபடியிது.

"வாரிட்டு, விம்மிப், புடைத்திரளி, இளகி, மணிமார்பிடமெல்லாம் கவர்ந்து, வட்டமிட்டு, அடியிட்டு, நாளுக்குநாள் மேல் வளர்ந்து, பூரித்து, முத்துமாலை யிட்டிறுமார்ந்து, பட்டவர்த்தனை

யானை மத்தகத்தோடெதிர்ந்து, வாதிட்டு மல்லிகைப்பூச் செண் டினைத் தினம் வாட்டப்படுத்தி, வரையைப் போரிட்டு, மைந்தர் கள் மனஞ்சூறையிட்டு, மேற்புளகித்து, வச்சிரத்தைப் புதுச்செப் பினைத் தோழமை கொண்டு, பொன்வரிசைப் பொடியார அராவி மீதில் பொட்டிட்டதென்னவே தேமற் படர்ந்து, செம்பொற் சரிகை வேலையிட்டுப் புனைந்த ரவிக்கையை பிதுக்கித் தெழுந்துப் புறப்பட்டு வாசனைப் பூந்தாரிட்டு, வரவரப் பளபளப்பாகி யுயர் தங்கக் கிணற்றை ஒத்துச், சந்தனம் புழுகு கஸ்தூரி கர்ப்பூரம் சவாது குங்குமமணிந்து, சந்திரகாவிச்சேலை வல்லவாட்டெக்குள் ததும்பி, அண்ணாந்து இடையின்றித், தாங்காதெனக் கனத்தோங்கி மன்மதனும் சலாமிட்டு நிற்கவும், தான், சீறிட்டு நின்று தலை வணங்காமல் திரண்ட பூண் முலைகள்'' என்றபடி நிலவி நிற்கும் தலைவியின் முலைகளை நோக்கி உளநிலை கலங்கி உரைத்தபடியிது.

போக உறுப்புக்களுள் பெருமோகம் தரும் இயல்பினவாத லால் குலமகளின் கொங்கைகளைக் கண்டபொழுது தலைமகன் குலைந்து நின்று மிகுமையல் கொள்வன் என்பது இதில் உணர்த் தப்பட்டது. இவ்வுண்மை சித்திராங்கதையால் உணரப்படும்.

### கதை.

சித்திராங்கதை என்பவள் இற்றைக்கு ஐயாயிர ஆண்டு கட்கு முன்னர் மதுரையிலிருந்து அரசுபுரிந்த சித்திர வாகனன் என்னும் பாண்டிய மன்னனுடைய அருமைத் திருமகள். அருந் தவத்தால் பிறந்தவள். வேறு புதல்வர் இல்லாமையால் இக் குலமகளைக் கலைபலவும் பயில்வித்துக் கண்ணினும் உயிரினும் இனியளாக அம் மன்னன் கருதிப் பேணி வந்தான். இவள் பருவமடைந்து அறிவிலும் திருவிலும் உருவிலும் சிறந்து பெரு நலனோடு விறங்கியிருந்தாள். இவளது எழில் நிலைக்குத் தகுந்த படி விழுமிய வரன் அமையாமையால் மணவினையைக் குறித்து ஒரு சிறிதும் கருதாமல் அரசன் உளமடங்கி யிருந்தான். குமரி ருக்கும் இந்திராணிபோல் இவள் இனிதமர்ந்திருந்தாள். ஒத்த பருவமும் ஒத்த உருவமுமுடைய தோழியர் பலர் புடைசூழ்ந்து போற்ற இப் பெண்ணரசி எண்ணிய ஆடல்களை இனிது புரிந்து

கன்னிமாடத்தில் மன்னியிருந்தாள். இங்ஙனம் இருந்துவருங்கால் அருச்சுனன் தீர்த்தயாத்திரையை மேற்கொண்டு பரதத்தின் தலங்களைச் சேவித்து முனிவர் சிலருடன் கூடி முடிவில் மதுரையை யடைந்தான். துறவு நிலையை மேற்கொண்டு அறவோர் என வந்து அனைவரையும் அரசன் மிக உபசரித்தான். அவர் அரசனின் முனிவர் இனிதமர்ந்திருந்தார். ஒருநாள் மாலைப்பொழுதில் அரண்மனை அருகேயிருந்த பனிமலர்ச் சோலையில் பார்த்தன் மட்டும் தனியே புகுந்து வளங்களைப் பார்த்து இனிதுலாவி நின்றான். அவ்வமயம் இவள் அங்குத் தெய்வகதியாய் வந்து தாமரைப் பொய்கையிலமர்ந்து மாமலர் சில கொய்து தோழியரைப் பிரிந்து ஓர் மாதவிச் சூழலை யடைந்தாள். வேடம் நீக்கிவந்து அவண் தனியே நின்ற விசயன் இவளை இனிது கண்டான். இவளது எழில் நிலையை வியந்து உளமிக உருகினான். சொக்காந்து நிற்கும் இவள் கொங்கை முலைகளைக் கூர்ந்து நோக்கிக் கடுங்காதலுடையனாய்க் காமந் தலைக்கேறிக் கலங்கி நின்றான். கச்சணியா வழி என்னுயிரைக் காணமுடியாது கொல்? என்று கருத்தழிந்துரைத்தான். "மாதர் படாஅ முலைமேல் துகில், கடாக்களிற்றின்மேல் கட்படாம்" எனக் காதலர் எண்ணி நிற்பர் என்பதை உலகம் காண இவன் அன்று உணர்த்தி நின்றான். இவ்விசயனும் உள்ளங் கலந்து உவந்து மயங்கியபடியினை வில்லிபுத்தூரார் அழகுறச் சொல்லியுள்ளார். அடியில் வருவது காண்க.

"வேதியரோடு அக்காவில் இளைப்பாறி இருந்தளவில் மின்குழாம் போல்
தாதியரும் சேடியரும் தற்சூழச் சிலைமதனன் தனிசேவிக்கச்
சோதியரிச்சிலம்பார்ப்பத் துணைநெடுங்கண் செவியளப்பத்தொடி தோள்வீசி
ஆதியர விந்தையென நிருபன்மகள் விளையாடற் காங்குவந்தாள்; (1)

பச்சென்ற திருநிறமும், பேசியதமும், வெண்ணகையும், பார்வைகளெனும்
நச்சம்பும், அமுதூறுகவிற் றுகின்றமடமொழியும், நாணும், பூணும்,
கச்சின்கண் அடங்காத கனதனமும், நுண்ணிடையும் கண்டுசோர்ந்து
பிச்சன்போலாயினன் அப்பெண்கொடி மெய்க்கலமுழுதும் பெறுவானின்றான்.

புத்திரர் வேறில்லாது புரிவரிய தவம்புரிந்து பூழிவேந்தன்
சித்திரவாகனன் பயந்த சித்திராங்கதை என்னும் செஞ்சொல் வஞ்சி

பத்திரமும், நறுமலரும், அவயவம்போல் விளங்குவன பலவும் கொய்து
மித்திரமா மகளிருடன் விரவியொரு செய்குன்றில் மேவினளே. (3)

வண்டானந் திரிதடத்து வரிவண்டினினம்பாட மயில்களாடத்
தண்டார்மெய்க்கிளிக்கூட்டம் சான்றோர்களுரைபயிற்றத் தமிழ்க்கன்னியரும்
கொண்டாடி இளம்பூவைக் குழாந்தலைசாய்த்துளமுருகுங் குன்றினெய்கண்
கண்டாளக் குமரனைத் தம்கொடிக் கயலைப் புறங்காணுங் கண்ணினுமைனா. (4)

செந்திருவையனையாளும் திருமாலையனையானும் சிந்தைநொன்றாய்
வந்திருவர் விலோசனமும் தடையின்றி யுறவாடி மகிழ்ச்சி கூர்ந்து
வெந்துருவம் இழந்தமதன் மீளவும் வந்து இரதியுடன் மேவுமாபோல்
கந்தருவமுறையினால் கடவுளர்க்குங் கிடையாத காமந்துய்த்தார்" (5)

(பாரதம்)

பொழிலிடை எதிர்ப்பட்ட தலைவியைக் கண்டு விசயன் உளமுருகி நின்றதும், கந்தருவ முறையில் உவந்து மயங்கி அவ் வொழுக்கத்தில் அமர்ந்து நுகர்ந்ததும் பிறவும் இதன்கண் அமைந்துள்ளமை காண்க.

வாரமைந்து நில்லா வழிமுலைகள் என்னுயிரை
நேரமர்ந்து கொல்லும் நிமிர்ந்து.

முலைநிலை கண்டு தலைவன் உளமுருகி நின்றபடி இதனால் கூறப்பட்டது.

---

1088. வென்றிமிகு கோசிகனும் மென்னுதலைக் கண்டவுடன்
குன்றி நின்றான் என்னே குமரேசா — நன்றிசைந்த
ஒண்ணுதற் கோஒ வுடைந்ததே ஞாட்பினுள்
நண்ணாரும் உட்குமென் பீடு. (அ)

இ—ள்.

குமரேசா! ஞானவீரனாகிய கோசிகனும் பின்பு திலோத்தமையைக் கண்டவுடன் உள்ளமுடைந்து ஏன் உருகி நின்றான்? என்னின், ஞாட்பினுள் நண்ணாரும் உட்கும் என் பீடு ஒண்ணுதற்கு ஓ உடைந்ததே! என்க.

இது, நெற்றியின் வெற்றியை விளக்குகின்றது.

வென்றிமிகு என்றது யாண்டும் குன்றாத பெருவலியுடையா னாய் அவன் நின்றிருந்தமை கருதி. உம்மை அவனது உள்ளத் திண்மையை உணர்த்தி நின்றது.

நுதல் = நெற்றி. ஒளிதவழ்ந்து எழில் அமைந்து நிற் கும் இயல்பு தோன்ற ஒண் நுதல் என்றார். ஒண்மையாவது கண்டவருள்ளத்தைக் கவர்ந்து நிற்கும் ஒள்ளிய தன்மை.

ஓ என்பதில் அளபெடை இசை நிறைக்க வந்தது. ஏகாரம் தேற்றமும், இரக்கமும் தோற்ற நின்றது. நண்ணார் = பொருந் தாதார். நண்ணல் = பொருந்தல், மேவல். உம்மை இறந்தது தழீஇயது. நண்ணாரும் உட்கும் என்றதனால் நண்ணினார் உட் கிய பாடு சொல்லவேண்டாவாயிற்று. "போர்மேற்கொண்டு தாங்குவர் போராண்மை யாவாரும்" என்றபடி. தம் பெயரைக்கேட்ட அளவிலேயே ஒடுங்கி ஒதுங்குவர் ஆதலால் போர்க்களம் புகா மலே பகைவர் போய்த்தொலைவர் என்க. இங்ஙனம் ஞாட்பி னுள் நண்ணாரும் உட்கும்படி கண்ணியிருந்த என் வலி இவ் ஒண்ணுதற்கு உடைந்ததே! என்று தலைவன் எண்ணியுருகுகின்றான்.

ஞாட்பு = போர்க்களம். "தோமர் ஞாட்பினுள் பொரு முது தந்தைதன், வார்சிலைப்புரிநாண் வாளியினறுப்ப" (பெருங் கதை) என்புழி இஃது உணர்த்திநிற்றல் காண்க.

உட்கும் = அஞ்சுதற்குக் காரணமாகிய. உட்கு என்பது அச்சத்தை உணர்த்திவரும். "பையுணாகம்போல அட்டவான் பெரிதும் உட்கி" (சிந்தாமணி) "உடலுநர் உட்க வீங்கி" (புறம்) "உருவொளிபுடைத்தாய் உட்கு வரத்தோன்றி" (பெருங்கதை) இவற்றுள் உட்கு உணர்த்திநிற்றல் காண்க.

பீடு = பெருமிதம். ஈண்டு உள்ளத்திண்மையை அஃது உணர்த்தி நின்றது. என்பெருவலி இச்சிறு நுதற்கு உடைந் ததே என உளைந்து கூறுகின்றான் ஆதலால் ஏகாரம் வியப்புமாய் நின்றது. கழிந்ததற்கு இரங்கி மொழிந்தபடியிது.

மேல், தலைவியின் முலையினை கண்டு தலைமகன் நிலைகுலைந்து நின்றான்; இதில், அவளது நெற்றியை நோக்கி நெஞ்சுளைந்து நிற்கின்றான்.

போர்க்களத்தில் வந்து நேராதாரும் கேட்டார் வாய்க்கேட்டு நிலைகுலைந்து அஞ்சுதற்கு ஏதுவான என் பெருவலி இம் மங்கையது ஒள்ளிய நெற்றிக்கு உடைந்து போயதே என்பதாம்.

தலைவியைத் தனியிடத்தில் எதிர்ப்பட்ட தலைமகன் அவளது உருவ நிலையை உருவ நோக்கி உளமுருகி நின்று பின்பு நெற்றி நிலையை நிமிர்ந்து பார்த்தான்; பார்க்கவே அது, முனிமிருந்து எழில் தவழ்ந்து இனிய திலகத்தை இடையே கொண்டு பிறைச்சந்திரன்போல் பிறங்கி நின்றது; அதன் பெருமித நிலையை அவன் நினைந்து நினைந்து நெடுமூச்செறிந்து காமம் தலைக்கேறிக் கருத்தழிந்து நின்று பின்பு கருதித் தெளிந்து தன் நிலையழிவை எண்ணி உளமிக இரங்கி அந்தோ! "ஞாட்பினுள் நண்ணாரும் உட்கும் என் பீடு, இவ் ஒண்ணுதற்கு உடைந்ததே" என இங்ஙனம் உளைந்து கூறினான் என்க.

வல்லவரெவரையும் வெல்லவல்ல என் வலி இம் மெல்லியலாட்கு மெலிந்து தொலைந்ததே என்று தான் உள்ளழிந்த படியைப் புறமறியத் தலைமகன் சொல்லியபடியிது.

"கோம்பிக்கு ஒதுங்கி மேயா மஞ்ஞைகுஞ்சரம் கோளிழைக்கும்
பாம்பைப் பிடித்துப் படங்கிழித்தாங்கு அப்பட்டனை மூலக்கே
தேம்பற்றுடியிடை மான்மட நோக்கி தில்லைச் சிவன்தாள்
ஆம்பொற்றடமலர் சூடும் என் ஆற்றல் அகற்றியதே."
(திருக்கோவையார்)

ஓந்திக்குப் பயந்து ஒதுங்கி நிற்கும் மயில், மதயானையையும் கொல்லவல்ல பாம்பைப் பிடித்துப் படங்கிழித்ததுபோல் இம் மடநோக்கி துடியிடை என் ஆற்றல் அகற்றியதே என நூர் தலைமகன் இதில் சாற்றியிருத்தல் காண்க. தன் வன்மையும் அவளது மென்மையும் தோன்ற இதன்கண் அவன் உரைத்திருக்கும் உவமை நிலையை ஊன்றி யுணர்ந்துகொள்க.

"கரும்பும் சுரும்பும் அரும்பும் பொரும்படைக் காமர் வில்வேள்
இரும்பும் கரைந்து உருகச் செய்யும்" என்றபடி எவ்வளவு பேராற்றலுடையராயினும் காமம்தலைக்கொண்டபொழுது நூராற்றலுமின்றி உள்ளழிந்து வீழ்வாராதலால் அந் நிலையில் வீழ்ந்த

தலைமகன் தன் குலைவை நினைந்து என் நிறை இவட்கு உடைந்ததே என்று கழிந்ததற்கு இரங்கி இங்ஙனம் மொழிந்தானென்பதாம்.

> "கன்னலின் கருப்புச்சிலையான் விடை
> பொன்னின்முன்னிய பூங்கணை மாரியால்
> என்னை எய்து தொலைக்குமென்றால், இனி
> வன்மை என்னுமிது ஆரிடை வைகுமே". (இராமாயணம்)

இது இராமன் கூறியது. சீதையைக்கண்டபின் காதல் மீக்கொண்டு தான் கருத்தழிந்து நின்றமைக்கு இரங்கி வருத்தமீக் கூர்ந்து தன் பெருவீரத்தின் பெற்றியை நினைந்து அம் மூர்த்தி உரைத்திருக்கும் அழகை இதில் ஊன்றிப் பார்க்க.

ஓர் அழகியைக் கண்டு உளமிக உடைந்து மெலிவடைந்து மீண்ட தலைமகன் தன் பாங்கனிடம் வந்து "இன்று நான் சிலைநுதற் றும்பட்டதால் ஒருமான் மூடிக் கண்ணியிலே" என்று உண்மையை யுரைத்தான்; உரைக்கவே அவன் "முருகன் படையனைய வெற்ப! முகிலும் பிறையும் செருகக்கிளர்வரை வந்த ஓர் பேதைக்குன் சிந்தையெல்லாம், உருகக் கலங்கினை நீ தகுமோ மற்றுனக் கிதுவே?" என நகைத்துரைத்தான்; உரைக்கவே இவன் சினந்து காதல்நலந்தெரியாத பேதையர்களே இங்ஙனம் கூறி நிற்பர்; தெரிந்தார் உரையார் என மொழிந்துரைத்திருன்.

> "மாலாய் மதம்பொழி மாதங்கவாணன் தென்மாறையன்னார்
> சேலார் கருங்கண்ணும், செங்கனிவாயும், சிறிய துண்ணேர்
> நூலார் மருங்குலும், பெருந்தன பாரமும், நும்மையன்றி
> மேலானவருங் கண்டால் உரையாரிந்த வீரங்களே" (தஞ்சை)

ஒண்ணுதற்கு உள்ளுடைந்த தலைவர்கள் தம் உடைவினைக் குறித்துத் தலைமைதோன்ற இன்னவாறு உரைத்துள்ளனர். எய்திநின்ற தலைமகளின் எழில் நிலையும், அவளை எய்த வந்த தலைமகனின் மையல் நிலையும் இதனால் இனிதுணரலாகும்.

எவ்வளவு வலியுடையராயினும் அழகிய மகளிரைக் கண்டால் அவர் உளநிலை குலைந்து உருகி நிற்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கோசிகர்பால் உணரப்படும்.

கதை.

காதிமன்னனுடைய அருமைத் திருமகனாகிய கோசிகன் என்பவன் ஒருநாள் வில்லும் கையுமாய் வேட்டம் போக்கி எழுந்து பல்வகை விலங்குகளையும் கடிந்து முடிவில் வசிட்டரது ஆச்சிரமத்தை யடைந்தான். அங்கு அவரால் தவத்தின் பெருமையை அறிந்தான்; உடனே தனது அரசபதவியை வெறுத்து, அடவியிற் புகுந்து ஐம்புலன்களையும் அடக்கி அருந்தவம் புரிந்தான். இவனது தவநிலையை வியந்து அமரரும் முனிவரும் புகழ்ந்து போற்றினர். அமரர்கோனாகிய இந்திரன் இவன் மனநிலையைக் கெடுக்க எண்ணி நெடிது சூழ்ந்து முடிவில் தனது நகரிலுள்ள அரமகளிருள் பேரழகியாகிய திலோத்தமையை அழைத்து இவன்பால் சேர விடுத்தான். அவள் வந்து சோலையுட் புகுந்து பல லீலைகள் புரிந்து மாலையில் இவன்முன் மருவி நின்றாள். அவள் உருவநிலையைக்கண்டு பெருமோகங்கொண்டு இவன் உளமிக வுடைந்து தழுவ விரைந்தான். மையல் மிக மூட்டி அவளும் பைய நெருங்கினாள். நெருங்கவே மத்தேறி உடையுயிர்போல் மனமுடைந்து செயல் குறைந்து அம்மடந்தைப் பித்தேறி நின்று பல பல பேசி நிலை கலங்கி மயங்கினான்.

"செம்பொன் மணிக்கட்டிலினிருந்து சிறுபுன் முறுவல் முகத்தரும்பப்,
பைபு மணிமேகலை கதிர்ப்பப், பவளக்கனிவாய் இதழ்துடிப்ப,
மெய்புகிழியத், திதலைமுலை வளர்ந்துவிம்ம, இடைநுடங்கக்,
கொம்பின் மருங்கு நின்றாளைக் குடங்கைபற்றி இருத்தினான்."

என்றபடி அருத்தியோடிருத்தித் தன் கருத்து முற்றக் காம நலனைக் கனிந்து நுகர்ந்து இரவுபகலறியாது தேனுண்ட வண்டுபோல் அம் மாதுண்ட கண்ணிபால் மயங்கிக் கிடந்தான். பலபடப் புகழ்ந்து மொழிந்து உவந்து திளைத்தான். "கடலிற் பிறவாச் சுவை அமிழ்தே! கரும்பிற் பிறவாக் கொழுப்பாகே! படமென் மலரிற் பிறவாத வாசங்கமழும் செழுந்தேனே! உடம்பு இரண்டேயலது, எனக்கும் உனக்கும் உயிர் ஒன்றேயன்றோ? அடர் மெய்த்தவத்தால் உனைப்பெற்றேற்கு ஆவதினியென்?" என இன்னவாறு எண்ணரியபடி இன்பநலம் கனிய இனிய மொழிகளை யிசைத்து மகிழ்ந்தான்.

குமரேசா! அழகிய அணிகள் சந்திரமதிக்கு வீண் என என் அரிச்சந்திரன் எண்ணி நின்றான்? எனின், பிணை ஏர் மட நோக்கும் நாணும் உடையாட்கு ஏதிலதந்து அணி எவன் என்க.

இது, அணிகளை நோக்கி அலமரலுற்றது.

எதிர்ப்பட்ட தலைவியின் உறுப்பு நலன்களையும் இயற்கை யழகினையும் வியந்து நோக்கி மிகுமையலோடு இதயமுவந்து வந்த தலைமகன் அவள் திருமேனியில் அணிந்துள்ள அணிகலன் களை நோக்கித் தணி வறு காதலோடு இதில் மொழி கூறுகின்றான்.

பிணை ஏர் = பிணைமானையொத்த. ஏர் என்பது அழகு எழுச்சிகளை உணர்த்திவருதலோடு ஓரோவழி உவம உருபாயும் உறழ்ந்துவரும்; "பிறை யேர் சுடர்நுதல்" (கலித்தொகை 125) "இலவம்போதேர் எழிற்றகையசிறடி" (சிந்தாமணி) இவற்றுள் ஏர் அமைந்துநிற்றல் காண்க.

மடநோக்கு என்றது வெருவி விழிக்கும் இயல்பு நோக்கி.

ஏதிலதந்து என்றது வேறாகச் சில அணிகளைக்கொண்டு வந்து என்றபடி. ஏதில = அயலானவை. அணி எவனோ = அணிவதனால் யாது பயனுடையதோ? ஒன்றும் இல்லைஎன்றபடி.

நோக்கும், நாணும் புறத்திலும் அகத்திலும் அமர்ந்து என் றும் அழகுசெய்து நிற்கின்றனவே; இத்தகைய இவட்கு வேறு அணிகள் எற்றிற்கோ என அவளது இயற்கை அழகை வியந்து சொல்லுகின்றானாதலால் "ஏதிலதந்து அணி எவனோ?" என இங்ஙனம் இகழ்ந்து நின்றான். யாண்டும் அழியாத குணநலங் களாகிய நல்லணிகள் இருப்ப வேண்டிய வழி மாண்டொழியும். கல்லணிகள் இவட்கு வேண்டா என்றபடி.

மேல், நெற்றி நிலையை நினைந்து நெஞ்சு உளைந்து நின்றான்; இதில், அணிகளை யெண்ணி அலமருகின்றான்.

பெண்மான் போன்ற அழகிய இளநோக்கினையும் நாணையு முடைய இக் குலமகளுக்கு வேறாகச் சில அணிகலன்களைக் கொணர்ந்து புனைவதனால் என்ன பயனோ? என்பதாம்.

"இழைகளும் குழைகளும் இன்ன மூன்னரோ
மழைபொரு கண்ணிணை மடந்தை மாரொடும்
பழகிய எனினும் இப் பாவை தோன்றலால்
அழகெனும் அவையுமோர் அழகு பெற்றவே" என்றபடி

அணிகளுக்கு இவள் அழகு தந்தாளேயன்றி, அவை இவட்கு யாதும் ஆற்றவில்லை எனத் தலைமகனின் அழகின் மிகுதி தோற்ற மொழிந்தான். இதனால் இவனது காதற் கலக்கம் காணலாகும்.

இயற்கை யழகிகளுக்குச் செயற்கை அணிகள் மிகை எனக் காதலர் உரைத்து நிற்பர் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை சந்திரமதிபால் உணரப்படும்.

## கதை.

சந்திரமதி என்பவள் கன்னோசிநாட்டு மன்னனாகிய சந்திர தயனுடைய அருமைத் திருமகள். கன்னமா புரியிலிருந்தவள். அருந்தவப் பயனால் பிறந்தவள். அறிவு அமைதி அடக்கம் இரக்கம் நாணம் மடம் முதலிய குணநலங்கள் யாவும் இவளிடம் குடிகொண்டிருந்தன. இயற்கையழகு இவள்பால் வியக்கத்தக்க விதமாய் விளங்கியிருந்தது; அதனால் "பூணுக்கு அழகளிக்கும் பொற்கொடி" என இப் புண்ணியவதி பொலிந்து நின்றாள். இவ ளது உருவ நலனையும், அறிவு நிலைமையையும் வியந்து அனைவரும் புகழ்ந்தார். அமரரும் வியந்தார்.

"மண்மடந்தையர் தம்முளும், வாசவனுறையும்
விண்மடந்தையர் தம்முளும், நிகரிலா விறல்வேற்
கண்மடந்தை; தண்கருங்குழல் அருந்ததிக் கற்பிற்கு
எண்மடங்கு கற்புடையள்; இந்திரையினும் எழிலாள்;"

என ஒருமுறை மாதவர் பலர் இம் மாதினைக் குறித்து ஓதி மகிழ்ந்துளார். அந் நாட்டிலுள்ள கண்டகி நதியில் தீர்த்தமாடி விட்டு முனிவர் சிலர் திருவயோத்தியை யடைந்து அங்கு இள வரசராயிருந்த அரிச்சந்திரனைக் கண்டு உரையாடி நின்றார். அவ் வமயம் கன்னோசியில் என்ன அதிசயமுள்ளது? என்று அம் மன்னவன் விநோதமாக அவரை இனிது உசாவினான். அதற்கு அவர் வேறு யாதும் கூறாது இவளது விழுமிய நிலையையும், எழில் நலங்களையுமே வியந்து கூறினார். அன்று அவர் அருள்செய்து கூறியவற்றுள் சில இதன் அடியில் வருவன காண்க.

மாறுகொண் டென்னை வல்லிவாட்டிய வாட்டம் சொல்லி
ஆறுதற்கு என்பால் நண்ணியணையுமோ? அலைகடலாயல்
வேறும் இப்படியே வாதை விளைக்குமோ? விளைக்கும் வாதை
ஏறுமோ? குறையுமோ? என்று இருந்தனன் இறைவனிப்பால்."
(அரிச்சந்திர புராணம்)

இவ்வண்ணம் இவளது தகையணங்கிலழுந்தி மிக வருந்தி நின்ற அவன் ஊழ்கூட்ட நேர்ந்து அடிதினையூர்ந்து கன்னமா புரியை யடைந்து மன்னனையணுகி யான்முறை கூறி அங்கு இனிதமர்ந்திருந்து ஒருநாள் இவளைத் தனிவந்து நோக்கினான். நோக்கவே இவளும் இனிதெதிர் நோக்கி இன்னகை பூத்தாள். எண்ணருங் காதலோடு இருவரும் இணைந்து நுகர்ந்தார். பின்னர் மணமுறை நிகழ்ந்தது. இவளுடைய அணிகலன்களை நோக்கி அவன் இரங்கி வருந்தினான். இனிய மேனியின் எழில் ஒளியை இடை மறைத்து நின்று எனக்கும் இடைக்குறும் இடர்மிக விளைக்கும் இப் புல்லிய அணிகளை இவள் மீது யான் காதியார் புனைந்து வைத்தார் என ஒருநாள் இகழ்ந்தொதுக்கினான். அவன் இவளது அணிகளைக் களைந்தெறிந்த நிலையினைக் குறித்துக் கவி அழகுறக் கூறியுள்ளார். அடியில் வருவது காண்க.

"உடைப்பெரும்பண்டமிகக் கலத்தேற்றி ஒலிகடல் நீந்திநூர் துறைசேர்ந்து
அடைப்பெரும்பாரத்தால் தாழுமென்றேறுடி அறப்பயர்ந்திறக்குவார்போலப்
படைக்கல விழியாள் அணியொடு கலையும்பனிமலர்த்தொடையலும் பரமாய்
ஈக்"

இன்னணம் அம் மன்னன் பன்னருங் காதலுடன் இவளைப் பரிந்துபேணி நுகர்ந்து வந்தான். "பிணையேர் மடநோக்கும் நாணும் உடையாட்கு ஏதில தந்து அணி எவனோ?" என்று காதலர் கவல்வர் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

மேனி யழகை மிகமறைப்ப தையகோ
ஏனோ அணிகாண் இவட்கு.

இயற்கை யழகிற்குச் செயற்கையணி வீணும் என்பது இதனால் கூறப்பட்டது.

குறிப்பறிந்து சொன்ன பொய்ப்புணர்ச்சி பெய்துமன் காட்சியினில் காமக்காதலை உள்ளப்புணர்ச்சி யுற்றமையை புணர்த்தபடியிது.

காதலிருவர் கருத்தொன்றுபட்டமையாற் பொருளொன்றாய்ப் பெயர்ப்பாய் கொண்டிருக்கிறவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இராமனிடமும், சீதைகண்ணும் உணரப்படும்.

## கதை.

திருவயோத்தியில் இளவரசாயிருந்த இராமபிரான் குரு குலவாசஞ்செய்து அரிய கலைகள் பல தெளிந்து விசுவாமித்திரரது வேள்வியைக் காத்து முடித்து அவரோடு தொடர்ந்து மிதிலை நகரடைந்து தெருவு பல வீதிகள் கடந்து முடிவில் இராசவீதியுட் புகுந்தான். முனிவர் முன்னும் தம்பியாகிய இலக்குமணன் பின்னும் இணைந்து செல்ல அவர்கள் இடையே நடந்து சென்றான்; சனகனுடைய அருமைப் புதல்வி இனிதமர்ந்திருக்கும் கன்னி மாடத்தருகே அன்னங்களாடு முன்றுறை மருங்கு சிறிது போது தங்கி வளங்கெழு காட்சிகளை வியந்து நோக்கி உவந்து நின்றான். அவ்வமயம் சானகி தோழிகளோடு கழங்கும் பந்தும் கைகலந் தாடி மெய்யோய்ந்துயர்ந்து நிலாமுற்றத்தமர்ந்து தெய்வவடிவாய்த் தெருவினை நோக்கினாள். நிற்கின்ற ஐயனைக் கண்டாள். இவ் அழகனும் அவளை விழிகளிப்ப நோக்கினான். இருவர் கண்களும் பருகு காதலோடு ஒன்றையொன்று கவ்வி உவகையீர்த்தன. இருவருள்ளங்களிலும் காதல் வெள்ளம் பொங்கி மோதிக் கரைபுரண்டெழுந்தது. புனலொடு புனல் கலந்தாற்போல் உயிரொடு உயிர்கலந்து ஒன்றி நின்றது. பெருமகிழ்ச்சியோடு இவர் ஒன்றிநின்ற படியைக் கம்பர்பெருமான் இன்பக்கூழ்ப்ப இசைத்து வைத்துள்ளான். சிறிது இதனடியில் காட்டுகிறோம்.

> "எண்ணரு நலத்தினாள் இனையள் நின்றுழிக்
> கண்ணொடு கண்ணிணை கவ்வி ஒன்றையொன்று
> உண்ணவும் நிலைபெறா துணர்வும் ஒன்றிட
> அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்; (க)

நோக்கிய நோக்கெனும் நுதிகொள் வேலிணை
ஆக்கிய மதுகையான் தோளில் ஆழ்ந்தன;
வீக்கிய கனைகழல் வீரன் செங்கணும்
தாக்கணங் கனையவள் தனத்தில் தைத்தவே; (௨)

பருகிய நோக்கெனும் பாசத் தாற்பிணித்து
ஒருவரை ஒருவர்தம் உள்ளம் ஈர்த்தலால்
வரிசிலை யண்ணலும், வாட்கண் நங்கையும்,
இருவரு மாறிப்புக்கு இதயம் எய்தினார். (௩)

மருங்கிலா நங்கையும் வசையில் ஐயனும்
ஒருங்கிய இரண்டுடற்கு உயிர் ஒன்றாயினார்;
கருங்கடற் பள்ளியில் கலவிநீங்கிப் போய்ப்
பிரிந்தவர் கூடினால் பேசல்வேண்டுமோ?" (மிதிலைக்காட்சி)

இவ் இருவரும் ஒருவரை ஒருவர் கண்டதும், மோகமீதூர்ந்து கொண்டதும், எழுமையும் தொடர்ந்த உழுவலன்பினால் உயிர் ஒன்றி நின்றதும் பிறவும் இதன்கண் ஊன்றி யுணர்ந்துகொள்க. இங்ஙனம் கண்டு அரிதிற் பிரிந்த இராமன் தனியே யிருந்து மையல் மிகுந்து மயங்கி வருந்தினான். கண்ட அத்தையல் கைவரப் பெறாளாயினும் இக்காட்சியின்பத்தையாவது இன்னும் ஒரு முறை காணமுடியுமா? என்று கருதியுளைந்தான்.

"பூண் உலாவிய பொற்கலசங்கள் என்
ஏணிலாகத் தெழுதல என்னினும்
வாணிலாமுறுவற்கனி வாய் மதி
காணலாவதோர் காலமுண்டாங் கொலோ?" (இராமன்)

என்று மாலடைந்து நின்று சாலவும் நொந்தான். இவ்வாறே சீதையும் இவனைக் காதலித்து நின்றாள். கண்டபோது கெழுந்த காமர்நிலையை யுட்கொண்டு கடுங்காதலுடையளாய்க் கலங்கி மயங்கினாள். "இந்திரநீலம் ஒத்து இருண்ட குஞ்சியும், சந்திர வதனமும் தாழ்ந்தகைகளும், சுந்தரமணிவரைத் தோளுமேயல, முந்தி என் உயிரை அம் முறுவல் உண்டதே" என உருகி மொழிந்து மறுகி யுளைந்தாள். அக் கமலக் கண்ணன் கையரா

னுயினும் இக்காட்சியாவது மீள ஒருமுறை காணக்கிடைக்குமா? என்று காதல் கொண்டயர்ந்தான்.

"காணுலாவு மேருவோடு காணுலாவு யாணியும்
தூணுலாவு தோளும் வாளி யூடுலாவு ஆணியும்
வாணிலாவின் நாலுலாவும் மாலைமார்பும் மீளவும்
காணலாகுமாகின் ஆவி காணலாகுமே கொலாம்" (சீதை)

என மாவிரகமிகுந்து ஆகுலமடைந்தான். இவ்வண்ணம் இருவரும் தாம் கண்டபோது கொண்ட மகிழ்ச்சியை மீளவும் காண விழைந்தார். காமநலனைக் கருதி யுருகினர். கண்டார் கண் காமம் மகிழ்ச்சியைச் செய்யுமாதலால் அது, உண்டபின் இனிக்கும் நறவினும் இனிது என்பதை உலகம் காண இவ் இருவரும் அன்று உணர்த்தி நின்றார்.

உண்ண இனிக்கும் உயரமிர்தம் காமமோ
எண்ண இனிக்கும் இனிது.

காதலரது காட்சியின் மாட்சி இதனால் கூறப்பட்டது.

---

இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

அறிவு திரு அழகு குணமுதலிய உயர் நலங்கள் யாவும் ஒருங்கேயுடைய ஓர் அரசிளங்குமரன், அத்தகைய ஓர் அரசிளங்குமரியைத் தனியிடத்திலெதிர்ப்பட்டு விழிகளிப்ப நோக்கி உளமிகவுருகி அவள் எழில் நிலையை வியந்து அணங்கு முதலாக நினைந்து உளைந்து மயங்கினன். அவள் பார்வையில் பதைத்தான். எமன் என அவளை எண்ணி அயர்ந்தான். உயிருண்ணும் தோற்றம் என உருகி மொழிந்தான். அவளது கண்ணிலையை எண்ணிக் கடுந்துயரடைந்தான். முலைகளை நோக்கி உளநிலை குலைந்தான். தன் பீடு அழிந்தமைக்கு வாடியுளைந்தான். இயற்கையழகுடைய அவட்குச் செயற்கையணி வேண்டாம் என்று செயிர்த்துரைத்தான். காமம் கண்டபோதே இன்பம் தரும் என அக் காட்சியின்பத்தைக் கருதிப் புகழ்ந்தான்.

ாகூவது தகையணங்குறுத்தல் முற்றிற்று.

# 110-ம் அதிகாரம் குறிப்பறிதல்.

அஃதாவது தலைமகள் குறிப்பினைத் தலைமகன் அறிந்து கொள்ளுதல். பொருவினை மதிப்பாடு அவளது உறவு நிலையைக் கண்டு பெருமையால் சொல்லி நின்ற தலைமகன் அவள் உள்ளக் குறிப்பினைக் குறிப்பு நோக்கினால் உய்த்துணர்ந்து கொள்ளுகின்றான் ஆதலால் தகையணங்குறுத்தலின் பின் இது வைக்கப்பட்டது. 71ம் அதிகாரத்தில் வந்துள்ள குறிப்பறிதலுக்கும் இதற்கும் என்ன வேற்றுமை? எனின், அது மக்களெல்லாருக்கும் பொதுவான பரநிலையிலுரைத்தது; இது காதலர்க்கு மட்டும் சிறப்பாக அகநிலையில் குறிக்கப்பட்டது.

1091. பண்டு பாவை பணிநோக்கால் கந்தர்நோய்
கொண்டுய்ந்தார் என்னே குமரேசா — கொண்ட
இருநோக் கிவளுண்கண் உள்ள தொருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து. (க)

இ—ள்

குமரேசா! பாவையார் பார்வையால் கந்தர் ஏன் நோயும் மகிழ்ச்சியும் ஒருங்கே அடைந்தார்? எனின், இவள் உண்கண் உள்ளது இருநோக்கு; ஒருநோக்கு நோய்நோக்கு; ஒன்று அந்நோய் மருந்து என்க.

இது குறிப்பு நோக்கின் சிறப்புரைக்கின்றது.

பணிநோக்கு என்றது முதலில் தவிப்புச் செய்து, பின்னர்க் குளிர்வித்து நின்றமை கருதி.

இவள் என்றது தனியே எதிர்ப்பட்ட தலைமகளை. சுட்டு அவளது அண்மை நிலையின் தன்மை தோன்ற நின்றது.

உண் கண் = மையுண்டகண். பெண்கள் கண்களுக்கு அஞ்சனம் என்னும் மையை பூட்டுவராதலால் அவை உண்கண் என நின்றது. "மைபருகி நீண்ட மதர்த்த உண்கண் வாளோடு பெற்று வைவார்" (சிந்தாமணி) "பூக்கவின்கொண்ட புகழ்சால் எழில் உண்கண் நோக்குங்கால் நோக்கின் அணங்காக்கும் சாய

தான்; நீ இங்ஙனம் கவலைப்படாதே உண்மையாக முழுதும் எனக்கு அவள் உரிமையாயுள்ளாள் என்று உறுதிபெற உரைத்தான்; அதற்கு அவன் பார்வையது நம்பலாமோ? என்றான். "சிறுநோக்கம் அன்று; பெரிது" என அவன் உறுதிகொள்ளுமாறு உரைத்துள்ளபடியா யிஃது உருக்கொண்டுள்ளமை காண்க.

மேல், தலைவிகண் இருநோக்குடையதென்று குறித்த அதனியல்புரைத்து நின்றான்; இதில், அவ் விழிநிலையால் அவளது உள நிலையை யறிந்து உவந்து நிற்கின்றான்.

இவளுடைய கண் காதல் செய்யும் சிறு பார்வையானது யான் விழைந்துநிற்கு மெய்யுறு புணர்ச்சிக்குப் பெரிதும் இசைந்ததாக அமைந்துள்ள தென்பதாம்.

தான் காதலித்து நின்ற தலைமகளது உளநிலையை உளவறிய விழைந்து தலைமகன் தனியே தயங்கி நோக்கினான்; அங்ஙனம் நோக்குங்கால் இவள் பாராதவள்போல் பராமுகங்கொண்டு அவன் கண் காணுவகை இடை தெரிந்து கடைக்கண்ணால் சிறிது கனிந்து பார்த்தாள்; அப் பார்வையை நனிந்து நோக்கி நின்ற அவன் இனி இவள் இசைந்துபடுவாள் என்று துணிவாகத் தெளிந்துகொண்டு தனக்குள்ளேயே உவந்துநின்றபடியிது.

தனக்கு இசைவாளா? இசையாளா? என்று கவலைமீக் கொண்டு கலங்கிநின்ற தலைமகன் இவளது கள்வுநோக்கின் உளவினை யறிந்து முழுதும் கைவந்ததெனப் பெருமகிழ்வுடையனாய் மொழிதருகின்றானாதலால் அதனை அளவு கூறி இங்ஙனம் உரை செய்து நின்றான் என்க.

சிறுநோக்கம், பெரிது; என முரண்படவுரைத்தது அவ் அருகிய நோக்கம் தனக்குப் பெருகிய இன்பம் தந்து நிற்கும் பெற்றியை நினைந்தென்க. இப் பெருந்தடங் கண்ணாள் தன் எழிலால் என்னை வருந்தவைத்துப் பின்பு சிறிது இரங்கிப் பார்த்தாள்; அதனால் யான் இறந்துபடாமல் நின்று சிறந்த இன்பத்தை யடைந்து பிறந்த பயன் பெற்றேன் என்று தலைமகன் இவ்வண்ணம் மகிழ்ந்து நின்றான். இந்நிலையினை அகப்பொருட் டுறையில் "முறுவற் குறிப்புணர்தல்" என்பர். முறுவல் = சிறுநகை.

இது, நாணமும் நகையும் காண மொழிகின்றது.

யாம் என்றது தலைமகனை. தான் என்றது தலைமகளை.

யான் நோக்குங்காலை = நான் பார்க்கும்பொழுது.

நிலன் நோக்கும் = அவள் பூமியைப்பார்த்து கவிழ்ந்து நின்றாள். மெல்லநகும் = பல் வெளியே தோன்றாதபடி மெது வாகச் சிரிக்கும். என்றது புன்னகையை. நோக்கும், நகும் என அவற்றினை வாசகமாக வமைத்தது உவகை மிகுதியான்.

தான் காதலித்த தலைமகன் தன்னை விரைந்து காணவேண் டும் என்னும் வேணவாவோடு மிருந்து நின்றும் அவன் கனிந்து காணுங்கால் எதிர்த்து காண நாணித் தலைகவிழ்ந்து நிற்பளாதலால் அந்நிலையினை வியந்து "யான் நோக் குங் காலை நிலன் நோக்கும்" என்றான். அங்ஙனம் நின்றவள் அவன் கண் காணாவகை அவனை ஒன்றி நோக்கி உள்மகிழ் காத லோடு உதடு மலர்ந்து முறுவல் தெரியாவகை சிறுநகை செய்வ ளாதலால் "தான் நோக்கி மெல்ல நகும்" என்றான். "யான் தற்காண்டொறும் தான் பெரிது மகிழ்தாள், வாணுதல் வியர்ப்ப நாணினள் இறைஞ்சி, மிகைவெளிப் படாது நகை முகம் கரந்த, நன்னுதல் அரிவை தன்மனத் திகைத்தனைத, நீ யறிந் திலையால் நெஞ்சே! யானறிந்தேனது வாயாகுதலே" என்பதும் காண்க.

மேல், தலைவியின் நாணியல்பை நோக்கி நயந்து நின்றான்; இதில், நகை நிலையை வியந்து மகிழ்ந்து நிற்கின்றான்.

யான் விழைந்து நோக்கும்பொழுது நிலனோக்கித் தலை கவிழ்ந்து நிற்கின்றாள்; நோக்காவழி என்னை அவள் உவந்து நோக்கி மெல்ல நகுகின்றாள் என்பதாம்.

புல்லி நோக்கல், மெல்ல நகைத்தல் முதலிய செல்லச்செயல் களெல்லாம் காமங்கொண்டாரிருவர் நேர்ந்து கண்டபொழுது காதலியால் ஆர்ந்தெழுமாதலால் மெய்ப்பாடாகிய அந் நிகழ்ச்சி வகைகளை இங்ஙனம் விளக்கி யருளினார்.

"காம அவிநயம் கருதுங்காலைத்
துவுள்ளுறுத்த வடிவும், தொழிலும்,

அவனை உவந்து நோக்கி உளமுருகி நின்றாள். "அடுமரம் துஞ்சு தோள் ஆடவரும் ஆய்ந்த படுமணிப் பைம் பூணவரும்—தடுமாறிக் கண்ணெதிர் நோக்கொத்த காரிகையிற் கைகலந்து—உண்ணெகிழ்ச் சேர்வதாம் அன்பு" என்றபடி இவ் இருவரும் நெஞ்சங் கனிந்து நேரொத்து நின்றார். மேல் கலவியை விழைந்து இவளை அவன் கூர்ந்து பார்த்தான். பார்க்கவே இவள் தலை கவிழ்ந்து நாணி நிலனோக்கி நின்றாள். அந் நிலையினை நோக்கிச் சிறித அவன் முகந்திரும்பிக் கடைக்கணித்து நின்றான். உடனே இவள் புரிந்து பார்த்துப் புன்னகை செய்தாள். அக்குறிப்பினால் இவள் கருத்திசைந்துள்ளமையைத் திருந்தமுறத் தெளிந்து அவன் அருத்தியோடு அருகணைந்தான். இவளும் ஆர்வமிகுந்து அமைந்து நின்றாள். இருவருமருவி உருகி நுகர்ந்து பொருவி லின்பமுடையராய்ப் பெருகி யிருந்தார். காதலன் விழைந்து நோக்குங்கால் காதலி நிலனோக்கி நாணித் தலைகுனிந்து நிற்பள் என்பதும், அவன் நோக்காக்கால் இவள் உள்ளி நோக்கி மெல்ல நகுவள் என்பதும், உலகம் காண அன்று இவள் உணர்த்தி நின் றாள். அம் மன்னனுக்கு இவள் வயிற்றில் தோன்றினவனே பின்பு தொண்டைமான் இளந்திரையன் என்னும் பெயரோடு வந்து தொண்டை மண்டலத்தை ஆண்டு நின்றான்.

"பொங்குதிரை யுலாவும் புன்னையங் கானற்
கிளர்மணி நெடுமுடிக் கிள்ளி முன்னா
இளவேனில் இறுப்ப இறும்பூது சான்ற
பூநாறு சோலை யாருமில் ஒருசிறைத்
தானே தமியள் ஒருத்தி தோன்ற
இன்னள் ஆர்கொல்? ஈங்கிவள் என்று
மன்னவன் அறியான் மயக்கம் எய்தாக்
கண்ட கண்ணினுங், கேட்ட செவியினும்,
உண்டவாயினும், உயிர்த்த மூக்கினும்,
உற்றுணர் உடம்பினும் வெற்றிச் சிலைக் காமன்
மயிலையும் செயலையும் மாவும் குவளையும்
பயிலிதழ்க் கமலமும் பருவத்தலர்ந்த

மலர்வா யம்பின் வாசம் கமழப்
பலர்புறங் கண்டோன் பணிந்து தொழில் கேட்ப
ஒருமதி எல்லை கழிப்பினும் உரையாள்
பொருவரு பூங்கொடி போயின அந்நாள்
யாங்கொளித் தனள் அவ் இளங்கொடி யென்றே
வேந்தரை யட்டோன் மெல்லியற் றேர்வுழி
நிலத்திற் குளித்து நெடுவிசும் பேறிச்
சலத்திற் றிரியுமோர் சாரணன் தோன்ற,
மன்னவனவனை வணங்கி முன்னின்று
என்னுயி ரனையாள் ஈங்கு ஒளித்தாளுளள்
அன்னா ளொருத்தியைக் கண்டிரோ அடிகள்
சொல்லுமின் என்று தொழ; அவன் உரைப்பான்;
கண்டிலே னாயினும் காரிகை தன்னைப்
பண்டறி வுடையேன் பார்த்திப கேளாய்!
நாகநாடு நடுக்கின் றாள்பவன்
வாகை வேலோன் வளைவணன் தேவி
வாசமயிலை வயிற்றுட் டோன்றிய
பீலிவளை என்போள் பிறந்த அந்நாள்
இரவிகுலத் தொருவன் இணைமுலை தோயக்
கருவொடு வருமெனக் கணியெடுத் துரைத்தனன்
ஆங்கப் புதல்வன் வரூஉம் அல்லது
பூங்கொடி வாராள் புலம்பல், இதுகேள்!" (மணிமேகலை)

இப் பீலிவளையும் அவ் வளவனும் ஊழ்கூட்ட வந்து தனியிடத்தில் எதிர்ப்பட்டுக் காதல்கொண்டதும், குறிப்பறிந்து கந்தருவ முறையில் கலந்து மகிழ்ந்ததும், மைந்தன் பிறந்ததும் பிறவும் இதன்கண் வந்துள்ளன காண்க.

**கள்ள விழியாள் கரந்தோர் நகைசெய்தாள்**
**உள்ளமெலாம் ஓர்ந்தேன் உடன்.**

காதலி சிறுநகை செய்தால் காதலனுக்குப் பெருநலனும் என்பது இதனால் கூறப்பட்டது.

1100. வார்த்தையின்றி நோக்கொடுஞ்சல வாணன் மதனமஞ்சரி
கூர்த்திசைத்தார் கண்ணை குமரேசா — ஆர்த்திபெறு
கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனும் இல. (ய)

இ-ள்.

குமரேசா! மதனமஞ்சரியும் சலவாணதத்தனும் வாய்ச்சொற்கள் யாதுமின்றிக் கண்ணொடு கண் நோக்கி வல் கருத்திசைத்து நின்றார்? எனின், கண்ணொடு கண் இணை நோக்கு ஒக்கின் வாய்ச்சொற்கள் என்ன பயனும் இல என்க.

இது, காதலர் கண்ணோக்கே அவர் உண்ணோக்கை புலப்படுத்திவிடுமென்கின்றது. ஆர்த்தி = ஆர்வம்.

கண்ணொடு = தலைவிகண்களோடு. கண் இணை = தலைவன் கண்கள். இணை = இரண்டு, சோடு. கண்டு இங்ஙனம் தொகை குறித்தது ஒருகண் சிறக்கணித்து நோக்காமல் இரு கண்களும் ஒருங்கே ஒன்றி நோக்கும் உறுதிநிலை தோன்ற என்க.

நோக்கு ஒக்கின் = பார்வை ஒத்திருக்கின். இவ் ஒப்பு எளிதிலமையாதாதலால் அதன் அருமை தோன்ற ஒக்கின் என்றார். சொற்கள் என்றதில் வாயால் சொல்லும் சொற்கள் என்பது பெறப்படுதலின் அங்ஙனமிருப்ப வாய் என வேண்டாது கூறியது என்னை? எனின் உள்ளுர இல்லாமல் வாயளவில் சொல்லியன என்பது தோன்ற என்க.

என்ன பயனும் = எவ்வகையான உறுதியும். ஒரு சிறு பயனும் இல்லை என்பதனை இச் சொல்லமைக்கின்றது.

மேல், ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்கினும் காதலர் உண்மை நிலையைப் புலப்படுத்தலாம் என்றார்; இதில், சொல்லொன்றும் வேண்டாமலே அவர் கண்ணோட்டத்தால் எல்லாம் அறியலாம் என்கின்றார்.

காதலரிருவருள் ஒருவர் கண்களோடு ஒருவர் கண்கள் நோக்கால் ஒத்திருக்குமாயின் அவர் வாயால் சொல்லும் சொற்கள் யாதொரு பயனுமுடையன வல்ல என்பதாம்.

மக்கள் தம் உள்ளக் கருத்தை ஒருவரோடொருவர் உணர்த்திக் கோடற்குச் சொற்களே கருவியாயுள்ளன வாதலால் அவ் உரிமையான் அவை யிங்கு உடனெண்ணப் பெற்றன. எல்லாருக்கும் இயல்பா யினிதமைந்துள்ள சொல்லாடல் காதலர்க்கு மட்டும் ஏதிலதாயது என ஓதி அவர்தம் உள்ள நிலையையும், உணருந் திறனையும் இதில் உணர்த்தியருளினார்.

தான் காதலித்த தலைமகள் தோழியுடன் அமர்ந்திருக்குங் கால் தலைமகன் கண்டான்; காணவே அவள் களித்து நோக்கினாள்; இருநோக்கும் ஒருங்குகலந்து நிறைவொத்து நின்றமையால் அவள் உள்ளம் இசைந்துள்ளதை இவன் உணர்ந்துகொண்டு உவந்து வந்து அந்நிலையினை வியந்து "நோக்கு ஒக்கின் வாய்ச் சொற்கள் பயனில" என இங்ஙன மொழிந்துநின்றுள் ளான், காண்க.

இனி, இதனைத் தோழி கூற்றாக உரைப்பினும் அமையும். தான் அறியாவகை காதலர் இருவரும் கலந்து நோக்கிக் களித்து போனதை அவள் அறிந்துகொண்டு யாதும் தெரியாதவள் போல் அமர்ந்திருந்தாள்; இங்ஙனம் இருப்பத் தலைமகள், பூக்கொய்து வருகின்றேன்; புனம் பார்த்து மீள்கின்றேன்; சுனையாடி அடைகின்றேன்; என இன்னவாறு ஏதாவது ஒன்று கூறித் தனியே சென்று கருதிய இடத்தில் இனிது வந்து நிற்பத் தலைமகனும் அவ்வாறே வேட்டையாடி வருவல் எனத் தோழனை ஏமாற்றிவிட்டு அவ்விடம் வந்து இவளை நோக்கி மகிழ்ந்தான்; இந் நிகழ்ச்சியை மறைவாக வந்து தோழி பார்த்து உண்மை தெளிந்து "கண்ணொடு கண்ணிணை நோக்கு ஒக்கின் வாய்ச்சொற்கள் என்ன பயனும் இல" என உலகியல் மேல்வைத்துச் சொன்னபடி யிது. என்ன பயனும் என்றது அவர் வாய்ச் சொற்களை நம்பலாகா தென்பதாம். உண்மை என்று நம்பிப் பின்பு மாறுபடக் கண்டவின் இங்ஙனம் கூறலாயினாள்.

> "ஏனல் காவல் இவளும் அல்லள்;
> மான்வழி வருகுவன் இவனும் அல்லன்;
> நரந்தங்கண்ணி இவனோடு இவளிடைக்
> கரந்தவுள்ளமொடு கருதியது பிறிதே!

நம்முன் நாணுவர் போலத், தம்முள்
மதுமறைந்து உண்டோர் மகிழ்ச்சி போல,
உள்ளத் துள்ளே மகிழ்ப;
சொல்லும் ஆடுப கண்ணி னானே''

தோழி உணர்ந்துரைத்துள்ளமையை இஃதுணர்த்தியிருத்தல் காண்க. ஏனல் = தினை. நாந்தம் = நாரத்தை. கண்ணி = மாலை. வாயால் பேசாமல் காதலர் கண்ணால் பேசினர் என அவள் உரைத்திருக்கும் அழகைப் பார்க்க. இதனை அகப் பொருள் துறையில் இருவர் நினைவும் ஒருவழி யுணர்தல் என்பர்.

மெய்யே இவற்கில்லை வேட்டையின் மேல்மனம், மீட்டிவளும்
பொய்யே புனத்தினை காப்பது; இறைபுலி யூரனையாள்
மையேர் குவளைக் கண் வண்டினம் வாழுந் செந்தாமரைவாய்
எய்யேம் எனினும் குடைந்தின்பத் தேன் உண்டு எழில்தருமே.
எய்யேம் = அறியேம். (திருக்கோவையார்)

மான்வேட்டமீதும், புனம் காவல் மீதினும், வைத்தமனந்
தான்வேட்டகாதல் மறைப்பவெல்லாம் அயன்தாதையொடு
நான்வேட்ட செம்மலர்த்தாளான் திருவெங்கை நாட்டிவர்
தேன்வேட்ட பூங் கண்களே அலர்தூற்றித் தெரிவிக்குமே.
(திருவெங்கைக்கோவை)

புனங்காவலன்றிவள் பூண்டது, பூண்டதை போந்தது மான்
இனங்காவலின் கலை எய்யவன்றால், இகலாழியிந்தை
தனங்காவலன், தஞ்சைவாணன் நன்னாட்டிவர் தங்களில் தாம்
மனங்காவல்கொண்டதெல்லாம் கண்களேசொல்லும்வாய்திறந்தே.
(தஞ்சைவாணன்கோவை)

நிறக்குந் தினைகொண்டு கோமச்சர நித்தர் நீள்வரைக்கண்
பறக்கும் சுகமிவள் பாரான், இவன் சுகம்பார்க்கும்; இவன்
மறக்குஞ்சரத்தை மறந்தின்னவள் விழி வன்சரத்தை
உறக்கண்ணுறும்; இவர் வேட்டமும், காப்பும் உணர்வுற்றவே.
சுகம் = கிளி, இன்பம். (கோமச்சரக்கோவை)

இவை மீண்டெண்ணற்குரியன. இவள் குவளைக்கண் அவன் செந்தாமரைக் கண்ணில் இன்பத் தேன் உண்டு எழில் தரும்; மறைப்ப எல்லாம் கண்களே தெரிவிக்கும்; கண்களே வாய் திறந்து சொல்லும்; திணைக்கதிர் கொண்டு பறக்கும் கிள்ளையைப் பாராமல் அவன் சுகத்தையே இவள் பார்த்தாள்; அவனும் குஞ்சரத்தை மறந்து இவள் விழியாகிய வஞ்சரத்தைக் கண்ணுறும் ஆதலால் இவர் வேட்டமும் காப்பும் உண்மையல்லவென்று உணரப்பட்டன என இவை உணர்த்தி நிற்கும் அழகைப் பார்க்க.

"முன்னுற வுணர்தல், குறையுற வுணர்தல்,
இருவரும் உள்வழி அவன் வரவுணர்தல் என்று
அம்மூன்றென்ப தோழிக்கு உணர்ச்சி" (இறையனார்)

இதனால் தோழி உணரும் உரிமையும் முறைமையும் உணரலாகும். தம் உள்ளக்கருத்தைக் கண்களாலேயே காதலிகள் உரைத்துவிடுவாராதலால் அவர் வாய் திறந்து வேறு கூற வேண்டாம் என்பது இஃதுணர்த்தி நின்றது.

"ஆடவர்மனங்களென்னும் அரங்கின்மேல் அநங்கமாலை
ஆடினாள், முறுவல் என்னும் தோழியை ஐயன்காண
ஓடரிநெடுங் கண் என்னும் ஓலையை எழுதிவிட்டாள்
வாடியவாறும் நோயும் உரைத்துவார் கொடியனானே."
(சீவகசிந்தாமணி)

அநங்கமாலை என்பவள் தான் கருத்திலுள்ளதைச் சீவகனுக்குத் தன் கண்ணால் உரைத்து விடுத்தாள் என உருவகம் செய்து இஃதுணர்த்தி நிற்றல் காண்க. "உரையாடுவார் கண்ணினான்; உள்ளத்துள்ளும் ஒன்றுளதே" என்பதும் ஈண்டெண்ணத்தக்கது.

காதலர் கண்களாலேயே பேசிக்கொள்வர் என்பது கருத்து.

வார்த்தையொன்றும் ஆடாமல் பார்த்த பார்வையிலேயே காதலர் கருத்துணர்ந்து கொள்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மதனமஞ்சிகைபால் உணரப்படும்.

## கதை.

மதனமஞ்சிகை என்பவள் கௌசாம்பி நகரி லிருந்தவள். இவளுடைய தந்தை பெயர் தனமித்திரன். தாய் பெயர் கலிங்கசேனை. இவள் கல்வியிற் சிறந்தவள். நல்லியல்புடை-யவள். இவளது இளமை எழிலினை வியந்து அந்நகரிலுள்ள அ-னைவரும் உளமகிழ்ந்திருந்தார். "நாணும் உட்கும் அச்சமும் பயிர்ப்பும், பேணாக் கோலமும் பெருந்தகைக் கற்பும், வாணுதல் மகளிர் மற்றுப் பிறர்க்கின்றித், தானே வவ்விய தவளையங்கண் கிளி, மானேர் நோக்கின் மதனமஞ்சிகை" என எல்லோரும் இயம்பி மகிழ ஆணைப்புகழுடன் இவள் அமர்ந்திருந்தாள். பரு-வம் நிரம்பி உருவுநலங்கனிந்து குமரிருக்கும் இந்நாளை இங்ங-னம் இவள் இருந்துவருங்கால் ஒருநாள் தனது விழுமிய மணி மாடத்தின் நிலாமுற்றத்தில் தருணமங்கையர் பலருடன் பந்தா-டிக்கொண்டிருந்தாள். அவ்வமயம் நரவாணதத்தன் என்னும் அந்நகரத்து அரசிளங் குமரன் மணிவேயகன் என்னும் மதயானை மீது தனியமர்ந்திருந்து திருவீதி வழியே பவனி வந்தான். வருங்கால் இவள் மெள்ள அடித்த பந்து மூண்டு அவன்மீது போய்த் துள்ளி விழுந்தது. அதனை அவன் எடுத்துக்கொண்டு மேல் நிமிர்ந்து நோக்கினான். அப்பொழுது தெருவை இவள் எட்டிப் பார்த்தாள். இவளது திருமுகத்தைக் கண்டவுடனே அவன் பெருமையல் கொண்டான். இவளும் காதற்குறிப்போடு அவனைக் கனிந்து பார்த்துக் கருத்தழிந்து நின்றாள். இருவர் கண்களும் ஒன்றை ஒன்று கவ்வி ஒன்றிய காதலோடு ஒன்றுபட்-கின்றன. "கண் கலந்த போதே கருத்தும் கலந்து நின்றோர் எண் கலந்த இன்போடிசைந்து" என்றபடியே இவர் களித்து நின்றார். விழிகளிப்ப நோக்கி உளமுருகி அன்று இவர் நின்ற படியைக் கொங்குவேளிர் என்னும் புலவர் திலகர் அழகுறக் கூறியுள்ளார். அடியில் வருவது காண்க.

"வானோர் உலகி னல்லது மற்றவட்கு
ஈனோர் உலகின் இணைதான் இல்லெனக்
கண்டோராயினும் கேட்டோராயினும்

தண்டாது புகழும் தன்மைய ளாகித்
துதைபூங் கோதை சுமத்த லாற்று
மதர்மா னோக்கின் மாதாங்கு சாயல்
பதரில் பணிமொழிப் பவளத்தோட் டின்னுதல்
மதர்வை நோக்கின் மதனமஞ்சிகை தன்
மலைபுரை மாடத்து உயர்நிலை மருங்கின்
அணிச்சா லேகத்து அணித்தகு துளையுடு
எறிபந்து இழுக்குபு விழுதலின் நோக்கிச்
செறிவளைத் தோளி செம்முக மாக,
வேகத் தானை வேந்தன் ஒருமகன்
போகு கொடி வீதியிற் புகழ்ந்து பலர் ஏத்த
அருவரை மருங்கின் அருவிபோல
இருகவுள் மருங்கினும் சொரிதரு கடாத்ததோர்
இடுமணி யானை எருத்தம் ஏறிப்
படுமுகில் மீமிசைப் பனிமதி போல
வுலாவெனப் போந்தோன் நிலாவுறழ் பூந்துகில்
தானைப்படுதலின் தானே கொண்டிது
இட்டோள் ஆர்கொல்? என்று எட்டி நோக்கினன்;
நிறைமதி வாண்முகத்து உறழ்வன போல
நீளரி ஒழுகி நிகர்தமக்கு இல்லா
வாழ்புரை தடங்கண் வளைத்து அவள் வாங்கி
நெஞ்சகம் படுப்ப; வெஞ்சின வீரன்
அறியா மையின் மறுகுறுஞ் சிந்தையன்
பந்துவழியாகப் பையெனப் போகி ஓர்
அந்தண் காவினுள் அசைந்தனன்'' (பெருங்கதை)

இக் குமரியின் உருவப் பொலிவும், அக் குமரனது வரு கைத் திறனும், இருவரும் நேர்ந்து ஒருவரை ஒருவர் கண்டு உருகின்றபடியும், இதனால் இனிது உணரலாகும். வார்த்தை யாதும் ஆடாமல் பார்த்த பார்வையிலேயே பெருங் காதலுடைய ராய் உளங்கலந்து இவர் மருவி மகிழ்ந்தார். இங்ஙனம் களவு நிலையில் அளவிலின்பம் நுகர்ந்து பின்பு உலகமறிய மணந்து

உவந்திருந்தார். அருகிருந்த தோழியரும் அப்பார்வையைக் கண்ணொடு கண்ணோக்கில் இவர் கருத்திசைந்திருந்தமை அறிவுறக் கருதி வியந்தார். "கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள் என்ன பயனும் இல" என்னும் உண்மையை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

> கண்ணிரண்டும் கவ்விக் கலந்ததேல் அப்பொழுதே
> எண்ணிரண்டுக் கில்லை யிடம்.

காதலர் கண்ணால் பேசிக்கொள்வர் என்பது இதனால் கூறப்பட்டது.

### இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

தலைமகள் பார்வையினால் தலைமகன் அவளது உளநிலையை யுணர்ந்தான். அவள் சிறுநோக்கம் பெரும் பயனுடைய தென்றான். அவள் நோக்கி யிறைஞ்சியது தமக்கோர் ஆக்கமென்று உவந்தான். மெல்ல நகைத்தது நல்லதென்று மகிழ்ந்தான். கடைக்கண் பார்வையைக் கருதிக் களித்தான். கன்னுறாச் சொல்லினும் உள்ளன்புடையவர் சொல்லை ஒல்லையில் உணரலாம் என உவந்து நின்றான். அமைந்த காதலர் ஒருவரையொருவர் சினந்து நோக்குவர் என்று அமைந்து கொண்டான். உள்ளக் காதலுடையவர் புறத்தே பகைத்து நின்று [illegible]. ஏதிலர் போலப் பொது நோக்கு நோக்குவர். சொல்லாடாமலே காதலர் கண்ணால் பேசிக் கருத்துணர்ந்து கொள்வர் என்பதாம்.

௱௰-வது குறிப்பறிதல் முற்றிற்று.

# 111ம் அதிகாரம் புணர்ச்சி மகிழ்தல்.

அஃதாவது தலைவியின் குறிப்பறிந்து புகுந்து கலந்து நுகர்ந்த தலைமகன் அப் புணர்ச்சி யின்பத்தை வியந்து மகிழ்ந்து புகழ்ந்து கூறுதல். குறிப்பறிந்த வழி நிகழ்வதாதலால் அவ் வழி முறைநோக்கி அதன் பின் இது வைக்கப்பட்டது.

1101. பண்டு பதுமா பதிபாலேன் ஐம்புலனும்
கொண்டுவந்தான் இன்பம் குமரேசா — மண்டிநின்று
கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள. (க)

இ—ள்

குமரேசா! பதுமாபதிபால் உதயணன் என் ஐம்புலன்களும் ஒருங்கே இன்பம் ஆர நுகர்ந்தான்? எனின், கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புலனும் ஒண்டொடி கண்ணே உள என்க.

இது, தான் நுகர்ந்த இன்ப நிலைமையைக் காதலன் புகழ்ந்து நின்றது. கண் செவி வாய் மூக்கு மெய் என்னும் ஐம்பொறிகளும் கண்டு முதலிய வினை வகைகளுக்கு இனமாக முறையே யீண்டு எண்ண நின்றன.

தொடி = வளையல். ஒண்டொடி என்றது ஒள்ளிய வளையலை யுடையாள் என்றபடி. தொடியினை யுணர்த்தாமல் அதனை யுடையவளைக் குறித்து நின்றமையால் இது, அன்மொழித் தொகையாம். அல் மொழி = அல்லாத சொல்; அஃதாவது தனக்குரிய பொருளை விடுத்து அயலொன்றைக் குறித்துநிற்பது.

பெண்கள் முன் கையில் வளையணிவது இயல்பாதலால் அவ் அணி நிலையோடு புணர்ந்து இங்ஙன மொழிந்து நின்றான். முகம் கண் இதழ் தோள் முலை முதலியவற்றுள் ஒன்றையும் குறியாமல் இவள் கையில் இவ்வண்ணம் முதலில் அவன் கைவைத்தது என்னை? எனின், தான் உய்வு பெறும்படி மெய் வைத்தற்கு முன்னதாக இவள் கைகொடுத்து நின்றமை கருதி என்க.

கண் ஏழனுருபு; இடப்பொருளுணர்த்தி நின்றது. ஏகாரம் தேற்றம். வேறிடத்தில்லை யென்பதை விளக்கி நின்றமையால் பிரிநிலையுமாம்.

கண்ணால் கண்டும், செவியால் கேட்டும், நாவால் உண்டும், மூக்கால் மோந்தும், மெய்யால் தீண்டியும் அனுபவிக்கப்படும் ஐம்புல இன்பங்களும் ஒள்ளிய தொடியினையுடைய இவள் கண்ணே உளவாயின என்பதாம்.

கண்ணை முதலில் குறித்தது காட்சி யின்பத்தை முக்கியமாகத் துய்த்த மோட்சி குறுகி. 'கேட்டல் உண்டல் உயிர்த்தல் உற்றல்' கள் நெருங்கி முயங்குங் காலத்து அவையாவும் ஒருபோதே நிகழும்; காண்டல் அதின்றியும் அமையுமாதலால் அத் தலைமை தோன்ற அது முதலில் நின்றதென்க.

சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐவகைப் புல னுகர்ச்சிகளும் தலைவியினிடத்து ஒருங்கே அமைந்திருந்த படியை அழுந்தி யநுபவித்துத் தனக்குள்ளேயே மகிழ்ந்து தலைவன் மொழிந்தபடி யிது.

தலைவியின் உருவ நிலையைக் கண்டும், இனிய மொழிகளைக் கேட்டும், இதழூறலை உண்டும், முகமுதலியவற்றை மூக்கால் மோந்தும், உடல் முழுவதையும் அழுந்தத் தழுவியும் அவளைக் கலந்து நுகர்ந்தானாதலால் அக் கலவியில் கண்ட உண்மையைத் தலைமகன் இங்ஙனம் உரைத்து நின்றான் என்க.

வேறு வேறு காலங்களில் வேறு வேறு பொருள்களால் தனித்தனி அனுபவிக்கப்படுகின்ற இன்ப நுகர்ச்சிகளெல்லாம் தான் புணர்ந்த மங்கையிடத்து ஏக காலத்தே ஒருங்கே நிறைந்து இனிதமைந்திருந்தமையை ஒரு தலையாக அவன் உணர்ந்து கொண்டானாதலால் "ஐம்புலனும் ஒண்டொடி கண்ணே உள" என்று தன்னை மறந்து இன்னணம் முழங்கி நின்றான். ஆறாவதொன்றின்மையால் ஐம்புலனும் என முற்றும்மை கொடுத்து மொழிந்தான்.

"பண்ணமரும் இன்சொற் பனிமொழியாள் — மண்ணணியுமேற்
கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள என்று — பண்டையோர்
கட்டுரையை மெய்ப்படுத்தாள்" (ஆதியுலா)

ஒரு பெண்ணைக் குறித்துக் கூறுங்கால் சேரமான் பெருமாள் நாயனார் இவ் அருமைத் திருக்குறளை எடுத்துத் தமது உலாவில் இவ்வாறு இடைமடுத்திருக்கின்றார்.

"மெய் வாய் கண் மூக்குச் செவியெனு நாமங்கள் மேவப்பெற்ற ஐவாயிலும் நின்று அருந்தினரோ அருந்தானவர் முன்

உய்வான்மலைகொண்டு ஒலிநீர் கடைந்தன்று உம்பர் என்போர்
மைவார் குழலி! என்போலும் நின்போலார் அருந்தினரோ?"
உம்பர் = தேவர். (அம்பிகாபதிக்கோவை).

"தாண்டுஞ் சினவிடை எம்மான் தமரிவெங்கைத் தண்சிலம்பில்
யாண்டும் பெறலரும் இன்பமெல்லாம் ஐம்புலனும் இன்று
தூண்டுஞ் சுடரென நின்ற இம் மாதரிற் றுய்த்தனவால்;
வேண்டும் பொருள் நமக்கேதோ இனி இந்த மேதினிக்கே."
துய்த்தன = அநுபவித்தன. (திருவெங்கைக்கோவை)

அடிகள் குறிப்பை இவை அடியொற்றி வந்துள்ளன காண்க.

சுவை முதலிய எல்லா இன்பநலங்களையும் ஏக காலத்தில் ஒருகுலமகளிடத்துத் தலைமகன் நுகர்ந்துகொள்ளுவன் என்பது கருத்து. இவ்வுண்மை பதுமாபதியால் உணரப்படும்.

## கதை.

பதுமாபதி என்பவள் காசிராசனுடைய அருமைத் திருமகள். தாய் பெயர் உதையையோடை. இவள் பெருந்தன்மையுடையவள். பேரழகி. மகதமன்னன் மனைவியாகிய சிவமதி என்பவளுக்கு இவள் தங்கைமகளாதலால் அச்சதிபதிகளிருவரும் இவளை அன்போடு கொண்டுபோய்த் தம்பால் வைத்து ஆதரித்து வந்தார். அதனால் மகதநாட்டின் தலைநகராகிய இராசகிரியத்திலேயே இவள் தங்கியிருந்தாள். இவள் பருவமெய்தி உருவவேளின் உயிர்நிலையென ஒளிபெற்று நின்றாள். இவளது எழில்நலங்களைக் கேள்வியுற்று அரசிளங்குமரர்கள் பலரும் மணஞ்செய்ய விழைந்து நாளும் காலும் முயன்று வந்தார். இவள் யாதும் இணங்காமல் இகந்து நின்றாள். தன் கருத்துக்கேற்ற அழகனை நாடி அரிய பாதுகாவலையுடைய இனிய கன்னிமாடத்தில் இவள் தனியமர்ந்திருந்தாள். தான் கருதிய பேறு கைகூடும் வண்ணம் காமனுக்கு இவள் வழிபாடு செய்து வந்தாள். ஒருமுறை அந்நகரில் மன்மதன் விழா ஏழு நாள் தொடர்ந்து நடந்தது. அதில் காமன் கோட்டம் புகுந்து கைதொழுது போற்றி அரிய தானங்கள் பல இவள் அன்புடன் ஆற்றி வந்தாள்.

பிறப்புவழிக் கேண்மையிற் சிறப்புவழி வந்த
காமப் பெருங்கடல் கண்ணுறக் கலங்கி
நிறைமதி எல்லைத் துறையிகந் தூர்தர
நன்னகர் கொண்ட தன்னமர் விழவினுள்
கரும்புடைச் செல்வன் விரும்புபு தோன்றித்
தன்னலங் கதுமெனக் காட்டி, என்னகத்து
இருநிறை அளத்தல் கருதிய தொன்றுகொல்?
அந்தண வடிவொடு வந்திவண் தோன்றி
மேவன நுகர்தற்கு மாயையின் இழிதரும்
தேவ குமரன் கொல்? இவன் தெரியேன்;
யாவனாயினும் ஆக, மற்றென்
காவல் நெஞ்சம் கட்டழித் தனனென
வெஞ்சின விடலையொடு நெஞ்சுமாறுபு." (பெருங்கதை)

இவ் வஞ்சி ஒதுங்கினள். உருவினும் திருவினும் சிறந்து ஒத்த அன்பினராய இவர் ஒருவரை ஒருவர் பார்த்துப் பருகு காதலோடு உளமுருகி நின்ற திறனை இதில் ஊன்றிப் பார்க்க. காதலித்து இங்ஙனம் கருத்திசைந்திருந்தும் ஆயம் இடை நிற்றலால் யாதும் செய்யலாற்றாது அரிதிற் பிரிந்தார். பிரிந்த இவர் அன்றிரவு முழுவதும் கண்ணொடு கண் பொருந்தாமல் காம வேதனையால் கலங்கி யிருந்தார். "தனக்கு நிகரின்றித் தான் மேம்பட்ட வனப்பின்மேலும் வனப்புடைத்தாகிக், குலனும் செல்வமும் நலனும் நாணும், பயிர்ப்பும் உட்கும் இயற்கை வகையும், மடனும் அன்பும் மாசில் சூழ்ச்சியும், இடனுடை அறிவும் என்றிவை பிறவும், ஒல்காப் பெரும்புகழ்ச் செல்வமுடையள்" என இம் மெல்லியலை நினைந்து அவன் மெலிந்திருந்தான். இங்ஙனம் இருந்த அவன் மறுநாளிரவு யாரும் அறியாவகை அமைந்து சென்று கன்னிமாடத்தை யடைந்து இவள் கண்ணெதிர் நின்றான். எண்ணரிய மகிழ்வோடு இவள் இசைந்து தழுவ அவன் இன்பம் நுகர்ந்து இரவுபகலறியாது கலவி நலந் திளைத்தான். "புல்லியும் திளைத்தும் புணர்ந்தும் பொருந்தியும், அமரர் ஆக்கிய அமிழ்தெனக்கு இனையோள், தன்முலை யெயிற்றுநீர் தானென

தான் இச்சித்த பெண்ணை எய்தி நுகர்ந்தபோதுதான் ஒருவன் எய்திய காம நோய்க்கு உய்தி உண்டு என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பரிமளகந்தியால் உணரப்படும்.

## கதை.

பரிமளகந்தி என்பவள் காளிந்தி நதியின் கரை மருங்கிருந்த சிற்றூரிலிருந்தவள். அந் நதியில் தோணிகள் இயக்கும் காணியாளர்கட்கெல்லாம் தலைவனும் நல்ல அறிஞனும் ஆகிய பரதவர் பதியின் புதல்வியாய்த் தோன்றி இவள் வளர்ந்து வந்தாள். இவள் வியக்கத்தக்க மெய்யழகுடையவள். இவளது திருமேனி நறுமணம் வீசும் பெருநலமுடையது. அப் பரிமளம் ஒரு யோசனை அளவும் சென்று பரவும் இயல்பினதாகலின் யோசனைகந்தி எனவும் பரிமளகந்தி எனவும் இவளுக்குப் பெயர் வரலாயின. இவளது இயற்பெயர் சத்தியவதி. இப் பேரழகி ஓராணியும் புனையாது இயற்கைப் பொலிவோடு யமுனைத்துறை மருங்கு ஒருநாள் தனித்து நிற்குங்கால் அங்குச் சந்தனுமன்னன் வந்தான். அவன் அத்தினபுரியிலிருந்து படைகளோடு வேட்டை நோக்கி எழுந்து நெடிது நடந்து முடிவில் அங்கு அடைந்தான். "கானுறு விலங்கின் உயிர்கவர் நசையால் காற்றெனக் கூற்றென நடந்து, பானுவின் மகளாங்காளிந்தி நதியின் பாரம் எய்தினன் விறற்படையோன்" என்றபடி அடையவந்த அவன் இனிதமைந்திருந்த பாசறையில் நின்று காலையில் வெளியெழுந்தபொழுது அரிய பரிமளம் ஒன்று புதுமையோடு கமழ்ந்தது. அதன் வழி உள்ளம் செல்ல அவன் ஓடிவந்தான். இவளைக் கண்டான். மோகம் மீக்கொண்டான். ஆகம் வெதும்பியது. அருகே நெருங்கினன். ஆசைமொழிகள் பல கூசி மொழிந்தான். இவளும் காதலுற்றுளாயினும் தந்தையின் இசைவினை எதிர் நோக்கி நின்றாள். அக் குறிப்பினையறிந்து அக் கோமான் அவனிடம் சென்று தன்னுடன் வந்த பாகனை ஏவினன். அத் தருணமங்கையைத் தந்தருளும்படி அரசன் பெருமையை விளக்கி அவன் இனிது மொழிந்தான். அப் பரதவர் குலபதி சில பொருளுரை கூறி இசையாது நின்றான். அடியில் வருவன காண்க.

பம் சேர்ந்து நின்றான், எந்த நோய் எம்மருந்தால் தீர்க்க வேணும் ஏந்திழையார் காமம் அவரின்றித் தீரா" என்பதை எவரும் காண அவன் இருந்து தீர்த்தான். "பிணிக்கு மருந்து பிற; அணியிழை தன் நோய்க்குத் தானே மருந்து" என்னும் உண்மையை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

*காதலர் இறத்துக் காத லாக்கிய காதலாரை*
*ஏதிலார் போல நோக்கின் இருமடங்காக வெய்தாம்;*
*போதலாம் சிலையினான்றன் பொருகணைக்கு இலக்கஞ்செய்யும்:*
*ஆதலால் காமநோய்க்கோர் அருமருந் தில்லை யன்றே.* (சூளாமணி)

எவ்வகையும் காமநோய் நீங்கா தெழில்வளைக்கை
மெய்யணைய நீங்கும் விரைந்து.

காம நோய்க்கு மருந்து இதனால் கூறப்பட்டது.

---

1103. மாதவத்துக் காசிபனும் மாயைதோ ளின்துயின்று
கோதில்வான் தீர்ந்தான் குமரேசா — பூதலத்தில்
தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு. (௩.)

இ—ள்.

குமரேசா! அரிய தவத்தையுடைய காசிபன் மாயை தோளை விழைந்து தழுவி ஏன் பரமபத இன்பத்தை இகந்து நின்றான்? எனின், தாம் வீழ்வார் மென்தோள் துயிலின், தாமரைக் கண்ணான் உலகு இனிது கொல்? என்க.

இது, சிற்றின்பம் பேரின்பத்தினும் இனிது என்கின்றது.

உம்மை, மறுமை நோக்கி நின்ற அவன் பெருமை தோன்ற நின்றது. வீழ்வார் = விரும்பப் படுவார்; என்றது தாம் விழைந்து நின்ற மகளிரை. வீழ்தல் = விரும்புதல். "தாம் வீழ்வார் ஆகம் தழுவுவோர்" (பரிபாடல் 10), "விரைப்பூம் பள்ளி வீழ்துணை தழுவவும்" (மணிமேகலை) "வீழ்வார்கட் டோன்றும் தடுமாற்றம் ஞாலத்துள், வாழ்வார்கட் கெல்லாம் வரும்" (நெய்தற் கலி 28) "விசும்பாடு பறவை வீழ் பதி படர" (குறிஞ்சிப்

பாட்டு) "வீழ்ந்தோர் கஸ்தூரி வெறியர்க்கை" (பெருங்கதை) இவற்றுள் வீழ்தல் உணர்த்தி நிற்றல் காண்க.

யாவும் நிலைபெறு மோக்ஷப் பள்ளம் பாயும் புனல்போல் ஆடவர் உள்ளம் வீழ்ந்தாழ்ந்து போதற்கு உரியராய் நின்றமையால் மகளிரை வீழ்வார் என்றார். விழைந்தபாட்டு பொருளின் அருமையும், அவ் விழைவின் நிலையையும் இதனால் இனிது விளங்கும்.

மென்மை அத் தோளின் தன்மை தோன்ற நின்றது.

தாமரைக் கண்ணான் என்றது திருமாலை. செந்தாமரை மலர்போன்ற கண்களை உடையவனாதலால் தாமரைக் கண்ணான் என்றார். "நின்னிற் றோன்றிய நிரையிதழ்த் தாமரை அன்ன நாட்டத் தளப்பரியவை" (பரிபாடல் 4). திருமாலின் உந்திமலர் தாமரையை இதில் அவன் கண்ணுக்கு உவமித்திருத்தல் காண்க. "புவ்வத் தாமரை புரையும் கண்ணன்" எனவும், "காமர் செங் கண் ஐயன்" எனவும் வருவன ஈண்டு அறியற்பாலன.

"யாமது தெரிதல் தேற்றும் இன்னமைச் சுனைகள் யாண்டும்
காமரு திருவை நீத்தோ, முகமதி காண்கிலாதோ,
தேமரு தெரியல் வீரன் கண்ணெனத் தெரிந்த செய்ய
தாமரை கட்குத் தோறும் குவிவிலாத் தன்மை என்னோ?"
(இராமாயணம்)

சீதையைப் பிரிந்து வருந்தத்தால் இராமன் இரவிலும் துயில்கொள்ளாது கண் விழித்திருந்தமையை இது குறிக்கின்றது. திருமாலின் திருவவதாரமாய இராமமூர்த்தி கண்களைத் தாமரை என்று குறித்து அவை குவியாதிருத்தற்கு இரங்கி இஃது உரைத்து நிற்கும் அழகைப் பார்க்க.

தாம் விரும்பிய மகளிரது மெல்லிய தோளில் துயிலும் துயிலினும் திருமாலுலகமாகிய பரமபதம் இனிதாகாது என்பதாம்.

துயில் = உறக்கம். தலைமகளைக் கலந்து நுகர்ந்து அவசமாகி அவள் மேல் அயர்ந்து கிடக்கும் நிலை இங்குத் துயில் என நின்றது. இன் உருபு எல்லைப் பொருளது. துயிலைக் குறித்தது

போகத்தின் முடிந்த பயனாயமைந்திருத்தல் அறிக. தோளின் துயிலுக்குக் கண்ணான் உலகமும் ஈடாகாதென்றது இதில் அமைந்திருக்கும் நயத்தை ஆய்ந்து பார்க்க.

யோகநித்திரை செய்யும் மேகவண்ணன் பதம், போக நித்திரை கொள்ளும் ஏக நிலையோடு ஈண்டெண்ண நின்றது.

அரிய தவஞ்செய்து கருவி கரணங்களெல்லாம் இறந்து ஆன்மா தனித்த நிலையில் அனுபவிக்கும் பரமபதத்தினும், எண்ணியபடியே எளிதினடைந்து இனிதமர்ந்திருந்து துய்ப்பவர்களும் ஆர நுகரும் இன்ப நிலையமாகிய மங்கையர் முயக்கமே இங்குச் சிறந்த தென்றபடி.

தான் விழைந்துநின்ற தலைவியைக் கலந்து சுகித்து அச்சுக நிலையிலேயே அழுந்தியிருந்த தலைவனைப் பாங்கன் ஒருநாள் சந்தித்து வைகுந்தத்தின் பெருமையை விளக்கி அத்தகைய என்றும் ஈறிலாப் பேரின்பத்தையும் மறந்து இச் சிற்றின்பத்திலேயே இங்ஙனம் செறிந்து கிடக்கின்றாயே! பேரறிவாளனாய நின் பெருந் தன்மைக்கு இது தகுமா? என்று மிக நயமாக வுரைத்து நிற்ப அவனை நோக்கி நீ சொல்லும் அத் தாமரைக் கண்ணான் உலகு யான் கொள்ளும் இம் மெல்லிய தோள் துயிலினும் இனிது கொல்? என அவன் மறுத்து மொழிந்தபடி யிது.

இம் மண்ணுலகில் எண்ணியவாறெய்திப் பெண்ணலம் நுகர்ந்தவன் விண்ணுலக இன்பத்தையும் வெறுத்து நிற்பன் என்பது கருத்து.

"நீங்கரும் பொற்கழற் சிற்றம் பலவர் நெடுவிசும்பும்,
வாங்கிருந் தெண்கடல் வையமும், எய்தினும் யான் மறவேன்
தீங்கரும்பும் அமிழ்தும் செழுந்தேனும் பொதிந்து, செப்பும்
கோங்கரும்புந்தொலைத் துஎன்னையும் ஆட்கொண்ட கொங்கைகளே"
(திருக்கோவையார்)

"மற்றின்பம் உண்டென்பதன்றால்; இவள் தர வந்த இன்பம்
சிற்றின்பம் என்பது, தென்வெங்கை வாணர் திருநடனம்
உற்றின்பம் செய்யும் சிதாகாசம தன்னை யுணர்வுடைமை
பெற்றின்பம் எய்தினர் சொல்வர் சிற்றம்பலப் பேர் புனைந்தே"
(திருவெங்கைக்கோவை)

வில்லதோர் பேதை மாந்தரிற் பேசி எற்சார்வது நீதியோ" என இன்னவாறு பல ஓதி முனிந்தாள். யாதும் கூறாமல் அகலாதவராய் மையல்மீக் கூர்ந்து மன்றாடி நின்றார். அன்று அவர் உரைத்த வற்றுள் சில அடியில் வருவன காண்க.

"மங்கை கேட்டி வரம்பறு பற்பகல்
அங்கம் வெம்ப அகம் மெலிவுற்றிடச்
சங்கையின்றித் தவம்பல செய்திடல்
இங்கு வேண்டியது எய்துதற்கே யன்றோ?

பொன்னை வேண்டிக் கொலோ? பொன்னின் மாமகள்
தன்னை வேண்டிக் கொலோ? சசியாம் பெயர்
மின்னை வேண்டியே யல்லது, வேறுமற்
றென்னை வேண்டி அவ் இந்திரன் நோற்றதே?

ஐதின் மேனி அலசுற யான்தவம்
செய்த திங்குனைச் சேருதற்கு; இத்திறம்
நொய்தின் மேவினை, நோற்றதற்குப் பயன்
எய்தியுற்றது; இனித்தவம் வேண்டுமோ?

பொய்ம்மை யாதும் புகல்கிலன்; நான்முகன்
செம்மல், யான்; அது தேருதி போலுமால்;
இம்மையே பரம் ஈந்திடுவாய்! இவண்
மெய்ம்மையே உரைத்தேன் உள வேட்கையால்"

(கந்தபுராணம்)

இவ்வகை உருகிநின்று அவர் மறுகி வேண்டியபொழுது இவள் பெருகிய அன்போடு அருகணைந்தாள். அவர் பருகி மகிழ்ந்தார். மறுமையை மறந்தார். அரிய தவநிலையை அறவே துறந்தார். இவளது இன்ப வெள்ளத்திலேயே அமிழ்ந்து இழைந்தார். அவர் இளைத்திருந்தபடியை அடியில் பார்க்க.

"உட்டெளிவின்றியே உலப்பின் றோடிய
மட்டறு காமமாம் வாரி யுற்றுளான்
அட்டொளிர் பொன்னனாள் அல்குலாஞ் சுழிப்
பட்டனன் இன்பமாம் பரவை நண்ணுவான். (க)

தோமறு முனிவரன் சுரதத் தாற்றினும்
காமரு மதன நூல் கருத்திற் சித்தியாத்
தேமொழி மயிலொடு செறிந்து போகமார்
பூமியினோரெனப் புணர்தல் மேயினான் (௨)

இது, காமதாபத்தின் இயல்பினை யுணர்த்துகின்றது.

மேல், தலைவியோடு கலந்திருக்கும் இருப்பே தனக்குப் பேரின்பம் என்று தலைவன் களித்து நின்றான்; இதில், அவள் பிரிந்து நீங்கினும் அது தாங்கரிய துன்பமாம் என்கின்றான்.

தெறும் = சுடும். அனலோடு இணை நினைந்து நின்றது. "ஈர்த் தெறுதலிற் கவின்வாடி." (பட்டினப்பாலை) "கனைகதிர் தெறுதலிற் கடுக்கெழுந்த காம்புத்தீ" (கலி) இவற்றுள் தெறல் உணர்த்திநிற்றல் காண்க.

தண் என்றும் என்றது குளிரும் என்றபடி. "விரிந்த பூமழையினிலே தண்ணெனும் கானம்" (இராமாயணம்) "தண் கயம்போல" (ஐங்குறுநூறு) என்பன காண்க. யாண்டுப் பெற்றனள் என அதிசயித்து வினவியது தொட்டால் குளிர்ந்தும், தொடாதகன்றால் சுட்டெரித்தும் அது பட்டுநிற்கும் பாடு கருதி.

அகன்றபொழுது சுடுகின்றது; அணுகுங்கால் குளிர்கின்றது; இத்தகைய தீயை இவள் எவ்வுலகத்துப் பெற்றாள் என்பதாம்.

உலகத்துத் தீ நெருங்கிநின்றபொழுது சுடும்; நீங்கியவிடத்துக் குளிரும்; காமத் தீ அங்ஙனமின்றி அதற்கு நேர்மாறாய் அணுகுங்கால் குளிர்தலும், அகலுங்கால் சுடுதலும் ஆகிய இயல்பினையுடையதாதலால் இத்தகைய தீயை இவள் எவ்விடத்துப் பெற்றாள் என்று தலைவன் இவ்வாறு வியந்து மொழிந்தான்.

களவு முறையில் தான் விழைந்துகொண்ட அழகி அன்னுடன் கலந்துள்ளபொழுது இன்பமும், அவள் அகன்றுபோய்த் தோழியர் முதலாயினேருடன் கூடிநின்றபொழுது துன்பமும் அடிக்கடி அடைந்து நின்றானாதலால் அச் செறிவையும், பிரிவையும் நினைந்து தலைவன் உளைந்து உரைத்தபடியிது.

தன் அகத்துள்ள காமத் தீயின் விளைவு நிலையை அவள் மேலேற்றிக் கூறியது அவளால் அது வெளிப்பட்டுப் புலப்படுதலாலென்க. இதனால் அதன் நிலைமை தேறலாம்.

"கண்டானால் வியப்புற்றான்; கவினாம் அழகு கண்ணால்
உண்டான்போல் உள்ளுவந்தான்; ஒளியிழாய்! ஈங்கெங்ஙனுறைவாய்த்
தண்டாமல் உரைதியெனத் தாங்கரிய காதலுடன்
விண்டான்; அவ்வுரை கேட்ட மெல்லியலும் விள்ளுவளால்.

"அங்கண் நிலவேந்தே! நின் அழகினலங் கண்டிணையத்
துங்க எழில்மதனும் ஒருகோதையுருக் காதலிப்பான்;
இங்கணெனிற் றூய நனியிருந்தவத்தினாற் கிடைத்தாய்
மங்கையர் யார் நின்னகலம் மருவாமல் ஒழிபவரே?"

இங்ஙனம் ஒருவரை ஒருவர் பருகு காதலோடு உருகி மொழிந்து பின் மருவி மகிழ்ந்தார். இரவுபகலறியாது இவளது போக வெள்ளத்தில் மூழ்கி அவன் மோகமுற்றிருந்தான். தன் இன்பநலத்தை அவன் விரும்பியவாறெல்லாம் இசைந்து நல்கி இனிதமர்ந்திருந்த இவள் ஒருநாள் இரவு தனியே யெழுந்து தாமனொளிர்ந்து வந்த பான்மொழி மகளிரைப் பார்த்து வய விழைந்து வான் வழியடைந்தாள். அக் கோன் விழித்துப் பார்த்தான். இம் மான் மருங்கில்லை. விரைந்தெழுந்தான். அந்தப்புர முதலாக அமர்ந்திருக்கும் இடங்களெங்கும் துழைந்து பார்த்தான். எந்தப் புறத்தும் காணாமையால் அவன் ஏங்கி யிளைத்தான். இரங்கி யுளைந்தான். இக் கட்டழகி தன்னை விட்டொழிந்தாள் என்று வெய்துயிர்த்து நின்று மெய் மறந்து புலம்பி அன்று அவன் பட்ட பாட்டினை யார் சொல்லவல்லார்?

"முன்பொருந்து முருந்தறழ் வெண் முகிணகையுங் கேருதலும்
என்பொருந்தி வைகாமல் எழுந்தனள் என்னென்றிரங்கிப்
பொன் பொருத்திப் போக்கிமிகப் புலம்பும் வறியோர்களென
மன் பொருந்து மையல் தனை வழங்க எவர் வல்லுவரோ?.

ஏங்கும், எழும், ஓடுலாவும், இருக்கும், இறை பதைபதைக்கும்,
ஓங்கும் ஒளி நுண்ணுசுப்பாள் உருவெளியைக் கண்டுவக்கும்,
வாங்குமிடை மின்னொளிர்ந்து வந்தனையோ என்று உவக்கும்,
நீங்கும் உயிர்மீண்டுவந்து நிலைத்ததெனக் கொண்டிசைக்கும்.

1105. யமீறு இலக்கணைதோள் எக்காலும் நீங்காது
கோனுவந்து கொண்டான் குமரேசா — தானுக
வேட்ட பொழுதி னவையவை போலுமே
தோட்டார் கதுப்பினாள் தோள். (ரு)

இ—ள்.

குமரேசா! இலக்கணை தோளை இடை நீங்காது என் எப்பொழுதும் சாம்பன் உவந்திருந்தான்? எனின், வேட்ட பொழுதின் அவை அவை போலுமே தோட்டார் கதுப்பினாள் தோள் என்க.

இது, தலைவியின் தோள் அலகிலின்பம் தரும் என்கின்றது.

வேட்ட = விரும்பிய. அவை அவை என்றது விரும்பப் பட்ட அப் பொருள்கள் என்றவாறு. அடுக்கு மிகுதிதோன்ற நின்றது. தோடு = இதழ்; ஈண்டு அது, பூவினை யுணர்த்தி நின்றது. ஆர் = நிறைந்த.

கதுப்பு = கூந்தல். "கதுப்பே கோதை சுரியல் குழல் ஆண், மயிர்க்கும் பெண்பால் மயிர்க்கும் உரித்தே" (பிங்கலந்தை) கதுப்பு என்பது அழகுறத் திருத்தி முடிக்கப்பட்ட மயிர் முடியை யுணர்த்திவரும் ஆதலால் அது தோட்டார் என அடை பெற்று வந்தது. "கயல்புரை கண்ணியர் கமழ்துகள் உதிர்த்த புயல்புரை கதுப்பு" (பரிபாடல் 21) "காமர் பிணையல் கதுப்பணி களைந்த" (பெருங்கதை) "புதுப்பூ வதிரல் அய்க் கதுப்பயலணியும்" (ஐங்குறுநூறு 345, "பொற்பூண் ஞான்றன்ன நின் கதுப் புலறுங் கவினை" (நெய்தற்கலி 33) "புதுப்புனல் குடையுமாதர் பூவொடு நாவி பூத்த கதுப்புறு வெறியே நாறும் கருங்கடல் தரங்கம் என்றால்" (இராமாயணம்) இவற்றுள் கதுப்பு உணர்த்தி நிற்றல் காண்க.

மேல், காதலி அணுகின் தண்ணென்றிருக்குமென்று காதலன் உளமகிழ்ந்துரைத்தான்; இதில், அவள் தோள் நலனை வியந்து துதித்து நிற்கின்றான்.

## கதை.

இலக்கணை என்பவள் துரியோதனனுடைய அருமைத் திருமகள். தாய் பெயர் பானுமதி. அக்காலத்திருந்த அரசிளங் குமரிகள் எவரும் தனக்கு நிகரில்லாதபடி உருவப் பொலிவில் இவள் உயர்வெய்தி யிருந்தாள். சாமுத்திரிகத்தில் குறித்துள்ள உத்தம இலக்கணங்களெல்லாம் இவளிடம் ஒருங்கமைந்திருந்தன. தன் பெயரியல்புக்கேற்பப் பேரழகோடு இவள் விளங்கிநிற்றலை யறிந்து அனைவரும் வியந்து நின்றார். மன்மதன் அமிர்தினால் எழுதிவைத்த உயிரோவியமோ என முனிவர் சிலரும் இவளைக்கண்டு ஒருமுறை மொழிந்து போனார். இவளது பிறப்பையும் சிறப்பையும் குறித்துச் சுகமுனிவரும் புகழ்ந்து கூறியுள்ளார். அடியில் வருவன காண்க.

"கழைபுனை வரிவிற் காமன் கடல்வினை அமுதினாலே
எழுதிய தன்ன கோலத்து இலக்கணை என்னு மாதைத்
தழையுநற் றவத்தி னீன்றான் தழ லெழவுயிர்க்கும் பேழ்வாய்
ஒழுகுநச் செயிற்றுப் பாந்தள் உயரிய கொடியான் மன்னோ. (க)

எங்கினிச்சேறும் நாம் என்று இறங்கு பொற்குன்று சூழும்
அங்கதிர்ப்பரிதி அண்ணாந் தகல் விசும்பாறு பார்க்கும்
குங்குமக் குவட்டின் வீங்கிக் குமுதம் நாறமுதச் செவ்வாய்ப்
பைங்கிளி மழலைமாதின் படாமுலை பணைத்த மாதோ. (உ)

நஞ்சமும் அமுதும் காட்டி, நம்மொடு நிகர்க்குமேகொல்
அஞ்சனக்கடல் மற்றென்று ஐயுரி பார்த்து, நீசார்
கஞ்சமும் கயலும் வென்று, கட்கடை சிவக்கும் என்றால்
வெஞ்சிலைப் புருவவல்லி விழிக்கிணை யாவர் சொல்வார்?" (ங)

(பாகவதம்)

விழைவு நீங்கிய மாதவரும் இன்னவாறு வியந்து கூற எழில் நலங்களோடு இவள் வளர்ந்து நின்றாள். பருவம் நிரம்பி இன்ப நலங்கள் சுரந்து இவள் இனிது வீற்றிருத்தலைச் சாம்பன் அறிந்தான். அவன் கண்ணனுடைய அருமைக் குமாரன். வனப்பும் இளமையும் வண்மையு முடையவன். "காமனும் காமம் கொள்ளக் கனிந்த கட்டழகன்" என முனிவரும் வியந்து

1106. பொன்றா அமிழ்தென் றேனோ பதுமுகன் கோவிந்தை
குன்றாத தோளைக் குலாவினான் — என்றும்
உறுதோறு உயிர்தளிர்ப்பத் தீண்டலால் பேதைக்கு
அமிழ்தின் இயன்றன தோள். (௬)

இ—ள்

குமரேசா! கோவிந்தையினது தோளை அமிழ்தமென்று ஏன் உவந்து புல்லிப் பதுமுகன் அமர்ந்திருக்கிறான்? எனின், உறுதோறு உயிர்தளிர்ப்பத் தீண்டலால் பேதைக்குத் தோள் அமிழ்தின் இயன்றன என்க.

இது, அவள் தோள் அமிர்தமயமாயுள்ள தென்கின்றது.

உறுதோறு = உற்றுப் புணருந்தோறும். உறுதல் = பொருந்தல். தளிர்ப்ப = தழைக்க. தீண்டல் = சேர்தல். தளிர்ப்ப என்றதனால் தீண்டுமுன் தன் உயிர் வாடியிருந்தமை புலனும். அமிழ்தின் இயன்றன = அமிர்தத்தினால் செய்யப்பட்டுள்ளன. உயிர் தளிர்த்தற்குக் காரணம் விரித்துரைக்க படியிது. உண்டவர்க்கு நரை திரை மூப்புகளை நீக்கி என்றும் இளமைச் செவ்வியை உதவி உயிரை இனிது பேணும் இயல்பின தாதலால் அமிழ்து இங்கு எண்ண நின்றது.

பேதை என்றது பருவம் கருதியன்று; அறிந்தும் அறியாள் போல் செறிவமைந்து நிற்கும் அவள் அமைதி குறித்தென்க.

தலைவி தோள் தனக்கு எல்லையில்லாத இன்பந்தந்து நிற்றலைத் தலைமகன் முன்பு வியந்து நின்றான்; இதில், அங்ஙனம் தருதற்குரிய அதன் உருவ அமைதியை உவந்து நிற்கின்றான்.

பொருந்துந்தோறும் என்னுயிர் தழைக்கும் வகை தொடுதலால் இப் பேதைக்குத் தோள்கள் அமிர்தினால் அமைந்துள்ளன என்பதாம்.

தான் விழைந்த மங்கையைப் பொருந்துமுன் வாடி வருந்தி யிருந்தவன் அவளைக் கலந்தவுடன் அவ்வாட்டம் நீங்கி இன்பத்தால் தழைத்து மகிழ்ந்து நின்றான் ஆதலால் அவள் தோள் நலத்தை இங்ஙனம் வியந்து மொழிந்தான்.

கதை.

கோவிந்தை என்பவள் ஏமாங்கத நாட்டிலே இராசமா புரியிலிருந்த கோவிந்தன் என்னும் இடையர் தலைமகனுடைய அருமைத் திருமகள். தாய் பெயர் கோதாவரி. இவள் அழகிய உருவினள். இவளது எழில்நலங்களை யறிந்து அயல் பதிகளிலுள்ள குறுநில மன்னர் பலர் மணஞ்செய்ய விழைந்து ஆவலோடு வந்து நயந்து நின்றார். இவள் யாரையும் இசைந்திலள். தந்தையும் இவள் மனம்போலமர்ந்து தகுந்த வரனை விரும்பி ஆவலோடு எதிர்பார்த்திருந்தான். இங்ஙனம் இருந்துவருங்கால் அரசிளங் குமாரனாகிய சீவகனது தோழருள் ஒருவனாகிய பதுமுகன் என்பவன் இனிய பூஞ்சோலையின் கண் ஒருநாள் இவளை எதிர்ந்து கண்டான். இவளது உருவ நிலையை நோக்கி உள்ளம் உருகினான். இவளும் அவன்மேல் ஆசைகொண்டாள். தோழர் சிலருடன் அங்கு இவன் சேர்ந்து வந்திருந்தானாதலால் அவள் யாதும் செய்யலாற்றாது அகன்று போனாள். போனவன் பெருநாணுடையனாய் அலமரலெய்தி விரகவேதனையுடன் வெதும்பியிருந்தான். "பவளச் செவ்வாய், குவளைக்கருங்கண், மாசறு மதி முகம், தேசமை திருநுதல்" எனா இவளது வடிவழகை நினைந்து கனவில் இடையிடை புலம்பிக் கிடந்தான். இவளும் சிந்தை நோயுடன் அந்தப்புரத்தில் தியங்கியிருந்தாள். இந்நிலையினை யறியாது தந்தை இவளைச் சீவகனுக்கு மணமுடிக்கக் கருதினான். இவளது இனிய நலனை அவன் அறிய உணர்த்தினான். உணர்த்திய வகையில் சில அடியில் வருவன காண்க.

"வெண்ணெய்போன்று ஊறு இனியள்; மென்பால்போல் தீஞ்[சொல்லள்;
உண்ணா உருக்கிய ஆனெய்போல் மேனியள்;
வண்ண வன முலை மாதர் மடநோக்கி
கண்ணும் கருவிளம் போதிரண்டே கண்டாய்"

என இன்னவாறு இவள் காமர் நிலையை அவன் காமுறும்படி கழறி நின்றான். இதில் இவள் உருவ நிலைக்குக் கொடுத்திருக்கிற உவமை நலங்களை ஊன்றி நோக்கி நயங்களை யுணர்ந்து கொள்க. தன் நண்பனாகிய பதுமுகன் இவளை நயந்துள்ளான் என்

1107. மென்றோட் சயத்திரையின் மெய்ப்பாக்கை ஏன்விசயன்
ஒன்றி ஆர்ந்தான் குமரேசா — என்றுமே
தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு. (எ)

இ—ள்

குமரேசா! சயத்திரையை நாளும் முயங்கி யாதும் விள்ளாது விசயன் ஏன் மயங்கியிருந்தான்? எனின், அம்மா அரிவை முயக்கு தம் இல் இருந்து தமது பாத்து உண்டு அற்று ஆதலால் என்க.

இது, தலைவி முயக்கின் நிலைமை யுணர்த்துகின்றது.

இல் = மனை, வீடு. பாத்து = பங்கு, சோறு.

அம் = அழகு. மா = மாமை நிறம்: அஃதாவது மாந் தளிர்போன்று இனிதாய் ஒளிதவழ்ந்து தோன்றும் உருவப் பொலிவு. அரிவை = பெண். அம்மா என்றது அழகு. அவளது எழில் நலனையும், இளமை நிலையையும் உணர்த்தி நின்றது. "அரிமதர் மழைக்கண் அம்மா அரிவை" (புறம் 147) என்பது காண்க. இனி, அம்மா என்பதை வியப்பிடைச் சொல் எனினும் அமையும். அஃதாவது ஒரு பொருளையும் குறியாமல் அதிசய வுணர்ச்சியை மட்டும் குறித்து நிற்பது. "அன்றெழுந்த அயர்ந்த வோசை கேட்டிலை போலும் அம்மா!" (இராமாயணம்) என் புழிப்போல. இங்கு வியப்பு என்னை? எனின், களவு முயக்கம் கற்புடை மனைவாழ்க்கையோடொப்ப அமைந்தது.

உண்டு அற்று = உண்டதை ஒக்கும். அற்று என்பது அன் என்னும் இடைச்சொல்லடியாகப் பிறந்த ஒன்றன்பாற் குறிப்பு முற்று. ஆல் அசை.

மேல், பேதைதோள் பேரின்பம் தரும் என்றார்; இதில், அரிவை முயக்கம் அறம் பயக்கும் என்கின்றார்.

அழகிய மாமை நிறத்தையுடைய இம் மங்கையது முயக்கம் தம் மனையகத்திருந்து தமது உழைப்பால்வந்த வுணவை ஒக்கல் முதலாயினார்க்குப் பகுத்துதவி நல்ல மானிகள் உண்டது போலாம் என்பதாம்.

'காமக்குறளை வரைக்குறிகொண்டிட வெங்கைக் கடலை வெப்பின்
காமக்கனலைத் தணிப்பாய் என்றோதிய காரிகை நீ
காமக்கிளர் மகிழ்ந்து அந்நீர் வெம்பிக் கனக விர்ப்பாய்
வேம் அக்கனலை தணிப்பாய் என்பார்களின் மிகுநல்லையே''

மணந்தெடு மயக்குநூர் தலைமகன் இதில் உரைத்திருக்கும் அழகைப் பார்க்க. தான் விழைந்த மங்கையைப் புணர்ந்து வருதலை உவந்துரைத்தலால் இது புணர்ச்சி மகிழ்தல் என்க.

வரைவு செய்து மகிழ்வதினும் களவு நிலையில் தலைவனை முயங்குதல் அளவிலின்பமாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுபத்திரையால் உணரப்படும்.

## கதை.

சுபத்திரை என்பவள் வசுதேவருடைய அருமைத் திருமகள். தாய் பெயர் தேவகி. கண்ணனுக்கு உடன்பிறந்த தங்கை. இவள் உருவிற் சிறந்தவள். "மாந்தளிரனைய மேனி மதிமுக மலர்மென் நோக்கி, வஞ்சிநுண்ணிடை கொண்டேந்த இசை புனைந்து இனிது நின்றாள்." இவள் பருவமெய்தியவுடனே பலராமர் இவளைத் துரியோதனனுக்கு மணஞ்செய்து தரத் துணிந்தார். பின்னர்ப் பார்த்துக்கொள்ளலாம் என்று கண்ணன் விநயமாக அதனைத் தடுத்து விடுத்தான். உண்மையில் இவள் அருச்சுனனைக் காதலித்திருந்தாள். அவ் விசயனும் இவள்மீது நசைமீக் கூர்ந்து நாளும் நயந்திருந்தான். இங்ஙனம் இருக்க அவன் அருந்தவன்போல் வடிவங்கொண்டு பல நதிகளிலும் தீர்த்தமாடிவிட்டு முடிவில் துவாரகையருகே இரைவத மலைச் சாரலில் ஒரு பூஞ்சோலையில் வந்து தங்கியிருந்து கண்ணனுக்கு ஆள் விடுத்தான். அப்பெண்ணனும் வந்தான். உண்மையை யுணர்ந்தான். உவந்துகொண்டான். அங்கோர் அழகிய படமாடம் அமைத்து அதில் இனிதமர்ந்திருக்கும்படி பணித்து விட்டு நகரினை யடைந்து கன்னிமாடத்திலிருந்த இவளிடம் சென்று நம் நகர் மருங்கு ஓர் முனிவரர் வந்துள்ளார்; அவருக்குச் சிலநாள் பணிவிடை செய்தால் உனக்குப் பெரும் புண்ணியமாம்; எண்ணிய யாவும் எளிது கைகூடும் என்று இனிது

பதியுரைத்த சொற்கேட்டலும், யாதவி யகல்வாளி
மதியினர்க்குறு; அடிக்கடி குறுகலாய் மலைந்தும்;
பதியகச் சணி குருநர்பைகள் அருமையின பாவர்;
பதியிடத்து அரிவையர்க்கு உளம் அருளம் பட ஈந்தார்

உவகை முத்தமென் பவளமும், நீலமும், மணிக
அகவு பச்சிளந் தோகைபோல் நின்ற அவ் அணங்கை
மிகவிருப்ப நோய்வளர்தலின் மெலிந்த தோள் விசயன்
தகவுடைத் தன தடக்கையால் வளைக்கரந் தழைத்தான்.

தழைத்தபோது உயிர்ச்சேடியர் தவிர்கெனச் சில சொல்
பகர்ந்துபோய் ஒரு மாதவிப் பந்தரிற் புகுந்தார்;
புகுந்த சீர்மையைத் தேவகி அறியுமா புகன்றார்
அகைந்த பல்பெருங் கிளைஞரிலார் கொலோ அறிந்தார்."

(பாரதம்)

கந்தருவ முறையில் மணந்து களவு நிலையில் இவ்வாறு அளவிலின்பம் நுகர்ந்து வந்தார். ஒருநாள் மானவன் என்னும் தோழி எதிர்ப்பட்டு இத் தலைவியை உங்கள் நகருக்குக் கொண்டுபோய் உலகறிய மணந்து அரண்மனையில் வைத்து யாதொரு தடையுமின்றி இன்பம் நுகரலாமே என்று அன்பு மீக் கூர்ந்து அவன்பால் உரைத்தாள். என் சொந்த வீட்டிலிருந்து நான் சுயமாய்ப்பெற்ற உரிமைப் பொருளை உண்பது போலவே இவள்மாட்டு இங்கு இன்பம் அநுபவிக்கின்றேன் என்று தனியமர்ந்து நுகரும் அக் காமச் சுவையை அவன் காதலித்துரைத்தான். "அம்மா அரிவை முயக்கு, தம்மில் இருந்து தமது பாத்து உண்டு அற்று" என்னும் உண்மையை உலகம் காண இவள்பால் அவன் அன்பு உணர்ந்து மொழிந்தான். பின்பு தன் நகர்க்குக் கொண்டுபோய் மணந்து மகிழ்ந்தான். இவளது தங்கக்கட்டி வயிற்றிலிருந்து தான் அபிமன்னன் என்னும் சிங்கக்குட்டி பிறந்து திசைவென்று நின்றது.

வண்டுதேன் துய்த்த வகையே இவளின்பம்
கண்டுநான் துய்த்தேன் கலந்து.

காதலியின் கலவியுரிமை இதனால் கூறப்பட்டது.

1108. பண்டு மிருகாபதி முயக்கை மானினிதாக்
கொண்டுவந்தார் மன்னன் குமரேசா — மண்டியே
வீழு மிருவர்க் கினிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு. (௮)

இ-ள்

குமரேசா! மிருகாபதியும் சதானிகனும் இனை யுறாது ஏன் முயங்கி மகிழ்ந்தார்? எனின், வளி இடை போழப்படாத முயக்கு, வீழும் இருவர்க்கு இனிதே என்க.

இது, புணர்வின் போகம் போக்கி தெரிகின்றது.

வீழும் = விரும்புகின்ற. இருவர்க்கு என்றது காதலன் காதலிகளாகிய இருவர்க்கும் என்றபடி. முற்றும்மை இதில் தொக்கு நின்றது. ஏகாரம் தேற்றமாக வந்தது.

வளி = காற்று. போழ = பிளக்க. போழ்தல் = பிளத்தல், அறுத்தல். படா = படாத. அளபெடை இசை நிறைக்க வந்தது. படா என்று மட்டும் இருந்தால் நேரசையாய் நின்று சீர் குறைந்து தளை தட்டும் ஆதலால் அத்தடை நீக்கிச் செய்யுள் ஓசை இனிதமையும்படி அ என ஒரு குறில் இடை மடுத்து ஒலியை நீட்டி இதில் அமைத்திருக்கும் அழகைப் பார்க்க. இதனால் அளபெடையின் பயனும், அதனை இடமறிந்து சொற் சுருக்கமும் பொருட்பெருக்கமும் பொருந்த அடிகள் அமைக்கும் திறனும் இனிதறியலாகும்.

முயக்கு = முயக்கம்; அஃதாவது புல்லிக்கிடத்தல். காற்றும் இடைபோகலாகாதபடி காதலரிருவரும் ஒருவரை ஒருவர் அழுந்தித் தழுவியிருந்த அப் புணர்ச்சியின் செழுமிய நிலையை "வளி இடை போழப்படா" என்னும் விசேடணத்தால் உணர்த்தியருளினார். வளியைக் குறித்தது யாண்டும் எளிது செல்ல வல்ல அதன் இயல்பு நோக்கி. வளிபுகா வகை பொருந்தி யிருந்தார் என்ற இதனால் அவரது திருந்திய காதல் நிலை தெளிவாம்.

மேல், முயக்கின் உரிமையை புணர்த்தினார்; இதில், அதன் இனிமையை யுணர்த்துகின்றார்.

ஒருவரை ஒருவர் விரும்பி நிற்கும் காதலர் இருவருக்கும் காற்று இடையறவுறாதபடி பிணைந்திருக்கும் புணர்ச்சி மிக இனிதாம் என்பதாம்.

ஒத்த காதலுடைய தலைவனும் தலைவியும் கலவியின்பத்தை நுகர்ந்து, யாதும் விலகலாகாவாறு அமைந்திருக்கும் அதன் நிலைமையை வியந்து, அவன் மொழிந்தபடி யிது.

“மல்லலந் தோளினானும், மழைமதர் நெடுங்கணாளும்,
புல்லுவிட்டு ஒழியில் ஆவி போன்றிடும், என்ன எண்ணி
அல்லும் நன்பகலும் விள்ளாது அணிகலம் பருதி யாக்குச்
செல்லுழி நிகழ்ந்த எல்லாம் செப்புவான் தொடங்குகின்றான்”

இது, நளனும் தமயந்தியும் முயங்கியிருந்தபடி. காதலர் இருவர் கலவியில் ஆழ்ந்திருக்கும் இயல்பும் அவரது ஆர்வமும் இதில் அறியலாகும்.

இருவர் கலந்தபொழுதுதான் முயக்கம் என்பது ஒன்று உண்டாம்; அங்ஙனம் கலந்தவர் சமனுறத் திளைந்திருப்பராயின் அது பேரின்பம் பயந்து நிற்குமாதலால் அம் முயக்கின் இயற்கை நலங்களை இங்ஙனம் உணர்த்தி யருளினார்.

இத்தகைய கலவி நிலையிலமர்ந்து அலகிலின்பம் நுகர்ந்த யாம் இனி விலகிவிடுவேமல்லேம் எனத் தம் நிலைமை தேற உரைத்தானாதலால் இது, “தம் நிலை யுரைத்தல், தெளிவகப் படுத்தல்” (தொல்காப்பியம், களவியல் 10) என்னும் இலக்கணத்திற்கு இலக்கியமாய் நின்றது.

“பூவிடைப் படினும் யாண்டு கழிந்தன்ன
நீருறை மகன்றிற் புணர்ச்சி போலப்
பிரிவரிதாகிய தண்டாக் காமமொடு
உடனுயிர் போகுக; தில்ல கடனறிந்து
இருவேமாகிய உலகத்து
ஒருவேமாகிய புன்மைநாம் உயற்கே” (குறுந்தொகை 57)

ஒருமையாய்த் தனித்திருக்கும் புன்மையில் நாம் உய்ந்திருக்க முடியாது ஆதலால் பிரி வரிதாகிய காமத்துடனே நம் இருவர்க்கும் உயிர் போவதாகுக எனக் காதலிருவரும் கலந்து உரைத்திருக்கும் அருமையை இதில் ஊன்றிப்பார்க்க.

உணர்ச்சி யொத்த காதலர் புணர்ச்சி யின்பத்தைப் பெரிதும் உவந்து கொள்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மிருகாபதியால் உணரப்படும்.

## கதை.

மிருகாவதி என்பவள் திருவயோத்தியிலிருந்த கிருதவன்மன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகள். இவள் அழகிலும் குணத்திலும் அறிவிலும் சிறந்தவள். இவளது உருவநிலையைக் கண்டு அமரரும் வியந்துளார். இவள் பருவமெய்தித் தனியமர்ந்திருந்தாள். "பெண்டிரும் ஆண்மை வெஃகிப் பேதுற வந்தாள் என்று, கண்டவர் புகழ்ந்து கூறக் கனிந்த பொற்பமைந்து நின்றாள்" என்ற வண்ணம் நிலவியிருந்த இவளைச் சகச்சிரானீகன் என்னும் அரசிளங்குமாரன் கேள்வியுற்று அருங்காதலுடையனாய் ஆர்வமுற்றிருந்தான். அவன் வத்தவ தேசத்து மன்னன். போராற்றலிற் சிறந்தவன். நல்ல சீர்மையன். பேரழகன். அவனது எழிலமைதிகளையும் குணநலங்களையும் வினவியறிந்து இவளும் அவன்மேல் கடுங்காதல் கொண்டு கருதியிருந்தாள். ஒத்த பருவமும் ஒத்த உருவமும் ஒத்த அன்புமுடைய இவர் ஒருவரை ஒருவர் மணந்து மகிழ விழைந்து உளங்கரைந்திருந்ததை அறிஞர் சிலர் தெரிந்து கிருதவன்மனிடம் வந்து இவளை அவ் இளவரசனுக்கு உவந்தருளும்படி பணிந்து வேண்டினர். அவன் உடனே மகிழ்ந்து கொடுத்தான். இவளை அவன் மணந்துகொண்டுபோய் மகிழ்ந்து நுகர்ந்தான். உள்ளத்தளவில் ஒருவரை ஒருவர் புல்லி யுவந்திருந்த இவர் உடன் மருவியபொழுது உயிர் தளிர்த்து நின்றார். இவள் எழில் நலனையும் அவன் எய்தி யின்புற்றதையும் குறித்து விழைவு நீங்கிய முனிவரும் விழைந்து புகழ்ந்தார்.

"சென்று கண்டவர் பார்வையும் சிந்தையும் திரும்பா
நின்று தங்களை யுடையவர் கல்வியும் நெறியும்
வென்றியும் பிணித்து உடன்செல மெல்லடிப் புறத்தின்
ஒன்று சங்கிலி ஒக்குமேருருவுடையாளை. (க)

அம்புலாங் கடல் அலைத்த நாள் ஆர் அளைக்கள்வர்
உம்பர் கண்படாது அருள்மகற்கு உற்றிடத் ததையும்
தம்பமா அமுதடைத்து ஒளித்திடும் இருகடம்போல்
கும்ப நேர் வெளிவந்தன கொங்கையிரண்டே. (௪)

வேள்விரும்புறூஉம் இரதியை; வெண்டலன் மகவாய்
வாள்விழிச்சசி தன்னை; மால் மார்பகம் வையாள்
நீள்குழற் பொறிதன்னை; இவள் நேர்படில் என்று
சூள் வகுத்திட விளங்கிய சோதியின்றனே. (௫)

அருவமாம் அழகு அவயவம் படைத்து அனைத்தனைய
பொருவிலா மிருகாவதி எனும் பெயர் புனைந்த
விரிகலாபமா மஞ்ஞையஞ் சாயல் மென் கொடியை
நிருபன் முற்றொடர் நிலைமையால் தழுவுவான் நினைந்தே. (௬)

காணரும் பெருங்காதலான் அதிருநரைக் கரைந்து
மாறுறும் புகழ்க் கிருதவன்மா மருங்கிசைவிப்
பூணிளங் கொடிதன்னை மணவிதியினால் புணர்ந்தான்
சேணிலம் பிரிதுயரெலாம் அங்ஙனம் தீர்ந்தான். (௭)

கன்னல் மாரனும், இரதியும்; கடவுளர் கோனும்,
அன்ன மென்னடை மாதயிராணியும்; அரியும்,
பொன்னும்; என்றிட நாடொறும் புணர்ந்து வீற்றிருந்தான்
தன்னை நேர் மிருகாவதி தன்னொடும் தலைவன்'' (௮)

(சேதுபுராணம்)

இத் தலைவியின் நிலைமையும், அத் தலைவன் இவளைத் தழுவி நுகர்ந்த முறைமையும் இதனால் இனிதறியலாகும். இடையறாது இன்னவாறு நாளும் முயங்கிக் காம இன்பத்தை நயந்து துய்த்து மகிழ்ந்திருந்தார். "வீழும் இருவர்க்கு இனிதே வளியிடைபோழப்படாஅ முயக்கு" என்பதை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார்.

உள்ளும் புறமும் உயிர்தழைத்து நின்றதே
மெள்ள இவள் மெய்தீண்ட வே.

கலவி நிலை விலகலரிதென்பது இதனால் கூறப்பட்டது.

**1109.** ஊடி உணர்ந்தான் உவந்தீகன் விமலைநலம்
கூடி நுகர்ந்தான் குமரேசா — நாடியே
ஊட லுணர்தல் புணர்தல் இவைகாமம்
கூடியார் பெற்ற பயன். (௯)

இ—ள்.

**குமரேசா!** ஊடியும் உணர்ந்தும் விமலையை ஏன் சீவகன் கூடி நுகர்ந்தான்? எனின், ஊடல் உணர்தல் புணர்தல் இவை காமம் கூடியார் பெற்ற பயன் என்க.

இது, நுகர்ச்சி நிலையின் திறத்தினை யுணர்த்துகின்றது.

ஊடல் என்பது கூடலுக்கு மாறுபட்டது. அஃதாவது ஏதேனும் ஓர் ஏதுவை நினைந்து பிணங்கி நிற்பது.

உணர்தல் என்றது அவ் ஊடல் தெளிந்து நீடாவண்ணம் அளவறிந்தமைதல். புணர்தல் = கூடல்.

காமம் கூடியார் = காம இன்பத்தை விழைந்து கலந்தவர்; அவராவார் காதலனும் காதலியும் என்க. அன்புடையராயமைந்து காரணங்கள் புரிந்து இன்பந்துய்த்தற்கு இருவரும் ஒத்த வுரிமையோடுறைந்திருப்பராதலால் கூடியார் எனக் காமக் கூட்டத்தின் காட்சி தோன்ற வுரைத்தார்.

"ஒருருவாக இருப்பினும் என்பயன்? ஒற்றுமைகொள்
இருருவாகிய செம்மலும், தேவியும் தாமும் என
ஈருருவாகவும் வேறிருந்தான்; எம்மைப்போல இன்ப
நீருருவான காரணங்கள் யாவும் நிகழ்த்துதற்கே"
(தணிகைப்புராணம்)

கலவி நிலையின் இயல்பினை இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

மேல், முயக்கின் நிலையை யுணர்த்தினார்; இதில், ஊடல் முதலியவற்றின் இயல்பினை யுணர்த்துகின்றார்.

ஊடுதலும், அவ் ஊடலின் அளவினையறிதலும், அங்ஙனம் அறிந்து பின் ஆர்வமுடன் கூடுதலும் ஆகிய இவை போகம் விரும்பிப் பொருந்தி நின்றவர் அடைந்த பயன்கள் என்பதாம்.

உள்ளம்பொருந்தி உவந்து நின்ற காதலரிருவர் காம இன்பம் நுகரும் பான்மை கூறியபடி யிது.

ஊடலை முற்கூறியது கூடலின்பம் இனிதாய்ப்படி கனிவித்து நிற்கும் அதன் பாடு கருதி. அப்பிணக்கினை நீளவிடாது செவ்வியறிந்து சேர்ந்தால் இன்பஞ் சிறந்து நிற்குமாதலால் உணர்தல் புணர்தல் என உடனிணைத்து வைத்தார்.

"ஊடற் செவ்வி பார்த்து நீடாது,
பாடகத்தாமரைச் சீறடி பணிந்து,
தேமரு கொங்கையிற் குங்குமம் எழுதி,
அங்கையிற் றுறுமலர் சுரிகுழற் சூட்டி,
நறுமுகை அமிழ்துறாஉம் திருநகையருந்தி,
மதிமுகக் கருங்கட் செங்கடை கலக்கக்,
கருப்பு வில்லி அருப்புக்கணை தூவத்,
தருக்கிய காமக் கள்ளாட்டு" (மணிமேகலை) என்றவண்ணம் ஏம ஊடல் புரிந்து காமம் கூடியார் களித்திருப்பர் என்க.

மணந்துகொண்டு காமநலங்களை நுகர்ந்து வருவோர் ஊடியும் உணர்ந்தும் புணர்ந்து மகிழ்ந்து வருதல் போலவே யானும் இதுபொழுது அடைந்து வருகின்றேனாதலால் இனி வேறு வரைந்துகொள்ள வேண்டாம் என்று களவு நிலையில் நின்று காதலியை அனுபவித்து வருகின்ற தலைமகன் வரைவு உடன்படாளுய்த் தோழியிடம் உரைத்ததாக இதனை உணர்ந்து கொள்க.

சிறந்த இன்பநலங்களை உயர்ந்த மங்கையிடத்துக் காதலன் நுகர்ந்து கொள்வன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை விமலைபால் உணரப்படும்.

## கதை.

விமலை என்பவள் இராசமாபுரியிலிருந்தவள். சாகரதத்தன் என்னும் வணிகனுடைய அருமைத் திருமகள். தாய் பெயர் கமலை. இவள் அருந்தவப் பேற்றால் பிறந்தவள். நல்ல கட்டழகி பருவம் நிறைந்து எழில்நலங் கனிந்து விழுமிய நிலையில் சிறந்

திருந்தும் தக்க வரனமையாமையால் இவளது மண வினையைக் குறித்துப் பெற்றோர் வருந்தியிருந்தார். இவள் கன்னி மாடத்தில் தோழிகளோடமர்ந்து உல்லாசமாய்ப் பொழுது போக்கி வந்தாள். இங்ஙனம் வருங்கால் சீவகன் ஒருநாள் அம்மாளிகையருகே மீளிமையோடு சென்றான். அவ்வமயம் தோழியருடன் பந்தாடிக்கொண்டிருந்த இவள் ஆளி மொய்ம்பனை அவ் அரசிளங் குமரனைக் கண்டாள். வீதிவாய்ச் சென்ற அவனும் நிலா முற்றத்தில் நின்ற இவளை விழிகளிப்ப நோக்கினான். இருவரும் பெருங்காதலுடையராய் ஒருவரை ஒருவர் பருகலாம் வகை உருகி நோக்கினர். இவள் அவனது உருவப் பொலிவினை வியந்து உள்ளங் கரைந்தாள். மையல்மீக் கூர்ந்தாள். மறுகி மொழிந்தாள்.

> "பெண்பாலவர்கட்கு அணியாய்ப் பிரியாத நாணும்,
> திண்பால் நிறையும், திருமாமையும், சேர்த்த சாயல்
> கண்பாற் கவினும், வளையும், கவர்ந்திட்ட கள்வன்
> மண்பாலிழிந்த மலரைங்கணை மைந்தன் என்றாள்"

இங்ஙனம் இவள் நைந்து நிற்ப அவன் சிந்தை நோயோடு தியங்கி அகன்றான். அகன்றவன் தனியேயிருந்து இவளை நினைந்து நெஞ்சுளைந்து நின்றான். கடுமையுடையதாய்க் காமந் தலைக்கேறி அன்று அவன் கலங்கி மொழிந்தவற்றுட் சில அடியில் வருவன காண்க.

> "கருங்குழலும் செவ்வாயும் கண்மலரும் காதும்
> அரும்பொழுகு பூண்முலையும் ஆருயிர்க்கே கூற்றம்
> விருந்தினராய் வந்தாரை வெற்றுடலா நோக்கும்
> பெருந்திருவி யார் மகள் கொல்? பேர்யாதாங் கொல்லோ?
>
> வாருடுத்த வெம்முலைய வண்டார்பூங் கோதையைப்
> பேர்கொடுத்தார் பெண் என்றார்; கூற்றமே என்றிட்டால்
> தாருடுத்த நீண் மார்பர் தம்முயிர் தாம் வேண்டுபவேல்
> சீருடுத்த இச்சுகரை நீத்திட் டொழியாரோ?
>
> பைங்கண் மணிமகர குண்டலமும் பைந்தோடும்
> திங்கள் முகத்திலங்கச் செவ்வாய் எயிறிலங்கக்

கொங்குண் குழல்தாழக் கோட்டெருத்தஞ் செய்தநோக்கு
எங்கெங்கே நோக்கினும் அங்கங்கே தோன்றுமே!

வாளார் மதிமுகத்த வாளோ? வடிப்பிணையோ?
தாளார் கழுநீரோ? நீலமோ? தாமரையோ?
மீன்வேலோ? அம்போ? கயலோ? நெடுங்கண்ணோ?
கோளார்ந்த கூற்றமோ? கொல்வான் தொடங்கினவே"

விமலையின் எழில் நலங்களும், இவளைக் கண்டவுடன் சீவகன் கொண்ட காதல் நிலையும் இவற்றால் இனிதறியலாகும். இங்ஙனம் கருத்துருகி நின்ற அவன் முறைப்படி இவளை மணந்து கொண்டு அம் மாமன் மாளிகையிலேயே தங்கி இவளது போக நலங்களைப் பொருந்தி நுகர்ந்தான். ஒத்த காதலுடையளாதலால் இவளும் அவனை ஒட்டி யமர்ந்தாள். "கட்டில் ஏறிய காமரு காளையும், மட்டுவாயவிழ் மாமலர்க் கோதையும், விட்டு நீங்குதல் இன்மையின் வீவிலார், ஒட்டி ஈருடம்பு ஓருயிராயினார்." இவ்வாறாய இவர் நாளும் நாளும் புதிது புதிதாக் காம போகங்களைக் கனிந்து மாந்தினர்.

"இன்னரிச் சிலம்போடேங்கிக் கிண்கிணி இரங்கி ஆர்ப்பப்,
பொன்னரி மாலைதாழப், பூஞ்சிகை அவிழ்ந்து சோர,
மின்னிருங்கலாபம் வீங்கி மிளிர்ந்து கண்ணிரங்க வெம்பித்
துன்னருங்கனிகொள் காமக்கொழுங்கனி சுவைத்து விள்ளான்;

"தொழித்துவண்டிமிரும் கோதைத் துணைமுலை மூழ்கப் பூம்பட்
டழித்து மட்டொழுகுந்தாரான் மணிவள்ளைத் தாய்ந்த தேறல்
எழிற்பொலி மாதர்க்கேந்த இனிதினிதுகர்ந்து காமக்
கொழித்திரை கடலுள் மூழ்கிக் கோதைகண் துயின்றவன்றே."

இவ்வண்ணம் அக் குமாரனும் இக் குமரியும் மதன சுகங்களை இனிதனுபவித்து வந்தார். ஆடியும் பாடியும் ஊடியும் கூடியும் காமனும் இரதியும் போல் இவர் கலந்து மகிழ்ந்தார். கூடலின்பஞ் சிறக்கும் பொருட்டு இவன் செய்த ஊடல்கள் பல. ஒரு முறை புணர்ந்தவசமாகிப் பள்ளியறையில் இவள் அயர்ந்துறங்கும்பொழுது சீவகன் மெள்ள எழுந்து வெளியே சிறிது உலாவி நின்று உள்ளே புகுந்தான். இவள் விழித்து நோக்கினாள்'

விரைந்தெழுந்தாள். இந் நள்ளிரவில் இங்கு வந்த கள்ளன் நீ என்று தன் கூந்தலில் சூடியிருந்த பூமாலையை அவிழ்த்து அவன் கையைக் கட்டி, வந்த காரணம் என்ன? உள்ளதைச் சொல்! என்றாள். அவன் பிணித்தகையோடு குழைந்து நின்று அம்மா பசித்து வந்தேன் என்றான். இவள் அதற்கு என்ன வேண்டும்? அன்னம் தரவா? என்றாள். அன்னமே! எனக்கு அன்னம் வேண்டாம் என்றான். இவள் பின்னர் என்ன வேண்டும்? என்றாள்; உன் அழகமிழ்தம் சிறிது அருள வேண்டும் என்றான். அதனை நான் எடுத்துக்கொடுக்க முடியாதே என்றாள். நீங்கள் இசைந்தாற் போதும் நானே குடித்துக்கொள்வேன் என்றான் அவன். இவள் சரி, அப்படியானால் கொள்க என்றாள். உடனே அவன் கூடி நுகர்ந்தான். அவ் ஊடலுண்மையை அடியில் வரும் பாடலில் பார்க்க.

"கங்குற்பாற் புகுந்த கள்வன் இவனெனக் கூழைப்பிற் றாழ்ந்த
தொங்கலால் முன்கையார்த்துச், சொல்லு நீ வந்தது? என்ன;
நங்கை! யான் பசித்துவந்தேன்; எப்பொருள் நயப்பது? என்றாட்கு
அங்கலுழ் மேனியாய்! நின் அணிநல அமிழ்தம் என்றான்."

இவ்வகையாக இவர் ஊடி உணர்ந்து கூடி மகிழ்ந்தார். உளங்கலந்து நுகர்ந்தார். "ஊடல் உணர்தல் புணர்தல் இவை காமம் கூடியார் பெற்ற பயன்" என்னும் உண்மையை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார். விரிவைச் சிந்தாமணியில் காண்க.

**புலந்தும் புணர்ந்தும் பொருந்தினர் காமம்**
**கலந்து நுகர்வார் கனிந்து.**

காமநலம் நுகர்வார் நிலை இதனால் கூறப்பட்டது.

1110. சேர்ந்த எழிற்கலிங்க சேனையினை வன்செறிந்து
கூர்ந்து மகிழ்ந்தான் குமரேசா — ஓர்ந்துள்
அறிதோ றறியாமை கண்டற்றால் காமம்
செறிதோறும் சேயிழை மாட்டு. (ம)

இ—ள்.

குமரேசா! கலிங்கசேனையைக் கலந்து நுகர்ந்த மதன வேகன் யாதும் தெவிட்டாமல் காதலித்திருந்து ஏன் புகழ்ந்து நின்றான்? எனின், சேயிழை மாட்டுச் செறிதோறும் காமம் அறிதோறு அறியாமை கண்டற்று என்க.

இது, கலவியின்பத்தின் நிலைமை யுணர்த்துகின்றது.

சேர்ந்த எழில் என்றது இயற்கையிலமைந்திருந்த அவளது அழகெழுச்சி சுருதி. ஓர்ந்து = ஆராய்ந்து.

சேய் இழை = சிவந்த அணிகளை யுடையாள். அணிகலன்கள் செம் பொன்னால் செய்யப்பட்டனவாதலால் அவை சேயிழை என நின்றன. மாட்டு = இடத்து.

செறிதோறும் = பொருந்துந்தோறும். செறிதல் = பொருந்தல், சேர்தல். தோறும் என்பது இடையறவுபடாது அச் செறிவு தொடர்புற்று நிகழ்ந்தமை தோன்ற நின்றது. அறிவு அகநிலையது; செறிவு புறநிலையது. ஆழ்ந்து ஆழ்ந்து பொருளை அறிய அறிய வரம்பின்றி அறிவு பெருகிநிற்குமாதலால் அது, சேர்ந்து சேர்ந்து செறியச் செறிய யாதுஞ் சுழிக்காமல் மேலும் மேலும் விழைந்து நிற்கும் காம நலத்துக்கு உவமையாக வந்தது.

> "சுரும்புழு கூந்தலும், செவ்வாய் மழலையும், சோதி நுதல்
> அரும்பிய வேர்வும், அலமருநோக்கும், அசைந்து ஒசியும்
> கருப் புருவச்சிலையும், நிலைசோரும் கலையும், கண்டு
> விரும்பினமே மனமே! களிகூர் இன்பவெள்ளத்தையே"
>
> (அம்பிகாபதிக்கோவை)

தான் செறிந்து நுகர்ந்த காம இன்பத்தை வியந்து ஒரு தலைமகன் இதில் மகிழ்ந்திருத்தல் காண்க.

மேல், கலந்து நின்றவர் காமநலங்களை நுகர்ந்துகொள்ளுந் திறங்களை உணர்த்தினர்; இதில், அவ் இன்பம் அளவிடலரியதென்கின்றார்.

உணருந்தோறும் உணர்வின்மை தோன்றுதல் போல சிவந்த அணிகளையுடைய இம் மங்கையைப் புணருந்தோறும் காம இன்பம்வரம்பின்றிக் கிளர்ந்துள்ள தென்பதாம்.

தான் விழைந்துகொண்ட மங்கையை நெருக்கமாய்ப் பெரும்பாக் கலந்து நுகர்ந்த தலைமகன் அக் கலவியின்பம் வரம்பின்றி மிகுந்து தலை வியந்து மொழிந்தபடி யிது.

மணலைக் கிளைக்கக் கிளைக்க நீர் ஊறுவதுபோல் அரிய பொருளை அறிய அறிய அறிவு பெருகும்; பெருகுவதோடு முன்முன் அறிந்ததனினும் பின் பின் அறிவது தெளிவுடையதாம்; இவ்வாறே மேலும் மேலுந் தெளிந்து வருதலின் கழிந்தது இழிந்த தாய்க் காணப்படும் ஆதலால் அறிதோறு அறியாமை கண்டற்று என்றார். செறிவின் சுவைக்கு அறிவினை இங்கு இணைத்துக் காட்டியது புதிது புதிதாய்க் கிளர்ந்து அளவின்றிப் பெருகி ஆனந்தம பயந்து நிற்கும் அதன் அமைதி கருதி. தலைவன், நூற்பொருளை நாளும் நன்கு நுனித்துணர்ந்து செழித்து நின்ற போதியவ னாதலால் புணர்ச்சியுட் கண்ட தன் அனுபவத்திற்கு வேறொன் றையும் உவமை கூறாமல் அவ் அறிவையே கூறினான்.

நாளும் நாளும் தோய்ந்து நுகர்ந்தாலும் யாதும் செறிக்கா மல் மீள மீளப் பொங்கிப் புதிது புதிதாய் இன்பம் சுரந்து நின்ற தாதலால் அப் போக நிலையை இங்ஙனம் போற்றி நின்றான். ஆரா இன்பத்தால் அன்பு மீதூர்ந்து வாயார் முலையை மகிழ்ந் துரைத்தானாதலால் இது புணர்ச்சி மகிழ்தல் ஆயிற்று.

"உணர்ந்தார்க்கு உணர்வரியோன் தில்லைச் சிற்றம்பலத்தொருத்தன்
குணந்தான் வெளிப்பட்ட கொவ்வைச் செவ்வாயிக் கொடியிடைதோள்
புணர்ந்தால், புணருந்தொறும் பெரும்போகம் பின்னும் புதிதாய்
மணந்தாழ் புரிகுழலாள் அல்குல்போல வளர்கின்றதே" (திருக்கோவை)

"ஆயுந் தொறுந் தொறும் இன்பந்தருங் கல்வி; ஆய்ந்தறிவு
மாயுந்தொறுந் தொறும் இன்பந்தரும் வள்ளல் வார்கழல்கள்;
தேயுந்தொறுந் தொறும் இன்பந்தரும் சந்து; தேன்குழல், நின்
றோயுந்தொறுந் தொறும் சோராத இன்பஞ் சுரந்திடுமே."

குழல் = கூந்தலையுடையாய்! (தணிகைப்புராணம்)

செறிநோறும் சேயிழை மாட்டு இன்பம் பெருகும் என அடிகள் அருளியுள்ளதை அடியொற்றி இவை வந்துள்ளமை காண்க.

"வடுவகிர் வென்ற கண், மாந்தளிர் மேனி,
நெடுமென் பணைத்தோட், குறுந்தொடி மகளிர்,
ஆராக் காம மார்பொழிற் பாயல்
வரையகத் தியைக்கும் வரையா நுகர்ச்சி,
முடியா நுகர்ச்சி, முற்றாக் காதல்,
அடியோர் மைந்தர் அகலத் தகலா
அலர் ஞெமன் மகன்றி னன்னர்ப்புணர்ச்சி,
புலரா மகிழ்மறப் பறியாது நல்கும்
சிறப்பிற்றே தண்பரங் குன்று" (பரிபாடல் 8)

தலைவிமாட்டுத் தான் நுகர்ந்த காம இன்பத்தை வியந்து ஓர் தலைமகன் இதில் உரைத்திருத்தல் காண்க.

"மையோடரிக்கண்ணி தந்த சுகானந்த வாரி கண்டால்
ஐயோ அரியும் தன் ஆழிபடான்; ஐந்து நான்குதடக்
கையோனை எய்த குலோத்துங்க சோழன் கலியாணி வெற்பில்
வெய்யோனும் ஓடி எழுந்து விழான் அந்த வேலையிலே"
வெய்யோன் = சூரியன். (குலோத்துங்கன்கோவை)

தான் எய்திய இன்ப நிலையை மகிழ்ந்து ஆர்வமை மீக்கூர்ந்து ஐயோ எனக் கூவி ஒருவன் இதில் உரைத்திருக்கும் அழகைப் பார்க்க. அளவிலா இன்பம் மகளிர்பால் அமைந்துள்ள தென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கலிங்கசேனை பால் உணரப்படும்.

## கதை.

கலிங்கசேனை என்பவள் தக்கசிலை என்ற நகரிலிருந்து அரசுபுரிந்த கலிங்கதத்தன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகள். தாய் பெயர் தாராதத்தை. இவள் எவரும் வியக்கத்தக்க எழில்நலமுடையவள். அற்புத வுருவினள். முற்பிறப்பில் சுரபிதத்தை என்னும் பெயரோடு விண்ணுலகில் அரமகளாய்ச் சிறந்திருந்தவள், இந்திரனது சாபத்தால் இந் நிலவுலகில்

அரசகுமரியாய்த் தோன்றி இவள் நிலவி நின்றாள். பருவ மெய்தி இன்ப நலங்கள் சுரந்து இவள் அழகொழுக நின்றதைக் கண்டு அமரரும் விழைந்தார். சிராவஸ்தி நாட்டின் தலைவனாகிய பிரசேனசித்து என்னும் அரசன் இவளை மணஞ்செய்துகொள்ள விரும்பி மிக முயன்று நின்றான். அவன் உறவு முறையானதாலால் தந்தை முதலாயினோர் சம்மதித்திருந்தார். இவள் அவனை விரும்பவில்லை. வச்சதேசத்து மன்னனாகிய உதயணனது குண நலங்களைக் கேள்வியுற்று அவன்மீது காதல்கொண்டிருந்தாள். அவனும் பெருமோகமுடையனாய் இவளைப் பெற விழைந்து நின்றான். இங்ஙனமிருப்ப மதனவேகன் என்னும் விஞ்சையர் குமரன் இவளது வடிவழகில் ஈடுபட்டு எப்படியாவது இவளைப் பெற்று அனுபவிக்கவேண்டுமென்று பெருங்காதல் கொண்டு இறைவனை நினைந்து உளமிக வுருகி வழிபாடு செய்துவந்தான். பரமன் அருள் புரிந்தான். இருவரும் ஒருநாள் ஊழ்கூட்ட வந்து ஒரு பொழிலிடை எதிர்ப்பட்டார். ஒருவரை ஒருவர் நோக்கிப் பருகு காதலோடு உருகி நின்றார். அவன் உதயணன் போலவே உருவுகொண்டு வந்தானாதலால் இவள் பெரிதும் விழைந்தாள். அவன் மருவி மகிழ்ந்தான்; பின்பு உண்மையை யுரைத்தான். இவள் உளங்கனி கூர்ந்தாள். யாதும் கெடாமல் காமபோகங்களை நாளும் இவ் இருவரும் நுகர்ந்து ஆர்ந்தார். "அங்கைத் தலத்தால் முலை வருடி, ஆடை நெகிழ்த்துப் புறம் போக்கிப், பொங்குசிதம்பத் தடம்வருடிப், புகலுங் கலவியுற புரிந்து, தொங்கலொடும் வார்குழல் சோரச், சுடர்வாளுதலும் நனி நீவித், திங்கள் முகத்தின் முத்தாடித், திகழ்தாடையும் பல செய்து; கோலத்துடையால் இடை நெருக்கிச், கன்னக எருத்தமுறச் சாய்த்துச், சாலக்கனிவாய் இதழ் பருகித், தந்தக் குறியும் ஆங்குறுத்தி, நீலக்கடங்கண் முதல் அழகு நிலவும் இடங்கள் பல சுவைத்துச், சிலக்குறி மூடிகாமாதி பலவுந் திகழச் செறிந்திட்டான்" இவ்வகை அவன் செய்வன செய்து மெய் முயங்கி நுகர, இவளும் இனிய லீலைகள் பல இன்புறச் செய்து இனிது நுகர்ந்தாள். "கொங்கை நெருங்க இருகரத்தால் குலவு மணித் தோளுற விறுக்கிச், சங்கம் நெரியச், சிலம்பொலிப்பத்,

தடங்கண் சிவப்ப, இதழ் வெளிப்பத், திங்கள் முகத்தின் வியர் அரும்பத், திரள்முலைக் குரல்கள் பிறந்தொலிப்ப, மங்கை இவரும் கற்பகம் சூழ் வல்லிக்கொடிபோல் முயங்கினாள்" இன்னவாறு இவள் இன்னி மகிழ அவன் மன்னி மகிழ்ந்தான்.

"கந்து நிலையே, பன்னகமே, காதலுருப்பம் முக்கூடமே,
விந்தும் வெருகே, இவையாதி பிறங்கு கரணமுறை இயற்றிச்,
சிந்தைகரைய, உடல்கரைய, செறியும் உயிர்கள் கலந்தொன்றும்
முந்தை அறியாப் பெரும்போக முழுவக் கடலுள் முழ்கினன்"

இங்ஙனம் இன்பநலங்களை இவள்பால் அவன் இனிது மாந்தினான். இடையறவு படாது விடை பயின்றிருந்தான்.

"கங்குலும் பகலும் விள்ளான் கழிபெருங் காதலோடு
மங்கையைத் தழுவி நாளும் மதன இன்பங்கள் ஆய்ந்தான்"

நாளும் நாளும் இவ்வாறு இவளைக் கலந்து களித்தும் யாதும் செழிக்காமல் மேலும் மேலும் அவன் ஆர்வமீக் கூர்ந்தான். "அறிதோறறியாமை கண்டற்றால் காமம் செறிதோறும் சேயிழை மாட்டு" என்பதை உலகம் காண இவள்பால் அவன் உணர்ந்துணர்த்தினான்.

"காமம் காமம் என்பார்; காமம்
அணங்கும் பிணியும் அன்றே; நினைப்பின்,
முதைச்சுவற் கலித்த முற்றா இளம்புனம்
மூதா தைவந் தாங்கு
விருந்தே காமம் பெருந்தோ ளோயே" (குறுந்தொகை)

இளம்பயிரையுடைய புனத்தை முதிய பசு தீண்டி வந்தது போலக் காமம் புதிய சுவையினையுடையது என அவன் ஆர்வ நிலையைக் குறித்து இஃது உணர்த்தி நிற்றல் காண்க.

கண்ட எதற்கும் கரையுண் டிவளின்பம்
கொண்டநான் காணேன் குறை.

காம இன்பம் கரையில தென்பது இதனால் கூறப்பட்டது.

இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

ஐம்பொறிகளுக்குமுரிய இன்பநலங்கள் யாவும் நங்கையார் பால் ஒருங்கமைந்துள்ளன. காதலி முயக்கமே காமநோய்க்கு மருந்து. பரமபதத்தினும் காதல் இன்பம் இனிது. நீங்கினால் சுடுதலும், நெருங்கினால் குளிர்தலுமாகிய அரிய தீ அரிவையர் பாலுள்ளது. அவர் தோள் அளவிலின்பம் உடையது. அமிழ்த மயமானது. இன்பமிக வுள்ளது. கலவி எவர்க்கும் களிப்பினை விளைக்கும். புலவி அதற்குப் பொருந்திய அணியாம். காம இன்பம் கடலினும் பெரிது என்பதாம்.

ஈகை-வது புணர்ச்சி மகிழ்தல் முற்றிற்று.

## 112ம் அதிகாரம் நலம்புனைந்துரைத்தல்.

அஃதாவது தலைமகளது எழில் நலங்களை உளமகிழ்ந்து வியந்து தலைமகன் உவந்து கொண்டாடுதல். இது, புணர்ந்து மகிழ்ந்தவழி நிகழ்வதாகலான் புணர்ச்சி மகிழ்தலின் பின் வைக் கப் பட்டது. "கலந்துழி மகிழ்தலும், நலம் பாராட்டலும், ஏற்புற அணிதலும், என்னும் இம் மூன்றும், போற்றிய தெய்வப் புணர்ச்சியின் விரியே" (அகப்பொருள் விளக்கம்) என்னும் இலக்கண விதியையும் கண்டுணர்ந்து கொள்க.

1111. வீமன் திருமடந்தை மென்னீரள் என்றேநீறு
கோமான் புகழ்ந்தான் குமரேசா — தாமாக
நன்னீரை வாழி அனிச்சமே நின்னினும்
மென்னீரள் யாம்வீழ் பவள். (க)

இ—ள்

குமரேசா! தமயந்தி மெல்லிய தன்மையாள் என்று நளன் ஏன் மலர்களை நோக்கிச் சொல்லி மகிழ்ந்தான்? எனின், அனிச் சமே! வாழி, நன்னீரை; யாம் விழ்பவள் நின்னினும் மென்னீ ரள் என்க. தாமாக = இயல்பாக.

இது, காதலி பூவினும் மெல்லிய பொன் மேனியள் என்கின்றது.

யாம் வீழ்பவள் = எம்மால் காதலிக்கப்பட்டவள். மென்னீரள் = மெல்லிய தன்மையுடையாள். நீர்மை என்னும் பண்படியாய்ப் பிறந்த பெண்பாற் பெயர். நீர்மை=குணம், தன்மை.

அனிச்சம் = ஒருவகை மரம். இங்கு ஆகுபெயராய் அதன் பூவினை யுணர்த்தி நின்றது. "அனிச்சமும் அசோகமும் அடர அலைத்து" (பெருங்கதை) என் புழி இது மரமாதலறிக. முன்னிலையாக விளிக்கப்படுங்கால் அஃறிணைப் பெயர் ஏகாரம் ஏற்று வருமாதலால் அனிச்சமே! என வந்தது.

"புள்ளியும் உயிரும் இறுதி யாகிய
அஃறிணை மருங்கின் எல்லாப்பெயரும்
விளிநிலை பெறாஉம் காலந் தோன்றிற்
றெளிநிலையுடைய ஏகாரம் வரலே" (தொல்காப்பியம்)

எனவரும் இயல் விதியையும் ஈண்டெண்ணிக்கொள்க.

நல்நீரை = நல்ல இயல்பினையுடையை. மகிழ்ச்சியோடு அழைக்கின்றானாதலால் "வாழி" என்றான். நின்னினும் = உன்னைக் காட்டிலும். இன் உருபு எல்லைப் பொருளது. மென்னீரள் என மேனியின் நீர்மையை முன்னுறக் குறித்தது புணர்ந்த காலையில் முந்துற அஃது உணர்ந்தமையான் என்க.

அனிச்சப் பூவே! நீ நல்ல இயல்பினையுடையாய்; இனிது வாழ்வாயாக; ஆயினும் யாம் விரும்பும் இவள் நின்னினும் மெல்லிய தன்மையுடையாள் என்பதாம்.

தனியனுயிருந்தும் யாம் என்றது தன் வீறு தோன்ற. அறிவிலும் திருவிலும் உருவிலும் சிறந்து இசையிலும் கொடையிலும் வலியிலும்உயர்ந்து பெருமிதம்சாய்ந்தியுள்ளமையான் என்க. அனிச்சப் பூ, வாகை அசோகு முதலிய கோட்டுப் பூக்களினும், மல்லிகை முல்லை முதலிய கொடிப் பூக்களினும், தாமரை அல்லி முதலிய நீர்ப் பூக்கள் எவற்றினும் மிக மெல்லியதாதலால் மென்மைக்கு இனமா யீண்டு அஃது எண்ண நின்றது. "மோப்பக் குழையும் அனிச்சம்" (குறள் 90) என இதன் இயல்பினைக் குறித்து அடிகள் முன் உணர்த்தியுள்ளதும் காண்க.

கதை.

விதர்ப்பதேயத்து வேந்தன் மகளாகிய தமயந்தி பருவம் நிரம்பி மிகு வனப்புடையளாய் உயர்வெய்தியிருந்தாள். அருந் தவப்பேற்றால் பிறந்தவளாதலால் சிறந்த குணங்கள் யாவும் இவளிடம் நிறைந்திருந்தன. வடிவழகிலும் அறிவமைதியிலும் எவரும் நிகரின்றி இவள் நிலவி நின்றாள். இவளது உருவ நிலையை நோக்கி அமரருலகமும் அதிசயித்து நின்றது. உவமை கூற இயலாது புலவரும் உளமடங்கி நின்றார். "வேயவரில் மேன் வனப்பு நோக்குதற்கமைந்து விளங்கு கண்ணொடியோ? ஒளிரும், பானலங் கண்வாள் தீட்டிய இடந்த சாணையின் படிவமோ? கபோலம்; கான்வழிக்கொழுகும் சண்பக மலரைக் கடிந்து, மென் குமிழினைத் துரந்துள், ஊனையும் உருக்கும் ஒழுகு பொற்கொடி மூக்கு உவமையாம் உரைக்குமாறரிதே" இவ்வாறு இவள் உறுப் புக்களெல்லாம் சிறப்புற்றிருந்தன. இத்தகைய இவளை நிடதர் வேந்தனாகிய நளன் கண்டு உளமுருகி நின்றான். இவளும் அவன் மேல் காதல் கொண்டிருந்தாளாதலால் பெரு மகிழ்வோடு மருவ இசைந்தாள். இருவரும் மணந்தார். இன்புற்றிருந்தார்.

" ஒருவர் உடலில் ஒருவர் ஒதுங்கி
இருவ ரெனுந்தோற்றம் இன்றிப்—பொருவெங்
கனற்கேயும் வேலானும் காரிகையும் சேர்ந்தார்
புனற்கே புனல்கலந்தாற் போன்று. (௧)

குழைமேலும் கோமான் உயிர்மேலும் கூந்தல்
மழைமேலும் வாளோடி மீள—விழைமேலே
அல்லோடும் வேலான் அகலத்தோடும் பொருதாள்
வல்லோடும் கொங்கை மடுத்து. (௨)

கொங்கை முகங்குழையக் கூந்தல் மழைகுலையச்
செங்கயற்கண் ஓடிச் செவிதடவ—அங்கை
வளைபூசலாட மடந்தையுடன் சேர்ந்தான்
விளைபூசற் கொல்யானை வேந்து" (நளவெண்பா.) (௩)

இன்னவாறு இவளைக் கலந்து நுகர்ந்து அம் மன்னன் களிப் புற்றிருந்தான். நாளும் நாளும் புதிது புதிதான போகநலங்களைப்

அங்கு மெல்லிய இயல்போடு மேவி நின்ற அனிச்சமலரை நோக்கினான். அதனினும் இவள் மேனி மெல்லிய நீர்மையுடையதெனச் சொல்லி மகிழ்ந்தான். "அனிச்சமே! நீ நன்னீரையாயினும் யாம் விழைபவள் நின்னினும் மென்னீரள்" எனக் காதலி நலத்தைக் காதலன் உவந்துகொள்ளும் பான்மை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

தொட்டால் வெதும்பித் தொலையும் அனிச்சமோ
கட்டழகிக் கொப்பாகுங் காண்.

தலைவியின் உடல்நிலை இதனால் கூறப்பட்டது.

1112. காசில் இராசனையின் கண்மலரை மண்மலர்கள்
கூசினவென் றானேன் குமரேசா—வீசும்
மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண்
பலர்காணும் பூவொக்கு மென்று. (2)

இ—ள்.

குமரேசா! இராசனையின் கண்ணழகை வியந்து மலர் என மயங்கி உருமண்ணுவான் ஏன் மகிழ்ந்திருந்தான்? எனின், நெஞ்சே! இவள்கண் பலர்காணும் பூ ஒக்கும் என்று மலர் காணின் மையாத்தி என்க.

இது, கண்ணழகை எண்ணி மகிழ்கின்றது.

மலர் = பூ. மலர்ந்திருப்பது என்னும் ஏதுவான் வந்தது. மலர்தல் = விரிதல். காணின் = கண்டால். பலர்காணும் என்றது அப் பூவின் பொதுமை காட்டி. இகழ்ந்து கூறிய படி.

மையாத்தி = மயங்குகின்றாய். மையாத்தல் = மயங்குதல். கருமை, இருளை யுணர்த்திவரும் மை என்பதன் அடியாகப் பிறந்தது. இருளிலகப்பட்டவன் பொருள்களைத் தெருளுறக் காணுதவாறுபோல் மருள்கொண்டு நிற்றலால் "மையாத்தி" என நின்றது. "செய்வுறு மண்டிலம் மையாப்பது போல் மையில் வாண்முகம் பசப்பூருமே" (பாலைக் கலி 7).

தாம் விரும்புற்ற மகளிரது உறுப்புக்களைப்போல உருவுடைய நிற்கும் பொருள்களைக் காண நேர்ந்தால் காதலர் அவற்றை நோக்கிக் களித்து நிற்பாராதலால் மையாத்தற்கு அம் மலரின் மாட்சியும், தலைவன் காட்சியும் ஏதுவாய் நின்றன.

"பண்கள் வாய் மிழற்றும் இன்சொற் கடைசியர் பரந்து நின்ற
கண், கை, கால், முகம், வாய், ஒக்கும் களையல்லால் களையிலாமை
உண்கள்வார் கடைவாய் மள்ளர் களைகலாது உலாவி நிற்பார்
பெண்கள்பால் வைத்தநேயம் பிழைப்பரோ சிறியோர் பெற்றால்"
(இராமாயணம்.)

குவளை தாமரை காந்தள் ஆம்பல் முதலிய மலர்களே வயல்களில் களைகளாயிருந்தன ஆதலால் அக் காதலியரது கண் முதலியன போன்றன வென அவற்றைக் களையாது மள்ளர் உலாவி நின்றார் என வுணர்த்திக் காதலியல்பை இது விளக்கிநிற்றல் காண்க.

மேல், காதலியின் மேனி நிலையை வியந்து புகழ்ந்தான்; இதில், கண்ணினை உவந்து புகழ்கின்றான்.

மனமே! இவள் கண் பலரும் காணுகின்ற குவளை நீலம் முதலிய பூக்களை ஒக்கும் என்று மலர்களைக் காணும்பொழுது மயங்கி நிற்கின்றாய் என்பதாம். மலர் எனப் பொதுவாகக் கூறியிருப் பினும் கண்ணோடு இயைத்திருத்தலால் குவளை நீலம் முதலியன எண்ணலாயின. குமிழ்ந்து வளைந்து கடை நீண்டு எவரும் விழைந்து நோக்கும்படி அமைந்திருத்தலால் குவளை மலர் கண் ணுக்கு உவமையாயது.

தான் கலந்திருந்த மங்கையைப் பிரிந்தபொழுது அவளது கண்ணழகை நினைந்து வருந்தி நின்றவன் அதைப்போல அலர்ந் துள்ள மலர்களை நீர் நிலைகளிற் கண்டு உவந்து நோக்கி வியந்து உள்ளாறி யிருந்து மீண்டு அவளைத் தனியிடத்தில் அடைந்த பொழுது மனத்தை முன்னிலைப்படுத்தி நெஞ்சே! இவள் கண் போலிருந்தன என்று பலபூக்களைக் களித்து நோக்கி மயங்கி நின்றாயே! பலராலும் பார்க்கப்படுகின்ற அப் பல மலர்களை நான் ஒருவனே காணும் இவ் விழிமலரோடு ஒப்பாக நினைந்து

தப்பு என்று அவன் உவந்து கேட்குமாறு அக் கண்மணியைத் தலைவன் புகழ்ந்துரைத்தபடி யிது.

தம் காதலியின் அவயவங்களைப்போன்ற பொருள்களைக் கண்டபொழுது அந்நினைவோடு யாவரும் களித்து நோக்குவ ராதலால் "மலர்காணின் மையாத்தி" என்றான்.

"வண்ணநறுந் தாமரை மலரும், வாசக்குவளை நாண்மலரும்,
புண்ணின் எரியும் ஒருநெஞ்சம் பொதியுமருந்தோ? பொய்காய்!
கண்ணும் முகமும் காட்டுவாய் வடிவும் ஒருகால் காட்டாயோ?
ஒண்ணுபெண்ணின் அஃதுதவாது உலோவிருந்து முயிர்த்தாயோ?

பஞ்சுபூத்த விரற்பதுமம், பவளம்பூத்த அடியாள், பைந்
நெஞ்சுபூத்த தாமரையின் நிலயம்பூத்தாள், நிறம்பூத்த
மஞ்சுபூத்த மலர்பூத்த குழலாள் கண்போல் மணிக்குவளாய்
நஞ்சுபூத்து, தாலென்ன நகுவாய்! என்னை நலிவாயோ!"

(இராமாயணம்)

இது, பம்பைப் பொய்கையைக் கண்டபொழுது சீதையை நினைந்து இராமன் வருந்தியது. பிராட்டியின் கண்போலு குவளையை இதில் ஒத்தெண்ணி அப் போர் வீரன் புலம்பியிருக்கும் அழகைப்பார்க்க.

உள்ளக் காதலியின் உருவொப்புமையைப் புறப்பொருள் களிற்கண்டு புகழ்ந்துரைத்தமையால் இது நலம்புனைந்துரைத்தலா யிற்று.

தலைவி கண்களை வியந்து தலைமகன் உளமகிழ்ந்து கொள்வன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை இராசனை கண் உணரப்படும்.

## கதை.

இராசனை என்பவள் மகத நாட்டிலிருந்தவள். சுதன்மன் என்னும் குறுநில மன்னன் மகள். இவள் அழகிற் சிறந்தவள்; அறிவினுயர்ந்தவள்; பொறையும் அருளும் பொருந்திய நெஞ்சி னள். இசையில் வல்லவள். கோலம் புனைதல் பந்தாடுதல் முதலிய சுந்தர வினைகளில் இவள் மிகவும் தேர்ந்தவள். உதயணனுடைய அருமைத் தேவியாகிய பதுமாபதியோடு பெருநட்புடையவள்.

ஒண்பத் தோரேழ் கொண்டனளாகி
ஒன்றொன்றேற்றி உயரச் சென்றது
பின்பின் படுதொறு வந்துநிலை சிறப்பக்
கண் இமையாமல் எண்ணுமின்! என்று,
வண்ணமேகலை வளையொடு சிலம்பப்
பாடகக் காலடிசைப் பரிந்தவை விடுத்தும்
சூடக முன்கையிற் சுழன்றுமா றடித்தும்
அடித்த பந்துகள் அங்கையின் அடக்கியும்
மறித்துத் தட்டியும், தனித்தனி போக்கியும்,
பாயிரமின்றிப் பல்கலன் ஒலிப்ப
ஆயிரம் கைதனி அடித்தவள்" (பெருங்கதை).

இவள் பந்தாடியுள்ள அழகு அருமைகளை இதில் ஆய்ந்து பார்க்க. எழிலிலும் தொழிலிலும் இங்ஙனம் உயர்வெய்தி யிருந்த இவளை உருமண்ணுவா என்பவன் ஒருநாள் பொழிலிடைக் கண்டான். அவன் அருந்திறலாண்மையன்; பெருந் தன்மையாளன். கடுங்காதலுடையனாய் இவளைக் கனிந்து நோக்கினான். இவளும் அவன்மேல் ஆர்வமீக் கூர்ந்தாள். அன்போடிருவரும் ஆர இசைந்தார்; பின்பு மணந்து இன்பம் நுகர்ந்து இனிதமர்ந்திருந்தார். இருக்குங்கால் அரசகாரியமாகச் சேதி நாட்டையடைந்து சின்னாட் பிரிந்து நின்றான். இவளது பிரிவை நினைந்து மிகவும் வருந்தினான். திரும்பி வருங்கால் பொய்கைகளில் மலர்ந்துள்ள தாமரை நீலோற்பல முதலிய மலர்களைக் கண்டு இவள் முகம் கண் முதலிய அவயவங்களை எண்ணி ஆற்றாமையோடு ஆர்வமுற்றடைந்தான். மலரணையில் இவளுடன் அமர்ந்திருக்கும்பொழுது நெஞ்சே! குவளை முதலிய மலர்களைக் கண்டபொழுது இவள் கண்போல் உள்ளன என்று மயங்கி நின்றாயே; உண்மையில் இதற்கு அவை ஈடாகுமா? என உவந்து மொழிந்தான். தனது நலம்புனைந்துரைத்தலை நயந்து கேட்டு இவள் வியந்து மகிழ்ந்தாள்.

மானும் கயலும் மலர்வேலும் கண்டிவள்கண்
மானுமென நின்றேன் மருண்டு.

காதலி கண்மலருக்கு மண்மலர் ஒவ்வாதென்பது இதனால் கூறப்பட்டது.

1113. கோதைவெறி நாறுமென் றாங்கறிந்தான் தென்னவன்மன்
கோதைநலங் கண்டிலன் குமரேசா — ஓத
முறிமேனி முத்தம் முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு. (௩)

இ-ள்.

குமரேசா! சண்பகமாறன் தனது மனைவி கூந்தல் கமழ் மணமுடையது என உணர்ந்து வியந்து உருவநிலைமை எவ்வாறு உணர்ந்து நின்றான்? எனின், வேய்த் தோளவட்கு மேனி, முறி; முறுவல், முத்தம்; நாற்றம், வெறி; உண்கண், வேல்; என்க.

தென்னவன் = பாண்டியன். ஆதம் = மா.

இது, உறுப்பு நலங்களின் சிறப்புணர்த்துகின்றது. மேனியை முதலில் குறித்தது எல்லா வழியும் கலங்கவுருத்தும் இடமாய் நிற்கும் அதன் தலைமை கருதி.

முறி = தளிர்; முறுவல் = புன்னகை; இங்கு அது பல்லை உணர்த்துகின்றது. வெறி = வாசனை. "வெறிகமழ் சந்தனம்" (நாலடியார்) "வெறிமலர்ப்பொய்கை ஆம்பல் மயக்கும்" (குறுந்தொகை 91) "வெறியுடைக் கலவையும் விரவுபோ தவிசு" (இராமாயணம்) இவற்றுள் வெறி உணர்த்தி நிற்றல் காண்க.

நாற்றம் = நறுமணம். உடலின் இயற்கை மணம் உயர்ந்த வாசனையாயிருத்தலையால் "நாற்றம், வெறி;" என்றான்.

வேய் = மூங்கில்.

தோளையள் என்று சுட்டியுரைக்கும் பெயரிலேயே வேய் என அடைகொடுத்து அதன் இயல்பினையும் உடனுணர்த்தினர். சுருங்கச் சொல்லும் ஆற்றல் இப் பெருமானுக்குத் தனியுரிமையா யுள்ளமையை இப்பாவிலும் அறியலாம். தோளை மூங்கில் என்றது உருண்டு திரண்டு வழுவழுப்போடு பிறைபிறைப்பு முடையதா யினிதமைந்திருக்கும் அதன் இயல்பு நோக்கி. "வேயுறு தோளி பங்கன்" (தேவாரம்) என உமாதேவியைக் குறித்துள்ளதும் காண்க. "மாயவன் அதரம் சேர்த்தி வான் முறை யிசைத்த பச்சை, வேய் எனு மதுவும் யான்செய் மெய்த்

தவ மனைய நீராள், தூயபொற்றேர்கண்டழுந்தித் தோற்றதால் கன்னி லன்றான், சேயவன் வணக்காதேத்தும் சிலைகொலோ நிகர்ப்பதம்மா” (கந்தபுராணம்). வேயைத்தோளுக்கு ஒப்புரைத் திருக்கும் அழகைப்பார்க்க.

மேல், கண்ணின் நிலையை எண்ணி வியந்தான்; இதில், உருவநிலை முழுவதையும் உவந்து புகழ்கின்றான்.

வேய்போலும் தோளினையுடைய இவட்கு நிறம் தளிர் நிறமாயும், பல் முத்தமாயும், இயற்கை மணம் நறு நாற்றமாயும், கண் வேலாயும் இருக்கின்றன என்பதாம்.

உவமையிலுரையாது உருவகஞ் செய்தது அவ் வுறுப்புநலன்களின் உயர்வு தோன்ற.

தான் கலந்து அனுபவித்த மங்கையின் நிறத்தையும், பல்லையும், இயற்கை மணத்தையும், கண்ணையும், தோளையும் வியந்து தலைமகன் இங்ஙனம் புகழ்ந்து மொழிந்தான்.

நிறத்தைத் தளிர் என்றது இளமை தவழ்ந்து எழில் நலங் கனிந்து தண்மையும் மென்மையும் ஒண்மையும் அமைந்து நிற்கும் அதன் தன்மை கருதி.

“ தண்ணறுங் கமலங்காள் ! என் தளிர் நிறம் உண்ட கண்ணின் உண்ணிறங்காட்டி நீர்என் உயிர்தர உலோவினீரே” எனச் சீதை இராமனை நினைந்து வருந்துங்கால் தன் நிறத்தைத் தளிர் எனக் குறித்துத் தாமரைகளோடு புலம்பியிருத்தல் காண்க.

இத் தேவியின் மேனி நிறத்தை வியந்து இராமன் அனுமானிடம் உரைத்துள்ளபடியை அடியில்பார்க்க.

“எந்நிறம் உரைக்கேன்! மாவின் இளநிறம் முதிரும்; மற்றைப்
பொன்னிறம் கறுக்கும்; என்றால் மணிநிறம் உவமை போதா;
மின்னிறம் நாணி எங்கும் வெளிப்படா ஒளிக்கும்; வேண்டின்
தன்னிறம் தானே ஒக்கும்; மலர்நிறம் சமழ்க்குமன்றே”
(இராமாயணம்).

பொன்னிற முதலிய எவற்றினும் மாந்தளிரை முன்னுறக் குறித்து அப் பிராட்டியின் நிறத்தை நினைந்து நினைந்து அப்

பெருமான் உளைந்துரைத்திருக்கும் அருமை இதில் ஊன்றிப் பார்க்க.

பல்லை முத்து என்றது ஒளி நிலவி நிற்கும் எழில் நிலை நோக்கி. "முல்லையும் கடல் முத்தும் எதிர்ப்பினும் வெல்லும் வெண்ணகையாய்" (இராமாயணம்). "துப்பனவாயும், முத்தொளி முறுவலும்" (பெருங்கதை) "முத்தைத்தரு பத்தித் திருநகை அத்தி" திருப்புகழ்) "முத்தேர் வெண்பல் முகிழ் நகை மடவரல்" (ஐங்குறுநூறு) "காம்பீர முத்தின் தகை யேய்க்கு முறுவலாய்" (கலித்தொகை)" "முத்துத் தளவம் முருந்து எயிறுக்கும்" (உவமானசங்கிரகம்) இவை கண்டெண்ணற்குரியன.

கண்ணை வேலாகக் குறித்தது எதிர்ப்பட்டாரைத் தன்வயப்படுத்தி வென்று நிற்கும் அதன் திறல் கருதி. "இணை வேலுண் கண் நங்கையும் இன்பக் கொடி யொத்தாள்" (சிந்தாமணி 365)

காதலியின் அவயவ நலங்களை ஆர்வத்தோடு புகழ்ந்து கூறிக் காதலன் இங்ஙனம் மகிழ்ந்து நின்றான். இந்நிலை அகப்பொருட்டுறையில் இயல்நிலைகூறல் எனப்படும். அஃதாவது தலைவியைக் கலந்து பிரிந்த தலைமகன் தன்பாங்கனையடைந்து தனக்கு அமைந்த உண்மையை உவந்துரைத்து மறுகால் அவள் குறித்த இடத்தில் வந்துள்ளாளா? என்பதைப் பார்த்துவருமாறு பணித்து, அடையாளம் தெரியும்படி அவளது உருவநிலையை உணர்த்திவிடுதல் என்க.

விழியாற் பிணையாம்; விளங்கியலால் மயிலாம்; மிழற்று
மொழியாற் கிளியாம்; முதுவானவர்தம் முடித்தொகைகள்
கழியாக் கழற்றில்லைக் கூத்தன் கயிலை முத்தம் மலைத்தேன்
கொழியாத் திகழும் பொழிற்கெழிலாம் எம் குலதெய்வமே.
(திருக்கோவையார்)

கனமே குழல்; செங்கயலே விழி; மொழி கார்க்குயிலே;
தனமே முகை; என் தனி நெஞ்சமே யிடை; தன்பகைக்கு
வனமே அருளிய வாணன் தென்மாறை மணிவரை சூழ்
புனமே யிடம்; இங்ஙனே என்னை வாட்டிய பூங்கொடிக்கே.
கனம் = மேகம். (தஞ்சைவாணன்கோவை)

நறையே யிதழ்ப் புரிணையார் திருவிலங்கை நாதர் சடைப்
பிறையே நுதல்; அவர் மானே கருங்கண்; பிடித்தபொய்ப்
பறையே யிடை; அவரிபாம்பே அல்குல்; பாம்பானேல
யிறையே முலை; மலர்த்தண்டலையே யிடம்; என் னுயிர்க்கே.
(திருவிலங்கைக்கோவை)

கனையே கருங்குழல், கங்குலன்றே; கண் கருவிளையின்
இனையே; குவளையும் கொய்தவுமல்ல; இவர் நங்கை எவர்
மனையே; வளரிள வஞ்சியன்றே; வஞ்சமாரன் கைத்
தனையே தனம்; கனகக் கடமேருச் சயிலமன்றே.
(அம்பிகாபதிக்கோவை).

சேவனைக் கேதனர் கோமச்சுரமப்பர் தெவ்பழனம்
காவனம் நன்னாடிடமக் காமலைதன் கைவனசப்
பூவனை; சத்திமுத்தம் கண் முறுவல்; பூரணகை
மாவணம்; சாயல் ஒண்மாயூரம்; சுத்திலயம் சூழ்தேய.
(சோமேசர்க்கோவை).

சத்தி = வேல். அளகு = கூந்தல். ஐ = அழகு. மா = வண்டு. சத்தி, கண்; முத்தம், முறுவல் என்க. தலைவியின் உருவ இயலைக் குறித்து உருவக வகையில் வைத்து அடிகள் உரைத்துள்ளபடியே இவை அடியொற்றி வந்துள்ளன காண்க.

குலமகளின் உறுப்பு நலங்கள் இயற்கை எழிலோடு வியக்கத்தக்க அதிசயமாய் விளங்கியிருக்கும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இராசசுந்தரியால் உணரப்படும்.

## கதை.

இராசசுந்தரி என்பவள் மதுரையிலிருந்து அரசுபுரிந்த வங்கியசூடாமணிப் பாண்டியனுடைய அருமைத் திருமனைவி. இவள் மகா பதிவிரதை. பேரழகுடையவள். ஆவியும் அமிர்தமும் போல் அம் மன்னனுக்கு இத் தேவி மேவியிருந்தாள். இவளது இன்ப நலனை மாந்தி இந்திரன்போல் போகக் களிப்பில் அவன் பொங்கியிருந்தான். இறைவன்பால் அவன் நிரம்பிய

சாய்ந்தமென் கொடியுந் தாளுந் தனிப்பிடித் திருப்பாளைப்
ஆய்ந்தநேர் நாற்றந் தோன்ற அமைந்தது வாசந் தென்றல் (௨)
வெவ்விய வெயிலோன் வீசும் வாசம் போர்க்கு, ஈதுவே
இவ்விய வாசமாக இருந்தது; தென்றல் காவில்
வெளவிய வாசமென்று; காழுந் தும் வாசம் இல்லை;
எவ்வியல் வாசமேபோ? இதுவென எண்ணங்கொள்வான். (௩)

இரும்பித்தன் தேவிதன்னை நோக்கினான் தேவி யூர்பால்
இரும்பித்தை வாசமாயி யிருந்தது கண்டு இவ்வாசம்
சுரும்பிற்குந் தெரியாதென்றாச் சூழ்திறம் புதுகொண்மது
அரும்பித்தைக்கு இயல்போ? செய்கையோ? என ஐயங்
பித்தை = கூந்தல். கொண்டான். (௪)

ஐயுறு கருத்தை யாவனாயினும் அறிந்து பாடல்
செய்புநரவர்க்கே இன்ன ஆயிரம் செம்பொன் என்று அக்
கையுறை வேலான் ஈந்தபொற்கிழி கைக்கொண்டேகி
மெய்யுணர் புலவர் முன்னுத் தூக்கினர் வினைசெய்மாக்கள். (௫)
(திருவிளையாடற்புராணம்.)

இவள் மேனி பல் கை முகம் வாய் மூக்கு முதலியவற்றிற்கு மாந்தளிர் முல்லையரும்பு காந்தள் கமலம் ஆம்பல் முதலியவற்றை முறையே ஒப்புறவைத்து உருவகஞ் செய்திருக்கும் அழகைப் பார்க்க. இதனால் இவளது உறுப்பு நலங்களின் சிறப்பு நிலைகள் இனிதறியலாகும். இவள் நலத்தை நாயகன் என்றும் நயந்து புகழ்ந்துள்ளான்; "முறி, மேனி; முத்தம், முறுவல்; வெறி, நாற்றம்; வேல், உண்கண்; வேய், தோள்;" என்னும் உண்மையை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

" கோட லெதிர்முகைப் பசுவீ முல்லை
நாறிதழ்க் குவளையோ டிடைப்பட விரைஇ
ஐது தொடைமாண்ட கோதை போல
நறியள் நல்லோள் மேனி
முறியினும் வாயது முயக்கற்கும் இனிதே" (குறுந்தொகை 62).

"முறி மேனி" என அடிகள் குறித்தபடியை அடியொற்றித் தலைவியின் மெய் நலத்தை வியந்து இது புகழ்ந்திருத்தல் காண்க.

பொன்னும் மணியும் பொலந்தாது மின்றொளியும்
நன்னுதல்மெய்க் கொவ்வா நவை.

தலைவியின் நிற முதலியவற்றின் உயர் நலம் இதனுட் கூறப்பட்டது.

**1114.** காமர் விரிசிகைப்பின் கண்ணொவ்வா நீலமென்றே
கோமான் உரைத்தான் குமரேசா — ஆமதனைக்
காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கு
மாணிழை கண்ணொவ்வேம் என்று. (௪)

இ—ள்.

குமரேசா! விரிசிகை கண்ணிற்குக் குவளைமலர் நேராகாது என ஏன் உவமை உரையாயுள்ளார்? எனின், குவளை காணின் மாணிழைகண் ஒவ்வேம் என்று கவிழ்ந்து நிலன் நோக்கும் என்க.

இது, கண்கவின் உணர்த்துகின்றது.

குவளை = குவளை மலர். இது நீர்நிலைகளில் மலர்வதாலால் நீர்ப்பூ எனப்படும். பெண்கள் கண்களுக்குக் குவளை மலரும் முகத்துக்குத் தாமரையும் உவமைகளாய் வரும். "தாமரைப் போதிற் பூத்த தண்ணறுங் குவளைப் பூப்போல், காமரு முகத்திற் பூத்த கருமழைத் தடங்கண்" (சிந்தாமணி 2153) "பாதஞாட் குவளைமலர்ப்பிணைத் தன்னமாயிதழ் மழைக்கண் மாஅயோள்" (அகநானூறு 62) இவற்றுள் குவளை வந்திருத்தல் காண்க.

மாண் இழை என்றது சிறந்த அணிகளை உடையாள் என்றபடி. மாண் என்னும் அடை அவ் இழையின் விழுமிய நிலையை விளக்கி நின்றது.

காணின் நிலனோக்கும் என்றதனால் இதுபொழுது மேல் நோக்கியுள்ளமை பெறப்பட்டது. கண்டால் வெட்கித் தலை குனிந்து நிற்குமாதலால் காணாமையால் நிமிர்ந்து வாழ்ந்தோங்கி நிற்கின்றன என அவற்றின் நிலையினை இகழ்ந்துரைத்தான்.

தலை கவிழ்தலும் நிலன் நோக்கலும் நாணமுடையார் செயல்களாதலால் அவ் இயல்புகள் குறிக்கப்பட்டன.

யாமே போலும் அறுகுடையாம் காலைக்
தாமே தன்மைத் தகையர நாட்டு
நாணிகம் தொரீஇய நாவுடைப் புரையோர்
காணிக மற்றிவள் கற்பியனார்ப் என்பதும்,
ஏதில் ஒழுக்கின் மாதவர் இற்பிறந்து
எளிமை வகையின் ஒளிபெற நயப்பப்
பிறநெறிப்படுதல் செல்லாள் பெருமையின்
அறநெறி தானே அமர்ந்தனை கொடுப்ப
அம்மையணிந்த அருளீர் பன்றல்
தப்பூட் டாமே கூடியாங்கு
மைப்பிற் றொக்க இளந்திரை அகலின்
உடையாகில் உருவி அகயானல் தணிந்தே
தவாபெவி மாதர் தக்கவர் என்பதும்
இன்னவை பிறவும் பன்முறை பகா'' (மணிமேகலை துறவு)

கந்தருவ முறையில் உதயணன் இவளைக் கலந்து பிரிந்ததாம், உறுப்பே அணிகலமாக இயற்கை எழிலோடு இவள் அமர்ந்திருந்ததாம், பவள அணிகளைப் புனைந்துகொண்டு யாமே அழகிகள் எனத் தம்மைத்தாமே வியந்திருக்கும் மங்கையர் இவளைக் காணின் நாணுவர் என நலம் பாராட்டி நங்கையர் நயந்து நின்றதாம், பிறவும் இதில் நன்றி புனைந்து கொள்க. இதனால் இவளது எழில் நிலை இனிது புலனாம்; இத்தகைய இவளை மணந்து மகிழ்ந்து மயங்கி நுகர்ந்து பெருங்களிப்போடு அம்மன்னன் அமர்ந்திருந்தான். ஒருநாள் பொழிலிடை உலாவி வருங்கால் பொய்கையில் மலர்ந்திருந்த குவளை மலர்களைக் கண்டான்; இவள் விழிகளை எதிர் காணுமாயின் அவை நாணித் தலைசாயும் என நயந்து மொழிந்தான். தம் காதலி கண்ணிற்குக் குவளை மலர்கள் இணையாகா எனக் காதலர் புகழ்ந்து நிற்பர் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

நீலம் குவளை நெடுநாண் அடையுமிவள்
கோல விழிகாண் குறின்.

தலைவியின் கண் மலரினும் சிறந்ததென்பது இதனால் கூறப்பட்டது.

1115. மாதநங்க வீணை மலர்சூட மானிடைக்குக்
கோவென்று நைந்தான் குமரேசா — காதார்
அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை. (ரு)

இ—ள்.

குமரேசா! அநங்கவீணை தலையில் மலர் சூட அவள் இடை நிலையை நோக்கிப் பவதத்தன் ஏன் வருந்தி நின்றான்? எனின், அனிச்சப்பூக் கால் களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு நல்ல பறை படா என்க.

இது, இடையின் இயல்புணர்த்துகின்றது.

கால் = காம்பு. மலர்க்காம்பைக் கால் என்றது மனிதனுக்குக் கால்போல் அடி நீண்டிருக்கும் அதன் இயல்பு நோக்கி. மல்லிகை பிச்சி முதலியன கூறியாமல் அனிச்சத்தைக் குறித்தது மிக மென்மையோடு காம்பு அமைந்திருக்கும் தன்மையும் கருதி.

களையாள் = நீக்காளாய்; முற்று எச்சமாய் நின்றது. பெய்தாள் = சூடினாள். நுசுப்பு = இடை. சிறந்த மகளிரது இடை மிகச் சுருங்கியிருக்குமாதலால் அனிச்சமும் பொறாது என இந்நயம் புனைந்துரைத்தார். "நூல்பொறாவரிய நுண்மை நுசுப்பு" (சீவகசிந்தாமணி) என்பதும் காண்க.

பறை = ஒலிக்குங்கருவி. நல்ல என்னும் அடை கலியாண முதலிய சுபகாரியங்களில் ஒலிக்கப்படுவது என அதன் இனமும் இயல்பும் உணர நின்றது. இது மணப்பறை எனப்படும். அசுப காரியங்களில் அடிப்பதைப் பிணப்பறை என்பர்.

படா = ஒலியா. அடிக்கப்படா என்றபடி. அளபெடை இசை நிறைத்து நின்றது. நல்ல பறை படா என்றதனால் தீய பறை படும் என்பதாயிற்று.

மேல், காதலியின் கண்ணெழிலை வியந்து நின்றான்; இதில், அவளது இடை நிலையை உவந்து நிற்கின்றான்.

அனிச்சப்பூவை முகிழ் களையாமல் தலையில் சூடினாள் ஆதலால் இனி இவள் இடைக்குச் சாப்பறை அடிக்கும் என்பதாம்.

அனிச்சத்தின் அழகின் மென்மையும், இடையின் நுண்மை யும் இதில் உரைக்கப்பட்டுள்ளமை காண்க.

இடையின் இயல்பினைப் புகழ்ந்துரைக்க இது, அகப் பொருட்டுறையில் மருங்குலைதல் எனப்படும். அஃதாவது பொழிலிடை நின்ற தலைவியைப் பார்த்துப் பேராவலுடையனாய்த் தழுவ விரைந்த தலைவன் அவள் குழல்மேல் படிந்திருந்த வண்டு களை வெகுண்டு நோக்கி "அளிகளே! காமுற்று ஓடிவந்து சேரல் கள்; முலைப்பாரம் பொறுக்காமல் முன்னமே தளர்ந்து நிற்கும் இடைக்கு நீங்களும் கூட ஏறி இடை முறிய விளைக்கலீர்களோ" என்று இகழ்ந்து விலக்குபவன்போல் பொழுதுபோக்கிக்கொண்டே போய்த் தன் குடங்கையால் இடையை அணைய வளைத்து அவளை அழுந்தத் தழுவி அகமகிழ்ந்து நின்றான் என்க.

கோலத்தனிக்கொம்பர் உம்பர்புக்கு அஞ்சிக் குழைப்பவர்தம்
சீலத்தன கொங்கை தேற்றகிலேம்; சிவன் தில்லை யன்னாள்
நூலொத்த நேரிடை நொய்ம்மை எண்ணாது நுண்தேனசையால்
சாலத்தகாது கண்டீர் வண்டுகாள்! கொண்டைசார் வதுவே.

(திருக்கோவையார்)

நல்லார் விழிபோலிருக்கும் அளியெனும் நாமம் பெற்றும்
அல்லார் குழலில் அமர்ந்திருந்தால் அமரரை வெல்ல
வல்லான் வரோதயன் வாணன் தென்மாறை மதுகரங்காள்!
நில்லாது இடை; உமக்கே பழி சாலநிலை நிற்குமே.

(தஞ்சைவாணன்கோவை)

மன்னிசை வெங்கையுடையபிரான் வரைமான் நுசுப்பைப்
பொன்னிசை கொங்கை ஒடித்தாலும் நிற்கை பொறுக்கு மமை
மின்னிசை மென்குழல் ஏறன்மின்! நீவிர் விளங்கிலிரோ
இன்னிசை வண்டினங்காள்! காந்தாரியம் என்பதுவே.

(திருவெங்கைக்கோவை)

இடையின் இயல்பினைக் குறித்து வந்துள்ள இவை ஒரே தன்மையையுடையனவாயினும் கவிகளின் மனோபாவங்களின் அருநலங்கள் தனித்தனி ஆய்ந்து மகிழத்தக்கன.

பெண்களுக்கு இடை சுருங்கியிருத்தல் பெருஞ் சிறப்பாகுமாதலால் அதன் நுண்மையை இவ்வண்ணம் பாராட்டுகின்றது.

"விரல்கள் ஒன்றின்மேல் மூன்றனிற் காதலன் வீக்குமெய்; அதன் நல் நற்
பொருளாகன்றிடும்; கடைவிரல் நிலத்துமடப் பொருந்திடப்பெறின், காதல்
பெருகுகேள்வரை ஒறுத்திடும்; பெருவிரற் கழுத்தலால்விரல் நீளின்
அரிய நன்மணம் ஆற்றுமுன் பலரொடு மன்புறப் புணர்கிற்பாள்; (௪)

இடுகு நுண்ணிடை மறுமை மைந்திடிற் றிருவெய்திடும்; பெரிதாகின்
படருழந்திடும்; உந்தியாழ்ந்தகன் றெழுமிற் பயில் வலஞ்சுழியாகில்
அடையுஞற் றிரு; நரம்பொடு மயிரணிக் குயர்ந்தடங்கு சுழியாகில் (௫)
உடலம் வன்றுயர்; மென்மையாம் மயிரொளின் மகப்பல வுயிர்க்கிற்பாள்.

வடங்கொள் வெம்முலை பனைத்து அடி கனத்து நுனை வாய்த்திடை வெளி
யின்றிக், கடைந்த செப்பினிற் புடைபரந்து மாறில் தவழ் கண் கறுத்திடில்
நன்றாம்; தடங்கண் மங்கை தன் வலமுலை யுயர்ந்திடில் ஆண்பெறும்; தளராது
குடம்பழித்துயர் இடமுலை யுயர்ந்திடிற் பெண்பெறுங் குறிப்பாமால்."
(காசிகாண்டம்.)

மகளிரது உறுப்பு நலங்களால் இவ்வாறு சில நன்மைகளை யுணர்ந்துகொள்ளலாம் ஆதலால் உத்தம இலக்கணப்படி சிறப்பு நிலையிலமைந்துள்ள தலைமகளது நுசுப்பின் தன்மையைத் தெளிவுற இங்ஙனம் இதில் உணர்த்தியருளினர்.

காதலியது இடையின் நுண்மையை வியந்து காதலன் உவந்து கொண்டாடியவண்ணமது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அநங்கமாலினியால் உணரப்படும்.

## கதை.

அநங்கமாலினி என்பவள் மத்திமகோட்டிலே பதுமபுரத்தி லிருந்த திருமான் என்னும் வணிகனுடைய அருமைப் புதல்வி. தாய்பெயர் சித்திரமாலை. இவள் நல்ல அழகி. மெல்லியல்புடையவள். இங்ஙனம் உருவிற் சிறந்திருந்தாளேயன்றி அறிவு நலம் இவளிடம் நன்கு அமைந்திருக்கவில்லை. பேதை நீர்மையள். எவரையும் எளிதில் நம்பும் இளகிய நெஞ்சினள். பருவம் எய்தி எழில் குடிகொண்டிருந்த இவளைப் பலபத்திரன் என்பவன் நெடிது விழைந்து நின்றான். அவன் வனப்பும் இளமையும் வளமும் உடையவன். அவனுக்கு இவள் மாமன் மகளாதலால் விரும்பியபடியே மணம் விரைந்து நடந்தது. இவளது இன்ப வெள்ளத்தில் அவன் ஆழ்ந்து கிடந்தான். அநங்க லீலைகள் பல

ஆரப்புரிந்து இருவரும் உளங்களித்திருந்தார். இரவு பகலறியாது நாளுந் தோய்ந்து நலம் நுகர்ந்து வருங்கால் ஒருநாள் இனிய பூஞ் சோலையில் இவளோடு அவன் உலாவினான். அவ்வமயம் அருகே சென்று அனிச்ச முதலிய சில மலர்களைக் கொடுத்து குழலில் முடித்து ஒல்கி ஒசிந்து இவள் உவந்து நின்றாள். அம் மலர்மேல் சில வண்டுகள் மொய்த்தலைக் கண்டு வெகுண்டு அவற்றைக் கடிந்து ஓச்சி இவளை மருங்கணைத்து முத்தாடி அவன் மகிழ்ந்து நின்றான். இவள் அவனைத் தழுவிக்கொண்டு அளிகளை ஏன் இவ்வாறு அகற்றியதென்றாள். "அப் பழியளிகள் இடைக்கு இழவுசெய்து விடும் என்று பயந்தேன்" என அவன் நயந்து மொழிந்தான். இவள் உவந்து நின்றாள். இங்ஙனம் போக நிலையில் பொங்கியிருந்த இவளை இயக்கனொருவன் காதலித்துக் கவர்ந்து சென்றான். அவன் மனைவியாகிய வசந்த திலகை என்பவள் நல்ல பதிவிரதையாதலால் பிறர் குலமகளை இவ்வாறு கொண்டுவருதல் தகாது என்று இடித்தறிவுறுத்து எடுத்த இடத்தில் கொண்டுபோய் விடுத்து வருக என நீதிமொழிகள் சில ஓதி உணர்த்தினாள். அவ்வாறே அவன் யாதுஞ் செய்யாது பொழிலிடைக்கொணர்ந்து இவளை வைத்துப் போனான். இவளைக் காணாமையால் பவதத்தன் கடுந்துயரடைந்து கலங்கி பதைத்து கண்டவிடங்களிலெல்லாம் கரைந்து தேடினான். கூடியிருந்தபொழுது குலாவிநின்றவற்றையெல்லாம் நினைந்து நினைந்து நெஞ்சம் உருகினான். நெடிது புலம்பினான். உளங்கலங்கி அன்று அவன் புலம்பியவற்றுள் சில அடியில் வருவன காண்க.

"காதல் மாமன் மடமகளே! கருங்குழல்மேல் வண்டிருப்பினும்,
ஏதமுற்று முரியும் நுசுப்பு என்று உன்னியல்பு எத்துவேன்;
ஓதம்போல உடன்றுடன்று கையரீ ஒண்டாமரைக்
கோதைபோல்வாய்! ஒளிர்தொழிதல் கொம்பே! குணக்குன்றே?

வண்ணத் திங்கள் மதிமுகத்த வாளோ? கருங்கயல்களோ?
உண்ணுங் கூற்றோ? ஒளிவேலோ? போதோ? உணர்கலேனால்;
பண்ணின் தீஞ்சொலாய்! படாமுலைப்பாவாய்! கொடியே! பாங்கின்
ண்ணுந்தேனே! அமிர்தே! என் இன்னுயிரே! எங்கணையோ?

மீன் என்றது நட்சத்திரங்களை. மீன்களும் இயல்பினவாதலால் இவை மீன் என நின்றன. "அங்கண் திங்கள் பன்மீன் அரும்பியவான்" (இராமாயணம்) என்புழி இப்பொருட்டாதல் காண்க. "மச்சப் பெயரும் வானத் துடுவும், திக்கினை காணும் மீன் எனச் செப்புவர்" (பிங்கலந்தை). மீன் என ஒருமை வாசகமாயுரைத்திருப்பினும் கலங்கிய என்பதும் பாலினை நோக்கிப் பன்மை கொள்ளப்பட்டது. வான்மீன்கள் மதியைத் தமக்குத் தலைமையாக வுடையனவாதலால் அதனை அகலாது புடைசூழ்ந்து ஆகரித்து நிற்கும்; அந்நிலையினையுடைய அவை மடந்தை முகத்தோடு மலைவுதோன்றியபொழுது உளநிலை குலைபுமாதலால் கலங்கிய என்றார். "வான்மதி யிறந்த மீனினம்போல, பொலிவின் றாகிப் புல்லென் கோலமொடு" (பெருங்கதை) என வருதல் இதில் மதிக்கும் மீனுக்குமுள்ள யுரிமையை யறிக. அறியா = அறியாதனவாய். எதிர்மறைப் பலவின்பால் வினைமுற்று ஈண்டு எச்சமாய் நின்றது. கலக்கத்திற்குக் காரணம் அறியாமையாதலால் "மீன் அறியா கலங்கிய" என்றார்.

இனி, அறியா என்பதை முற்றாகக்கொண்டால் பதியிற் கலங்காத மீனே அறியும்; கலங்கிய மீன் அறியா என்று கொள்க. பதி = இடம்; அஃதாவது ஆகாயம் என்க.

மடந்தை முகம் இனிய பொலிவோடு விளங்கி நிற்றலால் அது மதி என மருண்டேர்ந்தது என்க. "மதிமருள் வாண்முகம் விளங்கப் புதுநலம் ஏர்தர" (கலி 126) என்பதும் ஈண்டு எண்ணத்தக்கது.

மேல், இடையின் நுண்மையை யுணர்த்தினார்; இதில், முகத்தின் ஒண்மையை உணர்த்துகின்றார்.

ஒளிர் மதியும், தலைவியது எழில்முகமும் வேறுபாடு தெரியாதனவாய் வான்மீன்கள் நிலைகலங்கி நின்றன என்பதாம்.

தன் காதலிமுகம் சந்திரனைப்போல் நிலவியுள்ளதாதலால் இது, முகம்; இது, மதி; என்று தெளிவாகத் தெரிந்துகொள்ள முடியாமல் உளங்கலங்கிப் பதி பெயர்ந்து தாரகைகள் தயங்கித் திரிகின்றன எனத் தலைவன் வியந்து மொழிந்தபடி யிது.

"விரித்த செங்கமலத் தண்பூம் பொகுட்டின்மேல் வீற்றிருக்கு மிலாள்
முருக்கிதழ் முறுவற் செவ்வாய் முகிழ்முலைக் கரிய கண்ணாள்
திருத்திழை அறுகு வாரி திருமுகம் திங்க ளாகப்
புரிந்தனன்; காங்கமலர் சிறு புருவமோ இயற்றிலேனோ" (நைடதம்)

தமயந்தியின் முகத்தையும் புருவத்தையும் மதியும் மறுவு மாக நளன் இதில் மதித்து நிற்றல் காண்க.

அழகின் திருமுகம் முழுமதிபோல் பொலிவுறும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பானுமதியால் உணரப்படும்.

## கதை.

பானுமதி என்பவள் துரியோதனனுடைய அருமைத் திருமனைவி. இவள் உருவிலும் அறிவிலும் உயர்நல முடையவள். பல கலைகளிலும் வல்லவள். சூது, சதுரங்கம், சொக்கட்டான் முதலிய விநோத ஆடல்களில் இவள் மிகவும் கைதேர்ந்தவள். வில்லாடலில் பல்லாயிர வீரர்களை ஒருங்கே வெல்லல் எளிது; வல்லாடலில் இவளை யாதும் வெல்லல் அரிது; என்று கன்னன் ஒருமுறை இவளது மதிவன்மையை வியந்து சொல்லாடியுள்ளான். வல்=சூது. கொடுமையும் தறுகண்மையு முடையனாயினும் துரியோதனன் இவளிடம் கனிவும் காதலுமிருந்து இனிதமர்ந்திருந்தான். அவ் வணங்காமுடியோன் இவ் அணங்கோடமர்ந்து இன்பநலங்களை நுகர்ந்து உம்பர்பதிபோல் உவகைமீக்கூர்ந்தான். இவளது உறுப்பு நலங்களின் சிறப்பு நிலைகளை உவந்து புகழ்ந்தான்.

" மடலவிழ் கமலப்புத்தேள் வடிவினை அமைத்து, வெய்ய
கடமுலை அமைப்பமாதின் உறுப்பலால் தாமின்றென்று,
இடையினுக்கு அமைத்தகூற்றை எடுத்தெடுத்து அமைத்தலாலோ
கொடியெனத் தேய்ந்து தேய்ந்து குறைந்தது மருங்குல்தானே"

என்றபடி சுருங்கியிருந்த இவளது இடையிலும் நடையிலும் உரையிலும் செயலிலும் ஈடுபட்டு அவன் உளமுருகி நின்றான். இங்ஙனம் நின்று வருங்கால் வசந்தகால வசதியின் பொருட்டு தன்நகர் மருங்கிருந்த உவவனம் புகுந்து இவளோடுவந்து அவன்

காதலர் புனைந்து மொழிவர் என்பதை உலகம் இன்பமாய் உணர்ந்து நின்றது.

மங்கைமுகங் கண்டேன் மதியென்று முன்மருண்டு
சங்கையுற்று நின்றேன் தளர்ந்து.

தலைவி முகம் கலைமதியினையதென்பது இதனால் கூறப்பட்டது.

**1117.** மானனையினைமுகம்போல் வானமதி யில்லையென்றே
கோனிகழ்ந்து நின்றான் குமரேசா—மேனி
அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் போல
மறுவுண்டோ மாதர் முகத்து. (எ)

இ—ள்.

குமரேசா! மானனையின் முகத்திற்கு மதியும் ஒவ்வாது என்று ஏன் உதயணன் உவந்து சொன்னான்? எனின், அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் போல மாதர் முகத்து மறு உண்டோ என்க.

இது, மதியினும் முகம் சிறந்ததென்கின்றது.

அறுவாய் = அறுபட்ட இடம்; என்றது கலை குறைந்த பாகத்தை. அவிர்தலுக்குமுன் நிறைதலை வைத்தது அந்நிறைவு மதியின் பூரண ஒளிக்குக் காரணமாதல் கருதி.

அவிர்மதி = ஒளிர்கின்ற சந்திரன். அவிர்தல் = ஒளிர்தல். நிறைந்தமதி; அவிர்மதி எனத் தனித்தனியும் காண்க. நிறைந்திருந்தாலும் மேக முதலியவற்றால் மறைந்திருப்பின் ஒளிராதாதலால் அத்தகைய தடை ஏதும் இல்லதென அடை அதன் நிலையுணர்த்திநின்றது.

மறு = களங்கம். உண்டோ என்றது இல்லை என்றபடி. அறுவாயையும், நிறைவையும், மறுவையும் சுட்டிக் கூறியது அம் மதியின் குறைபாடு காண. இங்ஙனம் இழிவான மதியினை உயர்வான தலைவியின் திருமுகத்திற்கு உவமை கூறுதல் அறிவாகாதென்பதாம்.

மேல், மடந்தை முகத்தை மதியென மீன்கள் மயங்கிச் சென் றன என்றார்; இதில், அது மறுவுடைய மதியாகலான் மறுவற்ற இவள் முகத்தோடு இணையாகா தென்கின்றார்.

கலை குறைந்த இடம் நிரம்பி ஒளிர்கின்ற மதியின் கண் களங்கம் இருத்தல் போல மாதர் முகத்தில் மறுவின்மையால் மதி இதற்கு அது ஒவ்வாதென்பதாம்.

வட்டமாய் அளவொத்து ஒளிதவழ்ந்து இனிய கிரணமு டையதாய் எவர் கண்ணுக்கும் இன்பம் பயந்து நிற்கும் அழகு புடைமையால் சந்திரனை மாதர் முகத்திற்கு உவமையாக நூலோர் ஓதி வருகின்றனர்.

இராம இலக்குவர்கள் விசுவாமித்திரரோடு மிதிலை வீதி வாய்ச் செல்லுங்கால் மேன்மாடங்களில் பலகணிகள் வாயிலாய்ப் பார்த்து நின்ற பெண்களைக் குறித்துக் கூறியிருப்பது,

"வாளரம் பொருதவேலும், மன்மதன் சிலையும், வண்டுங்
கேளொடுகிடந்த நீலச்சுருளும், செங்கிடையும், கொண்டு
நீளிருங் களங்கம் நீக்கி, நிரைமணிமாட நெற்றிச்
சாளரந்தோறுந் தோன்றும் சந்திரவுதயங்கண்டார்"

என்றார் கம்பர். மாதர் முகத்தை வரைந்து காட்டும் இத னழகு அமைதிகளை ஆய்ந்து அறிந்து கொள்க.

பண்டுதொட்டு இங்ஙனம் உவமையாய் வந்த மதிக்குச் சில குறைகளைக் காட்டித் தன் காதலி முகத்திற்கு அது இணையாகா தெனக் காதலன் இதில் உரைத்து நிற்கின்றான்.

குறைதல் வளர்தல் மறைதல் மறுவுற்றிருத்தல் ஆகிய குற் றங்களை என்றுமுடைய சந்திரனை யாதொரு குற்றமுமின்றி யாண்டுங் குணமே நிறைந்துள்ள தலைவி முகத்திற்கு ஒப்பாக் கூறல் தப்பாம் என்றபடி.

கலைகள் குறைந்துள்ள பொழுது ஒவ்வாதென்பது சரி; அவை பூரணமாய் நிறைந்து ஒளிதிகழ்ந்து நிற்குங்கால் மதியொக்கு மன்றோ? என்பாரை நோக்கி அப்படியாயினும் அதனிடத்தில் மறுவிருத்தலால் எப்படி ஒப்பாம்? என்பான் "மாதர்முகத்து

மறுவுண்டோ" என்று விசயமாக வினவி விடுத்தான். குறைந்தாலும் ஒவ்வாது; நிறைந்தாலும் ஒவ்வாது; என மதியை இவ்வாறு அறைந்து ஒதுக்கினன்.

"புறந்தாழ் குழலுமை பங்காளர் வெங்கைபுரத்தர் வெற்பிற்
குறைந்தால் இவள் நுதல் ஒவ்வாய்; நினது குறை நிறைந்தால்
சிறந்தாயிழைமுகம் ஒவ்வாய்; விளங்குந் செழுங்கலையால்
நிறைந்தாலென்? அன்றிக்குறைந்தாலென்? எங்கட்கு நீ மதியே"
புறம் = பின்பக்கம். (திருவெங்கைக்கோவை).

என்ன வகையாக உன்னி நிமிர்ந்தாலும் என் சதி முகத்திற்கு நீ ஒவ்வாய் என மதியை நோக்கி ஒரு பதி இதில் உரைத்திருக்கும் அழகைப் பார்க்க.

"பருந்தொன்று கூறிலை வேற்படை வாணன் பரிமளப்பூஞ்
செருந்தொன்று சோலைத் தென்மாறையன்னீர் ! செழுந்திங்கள் உங்கள்
முருந்தொன்று கோபமுகங்கண்டு நாணி, முயல் மறுத்தீர்
மருந்தொன்று நாடியன்றோ வடமேருவலங் கொள்வதே"

நின்முகம் கண்டு நாணி முயலாகிய மறுவைத் தீர்க்கும் பொருட்டு மருந்து தேடி மதி அலைகின்றது எனத் தன் காதலியிடம் ஒரு காதலன் இதில் மொழிந்து நிற்றல் காண்க.

மதியினுமிக்க எழில்நலமுடையதாய் மங்கையர் முகம் ஒளிர்தரும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மானனீகையால் உணரப்படும்.

## கதை.

மானனீகை என்பவள் கோசலதேசத்து அரசன் திருமகள். கலை பல பயின்றவள்; சிறந்த அழகி; பெருந்தன்மை வாய்ந்தவள். இவள் பிறந்து ஏழாண்டு நிறைந்திருந்தபொழுது பாஞ்சால தேசத்து மன்னனுக்கும் இவள் தந்தைக்கும் பெரும்போர் மூண்டது; அதில் அரசு அழிந்துபோனதால் இவள் கதியிழந்து நின்றாள். முடிவில் வத்தவதேயத்து மன்னன் தேவியாகிய வாசவதத்தையை யடைந்தாள்; இவளைக் கண்டவுடனே அன்புமீக்கொண்டு காமர் நிலையை வியந்து தன்னுடன் வைத்துத் தகவுடன் அவள்

உபசரித்தாள். இவளும் அவளுக்கு இன்னுயிர்த் தோழியாய் நின்று இதப்பல புரிந்து அங்கு இனிதமர்ந்திருந்தாள். பருவம் நிரம்பி எழில்நலங் கனிந்து அந்தப்புரத்தில் அரசிகளோடு இவள் இருந்துவருங்கால் அந் நகரில் பந்தடி விழா ஒன்று நிகழ்ந்தது. அவ் ஆட்டத்தில் கைதேர்ந்திருந்த அரசிளங்குமரிகள் பலர் அங்குவந்தடைந்திருந்தார். அரண்மனைக்கருகே அகன்ற வெளியில் ஆட்டம் தொடங்கியது; அனைவரும் ஆடி முடிந்தபின் முடிவில் இவள் எழுந்தாள்; பந்தாடலின் இலக்கணத்தையும் அதன் பான்மையையும் குறித்து எவரும் தெளிய இனிது பேசினாள். பின்பு இருபத்தொரு பந்துகளை நன்கு ஆய்ந்தெடுத்து இரண்டு கைகளாலும் எற்றி ஆடினாள். இவள் ஆடிய ஆடல் யாவரும் வியக்கத்தக்கது. சிறிது அடியில் வருவது காண்க.

“காம தேவியர் காண்பனர் உவப்பப்
பூமி தேவியிற் புறப்போவனள்போல்
பைய எழுவோள் செய்தொழிற் கேற்பக்
கையும் காலும் மெய்யும் இயையக்
கூடுமதி முகத்திடைப் புருவமும் கண்ணும்
பீடு பெற இயைந்து பாடலைத் தெளிவும்
ஆடன் மகளிர் அதிசயம் வியப்பவும்
பேசிய இலயம் பிழையா மரபிற்
பாடல் மகளிர் பாணி அளப்பவும்
மருவிய கதியிற் கருவிக் கூற்றோர்
இருபதம் பெயர்க்கும் இயல்கொண்டாடவும்
தேவியர் இருவரும் திகைத்தனர் இருப்பவும்
காந்தள் மூகிழ்நனி கவற்று மெல்விரலின்
ஏந்தினள் எடுத்திட்டு எறிவுழி முன்கையிற்
பாய்ந்தவை நிலத்தினும் விசும்பினும் தூங்கிச்
சூறை வளியிடைச் சுழல்விலை போல
மாறுமா றெழுந்து மறிய மறுகி
ஏறுப, இழிப, ஆகாயம் நிற்பன,
வேறுபடு வனப்பின் மும்மைய வானவை,

அடி-முதல் முடி-வரை இறைபல திருத்தியும்,
படிக்குவன் றெழுப்பியும், கடைக்காத்து எனவளியும்,
தேமலர்க் கொடையால் திருத்திறம் பிசைத்தும்,
பந்துவரல் நோக்கியும், பாணிவர கொழுத்தும்,
சிம்புளித் தடித்தும், கம்பிதம் பாடியும்,
ஆழியென வருட்டியும், தோழியொடு பேசியும்,
சாரிபல ஓட்டியும், வாழியென வாழ்த்தியும்,
அந்தளிர்க் கண்ணி அவந்திகை வெல்கெனப்
பைந்தொடி மாதர் பற்பல வகையால்
எண்ணாயிரங் கை எற்றினள்" (வத்தவகாண்டம்).

இவ் ஆடலில் இவள் ஆற்றியிருக்கும் அற்புத நிலைகளை இதில் ஊன்றிப்பார்க்க. கட்டுறுதோடு திகழ்ந்து இங்ஙனம் கை செய்து நின்ற இவளை உதயணன் கண்டான்; அதிமோகமுடையனாய் உள்ளுருகி நின்றான். இவளது இளமையும் எழிலும் அவயவங்களின் அமைதியும் அதிசயநிலையில் அமைந்திருந்தன.

"மானே, அன்னம், மயிலே, மால்வரைத்
தேனே, பவளம், தெண்கடல் இத்திலம்,
கயலே, காந்தள், புயலே, பொருவில்
பையே, பொற்றொடி, படைக்கலம் யானைக்
கையே, குருமணை, கதிர்மதி, வேயே,
நோக்கினும் நுதலினும் மாக்கேழ் அவிர்ந்த
சாயல் வகையினும் சால்புடை மொழியினும்
ஆசில வாயினும் அணிபெற நிரைத்த
பல்லினும் கண்ணினும் மெல்விரல் வகையினும்
நறுமென் குழலினும் செறிமென் புருவத்து
ஒழுக்கினும் இழுக்கா அல்குல் தடத்தினும்
மெல்லிய இடையினும் கல்லணி குறங்கினும்
குற்றமில் முலையினும் முகத்தினும் தோளினும்
மற்றவை தொலையச் செற்றொழி திகழத்
தனக்கமை வெய்திய தலையாய் கிண்கிணி
வனப்பெடுத் துரைஇ வையகம் புகழினும்
புகழ்ச்சி முற்றாப் பொருவரு வனப்பில்
திருக்கண்டன்ன உருக்கிளர் கன்னி

கோலத் தாசன் கோமகன்" எனவுந் இதில் இவள் தன் நடை சாயல் சொல் வாய் முதலியன மான் அன்னம் மயில் தேன் பவளமுதலியவற்றை வென்று விளங்கினவென நிரல் நிறை யாக வைத்து விளக்கியிருக்கும் அழகை ஆய்ந்து அறிந்துகொள்க. இன்னவாறு பேரெழிலோடு விளங்கி நின்ற இவளை அம் மன்னன் தனக்கு இன்னுயிர்த் துணையாய் இசைந்துபரிவோடு மணக்க வேண்டினான். தன் பட்டத்துத் தேவியுடன் அந்தப்புரத்தில அமர்ந்திருக்கும் இவளை அவன் கலந்து மகிழ முயன்ற திறம் மிகவும் வியக்கத்தக்கது. தனது மனைவியாகிய வாசவதத்தை யின் தெற்றியில் பவளமாடையில் தன் காதற் கருத்தைக் குறித் தெழுதி "இன்று யான் புனைந்த கோலம் உனக்கு நன்கமைந் துள்ளதா? என்று உன் அண்ணன் மகளிடம் காட்டி வருக" என்று அவன் எழுதி விடுத்தான். யாதொரு குறும் அறியாத அம் மாதரசி இவளிடம் கொணர்ந்து காட்டினாள்; அம் மொழியை நன்கு பயின்றிருந்தாளாதலால் அதனை உற்று நோக்கி புன் மையை யுணர்ந்து இவள் உள்ளம் நாணினாள்; ஆயினும் கோலம் நன்கமைந்துள்ளது எனக் கள்ளமுறச் சொல்லித் தன் கருத்தை யும் அவன் முகத்தில் திருத்தி விடுத்தாள்.

"பந்தடி த்தாறுமப் பறையடி யுற்றஎன்
சிந்தையும் சிலையும் செப்புதற்கு அரிதெனச்
சேமமில்லாச் சிறுதுன் மருங்கிற்கு
ஆதார மாகி யதனொடு தளரா
வருந்தனக் தாங்கி அழியும் என் நெஞ்சிற்கு
பெருந்துயர் தீர்க்கு மருந்து தானே
துன்றிய வேற்கண் தொழிலும் பொய்யறுகும்
பைங்கொள் கொம்பாய் படர்தரும் இக் கோய்,
ஆழ்புனற் பட்டோர்க்கு அரும்புணை போலச்
சூழ்வளைத் தோளி! காமக் கடலில்
தாழ வுறுமல் கொள்க தளர்ந்துயிர்
சென்றால் செயல்முறை ஒன்றுமில் அன்றியும்
அடுக்கிய இளமை தலைச்சென்று ஆர்ந்தாக்
கிடைபபதில் இரப்போர்க்கு அளிப்பது நன்று என

விளைத்த வாசகம் நீயின்று எழுக
இடத்து அளவின்மையின், கருத்தறி யோர்க்கும்
பரந்துரைத்து என்னை? பாவாய்! இத்துறை
இரங்கனன் அருள்" என இறைமகன் எழுதி
மெல்லியற்கு ஒத்த இவை எனப் புகழ்ந்து
புல்லினன் தேவியைச் செல்கென விடுதலும்
கோயில் குறுக ஆய்வளை அணுகலும்
காவலன் புனைந்தது காண்கெனக் கண்ட
காசறு சிறப்பிற் கோசலன் மடமகள்
வாசகம் உணராக் கூசினள் ஆகிப்
பெருமகன் எழுதிய பேரலங்காரத்
திருமுகம் அழகுடைத்தென மருட்டினள்;"

இங்ஙனம் மருட்டிய இவள் மறுநாள் இரவு இன்ன இடத்தில் வருக என்று தன் குறிப்பை அவ் அரசி முகத்திலேயே எழுதி விடுத்தாள். அவ் அரசன் கண்டு பெரிது மகிழ்ந்து சிறிது பொழுது தழுவியிருந்து அவளை அகல விடுத்துக் குறித்தபடியே மறுநாள் நடு யாமத்தில் அவ் இடத்தை யடைந்தான். இவள் அங்கு எய்தியிருந்தாள்; பெரு மகிழ்வோடு அவன் மருவி மகிழ்ந்தான். "விருப்பொடு தழுவி நடுக்கம் தீரக், கூடிய வேட்கையின் ஒருவர்க்கு ஒருவர், ஊடியும் கூடியும் நீடு விளையாடியும்" உவந்து முயங்கி இருவரும் மகிழ்ந்திருந்தார். களவு நிலையில் இவ்வாறு அளவிலின்பம் நுகர்ந்து வருங்கால் இவளது எழில் நலங்களை அவன் வியந்து புகழ்ந்தான். ஒருநாளிரவு சந்திரனை நோக்கினான்; அது களங்கமுற்றிருத்தலால் யாதொரு களங்கமுமில்லாத இவளது சுந்தர முகம் அதனினும் சிறந்துள்ளதென உவந்து மொழிந்தான். "உள்ளம் கறுத்தாய் உடல் வெளுத்தாய் ஓமதியே! கள்ளமில் இம் மங்கை முகம் கண்டு" என்று உள்ளே இகழ்ந்தான். அறுவாய் நிறைந்த அவிர்மதி மறுவுடையதாதலால் அது மாதர் முகத்துக்கு ஒப்பாகாதெனக் காதலர் புகழ்ந்து மொழிவர் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்துநின்றது.

மறுவுடைய திங்களையும் மாதுமுகம் ஒக்குமெனல்
அறிவுடைமை யாகா அறி.

மங்கைமுகம் மதியினும் சிறந்ததென்பது இதனால் கூறப்பட்டது.

1118. இந்து மதியிவர் வாயின் முகம்போல வாண்மதி நீயென
சொக்கெருணியில் என்றான் குமரேசா — சந்தமுடன்
மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல்
காதலை வாழி மதி. (அ)

இ—ள்.

குமரேசா! இந்த மதி முகம்போல் ஒளிவிடுமோ என்று அவன் ஏன் உவமைக்கு நின்றான்? எனின், மாதர் முகம்போல் ஒளி விட வல்லையேல் மதி காதலை வாழி என்க.

இது, நிலவின்முகம்போல் ஒளிதர வேண்டியது.

வல்லையேல் = வல்லையாயின். வல்லையேல் வாழி என்றமையால் இல்லையேல் வீழ்தி என்பது தோன்றும்.

காதலை = காதலையுடையை; அங்ஙனமாயின் என் பிரியத்தை உடைத்தாயிருப்பை. இது, ஐகார விகுதி பெற்றுவந்த முன்னிலை யொருமை வினைமுற்று.

"ஐ ஆய் இகர ஈற்ற மூன்றும்,
ஏவலின் வருமெல்லா ஈற்றவும்,
முப்பால் ஒருமை முன்னிலை மொழியே." (நன்னூல்)
என்னும் இயல் விதியையும் ஈண்டு எண்ணிக்கொள்க.

வாழி = வாழ்வாயாக. இங்ஙனம் வாழ்த்தியது மாதர் முகம்போல் ஒளிவிடமுடியாமல் இழிந்து நிற்கின்ற நீ அருங்கலம் புரிந்தேனும் அங்ஙனம் சிறந்து திகழுக என உரிமையோடு உவந்து கூறியதுபோல் உள்ளூர இகழ்ந்து மொழிந்தபடி.

மறுவுற்றுத் தேயும் இயல்பினையுடைமையால் மாதர் முகத்தோடு ஒப்பாகாதென மேல் மதியினை இகழ்ந்து நின்ற தலைமகன் இதில் அதன் ஒளியினை இகழ்ந்து மொழிகின்றான்.

ஓ சந்திரனே! மாதர் முகம்போல் நீ ஒளிவீச வல்லையாயின் என் காதலையுடையை யாதி என்பதாம்.

தன் காதலி திருமுகம்போல் சுடர்மதி ஒளி செய்யாது எனக் காதலன் உணர்ந்து நின்றான் ஆதலால் அதனை நோக்கி ஒளிவிடவல்லையேல் என்றான்; அங்ஙனம் வல்லையாயின் என் அன்பைப் பெற்று என்றும் நீ இன்புற்று வாழ்வாய் என்பான் "காதலை; வாழி!" என்றான்.

இரவில்மட்டும் தோன்றிச் சில காலம் ஒளிசெய்து மதி மறைந்துபோம்; மாதர் முகம், இரவும் பகலும் ஒருபடியாக நின்று என்றும் ஒளிசெய்து நிற்கும் ஆதலால் அது முகம்போல் ஒளிவிடாததாயிற்று; ஆகவே என் காதலை நீ அடையாய் என அவன் இவ்வகை ஓதி நின்றான்.

இரவுக் குறியில் வந்து மீளும் தலைமகன் நிலவை நோக்கி அஃது இன்னொளி பரப்பி நிற்கும் இயல்பினை வியந்து, உடனே தன் தலைவி திருமுகத்தை அதனோடு இணைத்தெண்ணினான்; என்னையே தன் உள்ளத்தை அம் முகம் கொள்ளைகொண்டது போல் அது கொள்ளையில்லையாதலால் என் உள்ளக் காதலி முன் ஒள்ளிய நிலையில் நீ ஒழிவுற்றாய் என அவ் வெள்ளை மதியைப் பார்த்து இங்ஙனம் அவன் எண்ணி நின்றான் என்க.

ஒளியமைதி முதலிய பல நலங்களும் ஒருங்கமைந்து நின்றாலன்றி மாதர் முகத்தை மதி ஒத்து நில்லாதென்பதாம்.

"கொண்டலின் குழவி, ஆம்பல், குனிசிலை, வள்ளை, கொற்றக்
கெண்டை, ஒண்தரளம், என்றிக் கேண்மைய கிடந்த திங்கள்
மண்டலம் வதனம் என்று வைத்தனன் விதியே; நீ அப்
புண்டரிகத்தை யுற்ற பொழுதது பொருந்தித் தேர்வாய்."

(இராமாயணம்)

இது, சீதை முகத்தைக் குறித்து அநுமானிடம் இராமன் உரைத்தது. இதில் குறித்துள்ள உருவகங்களை யூன்றி யுணர்ந்து கொள்க.

"பிறையாயும் மங்கை நுதலுக்கு ஒவ்வாய்; பிறைபோய்க்கலையின்
நிறையாயபோதும் முகத்துக்கு ஒவ்வாய்; நெடுங் காவிரிப்பூந்
துறையாதி சங்கம ராச குலோத்துங்க சோழன் வெற்பில்
மறையாநிற்பாய்! வருவாய்! என்ன நாணம் மதி யுனக்கே?"

(குலோத்துங்கன் கோவை).

அடுகணை வேனிலான் இன்னமுது கோல் தோய்த்துத் தீட்டும்
படிவமோ? உயிரை வாட்டும் பாவைதன் வடிவந்தானே"

என்ற வெல்லாம் இன்னவாறு பல பன்னி யுளைந்தான். முதிர் காதலுடையனாய் எதிர்நோக்க நாணி இவள் முகங் கவிழ்ந்து நின்றாள். இவ் வகை ஆர்வமுற்றிருவரும் அமைந்து பிரிந்தார். பின்பு சுயம் வரத்தில் உலகமறிய இவள் அவனுக்கு மாலை சூட்டினாள். எனக்கெனக் கெனத் தனித் தனி விரைந்து மனக் காதலுடன் அங்கு மருவியிருந்த மன்னர் பலரும் மறுகி நின்றார்.

"தாவறுஞ் சிற்றத்துப்பிற் றறுகண்மால் யானை யன்ன
மேவலர்க் கடந்த வொள்வாள் வேந்தர் கோன் முழவுத் தோள்மேல்
மாவகிர் நெடுங்கண் சூட்டு மாலையே மாலையாகக்
காவலர் முகங்கள் எல்லாம் கமலம் ஒத்திருந்த மாதோ"

என்றபடி வருந்தியிருந்த அவ் அரசர் பலரும் ஒருங்கு திரண்டு இடை வளைத்து அம் மன்னனோடு அடுசமராற்றினர். அவரனைவரையும் அடங்கவென்று அம் மடங்கல் மொய்ம்பினன் இம் மடந்தையோ டெழுந்து அயோத்தியடைந்தான். அவனது பேராற்றலைக் கண்டு பெருமகிழ்ச்சி யடைந்த இவள் உள்ளங் குளிர்ப்ப அவனை உவந்து தழுவிப் புகழ்ந்து போற்றினாள். இணைபிரியா தமர்ந்து இவளது இனிய போகங்களை நுகர்ந்து அவன் இன்புமீக் கூர்ந்தான். "இன்னமிழ் துயிர்த்த செவ்வி இளநிலா உருவு வாய்ந்த, கன்னலங் கனிந்த கோதை நகைமுக வாயில் பெற்றுப், பொன்னவிர் சுணங்கு பூத்த புணர்முலைக் கோடு புல்லிக், கன்னவில் தோளான் காமக் கடலகத் தழுந்தி னானே" என்றபடி இன்ப நலங்களை மகிழ்ந்தனுபவித்தான். இவளுடன் இங்ஙனம் கலந்து களித்து வருங்கால் அரண்மனை யருகே யிருந்த உவவனத்திடை ஒருநாள் இருவரும் உவந்து வீற்றிருந்தார். அவ் அமையம் சந்திரன் உதயஞ் செய்தான். அம் மதி மண்டலத்தை மன்னன் மகிழ்ந்து பார்த்தான். தன் இன்னுயிர்த் துணைவியாகிய இவளது முக மண்டலம் அதனெதிர் பொலிந்து நிற்றலை வியந்து நோக்கி உவந்து மொழிந்தான்.

ஏற்று வியங்கோள் எதிர்மறையில் வந்து வைதற் பொருளை யுணர்த்தி நின்றது.

மதி = சந்திரனே! திரிதல் குன்றல் மிகுதலின்றி விளியில் இயல்பாய் நின்றது. எழிலமைதிகளில் மகளிர் முகத்துக்கு நீ உவமையாய் வரினும் இவள் முகத்திற்கு இணையாவாயா? என்று தன் தலைவியின் பெருமிதம் தோன்றத் தலைமகன் இவ்வாறு வினவுகின்றான். ஒத்தி ஆயின் என்றதனால் ஒவ்வாய் என அவன் உளங்கொண்டுள்ள உண்மை புலன்கொள நின்றது.

மேல், சந்திரனது ஒளியைக் குறித்து உரையாடினான்; இதில், அவன் வெளிவருதலைப்பற்றி மொழிதருகின்றான்.

மதியே! மலர்போலும் கண்களை யுடையாளது முகம் போல நீ ஒத்திருக்கவேண்டுதியாயின் பலரும் காணும்படி தோன்றாதிருப்பாயாக என்பதாம்.

மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையாயின் என் காதலை யடைவாய் எனக் கலைமதியை நோக்கித் தலைமகன் முன் உரைத்து நின்றான்; பிறகே அவ்வாறே ஒளிவிடுகின்றோனாக அவன் வழிபட்டான்; படவே அங்ஙனமாயின் என் காதலியைப்போல் நான்மட்டும் பார்க்கும் வகை வரவேண்டும்; பிறர்காணும்படி வெளிவரலாகாது என மொழிதருகின்றானாதலால் "பலர் காணத் தோன்றல்" என்றான்.

தன் காதலி முகம்போலுள்ள மதியையும் பிறர் காணலாகா தென்று கடிந்ததனால் அவள் பாட்டு இவன் வைத்துள்ள தனியுரிமையும், தலையன்பும் இனிது தெரியலாகும்.

மலரன்ன கண்ணாள் முகத்திற்கு நீ ஒவ்வாய் ஆதலால் பலர் காண நின்று பழிபடுகின்றாய் எனச் சந்திரனைப் பார்த்து இங்ஙனம், சாற்றுகின்றானாதலால் அவனது சிந்தையின் களிப்புத் தெரிய நின்றது.

கண் இடை தோள் முறுவல் முதலியவற்றைச் சிறிது உரைத்துவிட்டு முகத்தைமட்டும் நான்கு பாடல்களால் இங்ஙனம்

ந்த சடி என்னும் மன்னன் இவளை மணந்துகொள்ள விழைந்து மிக முயன்று வந்தான். இவளும் அவனது ஆண்மை மேன்மைகளைக் கேள்வியுற்று அகங்குழைந்து நின்றாள். உழுவலன்புடையராய் இங்ஙனம் உளமுருகி நின்ற இவ் இருவரும் ஒரு நாள் ஓர் இளம்பொழிலிடை எதிர்ந்தனர். இவளது உருவ நிலையைக் கண்டு அவன் உள்ளமுருகினன்.

"யாற்றறலன்ன கூந்தல்; யாற்றுச்
சுழியெனக் கிடந்த சூழிகவில் கொப்பூழ்;
வில்லெனக் கிடந்த புருவம்; வில்லின்
அம்பெனக் கிடந்த செங்கடை மழைக்கண்;
பிறையெனச் சுடரும் சிறுநுதல்; பிறையின்
நிறையெனத் தோன்றும் குறையில் வாண்முகம்;
அரவென அடங்கு மருங்குல்; அரவின்
பையெனக் கிடந்த மைதீர்ந்தல்குல்;
கிளியென மிழற்றுங் கிளவி; கிளியின்
ஒளிபெறு வாயி னன்ன ஒள்ளுகிர்;
வாழையந் தாளொத்த குறங்கின்; வாழைக்
கூம்புமுகி ழன்ன வீங்கிள வனமுலை
வேயெனத் திரண்ட மென்றோள்; வேயின்
விளங்குமுத் தன்ன அளங்கொளி முறுவல்;
காந்தள் முகி ழன்ன மெல்விரல்; காந்தட்
பூந்துடுப் பன்ன புனைவளை முன்கை;" என்றபடி இனிதமைந்திருந்த இவளது எழிலுருவினை விழிகளிப்ப நோக்கி அவன் கழிமகிழ்வெய்தி நின்றான். பின்பு உலகறிய மணந்து உவந்து நுகர்ந்தான். அவன் விழைந்தவாறெல்லாம் அமர்ந்தொழுகி விளியா இன்புடன் இவள் விளங்கி நின்றாள். இன்ப நிலையமான இவளை இன்னுயிரெனப் பேணி அவன் அன்பாற்றி வந்தான். காதல் நிலையோடு இவர் கலந்திருந்தபடியை அடியில் காண்க.

"மாயம் மாயநின்றான் வரை மார்பிடை
மேய பூமகள் போல விளங்கினள்;
ஆயவா முறுவற் றுவர் வாயவள்
வாயுவேகை என்பாள் வளர்கொம்பனாள். (க)

1120. மாசிலாக் காஞ்சனையின் மாணடிகள் பூமிசையும்
கூசிநின்ற தென்னே குமரேசா—ஆசில்
அனிச்சமும் அன்னத்தின் தூவியு மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம். (௰)

இ—ள்.

குமரேசா! காஞ்சன மாலையின் அடிகள் மெல்லிய மலர் மேல் நடக்கவும் ஏன் கூசி நின்றன? எனின், அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர் அடிக்கு நெருஞ்சிப்பழம் என்க.

இது, தலைவி அடியின் நிலைமை கூறுகின்றது.

ஆசு இல் = குற்றம் இல்லாத. பூமிசையும் = மலர் மேலும்.

தூவி = சிறகு. அன்னப் பறவையின் தூவி மிக மெல்லியதாதலால் மென்மைக்கு இனமா அஃது ஈண்டு எண்ண நின்றது. குயில் ஒலியாலும், மயில் தோகையாலும் விசேடிக்கப் படுதல்போல் அன்னம் தூவியால் சிறப்பித்துச் சொல்லப்படும். "தூவி அன்னம் தம் இனமென்று நடைகண்டு தொடர" (இராமாயணம்) என்புழி இது வந்திருத்தல் காண்க. இலவம் பஞ்சினும் இத் தூவி குணமிக வுடையதாதலால் அரிய அமளியில் உரிமையாக அமைக்கப்படும். "சிறுபூளை வெண்பஞ்சு செம்பஞ்சு சேணம் உறுதூவி சேக்கையோரைந்து" என்பதறிக. "தூய மென்பஞ்சி அன்னத்தூவி ஊறினிய செய்யும், ஆய் மயிர் முதல மூவைந்தடுக்கிய அமளி சேர்ந்தார்" (நைடதம்) என நளதமயந்தியரின் சயன அணை குறிக்கப்பட்டிருத்தல் காண்க. அன்னத் தூவியினும் அனிச்ச மலரை முன்னர்க் குறித்தது மென்மை நன்மைகளில் இயல்பாகச் சிறந்து நிற்கும் அதன் மேன்மை கருதி. இவ் அதிகாரத்துள் முதலினும், இடையினும், கடையினும் இது குறிக்கப்பட்டிருத்தலைக் கூர்ந்து நோக்குக.

தலைவியின் உருவநலங்களைப் பலபடியாக வியந்து இதுவரை உவந்து பாராட்டிவந்த தலைமகன் அவளது அடியின் தன்மையை முடிவாக இதில் புகழ்ந்து நிற்கின்றான்.

"பஞ்சி, அடா னிச்சம் நெருஞ்சி யீன்ற பழமாமெலென்று
அஞ்சுமல ரடிகள் அரங்கண் டன்னவருங் காட்டுட்
குஞ்சித் தசைந் தசைந்து குருதிகான்று வெய்துயிரா
வஞ்சியிடை நுடங்க பயில்கை வீசி நடந்ததே" (சிந்தாமணி)

அடிகள் குறித்ததை இஃது அடிபொற்றிவந்திருத்தல் காண்க.

சிறந்த குல மகளிரின் அடிகள் செம்பஞ்சுக் குழம்பு முதலி யன ஊட்டப் பெற்று மிக மிருதுவாயமைந்திருக்கும் ஆதலால் அவை இங்ஙனம் புனைந்து கூற நின்றன. "அஞ்சாயல் மட வன்னத் தனி தூவி யதனுலும் அனிச்சத்தாலும் பஞ்சாலும் அடிவருந்தும்பதத்தாள்" (அரிச்சந்திரபுராணம்) எனச் சந்திர மதியின் பாதங்கள் புகழப்பட்டிருத்தல் காண்க.

"அட்மெல் அனிச்சம் மலரும், அன்னத் தூவியும்
வெம்மையாம் என்றஞ்சி மெல்லமிதியாதே
பொம்மென் இலவம் பூம்போதன நின்னடிபோற்றி
இம்மென் கலையாரிடுவென்றேத்த ஒதுங்கினள்" (சிந்தாமணி

தூவியின் நொய்ய பஞ்சும், அனிச்சமா மலரும், அன்னத்
தூவியு மிதிக்கிற்சேர்ந்து துளங்குறும் அடிகள் என்றால்
நாவியங் குழலின்மாது நடந்திட ஞாலம் ஆங்கோர்
பூவதோ? அது பூவன்றேல் பொன்னடி பொருந்துமோதான்?
(கந்தபுராணம்)

அடியின் மென்மையைக் குறித்து அடிகள் சுட்டியுள்ள படியே இவை ஒட்டிவந்துள்ளன காண்க. தான் கலந்து நுகர் ந்த காதலியின் அடிநலனைக் காதலன் உவந்து பாராட்டியிருத்த லால் இது நலம்புனைந்துரைத்தலாயிற்று. அடிநலங்கூறி முடிவு செய்தலால் இது முடிவில் வைக்கப்பட்டது.

அடிமென்மை கூறி இவ்வாறு வருவதனை அகப்பொருட் டுறையில் உடன்போக்கு மறுத்தல் எனவும், அடிநினைந்திரங்கல் எனவும் உரைப்பர். அஃதாவது களவு நிலையில் கலந்து மகிழ் ந்த தலைமகளை உடனழைத்துக்கொண்டுபோய் மணந்துகொள்க எனத் தலைமகனைத் தோழி வேண்ட அதற்கு அவன் இசையாது

ஷிய இதனால் அவளது மேனியின் மென்னீர்மையும், அவள் மாட்டுத் தலைவன் வைத்துள்ள காதலின் நன்னீர்மையும், நன்கு புலனாம். தன்னுடன் வனத்துக்கு வருவதாகச் சீதை உரைத் தெழுந்தபொழுது "கல்லரக்கும் கடுமைய வல்லநின் சில்லரக் குண்ட சேவடிப்போது" என்று இராமன் இரங்கிச் சொல்லிய தும் ஈண்டெண்ணத்தக்கது.

காந்தருவமுறையில் கலந்து நின்ற ஓர் தலைவன் தன் தலைவியை ஊரறியாவகை ஒருமுறை உடனழைத்துச் சென்றான்; செல்லுங்கால் வழியிடையே கருவேல மரங்களின் கீழ் முள்ளுகள் மிக மிடைந்திருந்தன; அவை யாதும் படாவகை தன் காலடிமேல் அவள் அடிவைத்து வரும்படி பணித்து அவன் முந்துறச் சென்றான்; அவளும் அவ்வாறே அமைந்து போனாள். அப்போக்கினை நோக்கி நின்ற புலவனொருவன் அவர் தம் காதல் சீர்மையைக் கருதி வியந்தான். கவி ஒன்று பாடினான். அடியில் வருவது காண்க.

"நாலடி வள்ளுவராமே? இப்பாலை நடக்க பெருங்
காலடிமேலடி மானடியே! கட்டுரவிற்பட்டுப்
பாலடிசில் வெண்ணெய் உண்டோனரங்கன் பனிவரையில்
வேலடி முள்ளுக்கு உடாயமிட்டேகும் விரையுறவு நன்றே"

இரண்டுபேர்கள் நடந்துசேறலால் நாலு அடிச்சுவடுகள் படவேண்டியிருப்ப ஈரடியே பதிந்துள்ளன; அரங்கன் வரையில் அடிமானே! நாலடி வள்ளுவர் ஆமே? என விசயமாக வினவி அவர்தம் அன்பு நிலையை இதில் விளக்கியிருத்தல் காண்க. நாலடியாரையும் திருக்குறளையும் சிலேடைவகையில் இணைத் துணர்த்தியிருக்கும் நயங்களை இதில் ஊன்றி யுணர்ந்துகொள்க.

தலைவியின் பாதங்கள் மலரினு மெல்லியன என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை காஞ்சனைபால் உணரப்படும்.

கதை.

காஞ்சனைமாலை என்பவள் அவந்திநாட்டிலிருந்த அஞ்சனன் என்னும் குறுநில மன்னனுடைய அருமைத் திருமகள். மன

நலமுடையவள். கலை பல பயின்றவள். யாழில் வலம் மிக்கவள், எப்பொழுதும் இன்சொல்லாடும் இயல்பினளாதலால் "கரும்படு தீஞ்சொற் காஞ்சனை" என யாவரும் வாஞ்சையுற்று இவளை அழைத்து வந்தார். மூத்த மகளிரும் இவளது உருவநலங்களை உவந்து நோக்கி வியந்து நின்றனர். அந் நாட்டு அரச குமரியாகிய வாசவதத்தை என்பவள் இவளைப் பேரன்புடன் பேணி நின்றாள். இவளும் அவளுக்கு இன்னுயிர்த் தோழியாய் இதம்புரிந்து வந்தாள். அவள் உதயணனை மணந்து இன்பம் நுகர்ந்து வருங்கால் இடையே தீயில் போயினாள் என யூகி செய்த மாயச் சூழ்ச்சியை மெய்யென நம்பி இவள் மறுகிப் பதைத்து உருகிப் புலம்பினாள். அன்று இவ்வந்நேரி புலம்பியன மிக்க நெஞ்சிரக்க முள்ளன. அயலில் வருவன காண்க.

"தோழியைக் காணாள் சூழ்வளர் சுற்றியள்
செவ்விய நன்கையின் அவ் வயி றதுக்கா
காவலர் தண்பொழில் கண்ணுறோட்டிய
காவலன் மகளே! கனங்குழை மடவோய்!
மண்விளக்காகி வரத்தின் வந்தோய்!
பெண்விளக்காகிய பெறலரும் பேதாய்!
பொன்னே! திருவே! அன்னே! அரிவாய்!
நங்காய்! நல்லாய்! கொங்கார் கோதாய்!
வீணைக் கிழத்தி! வித்தக வுருவி!
தேனேர் கிளவி! சிறுமுதுக் குறைவி!
உதையண குமரன் உயிர்த்துணைத் தேவி!
புதையழ லகவயிற்புக்கனை யோவெனக்
கானத் தீயிடைக் கணமயில் போலத்
தானத் தீயிடைத் தானுழன்று ஏங்கிச்
சாணல் செல்லாள் காஞ்சனை புலம்பிப்
பூசல் கொண்டு புறங்கடைப் புரளும்" (பெருங்கதை)

இதனால் அவள்பால் இவள் வைத்துள்ள ஆர்வ நிலையும், உள்ளப் பண்பும், உயிர்க்கிழமையும் இனிது உணரலாகும். இன்னம் வருந்தியுழன்ற இவள் பின்பு அவள் சுகமாயிருந்துள்ளா

என்பதை யறிந்து பெருங் களிப்புடன் சென்று அந் நங்கையைத் தழுவி உவந்து போற்றி உண்மையை உசாவி உடனமர்ந்திருந்தாள். இப்போழ்து தனியே ஒருநாள் பொழிலிடை உலாவி வருங்கால் வாசவன் என்னும் அரசிளங் குமாரன் கண்டு அதி மோகமுடையனாய் உளமுருகி நின்றான். அக் காட்சியால் இவளும் காதல்மீக் கூர்ந்தாள். கூடவே காந்தருவ முறையாயின் இருவரும் கலந்து மகிழ்ந்தார். பின்பு உலகறிய மணந்து இவளை உவந்து பாராட்டி நுகர்ந்து வந்தான். இவளது இன்ப நுகர்ச்சியில் அவன் மிக இழிந்திருந்தான்.

"களிக்கயல் பொருது நீண்டு காதுப்பினை அளக்கும் வேற்கட் டுளிப்புயல் மின்னினன்னாள் தொண்டைவாய் அமுதம் மாந்தித் தளிர்த்தெழு உவகை பொங்கத் தண்ணறுஞ் சாந்த மார்பன் அளப்பருங் களிகொள் காமக் கடலகத் தழுந்தினானே" என்ற படி அழுந்திக்கிடந்த அவன் சில திங்கள் கழிந்தபின் பொருளீட்டங் கருதி மறுபுலம்போக நினைந்தான். அவன் நினைவினை யறிந்த தோழி இவளைத் தனிவிட்டுப் போதல் தகாதெனத் தடுத்து இவளது அருமை பெருமைகளை இனிதெடுத்துரைத்தாள்.

"தொலைவாகி இரந்தோர்க்கொன் றீயாமை இழிவென
மலையிறந்து செயல் சூழ்ந்த பொருள் பொருளாகுமோ?
நிலைஇய கற்பினாள் நீ நீப்பின் வாழாதாள்
முலையாகம் பிரியாமை பொருளாயி னல்லதை;

இல்லென இரந்தோர்க்கொன் றீயாமை இழிவெனக்
கல்லிறந்து செயல் சூழ்ந்த பொருள் பொருளாகுமோ?
தொல்லியல் வழாஅமைத் துணையெனப் புணர்ந்தவள்
புல்லாகம் பிரியாமை பொருளாயி னல்லதை;

இடனின்றி இரந்தோர்க்கொன் றீயாமை இழிவெனக்
கடனிறந்து செயல்சூழ்ந்த பொருள் பொருளாகுமோ?
வட மீன்போற் றொழுதேத்த வயங்கிய கற்பினாள்
தடமென்றோள் பிரியாமை பொருளாயி னல்லதை;" என

இன்னவாறு சில சொல்ல அவன் போதலொழிந்தான்; இவள் மேல் காதல்கொண்டு நின்றான். ஓதியும் நுதலும் நீவி ஆகத்தை

வந்து ஆர்வமுறையாடிப் போகம் நுகர்ந்து இணைபிரியாது இவளுடன் பொருந்தியிருந்தான். இம் மெல்லியலாளது நல்லியல்புகளை வியந்து பலபல சொல்லி மகிழ்ந்தான். இளமரக்காவில் சிதறியிருந்த மலர்ப்பிணை ஒருநாள் இவள் உலாவிவருங்கால் உறுபதம் கூசி அல்கி முசிந்த இவள் மெல்லியத்தனை நோக்கி அவன் உள்ளமுருகினன்.

> "என்போடு நரம்பின்றி இலவம்பூ வடாளுக்கி
> இன்புற வைப்புயர்ந்து இருநில முறைப்புல்லி
> ஒன்பதின்மாண் நடப்பினும் ஒரு காதம் என்றஞ்சும்
> பெண்பஞ்சிச் சீறடியும் மேதக்க விறைனவே".

எனப் பண்டொரு தலைவன் வியந்து நின்றதுபோல் அவனும் இவளது அடிநலனை நினைந்து அகம் குழைந்து நின்றான். அனிச்ச மலரும் அன்னத் தூவியும் மாதரடிக்கு நெருஞ்சிப்பழம்போல் பெருந்துயர் செய்யும் எனக் காதலர் வருந்தி நிற்பர் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

> பஞ்சோ டினிய பனிமலரும் பாவையடி
> யஞ்சும் பெயர்க்க அயர்ந்து.

மாதரடிகள் மலரினும் மென்மைய என்பது இதனால் கூறப்பட்டது.

### இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்.

தலைவி மிகவும் மெல்லிய நீர்மையள். அவள் கண் பூவினும் பொலிவுடையது; வேலினும் வெய்யது. நிறம் மாந்தளிரனையது; பல் முத்தினும் ஒள்ளியது; மேனி, நறுமணமுடையது, கண்ணெழிலைக் காணின் குவளை மலரும் குப்புற்று வீழும். இடை மிக நுட்பமானது. முகம், மதியினும் சிறந்தது; மறுவில்லாதது; கலைகுறைந் தலமரும் அச் சந்திரன் போலாது என்றும் சுந்தரமுடையதாய்ச் சிறந்து திகழ்வது; சிலமிக்கது. அனிச்ச மலரினும் அன்னத்தின் தூவியினும் அவள் அடிகள் மென்மையுடையன என்பதாம்.

௱௰௨வது நலம்புனைந்துரைத்தல் முற்றிற்று.

## 113ம் அதிகாரம் காதற் சிறப்புரைத்தல்.

அஃதாவது தலைவன் தலைவி என்னும் இருவரும் ஒருவர் மீது ஒருவர்க்குள்ள காதல் நிலைமையை ஓதி மகிழ்தல். காதலியது உருவ நலனை புனைந்துரைத்த காதலன், தனது உள்ள நிலைமை புணர்த்த, அதனை புணர்ந்து மகிழ்ந்து தன் உண்மை நிலைமை அவள் இதில் உரைத்துள்ளாள் என்க. நலம் புனைந்துரைத்த வழி நிகழ்வதாகலான் அதன்பின் இது வைக்கப்பட்டது.

1121. ஏனோ விசயை இதழ்நீரை வானமிழ்தாக்
கோனுவந் துண்டான் குமரேசா—ஆனமைந்த
பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர். (க)

குமரேசா! விசயையின் இதழ்நீரை அமிழ்தென மகிழ்ந்து சச்சந்தன் ஏன் அருந்தினான்? எனின், பணிமொழி வால்எயிறு ஊறிய நீர் பாலொடு தேன் கலந்து அற்று என்க.

இது, அதரபானத்தின் அருமை தெரிக்கின்றது.

தலைவிமாட்டு ஐம்புல இன்பங்களும் ஆராய்ந்த தலைமகன் அவளது அதரபானத்தை மட்டும் இங்ஙனம் உவந்து கூறியது என்னை? எனின், கலவி நிலையில் இவ் அருந்தலானது களிப்புக் காதலுடன் கவர்ந்துகொள்ளப்படுமாதலால் அக் கொள்முதலின் குணநலனைக்கொண்டான் இவ்வாறு கொண்டாடுகின்றான் என்க.

பணி மொழி = மெல்லிய சொல்லினையுடையாள். என்றது தலைவியை. அமைதி அடக்கங்களுடையவளாய் மிருதுவாக இனிது பேசும் இயல்பினள் என்பார் பணிமொழி என்றார்.

வால் எயிறு = வெள்ளியபல். வால் என்பது வெண்மை தூய்மைகளை புணர்த்திவரும். பேரழகுடைய தலைமகளது பல் மிக ஒளியுடையதாதலால் அது "வாலெயிறு" என நின்றது. "வாலெயிற்று மடமகள்" (ஐங்குறுநூறு 48) என ஓர் குலமகளைக் குறித்திருத்தல் காண்க.

ஊறிய = சுரந்த. இதழ்நீரை எயிறுஊறிய நீர் என்றது இடை செறிந்து இணைந்திருக்கும் அதன் இயைபு நோக்கி. கலந்தது அற்று என்பது கலந்தற்று என நின்றது. கலந்ததோர் கலவைபோல் கழிபெருஞ் சுவையதாய்க் களிப்பூக்கி நிற்கும் என்றபடி.

மெல்லிய மொழியையுடைய இவளது வெள்ளிய பல்லில் நின்று சுரந்த நீரானது பாலுடனே தேன் கலந்த கலவைபோல் மிகவும் இன்சுவைத்தாயிருந்ததென்பதாம். அணிகல முதலியன வேறு யாதும் கூறாது பணிமொழி என்றது இந்த வாயின் இனிய நீர்மையின் அருமை கூறுகின்றாராதலால் அவ்வுறவுரிமை கருதி என்க. பல் இதழ் நீர் வாய் சொல் எல்லாம் இனியன என்றபடி.

“ முல்லையு முருந்து முத்து முறுவலெலன் றுரைத்தபோது
சொல்லையும் அமிழ்தும்பாலுந்தேனுமென் றுரைக்கத்தோன்றும்
அல்லதொன் றுவதில்லை; அமிழ்திற்கு முவமையுண்டோ ?
வல்லையேயலறிந்துகோடி மாறிலா வாறு சான்றோய்”.
(இராமாயணம்).

சீதையின் பல்லைக்குறித்து உரைத்தபொழுது அவளது சொல்லையும் இராமன் இதில் நினைத்துள்ளமை காண்க.

இன்சுவைக்கு இனமாகப் பாலையும் தேனையும் இணைத்துக் கூறியது அவை சாலவும் இனிமையுடையனவாய் இயைந்து நிற்கும் இயல்புநோக்கி. வேறு வேறான சுவையினையுடைய பாலையும் தேனையும் ஒருங்கு கலந்து உண்டால் இன்னதென்று பிரித்தறியலாகாதபடி அக் கலவை மன்னிநிற்றல்போல் கலவி நிலையில் தலைவி வாய் நீரும் அலகிலின்பம் பயந்து அவசமுறுத்திநிற்கும் ஆதலால் அஃது உவமையாய் நின்றது. தான் அகத்தில் அனுபவித்த இன்பச் சுவைக்குப் புறத்தில் இனியவான இரு பொருள்களை இவ்வாறு இணைத்துக் காட்டினான்.

பலலும் இதழும நீர் ஊறுதற்கு இடமாகுமாதலால் அவ ஈருறுப்புக்கும் இயையப்பாலும் தேனும் குறித்தார். பால் வெண்ணிறமானது ஆதலால் அது வாலெயிறு ஊறிய நீருக்கும், தேன் செந்நிறமுடையதாதலால் அது சிவந்தஇதழ் நீருக்கும் உவமையா

உணர்ந்துகொள்க. இவை முறையே தந்தபானம் எனவும், அதரபானம் எனவும் உரைக்கப்படும். பொருந்தலின் அமைக்க இவ் அருந்தற்சுவைக்கு அருந்தலில் சிறந்தன சில தெரிந்துரைத்தான் என்க.

> " ஆலையில், மலையின் சாரல் முழையினில், அமுதவாரிச்
> சோலையில், தவசர் இல்லில், சோனகர் மனையில், தூய
> வேலையில் கொளறாத வேற்கணார் குமுதச் செவ்வாய்,
> வாலெயிறு ஊறு தீந்தேன் மாந்தினர் மயங்குவாரை "
> (இராமாயணம்);

அடிகள் சொல்லை இஃது அடியொற்றிவந்துள்ளமை காண்க. களிப்பை விளைக்கு மதுவகைகள் விளையுமிடங்களையெல்லாம் எடுத்துக்காட்டி அவற்றுள் யாண்டும் எய்தப்பெறாததாய் மகளிர் செவ்வாயில் மட்டும் எய்துவது என அதர பானத்தின் அருமை இனிமைகளை விளக்கிக் கம்பர் பெருமான் இதில் உணர்த்தியிருக்கும் அழகைப்பார்க்க. வாய் ஊறுதேன், எயிறு ஊறு தேன் எனத் தனிகூட்டி நோக்குக.

பொழிலிடை எதிர்ப்பட்ட தலைவியைக் கனிந்த காதலொடு கலந்தெழுந்தபின் தான் நுகர்ந்த காமச் சுவையைத் தலைவன் உவந்து மொழிந்தபடியிது.

> " முள்ளுறழ் முளையெயிற்று அமிழ்தூறுந் தீநீரைக்
> கள்ளினு மகிழ்செய்யும் என வுரைத்தும் அமையார்; என்
> ஒள்ளிழை திருத்துவர் காதலர் " (கலித்தொகை 4)

> தேன் என்றும், பால் என்றும், தேமாங்கனி என்றும் தீங்கரும்பு
> தான் என்றும், சொல்வது காமட்டன்றோ? அத் தவாசதன்பால்
> கானென்ற வாசம் பெறுமால் குலோத்துங்கன் காவிரிவாய்
> மீனென்றகண்ணி இதழ்த்தேன் தித்திக்குதென்பெய்யாக்குமே "
> (குலோத்துங்கன்கோவை).

> " விடைபட்ட கேதனர் கோமக்கராகப்பர் வெற்பின்மலர்த்
> தொடைபட்டகோதை இவள்வா யமிர்தச்சுவையினுக்குப்
> படைபட்டவேலை அமுதொத்திடாது; பகரும் அது
> கடைபட்டதே அன்னதாகும் விண்மேவு கடவுளர்க்கே "
> (கோமக்கராக்கோவை).

இதழ்நீர் அமிர்தினும் இனிது என இவை உணர்த்தி நிற்றல் காண்க. "நீரினுமினியவாகிக் கூரெயிற்றமிழ்தமூறுஞ் செவ்வாய் ஒண்டொடிக் குமரிகள்" (அகம் 3:15) என்பதுமறிக.

வாலெயிறு ஊறியநீர் பாலொடு தேன் கலந்ததாம் என அருளியுள்ள இவ் அருமைத் திருக்குறளை, காதல் நலந்தெரியாத பிரமசாரி ஒருவன் கேட்டுப் பெரிதும் திகைத்து "இது சிறிதும் பொருந்தாது; மாதர்வாய் எச்சிலை இவ்வாறு ஓதலாகுமா?" எனப் பலபல உரைத்து உவர்த்து நின்றான்; பின்பு பருவமெய்தியபின் ஓர் தருண மங்கையைப் பொழிலிடைக் கண்டு மிகு மையல் கொண்டான்; அவளும் காமுற்றிசைந்தாள்; கந்தருவ முறையில் இவன் கலந்து நுகர்ந்தான்; இதழ் பருகல் முதலிய அநங்க லீலைகள் பல ஆரப்புரிந்து அவளது இன்பச் சுவையில் மிக இழிந்து கிடந்த இவன் ஒருநாள் உவந்தெழுந்தான்; "வால் எயிறு ஊறிய நீர் பாலொடு தேன்" என்றது சாலாதே! என்று சாலவும் வியந்தான்; தான் உண்டு மகிழ்ந்ததை உளங்கொண் டோர்ந்தான்;

"வண்டுமொய்த்தனைய கூந்தல் மதனை பண்டாரவல்லி
கெண்டையோ டொத்தகண்ணாள் கனிமொழி வாயினூறல்
கண்டுசர்க்கரையோ? தேனோ? கனியொடு கலந்தபாகோ?
அண்டர்மாமுனிவர்க்கெல்லாம் அமிர்தமென் றளிக்கலாமே"

எனக் களிப்புமீக் கூர்ந்து கரைந்து நின்றான். காமப் பாலின் சுவையை இனிது கண்டவரே "பால்தேன்" என்ற இப் பாவின் சுவையை எளிதறிவரென இதனால் அவன் தெளிவுறுத்தினான்.

"தேனும் துவர்க்கும்; பசும்பாகும் கைக்கும்; அத்திக்கரும்பு
தானும் புளிக்கும்; கனிகளும் காறும்; தசமுகன்பால்
கூனுஞ் சிலைக்கைக் குமார குலோத்துங்கன் கோழிவெற்பில்
மானுந் தளிர்நிறத்தாள் இதழ்த் தேனுண்ட என்னிதழ்க்கே"

என்று ஒருவன் பன்னி நின்றதும் ஈண்டெண்ணத்தக்கது.

காதலிபால் தான் அநுபவித்த இன்ப நலனை அன்பு ததும்ப ஆர்வமீக் கூர்ந்து காதலன் ஓதி நின்றான் ஆதலால் இது காதற்சிறப்புரைத்தல் ஆயிற்று.

தலைவியின் செவ்வாயூறலைக் கலவிநிலையில் தலைவன் கனிந்து நுகர்ந்து வியந்து புகழ்வன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. வுண்மை விசயைபால் உணரப்படும்.

கதை.

விசயை என்பவள் விதையதேயத்து வேந்தன் மகள். இவள் யாரும் எதிரிலாப் பேரழகுடையவள். இவளது உருவம் சாயல் முதலிய எழில்நலங்களைக் குறித்து அக்காலத்திலிருந்த அரசிளங் குமரிகளனைவரும் வியந்துகூடிப் புகழ்ந்து பேசி நின்றார். பருவம் நிரம்பி இன்னுயிர்த் தோழியருடன் கன்னி மாடத்தில் இவள் அமர்ந்திருந்தாள். நிலா முற்றத்தில் ஒரு நாள் உலாவிவருங்கால் சச்சந்தன் இவளைக் கண்டான். அவன் ஏமாங்கதநாட்டு மன்னன். அருளும் ஈகையும் ஆண்மையுமுடையவன். கடியபூங் கணைக் காமனும் நாணுற வடிவமைந்த வனப்பினன். அவனுக்கு இவள் மாமன் மகள். இவளைக் கண்டவுடன் உழுவலன்புடையனாய் உள்ளுருகி நின்றான். உருவ அமைதியின் பெருமித நிலையைப் பெருங்காதலோடு கருதி மகிழ்ந்தான்.

"குழவிக் கோட்டிளம் பிறையும், குளிர்மதியும் கூடினபோல்
அழகுகொள் சிறுநுதலும், அணிவட்ட மதிமுகமும்,
தொழுதாற்கு வரங்கொடுக்குந் தொண்டைவாய் தூமுறுவல்
ஒழுகுபொற்கொடி மூக்கும் உருப்பசியை உருக்குமே. (க)

வண்சிலையை வனப்பழித்து வார்ந்தொழுகி இலட்பெரு
நுண்கருமை கொண்டொசிந்து நுதலிவர்ந்து போந்துலாய்க்
கண்கூடா கடைபுடைத்துக் கைவல்லான் எழுதியபோல்
பண்பார்ந்த கொடிப் புருவம் பழிச்சாறுப் படியவே. (உ)

சேலனைய சில்லரிய கடைசிவந்து கருமணியாம்
பாலகத்துப் பதித்தன்ன படியவாய், முனிவரையும்
மாலுறுப்ப மகிழ்செய்வ மாண்பினஞ்சும் அமிர்தமுமே
போல்குணத்த பொருகயற்கண் செவியுறப் போந்தனவே.

இவ்வுருவு நெஞ்சென்னும் கிழியின்மேல் இருந்திலக்கித
கவ்வுருவு நினைப்பென்னும் துகிலிகையால் வருத்தித்துக்
கவ்வியதன்றேனுக்கினால் கண்விடுத்துக் காதல் நீர்
செவ்விதிற் றெளித்தானுக் காமப்பூச் சிதறினான். (ஈ)

மெய்ப்பொரு ளாகத் துயிர்க்கு முறுகேடா யின்றுறு மையாற்
றையலாள் மெய்க்கடக் கண் வலைப்பட்டிச் சச்சந்தன்
ஐயுறுன் அமைக்கவே அரசுபடக் கிச் செல்கின்றான்
மொய்யருக் கணியானை முழங்கிக் கிளர்ந்தான்".

(சீவகசிந்தாமணி)

இவளது சாயின் நலங்களைநுகர்ந்து, இவனை விழிகளிப்பநோக்கி அம் மன்னன் கழிபெருங் காதல் கொண்டனன், கருதிச் சென் றனன் இதனால் இனிதறியலாகும். இங்ஙனம் சென்ற அவன் வருகையை குறித்து இவள் தந்தையிடம் அறிவுநர் சிலரை விடுத்தான். மருமகன் விழைவையறிந்து, இளமை தொடங்கி அவன்பால் தன் மகள் கொண்டுள்ள உள்ளக் காதலையும் உணர்ந்து மகிழ்ந்து அம் மாமன் மணம்புரிந்து தந்தான். காவே புனலொடு புனல் கலந் தாற்போல் ஒருநிலை எய்தி இருவருமருவி மகிழ்ந்தார்.

"பவழவாய்ப் பாவை பல்நூல் வன்றிவை பருகும் வேலான்
கவழமோர் களிறு போன்றான்; காதலி கரும்பை ஒத்தாள்;
தவழ்பாகுக் கோதைமாதர் தாமரைப் பூவதாக
உமிழ்கதை வெளிறுறும் மூன்சிறை மணிவண்டொத்தான்

பளிக்கறைப் பவழப் பாவை பரிசெனத் திகழும் சாயல்
களிக்கயல் பொருவபோன்று கடைசிவந்தகன்ற கண்ணாள்
ஒளிக்கவின் கொண்ட காமத்து ஊழுறு கனியை ஒத்தாள்;
அளித்தயில்கின்ற வேந்தன் அந்திறைப் பறவை ஒத்தான்"

இவ்வாறு இவளது போக நுகர்ச்சியில் அவன் பொங்கி யிருந்தான். நாளும் நாளும் அருந்தி நுகர்ந்தும் மேன்மேல் விழை ந்து மிகுந்தான். அரச போகங்கள் யாவு மறந்தான். இந் நேரிழை இன்பம் ஈறிலின்பமென எண்ணி மகிழ்ந்தான்.

"படியிசைப் பவழவாய் அமுத மாந்தியும்,
கொடிவளர் குளிமுலைத் தடத்துள் வைகியும்,
இடியிறும் கொடியிறு மயங்கி யாவரும்
கடிமணக் கிழமையோர் கடலின் மிக்கதே"

இவளது அதரபானத்தை அவன் மாந்தி மகிழ்ந்திருந்த நிலையை இதில் ஓர்ந்துகொள்க. மாவிடியும், நாழிக்கொடியும்

போல் உணர்வும் உடம்பு மயங்கிக் கலவி நிலையில் இவ்வண்ணம் அவன் களிப்புற்றிருந்தான். இவளது உரைநலனையும் உருவப் பொலிவையும் உவந்து பாராட்டினான். இதழூறலை வியந்து கொண்டாடினான். பணிமொழி வாலெயிறு ஊறியநீர் பாலொடு தேன் கலந்ததுபோல் உயிர்கலந்து உயரின்பம் பயந்து நிற்கும் என உள்ளக்காதலுடன் அவன் உவந்து மொழிந்தான்.

அருந்த அழியும் அமிர்தை இவள்வாய்
பொருந்தமிழ் தென்றல் புரை.

வாலெயிறூறியநீர் சாலவும் இனிதென்பது இதனால் கூறப்பட்டது.

---

1122. ஆவியென அன்புற் றமைந்தேன் சசியையுமுன்
கோவுவந்து கொண்டான் குமரேசா—மேவும்
உடம்பொ டுயிரிடையென்ன மற்றன்ன
மடந்தையொ டெம்மிடை நட்பு. (உ)

இ—ள்.

குமரேசா! சசியை ஒரு கணமும் பிரியாது தேவராஜன் ஏன் உயிர் என ஆதரித்து நின்றான்? எனின், உடம்பொடு உயிரிடை என்ன மடந்தையோடு எம்மிடை நட்பு அன்ன என்க.

இது, தலைவனது அன்புரிமையை உணர்த்துகின்றது.

என்ன = எத்தன்மைய. அன்ன = அத்தன்மைய. "அற்று மற்று அற்றே" என ஒருமையால் உரையாது "என்ன" எனப் பன்மையால் உரைத்தது. அந் நட்பின் பாகுபாடுகள் கருதி. என்னை? தொடர்ந்து வருதல், ஒருங்கியைந்திருத்தல், இன்பத் துன்பங்களில் இணைந்து நிற்றல், இன்றியமையாமை என்றினைய முதலிய பலவினும் அவை நிலை யொன்றியுள்ளமையான் என்க.

மடந்தை என்றது இளமை தவழ்ந்திலகும் எழில் நிலை நோக்கி. தருணமங்கை என்றபடி.

எம் எனத் தன்னைத் தலைவன் பன்மையால் குறித்தது தன் பாடுதோன்ற. என்னை? கல்வி, தறுகண், இசைமை, கொடை

முதலிய பெருமித நிலைகளையுடைமை யான் என்க. தன்னைக் குறித்துக் கூறுங்கால் யாரும் பன்மையாக நேருவராதலால் அங்ஙனம் கூறினான் எனினுமாம். இது தனித் தன்மைப் பன்மை எனப்படும்.

மேல், காதலிபால் தனக்குள்ள ஆர்வமிகுதியைக் காதலன் உணர்த்தினான்; இதில், தனக்கும் அவளுக்கும் அமைந்துள்ள உறவுரிமையை யுணர்த்துகின்றான்.

உடம்போடு உயிருக்கு இயைந்துள்ள நட்புகள் எத்தன்மையன அத்தன்மையன இம் மடந்தையோடு எமக்கு அமைந்துள்ள நட்புகள் என்பதாம்.

உடம்பை மடந்தைக்கும், உயிரைத் தலைவனுக்கும் உவமையாக்கொள்க. இங்ஙனம் கண்டது வைப்புமுறைகொண்டு, தனக்கும் தலைவிக்கும் அமைந்துள்ள உறவுரிமையை உணர்த்தற்கு உயிரையும் உடம்பையும் இங்ஙனம் இணைத்துக் காட்டியதனால் அவனது உழுவலன்பு உணரலாகும்.

"எனதாருயிர்க்கும் உடலே அவளுடல்; ஈர்ங்குழலாள்
தனதாருயிர்க்கும் உடலே எனதுடல்; சார்ந்துநின்ற
எனதாருயிர்க்கும் உயிரே அவளுயிர்; ஏந்து கொங்கை
தனதாருயிர்க்கும் உயிரே எனது தனியுயிரே"
(தணிகைப்புராணம்).

என ஒரு தலைமகன் தலைவியை இதில் உவந்திருத்தல் காண்க. இன்ப நிலையிலும் துன்ப நிலையிலும் ஒருங்கியைந்து ஒருவரை ஒருவர் இன்றியமையாது உயிர் ஒன்று உடல் இரண்டு எனும்படி மருவிநிற்கும் இயல்பினராதலால் காதலர் இங்ஙனம் கருதி நின்றனர்.

"காகத்திருகண்ணிற்கு ஒன்றே மணிகலந்தாங்கு, இருவர்
ஆகத்துள் ஓர் உயிர் கண்டனம் யாமின்று; யாவையுமாம்
ஏகத்தொருவன் இரும்பொழில் அம்பலவன் மலையில்
தோகைக்கும், தோன்றற்கும், ஒன்றாய்வரும் இன்ப துன்பங்களே"
(திருக்கோவையார்).

காதலர்தம் நட்பு நிலைக்கு இதில் ஓதியிருக்கும் உவமை நிலையை யூன்றி யுணர்ந்து கொள்க. கண்ணென உயிரென ஒருவரை ஒருவர் கண்ணி நிற்பர் என்பதாம்.

> " உன்னுயிரும் என்னுயிரும் ஒன்றென்ப நின்றறிந்தேன்
> மன்னுபுகழ் வச்சத்தார் மன்னவா!—உன்னுடைய
> பொன்னாகத் தெங்கையர்தம் பொற்கைகைச் சின்னங்கண்டு
> என் ஆகத்தே எரிகை யால்" (வச்சத்தொள்ளாயிரம்).

இது, வச்ச மன்னனை நோக்கி அவன் தலைவி யுரைத்தது. தமக்குள்ள உறவுநிலையை உணர்த்தி மிக வினயமாக இதில் அவள் உரைத்திருக்கும் அழகைப்பார்க்க.

தலைவனை உயிர் என்று சுட்டியதனால் அவனது உயர்நிலை புலனாம். உடலும் உயிரும்போல் தலைவியும் தலைவனும் நிலையொன்றி நிற்பாராதலால் அவர் இடைபிரிய ஆற்றார் என்க.

> " ஓடிவந்தனன் சாலையின் சோலையினுதவும்
> தோடிவர்ந்தபூஞ் சுரிகுழலாள் தனைக் காணான்;
> கூடுதன் னுடையது பிரிந்து, ஆருயிர் குறியா
> நேடிவந்தது கண்டில தாமென நின்றான்" (இராமாயணம்)

சீதையை இராவணன் கவர்ந்து சென்றபின் இராமன் விரைந்துவந்து பர்ணசாலையைப் பார்த்து அங்கு அவள் இல்லாமை கண்டு அவன் அல்லலுற்று நின்றதை இது சொல்லியுள்ளது. உடம்பை நாடி உயிர் துடித்ததுபோல் சீதையைத் தேடி இராமன் பதைத்தான் என இஃதுணர்த்திநிற்றல் காண்க.

> " துயராலே தொலை யாத என்னையும்
> பயிராயோ பகையாத பண்பினேய்?
> செயிர்தீ ராய்விதி யான தெய்வமே
> உயிர்போனு லுட லாரும் உய்வரோ?"

வாலியைப் பிரிந்து தாரை புலம்புங்கால் தன்னை உடலாகவும், அவனை உயிராகவும் இதில் அவள் உரைத்திருத்தல் காண்க.

> " மயில்போல் வருவாள் மனம் காணிய காதல் மன்னன்
> செயிர்தீர் மலர்க்காவின் ஓர் மாதவிச் சூழல் சேரப்
> பயில்வாள் இறை பண்டு பிரிந்தறியாள் பதைத்தாள்
> உயிர்நாடி ஒல்கும் உடல்போல் அலமந் தழன்றாள்"
> (இராமாயணம்)

பெருங்காதலுடையளாய் மருங்கமர்ந்திருந்த தன் மனைவியின் மன நிலையை யறியும்பொருட்டு ஒரு தலைமகன் பூஞ்சோலையிடைப் புகுந்தொளிந்திருப்ப அவனைக் காணாமையால் கலங்கி அவள் அலமந்து தேடியபடியிது. உயிரை உடம்பு நாடி அலைந்ததுபோல் அம் மடந்தை தேடி அலமந்தாளெனக் குறித்துக் காதற்கிழமையை இதில் உணர்த்தியிருக்கும் அழகைப்பார்க்க.

உள்ளக் காதலோடு சதிபதிகள் உயிரொன்றி நிற்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை சசியால் உணரப்படும்.

## கதை.

சசி என்பவள் சுரமை நாட்டரசனாகிய பிரசாபதியின் இளைய மனைவி. அறிவும் பொறையும் அமைதியுமுடையவள் இனிய மொழியினள், விழுமிய நீர்மையள். எழில்நலங் கனிந்தவள். "காண்பவர் மனமும் கண்ணும் கவர்தரு வனப்புவாய்ந்த மாண்பமர் குணத்தாள் என்ன மதிவல்லோர் வாழ்த்த நின்றாள்." இவளிடம் மன்னன் மன்னிய காதலுடன் மருவியிருந்தான் மிருகாபதி என்பவள் அவ் அரசனுக்குப் பட்டத்துத் தேவியாயமர்ந்திருந்தும் அவளினும் இவள்பால் அவன் ஆர்வமுற்று நின்றான். இவளது மனநலத்தையும் எழில் வளத்தையும் வியந்து யாதும் மாறுபடாது அவளும் இவளிடம் அன்பு செய்திருந்தாள், பெருந்தன்மையுடன் இங்ஙனம் உளம்பொருந்தியிருத்தலால் இவ் இருவரிடமும் அவன் உழுவலன்புகொண்டு உவந்திருந்தான். இக் குலமகளிரிருவரும் உணர்வும் உயிரும் போல் அத் தலைமகனுக்கு உரிமைபூண்டு உடனமர்ந்திருந்தார். காதற் கிழமையோடு இவர் இணைந்திருந்தபடியை அறிஞர் பலரும் புகழ்ந்து போற்றியுள்ளார். அடியில் வருவன காண்க.

" தீங்கரும்பமிழ்த மூட்டித் தேனளாய்ப் பிழிந்த போலும்
ஓங்கிருங் கடலந்தானை வேந்தனைங் குறுக்கும் இன்சொல்
வீங்கிருங் குவவுக் கொங்கை மிகாபதி மிக்கதேவி
தாங்கருங் கற்பிற் றங்கை சசி என்பாள் சசியோடொப்பாள்

பெருமகன் உருகும் பெண்மைமாண்பினும், பேணி நாளும்
மருவினும் புதியபோலு மழலையங் கிளவியாலும்,
திருமகள், புலமையாக்கும் செல்வி, என்றிவர்கள்போல
இருவரும் இறைவனுள்ளத்து ஒருவரா யினியரானார். (௭.)

மன்னவன் ஆவியாவார் மகளிர்; அம் மகளிர் தங்கள்
இன்னுயிராகி நின்றான் இறைமகன்; இவர்கள் தங்கட்கு
என்னைகொல் ஒருவர் தம்மேல் ஒருவர்க்கிங்கு உள்ளம் ஓட
முன்னவன் புணர்த்தவாறம் மொய்மலர்க் கணையினானே. (௩.)

சொற்பகர்ந்து உலகம் காக்கும் தொழில்புறத் தொழிய வாங்கி
மற்பகாகலத்தானை மனத்திடைப் பிணித்து வைத்தார்;
பொற்பசங் கமழப்பூத்த தேந்துணர் பொறுக்கலாற்றாக்
கற்பகக்கொழுந்தும்; காமவல்லியங் கொடியும்ஒப்பார். (சூளாமணி)

இம் மகளிரை அம்மன்னன் எண்ணியிருந்தவிதமும், அவ னுக்கு இவர் நண்ணியிருந்த நிலையும் இதனால் இனிதறியலாகும். கலை மகளையும், காமவல்லியையும் இத் தலைமகளுக்கு உவமை கூறியிருத்தலால் இவளது அறிவுயர்வும், எழிலியல்பும், இன்ப நிலையும் எளிது புலனும். இவ் அழகியோடமர்ந்து அளவிலின் பம் நுகர்ந்து அவன் இனிது வாழ்ந்துவந்தான். இவள் சிறிது ஊடினும் அவன் பெரிதும் வாடுவன். இவள் இன்புறின் இன் பாய்த் துன்புறில் துன்பாய் அவனுளம் தொடர்ந்து நின்றது. இங்ஙனம் பெருகிய காதலோடு மருவியிருந்த அவன் ஒருநாள் கண்ணும் நுதலும் நீவி இவளைக் கலந்து களித்து நலம்புனைந்துரை த்து உவந்து பாராட்டினன். இன்று புதுமையாக இன்னணம் புகழ்ந்துரைக்கின்றனரே எங்கேனும் பிரிந்து செல்வரோ? என்று இவள் கலுழ்ந்து நின்றாள். இவளது நிலையினையறிந்த அவன், "யாண்டும் பிரியேன்; யாதும் அஞ்சல்; உடலும் உயி ரும், மலரும் மணமும், தேனும் சுவையும்போல் யானும் நீயும் கலந்தமைந்துள்ளோம்; விலங்குவதில்லை; கலங்கல் கண்ணே!" என்று இவளை ஆரத் தழுவி ஈரமொழிகள் பல இசைத்தருளி னன். உடம்போடு உயிரிடை யிசைந்துள்ள உறவுபோல மட

ந்தையோடு எம்மிடை நட்பு அமைந்துள்ளதென்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

இன்னுயிரின் என்றும் இனியள் எழில்கனிந்த
நன்னுதலிந் நங்கை நமக்கு.

காதலாது உறவுநிலை இதனால் கூறப்பட்டது.

1123. காதற் பதுமைதனைக் கண்மணியாக் கொண்டுநின்றான்
கோதைவேல் மன்னன் குமரேசா—போதுங்
கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழும்
திருநுதற் கில்லை யிடம். (௩)

இ—ள்.

குமரேசா! பதும காரிகையைத் தன் கண்ணுட் கருமணியாக ஏன் பிரச்சோதனன் எண்ணுகின்றான்? எனின், கருமணியின் பாவாய்! நீ போதாய், யாம் வீழும் திருநுதற்கு இடம் இல்லை என்க.

இது, தலைவன் தலைவிபால் கொண்டுள்ள காதல் நிலையை யுணர்த்துகின்றது.

கருமணி என்றது கண்ணினடுவுளிருக்கும் ஒளிநிலையை. நீல மணிபோல் வட்டமாய் ஒளிநிலவி நிற்றலால் இது கருமணி என நின்றது.

பாவாய் = பாவையே! பாவை = சித்திரப் பதுமை. அது ஈண்டு பெண்ணைக்குறித்து நின்றது. எழில்நலமுடையதாய் விழிகளிப்ப நிற்கும் இயல்பினதாகலான் பாவை பெண்ணுக்கு உவமையாய் வந்தது.

போதாய்=போதருவாய். போதல் = வெளியே செல்லல்.

திருநுதல் என்றது அழகிய நெற்றியையுடையாள் என்றபடி. வேறொன்றையும் குறியாது நுதலைக் குறித்தது "என்பீடு ஒண்ணுதற்கோஒ வுடைந்ததே" என்றவண்ணம் தன் உள்ளங் கவர்ந்து நின்ற அதன் பெருமிதம் கருதி.

"எலுவ! சிறாஅர் ஏமுறு நண்ப!
புலவர் தோழ! கேளாய் அத்தை
மாக்கடல் நடுவண் எண்ணாட் பக்கத்துப்
பசுவெண் திங்கள் தோன்றி யாங்குக்
கதுப்பயல் விளங்குஞ் சிறுநுதல்
புதுக்கோள் யானையிற் பிணித்தற்றா லெம்மே"
(குறுந்தொகை 129)

சிறுநுதல் தன்னைப் பிணித்துள்ள நிலையைக் குறித்து ஒரு தலைமகன் தன் தோழனிடம் உரைத்திருத்தலை இதில் ஊன்றிப் பார்க்க. சிறுஎன விசேடித்தது பெருவீரனாகிய தன்னை எளிதில் வசப்படுத்தி நின்ற அதன் நிலையினை நினைத்து.

யாம் வீழும் = யாம் விரும்புகின்ற. வீழ்தல் = விரும்பல்.

மேல், காதலியை உடலுயிர் என உவந்து நின்றான்; இதில், கண்மணியெனக் கருதி நிற்கின்றான்.

என் கண்ணின் கருமணியுள் இருக்கும் பாவாய்! யாம் விரும்பும் அழகிய நுதலுடையாட்கு இருக்க இடம் இல்லையாதலால் நீ வெளியே போவாயாக என்பதாம்.

கண்ணானது வெண்மைக் கோளமும், அதன் மேல் கருவட்டமும், அதனுள் ஒளிப்பிழம்பும் உற்றமைந்திருத்தலால் அவ்வொளிவிழியில் தோன்றும் சாயையைப் பாவாய்! என்று விளித்துக் காதலன் இவ்வாறு உரையாடி நின்றான்.

காதலிபால் தனக்குள்ள காதல் நிலையை இவ்வகை ஆதாம் பெருக ஓதிநின்றதனால் அவனது உள்ளன்புடைமை உணரலாகும்.

கந்தருவ முறையில் கலந்திருந்த தலைமகள் ஒருநாள் உவந்தெழுந்து தன் தோழிகளிடம் போய்வர விரும்பினாள்; அங்ஙனம் போகநின்ற அவளைப் பிரிந்திருக்க ஆற்றாமல் தலைமகன் வருந்தியுளைந்தான்; அடிமுதல் முடிவரை அவளது வடிவழகை மறுகி நோக்கினான்; கண்ணும் மனமும் அவள் வண்ணமாய் நின்றன; நிற்கவே தன் விழி ஒளியில் திகழும் நிழலுருவை விளித்துப் "பாவையே! சிறிது நீ வெளியே போவாயாக; இப் பூவை

அங்கு அமர்ந்திருக்கவேண்டும்'' என மன்னிய காதலுடன் அவன் பன்னியுள்ளபடியிது.

பெண்மணியைக் கண்மணியுள் வைத்துக் கண்டிருப்பேன் என்ற இதனால் அவன் காதல்நிலை புலனும். "ஆடுங் கடைமணி ஐவேல் அசதி அணிவரைமேல் நீடுங் கயற்கண்ணியாள் தந்த ஆசை நிகழ்ந் தரிதால், கோடும் குளமும் குளத்தருகே நிற்கும் குன்றுகளும், காடுஞ்செடியும் அவளாகத் தோன்றும் என் கண் களுக்கே". (அசதிக்கோவை) தன் தலைவிமேல் தனக்குள்ள காதல் நிலையை ஒரு தலைவன் இதில் உணர்த்தியிருத்தல் காண்க.

காதலியைக் காணாமல் இருக்கமுடியாதென்பது கருத்து.

உயிர்க்கு இனிய அரிய பொருள்களைக் குறித்துக் கூறுங் கால் கண்மணியை உவமை கூறுவர்; தன் அருமைப் புதல்வனைத் தாய் அழைக்குங்கால் "என் கண்மணி" என்பள்; "கண்ணுண் மணிபோல் மகவை" (இராமாயணம்) என்பதுங் காண்க; இங்ஙனம் அருமைப் பொருள்களுள் மிகவும் அருமையான கண் ணின் கருமணியினும் சிறந்தவள் எனத் தலைவியைத் தலைவன் இதில் உவந்து பாராட்டியிருத்தலால் இது காதற் சிறப்புரைத்த தாயிற்று.

காதலியை யாதும் மறவாது கண்மணியெனக் கருதிக் காதலன் ஒழுகுவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பதுமகாரிகையால் உணரப்படும்.

## கதை.

பதுமகாரிகை என்பவள் அவந்தி வேந்தனுகியபிரச்சோதன னுடைய அருமைத் திரு மனைவி. மாசறு கற்பினள், தேசுறு பொற்பினள், அறிவினும் திருவினும் பொருவறு நிலையினள், நிறையினும் பொறையினும் நிலைத்த நெஞ்சினள். பெருந்தன்மை யுடையவள். அவன் இளவரசனுயிருக்கும்பொழுதே இவ் அழ கியைப் பொழிலிடைக்கண்டு கழிபெருங் காதலோடு கந்தருவ நிலையில் கலந்து மகிழ்ந்து பின்பு உலகறிய மணந்து நுகர்ந்திருந் தான். தன் அரச திருவுக்குத்தக்கபடி வேறு சில கன்னியரை யும் அம்மன்னன் மணந்துகொண்டான். அக் குலமகளிரனை

வரும் தொழுதேத்த இத் தலைமகள் கோப்பெருந் தேவியாய்க் குலவிநின்றாள். அரசன் முடிசூடுங்கால் இவளும் அரியாசனத் தில் உடனமர்ந்திருந்து முடிபுனையப்பெற்றாள்.

"காதலற் கவாஅங் காம நோக்கத்
தீரெண் ணாயிரர் பேரெணப் பட்ட
ஓவிய ரொட்டும் உருவக் கோலத்துத்
தேவியர்க் கெல்லாந் தேவி யாகிக்
கோயிற் றிருப்புழிப் பூவிற் றிருந்த
திருமகள் போல ஒருமையின் ஒட்டி
உடன்முடி கவித்த கடனறி கற்பின்
இயற்பெருந் தேவி" (பெருங்கதை).

இங்ஙனம் பட்டத்தரசியாய் நிலவிநின்ற இவளுடன் இனி தமர்ந்திருந்து அவ் அரசன் அலகிலின்பந்துய்த்தான். அவன் "தேவரும் விழையு மேவருஞ் சிறப்பினன்; காமனும் விரும்புங் கட்டழகுடையவன்." இக் கட்டழகியுடன் கலந்து அவன் அனு பவித்த இன்பநலங்கள் அளவிடலரியன.

"பழுதின் றுயர்ந்த எழுநிலை மாடத்தும்,
செந்தா துதிர்ந்த சந்தன வனத்தும்,
தென்ற லியங்கு மூன்றி லகத்தும்,
தண்டாச் சித்திர மண்டப மருங்கினும்,
பூவிரி தூங்க வாவிக் கரையினும்,
மயிற்பெடை யாலக் குயிற்றிய குன்றினும்,
வேண்டுழி வேண்டுழி யாண்டாண் டிட்ட
மருப்பி னியன்ற வாளரி சுமந்த
விருப்புறு கட்டில் மீமிசைப் படுத்த
ஐவகை அமளி அணைமேற் பொங்கத்
தண்மலர் கமழும் வெண்மடி விரித்துப்
பட்டினுட் பெய்த பதநுண் பஞ்சி
னெட்டணை அருகாக் கொட்டைகள் பரப்பிப்
பாயல்மீது பரிபுர மிழற்றச்
சாயலன்னத்தின் தளர்நடை பயிற்றிப்
பொற்றோரணத்தைச் சுற்றிய துகிலென

அம்மென் குறங்கி னெழும்மென் கலிங்கம்
கண்ணும் மனமும் கவற்றப் பண்வர
இரங்குமணி மேகலை மருங்கிற் கிடப்ப
ஆடர வல்கு லரும்பெறல் நுசுப்பு
வாடவீங்கிய வனமுலை அதிர்ப்ப
அணியியல் கமுகை அலங்கரித்தது போல்
மணியியல் ஆரங்கதிர்விரித் தொளிர்தர
மணிவளை தாங்கிய அணிகெழு மென்றோள்
வரித்த சாந்தின் மிசை விரித்துமீ திட்ட
உத்தரீயப்பட் டொருபால் ஒளிர்தர
வள்ளை வாட்டிய ஒள்ளிரு காதொடு
பவளத் தருகாத் தரளம் நிரைத்தாங்கு
ஒழுகி நீண்ட குமிழொன்று பதித்துக்
காலன் வேலும் காம பாணமும்
ஆலகாலமும் அனைத்தும் இட்டமைத்து
இரண்டு நாட்டமும் புரண்டுகடை மிளிர்தர
மதியென மாசறு வதனம் விளங்கப்
புதுவிரை யலங்கல் குழல்மிசைப் பொலியும்
அஞ்சொல் மடந்தையர் ஆகந்தோய்ந்து”

என்றபடி இவளுடன் பொருந்தி அவன் போகமார்ந்திப் பொம்ம லுற்றிருந்தான். இவள் இடையே சிறிது பிரியினும் அவன் பெரிதும் கவன்றான். கண்ணினும் உயிரினும் இவளைக் காத லித்து நின்றான். கருமணியிற் பாவாய்! நீ போதாய்! யாம் வீழும் திருநுதலுக்கு இடமில்லை எனக் காதலன் விழைந்து மொழிவன் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்துநின்றது.

கண்ணுட் கருமணியாக் கண்ணியக் காரிகையை
எண்ணி யிருப்பன் இனிது.

தலைமகளைத் தலைமகன் காதலித்து நிற்கும் நிலை இதனால் கூறப்பட்டது.

1124. உற்றசித்தி வாழ வுவந்தான் பிரிவின்கண்
கொற்றவனேன் நொந்தான் குமரேசா—பெற்றமைந்து
வாழ்தல் உயிர்க்கன்னள் ஆயிழை சாதல்
அதற்கன்னள் நீங்கு மிடத்து. (ச)

இ—ள்.

குமரேசா! பூருவசித்தி கலந்திருந்தபொழுது உவந்து நின்ற அக்கினீத்திரன் அவள் பிரிந்தபோது ஏன் வருந்தி நொந்தான்? எனின், ஆயிழை உயிர்க்கு வாழ்தல் அன்னள்; நீங்குமிடத்து அதற்குச் சாதல் அன்னள் என்க.

இது, புணர்வு பிரிவுகளின் இயல்புணர்த்துகின்றது.

ஆய் இழை என்றது ஆராய்ந்து தெரிந்த அணிகளையுடையாள் என்றவாறு, ஆய்தலாவது சிறந்தன இவை என்று தெளிந்தெடுத்தல். நீங்கும் இடத்து = பிரியும் பொழுது நீங்காமல் நெருங்கி யிருக்கும்பொழுது என்பதை வாழ்தலுக்கு இனமாக இதில் வருவித்துக் கொள்க.

அதற்கு = அவ்வுயிர்க்கு. சாதல் அன்னள் = இறத்தல் துன்பம்போல் இன்னா நிலையள். புணர்தலை வாழ்தல் என்றது இன்பம் பயந்து நிற்கும் இயல்புநோக்கி. பிரிதலைச் சாதல் என்றது துன்பம் விளைந்து நிற்கும் தொடர்பு கருதி. தன் தலைவி பிரிந்துநின்றபொழுது உதயணன் 'அரற்றியும், அயர்ந்தும், உரற்றியும், உயிர்த்தும், வீழ்ந்தும், எழுந்தும், தாழ்ந்தும், தளர்ந்தும், செருவடு செங்கண் தெண்பனி சிதறி, உருவுடை அகலத் தாழும் உறைதாக், கோல இரும்பிடி குழிப்பட்டாழ, நீலவேழம் நினைந்துழன்றாங்கு, மாலை மார்பன் மாதரைக்காணாது, இன்னவை பிறவும் பன்முறை அரற்ற'' என்றபடி இன்னலுற்றுளைந்ததும், ஈண்டு எண்ணத்தக்கது.

மேல், காதலியைக் காணாதிருக்க முடியாதென்றான்; இதில் அவள் நீங்கினால் தாங்கருந் துன்பமாம் என்கின்றான்.

சிறந்த அணிகளையுடையாள் என்னுடன் கலந்திருக்கும் பொழுது உயிர்க்கு உடம்போடு கூடி வாழ்தல்போல் எனக்கு

இன்பமாயுள்ளாள்; பிரியுமிடத்து அவ்வுயிர் உடல் நீங்கிப்போதல் போல் துன்பமாகின்றாள் என்பதாம்.

உயிர், தலைவனுக்கும்; உடல், தலைவிக்கும்; வாழ்தல், கூடலுக்கும்; சாதல், பிரிதலுக்கும்; ஒப்பாக வந்துள்ளபடியை இதில் ஓர்ந்துணர்ந்துகொள்க.

உடம்பானது உண்டல், உடுத்தல், பூணல், புனைதல், காணல், கேட்டல் முதலிய எல்லா இன்பநலங்களுக்கும் இடமாய் நின்று உயிர்க்கு இதம்புரிந்துவருமாதலால் அது, இணைபிரியாது உடனமர்ந்திருந்து ஐம்புல இன்பங்களும் தலைமகனுக்கு ஆர அருளும் நீர்மையளாய தலைமகளுக்கு உவமையாய் வந்தது; இங்ஙனம் உயிர்க்கு இதமாய் நின்ற இவ்வுடம்பானது மரணம் நேர்ந்தபொழுது கரணங்கள் யாவும் கலங்கி நடுங்கக் கடுந்துயர் செய்யுமாதலால் அச் சாதல் தலைவி நீக்கத்துக்கு ஒப்பாய் வந்தது.

வாழுங் காலத்து யாதொரு வேறுபாடுமின்றி உயிர்க்கு இதமாய் நின்ற உடலானது சாங்காலத்துத் தாங்கருந் துயரமாய்ச் சார்ந்து நிற்றல்போல் கூடியிருக்கும்பொழுது பேரின்பம் பயந்து நின்ற காதலி பின்பு பிரியும் காலத்துக் காதலனுக்குக் கடுந்துயராகுமாதலால் "புணருமிடத்து உயிர்க்கு வாழ்தல் அன்னள்" எனவும், "நீங்கும் இடத்து அதற்குச் சாதல் அன்னள்" எனவும் கூறினர்.

புணர்வு பிரிவுகளை வாழ்தல் சாதல் என்று குறித்ததனால் அவை நிகழுங்காலத்துத் தலைவனுக்கு உளவாம் இன்பத் துன்பங்களின் அளவு காணலாகும்.

> "மயிலியல் பிரிந்தபின் மான நோயினால்
> அயில்விலன் ஒருபொருள்; அவலமெய்தலால்
> துயில்விலன் என்பது சொலற்பாலதோ
> உயிர்நெடி துயிர்ப்பிடை யூச லாடுவான்" (இராமாயணம்.)

சீதை பிரிந்தபொழுது இராமன் வருந்தியிருந்த படியிது.

"மத்துறு தயிரென வந்து சென்றிடை,
தத்துறும் உயிரொடு புலன்கள் தள்ளுறும்
பித்துநின் பிரிவினிற் பிறந்த வேதனை
எத்தனையுள அவை எண்ணும் ஈட்டவோ" எனத் தேவி நீங்கியபின் இராமன் ஆவி சோர்ந்துயர்ந்து நின்றபடியை அனுமான் அவளிடம் உரைத்துள்ளதும் ஈண்டுணரத் தக்கது.

தலைவி நீக்கம் தலைவனுக்கு அலகில் துன்பமாம் என்பது கருத்து. "நீங்கின் தெறூஉம், குறுகுங்கால் தண்ணென்னும்" (குறள் 1104) என்றதும் இங்கு எண்ணிக்கொள்க.

காதலி சிறிது பிரிய நேர்ந்தாலும் காதலன் பெரிதும் வருந்துவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பூருவசித்திபால் உணரப்படும்.

## கதை.

பூருவசித்தி என்பவள் தெய்வத் திருவுடையவள். மலரவன் ஏவலால் இந்நிலமிசைத் தோன்றினாள். ஒளியை நோக்கி விட்டில்கள் விழுவனபோல் இவளது எழிலை நோக்கி அமரர்களும் சுழன்று உளமழிந்து நின்றார். உருவம், பருவம், அறிவு, அழகு முதலிய உயர்நலங்களெல்லாம் இனிதமைந்திருந்த இவள் ஒருநாள் இமயச்சாரலில் ஒரு பூம் பொழிலிடைப் புகுந்து தனியே உலாவி நின்றாள். அங்கு அருந்தவங்கருதி அடைந்திருந்த அக்கினீத்திரன் என்னும் அரசன் இவளைக் கண்டான். அவன் பிரிய விரதன் என்னும் அரசர்பெருமானுடைய அருமைத் திருமகன். பேரெழிலாளன். பேராண்மையோடு ஊராண்மையுமுடையவன். இக் கட்டழகியைக் கண்டவுடன் கடுங்காதல் கொண்டான். கருதியதை மறந்து உளமுருகி நின்றான்.

"மழைகிழித் தெழுந்த மின்போல் வந்தனள் நின்றமாதின்
குழைகிழித் தொழுகுங் கண்ணும் குறுநகைப் பவளவாயும்
இழைகிழித் தெழுந்த கொம்மை இளமுலைத் தடமும் நோக்கி
அழலுயிர்த்தொளிரும் வேலான் ஆற்றலனுயினுனல்" (பாகவதம்)

இங்ஙனமாகி நின்ற அவனை இம் மங்கையும் காதலித்து மயங்கி நின்றாள். அவனது எழில்நிலையை நோக்கிக் களிமகிழ் வெய்தினாள்.

"அலையுறை அரியே யன்னான் அழகுவீற் றிருந்த மார்பும்,
வலைகடல் அவனி தாங்கி வரையெனப் பணைத்த தோளும்,
தலையவிழ்ந் தலரும் செய்ய தாமரைக் கண்ணும், உண்கண்
களிகொள நோக்கி நெஞ்சம் கலுழ்ந்தனள்; வியந்து நின்றாள்".

இவ்வண்ணம் நயந்து நின்ற இவளை அவ் அண்ணல் உவந்து நெருங்கினான். உளநிலையை ஓர்ந்தான்; நிலை கண்டு தேர்ந்தான்; நெஞ்சு மிளகினான்; இவ் வஞ்சியைத் தழுவினான். உளவுறிந்து இவனை அவன் தழுவி நின்றபடியை அடியில் பார்க்க.

"ஏந்தெழிற் பிறைவெண் கோட்ட இளங்களி யானை யன்னான்
கூந்தலம் பிடியினின்ற குறுநகைக் குமுதச் செவ்வாய்
மாந்தளிரன்னமேனி மழைமதர் நெடுங்கட் பேதை
சாந்தணிந்தேந்து கொம்மைத் தடமுலை தழுவினானே"(பாகவதம்)

கந்தருவமுறையில் இவ்வாறு இவளை அவன் கலந்து மகிழ்ந்தான். பின்பு உடன்கொண்டு சென்று உலகறிய மணந்து உவந்து நுகர்ந்தான். அரசபோகங்கள் அனைத்தையு மறந்து இவளது இன்ப நுகர்ச்சியில் அம் மன்னன் ஈடுபட்டிருந்தான். இவ் இருவரும் ஒருவராய் மருவி மகிழ்ந்து இன்பம் நுகர்ந்த நிலையைப்போகவுலகமும் புகழ்ந்து நின்றது.

"கோதையும் குழலும் பொங்கக் குவிமுலைக் குழங்கன் மாலைப்
போதுகப் பொருது பூணும் பொருகடல் மூர்த்தும் மூழ்கக்
காதலும் களிப்பு மிக்குக் கங்குலும் பகலும் விள்ளார்
சாதலும் பிறப்புமில்லாத் தன்மைபெற்றவர்கள் ஒத்தார்"

என்றபடி இன்பந் துய்த்து இவர் உளங்களித்திருந்தார். இங்ஙனம் இன்ப நிலையமாயிருந்த இவள்பால் நாபி, கிம்புருடன் அரிவருடன், இளாவிரதன், கேதுமாலன், பத்திராச்சுவன், இரம்மிகன், குரு, இரண்மயன், என மைந்தர் ஒன்பதின்மர் தோன்றினார். இவரே பின்பு இந் நாவலந் தீவை நவகண்டங்களாகப்

பிரிந்துத் தனித்தனி ஆண்டுவந்தார். இப் பூவலய முழுவதும் பொதுவறப் புரந்திருந்த அக் காவலன் தன் கருத்துமுற்று இவள் பால் போக நுகர்ந்துவந்தும் ஆவலடங்காமல் ஆர்வமுற்று நின் றான். இவள் சிறிது நீங்கினும் அவன் மறுகி ஏங்கினான். விதி வலியால் ஒருநாள் இவள் பிரிவுற நேர்ந்தது. இவள் நீங்கிய பொழுது அவன் ஏங்கி யலறினான். தாங்கருந்துயரொடு தரை யிற் சாய்ந்தான். பாங்கறியாது படருழந்துருண்டான். மத்தா லுள்ளுடைந்தலம்பும் தயிரேபோல் அவன் உயிர் பதைத்தான். இங்ஙனம் இடருழந்தயர்ந்த அவன் முடிவில் முடிந்து மறுமை யிலும் தொடர்ந்து இவளை மருவியிருந்தான். சேர்ந்துநின்ற பொழுது இன்பநிலையமாயிருந்த இவள் பிரிந்தபோது பெருந் துன்பமடைந்ததை நினைந்தபோதெல்லாம் அவன் நெடுந் திகி லடைந்தான். "ஆயிழை உயிர்க்கு வாழ்தலன்னள்; நீங்குமிடத்து அதற்குச் சாதலன்னள்" என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

இன்பம் விளையும் இவளிருப்பின் நீங்கினோ
துன்பம் வளரும் துதைந்து.

காதலி பிரிவு கடுந்துயராம்,என்பது இதனால் கூறப்பட்டது.

1125. மண்டுபுகழ்ச் சீராமன் மாறுமல் சீதையைய்க்
கொண்டுநின்றான் என்னே குமரேசா—கொண்டாடி
உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியேன்
ஒள்ளமர்க் கண்ணாள் குணம். (ரு)

இ.—ள்.

குமரேசா! சீதையின் குண நலங்களை யாதும் மறவாமல் இராமன் ஏன் நினைந்திருந்தான்? எனின், ஒள்ளமர்க்கண்ணாள் குணம் யான் மறப்பின் உள்ளுவன்; மறப்பு அறியேன் என்க.

இது, தலைவனது உள்ள நிலையை உணர்த்துகின்றது.

உள்ளுவன் = நினைப்பேன். உள்ளுதல் = நினைத்தல்.

ஒள் = ஒள்ளிய. அமர் = அமர்புரியும். கண்ணாள் = கண்களை யுடையாள். என்றது தலைவியை. ஒண்மையும் அமரும் கண்ணுக்கு அடையாய் நின்றன. இவ் இரண்டும் முறையே குணமும் செயலும் குறித்து வந்தன. ஒள்ளிய என்றது புறம் வெள்ளிதாய் அரி படர்ந்து தெளிவமைந்து களிபெருங் காமரோடு ஒளிமிகுந்திருத்தலான் என்க. அமர் என்றது மதர்த்துக் களித்து ஒளித்துச் செழித்து உளமுருக்கி நிற்றல் கருதி.

குணம் என்றது நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு முதலிய இனிய நீர்மைகளை. உரு என்னாது குணம் என்றது உருவ எழில்களினும் குணநலங்கள் தாம் எவரையும் மூர்த்தற நினைவுறச் செய்யுமாதலால் அவ் இயல்புநோக்கி என்க.

"தன்னையான் முகத்தைநோக்கின், தான்முலை முகத்தைநோக்கும்;
பின்னையான் பலவும் பேசின், தான் ஒன்றுமிழற்றும்; பைம்பூட்
பொன்னவாம் சுணங்குபோர்த்த பொங்கிள முலையினாளென்
முன்னையாள் போன்றுதத்தை முகத்துனே தோன்றுகின்றாள்"

என ஆன்ற காதலோடு காந்தருவதத்தையின் குணங்களைச் சீவகன் இதில் உள்ளியுள்ளமை காண்க.

மேல், தலைமகளைச் சிறிதும் பிரிந்து நில்லேன் என்றான்; இதில், ஒருபொழுதும் அவளை மறந்திரேன் என்கின்றான்.

ஒள்ளியவாய் அமர்செய்யுங் கண்களையுடையாளது குணங்களை யான் மறந்தேனாயின் நினைப்பேன்; யாண்டும் மறத்தலை அறியேனாகலான் நினைத்தலையும் அறியேன் என்பதாம்.

இணை பிரியாது உடனமர்ந்திருந்த தலைமகன் இடையே பிரிந்து வினைசெயல் கருதி வெளியே சென்றிருந்தான்; சென்றவன் சின்னாட் கழிந்து மீண்டுவந்தான்; வந்தவனை ஆர்வத்தோடு அமர்ந்து நோக்கித் தலைமகள் உவந்து போற்றினாள்; அவன் மகிழ்ந்திருந்தான்; அருகே நின்ற தோழி அவனை முகஞ்செய்து நோக்கி "போனவர்கள் வர இவ்வளவு நாளா? மறந்துவிட்டீர்கள் போலும்! நீங்கள் பிரிந்திருந்தபொழுது எங்கள் தலைவியை நினைந்ததுண்டா?" என்று கனிந்த அன்போடு புலந்து மொழிந்தாள். அதற்கு அவன் "ஏதாவது இடையே மறந்தாலல்லவா

நினைப்பேன்; ஒருபொழுதும் இவளை யான் மறந்தறியேன்'' என அவளிடம் தன் மனநிலையை அவன் உரைத்தபடி யிது.

எப்பொழுதும் உள்ளத்தே இவளை உள்ளிநின்றேன் எனத் தன் உள்ளன்பினியல்பினை யுணர்த்திநிற்றலால் இது காதற் சிறப்புரைத்ததாயிற்று. மன் ஒழியிசை யுணர நின்றது.

தலைவியைக் குறித்துச் சொல்லுங்கால் ஒள்ளமர்க்கண்ணாள் எனத் தலைமகன் உள்ளிக்கொண்டது அக் கண்ணின் செயல் இயல்களால் அவன் மயலடைந்துள்ளமை யான் என்க. தலைநாளில் தன் உள்ளங் கவர்ந்து நின்றதை உள்ளாது ஒழித்துவிடல் ஒல்லாதன்றோ? ஒள் அமர் என அடைகள் பல கொடுத்தது அளவிடலரிய அதன் நிலைகளை நினைந்து.

''களிப்பன, மதர்ப்ப, நீண்டு சுழப்பினை அளப்ப, கள்ளம்
ஒளிப்பன, வெளிப்பட்டோடப் பார்ப்பன, சிலப்புள்ளூற
வெளுப்பன, கறுப்ப வான வேற்கண்ணாள் ஒருத்தி யுள்ளம்
குளிர்ப்பொடு காணவந்தாள் வெதுப்பொடு கோயில் புக்காள்''
வெதுப்பு = காமதாபம். (இராமாயணம்)

மிதிலை வீதியில் இராமன் பவனி வருங்கால் அவனைப் பார்க்க ஓடிவந்த ஒரு மங்கையின் கண்களை விளக்கி அவள் கருத்து நிலையைக் கம்பர் இதில் உணர்த்தியிருக்கும் அழகைப் பார்க்க.

''நின்ற அளவில் சென்றவள் முகத்தே
ஒன்றிய இயல்போடு ஒன்றுக்கு ஒன்றவை
ஒளித்தவும் போலும், களித்தவும் போலும்,
களித்தவுமன்றி விளித்தவும் போலும்,
வேல் என விலங்கும், சேல் என மிளிரும்,
மால் என நிமிரும், காலனைக் கடுக்கும்,
குழைமேல் எறியும், குமிழ்மேல் மறியும்,
மலரும், குவியும், கடைசெல வளரும்,
சுழலும், நிற்கும், சொல்வன போலும்,
கழுநீர் பொருவிச் செழுநீர்க்கயல்போல்,
மதர்க்கும், தவிர்க்கும், சுருக்கும், பெருக்கும்,
இவைமுதல் இனியன அவிகயப் பல்குறி
நவையற இருகண் சுவையொடு தோன்ற'' (பெருங்கதை)

பானவீகையின் கண்களைக் குறித்து இத்துணைத்திறல் காண்க. இவ்வகைக் காமர் நிலை யுடைமையால் "கண்ணுள்" என்றான்.

நான் மறப்பினும் என் மனம் இவளை மறந்து நில்லாதென்பான் "மறப்பு அறியேன்" என்றான். காதலியால் தனக்கு அமைந்துள்ள உறவுரிமையை உறுதிபெற இவ்வாறு உணர்த்தி நின்றது அவள் தெளிவுபெற என்க.

"யாயும் யாயும் யாரா கியரோ?
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்?
யானும் நீயும் எவ்வழி அறிதும்?
செம்புலப் பெயல்நீர் போல
அன்புடை நெஞ்சம் தாங்கலந் தனவே" (குறுந்தொகை 40)

கொடுப்பாரும் அடுப்பாரு மின்றி ஊழ்கூட்ட வந்து தாமே கலந்த காதற் கிழமையுடையேமாதலால் என் நெஞ்சம் இனி யாண்டும் நின்னை மறந்தறியாது என்று ஓர் தலைமகன் பிரிவஞ்சி நின்ற தலைமகளுக்கு உரைத்திருக்கு நிலையை இதில் ஊன்றிப் பார்க்க.காதலன் புறத்தே பிரிந்திருந்தாலும் காதலியை அகத்தே மறந்திரான என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இராமன்பால் உணரப்படும்.

## கதை.

சீதையைப் பிரிந்திருந்தபொழுது பெருந்துயருடையனாய் இராமன் மிக வருந்தி நின்றான். அயிற்சுவை துறந்தான்; துயிற்சுவை மறந்தான். கண்டவிடங்களெங்கும் அவளுருவையே கருதி யுளைந்தான். கோதாவிரி முதலிய நதிகளை நோக்கியும் மலைகளைப் பார்த்தும் மான்களை விளித்தும் மயில்களை அழைத்தும் அன்னங்களைக் கூவியும் தன் தேவியைக் கண்டதுண்டா? என்று இவன் ஆவி குலைந்தான். பம்பைப் பொய்கையை யடைந்த பொழுது அந் நீர் நிலையில் படர்ந்திருந்தமலர்களைப் பார்த்துத் தலைவியை நினைந்து நிலைதிரிந்தயர்ந்து உளமுருகி நின்று இவன் பல பல மொழிந்தான். சில அடியில் வருவன காண்க.

"பொன்பால் பொருவும் விரையல்லிபுல்லிப் பொலிந்த பொலந்தாது
தன்பாற்றழுவும் குழல்வண்டு தமிழ்ப்பாட்டு இசைக்குந் தாமரையே!
என்பால் இல்லை அப்பாலோ இருப்பாரல்லர்; விருப்புடைய
உன்பால் இல்லை; என்றக்கால் ஒளிப்பாரோடும் உறவுண்டோ?

ஒருவாசகத்தை வாய்திறந்திட் டுதவாய் பொய்கை யுள்ளொடுங்கும்
திருவாயனைய சேதாம்பற்கு அயலேகிடந்த செங்கிடையே!
வெருவா வெதிர்நின்றழு துயிர்க்கும் வீழிச் செவ்விச் செங்கனிவாய்
தருவாய்! அவ்வாய் இன்னமிழ்தும், தண்ணென் மொழியும் தாராயோ.

அலக்கணுற்றேற் குற்றுதவற் கடைவொன்றுண்டோ கொடிவள்ளாய்!
மலர்க்கொம்பனைய மடச் சீதை காதே மற்றொன்றில்லையால்
பொலக்குண்டலமும் கொடுங்குழையும புனைதாழ் முத்தின் பொற்றோடும்
விலக்கிவந்தாய் விளம்பாதே இன்னும்பூசல் விரும்புதியோ?

ஓடாநின்ற களிமயிலே! சாயற்கொதுங்கி உள்ளழிந்து
கூடாதாரிற் றிரிகின்ற நீயும் ஆகம் குளிர்ந்தாயோ?
தேடாநின்ற என்னுயிரைத் தெரியக் கண்டாய் சிந்தை யுவந்து
ஆடாநின்றாய் ஆயிரங்கண்ணுடையாய்க்கு ஒளிக்குமாறுண்டோ?

அடையீரெனினும் ஒரு மாற்றம் அறிந்த துரையீர்! அன்னத்தின்
பெடையீர்! ஒன்றும் பேசீரோ? பிழையாதாற்குப் பிழைத்தீரோ?
நடைநீர் அழியச் செய்தாரே நடுவிலாதார் நணியவரோடு
உடையீர் பகைதான் உமைநோக்கி யுவக்கின்றேனை முனிவீரோ."

(இராமாயணம்)

சீதையை நினைந்து தெருமந்து நின்று சிந்தை குலைந்து இராமன் உரையாடியிருக்கும் திறங்களை இதில் ஊன்றி யுணர்ந்து கொள்க. தலையாய காதலர் தணந்துநின்ற காலத்துத் தவித்து நிற்கும் நிலை இதனால் இனிதறியலாகும். இன்னவாறு மறுகி யலைந்து நாளும் இவன் உருகியிருந்தான்.

"மயிலும் பெடையும் உடன் திரிய, மானும் கலையும் மருவி வரப்,
பயிலும் பிடியும் கடகரியும் வருவ, திரிவ, பார்க்கின்றான்;
குயிலும் கரும்பும் செழுந்தேனும் குழலும் யாழும் கொழும்பாகும்
அயிலும் அமுதும் சுவைதீர்த்த மொழியைப்பிரிந்தால் அழியானே?

தலைவியைப் பிரிந்து இவ் வகை நிலை யழிந்திருந்த இத்தலைமகன் முடிவில் வந்து அவளைக் கண்டபொழுது இருவருள்ளத்

தும் கொண்ட உவகையை யார் கூறவல்லார்? பிரிந்திருந்த காலத்தில் என் நாயகன் என்னை எப்போதாவது நினைந்திருப்பாரா? என்று அந் நாயகி உளைந்துநின்றபொழுது அனுமான் மொழிந்து நின்ற படியை அடியில் பார்க்க.

"தேண்டிநேர் கண்டேன் வாழி தீதிலன் எங்கோன் ஆகம்
பூண்டமெய் யுயிரே போகப் பொய்யுயிர்போல நின்ற
ஆண்டகை நெஞ்சில் நின்றும் அகன்றிலை; அழிவுண்டாமோ
ஈண்டுநீ இருந்தாய் ஆண்டங்கு எவ்வுயிர்விடும் இராமன்"

இதில் அனுமான் உரைத்திருக்கும் அழகும், அவனது சொல்வன்மையும், யாதும் மறவாமல் சீதையை இராமன் உள்ளியிருக்கும் உண்மையும், உள்ளக் காதலும், உயிர்க்கேண்மையும் உணர்ந்து மகிழத்தக்கன. ஒள்ளமர்க் கண்ணாள் குணங்களை யாண்டு மறவாது என்றும் உள்ளுவன் என்னும் உண்மையை உலகம் காண இக் குலமகன் உணர்த்தி நின்றான்.

ஆவியின்றி நில்லா அரும்பெறல்மெய் யானுமென்
தேவியின்றி நில்லேன் செழித்து.

பிரிந்திருந்த காதலன் நினைந்து நின்ற நிலை இதனால் கூறப்பட்டது.

---

1126. காந்தருவ தத்தையேன் காதலனைக் கண்ணுள்ளே
கூர்ந்துவந்து கொண்டாள் குமரேசா—சேர்ந்தென்றும்
கண்ணுள்ளிற் போகார் இமைப்பிற் பருவரார்
நுண்ணியரெங் காத லவர். (சு)

இ—ள்.

குமரேசா! தன் காதலனாகிய சீவகனைக் காந்தருவதத்தை என் கண்ணுள்ளே கருதி நின்றாள்? எனின், கண் உள்ளிற் போகார்; இமைப்பில் பருவரார்; எம் காதலர் நுண்ணியர் என்க.

இது, தனித்துள்ள காதலியின் தன்மை கூறுகின்றது.

கண் உள்ளிற் போகார் = கண்ணுள் நின்றும் நீங்கார்.

இமைப்பின் = இமைப்பேமாயின். இமைத்தலாவது கண்ணின் மேல் இமையானது கீழ் இமையோடு பொருந்தி யெழுதல்.

பருவரார் = வருந்தார். பருவரல் = வருத்தம், துன்பம். "பாவையும் படரொடு பருவரல் கொள்ள" (பெருங்கதை) "பருவரல் தீரக் கடவு மதிதேரே" (ஐங்குறுநூறு) "பார்மிசைப் பதைத்து வீழ்ந்தான், பருவரற் பரவை புக்கான்" (இராமாயணம்) இவற்றுள் பருவரல் உணர்த்திநிற்றல் காண்க.

நுண்ணியர் என்றது கண்ணுள் நிற்றற்கும், பருவராமைக்கும் உரிய நிலையை உணர்ந்துகொள்ள. பிறரெவரும் எளிதில் காணமுடியாதபடி நுணுகிய வடிவினராய் அணுகியுள்ளாராதலால் இவ் வுண்மையை யுணராமல் அவர் அகன்றுபோயினர் எனல் அறிவாகாதென்பதாம்.

"பாலொடுதேன்" என்பது முதலாக முன் ஐந்து குறள்களால் தலைவிமாட்டுத் தனக்குள்ள காதல் மிகுதியைத் தலைவன் உரைத்து நின்றான்; இதுமுதல் ஐந்து கவிகளால் அவனிடம் தான் கொண்டுள்ள காதல் நிலையைத் தலைவி உரைத்து நிற்கின்றாள் என்க. அது தலைவன் கூற்று. இது தலைவி கூற்று.

எம்முடைய காதலர் எமது கண்ணகத்து நின்றும் போகார்; இமைத்தாலும் துயருறார்; ஆதலால் அவர் மிகவும் நுண்ணிய வுருவினர் என்பதாம்.

கலந்திருந்த தலைமகன் காரியநிமித்தமாக ஒரு முறை வெளியே பிரிந்து சென்றான்; அப் பிரிவினை ஆற்றமாட்டாது தலை மகள் வருந்தி நின்றாள்; அந் நிலையினை அறிந்த தோழி உள மிக இரங்கி இவ்வாறு தனிவிட்டுப் போதல் தகவோ? என்று தலைவனை இகழ்ந்தாள்; தன் இன்னுயிர்க் காதலனை இங்ஙனம் அவள் இகழ்ந்து மொழிந்ததைக்கேட்ட தலைவி மனம் பொறாது மறுகி அவர் எங்கும் போகவில்லையே; இங்கேதானே தங்கியுள்ளார் என உழுவலன்போடு உரைத்தபடி யிது.

காதலனை இடையறாது எண்ணியிருத்தலால் அவனது உருவத் தோற்றம் காதலியின் கண்ணகத்தே கதித்து நின்றது;

ஆகலான் "கண்ணுள்ளிற் போகார்" என்றாள். கண் இமைத்த காலத்தும் அத் தோற்றம் யாதும் மறைவுறாது உள்ளத்தே ஊன்றி நின்றமையான் "இமைப்பிற் பருவரார்" என்றாள், இதனால் உள்ளக் காதலோடு அவனை இவள் உள்ளி நின்ற நிலை உணரலாகும்.

"விண்ணுளே எழுந்தமேகம் மார்பின் நூலின் மின்னொடும்
மண்ணுளே இழிந்ததென்ன வந்துபோன மைந்தனார்
எண்ணுளே இருந்தபோதும் யாவரென்று தேர்கிலேன்;
கண்ணுளே இருந்தபோதும் என்கொல் காண்கிலாதவே?"
(இராமாயணம்).

தன் கண்ணுள்ளும் எண்ணுள்ளும் இராமன் நண்ணியிருந்த நிலையைச் சீதை இதில் எண்ணி வியந்துள்ளமை காண்க.

புறத்தே பிரிந்திருந்தாலும் காதலனைக் காதலி கண்ணுள்ளே கருதி யிருப்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை காந்தருவதத்தைபால் உணரப்படும்.

## கதை.

காந்தருவதத்தை என்பவள் கலுழவேகன் என்னும் விஞ்சையர் வேந்தனுடைய அருமைத் திருமகள். பேரழகுடையவள். பல கலைகளையும் நன்கு பயின்றவள். இசை பாடுவதில் இவள் மிகவும் வல்லவள். இவளது வீணைகானம் அமரரும் வியக்கத் தக்க அற்புதமுடையது. தன்னை எவனொருவன் யாழில் வென்றானோ அவனுக்கே மாலை சூட்டுவதாக இவள் சூழ் செய்திருந்தாள். சூழ் வந்து கூட்ட இராசமாபுரத்தில் அரச சபையில் இவளது இசைவிழா நிகழ்ந்தது. அரசர் யாவரும் ஆர்வமீக் கூர்ந்து அவணடைந்திருந்தனர். தோழிகள் புடைசூழ யாழுடன் இவள் தொடர்ந்துவந்தாள். விழுமிய மணிமாடத்தின் இடையிட்டிருந்த எழிலாதனத்தில் இனிதமர்ந்தாள். இவளது வடிவழகைக் கண்டபொழுது முடிமன்னரெல்லாரும் மனமுருகி மறுகினர். மாலுரையாடினர்.

"செய்யதாமரை மேற்றிருவே கொலோ!
வெய்யநோக்கின் விச்சாதரி யேகொலோ!
மையில் வானவர் தம் மகளே கொல்! என்று
ஐய முற்றலர் தார் மன்னர் கூறினர்" (சிந்தாமணி)

இன்னவாறு அவர் ஏங்கியுளைய இவள் யாழிசைத்து இனிது பாடினாள்; இவளது இசையினைக் கேட்டு விலங்கினங்களும் மெய்ம் மறந்து நின்றன; பறவைகளும் பறவாதடங்கின; பொழில்களும் குழைந்து வளைந்தன; அருகே நின்ற பருத்த தூண்களும் பசுந் தளிர்களை யீன்றன.

"சிலைத்தொழிற் சிறுநுதற் றெய்வப் பாவைபோல்
கலைத்தொழில் படவெழீஇப் பாடினாள், கனிந்து
இலைப்பொழில் குழைந்தன; ஈன்ற தூண் தளிர்;
நிலத்திடைப் பறவை மெய்ம் மறந்து வீழ்ந்தவே"

சராசரங்களும் உருக இங்ஙனம் இவள் பாடியபோது அங்குக் கூடியிருந்த மாந்தர் குழைந்துளைந்தபடியை யார் கூற வல்லார்? மயங்கி நெளிந்தார்; மகிழ்ந்து பல மொழிந்தார்.

"கருங்கொடிப் புருவம் ஏறா; கயல்நெடுங் கண்ணும் ஆடா;
வருங்கடி மிடறும் விம்மாது; அணிமணி எயிறும் தோன்றாது;
இருங்கடற் பவளச் செவ்வாய் திறந்து இவள் பாடினாளோ?
நரம்பொடு வீணை நாவின் நவின்றதோ? என்று நைந்தார்"

வேந்தரனைவரும் இவ்வாறு வியந்து மயங்கினர்; இவளோடு எதிர்த்துப்பாட எவரும் துணிந்து வந்திலர். முடிவில் வந்து சீவகன் பாடினான். அவனது இசையினைக் கேட்டு இவளும் பரவசமாயினாள். மனமிக மகிழ்ந்து அவனுக்கு மாலை சூட்டினாள். அவன் மணந்துகொண்டுபோய் இவளது இன்ப நலங்களை இனிது மாந்தினான்.

"பஞ்சுசூழ் பரவையல்குற் பசுங்கதிர்க் கலாபம் வீங்கச்
செந்தளிர்க் கோதை சோரக், கிண்கிணி சிலம்பொடேங்க
மைந்தருட் காமன் அன்னான், மகளிருள் திருவன்னாளை
அந்தரத் தமரர் பெற்ற அமிர்தெனப் பருகினானே.

இளமுலை மணிக்கண் சேப்ப, எழுதுவிற் புருவம் ஏறக்,
கிளைநரம்பனைய தீஞ்சொற் பவளவாய் திகழத் தேன்சோர்
வளமலர்க் கோதை தன்னை வாய்விடான் குழையப்புல்லி
அளமரவிலாத இன்பக்கடலகத் தழுந்தினானே" (சிந்தாமணி)

இவளோடமர்ந்து இங்ஙனம் காம போகங்களை நுகர்ந்திருந்த அக் கோமகன் கருமச் சூழ்ச்சி கருதி ஒருமுறை வெளியே பிரிந்து சென்றான். அப் பிரிவிடை இவள் மிக மறுகியிருந்தாள். கூடியிருந்த காலத்தில் தன்பால் அவன் காட்டிவந்த காதல் நிலைகளைக் கருதி யுளைந்தாள்.

"பூமாலை சூடிற் பொறையாற்ரு நுண் மருங்குல்
ஏமாரா தென்றினைவார், எண்ணார் துறந்தார்;
எண்ணார் துறப்ப இனவளையும் தோள்துறப்ப
மண்ணார் வேற்கண் துயிலா தோழி! மருள்வேனோ?

வண்டூத அம் மருங்குல் கோமென்று பூமாலை
கொண்டோச்சும் காதலர், கூடார் துறந்தார்;
கூடார் அவர் துறப்பக் கோல்வளையும் தோள்துறப்பத்
தோடார் பூங்கண் துயிலா தோழி! துயர்வேனோ?" என

இன்னணம் இவள் பல பன்னியுளைந்தாள். இவளது துயர்நிலையை நோக்கித் தோழி ஒரு நாள் சிவகனைச் சீறி நின்றாள். "அளியுடையவர்போல் அளவளாவி யிருந்து இங்ஙனைப் பழிசெய்தகன்றாரே" என்று அவனைப் பழித்துரைத்தாள். தன் உள்ளக் காதலனை மேலும் அவள் எள்ளுவள் என்று அஞ்சி இவள் துள்ளி எழுந்தாள். எனது காதலர் எங்கும் போகவில்லை; என் கண்ணகத்தேயுள்ளார்; பிறரால் காணமுடியாதென்று கருதி மொழிந்தாள். பிரிவுத் துயரால் தாம் வருந்தியிருந்தாலும் தம் கொழுநனைப் பிறர் இகழ்ந்து கூறலைக் குலமகளிர் இசைந்து கேளார் என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

**காணு மிடமெங்கும் காதலரை யன்றியொன்றும்
காணேன் இதுவென்ன காண்.**

பிரிந்திருந்த காதலியின் பெருந்தகைமை இதனால் கூறப்பட்டது.

1127. காதலனைக் காணுமுன் கண்ணும் எழுதிலளேன்
கோதை சுவேதை குமரேசா—போதலர்ந்த
கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணும்
எழுதேம் கரப்பாக் கறிந்து. (எ)

பி—ரை.

குமரேசா! காதலன் பிரிந்திருந்தபொழுது தன் கண்களுக்கு அஞ்சனமும் எழுதாமல் கூவேலைவை என் கனுற்றிருந்தாள்? எனின், காதலவர் கண்ணுள்ளார் ஆகக் காப்பாக்கு அறிந்து கண்ணும் எழுதேம் என்க.

இது, காதலி அஞ்சனம் இட்டாமையை அறிவிக்கின்றது.

காதலவர் = எம்முடைய காதலர். கண் உள்ளார் = எமது கண்ணகத்தே அமர்ந்துள்ளார். ஆக = ஆகலான்.

கண்ணும் எழுதேம் = கண்களுக்குக்கூட அஞ்சனம் இட்டேம். உம்மை அதன் சிறப்புணர நின்றது. பெண்கள் கண்களுக்கு அழகுபெற மையிடுவராதலால் அதனை எழுதலென்றார். நெற்றிக்குத் திலகம்போல் கண்ணுக்கு மை அழகுதரும் என்க.

"வேற்றுருக் கொண்டு மாதின் விளங்குவாண் முகத்திற் சேர்ந்த
கூற்றினைத் தடங்கண் என்ன அஞ்சனம் குலவத் தீட்டிக்
கீற்றிளந் திங்களன்று; இளவொளி நுதலே; என்று
தேற்றுவார்போலச் செய்ய திலகமும் எழுதினாரே" (நைடதம்)

தமயந்தி கண்ணுக்கு மைஎழுதி யிருத்தலை இது குறித்து நிற்றல் காண்க. காப்பாக்கு அறிந்து = கரந்து படுதலைத் தெரிந்து. பாக்கு என்பது தல் அல் என்பனபோலத் தொழிற் பெயர் விகுதியாய் வந்தது.

மேல், காதலர்என்கண்ணுள்ளிருக்கும் நுண்ணியர் என்றாள். இதில், யிடையறாது அவரைக் கண்டிருக்கின்றேன் என்கின்றாள்.

காதலர் எப்பொழுதும் எம் கண்ணுள்ளார் ஆகலான் அவர் மறைந்துபடுதலை யறிந்து கண்ணிணையும் அஞ்சனத்தால் யாம் எழுதமாட்டேம் என்பதாம்.

இணைந்திருந்த காதலன் பிரிந்து சென்று தனது இனமடைந்து சின்னாள் மனமடங்கி யிருந்தான். ஒருவழித் தணந்து இங்ஙனம் அவன் நிற்குங்கால் தலைமகள் எண்ணெய் பூசாது, கண்ணும் எழுதாது தனியே ஏங்கியிருந்தாள்; அந் நிலையினை நோக்

யதோழி பொன்னணி முதலியன புனையாதொழியினும் கண்ணுக்குக் கூட அஞ்சனம் இடாமல் இவ் வந்நி இவ்வாறு வருந்த நேர்ந்ததே என்று தன் நெஞ்சுள் நினைந்து தலைமகனைப் பழிக்க நேர்ந்தாள்; அவ் வமயம் அதனைக் குறிப்பாலோர்ந்து அவள் கேட்கும்படி தனக்குள்ளேயே தலைவி சொல்லியபடியிது.

காலுக்குச் சிலம்பு, கைக்குத் தொடி, காதுக்குத் தோடு போல் கண்ணுக்கு மை அழகுசெய்யுமாதலால் அவ் இனிய கோலம் செய்யவும் காலமில்லை என்று தன்னிக் காதலனது காட்சியின்பத்தையே கருதியிருக்கும் இதனால் இவளது காதல்நிலை புலனும்.

> " மஞ்சு சூழ்வரை மார்பனைக் காணிய
> துஞ்சல் ஓம்புமின் என்னவும் துஞ்சினீர் !
> அஞ்சனத்தொடு மையணி மின்னென
> நெஞ்சின் நீணெடுங் கண்மலர் சீறினள்." (சிந்தாமணி).

தன் காதலனாகிய சீவகன் பிரிந்துநின்றபோது பதுமையார் புலம்பியிருந்தபடியிது. நீவிர் துயிலப்போக, அவர் அகலப் போனார்; இனி அஞ்சனம் எழுதி அலந்து கிடமின் எனக் கண்களை நோக்கி அவள்கலுழ்ந்திருந்தல் காண்க.

காதலர் என் கண்ணகத்தே உள்ளார்; அதற்கு மையிட்டு வேனுயின் அத்துணைக் காலமும் அவர் மறைந்துபட நேருமாதலால் அதனைத் துறந்துவிட்டேன் என்பாள் "கரப்பாக்கு அறிந்து கண்ணுமெழுதேம்" என்றாள்.

காதலரை இடையறாது யான் கண்டிருக்கின்றேனாதலால், அவர் காணதொளிந்தாரென்று வீணே பழி சொல்லல் கூடாதென்பது குறிப்பு.

தான் அல்லலடைந்திருந்தாலும் நல்ல குலமகள் தன் உள்ளக் காதலன்மேல் யாதொரு பிழையும் சொல்லப் பொருள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை சுவேதை பால் உணரப்படும்.

## கதை.

சுவேதை என்பவள் சந்திரகுலத் தோன்றலாகிய அம்சன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகள். தாய் பெயர் கௌரி. அரிய குண நலங்களுக்கெல்லாம் இவளோர் தனி நிலையமாய் இனிதமர்ந்திருந்தாள். பெருவனப்புடையவள். பருவமெய்திய பொழுது இவளது உருவ நிலையை நோக்கி உம்பரும் வியந்தார். பதினாறு வயதில் கலைபல நிரம்பித் தன் குலமுதல்வனாகிய பூரண சந்திரன்போல் இவள் பொலிந்து விளங்கினாள். வெண்ணிற மேனியளாதலால் இக் குலமகளைக் கண்டவரெவரும் கலைமகளின் அமிசம் எனக் களித்து மொழிந்தார். புனிதமான இவளது உருவநிலைக்கிசைய மகாசுவேதை எனப் பெயரிட்டார். சுவேதம் =வெண்மை. சுவேத வண்ணத்தையுடையவள் சுவேதையென்க. அறிவிலும் திருவிலும் சிறந்த இப் பேரழகி பருவம் நிறைந்த பின் தோழியர் சூழக் கன்னிமாடத்தில் களித்தினிதிருந்தாள். வசந்தகாலத்தில் ஒருநாள் ஓர் இனிய பூஞ்சோலையுள் புகுந்து மயில் நடங் கண்டு, குயிலிசை கேட்டு, மலர்சில கொய்து, நலமுற வுலாவி, முடிவில் வந்து அச்சோதம் என்னும் அழகிய நீர் நிலையை அணுகி, அயலே தழைத்துச் செழித்துத் தண் மணங் கமழ்ந்து குளிர்ந்து நின்ற ஓர் மகிழமர நிழலில் இவள் மகிழ்ந்து நின்றாள். அவ்வமயம் இனிய பரிமளம் ஒன்று அங்குப் பெரிதும் வீசியது. அவ் அரியவாசனை எவணிருந்து வருவதென நாற்புறமும் இவள் தலை நிமிர்ந்து பார்த்தாள். பார்க்கவே பாரிசாத மலர்க் கொத்தைக் கையிலேந்தி மோந்து வடகீழ்த்திசையிலிருந்து ஓர் கட்டழகன் வருவதைக் கண்டாள். அவன் சுவேதகேது என்னும் அந்தணனுடைய அருமைத் திருமகன். புண்டரிகன் என்னும் பெயரினன். பல கலைகளையும் வழுவறப் பயின்றவன். நல்ல சீலமுள்ளவன். அத் தலைமகனைக் கண்டவுடனே இக் குலமகள் உளமிக வுருகினாள். அவனும் இவளது எழில்நிலையை வியந்து மையல்மீக் கூர்ந்து மறுகி நின்றான். பருகு காதலோடு ஒருவரை ஒருவர் உருவ நோக்கினர். காதல் வெள்ளம் கரைபுரண்டெழ உள்ளமும் உணர்வும் ஒருநிலையின்றி உயிரொன்றி நின்று இரு

வரும் உவந்து நுகர்ந்தார். மாதரை மனத்திலும் நினையா திருந்த அவன் இவளது காதலின்பத்திற் கருத்தழிந்துநின்றான். ஊழ்கூட்டவந்து கந்தருவமுறையில் இங்ஙனம் கலந்து மகிழ்ந்த அவன் பின்பு கருமங் கருதிப் பிரிந்து சென்றான். செல்லுங்கால் அவனது ஜபமாலை இவளிடமும், இவளுடைய அரியமுத்து மாலை அவன் கையகத்தும் வகையறியா வகை மாறி நின்றன. தனித்தபோது இருவருந் தனித்தனி நுனித்து நோக்கினர். மாலை மாறி நின்றதை நினைந்து இருவரும் சாலவும் நாணினர். கபிஞ்சலன் என்னும் தோழனிடம் அவனோர் கவியினை எழுதி இவளிடம் உய்த்தான். அஃது அடியில்வருவது.

"உள்ளமும் உயிரும் ஒருங்குடன் கவர்ந்தோர் ஒளிமணி வடத்தினையுதவி மெள்ளவே அகன்ற வெண்ணகைத் துவர்வாய் மென்னடை அன்னமே! அமிர்தே! தள்ளரும் இன்பத் தனிப்பெருங்கடலே! தணந்துனைப்பிரிந்த நான் ஒரு மீன், வெள்ளம்விட்டயலே வீழ்ந்துலைவதுபோல் மெலிந்துயிர் குலைகின்றேன் மெய்யே"

என அவன் கைவைத்தெழுதிய இப் பாடலைப் பார்த்தவுடன் இப் பாவை பரிந்து பதைத்தாள். அவனது உழுவலன்பினை நினைந்து உள்ளமுருகினாள். உறவினரனைவரையும் ஒருங்கே மறந்தாள். இடையீடின்றி அவனையே எப்பொழுதும் எண்ணியிருந்தாளாதலால் திலகமிடுதல் கண்ணுக்கு மைபெழுதுதல் முதலிய கோலங்கள் யாதும் கொள்ளாதொழிந்தாள். அருகேயிருந்த தரளிகை என்னும் தோழி இவளது நிலையினை யறிந்து நெஞ்சம் இரங்கினாள்; பிரிந்துவாராதிருக்கும் அத் தலைவனை முனிந்து மொழிந்தாள். அவ்வமயம் இவள் கிளர்ந்தெழுந்தாள்; "காதலர் என் கண்ணுள்ளார் ஆதலால் அவர் காந்துபடுவார் என்றறிந்து நான் கண்ணும் எழுதாதுள்ளேன்; இவ் வுண்மையை உணர்ந்துகொள்ளாமல் என்னை அவர் பிரிந்துபோயுள்ளாரென நீ அவரை இகழ்ந்து கூறல் அறிவாகாது" என்று அவள் கேட்கும்படி தனக்குள்ளேயே இவள் உரைத்து நின்றாள். தாம் வருந்தினும் தம் காதலரைக் கோதுகூறக் குல மகளிர் சகியார் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

கண்ணுக்கு மையெழுதிக் காமரியல் செய்யகில்லேன்
அண்ணல் மறைவ தறிந்து.

காதலனைக் காதலி கருதியிருக்கும் வகை இதனால் கூறப்பட்டது.

---

1128. சீர்த்தி மிகுதிலக சேனையேன் உண்டலஞ்சிக்
கூர்த்தன்பு கொண்டாள் குமரேசா—போர்த்தமைந்த
நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்டல்
அஞ்சுதும் வேபாக் கறிந்து. (அ)

இ.—ள்.

குமரேசா! தன் தலைவனைப் பிரிந்திருந்தபோது திலக சேனை ஏன் சூடான உணவுகளை உண்ணுதொழித்து உளைந்திருந்தாள்? எனின், காதலவர் நெஞ்சத்தாராக வெய்து உண்டல் அஞ்சுதும் வேபாக்கு அறிந்து என்க.

இது, காதலன் பிரிந்தபோது காதலி இருந்த நிலை கூறுகின்றது. நெஞ்சத்தார் என்றது மனமே இடமாகக்கொண்டு மன்னியுள்ளார் என்றபடி. "இமைப்பொழுதும் என்னெஞ்சின் நீங்காதான் தாள் வாழ்க" என்று தன்னிகரில்லாத் தலைவனை மணிவாசகப்பெருந்தகை தழுவியிருந்ததுபோல் உழுவலன்போடு காதலி உள்ளிநின்றுளாதலால் "காதலவர் நெஞ்சத்தார்" என்றாள். காதலவர் = காதலையுடைய அவர். வெய்து = வெப்பமானது. அஃதாவது சுடுகின்ற உணவு சுடுகையை உணவுக்கோர் சிறப்பாகச் சூட்டியது என்னை? எனின், "சூடு ஒரு உருசி; சிவப்பு ஒரு அழகு" என்றபடி புதிய சுவை பயந்து நிற்கும் அதன் இயல்புணர்ந்தென்க.

வேபாக்கு அறிந்து = வேதலையுணர்ந்து. பாக்கு என்பது பெரும்பாலும் வினையெச்ச விகுதியாய் வரும். "வான்பான் பாக்கு இனவினை யெச்சம்" (நன்னூல்). இங்ஙனம் எச்ச விகுதியாய் வருகின்ற அது இங்குத் தொழிற்பெயர்விகுதியாய் நின்றது.

"படுபாக்கு" (குறள் 164), "கரப்பாக்கு" (குறள் 1127, 1129), வேபாக்கு" எனப் பாக்கு வந்துள்ளமையைப் பார்க்க.

மேல், காதலர் கண்ணுள்ளார் என்றாள்; இதில், நெஞ்சுள்ளார் என்கின்றாள். காதலர் எமது நெஞ்சத்துள்ளார் ஆதலால் அவர் வெய்துறலை அஞ்சிச் சூடான வுணவுகளை உண்ண யாம் அஞ்சுகின்றேம் என்பதாம்.

கலந்திருந்த நாயகன் பிரிந்து நின்றபோது அப் பிரிவுத் துயரால் பேதுற்றுள்ளாள் ஆதலால் இனிய பண்டங்களையும் நறுவிய உணவுகளையும் நயந்துண்ணாமல் அல்லும் பகலும் காதலி அல்லலுற்றிருந்தாள்; அவ் இருப்பினை நோக்கிய தோழி அயலே பாணித்து நிற்கும் அவனைப் பழித்துரைத்தாள்; அவ் வுரையினைப் பொறுக்க முடியாமல் அவள் உணர்ந்தடங்கும்படி தலைமகள் இவ்வாறு உரைத்தருளினாள் என்க.

காதலர் புறத்தே பிரிந்திருத்தலாற் றானே இனிதாகச் சமைத்த உணவையும் சுடச்சுட வுண்ணாது ஆறி அலந்துபோம்படி அகலவிட்டு அயர்ந்திருக்கின்றாய்! என்று தோழி புகல, அவர் எனது மனத்தகத்தே மகிழ்ந்திருக்கின்றார் ஆகலான் சுடுகின்றதை உண்டால் அச் சூடுபட்டு அவர் வருந்துவர் என்று பயந்து அதனைத் துறந்திருக்கின்றேன்; இவ் வுண்மையை உணர்ந்து கொள்ளாமல் உன் வாய்க்கு வந்தபடியெல்லாம் உளறுகின்றாயே! எனத் தலைவி வாயடி யடிக்கின்றாளாதலால் "காதலர் வேபாக் கறிந்து வெய்துண்டல் அஞ்சுதும்" என்றாள். கண் எழுதாமைக்குக் காரணம் முன்னர்க் கூறினாள்; உண்ணாமைக்கு ஏதுவை இங்கு உணர்த்தி நின்றாள்.

உண்ணும் உணவினும், பருகும் நீரினும் தலைமகனை மிக இனியனாகத் தலைமகள் எண்ணி நிற்பள் என்பது இதனால் இனிது புலனாம்.

காதலன்புறத்தே இருந்தாலும் அகத்தே யிருக்கின்றான் என நினைப்பின் முதிர்ச்சியால் அனைத்துப் பிடித்து யாதொரு குறையும் அவன்மேல் ஏறாது காத்து இனிது போற்றித் தன்

உள்ளக் காதலை இதில் உணர்த்தி நின்றுளாதலால் இது, காதற் சிறப்புரைத்ததாயிற்று.

தனித்திருப்பினும் காதலனை மனத்தகத்தேகொண்டு காதலி நினைத்திருப்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை திலகசேனைபால் உணரப்படும்.

**கதை.**

திலகசேனை என்பவள் அவந்தி நாட்டிலே உச்சைனி என்னும் நகரிலிருந்தவள். அந் நாட்டு மந்திரியாகிய சுதன்மனுடைய அருமைத் திருமகள். பரதகன் என்னும் மதிமானோடு உடன் பிறந்தவள். அதிகலை கற்றவள், எழில் நல மிக்கவள். அக் காலத்திருந்த அரசிளங்குமரிகள் பலரும் இவளது அழகமைதியையும், அறிவு நிலையையும், குண நலங்களையும் உள மகிழ்ந்து புகழ்ந்துள்ளார். மகளிர் இனத்தில் திலகம்போன்றிருந்தமையால் திலக சேனை என்பது இவளுக்குத் தகுந்ததுமென உலகுவந்து நின்றது.

"பரதகன் தங்கை பாந்தரி சிந்திய
மதரரி மழைக்கண் மடம்படு காரிகைத்
திலகசேனை என்று உலகறிபவள்" (பெருங்கதை)

எனப் புலவர் பலரும் இவளைப் புகழ்ந்து நின்றனர். இக் கட்டழகியை யூகி ஒருநாள் உவந்து கண்டான். அவன் வத்தவ தேயத்து மன்னனாகிய உதயணனுடைய முதன் மந்திரி. யாரும் எதிரிலாப் பேரறிவாளன். கருமச் சூழ்ச்சியில் எவரிடமும் அமையாது நின்ற அவன் இவளது வடிவழகிலீடுபட்டு உளமிக வுருகி உடனமைந்து நின்றான். இவளும் அவன் பால் உழுவலன்புடையளாய் உளங்குழைந்தமைந்தாள். இருவரும் ஒருவராய் இசைந்தமர்ந்தார். இன்புற்றிருந்தார். பின்பு உலகறிய மணந்து தன் நகரமாகிய கௌசாம்பிக்கு இவளை அவன் உடன் கொண்டு சென்றான். இவளது போகக் கடலில் புகுந்து திளைத்து மோகமீக் கூர்ந்து அவன் மூழ்கியிருந்தான்.

"பூந்துகில், பொருதிரை; பொம்மல் வெம்முலை,
ஏந்திய மணிவரை; இரக்கம், நீர்த்தரங்கு;
ஆய்ந்தவன் தோளிணை, நாகமாக வைத்து
ஈந்தது அக்கடல் அவற்கு அமுதம் என்பவே"

என்றவண்ணம் இவள் ஈந்த இன்பநலங்களை அவன் இனி மாந்தினன். ஐம்புல இன்பங்களும் ஆர நுகர்ந்து அன்புரையாடி நாளும் இவள்பால் ஆர்வமிகுந்தான். இங்ஙனம் இருந்துவந்த அவன் அரச காரியம் கருதி ஒருமுறை மறுபுலம் சென்றான். அப்பிரிவிடை இவள் பெருந்துயரடைந்தாள். உணவும் பிறவு மறந்து கணவனையே இவள் கருதி யுளைந்தாள். ஒளியிழந்த மணிபோல் உளமழிந்திருந்த இவளைப் பாங்கி ஒருநாள் பரிந்து நோக்கினாள். காதலனை நினைந்து இவள் நோதலுற்றிருந்தலை அவள் கண்டு தெளிந்தாள், கருதி யுளைந்தாள். பிரிந்துபோன அவனை வருந்தி யிகழ்ந்தாள். "விரைந்து மீளாமல் பெரும் போக்காக இப்படிப்போயமர்ந்தாரே!" என்று தூதியை அவள் பழித்துரைத்தபொழுது இவள் பரிந்து நாணினாள். என் காதலர் எனது நெஞ்சுள்ளே இனிதமர்ந்துள்ளார்; அவரது இயல்பினை யுணராமல் இகழல் நீதியன்று; என அவள் அறிந்தடங்கும்படி இவள் ஆர்வவுரையாடினாள். தன் தலைவன்பால் வைத்துள்ள காதல் நிலையை இக் குலமகள் உலகம்காண உணர்த்தி நின்றாள்.

கண்ணுள்ளும் நெஞ்சுள்ளும் காதலவர் வீற்றிருக்க
நண்ணலில ரென்றல் நவை.

தலைமகளது ஆர்வநிலை இதனால் கூறப்பட்டது.

1129. கன்னி மனோரமையேன் கண்ணிமையா தன்றிருந்து
கொன்னே முனிந்தாள் குமரேசா—மன்னி
இமைப்பிற் கரப்பாக் கறிவல் அனைத்திற்கே
ஏதில ரென்னுமிவ் வூர். (கூ)

இ—ள்.

குமரேசா! இமையாதிருந்த மனோரமை என் தனது காதலரை இகழ்ந்தவரை எதிர்ந்து முனிந்தாள்? எனின், இமைப்பின் காப்பாக்கு அறிவல்; அனைத்திற்கே இவ்வூர் ஏதிலர் என்னும் என்க.

இது, காதலி கண் இமையாமைக்குக் கருத்துரைக்கின்றது.

மன்னி = மடித்து. கொன்னே என்றது முனியாமைக்குக் காரணமில்லாதிருந்தும் முனிந்து மொழிந்தமை கருதி.

இமைப்பின் = கண்கள் இமைக்குமாயின்.

காப்பாக்கு = மறைதலை. அறிவல் = அறிவேன். அல் விகுதி தன்மை யொருமையில் தனிவந்து நின்றது.

ஏதிலர் = அயலார்; ஏதும் தொடர்பில்லார் என்றபடி. இங்கு அன்பில்லார் என்பதாம். இவ்வூர் ஏதிலர் என்னும் = இவ்வூரார் எம் காதலரை அயலவர் என அலர் கூறுகின்றார்.

மேல், உண்ணுதிருக்கும் உண்மையை யுரைத்தாள்; இதில், துயிலாதிருக்கும் இயல்புணர்த்துகின்றாள்.

கண்கள் இமைக்குமாயின் என் காதலர் மறைதலை அறிவேனாதலால் யான் இமையாதிருக்கின்றேன்; அவ்வளவிற்கே இவ்வூரவர் அவரை அன்பில்லார் என்கின்றார் என்பதாம்.

நாயகன் பிரிந்துநின்றபோது கண்துயில் கொள்ளாது நாயகி வருந்தியிருந்தாள்; அங்ஙனம் விழித்த கண் இமையாது பதைத்திருத்தலைக் கண்ட தோழி வருத்தமீக் கூர்ந்து "இப்படிப் பதைத்துழலவிட்டு அவர் பாணித்து நின்றாரே; முன்பு உள்ளன்புடையவர்போல் வல்லன பலபேசிப் புல்லி நுகர்ந்தார்; இப்பொழுது கள்ளம் புரிந்து கையகலச் சென்றார்; மிகப் பொல்லாதவர்; அன்புரிமை யாதும் இல்லாதவர்;" என இன்னவாறு பலப்பல கூறி அவனைப் பழித்திகழ்ந்தாள்; அவ்வமயம் அவள் கேட்கும்படி தலைவி உரைத்த பாசுரமிது. தன்னிலைக்கு இரங்கித் தன்பால் வைத்த அன்பால் தலைமகனைப்பழித்த தோழியை நோக்கித் தலைமகள் உரைக்கின்றாளாதலால் இதில் என்கின்றாய் நீ என நேரே கூறாது "என்னும் இவ்வூர்" எனப் படர்க்கையில்

வைத்து ஒரு போக்கின்படும்படி பதுங்கி யுரைத்தது என்னை? எனின், உண்மையில் அவனைப் பிரிந்த துயரினால் உணவு செல் லாமல், உறக்கம் இல்லாமல் இளைத்திருக்கும் அதனை மறைத்து வேறு காரணங்களைக் கற்பித்து அவள் தேறுமாறு கூறுகின்றா ளாதலால் இவ்வாறு சாடையாகச் சொன்னாள் என்க. தன் னுடன் பழகியிருக்கும் தன் இயல்பினை யுணராமல் காதலனை இகழ்ந்ததை நினைந்து புலந்து மொழிகின்றாளாதலால் அவனை அயலாக வைத்து இவ்வாறு அறைந்து நின்றாள்.

காதல் நிலையும் மாதரியல்பும் இதனால் ஒருங்குணரலாகும்.

காதலன் பிரிந்திருந்தால் காதலி துயிலுங் கொள்ளாது வருந்தியிருப்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை மனோரமையால் உணரப்படும்.

கதை.

மனோரமை என்பவள் அவந்தி நாட்டிலிருந்த சந்திரவர்மன் என்னும் குறுநில மன்னனுடைய அருமைத் திருமகள். கண் டவருள்ளங்களையெல்லாம் கொள்ளைகொள்ளத்தக்க கட்டழகு வாய்ந்தவள். அமைதியும் பணிவும் அடக்கமுமுடையவள். இனிய மொழியினள். உருவிலும் குணத்திலும் உயர்ந்திருந்தாளாத லால் உலகம் இவளைப் புகழ்ந்து நின்றது. தன் பெயரியல்புக் குத் தக்கபடி எவர் மனத்தும் இவள் இன்புறுத்தி நின்றாள். பருவம் எய்தியவுடன் இவளது உருவநிலைக்குத் தக்க வரனை ஓர்ந்து நாடித் தாய் தந்தையர் உளைந்து நின்றார். தகுந்தவரன் அமையவில்லை. முடி மன்னர் பலரும் இவளைக் கடி மணம் புரியக் காதலித்து வந்தும் அவருள் எவரையும் இவள் காதலி யாது நின்றாள். கனிந்த குமரியாய்க் கன்னிமாடத்தில் காந் திருந்த இவள் வசந்த காலம் ஒன்றில் நகர் மருங்கிருந்த பொழி லகம் புகுந்து எழில் வளங்களை நோக்கிக் கழிமகிழ்வோடு உலாவிவந்தாள். அவ்வமயம் அங்கு இயல்பாகவந்த சுகதரன் என்பவன் இவளைக் கண்டான். அவன் சிறந்த மதிமான். நல்ல அழகன். வழிவழியாக அவந்தி மன்னர்க்கு உழையிருந்து உறுதி கூறிவந்த அமைச்சர் மரபில் வந்தவன். அருந்திற

லுடையவன். பெருந்தன்மையாளன். இக் குல மகளைக் கண்ட வுடனே அத் தலைமகன் பெருங்காதலுடையனாய் உளமுருகி நின்றான். ஒருவரையும் விழையாது உறுதி பூண்டிருந்த இவளது உள்ளம் பள்ளம் பாயும் புனல்போல் அவன்பால் பாய்ந்து நின்றது. "வரிமுலை யோடுந் தோன்றி வளர்தொறும் வளர்ந்து வீங்கிப், பெருகுநாண் சுமக்கலாற்றாப் பெய்ம்மலர்க் கொம்பு போல்வாள், திருமுகம் சிறிது கோட்டிக் கயிற்புற மதனிற் றேங் கொள், விரி மலர்க் கூந்தல் தாழ மின்னென நுடங்கி நின்றாள்" இன்னவாறு உருகி நின்ற இவளை அவன் பருக நோக்கி அருகு நெருங்கினான். இவள் மருவ இசைந்தாள். இருவரு மகிழ்ந்தார். இன்பம் நுகர்ந்தார்.

> "புனைமலர்த்தாரினானும் போதணி கொம்பனாளும்
> நனைமலர்க் காவும் அந்தண் வாவியும் நல்ல வாடிச்
> சுனைமலர்க் குவளை குற்றுச் சூழ்மலர்க் கண்ணி கட்டி
> வினைநல நுகர்ந்து செல்வார் விதியினான் மிக்க நீரார்"

என்றபடி ஒக்க அமர்ந்து இவ் இருவரும் காம போகங்களை உவந்து நுகர்ந்து வந்தார். இங்ஙனம் உவந்து வருங்கால் இடையே ஒரு பெருங் காரியம் கருதி அவன் பிரிந்து சென்றான். அப் பிரிவிடை இவள் பெரிதும் வருந்தினாள். உணவும் கொள்ளாமல், உறக்கமுமில்லாமல் உளைந்திருந்தாள். தோழி அறிந்தாள். தணந்துநின்ற தலைவனை இகழ்ந்து மொழிந்தாள். "சிறிதும் இமையாமல் விழிமேல் விழிவைத்து மறுகியிருக்கும் இவளை அருளிவந்து பேணாது அகல நின்றார்; அன்பில்லார்;" என்று அவனைப் பழித்தபோது அவள் காதில் படும்படி இவள் சில பரிவுரையாடினாள். உள்ளிருக்கும் காதலர் கரந்துபடுவரென்று அறிந்து கண்ணிமையாதிருக்கின்றேன்; இவ் வுண்மையை உணராமல் ஊரார் தாறுமாறாக அவரை மாறுபடப் பேசுதல் சீராகாதென்று சீறி மொழிந்தாள். தாம் வருந்தினும் தலைவனை இகழ விடாது குல மகளிர் தழுவி மொழிவர் என்பதை உலகம் இவள் பால் உணர்ந்து நின்றது.

விழித்திருக்கும் உண்மை விளங்க வுணரார்
பழித்து வருவர் பலர்.
*காதலியின் கண்ணிலை இதனால் கூறப்பட்டது.*

1130. *ஏதிலரென் றெள்ளினரை ஏனோ குணமாலை*
*கோதிலர்காண் என்றாள் குமரேசா—போதா*
*உவந்துறைவ ருள்ளத்து ளென்று மிகந்துறைவர்*
*ஏதில ரென்னுமிவ் வூர்.* (ல)

*இ—ள்.*

குமரேசா! *தன் தலைவனை இகழ்ந்த தோழியரைக் குண மாலை ஏன் சினந்து வைதாள்? எனின், என்றும் உள்ளத்துள் உவந்து உறைவர்; இகந்து உறைவர்; ஏதிலர் என்னும் இவ்வூர் என்க.*

*இது, தன் கருத்தறியாதுரைத்தவரைக் காதலி வெறுத்துரைக் கின்றது.*

*உள்ளத்துள் = மனத்தகத்தே. உவந்து = மகிழ்ந்து. உறைவர் = தங்கியிருப்பர். இருப்பவர் யார்? எனின், காதலர் என்க. உவந்து என்றது உழுவலன்புடையராய் மகிழ்ந்திருக்கின் றார் என்பது தோன்ற. தன் உள்ளத்துள் உறைபவராது உள்ள நிலையை இஃதுணர்த்தி நின்றது.*

*இகந்து = நீங்கி. உள்ளத்துள் உறைந்திருக்கும்வரை வெளியே அகன்றுள்ளார் என அளியின்றி ஊரார் பழி சொல்லு கின்றார் என்று முன்னிலைப்புறமாக மொழிகின்றாளாதலால் "ஊர் சொல்லும்" எனப் பேர் சொல்லாது புலந்து நின்றாள். என் காதலரை ஏதிலர் என்பவர் எனக்கு ஏதிலரே என்பதாம்.*

*மேல், கண்ணுள் அமர்ந்துள்ளார் என்றாள்; இதில், கருத் துள் உவந்திருக்கின்றார் என்கின்றாள்.*

*எக்காலத்தும் காதலர் என் உள்ளத்துள்ளே மகிழ்ந்து உறையாநிற்பர்; இதனை அறியாது வெளியே பிரிந்திருக்கின் றார்; அன்பில்லார் என்று இவ்வூரார் அவரை வீணே இகழ்ந்து நிற்கின்றார் என்பதாம்.*

தலைவன் உறைவதற்குக் கண்ணையும், நெஞ்சையும், உள்ளத்தையும் இடமாகக் குறித்ததனால் அவனை உயிராதாரமாய் இவள் கருதியிருக்கும் உயர்நிலை புலனும்.

தன்னைத் தனியேவிட்டு அகன்றுபோயிருக்கும தலைமகனைத் தோழி பழித்தபொழுது "என் உள்ளத்துள் உவந்துள்ளவரை வெளியே பிரிந்துள்ளார் என்று பேதை யுலகம் பிதற்றுகின்றது" என அவள் காதில் படும்படி மோதிநின்று, ஆதரம் தோன்றக் காதலி உரைத்த பாசுர மிது. தோழி என்பவள் தலைவிக்கு மிக நெருங்கினவளாவள்; உடன்பிறந்தவள்போல் உரிமை மிக வுடையளாய் உயிரினும் அவளை உவந்து பேணுவள்; பெரும்பாலும் செவிலித்தாய் மகளே தோழியாய் வருவள். "தோழி தானே செவிலி மகளே" (தொல்காப்பியம்). என்பதுங் காண்க. இங்ஙனம் உயிர்க் கேண்மையுடைய அவளைச் செயிர்த்துரைத்தது தன் உள்ளக் காதலை எள்ளியதாலென்க. உடனிருந்து, உடனுண்டு, உடன் உலாவி, உடன் வளர்ந்து, இணை பிரியாதிருந்தும் தன் குறிப்பறியாமல், தான் உயிரெனக் கருதியிருக்குங் காதலனை வெறுத்துரையாடினமையால் வேறு பிரித்து ஊரோடு வைத்து இவ்வாறு உரைத்துநின்றாள். இதனால் இவளது காதல்நிலை தெளிவாம்.

இத்தகைய காதலின்கண் விளையும் இன்பமே மிகவும் சிறந்ததாகுமாதலால் காம புருடார்த்தத்தை எளிதடைந்து இனிது நுகர்வதற்கு இது ஏதுவாய் நின்றது. இதனை அறிஞர் காதற் காமம் என்பர்.

"காதற் காமம் காமத்துச் சிறந்தது;
விருப்போரொத்து மெய்யுறு புணர்ச்சி" (பரிபாடல்).

காதலையுடைய காமமே சிறந்ததென்று குறித்து அதன் இயல்பினை இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

காமபோகத்திற்கு ஏமமாய் நிற்கும் இக் காதலானது உயிர்களுக்கு உறுதிநிலையா யுள்ளுற அமைந்து உயர்நிலை தருதலால் இதனைக் கடவுள் உருவென்பர்,

"காதல் விரிநிலத்து ஆரா வகைகாணார்
சாதல் நன்று என்ப தகைமையோர்—காதலும்
ஆக்கி அளித்தழிக்கும் கந்தழியின் பேருருவே
நோக்கிலரை நோவ தெவன்." (இன்னிலை)

காதலின் தூய நிலையை உண்மை நிலையில் ஊன்றி யுணர்ந்தவர் அது கடவுள் வடிவு என்பர்; அதன் இயல்பினைத் தெளிவாக அறியாதார் வழுவாக நினைப்பர்; ஆதலால் அவரை நோவதால் பயனில்லை என இது நுவன்றிருத்தல் காண்க.

இத்தகைய உயரிய காதலை யியல்பாகவுடைய இருவர் நிலைகளை இனிது விளக்கியதால் இவ் அதிகாரம் காதற் சிறப்புரைத்தல் என நின்றது. களவு நிலையில் ஒரோவழி அகல இருப்பினும் காதல ரிருவரும் ஒருவரை ஒருவர் கண்ணுள்ளும் கருத்துள்ளும் கருதியிருப்பர் என்பது கருத்து.

வழுவி யகலினும் தலை மகனைக் குல மகள் தழுவி மொழிவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை குணமாலைபால் உணரப்படும்.

## கதை.

குணமாலை என்பவள் ஏமாங்கத நாட்டிலே இராசமாபுரத்திலே பெருந்திருவாளனாய்ச் சிறந்திருந்த குபேரதத்தன் என்னும் வணிகனுடைய அருமைத் திருமகள். தாய் பெயர் விநயமாலை. எழிலிலும் இசையிலும் இவள் புகழ்மிகப் பெற்றவள். பருவம் நிரம்பிய பின் வனமாலை, வசுந்தரி, நீலகேசி, பதுமதிலகை என்னும் தோழிகள் நால்வருடன் ஏழிசை பயின்று எண்டிசை புகழக் கன்னிமாடத்தில் அரமடந்தைபோல் இவள் இனிதமர்ந்திருந்தாள். வடிவழகைப்போலவே குண நலங்களிலும் உயர்வெய்தியிருந்த இக் குணமாலையை மணமாலை சூட்ட விழைந்து மன்னர் பலரும் மால் கொண்டு நின்றார். இவள் கண்கொண்டு யாரையும் கருதி நோக்காது கற்ற பாங்கியருடன் கலந்து கலையிலும் இசையிலும் காலாழ்ந்திருந்தாள். இங்ஙனம் இருந்து வருங்கால் அரசிளங் குமரனாகிய சீவகனை ஒருநாள் இவள் கண்

டாள். காமுற்றாள். அவனும் கழிபெருங் காதலோடு இவளை விழிகளிப்ப நோக்கி உளமுருகி நின்றான். உழுவலன்பினராய் இருவரும் இவ்வாறு மறுகி நின்று மறுகிடை நீங்கினர். நீங்கிய பின்னர் இவள் மிக ஏங்கியிருந்தாள். ஆடல் பாடல்களை அறவே மறந்தாள். துயிலும் துறந்தாள். மயலே மிகுந்தாள். காமதாபத்தால் இவளடைந்த கலக்கங்கள் பல.

> "பூவணை அமளிமேல் சேக்கும்; பொன்செய்தூண்
> பாவைதான் பொருந்துபு நிற்கும்; பற்பல்கால்
> ஆவியா அழலென வுயிர்க்கும்; ஐயென
> மேவிப்பூ நிலமிசை யிருக்கும் மெல்லவே; (க)
>
> பணித்தகு கோலமும் பந்தும் பார்ப்புறாள்;
> மணிக்கழங்கு ஆடலள்; மாமைதான் விளர்த்து
> அணித்தகை யாழினோடு அமுதம் விட்டொரீஇத்
> துணைப்பெரு மலர்க்கணில் துயிலும் நீங்கினாள்; (உ)
>
> திருந்துவேற் சீவக சாமியோ! எனும்
> கருங்கடல் வெள்வளை கழல்பவோ! எனும்
> வருந்தினேன் மார்புறப் புல்லு வந்து எனும்
> பொருந்துபூங் கொம்பனை பொருவின் சாயலே."
>
> (சிந்தாமணி)

இங்ஙனம் வருந்தியிருந்த இவள் முடிவில் ஒரு பசுங்கிளிளையை அவனிடம் தூது விடுத்தாள். அது சென்றிருந்தபோது இவள் நின்று பல நினைந்தாள். "சென்றது கொல்? சேர்ந்தது கொல்? செவ்வி யறிந்துரைக்கும் என்றுணைவி மாற்றம் இஃதென்றது கொல்?" என இன்ன வகையாக உன்னி யுளைந்து ஆசை வயத்தால் உளம் ஊசலாட இவள் அல்லலுற்று நின்றாள். அது சென்று மீண்டது. இவள் கண்டு மகிழ்ந்தாள்.

> "கண்டாள்; நெடிதுயிர்த்தாள்; கைதொழுதாள்; கையகத்தே
> கொண்டாள்; கிளைக்குரல்தான் சூடினாள் தாழ்குழல்மேல்;
> நுண்டார்ப் பசுங்கிளியை நோவ அகட்டொடுக்கி
> வண்தாரான் செவ்வி வாய்க் கேட்டாள்; தன் மெய்ம்மகிழ்ந்தாள்"

இவ் வகை மகிழ்ந்து நின்றபொழுது அதனிடம் அவன் எழுதி யனுப்பியிருந்த ஓலையைக் கண்டாள்; கடுக எடுத்தாள், களிந்து படித்தாள். அதனை அடியில் பார்க்க.

"கொடுஞ்சிலையான் ஓலை குணமாலை காண்க!
அடுந்துயரம் உள்சுட வெந்து ஆற்றேன் ஆற்ற
விடுந்த சிறுகிளியால் விம்மல் நோய் தீர்ந்தேன்;
நெடுங்கணாள் தானும் நினைவகல் வாளாக;

ஈட்டஞ்சால் நீணிதியும் ஈர்ங்குவளைப் பைந்தடஞ்சூழ்
மோட்டு வளஞ்சுரக்கும் ஊரும் முழுதீந்து
வேட்டார்க்கு வேட்டனவே போன்றினியவெய்மென்றோட்
பூட்டார்சிலை நுதலாட் புல்லா தொழியேனே;

குங்குமஞ்சேர் வெம்முலைமேல் கொய்தார் வடுப்பொறிப்பச்
செங்கயற்கண் வெம்பனியாற் சிந்தையெரி அவித்து
மங்கை மகிழ வுறையேனேல் வாளமருள்
பங்கப் பட்டார்மேல் படைநினைந்தே னாகென்றான்."
(சீவகன்.)

அத் திரு முகத்தை இவ்வாறு ஒருமுகமா யூன்றிப் படித்த பொழுது இவள் உளங்கொண்ட மகிழ்ச்சியை யார் உரைக்க வல்லார்? "நூல் புடைத்தாற்போற் கிடந்த வித்தகஞ்சேர் நுண் வரிகள், பால் மடுத்துத் தீந்தேன் பருகுவாள்போல் நோக்கிச், சேல்படுத்த கண்ணீர் சுமந்தளைஇ மெய்ம் மகிழ்ந்து, மால் படுத் தான் மார்பில் மணந்தாளே போல் மகிழ்ந்தாள்" இங்ஙனம் மகி ழ்ந்திருந்த இவளைக் களிந்த அன்போடு வந்து அவன் மணந்து மகிழ்ந்தான். இவளது இன்ப நலங்களை இனிது நுகர்ந்து உம்பர் பதிபோல் உளங்களி கூர்ந்தான். குழல் முடித்து அணி திருத்தி, ஒண்ணுதல் தடவிக், கண்ணழகை வியந்து குண நலம் பாராட்டிக் கழிபெருங் காதலோடு களிப்புற்றிருந்தான்.

"பண்ணடிவீழுந் தீஞ்சொற் பாவைநின் வனப்பிற்கெல்லாம்
கண்ணடி கருங்கண் என்னும் அம்பறாத் தூணி தன்னால்;
புண்ணுடை மார்பத் தோவா தெய்தியால் எங்குப் பெற்றாய்!
பெண்ணுடைப் பேதையென்றோர் நாண்முற்றும்பிதற்றினேனே"

அவசமாகி இவ்வாறு புகழ்ந்து போற்றிப் போகக் களிப்பில் அவன் பொங்கியிருந்தான். இணை பிரியாது இவளோடு அவன் மருவியிருந்ததற்கு உமையோடு சிவன் உறைந்திருத்தலை உவமை கூறியுள்ளார்.

"திங்கள்சேர் முடியினானும் செல்வியும் போன்று செம்பொன்
இங்குவார் கழலினானும் கோதையும் இருந்தபோழ்தில்"

என இங்ஙனம் ஒருவாதிருந்த அவன் இடையே பிரிவுற நேர்ந்தது. அவ்வமயம் இவள் பெரிதும் வருந்தினள். "அருந் துணையாகப் பொருந்தியிருந்த அவர் இவ்வண்ணம் வருந்தவிட்டுப் பிரிந்தகன்றாரே!" என்று பரிந்துநின்று தோழியர் புலந்து மொழிந்தார். உள மகிழ்ந்து என் உள்ளத்துள் உறைந்திருக்கும் வரைப் புறமகன்றார் என்ல் அறிவுடைமையன்று என அவர் அறிந்தடங்குமாறு இவள் அறைந்துநின்றாள். தலைமகன் இகந்திருந்தாலும் அவனை இகழ்ந்துபேசக் குலமகள் இடங்கொடாள் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

நெஞ்சே யிடமாய் நிலைத்துநின்ற ரீதறியார்
வஞ்சித்தார் என்பர் மறைந்து.

தலைமகனை இகழின் குலமகள் பொறாள் என்பது இதனால் கூறப்பட்டது.

---

இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்.

**தலைவன் உரைத்தது.**

காதலி இதழ்நீர் பாலொடு தேன் கலந்ததுபோல் சாலவும் இனிதாம். அவள் எனக்கு இன்னுயிரனையள். கண்ணுட் கருமணியாக அவளை யான் எண்ணியுள்ளேன். அவளுடனிருப்பது பேரின்பமாகும். என்றும் அவளை யான் மறந்தறியேன்.

**தலைவி உரை.**

கண்ணகத்தே என் காதலர் நண்ணியுள்ளார்; ஆதலால் என் கண்கட்கு அஞ்சனம் எழுதேன். அவர் என் நெஞ்சகத்து

உள்ளமையால் கூடான உணவுகளை யுண்ணேன். விழியுள் அமர்ந்திருக்கும் அவரை வெளியே பிரிந்திருப்பதாகத் தெளிவில்லாதவர் சொல்வர். என் உள்ளத்துள் உவந்திருக்குமவரை உறவில்லாதவர் என்பார் அறிவில்லாதவரே யாவர் என்பதாம்.

௱௰௩-வது காதற் சிறப்புரைத்தல் முற்றிற்று.

---

# 114ம் அதிகாரம்

## நாணுத் துறவுரைத்தல்.

அஃதாவது காதலன் காதலி என்னும் இருவரும் தம் நாணம் நீங்கி நின்ற நிலையினை அயலறியமொழிதல். துறவு = நீக்கம். **நாணுத் துறவு உரைத்தல்** என்றது நாணத்தின் நீக்கத்தைச் சொல்லுதல் என்றவாறு. இது காதல் மிகுந்தவிடத்து நிகழ்வதாகலான் காதற் சிறப்புரைத்தலின் பின் வைக்கப்பட்டது.

---

1131. தேசார் புரஞ்சனனேன் திண்மடலும் ஏறவன்று
கூசாது நின்றான் குமரேசா—ஆசார்ந்து
காம முழந்து வருந்தினார்க் கேமம்
மடலல்ல தில்லை வலி. (௧)

இ—ள்.

குமரேசா! புகழமைந்த புரஞ்சனன் ஏன் காமம் கதுவிய பொழுது யாதும் கூசாது மடல் ஏறத் துணிந்தான்? எனின், காமம் உழந்து வருந்தினார்க்கு ஏம மடல் அல்லது வலி இல்லை என்க.

இது, மடலின் நிலை கூறுகின்றது.

காமம் = காம இன்பத்தை. உழந்து = விழைந்து முயன்று. உழத்தல் = அரும்பாடுபடல்; கடுங் காதலோடு அலைந்து திரிந்து உளைந்து நின்றுறுதலால் அந் நிலை தெளிய உழந்து என்றான்.

ஏமம் = ஆதரவு. உறுதித் துணை என்றபடி.

மடல் = மடல்மா. அஃதாவது பனைமட்டையால் அமைந்த குதிரை என்க. இஃது ஆகு பெயர். பனையின் புறத்து

மடங்கி இதழ்போல் அடர்ந்திருத்தலால் இது மடல் என நின்றது. "மடலணி பெண்ணை யீன்ற மணி மருள் குரும்பை" (சிந்தாமணி) "வேர் தூர் மடல் குருகு பறியா நீளிரும்பனை" (பரிபாடல்) இவற்றுள் மடல் வந்திருத்தல் காண்க.

காமபோகத்தை விழைந்து முயன்று அஃதெய்தப் பெறாது வருந்தி நின்றார்க்குப் பெருந்துணையாவது மடலேயாகும்; அதனினும் சிறந்த வலியுடையது வேறு யாதும் இல்லை என்பதாம்.

தலைவியை எதிர்ப்பட்டுக் களவுநிலையில் கலந்துவந்த தலைமகன், இடையே நிகழ்ந்த காவல் மிகுதி முதலிய இடையூறுகளால் அவளை எளிது எய்தப் பெறாது பெரிதும் வருந்தினான்; தழையும் கண்ணியும் கொண்டு பலவகையிலும் சென்று பார்த்தான்; யாதும் பலியவில்லை; பின்பு தோழியைக் கண்டு தன் ஆற்றாமையை அவளிடம் அறிய உணர்த்தினான்: "காதலியைக் காட்டி யருள்க; அல்லது என்னுடன் கூட்டி விடுக; இன்றேல் என்னுயிர் கொள்ளைபோய்விடும்;" என இன்னவாறு பல பல பன்னி நின்றான். நின்றும் இவனது நோக்கம் தெளிய அவள் போக்குக் காட்டிவந்தாளேயன்றி ஒன்றும் பொருந்தச் செய்திலள்; தன்னால் இயன்றவரையும் முயன்று பார்த்து யாதும் முடியாமையால் முடிவில் உலகறியும்படி மடலேறியாவது அம் மடமங்கையை அடைவேன் என ஒருதலையாக உளந்துணிந்து கிளர்ந்தெழுந்து அவன் மொழிந்தபடியிது.

மடல் ஏறுதல் என்பது என்னை? எனின், தான் கருதிய காதலியைப் பெற விரும்பிய காதலன், அவளது உருவையும் பெயரையும் ஒரு படத்தில் வரைந்து, அதன்மேல் தன் ஊரையும் பேரையும் எழுதி, அதனைக் கையில் பிடித்துக்கொண்டு எருக்கம் பூமாலையைக் கழுத்தில் தரித்துப் பழுத்த இலைகளைத் தலையிற் சூடிப் பனைமடல்மேலமர்ந்து, அவளிருக்கும் ஊர் நடுவே ஊர்ந்து சென்று; நாற்சந்தியில் தங்கி, கிழியில் எழுதியுள்ள அவ்வுருவினையே நோக்கி, ஒரு மொழியும் பேசாமல், எவர் மொழியும் கூசாமல், பகலென நினையாது, வெயிலென முனியாது,

ஆவுரிஞ்சினும், அழல் கதுவினும் யாதும் அஞ்சாது உறுதி கூர்ந்திருப்பன்; இருக்கவே ஊரார் திரளுவர்; இவன் யார்? என மருளுவர்; மருண்டு திரண்டு நெருங்கிவந்து படத்தைப் பார்ப்பர்; பேரையும் உருவையும் நோக்கி இன்னார் மகள் என அவளை இனிது தெளிந்து, என்னே இது! என எண்ணி மயங்கிப் பின்னர் ஆராய்வர்; ஆராய உயிர்க் காதலோடு அவள்மேல் ஊன்றி நிற்கும் இவனது உள்ளநிலையை உணர்ந்துகொள்வர்; கொண்ட பின் இவன் உறுதி உண்மையை யிறுதிவரையும் அறுதியிட்டுச் சோதிப்பர்; அச் சோதனையில் அவள்பால் உழுவலன்புடையனாய் இவன் வழுவின்றி யிருப்பனாயின் அரசன் முதலாகப் பெரியோர் பலரும் வந்து பெற்றோரை யழைத்து உற்றதை யுரைத்து உலகறிய அவளை இவனுக்கு உவந்து கொடுப்பர் என்க.

மண்டிய காதலோடு தாம் கண்ட மங்கையைக் கொண்டு மகிழ்தற்கு இம் மடல் ஓர் உறுதித் துணையாயிருத்தலால் யாதும் முடியாவழி முடிவில் இதனைக் காதலர் அரிதிற் கைக்கொள்வர் என்க. மடலூர்பவர் குதிரைமேல் இருத்தல்போல் இரு கால்களையும் இடை பரப்பி மடலிடையமர்ந்து கருக்குமட்டையைக்கையில் பிடித்துக் கதித்திருப்பராதலால் இதனை மடல்மா என்பர். மடல் என்பது மட்டையின் அடிப்பாகம் என்க. முன் நீண்டு பின் விரிந்து முதுகு திரண்டிருத்தலால் ஏற்றத்திற்கு இது இதமாய் நின்றது.

இம் மடலேறுதலை எவரும் எளிதில் இசையார்; காம நோய் மீக் கூர்ந்து இனி உயிர்க்கு ஏமம் இல்லை யென்றபோதுதான் இதனை ஓர் ஏமமாக்கொள்ளுவர்.

முன்பு இன்பம் நுகர்ந்திருந்தவன் பின்பு பெறாது வருந்தி மிகவு முயன்று ஓர் உறுதியும் காணுமல் உள்ளுடைந்து நின்று இறுதியில் இம் மடலை நினைந்து உய்வுண்டென உளந்துணிந்தானதலால் "காமம் உழந்து வருந்தினார்க்கு ஏமம் மடல்" என மகிழ்ந்து மொழிந்தான். "மடல் அல்லது வலி இல்லை" என்றது பல வழியிலும் முயன்று பார்த்து ஒன்றும் பயன்படாமை கண்டு அனைத்தையும் இகழ்ந்து விடுத்து இறுதியில் இதனையே உறுதி

யாக உவந்துகொண்டானாதலால் தன் பற்றுக்கோட்டை இங்ஙனம் பாராட்டி நின்றான் என்க. "கணையார் விழிதந்த காமக் கடலைக் கடக்க நெஞ்சே, புணையாகக் கோடல் மடலன்றி வேறு பொருள் இல்லையே" (திருவாவடுதுறைக் கோவை). "வருந்தினேனுக்கு" என்று தன்மை பொருமையில் கூறாமல் "வருந்தினார்க்கு" எனப் படர்க்கையில் வைத்து உரைத்தது பண்டுதொட்டே பலரும் பயின்றுவந்துள்ளமை தோன்ற. கோவைத் துறையில் இதனை உலகின்மேல் வைத்துரைத்தல் என்பர்.

"காய்சின வேலன்ன மின்னியல் கண்ணின் வலைகலந்து
வீசினபோதுள்ள மீனிழந்தார் வியன் தென்புலியூர்
ஈசனை சாந்தும், எருக்கும் அணிந்து, ஓர் கிழிபிடித்துப்,
பாய்சினமாவென ஏறுவர் சீறூர்ப் பனைமடலே."

உள்ளம் மீன் = மனமாகிய மீனை. (திருக்கோவையார்)

"வாமத்துமைமகிழ் வெங்கை புரேசர் மணிவரைமேல்
தாமக் குவிமென்முலைமட்டு வார்குழற்றையல் நல்லாய்
நாமக் கடலைக் கலம் இவர்ந்தேறுவர் நானிலத்தோர்
காமக் கடலை மடல்மா இவர்ந்து கடப்பர்களே."

(திருவெங்கைக்கோவை)

"திருந்தார் தொழுங்கழற்சேயன்னவாணன் தென்மாறைவெற்பில்
அருந்தா அமுதன்ன அஞ்சொல் நல்லாரழகார் குழைதோய்
பெருந்தாரை வேல்விழி தந்தவெங் காமப் பிணிதனக்கு
மருந்தாவது நெஞ்சமே யில்லை வேறு மடலன்றியே"

(தஞ்சைவாணன்கோவை)

"சுழிகொண்டபொன்னிக்குமாரகுலோத்துங்க சோழன்வெற்பில்
வழிகொண்டபெண்ணை மடற்பரியேறி மலர்க்கணையே
பொழிகொண்ட விற்படை நீங்காது வீதி புகுந்து மின்னார்
விழிகொண்ட நம்மன மீட்பேம் இவ்வாறன்றி வேறில்லையே"

(குலோத்துங்கன்கோவை.)

"பூவேறினானும் அலையேறினானும் முன் போற்றிசைப்பச்
சேவேறி வந்தருள் கோடீச்சுரேசர் சிலம்பினிடை
நீவேறு கண்ணிக்கு அலையல் நெஞ்சே! இங்கு நீடுமடல்
மாவேறி மெள்ளப் பிடித்திடுவோம் அந்த வன்குயிலே."

சே = இடபம். (கோடீச்சுரக்கோவை.)

"பொருநெடுந்தானைப்புல்லார்தம்மைப்பூலந்தைப்போர்தொலைத்த
செருநெடுஞ் செஞ்சுடர் வேல் நெடுமாறன் தென்னாடனையாய்
அருநெடுங் காமம் பெருகுவதாய்விடின் ஆடவர்கள்
கருநெடும் பெண்ணைச் சேங்கேழ் மடலூரக் கருதுவரே."
(பாண்டிக்கோவை)

இவை யீண்டெண்ணற்குரியன. பெண்ணை = பனை. மடலின் தன்மையும், காமக் கடலுக்கு ஏமமாய் நிற்கும் அதன வன்மையும் இவற்றுள் உரைக்கப்பட்டுள்ளன காண்க. துறைப் பொருள் ஒன்றையே குறித்துவந்திருப்பினும் கவிகளின் கருத்து வேற்றுமைகள் நுனித்து நோக்கத்தக்கன.

மானம் வீரம் முதலிய சிறந்த குணங்களையுடையனாய் உயர்ந்திருக்கும் தலைமகன் மடலூர்தலாகிய இவ் இழிந்த செயலை எவ்வாறு துணிந்து செய்யும்? எனின், காமம் காழ்கொண்ட போழ்து யாவரேயாயினும் எதையும் செய்யத்துணிவராதலால் அதற்கோர் உய்தியாக அமைந்துள்ள இதனை அவன் செய்து கொள்வன் என்க.

"மாவென மடலும் ஊர்ப; பூவெனக்
குவிமுகிழ் எருக்கம் கண்ணியும் சூடுப;
மறுகி னார்க்கவும் படுப;
பிறிதும் ஆகுப; காமங்காழ்க்கொளினே" (குறுந்தொகை 17)

மடல் முதலாக இங்குச் சொல்லியனவே யன்றிச் சொல்லாதன பிறவும் செய்வர் என்பார் பிறிதும் ஆகுப என்றார். வரையேறி வீழ்ந்தும், நரையேறு தழுவியும், ஆழியுள் மூழ்கியும், அனலுட் குளித்தும் தாம் கருதிய காதலிகளைப் பெற்றுக் காமந் துய்த்து ஏமமுற்றாரையும் ஈண்டெண்ணிக் கொள்க.

இம் மடலேறலைத் தலைமகன் உடனே கைக்கொள்ளான்; தோழியிடம் சென்று ஏறுவேன் என்று அச்சுறுத்துவன்; அவள் அஞ்சித் தலைமகளைக்கொண்டுவந்து சேர்த்துவிடவும் கூடும் என்க.

களவுநிலையில் வள்ளித்தாயைக் கலந்துவந்த எம்பெருமான் இடையே சிறிது தடையுற்று எய்தப் பெறாதபோது தோழியிடம் மடலேறுவேன் என்று சொன்னதும், உடனே அவள்

வயந்திரங்கி நயந்து நிறுத்தி அம்மையைக் கொணர்ந்து உவந்துதவிச் சென்றதும் இங்கு உணரத்தக்கன. அடியில் வருவதும் காண்க.

"தோட்டின் மீதுசெல் விழியினாய்! தோகையோடு என்னைக்
கூட்டிடாயெனில், கிழிதனில் ஆங்கவள் கோலம்
தீட்டி மாமடல் ஏறி தும் ஊர்த்தெருவதனில்
ஓட்டுவேன்; இது நாளையான் செய்வதென் றுரைத்தான். (க)

ஆதி தன்மொழி துணைவிகேட்டு அஞ்சி ஐயர்க்கு
நீதியன்று தண் பனை மடல் ஏறுதல்; நீர் இம்
மாதவித்தருச் சூழலில் மறைந்திரும்; மற்றென்
காதன் மங்கையைத் தருவனென்றேகினள் கடிதின்". (2)

(கந்தபுராணம்)

இதில் மடல் நிலையும், பாங்கி உதவிநின்ற பாங்கும் பார்க்க.

இங்ஙனம் தோழியுடன் மொழிதலையன்றி அந் நகரிலிருக்கும் பெரியோர்களிடமும் தலைமகன் மொழிதலுண்டு. அவர் அருளுடையராதலால் மருளுற்று நிற்கும் இவனது நிலையினையறிந்து உளமிக இரங்கி உறுவன செய்து காதலியைக் கொணர்ந்து ஊரறிய மணம்புரிந்தருள்வர் என்க. பண்டு மடலேற நின்ற ஒரு தலைமகன் சான்றோரை நோக்கி யுரைத்துள்ளபடியை இதனடியில்வரும் கலிப்பாவில் காண்க.

"சான்றவிர் வாழியோ! சான்றவிர்! என்றும்
பிறர்நோயும் தம்நோய்போல் போற்றி அறனறிதல்
சான்றவர்க்கெல்லாம் கடனால் இவ் இருந்த
சான்றீர்! உமக்கு ஒன்று அறிவுறுப்பேன்: மான்ற
துளியிடை மின்னுப்போல் தோன்றி ஒருத்தி
ஒளியோ டுருவென்னைக் காட்டி அளியள் என்
நெஞ்சாறு கொண்டாள்; அதற்கொண்டும் துஞ்சேன்
அணியலங்கு ஆவிரைப் பூவோடு எருக்கின்
பிணையலங் கண்ணி மிலைந்து மணியார்ப்ப
ஓங்கிரும் பெண்ணை மடலூர்ந்து என் எவ்வநோய்
தாங்குதல் தேற்றா இடும்பைக்கு உயிர்ப்பாக

வீங்கிழை மாதர் திறத்தொன்று நீங்காது
பாடுவேன் பாய்மா நிறுத்து;
யாமத்தும் எல்லையும் எவ்வத் திரையலைப்ப
மாமேலே னென்று மடல்புணையா நீந்துவேன்
தேமொழி மாதர் உறாஅது உறீஇய
காமக் கடலகப் பட்டு;
உய்யா வருநோய்க்கு உயவாகும் மையல்
உறீஇயாள் ஈத்தஇம் மா;
காணுநர் எள்ளக் கலங்கித் தலைவந்தென்
ஆணெழில் முற்றி யுடைத்துள்ளழித்தரு,
மாணிழை மாதராள் ஏஎரெனக் காமனது
ஆணையால் வந்த படை;
காமக் கடும்பகையிற் றோன்றினேற்கு ஏமம்
எழில்நுதல் ஈத்த இம் மா;
அகையெரி யானாதென் ஆருயிர் எஞ்சும்
வகையினால் உள்ளம் சுடுதரு மன்னோ
முகையே ரிலங்கெயிற்று இன்னகை மாதர்
தகையால் தலைக்கொண்ட நெஞ்சு;
அழல்மன்ற காம வருநோய் நிழல்மன்ற
நேரிழை யீத்த இம் மா; ஆங்கதை;
அறிந்தன ராயிற் சான்றவிர்! தான்றவம்!
ஒரீஇத், துறக்கத்தின் வழீஇ யான்றோர்
உள்ளிடப்பட்ட அரசனைப் பெயர்த்தவர்
உயர்நிலை யுலகம் உறீஇயாங்கு என்
துயர்நிலை தீர்த்தல் நும்தலைக் கடனே". (கலி. 139.)

காமம் உழந்து வருந்திய தலைவன் முடிவில் மடல் ஏறத் துணிந்ததும், அத் துணிவினைச் சான்றோரிடம் உரைத்ததும், அவன் உரையாடுங்கால் இக் குறளின் பொருளை மருவித் தன் துயர நிலையையுணர்த்தியுள்ளதும், பிறவும் இதில் ஊன்றியுணர்ந்து கொள்க. காதல் மீறினால் சாதல் போல நோதல் செய்யு மாதலால் அந் நோவு தீரக் காதலர் யாதும் செய்வர் என்பது இதனால் அறிய நின்றது. நினைந்த காதலியை புணர்ந்து கோட

றகு மடலே வலி என்று துணிந்துகொண்டது உடனே அது பயன்றரல் கருதி. "அடலானவேல் விழி யார் கைகொடா விடில் ஆசை நெடுங், கடலான சோகச் சுழியூடகப்பட்ட காமுகர் தாம், மடலான தோணி கொண்டே நீந்திச் சேர்வர் மணக் கரைச்கே" என்பதும் காண்க.

எவ்வளவு அடலுடையனாயினும் காமம் கதுவியபோது நாணந்துறந்து மடல் ஏறத் துணிவன் என்பது இதில் உணர்த் தப்பட்டது. இவ்வுண்மை புரஞ்சனன்பால் உணரப்படும்.

கதை.

புரஞ்சனன் என்பவன் இற்றைக்கு ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர்ப் பாண்டி மண்டலத்தில் நவபுரம் என் னும் நகரிலிருந்தவன். சந்திரகுல வேந்தன். பகையடங்க வென்று உலகடங்கலும் ஒருகோலாச்சி இவன் உயர்ந்து நின்றான். சிறந்த அழகோடு அருந்திறலுடையனாய் விளங்கி நின்ற இவன் சுகந்தன் என்னும் தன் தோழனோடு கூடி அழகிய பொழிலிடை ஒருநாள் உலாவப் போனான். தனியே உலாவிவருங்கால் அங் கோர் மங்கையைக் கண்டான். மையல்மீக் கொண்டான். உளு மிக வுருகி அன்று இனைய பலபட மொழிந்தான்.

"கொண்டலிற் றாழ்ந்த நீலக்குழலும், நல்எழில் சேர் திங்கள்
மண்டலம் என்னத் தோன்று வதனமும், மதர்த்தகண்ணும்,
ஒண்டொடிக் கரமும், தண்முத் தாரிஞ்சு வெம்முலையும், காணத்
தெண்டிரை அமுதில் தோன்றும் திருவெனத் தெருமந்தானால்.

தாமரையின்று செங்கைத் தாமரை; மலரிற் றெய்வத்
தேமலரன்ன அஞ்செஞ் சீறடி நிலத்திற்றோயும்
பூமகளல்லள்; அம்ம! புவிமகள் ஆகுமற்றிக்
காமருகோதை என்று கருதினன்; களிப்புமிக்கான்." (பாகவதம்)

காதல் மிகுந்து இங்ஙனம் களித்து நின்ற இவனை அவளும் கனிந்து நோக்கினாள். நோக்கவே ஆக்கமுண்டென்று இவன் அருகு நெருங்கினான். அவள் நாணி முகங் கவிழ்ந்து நகைபுரிந்து நின்றாள். இவன் உருகி யுளைந்து மறுகி அணுகினான். உரை பல கூறினான். சில அடியில் வருவன காண்க.

மண்ணுங் கொங்கை மதம்படு வேழமே
எண்ணும் உள்ளம் இனிதுண்ணும்; அன்றியோர்
நன்னுந் தோளெனும் வேழமும் நல்லுயிர்
உண்ணுமாறென்? உரைமின் எனக்கரோ? (க)

பூட்டும் பூண்வெயிற் பூங்கதிர் காமத்தீ
மூட்டுமென்றி மொழிதரு சிந்தூரம்
தீட்டும் வாண்முகச் செவ்வி மதியமும்
வாட்டுமாறென்? உயிரை வழங்குமே. (உ)

அருள்விளக்கும் அமுதமன்னீர்! குழல்
மருள் விளக்கும்; அதன்றி மதிநிலாத்
தெருள் விளக்கும் சிறுநகை மைமலாம்
இருள்விளக்கும் இதென்கொல்? விளம்புமே. (௩)

முருக்கும் வண்ண முகத்தில் விழியென
இருக்கும் வெவ்விடமன்றி யெழிலுறற்
குருக்குந் திங்கட் குழவியும் உள்ளுயிர்
உருக்குமாறென்? எனக்கிங் குறையினே. (௪)

பாட்டு வண்டியிர் பைங்குழற் பொன்வரைக்
கோட்டின் வீங்கு குவிமுலைக் கொல்லுலைத்
தீட்டும் வேள்விழிச் சேயிழையீர்! இதழ்
ஊட்டுநாள் என்று? எனக்கு உரைசெய்ம்மினே." (௫)

இவ்வாறு இவன் கேட்டு நிற்குங்கால் சுகந்தன் இடையே வந்தான். அவள் கூசி யகன்றாள். இவன் ஆசை நோயால் அலமந்துழன்றான். சிலநாட் கழிந்தபின் அவளது தோழியைக் கண்டான். தன் உள்ளக் காதலை உரைத்து வருந்தினான். பொறுத்தருளுகென்று அவள் போக்குக் காட்டி வந்தாள். முடிவில் ஒருநாள் மடலேறுவேன் என்று இவன் மூண்டு நின்றான். அவள் இரங்கிச் சென்றாள். அத் தலைவியை இசைத்தருளினாள். அவளோடமர்ந்து இவன் அன்பின்பம் நுகர்ந்தான்.

"அள்ளலஞ் சேற்றில் தோன்றும் ஆடக்ப் பசும்பொற்றோட்டு
வள்ளவாய் முளரித் தேறல் வரிச்சிறை வண்டு வீழ்ந்து
கொள்ளைகொண்டுண்ணுமாபோல்கோற்றொடிகுமுதச்செவ்வாய்த்
தெள்ளமு தினிது மாந்தித் தெவிட்டலுயினுனல்". (பாகவதம்)

மடலேறத் துணிந்து அதனால் அவளை அடைந்து இவன் மகிழ்ந்துகொண்டதை அனைவரும் வியந்து புகழ்ந்தார். காமம் உழந்து வருந்தினார்க்கு மடல் ஏமம் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

காமக் கடலைக் கடக்க மடலன்றி
ஏமப் புணைவே றிலை.

காமமீக் கொண்டவர் மடலினைக் கைக்கொள்வர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1132. நாணின்றி யேனோ நருமன் மடலேறக்
கோணா தெழுந்தான் குமரேசா—ஏனோடு
நோனா வுடம்பும் உயிரு மடலேறும்
நாணினை நீக்கி நிறுத்து. (உ)

இ—ள்.

குமரேசா! நருமன் ஏன் நாணிழந்து மடலேறத் துணிந்தான்? எனின், நோனா உடம்பும் உயிரும் நாணினை நீக்கி நிறுத்து மடல்ஏறும் என்க.

கோணாது எழுந்தான் என்றது அவன் கூசாது சென்றமை கருதி.

இது, மடல் ஏறும் திறங் கூறுகின்றது.

நோனா = பொறாத. காமதாபத்தைத் தாங்கமாட்டாமல் தவித்து நிற்றலால் தன் உடல் நிலையை இவ்வாறு உரைத்து நின்றான். நோன்றல் = பொறுத்தல்.

நீக்கி நிறுத்து = அகற்றித்தள்ளி. நிறுத்தல் = தூர நிற்கச் செய்தல். உள்ளே நுழையின் மடலேற நாண் விடாது ஆதலால் அதனை இங்ஙனம் எட்ட நிறுத்தினான். நீக்கி என்றதோடு நில்லாமல் மேலும் நிறுத்து என்றதனால் நீங்கி ஒழிந்துள்ள அதன் நிலை தெளியலாம்.

மேல், காமநோயைத் தீர்த்தற்கு மடலே துணையென்று துணிந்தான்; இதில், அத்துணிவினைத் தெளிவுற வுணர்த்தி நிற்கின்றான்.

விரகதாபத்தைப் பொறுக்காத எனது உடம்பும் உயிரும், நாணினை அறவே தள்ளிவிட்டு மடலேறத் துணிந்து நிற்கின்றன என்பதாம்.

மடல் ஏறத் துணிந்த தலைமகனை நோக்கி நீங்கள் மிகவும் நாணமுடையவர்களாயிற்றே! இவ் இழிந்த செயலைச் செய்ய உங்கள் நெஞ்சம் எப்படித் துணிந்து நின்றது? என்று தோழி வியந்து மொழிய, அவ்வமயம் அவளைப்பார்த்து அவன் உரைத்த படி யிது.

நெடுநாளாகத் தோழியை நம்பியிருந்தவன் அவள் வழி வராமையை அறிந்து முடிவில் இழி செயல் செய்தேனும் தலைவியைத் தழுவ விழைந்தானாதலால் அவ் விழைவினை அவள் தெளிந்து கொள்ளும்படி இவ்வாறு மொழிந்து நின்றான்.

"எண்ணைவிட்டோங்கும் புகழாளர் வெங்கை இமயவெற்பில்
விண்ணைவிட்டெய்தும் இவட்டருவாய்! என மேவியுழும்
பண்ணைவிட்டு ஊர்தொறும் புக்கிரப்பாரின், பசியமட்ற்
பெண்ணைவிட்டு,ஓர்பெண்ணைநாம்வேண்டிநிற்பதுபேதைமையே"

பனைமடலைக் கைவிட்டு ஓர் மனையில்லாளிடம்போய்த் தலைவியைத் தருக என மறுகிநிற்பது மடமையென்று தோழியை வெறுத்து ஒரு தலைமகன் இதில் உரைத்திருத்தல் காண்க.

மடலேறலை உடலுயிர்மேல் வைத்துக் கூறியது அவை ஒருங்கியைந்து உடன்று நிற்கும் உறுதி தெரிய.

நாணமானது இழிந்த கருமங்களில் செல்லவொட்டாதபடி உயிர்களைத் தடுத்து நிறுத்துமாதலால் மடலேற மூண்டபொழுது அதனை நீக்கி நிறுத்த நேர்ந்தது.

மானமுடையவராயினும் காமமீறியபோது யாதும் நாணாது மடலேறுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை நருமன்பால் உணரப்படும்.

### கதை.

நருமன் என்பவன் மகத நாட்டிலிருந்த மானசேனன் என்னும் குறுநில மன்னனுடைய அருமைத் திருமகன். அருந்திறலாளன், சிறந்த கல்விமான். ஒரு நாள் இவன் ஆரியை என்பவளைக் கண்டான். அவள் பேரழகுடையவள். உதயணன் மனைவியாகிய பதுமாபதியின் உயிர்த் தோழி. அரிய கலையினள். இனிய மொழியினள். பந்தடித்தலில் மிக்கவும் வல்லவள். ஒரு முறை அவள் பந்தாடியிருக்கும் திறனை அடியில்வருந் தொடரில் பார்க்க.

"சீரியல் பதுமைதன் சிந்தைக்கு ஒப்பெனும்
காரிகை மயிலன் ஆரியை புகுதா,
நுணங்குகொடி மருங்கு நோவ அசைஇ,
மணங்கமழ் கூந்தல் வனப்பெற முடித்தும்,
சூடகம் ஏற்றியும், பாடகம் திருத்தியும்,
நாடக மகளிரின் நன்கனம் உலாவியும்,
இருகையும் அடிப்ப விசும்பொடு நிலத்திடை
திரிபுவீழ் புட்போல் ஒருவயின் நில்லாது
எழுந்து வீழ்பந்தோடு எழுந்துசெல்வனள்போற்
கருதரு முரிவொடு புருவமும், கண்ணும்,
வரிவளைக் கையும், மனமும் ஓட,
வரியார் மேகலை யார்ப்பொடு துளங்கவும்,
வருமுலை துளும்பவும், கூந்தல் அவிழவும்,
அரிமலர்க் கோதையோ டணிகலஞ் சிதறவும்,
இருந்தனள் நின்றனள் என்பதை அறியார்
பரந்த பஃறோள் வடிவின ளாகித்
திரிந்தனள் அடித்துத் திறத்துளி மறித்து,
முரியும் தொழிலொடு மூவாயிரங்கை
முறையி னேற்றிப் பந்துநிலத் திடலும்" (பெருங்கதை.)

இதனால் அவளது ஆடற்றிறனும், அழகமைதியும், இளமை நிலையும் இனிது புலனும். இத்தகைய அவளை இவ்வித்தகன் நோக்கி வியந்து காதலித்து நயந்து நின்றான், அவளும் இக் கட்டழகனைக் கனிந்து நோக்கினாள். கந்தருவ முறையிலிருவரும்

கருத்தோன்றி மகிழ்ந்தார். இங்ஙனம் மகிழ்ந்துவருங்கால் இடையே பெற்றோரால் அவள் தடைசெய்யப்பெற்றாள். அவளை அடைய விழைந்து பலபடியாக இவன் அலைந்து திரிந்தான். முடிவில் மடலேறத் துணிந்தான். அவளது செவிலித் தாயாகிய கலாவதி என்பவள் இவனிடம் வந்து ஊராறிய இவ்வாறு சீரழிவு செய்தல் உமது பேரறிவுக்குத் தகுமா? என்று ஆர்வமொடு கேட்டாள். என் உயிர் உய்யும்வகை இது செய்ய நேர்ந்ததென்று இவன் செப்பி நின்றான். அவள் உளமிக இரங்கித் தலைவியைக் கொணர்ந்து இவன்பாலுய்த்தாள். உலகறிய மணந்து அவளோடமர்ந்து உயர்ந்த போகங்களை நுகர்ந்து இவன் மிக மகிழ்ந்திருந்தான். தாம் கருதிய காதலியைப்பெற விழைந்த ஆடவர் நாணந் துறந்து மடலேறத் துணிவர் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

உள்ளநாண் நீங்கி உயிர்மடல்மேல் மூண்டதே
எள்ள லனைத்தும் இகந்து.

காமமீதூர்ந்தபோது நாணம் நீங்குமென்பது இதனால் கூறப்பட்டது.

1133. அன்றாண்மை நாணம் அறநீங்கி ஏனுதயன்
குன்றா தெழுந்தான் குமரேசா—நன்றாக
நாணொடு நல்லாண்மை பண்டுடையே னின்றுடையேன்
காமுற்றார் ஏறு மடல். (௩)

இ—ள்.

குமரேசா! ஆண்மையும் நாணும் இன்றி உதய குமரன் ஏன் காதல் நோயால் மடல் ஏறத் துணிந்தான்? எனின், நாணொடு நல்லாண்மை பண்டு உடையேன்; இன்று காமுற்றார் ஏறும் மடல் உடையேன் என்க.

இது, காமமிக்கபோது வெட்கம் இல்லையாம் என்கின்றது.

ஆண்மை = ஆண்தகைமை. அஃதாவது யாண்டும் தளராது நிற்கும் தன்மை. தன் வல்லமையைப் புல்லியவழியிற்

செலுத்தாமல் நல்ல நிலையில் நிறுத்தியிருத்தலால் அது நல்லாண்மை என நின்றது.

பண்டு என்றது காதலியைக் கண்டு காமுறுதமுன்பு என்றபடி. இன்று என்றது மடல் ஏறத் துணிந்துநின்ற அந் நாளைக்

காமநோய் மிகுந்தவரே அந் நோவு தீர்தற்கோர் பரிகாரமாக மடல் ஏறுவாராதலால் "காமுற்றார் ஏறும் மடல்" என்றார். "மேவாமகளிர்கண்மேவுறுவான்நெஞ்சின்மேவுற்றுளோர்,பாவாய் அவர்கடம் ஆவணத்தூடு பனையையொரு, மாவாகச் செய்து நடத்துவரீது மனுமுறையே" என்பதும் காண்க.

மேல், நாணம் நீங்கியமை கூறினான்; இதில், அதனோடு ஆண்மை தீர்ந்தமையை யுரைக்கின்றான்.

நாணமும் நல்ல ஆண்மையுமும் முன்பு உடையனாயிருந்தேன் இப்பொழுது காமுற்றார் ஏறுகின்ற மடலினையுடையேன் என்பதாம்.

அலைந்து திரிந்து உளைந்து நின்ற தலைமகன் முடிவில் மடல் ஏறத் துணிந்தபொழுது தோழிவந்து "நாணமும் நல்ல ஆண்மையுமுடைய நீங்கள் எவ்வாறு இது செய்யத் துணிந்தீர்கள்?" என்று உரையாட அவளை நோக்கி அவன் உரைத்தபடி யிது.

காமம் என்பது மாதர் இன்பம் நாடி மண்டியெழும்; அவ் இச்சை அளவோடு நின்றால் நாணம் அதனோடு அமர்ந்திருக்கும்; அது வரம்பு மீறினால் தன்னால் இயன்றவரையும் நாணம் தடுத்து நிறுத்தும்; அத் தடை தனக்கு இடையூறாயிருத்தலால் அமைந்தவரையும் அடங்கி நின்று முடிவில் அடியோடொழித்து அது கடிதுபோம் என்க. "இகழ்தர எழுந்த நாணும் இச்சையும் தினம் போராடி, அகழ்தர நாணம் தோற்றது ஆசையே வென்றதம்மா" என்பதும் காண்க.

களவு நிலையில் கலந்து நீங்கிய தலைவன் ஆசைவயத்தனாய் ஓயாது நினைந்து, உளநிலை குலைந்து, உடல் மிக மெலிந்து, கண்ட

விடமெல்லாம் காதலி யுருவையே கண்டு நின்று, மயங்கி விழுந்து அயர்ந்து புலம்புவனாதலால் நாண் ஆண்மைகளிலனாய் இங்ஙனம் நைந்து மொழிந்தான்.

"வேட்கை ஒருதலை, யுள்ளுதல், மெலிதல்,
ஆக்கம் செப்பல், நாணுவரை யிறத்தல்,
நோக்குவ வெல்லாம் அவையே போறல்,
மறத்தல், மயக்கம், சாக்காடு, என்று அச்
சிறப்புடை மரபினவை களவென மொழிப" (தொல்காப்பியம்.)

களவொழுக்கில் உளவாம் உளநிகழ்ச்சிகளை இஃதுணர்த்தி நிற்றல் காண்க. இங்குக் குறித்த காம அவத்தைகள் ஒன்பதுள் நாணொழிவினை இடையில் வைத்தது முதலினும் கடையினும் உள்ளவற்றிற்கு அதன் அடைவமைதி தெளிய. சாக்காடு என்றது காதலியைப் பெறுவழிச் சாதலுறுவேன எனப் போதரல் கருதி. மடல் ஏறுவேன், மலையேறி வீழ்வேன் என்று காதலர் உயிர்நிலையை வெறுத்து உடன்று நிற்றலறிக.

ஒருவன் உள்ளத்தில் காமம் காழ்க்கொண்டதாயின் அவன் நாணும் ஆண்மையு நீங்கி நகைபடு செயல் எதுவும் செய்வன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை உதயகுமரன் பால் உணரப்படும்.

## கதை.

உதய குமரன் என்பவன் காவிரிப்பூம் பட்டணத்திலிருந்து அரசுபுரிந்த நெடுமுடிக் கிள்ளி என்னும் சோழனுடைய அருமைத் திருமகன். அறிவும் பணிவும் அமையப்பெற்றவன். வியக்கத்தக்க மெய்யழகுடையவன். பருவம் நிரம்பி உருவ வேள் என உலாவிவருங்கால் இனிய பொழிலிடை ஒரு நாள் இவன் மணிமேகலையைக் கண்டான். அவள் மாதவி மகள்; கோவலனுக்குப் பிறந்தவள்; பழம் பிறப்பில் இவனுக்கு மனைவி யாயிருந்தவள். அக் கட்டழகியைக் கண்டவுடனே இவன் காதல்மீக் கொண்டான்; கருத்துடைந்து நின்றான். இவன்பால்

அவள் உழுவலன்புடையளாயினும் பிறவியற நினைந்து துறவினை யடைந்து தவவுருத் தாங்கித் தகைமைபெற்றிருந்தாளாதலால் காமநிலையாதும் கருதாதொழிந்தாள். இவன் அருகுநெருங்கினான். இளமைநலங் கனிந்து அழகொழுகி நிற்கும் அவளது திருமுகத்தை இவன் உளமுருகி நோக்கினான். "வளங்கெழு போகந் துய்க்கும் இவ் இளம் பருவத்தில் இக் கடுந்தவம் கோடல் பொருந்துமா?" என்று இவன் கரைந்து நின்றான். இவனது நிலையினை யறிந்து அவள் இரங்கினாளாயினும், தனது உறுதிநிலையை உளங்கொள உணர்த்தினாள். நீதிகள் பல அவள் ஓதி யுணர்த்தியும் இவன் யாதும் கேளாது அலமந்து நின்றான். அவள் அகன்று சென்று தோழியரிடை மறைந்து நின்றாள். இவன் தொடர்ந்து புகுந்தான். அவளைக் காணாது கலங்கினான். அவளது உயிர் தோழியாகிய காயசண்டிகை என்பவளைக் கண்டான். வாயில் வேண்டி நின்றான். அன்று இவன் வேண்டிநின்றபடியை அடியில் பார்க்க.

"ஈங்கு இம் மண்ணீட்டு யாரென வுணர்கேன்;
ஆங்கவள் இவளென்று அருளாயாயிடிற்,
பன்னாளாயினும் பாடு கிடப்பேன்;
இன்னுங் கேளாய்! இமையோர் பாவாய்!
பவளச் செவ்வாய்த் தவளவாள் நகையும்,
அஞ்சனம் சேராச் செங்கயல் நெடுங்கணும்,
முரிந்துகடை நெரிய வரிந்தசிலைப் புருவமும்,
குவிமுட் கருவியும், கோணமும், கூர்நுனைக்
கவைமுட் கருவியு மாகிக் கடிகொளக்,
கல்விப் பாகரிற் காப்புவலை ஓட்டி
வல்வா யாழின் மெல்லிதின் விளங்க
முதுக்குறை முதுமொழி எடுத்துக் காட்டிப்
புதுக்கோள் யானை வேட்டம் வாய்த்தென
முதியாள் உன்றன் கோட்டம் புகுந்த
மதிவாள் முகத்து மணிமேகலை தனை
ஒழியப் போகேன்; உன்னடி தொட்டேன்;
இது குறை; என்றனன் இறைமகன்." (மணிமேகலை.)

மணிமேகலையைக் கண்டதும், இவன் காதல் கொண்டதும், அவளைக் கூட்டாயாயின் "பன்ருளாயினும் யாதும் கிடப்பேன்" என்று பாங்கியிடம் பாடழிந்து நின்றதும் பிறவும் இதில் அமைந்துள்ளன காண்க. இறை திரு மகனாய்ப் பெருமித நிலையை எய்தியிருந்தும் அம் மடந்தையிடம்போய் இவ்வாறு இவன் குறையிரந்து நின்றான். காம மிக்கவர் நாணும் ஆண்மையும் இழந்து மடல் ஏறல்முதலிய யாவும் செய்வர் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

"மாவென்றுரைத்து மடல் ஏறுப; மன்று தோறும்
பூவென்று எருக்கின் இணர் சூடுப; புன்மை கொண்டே
பேயென்றெழுந்து பிறர் ஆர்ப்பவும் நிற்பர்; காம
நோய் நன்கெழுந்து நனிகாழ்க்கொள்வதாயி னக்கால்"
(வளையாபதி)

**நாணொடுயர் ஆண்மையெலாம் நண்ணு தோழியுமே**
**சேணமைந்த காமம் செறின்.**

காமம் காழ்க்கொண்டால் ஆண்மையும் நாணும் அகலுமென்பது இதனால் கூறப்பட்டது.

---

1134. காதலுளங் கொண்டவுடன் கண்ணனுமேன் நாணிழந்து
கோதைமேற் சென்றான் குமரேசா—மீதெழுந்த
காமக் கடும்புன லுய்க்குமே நாணொடு
நல்லாண்மை யென்னும் புணை. (௪)

இ—ள்.

குமரேசா! பேராண்மையுடைய கண்ணனும் நப்பின்னையைக் காதலித்து ஏன் நாணாது போனான்? எனின், நாணொடு நல்லாண்மை என்னும் புணை காமக் கடும்புனல் உய்க்கும் என்க.

இது, காமச் சுழிப்பட்டார் கருத்தழிவர் என்கின்றது.

புனல்=நீர். கடும்புனல் என்றது பெரு வெள்ளம் என்றபடி. கடுமை வேகங்குறித்து நின்றது. காமத்தைப் புனல் ...... செல்வம் அதன் இயல்பு கருதி.

உய்க்குமே=அடித்துக்கொண்டுபோகுமே. ஏகாரம் தேற்றமும் இரக்கமும் தோற்றநின்றது. அவ் உய்த்தலைத் தானே உணர்ந்து நின்றுணுதலால் ஐயுறவோடு வியந்துள்ளபடியாயும் இது விளங்கிநிற்றல் காண்க.

புணை=தோணி. நாணத்தையும் ஆண்மையையும் புணை என்றது காமப் புனலைக் கடத்தற்கு அவை துணையாதல் கருதி. இங்ஙனம் துணையாயிருந்த அவை இது பொழுது தொலைந்து போயின என்று உளைந்து கூறித் தன் உள்ளநிலையை உணர்த்தி நின்றான். வெள்ளம் அணையை உடைத்துச் சென்றதுபோல் காமம் நாணுகிய புணையை அடித்துப்போயதென்கின்றான்.

"உப்புச் சிறைநில்லா வெள்ளம் போல
நாணுவரை நில்லாக் காமம்" (அகம் 208) என ஓர் தலைமகன் கதறியுள்ளதும் காண்க.

மேல், காமுற்றார்க்கு நாணும் ஆண்மையும் இலவாம்என்றார்; இதில், அதன்முன் அவை நிலைத்து நில்லா என்கின்றார்.

நாணம் ஆண்மை என்னும் தோணிகளைக் காமம் என்னும் கடுவெள்ளம் அடித்துக்கொண்டுபோம் என்பதாம்.

ஓர் நதியில் பெருகிச் செல்லும் நீர்ப்பெருக்கைக் கடத்தற்குத் தோணி துணையாம்; அதுபோல் ஒருவன் உளத்தில் மண்டியெழும் காம இச்சையை யடக்குதற்கு நாணமும் ஆண்மையும் துணையாம்; ஆசையானது எவ்வளவு கிளர்ந்தெழுந்தாலும் அயல்றிய நேர்ந்தால் உளம் கூசும்; அக் கூச்சமே நாணம் என்க; ஆண்மையானது யாதும் தளராது நின்று எதனையும் தன் வசப்படுத்தி நிற்கும். மென்மை நிலையிலும், வன்மை வகையிலும் இங்ஙனம் மேவி நின்று மேன்மைதந்துள்ள இவை காமம் கடுத்தெழுந்தபோது தடுக்கலாற்றாது தலை சாய்ந்து அதன் வழியே சார்ந்துநிற்கும் ஆதலால் ஈரெண்டு நல்லாண்மை என்னும் புணைகளைக் காமக் கடும்புனல் உய்க்கும் என்றார்.

மிக்குப் புரண்டு மீறி வருகின்ற மேல்வெள்ளம் தோணியை அடித்துப்போதல்போல் காமமும் வரம்பு மீறி யெழுந்தால் நாணும் ஆண்மையும் தொலைந்துபோம் என்க.

கட்டவிழ்த்துவிட்டார். ஊரவர் திரண்டார்; உற்று நோக்கினர். "ஒரு கன்னிக்காகத் தன் இன்னுயிரை வெறுத்து இக் கண்ணன் கருத்தழிந்தானே!" என்று கண்டவரனைவரும் கலங்கி மொழிந்தார். அவன் எழுந்து புகுந்து அவ் எருதுகள் ஏழையும் பொருதடக்கினன். உடனே இக் குமரியை அவனுக்கு உரிமை செய்து தந்தார். அவன் உவந்துகொண்டு நுகர்ந்து மகிழ்ந்தான். இவளைத் தழுவுவதற்காக அவன் யாதும் நாணாது ஊரறியச் சென்று ஏறு தழுவியதை நினைந்து யாவரும் வியந்தார். "காமக் கடும்புனல் உய்க்குமே நாணொடு நல்லாண்மை என்னும் புணை" என்பதை உலகம் காண அவன் உணர்த்தி நின்றான்.

"வஞ்சம் செய்தான் தொழுனைப் புனலுள்
நெஞ்சம் கவர்ந்தாள் நிறை என்கோயாம்;
நெஞ்சம் கவர்ந்தாள் நிறையும் வளையும்
வஞ்சம் செய்தான் வடிவென் கோயாம். (க)

தையல் கலையும் வளையும் இழந்தே
கையில் ஒளித்தாள் முகம் என்கோயாம்;
கையில் ஒளித்தாள் முகங்கண்டு அழுங்கி
மையல் உழந்தான் வடிவென்கோயாம். (உ)

வையம் அளந்தான் தன் மார்பில் திருநோக்காப்
பெய்வளைக் கையாள் நம் பின்னைதா மைமென்றே
ஐயென்றான் ஆயர் மகள்". (சிலப்பதிகாரம்)

யமுனை நதிக் கரையில் இவளைக் கண்ணன் கண்டதும், உடனே காதல் கொண்டதும், ஒருவரை ஒருவர் கருதியுருகியதும், பிறவும் இதன்கண் உரைக்கப்பட்டுள்ளமை காண்க.

விழுமிழை நல்லார் வெருள்பிணைபோல் நோக்கம்
கெழுமிய நாணை மறைக்கும்—தொழுனையுள்
மாலையும் மாலே மயக்குறுத்தாள் அஃதன்றோ
சால்பினைச் சால்பறுக்கு மாறு. (பழமொழி 12)

பின்னையின் நோக்கால் கண்ணன் நாணழிந்து நின்றதை இதுவும் உணர்த்திநிற்றல் காண்க.

குலம் நினையல் நம்பி கொழுங்கயற்கண் வள்ளி
நலன் நுகர்ந்தானன்றே நறுந்தார் முருகன்;
நில மகட்குக் கேள்வனும் நீள் நிரை நப்பின்னை
இலவலர்வாய் இன்னமிர்தம் எய்தினன் அன்றே.
(சீவகசிந்தாமணி)

கண்ணன் பின்னையைக் காதலித்துக் கொண்டதும், கருத்து முற்ற நுகர்ந்ததும் இதன் கண்ணும் குறித்திருத்தல் அறிக. இவளது எழிலும், இயலும், இவள்மேல் அவன் கொண்டுள்ள விழைவும், மயலும், இவற்றால் இனிதறியலாகும்.

அடலே றனையயான் ஆசையிவள் நோயால்
மடலேற நின்றேன் மருண்டு.

காமம் கடத்தற் கரிதென்பது இதனால் கூறப்பட்டது.

---

1135. காமருயர் வாமனையைக் கண்டான் கருத்துடைந்து
கோமடலேன் கொண்டான் குமரேசா—தோமில்
தொடலைக் குறுந்தொடி தந்தாள் மடலொடு
மாலை யுழக்குந் துயர். (டு)

இ—ள்.

குமரேசா! வாமலோசனையைக் கண்டபின் சோமசேனன் ஏன் காமதாப மெய்திக் கடுந்துயர் உழந்தான்? எனின், மடல் ஒடு மாலை உழக்கும் துயர் தொடலைக் குறுந்தொடிதந்தாள் என்க.

காமர் = அழகு. உயர் என்றது அவளது எழில் நலங்களின் கெழுமிய நிலையை நோக்கி.

இது, மடலும் துயரும் வந்தவகை கூறுகின்றது.

தொடலைக் குறும்தொடி = மாலைபோலத் தொடர்ந்தவளைகளையுடையாள். என்றது தலைவியை. வளையின் தொடர்ச்சிக்கு மாலையை உவமங் கூறியிருத்தலால் இது உவமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. தொடலை = மாலை. தொடுக்கப்பட்டுத் தொடர்ந்து நிற்பதென்னும் ஏதுவான் வந்தது. "தொடலைக்குற்ற சில பூவினரே" (ஐங்குறுநூறு 187). என்பது காண்க.

குறும் = குறுகிய, சிறிய எனக. தொடி = வளையல். தொடிக்குக் குறுமை கூறியிருத்தலால் அதனையுடையாளது இளமை இயல்புகள் தெளியலாகும். தான் புல்லியிருந்தபொழுது மெல்லிய வளையல்களை அடுக்காக முன் கையில் அணிந்திருந்தாளாதலால் "தொடலைக் குறுந்தொடி" என்றான். கண்டிருந்த காலை மண்டிய காட்சியைக்கொண்டு கூறியபடியிது. "நிரைவளை முன்கை இந் நின்ற நங்கை" எனச் சீதையைக் குறித்திருத்தல் காண்க.

மாலை = மாலைப்பொழுது. அக் காலம் காம நோயை மிகுவிக்கும் ஆதலால் துயர்நிலைக்கு இடமாகச் சுட்டநின்றது.

மேல், இழந்துநின்ற நிலைமையை உரைத்தான்; இதில், உழந்துபடுதலை உரைத்து நிற்கின்றான்.

மடலேறலையும், மாலைக் காலத்தே வருந்துகின்ற துயரையும் மாலைபோல் தொடர்ந்து நெருங்கிய வளைகளை யணிந்தாள் தந்தாள் என்பதாம்.

தான் அடைந்து வருந்துகின்ற காமத் துயருக்கு அவள் காரணமாய் நிற்றலால் அதனை அவள் தந்தாள் என்றான். காதலியை எய்தப்பெறாது ஏங்கியிருந்த காதலன் முடிவில் மடல் ஏறியாவது அவளை மருவவேண்டுமென்று உறுதிசெய்து மறுகிநின்றான்; அங்ஙனம் நிற்குங்கால் பொழுதடைந்தது; இரவில் விரகதாபமிகுமாதலால் பெருந் துயரினாய்ப் பேதுற்றுளைந்தான்; அவ்வமயம் தோழியர் வந்து "நீங்கள் ஏன் இவ்வாறு இன்னலுறுகின்றீர்கள்" என்று இரங்கி வினவ அவரை நோக்கி அவன் உரைத்தபடியிது.

மடலும் துயரும் தொடிதந்தாள் எனத் தானடைந்துள்ள நோய் மூலம் காட்டினான் அதனை நாடி நிலை கண்டு தோழி தீர்த்தருள்வள் என்று நம்பி. மடலை முதலில் கூறியது இடையறாது எண்ணிநிற்றலால் அது முன்னுறவந்தது. துயருழத்தற்கு மாலைக் காலத்தை நிலையமாகக் குறித்தது அந் நேரத்தில் காம தாபம் காட்டுத் தீயெனக் கன்று பொங்குதல் கருதி, என்னை?

"மந்தியும் கடுவனும் மரங்கள் நோக்கின; "தந்தியும் பிடிகளும் தடங்கள் நோக்கின; நிந்தையில் சகுந்தங்கள் நீளம் நோக்கின;" என்றபடி பறவைகளும், விலங்குகளும் அந்திப்போதில் தத்தம் பெடைகளோடு உறையுள்களை அடையுமாதலால் அக் காட்சி காதலிக்ளைப் பிரிந்து தனித்திருக்கும் காதலர்க்குக் கடுந்துயர் விளைக்கும் என்க.

"சந்திவந்தனைத் தொழில் முடித்துத், தன்னொடும்
புந்திநொந்து இராமனும் உயிர்ப்பப் பூங்கணை
சிந்திவந் திறுத்தனன் மதனன்; சிறைத்து
அந்திவந் திறுத்தது; கழுத்த தண்டமே" (இராமாயணம்)

சீதையைப் பிரிந்திருந்த இராமன் அந்திப்பொழுதில் அருந்துயருழந்ததும், காமன் அவ்வமயம் கணிப்பூக்கி நின்றதும் இதில் காணலாகும்.

மாதரிருங்குயில் மணிநிறப் பேடை
காதற் சேவலைக் கண்டுகண் களித்துத்
தளிர்ப்பூங் கொம்பர் விளிப்பது நோக்கியும்,
பானிறச் சேவல் பாளையிற் பொதிந்தெனக்
கோண்மடற் கமுகின் குறிவயிற் காணாது
பவழச் செங்காற் பன்மயி ரொருத்திற்
கவர் குரல் அன்னங் கலங்கல் கண்டும்,
தனித்துளம் கவல்வோன் தான் வீழ் மாதர்
மணிக்கேழ் மாமை மனத்தின் தலைஇப்
புள்ளுறப் புலம்புறுக்க உள்ளுபு நினைஇ;
திரிதலைக் கொளிஇ எரிதரு மாலை
வெந்துயர்க் கண்ணின் வேலிட்டதுபோல்
வந்திறுத்தன்றால் வலியெனக்கு இல்லெனக்
கையறு குரிசில்" (பெருங்கதை) என வரும் இதில் தன் துணைவியை நினைந்து மாலைப்பொழுதில் உதயணன் துயருழந்திருத்தலறிக. பிரிந்துள்ளவர்க்கு மாலைக் காலம் பெருந்துயராகுமாதலால் அதனை அவர் இகழ்ந்து மொழிவர்.

"விரிமலர்த் தென்றலாம் வீசு பாசமும்
எரிநிறச் செக்கரும் இருளும் காட்டலால்
அரியவட்கு அனல்தரும் அந்தி மாலையாம்
கருநிறச் செம்மயிர்க் காலன் தோன்றினான்." (இராமாயணம்)

"ஒன்றே எயிற்றது ஒரு பெரும்பேய் உலகம் விழுங்க அங்காந்து
நின்றாற்போல நிழலுமிழ்ந்து நெடுவெண் திங்கள் எயிறிலங்க
இன்றே குருதி வானவாயங் காந்து என்னை விழுங்குவான்
அன்றே வந்ததிம் மாலை அளியேன் ஆவி யாதாங்கொல்?"
(சீவகசிந்தாமணி)

"கருத்தினாடெழுகாம மென்கொடுங்கனல்கனற்ற
அருத்தியுற்றவர் ஆருயிர்க் குளகினை அயில்வான
உருத்து வெங்கதிர்ப்பாகெறிந்து உடப்புகர் மூகத்த
இருட்கடாக்களி றுருவிலத் திறத்ததையன்றே." (நைடதம்)

"கூற்றங் கரந்து கொடிய புன்மாலை வடிவு கொண்டு
தோற்றுஞ்சிறு பிறையே எயிறாகத் துறையிருந்து
தேற்றந்தரும்பெடை அன்னமும் சேவலும் சேக்கை புகும்
ஆற்றுந் திறமறியேன் அவரோ சென்றகன்றனரே."
(அம்பிகாபதிக்கோவை)

"மாலை! நீ, இன்புற்றார்க்கு இறைச்சியாய் இயைவதே செய்தாய்மன்
அன்புற்றார் அழநீத்த அல்லலுட் கலங்கிய
துன்புற்றார்த் துயர்செய்தல் தக்கதோ? நினக்கு;

மாலை! நீ, கலந்தவர் காமத்தைக் கனற்றலோ செய்தாய் மன்
நலங்கொண்டு நல்காதார் நனிநீத்த புலம்பின்கண்
அலந்தவர்க்கு அணங்காதல் தக்கதோ? நினக்கு;

மாலை! நீ, எங்கேள்வற் றருதலும் தருகல்லாய்; துணையல்லை;
பிரிந்தவர்க்கு நோயாகிப், புணர்ந்தவர்க்குப் புணையாகித்,
திருந்தாத செயினல்லால் இல்லையோ? நினக்கு;" (கலி 148)

தணந்த காதலர் மாலைப்பொழுதை நோக்கி இகழ்ந்துள்ளபடியை இவற்றுள் உணர்ந்துகொள்க. அக் காலத்தில் காமநோய் மிகுமாதலால் "மாலைபுழக்கும் துயர்" எனத் தன் துன்ப நிலையை இங்ஙனம் தூக்கி யுரைத்தாள். "காலை அரும்பிப், பகலெல்லாம்

போதாகி, மாலை மலரும் இந் நோய்'' (குறள் 1227) என்பதும் ஈண்டெண்ணத்தக்கது.

பொருந்தியிருந்த காதலியைப் பிரிந்து நின்றவர் பெருந் துயருழப்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சோமசேனன்பால் உணரப்படும்.

## கதை.

சோமசேனன் என்பவன் திருவயோத்தியிலிருந்தவன். அசமன்னனுடைய அருமைத் தோழன். சூரிய குல வேந்தர்க்கு வழிவழியாக அமைச்சுரிமை பூண்டுவந்த மரபில் பிறந்தவன். இவன் சிறந்த மதிமான். இசைநூற் புலமையில் இசைமிகப் பெற்றவன். குதிரை யேற்றத்திலும் அதன் குணங்களை யறிவதிலும் வல்லவன். விதர்ப்பதேசத்தின் தலை நகரமாகிய குண்டின புரத்திற்கு ஒருமுறை இவன் சென்றிருந்தான். மாலைப்போதில் அங்கோர் பூஞ்சோலையில் உலாவி வந்தான். வருங்கால் ஓர் இளங் குமரியைக் கண்டான். அவள் மிகவும் எழில் நலமுடையவள். ஓர் சாபவயத்தால் இப் பூவலயத்தில் வந்தவள். விதர்ப்ப வேந்தன் மகளாய் விளங்கியிருந்தவள். இந்துமதிக்கு அவள் இன்னுயிர்த் தோழி. அவள் பெயர் வாமலோசனை. அவளைக் கண்டவுடனே காதல்மீக்கொண்டு இவன் கருத்துருகி நின்றான். அவளும் காமக் குறிப்போடு கனிந்து நோக்கினாள்.

> "பூவுண்ட கண்ணாள் புருவச்சிலை கோலி எய்ய
> ஏவுண்ட நெஞ்சிற்கு இடுபுண் மருந்து என்கொல்? என்று
> மாவுண்ட நோக்கின் மடவாளை மறித்து நோக்கிக்
> கோவுண்ட வேலான் குழைந்து ஆற்றலனாயினானே"

என்றவண்ணம் இவன் அலமந்து நின்று அருகு நெருங்கினான். அவ்வமயம் செவிலித்தாயர் இருவர் அங்குவந்தார். அவள் உள்ளங் கூசி ஒதுங்கி மறைந்தாள். இவன் யாதும் செய்யலாற்றாது காதல் நோயோடு கலங்கி மீண்டான். மீண்டவன் எவ்வாறு இனி அவளை எய்துவது? என எண்ணி ஏங்கினான். ஊரறிய மடலேறியாவது அவளைச் சேரவேண்டுமென்று உறுதி பூண்டான். பகல் கழிந்தது; மாலை வந்தது; வரவே உலைபுறு மெழு

கென உளமிக வுருகினன். நீர்நிலைகளிலுள்ள தாமரை குவளை முதலிய மலர்களைப் பார்த்தும், மயில்களை நோக்கியும், குயில்களை விளித்தும், மயல்மீக்கூர்ந்து பலபல புலம்பினன்.

"படைவேள் கணையே, பரிதிக்கு உறவே,
மடவார் முகமே, மதியின் பகையே,
விடமே புரையும் விழி மெல்லியல் நின்
இடமே வருவாள்; ஒளியாது இசையாய்! (க)

மேவிப் பிரிவாள் விழிபோல் அடுவாய்!
ஆவிக்குறவோ வலை; மன்மதன் அப்
பாவிக்குமினிப் படையாய் வருவாய்!
வாவிக் குவளாய்! எனை வாட்டுதியோ? (உ)

ஆரத்தடமே! அருள் நீரினை, யுள்
ஈரத்தினை, என்றெவரும் புகல்வார்;
சாரிற் சுடுவாய்! தளரேல் எனவே
சோர்வுற்றிடும் என்துயர் தீர்க்கிலையே. (ங)

களிசேர் மயிலே! கவிராகிய வாய்க்
கிளியே! குயிலே! கிளைதானலவோ?
தளரா வகைநீர் தகவே மொழியா
அளியேன் உயிருக்கு அரணாகுதிரால்" என இன்னவாறு பல பன்னி யுளைந்து தன்னிலை திரிந்து இன்னலுழந்தான். பின்னரெழுந்து மதனசேனை என்னும் தோழியிடம்போய்த் தன் துயர்நிலையை யுரைத்து மடலேறுவேன் என்று அடல்செய்து நின்றான். அவள் உடனே சென்று தலைவியின் இயல்பையும் இவனது நிலையையும் பெற்றோர்க்கு உரைத்தாள். அவர் மணஞ் செய்து தந்தார். இவன் மணந்து நுகர்ந்து மகிழ்ந்திருந்தான். மட்லொடு மாலையுழக்கும் துயரைக்காதலி தந்தாள் எனத் தோழி க்ளிடம் நாணாது சொல்லிக் காதலன் நயந்து நிற்பன் என்பதை உலகம் காண இவன் உணர்த்திநின்றான்.

இன்ப நிலையமா யெய்திநின்றாள் ஈந்தாளே
துன்ப மடலோடு சூழ்ந்து.

காதலர் துயர்நிலையை நாணாது மொழிவர் என்பது இதனால் கூறப்பட்டது.

1136. கண்டான்முன் மாளவியைக் கண்ணுறக்கமின்றிமன்னன்
கொண்டான் துயரேன் குமரேசா—மண்டி
மடலூர்தல் யாமத்து முள்ளுவேன் மன்ற
படலொல்லா பேதைக்கென் கண். (சா)

இ.—ள்.

குமரேசா! மாளவியை இடையறாது நினைந்து கண்ணுறக்கமின்றி அக்கினிமித்திரன் ஏன் அலமந்திருந்தான்? எனின், யாமத்தும் மடல் ஊர்தல் உள்ளுவேன்; பேதைக்கு என்கண் மன்ற படல் ஒல்லா என்க.

இது, காதல் மிக்கவர் கண்ணுறங்கார் என்கின்றது.

யாமம் = நடுநிசி = மன்ற = முழுதும். படல்ஒல்லா = பொருந்தா; கண்கள் பொருந்தி உறங்கா என்பதாம்.

பேதை என்றது தலைவியை. அறிந்தும் அறியாதவள் போல் அடங்கியிருப்பவளாதலால் அவ் அமைதிபற்றி வந்தது, பருவம் பற்றியன்று. மேதையாகிய யான் யாதும் துயிலாது அல்லலுற்றுளேதலை யறிந்திருந்தும் அருள் புரிந்துவந்து ஆறுதல் செய்யாது அயலஞ்சி அகன்று நிற்கின்றாளே! விரகதாபத்தால் யான் இறந்துபடின் பின்பு இவள் நிலை என்னாம்? இதனைச் சிறிதும் உணரவில்லையே! என்று பெரிதும் வருந்தி யுரைக்கின்றான் ஆதலால் பேதை எனச் சொற்போக்கில் இங்ஙனம் இகழ்ந்து மொழிந்தான் என்க.

காதலியை நினைந்து இரவில் தூக்கம் பிடியாது நோதல் உறுகின்றானாதலால் "பேதைக்கு என்கண் படல் ஒல்லா" என்றான். யான் துயிலேன் என்னாது கண்கள் படா என்றது பொறிபுலன்கள் யாவும் அவள் திறத்தில் மறுகி நிற்கும் மறுக்கம் காண.

மேல், மையல் நோயுடையார் மாலையில் வருந்துவரென்றார்; இதில், இரவிலும் துயிலாது இருந்துயருழப்பர் என்கின்றார்.

இப் பேதையின் பொருட்டு என் கண்கள் என்றுந் துயிலா; நள்ளிரவிலும் மடலூர் தலையே மிகுதியாக உள்ளிநிற்பேன் என்பதாம்.

நடுச் சாமத்தில் எல்லாப் பிராணிகளும் கண்ணயர்ந்து உறங்கும் ஆதலால் அச் சமயத்திலும் கண் துயில்கொள்ளாது காதலியை நினைந்து கருத்துருகி நிற்பேன் என்பான் "யாமத்தும் உள்ளுவேன்" என்றான். இங்ஙனம் உரைத்தது தன் வருத்த நிலை தெரிந்து தோழி அருந்திசெய்ய என்க. உம்மை, யாவும் துயின்று கிடத்தற்கு ஏதுவாயுள்ள அதன் தன்மைதோன்ற நின்றது.

> "மண் துயின்றன; நிலையமலை துயின்றன; மறுவில்
> பண் துயின்றன; விரவு பணிதுயின்றன; பகரும்
> விண் துயின்றன; கழுதும் விழிதுயின்றன; பழுதில்
> கண் துயின்றில நெடிய கடல் துயின்றன களிறு"
>
> (இராமாயணம்)

கடல் துயின்ற களிறு என்றது இராமனை. எல்லாம் துயின்று கிடந்த இடை யாமத்தும் கண்துயில்கொள்ளாது சீதையை நினைந்து இராமன் வருந்தியிருந்தபடியை இதில் உணர்ந்துகொள்க.
மடல் ஏறுவேன் என்று துணிந்துநின்ற தலைமகனைத் தோழி அணுகி "இன்று பொழுதடைந்தது; இரவில் சுகமாக வுறங்குங்கள்; நாளைப் பார்த்துக்கொள்வோம்; அவசரப்படாமல் அடங்கியிருங்கள்" என்று உடன்பாடு தோன்ற உரைத்து வேண்டினாள். அவ்வமயம், அவளைப்பார்த்து "யான் உறங்க நினைந்தாலும் என் கண்கள் உடன்படாமல் விழித்தேயிருக்கின்றன; எல்லாரும் உறங்கும் இடை யிரவிலுங்கூட என் மனம் மடலூர்தலையேகருதி உருகிநிற்கின்றது; யான் என்செய்வேன்?" என அவன் மறுகி உரைத்தபடியிது.

மடலேற்றம் குறித்துத் தலைவன் கூறுவனவெல்லாம் மடற் கூற்று எனவும், அதனை மறுத்துப் பாங்கி யுரைப்பனவெல்லாம் மடல் விலக்கு எனவும் கூறப்படும். இது குறித்துவரும் இலக்கண விதியை அடியில் பார்க்க.

> "இரந்து குறைபெறாது வருந்திய கிழவோன்
> மடலே பொருளென மதித்தலும், பாங்கிக்கு
> உலகின்மேல் வைத் துரைத்தலும், அதனைத்
> தன்மேல் வைத்துச் சாற்றலும், பாங்கி

தலைமகள் அவயவத் தருமை சாற்றலும்,
தலைமகன் தன்னைத் தானே புகழ்தலும்,
அலர்முலைப் பாங்கி அருளியல் கிளத்தலும்,
கொண்டுநிலை கூறலும் என்றிவை ஏழும்
மடற்கூற்றிற்கும், மடல் விலக்கிற்கும்,
கடவ என்மனார் கற்றறிந்தோரே" (அகப்பொருள்விளக்கம்)

காமம் உழந்து வருந்திய தலைமகன் மடலே ஏமம் என மதிப்பன்; மதித்ததை உலகின்மேல் வைத்துத் தோழிக்கு உரைப்பன்; பின்பு நாணும் ஆண்மையும் இழந்து தானே மடலேறத் துணிந்துள்ளதை அவன் சாற்றி நிற்பன்; நிற்கவே தலைமகளது அவயவம் மிகவும் அழகுடையது; அதனைப் படத்திலெழுத அமையாது ஆதலால் நீர் குறித்தபடி மடலேற முடியாது என்று அவள் மறுத்து நிற்பள்; இவன் அது முடியும் எனத் தனது ஓவியத் திறமையைப் புகழ்ந்து கூறுவன்; கூறவே பனை மடலை எடுக்குங்கால் அதில் குடியிருக்கும் பல பிராணிகள் அழிய நேருமாதலால் நமது அருளியல்புக்குத் தகாது என அளி செய்து மொழிவள்; மொழியவே என் இன்னுயிர் அழியாவகை யான் என்னும் செய்வன் எனத் தன்னுறு துணிவினை இவன் முன்னுற வுரைப்பன்; உரைக்கவே முடிவில் அவள் தலைவியைக் கொணர்ந்து தலைவனிடம் தந்து தகவுடன் செல்வள் என்பதை இவ் இயலிடமறிக. கருதிய மங்கையைக் கைக்கொளத்தருதலின் மடலினை ஆடவர் இவ்வகை மருவலாயினர்.

ஒருவன் எண்ணிய காதலியை எய்தும் வரையும் கண்ணுறக்கமின்றிக் கலங்கியிருப்பன் என்பது இதில் உணர்த்தப்பட்டது இவ்வுண்மை அக்கினிமித்திரன்பால் உணரப்படும்.

## கதை.

அக்கினிமித்திரன் என்பவன் சூரியகுல வேந்தன். அரிய கலைகள் பலவும் பயின்றவன். பெரிய போர் வீரன். இவன் ஒருநாள் தனது அந்தப்புரத்தை மருவியிருந்த மலர்ச்சோலையுள் தனியே உலாவிவருங்கால் மாளவிகை என்பவளைக் கண்டான். அவள் விதர்ப்ப வேந்தன் மகள். இளம் பருவமாய் இருக்

கும்பொழுது பகையரசர் வந்து அவனுடைய தந்தையை வென்றார்; அதனால் அரசுநிலை குலைந்தது; அதன்பின் பல விடங்களிலும் அலைந்து திரிந்து முடிவில் வந்து இவனது நகரினை யடைந்தாள்; இம் மன்னனுடைய பட்டத்தேவியாகிய தாரிணி என்பவள் அவ் இளங்குழந்தையைக் கண்டு உளங்கனிந்துகொண்டு உரிமையோடு இனிது பேணி வந்தாள். வருங்கால் பல கலைகளையும் பயின்று இசையிலும்பரதத்திலும் அவள் இசைமிகப்பெற்றாள். பின்பு பருவமடைந்தாள். இவளது எழில் நலங்களை நோக்கி உடனிருந்த மகளிரும் மயங்கி வியந்தார். குமரிருக்கும் இரதிபோல் அமைதியுற்றிருந்த அவளை இவ் அரசன் கண்டான்; உடனே மையல்மீக் கொண்டான். இவனது நிலையினை அறிந்து அவள் நெஞ்சம் கூசினாள். அரசியறியின் யாதாங்கொல்? என்று அஞ்சி யகன்றாள். அவன் உளமிக மறுகி அலமரலுற்றான். அவள்மீது காதல்கொண்டு இவன் நோதலுற்றிருத்தலை வகுளாவலிகை என்னும் தோழி யறிந்துபோய்த் தாரிணி தேவியிடம் உரைத்தாள். அவள் உள்ளங் கொதித்தாள். வெளியே சிறிதும் வரவிடாதபடி ம்ாளவிகையைச் சிறைசெய்துவைத்தாள். எவ்வகையிலாவது அவளை எய்தி நுகரவேண்டுமென்று அரசன் ஏங்கி யுளைந்தான். உணவையும் மறந்து துயிலையுந் துறந்து அவளது வடிவழகையே நினைந்து கொடுந்துபருழந்தான்.

"கொங்கையிணை எழில் கோங்கரும்பாக;
அங்கையணியிதழ் தாமரை யாக;
மணிநிறக் கண்ணிணை குவளை யாக;
எண்ணிய நுண்ணிடை வல்லியாக;
நண்ணிய முறுவல் முல்லையாக;
வீறுமச் செவ்வாய் கொவ்வையாகச்;
சீறடி தளிர்களாகச்; சிறியேம்
ஆகம் கரந்தஇம் மங்கைதன்னைக்
காத்துமென்றனக்கு இரக்கமின்றி
ஓடரிக் கண்ணியை ஒளித்திராயினும்
காட்டுமின்!" இன்றேல் எம்முயிர் காணீர் என இன்ன
வாறு பல பன்னி யலைந்து பாங்கியர் பலரிடம் பாடழிந்து நி

றான். அவர் அஞ்சி யிரங்கி அவ் வஞ்சியைக் கொணர்ந்து இவ னிட முய்த்தார். இவன் பெற்று நுகர்ந்து பெருமகிழ்வுற்றான். களவு நிலையில் இவ்வகை ஒழுகிவருதலைத் தேவி யறிந்து முதலில் சினந்தாளாயினும் பின்பு அவளது பிறப்பு நிலையையும், தனக்கு நெருங்கிய உறவாயமைந்துள்ள வுரிமையையும் உணர்ந்து மகிழ்ந்து உலகமறியத் தன் தலைவனுக்கு அவளை மணஞ்செய்து வைத்தாள். கண்ணுறக்கமின்றி அவளை எண்ணியபடியே ஏங்கி யுளைந்து இவன் எய்தி நின்றதைப் பாங்கியர் பலரும் பகர்ந்து வியந்தார். அம் மங்கையைக் காதலித்து இம் மன்னன் மணந்து கொண்ட திறனை விளக்கி வடமொழியில் காளிதாசர் ஒரு நாடகம் இயற்றியுள்ளார். அது, மாளவிகாக்கினி மித்திரம் என்று இவர் பெயரால் வழங்கப்படுகின்றது. காமத்துயருடையார் யாமத்தும் காதலிகளை உள்ளிக் கிடப்பர் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

உண்ணும் உணவும் ஒழிந்தேன் இவள் நினைவால்
கண்ணும் துயிலிழந்த காண்.

காமநோயுடையார் யாமமும் துயிலார் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1137. மண்டுபெருங் காம மருவிநொந்தும் பத்திரையேன்
கொண்டடங்கி நின்றாள் குமரேசா—கண்ட
கடலன்ன காம முழந்து மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில். (எ)

இ—ள்.

குமரேசா! மிகுந்த காமதாபத்தை யடைந்தும் பத்திரை ஏன் வெளிக்காட்டாது அடங்கியிருந்தாள்? எனின், கடல் அன்ன காமம் உழந்தும் மடல் ஏறாப் பெண்ணின் பெருந்தக்கது இல் என்க.

இது, காதலுறினும் மாதர் மடலேறார் என்கின்றது.

காமத்திற்குக் கடலை உவமை கூறியது வரம்பின்றி நீற்கும் அதன் வன்னிலை கருதி. உழந்தும் = வருந்தினும்,

பெண்ணின் = பெண் பிறப்புப்போல. இன் உருபு ஒப்புப் பொருளது. பெரும் தக்கது = மிகவும் தகுதி வாய்ந்தது.

கடல்போல மிகுந்த காம நோயால் வருந்தியிருந்தாலும் மடல் ஏறத் துணியாத பெண்பிறப்புப்போல் மிக்க மேம்பாடுடையது வேறு ஒன்றும் இல்லை என்பதாம்.

காமதாபத்தால் நெடிது வருந்தி முடிவில் மடல் ஏறத் துணிந்த தலைமகனை அணுகி இது என்ன? இப்படி அடக்கமின்றித் துடிக்கின்றீர்கள்! உங்களைக் காட்டிலும் மிகுதியான விரகதாபத்தை யடைந்திருந்தும் பெண்கள் எவ்வளவு அடக்கமாக இருக்கிறார்கள்; அதுபோல் சிறிது ஆறியிருங்கள்; என்று தோழி கூற அவளை நோக்கி அவன் உரைத்தபடி யிது.

கடல்போல் காமம் கலித்தெழுந்தாலும் அதனை வெளிக் காட்டாத மன அடக்கம் பிறப்புரிமையால் பெண்களுக்கு இயற்கையிலமைந்துள்ளது; எனக்கு அஃது இல்லையாதலான் யான் எங்ஙனம் ஆற்றுவேன்? என ஏங்கி நின்றான் ஆதலால் "மடல் ஏறாப் பெண்ணின் பெருந்தக்கது இல்லை" என்று அப் பிறப்பினை இங்ஙனம் சிறப்பித்து மொழிந்தான்.

மடல் ஏறுதல் என்பது நாணத்தை அறவே நீக்கிச் செய்வதோர் அருங் காரியம் ஆதலால் நாணினை உயிரினும் சிறந்ததாகப் பேணிவரும் மகளிர் அந்நாணொழி செயலை எவ் வகையினும் செய்யமாட்டார் என்க.

"கடலன்ன காமத்தராயினும் மாதர், மடலூரார் மற்றையார்மேல்" என்பதும் ஈண்டெண்ணத்தக்கது. அடிகள் குறிப்பை இது, அடியொற்றிவந்துள்ளமை யறியலாகும்.

"கண்ணும் வாளுற்ற; கைவளை சோருமால்;
புண்ணும் போன்று புலம்பும் என் நெஞ்சரோ!
எண்ணில் காமம் எரிப்பினும் மேற்செலாப்
பெண்ணின் மிக்கது பெண்ணல தில்லையே;

சோலை வேய்மருள் சூழ்வளைத் தோழிதன்
வேலைமாக்கடல் வேட்கைமிக் கூர்தர
ஓலைதாழ் பெண்ணை மாமடலூர்தலைக்
கால வேற்றட்டங் கண்ணி கருதினாள்.'' (சிந்தாமணி).

இது, சீவகனைக்கண்டு காதல்மீக்கொண்டு கடுந்துயருழந்த போது குணமாலை உளைந்து மொழிந்தது. காமமீதூர்ந்தால் மடலூர்ந்தாவது ஆடவருய்வர்; மகளிர்க்கோ அது முடியாதென முடிவு செய்துள்ளார்; இனி யான் எவ்வகையில் உய்வேன் என்று அவள் ஏங்கி வருந்தியிருக்கும் நிலையை இதில் ஊன்றி யுணர்ந்து கொள்க.

"அன்னநடையார் அலர் ஏச ஆடவர்மேல்
மன்னுமடலூரார் என்பதோர் வாசகமும்
தென்னுரையிற் கேட்டறிவ துண்டதனை யாம்தெளியோம்;
மன்னும் வடநெறியே வேண்டினோம்; வேண்டாதார்,
தென்னன் பொதியில் செழுஞ்சந்தனக் குழம்பின்
அன்னதோர் தன்மை அறியாதார்; ஆயன்வேய்
இன்னிசை யோசைக்கு இரங்காதார்; மால்விடையின்
மன்னுமணி புலம்ப வாடாதார்; பெண்ணைமேல்
பின்னுமவ் அன்றில் பெடைவாய்ச் சிறுகுரலுக்கு
உன்னியுடலுருகி நையாதார்; உம்பர்வாய்த்
துன்னும் மதியுகுத்த தூநிலா நீணெருப்பில்
தம்முடலம் வேவத்தளராதார்; காமவேள்
மன்னுஞ் சிலைவாய் மலர்வாளி கோத்தெய்யப்
பொன்னெடு வீதி புகாதார்;'' (பெரிய திருமடல்)

இது திருமங்கையாழ்வார் அருளியது. பரம்புருடனாகிய திருமாலைத் தலைவனாக்கொண்டு தன்னைத் தலைவியாக வைத்து அவ் ஆழ்வார் பாடியுள்ளபடி யிது. மகளிர் மடல் ஏறுார் என்பது தமிழ் வழக்கேயாம்; வடமொழி வழக்கின்படி ஏறலாம் ஆதலால் அந் நெறியையே யான்விரும்பி நிற்கின்றேன்; விரும்பாதார் காமநலந்தெரியாத கடைகளே யாவர் எனப் பரகால நாயகி இதில் உரைத்திருக்கும் பான்மையைப் பார்க்க.

கரைகடந்த காமமே மடலூர்தற்குக் காரணமாகுமாதலால் அது மடவார் திறத்து மட்டும் வழுவாம் என்பதை அடியோ டொழித்து எப்பாடு பட்டாவது காதலனைக் கைப்பற்றவேண்டு மென்று தான் கருதிய பொருள்மேல் தனக்குள்ள பெருங்காதலை மங்கையார் இவ்வாறருளியிருப்பினும் உலக வழக்கில் பெண் மடல் ஏற்றம் யாண்டும் இல்லை என்க.

"எத்திணை மருங்கினும் மகடூஉ மடல்மேல்
பொற்புடை நெறிமை யின்மை யான" (தொல்காப்பியம்)

என்னும் இயல் விதியையும் ஈண்டெண்ணிக்கொள்க.

அகத்தே எவ்வளவு காமநோய் மிகுத்தெழுந்தாலும் மங் கையர் மடல்ஏறத் துணியார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பத்திரையால் உணரப்படும்.

## கதை.

பத்திரை என்பவள் கேகயதேசத்து மன்னன் மகள். சுத கீர்த்தியின் வயிற்றில் பிறந்தவள். சிறந்த குணநலங்களை யுடை யவள். அன்னம் கிளி பூவை முதலிய பறவைகளின் இயல்புகளை யறிந்து அன்பு பாராட்டி அவற்றோடு பழகி வந்தாள் ஆதலால் அவை யாதும் கூசாது இவளை அணுகி நின்று நடை மொழி பயி ன்று மிக மகிழ்ந்து வந்தன. இவள் பருவமடைந்து கன்னிமா டத்தில் மருவியிருந்தபொழுது மறுபுல மன்னர் பலர் மணங் குறித்து வந்தார். இவள் எவரையும் விரும்பாமல் கண்ணன் ஒருவனையே கருதி யிருந்தாள். இவளுடைய தாய் வசுதேவ னோடு உடன்பிறந்த தங்கையாதலால் தனக்கு இனிய மாமன் மகனாய் வாய்த்துள்ள அப் பூமனது எழில் நிலையையும், குண நலங்களையும் கேள்வியுற்றுக் காமவேதனை யடைந்து கருத்து ளைந்து நின்றாள். சிறிது அடியில் காண்க.

"தழலும் வெஞ்சினவாட் படை வசுதேவன் தங்கை தண்டுளிமுகில்வயிறு
கிழிபடநிவந்த தண்டலை வேலிக் கேகய நாட்டினுக்கு இறைவன்
எழில்வரையகலம் புணர்சுத கீர்த்தி யீன்ற செவ்வாய்ப்பசுங்கிள்ளை
மழலையந்தீஞ்சொல் பத்திரை பூவை வண்ணன் மேற்காதல் கூர்ந்தனளால்.

தெளித்தொளி விரிக்கும் பச்சைத்திருமணி குயின்றால் என்னக்
கிளைத்தபைந்துளவோன் செவ்வி கேண்மையிற் கேட்டஞான்றே
வளர்த்தபைங்கிளியின் அம்மென் மழலைகேட்டு உவக்குமேனும்
நளிப்புயற் கூந்தல், யாழின் நல்லிசை கேட்கிலாளால். (2)

திகழ்மணி வண்ணன்செவ்வி செவிமுதலுற்ற போதே
நருமணி தழைந்த பொற்பூண் நலந்தகப் புனையுமேனும்,
தகைபடும் ஒருகாழ் முத்தம் தயங்கிணர்க் கோங்கின்யாணர்
முகிழென முகிழ்ந்தகொங்கை முன்றிலிற் புனைகிலாளால். (3)

அஞ்சன வண்ணன் செவ்வி அஞ்செவிப்பட்ட அன்றே
அஞ்செனக் கிடந்த அம்பின் ஆடமர் கடந்த கண்ணிற்கு
அஞ்சனம் எழுதுமேனும், அஞ்சனம் புரைபைங் கூந்தல்
அஞ்சும் மற்றஞ் செஞ்சாந்தம் அணிமுலை எழுத அம்மா!" (4)
(பாகவதம்)

கண்ணனைக் காதலித்துக் காமநோயால் இவள் அடைந்துள்ள இன்னல் நிலைகளை இதில் ஊன்றி யுணர்ந்துகொள்க. இங்ஙனம் விரகதாப மிகுந்து வெந்துயருழந்திருந்தும் வெளிப்பட ஒன்றுஞ் சொல்லாமல் உள்ளங்கூசி ஒடுங்கி யிருந்தாள். இவளது உள்ளக் கருத்தை உணர்ந்துகொள்ளாமல் செவிலித்தாய் பலவகை உபசாரங்களைச் செய்து பாதுகாத்து வந்தாள். வந்தும் நாளும் நாளும் மெலிந்து நைந்து நின்றாள்; பாலும் பழமும் கூட அருந்தாமல் படுதுயருழந்தாள். முடிவில் காமதாபம் என்று அவள் உணர்ந்து கொண்டாள். "பெரும்பாலும் மயலாகிப் பிறர்முகம் கண்டறியா என் பேதை காமன், கரும்பாலும், அரும்பாலும், கலையாலும், அலையாலும், கலங்கியே தயிரும்பாலும் பாயசமும் கசக்கு மென்றாள் இந்த லச்சைக்கு என்சொல்வேனே" என்றபடி அவள் மென்சொல்லாடிப்போய்த் தாய் தந்தையரிடம் இவளது நோய் நிலையை விரித்தாள். அவர் உண்மையை உசாவியறிந்து கண்ணனையழைத்து இவளை அவனுக்குக் கடி மணம் புரிந்து தந்தார். அவன் மணந்துகொண்டுபோய் இவளோடமர்ந்து சிறந்த இன்பங்களை நுகர்ந்து மகிழ்ந்தான். காமம் கரையற்று நின்றும் தன் நிறையால் அடங்கிநின்ற இவளது நிலையினை நினை

ந்து அனைவரும் புகழ்ந்தார். கடலன்ன காமம் உழந்தாலும் மக ளிர் மடலேற மாட்டார் என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

வெள்ளமெனக் காமம் விரைந்தடினும் மங்கையர்தம்
உள்ள முறையார் உடன்.

காதல் மீறியெழினும் மாதர் ஆறியிருப்பர் என்பது இதனால் கூறப்பட்டது.

1138. காதல் விலாசவதி காணு தடக்கியுமே
கோதலர்ந்த தென்னே குமரேசா—மாதர்
நிறையரியர் மன்னளியர் என்னாது காம
மறையிறந்து மன்று படும். (அ)

இ—ள்.

**குமரேசா!** தன் காதலை விலாசவதி அடக்கி வைத்தும் அயலறியும்படி ஏன் அது வெளிப்பட்டது? எனின், நிறை அரியர்; மன் அளியர்; என்னாது, காமம் மறை இறந்து மன்றுபடும் என்க. கோதுஅலர்ந்ததென்றது அலர்பரந்தமை கருதி.

இது, காமவேகத்தின் கடுமை கூறுகின்றது.

நிறை = மனவுறுதி. அல்வழியிற் செல்லவிடாது நெஞ்சை நல்வழியில் நிறுத்தும் தன்மையது நிறை என்க.

அரியர் என்றது ஊழி பெயரினும் தம் உள்ளம் பெயராத உறுதி, நிறையுடையாருக்கு உண்டு ஆதலால் அவரை எளிதில் மீறமுடியாதென்பது கருதி.

மன் அளியர் = மிகவும் அளிசெய்யத் தக்கவர். பெண்கள் அபலைகளாதலால் பெரிதும் இரங்கி எவரும் அருள்செய்யத் தக்க நிலையினர் என்பார் மன் அளியர் என்றார்.

என்னாது என்றது அரியர் என அஞ்சியேனும், அளியர் என இரங்கியேனும் அடங்காது என்றபடி. அச்சமும் இரக்கமும் இல்லையெனக் காமத்தை வைதது அயலறிய வெளிப்பட்டுத் தன்னை இலச்சைகெடச் செய்தமை யான் என்க.

மறை இறந்து = மறைத்தலைக் கடந்து. இறத்தல் = கடத்தல். மன்று = அம்பலம்; வெளியிடம் என்றபடி.

மேல், மகளிர் மிகவும் மனவடக்கமுடையவர் என்றார்; இதில், அவ்வடக்கத்தையும் காமம் உடைத்துவிடும் என்கின்றார்.

அரிய நிறையினையுடையவர் என்று அடங்கி நில்லாமலும் மிகவும் அளிசெய்யத் தக்கவர் என்று இரங்கியருளாமலும் மறைத்தலைக் கடந்து மகளிர் காமமும் வெளிப்படுவதாயது என்பதாம்.

அரியர் என்னாது, அளியர் என்னாது காமம் இவ்வாறு வெளிவரலாயதே எனத் தன் கழிவுநிலைக்கிரங்கித் தலைமகள் இங்ஙனம் மொழிதரலானாள்.

நிறையுடைமையானது மகளிர்க்குச் சிறந்த அரணாகுமாதலால் அந்த வல்லரணையும் கடந்து துள்ளி வெளிப்பட்டுக் காமம் தனக்குத் தொல்லை செய்வதைநினைந்து அவள் சொல்லியபடியிது.

"பிறை எனும் நுதலவள் பெண்மை என்படும்?
நறைகமழ் அலங்கலான் நயன கோசரம்
மறைதலும், மனமெனும் மத்தயானையின்
நிறை எனும் அங்குசம் நிமிர்ந்து போயதே." (இராமாயணம்)

இராமனைக் கண்டபோது காதல்மீக்கொண்டு சீதை கருத்தழிந்து நின்றபடியை இஃதுரைத்து நின்றது. காமவெறி கொண்டு மனம் கதித்தெழுந்ததும், அதனைத் தடுக்கலாற்றாது நிறை தணந்து நின்றதும் இதில் உணர்ந்து கொள்க.

நிறையைத் தோட்டியாக உருவகஞ்செய்தது நெறிகடந்து செல்லாவண்ணம் நெஞ்சை யடக்கியாளும் அதன் நிலை கருதி. காமம் கடுத்தெழுந்தால் அகக்காவலாகிய நிறையும், அருந்துணையாகிய நாணும் அகன்றுபோம் என்க.

"குட்டநீர்க் குவளை யெல்லாம் கூடி முன்னிற்க லாற்றாக்
கட்டழகமைந்த கண்ணாள் நிறை யெனும் சிறையைக் கைபோய்,
இட்டநாண் வேலி யுக்திக், கடலென எழுந்த வேட்கை
விட்டெரி கொளுவ நின்றாள் எரியுறு மெழுகி னின்றாள்"

குட்டம் = ஆழம். (சீவகசிந்தாமணி)

காமமீதூர்ந்தபோது நிறையும் நாணும் தீர்ந்து காந்தருவ த்தை நின்ற நிலையை இது விளக்கி நிற்றல் காண்க.

நிறைமுதலிய குண நலங்களோடு இனிதமர்ந்திருந்த தனது உயர் நிலையைக் கலக்கிக் காமம் கைம்மிகுந்ததாதலால் இனிமேல் களவு நிலையில் மறைவாய்க் கலந்திருக்க இயலாது; காதலனோடு விரைந்து வரைந்துகொள்ளவேண்டும் எனத் தோழியிடம் தலைமகள் மொழிந்தபடி யிது. தன் காமநிலையை நாணந்துறந்துரைத்ததனால் இது நாணுத்துறவுரைத்தலாயிற்று. காமம் அடர்ந்தெழுந்தால் நாணம் அமைந்திராது என்பது கருத்து.

"அளிதோ தானே நாணே; நம்மொடு
நனி நீடுழந்தன்று மன்னே! இனியே
வான்பூங் கரும்பின் ஓங்குமணற் சிறுசிறைத்
தீம்புனல் நெரிதர வீந்துக் காஅங்குத்
தாங்கும் அளவைத் தாங்கிக்
காமம் நெரிதரக் கைந்நில்லாதே" (குறுந்தொகை 149)

மணற்கரை நீர்ப்பெருக்கால் அழிதல்போல் காமப் பெருக்கால் நாணம் அழிந்ததென ஒருத்தி உளைந்துரைத்துத் தலைவனோடு இதில் உடன் போக்கு வலித்திருத்தல் காண்க.

அரிய நிறையுடையராயினும் காமம் கதுவியபொழுது மாதர் அதனை நாணாது உரைசெய்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை விலாசவதிபால் உணரப்படும்.

## கதை.

விலாசவதி என்பவள் அவந்தி நாட்டிலே நாரதம் என்னும் நகரிலிருந்தவள். தானவர்மன் என்னும் குறுநில மன்னனுடைய அருமைத் திருமகள். இவள் பெருந்தன்மை வாய்ந்தவள். அரம்பையரும் வியந்துநோக்கத்தக்க பேரழகுடையவள். அக்காலத்திருந்த அரசிளங் குமரிகள் பலரும் இவளது எழில் நலங்களைப் புகழ்ந்து மிக நயந்து நின்றனர். பருவமடைந்து தனி நிலையில் இவள் இனிதமர்ந்திருந்தாள். ஒருநாள் மதனலேகை என்னும் தோழியுடன் கூடி உபவனம் ஒன்றில் உலாவி வந்தாள், அவ்

வமயம் இயல்பாக வேட்டைக்கு வந்திருந்த அரசிளங் குமாரன் அவண் அடைந்து அனிலவேகன் என்னும் தனது அழகிய குதிரையினின்று இறங்கி அங்கு நறுமணங்கமழ்ந்து சிறந்திருந்த மலர்ப்பொய்கையில் தண்ணீர் பருகி மகிழமர நீழலில் மகிழ்ந்திருந்தான். அவன் அவந்தி வேந்தன். உச்சைனி நகரிலிருந்து அரசு புரிந்தவன். தாராபீடன் என்னும் பெயரினன். அருந்திறலாளன். வேட்டையில் களைத்து நீர்வேட்டு அங்கு விரைந்து சேர்ந்து அருந்தி யமர்ந்தான். அரியேறுபோல் விடையாறி யிருந்த அவனை இவள் அயல் வந்து கண்டாள். காணவே காதல்மீக் கூர்ந்து கருத்துருகி நின்றாள்.

"மங்கையர் நிறையும் நாணும் கவர்ந்திட வனப்புவாய்ந்த
இங்கிவன் தன்னை ஞாலம் இன்புறப் படைத்திலானேல்
திங்களங் கண்ணி வேய்ந்த செஞ்சடைக் கடவுள், எங்ஙன்
பைங்கழல் மதனைக்கொன்ற படுபழி தீருமாறே" என்று நளனை நோக்கித் தமயந்தி நைந்தது போல் அவனைப் பார்த்தபோது இவள் அகங்குழைந்து அலமந்து நின்றாள். இவளது உருவ நிலையை நோக்கி அவனும் உள்ள முருகினன்.

"மேகம், பிறை, சிலை, வேல், குமிழ், வள்ளை, வெண்முத்தம்,
தொண்டை, பூகம், பசுங்கணை, தேனுமிழ்காந்தள், பொற்பாலிகை,
நூல், நாகம், கதலி, அலவன், வரால், நன்னளினம் உண்டு
மாகம் பொழிற்றிருத் தில்லையிலே ஒருவல்லியிலே;" என்றபடி இம்மெல்லியலது கூந்தல் நெற்றி புருவம் கண் மூக்கு காது பல் வாய் கழுத்து முதலிய உறுப்புக்களைத் தனித்தனி நுனித்து நோக்கித் தாங்கருங்காதலோடு அவன் தயங்கி நின்றான். இங்ஙனம் மயங்கி நின்ற அவன் கந்தருவ முறையில் இவளை முயங்கி மகிழ்ந்தான். போகநலங்களைப் பொருந்தி நுகர்ந்த இருவரும் பின்பு வரம்பு செய்து பிரிந்து சென்றார். சென்றவர் ஒருவரை ஒருவர் நினைந்து துயர்மிகுந்தார். கண்ணும் மனமும் கவற்றிச் சென்ற அவனது ஒண்ணிறவுருவினை எண்ணி எண்ணி இவள் இனைந்திருந்தாள், கண்ணுறங்காது கலுழ்ந்து புலம்பினாள்.

"கணைவேள் நிகர் காமரூ காளைபுயத்து
அணையாமல் என்மார்பகலங் கவரா
இணைமால் வரை என்ன வளர்ந்தனிரால்
பணைமா முலைகாள்! பயன் என்னை கொலாம்? (க)

இடரோ தவிராது; இரவோ விடியாது;
அடல் வேலவர் தாம் அருளோ புரியார்;
குடவால் வளையே! குருகே! திரையே!
கடலே! கழியே! இதுவோ கடனே? (உ)

கழலாவளையும், கனலா மதியும்,
உழலா மனமும் பெறுநாள் உளதோ?
மழவேறனையான் மருவா விரகத்
தழலால் உருகும் தமியேன் இனியே?" (ங)

என்றவண்ணமே கன்றியுளைந்து காமவேட்கையால் இவள் கடுந்துயருழந்தாள். அரிய நிறையுடைய தன்னை எளியளாக்கி அயலறியும்படி செய்ததே என்று தன் காதல் நிலையை இவள் கருதி யுளைந்தாள். "நிறையரியர் மன் அளியர் என்னாது காமம் மறையிறந்து மன்றுபடும்" எனக்காதலிகள் கன்றியுளைவர் என்பதை உலகம் இவளிடம் உணர்ந்து நின்றது. முடிவில் வந்து அவந்தி வேந்தன் இவளை மணந்து மகிழ்ந்தான்.

அணைகடந்த வெள்ளம்போல் ஆயிற்றே என்றன்
நிறைகடந்த காமம் நெடிது

காமம் நிறைகடந்து நிற்கும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1139. காதல் நிலையுலகம் காணக் கனிந்ததே
கோதைபால் முன்னேன் குமரேசா — யாதும்
அறிகிலா ரெல்லாரு மென்றேயென் காம
மறுகில் மறுகு மருண்டு. (௯)

இ—ள்.

குமரேசா! தன் காமம் அயலறிய நேர்ந்ததே என்று கோதை ஏன் மிக வருந்தி மொழிந்தாள்? எனின், எல்லாரும் அறிகிலார் என்றே என்காமம் மருகில் மருண்டு மறுகும் என்க.

இது, காமுற்ற காதலி கருதி அயர்வள் என்கின்றது.

கோதை என்றது ஆண்டாளை. திருமாலுக்குரிய மலர் மாலையைத் தன் குழலில் சூடி அதனால் சூடிக்கொடுத்தாள் என்று புகழ்பெற்று நின்ற கூந்தலழகியாதலால் இவள் கோதை என நின்றாள். நாச்சியார் எனவும் பெயர்.

மறுகில் = தெருவின்கண்ணே. மறுகு = தெரு.

மருண்டு மறுகும் = மயங்கிச் சுழலும்.

மருண்டு என்றது தன் காதல் நோயைக் குறித்து வீதியில் ஒதுங்கி அங்கும் இங்கும் பார்த்துச் சிலர் கூடிப் பேசலைக்கருதி என்க. மறுகும் என்றது பலர் கூடிப் பரக்க வுரையாடலைக் குறித்து வந்தது.

ஒருவரும் காணுவகை பெருமிதத்தோடு மருவி யிருந்த என்னை இதுபொழுது சந்தி சிரிக்கச் செய்ததே! என்று தன் காம நிலையை நொந்து கூறியபடி யிது.

மேல், காமம் நிறைகடந்து நின்றதென்றாள்; இதில், புற மறியப் பொங்கிய தென்கின்றாள்.

பிறரெவரும் இதுவரை என்னை அறியவில்லை யென்று கருதி எனது காமம் தெருவிடை மயங்கிச் சுழலா நின்றது என்பதாம்.

தன் காதலன் மீது பெருமோக முடையளாய் இரவும் பகலும் இடையறாது அவனையே நினைந்து தலைமகள் புலம்பி நின்றாள்; நிற்கவே அந் நிலையினை யறிந்து ஊரவர் ஒருவரோடொருவர் தெருவிடை மெல்ல உரையாடி நின்றார் ஆதலால் "என் காமம் மறுகில் மருண்டு மறுகும்" என அருகு அறியும்படி புலந்து அவள் இங்ஙனம் மறுகி யுரைத்தாள்.

யாரும் அறியாவகை அடங்கியிருந்த என்னை இப்பொழுது ஊரறியச் செய்ததே! என்று தன் காம நிலையைக்கடிந்து மொழிந்தது போல் தோழிக்குக் காட்டியது தன்னைத் தலைவனோடு விரைந்து கூட்டிவைக்க என்க.

ஆடவரெவரும் அருகணுகா வகை கன்னி மாடத்தில் மன்னி யிருந்தவள் தன்னனைய துணைவனைக் களவு நிலையில் கண்டு நீங்கியபின் காதல் நோயினல் பேதுறுகின்ருளாதலால் காமம் பெருகி நின்றபடியை இவ்வாறு உரைசெய்யலானுள்.

களிமயக்கம்போல் காமமயக்கமும் தன்னையுடையாரை நிலை குலைத்து வெளிப்படுத்துவிடும் என்க.

"மாலுற வருதலும் மனமும் மெய்யயுந்தன்
நூலுறு மருங்குல்போல் நுடங்குவாள் நெடுங்
காலுறு கண்வழி புகுந்த காதல் நோய்,
பாலுறு பிரை எனப்பரந்தது எங்குமே. (க)

நெருக்கியுட்புகுந்து அருநிறையும், பெண்மையும்,
உருக்கி என் உயிரொடும் உண்டு போனவன்
பொருப்புறழ் தோள்புணர் புண்ணியத்தது
கருப்புவில் அன்று; அவன் காமன் அல்லனே. (உ)

பெண்வழி நலனொடும், பிறந்த நாணொடும்,
எண்வழி யுணர்வும், நான் எங்கும் காண்கிலன்;
மண்வழி நடந்து, அடிவருந்தப் போனவன்
கண்வழி நுழையுமோர் கள்வனே கொலாம்?" (ங)
(இராமாயணம்)

இராமனை நினைந்து சீதை வருந்தியபடி யிவை. காமநிலையும், அதனையுடையவர் மறுகி நிற்கும் வகையும், மறுகு உணருந் திறனும் இதனால் இனிதறியலாகும்.

எண்ணிய காதலனை எய்தும் வரையும் மகளிர் கண்ணுறங்காது கருத்துளைந்து நிற்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது இவ்வுண்மை ஆண்டாள்பால் உணரப்படும்.

## கதை.

ஆண்டாள் என்பவள் பாண்டிநாட்டிலே ஸ்ரீவில்லிபுத்தூரிலே சிறந்திருந்த பெரியாழ்வார் என்னும் வைணவ வேதியருடைய அருமைத் திருமகள். இவளைப் பூமிதேவியின் அம்சம் என்பர். அற்புதவுருவினள். வியக்கத்தக்க வடிவழகும், நயக்

கத்தக்க குணநலங்களும் இவளிடம் உவந்து குடிபுகுந்திருந்தன. வடமொழி தென்மொழிகளை வழுவறப் பயின்று புலமை நிரம்பி கவிபாடும் திறமையும் கைவரப்பெற்று இவள் தலைமையெய்தி நின்றாள். மங்கைப்பருவத்தை மருவிநின்றபோது இவளது எழில் நலங்கள் எங்கும் புகழ்ந்து பேசப்பட்டன. இளங்குமரர்கள் பலர் இவளை மணந்துகொள்ள விழைந்து முனைந்து நின்றனர். கருவிலேயே திருவுடைய இவள் ஒருவரையும் கருதாது திருமாலிடமே பெருமால் கொண்டிருந்தாள். கனவில் ஒருநாள் கண்ணனது உருவ நிலையைக் கண்டாள். அவ்வடிவழகையே நினைந்து நினைந்து பெருமோகமுடையளாய் மறுகியிருந்தாள். அம்மணிவண்ணன் தனக்கு மணமகனாக வேண்டுமென்று மன்மதனை வேண்டி வழிபாடுகள் பல செய்தாள். காமனைப்போல் சுவரில எழுதி, கரும்புவில் முதலியன அருகே தீட்டிப், பல்வகைப் பண்டங்களையும் பரப்பிப் பணிந்து போற்றினாள். தன் கருத்து நிறைவேறும்படி அவனைக் குறித்துப் பல பாடல்கள் பாடினாள். சில அடியில் வருவன காண்க.

"சுவரில் புராண! நின்பேரெழுதிச்
சுறவநற் கொடிக்களும், துரங்கங்களும்,
கவரிப்பிணக்களுந், கரும்பு வில்லும்,
காட்டித்தந்தேன் கண்டாய் காமதேவா!
அவரைப் பிராயம் தொடங்கி என்றும்
ஆதரித்தெழுந்த என் தடமுலைகள்
துவரைப் பிரானுக்கே சங்கற்பித்துத்
தொழுது வைத்தேன் ஒல்லை விதிக்கிற்றியே; (க)

வானிடை வாழும் அவ்வானவர்க்கு
மறையவர் வேள்வியில் வகுத்த அவி
கானிடைத் திரிவதோர் நரிபுகுந்து
கடப்பதும், மோப்பதும், செய்வதொப்ப
ஊனிடை ஆழிசங்கு உத்தமர்க்கென்று
உன்னித்து எழுந்த என் தடமுலைகள்
மானிடவர்க்கென்று பேச்சுப்படில்,
வாழகில்லேன் கண்டாய் மன்மதனே!"

(நாச்சியார் திருமொழி)

இவளது காதற்பெருக்கும், கருதியபொருள்மேல் வைத்துள்ள வுறுதி நிலையும், இதனால் இனிது அறியலாகும். உழுவலன்புடையளாய் நாளும் இவ்வகை உளங்குழைந்து நின்ற இவள் பின்பு குயில்களைப் பார்த்தும், கிளிகளை நோக்கியும், "ஓ மதலை மொழிக் குதலைகாள்! என் விரகதாபத்தைக் கண்ணனிடம கூறி என்னுடன் கூடும்படி அவனை இனிதருளமாட்டீரா?" என்று துனிமிகுந்து மொழிந்தாள். "பொங்கிய பாற்கடல் பள்ளி கொள்வானைப் புணர்வதோர் ஆசையினால் என், கொங்கைகிளர்ந்து குமைத்துக் குதுகலித்து ஆவியை ஆகுலம் செய்யும், அங்குயிலே! உனக்கென்ன மறைந்துறைவு? ஆழியும் சங்கும் ஒண் தண்டும், தங்கிய கையவனை வரக்கூவில் நீ சாலத்தருமம் பெறுதி" என இன்னவாறு பல பன்னியழுங்கினாள். அவனது இதழின் சுவையை எண்ணி ஏங்கினாள்.

"கருப்பூரம் நாறுமோ? கமலப்பூ நாறுமோ?
திருப்பவளச் செவ்வாய் தான் தித்தித்திருக்குமோ?
மருப்பொசித்த மாதவன் தன் வாய்ச்சுவையும் நாற்றமும்
விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல்லாழி வெண்சங்கே"

என்று அவன் கையிலுள்ள சங்கை நோக்கியும் பொங்கிய காதலோடு போற்றி வினவினாள். பின்பு மேகங்களைப் பார்த்துத் தன் மோகநிலையை முற்ற வுரைத்தாள்.

"மாமுத்த நிதி சொரியும் மாமுகில்காள்! வேங்கடத்துச்
சாமத்தின் நிறங்கொண்ட தாடாளன் வார்த்தை என்னே!
காமத்தீ யுள்புகுந்து கதுவப்பட்டு, இடைக்கங்குல்
ஏமத்தோர் தென்றலுக்கு இங்கு இலக்காய் நான் இருப்பேனே.

மின்னாகத் தெழுகின்ற மேகங்காள்! வேங்கடத்துத்
தன்னாகத்திருமங்கை தங்கியசீர் மார்வர்க்கு
என்னாகத்திளங்கொங்கை விரும்பித்தாம் நாள்தோறும்
பொன்னாகம் புல்குதற்கு என் புரிவுடைமை செப்புமினே-

சங்கமா கடல் கடைந்தான் தண் முகில்காள்! வேங்கடத்துச்
செங்கண்மால் சேவடிக்கீழ் அடிவீழ்ச்சி விண்ணப்பம்
கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்து ஒருநாள்
தங்குமேல் என் ஆவி தங்குமென்று உரையீரே"

இன்னவண்ணம் பலபடப் பன்னி யுழந்தவள் முடிவில் கண்ணுறாக் கமின்றிக் கண்ணனையே நினைந்து கலங்கிப் புலம்பினுள்.

"நாமம் ஆயிரம ஏத்தநின்ற நாராயணு! நரனே! உன்னை மாமிதன் மகனுகப் பெற்றால் எமக்கு வாதை தவிருமே."

என ஓதி யுருகினுள். அடுத்துநின்ற தோழிகளைக் கடுத்து விளித்து ஒரு சிறிதும் நாணுது விரகவுரைகள் பல வுருகி யாடினுள். சில அடியில்வருவன காண்க.

"உள்ளேயுருகி நைவேனை உளளோ? இலளோ? என்னுத
கொள்ளை கொள்ளிக் குறும்பனைக் கோவர்த்தனனைக், கண்டக்கால்
கொள்ளும் பயன் ஒன்றில்லாத கொங்கைதன்னைக் கிழங்கோடும்
அள்ளிப் பறித்திட்டு அவன் மார்பிலெறிந்து என் அழலைத் தீர்வேனே.(க)

கொம்மை முலைகள் இடர்தீரக் கோவிந்தற்கு ஓர் குற்றேவல்
இம்மைப்பிறவி செய்யாதே இனிப்போய்ச் செய்யும் தவந்தான் என்?
செம்மையுடைய திருமார்வில் சேர்த்தானேனும் ஒரு ஞான்று
மெய்ம்மை சொல்லி முகம்நோக்கி விடைதான் தருமேல் மிக நன்றே. (உ)

வெற்றிக்கருளக் கொடியான் தன் மீ மீதாடா உலகத்து
வெற்றவெறிதே பெற்றதாய் வேம்பேயாக வளர்த்தாளே;
குற்றமற்ற முலைதன்னைக் குமரன் கோலப்பணைத் தோளோடு
அற்றகுற்ற மவை தீர அணைய அமுக்கிக் கட்டீரே" (நாச்சியார் திருமொழி)

இன்னவாறு காமநோய் மிகுந்து பிதற்றிக்கிடந்தாள். இவளது நிலையினையறிந்து அந்நகரிலுள்ள மகளிர் சிலர் தெருவு தோறும் கூடி மறைமுகமாய் நின்று பரிவுரையாடினுர். அதனை உணர்ந்து இவள் உளைந்து வருந்தினுள். முடிவில் கண்ணனே மூர்த்திகரித்து வந்து இவளை மணந்துகொண்டான். இவள் மகிழ்ந்தமர்ந்தாள். அயலறியும்படி மறுகிடை மருண்டு என் காமம் மறுக நேர்ந்ததே என்று காதல்நோய் மிகுந்தவர் உளைந்து வருந்துவரென்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றுள்.

உள்ளமைந்த காமம் உலகறியத் தூற்றியெனை
எள்ளலுறச் செய்த திடர்.

மயல் மிகுந்தவழி மாதர் அயலயர்ந்து புலம்புவரென்பது கூறப்பட்டது.

1140. கண்டிடிம்பி காமுற்றுள் காணநின்றார் தம்மையெலாம்
கொண்டிகழ்ந்தாள் என்னே குமரேசா — பண்டின்று
யாங்கண்ணிற் காண நகுப அறிவில்லார்
யாம்பட்ட தாம்படா வாறு. (ம)

இ—ள்.

குமரேசா! வீமனைக்கண்டு காமுற்று நின்ற இடிம்பி ஏன் அறிவிலிகள் என அயலவரை இகழ்ந்து கூறினாள்? எனின், யாம் கண்ணிற் காண அறிவில்லார் நகுப; யாம்பட்ட தாம் படா வாறு என்க.

இது, காதலுடையார் நோதல் நிலைகூறுகின்றது.

யான் என்னாது யாம் என்றது தன் பெருமிதம் தோன்ற.

நகுப = சிரிக்கின்றார்கள். பகரவிகுதி பன்மையில் காலம் காட்டி வரும். "பஅந்தம், செலவொடு வரவும்"(நன்னூல்) என்னும் இயல் விதியின்படி இறந்தகாலத்தையும் எதிர்காலத்தையும் உணர்த்தி வருகின்ற அது, ஈண்டு நிகழ்காலம் குறித்து நின்றது.

நகுவாரை அறிவில்லார் என்றது தனது துயர்நிலைமை உணர்ந்து உதவாமல் ஒதுங்கி நகுதலால் அவரை இங்ஙனம் இகழ்ந்து கூறினள் என்க. அறிவுடையராயின் காதல்நிலை தெளிவாராதலால் அவர் இப்படி நகார் என்பதாம்.

பட்ட = உற்றநோய்கள். பட்ட எனப் பன்மையாற் கூறியது காமத்துன்பங்கள் பலவாதல் கருதி.

படாவாறு = உறாமையினால். படுதல் = உறுதல்.

மேல், தன் காமம் பிறரறியும்படி மிகுந்ததென்றாள்; இதில், அதனை அறிந்து நின்றவரை இகழ்ந்து நிற்கின்றாள்.

யாம் அடைந்த காமத் துன்பங்களைத் தாம் அடையாமை யால் எம் கண் காணும்படி பேதைகள் எம்மை இகழ்ந்து சிரிக் கின்றார் என்பதாம்.

முன்னம் காணாமல் புறம்பேசி வந்ததோடு இதுபொழுது என் கண்காணும்படியாயும் சிரிக்கின்றார்களே! எனத் தலை மகள் உரைக்கின்றாளாதலால் "யாம் காண நகுப" என்றாள்.

தலைவனைப் பிரிந்து விரக தாபத்தால் வருந்தியிருந்த தலைவி யானவள், தனது நிலையினை யறிந்து விரைந்து மணஞ்செய்து வைக்காது தணந்து நின்று "இவ்வளவு பரபரப்பா? பெண் பிள்ளைக்கு அடக்கம் வேண்டாமா?" என இன்னன பல பேசித் தம்முள் நகையாடி நிற்கும் தோழிகளைக் குறித்துத் தன்னுள் உரையாடியபடி யிது.

"தலையிடியும் காய்ச்சலும் தனக்குவந்தால் தெரியும்" என்றபடி எனக்கு வந்ததை யறியாமல் தம்மனக்கு வந்தன சொல்லி மடங் கள் வாயிளித்து நிற்கின்றன என்று முன்னிலைப்புறமாகத் தலைவி வாயடியடித்தது அவர் வாயடங்கி நின்று ஆய்வுடையராகி ஆவன செய்ய என்க.

"துனையுநர் விழைதக்க சிறப்புப்போற் கண்டார்க்கு
நனவினுள் உதவாது நள்ளிருள் வேறாகும்
கனவின் நிலையின்றாற் காமம்; ஒருத்தி
உயிர்க்கும், உசாஅம், உலம் வரும், ஓவாள்
கயல்புரை உண்கண் அரிப்ப வரிவாரப்
பெயல்சேர் மதிபோல வாண்முகந் தோன்றப்
பலஒலி கூந்தலாள் பண்பெல்லாந் துய்த்துத்
துறந்தானை யுள்ளி அழூஉம்; அவனை
மறந்தாள்போல் ஆலி நகூஉம், மருளும்;
சிறந்ததன் நாணும், நலனும் நினையாது
காமமுனைஇயாள் அலந்தாளென்று எனைக் காண
நகான்மின்! கூறுவேன் மாக்காள்! மிகா அது
மகளிர், தோள்சேர்ந்த மாந்தர் துயர்கூர நீத்தலும்,

நீள்சுரம் போகியார் வல்லைவந்து அளித்தலும்,
ஊழ்செய்து இரவும் பகலும் போல் வேறாகி
வீழ்வார்கண் தோன்றும தடுமாற்றம் ஞாலத்துள்
வாழ்வார்கட்கெல்லாம் வரும்;" (கலித்தொகை 145)

நாணம் துறந்து காமமே நினைந்து இவள் அலந்தாள் என என்கண்காண என்னைக் கருதி நகைக்கும் ஓ அறிவிலிகாள்! பிரிவும் புணர்வும் இரவும் பகலும்போல முறைசெய்துவரும்; இது உலகத்தில் எல்லார்க்கும் உண்டு; எனக்குமட்டும் வந்ததாகக் கருதி நகாதீர்! என்று தோழியரைச் சுளித்து ஓர் தலைமகள் இதில் உரைத்திருத்தல் காண்க.

"பண்ணமைந்த தீஞ்சொலீர்! பழிப்பது என்னை?மாநிலத்து
உண்ணயந்த தலைவர் வீயின், உயிரையன்ன மாதரார்
எண்ணுகின்ற காமம் என்னும் எரியழற்கு, வெந்தழல்
தண்ணிது என்று மூழ்கியந்த வெம்மையைத் தணிப்பரால்"
(நைடதம்)

இது, தமயந்தி யுரைத்தது. நளனை நினைந்து காமவேதனையால் தான் வருந்துங்கால் மறைந்து நகைத்த தோழியரை விளித்து அவள் உணர்த்தியது. துணைவர் பிரிவு இணையெரியினும் இன்னாது ஆதலால் அதனால் வாதையுறுகின்ற எனது நிலையினுக்கு இரங்காது நகைபுரிந்து நிற்றல் அறிவிலிகள் செயலாம் என இதில் அவள் அறிவுறுத்தி யிருக்கும் அழகைப் பார்க்க.

விரகதாபத்தால் நிறையும் நாணும் துறந்து மறுகிப் புலம்பி யிருத்தலால் இது நாணுத் துறவுரைத்தலாயிற்று.

காமமிகுந்தபோது நாணந்துறந்து மாதர் காதலரை நயந்து நிற்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இடிம்பியால் உணரப்படும்.

## கதை.

இடிம்பி என்பவள் ஏமதரன் என்னும் குறுநில மன்னனுடைய அருமைத் திருமகள். தாய் பெயர் தாலகேசி. அரக்

கர் மரபினள். இவளுடன் பிறந்தவன் பெயர் இடிம்பன். இவள் இளம் பருவமாயிருக்கும்பொழுது இருமுது குரவரும் இறந்து போயினர். துணைவனோடமர்ந்து இவள் இனிது வளர்ந்தாள். மிகவும் மனவுறுதியுடையவள். கரிய வுருவினளாயினும் பெரிய அழகினள். பருவமடைந்து இன்பநலங் கனிந்து இவள் தனி யமர்ந்திருந்தாள். இங்ஙனம் இருந்துவருங்கால் வீமன் அங்கு வந்தான். அரக்கு மாளிகையில் பகைவர் நெருப்பை வைத்த தனால் துணைவரையும் தாயையும் எடுத்துக்கொண்டு கடுத்துவந்து அடுத்திருந்த அகன் பொழிலிடைவைத்து ஆதரித்துவந்த அவன் ஒருநாள் மாலைப்பொழுதில் தனியே உலாவிவந்தான். அவ் வமயம் அவனை இவள் எதிர்ந்து கண்டாள். அவனது திரண்ட தோளையும், அகன்ற மார்பையும், நெறிந்த குஞ்சியையும், வீரஞ் செறிந்து பொலிந்து விளங்கும் முக மண்டலத்தையும் வியந்து நோக்கிப் பெரு மோக முடையளாய் மயங்கி நின்றாள். இவளது நிலையினை நோக்கித் தலை கவிழ்ந்து நின்று உனக்கு யாது வேண் டும்? என அவன் ஓதி வேண்டினன். அதற்கு இவள்,

> "கொம்மை வெம்முலைத் தெரிவையர்க்கு உளங்
> கூசும் ஆசைநோய் கூறுகிற்பதன்று
> எம்மனோர்களும் சொல்வர் யானுனக்கு
> எங்ஙனே கொலாம் இறுதி கூறுகேன்?" (பாரதம்)

என்று தன் உறுதி கூறி ஒதுங்கி நின்றாள். இவளது உள்ள நிலையினை உணர்ந்து அவன் மெள்ள அகன்றான், இவளும் தொட ர்ந்தாள். அவன் திரும்பி நோக்கினன்; "என் தமையன் இன்னும் மணஞ்செய்து கொள்ளவில்லை ஆதலால் அதன்முன் உன்னையான் மணந்து மகிழ்வது முறையாகாது" என்று உரை செய்தகன்றான். இவள் மறுகி வருந்தி உருகி யுளைந்தாள். விரக வேதனையால் வெறிது புலம்பினள். வெட்கமின்றித் தன் ஆசை நிலையை வாய்திறந்து சொல்லி ஓர் ஆடவனை இவள் கூட விழைந்தாளே என்று சிலர் கூடி மொழிந்தார். அதனை நாடி யறிந்த இவள் "சில மூடங்கள் காதல் நிலை யறியாமல் கூர்ந்து சிரிக்கின்றன" எனக் குறிப்பால் இகழ்ந்து விடுத்து முடிவில்

வீமன் தாயாகிய குந்தியை யணுகிக் குழைந்து வணங்கித் தன் சிந்தையுறு நோயினைத் தெளிய வுணர்த்தினாள். அவள் அளி செய்து நோக்கித் தனது அருமை மகனை அருகழைத்திருத்தி இவளை மருவி வாழ்க என உரிமையோடுரைத்தாள். தருமரும் அவ்வாறே சார்ந்து கூறினார். அவன் உள்ளமிசைந்து இவளை உவந்துகொண்டான்.

"அன்னையும், தம்முனும், அறைந்த வாசகம்
முன்னையின் மறை என முடியிற் சூடினான்;
மின்னையும் உடன்கொடுபோந்து, மேவுநீர்
தன்னையும் கண்டதில் துளைந்து தங்கினார்" (பாரதம்)

கந்தருவ முறையில் இவ்வண்ணம் இணைந்து தங்கிவருங்கால் குந்திதேவியை நாளும் வழிபாடுசெய்து இவள் வணங்கி வந்தாள். கணவன்மீது வைத்துள்ள இவளது உழுவலன்பினை வியந்து அவள் உளமிக மகிழ்ந்தாள். இச்சதிபதிகளிருவரும் காம போகங்களைக் கனிந்து மார்ந்தினர். காதல்மீக் கூர்ந்து இவர் இன்ப நுகர்ந்தபடியை அடியில் பார்க்க.

"குந்தியை இரவு நன்பகலும் கோதிலா
வந்தனை புரிதலின் மகிழ் இடிம்பியும்,
வெந்திறல் வீமனும், விழைந்து வள்ளியும்
கந்தனும் எனப் பெருங்காதல் கூரவே; (க)

மான்மதம் கமழ்கொடி மந்திரந்தொறும்,
கான்மணங்கமழ் தடங் காவகந்தொறும்,
தேன்மிகு சுனைநெடும் சிலம்பகந்தொறும்,
மேன்மணம் புரிந்தனர் வேட்கை விஞ்சவே." (உ) (பாரதம்)

இங்ஙனம் கலந்து மகிழ்ந்து வருங்கால் இவள் கருப்பம் அடைந்தாள். பத்துமாதங்கள் கழிந்தபின்னர் ஓர் புத்திரனைப் பெற்றாள். அப்புதல்வன் வீரப்பொலிவோடு விளங்கித் தோன்றினான். அவனுக்குக் கடோற்கசன் என்று பெயரிட்டு இவள் களித்து வந்தாள். காமமீதூர்ந்து நாணம் துறந்து வீமனை இவள் நச்சி நின்றதையும், பக்கம் நின்றவரைப் பரிந்திகழ்ந்ததையும்

பலர் அறிந்து வியந்தார். யாம்பட்டபாடு தாம் படாமையால் அறிவிலார் எம்மை நகுவர் எனக் காதலுற்றவர் அயல் நின்றவரை நோதலுற்றுரைப்பர் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

தள்ளரிய காமநிலை தாமுணரார் யாமுணர
எள்ளி நகுவர் இகழ்ந்து.

காம மிக்கவர் நிலை இதனால் கூறப்பட்டது.

இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

காமநோய் மிகுந்தார்க்கு மடலே ஏமமாம். மையல்மீக்கூரின் மடல்மே லூர்வர். நாணும் ஆண்மையும் அவரிடம் நண்ணுதொழியும். காமவெள்ளம் கரையுடைத்தேகும். காமிகள் மாலையில் கடுந்துயரடைவர். இடையிரவிலும் அவர் இன்றுயில் கொள்ளார். காமம் கடலென மிகினும் மகளிர் மடலேற மாட்டார். நிறையழிவினை அவர் நினைந்து நைவர். அயலறிய நேர்ந்தால் அவர் துயருழந்து சோர்வர். தம்மை நகுவாரைத் தாம் இகழ்ந்து மொழிவர் என்பதாம்.

ாயிசவது நாணுத்துறவுரைத்தல் முற்றிற்று.

---

## 115ம் அதிகாரம் அலரறிவுறுத்தல்.

அஃதாவது களவு நிலையில் ஒழுகிவரும் உளவு வெளிப்பட்டுப் பழிமொழிகள் மெல்லப்பரவி யெழுகின்றன; இனி வரைவு கொள்ளல் நல்லதெனத் தலைவனுக்கும் தலைவிக்கும் தோழி உணர்த்துதல். மடலேறல் முதலாகப் பலவுங் கூறி வெட்கம் துறந்து அவர் வெளிப்படப் புலப்பிய வழி இவ் அலர் விளையுமாதலால் நாணுத்துறவுரைத்தலின் பின் இது வைக்கப்பட்டது.

1141. ஊர்ந்த அலரை உறுதியெனச் சந்திரனேன்
கூர்ந்துவந்து கொண்டான் குமரேசா—ஆர்ந்த
அலரெழ ஆருயிர் நிற்கும் அதனைப்
பலரறியார் பாக்கியத் தால். (க)

இ.—ள்.

குமரேசா! பிறரறிந்து கூறும் அலர்மொழியைப் பூமி சந்திரன் ஏன் தனக்கு இனிது என உவந்துகொண்டான்? எனின், அலர் எழ ஆர் உயிர் நிற்கும்; பாக்கியத்தால் அதனைப் பலர் அறியார் என்க.

இது, அலர் நலம் உரைக்கின்றது.

அலர் = பழிச்சொல். அஃதாவது பலரறிந்து கூறும் பழிமொழி என்க. அரும்பாயிருந்தது மலர்ந்தபோது மலர் எனப்படும்; அதுபோல் மறைவாயிருந்தது அயலறிய அலர்ந்ததனால் அலர் என நின்றது. அலர்தல் = விரிதல். இதன் முந்தைய நிலையை அம்பல் என்பர். அஃதாவது சிலருக்கு மட்டும் புலனாய் ஐயுறவோடு அமைந்து நிற்பது. "அம்பலே பழிச்சொல் சில்லோர் அறிந்து அலர்தூற்றலாமே" (நிகண்டு); பழிமொழியும், பலரறிந்து அலர் தூற்றலும், மலரும் மகிழ்வும் அலரென்றாகும். (பிங்கலந்தை)

இவ் அம்பலும் அலரும் பெரும்பாலும் தலைமகனாலேயே உளவாம்; தலைவியிடம் இரவில் அடிக்கடி வருதலும், இவளைக் காணாதிருக்க முடியாதெனக் காதல் மிகுந்து தவித்து நிற்றலும் ஆகிய நிலைகளைக்கண்டு ஊரவர் முதலில் ஐயுற்றுப் பின்பு உறுதியாகத் தெளிந்து இவரது உறவொழுக்கங்களைப் பற்றி மூலைக்கு மூலை மெல்ல மெல்ல உரையாடுவராதலால் அவ் ஆடல்கள் களவினை வெளிப்படுத்தி வரைதலை விளைக்கும் என்க.

"அம்பலும் அலரும் களவு வெளிப்படுத்தலின்
அங்கதன் முதல்வன் கிழவன் ஆகும்." (தொல்காப்பியம்)

அலர் நிலையும், அதன் விளைவும், பயனும், இதில் உணர்த்தப்பட்டுள்ளன காண்க. கிழவன் = தலைவன்.

அதனை = அவ்வுயிர் நிலைபெற்று நிற்குந்திறனை.

அலர் எழுதலால் எனது அரியவுயிர் நிலைபெற்றுள்ளது அவ் வுண்மையை என் புண்ணியப்பேற்றால் பலரும் அறிந்திலர் என்பதாம். எழ, நிற்கும் என்றது அந்நிலைபேற்றின் நிலை தெளிய.

ஊரவர் கூறும் பழிமொழி தனக்குப் பேருதியமாமெனத் தலைமகன் உவந்து கூறுகின்றானாதலால் உயிர்மேல் வைத்து இங்ஙனம் உணர்த்தி நின்றான்.

களவு நிலையில் நெடுநாளாகத் தலைவியைத் தலைவன் கலந்து வந்தான்; அக் கலப்புநிலை ஊரில் பலர்க்கும் புலப்படலாயது; ஆகவே பெண்டுகள் ஆங்காங்குக் கூடிநின்று இவரது மண்டிய காதலை மெல்ல உரையாடி வந்தார்; இங்ஙனம் அலர் நிகழ்ந்து வருங்கால் ஒருநாள் இரவு தலைவன் அங்கு வந்தான்; வரவே அவனைத் தோழி எதிர்ப்பட்டு "உங்கள் நிலையை ஊரறிந்துகொண்டது; இனி உலகறிய மணந்துகொண்டு மகிழ்ந்து வாழுங்கள்; இன்றேல் அலர்மிகுந்து படும்" என நலமுற வுரைத்தாள்; அங்ஙனம் உரைக்குங்கால் அவளை நோக்கி அவன் உரைத்தபடியிது.

அலர் எழ உயிர் நிற்கும் என்றது "இன்னவள் இன்னவனுக்கு இசைந்துள்ளாள்" என ஊரவர் மொழிந்து வருவராயின் அவ் அலர்மொழி தலைவனுக்குப் பற்றுக்கோடாய் நின்று, அயலெவரும் அணுகாவகை அரண் செய்து உறுதியாக அவளை அவனுக்கே உரிமைசெய்து நிற்கும் ஆதலால் அந்நிலையினைத் தன் உயிர்நிலையாக இங்ஙனம் அவன் உவந்து நின்றான் என்க. இதனால் இவனது காதல் நிலையும், அவளைக் கருதியிருக்கும் திறனும் இனிதறியலாகும். அலரானது இங்ஙனம் எனக்கு உயிராதாரமாய் நிற்றலை ஊரவர் அறிவராயின் அவர் உரையாதொழிவர்; அவ்வாறு ஒழியின் என் உயிர் ஒழிந்துபோம் ஆதலால் இவ்வுளவினை அவர் அறியாதிருத்தல் யான் செய்த புண்ணியப் பயனே என்பான் "பாக்கியத்தால் பலர் அறியார்" என்றான்.

விளைந்த அலரை விதந்துகாட்டி உலகறிய மணந்து கொள்ளும்படி தோழி வேண்ட அவ் அலர் தனக்கோர் ஊதியமாமென உவந்து கொண்டாடிக் களவொழுக்கத்தைத் தலைவன் இங்ஙனம் நயந்து நின்றான் என்க.

பலரும் அறிந்து பழிமொழி கூறுகின்றாராதலால் இனிக் களவு நெறி சரியன்று; விரைவில் வரைவு செய்துகொள்ளும் எனத் தலைமகனிடம் இவ்வாறு உரைசெய்வதனைக் கோவைத் துறையிலும் அலரறிவுறுத்தல் என்பர்.

"அலராயிரந்தந்து, வந்தித்து, மால் ஆயிரங்கரத்தால்
அலரார் கழல் வழிபாடு செய்தாற்கு, அளவில் லொளிகள்
அலராவிருக்கும் படைகொடுத்தோன்; தில்லையான்; அருள்போன்று
அலராய் விளைகின்றது, அம்பல்கைமிக்கு ஐயமெய்யருளே"

(திருக்கோவையார்)

"மணிவரை மாளிகை மாறை வரோதயன் வாணன் வெற்பா!
பணிமொழி யாளென்னுங் கொள்கொப்பு மூடிப் படர்ந்தயலார்
அணிமனை தோறுங் கொழுந்துவிட்டு அப்பலரும்பி, மண்மேல்
தணிவிலதாக இப்போது அலர்பூத்தது உன் தண்ணளியே."

(தஞ்சைவாணன்கோவை)

"கோட்டுமலைவில் விறலாளர் வெங்கைக் குளிர்சிலம்பில்
நீட்டுமிலைமலி வேலண்ணலே! நின் திருக்கரத்தால்
வேட்டுமகிழ் செய் அணங்கெனவே இவள் மென்குழலில்
சூட்டுமலர்கண்டு உலகமெலாம் அலர் சூட்டியதே"

(திருவேங்கைக்கோவை)

"அம்மவாழி பாண! புன்னை
அரும்பு மலி கானல் இவ்வூர்
அலராகின்று அவர் அருளுமாறே" (ஐங்குறுநூறு)

தலைவன் அடிக்கடி வந்து அன்புசெய்து போதலை அயலறிந்து அலர்தருகின்றதாதலால் இனி வருதலை நிறுத்தி வரைந்து கொள்ளவேண்டும் என இவற்றுள் தோழியர் வேண்டிநிற்றல் காண்க. அலர் அறிவுறுத்தலின் கருத்து மணம் குறித்தென்க.

தம் கூட்டம் குறித்து ஊரவர் அலர் கூறுதலைக் காதலர் உவந்து கொள்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பூமிசந்திரன்பால் உணரப்படும்.

## கதை.

பூமிசந்திரன் என்பவன் சாவகநாட்டு மன்னன். நாகபுரம் என்னும் நகரிலிருந்து அரசு புரிந்தவன். மிக்க தண்ணளியுடையவன். புண்ணிய சீலன். நல்ல அழகன். வடிவழகைபபோலவே குணநலங்களிலும் உயர்வெய்தி யிருந்தானாதலால் எவரும்

இவனை உவந்து போற்றி நின்றார். விண்ணில் விளங்கும் சந்திரனைப் போல் இம்மண்ணுலகை மகிழ்வித்து இவன் வயங்கி நின்றமையால் பூமிசந்திரன் என அறிஞர் இவனைப் புகழ்ந்து வந்தார். இவனது இயற்பெயர் கனகவர்மன் என்பர். இவன் ஒரு நாள் இனிய பூங்காவில் தனியே உலாவி வந்தான். அங்ஙனம் வருங்கால் அங்கோர் மங்கையைக் கண்டான். அவள் ஓர் குறுநில மன்னனுடைய அருமைத் திருமகள். உருவிலும் அறிவிலும் பொருவரு நிலையினள். அரமகளிரும் வியந்து நோக்கத் தக்க பெருவனப்புடையளாதலால் அமரசுந்தரி எனப் பெயரமைந்து நின்றவள். அப்பேரழகியைக் கண்டவுடனே இவன் கடுமையல் கொண்டான். அவளும் மண்டிய காதலோடு இவனை நகைபுரிந்து நோக்கித் தலை கவிழ்ந்து நின்றாள். இங்ஙனம் உளமுருகி நின்ற இருவரும் உழுவலன்புடையராய்த் தழுவி மகிழ்ந்தார். களவு நிலையில் இவ்வாறொழுகி வருங்கால் இவரது உறவு நிலையை ஊரறிந்து கொண்டது. நளினி என்னும் தோழி ஒரு நாள் இவனை எதிர்ப்பட்டு "வாழிமன்னவ! எங்கள் பெருமாட்டியோடு தாங்கள் தொடர்புற்றிருப்பதைப் பலரும் தெரிந்து பழி தூற்றுகின்றனர்; இவ்வலர் நிலையை எம்மால் ஆற்றமுடியாது; உங்கள் பெருந்தகைக்கும் இது பிழைதருவதொன்றாம்; ஆதலால் விரைந்து மணஞ்செய்துகொண்டு உலகறிய நின்று உவந்து வாழுங்கள்" என்று நயந்து கூறினாள். வரைவினை விழைந்து விரகுடன் கூறும் அவளது உரை நலனை வியந்து இவன் உளமிக மகிழ்ந்தான். அக் குலமகளோடு தனக்கமைந்துள்ள உறவு நிலையைப் பலரும் அறிந்தமையால் இனித் தவறாது பெறலாம் என்று உறுதிமீக்கூர்ந்தான் அவ் அலர்நிலையை உவந்தான். தன் ஆருயிர் உய்ந்ததென ஆர்வ மிகுந்தான். பின்பு அவளை ஊரறிய மணந்து பேரின்பமடைந்தான். "அலர் எழ ஆருயிர் நிற்கும்" எனத் தலைமகன் உவந்துகொள்வன் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

ஊரறிந்து கூறும் உரையே இவளெனக்கு
நேரமைந்து நின்ற நிலை.

அலர்மொழியைத் தலைமகன் நலமென நயந்து கொள்ளுவன் என்பது இதனால் கூறப்பட்டது.

1142. திண்டோள் இரவிவன்மன் சேரலரை என்விழைந்து
கொண்டாடி நின்றான் குமரேசா—கண்ட
மலரன்ன கண்ணாள் அருமை யறியா
தலரெமக் கீந்ததிவ் வூர். (உ)

இ—ள்.

குமரேசா! நிகழ்ந்த அலரை இரவி வன்மன் ஏன் உவந்துகொண்டான்? எனின், மலர் அன்ன கண்ணாள் அருமை அறியாது இவ்வூர் எமக்கு அலர் ஈந்தது என்க.

மலர் = குவளைப்பூ. கண்ணாள் என்றது தலைவியை.

எனக்கு என்னாது எமக்கு என்றது தன் பீடு தோன்ற.

ஊர் என்றது ஊரிலுள்ள மகளிரை. உள்ளூராதலால் இவ் என அண்மையில் சுட்டினான். ஈந்தது = உபகரித்தருளியது. ஊரார் களிப்போடு உரைக்கும் பழிப்புரையானது தனக்கோர் பற்றுக்கோடா யுற்றிருத்தலால் அப் பேற்றினை உவந்து "ஊர் ஈந்தது" என்றான்.

கண்ணாள் அருமை என்றது நிறையானும் சிறையானும் நெருங்குதற்கரியளாய் நிற்கும் அவளது நிலையினை நினைந்து.

மேல், அலர்மொழி தன் உயிர்க்கு நலம்தருமென்றான்; இதில், அதனை உரைப்பாரை உவந்து நிற்கின்றான்.

மலர்போலும் கண்களை யுடையாளது அருமையை யுணராமல் இவ்வூரவர் எமக்கு அலர்மொழியைத் தந்தார் என்பதாம்.

யாரும் அணுகுதற்கரிய நிலையினையுடைய தலைவியை மிகவும் எளியளாக்கி எனனோடு தொடர்பு படுத்தி அலராடுவது எனக்கு நலமேயாயினும் அவளது அருமையை ஊர் நன்கு அறியவில்லை என்பான் "அறியாது ஈந்தது" என்றான்.

களவு நெறியில் தலைவியை யடையுங்கால் பல இடையூறுகளை அடைந்துள்ளானாதலால் பெறலரும் பேறு என அவளை இவ்வாறு உற நினைந்து நின்றான்.

தலைமகன் ஒருவன் தன் காதலியை விழைந்து ஒருநாளிரவு அவளது ஊரினை யடைந்தான்; அடைந்தவன் கன்னிமாடத்தை யடையுமுன் பன்னெடுந் தடைகள் இடையே நிகழ்ந்தன; முடிவில் அரிதின் அணுகினான்; அவ்வமயம் சேவல் கூவியது; இனிப் பொழுது விடிந்து விடும் எனக் கடிது மீண்டனன்; அவன் வரா தொழிந்தமையை யறிந்து தலைவி உளமிக நொந்து களவு நிலையை வெறுத்தாள். அவள் வெறுத்துரைத்தபடியை அடியில் பார்க்க.

"இரும்பிழி மகாஅர் இவ் அழுங்கன் மூதூர்
விழவு இன்றாயினும் துஞ்சா தாகும்;
மல்லல் ஆவணம் மறுகுடன் மடியின்,
வல்லுரைக் கடுஞ்சொல் அன்னை துஞ்சாள்;
பிணிகோள் அருஞ்சிறை அன்னை துஞ்சின்,
துஞ்சாக் கண்ணர் காவலர் கடுகுவர்;
இலங்குவே லிளையர் துஞ்சின், வை எயிற்று
வலஞ்சுரித் தோகை ஞாளி மகிழும்;
அரவவாய் ஞமலி குரையாது மடியின்,
பகலுரு வுறழ்நிலாக் கான்று, விசும்பின்
அகல்வாய் மண்டிலம் நின்று விரியும்மே;
திங்கள் கல்சேர்பு கனையிருள் மடியின்,
இல்எலி வல்சி வல்வாய்க் கூகை
கழுதுவழங்கு யாமத்து அழிதகக் குழறும்;
வளைக்கட் சேவல் வாளாது மடியின்,
மனைச்செறி கோழி மாண்குரல் இயம்பும்;
எல்லாம் மடிந்த காலை ஒருநாள்
நில்லா நெஞ்சத் தவர் வாரலரே; அதனால்
அரிபெய் புட்டிலார்ப்பப் பரிசிறந்து
ஆதிபோகிய பாய்பரி நன்மா
நொச்சிவேலித் தித்தன் உறந்தைக்
கன்முதிர் புறங்காட் டன்ன
பன்முட்டின்றால் தோழி! நம் களவே." (அகம் 122)

களவு வழியிலுள்ளவாம் தடைகளும், தலைவியை அடைதலின் அருமையும், காதலர் முடுகி நிற்கும் ஆர்வமும், ஊரவர் நிலையும் இதனால் இனிதறியலாகும். முட்டு = தடைகள்.

இத்தகைய அரிய பாதுகாவலோடமைந்துள்ள பெரியளை என்னோடு மிகவுரியள் எனக் குறித்து இவ்வூரார் உரையாடுவது எனக்குப் பேருபகாரம் என்று காதலன் உவந்து நின்றான். இதில் என்னே உபகாரம்? எனின், தன்னோடு இசைந்தவள் எனப் பேராகிவிடுமாயின் வேறு யாரும் நெருங்கார்; பெற்றோரும் உற்றோரும் விரைந்து மணமுடித்துக்கொள்ளும்படி விழைந்து நிற்பர்; அதனால் அவ் ஆருயிர்க் காதலி தனக்குத் தனியுடைமையாக எளிதில் அமைந்துபடுமாதலால் அதனை மகிழ்ந்துகொண்டான் என்க. அலர் மொழியைத் தலைமகன் நலமென நயந்து கொள்வன என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இரவிவன்மன்பால் உணரப்படும்.

## கதை.

இரவிவன்மன் என்பவன் சூரிய குல மன்னன். அசோதரம் என்னும் நகரிலிருந்து அரசு புரிந்தவன். பலவகைக் கலைகளிலும் வல்லவன். நல்ல போர் வீரன். இவன் இளவரசனாயிருக்கும் பொழுது தன் நகர் மருங்கிருந்த மலர் வனத்தை யடைந்தான். இளமரங்களும் மலர்நிலங்களும் மலை வளங்களும் புடைமிடைந்திருந்த அவ் இனிய வனத்திடை முன்னதாகவே வேனில் வசதியின் பொருட்டுத் தோழியரிருவருடன் ஓர் அரசிளங் குமரி வந்து இனிதமர்ந்திருந்தாள்; அவள் பேரழகுடையவள். பெயர் அமுதபதி. உருவிலும் திருவிலும் சிறந்து பெருமித நிலையில் நனிமிருந்திருந்த அவளை ஒருநாள் மாலைப்பொழுதில் இவன் தனிவந்து கண்டான். காணவே கடுங்காதலுடையனாய் மருங்கு நெருங்கி மயங்கி நின்றான். அவளும் இவனது எழிலையும், விழுமிய நிலையையும் வியந்து நோக்கி நயந் தொதுங்கி நகைமுகம் கோட்டி நாணிக் கவிழ்ந்து தன் கையில் வைத்திருந்த ஓர் நல்ல பூவை மெல்ல மோந்து ஒல்கி ஒசிந்து உளங்குழைந்து நின்றாள்.

''கோணின்ற மதியம்போலக் குழைமுகம் சுடராக் கோட்டித்,
தாணின்ற குவளைப்போதின்தாதகம் குழைய மோந்து,
வாணின்ற நெடுங்கண், காளை வடிவினுக்கு இவா, மற்றை
காணின்று விலக்க, நங்கை நடுவுநின்று உருகுகின்றாள்''

என்றபடி மறுகிநின்ற அவளை இவன் அருகணைந்து தழுவினான். இருவரும் பருகு காதலோடு மருவி மகிழ்ந்தார்.

"நின்ற நாண்எனும்நீள் கன்னிச் சிறைவிண்டு, காளை திண்டோட்
குன்றினால் செறிக்கப்பட்ட குமரிநீர் அமிர்தயாறு
சென்றுதேன் பகர்ந்து, செம்பொற் கலஞ்சிந்தித், திளைத்துவிம்மி
அன்றவன் ஆர்வவெள்ளக் கடலிடை அழுந்திற்றன்றே. (க)

பருவத்தால் அரும்பிப், போதாய்ப் பையவே அலர்ந்து முற்றி,
மருவித் தேங்கனி கொண்டுள்ளான் மனங்கொளவழிந்தகாமத்
திருவொத்த கனியின் தீஞ்சாறுரவுண்டு ஆரமாட்டார்
உருவத்தாலிருவராகி உள்ளத்தால் ஒருவரானார். (உ)

உலவிய அலங்கல் மாலை ஒளிர்மலருடைய மார்பிற்
குலவிய மணிமுத்தோடும் குவிமுலைக் குவடு பாயக்
கலவியும் களிப்பும் காமப் புலவியும் கலந்து சால
நிலவிய மதுவுண்டார்போல் நெஞ்சுண மயங்கியிட்டார்" (ங)

இவ்வண்ணம் முயங்கி நுகர்ந்த இவர் அரிதிற் பிரிந்து தத்தம் வியனகர் புகுந்தார். அவளைப் பிரிந்திருக்க முடியாமல் இவன் பெருந் துயருழந்தான். யாரும் மருங்கு நெருங்காவகை அருங்காவலோடு கன்னிமாடத்தில் அவள் மன்னியிருந்தாள், அங்ஙனம் இருப்பினும் இவன் வரவுக்கு அவள் வழிசெய்து நின்றாளாதலால் இரவிடைக் கரந்து புகுந்து மகிழ்ந்துவந்தான். காவலமிகுதியால் இடையிடையே கடுந்துயரடைந்தான். இங்ஙனம் வருங்கால் ஊரவர் மெல்ல இவ்வுளவினை யறிந்தார். மறுகிடை நின்று மகளிர் சிலர் மறைமுகமாக வுரையாடலானார். அதனை மாதவசேனை என்னும் தோழி யறிந்தாள். ஒருநாள் இவனை எதிர்ந்து "பேரருளாளரே! உங்கள் ஆர்வ நிலையை ஊரறிந்து கொண்டது; பல இடங்களிலும் பழி மொழி பரவுகின்றது; விரைவில் மணஞ்செய்து கொள்ளுங்கள்" என்று நயம்பட வுரைத்தாள். அவளது உரையினை வியந்தான்; நிறையாலும் சிறையாலும் நிலைபெற்றுள்ள உங்கள் தலைவியின் அருமையை யறியாது என்பால் எளிது இசைந்துள்ளாள் என இவ்வூர் மொழி

தருகின்றதே என்று வெளியே வியந்தவன்போல் பேசி உள்ளே கழிமகிழ் வெய்தி நின்றான். பின்பு உலகறிய மணந்து அலகி லின்பம் நுகர்ந்தான்.

"அரவக் கடலொலி அசோதரம் ஆளும்
இரவி வன்மன் ஒருபெருந் தேவி
அலத்தகச் சீறடி அமுதபதி" (மணிமேகலை) என அறி ஞர் புகழ இச் சதிபதிகளிருவரும் உயர் வெய்தி யிருந்தார். களவு நெறி நீங்கி விரைவில் மணந்து கோடற்கு அலர் மொழி ஏதுவாய் நிற்றலால் அதனைக் காதலன் உவந்து கொள்வன் என் பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

வானமிர்த மானுமிவள் வாய்த்தா ளேனுமலர்முன்
கானமர்ந்து செய்த நலம்.

அலரால் வரும் பயன் இதனால் கூறப்பட்டது.

---

1143. ஊருரைத்த பேரலர்தான் உற்றவுடன் சங்கரனேன்
கூருவகை கொண்டான் குமரேசா—நேரே
உறாஅதோ வூரறிந்த கௌவை யதனைப்
பெறாஅது பெற்றன்ன நீர்த்து. (௩)

இ—ள்.

குமரேசா! ஊராருரைத்த அலர்மொழியைச் சங்கர சோழன் ஏன் உவந்துகொண்டான்? எனின், ஊர் அறிந்த கௌவை உறாதோ? அதனைப் பெறாது பெற்று அன்ன நீர்த்து என்க. இது, காதலர்க்கு அலர் ஆதரவென்கின்றது.

கௌவை = அலர். அஃதாவது காதலரிருவரைக் குறித்து மகளிர் மறைந்து பேசும் பழிமொழி. "கள்ளும் துன்பமும் பழி மொழியும் கௌவை" (பிங்கலந்தை). ஊர் அறிந்த கௌவை உறாதோ? என்றது "ஊர் வாயை மூட உலைமூடி உண்டோ?" என்னும் பழமொழியை அடியொற்றி வந்தது. பெண்டுகளுக் குள் ஒரு இரகசியமானது வெளிப்பட நேர்ந்தால் அது பறை

மறைந்ததுபோல் எங்கும் பரந்து நிற்கும் ஆதலால் அதற்கு வருந்தலாகாதென்பதாம். அலரை மறைக்கமுடியாதென்பது கருத்து.

"குதார் குறுந்தொடிச் சூரமை நுடக்கத்து
நின்வெங் காதலி தழீஇ நெருநை
யாடினை என்ப புனலே; அலரே,
மறைத்தல் ஒல்லுமோ? மகிழ்ந!
புதைத்தல் ஒல்லுமோஞாயிற்றதொளியே?" (ஐங்குறுநூறு 71)

அலர் மறைத்தல் ஒல்லாதென்பதை ஓர் உவமங்கூறி இஃதுணர்த்தி நிற்றல் காண்க. கதிரவனொளிபோல் அலர்மொழி பரவும் ஆதலால் அதனை உருமல் தடுக்க ஒல்லாதென்பதாம்.

உருதோ = பொருந்தாதோ? பொருந்தும் என்றவாறு. அளபெடைகள் ஈரிடத்தும் இசை நிறைத்து நின்றன. அதனை என்றது தலைவியோடு தனக்கமைந்துள்ள இசைவினை. நீர்த்து = நீர்மையை யுடையது. நீர்மை = தன்மை.

மேல், தலைவியின் அருமையை அறியாமல் ஊர் அலர் ஈந்ததென்றான்; இதில், அதனால் தனக்கு நேர்ந்த பேற்றினை யுவந்து நிற்கின்றான்.

ஊரார் அறிந்ததனால் உண்டான அலர் எனக்குப் பொருந்துவதேயாம்; அது தலைவியின் உறவினை முற்றப்பெறு திருந்தும் பெற்றதுபோல்வதோர் இயல்பினையுடையது என்பதாம்.

எங்கள் தலைவியோடு காந்துநின்று நீங்கள் கலந்து வருதலை ஊரார் அறிந்துகொண்டனர்; அதனால் அலர் தூற்றுகின்றனர்; அது, உங்கள் காதுக்கு இன்னும் எட்டவில்லையா? இனி இவ்வாறு மறைந்துவருவது சரியன்று; விரைந்து மணந்து கொள்ளுங்கள்; என்று ஒருநாளிரவு தலைவனைக் கண்டு தோழி கூற அதற்கு அவன் யாதும் அஞ்சாது மாறு கூறியபடி யிது.

களவு நிலையில் தலைமகளுடன் தனக்கமைந்துள்ள கலப்பினை ஊரவர் அறிந்து பழிதூற்ற, அத் தூறலைக் கேட்ட தலைமகன்

அவளை வெளிப்படையாக வரைந்துகொள்ளுமுன்னரே அவளது உரிமையை முற்றும் பெற்றதுபோல உவந்துகொண்டானுதலால் "அதனைப் பெறாது பெற்றன்ன நீர்த்து" என்றான். இனி அதனை என்பது அவ் அலரையே என்று கொண்டால் பெறாத ஒரு பொருளைப் பெற்றதோர் தன்மைபோல் அதனைக் கருதிக்கொள்ள வேண்டும் என்று அவன் உறுதிசெய்ததாகக் கொள்க.

அலர் நிலையை அறிவித்துத் தலைவியைக் கலியாணஞ் செய்துகொள்ளும்படி வற்புறுத்திய தோழிக்கு அவ் அலர், தனக்கு இதமாயமைந்துள்ளபடியைத் தலைமகன் இங்ஙனம் நயமாக வுரைத்தான் என்க.

இவ்வாறு தலைமகனிடம் தோழி நேரே கூறாமல் அவனுக்கு வாயில் வேண்டிவந்த பாணனிடம் தலைமகள் கூறுதலுமுண்டு.

"நன்றே பாண! கொண்கனது நட்பே
தில்லைவேலி இவ்வூர்க்
கல்லென் கௌவை எழாக் காலே" (ஐங்குறுநூறு 131)

வரைதலை விழைந்து தோழியும் தலைவியும் அலரறி வுறுத்தினும் அதனை நலமெனக் கொண்டு களவு நிலையையே காதலன் நயந்து நிற்பன் என்பது இதன் திரண்ட பொருளாம்.

அலரெழுச்சி தலைமகனுக்கு அகமகிழ்ச்சியாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை சங்கரசோழன்பால் உணரப்படும்.

## கதை.

சங்கர சோழன் என்பவன் காஞ்சிபுரத்திலிருந்து அரசு புரிந்தவன். இவன் சூரியகுலத் தோன்றல். தொண்டைமண்டலத்தைப் பலவகையிலும் நலமுறச் செய்தவன். அறிவும் சீலமும் அமையப் பெற்றவன். அருந்திறலோடு பெரும்படையுமுடையவன். பகை யடங்கவென்று உலகம் இன்புற முறை புரிந்து வந்தாதலால் பலரும் இவனைப் புகழ்ந்து போற்றிவந்தார். இவனது அரசு முறைமையையும் குண நலங்களையும் அறிந்து மறுபுல மன்னரும் மிக வியந்து நின்றார். உரை பல புகன்றார்.

"தரைகுறுக நிமிர்வெள்ளக் கடல்குறுக நிமிர் படையான்;
தரைகுறுக நிமிர் மன்னர் தலை குறுக நிமிர் கழலான்;
வரைகுறுக நிமிர்புயத்தான்; மதிகுறுக நிமிர் குடையான்;
உரைகுறுக நிமிர் புகழான்; ஊழ்குறுக நிமிர் ஒளியான்;
பொய்யாத பெருவாய்மைப் புரவலன்கை வேல்கண்டு
நையாத பகையில்லை; நானிலத்தில் எங்குமவன்
செய்யாத அறமில்லை; திசைத்தப் பொருளுள் அவன்
எய்யாத பொருளில்லை; எங்கும் அவற்கு இணையில்லை."
(தியாகராசலீலை.)

இங்ஙனம் பொங்கிய சீர்த்தியோடு புவி புரந்து நின்ற இவன் இளவரசாகி முடிபுனையுமுன் பொழிலிடை ஒருநாள் ஓர் அழகியைக் கண்டான். அவள் அருணகர்என் என்னும் ஓர் அரசனுடைய அருமைத் திருமகள். உருவிலும் அறிவிலும் உயரிய நிலையினள். அவள் பெயர் இராசமதி. அக் கட்டழகியைக் கண்டவுடனே காதல்மீக்கொண்டு ஆசைக் கடலில் வீழ்ந்து இவன் அலமந்துழன்றான்.

"பாசிழை பரந்தவல்குற் பனிமொழிக் குமுதச் செவ்வாய்
மாசறு மதிய மன்ன வாண்முகத் தணங்கை நோக்கி
ஆசையங் கடலுள் ஆழ்ந்து கரைபெறா அரசன் நோக்கம்,
ஏசுவதொன்றுமில்லா முலைவரை இவர்ந்த வன்றே"

என்றபடி மயங்கி நின்று மையல்மீக்கூர்ந்தான். இவனது எழில் வளனையும் உளநிலையையு நோக்கி அவளும் உளமிக வுருகினாள். பருகு காதலோடு இவ் வகை உருகிநின்ற இருவரும் அருகணைந்து மருவி மகிழ்ந்தார். களவு நிலையில் இவ்வாறு ஒழுகிவருங்கால் இவரது உளவினைச் சில மகளிர் அறிந்து மெல்ல உரைசெய்து நின்றார். அந் நிலையினை அமிர்தகலை என்னும் தோழி யுணர்ந்து ஒருநாள் இரவு இவனை எதிர்ப்பட்டு "பெருமானே! உங்கள் களவொழுக்கத்தை ஊரறிந்து கொண்டது; நாடும் புள்ளியும் கூறிப் பேரலர் தூறுகின்றது; இனி யாருமறிய விரைந்து மணந்து கொள்ளுங்கள்;" என்று பரிந்து மொழிந்தாள். அவளது பரிவுரையைக் கேட்டு இவன் குறளை செய்தான்; ஊர் அறிந்த

" அம்பலும், கௌவையும், அலரும் பழிமொழி." (க)
" அம்பல், சிலரறிந்து தம்முட் புறங்கூறுதல்." (உ)
" அலரே, பலரும் அறிந்தலர் தூற்றுதல்." (பிங்கலந்தை)
" கௌவை, எங்கும் காணக் கறைதல் " என்க.

" கௌவை சொலின் எவ்வருக்கும் பகை" (ஔவையார்); என்றதனால் இதன் மிகை நிலை புலனும்.

கவ்விது = மிகுதலையுடையது. கவ்வை யுடையது கவ்விது என்க. கவ்வை என்பது ஒலியையும் உணர்த்திவருமாதலால் அஃது ஈண்டு முழக்கத்தின் மேலாய்ப் பெருக்கம் குறித்து நின்றது. "கௌவையே பழிச்சொல், துன்பம், கள், ஒலி எள்ளிளங்காய் " (நிகண்டு).

அது இன்றேல் = அவ் அலர் இல்லையானால். தவ் என்னும் = பொலிவு குன்றும். தவ் என்பது ஒலிக் குறிப்பு. அஃதாவது அணுகி நின்று நுணுகிக் கேட்டாலன்றி அறிய முடியாதபடி அருகி நிற்கும் ஓசை. அது மெலிவின் மேலதாய்ப் பொலிவழிதலை ஈண்டு உணர்த்தி நின்றது. இங்ஙனம் வருவது குறிப்பு மொழி எனப்படும்.

> " நிழலான் றவிந்த நீரில் ஆரிடைக்
> கழலோன் காப்பக் கடுகுபு போகி,
> அறுசுனை மருங்கின் மறுகுபு வெந்த
> எவ்வம் காலுழித் தவ் எனக் குடித்து
> யாங்கு வல்லுநள்கொல்?" (குறுந்தொகை 356)

இது, நிழலும் நீரும் இல்லாத பாலை வனத்தே தலைவனோடு தொடர்ந்துபோன தலைவியை நினைந்து தாய் இரங்கியது. அக் கொடுஞ் சுரத்திடை அரிதாய்க் காணப்படும் அருஞ் சுனையி லிறங்கி உதடு குவித்து அவள் நீர் உறிஞ்சுங்கால் எழுந்த ஓசையைத் தவ் என இதில் குறித்திருத்தல் காண்க.

> " நூல்கால் யாத்த மாலை வெண்குடை
> தவ் என்று அசைஇத் தாழ்துளி மறைப்ப" (நெடுநல்வாடை)

"அம்பலும், கௌவையும், அலரும் பழிமொழி." (க)
"அம்பல், சிலரறிந்து தம்முட் புறங்கூறுதல்." (உ)
"அலரே, பலரும் அறிந்தலர் தூற்றுதல்." (பிங்கலந்தை)
"கௌவை, எங்கும் காணக் கறைதல்" என்க.
"கௌவை சொலவின் எவ்வருக்கும் பகை" (ஔவையார்);
என்றதனால் இதன் மிகை நிலை புலனும்.

கவ்விது=மிகுதலையுடையது. கவ்வை யுடையது கவ்விது என்க. கவ்வை என்பது ஒலியையும் உணர்த்திவருமாதலால் அஃது ஈண்டு முழக்கத்தின் மேலாய்ப் பெருக்கம் குறித்து நின்றது. "கௌவையே பழிச்சொல், துன்பம், கள், ஒலி எள்ளிளங்காய்" (நிகண்டு).

அது இன்றேல்=அவ் அலர் இல்லையானல். தவ் என்னும் =பொலிவு குன்றும். தவ் என்பது ஒலிக் குறிப்பு. அஃதாவது அணுகி நின்று நுணுகிக் கேட்டாலன்றி அறிய முடியாதபடி அருகி நிற்கும் ஓசை. அது மெலிவின் மேலதாய்ப் பொலிவழிதலை ஈண்டு உணர்த்தி நின்றது. இங்ஙனம் வருவது குறிப்பு மொழி எனப்படும்.

"நிழலான் றவிந்த நீரில் ஆரிடைக்
கழலோன் காப்பக் கடுகுபு போகி,
அறுசுனை மருங்கின் மறுகுபு வெந்த
எவ்வம் காலுழித் தவ் எனக் குடித்து
யாங்கு வல்லுநள்கொல்?" (குறுந்தொகை 356)

இது, நிழலும் நீரும் இல்லாத பாலை வனத்தே தலைவனோடு தொடர்ந்துபோன தலைவியை நினைந்து தாய் இரங்கியது. அக் கொடுஞ் சுரத்திடை அரிதாய்க் காணப்படும் அருஞ் சுனையி லிறங்கி உதடு குவித்து அவள் நீர் உறிஞ்சுங்கால் எழுந்த ஓசையைத் தவ் என இதில் குறித்திருத்தல் காண்க.

"நூல்கால் யாத்த மாலை வெண்குடை
தவ் என்று அசைஇத் தாழ்துளி மறைப்ப" (நெடுநல்வாடை)

குளிர் மிகுந்த வாடைக் காலத்தில் மழைத் துளியை மறைக்கும் குடை ஒசிந்து ஓசைப்பட்டு அசைந்து நின்ற தென்னும், இதில் அது ஒலிக் குறிப்பை உணர்த்திநிற்றல் காண்க.

"ஓதமும் ஒலிஓவா இன்றே; ஊதையும்
தாதுளர் கானல் தவ் என்றன்றே" (நற்றிணை 319)

இதன்கண்ணும்தவ் உணர்த்தி நிற்கும் பொருளை யறிக.

காதலர் இருவருக்கும் இசைந்துள்ள இசைவினைக் குறித்து ஊரவர் புரையேற உரை செய்து வருவாராயின் அது எரிவிளக்கின் ... யில் எண்ணெய் வார்த்ததுபோல் அவ் வுறவுரிமையைப் பெருகச் செய்யுமாதலால் "கவ்வையால் காமம் கவ்விது" என்றான்.

மேல், ஊரலர் தனக்குப் பேரின்பம் என்றான்; இதில், அது காமம் வளர்க்கும் கருணைத்தாய் என்கின்றான்.

என் காமம் அலர் தூற்றலால் பொலிவுறுகின்றது; அவ் அலர் இல்லையாயின் தன் இயல் பொழிந்து அஃது இழிந்து படும் என்பதாம்.

களவாக வந்து இங்ஙனம் நீங்கள் கலந்துபோவதைப் பலரும் அறிந்து பழி தூற்றுகின்றார்களே; இது, உங்களுக்கு வெட்கமாக இல்லையா? என்று தோழி கூற அவளை நோக்கித் தலைவன் உரைத்தபடி யிது. இச்சையை வளர்த்து எம்மை இன்புறுத்துகின்ற அலரைக் கொச்சையாக நினைந்து நீ கூறுகின்றாயே! எனக் குறு நகை செய்து இங்ஙனம் அவன் உரை செய்தான் என்க.

நடவாதவழி தூர்ந்து படுதல் போலவும், விறகுறாதபோது எரி அவிந்து படுதல் போலவும் அலர் எழாதாயின் காதலின்பம் நிலை பெறாது மெலிவுறும் என்பான்" அது இன்றேல் காமம் தன்மை யிழந்து தவ் என்னும்" என்றான்.

கௌவையானது காமத்தைக் கனியச் செய்யும் என்றது என்னை? எனின், "இதுவரையும் இன்னான் மகளாய் இருந்தவள்

இப்பொழுது இன்னான் மகனுக்கு இன்னளாயுள்ளாள்'' என மாப்பிள்ளைக்குப் பெண் பேசுவதோர் பண்பா யமைந்து அன்புரிமையை விளைத்து அயலகலாதபடி தலைவியை அருள் செய்யும் ஆதலால் அது, படர் கொடிக்கு ஓர் கொழுகொம்புபோல் நின்று காமத்துக்குப் பற்றும் என்க.

"அலரிற் றோன்றும் காமத்திற் சிறப்பே"(தொல்காப்பியம்) என்பதும் காண்க. அலரறி வுறுத்தலைப் பல திறத்திலும் வைத்துத் தலை மகனுக்குத் தோழி பயிற்றுவளாயினும் அதன் குறிக்கோள வரைவு குறித்தே நிற்கும். ஆதலால் தலைவியின் பெருமையும் அருமையும நிலைமையும் அதில் விரவிவரும் என்க.

"மூத்தோர் அன்ன வெண்டலைப் புணரி
இளையோர் ஆடும் வரிமணை சிதைக்கும்
தளைஅவிழ் தாழைக் கானலம் பெருந்துறைச்
சில் செவித் தாகிய புணர்ச்சி அலர் எழ
இல்வயிற் செறித்தமை அறியாய்; பன்னாள்
வருமுலை வருத்தா, அம்பகட்டு மார்பின்
தெருமரல் உள்ளமொடு வருந்தும் நின்வயின்
நீஙகு சென்றுயான் யாங்ஙனம் மொழிகோ!
அருந்திறற் கடவுட் செல்லூர்க் குணாஅது
பெருங்கடல் முழக்கிற் றாகி யாணர்
இருபபிடம் படுத்த வடுவுடை முகத்தர்
கருங்கட் கோசர் நியமம் ஆயினும்
உறும்எனக் கொள்குநர் அல்லர்;
நறுநுதல் அரிவை பாசிழை விலையே.'' (அகநானூறு 90)

வருமுலை = இளமை தவழ்ந்து வளர்ந்து வருகின்ற முலையினையுடையாள். என்றது தலைவியை. உங்கள் களவொழுக்கம் புறத்தார்க்குப் புலனாய் அலர் எழுந்தமையால் தலைமகளை மனையகம் புகுத்தி அருங் காவல் செய்து, தமர் மருங் கமர்ந்துள்ளார்; அதிலும் இரவிடை வந்து கரவாக நுழைந்து கலந்து நின்று பெரிதும் வருந்திப் பிரிந்து போகின்றீர்கள்; இங்ஙனம் வருந்

தித் தவிக்கின்ற உங்களை வராதே என்று எங்ஙனம் யான் வாய் கூசாது சொல்வேன்? இவ் எல்லாவற்றையும் ஆய்ந்து உலகறிய விரைவில் மணஞ்செய்து கொள்ளுங்கள்; அங்ஙனம் கொள்ள வருங்கால் பரிசமாகப் பெரும் பொருள் கொண்டு வாருங்கள்; ஏன்? எனில், கோசரது இராசதானியை எங்கள் அரிவைக்கு விலையாகக் கொடுத்தாலும் அதனை ஓர் பொருளாகப் பெற்றோர் உவந்து கொள்ளார்; ஆதலால் தரந் தெரிந்து தகுந்த பொருளோடு வந்து வரைந்து கோடல் நலம் என ஒரு தோழி ஓர் தலைமகனுக்கு இதில் உணர்த்தியிருக்கும் அழகைப் பார்க்க. நரைத்தலை மூத்தோர் போல வெளுத்த தலையதாய் இரைத்தலைக்கும் கடல் சிறந்த சிறுமியர் இழைத்த சிற்றிலை அழிக்கும் துறை என்றது பெரியோனாகிய நீ சிறியேமாகிய எங்கள் அகத்தை இங்ஙனம் பெருத்த அலர் ஏற வருத்தலாகாதென்று குறித்தென்க. வளமை கொழித்து இவ்வாறு அவள் வாயாடி நிற்பினும் களவொழுக்கில் உளவாம் அளவிலின்பத்தை இன்னும் சின்னாள் அனுபவிக்க விழைந்தானாதலால் கவ்வையை இனிதென்று தலைவன் இவ்வாறு உவந்து நின்றான்.

காம இச்சை அலரால் வளரும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நீதிபன்பால் உணரப்படும்.

## கதை.

நீதிபன் என்பவன் அங்கநாட்டு வேந்தன். அரசுக்குரிய குண நலங்கள் யாவும் நன்கு அமையப் பெற்றவன். காசியிலிருந்து அரசு புரிந்தானாதலால் காசி யரசன் என இவன் விளங்கி நின்றான். போர் வலியிற் சிறந்தவன். பெரும் படையுடையவன். அறிவு ஆற்றல் அமைதி முதலிய உயர் நலங்களோடு அழகிலும் இவன் தலைமை யெய்தி நின்றான். இவன் இளவரசனாயிருக்கும்பொழுது ஒருநாள் ஓர் குல மகளைக் கண்டான். அவள் ஓர் குறுநில மன்னனுடைய அருமைத் திருமகள். பெரு வனப்புடையவள். அவளுடைய பெயர் உதையை யோடை. இளமை தவழ்ந்து, எழில்நலங் கனிந்து விழுமிய நிலையோடு ஓர் பொழி

விடை உலாவி இனிது நின்ற அவளைத் தெய்வகதியாய் இவன் தனிவந்து கண்டான். காணவே வியக்கத்தக்க அவளது மெய் நிலையை வியந்து விம்மித மெய்தினான். பின்பு பெருங் காத லுடையனாய் மருங்கு நெருங்கி மயங்கி நின்றான். அவளும் இவன்பால் உழுவலன்புடையளாய் உள்ள முருகினாள். இது வரையும் யாரையும் விழையாது கன்னிமையோடு மன்னியிருந்த அவள் தன்னை யறியாமலே ஆதவனைக் கண்ட அம்புயம்போல இவன் எதிர் அகம் நெகிழ்ந்து, ஆர்வ மிகுந்து, அயலொதுங்கி, நிலை கலங்கித் தலை கவிழ்ந்து நின்றாள்.

"நெஞ்சம் கலங்கி நிறையாற்றுப் படுத்து நின்றாள்
அஞ்செங் கழுநீர் அலர்ந்தம் மதிவாண் முகத்தே
வஞ்சம் வழங்காதவன் கண்களின் நோக்க, மாதோ
தஞ்சம் வழங்கித் தலைக்கொண்டது காம வெந்தீ"

என்ற வண்ணம் அவளது காதல் நிலை தெரிந்து கழி பெருங் காமத்தனாய் இவன் கருத்துருகி நின்றான். பருகு காதலோடு இங்ஙனம் உருகி நின்ற இருவரும் ஒருமை யெய்திக் கந்தருவ முறையில் மருவி மகிழ்ந்தார். பின்பு இவன் பிரிந்து சென்று இடையிடையே அவளிடம் வந்து போயிருந்தான். களவு முறை யில் இவ்வாறு இவன் ஒழுகி வருங்கால் ஊரவர் ஐயுற்றுப் பேச லர் தூற்றினார். அவ் அலர் நிலையை அயிராவதி என்னும் தோழி அறிந்தாள்; ஒருநாள் இவனை எதிர்ந்து உங்கள் வரவு போக்கைப் புறம் அறிந்து கொண்டது; இனி வரைவு செய்து கொண்டு உலகமறிய நின்று தலைவியோடமர்ந்து நலமுற வேண்டும் என்று இதமுட னுரைத்தாள். அதற்கு இவன் உங்கள் ஊரவர் கூறும் பழிமொழியால் என் ஆசை மேலும் மேலும் உயர் வுறுகின்ற தென வுரை செய்து நின்றான். கவ்வையால் காமம் கவ்விதாம் எனத் தலைமகன் உவந்து கொள்வன் என்பதை உலகம் இவன் பால் உணர்ந்து நின்றது.

எரிதிரியில் எண்ணெய் இடல்போலக் காமம்
புரியலரால் பொங்கும் பொலிந்து.

அலரால் காமம் தழைவுறும் என்பது இதனல் கூறப் பட்டது.

1145. பண்டுவெளிப் பட்ட பழியலரைச் சுச்சுதனேன்
கொண்டுவந்து நின்ருன் குமரேசா—மண்டிக்
களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்ருல் காமம்
வெளிப்படுந் தோறும் இனிது. (ரு)

இ—ள்.

குமரேசா! தன் காதல் நிலை வெளிப்பட்டபோது சுச்சுதன் ஏன் இன்புற்று நின்ருன்? எனின், களித்தொறும் கள் உண்டல் வேட்டலபோல் காமம் வெளிப்படும்தோறும் இனிது என்க.

களித்தொறும் = களிக்கும் தோறும். களிப்பு என்பது கள் உண்டதனல் ஒருவனது உள்ளத்து உண்டாம் உவகைப் பெருக்கம். வேட்டு அற்று = விரும்பினுற்போலும்.

காமம் வெளிப்படுந்தோறும் = காம வொழுக்கம் வெளியே புலப்படும்போதெல்லாம்; அஃதாவது அலராய்ப் பரவுந்தோறும் என்றபடி. காதலிடத்து மறைவாயிருந்த களவொழுக்கம் புறத்தாரால் அறியப்பட்டபோது அலராகுமாதலால் அது வெளிப்படுதல் என நின்றது. இனிது என்ருன் அவ் அலர் அவனுக்கு இன்பமாதல் கருதி.

களி மயக்கம் பிறர்க்கு இளிவாகத் தோன்றினும் கள் உண்பானுக்கு இதமாதல்போல் அலரெழுச்சி புறத்தார்க்கு இன்னுதாயினும் காதலனுக்கு இனிதாம் என்க. கள், உட்படுந் தோறும் இனிதாம்; காமம், வெளிப்படுந்தோறும் இன்பமாம் என்க.

மேல், கௌவையாலே காமம் கனியும் என்ருன்; இதில் அதனுலேதான் அஃது இனிதாம் என்கின்ருன்.

களிக்குந்தோறும் கள்ளுண்டலை விருப்புதல் போலக் காமமானது அலர் எழுந்தோறும் இன்பமாம் என்பதாம்.

உங்கள் களவொழுக்கம் நன்கு வெளியாகி விட்டது; மூலைக்கு மூலை பழிமொழிகள் எழுகின்றன; இனி மணந்துகொள்ளாமல் இவ்வாறு மறைந்து வருதல் சிறந்ததன்றெனத் தலைமக

னிடம் ஒருநாள் இரவு தோழி கூற அவ்வமயம் அவனை நோக்கி அவன் உரைத்தபடியிது. அவள் இன்னாது என்று குறித்ததனால் அலரை இவன் இனிது என்றுரைத்தான்.

"அறிந்தோர், அறன் இலர்; என்று அலர் சிறந்த;
இன்னுயிர் கழியினும் நனி இன்னாதே;
புன்னையங் கானற் புணர்குறி வாய்த்த
பின்னீரோதி என் தோழிக்கு அன்றே!
படுமணியானைப் பசும்பூட் சோழர்
கொடி நுடங்கு மறுகின் ஆர்க்காட்டு ஆங்கட்
கள்ளுடைத் தடவிற் புள்ளொலித் தோவாத்
தேர்வழங்கு தெருவின் அன்ன
கௌவை யாகின்றது ஐய, நின் அருளே" (நற்றிணை 227)

பல நூல்களைப் படித்து எல்லாம் அறிந்திருந்தும் களவு நீதென் றறியாமல் ஒழுகி வருகின்றாரே; அதனால் இவர் "அறன் இலர்"; என்று ஊரார் அலர் தூற்றுகின்றார்; அதனைக்கேட்டு என் தலைவி இறந்துபடினும் பழி மிகுந்துபடும் ஆதலால் அருள் செய்து அடிக்கடி தாங்கள் இங்குவந்து போவது ஐயனே! நலமன்றென வரைவு வேண்டி ஓர் தோழி இதில் உரைசெய்திருத்தல் காண்க.

இன்னாதாய அலர் உங்களுக்கு மட்டும் எப்படி இனிதாயது என்று தோழி கேட்ப ஓர் உவமம் காட்டி உணர்த்தி நின்றான்.

குடி வெறியனுக்கு கள் எப்படியோ? அப்படியே காமவெறியனுக்கு அலர் இன்பம் தரும என்பான் "களித்தொறும் கள் உண்டல் போலக் காமம் வெளிப்படுந்தோறும் இனிது" என்றான். களிமயக்கம் மேலும் மேலும் கள்ளுண்டலே அவாவி நிற்றல்போல் அலரெழுச்சி மேலும் மேலும காம இச்சையை வளர்த்து நிற்கும் என்பதாம்.

காமத்திற்குக் கள்ளை உவமை காட்டியது களிப்பூட்டி நிற்கும் அது எப்படியும் வெளிப்பட்டு விடுமாதலால் அதற்கு அஞ்சுவதால் பயனில்லை என்பது தோன்ற.

"காமம் கனைந்தெழக் கண்ணின் களியெழ,
ஊர்மன்னும் அஞ்சி ஒளிப்பார் அவர்நிலை,
கள்ளின் களிஎழக் காத்தாங்கு, அலர் அஞ்சி
உள்ள முனையெழ ஊக்கத்தான் உள்ளுட்
பரப்பி மதர் நடுங்கிப் பாரலர் தூற்றக்
கரப்பார் களிமதரும் போன்ம;
கள்ளொடு காமம் கலந்து கரைவாங்கும்
வெள்ளந் தரும் இப்புனல்" (பரிபாடல் 10)

கள்ளின் களிப்புப்போல் காமம் வெளிப்பட்டுவிடுமாதலான் அவ் அலர் நிலையை அஞ்சி அயர்தல் பயனில் செயலாம் என இஃதுணர்த்தி நிற்றல் காண்க. உள்ளக் களிப்பை விளைத்து நிற்றலால் காமத்தோடிணைத்துக் கள் எண்ண நின்றது.

"கோதறு குவளை நாட்டம், கொழுநர்கள் நாட்டம்கொள்ள;
தூதுளங் கனியை வென்ற துவர்த்தலாய், வெண்மை தோன்ற
மாதரும, மைந்தர் தாமும், ஒருவர்மேல் ஒருவர் வைத்த
காதலங் கள்ளுண்டார்போல் முறைமுறை களிக்கின்றாரை"
(இராமாயணம்)

காம போகத்தைக் கள்ளின் போகத்தோடு ஒப்ப வைத்து இதில் உணர்த்தியிருக்கும் அழகைப் பார்க்க. களிப்பு ஏற ஏறக் கள்ளுண்டலில் விருப்பம் ஏறுதல்போல் பழிப்புரை பரவப் பரவக் காமங் கழிபேரின்பமாம் என்பது கருத்து.

அலர் நிலையை அஞ்சாமல் தலைமகன் உள மகிழ்ந்துகொள்வன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை சுச்சு தன்பால் உணரப்படும்.

## கதை.

சுச்சுதன் என்பவன் இரதநூபுரம் என்னும் நகரிலிருந்தவன். சடி என்னும் முடி மன்னனுக்கு மதி மந்திரியாயமர்ந்து இதம்பல செய்தவன். இவன் ஓர் குறுநில அரசர் மரபிற் பிறந்தவன். அழகில் மிகச் சிறந்தவன் அறிவிலும் திறலிலும் பொருவறு நிலையினன். பல கலைகளையும் நிலை கண்டு தெளிந்தவன்.

அரசியல் முறையினும், ஆள்வினை நிலையினும் சதுரனுதலால் மதுபுல மன்னரும் இவன் பொருளுரை கேட்க விழைந்து அடிக்கடி பேணி அழைத்து இவனுக்குப் பெருஞ் சிறப்புச் செய்தனர். தன் அரசன்பால் இவன் பேரன்புடையவன். ஒருமுறை அத் திருவுடையானை நோக்கி இவ் அறிவுடையான் உரைத்த அற வுரைகளை வியந்து அறிஞர் பலரும் புகழ்ந்து போற்றினர். அவ் அரச சபையில் அன்று இவன் பொழிந்த மொழிகளுட் சில இதனடியில் வருவன.

"கண்எனப்படுவ மூன்று: காவலர், கல்வி, காமர்
விண்ணினைச் சுழல ஓடும் வெய்யவன், என்னும் பேரார்;
எண்ணினுள் தலைக்கண் வைத்த கண்ணஃது இல்லையாயின்,
மண்ணினுக்கு இருளை நீக்கும் வகைபிறிது இல்லை மன்னா. (க)

குடிமிசை வெய்யகோலும், கூற்றமும், பிணியும், நீர்சூழ்
படிமிசை இல்லையாயின், வானுள் யார்பயிறும் என்பார்?
முடிமிசைத் திவளவேந்தர் முறைமுறை பணிய விம்மி
அடிமிசை நாலும் செம்பொன் அதிர்கழல் அரசரேறே! (உ)

தண்சுடர்க் கடவுள் போலத் தாரகைக் குழாங்கள் தாமே
விண்சுடர் விளக்கமாக விளங்கல; வேந்தர் போல
மண்சுடர் வரைப்பில் மிக்க மக்களும் இல்லை கண்டாய்!
கண்சுடர் கனலச் சீறும் கமழ்கடாக் களிற்று வேந்தே! (ஙு)

அருந்தவம், அரசபாரம், இரண்டுமே அரிய; தம்மை
வருந்தியும் உயிரை ஓம்பி, மனத்தினை வணக்கல் வேண்டும்;
திருந்திய இரண்டும் தத்தம் செய்கையில் திரியுமாயின்,
பெருந்துயர் விளைக்குமன்றே பிறங்குதார் நிறங்கொள்வேலோய்!

அந்தரம் திரியும் செய்கை அமரர்தம் அரசு வேண்டி
இந்திர வுலகம் காணும் நெறியவை யாவை? என்னின்;
மந்திரம் வழாத வாய்மை மாதவம் முயறல்; அன்றேல்
தந்திரம் தழுவிச் செங்கோல் தளர்விலன் தரித்தல்; என்றான்.
(சூளாமணி)

இவற்றால் இவனது மன நலமும், மதியுயர்வும், மனுநீதி நிலையும் இனிதறியலாகும். இவன் ஒருநாள் கலாவதி என்னும் அரச குமரியைக் கண்டான். அவள் பேரழகுடையவள்.

விநோத நோக்கில் தோழியர் நால்வருடன் கூடி ஒரு பொழிலகம் புகுந்தாள். உடன் வந்தவர் மலர் கொய்தல் முதலிய உல்லாசங்களில் ஊர்ந்து புடையகல, அவள் மட்டும் அங்கோர் மயில் நடங் கண்டு தனி யுவந்து நின்றாள். அவ்வமயம் இயல்பாக அவண் சென்றிருந்த இவன் அவளைப் பார்த்தான். இளமை நலங் கனிந்து அழகொழுக நின்ற அவளைப் பார்த்தவுடனே மையல்மீக் கொண்டு இவன் மறுகி நின்றான். அதுவரையும் யாரையும் விரும்பாமல் அருநிறையோடிருந்த அவளும் இவனைக் கண்டவுடனே காதல்மீக் கொண்டாள். "ஞாலம் விளக்கும் ஞாயிறு நோக்கிக், கோலத் தாமரை கூம்பவிழ்ந்தாங்கு" இவன் முன்னிலையில் தன்னுளம் நெகிழ்ந்து அவள் தயங்கி நின்றாள். இங்ஙனம் மயங்கி நின்ற இருவரும் முயங்கி மகிழ்ந்தார். பின்பு அவளது இன்ப நலங்களை உவந்து பாராட்டி அயலறியாவகை இவன் அகன்று சென்றான். அவளும் தமருடன் கூடி நகரினை யடைந்தாள்; மாடம் புகுந்தாள்; மறுகி யிருந்தாள். ஈருடலுக்கு ஓருயிர் போல இருவரும் பேரார்வமுடையராய் ஒருவரை ஒருவர் பேணி நின்றார். இரவுக் குறியில் கரவாக வந்து இடை யிடையே அவளுடன் இவன் களித்துப் போனான். இக் களவொழுக்கம் வெளியே புலனாயது. மகளிர் சிலர் மறுகிடை நின்று இவனது வரவு செலவுகளைக் குறித்து மெல்ல வுரையாடலானார். சுதமதி என்னும் தோழி ஒருத்தி ஒருநாள் இவனை எதிர்ப்பட்டு உங்கள் உறவுநிலை வெளிப்பட்டுவிட்டது; அலர் பரவுகின்றது; இனி வரைவுசெய்து கோடலே நலமாமென நயமாக வுரைத்தாள். இவன் அதனை இனிதென உவந்து சில இன்னுரை பகர்ந்தான். பின்னர் மணந்து பேரின்புற்றான். களித்தொறும் கள்ளுண்டல் களிகளுக்கு இனிதாதல்போலக் காமம் வெளிப்படும் தோறும் காதலர்க்கு இனிதாம் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

யாழ்கேட் டுவக்கும் அசுணம்போல் ஊரலரை
ஊழ்கேட் டுவக்கும் உளம்.

அலர் பரவின் காதலனுக்குக் கழிபேரின்பமாம் என்பது இதனால் கூறப்பட்டது.

1146. காதலுபர் கன்னியர்கள் கண்டார் ஒருநாளே
நோதலரேன் கொண்டார் குமரேசா—ஆதரவாய்க்
கண்டது மன்னு மொருநாள் அலர் மன்னுந்
திங்களைப் பாம்புகொண் டற்று. (சு)

இ.—ள்.

குமரேசா! அமிர்தகலை முதலிய கன்னியர்கள் தலைவனை ஒருநாளே கண்டார்; பின்பு ஏன் என்றும் அலர் கொண்டு நின்றார்? எனின், கண்டது ஒருநாள்; அலர், திங்களைப் பாம்பு கொண்டற்று என்க.

இது, அலர் நிலை யஞ்சித் தலைவி கவன்றது.

மன் உம் என்னும் இடைச் சொற்கள் மன்னும் என மருவி நின்றன. மன்னும் என்பன இரண்டனுள் முன்னது கழிவிரக்கம் தோன்ற நின்றது. பின்னது நிலைபேறு காண வந்தது. நான் தலைவனைக் கண்டது ஒருநாள் தானே! அதற்கு அலர் உலகமெங்கும் பரவி இங்ஙனம் நிலைபெற்று நின்றதே! என்று தலைவி குலைவுற்று நின்றாள் ஆதலால் இடைச் சொற்களை இடையே இடம்பெற வைத்து இடை நின்று தியங்கி இவ்வாறு இசைத்தாள் என்க.

திங்களை = சந்திரனை. பாம்பு என்றது இராகு கேதுக்களை. சூரிய சந்திரர்களை இராகு கேது என்னும் அரவங்கள் இடையே வந்து மறைத்து இடரிழைக்கும் என்பது புராண சித்தாந்தம் ஆதலால் அதனை யீண்டுப் பொருத்தி யுரைத்தாள். இம் மறைப்பு கிரகணம் எனப்படும்.

மேல், அலர் இனிதென்று தலைவன் அகமகிழ்ந்து நின்றான்; இதில், அது கொடிதெனக் கூறித் தலைவி குலைந்து நிற்கின்றாள். ஓர் அலரை இருவரும் இவ்வாறு மாறுக நினைந்தது என்னை? எனின், அவன் களவொழுக்கில் இன்னும் சிலநாள் கழிக்க விரும்புகின்றான்; இவள் தடை மிகுந்து படலால் உடனே மணந்து கொள்ள விழைந்துள்ளாளாதலால் இங்ஙனம் நினைந்து கொண்டார் என்க.

யான் காதலனைக் கண்டு மகிழ்ந்தது ஒரு நாளே; அதனால் விளைந்த அலர் சந்திரனைப் பாம்பு கௌவியதுபோல் எங்கும் பரந்துநின்றது என்பதாம்.

தலைவனை முதல்நாள் தலைப்பட்டு வந்து கன்னிமாடம் புகுந்த தலைவி அதன்பின் அவனை எய்தப் பெறாது வெய்துயிர்த்து இருந்தாள்; அங்ஙனம் இருக்குங்கால் அக்களவொழுக்கம் எப்படியோ வெளியாய் ஊரெங்கும் பரவ, மகளிர் அதனைக் குறித்து உரையாடி நின்றார்; அந் நிலையினை யறிந்து உளமிக நாணித் தோழியிடம் அவள் உரையாடியபடி யிது. தன்மேல் எழுந்த அலர் நிலைக்குச் சந்திர கிரகணத்தை ஒப்புக்கூறியதனால் அலரைப் பாம்பாகவும், தலைவியைத் திங்களாகவும், கருதிக் கொள்க. இதனால் அவளது தன்மையும், அலரது வெம்மையும் அறியலாகும். இன்பகரமான அமிர்த கலைகள் நிறைந்து இனிதமர்ந்துள்ள திங்களைத் துன்பகரமான பாம்பு வந்து கௌவிப் பதைக்கச் செய்வதுபோல் இனிய தலைவியைக் கொடிய அலர் எழுந்து துடிக்கச் செய்த தென்க.

"அங்கண் மதியம் அரவின்வாய்ப் பட்டெனப்,
பூசல்வாயாப் புலம்புமனைக் கலங்கி
ஏதின் மாக்களும் நோவர்; தோழி!
ஒன்றும் நோவார் இல்லைத்
தெண்கடற் சேர்ப்பன் உண்டஎன் நலக்கே" என்பதும் ஈண்டெண்ணத்தக்கது. இதில், திங்களை எண்ணியிருக்கும் இயல்பும், தன் பரிதாப நிலைமையைத் தலைவி பரிந்துரைத்துள்ள திறமும் காண்க.

தனி இடத்தில் ஒருவரும் காணாவகை தலைவனை ஒருநாள் கண்டு வந்தாலும் அது, ஊரெங்கும் காணப்பட்டுப் போலராய் நின்றதாதலால் அவ் அலர் நிலைக்குத் தலையாயமதியினை இங்கு நிலையாக வைத்தாள். நெடுந்தூரத்தி லிருப்பினும் திங்களைப் பாம்பு கொண்டால் அக் கோள்நிலை உலகெங்கும் பரந்து காணப் படும் ஆதலால் யாரும் அணுகா வகை அந்தப்புரத்தில் மறைந்

திருந்தும் தன்மேல் எழுந்த அலர் ஊரெங்கும் பரந்து நின்றமைக்கு உவகையாக அதனை நினைந்து நின்றாள்.

ஒருநாள் தானே தலைவனைக் காணப் பெற்றேன்; அது பலநாள் கிடைக்கப்பெற்று இவ்வாறு அலமொழினும் பொறுத்துக் கொள்ளலாமே; என்று அக் காட்சியின் மீது ஆர்வமீதூர்ந்து ஆற்றாமையோடு உரைக்கின்றாளாதலால் "கண்டது ஒருநாள்" என விரல் நீட்டி இங்ஙனம் உளோந்து மொழிந்தாள்.

"மயங்கு மலர்க் கோதை குழைய, மகிழ்நன்
முயங்கிய நாள் தவச் சிலவே; அலரே
கூகைக் கோழி வாகைப் பறந்தலைப்
பசும்பூட் பாண்டியன் வினைவல் அதிகன்
களிறொடு பட்ட ஞான்றை
ஒளிறுவாட் கொங்கர் ஆர்ப்பினும் பெரிதே" (குறுந்தொகை 393)

மகிழநன் முயங்கிய நாள் சிலவே; அலர் கொங்கர் ஆர்ப்பினும் பெரிதே; என ஓர் தலைமகள் உரைத்திருத்தல் காண்க. பாண்டியனுடைய படைத் தலைவனாகிய அதிகன் என்பான் கொங்கரோடு பொருது இறந்தபொழுது போர்க்களத்தில் அவர் ஆர்த்து நின்ற முழக்கினை அலர் நிலைக்கு இதில் உவமை கூறியிருத்தல் அறிக.

சிறந்த பலனில்லாமலே அலர் மிகுந்தெழுகின்றதாதலால் இனி இவ்வாறு அமைந்திருத்தல் நன்றன்று; விரைந்து தலைவனை மணந்துகொள்ளவேண்டுமென்பது கருத்து.

காதல் வயப்பட்ட மகளிர் அலர் பரவுதலையஞ்சி அலமருவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அமிர்தகலை முதலிய மகளிர்பால் உணரப்படும்.

## கதை.

அமிர்தகலை என்பவள் மதுரையிலிருந்த தனபதி என்னும் வணிகர் தலைவனுடைய அருமைத் திருமகள். எழிலுருவிலும் கலையறிவிலும் புகழ் மிகப் பெற்றவள். இவளது வீணைகானம்

மிகவும் வியக்கத்தக்கது. அதன் இன்ப நிலைமை வியந்து கந்தருவரும் சிந்தை மகிழ்ந்து நின்றார். எல்லா நலங்களினும் இவள் சிறந்திருந்தாளாதலால் தம் மரபிற்கு ஓர் உயர் திலகமென வணிகரனைவரும் இவளை உவந்து பேணி வந்தார். தருமகலை, அமிர்த பிரபை, சித்திராவதி, சாந்தினி, சதமதி, மதன காந்தி வருணிகை முதலிய தருண மங்கையர் பலர் தங்கையரென அமைந்து இவளுடன் தங்கியிருந்தார். பொழில் புகுந் துலாவி, பூக்கள் பல கொய்து, புனலுவந்தாடி, இனியன நுகர்ந்து, கழங்கும் பந்தும் கைகலந்தடித்து, தெய்வ மகளிர்போல் வைகலும் இவர் மனக் களிப்புடையராய் வாழ்ந்து வந்தார். ஒருவரை ஒருவர் பிரியாமல் உரிமையோடு ஒருமை எய்தி நின்றார். பருவ மெய்திமும வரைவு குறித்து எவரையும் கருதாமல் பெருமித நிலையோடு இவர் இனிதமர்ந்திருந்தார். இவரது எழிலமைதியையும், குண நலங்களையும் வியந்து மகிழ்ந்து சொக்கலிங்கப் பெருமானே வளையல் விற்கும் ஓர் இளங் குமரன்போல் வடிவு கொண்டு இவரிடம் வந்தார். அக் கட்டழகனைக் கண்டவுடனே இவர் காதல்மீக் கொண்டு உளமிக வுருகி மறுகிடை வந்து மறுகி நின்றார். அம்முதல்வன் வந்ததும், இவர் மொய்த்து நின்றதும் அடியில் காண்க.

“கங்கை கரந்து, மணி கண்டம் கரந்து, நுதற்கண் கரந்து, ஒருபால்
மங்கைவடிவும் கரந்து, உழையும் மழுவும் கரந்து, மழவிடையூர்
அங்கண் அழகர் வளைவணிகராகி ஏனம் அகழ்ந்தறியாச்
செங்கமலச் சேவடி யிரண்டும் திரைநீர் ஞாலமகள் சூட; (க)

பண்டு முனிவர் பன்னியர்பால் கவர்ந்தவளையே பட்டுவடம்
கொண்டுதொடுத்து மீண்டவர்க்கே இடுவேம் எனுமுட்கோளினர்போல்
தொண்டர் தொடுத்த ஐவண்ணத் துணர்த்தார்போலத் தோள் சுமந்து
மண்டுவளையை விலைபகர்ந்து வணிக மறுகில் வருகின்றார். (உ

மன்னு மறையின் பொருளுரைத்த மணிவாய்திறந்து வளை கொள்மின்
என்னும் அளவில், பருவமுகில் இமிழின்னிசைகேட் டெழுமயில்போல்
துன்னு மணிமேகலை மிழற்றத், தூய வணிகர் குல மகளிர்
மின்னுமணிமாளிகை நின்றும் வீதிவாயிற் புறப்பட்டார். (ங)

கண்ட வடிவால் திளைப்பதற்குக் கழிபோன்பு காதல் வழிக்
கொண்டுசெல்ல ஒருசார், தங் குணனும் நாணமுதல் நான்கும்
மண்டியொரு சார் மறுதலைப்ப, மனமும் உழன்று தடுமாற,
அண்டர்பெருமான் விளையாடற்கு அமையச் சூழ்ந்தார் அமுதனையார்''
(திருவிளையாடல்)

அப் பெருமானது உருவ நிலையை நோக்கி உள்ள முருகி இவ்வாறு இவர் உழைவந்து சூழ்ந்து வளையல் இடும்படி வணங்கி வேண்டினர். அவரும் புன்னகை புரிந்து இன்னுரையாடிக் கைகளை இனிது பிடித்து அளவறிந்தெடுத்து வளைகள் தொடுத்தார். தொடுத்த வளைகளை அயலேபோய் உடைத்தெறிந்து விட்டு அடுத்துவந்து எமக்கு இடும்; எமக்கு இடும் என்று கைகளை நீட்டி ஏங்கி நின்றார். அருமாலுடையராய் அன்று இவர் அலமந்த படியை அடியில் பார்க்க.

"எமக்கிடும் எமக்கிடும் எனப் பின் பற்றிபே
அமைத்தடம் தோளினர் அனங்கன் பூங்கணை
தமைத்துளை படுத்த ஓர் சார்பிலாமையால்
கமைப்புறு நாண்முதற் காப்பு நீங்கினர்; (க)

முன்னிடும் வளையெலாம் கழல, முன்பு சூழ்ந்து
இன்னவை பெரிய; வேறிடும் என்று இட்டபின்
அன்னவும் அனையவே ஆக மீளவந்து
இன்னமும் சிறியவா இடும் என்று ஏந்துவார்; (உ)

பின்னிடும் வளைகளும் சரியப், பேதுறு
முன்னெதிர் குறுகி, நீர் செறித்த மொய்வளை
தன்னொடு கலைகளும் சரிவதே; யென
மின்னென நுடங்கினர் வேல்நெடுங்கணார்'' (௩)

இன்னவாறு கடுமையலுழந்து காமப் பித்தேறி இவர் கலங்கி நின்றார். அவர் மறைந்து சென்றார். கையும் மெய்யும் தீண்டி அவ் ஐயன் செய்து போன சாகசங்களை நினைந்து நினைந்து இவர் நெடுமாலடைந்தார். அந் நினைவின் முதிர்ச்சியால் அனைவரும் அருஞ்சூல் கொண்டார். தம் வயிறுகளைத் தடவி வருந்தி

நாணினர். இவ் அழகிகளுக்கு நேர்ந்த உளவுகள் வெளிவர லாயின. பழிமொழி எங்கும் பரந்தெழுந்தது. எம் ஆருயிர் ஐயனை ஒருதினந்தானே கண்டேம்; அதனால் உண்டான அலர் உலகமெங்கும் பரந்து நின்றதே என்று பரிந்து நின்றார். கண்டது ஒருநாள்; அலர் திங்களைப் பாம்பு கொண்டதுபோல் எங்கும் நீண்டது எனக் காதலிகள் கலுழ்ந்து வருந்துவரென்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது. பின்பு இறைவனே இவர்பால் தலைவனாய் வந்தான் என்று தெரிந்து அரசன்முதலனைவரும் இவரைப் புகழ்ந்து போற்றினார்.

அண்ணலைநான் ஓர்போழ்தே கண்டேன் அலருயிரை
உண்ணுவதாய் நீண்ட துருத்து.

அலர்கண்டு தலைவி ஆகுல மடைவள் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1147. ஊரலரைத் தாயுரையை ஓராதேன் மாயைமுன்
கூர்துயரங் கொண்டாள் குமரேசா—சார்புடைய
ஊரவர் கௌவை யெருவாக அன்னைசொல்
நீராக நீளுமிந் நோய். (எ)

இ—ள்.

குமரேசா! ஊரார் பழித்தும், தாயார் வெருட்டியும் மாயை ஏன் அடங்காது காம நோய் மிகுந்தாள்? எனின், ஊரவர் கௌவை எருவாக அன்னை சொல் நீராக இந் நோய் நீளும் என்க. இது, அலர் காம நோயை வளர்க்கும் என்கின்றது.

கௌவை = பேரலர். எரு = உரம். நீர் = தண்ணீர். நீளும் = நீண்டு வளரும். நோய் = காமநோய். அலர், உரைகளை எரு நீர் என்றதனால் நோயைப் பயிராக்க் கொள்க. ஒரு பாகத்தைமட்டும் உருவகம் செய்ததனால் இது ஏகதேச வுருவகம் என்க. ஆக என்றது நீட்சிக்கு ஏதுவாய் அலைநின்றமை தெரிய.

என் நோய் எனத் தன்மேல் வைத்துக் கூறுது இந் நோய் என இடித்து அண்மையில் சுட்டியது அதன் உண்மை நிலையைத் தோழி ஊன்றி யுணர்ந்துகொள்ள.

ஊரவர் என்றது நகரிலுள்ள மகளிரை. ஆடவரையும் சேர்த்து எண்ணலாகாதோ? எனின், காமத்திற் கண்ணூன்றிப் பெண் புறணி பேசுவோர் பெரும்பாலும் மகளிரே யாதலால் அவரே இங்குத் தகவுடையர் என்க.

கலந்துபோன காதலன் மிகவும் கருணையாளனாதலால் எப்படியும் வந்து என்னைக் கையணைத்துக்கொள்வன்; இந்த ஊர் வாய்க்கும், தாய் வாய்க்கும் யான் யாதும் அஞ்சேன்; என உடன் போக்கு வலித்து நிற்கும் தன் உள்ளக் காதலைத் தோழியிடம் உறுதிபெற வுணர்த்துகின்றாளாதலால் நோய்மேல் வைத்து நீளும் என்று குறித்தாள். "கண்அனையான் என்னுயிரிற் கலந்து நின்ற கணவன் கணக்கறிவான்; பிணக்கறியான்; கருணை நடராஜன்; தண்ணனையான் இளம் பருவம் தன்னில் எனைத் தனித்துத் தானே வந்து அருள் புரிந்து தனிமாலை புனைந்தான்; பெண்ணனையார் கண்டபடி பேசவும் நான் கூசாப் பெருமையொடும் இருந்தேன்; என் அருமையெலாம் அறிந்தான்; உண்ணனையா வகை வரவுதாழ்த் தனனின்றவன்றன் உளமறிந்தும் விடுவேனோ? உரையாய் என் தோழி" (திருவருட்பா) தன்னிகரில்லாத் தலைவனை விழைந்து இராமலிங்க அடிகள் இத் துறையில் நின்று பாடியிருக்கும் அழகை இதில் ஆராய்ந்து பார்க்க.

மேல், அலர் பரவி நின்றபடி கூறினாள்; இதில், அது தனக்கு நலமாயமைந்துள்ள நிலையினை யுணர்த்துகின்றாள்.

ஊரார் கூறும் பழிமொழி எருவாகவும், தாயார்சொல் நீராகவும் காம நோயாகிய பயிர் செழித்து வளரா நின்றதென்பதாம்.

களவு நெறியில் கலந்துவந்த தலைமகனை இடையே எய்தப் பெறாது வருந்தியிருந்த தலைமகளைத் தோழி புகுந்து ஆற்றுதல் செய்தாள்; செய்தும் அவள் ஆற்றாதயர்ந்தாள்; அயரவே நீ

இப்படி வேதனைப்படுவது நின் பெருந்தன்மைக்குத் தகாது; உனது நிலைமையைத் தெரிந்து நகரிலுள்ள மகளிர் பலர் பலபட இகழ்ந்து பேசுகின்றனர் "கைமிகந்துள்ள காதலன் மீது இவ்வளவு ஆவலா? பெண்பிள்ளைக்கு மனவடக்கம் வேண்டாமா? காணாததைக் கண்டதுபோல் நாணாது நல்லத் தவிக்கின்றாள்; நாமும்தாம் இருந்திருக்கிறோம்; என்ன, இப்படியா!" என இன்னவாறு ஊரார் அலர் தூற்றுகின்றார்; அதுவுமன்றி அன்னையும் அறிந்து கடிந்து மொழிகின்றாள்; ஆதலால் நீ சிறிது ஆறியிருக்க வேண்டும் என்று கூற அதற்கு அவள் மாறு கூறியபடி யிது. ஆசையை அடக்கியிருக்கும்படி நீ எடுத்துக்காட்டிய அலரும், உரையும் அதனைப் பெருக்கி நிற்கின்றனவே! யான் எவ்வாறு அடங்கியிருப்பேன்; என்று அவள் வாயடங்குமாறு இவள் மொழிந்து நிற்கின்றாள்.

ஒரு நிலத்தில் எழுந்த பயிரை எருவும் நீரும் இனிது வளர்த்தல்போல் என் அகத்துள் அமைந்த காமத்தை ஊரார் இகழ்ந்து பேசும் பழிமொழியும், தாயார் கடிந்து கூறும் கதமுரையும் பெருகச் செய்கின்றதென்பாள் "ஊரவர் கௌவை எருவாக, அன்னை சொல் நீராக நோய் நீளும்" என்றாள்.

புறத்தே சிறிது அகல நிற்றலால் ஊரை முன்னும், அகத்தே மிக அணுகியிருத்தலால் அன்னையை அதன்பின்னும் அமைய வைத்தாள். தாய் மொழியும் கேளாமல் 'நோய் நீளும் என்றதனால் அவளது விரக வேதனையும், தலைவன்பால் வைத்துள்ள காதல் நிலையும் காணலாகும். அலரையும் அஞ்சாமல், அன்னை சொல்லையும் கேளாமல் தன் அகத்தெழுந்த காமம் மிகுத்து நின்றபடியைத் தோழியிடம் தலைவி இவ்வாறு உரைத்து நின்றாள்.

"என்செய்யும் ஊரவர்கௌவை? தோழீ! இனி நம்மை,
என்செய்ய தாமரைக் கண்ணன் என்னை நிறைகொண்டான்;
முன்செய்யமாமை யிழந்து மேனி மெலிவெய்தி
என்செய்யவாயும், கருங்கண்ணும் பயப்பூர்ந்தவே; (க)

ஊரவர் கௌவை எருவிட்டு, அன்னைசொல் நீர்படுத்து,
ஈரநெல் வித்தி, முளைத்த நெஞ்சப் பெருஞ் செய்யுள்,
பேரமர் காதல் கடல்புரைய விளைவித்த
காரமர்மேனி நம் கண்ணன் தோழீ! கடியனே; (ஓ)

அன்னை என் செய்யில் என்? ஊர் என்சொல்லில் என்? தோழிமீர்!
என்னைஇனி உமக்கு ஆசையில்லை; அகப்பட்டேன்;
முன்னை அமரர் முதல்வன் வண்துவராபதி
மன்னன் மணிவண்ணன் வாசுதேவன் வலையுளே. (க)

நாணும் நிறையும் கவர்ந்து என்னை நல்நெஞ்சம் கூவிக்கொண்டு
சேணுயர் வானத்திருக்கும் தேவபிரான் தன்னை
ஆணைஎன்? தோழீ! உலகு தோறு அலர் தூற்றி, ஆம்
கோணைகள்செய்து குதிரியாய் மடலூர்துமே." (திருவாய்மொழி)

இவை நம்மாழ்வார் அருளியன. தன்னைக் காதலியாக வைத்துத் திருமால்மீது பெருமால்கொண்டு அப் பெருமான் அருளியிருக்கும், காதல் நிலையை இதன்கண் ஊன்றி யுணர்ந்து கொள்க. அடிகளது சொல்லும் பொருளும் இதில் அடியொற்றி வந்துள்ளமை காண்க.

அலர் அஞ்சேன்; அன்னையையும் கேளேன்; எனத் தன் காம நிலையை இங்ஙனம் காண வுரைத்தது தலைவனோடு விரைந்து கூட்டிவைக்க என்க.

"சிலரும் பலரும் கடைக்கண் நோக்கி,
மூக்கின் உச்சிச் சுட்டுவிரல் சேர்த்தி,
மறுகிற் பெண்டிர் அம்பல் தூற்றச்,
சிறுகோல் வலந்தனள் அன்னை அலைப்ப,
அலந்தனென்; வாழி தோழி! கானற்
புதுமலர் தீண்டிய பூநாறு குரூஉச்சுவற்
கடுமா பூண்ட நெடுந்தேர் கடைஇ
நடுநாள் வரூஉம் இயல்தேர்க் கொண்கனொடு
செலவயர்ந் திசினால் யானே
அலர் சுமந்தொழிக இவ் அழுங்கலூரே" (நற்றிணை 149)

குரூஉ = ஒளி மிகுந்த. சுவல்மா = பிடரி மயிரையுடைய குதிரை. கடைஇ = கடாவி; தேரைச் செலுத்தி என்க. கௌவை கூறும் பெண்டிர் செவ்வியை விளக்கி, தாய் அலைப்பதையும் துலக்கி, தன் காம வேதனையையும் காட்டி, யாரும் காணுமல் இடையாமத்தில் வரும் தலைவனேடு இன்று உடன் போதல் வேண்டும் என ஓர் தலைமகள் இதில் உரைத்திருத்தல் காண்க.

அடுத்து நின்று பலர் தடைகள் பல செய்யினும் காதலுடையார் அவற்றை உடைத்துப் போவர் என்பது இதனுல் உணரலாகும். காமத்தைப் பிறர் தடுக்கமுடியாதென்பது கருத்து.

பெருகிவரும் நீரைச் சிறை செய்யச் செய்ய மறுகி ஏறுதல் போல், மகளிர் காமம் அலர் கூறல் முதலிய இடையூறுகள் ஏற ஏற முறுகி ஏறும் என்பதாம்.

"அன்னையும் அறிந்தனள்; அலரும் ஆயின்று;
நன்மனை நெடுநகர் புலம்பு கொள உறுதரும்
இன்னுவாடையும் மலையும்;
நும்மூர்ச்செல்கம் எழுகமோ தெய்யோ" (ஐங்குறுநூறு 236)

அலர் மீறி, அன்னை சீறிய பொழுது தலைவனுடன் கூடி ஒரு தலைவி வெளியேறத் துணிந்துள்ளமையை இதில் உணர்ந்து கொள்க. எப் பழியும் அஞ்சாமல், எவருரையும் கேளாமல் காதலுடையார் தம் காதலர்பால் போதலுறுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை மாயைபால் உணரப்படும்.

## கதை.

மாயை என்பவள் மமகாரன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகள். விளவல நாட்டிலே வனவசை என்னும் நகரிலிருந்தவள். தாய் பெயர் மோகினி. அருந்தவப் பேற்றல் பெற்றார் ஆதலால் பெற்றோர் இவளை மிகப் பேணி வளர்த்தார். பிறந்தபொழுதே வியக்கத்தக்க வடிவழகோடு இவள் விளங்கியிருந்தாள். பருவமடைந்தபொழுது இவளது உருவ நிலையைக்

கண்டு உம்பரும் வியந்தார். பெண்ணலங் கனிந்து, மண்ணுல கில் எவரினும் சிறந்து நின்றமையால் இவள் பெண்ணரசியென நின்றாள். மறுமை நோக்கோடு துறவு நிலையில் மருவியிருந்த முனிவர்களும் கூட இவளைக் கண்டவுடனே மனநிலை குலைந்து மால் கொண்டு நின்றார். கண்டவர் கண்களைக் கவர்ந்து மனத் தில் காமக் கடலை விளைத்தலால் மாயை யெனும் பெயர் இவட்குச் சாலவும் தகுமென மேலவர் மொழிந்தார்.

"காந்தம் வலியும் இரும்புபோல் கண்கள் தன்னோடு உறப்பிணித்து,
நேர்ந்தமனம் ஓர் அணு என்னல் நியாயமன்று, என்று அம்மனத்தில்
போந்த ஆசைப் பெருங்கடலைப் புகட்டு மகளைக் கண்டுவந்து
வேந்தன் மாயை எனும் நாமம் விளம்பிச் சிறப்புப்பல செய்தான்"

தந்தையிட்ட பெயர்க்கு இவள் தகவா யிருந்தமையைக் குறித்துக் கவி இதில் உரைத்திருக்கும் கவினைப் பார்க்க. எழில் நிலையில் எவரும் தனக்கு இணை இல்லையென்று இறுமாந்து நின்றாளாதலால் தன்னை மணந்துகொள்ள விழைந்துவந்த அர சிளங் குமரர்களனைவரையும் இகழ்ந்து விடுத்துக் கன்னிமாடத் தில் தோழியர் புடைசூழ இவள் மன்னியிருந்தாள். இங்ஙனம் இருந்துவருங்கால் அல்லமன் என்னும் அண்ணல் அங்குவந்தான். அவன் அரச குமரனாய் அவதரித்த அற்புத வுருவினன். பல கலைகளையும் வழுவறத் தெளிந்தவன். "கற்றதன் விஞ்சைபோலக் கவினும் நாம் கண்டதில்லை; விற்றொழில் அநங்கவேளை மேனி கொண்டு அமைந்தானென்ன" உற்றவர் எவரும் போற்ற உருவு கொண்டு நின்ற அக் கட்டழகனை இவள் கண்டாள். உடனே கடு மையல் கொண்டாள். அழகின் செருக்கால் ஆடவரெவ ரையும் மதியாதிருந்த இவள் அவ் ஆடவர் திலகன்பால் ஓடிய மனத்தளாய் நீடிய காதலோடு நிலை குலைந்து நின்றாள். அப் பெருமானும் ஆசை காட்டி அகன்றுபோய் அயலமர்ந்திருந்தான். அப் பேரழகனை இடையே அடையப்பெறாது இவள் பெருந்துய ருழந்தாள். உண்ணு நீரும் உணவுந் துறந்து கண்ணுறக்கமின்றி இரவும் பகலும் கலங்கியிருந்தாள். விரகவேதனை நரக வேதனை யினும் வெய்யதென வெய்துயிர்த்தாள். சந்திரன், தென்றல்,

குயில் முதலிய காமாநுகூலங்கள் காதலனைக் கையிழந்திருந்த இவட்கு மாறாயிருந்தனவாதலால் அவற்றை இவள் சீறி வைதாள். அன்று இவள் வைதவைகளுள் சில அடியில் வருவன காண்க.

### சந்திரனை வைதல்.

"தாய்வாயடைந்து மிகுந்தலையை மோதி மோதிச் சலித்தலறக்
காய்வாய் நிலவே! உடன்பிறந்தான் இருந்து வாழுங் கடிமனையை
நீவான் எழுந்து வந்து அழிப்பாய்; என்றால் அந்தோ நிலையின்றித்
தேய்வாய் நின்னோடு இயைபில்லா என்னை என்ன செய்யாயே? (௧)

உருப்ப மிகுவன் தழல் சிவப்புற்று உலகர் காண ஒளிதரவும்
நெருப்பு வெண்மை என்பது நன்னியாயர் நின்னைக் குறித்தன்றோ?
பொருப்பு நறுஞ் சந்தனச் சேறு புலர்ந்து பொரியப், பூவணையும்
விருப்பமலரும் கொளுந்த, அழல்வீசி எழுந்தவெண் திங்காள்! (௨)

இன்று ஒருலகில் எனக்கு ஒன்று; பிறர்க்கு ஒன்றாகி யிருக்கின்றாய்;
நன்றோ உனக்கு மதியமே! ஞாயிறேபோல் வாழாமல்
முன்தோகையர்கள் யாவரையும் ஒப்பக் காணு முயற்சியினால்
அன்றோ, தேய்ந்து போகின்றாய்! அந்தோ? அதனை அறியாயோ? (௩)

### தென்றலைச் சீறல்.

கொல்லாநோன்பு முனிமலையில் தோன்றி என்னைக் கொல்கின்றாய்
பொல்லா மந்த மாருதமே! என்னோ கருணை பூண்டிலாய்!
சொல்லாய், திருப்பாற் கடலி னிடைத் தோன்றுங் கடுவிற் றன் குணமே
அல்லால், அமுதகுண மூண்டோ? நின்னை வெறுப்பதறிவன்றே; (௪)

### குயிலைக் கோதித்தல்.

உயிர்த்தபொழுதே நின் குரல் கேளாமுன் ஓடிற்று ஈன்றதாய்;
நயத்தின் வளர்த்ததாய், குரல் கேட்டலுமே நடுங்கித் துறந்ததால்;
பயத்த மலர்ப் பூங் காவகத்தில் இருந்து பலகால் கூவினால்
செயிர்த்து நின்னைக் குயிலே! நான் வெறுத்தல் செப்பவேண்டுமோ? (௫)

### காமனைக் காய்தல்.

கன்னற் சிலையாய்! என் மனத்தைக் கலக்குங் காளை கவின்கண்டு
முன்னிற்பதற்கு நாணியோ? இங்கே நின்று முனிகின்றாய்!
தன்னி.ற் பெரியர் இல்லை யெனும் அவனைச் சமரில் தாக்காமல்
நன்னர்த் தளிரின் மெலியாரை அடர்த்தாய், ஆண்மை நன்றரோ!"
நன்று என்றது இகழ்ச்சிக் குறிப்பு. (பிரபுலிங்கலீலை)

காம நோயினால் உளநிலை திரிந்து இவள் உளைந்து புகைப்பி ருக்கும் நிலைகளை இதில் ஊன்றி யுணர்ந்து கொள்க. ஆர்வ மிகுந்து இங்ஙனம் அலமந்திருக்க இவளது நிலையினை யறிந்து ஊரவர் மூலைக்கு மூலை பேரலர் தூற்றினர். தாயும் தெரிந்து தன்னுள்ளங்கவன்றாள்; உவளகம் நீங்கி இவளிடம் வந்தாள்; அயர்ந்து கிடந்த இவள் எழுந்திருந்தாள்; "என்ன அடங்காத் தனம் இது! மன்னன் அறியின் நின்னிலை என்னாம்? உற்ற மணாளனை நாடிப் பெற்றோர் பேணிக் கொடுக்குமுன் இக் குற்றம் நீ புரிதல் நம் குடிப் பெருமைக்கு ஒவ்வாது;" என இடித்தறி வுறுத்தினாள். அடுத்து நின்ற தோழிகளை கடுத்து நோக்கி னாள். "மங்கையீர்! நீயிர் சூழ்ந்தனர் இருந்தும் வளைதரு வேலியில் பயிர்போல, எங்கள் தம் மடந்தை நிறை அழிந்தொழிய என் செய்தீர்! பாவிகாள்!" என்று கூவி மொழிந்து இனிமேல் யாதும் கோது நிகழா வண்ணம் பாதுகாமின் என ஓதியகன்றாள். அவர் உள்ளுடைந்து நின்றார். ஒருநாள் சகனை, மதமானி என்னும் தோழியர் இருவர் வந்து "அம்மா! ஊரில் எங்கும் பழிமொழி கள் பரவுகின்றன; அன்னையும் சினந்து நின்று இகழ்ந்து சொல்லு கின்றாள்; ஆதலால் நீங்கள் இனி அடங்கியிருக்கவேண்டும்" என்று பணிந்துவேண்டினார். அதற்கு இவள், "இனி இங்கு இருக்கமுடியாது; என் காமம் முன்னையினும் முனைந்து நிற்கின் றது; யான் கருதிய காதலன்பின் தொடர்ந்து போவேன்" எனத் துணிந்து மொழிந்தாள். ஊரவர் பழிப்பினும், தாய் வெறுப் பினும் காமநோய் தளர்ந்துபடாது; கிளர்ந்து நீளும் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

"தேமிடை நாவல் வேலிச் செழுமணற் குவாலும், குன்றும்,
பூமிடை தடமும், காவும் புக்கவர்க்கு அரணமாகா;
தாமுடை மனமும் கண்ணும் நிறைவும் தம்பால வாகா
காமுடை மனத்தினார்கட்கு யாருளர் களைகணுவார்?" (சூளாமணி)

அயலஞ்சி யாதும் அடங்காதே காமம்
மயல்விஞ்சி நிற்கு மருண்டு.

மகளிர் காமம் இகழின் நீளும் என்பது இதனால் கூறப் பட்டது.

1148. கோவியர்கள் கௌவைகண்டும் கூசாதேன் காமமிக்குக்
கூவி யுளைந்தார் குமரேசா—மேவி நின்று
நெய்யால் எரிநுதுப்பேம் என்றற்றால் கௌவையாற்
காமம் நுதுப்பே மெனல். (அ)

இ.—ள்.

குமரேசா! கௌவை மிகுந்திருந்தும் அதனால் காமம் தணியாமல் கோவியர் ஏன் காதலுற்று நின்றார்? எனின், கௌவையால் காமம் நுதுப்பேம் எனல் நெய்யால் எரி நுதுப்பேம் என்றற்று என்க. இது, அலரால் காமம் அடங்காதென்கின்றது.

எரி = தீ. வேறு பெயரால் கூறாது இங்ஙனம் கூறியது எரிந்துகொண்டிருப்பது என்னும் அதன் இயல்பும் நிலையும் தெரிய. நுதுப்பேம் = அவித்து விடுவேம். நுதுத்தல் = அவித்தல், தணித்தல். நுதுப்பு என்னும் இது பண்டுவழங்கிவந்த அரும்பதம் என்க. பன்மையில் கூறியது தன்போல் அமைந்து நிற்கும் காதலிகள் பலரையும் தழுவி.

அலர் எழ எழத் தலைவி யுளத்தில் காமம் தலையெடுத்து நின்றது; அதனைத் தன் அருநிறையால் அடக்க முயன்றாள்; அது யாதும் அடங்காது அடர்ந்து மேலும் மேலும் மூண்டெழுந்தது; அதன் எழுச்சியைக் கண்டு நாணித் தான் செய்த முயற்சியை இகழ்ந்து கௌவையால் காமத்தை அவிக்கத் துணிந்தது நெய்யால் எரியை அவிக்கத் துணிந்தது போன்றதோர் அறிவில் செயலாம் என அவள் அயர்ந்து நின்றாள் என்க. நெய், எரி என்றமையால் காமத்தை அவள் தீ என நினைந்துள்ளமை தெளிவாம். ஆல் உருபு இரண்டும் கருவியில் வந்தன.

மேல், காமம் அலரால் வளரும் என்பதை ஏதுவமைத்துக் கூறி யுணர்த்தினார்; இதில், ஒன்று கூறி உணர்த்துகின்றார்.

அலரால் காமத்தை அவிப்பேமென்று கருதுதல் நெய்யால் நெருப்பை அவித்தும் என்று துணிந்ததனோடு ஒக்கும் என்பதாம். கருதியது தவறு என்பது கருத்து.

தலைவனை நினைந்து, விரக தாப மிகுந்து, உளம் வருந்தி யிருந்த தலைவியை ஒருநாள் தோழி நெருங்கி "ஊரில் எங்கும் அலர் பரந்தெழுகின்றதே! நீங்கள் சிறிது ஆறியிருக்கலாகாதா?" என்று கூற அவ்வமயம் அவளை நோக்கி அவள் கூறிய படியிது.

காதலனோடு தனக்கு அமைந்துள்ள உறவு நிலையை ஊரறிந்து உரையாடினால் அது மேலும் மேலும் காம இச்சையைக் காதலிக்குப் பெருகச் செய்யும்; எவ்வாறு செய்யும்? எனின், "நம் களவொழுக்கமோ வெளியாகிவிட்டது; இனி இவ்வாறு அமர்ந்திருத்தல் சரியன்று; விரைந்து மணந்து கொண்டு தலைவனோடமர்ந்து வாழ வேண்டும்!" என்று ஆர்வ மீதூர்ந்து அவள் உள்ளம் கிளர்ந்து நிற்கும் ஆதலால் கெள்வையால் காமம் மிகும் எனக் கலுழ்ந்து நின்றாள் என்க.

நெய், அலர்க்கும்; எரி, காமத்துக்கும் இதில் ஒப்பாய் நின்றன. காமத்தைத் தீயோடு ஒப்பவைத்தது மனத்தைக் கவற்றிச் சுடுகின்ற அதன் கடுவெம்மை கருதி.

> "ஊர் தலைக் கொண்டு கனலும் கடுந் தீயும்,
> நீர்பெய்தக் காலே சினம் தணியும்; மற்று இஃதோ
> ஈரமில் கேள்வன் உறீஇய காமத்தீ
> நீருள் புகினும் சுடும்" (கலித்தொகை 144)

> "ஊருள் எழுந்த உருகெழு செந்தீக்கு
> நீருள் குளித்தும் உயலாகும்—நீருட்
> குளிப்பினும் காமம் சுடுமே, குன்றேறி
> ஒளிப்பினும் காமம் சுடும்" (நாலடியார்)

காமம், தீயினும் வெய்ய தென இவை உணர்த்தி நிற்றல் காண்க. எரிகின்ற தீயில் எண்ணெய் இடின் அது இரைத்தெழுமாதலால் அதனை, அடர்கின்ற காமம் அலர் உறின் நிலை மீறும் என்பதற்கு உவமை கூறினாள். எண்ணெய் என்னாது ஈண்டு நெய் என்றதனால் அதன் ஒண்மை காணலாம். நெய் பசுக்களிடமிருந்து வரும்; அலர், மகளிர் வாய் வரும். நெய்யோடு இணைத்தெண்ணியதனால் எரி இங்கு ஓமாக்கினி என்க. இதனால்

தனது காம எழுச்சி நெறியோடமைந்து விதிமுறை புரிந்து புதல்வர்ப் பேறு முதலிய உறுதிகள் பயந்து உலகம் நலமுற நிலவும் என்பதாயிற்று.

> "பொழிந்தநெய் ஆகுதி வாய்வழி பொங்கி
> எழுந்த கொழுங்கனல் என்ன எழுந்தான்
> அழிந்தது வில்என விண்ணவர் ஆர்த்தார்;
> மொழிந்தனர் ஆசிகள் முப்பகை வென்றார்"

இராமர் மிதிலையில் வில் வளைக்க எழுந்த நிலையை இஃது உணர்த்தி நின்றது. நெய்யால் எரியுறு நிலையையும், அத்தலைமகன் எழுச்சிக்கு அது, இணைவந்துள்ள வகையையும் இதில் நுணுகி யறிந்து கொள்க.

ஓம குண்டம் நெஞ்சிற்கும், அதிலுறும் எரி நெஞ்சிலமைந்த காமத்திற்கும், வெளியிலிருந்து விடுகின்ற நெய் புறத்திலிருந்து வருகின்ற அலருக்கும் உவமைகளாயின.

> "தாமமும் நானமும் ததைந்த தண்ணகில்
> தூமம் உண் குழலியர் உண்ட தூநறை
> ஓம வெங் குழியுகு நெய்யின், உள்ளுறை
> காமவெங் கனலினைக் கனற்றிக் காட்டிற்றே." (இராமாயணம்)

காமத் தீக்கு ஓமத்தீயை இதில் உவமை கூறியிருத்தலறிக.

> "வகை எழில் தோள்கள் என்றும், மணிநிறக் குஞ்சி என்றும்,
> புகழெழ விகற்பிக்கின்ற பொருளில் காமத்தை மற்றோர்
> தொகையெழுங்காதல்தன்னால் துய்த்துயாம் துடைத்துமென்பார்
> அகை அழல் அழுவந்தன்னை நெய்யினால் அவிக்கலாமோ"
> (குண்டலகேசி)

அநுபவ நிகழ்ச்சி காமத்தை அதிகப் படுத்துமென உணர்த்து நின்ற இது நெய்யோடு அழலை இணைத்திருத்தல் காண்க.

இங்ஙனம் கிளர்ந்து வருதற்குக் காரணமாகிய அலரால் காமத்தை எவ்வாறு அவிப்பேன்? தோழீ! இனி உய்வு கருதி

விரைவில் வரைவுக்கி உறுதி செய்க என்பதாம். அலர் நிலை அஞ்சித் தனது நிலையினைத் தலைவி குறித்துநிற்கும் இது கோவைத் துறையில் அலர்பார்த்துற்ற அச்சக் கிளவி என வரும்.

"கலரால் அறிவரியார்; வெங்கைவாணர், கனக வெற்பில்
பலரால் அணியும் புகழார், பிறப்பு ஒன்றில் பாவி மதன்
மலரால் வருந்துயர் நீக்குவராயினும் மண்ணுளர்வாய்
அலரால் வருந்துயர் நீக்குகிற்பாரை அறிந்திலமே"
(திருவெங்கைக்கோவை)

"மலருந் தொடைவஞ்சி வஞ்சக காதரும், மாரனும், வாய்
அலரும், தடங்கை அலரும், தொடா நிற்ப அஞ்சி நெஞ்சம்
பலரும புகழ் தஞ்சை வாணர் பிரானைப் பணியலர்போல்
புலரும் பெயரும் கண்ணீர் புலராது புலரினுமே."
(தஞ்சைவாணன்கோவை)

"சிவன் தூதனுகிப் பரவைதன்பால் அன்பிற் சென்றுவந்த
பவன்தூய சோதி தென்கோடீச்சுர வெற்பிற் பைங்கழைவில்
அவன் தூற்றலரினுக்கு அச்சம் இன்று; அன்னுன் அனிகமின்னார்
இவண்தூற்றலரினுக்கு அஞ்சினன், ஆறிலன், ஏழையனே"
(கோடீச்சுரக்கோவை)

"நீரால், இருநிலத்தால், கொடியால், நெடும் கோடதனுல்
வாராமலரு மலரை யல்லால், மலை கோடி கொண்டு
காராழி கட்டும் குலோத்துங்க சோழன் கல்யாணி வெற்பின்
ஊரார் பவளம் தொறும் அலர்பூத்தது என் ஊழ்வினையே."
(குலோத்துங்கசோழன் கோவை.)

அலர்நிலையும், அது காமம் கனற்றுந் திறனும், அதனைத் தலைவி அஞ்சி நிற்கும் இயல்பும் இவற்றுள் உரைக்கப்பட்டுள்ளமை காண்க. ஏதிலார் அலரால் காதலர் காமம் கனிந்து நிற்கும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை கோவியர்பால் உணரப்படும்.

## கதை.

கோவியர் என்பவர் ஆயர்பாடியிலிருந்த யாதவ கன்னியர். பேரழகு வாய்ந்தவர். சூரசேனன், சோமதரன், தருமநந்தன்,

கிருத வீரியன் முதலிய யதுகுல அரசரின் அருந்தவப் பேற்றால் பிறந்தவர். உருவம் பருவம் அறிவு முதலானவற்றில் ஒரு நிகரானவர். கான வித்தையிலும் நாட்டியக் கலையிலும் அனைவரும் நன்கு கைதேர்ந்தவர். நந்தினி, கோவிந்தனி, சந்திரலேகை, சித்திராவதி, தன்னியாசி, மதனசந்தி, சாருமதி, எனத் தனித்தனியே பேருடையராயினும் உருவிலும்குணத்திலும் ஒருபடியாய்த் தேவிய லமைந்த ஓவியங்கள்போல் மேவி யிருந்தாராதலால் ஒரு தொகையாக இவர் கோவியர் என நின்றார். அரமகளிரும் இவரது எழிலமைதிகளை நோக்கி உளமிக வியந்தார். இவர் பருவமெய்தி இன்ப நலங்கள் சுரந்து இனிதமர்ந்திருந்தும் ஒருவரையும் விழையாமல் உல்லாசமாகப் பொழுது போக்கி வந்தார். ஒருநாள் யமுனை நதி யருகிருந்த இனிய பொழிலிடை இவர் உலாவி வருங்கால் அங்கு இயல்பாகவந்த கண்ணனைக் கண்டார். கடுமையல் கொண்டார். அப் பெருமானது எழிலநிலையை நோக்கி உளமிக வுருகி உழுவலன்புடையராய் விழைவு மீக் கூர்ந்தார்.

"உருகினர்; நிறையும் நாணும் உகுத்தனர்; நெகிழ்ந்து வீழ்ட்
குருகினர்; கொங்கை முத்தம் கொதித்திடக் கரிந்ததண்பூம்
சருகினர்; விளர்க்கு மேனித் தளிரினர்; கருங்கட்கையால்
பருகினர் வாரிவாரிப் பசும்புயல் அழகின் வெள்ளம்" (பாகவதம்

இங்ஙனம் அவா மிகுந்து அகங் குழைந்து அலந்து நின்ற இவர்மேல் அவனும் காதல்மீக் கூர்ந்தான். கந்தருவ நிலையில் அச் சுந்தரச் சோலையில் தனித் தனியே கலந்து மகிழ்ந்தான்.

"கழைபுரை தோளும், பச்சைக் கழைதரு கதிர் முத்தன்ன
ஒழுகொளி நகையும பெற்ற ஓடரித் தடங்கண் நல்லார்
இழைபுரை மருங்குல் தேய்க்கும் இளமுலை மணந்தான் குன்றம்
குழைதரக் கழைவாய் வைத்த கோவலர் கொழுந்து மன்னோ.

திகழ்மணிக் கூந்தல் அங்கைபற்றியும், செய்ய கோங்கின்
முகிழெனு முகிழ்த்த கொம்மை முலைமுகம் தழீஇயும், நீவி
நெகிழ்தரப் புரிந்தும், அந்தண் நிரையிதழ்ப் பூங்கொம்பன்னார்
மகிழ்தரும் இன்பத்தேறல் மாந்தினன் மணிவண்டன்னான்"

இவ்வண்ணம் கலந்து களித்த அவன் நலம் பல பாராட்டி இவரை நகர்க்கு விடுத்தான். அவனது இன்ப வடிவை எண்ணி எண்ணி ஏங்கி வருந்தினர். அவனைப் பிரிந்திருக்க முடியாமல் பெரிதும் கலங்கினர். முன்பு பொருந்தி நுகர்ந்த பொழிலகம் புகுந்து புலம்பி அலைந்தார். அன்று இவர் புலம்பினவற்றுள் சில அடியில் வருவன காண்க.

"மண்ணு மணியே! மழுவேறனையாய்!
உண்ணு அமுதே! எமதுள்ளுயிரே!
கண்ணு! எம கண்எதிராய் கொல்? எனும்
பண்ணுர் மொழியார் பல் பன்னுவரால்; (க)

தளரா நிலவுத் தழுவில் தமியேம்
குளியா உருகிக் குழையத் தனிநீ
விளையாடுதியோ? விரிதாரவனே!
இளவாளரியே! எழுதற்கரியாய்! (உ)

வார்கொண் டிதழ்வாய் மழையின் டொழுகக்
கார் கண்டலரும் கமழ்வெண் தளவே,
நீர்கொண்டெழுகார் நிகராயவன், எம்
ஏர்கொண்டனன்; எவ்வழி ஏகினனே? (௩)

இரவுத் தலையும் துயிலாது இழுமென்று
உருவுக் கதிர்மா மணிகொண் டொழுகும்
அருவித் திரைகாள்! அறிவீர், அறையீர்
மருவிப் பிரியும் மணிவண் ணனையே. (௪)

கன்றால் விளவின் கனிசிந்தியமால்
சென்றுடன் நீர் தெரிவுற்றிலிரோ?
பொன்றுழிணரிற் பொலிவுற்றிடு தண்
கொன்றாய்! குரவே! கொடியீர், உரையீர்! (௫)

தண்ணெனுங் கூர் வெண்முறுவல் தண்டாளநிரை முகிழ்க்கும்
வண்ணநிலவுக் கொழுந்தால் மடநாணும், பெண்ணலமும்,
உண்ணிறையும் நெஞ்சமதொடு ஒருங்குகொடு போயகலாக்
கண்ணன் தான் இறுத்தபுலம் காட்டாய்கொல் கழைமுத்தே?

தேம்புசிறு மருங்கு ஓசிக்கும் செம்மாந்த கொங்கை எனத்
தேம்படும் அந் தீங்கிளவி சில கிளர்ந்து மேதாள் தோய்ந்த
ஆம்பலந்தீங் குழலிசை எம் ஆயர்கள் தம் போரேற்றை
ஆம்பல், நீ அறிதியன்றே! அஃதுரையாது இருக்குதியே?"
(பாகவதம்)

எதிர்ந்த பொருள்களையெல்லாம் பரிந்து பரிந்து நோக்கி முதிர்ந்த காதலோடு இவ்வாறு இவர் மொழிந்து அமைந்தார். நாணும்நிறையும் இழந்து காமநோய் மிகுந்து இவர் கலங்கி நின்ற நிலையும், புலம்பி நொந்த வகையும் இவற்றால் இனிதறியலாகும். இவரது நிலையினை அறிந்து நகை புரிந்து "மானமும் வெட்கமும் இம் மங்கையர்க்கு இல்லையா?" என்று ஊரவரெங்கும் பழியுரையாடினர். அதனைச் செவிவித் தாயர் அறிந்து சீறி வந்து ஊரில் யாண்டும் அலர் எழுகின்றதே நீங்கள் சிறிது ஆறியிருங்களே எனத் தேறுதல் கூறினர். "கண்ணன் கலப்பு எங்கட்குக் கைவந்துள்ளதை இவ்வூர் கண்டுகொண்டதா? இனி நாங்கள் கதிகொண்டுய்ந்தோம்" எனக் காமமீறிக் கருத்துருகி நின்றார். பின்பு கண்ணன் வந்து இவரை உலகறிய மணந்து உவந்து கொண்டான். கௌவையால் காதலர்க்குக் காமம் மிகும் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

உலையூதும் தீப்போல ஊரலரால் காமம்
நிலைமீறி நிற்கு நிமிர்ந்து.

கௌவையால் காமம் கனியும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1149. காமரூபர் வேகவதி கண்டவலர் நாணாதேன்
கோமகன்பின் போனாள் குமரேசா—தோமா
அலர்நாண ஒல்வதோ அஞ்சலோம் பென்றார்
பலர்நாண நீத்தக் கடை. (கூ)

இ-ள்.

குமரேசா! அலரினை நாணாமல் வேகவதி ஏன் நிலைமீறிச் சென்றாள்? எனின், அஞ்சல் ஓம்பு என்றார் பலர் நாண நீத்தக் கடை, அலர் நாண ஒல்வதோ? என்க.

அஞ்சல் ஓம்பு = அஞ்சுதலைவிடு. அஞ்சுதலில் நின்றும் உன்னைப் பாதுகாத்துக்கொள்க என்பதாம். பயப்படாதே என்றபடி. இனி, அஞ்சல் என்பதை வியங்கோளாகக் கொண்டு

அஞ்சற்க எனவும், ஓம்பு என்பதற்கு என் சொல்லை உறுதியாக நம்பு எனவும் பொருள்கொள்ளவுமாம். என்றார் என்றது தலைவனை.

நீத்தக் கடை = துறந்துவிட்டுத்; கைவிட்ட பின்பு என்க.

ஒல்வதோ = முடிவதோ?; முடியாதென்றபடி. பலர் நாண என்றது அவள் நிலை காண நின்றது. தலைவனைக் காணப் பெறாமையால் மேனி மெலிந்து, வெம்பசப் பூர்ந்து, கண்துயில் இன்றிக், கருங்குழல் சோர்ந்து, மருங்குடை பேர்ந்து, கண்டவர் நாணி இரங்கும்படி நைந்திருந்தாளாதலால் பலர் நாண நீத்தார் எனத் தலைவனை இகழ்ந்து, அந் நிலையினை நினைந்து இங்ஙனம் கலுழ்ந்து கூறினாள். "நாய்க்கு நகைதோன்ற நின்றேன்; பேய்க்கு மிக இழிந்தேன்" என்றபடி இழிந்து கிடக்கின்ற நான் உயர்ந்தவள்போல் இனி நாணிநிற்க அமையாதெனத் தன் அமைவின்மையை இவ்வாறு அமைய உணர்த்தினாள்.

மேல், கவ்வையால் காமம் தணியாதென்றாள்; இதில் அதற்கு நாணுவதால் பயனில்லை என்கின்றாள்.

முன்பு வந்து கலந்தபோது உன்னை என்றும் பிரியேன் யாதும் அஞ்சாதே என்று ஆதரித்து நின்ற காதலர் பின்பு பலரும் நாணும்படி கைவிட்டபடியால் இனி அலரினை நாணக் கூடாது என்பதாம்.

களவு நெறியில் மருவிநின்ற காதலன் இடையே நேர்ந்த தடைகளால் சிறிது வாராதிருந்தான்; அப் பிரிவிடைப் பெரிதும் வருந்தி விரகதாபத்தால் காதலி வெய்துயிர்த்திருந்தாள்; ஒரு நாள் தோழி புகுந்து இவளை அணுகி "உங்கள் நிலையினையறிந்து ஊரில் எங்கும் கேலி செய்கிறார்களே; அதற்காகவாவது உளங் கூசி அடங்கியிருக்கலாகாதா? என்று உணர்த்த அவ்வமயம் அவளை நோக்கி இவள் உரைத்தபடியிது.

"அஞ்சல் ஓம்பென்றார்" என்றது தலை நாளில் தலைப்பட்டுத் தலைவியைத் தழுவி நின்ற தலைவன் பின்பு தலையளிசெய்து நீங்குங்கால் "உன்னையன்றி வேறு மாதரை இனி மனத்திலும்

நினையேன்; இதில் ஐயுறவேண்டாம்; விரைந்து வந்து வரைந்து கொள்வேன்; யாதும் அஞ்சல்; என் ஆருயிர் இன்பே!" என்று என்புருக அன்புரையாடினுைதலால் அதனை நினைந்தென்க. இவ்வாறு முதல் வந்து முயங்கி மருங்கணைத்துக், கருங்குழல் திருத்தித், தோளும் ஆகமும் தொடர்ந்து தைவந்து, உழுவலன் புடன் உரையாடி நின்றவர் இப்பொழுது நம்மை ஊர் சிரிக்கும் படி கைவிட்டு ஒழிந்துபோயினர் என்றால், இனி நான் நாணி நின்றதனுல் யாது பயன்? என நாயகன் வராமையை நினைந்தும் தன் நிலையினை இகழ்ந்தும் புண்பாட்டோடு புகல்கின்றாளாதலால் "அஞ்சல் என்றார் பலர் நாண நீத்தக் கடை, தஞ்சமற்ற நான் அலர் நாண ஒல்வதோ?" என்று அவலித்து நின்றாள்.

தலைவன் அஞ்சலோம்பு என்றதனுல் அவளது இயல்பான அச்சமும் ஆர்வமும் அறிய நின்றன.

"சிந்தாமணி, தெண்கடலமிர்தம், தில்லையான் அருளால்
வந்தால் இகழப் படுமே? மடமான் விழி மயிலே!
அந்தாமரை அன்னமே! நின்னையான் அகன்று ஆற்றுவனோ?
சிந்தாகுலமுற்று என்னோ என்னைவாட்டத் திருத்துவதே."
(திருக்கோவையார்)

"பாவிடை வைத்த பெரும்புகழ் வெங்கைப் பழமலைகைம்
மாவிடைவைத்த இகல்வாள் விழிஎழில் மாதர்தமை
நாவிடை வைத்தவன், மார்பிடை வைத்தவன், நாண, அகப்
பூவிடை வைத்த நினையோ பிரிகுவன் பூங்கொடியே!"
(திருவெங்கைக்கோவை)

நின்னை யாண்டும் கைவிடேன்; நீ யாதும் அஞ்சல் எனத் தலைவன் தலைவியைத் தேற்றியிருக்கு நிலையை இவை உணர்த்தி நிற்றல் காண்க. இவ்வாறு உறுதி கூறிய அவர் உடன்வந்து பேணுமல் உலகம் நகைக்கும்படி என்னை உலையவிட்டுப்போனுல் இனி என் நிலைமை என்னும் எனத் தலைவி துணிவுகொண்டாள் என்க. மெய்தொட்ட காதலன் கைவிட்டகவின் ஊரலரை நாணுமல் காதலி அவன்பின் போவள் என்பது இதில் உணர்த் தப்பெற்றது. இவ் வுண்மை வேகவதிபால் உணரப்பெறும்.

## கதை.

வேகவதி என்பவள் சித்திகலையென்னும் நகரிலிருந்து அரசு புரிந்த வித்தியாதர வேந்தனுடைய அருமைத் திருமகள். இவள் அழகு குடிகொண்ட விழுமிய வடிவினள். ஒத்த மகளிரும் இவளது உருவ நலனை விழைந்து உளமருண்டுள்ளார். "கண்டவர் மனமும் கண்ணும் கவர்ந்து கட்டழகுவாய்ந்த பெண்டிரும் ஆண்மை வெஃகப் பிறந்த பேரெழிலாள்" என உலகம் வியந்து கூற இவள் உயர்ந்து நின்றாள். இவள் ஒருநாள் நரவாணதத்தன் என்னும் அரசகுமாரனைக் கண்டாள். அவன் வத்தவ நாட்டு மன்னனாகிய உதயணனுடைய அருமைத் திருமகன். உத்தம குணங்களெல்லாம் ஒருங்கமையப்பெற்றவன். வளமையும் இளமையும் வனப்பும் வண்மையும் உளமலி திண்மையும் உண்மையுமுடையவன். அவனைக் கண்டவுடனே இவள் கடுங்காதல் கொண்டாள். அவனும் இவளது எழில் நிலையை நோக்கிப் பெருமோகமுடையனாய் உள்ளுருகி நின்றான். பருகு காதலோடு இங்ஙனம் உருகிநின்ற இருவரும் யாழோர் முறையில் மருவி மகிழ்ந்தார். இவர் இன்ப நுகர்ச்சி உம்பரும் வியக்கும் வகை உயர்ந்திருந்தது. "ஆனந்த வெள்ளத்தழுந்தும் ஓர் ஆருயிர் ஈருருக்கொண்டு, ஆனந்த வெள்ளத்திடைத் திளைத்தால் ஒக்கும்" என இடை பிரியாது இவர் ஒத்து நுகர்ந்தார். இங்ஙனம் இவளது போக வெள்ளத்தில் ஆழ்ந்து கிடந்த அவன் ஆராமை மீதூர்ந்து ஆர்வவுரைகள் பல ஆடி நின்றான்.

"செங்குவளை நாறும் திருமேனி; செவ்வாயும்
அங்குவளை ஈரிதழும் ஆம்பலுமே நாறுமால்;
இங்கு இவளை முன் படைத்த தேவன், என் இன்னுயிரைப்
பைங்குவளை மாலையாட்கு ஆளாய்ப் படைத்தானே; (க)

அன்புருகு காமத் தீமாட்டி, அளிய என்
என்புருக வேவ இணைநெடுங்கட் பூம்பாவை,
முன்பெருகு முந்நீர் அமுதாய் விளைத் தினிய
மின்பருகு நுண்ணிடையார் மெல்லுருவம் கொண்டதே. (உ)

பானல் நெடுங்கண் இவையே பகழியா
வேனிலுடை வேந்தன் வென்றிக்கு நோற்றனே;
யானும் அளியற்றேன் இத்துணையோர் காலமும்
தேனார் நறுமேனி தீண்டுதற்கே நோற்றேனே; (௩)

காவியாகின்ற கருமாமழைக் கண்ணி
மேவியான் உண்ணும் அமிர்தாய், விருந்தாகி,
ஆவி, ஆகின்றாள்; அருமருந்தும் ஆகின்றாள்;
பாவியேன் பாவைக்கோர் ஆளே ஆகின்றேனே; (௪)

கள்ளமட நோக்கி தன்னைக் காந்தெனது
உள்ளத்தின் வைப்பின் உருவமது காணேன்;
மெள்ளஎன் தோளணைவாள் என்னும் விருப்பாராது
எள்ளுமனத்தினுக்கு எய்திற்றறியேனே.'' (௫)

இன்னவாறு பல கூறி இவள் நலம் பாராட்டி அவன் நயந்து நின்றான். புகழ்ந்து முயங்கி இங்ஙனம் உவந்து வருங்கால் இக் களவொழுக்கம் புறமறிய நேர்ந்தது. இவளுடன் பிறந்தவனாகிய மானசவேகன் என்பவன் யாரும் அறியாவகை வந்து இவளைக் கடிந்துகொண்டுபோய்க் கன்னிமாடத்தில் காவல்செய்து வைத்தான். அலரும் பரவியது. பிரிவாற்றாது இவள் பேதுற்றிருந்தாள். சந்திரலேகை என்னும் தோழி வந்து "ஊரில் பலரும் அலர் கூறுகின்றனர்; சிறிது அடங்கியிரு; ஆவதை யான் அறிந்து செய்கின்றேன்" என்று ஆறுதல் கூறினாள். அதனை யாதும் கேளாது அவளை இவள் அலமந்து நோக்கினாள். "என்றும் பிரியேன்; யாதும் அஞ்சாதே;" என்று முன் அளி செய்து நின்ற என் ஆருயிர்க் காதலர் இன்னும் வந்து இங்கு அருள் புரிந்திலர்; என் உயிர் உலர்கின்றது; யான் ஆனது அலறு கின்றேன்; இனி ஊரலருக்கு நாண முடியுமோ?" என உளைந் துரைத்து அமளியில் உழந்து கிடந்தாள். கிடந்தவள் அன் றிரவே துணிந்தெழுந்து ஒருவரும் காணாவகை தன் காதலனைத் தேடிக் கௌசாம்பிக்கு வந்தாள். அவ்வமயம் அங்கு அவன் இல்லை. மருவலர் மீது பொருதிறங் குறித்துப் பெரும் படையோடு

போயிருந்தான். இவள் அவ்விடம் தாழாதடைந்தாள். அவன் பாசறையிலிருந்தான். அருகிருந்த மன்னவரெவரையும் நோக்காது "என் ஆருயிரே! என்னே இது!" என்று பன்னி ஓடி அவன் பணைத்தோள் மீது விழுந்து அணைத்தவசமானாள். அவன் வியந்து தழுவிக்கொண்டு வினைமுடித்து வரும்படி சேனாபதிக்கு உரைபுரிந்து விட்டுப் போர்முகம் நீங்கி ஊர்முக மடைந்து உவந்து பாராட்டி இவளோடமர்ந்து இன்புற்றிருந்தான். காதலனைப் பிரிந்தவர் அலர் நாணாது சென்று அவனை அடைந்து மகிழ்வர் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

"பின்னும் கருநெடுங்கண், செவ்வாய்ப், பிணை நோக்கின்,
பின்னனைய நுண்மருங்குல், வேகவதி என்றுரைக்கும்
கன்னிதன் இன்னுயிராம் காதலனைக் காணாது,
தன்னுடைய முன்தோன்றல் கொண்டேகத், தான்சென்றங்கு
அன்னவனை நோக்காது, அழித்துரப்பி, வாளமருள்,
கன்னவில்தோள் காளையைக் கைப்பிடித்து, மீண்டும்போய்ப்
பொன்னவிலும் ஆகம் புணர்ந்திலளே"? (பெரிய திருமடல்)

அலரஞ்சாது சென்று தன் காதலனைத் தழுவிவந்து இவள் கலந்து வாழ்ந்ததும், உழுவலன்புடையளாய் உவந்திருந்ததும் இதன் கண்ணும் குறிக்கப்பட்டுள்ளன காண்க.

கொண்டான் துறந்து கொடுமைசெயின் ஊரலரைக்
கண்டாங் கயர்வ தேவன்.

ஆசை மிகுந்தார் அலர் நாணார் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1150. காமர் உருக்குமணி கவ்வையுவந் தேனின்றாள்
கோமகனை வேண்டிக் குமரேசா—சேமமுடன்
தாம்வேண்டி னல்குவர் காதலர் யாம் வேண்டுங்
கௌவை யெடுக்கு மிவ் வூர். (ய)

இ.—ள்.

குமரேசா! ஊர் அலரை உவந்து கண்ணனை ஏன் உரு க்குமணி காதலித்து நின்றாள்? எனின், யாம் வேண்டும் கவ்வையை இவ்வூர் எடுக்கும்; தாம் வேண்டின் காதலர் நல்குவர் என்க. இது, அலரால் வரும் பயன் கூறுகின்றது.

காதலர் = காதலுடையவர். என்றது தலைவனை. பன்மையில் குறித்தது மரியாதை தோன்ற. வேறு பெயரால் கூறாது காதலர் என்றது தாம் விரும்பியதை மறாது நல்குதற்குரியர் என்னும் நலவுரிமை கருதி. நல்குவர் = இசைந்தருளுவர். இவ்வூர் கௌவை எடுக்கும் = இவ்வூரார் அலர் தூற்றுகின்றனர். எடுத்தது என இறந்தகாலத்தாற் கூறாது நிகழ்விற் கூறியது அவ் அலர் நிகழ்ச்சியின் வளர்நிலை கருதி. உள்ளே விரகவேதனையால் உளைந்திருக்குங்கால் ஊரும் எள்ளியதாயின் அது, போக்கிற்கு ஓர் ஊக்கம் பயக்குமாதலால் அதனை ஆக்கம் என்றாள்.

தலைவனோடு உடன்போகத் துணிந்தவள், ஏதாவது ஒரு காரணம் கிடைத்தால் அதனைப் பற்றுக் கோடாகக் கொண்டு வெளியேறிவிடலாமென்று கருதி, ஊரலரை மிகவும் எதிர்பார்த்திருந்தாளாதலால் "யாம் வேண்டும் கௌவை" என்றாள். யாம் எனப் பன்மையில் கூறியது தோழியையும் உடன்படுத்தி.

"பைப்பயப் பசந்தது நுதலும்; சாஅய், ஐதாகின்றதென் தளிர் புரை மேனியும், பலரும் அறியத் திகழ்தரும் அவலமும், உயிர் கொடுகழியின் அல்லதை நினையின், எவனோ வாழி தோழி! கௌவை மேவல ராகி இவ்வூர், நிரையப் பெண்டிர் இன்னா கூறுவ, புரையவல்ல என் மகட்கெனப் பரைஇ, நம்முணர்ந்தாறிய கொள்கை, அன்னை முன்னர் யாம் என் இதற்படலே," (அகம் 95)

கௌவையின் விளைவை எடுத்துக் காட்டி ஓர் தலைமகள் தலைமகனுடன் வெளியேறத் துணிந்து தோழியிடம் உரைத்திருக்கும் திறனை இதில் ஊன்றி உணர்ந்துகொள்க.

மேல், அலர் நாண ஒல்லாதென்றாள்; இதில், அது நல்லதென்று சொல்லி நயந்து நிற்கின்றாள்.

யாம் விரும்பி நின்ற அலரை இவ்வூரார் தாமே எடுத்து நிற்கின்றனர் இனி நாம் உடன் போதலை விரும்பின் நம் காதலர் தாம் உடனே உவந்து அருளுவர் என்பதாம்.

களவொழுக்கம் நிகழ்ந்து வருங்கால் தலைவன் எளிதில் வாராவகை இடையே பல தடைகள் நிகழ்ந்தன; நிகழ்ந்தும் தனது சீருடைமையால் தலைவி அவனை அரிதிற் கூடி வந்தாள்; வருங் கால் இடையிடையே அவன் உடன்போய் விடவேண்டுமென்று நினைந்தாள்; நினைந்தும் நாணத்தால் அடங்கியிருந்தாள்; இங்ஙன மிருப்ப ஊரிலுள்ளவரும் இவள் காதல் நிலையைக் குறித்துப் புறங்கூறி நின்றார்; எரிகின்ற தீக்குக் காற்றும் கூடியதுபோல் காமநோயால் கனன்று நிற்கின்ற இவட்கு அவ் அலர் மிகவும் வேகத்தை மூட்டியது; மூட்டவே இனி நாம் இங்கு உறைந்திருப் பது சரியன்று; காதலரோடு தொடர்ந்துபோய் விடவேண்டு மென்று துணிந்தாள்; அத் துணிவினைத் தோழிக்கு உரைத் தாள்; உரைக்கவே அவள் இவ் உடன் போக்கிற்கு அவர் உடன் படுவரா? என்றாள்; நாம் விரும்பிய எதையும் அவர் உவந்து அரு ளுவர் என உளங் கனிந்து கூறினாள் ஆதலால் "காதலர் தாம் நாம் வேண்டின் நல்குவர்" என்றாள்.

இவ்வூரார் எவ்வளவு தாம் கௌவை சொன்னாலும் நம் காதலர் நம்மைக் கைவிடார் என்னும் உறுதி யுடைமையால் இவ்வாறு உரை செய்யலானாள்.

"நிலம்புடை பெயரினும், நீர் திரிந்து பிறழினும்,
இலங்குதிரைப் பெருங்கடற்கு எல்லை தோன்றினும்,
வெவ்வாய்ப் பெண்டிர் கௌவை அஞ்சிக்
கேடு எவனுடைத்தோ தோழி! நீடுமயிர்க்
கடும்பனூகக் கறைவிரல் ஏற்றை
புடைத்தோடு புடையூ நாறுபலவுக்கனி
காந்தளஞ் சிறுகுடிக் கமழும்
ஓங்குமலை நாடனொடு அமைந்தநம் தொடர்பே."
தொடர்பு=உறவு. (குறுந்தொகை 373)

காதலனது உறவுநிலை கௌவையால் கலையாதென ஓர் காதலி இதில் கருதியிருக்கும் உறுதியை யறிக.

இடம்படு கவ்வையால் முடிவில் உடன்போகத் துணிந்து தலைவி நின்றுள்ள குறிப்பினைத் தோழி தலைவனுக் குணர்த்தி அவட்கு அருள் செய்யவேண்டுவளாதலால் "வேண்டின்" என்றாள். இது, கோவைத் துறையில் பாங்கி தலைவற்கு உடன் போக்குணர்த்தல் எனவரும்.

"ஈண்டு ஒல்லை ஆயமும் ஒளவையும் நீங்க, இவ்வூர்க்கவ்வைதீர்த்து
ஆண்டு ஒல்லை கண்டிடக்கூடுக நும்மை; எம்மைப் பிடித்து இன்று
ஆண்டு எல்லைதீர் இன்பம் தந்தவன் சிற்றம்பலம் நிலவு
சேண் தில்லை மாநகர்வாய்ச் சென்று சேர்கதிருத்தகவே."
(திருக்கோவையார்)

"மைந்நீர் நெடுங்கண் மடந்தையுடன் தஞ்சை வாணன் வெற்பா!
செந்நீர் விழவணி நின்னகர்க்கே கொண்டு சேர்ந்தருள்; மற்று
இந்நீர்மை யல்லதொராறு மின்றால்; இங்கு எம் ஐயரென்றால்
முந்நீர் உலகும் கொள்ளார் விலையாக முலையினுக்கே"
(தஞ்சைவாணன்கோவை)

"தாயிற்சிறந்த திருவெங்கைவாணர் தடஞ் சிலம்ப!
போயிப்பொழுது வருவல்; என்றேகின், பொறுக்கரியாள்;
தீயிற் புழுவெனவே பதைப்பாள்; நின் திருவருளால்
நீயித் திருவை யுடன் கொண்டு போநின் நெடுநகர்க்கே"
(திருவெங்கைக்கோவை)

"வள்ளால்! இவளை எளிதிற் கொடார் எமர்; மாநகர்க்குப்
புள்ளாடு கண்ணியுடன் நடப்பாய்; புகழாம்; பழியும்
நள்ளாது; கற்பும் இதுவே; குலோத்துங்கன் நாகை வெற்பிற்
கொள்ளார் இம பங்கை முலைவிலக்கா அண்டகோடியுமே."
(குலோத்துங்கசோழன்கோவை)

"விண்மதி சூடான் கோடீச்சுர வெற்பின் மேவரசே!
வன்மதயானை பலதந்தியாயினும வண்குறவர்
மென்மடமானை எளிதின் நல்கார்; இருள்வேலை மெள்ள
மின்மதில் சூழூர்க்கு உடன்கொண்டு செல்கென் நினைவிதுவே"
(கோடீச்சுரக்கோவை)

தோழி, தலைவனிடம் தலைவியை வழிப்படுத்தியிருக்கும் நிலையினை இவை உணர்த்தி நிற்றல் காண்க. இங்ஙனம் அழைத்து விடுங்கால் "எங்கள் பெருமாட்டியை யாதும் தளரவிடாது யாண்டும் ஆர்வத்தோடு ஆதரிக்க வேண்டும் ஐயனே!" என்று அவனிடம் அடைக்கலமாகவிடுவள்.

"அண்ணாந்து ஏந்திய வனமுலை தளரினும்,
பொன்னேர் மேனி மணியிற் றாழ்ந்த
நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்,
நீத்தல் ஓம்புமதி பூக்கேழ் ஊர!
பழையன் வேல்வாய்த் தன்ன நின்
பிழையா நன்மொழி தேறிய இவட்கே" (நற்றிணை 10)

"இறந்தார் பிறந்துழலாதே முதுகுன்றியற்று செயல்
சிறந்தார் புகழ்வெங்கை செய்வான்றனுஞ் சிவன் உமையை,
அறந்தான் உருவுகொண்டன்னான் வசிட்டன் அருந்ததியைத்
துறந்தாலும், நீ துறவேல் ஐயனே! நின் துணைவியையே."

"இவளே நின்னலது இலளே; ஆயும்
குவளை யுண்கண் இவளலது இலளே; ஆயும்
யானும் ஆயிடை யேனே;
மாமலை நாட! மறவா தீமே"

இவ்வாறு ஓப்படை செய்து உடன்போக்கி விட்டு ஒன்றும் அறியாதவள்போல் தோழி அங்கு ஒதுங்கி யிருப்பள் என்க.

சிறந்த குலத்தில் பிறந்து, உயர்ந்த நிலையிலுள்ள தலைமகள் தாய் தந்தையர் உவந்து கொடுக்காமலே இங்ஙனம் நாணமின்றி ஒருவனோடு தொடர்ந்துபோகலாமோ? எனின், பெண்டிர்க்கு உயிரினும் சிறந்தது நாணே; அதனினும் சிறந்தது கற்பே; கற்பு ஆவது கருதிய காதலனை யன்றிப் பிறிது எவரையும் கருதாமல் அவன் கருத்துவழிப்படுதலே; ஆதலால், அவ்வழிபாட்டிற்கு இடையூறாய் நின்று பெற்றோர் தடை செய்ததாலும், மற்றோர் அலர் கூறியதாலும் தனக்கு உற்றவன் பின் ஒருப்பட்டு முற்றிய காதலுடைய அவள் உடன் போதல் அமையும் என்க.

களவொழுக்கில் நின்ற வள்ளித்தாய் உளவறிந்து எம் ஐயனோடுகூடி உடன்போனதும் ஈண்டுஉணரத்தக்கது. அப்போக்கை அடியில் பார்க்க.

"தாய் துயில் அறிந்து, தங்கள் தமர்துயில் அறிந்து, துஞ்சா
நாய்துயில் அறிந்து, மற்று அங்நகர் துயில் அறிந்து, வெய்ய
பேய்துயிற் கொள்ளும் யாமப் பெரும்பொழு ததனில் பாங்கி
வாய்தலிற் கதவை நீக்கி வள்ளியைக் கொடுசென் றய்த்தாள் (க)

அறுமுக ஒருவன் தன்னை ஆயிழை எதிர்ந்து தாழ்ந்து
சிறுதொழில் எயினர் ஊரில் தீயனேன் பொருட்டால் இந்த
நறுமலர்ப் பாதம் கன்ற நள்ளிருள் யாமம் தன்னில்
இறைவ, நீர் நடப்பதே! என்றிரங்கியே தொழுது நின்றாள். (உ)

மாத்தவ மடந்தை நிற்ப வள்ளலே இருளை நோக்கித்
தீத்தொழில் எயினர் காணின் தீமையாய் விளையும்; இன்னே
ஏத்தருஞ் சிறப்பின் நும்மூர்க்கு இங்கிவள் தனைக்கொண்டேகிக்
காத்தருள் புரியும் என்றே கையடையாக நேர்ந்தாள். (௩)

மையுறு தடங்கண் நல்லாள் வள்ளியை வணக்கஞ் செய்து
மெய்யுறப் புல்லி அன்னாய்! விரைந்தனை சேறி என்று
ஐயனோடு இனிது கூட்டி ஆங்கவர் விடுப்ப மீண்டு
கொய்யுறு கவரி மேய்ந்த குரம்பையின் கூரை புக்காள். (௪)

விடைபெற்றே இருளை ஏக, வேலுடைக் கடவுள் அன்ன
நடைபெற்ற மடந்தையோடு நள்ளிருளிடையே சென்று
கடைபெற்ற சீறூர் நீங்கிக் காப்பெலாம் கடந்து, காமன்
படைபெற்றுக் குலவும ஆங்கோர் பசுமரக்காவுட் சேர்ந்தான்(௫)
(கந்தபுராணம்)

இவ் உடன் போக்கில் தோழி செய்திருக்கும் சூழ்றவுகளையும், "தாம் வேண்டின் காதலர் நல்குவர்" என்றபடி எம்பெருமான் இசைந்தருளியிருக்கும் இயல்புகளையும், களவொழுக்கின் முடிந்த நிலையையும் இதில் உணர்ந்துகொள்க.

காதற்காமம் கைமிகுந்து கற்புரிமையோடு இங்ஙனம் சென்றபின் பெற்றோர் அறிந்து தமருடன் சென்று அவ் இருவரையும்

அழைத்து வந்து தம் மனையகத்து மங்கலச் சடங்குகளாற்றி உலகறிய மணஞ்செய்து வைப்பர்; அல்லது தலைவன் மனையிலேயே மணவினையை முடித்து வைத்து மகிழ்ந்து மீளுவர்.

உடன்போக்கை உவந்து வெளிப்படையாய் மணந்து கொண்டதோடு களவொழுக்கம் முடிந்து விடுமாதலால் இவ் இயல் முடிவில் இஃது இனிதமைந்து நின்றது.

அலர் நிலை மிகுந்த பொழுது தலைவனைத் தொடர்ந்து தலைமகள் உடன்போவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை உருக்குமணிபால் உணரப்படும்.

## கதை.

உருக்குமணி என்பவள் விதர்ப்பதேயத்து வேந்தன் திருமகள். அரிய நலங்கள் பல அமையப்பெற்றவள். அழகிலும் குணத்திலும் அக் காலத்திருந்த மகளிரெவரினும் இவள் உயர்வெய்தி நின்றாள். பருவம் எய்தியவுடன் அரசிளங் குமரர்கள் பலர் இவளை மணந்துகொள்ள விழைந்துவந்தார். அவருள் சிசுபாலன் என்பவன் மிக முயன்று நின்றான். இவள் ஒருவரையும் விரும்பாமல் கண்ணனையே கருதி இரவும் பகலும் உருகியிருந்தாள். இவளுடன் பிறந்த தமையனாகிய உருக்குமி என்பவன் சிசுபாலனுக்கே இவளைத் தரவேண்டுமென்று செருக்கு மீக்கூர்ந்து செயிர்த்து நின்றான். தாயும் தந்தையும் அவன் வாயினுக் கஞ்சி வருந்தியிருந்தார். இவள் பெருந்துயருழந்தாள்.

"துப்பிதழ் முளரிச் செங்கட்டுளவினான் செவ்விகேட்டு
வெப்புறழ் காமம் மேன்மேல் விளைதர, விரைமென் சாந்தம்
அப்பினும் வெதுப்பாநின்ற அலர்முலை அணங்கு முன்னோன்
செப்பிய மாற்றம் கேட்டுச் செவிமுதல் வெதும்பினாளால்"
(பாகவதம்)

இவ்வாறு கடுங் காதல் மிகுந்து இவள் கலங்கி யுளைந்தாள். உணவும் துறந்து, துயிலும் இழந்து, விரகவேதனையால் மெலிந்து புலம்பி வெய்துயிர்த்திருந்தாள். தனவதி, அனங்கனை என்னும் தோழியரிருவர் ஆறுதல் கூறி இவளை ஆதரித்து வந்தார். அவர்

களை ஒருநாள் இவள் அயர்ந்து நோக்கினாள். "என்பால் அன்புடையாராயின் கண்ணனிடம் கொண்டுபோய் என்னைச் சேர்த்து விடுங்கள்; வேறு என்ன வகைசெய்தாலும் என் நோய் தணியாது" என ஏங்கி மொழிந்தாள். அவர் உளங்கூசி ஒன்றும் உரையாதிருந்தார். இவள் துணிந்து மொழிந்து துடித்துநின்றாள்.

"தந்தையும் தாயும் உற்றாரும் நிற்கத் தனிவழி போயினாள் என்னும் சொல்லு, வந்த பின்னைப் பழி காப்பரிது; மாயவன் வந்து உருக்காட்டுகின்றான்; கொந்தளமாக்கிப் பரக்கழித்துக் குறும்பு செய்வானோர் மகனைப் பெற்ற, நந்தகோபாலன் கடைத் தலைக்கே நள்ளிருட்கண் என்னை உய்த்திடுமின் !"

என ஆண்டாள் அரற்றியவாறே இவள் அயர்ந்து புலம்பினாள். காதல் நோயினால் இவள் நோதலுறுதலை யறிந்து ஊரவர் பலர் பேரலர் தூற்றினர். இனி அடங்கியிருத்தல் ஒல்லாதென்று காதலனோடு இவள் உடன்போகத் துணிந்தாள். முடிவில் சாதவாகன் என்னும் அந்தணனை மந்தணமாக அழைத்துத் தன் எண்ணங்களைக் கண்ணனிடம் உணர்த்திவரும்படி சில வுண்மைகளை உரைத்து விடுத்தாள். அவன் சென்றான்; துவாரகையை அடைந்தான்; காவல் பல கடந்து அரண்மனையுள் புகுந்தான்; கண்ணனைக் கண்டான்; கழி மகிழ்வு கொண்டான்; இவள் உள்ள நிலையை உறுதிபெற வுரைத்தான். அவன் உரைத்தபடியை அடியில்பார்க்க.

"விழவயர் நாளின் முன்னாள் வெற்பிளங் கன்னிதன்னை
வழிபட எழுவல்; ஆங்கு வந்து எனைக் கவர்ந்திலானேல்,
அழலிடை அவிந்துதோன்றி அஞ்சன வண்ணன் செய்ய
எழில்வரை அகலந்தோய்வல் என்றனள் அணங்கன்னாளே"

கலியாண தினத்திற்கு முதல் நாள் காளிதேவியை வணங்க வருவதுபோல் வருவேன்; அங்கு வந்திருந்து என் காதலன் என்னைக் கைக்கொண்டுபோக வேண்டும்; இல்லையானால் தீயில் விழுந்து இறந்து மறு பிறப்பிலாவது அம் மாயனை மணந்து மகிழ்வேன் என இங்ஙனம் உறுதியுற இவள் உரைத்து விடுத்திருக்கும் நிலையினை அப் பெருமான் ஓர்ந்து மகிழ்ந்தான்.

உள்ள முருகினன்; வந்த வேதியனிடம் உடனே தான் வருவதாக வாக்களித்தான். அவ் வாக்கை அடியில் பார்க்க.

**கண்ணன் உரைத்தது.**

"என்னனு முந்நீர் வேலி இருநில வலயம் காக்கும்
மன்னவர் யாரும் காண மானவேல் விதர்ப்பன் காதற்
கன்னியைக் கவர்ந்து கோடும்; காண்டிநீ என்று கண்ணன்
பொன்னவில் புரவித் திண்டேர் கொண்ணர்கெனக் கூறினனல்"

இவ்வாறு கூறிநின்ற அவ் வீர அண்ணல் தூதுவந்த வேதியனோடு தேரேறி விதர்ப்பநாட்டின் தலை நகராகிய குண்டினபுரத்தை யடைந்தான். குறித்த இடத்தி லிருந்தான். இவள் முன்பு குறித்தபடியே மணவிழவிற்கு முதனள் காளியை வழிபட வருபவள்போல் தோழியருடன் வந்தாள். அங்கு அவ் ஆழி வண்ணனைக் கண்டாள். அரும்பசி யுடையான் அமிர்தம் கண்டுகொண்டதுபோல் அகமிக மகிழ்ந்தாள். சில்லரிச் சிலம்பு பாடக், கிங்கிணி சிலம்பக், காஞ்சி ஒல்லென ஒலிப்ப, வந்த இம் மெல்லியல் உடன் வந்தவரையெல்லாம் விட்டு யாதும் கூசாது நேரே சென்று தேரிலேறி அவன் தோள்களை ஆரத் தழுவி அவசமுற்று நின்றாள். அப் பெருமான் உவந்து முகந்து தேரை விரைந்து கடாவினன். நகரை யடைந்தான். உலகறிய மணந்து அலகிலின்பம் நுகர்ந்தான். இவளது ஆர்வ நிலையை வியந்து ஆதரமிகுந்து அருள் புரிந்து பேணினன். "தாம் வேண்டின் நல்குவர் காதலர்" என்றவண்ணம் நல்கிநின்ற அத் தலைவனுக்குப் பலவகையிலும் இன்பம் பயந்து தலைமைத் தேவியாய் இவள் நிலவி யிருந்தாள். அலர் மிகுந்ததாயின் காதலிகள் தம் காதலரை அடைக்கலமாக அடைந்து மகிழ்வர் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

கௌவை எழுந்ததினிக் காதலன்பின் போதலன்றி
உய்வதிலை என்றாள் உடன்.

அலரெழுச்சி காதலிக்கு மன எழுச்சியைத் தரும் என்பது இதனால் கூறப்பட்டது.

இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்.

அலர் நிலையைத் தலைமகன் உவந்து நிற்பன். அலர் கூறு வாரை உவந்துகொள்வன். அதனைப் பெறலரும் பேறுகப் பேணி மகிழ்வன். காமம் வளர்க்கும் கருணைத்தாய் என அலரைக் கருதிப்புகழ்வன். அது வெளிப்படுந்தோறும் களித்தின்புறுவன்.

தலைவி நிலை.

அலருரையை அஞ்சித் தலைவி வருந்துவள். அவள் காதல் அதனால் கனிந்து நீளும். நாளும் வளர்ந்து நலிந்து நிற்கும். பின்பு அதனை நாணாது நிற்பள். முடிவில் துணிந்தெழுந்து சென்று காதலனையடைந்துகொள்வள் என்பதாம்.

ஐயிருவது அலரறிவுறுத்தல் முற்றிற்று.

---

களவியலின் உளநிலை.

அறிவு திரு வண்மை உண்மை அமைதி வீரம் முதலிய உயர் நலங்களெல்லாம் ஒருங்கேயுடைய தலைமகன் ஊழ்கூட்ட வந்து பொழிலிடை நின்ற தருண மங்கையைக் கண்டு அவளது எழில் நிலையை வியந்து உழுவலன்புடையனாய் உளமுருகி நின்றான்; குறிப்பறிந்து கூடி நுகர்ந்தான்; அவ் இன்ப நிலையை எண்ணி மகிழ்ந்தான்; அன்பு ததும்ப அவள் இனிய நலங்களைப் புகழ்ந்து பாராட்டினான்; பின்பு காதலரிருவரும் ஆர்வமிகுந்து யாதும் நாணாது, யாருரையும் கேளாது, ஓருயிர் ஈருடலுடன் உறைவதென ஒருமையுற மணந்து இருமையும் பெற இன்பந் துய்த்தார் என்பதாம்.

உள்ளம் உருகி உலகோ ரறியாமல்
கள்ளம் புரிந்து களித்துவந்தோம்—மேள்ளவினிக்
கற்பியலை மேவிநின்று காதலின்பம் துய்த்திடுவோம்
பொற்பா ரணங்கே புகுந்து.

களவியல் முற்றிற்று.

# கற்பியல்.

கற்பினது இயல்பினை உணர்த்தி நிற்றலால் இது கற்பியல் என நின்றது. கற்பாவது, தலைவனும் தலைவியும் உலகறிய மணந்துகொண்டு இல்லற நெறியில் நிற்பது. இந் நிலையினைக் கற்பு என்றது என்னை? எனின், நூலோரும் மேலோரும் கற்பித்தவாறே காதலிருவரும் கருத்தொத்து நடத்தலானென்க. கற்பித்தல்=உரைத்து உணர்த்துதல். அங்கியங் கடவுள் அறிகரியாக மங்கலச் சடங்குகள் ஆற்றி, மந்திர முறையோடு மணமகளை மணமகனுக்குக் கொடுக்குங்கால், இவளை இன்னவாறு ஆதரித்துவரவேண்டும் என அவனுக்கும், கொண்டான் குறிப்பறிந்து இவ் வகையில் அமைந்து ஒழுகவேண்டும் என அவளுக்கும், இருமுது குரவரும், மறைநவில் பெரியரும் வழக்கமாக உரைத்து வருதல் காண்க.

கணவன் சொல்வழி கருதி நடக்கும் புனிதமுடையாளே இல்வாழ்க்கைக்கு மிகவும் இனியளாவளாதலால் அத்தனிநலந் தோன்றக் கற்பு என நின்றது. "கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை" (ஔவையார்) என்பதும் ஈண்டெண்ணத்தக்கது. மணமகளுக்குரிய குணநலங்கள் எவற்றினும் கற்பே மிகவும் பொற்புடையதாதலால் அவ் அற்புதப் பெயரை இஃது அமையப் பெற்றது.

> "கற்பும், காமமும், நற்பா லொழுக்கமும்,
> மெல்லியற் பொறையும், நிறையும், வல்லிதின்
> விருந்துபுறந் தருதலும், சுற்றம் ஓம்பலும்,
> பிறவும அன்னகிழவோள் மாண்புகள்" (தொல்காப்பியம்)

குலமகளுக்குரிய குணவமைதிகளுள் கற்பு இதில் முற்படவைத் திருத்தல் காண்க. அக நிலையில் மறைவாக நிகழ்ந்த பொழுது காம ஒழுக்கம் களவு என நின்றது; புறமறிய மணந்த பொழுது கற்பு என வந்ததென்க.

> "கற்பெனப் படுவது, கரணமொடு புணரக்
> கொளற்குரி மரபிற் கிழவன் கிழத்தியைக்
> கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே"
> கரணம் = சடங்கு. (தொல்காப்பியம்)

கொடுப்பக் கொள்வதுவே கற்புஎன இது குறித்து நிற்றலைக் கூர்ந்து நோக்குக. களவு கற்பு என்னும் இவ் இருவகை நிலையும் உழுவலன்பினால் அமையுமாதலால் மன்பதைக்கு என்றும் விழுமிய இன்பமாய் விளையு மென்க.

"களவு கற்பெனக் கண்ணிய, ஈண்டையோர்
உளநிகழ் அன்பின் உயர்ச்சி மேன" என்பதும் காண்க.

இங்ஙனம் அன்பின் பயனுபமைந்து இன்ப நிலையமாயுள்ள களவு நிலையை ஏழதிகாரத்தால் முன்னர் உணர்த்தினார்; அதன் வழிவந்த கற்பு நிலையைப் பதினெட்டதிகாரத்தால் இனி உணர்த்துகின்றார். பிரிவாற்றாமை, படர்மெலிந்திரங்கல், கண்விதுப் பழிதல், பசப்புறுபருவரல், தனிப்படர் மிகுதி, நினைந்தவர் புலம்பல், கனவு நிலையுரைத்தல், பொழுதுகண்டிரங்கல், உறுப்பு நலனழிதல், நெஞ்சொடு கிளத்தல், நிறையழிதல், அவர்வயின் விதும்பல், குறிப்பறிவுறுத்தல், புணர்ச்சி விதும்பல், நெஞ் சொடு புலத்தல், புலவி, புலவி நுணுக்கம், ஊடலுவகை என்னும இப்பதினெட்டதிகாரங்களால் கற்பியலைக் கூறத் தொடங்கி முதலில் பிரிவாற்றாமை கூறுகின்றார்.

# 116ம் அதிகாரம் பிரிவாற்றாமை.

அஃதாவது தலைமகன் பிரிவைத் தலைமகள் ஆற்றாளாந் தன்மை. ஆற்றாமை = பொறுத்திருக்க முடியாமல் புலம்பி வருந்தல். மணந்துகொண்டு, இணைந்து மகிழ்ந்து, அறம்பல புரிந்து, இன்ப நலங்களை நுகர்ந்து வருங்கால் கல்வி செல்வ முதலியவற்றின் ஈட்டங்களுள் ஏதேனும் ஒன்றன் பொருட்டுக் கணவன் சிறிது அயலகல நேர்ந்தால் அப் பிரிவினை அஞ்சி மணமகள் பெரிதும் வருந்துவள் ஆதலால் அவ் ஆர்வநிலை முதலில் உரைக்க நின்றது. புணர்வில் நிகழ்ந்த இயல்புகளை முன்பு உணர்த்தினார்; பிரிவில் நிகழும் நிலைகளை இனி உணர்த்துகின்றார் என்க.

1151. கொண்டான் செலவுரையைக் கூற அயிராணி
கொண்டாள் துயரேன் குமரேசா—உண்டான
செல்லாமை யுண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை. (க)

இ.—ள்.

குமரேசா! தன் காதலன் சென்று வருவேன் என்ற பொழுது அயிராணி ஏன் நின்று வருந்தினாள்? எனின், செல்லாமை உண்டேல் எனக்கு உரை; மற்று நின் வல் வரவு வாழ்வார்க்கு உரை என்க.

இது, தலைவன் பிரிவைத் தலைவி சகியாள் என்கின்றது.

செல்லாமை = போகாமை; பிரிந்து நீங்காமை என்க.

உண்டேல் உரை என்றது இல்லையேல் உரையற்க என்பது தோன்ற. செல்லல் என்பது எல்லையில்லாததோர் அல்லலாதலால் அதனைச் சொல்லலாகாதென்பதாம்.

"திருந்திழை நெகிழ்ந்து, பெருந்தோள் சாஅய்,
அரிமதர் மழைக்கண் கலுழச் செல்வீர்,
வருவீராகுதல் உரைமின்; மன்னோ!" அகம் (387)

வரவுண்டேல் அதைச் சொல்லும்; செலவு சொல்லாதீர்; என ஒரு தோழி தலைமகனை வெளியே செல்ல விடாதபடி இதில் சொல்லியிருக்கும் அழகைப் பார்க்க.

"என்னோடு சொல்லுக செல்லாமை யுண்டெனின், சுரமதி
தன்னோடு மல்கு சடையாளர் வெங்கைத் தடஞ் சிலம்பில்
பொன்னோடு சொல்லுக நீநின் செலவைப், பொருள்நினைந்து
முன்னோடு பின்னும் இழப்பான் கருதிய முன்னவனே"
(திருவெங்கைக்கோவை)

இது, அடிகள் சொல்லை அடியொற்றி வந்துள்ளமை யறியலாகும். முன்னோடு பின் என்றது பொருளுக்கு முன்னும் பின்னுமுள்ள அறம் இன்பம் என்னும் இருவகை உறுதிகளை. வல் வரவு என்றது நெடிது நில்லாது கடிது வருதலை. வல் = விரைவு.

"மந்திரத்தரசன் வல்லே நிமித்திகன் வருக" (சிந்தாமணி) "வல் விரைந்து கடவுமதி பாக" (ஐங்குறுநூறு 482) "வல்லி தின் அவனை வணக்கிய வண்ணமும்" (பெருங்கதை) இவற்றுள் வல் உணர்த்தி நிற்றல் காண்க. எம்மைப் பிரிந்து போகாமை உண்டாயின் அதனைச் சொல்; அங்ஙனமின்றிப் பிரிந்துபோய் விரைந்து வருவல் என உரைப்பையாயின் அதனை அவ்வமயம் வாழ்கின்றவர்க்குச் சொல்லுக என்பதாம்.

மணம் புரிந்து நெடுநாள் இனிது வாழ்ந்துவந்த தலைமகன் இடையே கலைநிலை தெளியவும், உலகியல் காணவும் கருதி ஒரு நாள் மறுபுலம் போக நினைந்தான்; அந் நினைவினை மனைவியிடம் சொல்லின் மிகவும் மறுகுவள் என்றஞ்சி அமயம் பார்த்துத் தோழியை அழைத்துத் தான் உள்ளி நிற்பதைத் துணைவியிடம் சொல்லி உடன்படுத்த வேண்டினான்; அவ்வமயம் அவனை நோக்கி இவ்வகை அவள் உரைத்தாள் என்க.

முதலில் சொல்லியவுடனே அவள் அல்லலடைந்து அலமந்து தடுத்தாள்; தடுக்கவே "நான் விரைந்து வந்துவிடுவேன்; வருந்தியுழலல்" என அவன் பரிந்து வேண்டினனாதலால் அதனை அநுவதித்து "நின் வல்வரவு வாழ்வார்க்கு உரை" என்றாள்.

வாழ்வார்க்கு உரை என்றது நீ பிரிந்தபொழுதே துணைவி இறந்துபடுவள்; திரும்பி வருங்கால் உயிரோடு ஒருவரும் இங்கு உளராவரல்லர்; என்பதை அவன் உணர்ந்துகொள்ள.

எனக்கு என்றதனால் தலைவிபால் அவள் கொண்டுள்ள உரிமை உணரலாம். தான் வேறு அவள் வேறு என்னும் வேற்றுமையின்மை இது தோற்ற நின்றது. இதனைத் தலைவி கூற்றாகக் கொண்டால் என்னை? எனின், தலைவனை உயிரினும் இனியனாகக் கருதியுள்ள அவளிடம் இப் பிரிவை நேரில் கூறக் கூசித் தோழியிடமே உரைப்பனாதலால் அவளே இங்கு உரையாடுவள் என்க.

செல்லலாகாதென ஒருதலையாகச் சொல்லாது வல்லேவருதலை வாழ்வார்க்குச் சொல்லும் என்றது தான் அயல் பிரிந்தபோதே

தலைவி உயிர் பிரிந்து போம் என அவன் உணர்ந்தடங்க என்க. தோழி உரையாடுந்திறம் இதனால் உணரலாகும். இவ் வகையில் வருவதைக் கல்விப் பிரிவு பாங்கி மறுத்தல் என்ப.

"ஓதுவதற்கு அண்ணலே! பிரிந்தால், ஒண்மயிலை என்பு
மாது படுத்தினர் போல் ஓதிவாரும்; வருந்தமிழைக்
கோதுபிரித்தறி கோமான் குலோத்துங்கன் கோழி வெற்பில்
தீதுபடக்கொடி ஆவி சென்றாலும் திருப்புகைக்கே".
(குலோத்துங்கன்கோவை)

"ஆரும் விரும்பிய கல்விமேல், ஆசை உமக்குள தாயிடின்
பாருற என்பொரு பாவையாப் பாடிய பாவலர் போலவே
நீரும் அருந்தமிழ் செப்பிடு நீர்மை அறிந்திவண் ஏகுவீர்
மேரு நெடுஞ்சிலை அத்தனார் வீறருணாபுரி வெற்பரே!"
(அருணைக்கலம்பகம்)

"விண்ணுக்கு மாமதிகாய, வெங்காம எரி கொளுந்தப்,
பண்ணுக்கு மாமொழிமாது அங்கமாம் பஞ்சபூதியம்போம்;
கண்நாக்கு மூக்குச் செவி யாக்கை அற்ற கடத்தில் அங்கட்
பெண் ஆக்குவார் தமைப்போல் ஓதிவாரும் பிரிபவரே!"
(தனிப்பாடல்)

கல்வியின் பொருட்டுப் பிரிந்து செல்லத் துணிந்து நிற்கும் அண்ணலே! நீர் திரும்பிவருங்கால் எலும்பைப் பெண்ணாக்கிய திருஞானசம்பந்தர்போல் இறந்த பெண்ணை எழுப்பும் வித்தையைப் பயின்று வாரும்; ஏன்? எனில், நீர் பிரிந்தபோதே நம் துணைவி இறந்து படுவள்; ஆதலால் அவளைப் பிழைப்பிக்க எனக் குறிப்பித்துப் பிரிவுள்ளிநின்ற ஓர் தலைமகனிடம் தோழி உரைத்திருத்தலை இவற்றுள் உணர்ந்துகொள்க.

"பொலம்பசும் பாண்டிற் காசுநிரை அல்குல்
இலங்குவளை மென்தோள் இழைநிலை நெகிழப்
பிரிதல் வல்லுவை ஆயின்
அரிதே விடலை! இவள் ஆய்நுதற் கவினே" (ஐங்குறுநூறு 310)

பிரிவையாயின் இவள் கவினை மீண்டும் காண்டலரிது எனப் பாங்கி தலைவனிடம் பகர்ந்துள்ளபடியை இதில் பார்க்க.

"செல் இனிச்; சென்று நீ செய்யும் வினைமுற்றி
அன்பு அற மாறி, யாம் உள்ளத் துறந்தவள்
பண்பும் அறிதிரோ? என்று, வருவாரை
என் திறம் யாதும் வினவல்; வினவின்,
பகலின் விளங்கும் நின் செம்மல் சிதையத்,
தவலரும் செய்வினை முற்றாமல், ஆண்டு ஓர்
அவலம் படுதலும் உண்டு" (கலித்தொகை 19)

போ; ஆனால் போன இடத்தில் என் நிலைமையைக் குறித்து எவரையும் கேளாதே; கேட்டாயாயின், நீ அழுது புலம்பும்படியான துயரம் ஒன்று அங்கு உண்டாகும் என ஓர் தோழி இதன் கண் உரைத்திருத்தல் காண்க. தான் சொல்லியும் கேளாமல் பிரிவுக்கின்ற தலைமகனைப் பார்த்து நீ பிரிந்தால் தலைமகள் இறந்தாள் என்று மிக விநயமாக அவள் அறிவுறுத்தி யிருக்கும் அழகைப் பார்க்க.

கணவன் பிரிவு மனைவிக்குக் கடுந்துயராம் என்பது கருத்து. இவ் வுண்மை அயிராணிபால் உணரப்படும்.

## கதை.

அயிராணி எனபவள் இந்திரனுடைய அருமைத் திருமனைவி. தெய்வக் கற்பினள். அறிவு அமைதி பெருமிதம் பொறை நிறை முதலிய உயர் நலங்களுக்கெல்லாம் நிலைய மாயவள். பெரு வனப்பினள். மேனகை திலோத்தமை முதலிய வானுறை மகளிரனைவரும் வழிபாடுசெய்து போற்ற இவள் அளி செய்திருந்தவள். பெண்ணரசியாயும், விண்ணரசியாயும் விளங்கி நின்ற இவளோடு உடனமர்ந்திருந்து அரிய போகங்களை நுகர்ந்து அமரர் கோன் இனிதுவந்திருந்தான். இங்ஙனம் இருந்து வருங்கால் அசுரேந்திரனாகிய சூரபன்மன் செய்த அல்லலால் அமராவதியைவிட்டு இவளை மட்டும் உடன் அழைத்துக்கொண்டு இவ்வுலகடைந்து சீகாழியில் தங்கியிருந்தான். ஒரு முறை அமரர் பலர் திரண்டுவந்து அவன்முன் வணங்கி நின்று தமது அவநிலையைச் சிவனிடம் சொல்லி இதம்புரிய வேண்டினர். அவ் வேண்டுகோட்கு இணங்கி அவன் கைலைபோக விழைந்தான். தனது விழைவினை இவளிடம் சொலல வந்தான. பிரிந்துபோதலை

அறிந்தால் வருந்தி நோவளே!' என்று அவன் நினைந்து நினைந்து நெடிதுளைந்தான். முடிவில் துணிந்து சொன்னான்.

"ஆகின்ற துன்பத்தழலால் பதைபதைத்து
வேகின்ற சிந்தை வியன் அமரர் தமமுடன் யான்
பாகொன்று தீஞ்சொல்உமை பாகன் பனிவரைக்குப்
போகின்றேன் ஈது புகலுதற்கு வந்தனனே"

என்று இங்ஙனம் அவன் புகன்று நின்றான். அவன் பிரிவுரையைக் கேட்டவுடனே இவள் மறுகி நொந்தாள். மயங்கி விழுந்தாள்; உயங்கி யுலைந்து தியங்கி யுயிர்த்தாள்; அவன் அணைத்தெடுத்து ஆரத் தழுவி "யான் விரைந்து வந்து விடுவேன்; வருந்தல்"; என்றான். எவ்வகையிலும் அவன் பிரிந்து விடுவனே! என்று இவள் நினைந்து நினைந்து நெடுந்திகில் கொண்டாள். அவ்வமயம் இவள் அலமந்தபடியை அடியில் பார்க்க.

"என்னும் பொழுதில் இடருற்று இகல்வாளி
தன் அங்கம் மூழ்கத் தளர்ந்துவீழ் மஞ்ஞை என
அன்னம் பொருவு நடையாள் அயிராணி
மன்னன் திருமுன் மயங்குற்று வீழ்ந்தனளே. (க)

வீழ்ந்தாள்; தரிக்கரிதாம் வெய்ய துயர்க் கடலில்
ஆழ்ந்தாள்; தனதறிவும் அற்றாள்; பிரியாது
வாழ்ந்தாள் என் செய்வாள்? மகவான் அது கண்டு
தாழ்ந்து ஆகுலத்தோடு எடுத்தான் தடக்கையால். (உ)

ஆர்வமொடு கையால் அணைத்தே அவளைத் தன்
ஊருமிசை ஏற்றி உணர்ச்சிவரும் பான்மை எலாம்
சேர ஒருங்காற்றச், சிறிதே தெளிவுற்றாள்
காரின் மலிகின்ற மின்போலும் காட்சியினாள். (ங)

சிந்தை மயக்கம் சிறிதகன்று தேற்றம் வர
முந்தை இடர்வந்து முற்றும் தனைச் சூழ்ந்த
அந்த மடமான் அது போழ்தில் தன்னுள்ளம்
நொந்து நடுங்கி இனைய நுவல்கின்றாள். (ச)

பொன்னாடு விட்டுப் புவியின் வனத்திருந்தும்
உன்னாருள்கொண்டு உவப்புற்று மேவினனால்
என்னாருயிரே! எனைநீ பிரிவாயேல்
பின்னார் துணை? யான் பிழைக்கும் நெறியுண்டோ? (ரு)

வாகத்து நேமிக்கும், வான்பாடு புள்ளினுக்கும்,
மேகத்திறமும், வியன்மதியும், ஆவதுபோல்
நாகத்துறைவோர்க்கு நாயகமே! நீஅலது என்
சோகத்தை நீக்கித் துணையாவார் வேறுண்டோ?''

(கந்தபுராணம்)

கணவன் பிரிவுரையை ஆற்றுமல் உளநிலை குலைந்து இவள் அலமாலுற்ற நிலையை இவற்றுள் ஊன்றி நோக்குக. இதனல் இவளது உழுவலன்பும், விழுமிய பண்பும், பிரிவாற்றுமையும் இனிதறியலாகும். பிரிந்துபோய் விரைந்து வருவல் என உரைத்தாலும் தலைமகன் பிரிவைத் தலைமகள் ஆற்றுள் என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றுள்.

நீர்பிரிந்த மீனின் நிலையே நினைமினே
கீர்பிரிந்த போதென் நிலை.

பிரிவாற்றுரியல்பு இதனல் கூறப்பட்டது.

---

1152. விண்டுமதி மேவிநின்றும் வெம்பிரிவை யஞ்சியென்றும்
கொண்டுளைந்தாள் என்னே குமரேசா—கண்டுணரின்
இன்க ணுடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்க ணுடைத்தாற் புணர்வு. (உ)

இ—ள்.

குமரேசா! தலைவனோடு கூடியிருந்தபோது விண்டுமதி ஏன் பிரிவஞ்சினுள்? எனின், பார்வல் இன்கண் உடைத்து; புணர்வு பிரிவு அஞ்சும் புன்கண் உடைத்து என்க.

இது, பிரிவச்சத்தின் நிலைமையைத் தலைவி கூறுகின்றது.

பார்வல் = பார்வை; பார்த்திருக்கும் இருப்பு என்க. "பார்வல் இருக்கைக் கவிகண் நோக்கின்'' (புறம்), "பருந்து பறக்கல்லாப் பார்வல் பாசறை'' (மதுரைக்காஞ்சி), "நாரைச் சேவல் பார்வலோடு வதிந்த'' (பெருங்கதை), "பார்வற் கொக்கின் பரிவேட்பு அஞ்சா'' (பதிற்றுப்பத்து) இவற்றுட்பார்வல் உணர்த்திநிற்றலறிக.

இன்கண், புன்கண் என்பன முறையே இன்பத்தையும், துன்பத்தையும் உணர்த்தி நின்றன. இன்பம் எய்தியபொழுது களிப்பூர்ந்து கண்கள் மலர்ந்திருக்கும் ஆதலால் அது, இன்கண் என வந்தது; துன்பம் தோய்ந்தபோது புல்லிதாய்க் குழிந்து அவை புலர்ந்திருக்கும் ஆதலால் அதனைப் புன்கண் என்றார். இங்ஙனம் கண்மேல் வைத்துரைத்தது மெய்ப்பாட்டின் காட்சி நிலை காண.

மேல், பிரிவை வாயினால் சொல்லவும் கூடாதென்றாள்; இதில், அதனை உள்ளினும் உள்ளம் பதைக்கு மென்கின்றாள். மணந்துகொள்ளுமுன் தலைவரது நோக்கம் இன்பமுடையதா யிருந்தது; மணந்து புணர்ந்திருக்கும் இது பிரிவை அஞ்சும் துன்பமுடையது என்பதாம்.

தலைவனை எய்துமுன் எதிர்பார்த்திருந்த இருப்பில் விளைந் ததையும், அவனை எய்திய பின் இணைந்திருக்கும் நிலையில் அமை ந்ததையும் தலைவி உணர்ந்து கூறி உளைந்தபடி யிது.

களவொழுக்கம் நிகழ்ந்துவருங்கால் இடையே சிறிது வரவு தாழ்ந்ததாயின் தலைவர் எப்பொழுது வருவார்? எப்பொழுது வருவார்? என உளமலி காதலோடு தலைவி எதிர்பார்த்திருந்தாள்; அவ் ஆர்வநோக்கம் பெரிதும் இன்பமுடையதாதலால் "அவர் பார்வல் இன்கண் உடைத்து" என்றாள்.

உலகறிய மணந்துகொண்டு உடனமர்ந்திருக்குங்கால் ஏதே னும் காரிய நிமித்தமா அயலே பிரிந்துபோய் விடுவரோ? என்று இரவும் பகலும் நெடுந்திகில் கொண்டாளாதலால் "புணர்வு, பிரிவு அஞ்சும் புனகண் உடைத்து" என்றாள். கற்பில் பிரிவுத் துன் பத்தை அறிந்தபோது களவிலுண்டான இன்பம் கருதநேர்ந்தது.

இங்ஙனம் பிரிவஞ்சுதற்குக் காரணம் தலைவன் மீதுள்ள ஆர்வமிகுதியே. காதல்மீக் கூர்ந்து மிகவும் ஆவலாக ஒரு பொருள் கருதி நிற்கப்படுமாயின் அது, இடையே எவ்வகை யேனும் கை நீங்க நேரிடுமோ? என்று உடையவரை இடை யறாது ஏங்கி யிருக்கச் செய்யும் என்க.

பிரிவினை நினைத்தாலும் நெஞ்சம் கலங்கும் என்றால் அதனைத் தலைவன் வாய்விட்டுரைத்தானாயின் அவள் படும்பாடு உரைக்க வேண்டாவாயிற்று. பிரிவின் மீதே எப்பொழுதும் அதிசங்கையுடையளாய் அலமந்திருத்தலால் அவன் உரைசெயல் எவற்றினும் அப் போக்கின் நோக்கே புலப்படலாயது.

"திரைகடல் ஓடித் திரவியம் தேடென்று செப்பும் ஔவை
உரைபழுதன்று; எனச்சோர்ந்தாள் கழுக்குன்றத்து ஓர் மடமான்
அரைபனி நீர்ச் சந்தனங்கொண்டு பாங்கியர் ஆற்றியபின்,
இரைகடல் போய் வர எத்தனை நாள்! என்றெழுந்தனளே"

மக்கள் எப் பாடுபட்டாவது பொருள் ஈட்டவேண்டும் என்னும் பொருள்படத் "திரைகடல் ஓடியும் திரவியம் தேடு" என்று ஔவை உரைத்த நீதி மொழியை ஒருவன் ஓதி வியப்ப அப்பொழுது அவன் அருகிருந்த தலைவி, அவன் பொருள்கருதிப் பிரிந்துபோய் விடுவன் என நினைந்து அயர்ந்து விழுந்து மூர்ச்சையாயினாள்; உடனே அவளை அணைத்தெடுத்து ஆற்றியபொழுது விழித்து, ஐயோ இத்தனை நாளா சென்றது நீங்கள் வர என அவள் ஏங்கியழுதிருக்கும் நிலையை இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

"பொன்னே எனுமுன் அவசமுற்று, ஒல்லைப் புறந்தடவி
என்னே எனப்பின் விழித்தெழுந்து எங்குற்றது இத்துணை நாள்?
கொன்னே என்றாட்கு என் பொருட் பிரிவு என்எனக் கூறுவல் நீ
மின்னே எதிர்புகல் கோடீச்சுர நம்பர் வெற்பிடத்தே"

தன் தலைவியின் நிலையினை விளக்கி ஓர் தலைமகன் தோழியிடம் இதில் உரைத்திருக்கும் அழகைப் பார்க்க.

கணவன் உடனமர்ந்திருப்பினும் ஏதேனும் பிரிவு இடை நேருமோ என்று துணைவி துயருழந்தயர்வள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை விண்டுமதிபால் உணரப்படும்.

## கதை.

விண்டுமதி என்பவள் சதானீகன் என்னும் அரசனுடைய அருமைத் திரு மனைவி. திருந்திய பொற்பும் அருந்தவக் கற்பும் பொருந்தப் பெற்றவள். இவ்வழகியோடமர்ந்து, விழுமிய போகங்களை நுகர்ந்து, அவ் வேந்தன் பெருமகிழ் வெய்தியிருந்

தான். முதலில் கந்தருவ முறையில் கலந்து பின்பு உலகறிய மணந்து அலகிலின்பங்களை அனுபவித்துவந்த அம் மன்னனை இன்னுயிரினும் இனியனு யெண்ணி இவள் இனிது பேணி வந்தாள். அவன் சிறிது இடை பிரியினும் இவள் பெரிதும் கவன்று பேதுற்றயர்வள். அவனும் இவள்மேல் ஆர்வமீதூர்ந்து யாதும் அகலாதிருந்தான். பெருகிய காதலோடு மருவிவந்த அவன் மகப் பேறின்மையால் மறுகி நின்றுன். சௌண்டிலியர் என்னும் முனிவர் அருளால் அவனுக்கு ஓர் இனிய புதல்வன் பிறந்தான். அம்மகனுக்குச் சகத்திரானீகன் என்று பெயரிட்டு மிகப் போற்றி வந்தான். வருங்கால் அமரருக்கும் அசுரருக்கும் வானுலகில் ஓர் பெரும்போர் மூண்டது. அமரர் கோன் அவனைத் துணைவரவேண்டினன். போராற்றலில் மிகச் சிறந்தவனுதலால் அவ் வீரன் அங்குப் போகத் துணிந்தான். அத் துணிவினை அறிந்து இவள் துடித்தயர்ந்தாள். அரச மரபில் பிறந்து வீர மகளாயிருந்தும் நான் போர்முனைக்குப் போகுங்கால் போகலாகாதென இவ்வாறு நீ பொருமி நிற்கலாமா? என்று இவளைத் தழுவி நின்று அவன் கெழுதகைமையோடு கேட்டான். உழுவலன்புடைய இவள் அழுதலமர்ந்து "நீங்கள் பிரிந்தால் உயிர் பிரிந்த உடல்போல் உலர்ந்து படுவேன்; பிரிந்திருக்கலாற்றேன்; நானும் உடன் வருவேன்" என உரைத்து நின்றுள். இவளது ஆற்றுமையையறிந்து அவன் ஆற்றவும் வருந்தினன். முடிவில் அருமை மகனையும், தருமதிலகை என்னும் தோழியையும் இவள் அருகிருத்தி ஆறியிருக்குமாறு தேறுதல் பல கூறி விசும்பாறுக விமான மூர்ந்து அவன் விண்ணுலகடைந்தான். அவனைக் கண்ட வுடனே சதமகன் பெருமகிழ்வு கொண்டு இனிது உபசரித்தான். இந்திரனுக்கு உதவியாக அவன் வந்திருத்தலை அறிந்து எதிரிகள் கலங்கினர். அமரரும் அமராற்றமுடியாத அருவலியுடைய நமரோடு ஒரு சிறு மனிதனே பொரவந்துள்ளான் என அசுர வீரருட் சிலர் அசதியாடினர். தூலசிரசு, யமதமட்டிரன் என்னும் அசுர மன்னரிருவரும் பெரும் படையுடன் வந்து அமராவதியை வளைந்தார். கடுஞ்சமர் மூண்டது. அதில் யானைத் திரளில் அரியேறுபோல் அவன் தனி ஏறி அடலமர் ஆற்றினன்.

படைகளை யுடைத்துப் பகைவர் பலரைப் பாடுகிடத்தி வீரவெறி யோடு வெற்றி பெற்று மீண்டுவருங்கால் இடையேவந்த அசிதமன் என்னும் அசுரவீரன் அயல் மறைந்து நின்று அவனை வெட்டி வீழ்த்தினான். அவன் பட்டவுடனே அமரரனைவரும் பரிதபித்தனர். அவனது திரு வுடம்பைத் தேரிலேற்றி மாதலியை அழைத்து இப் பதிவிரதையிடம் சேர்த்துவரும்படி இந்திரன் பணித்தான். அவ்வாறே கௌசாம்பி நகர்க்கு அவன் கொண்டு வந்தான். வீரப் பொலிவோடு விகசித்துக்கிடந்த அவன் திரு முகத்தைக் கண்டபோது இவள் அடைந்த துயரினை யார் சொல்ல வல்லார்? பருவமெய்திய தனது அருமை மகனையும் விடுத்து இவள் அவனுடலைத் தழுவி உடனுயிர் நீத்தாள். நாயகன் கூடியிருந்த காலத்தும் ஏதேனும் பிரிவு நிகழுமோ என்று ஆர்வமிகுதியால் அஞ்சியிருந்த இவள் முடிவில் இவ்வாறு துஞ்சி முடிந்தாள். "புணர்வு பிரிவு அஞ்சும் புன்கண் உடைத்து" என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

"வலவன் இந்திரன் ஆணையால் மன்னுடல் கொண்டு
நிலன் இறங்கினன் சகத்திரானீகன் நேர்காணூஉ
அலமருந் துயரளக்கர் வீழ்ந்து ஐயனைத் தழுவிப்
புலரவாயில்நீர் புலம்பினான் விழியினீர் பொழிந்தான். (க)

தண்ணறுந் தொடைச் சகத்திரானீகன் அத தந்தைக்கு
எண்ணருங்கடன் இழைத்தனன்; இறைவனோடு ஏகாள்
வண்ண ஒண்புகழ் மடந்தை வீற்றிருந்தனள் மண்மேல்;
அண்ணல் இல்லவள் உடன் உயிர் இல்லவளானாள்" (உ)
(சேதுபுராணம்)

பிரிவாற்றாது தலைவனோடு இவள் உடன் உயிர் துறந்த உண்மையை இதுவும் உணர்த்தி நிற்றல் காண்க.

பிரிவுள்ளும் போதெல்லாம் பேதைமனம் அந்தோ
எரியுள் இழுதாம் இளைந்து.

பிரிவினை அஞ்சிக் காதலி மறுகுவள் என்பது இதனால் கூறப்பட்டது.

1153. தேற்றம் அரிதென்றேன் தேறிக் கவுசிகையாம்
கோற்றொடிபின் சென்றாள் குமரேசா—ஆற்ற
அரிதரோ தேற்றம் அறிவுடையார் கண்ணும்
பிரிவோ ரிடத்துண்மை யான். (௩)

இ.—ள்.

குமரேசா! தன் நாயகன் பிரிந்ததை வியந்து கவுசிகை என் தேறாது அவன் பின் தொடர்ந்து சென்றாள்? எனின், அறிவுடையார் கண்ணும் பிரிவு ஓரிடத்து உண்மையான், தேற்றம் அரிது என்க. கோல் தொடி = அழகிய வளையினையுடையாள்.

தேற்றம் = தேறுதல்; உண்மை என்று நம்பிக்கொள்ளுதல். அரிது = அரியது. எளிதாக நம்பலாகாது என்றபடி.

அரோ என்பது ஆற்றாமை தோன்ற வந்தது.

கண்ணும் என்பதில் உம்மை சிறப்புணர நின்றது.

அறிவுடையார் என்று சுட்டியதனால் தனது கணவனது உணர்வொழுக்கங்களை அவள் உவந்திருந்தமை உணரலாகும். ஓர் இடத்து என்றது அப்பிரிவு நிகழ்ச்சியின் அருமை கருதி.

மேல், தலைவன் உடனமர்ந்திருப்பினும் அவன் பிரிவு உளங் கவற்றி நிற்கும் என்றாள்; இதில், அதனை அறிவுடையார் செய்யலாகாதென்கின்றாள்.

பேரறிவாளரிடத்தும் பிரிவானது ஒரோவழிப் பொருந்தியிருத்தலால் அவரைத் தேறுதல் கூடாதென்பதாம்.

குணநலங்களிற் சிறந்து ஞான சீலனாய் விளங்கியிருந்த தன் கணவன் தன்னையாண்டும் பிரிவதில்லை என்று இனியன பல சொல்லி முன்பு தலையளி செய்து நின்றான்; பின்பு ஓர் அருவினை கருதி ஒருநாள் பிரிவுறத் துணிந்தான்; அத் துணைவினைக் குறிப்பானறிந்த தலைமகள் அவன் கேட்குமாறு தோழியிடம் இவ்வாறு சொல்லினாளென்க.

அறிவுடையாரே இவ்வாறு உரைமாறிப் பிரிவாராயின் இனிப் பிறரை எவ்வாறு தேறி நம்புவது? என வெம்பி உரை

த்தாளாதலால் "தேற்றம் அரிது" என்றாள். தேறி ஏமாந்த மையால் இங்ஙனம் கூறினாள் என்க.

"கையோடி ஒன்றணங்கே! தெய்வம் காட்டக், கைஒன்று எனது
மையோதி வைத்தது எண்ணுதகன்றார்; மனம் வாக்கு இரண்டு
செய்யோன்; உறந்தைக் குமார குலோத்துங்க சென்னிவெற்பர்
ஐயோ பொய்யார் என்று நாம் தேறுகை நம் அறிவின்மையே"
(குலோத்துங்கன்கோவை.)

ஒருகையால் தெய்வத்தைச் சுட்டி, மற்றொரு கையால் என் தலையைத் தொட்டுப் பிரிவதில்லை என்று சத்தியஞ் செய்தவர் இப்பொழுது பிரிந்துபோனார் என்றால் ஐயோ! அவரை நாம் தேறியது நம் அறியாமையே யாம் என ஒரு தலைவி உளமிக இரங்கித் தோழியிடம் இதில் அவலித்திருத்தல் காண்க.

இங்ஙனம் பிரிவாற்றாது புலந்துரைத்த அவளது குறிப்பினை அறிந்து தலைவன் செலவொழிந்து நிற்பன்; நில்லானாயின் பாங்கி புகுந்து பாங்குடன் தடுப்பள் என்க.

"செவ்விய தீவிய சொல்லி, அவற்றொடு
பைய முயங்கிய அஞ்ஞான்று, அவை எல்லாம்
பொய்யாதல் யான் யாங்கு அறிகோ? மற்று ஐய!
அகனகர் கொள்ளா அலர்தலைத் தந்து
பகல்முனி வெஞ்சுரம் உள்ளல் அறிந்தேன்;
மகன்அல்லை மன்ற இனி;" (கலித்தொகை 18)

பிரிவூக்கி நின்ற தலைமகனை இடித்துரைத்து ஒரு தோழி இதில் தடுத்திருக்கும் அழகைப் பார்க்க.

காதலன் எவ்வளவு தேற்றி நிறுத்தினும் காதலி அவனைப் பிரிந்து நில்லாள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கௌசிகைபால் உணரப்படும்.

## கதை.

கௌசிகை என்பவள் மகோதயம் என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்த காதி மன்னனுடைய அருமைத் திருமகள். கோசிகரோடு உடன் பிறந்தவள். குசன் மரபில் வந்தவளாதலால் கௌசிகை என நின்றாள். இவளது இயற்பெயர் சத்தியவதி.

உத்தம குணங்களெல்லாம் ஒருங்கே அமையப்பெற்றவள். உருவி லும் திருவிலும் அறிவிலும் சிறந்து நின்ற இவள் பருவம் எய்திய வுடனே முடி மன்னர் பலர் கடிமணம் கருதிக் காதியிடம் வந்து அடிதொழுது நின்ருர். அவ் அரசன் யாருக்கும் உறுதி சொல் லாமல் அகலவிடுத்து இவளது எழிலமைதிக்கும், அறிவு நிலைக் கும் தகுதியான வரனை நாளும் உசாவி வந்தான். வருங்கால ஒருநாள் வேட்டைக்குச் சென்ருன். அங்கே பிருகு முனிவரது அருமைத் திருமகனுகிய இரிசிகன் என்பவனைக் கண்டான். இளஞ் சந்திரன்போல் அழகொழுக நின்ற அவனது உருவ நிலையை நோக்கி உளமிக வியந்தான். தந்தையுடன் கலந்து உவந்தழைத்து வந்து தனது அருமைத் திருமகளை அவனுக்கு மணஞ்செய்து கொடுத்தான். இவளை உவந்துகொண்டு மண்டிய காதலோடு மருவி யிருந்து அரிய போகங்களை இனிது நுகர்ந்து அரச திருவோடு அவன் நிலவி நின்ருன்.

> "வானுயர் இன்பமெல்லாம் மண்ணிழிந் தியைந்த போதும்
> தேனுயர் மலரங் கூந்தற் சேயிழை செழுமென் கொங்கை
> தானுறு போகம் ஒவ்வா; தணிவறு தவத்தாற் பெற்றேன்
> யானினி அடையத்தக்க யாவுள அரும்பேறம்மா!"

என விழைந்து மொழிந்து நலம் பாராட்டி அறவிய மனத்தனுய் அறம்பல புரிந்து யாதும் அகலாமல் இவளோடமர்ந்து இன்ப துய்த்து அன்பாற்றி வந்தான். மணியும் ஒளியும் போல் மருவி யிருந்து இல்லற நிலையினை இவ் இருவரும் எழில்பெறச் செய்தார். இங்ஙனம் செய்துவருங்கால் சத்திய வுலகத்தில் பிரமன் முன் னிலையில் அமரரும் முனிவரும் கூடி ஒரு பெரு வேள்வி இயற்றி ஞர். அவ் விழவினை இவளது கணவன் காண விழைந்தான். தனது தவமகிமையால் தெய்வ வுருவையடைந்து அயனுலகை நோக்கி எழுந்தான். என்றும் நின்னைப் பிரியேன் என்று உறுதி கூறியிருந்த பெரியோர் இன்று பிரிந்தெழுந்தாரே! என வருந்தி நொந்து நதிவடிவாகி இவளும் அவனைத் தொடர்ந்து சென்ருள். அவன் திரும்பி நோக்கினன்; விரும்பி நின்ருன். நாம் மேவி யிருந்த பூவுலகில் நம் ஞாபகம் என்றும் நிலைத்திருக்குமாறு

எல்லா வுயிர்க்கும் நன்மையாயதோர் தன்மையைச் செய்ய் வேண்டுமாதலால் பதிவிரதையாகிய நீ இந் நதியுருவாகவே நயந் திரு; நானும் சீதள நிலையாய் நின்னுள் சேர்ந்திருப்பன்; எனத் தேற்றி நிறுத்தி அவன் சேணிடைச் சென்றான். இவளும் அவ் வாறே உருகி நின்றாள். "பிரிவாற்றாள் என அறிந்திருந்தும் இங்ஙனம் பிரிந்து சென்றாரே! அறிவுடைய இவரே இவ்வாறு யின் இனிப் பிறரை எவ்வாறு நம்புவது!" என்று ஏங்கியிருந் தாள். அறிவுடையார் கண்ணும் பிரிவு ஓரிடத்துண்மையான் ஆடவரைத் தேறுதலரிதென்பதை உலகம் காண இவள் உணர் த்தி நின்றாள்.

"பிருகுவின் மதலையாய பெருந்தகைப் பிதாவும் ஒவ்வா
இரிசிகன் என்பவற்கு மெல்லியலாளை ஈந்தான்
அருமறை யவனும் சின்னுள் அறம்பொருள் இன்பமுற்றி
விரிமலர்த் தவிசோன் தன்பால் விழுத்தவம் புரிந்து மீண்டான்.

காதலன் சேணில் நீங்கக் கவுசிகை தரிக்கலாற்றாள்
மீதுறப்படரா லுற்றாள் விழுநதி வடிவமாகி;
மாதவர்க்கரசுநோக்கி, மாநிலத்து உறுகண் நீக்கப்
போதுக நதியாய் என்னுப் பூமகன் உலகு புக்கான். (உ)

எம்முனாள் நங்கை இந்த இருநதியாயினாள்; என்று
அம்முனி புகலக் கேளா, அதிசய மிகவுந் தோன்றச்,
செம்மலும், இளைய கோவும், சிறிதிடம் தீர்ந்த பின்னர்
மைம்மலி பொழில் யாது? என்ன, மாதவன் கூறலுற்றான்" (ங)
(இராமாயணம்)

இவை, இராமனிடம் விசுவாமித்திரர் கூறியன. இரிசிகன் கவுசிகையை மணந்ததும், காம போகங்களை நுகர்ந்ததும், அவன் பிரிந்து சென்றதும், அப் பிரிவாற்றாது இவள் அவனைத் தொடர்ந்ததும், பின்பு நதியாய் நின்றதும், இதன் கண்ணும் உரைக்கப்பட்டுள்ளமை காண்க.

இன்பமுறக் கூடி இடையகலும் ஆடவர்தாம்
துன்பம் அறியார்கோல் சூழ்ந்து.

பிரியா ஆடவர் அரியர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1154. சார்ந்தகன்ற சுந்தரரைச் சங்கிலியார் தேறியுஞ்சீர்
கூர்ந்திருந்தார் என்னே குமரேசா—சேர்ந்தே
அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற் றெளித்தசொற்
றேறியார்க் குண்டோ தவறு. (௪)

இ.—ள்.

குமரேசா! முன்பு பிரியேன் என்று உறுதி கூறிய சுந்தரர் பின்பு பிரிந்தபோது சங்கிலியார் ஏன் பங்கமின்றிப் பரிந்திருந்தார்? எனின், அளித்து அஞ்சல் என்றவர் நீப்பின் தெளித்த சொல் தேறியார்கருத் தவறு இல்லை என்க.

இது, பிரிவுற நேர்ந்த தலைமகள் அறிவுரையாடியது.

அளித்து = அளிசெய்து. குளிர்ப்பநோக்கித் தளிர்ப்ப முயங்கி அன்புறு செயல்கள் பண்புடன் ஆற்றி முன்பு தலைவன் அருள்செய்து நின்றமையை நினைந்து 'அளித்து' என்றாள்.

அஞ்சல் = அஞ்சற்க. அல் ஈற்று வியங்கோள் எதிர் மறையில் வந்தது. என்றவர் என்றது தலைவனை.

நீப்பின் = பிரியின். தவறு = பிழை, குற்றம். உண்டோ என்றது இல்லை என்றபடி. பிரிந்து விடுவரோ என்று தலைவி ஆற்றாது அலமந்தபோது என்றும் பிரியேன் எனத் தலைவன் தேற்றி அருளினன் ஆதலால் அதனைத் "தெளித்த சொல்" என்றாள். இவ்வாறு கூறிவிட்டு இப்பொழுது வாக்குமாறிப் போக்கேறி நின்றால் அவர்க்குப் புரையேறுமே! என்றுபுலந்தாள்.

"பிரியாமையும், உயிர் ஒன்றாவதும், பிரியிற் பெரிதும்
தரியாமையும் ஒருங்கே நின்று சாற்றினர்; தையல் மெய்யில்
பிரியாமை செய்து நின்றோன் தில்லைப் பேரியலூரர் அன்ன
புரியாமையும் இதுவே! இனி, என் நாம் புகல்வதுவே"
(திருக்கோவை)

தலைவன் மொழிமாறிப் பிரிந்ததை நினைந்து ஒரு தலைவி வருந்தியிருந்தநிலை இஃது உணர்த்தி நிற்றல் காண்க.

மேல், அறிவுடையரும் பிரிவர் என்றாள்; இதில், அருளுடையாரும் அகல்வர் என்கின்றாள்.

முன்பு அன்பு செய்து யாதும் அஞ்சற்க என்று அருள் புரிந்து நின்றவர் பின்பு பிரிவராயின் அவர் தெளிவித்த சொல்லை நம்பியிருந்த நங்கையர்க்குக் குறை இல்லை என்பதாம்.

தன் கருமம் கருதித் தலைவன் ஒருமுறை அயல் நாடு செல்லத் துணிந்தான்; அத் துணிவினைக் குறிப்பாலறிந்த தலைவி அவன் உணர்ந்து நிற்கும்படி உரைத்தபடி யிது.

நினை யாண்டும் பிரியேன்; யாதும் அஞ்சல் என முன்பு உழுவலன்புடையராய்த் தழுவி நின்றவர் இப்பொழுது பிரிவ ராயின் "தஞ்சமானவரை வஞ்சஞ் செய்தார்; வாக்கு மாறினர்; பொய்யர்;" என உலகம் அவரை வையும் ஆதலால் ஐயோ! இப் பழி மொழிகள் அவரைச் சேருமே என்று பதைக்கின்றேன்; அவர் சொல்லை நம்பியிருந்த எனக்கு ஒரு குறையும் இல்லை; நீ விரைந்து போய் அவர் பிரிந்து படாவகை இவ்வுண்மையை உணர்த்தி நிறுத்து எனத் தோழியிடம் இங்ஙனம் உரைத்து நின்றாள் என்க. அளித்து அஞ்சல் என்றவர் என்றது தன் பால் அன்பால் முன்பு அவர் செய்திருந்த இன்ப நிலைகளை எடுத்துக் காட்ட. தெளித்த சொல் என்றது அவர் தெளிவித்த உரைகளை உளங்கொண்டுணர. தேறியாள் என்றது தேறியார் எனப் பன்மையில் கூறியது தோழியையும் உடன்படுத்த. தன்னைப் பிறர்போல் வைத்துப் பெண்கள் இயல்பின்படி சாடை நோக்கில் கூறியதுமாம.

இவ்வாறு பிரிவாற்றாது தலைவி வருந்தும் நிலையினை அறிந்து தோழி புகுந்து தலைவன் செலவினைத் தடுப்பள் என்க.

> "பால் மருள் மருப்பின், உரல்புரை பாவடி
> ஈர்நறுங் கமழ்கடாஅத்து இனம்பிரி ஒருத்தல்,
> ஆறுகடி கொள்ளும் வேறுபுலம் படர்ந்து
> பொருள்வயிற் பிரிதல் வேண்டும் என்னும்
> அருளில் சொல்லும் நீ சொல்லினையே!
> நன்னர் நறுநுதல் நயந்தனை நீவி
> நின்னிற் பிரியலென், அஞ்சல் ஓம்பு, என்னும்

நன்னர் மொழியும் நீ மொழிந்தனையே!
அவற்றுள், யாவோ ஆயின? மாஅன் மகனே!
கிழவர் இன்னோர் என்னாது, பொருள்தான்
பழவினை மருங்கிற் பெயர்பு, பெயர்பு, உறையும்,
அன்ன பொருள்வயிற் பிரிவோய்! நின்னின்று
இமைப்புவரை வாழாள் மடவோள்
அமைக்கவின் கொண்ட தோளிணை மறந்தே'' (கலி21)

இது, பொருள் கருதிப் பிரிய நின்ற தலைமகனைத் தோழி தடுத்து நிறுத்தியது. அளித்து அஞ்சல் என முன்பு அவன் தெளித்த சொல்லை எடுத்துக் காட்டி, பொருளினது நிலையாமை யையும் விளக்கி, அவனைப் பிரிந்து இமைப்பொழுதும் நிலைத் திருக்கமாட்டாள் எனத் தலைவியின் இயல்பையும் உணர்த்தி, நிலையற்ற ஒன்றை விரும்பி நிலையானதைக் கொலைசெய்து, உரை மாறி இங்ஙனம் செல்லத் துணிந்தாயே! செல்ல மகனே! இது, உனக்கு நல்லதா? என இதில் அவள் உரைத்திருக்கும் அழகை ஊன்றிப் பார்க்க.

"விளித்தார் உயிரை அடிநீழல் வைப்பவர் வெங்கையிலே
அளித்தார் புனை குழலாய்! அகலேன் என்று அகந்தெளியத்
தெளித்தார் அகன்றனரேல், அவர் வார்த்தை தெளிந்து மனம்
களித்தார் தமக்குளதோ பிழைதான் இந்தக் காசினிக்கே''
ரவை)

இது, அடிகள் குறிப்பை அடியொற்றி வந்துள்ளமை அறிய லாகும். பிரிந்தால் தனக்கு நேரும் துயரினைக் குறியாமல், தலைவ னுக்கு உண்டாம் பழியினைக் குறித்து அளியுடனுரைத்திருத்த லால் அவன்பால் கொண்டுள்ள அவளது கெழுதகை இனி துணர லாகும். அன்புரையாடி ஆதரித்து நின்ற தலைவன் பின்பு வஞ்சஞ் செய்து பிரிந்து போவனாயின் அவன்மேல் தலைவி நெஞ்சமிரங்கி யிருப்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சங்கிலியார்பால் உணரப்படும்.

## கதை.

சங்கிலியார் என்பவர் தொண்டைமண்டலத்திலே மதி மங்கலம் என்னும் ஊரிலிருந்த வேளாண் குலதிலகராகிய ஞாயிறு

கிழாருடைய அருமைப் புதல்வியார். தெய்வ அருளால் பிறந்தவர். செய்தவமுடையவர். பருவமடைந்து எழில்நலங் கனிந்து விழுமிய நிலையில் விளங்கி யிருந்தும் காதல் நோக்கின்றிக் கன்னிமையோடு இவர் மன்னியிருந்தார். இவரது உருவ நிலைக்கும் அறிவமைதிக்கும் தகுதியானவரன் அமைவதரிதே என்று இருமுது குரவரும் மறுகி யுளைந்தார். "வடிவும் குணமும் நமமுடைய மகட்கு மண்ணுளோர்க்கிசையும், படிவமன்றி மேற்பட்ட பரிசாம் பான்மை அறிகிலோம்; கடிசேர் மணமும் இனி நிகழும் காலம்" என்ன அவர் சாலவும் வருந்தினர். அவநெறி யாதும் சேராது எப்போதும் சிவனையே பேணி நின்ற இவர் திருவொற்றியூரில் வசிக்க விரும்பினர். அவ்வாறே அங்கோர் கன்னிமாடம் புனைந்து பெற்றோர் இவரை அவண் பேணி வைத்தார். சேடியர்களுடன் அமர்ந்து இறைவனை வழிபட்டு அங்கு இவர் இனிதமர்ந்திருந்தார். இங்ஙனம் இருந்து வருங்கால் சுந்தரமூர்த்திநாயனார் பலதலங்களையும் தரிசித்துவிட்டு, முடிவில் திருவொற்றியூரை அடைந்து, பரமனைத் தொழுது மன்முருகிப் பாடித் தனியே எழுந்து அருகேயிருந்த மலர் மண்டபத்திற்கு வந்தார். அவ்வமயம் மலர் மாலைகளின் நிலைகளை நோக்க இயல்பாகச் சிறிது முன்பு இவர் அங்குவந்திருந்தார் ஆதலால் இவரை அவர் எதிர்ந்து கண்டார்.

"அன்பு நாரா அஞ்செழுத்து நெஞ்சுதொடுக்க, அலர்தொடுத்தே
என்புள்ளுருக்கும் அடியாரைத் தொழுது நீங்கி வேறிடத்து
முன்புபோலத் திரைநீக்கி முதல்வர் சாத்துப் பணிகொடுத்து,
மின்போல் மறையும் சங்கிலியார் தம்மை விதியாற் கண்ணுற்றார்"

இங்ஙனம் கண்டவுடனே அவர் கடுங்காதல் கொண்டார். உள்ளம் பறிகொடுத்து வெளியே வந்தார். அயல் நின்றவரை அழைத்து இவரது இயல்பினை வினவினர்.

"கோவாமுத்தும், கரும்புஎருக் கொழுமென் முகையும், அனையாரைச்
சேவார் கொடியார் திருத்தொண்டர் கண்டபோது சிந்தை நிறை
காவாது, அவர்பால் போய்வீழத், தம்பால் காமனுர் துரந்த
பூவாளிகள்வந் துற வீழத் தரியார் புறமே போந்துரைப்பார்;

இன்ன பரிசென் றறிவரிதால் ஈங்கோர் மருங்கு திரைக்குள்ளால்
பொன்னுமணியு மலர்ந்த ஒளி அமுதில் அளாவிப் புதியமதி
தன்னுள் நீர்மை யாற்குழைத்துச் சமைத்த மின்னுக் கொடிபோல்வாள்
என்னையுள்ளந் திரிவித்தாள் யார்கொல்? என்று அங்கியம்புதலும். (2)

அருகுநின்றார் விளம்புவார் அவர்தாம் நங்கை சங்கிலியார்;
பெருகுந்தவத்தால் ஈசர் பணி பேணும் கன்னியார்; என்ன,
இருவரால் இப் பிறவியை எம்பெருமான் அருளால் எய்துவித்தார்
மருவும் பரவை ஒருத்தி; இவள், மற்றையவளாம்; என மருண்டார்." (௩)
(பெரியபுராணம்.)

இவ்வகை மறுகி நின்ற அவர் இரவு வரவே பெரிதும் கவன்றார். கண்ணுறக்கமின்றி இப் பெண்ணுருவையே எண்ணிப் பேதுற்றார். காம வேதனையால் இன்னணம் கடுந்துயருழந்தார். சாமியை நினைந்தார். தாம் விரும்பிய மங்கையைத் தரும்படி வேண்டினார். அவர் வேண்டியபடியை அடியில் பார்க்க.

"மங்கை ஒருபால் மகிழ்ந்ததுவுமன்றி, மணி நீள் முடியின்கண் கங்கைதன்னைக் கரந்தருளும் காதலுடையீர்! அடியேனுக்கு இங்கு நமக்குத் திருமாலை தொடுத்து, என் உள்ளத் தொடை அவிழ்த்த, திங்கள் வதனச் சங்கிலியைத் தந்து, என் வருத்தம் தீரும்;" என ஆர்வமுடன் பாடி அகங்குழைந்து நின்றார். அவர் கருதித் துதித்திருக்கும் இக் கவியின் நயத்தைக் கருதிக் காண்க. அவரது நிலையினையறிந்து திருவுளமிரங்கி "சுந்தரா! சிந்தை கவலல்; தந்தருளுதும்;" என அசரீரியாய் நின்று அருள் புரிந்து அமலர் அகன்று, நடுநிசியில் இவர் கனவிடைவந்து, அவர் நிலைவினை உரைத்து மன மிசையச் செய்தார். இவர் விழித்து வியந்தார். முதலில் கண்டபொழுதே அவர்மேல் காதல் கொண்டிருந்தாராதலால் இவ் ஆதரவமைந்தவுடன் இவர் ஆதரமிகுந்தார்; அவ் அழகரை இடையுறாது எய்தியிருக்க விழைந்து ஓர் செய்தியைத் துணிந்தார்: தம்மை என்றும் பிரிவதில்லை என்று பரமன் சந்நிதியில் ஓர் உறுதியைச் செய்து தரும்படி உரைத்து வேண்டினார். அவரும் இசைந்தார்; அவ்வாறே சத்தியம் செய்து தந்தார். திருவருள் கூட்ட இருவரும் மணந்தார்.

இவரது இன்ப நலங்களை இனிது மாந்தி ஆர்வமிகுந்து அவர் அகமிக மகிழ்ந்தார்.

"பண்டுநிகழ் பான்மையினால் பசுபதிதன் அருளாலே
வண்டமர்பூங் குழலாரை மணம்புணர்ந்த வன்றொண்டர்
புண்டரிகத்தவள் வனப்பைப் புறங்கண்ட தூநலத்தைக்
கண்டுகேட்டு உண்டுயிர்த்துற்று அமர்ந்திருந்தார் காதலினால்.

யாழின்மொழி எழில்முறுவல் இருகுழைமேல் கடைபிறழும்
மாழைவிழி வனமுலையார் மணியல்குற் றுறைபடிந்து,
வீழுமவர்க்கு இடைதோன்றி மிகும்புலவி புணர்ச்சிக்கண்
ஊழியாம் ஒரு கணந்தான்; அவ்வூழி, ஒரு கணமாம்."

கலவி நிலையில் இவ் வகை அலகிலின்பங்களை நுகர்ந்து அமர்ந் திருந்த அவர் இவரது குணநலங்களைப் புகழ்ந்து கொண்டாடி நின்றார். தோளும் குழலும் நீவி நாளும் மகிழ்ந்து உயிரும் உடலும்போல ஒருமை யெய்தியிருந்தார். ஒருநாள் திருவா ரூரை நினைந்தார், பிரிவுற விழைந்தார். இவர் அறியாவகை எழுந்தார். முன் சொல்லிய வாக்குமாறித் தென்திசை நோக்கி நடந்தார். சிறிது தூரம் சென்றவுடன் அவர் கண்கள் மறைந்தன. கலங்கி நின்றார். பொய்யால் விளைந்த பயன் ஐயோ! இதுவா? என்று அகந்தியங்கினார். திருமுல்லைவாயில் என்னும் திருத் தலத்தை மெல்ல அடைந்தார். உள்ளமுருகினார்; செய்த பிழை யைப் பொறுத்தருளும்படி தேவனை வேண்டினார்.

"விண்பணிந்து ஏத்தும் வேதியர் மாதர் வெருவிடவேழம் ஒன்றுரித்தாய்!
செண்பகச்சோலை சூழ்திருமுல்லை வாயிலாய்! தேவர்தம் அரசே!
தண்பொழில் ஒற்றி மாநகருடையாய்! சங்கிலிக்காக என் கண்கொண்ட
பண்ப! நின் அடியேன்படுதுயர்களையாய்? பாசுபதா!பரஞ்சுடரே" (தேவாரம்)

இப்படிப் பலபடியாகப் புலம்பி நின்று ஒருகண்பெற்று அவர் அகன்று போனார். அவரது பிரிவினை அறிந்து இவர் பெரிதும் வருந்தினார். உடனுறைந்தபோது உரையாடிச் செய்த உரிமை நிலைகளையெல்லாம் நினைந்து நினைந்து நெடிது கவன்றார். சிவதிலகை என்னும் தோழி நெருங்கி ஆறுதல் கூறினாள்;

"என்றும் பிரியேன்; யாதும் அஞ்சல்;" என என்னைத் தெளிவித்து இதமபுரிந்திருந்தவர் இன்று உளந்திரிந்து பிரிந்தாரே! பொய்யர் என அவரை உலகம பழிக்குமே! அவ் அழகருக்கு இஃது அழகா? இப் பழியினுக்கு என்செய்வேன்? என்று அவர்க்கு நேர்ந்த பிழையினுக்கிரங்கி இவர் பெரிதும் வருந்தினர். "அளித்து அஞ்சல் என்றவர் நீப்பின் தெளித்த சொல் தேறியார்க்குத் தவறு இல்லை" எனத் தலைமகள் தயங்கி நிற்பள் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

மொழிமாறி நீங்கின் முதல்வற்கே அந்தப்
பழியாம் உணர்க பரிந்து.

தலைமகன் பிரிவில் குலமகள் கொண்டுள்ள பரிவு இதனுல் கூறப்பட்டது.

1155. காமர் சுலோசனையேன் காதலன்று னீங்கவுடன்
கோமறுக மாய்ந்தாள் குமரேசா—ஏமுற
ஓம்பி னமைந்தார் பிரிவோம்பல் மற்றவர்
நீங்கின் அரிதாற் புணர்வு. (ரு)

இ.—ள்.

குமரேசா! தன் காதலன் நீங்கியவுடன் அப் பிரிவாற்ருது சுலோசனை ஏன் உயிர் நீத்தாள்? எனின், ஓம்பின் அமைந்தார் பிரிவு ஓம்பல்; மற்று அவர் நீங்கின் புணர்வு அரிது என்க.

இது, தலைவி தோழியிடம் தன் நிலைமை கூறுகின்றது.

ஓம்பின் = என் உயிரைப் பாதுகாக்க விரும்பின்.

அமைந்தார் என்றது தலைவனை. தனக்கு இனிய துணைவனுயமைந்த அவ் அமைவினை வியந்து அமைந்தார் என்ருள். பெறலரும் பேருக அவனை இவள் கருதியுள்ளமை இதனுல் அறியலாகும். பிரிவு ஓம்பல் = பிரியாதிருக்கும்படி பாதுகாத்துக்கொள்க. அல் ஈற்று வியங்கோள் உடன்பாட்டில் வந்தது.

மற்று என்பது ஓம்பாது ஒழியின் என்பதை உணரநின்றது. ஓம்பலுக்கு மறுதலையாய வினையினைக் குறித்து வந்தமையால்

இது வினைமாற்றின்கண் வந்ததென்க. அவர் என்று சுட்டியது தனக்கு உயிராதாரமாயுள்ள அவ் உரிமையை ஒட்டியுணர.

புணர்வு = கூடுதல். அரிது = முடியாது. நீங்கின் அரிது என்றாள் நீங்கா வண்ணம் அவரை நிறுத்தித் தன்னைப் பாங்கி பாதுகாக்கவேண்டி. என் உயிர்நிலை அவர் கையிலுள்ளது ஆதலால் யான் உய்யும் வகையை விரைந்து செய்துகொள்க என்பதாம்.

மேல், தெளிவித்தவர் பிரிவராயின் பிழை அவர்க்கு என்றாள்; இதில், அதனால் படுபழியும் விளையும் என்கின்றாள்.

என் உயிரைக் காக்க விரும்பின் எனது நாயகர் அயல் பிரியாவகை செய்க; அவர் பிரியின் பின்பு நான் அவரை அடைதல் அரிது என்பதாம்.

அயலேபோய் ஓர் அரிய காரிய முடித்து நம் தலைவர் விரைந்துவந்து விடுவர், அதுவரையும் நீங்கள் பொறுத்திருக்கவேண்டும் எனத் தோழி உரைத்து வேண்டியபொழுது தலைவி மறுத்து மொழிந்தபடி யிது.

என் உயிர்போகாமலிருக்கவேண்டுமாயின் அவரைவெளியே போகாமல் காத்துக்கொள்க என்பாள் "ஓம்பின், அமைந்தார் பிரிவு ஓம்பல்" என்றாள்.

அவர் பிரிந்துபோவராயின் உடனே யான் இறந்துபோவன்; அதன்பின் இப்பிறப்பில் அவரை யான் கூடமுடியாது என்பாள் "அவர் நீங்கின் புணர்வு அரிது" என்றாள்.

"பிரிந்தால் அரிது உயிர் வாழ்க்கை; புடைபெயரா முயக்கம்
புரிந்தாலும் அன்றில் எனக் கிளவாய்! புதுநித் திலங்கள்
வரிந்தாலனைய முறுவற் செவ்வாய் மதர்வாள் விழியாய்!
தெரிந்தார் தமையும் தெருட்டுதல் சான்ற தெளிவினர்க்கே.

மதுவார் குவளைக்கு நீரன்றி இல்லை; மன் ஆருயிர்க்கு
விதுவார்சடைப் பெருமானன்றி இல்லை; வினையுடற்குக்
கதுவார் உயிரன்றி இல்லைநலம்; நின் கருணையன்றி
எதுவாமடக் கொடிக்கு? என்றுரை வேலவர்க்கு ஏந்திழையே"

விது = சந்திரன். (தணிகைப்புராணம்.)

இவை வள்ளித்தாய் உரைத்தன. ஆருயிர்க் காதலனு டனமைந்து நின்ற அருமுருகப் பரமனை அயல் பிரியாவகை செய்தா லன்றித் தன் உயிர் தரியாதெனப் பாங்கியிடம் அவ் அம்மை பகர்ந்திருக்கும் அழகைப் பார்க்க. தலைவனையன்றித் தனக் கோர் நிலையிலை என்பதற்கு இதில் எடுத்துக் காட்டியிருக்கும் உவமை நிலைகளை ஊன்றி உணர்ந்துகொள்க.

இவ்வாறுணர்த்திவிடுத்தபின் தலைவிநிலையைத் தலைவனிடம் உரைத்துத் தோழி அவனைத் தடுத்து நிறுத்துவள். இந்நிலை கோவைத் துறையில் ஆற்றாமை கூறல் எனவரும்.

"வானக் கடிமதிற் றில்லைஎங் கூத்தனை ஏத்தலர் போல்
கானக் கடஞ்செல்வர் காதலர் என்னக், கதிர் முலைகள்
மானக் கனகந்தரும்; மலர்க் கண்கள் முத்தம் வளர்க்கும்;
தேனக்க தார் மன்னன் என்னோ இனிச்சென்று தேர்பொருளே?"
(திருக்கோவையார்)

"விரைதங்கு நீண்முடி வேந்தன் விசாரிதன் வெம்முனைபோல்
வரைதங்கு கான்நமர் செல்லுப என்றலும், வாணுதலாள்
நிரைதங்கு சங்கு கழலக், கண் நித்திலம் சிந்த, நில்லா
அரைதங்கு மேகலை மெல்லடிமேல் வீழ்ந்து அரற்றினவே"

"அரும்பொருள் செய்வினை தப்பற்கு உரித்தே;
பெருந்தோளரிவை தகைத்தற்கும் உரியள்;
செலலா யாயினோ நன்றே!
மெல்லம் புலம்ப இவள் அழப் பிரிந்தே" (ஐங்குறுநூறு302)

தலைமகளது ஆற்றாமையை அறிவித்துத் தலைமகனைத்தோழி இவற்றுள் தடுத்திருத்தல் காண்க. ஊனும் உயிரும்போல யானும் அவரும் ஒரு நிலையம் ஆதலால் அவரைப் பிரிந்திருத்த லரிது எனத் தலைவி இங்ஙனம் வருந்தி நின்றாள் என்க.

காதலி இருப்பும் இறப்பும் காதலன் பொறுப்பிலுள்ளன என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை சுலோசனை பால் உணரப்படும்.

## கதை.

சுலோசனை என்பவள் நாகர்குல மன்னனான ஆதிசேட னுடைய அருமைத் திருமகள். அரும்பெற லழகினள். பெருந்

தன்மை நிறைந்தவள். இயல் இசை முதலிய பல கலைகளிலும் தலைமையான புலமையுடையவள். இவளது எழில் நிலையையும் குணநலங்களையும் கண்டு நாக கன்னியரும், தேவ மங்கையரும், ஆவலுற்று நின்றனர். பருவமெய்தியவுடன் விழுமிய மணி மாடத்தில் தோழிகள் புடைசூழ இவ் இளவரசி இனிதமர்ந்திருந்தாள். இங்ஙனம் இருக்குங்கால் இந்திரசித்து எங்கும சென்று திக்கு விஜயம் செய்து அந்தரம் நீங்கி முடிவில் பாதலமடைந்தான். அம் மகா வீரனை ஆதிசேஷன் எதிர்கொண்டழைத்துத் தனது அரிய மாளிகையில் வைத்து ஓர் பெரிய விருந்துசெய்தான். மறுநாள் தெய்வகதியாக எதிர்ந்து இக் குலமகளை அத் தலைமகன் கண்டான். உடனே கடுங்காதல் கொண்டு கருத்துளைந்து நின்றான். திசையடங்க வென்ற அவன் இவள்பால் எழுந்த நசையடங்காமல் நைந்தலமந்தான். இவளும் அவன்மேல் உழுவலன்புடையளாய் உளமுருகி நின்றாள். இங்ஙனம் பருகு காதலினராய் இருவரு மறுகி நின்றதை மன்னன் அறிந்தான். தனது அருமை மகளுக்கு உரிய துணைவன் என உளமிக மகிழ்ந்து இவளை அவனுக்குத் திருமணஞ்செய்து கொடுத்துச் சிறந்த வரிசைகள் பல வழங்கி விடுத்தான். இவளை மகிழ்ந்துகொண்டு அவன் இலங்கையடைந்தான். இராவணனும், மண்டோதரியும் இவளைக் கண்டவுடனே உவகைமீக் கொண்டு உளம்பூரித்தார், தமக்கு வாய்த்துள்ள அருமை மருமகளது உருவ நலனையும், அறிவாண்மையையும் அறிந்து “இது, பெறலரும் பேறு” எனப் பெருமகிழ்வடைந்தார். இப் பேரழகியோடமர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து அவ் வீரமகன் நாளும் நாளும் ஆர்வமீதூர்ந்தான், இணைபிரியாது உடலுயிர்போல இருவரு மருவி இன்பந்திளைத்து அன்பு பாராட்டிப் பொருவறு மகிழ்ச்சியிற் பொங்கியிருந்தார்.

> “தேனவாம் கமழ் கண்ணியும், தெவ்வர்தம்
> ஊனவாம் கதிர்வேலுறு காளையும்,
> கானவாம் கடி நாறுமென் பள்ளிமேல்
> வானவாம் வகையால் வைகினார்களே ”

என்றபடி வைகலும் முயங்கித் தெய்வ போகமும் ஐந்தெனும் வகை செறிந்து மகிழ்ந்து சிறந்து வீற்றிருந்தார். இங்ஙனம் இன்பமாந்தி இருந்து வருங்கால் இராமன் படையோடு வந்து இலங்கையை வளைந்தான். அவ் வில் வீரனோடு பொருது, பல் படையும் இழந்து, அல்லல்மிக அடைந்து முடிவில்வந்து அவனைப் போர்க்குச் செல்லும்படி இராவணன் சொல்லி வேண்டினான். போர் என்றவுடனே வீரவெறியோடு அந்திரன் சொல்லிய படியை அடியில் பார்க்க.

"சொல்லாத முன்னம் சுடரைச் சுடர் தூண்டுகண்ணான்;
பல்லால் அதரத்தை அதுக்கி, விண்மீது பார்த்தான்;
எல்லாரும் இறந்தனரோ? என ஏங்கி நைந்தான்;
வில்லாளரை எண்ணில் விரற்குமுன் நிற்கும் வீரன்; (க

மாற்றூ உயிர் எம்பியை மாற்றிய மானுடன்றன்
ஊற்றூர் குருதிப் புனல் பார்மகள் உண்டிலாளேல்,
ஏற்றான் இகல் இந்திரன் ஈரிருகால் எனக்கே
தோற்றான் தனக்கு என் நெடுஞ் சேவகம் தோற்க என்றான். (உ)

வெங்கண் நெடு வானரத் தானையை வீற்று வீற்றாய்ப்
பங்கம் முறநூறி இலக்குவனைப் படேனேல்
அங்கந்தர அஞ்சி என் ஆணை கடக்கிலாத
செங்கண் நெடுமால் முதல் தேவர் சிரிக்க என்னை." (இராமாயணம்

இதனால் அவனது போராற்றலும் பெருமித நிலையும் இனி தறியலாகும். இங்ஙனம் சூளுரை பல கூறி அவன் துடித்து நின்றான். பின்பு அடுத்துவந்து தன் ஆருயிர்த் தேவியைத் தேற்றி அடுபடையுடன் போர்முகம் புகுந்தான். இடை பிரியா திருந்த இவள் அவன் பிரிந்துபோனபின் பெரிதும் கவன்றாள். துணைபிரிந்த அன்றில்போல் துடித்தயர்ந்தாள். உள்ளங் கலங்கி உடல் மெலிந்து, பசலைபூத்து, நெடுமூச்செறிந்து, தனது அழகிய கைத்தலத்தில் தலையைச் சாய்த்து நிலைகுலைந்திருந்தாள். இறுதி யில் அங்கு அவன் இறந்தான். அதனை யறிந்தபோது இவள் அடைந்த துயரினை யார் அளவிட வல்லார்? தீயிடை வீழ்ந்த செழு மென் கொடிபோல் தேம்பிப் பதைத்து அழுதிழிகண்ணளாய் அவலித்தெழுந்தாள். நாயகன் திருமுகத்தை இனி ஒரு முறை

யேனும் பார்த்துவிட வேண்டுமென்னும் ஆர்த்தியினால் போர்க் களம் நோக்கி இவள் பொங்கிச் சென்றாள். இவள் வருவதை வீடணன், அநுமன் முதலிய அறிஞர் சிலர் நெடுந்தூரத்தே கண்டு "ஆ! சீதா தேவி அன்றோ?" வருவதெனத் திகைத்தெழுந்தார். இதனால் இவளது வனப்பு நிலை உணரலாகும். அருகு வந்து இராமனது திருவடியில் விழுந்து அழுதெழுந்து தழுதழுத்த குரலால் "கருணைக் கடலே! என் அருமைக் கணவன் தலையை அடியாள் சிறிது காண அருள் புரிக" என உருகி நின்றாள். இவளது பரிபவ நிலையைக் கண்டு அப் பெருமான் உள்ளங் கரைந்து உடனே தலையை இவள் முன் தரும்படி பணித்தான். மாருதி விரைந்து கொணர்ந்து வணங்கி வைத்தான்.

"விண்டலத்திலங்கு திங்கள் இரண்டொடு மின்னு வீசும்
குண்டலத் துணைகளோடும், கொந்தளக் குஞ்சிச் செங்கேழ்ச்
சண்டவெங் கதிரோன் செக்கர்த் தழலொடு மருவித், தாம
மண்டலம் விழுந்ததென்ன விழுந்தது தலையு மண்மேல்"

என்றபடி நிலைசெய்து நின்ற அத் தலையை இத் தலைமகள் கண்டு தழுவி மயங்கி உடனுயிர் துறந்தாள். இவளது கற்புத் தன்மையையும், அற்புத நிலையையும் வியந்து இராமபிரான் முதலாக அங்கு நின்றவரனைவரும் புகழ்ந்து போற்றினர். அந்தப்புரத்தில் பிரிவாற்றாமல் இவள் வருந்துங்கால் ஊனுமதி, சதலேகை இந்திராவதி, மதனவல்லி முதலிய தோழியர் பலர் தொழுது வணங்கிப் பொறுத்திருக்கும்படி போற்றி வேண்டினர். "அமைந்த காதலர் அகன்ற பின்னர் ஆவி போதலன்றி இனி ஆறியிருத்தல் எங்ஙனம்?" என மாறு கூறி இவள் மறுகி நொந்தாள். அமைந்தார் பிரிவு ஓப்பாவழி தலைவி உயிர் ஓம்பல் அரிது என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

காதன் பிரிவினேன் நல்லுயிரும் அன்னவன்பின்
போத லுறுமே புலந்து.

பிரிந்த தலைவி இருந்து வாழலரிதென்பது இதனால் கூறப்பட்டது.

1156. நாதன் பிரிவுரைத்தான் நல்காரென் றேனளியினை
கோதிலுயிர் நீத்தாள் குமரேசா—ஏதும்
பிரிவுரைக்கும் வன்கண்ண ராயின் அரிதவர்
நல்குவ ரென்னு நசை. (சு)

குமரேசா! கணவன் பிரிவுரையாடிய பொழுது களியினை ஏன் அருளுதல் அரிது என மறுகிநின்றாள்? எனின், பிரிவு உரைக்கும் வன்கண்ணர் ஆயின் அவர் நல்குவர் என்னும் நசை அரிது என்க. இது, பிரிவுணர்ந்த தலைவி மறுகி மொழிந்தது.

கற்புத் தாங்கியிருந்த அற்புத உயிராதலால் "கோது இல்" என நின்றது. நீத்தாள் என்றது கணவன் பிரிந்தவுடன் அவள் உயிர் துறந்தமை கருதி. ஏதும் = சிறிதேனும்.

வன்கண்ணர் என்றது தலைவனை. வன்கண்மை = கொடுமை. அஃதாவது நெஞ்சிரக்கமின்மை. இனிய துணைவனை வன்கண்ணர் என்றது தனக்கு உயிர் வாதனையான பிரிவினை ஒரு சிறிதும் இரங்காமல் உரைத்தமையான் என்க. இது, ஆர்வ மிகுதியால் எழுந்த அவலவுரையாம்.

"பொழியும் அருளுடையார்; வெங்கைவாணர், பொருப்பருவி
விழியும், மெலிவும், பசப்பூர் முலையும், அவ் வில் மதனால்
அழியு மனமும், நினைந்திலராயினும், ஆ! ஒரு பெண்
பழியும் நினைந்திலரே! பொருள்மேல் சென்ற பாதகரே."
(திருவெங்கைக்கோவை)

தன்னைத் தனியே விட்டுப்போன தலைமகனை நினைந்து ஓர் தலைமகள் இதில் முனிந்து மொழிந்திருக்கு நிலையைப் பார்க்க. மனங் கொதித்துப் புலந்து உரைத்தலால் இங்ஙனம் வருவதனைக் கோவைத் துறையில் நெஞ்சோடு புலத்தல் என்பர்.

"ஒருநாட் பிரிகிலம் என்றார்; இப்போது ஒருநாட் பிரிந்தால்
வருநாட்பின் உண்டெண்கையாவர் கண்டார்? மலர் மாளிகைச்செந்
திருமார்பணிந்த உறந்தைக் குலோத்துங்க சென்னிவெற்பின்
அருநாண்மதிக்கு உன் உயிர் பிழைத்தால் பின் அறி நெஞ்சமே!"
(குலோத்துங்கன்கோவை)

ஓர் தலைவி இதில் பிரிவஞ்சி உரைத்திருக்கும் அழகு காண்க.

மேல், தலைவன் அகலாதிருந்தாலன்றித் தனக்குப் புகல் இல்லை என்றாள்; இதில், அவன் அகல்வனாயின் யாவும் அகலும் என்கின்றாள்.

தம் பிரிவினைத் துணிந்து சொல்லும் தறுகண்மையுடைய ராயின் அவர் விரைந்து வந்து அருள் புரிவர் என்னும் ஆசை வீண் என்பதாம்.

வினைமேற்கொண்டு அயலே பிரிந்து போகத் துணிந்து நின்ற தலைமகன் தன் கருத்தைத் தோழியிடம் கூற, அவள் வந்து தலைவியிடம் அதனை உரைத்து "அவர் விரைந்துவந்தருளுவார்; இரங்கி அருளுக;" என மொழிந்தபோது இவள் இங்ஙனம் முனிந்து மொழிந்தாள் என்க.

என்னைப் பிரிவதில்லை என்று முன்பு உறுதி கூறித் தலையளி செய்து நின்றவர் இப்பொழுது அவ் வுரைமாறி வன்கண்மையோடு பிரிவுக்கு நிற்பராயின் இனி அவர் குறித்தபடி குறித்த காலத்தில் வந்து அருள் செய்வார் என நம்பி நசையுற்றிருத்தல் கூடாதென்பாள் "நல்குவர் என்னும் நசை அரிது" என்றாள். அரிது என்றது அவ் ஆசையால் பயனில்லை என்பது கருதி. ஒருவன் ஒருமுறை பொய்யனாயின் பின்பு அவன் சொல்வன எவற்றையும் நம்பாராதலால் முன்பு பிரியேன் என்றவர் இன்று பிரிய நேர்ந்ததால் தவறாமல் வருவர் என்பதையும் இவள் நம்பவில்லை.

நேர்முகமாக இவ்வாறு கூடியிருக்கும்போதே என்பால் கண்ணோட்டமின்றிப் பிரிவராயின் அயலே அகன்றுபோனபின்பு அன்பால் வந்து என்னை இனிது ஆதரிப்பரென்பதை எங்ஙனம் நம்புவது எனக் கண்ணீர் சிந்தி இங்ஙனம் கலங்கி நின்றாள்.

"தேம்படு சிலம்பில் தெள்ளறல் தழீஇய
துறுகல் அயல தூமணல் அடைகரை
அலங்குசினை பொதுளிய நறுவடி மாஅத்துப்
பொதும்புதோ றல்கும் பூங்கண் இருங்குயில்

கவறு பெயர்த்தன்ன நில்லா வாழ்க்கையிட்டு
அகறல் ஓம்புமின் அறிவுடையீர்! எனக்
கையறத் துறப்போர்க் கழறுவ போல
மெய்யுற இருந்து மேவர நுவல
இன்னாதாகிய காலைப் பொருள்வயிற்
பிரிதல் ஆடவர்க்கு இயல்பு எனின்
அரிது மன்றம்ம! அறத்தினும் பொருளே." (நற்றிணை 243).

இது, பிரிவிடை மெலிந்த ஓர் தலைமகள் மொழிந்தது: என்னைப் பாதுகாக்கும் அறத்தினைக் கைவிட்டுப் பொருள் கருதிப் பிரிய நின்றாரே அது, அறத்தினும் அரியது போலும்? தன் பெடையைத் தழுவிப் பொழிலிடை யிருக்கும் குயில் கூவுவதானது "அறிவுடையீர்! நீங்கள் உங்கள் காதலிகளைப் பிரியாதீர்கள்! பறவைகளாயிருந்தும் இணைபிரியாமல் இங்ஙனம் மருவி வாழ்கின்றேமே; அறிவுடைய நீவிர் ஒருமையுடன் வாழாமல் ஒருவி யெழுவது அழகன்று; அறமுமாகாது" என உரை செய்வதுபோ லிருந்தும் உணர்வு வரவில்லையே! என்று உளைந்து வருந்தி அவள் உரைத்திருக்கும் அழகை இதில் ஊன்றிப்பார்க்க. பிரிவு நிலையை எவ்வாற்றானும் காதலிகள் பொறார் என்பது கருத்து.

விரைந்து வருவல் என நயந்து கூறினும் தலைவி பிரிந்திருக்கலாற்றாள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நளினியால் உணரப்படும்.

### கதை.

நளினி என்பவள் காவிரிப்பூம் பட்டினத்திலிருந்த விசயதத்தன் என்னும் வணிகனுடைய அருமைத் திருமனைவி. இவள் நல்ல பதிவிரதை. கண்கண்ட தெய்வமெனத் தன் கணவனை இவள் கருதிப் பேணி வந்தாள். இங்ஙனம் வருங்கால் அவன் பொருளீட்டம் கருதி மறுபுலம் செல்லத் துணிந்தான். அத்துணிவினை அறிந்து இவள் துணுக்குற்று நின்றாள். இவளது நிலையினை நினைந்து அவன் நெஞ்சமிரங்கினான்; அருளுடன் தழுவி ஆற்றி நின்று உறுதி நலங்கள் பல அருளுவனெனப் பொருளின் பெருமையைப் புலன்கொள மொழிந்தான்.

"அறன்கடைப் படாஅ வாழ்க்கையும், என்றும்
பிறன்கடைச் செலாஅச் செல்வமும், இரண்டும்
பொருளின் ஆகும்; புனையிழை!" எனத் தன் கரும நிலையை இவள் கருதி யுணரும்படி அவன் உரிமையோ டுரைத்தான். அஃது உண்மையென உணர்ந்தாளாயினும் பிரிவினை அஞ்சி மறுகி யுளைந்தாள். முடிவில் தன்னையும் உடன் கொண்டு செல்லும்படி தாழ்ந்து வேண்டினாள். "கப்பலேறிப் பெருங் கடல் கடந்து நெடுந்தூரம் செல்லவேண்டுமே! எப்படி உன்னையும் உடன் கொண்டு போவேன்? அஃதன்றியும் "முந்நீர் வழக்கம் மகடூ உவோடு இல்லை" என நூலோரும் விதித்துள்ளாரே; ஏலாத ஒன்றை எவ்வாறு செய்வது?" என அவன் இனைந்து நின்றான். தொழிலொழிந்து இங்கு இருந்தயர்தல் நன்றன்று; யான் பிரிந்து போய் விரைந்து வந்துவிடுவல்; வருந்தல் நீ என்று இறுதியாக அவன் உறுதியோடு உரைத்தான். இனி உரையாடுவதால் பயனில்லை யென் இவள் உளந்துணிந்தாள். கடற்கரை வரையுமாவது உடன் வருகின்றேன் என்று இவள் கலுழ்ந்து மொழிந்தாள். அவன் சரியென் றிசைந்தான். யாத்திரைக்குரிய ஆயத்தங்களோடு இருவரும் எழுந்தார்; துறைமுகத்தை யடைந்தார். கடலருகே நின்ற கலத்தில் அவன் கால்வைத் தேறினான்; இவள் உலைவாய் மெழுகுபோலுருகி அலைவாய்க் கரையில் நின்றாள். அந் நாவாய் விரைந்து சென்றது. உடனே இவள் ஆவா என்று அலறி அயர்ந்தாள். பின்பு தன் நல்லுரு வொழிந்து கல்லுருவாக நினைந்தாள். அவ்வாறே ஆகி நின்றாள். சென்ற அவன் பெரும்பொருள் திரட்டி ஆண்டு மூன்று கழிந்து மீண்டுவந்தான். கப்பலிலிருந்து கரையிலிறங்கி இயல்பாக நடந்து வழியிடை நின்ற அவ் வுருவின் அருகே வந்தான்; வரவே அக் கல்லுருவ நீங்கி இவள் தன் னுருவோடு நின்றாள். அவன் வியந்து தழுவி விம்மிதமெய்தினான். நிகழ்ந்ததை யுணர்ந்து புகழ்ந்து மகிழ்ந்தான். பிரிவாற்றாமல் உருமாற்றியிருந்த இவளது அற்புத நிலையை வியந்து அனைவரும் துதித்தார்.

"மணல்மலி பூங்கானல் வருகலன்கள் நோக்கிக்
கணவன் வரக் கல்லுருவம் நீத்தாள்" (சிலப்பதிகாரம்)

எனக் கற்புத் தெய்வமாகிய கண்ணகியும் இப் பத்தினியின் தன்மையைப் பாண்டியன் தேவி முன் பரிந்து பாராட்டி நின்ருள். இதனல் இவளது அருமையும் பெருமையும் பிரிவாற்ருதிருந்த உரிமையும் இனிதறியலாகும். எவ்வளவு நயமாக உரைப்பினும் தலைமகன் பிரிவைக் குலமகள் பொருள் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

பிரியமனங் கொண்டுநின்றேன் பேதையேன் என்னைப்
பிரியமனங் கொள்ளேல் பிறழ்ந்து.

காதலன் பிரியின் காதலி தரியாள் என்பது இதனல் கூறப்பட்டது.

1157. மேனிமெலிந் தாதிரையேன் மெல்வளைகை வீழநின்ருள்
கோனிகந்த போது குமரேசா—தானே
துறைவன் துறந்தமை தூற்ருகொல் முன்கை
யிறையிறவா நின்ற வளை. (எ)

இ—ள்.

குமரேசா! தன் கணவன்பிரிந்தபோது ஆதிரை ஏன் உடல்மிகமெலிந்து வளைகழல நின்ருள்? எனின், முன்கை இறை இறவாநின்றவளை, துறைவன் துறந்தமை தூற்ருகொல் என்க.

இது, பிரிந்த தலைவி மெலிந்தயர்வள் என்கின்றது.

துறைவன் என்றது தலைவனை. துறை = நீர்த்துறை. கடல் நதி, குளமுதலிய நீர்நிலைகளில் மனிதர் இனிது இறங்கி அனுபவமா அமரும் இடம் என்க. அத்தகைய துறைகள் பலவுடையனுத லால் துறைவன் என்ருள். எல்லாவளங்களுக்கும் ஏதுவாயுள்ள நீர்வளத்தால் இங்ஙனம் அவன் பேர்குறித்தது அவனது நிறை திருவுடைமையின் நிலைமை கருதி.

புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என்னும் காமப் பகுதிகள் ஐந்தனுள் இரங்கல் என்பது நெய்தநிலத்திற்கு உரியதாதலால் இங்கு இரங்கி வருந்துந்தலைவி தனது துணைவனைத் துறைவன் என அத் தொடர்பு தோன்ற மொழிந்தாள்.

முன்கை = முழங்கைக்கு முன்பக்க முள்ள கை. இறை என்றது அக் கையின் சந்துவாயை. உள்ளங்கைக்கும் முன் கைக்கும் இடையே வளைந்து நிமிரும் இயல்பினதாய் அமைந்திருக்கும் பொருத்து என்க. இது, மணிக்கட்டு எனப்படும். "துறைவன் சொல்லிய சொல் என் இறை ஏர் எல்வளைகொண்டு நின்றதுவே" (ஐங்குறுநூறு 165) இதில் இறை உணர்த்தி நிற்கும் பொருளை அறிக. வளை = வளையல்கள். தூற்று கொல்? என்றது தூற்றும் என்றபடி. தூற்றுதல்=பலரும்காண அறிவித்தல்.

மேல், வன்கண்ணரே பிரிவுரைப்பர் என்றாள்; இதில் அதனால் வரும் புன்கண்ணை உணர்த்துகின்றாள்.

தலைவன் என்னை நீங்கினமையை என்முன்கைவரையினின்று கழலாநின்ற வளைகளே எனக்கு அறிவித்தன என்பதாம்.

நாயகன் அயலே பிரிந்துபோகத் துணிந்திருத்தலைக் குறிப்பால் நுணுகி அறிந்த நாயகி உடனே உள்ளம் கலங்கி உடல் மெலிந்தாள்; மேலியவே அவள் கையில் அணிந்திருந்த வளையல்கள் நிலை திரிந்து கழலலாயின; அவ்வமயம் அங்குத் தோழி வந்தாள். "பொருளீட்டம் கருதி செல்லத் துணிந்துள்ள அவர் போய் வரட்டுமே" என்று சொல்லவந்த அவள் இவ் அல்லல் நிலையை நோக்கி "அன்னே! என்னே! ஈது?" என ஏங்கி நின்றாள்; அங்ஙனம் நின்ற அப் பாங்கியைப் பார்த்து அவள் பகர்ந்தபடியிது. துறைவன் துறவா முன்னரே என் கைவளைகள் இறவா நின்றன; இனி அவர் துறந்தெழின், என் உயிர் இறந்தொழியும் என அவள் உணர்ந்துகொள்ளும்படி இங்ஙனம் உணர்த்தி நின்றாள்.

இறவா நின்ற என நிகழ்விற் குறித்தது அது பொழுது தான் வளைகள் கழன்றுகொண்டிருந்தன ஆதலால் அக் கால நிலை காண என்க.

இறத்தல் = நிலை கடத்தல். முன்கை மணிக் கட்டில் தங்கியிருந்த அவை அந் நிலையின் நின்றும் இழிந்து விரல் வழி கழன்

றன ஆதலால் "முன்கை இறை இறவா நின்ற" என்றாள். காதலன் பிரிவு ஏதமாதலைக் கைவளையின் பிரிவால் காணலாகுமே! அங்ஙனம் கண்டிருந்தும் கண்ணோட்டமின்றிக் காலோட நின்றது சாலவும் வருந்தத்தக்கதென்பதாம்.

இன்பம் வரின் உடல் பூரிக்கும்; துன்பமுறின் அது மெலிந்து தேயும்; ஆதலால் அம் மெலிவின் மிகுதியை வளைமேல் வைத்துத் தன் துயரநிலையைத் தலைவி உரைத்திருக்கும் அழகைப் பார்க்க.

"பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
இருங்கழித் துவலை ஒலியிற் றுஞ்சும்
துறைவன் துறந்தெனத் துறந்து என்
இறையோர் முன்கை நீங்கிய வளையே" (ஐங்குறுநூறு)

தலைவன் நீங்கத் தன் வளையல் நீங்கியதென ஓர் தலைவி இதில் உளைந்திருத்தல் காண்க. அடிகளது சொல்லையும் பொருளையும் இஃதடியொற்றி வந்துள்ளமையை அறிந்துகொள்க.

"மறையின் மணந்தாரை வன்பரதர் பாக்கத்து மடவார் செங்கை
இறைவளைகள் தூற்றுவதை ஏழையம் எங்ஙனம் யாங்கறிகோம்
ஐய" (சிலப்பதிகாரம்)

"கழிதேர்ந்து அசைஇய கருங்கால் வெண்குருகு
அடைகரைத் தாழைக் குழீஇப் பெருங் கடல்
உடைகளை ஒலியில் துஞ்சும் துறைவர்,
தோன்னிலை நெகிழ்ந்த வளையள் ஈங்குப்
பசந்தனள்மன் எம் தோழி என்றொடும்
இன்னினார்ப் புன்னையம் புகர் நிழல்
பொன்வரி அலவன் ஆட்டிய ஞான்றே" (குறுந்தொகை 303

"இறைவளை நெகிழ்ந்த எவ்வநோய் இவள் தீர
உரவுக்கதிர் தெறுமென ஓங்குதிரை விரைபு, தன்
கரையமல் அடும்பளித் தாஅங்கு
உரவுநீர்ச் சேர்ப்ப! அருளினை அளியே" (கலி 127)

"இலங்குவளை நெகிழச் சாஅய், அல்கலும்
கலங்கஞர் உழந்து நாம் இவண் ஒழிய" (அகம் 127)

பிரிவாற்றாது வருந்துந் தலைமகளின் வளைகள் கழன்று வீழும் என்பதை இவையும் உணர்த்தி நிற்றல் காண்க.

"இடையேவளை சோர எழுந்து விழுந்து
அடலைய் மதனன் சரம் அஞ்சினையோ?
உடலோய்வுற நாளும் உறங்கலையால்,
கடலே! உரை; நீயும் ஓர் கன்னி கொலாம்?" (இராமாயணம்)

இது, சீதை உரைத்தது. இராமனை முதலில் கூடப்பெறாது விரகவேதனையால் வருந்தியிருந்த அப்பிராட்டி, கடலை நோக்கி விளித்து வளைகள் கழல விழுந்தலமந்து, உடலோய்ந்து, நாளும் உறங்காது புலம்புகின்றாயே கடலே! நீயும் என்னைப்போல் காதலனை எய்தப்பெறாத ஒரு கன்னிதானோ? என்று சிலேடையணியில் வைத்து வினவியிருக்கும் அழகை இதில் ஆய்ந்து பார்க்க. கடலுக்கு வளை சோரல் சங்குகளை வெளியே தள்ளல், எழுந்து விழுதல் அலை மோதி அலைந்து படுதல். உடல் ஓய்தல் நீரானது ஒருநிலையின்றி ஒசிந்தசைதல். பிறவும் இவ்வாறு ஓர்ந்து கொள்க.

பிரிவை நினைந்தவுடனே உளமறுகி உடல் மெலிந்து வளை கழலும் என்ற இதனால் தலைவன்பாலுள்ள அவள் காதல் நிலை புலனும். "துறைநணியூரனை யுள்ளி என், இறையேர் எல்வளை நெகிழ்போடும்மே" என ஓர் குல மகள் கூறியிருத்தலும் காண்க.

"எழிலுடைய அம்மனைமீர்! என் அரங்கத்தின்னமுதர்
குழலழகர், வாயழகர், கண்ணழகர், கொப்பூழில்
எழுகமலப் பூவழகர், எம்மானார் என்னுடைய
கழல்வளையைத் தாமும் கழல வளையே ஆக்கினரே"
(நாச்சியார் திருமொழி)

"பாட்டுக் குருகும் தமிழ்ச் சொக்கநாதர் பணைப்புயமே
வேட்டுக் குருகும், மெய்நாணும் விட்டாள்; வண்டு மென்கிளியும்
பேட்டுக் குருகும விட்டாள் என்செய்வாள் அனல்பெய்யு மிரு
கோட்டுக் குருகுமதிக் கொழுந்துக்கென் குலக்கொழுந்தே"
(மதுரைக்கலம்பகம்)

விரகதாபத்தால் மங்கையர் வளைகள் படும் நிலையை இவை உணர்த்திநிற்றலறிக. குருகு = வளையல்.

நாயகனைப் பிரிந்த நாயகி உடல் மெலிந்து உயிர் உளைந்து வருந்துவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை ஆதிரைபால் உணரப்படும்.

## கதை.

ஆதிரை என்பவள் காவிரிப்பூம் பட்டினத்திலிருந்த சாதுவன் என்னும் வணிகர் தலைவனுடைய அருமைத் திருமனைவி. இவள் சிறந்த பதிவிரதை. நாயகனை உயிரினும் இனியனுகக் கருதி உவந்து பேணினுள். பேணியும் அவன் பெருந்திருவுடையனுதலால் உளந்திரிந்து, விலைமகளிரை நயந்து, விரும்பிய போகங்களை நுகர்ந்து, சூதாடல் முதலிய பலவழிகளிலும் புகுந்து, இழிந்து நின்ருன். அங்ஙனம் நின்றபோதும் இவள் ஆர்வமீதூர்ந்து அவனை ஆதரித்து வந்தாள். வருங்கால் அவன் பொருள் முழுவதும் இழந்துபோனமையால் ஒருவரிடமும் சொல்லாமல் மறு புலம் சென்ருன். அவன் பிரிந்து சென்றதை அறிந்து இவள் பெருந்துயரடைந்தாள். உணவு துறந்து, உறக்கம் ஒழிந்து, உடல் மெலிந்து, படுகிடைக்கையாய் இவள் பதைத்தலமந்தாள். இளமை நலங் கனிந்து எழி லொழுக நின்ற இவள், கணவன் பிரிந்தமையால் உளங் கலங்கி உருக்குலைந்து உழந்துகிடந்தலை ஊரும் நாடும் கண்டு உளந்துடித்து நின்றன. வாடிய பயிர் வானேக்கி நிற்றல் போல் தன் நாதனையே நினைந்து இவள் நைந்து கிடந்தாள். இங்ஙனம் கிடந்துவருங்கால் கடலிடையே கப்பலுடைந்து அவன் இறந்துபோனுன் என ஓர் வதந்தி எழுந்தது. இவள் துடித்தெழுந்தாள். உயிர்விடத் துணிந்தாள். சுடலையில் சென்று படுகுழி யமைத்து விறகுகள் அடுக்கி எரியினை மூட்டிக் கணவனைக கருதிக் கைகூப்பிநின்று கடுத்துப் பாய்ந்தாள். அத் தீக்குழி செழுமலரோடைபோல் குளிரமைந்திருந்து குறுகி அவிந்தது. இவள் வெளியே வந்தாள். அந்தோ! "தீயும் கொல்லாத் தீவினை யாட்டியேன், யாது செய்கேன்?" என்று அலமந்து அரற்றினுள். அவ்வமயம் "உடைகலம் நீங்கிச் சாதுவன் உயிர் பிழைத்துள்ளான்; விரைந்து வருவன்; வருந்தல் நீ" என ஆகாயத்தில் நின்று ஓர் அசரீரி அறைந்தது. அதனைக் கேட்டவுடனே

வாட்டம் நீங்கி மனையகம் புகுந்து காதலன் வரும்படி மாதவம் புரிந்தாள். அவன் இடையே கிடைத்த சந்திரதத்தன் என்னும் ஒரு வணிகனது கப்பலிலேறிக் கரைவந்து சேர்ந்தான். அவனைக் கண்டவுடனே இவள் கொண்ட உவகையை யார் கூறவல்லார்? உவந்து தழுவி உயிர் பெற்ற வுடல்போல் உருப் பொலிந்து நின்றாள். பிரிந்தபோது வளைகழலும்படி மெலிந்திருந்த இவள் அவன் அடைந்தவுடனே உடல் பூரித்து உயர்ந்து விளங்கினாள். "துறைவன் துறந்தமையை முன்கை இறை இறவா நின்றவளை தூற்றும்" என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது. இவளது கற்பினை வியந்து வானுறை மகளிரும் புகழ்ந்து போற்றினர். துறவினை மேற்கொண்ட மணிமேகலை முதலில் அமுதசுரபியில் பிச்சைகொள்ளத் துணிந்தபொழுது முந்துற இவளிடம் வந்தே கொள்ளவேண்டும் என்று. காயசண்டிகை என்னும் வித்தியாதரமகள் அவளிடம் ஓதி யருளினாள்.

"பத்தினிப் பெண்டிர் பண்புடன் இடூஉம்
பிச்சை ஏற்றல் பெருந்தக வுடைத் தெனக்
குளன்அணி தாமரைக் கொழுமலர் நாப்பண்
ஒருதனி ஓங்கிய திருமலர் போன்று
வான்தரு கற்பின் மனையுறை மகளிரில்
தான் தனி ஓங்கிய தகைமையள் அன்றோ
ஆதிரை நல்லாள்; அவள்மனை. இம்மனை
நீ புகல் வேண்டும் நேரிழை!" என்று இவளது சீரும் பேரும் தெளியவுரைத்த அவள் மேலும் பிரிவிடை முன்பு இவள் கணவனைக் கருதியிருந்த அருமையையும் உணர்த்தினாள். அவள் அன்று உணர்த்தியபடியை அடியில் காண்க.

"கண்மணி யனையான் கடிது ஈங்கு உறுகெனப்
புண்ணிய முட்டாள், பொழிமழை தரூஉம்
அரும்பெறல் மரபிற் பத்தினிப் பெண்டிரும்,
விரும்பினள் தொழூஉம் வியப்பினள் ஆயினள்;
ஆங்கவள் கணவனும் அலைநீ ரடைகரை

ஓங்குயர் பிறங்கல் ஒருமர நீழல்
மஞ்சுடை மால்கடல் உழந்த நோய் கூர்ந்து
சந்திரதத்தன் என்னும் வாணிகன்
வங்கம் சேர்ந்ததில் வந்துடனேறி
இந்நகர் புகுந்தீங் கிவளொடும் வாழ்ந்து
தன்மனை நன்பல தானமும் செய்தனன்;
ஆங்கனமாகிய ஆதிரை கையால்
பூங்கொடி நல்லாய்! பிச்சை பெறுகென,
மனையகம் புகுந்து மணிமே கலைதான்
புனையா ஓவியம் போல நிற்றலும்,
தொழுது வலங்கொண்டு துயரறு கிளவியோடு
அமுத சுரபியின் அகன்கரை நிறைதரப்
பாரகம் அடங்கலும் பசிப்பிணி அறுகென
ஆதிரை இட்டனள் ஆருயிர் மருந்து" (மணிமேகலை)

கணவன் பிரிந்து நின்றபொழுது இவள் வருந்தியிருந்ததும், இவளது அருந்தவப்பேற்றால் அவன் திரும்பிவந்ததும், பின்பு ஒருங்கமைந்துறைந்து அறம்பல புரிந்ததும், பிரிவாற்றாது புலம்பி நின்ற இவள் கற்புத் தன்மையை புத்தேளுலகமும் போற்றி நின்றதும் இதுவும் உணர்த்திநிற்றலறிக.

மழையிழந்த மேன்பயிர்போல் வாடும் தலைவன்
உழையிகந்த போதேன் னுயிர்.

உடையவன் பிரியின் உயிர்தளரும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1158. மண்டுபுகழ்க் கண்ணகியேன் மாண்டாள்மதுரையினில்
கொண்டான் பிரியக் குமரேசா—தண்டாமல்
இன்னா தினனில்லூர் வாழ்தல் அதனினும
இன்னா தினியார்ப் பிரிவு. (அ)

இ.—ள்.

குமரேசா! தன் கணவன் பிரிந்தவுடன் கண்ணகி ஏன் இறந்துபட்டாள்? எனின், இனன் இல் ஊர்வாழ்தல் இன்னாது; அதனினும் இனியார்ப் பிரிவு இன்னாது என்க.

இது, கொழுநன் பிரிவு கொடுந்துயரென்கின்றது.

இனன் இல் ஊர்=இனத்தார் இல்லாத ஊரில்.

இனம் என்பது இனன் என வந்தது. இஃது ஈற்றுப் போலி. இனம் = குலம், உறவு, சுற்றம். ஒத்த குலத்தாரை இனத்தார் என்பர். தனக்கு உரிமையான சுற்றத்தார் இல்லாத வூரில் ஒருவன் வசிப்பனுயின் சுபாசுபங்களில் பெரிதும் இடர்ப்பட நேருமாதலால் "இனன் இல் ஊர் வாழ்தல் இன்னாது" என்றார். இங்கு இனன் என்றது தோழியை; தனக்கு இதம்புரியாமல் இடருரைத்தமையால் இனமில்லை என மனநொந்துரைத்தாள். இனியார் = இனிய குண நலங்களை யுடையார். என்றது தலைவனை. இனிமை என்னும் பண்படியாய்ப் பிறந்த பெயர் இங்ஙனம் குண நீர்மையோடு குறித்தது இன்ப நிலையமாய் அவன் இருத்தலான் என்க. தன் உயிரினும் இனியனாக அவனை இவள் உவந்துகொண்டுள்ளமை இதனால் உணரலாகும்.

இன்னாது=துன்பமுடையது. இனனில் வாழ்வினும் இனிய பிரிவு மிகவும் துயரமாதலால் "அதனினும் இன்னாது" என்றார். இன் உருபு எல்லைப் பொருளது.

மேல், உரியவன் பிரியின் உடல் மெலியும் என்றாள்; இதில், அது உயிர் வாதனை செய்யும் என்கின்றாள்.

உறவினரில்லாத அயலூரில் வாழுதல் துயரமாகும்; அதனினும் இனிய துணைவரைப் பிரிதல் பெருந் துன்பம் என்பதாம்.

வினைநலங் கருதிப் பிரிவுறநின்ற தலைமகன் தன் நினைவினைத் தோழியிடம் கூற அவள் வந்து அதனைத் தலைவியிடம் உரைத்து விடை தரும்படி வேண்ட அப்போது அப் பாங்கியை நிமிர்ந்து பார்க்காமல் முகந் திரும்பி அவள் மொழிந்தபடி யிது.

என் பிராண நாயகன் அயல் சிறிதகலின், ஒரு கணமேனும் உயிர் தரித்திரேன் என்பதை உடனிருந்து பழகியும் உணராமல் அப் பிரிவுக்குடன்பட்டு வந்து இவ்வாறு பிதற்றினுளே என்று வயிற்றெரிச்சலோடு சினந்து மொழிந்தாளாதலால் தோழியை அயலவளாக இங்ஙனம் இகழ்ந்து நின்றாள். என் இனமாயிருந்தால் எனது இயல்பினை அறியும்; அன்னியத்துக்கு என்ன தெரியும்? எனத் தலைவி பன்னிப் பகர்ந்தாள்.

இனனில் ஊர் வாழ்க்கையும், இனியார்ப் பிரிவும் பெருந் துயரங்களாகுமாதலால் அவற்றை எடுத்துக் காட்டித் தனக்கு அவ்விரண்டும் அமைந்துள்ளபடியை இவ்வாறு கலுழ்ந்துரைத்தாள். தனக்கு நேர்ந்துள்ள துன்ப நிலைகளை நேரே உரையாமல் பொதுவாக உலகியல் மேல் வைத்துச் சாடை நோக்கில் உரைத்திருக்கும் நயத்தை இதில் ஊன்றிப் பார்க்க.

தன் எதிர் நிற்கும் பாங்கி யுணரும்படி பராமுகமாக வைத்து இங்ஙனம் தலைவி பகர்தல் கோவைத் துறையில் முன்னிலைப் புறமொழி மொழிதல் எனவரும்.

"உரையாத முன்னம் உணர்வார் தமக்கன்றி, உற்றதன்னோய்
வரையாமல் உள்ளவெல்லாம் உரைத்தாலும், மதித்து மனம்
கரையாதவர்கட்கு உரைப்பதில், வெங்கைக் கடவுள் உண்ட
திரைஆலமுண்டு உயிர்தீத்தாலும் நன்று தெரிந்தவர்க்கே."
(திருவெங்கைக்கோவை)

"பூவலர் வாவியில் நீர்அற்ற போதுற்ற புன்மை அல்லால்
காவலர், காமம் துறக்கில் என்னும்? கடம்பாய் மதுகை
மாவலவாணன் வயற்றஞ்சை வேந்தனை வாழ்த்தல் செய்யா
மேவலர் போலும் கழற்றுரையாளர் வியனறிவே"
(தஞ்சைவாணன்கோவை.)

"தீராத புன்கணும், காமவெந் நோயும், சிறையுமுற்ற
பேராயின் மற்றன்றி யார் அறிவார்? பெரும்பாரனைத்தும்
சோராமல் காக்கும் உறந்தைக் குலோத்துங்க சோழன்வெற்பில்
கூராசையும் என் தனிமையும் யார்க்கு இனிக் கூறுவதே"
(குலோத்துங்கன்கோவை)

"அரி ஆரணன்முன் அடிமுடி காண்டற்கு அரியவர்; கா
விரியார் தடங்கரைக் கோடீச்சுரநித்தர் வெற்பிடத்தில்
தெரியாரு மூற்றந் தெரிந்தாரும் ஓதில் தெளிவர்; அல்லாப்
பேரியார்க்கு உணர்த்தின் உரைத்தவையாவும் பிழைபடுமே"
(கோடீச்சரக்கோவை.)

தனது வருத்த நிலை தெரியாமல் உரைத்து நின்ற தோழியைத் தலைவி வெறுத்துப் படர்க்கையில் வைத்து இவற்றுள் உரைத்திருக்கும் நயங்களை யூன்றி யுணர்ந்து கொள்க.

புறத்திலும் துணை இல்லை; அகத்திலும் ஆதரவில்லை இனி யான் பிழைத்திருப்பது எப்படி? என இம்மனம் வெறுத்து நின்றாள். தோழியையும், தலைவனையும் ஒரு சேர முனிந்து இவ்வாறு உரை செய்ததனால் அவ் இருவரிடமும் இவள் கொண்டுள்ள அந்தரங்க வுரிமையும், ஆர்வ நிலையும் இனிது புலனும்.

எனது இனிய வாழ்வுக்குத் தனி நிலையமாயுள்ள அவர் இவ்வண்ணம் இன்னசெய்யத் துணியின் யான் என்ன செய்வேன்! என அவள் ஏங்கி அயர்ந்தாள் என்க.

கொழுநனைப் பிரிந்த குலமகளுக்கு இவ் வுலக வாழ்க்கை கொடுந் துன்பமாயிருக்குமென்று இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கண்ணகிபால் உணரப்படும்.

### கதை.

குலமகளிருள் தலைமகளாய் நிலவி நின்ற கண்ணகி தனது கணவனாகிய கோவலனைக் கண்ணினும் உயிரினும் இனியனாகக் கருதிப் பேணினாள். அவ் அழகனும் இவளை அருந்தா அமிர்தென வியந்து அயலகலாதமர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து அகமிக மகிழ்ந்தான். புதுமணம் புரிந்தவுடன் முதிர் காதலுடன் இவர் மருவித் துய்த்த காம நலங்கள் போக வுலகிலும் அரியனவாயின.

"கயமலர்க் கண்ணியும், காதற் கொழுநனும்,
விரைமலர் வாளியொடு வேனில் வீற்றிருக்கும்
நிரைநிலை மாடத்து அரமியம் ஏறிச்
சுரும்புணக் கிடந்த நறும்பூஞ் சேக்கைக்

கரும்பும் வல்லியும் பெருந்தோள் எழுதி
முதிர்கடல் ஞாலம் முழுவதும் விளக்கும்
கதிர் ஒருங்கிருந்த காட்சிபோல
வண்டுவாய் திறப்ப நெடுநிலா விரிந்த
வெண்டோட்டு மல்லிகை விரியல் மாலையொடு
கழுநீர்ப்பிணையல் முழுநெறி பிறழத்
தாரும் மாலையும் மயங்கிக் கையற்றுத்
தீராக்" காதலோடு திளைத்தினி திருந்தனர். பெருமலரும் பேருடன் மருவி புவந்து இவ் இருவரும் இங்ஙனம் அளவி லின்பங்களை நுகர்ந்து வருங்கால் பழவினை வயத்தால் பிரிந்து கோவலன் பொருள் முழுவதையும் இழந்தான். பின்பு வாணிகம் கருதி மறுபுலம்போக விழைந்தான். அவனைப் பிரியலாற்ருது இவள் மறுகி நின்ருள். இவளையும் உடன்கொண்டு அவன் மதுரையை அடைந்தான். இவளது காற்சிலம்பை அங்கு அரசனிடம் விற்று வரச் சென்ருன். இடையே கண்ட ஓர் பொற் கொல்லன்செய்த பொல்லாச் சூழ்ச்சியால் கொற்றவனுல் அவன் கொலை யுண்ணப்பட்டான். அதனைக் கேட்டவுடனே இவள்பட்ட அல்லலை யார் சொல்ல வல்லார்? அழலிடைப்பட்ட புழுவென அலமந்து துடித்தாள்.

"பொங்கி எழுந்தாள்; விழுந்தாள்; பொழிகதிர்த்
திங்கள் முகிலோடும் சேணிலங் கொண்டெனச்
செங்கண் சிவப்ப அழுதாள்; தன் கேள்வனை
எங்கணுஅ என்று இனைந்தேங்கி மாழ்குவாள்"

இவ்வாறு அழுதலமருங்கால் மாதரி முதலிய மடந்தையர் சிலர் வந்து ஆறுதல் கூறினர். என் ஐயன் பிரிந்தபின் கைம்மையாய் நின்று இனி வாழவும் வேண்டுமோ? என்று தன் வாழ்வினை வெறுத்து மாழ்கி மயங்கிஞள்.

"இன்புறு தங் கணவன் இடரெரி யகமூழ்கத்
துன்புறுவன நோற்றுத் துயருறு மகளிரைப்போல்
மன்பதை அலர்தூற்ற, மன்னவன் தவறிழைப்ப
அன்பனை இழந்தேன் யான் அவலங் கொண்டழிவலோ?

தம்முறு பெருங் கணவன் தழலெரி யக மூழ்கக்
கைம்மைகூர் துறைமூழ்கும் கவலைய மகளிரைப்போல்
செம்மையின் இகந்தசொல் தென்னவன் தவறிழைப்ப
இமையும் இசையொரீஇ இனைந்தேங்கி அழுவலோ?''
(துன்பமாலை)

இன்ன வகையாய்ப் பலப்பல பன்னி ஏங்கி யழுது முடிவில் ஆற்றுமை மிகுந்து வீர வெறியோடு பாண்டியனுடைய அரண்மனையை நோக்கி ஓடினுள். வாயில் காவலனைச் சினந்து விளித்துத் தன் வரவினை அரசனுக்கு உரைக்கும்படி அடித்தாள். இவள் அன்று அழைத்துரைத்த நிலையை அடியில் பார்க்க.

"வாயிலோயே! வாயிலோயோ!
அறிவு அறைபோகிய பொறியறு நெஞ்சத்து
இறைமுறை பிழைத்தோன் வாயிலோயே!
இணையரிச் சிலம்பு ஒன்று ஏந்திய கையள்
கணவனை இழந்தாள் கடையகத்தாள் என்று
அறிவிப்பாயே! அறிவிப்பாயே!'' (வழக்குரைகாதை)

என அறைந்து நின்றுள். அவன் விரைந்து சென்று வேந்தனை வணங்கி இவள் வந்துள்ள நிலையினை வாய் புதைத்துரைத்தான். அப் பாண்டியன் இவளை வரும்படி பணித்தான். இவள் நேரே புகுந்தாள்; அவன் யார் நீ? என்றான். இவள் வரலாறு முழுவதையும் வழுவற வுரைத்துத் தன் கணவனைக் கொன்றது அநியாயம் என்று உணர்த்தினுள். அவன் உண்மையை யுணர்ந்தான்; உடனே உயிர் துறந்தான். இவளும் பிரிவாற்றுது பேதுற்றிறந்தாள். நீதியோடு சென்று தன் காதலன் தீதிலன் என்பதை விளக்கி யாதும் அஞ்சாது நின்று அற்புதங்களாற்றி அவன் புக்குழிப் புகுந்த இவளை வீரபத்தினி என்று அனைவரும் வியந்து துதித்தார். இனியராய கணவர் பிரிந்தபின் காதலிகள் தம் உயிர் வாழ்வினை வெறுத் தொழிவர் என்பதை உலகம் இவள் பால் உணர்ந்து நின்றது.

பிரிந்து வருவரேன்ப் பேசுவார் பேச
இருந்து கவல்வார் எவர்.

பிரிந்து வாழ்தல் பெருந்துயரென்பது இதனால் கூறப்பட்டது.

1159. ஏஞேவெந் தீயும் இனிதென்றாள் மானவதி
கோனகன்ற போது குமரேசா—தானே
தொடிற்சுடினல்லது காமநோய் போல
விடிற்சுட லாற்றுமோ தீ. (கூ)

இ.—ள்.

குமரேசா! தனது நாயகன் பிரிந்த பின்பு அமராவதி ஏன் தீயும் இனிது என்று கொண்டாள்? எனின், தீ தொடின் சுடின் அல்லது காமநோய் போல விடின் சுடல் ஆற்றுமோ என்க.

இது, பிரிவுத்துயர் எரியினும் சுடும் என்கின்றது.

மயிர் நீப்பின் வாழாக் கவரிமான்போல உயிர் நீத்தாள் ஆதலால் மானவதி என்றும்.

தொடாதபோது தீ, யாதும் சுடாது ஆதலால் தொடின் என்றார். சுடின் = சுடுமாயின். மந்திர மருந்துகளால் தீயானது சுடாதிருக்கவும் கூடுமாதலால் சுடின் என்றார்.

விடின் = நீங்கின். தொடாது அகன்றால் என்க.

சுடல் ஆற்றுமோ = சுடுதல் வல்லதோ? இல்லை என்றபடி. தலைவன் பிரிந்து சென்ற பின் தனியே அவனை நினைந்திருந்த காதலியைக் காமதாபம் கனற்றும் ஆதலால் "விடின் காமம் சுடும்" என்றாள். விடுதல் ஈண்டுக் கூடி நுகராமல் நீங்கி நிற்றல் என்க. சுடல் எனக் குறித்தது காம நோய் காட்டுத் தீ போல் சுட்டெரிக்குமாதலால் அங்ஙனம் பட்டு நின்றவள் இங்ஙனம் பதைத்துரைத்தாள்.

"சொரிந்தன நறுமலர் சுறுக்கொண் டேறின;
பொரிந்தன கலவைகள் பொறியிற் சிந்தின;
எரிந்தவெங் கனல் சுட இழையிற் கோத்த நூல்,
பரிந்தன; கரிந்தன பல்லவங்களே.

"அருகில்நின் றசைக்கின்ற ஆல வட்டக்கால்
எரியினை மிகுத்திட இழையும் மாலையும்
கரிகுவ; தீகுவ; கனல்வ; காட்டலால்,
உருகுபொற் பாவையும் ஒத்துத் தோன்றினள்"

இராமன் அகன்றுநின்றபோது விரக தாபத்தால் சீதை வருந்தி யிருந்தபடியை இவை உணர்த்தி நிற்றல் காண்க.

மேல், இனியாரைப் பிரிந்திருத்தல் மிகவும் இன்னாதென்றாள்; இதில், அவ் இருப்பு நெருப்பாம் என்கின்றாள்.

தீயானது தொட்டால் சுடுமே யன்றிக் காம நோய்போலத் தன்னைக் கைவிட்டகன்றாரைச் சுடாது என்பதாம். பிரிவாற்றாது வருந்தியிருந்த தலைமகளிடம் தோழி வந்து "என்ன! இவ்வாறு துயருறுகின்றாய்? நினைக்க நினைக்கக் காமம் நெடிது வளர்ந்து படு துயர் செய்யும் ஆதலால் அதனை உள்ளாது ஒழித்து விடுக" என உணர்த்தி வேண்ட அவ்வமயம் அவள் உரைத்தபடியிது.

காமம் துயர் செய்வதில் தீயோடு ஒப்பதாயினும் தீ அணுகினால் மட்டும் சுடும்; அகன்றால் சுடாது; காமம், "நீங்கின் தெறூஉம், குறுகுங்கால் தண் என்னும் தீ" (குறள் 1104) என்றபடி அணுகின் இனிதாம்; அகன்றால் கொடிதாம் ஆதலால் "விடிற் சுடல் ஆற்றுமோ தீ?" என்றாள்.

மந்திரம் மருந்துகளால் தடைப்பட்டுத் தொடுவழியன்றிச் சுடாத இயல்பினதாய தீயினை ஒரு வகையிலும் கட்டுப்படாது ஒதுங்கி நின்றாரையும் உள்புகுந்து சுடவல்ல காமத்தோடு ஒப்ப எண்ணுதல் தப்பாம் என்பதாம்.

அயலே பிரிந்து சென்ற கணவனை நினைந்து நினைந்து விரக தாப மிகுந்து வெம்பி நின்றாளாதலால் தன் நோய் நிலை தீயுறு துயரினும் தீயதென இங்ஙனம் வாய்விடலாயினள்.

"கனையிருள் வானம்! கடல் முகந்து என்மேல்
உறையொடு நின்றீயல் வேண்டும் ஒருங்கே
நிறைவளை கொட்பித்தான் செய்த துயரால்
இறை இறை பொத்திற்றுத் தீ" (நெய்தற்கலி 28)

பிரிவினால் மறுகி நின்ற ஓர் தலைமகள் மேகத்தை நோக்கி ஓ வானமே! காம நோய் என்னைக் கண்ணோடாது கனற்றுகின்றது; அத் தாபம் நீங்கும்படி கடல் நீரை முகந்து என்மேல் நீ பொழிந்தருளவேண்டும் என இதில் மொழிந்திருத்தல் காண்க. நாயகன் பிரிவு தீயினும் சுடும் என்பது கருத்து,

"பரிவிகந்த மனத்தொடு பற்றிலாது
ஒருவுகின்றனை! ஊழி அருக்கனும்
எரியும் என்பது யாண்டையது ஈண்டு நின்
பிரிவினும் சுடுமோ? பெருங்காடென்றாள்." (இராமாயணம்)

இராமன் பிரிந்து வருவல் என்றபோது சீதை வருந்தியுரைத்தது. ஊழித் தீயினும் தன் நாதன் பிரிவு சுடும் என அப்பிராட்டி இதில் உரைத்திருத்தல் காண்க.

காதலன் பிரிவைப் பொறுத்திருக்க மாட்டாமல் காதலியர் நெருப்பிலும் புகுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அம்ராவதிபால் உணரப்படும்.

## கதை.

அமராவதி என்பவள் பூதப் பாண்டியன் என்னும் அரசனுடைய அருமைத் திருத் தேவி. அரிய குணங்கள் பல அமையப் பெற்றவள். மகா பதிவிரதை. இக் குல மகள் கலை யறிவிலும் எழில நிலையிலும் தலை சிறந்திருந்தாள். அறிவு ஈகை அமைதி வீர முதலிய உயர் நலங்களெல்லாம் ஒருங்கேயுடைய அப் பாண்டிய மன்னன் இவளை யாண்டும் பிரியானாய் ஈண்டிய அன்போடினிது பேணி நின்றான். இக் கல்விச் செல்வியும் அச் செல்வப் பாண்டியனைப் பல் வகையிலும் பண்புமீக் கூர்ந்து இன்புறுத்தி வந்தாள். இவரது இல்வாழ்க்கை எல்லா நலங்களையும் விளைத்து இன்ப நிலையமாய் இனிதமர்ந்திருந்தது. அரச திரு நிறைந்து, அறிவிலும் உருவிலும் சிறந்து, காதல் நலம் கனிந்து ஓருயிர்க்கு ஈருடலென்ன ஒருமை யெய்தி நின்று, ஒருவா அன்புடனமர்ந்து, இவ் இருவரும் மருவி நுகர்ந்த இன்ப நலங்கள் அமரருலகினும் அரியனவாயின. அவ் வேந்தன் பெரிய போர் வீரனாதலால் கொடிய பகைவரனைவரையும் அடக்கி, ஆசை எங்கணும் ஆணை செலுத்தி மாட்சிமை மிக ஆட்சிசெய்துவந்தான். அரசகாரியமாக இடை பிரிய நேர்ந்தபோதும் இவளையும் உடன் கொண்டு சென்றே உவந்திருந்தான். "பகைவரை இன்று பொருது வெல்லேனாயின் இவளைப் பிரிந்து நின்ற பரிபவம் எனக்கு வருவதாக" என ஒருமுறை யாவருமறிய அவன் சூளுரைசெய்து வாளுருவி நின்றான், அடியில் வருவது காண்க

“ஆரமர் அலறத் தாக்கித் தேரொடு
அவர்ப்புறங் காணேனாயின், சிறந்த
பேரமர் உண்கண் இவளினும் பிரிக” (புறம் 71)

இதில் இவளது கண்ணைச் சுட்டி உம்மை கொடுத்து அவன் உரைத்திருக்கும் நிலையைப் பார்க்க. இதனால் இவளது எழிலமைதியும், இவள்பால் அவன் வைத்துள்ள உழுவலன்பும் உணரலாகும். இங்ஙனம் பெருங் காதலோடு ஒருங்கமர்ந்திருந்த அவன் அரிய காரியம் கருதி ஒருமுறை சிறிது பிரிய நேர்ந்தது. அப் பிரிவில் இவள் மிக மறுகியிருந்தாள். நருமதை என்னும் தோழி இனியன பல கூறி இவளை அருமையாக ஆற்றிவந்தாள். பின்பு வினை முடித்து அவன் வந்தவுடன் உயிர்பெற்ற உடல்போல் இவள் பொலிவுற்று நின்றாள். பிரியா வுள்ளத்தளாய இத் தேவியுடன் மேவியிருந்து கோவியல் புரிந்து குலாவி வருங்கால் ஊழ்வினை வயத்தால் அவன் ஆவி துறந்தான். இவள் இடியேறுண்ட இளமென் கொடிபோல் படிமீது விழுந்து பதைத்துருண்டாள். முடிவில் எழுந்தாள்; எரி மூழ்கத் துணிந்தாள். அறிஞர் பலர் விரைந்து சூழ்ந்து அருந்துயரகற்றி அரசியல் பேணி அமர்ந்தருளும்படி பரிந்து வேண்டினார். அவ் வமயம் அவர்களை இவள் எதிர்ந்து நோக்கினாள். பிரிந்து வருந்துவதினும் எரி புகுந்து இறந்துபடுவது எனக்கு மிக இனிதாமாதலால் நீவிர் இடை புகுந்து யாதும் தடை செய்யன்மின் என்று அடைவுடன் மொழிந்தாள். அன்று இவள் உரைத்தபடியை அடியில் பார்க்க.

“பல்சான்றீரே! பல்சான்றீரே!
செல்கெனச் சொல்லாது, ஒழிகென விலக்கும்
பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான்றீரே!
அணில்வரிக் கொடுங்காய் வாள்போழ்ந் திட்ட
காழ்போல் நல்விளர் நறுநெய் தீண்டாது,
அடையிடைக் கிடந்த கைபிழி பிண்டம்
வெள்ளெள் சாந்தொடு, புளிப்பெய்து அட்ட
வேளை வெந்தை வல்சி யாகப்
பரற்பெய் பள்ளிப் பாயின்று வதியும்
உயவற் பெண்டிரேம் அல்லேம் மாதோ
பெருங்காட்டுப் பண்ணிய கருங் கோட்டு ஈமம்

நுமக்கு அரிதாகுக; தில்ல, எமக்கு எம்
பெருந்தோட் கணவன் மாய்ந்தென, அரும்பு அற
வள்ளிதழ் அவிழ்ந்த தாமரை
நள்ளிரும் பொய்கையும் தீயும் ஓரற்றே'' (புறம் 246)

விதவைக் கோலங்கொண்டு வதைவாளாய் இங்குவதிந்து கிடத்தல் ஒல்லேன்; என் கணவன் புக்குழி யானும் புகுவேன்; உயிர்த்துணையைப் பிரிந்தபின் தீக்குழி தாமரைப் பொய்கை போல் எனக்குத் தண்ணிதாயுள்ளது; நீர் தடாது ஒழிமின்; என இவள் உரைத்திருக்கும் உறுதி நிலையை இதில் ஊன்றிப்பார்க்க. இதனால் இவளது கற்பின் திட்பமும், காதல் நிலையும் இனிதறியலாகும். எரியில வீழும்படி இவள் எழுந்து சென்ற பரிபவத்தைக் கண்டு அனைவரும் பதைத்து நின்றனர். மதுரைப் பேராலவாயார் என்னும் புலவர் பெருமானார் இவளது நிலையினைக் குறித்து உருகி யுரைத்துள்ள பாடல் ஒன்று இதனடியில் வருவது காண்க.

''யானைதந்த முளிமர விறகிற்
கானவர் பொத்திய ஞெலிதீ விளக்கத்து
மடமான் பெருநிரை வைகுதுயில் எடுப்பி
மந்தி சீக்கும் அணங்குடை முன்றிலில்,
நீர்வார் கூந்தல் இரும்புறந் தாழப்
பேஎனார்க் கண்ணள் பெருங்காடு நோக்கித்
தெருமரும் அம்ம! தானே தன் கொழுநன்
முழவுகண் துயிலாக் கடியுடை வியனகர்ச்
சிறுநனி தமியள் ஆயினும்
இன்னுயிர் நடுங்கும்தன் இளமைபுறங் கொடுத்தே'' (புறம்)

தன் கரும் கூந்தல் அவிழ்ந்து விரிந்து புறந்தாழ்ந்தசைய, எரியமைத்த மயானத்தை நோக்கி இவள் அலமந்து சென்றதும், கணவனோடு உடனமர்ந்திருக்குங்கால் அவன் சிறிது பிரியினும் இவள் உயிர் நடுங்கி நின்றதும், இவளது இளமை நிலையும், எழில் லமைதியும் இதில் ஊன்றி யுணர்ந்துகொள்க. தொடில் சுடும் தீயினும் விடில் சுடும் காம நோய் கொடிது ஆதலால் அங்ஙனம் பிரிவுற்றிருப்பதினும் எரியுற்றவிதல் குலமகளிர்க்கு நலமாம் என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

"காதலன் வீயக் கடுந்துயர் எய்திப்
போதல் செய்யா உயிரொடு புலந்து
நளியிரும் பொய்கை ஆடுநர் போல
முளி எரிப் புகூஉம் முதுகுடிப் பிறந்த
பத்தினிப் பெண்டிர்" (மணிமேகலை)

இது, இவ்வுத்தமியை உள்ளிவந்ததோ என உணரவுள்ளது.

தண்டாத் துயரம் தருதலால் வெந்தழலிற்
கொண்டான் பிரிவு கொடிது.

பிரிவின் கொடுமை இதனால் கூறப்பட்டது.

---

1160. காதற் பதுமையேன் காதலன்பின் வாழாமல்
கோதிலுயிர் நீத்தாள் குமரேசா—ஏதம்
அரிதாற்றி அல்லனோய் நீக்கிப் பிரிவாற்றிப்
பின்னிருந்து வாழ்வார் பலர். (ய)

இ.—ள்.

குமரேசா! கணவனது பிரிவை ஆற்றாமல் பதுமகோமளை ஏன் உடனே உயிர் நீத்தாள்? எனின், அரிது ஆற்றி அல்லல் நோய் நீக்கிப் பிரிவு ஆற்றிப் பின் இருந்து வாழ்வார் பலர் என்க.

அரிது ஆற்றி = அரியதைச் செய்து. அரியது என்றது, இங்குப் பிரிய உடம்பட்டதை. இன்பம் நுகர்ந்து வருங்கால் இடையே காதலனைப் பிரிய இசைந்தது அரிய செயலாதலால் அதனை "அரிது ஆற்றி" என்றாள்.

அல்லல் நோய் என்றது இங்கு மன வேதனையை. அதாவது பிரிந்த துணைவன் எப்பொழுது வருவார்; போனவிடத்தில் ஏது நிகழ்ந்ததோ? என்னவாயிற்றோ? என இன்ன வகையாக ஏங்கி வருந்துவது. சூலை காசம் ஈளை குட்டம் முதலிய கன்ம வியாதிகள்போலன்றி நினைவிடை யெழுந்த இம் மன வியாதி அல்லும்பகலும் இடையறாது செல்லரித்ததுபோல் அரித்தலைத்து அல்லற்படுத்துமாதலால் "அல்லல் நோய்" என்றார்.

பிரிவு ஆற்றி = பிரிவுத் துயரைப் பொறுத்து.
பின் = நாயகன் பிரிந்துபோன பின்பு.
இருந்து வாழ்வார் = உடலோம்பி உவந்து வாழு மகளிர்.
பலர் என்றது ஒருவரும் இலர் என்பதில் நோக்கு.

மேல், பிரிவுத்துயர் தீயினும் சுடும் என்றாள்; இதில், அதனை ஆற்றியிருக்கமுடியாது என்கின்றாள்.

முதலில் காதலன் பிரிந்து போதற்கு இசைந்து, பின்பு கடுந் துயரங்களை ஒழித்து, விரக வேதனையைப் பொறுத்து பின்பு உயிரோடிருந்து வாழ்வார் ஒருவரும் இலர் என்பதாம்.

பிரிவாற்றாமல் பெருந்துயருழந்து, உணவும் நீரும் துறந்து படுகிடக்கையாய்ப் பதைத்துக்கிடந்த தலைவியைத் தோழி அணைத்தெடுத்து "உங்களைப்போல் எவ்வளவோ பேர் துணைவரை அகன்று தனித்திருந்திருக்கிறார்கள்; இப்பொழுதும் பலர் இருந்துவருகிறார்கள்; நீங்கள் இப்படி அலமந்தயருதல் சரியன்று; ஆறியிருங்கள்" என்று தேறுதல் கூற அதற்கு அவள் மாறு கூறியபடி யிது.

கணவன் பிரிவைக் கணமும் சகியாமல் பிரிந்த அக் கணமே இறந்துபடுவதன்றி உண்டியே உடையே என உவந்துகொண்டு உயிரோம்பி இவ் வுலகத்தில் இருந்து வாழும் பெண்டிர் ஒருவரும் இலர் என்பாள் "வாழ்வார் பலர்" என்றாள். இது குறிப்பு மொழி.

பிரிவு என்பது காதலரிடையே நிகழ்வதோர் புடை பெயர்ச்சி. இது, வினையாண்மையில் மூண்டு அயலகலும்படி தலைமகன் நின்றுள்ள இயல்பினையும், தலைமகள் அவன்மேல் காதல் பூண்டு நிற்கும் நிலையினையும் இனிது விளக்கி உழுவலன்பிற்கு ஓர் உரையாணியாயமைந்துள்ளது. ஓதல் முதலிய மேதகவான சில காரணங்களை முன்னிட்டு இப் பிரிவு நிகழும் என்க.

"ஓதல் பகையே தூதிவை பிரிவே" (தொல்காப்பியம்.)

கல்வி, பகைவரை வெல்லுதல், மறுபுல மன்னர் இருவர் மாறுபட்டுப் பொருதிறமுனைந்துநிற்குங்கால் அவர்க்கு இடையே சந்து சென்று தகவாற்றுதல், என்னும் ஏதுக்களால் பிரிவு ஏற்படும் என ஆசிரியர் தொல்காப்பியனார் இதில் வரம்பு செய்துள்ளமை காண்க. உயர்ந்த தலைமகனது சிறந்த நிலைமைக்கு இயைய அறிவு வீரங்களை இங்ஙனம் முதன்மையாகக் குறித்திருப்பினும் பொருள் முதலியனவும் பொருந்திவரும் என்க.

"ஓதல், காவல், பகைதணி வினையே,
வேந்தர்க் குற்றுழி, பொருட்பிணி, பரத்தை, என்று
ஆங்கவாறே அவ்வயிற் பிரிவே" (இறையனாரகப்பொருள்)

இவ்வகையில் ஏதேனும் ஒன்றால் தலைவன் பிரிவுற நேருங்கால் தலைவி அதனைச் சகியாது அலமருவளாதலால் இது பிரிவாற்றாமை என நின்றது. இங்ஙனம் ஆற்றாது மறுகும்போதெல்லாம் தோழி இவளை ஆற்றி ஆதரிப்பள். இந்நிலை கோவைத் துறையில் தலைவியைப் பாங்கி கழறல் எனவரும்.

"புணர்ந்தாருள் வெங்கை புரநாதர் பாகம் புணர்ந்த நறு
மணந்தாழ் குழலுமை மங்கை அல்லாமல், மகிழ்நர் தமைத்
தணந்தார் அமைகிலர்? நீ தரியாமல் தளர்ந்தனையேல்
பணந்தாழகலல்குலாய்! நகுவார் நினைப்பார்த்தவரே."
(திருவெங்கைக்கோவை)

"வணந்தரு வெய்யோன் முதலவர்போய்ப்போய் வருதல்கண்டு
மணந்தவர் ஈண்டுத் தணந்தனர் என்ன வருந்தல் என் நீ?
பணந்தரு பூணினர் கோடீச்சுரநித்தர் பைம்பொன் வெற்பில்
தணந்தவர் மீண்டு மணந்திடுவார்மென் தளிரியலே"
(கோடீச்சுரக்கோவை.)

"திருவும் பணி அணங்கே! பிரிவார் தினம் கேள்வர் என்று
மருவும் பழங்கண் உழப்பதென்னோ? வறியோர்க்கருளும
பொருளும் புரிந்த குலோத்துங்க சோழன் புகார் வரைவாய்ப்
பிரிவும், புணர்ப்பும் பிறப்பவர் யார்க்கும் பெருவிதியே."
பழங்கண் = துன்பம். (குலோத்துங்கன்கோவை)

"சிறந்தார் தெரிந்த செழுந்தமிழ் வாணன் தென்மாறை வெற்பர்
துறந்தார் எனே என்று சோருவதேன்? இந்தத் தொல்லுலகில்
பிறந்தார் எவர்க்கும் பிரிவெய்துமால் வெய்யபோரமர்க்கட்
புறந்தாழ் கரிய குழற் செய்யவாய் ஐய பூங்கொடியே"
(தஞ்சைவாணன்கோவை).

இவ்வாறு பல நீதிகளையும் எடுத்துக் காட்டி, பிரிவு என்பது தலைவியர்பால் இயல்பாக நிகழும் ஆதலால் அதனைப் பலரும் ஆற்றி யிருப்பர்; அவ்வாறே நீயும் ஆறியிருக்க வேண்டும் என்று தேறுதல் கூறிய தோழியைத் தலைவி சீறி நோக்கி ஆமா "இருந்து வாழ்வார் பலர்" என இகழ்ச்சிக் குறிப்போடு எதிர் மறை நோக்கில் இங்ஙனம் இணைந்து மொழிந்தாள். பிரிந்தபோதே இறந்து போவல் என்பது கருத்து.

நாயகன் பிரிந்துபடின் நாயகி உடனே இறந்து படுவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை பதுமகோமளை பால் உணரப்படும்.

## கதை.

பதுமகோமளை என்பவள் தெய்வத் தச்சனுடைய அருமைத் திருமகள். எவரும் வியக்கத்தக்க எழில்நலமுடையவள். இவளது உருவநிலை உம்பருலகெங்கணும் உவந்து புகழ நின்றது. அசுரேந்திரனுகிய சூரபன்மன் தனது அருந்தவப்பேற்ருல் ஆயிரத்தெட்டு அண்டங்களுக்கும் அதிபதியாகி வீர மகேந்திரத்திலிருந்து அரசுபுரிந்து வருங்கால் இவளது பேரழகைக் கேள்வியுற்றுப் பெருங் காதல் கொண்டான். தனது குல குருவாகிய சுக்கிராச்சாரியரிடம் உளநிலையை உரைத்து இவளை மணம் பேசி வரும்படி விடுத்தான். அம்மதிமான் சென்று இரு முதுகுரவரிடமும் இனிதுரையாடி இவ் அதிரூபவதியை அம் மன்னனுக்குத் திருமணஞ்செய்து வைத்தான்.

"மதிமுகத் திருவே போல்வாள், வானவர்புனைவன் தந்த
பதும கோமளை என்றோதும் பாவையைப் புகரோன் நாடிச்
சதுர்முகன் முதலாந் தேவர், தானவர், பிறரும் போற்ற
விதிமுறை வதுவை செய்து விழைவொடு மேவியுற்ருன்"
புகரோன் = சுக்கிரன். (கந்தபுராணம்)

இவ் வகை மேவி நின்ற அவன் இவளை ஆவியும் அமிர்து மாகப் பாவித்து அரிய போகங்களை நுகர்ந்து அகமிக மகிழ்ந் தான். வானமும் வையமும் வணங்க வீர அரசு புரியும் அத் தீரனுக்குப் பேரின்ப நிலைபமாய் இவள் பெருகி யிருந்தாள். இருந்துவருங்கால் இவள் திரு வயிற்றில் ஒரு புதல்வன் பிறந் தான். அவன் அருந்திறலுடையவன். இளமைப் பருவத்தி லேயே சூரியனைச் சினந்து பற்றித் திடுக்கிடும்படி வென்றுனத லால் பானுகோபன் என அவன் பெயர் பெற்று நின்றான். பெற லருந் திருவோடு அரிய நலங்கள் பலவும் பெற்றுக் கற்புக்கரசி யாய் நின்ற இவள் தன் கொழுநனை உயிரினும் இனியனு உவந்து பேணி வந்தாள். அவனும் இவளை யாதும் இடை பிரியாது ஆர்வமுற்று நின்றான். இன்பந்திளைத்து இங்ஙனம் இசை பெற்று நின்ற அவன் முடிவில் அமரர்களுக்கு இடர்மிகச் செய் தான். கொடுங்கோலனுய் நிமிர்ந்து மேலும் மேலும் கடுங் கேடுகள் செய்து கதித்து நின்றமையால் அவனை அடும்படி நினை ந்து பெரும் படையோடு வந்து அறுமுகப் பரமர் அவனது திரு நகரை வளைந்தார். நிகழ்ந்துள்ள நிலையினை நுணுகி யறிந்து தன் காதலனை யணுகிப் பல நீதிகளுரைத்து எம்பெருமானது அருமை பெருமைகளை இனிது விளக்கி உறுதி நாடி உய்யும்படி இவள் உளைந்து வேண்டினாள்.

"பேதை வானவர் தங்களைச் சிறையிடைப் பிணித்தாய்
ஆதலால் உனக்கானது என்? துன்பமே யல்லால்;
ஏதும் ஓர் பயன் இல்லதோர் சிறு தொழில் இயற்றி
வேதனைப் படுகின்றது மேலவர் கடனே? (க)

குரவரைச், சிறு பாலரை, மாதரைக், குறைதீர்
விரதநற்றொழில் பூண்டுளோர் தம்மை, மேலவரை,
அருமறைத் தொழிலாளரை, ஒறுத்தனரன்றே
நிரயமுற்றவும் சென்று சென்றலமரும் நெறியோர்; (2)

அமரர்தம்பெரும் சிறையினை நீக்குதியாயின்
குமர நாயகன் ஈண்டு போராற்றிடக் குறியான்;
நமது குற்றமும் சிந்தையிற் கொள்ளலன்; நாளை
இமையொடுங்குமுன் கைலையில் மீண்டிடும் எந்தாய்?

எனச் சிங்கமுகன் சொல்லியபடியே இவளும் நல்ல உறுதிகள் பல சொல்லி வேண்டியும் அவ் வல்லாளன் யாதும் இசையாமல் அமரையே விளைத்தான். பெரும் போர் மூண்டது. அதில் அவன் இடைபிரிய நேர்ந்தபோதெல்லாம் இவள் உடல் மெலிந்து உயிர் பதைத்திருந்தாள். முடிவில் அவன் அங்கு முடிந்து வீழ்ந்தான். அவன் இறந்துபட்டதைக் கேட்டவுடனே இவள் பரிந்து விழுந்தாள்; பதைத்து மாண்டாள்.

"அது நிகழ்ந்துழி அகன்பதி அவுணர்கள் ஒரு சில்லோர்
கதுமெனச் சென்று காவலன் கந்தவேள் உய்த்திட்ட
நுதிகொள் வேலினல் மாய்ந்தனன் என்பதை நுவலுற்ருர்
பதுமை அம்மொழி கேட்டனள் துணைவியர் பலரோடும்;

காவல் மன்னவன் இறந்தனன் எனும் உரை கன்னத்துள்
மேவும் எல்லையில் அசனி யேறுண்ட வெம்பணியேபோல்
தேவியாகிய பதுமகோமளை எனும் திருமங்கை
ஆவி நீங்கினள்; தலை அளி யாகியது அதுவன்ருே!"
(கந்தபுராணம)

தனது கொழுநன்பால் வைத்திருந்த இவளது உழுவலன் புடைமை இதனல் இனிதறியலாகும். இவளுடைய ஆர்வ நிலையை வியந்து அமரரும் துதித்தார். எம்பெருமானும் அருள் புரிந்து நின்ருர். அருங் கற்புடைய பெருங் குலக் காதலிகள் பிரிவாற்றிப் பின் இருந்து வாழார் என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்ருள்.

"ஒருயிராக உணர்க உடன் கலந்தார்க்கு
ஈருயிர் என்பர் இடைதெரியார்—போரில்
விடன்வந்தும் வேலோற்கும், வெள்வளையி னுட்கும்,
உடனே உலந்த துயிர்" (புறப்பொருள்)

மேற்குறித்த காதலி நிலையை இதுகாட்டி யுள்ளமை காண்க.

செயிர்தீர்ந்த கேள்வன் சிறிதகலின் வாழாள்
உயிர்தீர்ந்த போதேன் உடல்.

காதலரைப் பிரிந்திருத்தலினும் சாதல் இனிதென்பது இத னல் கூறப்பட்டது.

இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்.

காதலன் பிரிவைக் காதலி சகியாள். பிரிவினை உள்ளுந் தோறும் அவள் உள்ளங்கவல்வள். தேற்றம் அரிதெனத் தியங்கி நிற்பள். அஞ்சலென்றவர் நீங்கல் வஞ்சமென்று வைவள். பிரிவின்மையையே கருதி மகிழ்வள். பிரிவுரைப்பாரைப் பெரிதும் இகழ்வள். கணவன் பிரியின் அவள் கைவளை சோரும். பிரிந்து வாழ்தல் பெருந்துயரென்பள். பிரிவுத் துயர் எரியினுங் கொடிதென்பள். உடையவன் பிரிந்துபடின் உடனே அவள் இறந்துபடுவள் என்பதாம்.

௱௰௬-வது பிரிவாற்றாமை முற்றிற்று.

---

# 117ம்-அதிகாரம்
## படர்மெலிந்திரங்கல்.

அஃதாவது துன்பத்தால் மெலிந்து புலம்புதல். படர்= துன்பம். இங்குக் காம நோய் என்க. தலைமகனைப் பிரிந்து வருந்தி யிருந்த தலைமகள் அவனை இடையறாது நினைந்து உடல் மெலிந் துளைதலை இதில் உணர்த்துகின்றாராதலால் பிரிவாற்றாமையின் பின் இது வைக்கப்பட்டது.

1161. நேர்ந்துநின்ற நோயை நிறைமறைத்தும் பாமதிபால்
கூர்ந்தெழுந்த தென்னே குமரேசா—சேர்ந்து
மறைப்பேன்மன் யானிஃதோ நோயை இறைப்பவர்க்
கூற்றுநீர் போல மிகும். (க)

இ.—ள்.

குமரேசா! நின் அகத்தமைந்த காம நோயைப் பாமதி மறைத்து நின்றும் ஏன் அது மிகுத்தெழுந்தது? எனின், நோயை யான் மறைப்பேன்; இஃதோ இறைப்பவர்க்கு ஊற்றுநீர்போல மிகும் என்க. கூர்ந்து = மிகுந்து.

இது, தன் காம நிலையினைக் காதலி கனூழ்ந்து கூறுகின்றது. நோய் என்றது காம நோயை. மறைத்தல் = பிறரறியா வகை ஒளித்து வைத்தல். இறைத்தல் = தண்ணீரைக் கோதி வெளியே தள்ளல். இஃதோ = இக் காம நோயோ. அண்மையில் சுட்டியது தன்னகத்துள்ள தன்மை நோக்கி.

ஊற்று நீரைக் குறித்தது மாற்றாது சுரக்கும் ஏற்றம் கருதி. மறைப்பதால் பயனில்லை என்பது தோன்ற நின்றமையின் மன் ஒழிபிசைக்கண் வந்தது. ஒழியிசையாவது ஒழிந்துள்ள பொருளை உணரவருவது. தான் கைமுயன்று நின்றமை தோன்ற யான் என்றாள்.

எனது காம நோயை அயலறியாவகை யான் மறையா நின்றேன்; நின்றும் அஃது இறைக்கின்றவர்க்கு ஊற்றுநீர்போல் மிகா நின்றதென்பதாம்.

தலைவனைப் பிரிந்து உடல் மெலிந்து உளமிக வருந்திப் படருழந்தயரும் தலைவியை நெருங்கி "இவ்வாறு அலமந்தயர்தல் சரியன்று; விரகதாபத்தை நீங்கள் அடக்கியிருக்கவேண்டும்;" என்று தோழி வேண்ட அவளை நோக்கி இவ்வாறு அவள் உரைத்தாள் என்க. இறைக்க இறைக்க நீர் சுரந்து வருதல்போல் மறைக்க மறைக்கக் காமம் மிகுந்து படும் என்பாள் "ஊற்று நீர் போல மிகும்" என்றாள்.

ஊற்று, நெஞ்சுக்கும்; அதிலிருந்து ஊறிவரும் நீர், காம நோய்க்கும்; இறைப்பவர், தலைவிக்கும்; உவமைகளாக இதில் ஓர்ந்து கொள்க. காமத்தை ஊற்று நீரோடு ஒப்பவைத்தது உள்ளிருந்து கிளைத்தெழுகின்ற அதன் உறுதிநோக்கி. "காமக் கடும் புனல்" என்பதும் காண்க.

"மாமாயனுந்தொழும் வெங்கைபுரேசர் மணிவரைமேல்
பாமாமுனிவன் மலயாநிலமொரு பால் அசைய,
வேமாயர் வேய்ங்குழலாலூத, மேனிவிறகிற்பற்றும்
காமானலம் அவியா கடலேழும் கவிப்பினுமே"

மலய அநிலம் = தென்றல். (திருவெங்கைக்கோவை).

காமத்தை நெருப்போடு ஒப்பவைத்து அது நீண்டுநிற்கும் நிலை யினை ஓர் தலைவி இதில் உரைத்திருத்தல் காண்க.

தன் உள்ளத்தாசையை நாணத்தால் அடக்கியும் அடங் காது நிமிர்ந்து அது வெளிப்பட்டு நிற்றலைத் தோழியிடம் இங் ஙனம் சொல்லிக் கலுழ்ந்தாள்.

காமநோயை மறைத்து வைக்கமுயலல் ஊற்று நீரை இறைத்தடக்கத்துணிந்ததுபோன்றதோர் பயனில்செயலே ஆத லால் என்பாடறிந்து இனி ஆவனவற்றை நீ நாடிச்செய்க என்ப தாம். தன்னால் இயன்றவரையும் மறைத்துப்பார்த்தும் யாது முடியாமல் வெய்ய காமம் விளைந்து நிற்கின்றபடியைக் கையற்று இவ்வகை கவன்று மொழிந்தாள்.

"இடிக்குங் கேளிர்! நும் குறை யாக
நிறுக்க லாற்றினோ நன்று; மற்றில்ல;
ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கிற்
கையில் ஊமன் கண்ணிற் காக்கும்
வெண்ணெய் உணங்கல் போலப்
பரந்தன்று இந்நோய் நோன்று கொளற்கரிதே"

நோன்றல் = பொறுத்தல். (குறுந்தொகை 58)

சுடுபாறையில் இட்ட வெண்ணெய் பரந்ததுபோலக் காமநோய் விரிந்ததென இஃது உரைத்து நிற்றலறிக. வேறியாவகையாதும் அதனைச்செய்ய இயலாது என்பதற்குக் கையில்லாத ஊமன் கண்ணால் காக்கும் எனக்குறித்து இஃதுணர்த்திநிற்கும் அழகை யூன்றி யுணர்ந்துகொள்க.

தலைவனைப்பிரிந்த தலைவி விரக வேதனையால் மெலிந்து செயலற்றிருக்கும் நிலை இதனால் அறியலாகும். பிரியாவுள்ளத் தளாய் இவ்வாறு பேதுற்றிருத்தலைத் தோழியறிந்து வருந்தித் தலைவனை எதிர்ப்பட்டு இந்நிலையினையுணர்த்தி நலமுறக் கூட்டுவிப் பள் என்க.

"ஊரலர் எடுத்தரற்ற வுள்ளாய் நீ, துறத்தலின்
கூருந்தன் எவ்வநோய் என்னையும் மறைத்தாள் மன்!
காரிகை பெற்றதன் கவின்வாடக் கலுழ்பாங்கே
பீரலர் அணிகொண்ட பிறைநுதல் அல்லாக்கால்;

இணைப்வெவ்வர் அலர்தூற்ற எய்யாய் நீ, துறத்தலின்
புணையில்லா எவ்வநோய் என்னையு மறைத்தாள் மன்!
துணையாருட் டகைபெற்ற தொன்னலம் இழந்தினி
அணிவனப் பிழந்ததன் அணைமென்றோள் அல்லாக்கால்;

இன்றிவ்வூர் அலர்தூற்ற எய்யாய் நீ, துறத்தலின்
நின்றதன் எவ்வநோய் என்னையும் மறைத்தாள் மன்!
வென்றவேல் நுதிஏய்க்கும் விறனலம் இழந்தினி
நின்று நீருகக்கலுழும் நெடும் பெருங்கண் அல்லக்கால்".
எய்யாய் – அறியாய். (கலி 124)

நீ பிரிந்து போனபின் வருந்தியிருந்த தலைவி தானுற்ற காம நோயை யானும் அறியாவகை மறைத்தாள்; மறைத்தும் என்? அவளுடைய நெற்றியும், தோள்களும், கண்களும் அதனை வெளிப்படுத்தி நின்றன என ஒரு தோழி தலைமகனைச்சந்தித்து உரைத்திருக்குந்திறனை இதில் ஊன்றிப்பார்க்க.

துணைவனை நினைந்து துயரத்தால் மெலிந்து துணைவி இரங்கியிருத்தலை உணர்த்தி நிற்றலால் இது படர்மெலிந்திரங்கல் என்க.

காம தாபத்தை மறைக்கமுடியாமல் காதலிகள் மறுகி நிற்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பாமதியால் உணரப்படும்.

## கதை.

பாமதி என்பவள் வரதுங்கராமபாண்டியனுடைய அருமைத்திருமனைவி. வழிவழியாகப் பாண்டியமன்னர்க்குத் திறை செலுத்தி வந்த குறுநில மன்னன் மரபில் பிறந்தவள். அரும் பெறலுருவினள். அழகிற்சிறந்திருந்தது போலவே அறிவிலும் இவள் உயர்ந்திருந்தாள். பல நூல்களையும் பயின்று, தலைமை

யான புலமையடைந்து, கவிபாடுந்திறமும் கைவரப்பெற்று அப் புவி அரசனுக்குப் புகழும், இன்பமும் பொருந்தஉதவி இவள் சிறந்து நின்றாள். இவ்வழகியோடமர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து அவன் அகமிக மகிழ்ந்தான். இப்பாண்டிமண்டலத்து மட்டுமன்றி மறுபுலங்களிலும் அவன்புகழ் மிகுந்திருந்தது. தென்காசி, கரிவலம்வந்தநல்லூர், வரதுணி என்னும் மூவிடங் களிலும் மேவியிருந்து கோவியல் புரிந்த அப்பாண்டியன் இத் தேவியை யாண்டும் பிரியானாய் ஆதரித்து வந்தான். அன்றியும் பேடும் போல் ஒன்றிய காதலோடு உடனுறைந்திருந்த இவரது இன்பவாழ்க்கையை எவரும் உவந்து புகழ்ந்தார். இவ்வண்ணம் இருந்துவருங்கால் ஒருமுறை இவளைக்கருவையம்பதியில்வைத்து விட்டுக் காரியங்கருதி அவன் பிரிந்து சென்றான். சென்றவன் வினையாண்மையில் மூண்டு நின்றமையால் இவளை நினையாமல் நீண்டு நின்றான். அப்பிரிவிடை இவள் பெரிதும் வருந்தினாள். உணவும் துயிலும் ஒழிந்து கணம் ஓர் ஊழியாகக் கருதி யுளைந் தாள். அறிவுடையளாதலால் தன் காதல் நிலையை யாவரையும் அடக்கி வந்தாள். முடிவில் யாதுமுடியாமல் பேதுறலானாள். உடல் மெலிந்து உள்ளங்கரைந்து உயிர்த்தயர்ந்து கிடந்தாள் நாரை குயில் அன்னம் வண்டு முதலிய பறவையினங்களை நோக் கிப் பரிந்து புலம்பினாள். சில அடியில்வருவன காண்க.

"செப்பாருமுகிழ்முலையார் எல்லாரும் கணவருடன் சேர்ந்துவாழ
ஒப்பாரும் இல்லாஎன் கணவனுடன் யான் கூடி உறவாடாமல்
வெப்பாலும், மிகுசாமத்துயராலும், நாடோறுமெலிந்து வாடி,
இப்பாடுபட என்றோ இறைவன் என்தலையோட்டில் எழுதினானே.

என்னை இவ்வாறவர் மறந்தும், யானவரை மிக நினைந்திங்கிருந்துவாட
முன்னைவினைப்பயன்தானோ? அப்பிறப்பிற்செய்த தவ முடிந்தவாறோ?
கன்னன் மதன் அபிராமன் வரதுங்கராமன் இயற்காசி நாட்டில்
அன்னவயற்குருகினங்காள்! இனி எவ்வா றுயிர்தரித்திங்காற்றுமாறே.

எண்டிசாமுகத்துந் திங்கள் இளநிலாவெள்ளம் காயக்
கொண்டமால் பெருகுந்தோறும் கொழுங்கணீர்முலையிற்சோரப்
பண்டு நாமறியாக் காமத்துயரினால் படுவதெல்லாம்
வண்டுகாள்! உரையீர்! உங்கள் வரதுங்க ராமனுக்கே".

இதனால் இவளது புலமை நிலையும், தலைமை யன்பும், இனிதறி யலாகும். "ஒப்பாரும் இல்லா" எனத் தன் கணவனைக் குறித்துப் பிரிவிடைவருந்தி இவள் மறுகியிருக்கும் திறனும், உரிமைநிலையும் பிறவும் இதில் ஊன்றி உணர்ந்து கொள்க. காமவேதனையால் இன்னணம் கலங்கி அயருங்கால் தருமசிகைஎன்னும் தோழி வந்து "பேரறிவுடைய நீங்கள் சிறிது ஆறியிருக்கவேண்டும்" என்று தேறுதல் கூறினாள். "நான் மறைத்திருப்பினும் என்னை அறியாமலே என் காதலன்பால் கருத்தோடி நின்று காமம் வருத்துகின்றதே" என இவள் வருந்தி மொழிந்தாள். நாணால் மறைப்பினும் காம நோயானது மிகும் என்பதை உலகம் இவள் பால் உணர்ந்து நின்றது.

காதலர்தங் காமம் கரவார் கரைகடந்து
வேதனைகள் செய்யும் விரைந்து.

கரப்பினும் காமம் கதித்தெழும் என்பது இதனால் கூறப் பட்டது.

1162. மண்டு மெழிற்கனக மாலை மறையாமல்
கொண்டழுந்தாள் நோயேன் குமரேசா—தண்டிக்
கரத்தலு மாற்றேனிந் நோயை நோய் செய்தார்க்
குரைத்தலு நாணுத் தரும். (உ)

இ.—ள்.

குமரேசா! தன் காம நோயை அடக்க முடியாமல் கனக மாலை ஏன் அலமந்திருந்தாள்? எனின், இந் நோயைக் கரத்த லும் ஆற்றேன்; நோய் செய்தார்க்கு உரைத்தலும் நாணுத்தரும் என்க.

இந் நோயை = இக் காம வேதனையை. கரத்தலும் = மறைக் கவும். ஆற்றேன் = செய்யேன். தன் மாட்டாமை தோன்ற ஆற்றேன் என்றாள். முயன்று முயன்று பார்த்து யாதும் மறை க்க முடியாமையால் முடிவில் இங்ஙனம் உரைக்கலானாள். இத னால் கைகடந்து நிற்கும் அவளது காம நிலை புலனாம்.

நோய் செய்தார் என்றது தலைவனை. விரகவேதனையால் மெலிந்து தளர்ந்து இவள் வருந்தி யுளைதற்குக் காரணம் அவன் பிரிந்துபோய் விரைந்து வராமல் அமர்ந்து நிற்றலே ஆதலால் அவனை நோய் செய்தார் என்றாள். அகன்ற காலை நோய் என்றத னால் அணுகியபோது அவன் மருந்தாவன் என்பதாயிற்று. "வேம் இருந்தை எனக்கனலும் வெங்காம வெம்பிணிக்கு மாமருந்தே!" (இராமாயணம்) என இராமனைக் குறித்துச் சூர்ப்பணகை புலம்பியுள்ளதும் காண்க. இருந்தை = கரி.

தன் விரக வேதனையைக் காதலனுக்கு உரை செய்யத் துணிந்த பொழுது உள்ளத்தில் இலச்சை தோன்றியதாதலால் "உரைத் தலும் நாணுத்தரும்" என்றாள். உம்மை எண்ணுப் பொருளது. "கடலன்ன காமம் உழந்தும் மடலேறா" மாண்புடைய பெண் பிறப்பினளாதலால் உள்ள நிலையை உரைக்க நாணினள் என்க.

> "தாமுறு காமத்தன்மை தாங்களே உரைப்பதென்பது
> ஆமென லாவதன்றே அருங்குல மகளிர்க்கு அம்மா"
> (இராமாயணம்) என்பதும் ஈண்டெண்ணத்தக்கது.

மேல், காமநோயை மறைக்க முடியாதென்றாள்; இதில், அதனை வெளிப்படையாக உரைக்கவும் இயலாதென்கின்றாள்.

இக் காமதுன்பத்தைப் பிறரறியா வகை மறைக்கவும் வல்லேனல்லேன்; துயர் செய்த காதலர்க்கு உரைத்து விடவும் உள்ளங் கூசுகின்றது; யான் என்ன செய்வேன்? என்பதாம். துணைபிரிந்த அன்றில் போல் கணவனைப் பிரிந்து வருந்தியிருந்த தலைவியைத் தோழி அணைத்து "அயலறியாவகை ஆறியிருங்கள் அல்லது தூதுமூலம் காதலர்க்குக் கூறிவிடுங்கள்;" என்று ஓதி வேண்ட அவ்வமயம் அவளை நோக்கி இவள் கூறியபடியிது.

காத்தற்கும் முடியவில்லை; உரைத்தற்கும் நாணுகின்றேன்; என்றதனால் இனி இந் நோயால் இறத்தற்கே உரியன் என அவள் ஏங்கி நின்றமை புலனும்.

தலைவனைப் பிரிந்த குலமகள் ஆசை வெட்கங்களால் அலமந் திருப்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கனகமாலை பால் உணரப்படும்.

## கதை.

கனகமாலை என்பவள் மத்திமதேயத்து மன்னனாகிய தடமித்த னுடைய அருமைத் திருமகள். அரமடந்தையரும் வியந்து நோக்கத்தக்க சிறந்த வடிவினள். பருவமடைந்து அரிய நலங்க ளோடு கன்னிமாடத்தில் இவள் மருவி யிருந்தாள். இவளது எழிலமைதிக்குத் தகுதியான வரனைத் திசைதிசை யெங்கணும் உசாவி அரசன் மறுகி யிருந்தான். இங்ஙனம் இருந்துவருங்கால் ஏமாங்கதநாட்டு இளவரசனாகிய சீவகன் தெய்வகதியாக வந்து அவனது நகரமாகிய ஏமமாபுரியை அடைந்து பல வளங்களையும் பார்த்து முடிவில் அருகிருந்த பூஞ்சோலையுள் புகுந்தான். முன்ன தாகவே அங்குப் போந்திருந்த இவள் அம் மன்னனைக் கண்டு மால்கொண்டு நின்றாள். அவனும் பருகு காதலோடு உருகி நோக்கி இவளருகு நெருங்கினான். காதல் நலங் கனிந்து இரு வரும் கருத்திசைந்து மகிழ்ந்தார். இவளது நிலையினை யறிந்து, மருகனது எழிலையுமுவந்து, அரசன் பெரிதும் விழைந்து திரு மணஞ் செய்து தந்தான். இருவரும் ஒருவா அன்புடன் மருவி மகிழ்ந்து போக நலங்களைப் பொருந்தி நுகர்ந்தார். இவரது இன்பானுபவங்களை வியந்து உம்பருலகமும் உவந்து நின்றது. அடியில் வருவன காண்க.

"மோட்டிளங் குரும்பையன்ன முலைக்கடாக் களிறு, முத்தம்
சூட்டிய ஓடை பொங்க, நாண எனுந் தோட்டி மாற்றி,
ஆட்டிய சாந்தம் என்னும் முகபடாம் அழித்து, வெம்போர்
ஓட்டற ஓட்டிப், பைந்தார் உழக்கியிட்டு உவந்தவன்றே;

தூண்மணிக் குழை வில் வீச, ஒளிர்ந்துபொன் ஞேலை மின்ன,
வண்ணமே கலைக ளார்ப்ப, வான் சிலம்பு ஒலிப்ப, முத்தும்
கண்ணியும் பசும்பொனும் கதிர்முலை புடைப்பக் காமர்
அண்ணலங் குமரன் தன்னொடு ஆயிழை ஆடினாளே;

மூசுதேன் வாரி அல்குற் பட்டபின் முலைகள் என்னும்
மாசறு கந்தின் மென்றோள் மணித்தொடர்க் கொளுத்தி வாட்கண்
ஆசறு வயிரத் தோட்டி நுதலணிந்து அமுதச் செவ்வாய்
காசறு கவளமாகக் களிறுகோட் பட்டதன்றே;

ஒப்பிணை தனக்கிலாதான் உறுவரை அகல மூழ்கிச்,
செப்பிணை அனைய செங்கேழ் வனமுலை பொருது சேப்பக்,
கற்பக மரத்தைப் புல்லிக் கைவிடா தொழிந்து, காமத்
துப்புரவுமிழும் காமவல்லியின் தோற்றம் ஒத்தாள்;

காய்வுறும் வேட்கைதன்னால் கங்குலும் பகலும் விள்ளான்
வேய்வெறுத்தமைந்த தோளாள் விழுத்திரை அமுதம் என்று
சேய்நலங் கடந்த செல்வன் திருநலந் தெளித்திட்டாற்ற
வாய்விடாள் பருகியிட்டாள் மடக்கிள்ளை மருட்டுஞ் சொல்லாள்;

திரையிடைக் கொண்ட இன்னீர் அமுதயிர் பெற்றதென்னும்
உரையுடைக் கோதை மாதர் ஒளிநலம் நுகர்ந்து நாளும்
வரையுடை மார்பன் அங்கண் வைகினன் என்ப மாதோ
கரைகடலனையதானைக் காவலன் காதலானே'' (சீவகசிந்தாமணி).

இன்னவாறு காம போகங்களைக் கனிந்து மாந்திக் களிப்புற்றிருந்த அவன் ஒருநாள் வெளிப்பட விரும்பி ஒளிப்புரையாடினன்; ''என் மனத்தகத்தே நீ அமர்ந்திருத்தலால் யான் புறத்தகன்றாலும் உன்னைப் பிரிந்தவனல்லேன்'' என மிக விநயமாக அருச்சணைத்து அவன் உரைத்து நின்றான். பிரிந்துபோகத் துணிந்தன்றோ இங்ஙனம் மொழிந்துள்ளான் என்று இவள் உணர்ந்து நடுங்கினாள்; உளைந்து ஏங்கி நெடுமூச்செறிந்தாள்; அவ்வமயம் இவள் கையில் வைத்திருந்த செங்கழுநீர் மலர் கருங்குவளைபோல் கருகி நின்றது. அடியில்வருவது காண்க.

"விள்ளா வியனெடுந்தேர் வேந்தன் காதல் மடமகளே!
கள்ளாவி கொப்புளிக்கும் கமழ்பூங் கோதாய்! என்மனத்தின்
உள்ளாவி யுள்ளாய் நீ, ஒழிந்தாய் அல்லை; எனக், கையில்
புள்ளாவிச் செங்கழுநீர்க் குவளை செய்தாள் புனைபூணாள்''

இதனால் இவளது காதல் நிலையும், பிரிவாற்றாத பெற்றியும் இனிதறியலாகும். இங்ஙனம் உழுவலன்புடையளாய்க் கெழுதகைமையோடு தழுவி யிருந்த இவளை ஒருநாள் அவன் ஒருவி அகன்றான். அப் பிரிவில் இவள் பெருந்துயருழந்தாள்; படுகிடக்கையாய்ப் பதைத்தலமந்தாள். குயில் அன்றில் சந்திரன் முதலிய காம நலங்களைக் கடுத்து மொழிந்து கடிந்திகழ்ந்தாள். இவள் வெறுத்து மொழிந்தபடியை அடியில் பார்க்க.

"வருந்தியின்ருள், மறந்தொழிந்தாள்; வளர்த்தாள், சொற் கேட்டு இல் கடிந்தாள்; முருந்தின் காறுங் கூழையை; முனிவார் தின்னை என் முனிவார்? பொருந்திற்றன்ருல் இது வென்ருய்; பொன்றும் அளித்திவ் உயிரென்ருப்; திருந்துசோலைக் கருங் குயிலே! சிலம்ப இருந்து கூவுதியால். கூழை=மயிர்.

பெருவெண் திங்கள், மாலகப் பூ மலைந்துபெட்ப நகுகின்றது;
உருவுகொண்ட குரலன்றில்; உயிர்மேல் ஆம்பல் உலாய் நிமிரும்
ஒருபெண்பாலேன் யாருக உலகமெல்லாம் பகையாகி
எரிகொன்றீன்றஇலைப் பனிபோல் இருத்தியால்என் இன்னுயிரே!"

மனமாகிய தாமரையைச் சந்திரன் வாட்டி வதக்குகின்ருன் என்பாள் "அகப்பூ மலைந்து நகுகின்றது என்ருள்." இன்னணம் பன்னிப் புலம்பிப் பரிந்து கிடந்தாள். பேரழகுடைய இவள் பெருந் துயரால் வருந்தி அலமந்ததைக்கண்டு அனைவரும் இரங்கினர்.

"செம்பொற் கடம்பன் செவ்வேலும், காமன்சிலையில் தொடுத்தலர்ந்த
அம்பும், வென்ற வரிநெடுங்கண் அம்மா மதிவாண் முகத்தினுள்
வம்பு பூத்து முருகுலாய்த் தேன் கொப்புளித்து நின்றதோர்
கொம்புவெந்தீயிடைப்பட்டதொத்தாள் விரைசெய் கோதையே"

இவளது வடிவழகும், விரக வேதனையால் மறுகியிருந்தபடியும், இதனுல் அறியலாகும். காதலனை நினைந்து கடுந்துயரடைந்து வெப்புடையளாய் இப்படி மெலிந்தயருங்கால் அனங்கவிலாசனி என்னும் தோழி வந்து ஆறுதல் கூறினுள். கூறியும் இவள் மாறி மயங்கினுள். "அடங்கி யிருங்கள்; அல்லது சீவகசாமிக்கு ஆள்விடுங்கள்" என அவள் அறிவுறுத்தினுள். தன் காம வேதனையை மறைக்கமுடியாமல் மறுகிநின்ற இவள் அதனை உரியவனிடம் உரைக்கவும் நாணி உளைந்து கிடந்தாள். "காத்தலும் ஆற்றேன் இந் நோயை; நோய் செய்தார்க்கு உரைத்தலும் நாணுதரும்" என்பதை உலகம் காண இவள் உணர்த்திநின்ருள்.

நாணுல் தகைந்து நலிகின்ற தென்னுயிரைப்
பூணுத காமம் புகுந்து.

காமம் கனற்றுந்திறம் இதனுல் கூறப்பட்டது.

1163. காமரூபர் மத்திரையேன் காமமுடன் நாணுமடக்
கோமனையுள் நொந்தாள் குமரேசா—ஏமமுறக்
காமமு நாணும் உயிர்காவாத் தூங்குமென்
நோனா வுடம்பி னகத்து. (௩)

இ.—ள்.

குமரேசா! காமமும் நாணமும் கொண்டு மத்திரை ஏன் கருத்தழிந்து நின்றாள்? எனின், என் நோனா உடம்பின் அகத்துக் காமமும் நாணும் உயிர்காவாத் தூங்கும் என்க.

இது, நாணமும் காமமும் உயிரை நலியுமென்கின்றது.

காமம் = ஆசை. நாண் = வெட்கம்.

கா = காவடித் தண்டு. அஃதாவது இரு நுனிகளிலும் சுமைதாங்கி நிற்கும் நெடுங்கழி. முன்னும் பின்னும் பண்டங்களைக் கட்டித் தொங்கவிட்டு நடுவே இது தோழில் தாங்கிச் செல்லப் படும். நீர்ப் பாண்டங்களையும், மதுக் குடங்களையும் பெரும்பா லும் இதனால் தாங்கிச் செல்வர்.

உயிரைக் காவாகவும், காம நாண்களைச் சுமைகளாகவும் குறித் தது அவற்றால் அது அலமந்தயர்தல் கருதி.

மெலியப் பொறுத்தேன் களைந்தீமின் சான்றீர்!
நலிதரும் காமமும் கௌவையும் என்றிவ்
வலிதின் உயிர் காவாத் தூங்கி யாங்கு என்னை
நலியும் விழுமம் இரண்டு" (நெய்தற் கலி 25).

தன் நிலைமையைக் குறித்து ஓர் குலமகள் கூறியிருக்கும் இதில் அடிகள் சுட்டியபடியே உயிரைக் காவாக உணர்த்திநிற்ற லறிக.

நோனா = பொறாத; நொய்ய என்றபடி. துயரால் மெலிந் திருந்தமையால் நோனா உடம்பு என நின்றது.

அகத்து = உள்ளே. உடம்பினுள்ளிருக்கும் உயிரானது ஆசை வெட்கங்களால் அல்லற்பட்டிருத்தலை இங்ஙனம் சொல்லி

அயர்ந்தாள். காமத்தை முதலில் குறித்தமையால் முன் பக்கத்தில் காமமும், பின் பக்கத்தில் நாணுமாக நாடிக்கொள்க. இச்சை யெழுந்த பின்னரே இலச்சை தோன்றுமாதலால் அவ்வியல்பு தோன்றநின்றது.

மேல், காம நாண்களால் கலங்கியுள்ள படியினை யுணர்த்தினள்; இதில், அவற்றின் நிலைகளை யுணர்த்துகின்றாள்.

எனது மெல்லிய உடம்பினிடத்தே காம நோயும் நாணமும் உயிர் காவாகத் தூங்கிநிற்கும் என்பதாம்.

தன்னால் மறைக்க முடியாமல் காமம் காழ்க்கொண்டும், உரைக்கமாட்டாமல் நாணமீக் கூர்ந்தும் உளைந்துநின்ற தலைவியைத் தோழி நெருங்கி ஏதேனும் ஒன்றை ஊக்கிச் செய்யினன்றி உய்வில்லை என உரைத்து வேண்ட அவ்வமயம் அவள் உரைத்த படி யிது.

காமமும் நாணும் ஒத்த அளவுடையனவாய் உறைந்திருத்தலால் என்னால் ஒன்றும் செய்யமுடியவில்லையே என்பாள் "உயிர் காவாத் தூங்கும்" என்றாள். தூங்கும் = கீழ் நோக்கித் தொங்கும். இனி இவற்றைத் தாங்கிநிற்க முடியாதென்பதாம்.

பிரிந்து சென்ற காதலன் விரைந்து வருமாறு அவனுக்குத் தூதுவிடும்படி காமம் கடுத்துத் தூண்டுகின்றது; நாணம் அதனைத் தடுத்தொழிக்கின்றது; அடுத்தடுத்து இங்ஙனம் முரணி வந்த அவை யாதும் மெலிவு தாழ்வின்றிச் சமனேத்து மூண்டு நின்றனவாதலால் அவற்றால் நலிவெய்தியுள்ள என் உயிர் இனி யாண்டுபோம் என அவள் மறுகி நின்றாள். அளவுக்கு மீறிக் காமநோய்தன்னை அலைத்து நிற்றலை இவ்வாறு உரைத்தாள் என்க.

"வேரல் வேலி வேர்க்கோட் பலவின்
சாரல் நாட! செவ்வியை யாகு மதி
யார் அஃதறிந்திசினோரே? சாரற்
சிறுகோட்டுப் பெரும் பழம் தூங்கியாங்கு
இவள் உயிர்தவச் சிறிது; காமமோ பெரிதே" (குறுந்தொகை)

பொறுக்கலாற்றுவகை ஓர் குலமகளுயிரைக் காமம் வருத்தி நிற்றற்கு இதில் குறித்திருக்கும் உவமையைக் கூர்ந்துபார்க்க.

காம இச்சை மிகுந்தாலும நாணத்தால் குலமகள் நைந்திருப்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மத்திரைபால் உணரப்படும்.

### கதை

மத்திரை என்பவள் மத்திர தேசத்து மன்னனுடைய அருமைத் திருமகள், நல்ல குணவதி, பொறையிலும் நிறையிலும் பொற்பிலும் சிறந்தவள். இனிய மொழியினள். பருவ மெய்தி எழில் நலங் கனிந்து இவள் தனியமர்ந்து வருங்கால் பாண்டு மன்னனுக்கும் குந்திதேவிக்கும் அத்தினபுரியில் எத்திசையும் புகழ இயன் மண நிகழ்ந்தது. அத் திருமண முடிந்து இருமதியானபின் இவளது அழகமைதிகளைக் கேள்வியுற்று அம் மன்னன் விழைவுமீக் கூர்ந்தான். தன் சிந்தை நிலையை இவள் தந்தையிடம் உரைக்கும்படி சதசேனன் என்னும் அந்தணனை விடுத்தான். அவன் வந்து கூறவே மத்திரபதி மகிழ்ந்து தன் புத்திரியைக் கொணர்ந்து மித்திர நிலையில் அவ் அரசனுக்கு மணமுடித்துத் தந்தான். அவன் உளமிக மகிழ்ந்து இவளோடமர்ந்து அரிய போகங்களை நுகர்ந்துவருங்கால் இடையே ஓர் முனிவன் சாபம் மூண்டு விளைந்தது. "பெண்ணுடன் முயங்கின் தன்னுயிர் நீங்கும்" என அச்சாபம் முன்னிவந்துள்ளமையை அவன் எண்ணி ஏங்கினன். அணுகியிருந்தால் அழிவுநேருமென் றஞ்சி அரிய வினைகளை மேற்கொண்டு அடிக்கடி அவன் அகன்று நின்றான். அப் பிரிவினை யாற்றாது இவள் பெரிதும் வருந்தினள். அருகிருந்த தோழியிடமும் தனது ஆசை நோயை உரை செய்யக் கூசினள். தன் காம இச்சையைக் காதலனிடம் கூறிவிடவேண்டுமென்று மீறி யெழுந்தபோதெல்லாம் நாணத்தால் இவள் மாறி மயங்கினள். ஊமர் கண்ட கனவுபோல் உரையாடலின்றி உயங்கி மயங்கி இவள் உளைந்து வருங்கால் வசந்த காலமும் பசந்து வந்தது. பண்டு நிகழ்ந்த சாபத்தையு மறந்து ஈண்

டியகாதலோடு பாண்டுவும் இவளும் ஓர் பூங்காவுட் புகுந்தார். இளமைதவழ்ந்து, இன்பநலங்கள்சுரந்து, விழுமியநிலையில் விளங்கியிருக்கும் இவளது வியத்தகுமேனியைநோக்கி வீண்பொழுது போயதே! என அவன் வெதும்பி யிரங்கினன். ஒன்றையும் பாராது பொங்கிய ஆர்வத்தோடு பொருந்தி நுகர்ந்தான். சுரத போகங்களை மாந்தி இருவரு முடிவில் உருகிச் சோர்ந்தார். இவர் போகந்துய்த்தபடியை அடியில் பார்க்க.

"வேனிலின் விளைவினாலும், வேனிலான் விழவினாலும்,
மாநலந் திகழு மூரல் மாத்திரி வனப்பினாலும்,
தானல முறுதல எண்ணிச், சாபமும் மறந்து, மற்றப்
பானலங் கண்ணாளோடும் பாண்டுவும் பரிவு கூர்ந்தான்; (க)

அருந்தளிர் நயந்து நல்கி அலகுடன் அலகு சேரப்
பொருந்துமுன் அவசமாகிப் போகமென் குயிலும் பேடும்
இருந்துமெய் உருகுங் காவில் இரதியும் மதனும் என்ன
வருந்திய காதலோடு மாதவிப் பந்தர் சேர்ந்தார். (உ)

பஞ்சின் மெல்லடியினாளும் கணவனும் பழங்கணோட்டம்
நெஞ்சினை நலிய மேன்மேல் நேயமுற்றுருகி யாங்கண்
எஞ்சிய காலம் எல்லாம் என்செய்தேம்? என்றென்றெண்ணி
வெஞ்சிலை அநங்கவேத முறைமையான் மேவினாரே. (ந)

பூவியல் அமளி பொங்கப் புணர்முலை புளகம் ஏற
மேவிய கலவி யின்ப மெய்யுறு மகிழ்ச்சி முற்றிக்
காவியங் கண்ணி கேள்வன் கமழ்வரை மார்பின் அன்போடு
ஓவிய மெனவே உள்ளமுருகினள் அயர்ந்து வீழ்ந்தாள். (ச)

அரும்பிய விழியும், தொண்டை யமுதுறு பவளவாயும்,
விரும்பிய சுரதபோக மேவரு குறிப்பு மாகிப்
பொரும்படை மதனன் அம்பால் பொன்றினன் போலமன்றல்
சுரும்பினம் இரங்கி ஆர்ப்பத் தோன்றலும் சோர்ந்து வீழ்ந்தான்.
(பாரதம்)

கலவி நிலையில் இங்ஙனம் அலகிலின்பந்திளைத்து அவசமாயினர். விளைந்திருந்த சாபத்தால்-முடிவில் அவன் இறந்துபோயினன். அவன் துஞ்சியதை யறியாமல் இவ் வஞ்சி இன்சொல்லாடி எழுப்பினாள். அவன் எழவில்லை; போகக் களிப்பால்

மோக நித்திரைசெய்கிருன் என ஆகந்தழுவி இவள் அசைத்துப் பார்த்தாள். ஆவி காணேம்; இவள் அயிர்த்தஞ்சினுள்; அலமந்து புலம்பினுள்.

“ சித்திரை வசந்தன் வரு செவ்வியுடன் மகிழா
மத்திரி எனுங்கொடிய வாட்கண்விடம் அன்னுள்
முத்திரை உணார்ந்திலள்; முயக்கமுறும் இன்ப
நித்திரைகொலாம்? என நினைந்தருகிருந்தாள்;

செயிர்த்தவரை ஆவிகவர் தீயுமிழும் வேலான்
உயிர்த்திலன்; விழித்திலன்; உணார்ந்துமிலன்; என்று
அயிர்த்தனள்; அழைத்தனள்; அரற்றினள்; இரங்கா
வயிர்த்தனள்; நிலத்தினுயிர் வானம் இனிதென்பாள்”

இன்னவாறு பன்னி அழுங்கி அம் மன்னன் பிரிந்ததைப் பொறுக்கமாட்டாமல் உடனே நெருப்பில் மூழ்கி அவன் புக்குழிப் புகுந்தாள். காமம் மீறியபோதெல்லாம் நாணத்தால் அடக்கி நைந்திருந்த இவள் முடிவில் மெய்மறந்து கூடி முடிவுறலானுள். காமமும் நாணும் ஒத்த நிலையில் உடன்றெழுந்து குலமகளிரின் உயிரை வருத்தி உலையச்செய்யும் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

இருதலைக் கொள்ளியின் உள்ளெறும்பாய் நின்றேன்
புரிகாமம் நாணம் புணர்ந்து.

ஆசையும் வெட்கமும் உயிரை அலைக்கும் என்பது இதனுல் கூறப்பட்டது.

---

1164. கண்டுநின்ற காமம் கடலென்று தத்தையுளங்
கொண்டுநொந்தாள் என்னே குமரேசா—மண்டியெழு
காமக் கடன்மன்னு முண்டே யதுநீந்தும்
ஏமப் புணைமன்னு மில். (ச)

இ.—ள்.

குமரேசா! காமம் கடத்தலரிது என்று சினதத்தை ஏன் கவன்றிருந்தாள்? எனின், காமக் கடல் மன்னும் உண்டே; அது நீந்தும் ஏமப் புணை மன்னும் இல்லை என்க.

இது, காமநிலையைக் கருதி அயர்கின்றது.

மன் இரண்டனுள் முன்னது நிலைபேறு குறித்தது; பின்னது கழிவுணர்த்தியது. ஏகாரம் தெளிவுதோன்ற நின்றது.

அது நீந்தும் = அக் காமக் கடலைக் கடத்தற்குரிய. ஏமப் புணை = சேமக் கலம். தனக்கு இனிய அரணாய் நின்று இடையூறின்றி எளிது கடக்கும் இன்பக் கப்பல் என்பாள் ஏமப்புணை என்றாள். ஏமம் = சேமம்; இனிய பாதுகாவல் என்க.

மேல், காமத்தை வெளிப்படுத்த முடியவில்லையே என்றாள்; இதில், கடத்தற்கும் வழியில்லையே என்று கலங்குகின்றாள்.

காமம் கடல்போல மிகுதியும் நிலைபெற்றுள்ளதே; அதனைக் கடத்தற்குரிய இனிய கலம யாதும் இல்லையே என்பதாம்.

தலைவனைப் பிரிந்து நிலைகுலைந்தயர்ந்த தலைவியை நெருங்கி "அறிவுடைய நீ இங்ஙன மறுகி அயரலாமா? உறுதியுடையளாய்ச் சிறிது ஆறியிருக்கவேண்டும்" எனத் தோழி தேறுதல் கூற அதற்கவள் மாறு கூறியபடி யிது.

தூதுவிடுத்தோ, நேரில் போயோ, வேறுபல புரிந்தோ என் துணைவனைக் கொண்டுவந்து தந்து உதவி செய்யாமல் சும்மா "ஆறியிரு; ஆறியிரு" என்று அயலே நின்று வீணுரை யாடுகின்றாயே! இப் பசப்பு வார்த்தையால் யாது பயன்? எனத் தோழியை மோதுகின்றாள் ஆதலால் இங்ஙனம் ஓதி நின்றாள். ஒரு துணையும் இல்லாமல் ஆசைக் கடலுட்பட்டு அவதிப்படுகின்றேன் என்பாள் "நீந்தும் புணை இல்லை" என்றாள்.

துணைபிரிந்துள்ள காதலி கரைகாணாத காம நோயால் கலங்கி யிருப்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சினதத்தைபால் உணரப்படும்.

## கதை.

சினதத்தை என்பவள் மத்திம நாட்டிலே, பதுமபுரத்திலிருந்த கீர்த்திதத்தன் என்னும் வணிகர் தலைவனுடைய இனிய

மனைவி. இவள் பெருவனப்பினள். "அணியினுக்கு அழகு செய்யும் அழகினள்; அமிர்தமல்கும், பணிமொழி பவளச் செவ்வாய், வெண்ணகைக், கருங்கட்பாவை" எனப் பூவுலகெங்கும் இவள் புகழ நின்றாள். இவளுடைய கணவன் பெருந் திருவோடு தன் பெயருக்கேற்ப அரும் புகழ் படைத்து அருளும் ஈகையுமுடையனாய் அமர்ந்திருந்தான். முதலில் இவளைக் கந்தருவ முறையில் கலந்து பின்பு உலகறிய மணந்து உலகின்பங்களை நுகர்ந்து ஆர்வமீதூர்ந்தான். அளகம் திருத்தி, மதிநுதல் நீவி, அளி அகற்றிப், புளகஞ்செய் தோளிற் புரிவளை எற்றிப், புதிய தென்றற்கு இளகும் கொழுந்தளிர் மெல்லடி தைவந்து, அல்லும் பகலும் புல்லி மகிழ்ந்து பல்வகையாக இவளிடம் காமச்சுவைகளை அவன் பருகி வந்தான். வருங்கால் ஒருநாள் பொருள் வளம் கருதி அவன் மறுபுலம் சென்றான். அப் பிரிவிடை இவள் பெருந்துயருழந்தாள்; அவனது வரவினை நாளும் நயந்து நைந்து அலமந்தாள். விரகவேதனை மிகுந்திருந்தமையால் திங்கள் தென்றல் முதலிய மங்கலப் பொருள்களை வைது பழித்தாள்; ஆறுதல் கூறிய தோழியரெவரையும் சீறி யிகழ்ந்தாள்.

"சேண்விசும் பெழுந்த திங்கள் நோக்கிக்
கருங்கடுவுமிழ்ந்த கடல் மறித்தொரு
வெண்கடு உமிழ்ந்த தென உளம் வெதும்பும்;
மந்த மாருதம் வந்தழல் வீசுற
ஆற்று ளாகிஅவ் அளக்கரில் நின்றெழும்
ஊழித் தீகொல்? என்று உன்னியே அயரும்;
வேய்ங்குழல் காம வெவ்வழல் கொளுவ
ஊதுங்குழல் என்று உரைத்தகம் நெகிழும்;
மென்மலர் அமளிமேல்விழும்; புரளும்;
அசைந்தெழும், உயிர்க்கும், அந்தோ! என்னும்;
ஒள்ளிதழ் குவித்துயிர்ப் புமிழ்ந்திடும்; அவிழ்ந்த
கருங்குழல் வாமக் கரங்கொடு செருகித்
தனிப்பொற் றூணில் சாய்ந்திடும்; பனிநீர்,
சந்தனக் கலவை, தண்ணறுங் கோதை,
தாளவடங்கள், தரிப்பவந் திறைஞ்சும்

பாங்கியர்ச்சுளிந்து பறித்தவை எறியும்;'' இன்னவகையாகக் காமவெறி கைமிகுந்து இவள் கருத்தழிந்து கிடந்தாள். முடிவில் மதனமாலை என்னும் தோழிவந்து அணைத்தெடுத்து ஆற்றி யிருத்தித் தேறியிருக்குமாறு பல நீதிகள் கூறினாள். யாது கூறினும் இவள் மாறி மயங்கினாள். காதற் கடலுளாழ்ந்து இங்ஙனம் கலக்கமுறுதல் உனக்கழகன்று; பிரிந்துபோன காதலர் விரைந்து வந்து விடுவர்; தெளிந்திரு; எனத் தேற்றினாள். என் நாயகனைக் காட்டி என்னைக் கரை ஏற்றாமல் இவ்வாறு வாயுரை யாடித் தேற்றுவதால் யாது பயன்? என இவள் மோதி நின்று தனக்கு யாதொரு துணையும் இல்லையே என்று அவலித்தயர்ந் தாள். காமக் கடலைக் கடத்தற்கு ஏமப்புணை இல்லை என்று காதலியர் கலங்கி யுளைவர் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

கோம்பிழந்த மென்கோடிபோல் கோதை அலமந்தாள்
நம்பி பிரிந்திருந்த நாள்.

துணையின்றித் தலைவி துயருழந்தமை இதனால் கூறப்பட்டது.

---

1165. காதற் சுநந்தை கடிந்ததேனோ தோழியரைக்
கோதுடைய ளென்றாள் குமரேசா—மோதிவரு
துப்பி னெவனாவர் மற்கொல் துயர்வரவு
நட்பினுள் ஆற்று பவர். (ரு)

இ.—ள்.

குமரேசா! தனக்கு இதம் புரிந்திலர் எனச் சுநந்தை ஏன் தோழியரை இகழ்ந்து மொழிந்தாள்? எனின், துயர் வரவு நட்பினுள் ஆற்றுபவர் துப்பின் எவன் ஆவர் என்க.

துப்பு = பகை. இங்ஙனம் கண்டது அடுத்துள்ள நட்பினைக் கொண்டு. ''படியும் தெவ்வும் துப்பும் பகை என்ப'; (பிங்கலந்தை) '' துப்பு எதிர்ந்தோர்க்கே யுள்ளாச் சேய்மையன், நட்பெதிர்ந்தோர்க்கே அங்கை நண்மையன்''. (புறம் 380) இதில் துப்பு உணர்த்திநிற்கும் பொருளை யறிக.

எவன் ஆவர்கொல் = யாது செய்வரோ? அவர் செய்கை நிலை தெரியமுடியாமையால் இங்ஙனம் ஐயுற்றயர்ந்தாள்.

துப்பு இங்கு நேராமையால் அவர் துப்புத் துலங்கவில்லை யென்பது தோன்ற நின்றமையின் மன் ஒழியிசைக் கண்வந்தது. மன், கொல் என்பவற்றை இடைச் சொற்களாகக் கொள்ளாமல் மனவுறுதியை அழிக்கவல்ல என்று கொண்டு துயர் வரவுக்கு அடையாக்கினுமாம். "துப்பில் எவன்செய்வர் கொல்லோ" என்பதும் பாடம்.

துயரங்கள் என்றது துயர் வரவு என்றது அயல் நின்று இதஞ் செய்பவர்போல் ஆற்றுகின்றாராதலால் அவர் செயல் வரவு பின்பு துயர்விளைவுக்கு ஏதுவாயுள்ளமையை எதிர்நோக்கி. அயரா வகை தோழியர் ஆற்றுவது தலைவிக்குத் துயரங்களாய் நீளுகின்றன என்க. ஆற்றுபவர் = செய்கின்றவர். ஆற்றினவர் என இறந்த காலத்தால் குறியாது இங்ஙனம் குறித்தது செயல் நிகழ்ச்சியின் நிலைமை கருதி.

மேல், பாங்கியர் பயனிலர் என்றாள்; இதில், அவர் படுதுய ராட்டிகள் என்கின்றாள்.

நட்பின் கண்ணே துயர்களைச் செய்கின்றவர் பகையின் கண்ணே யாதுதான் செய்யமாட்டார்? என்பதாம். எத்துணைக் கொடுந் துன்பங்களையும் துணிந்துசெய்வர் என்பது கருத்து. பிரிவிடை வருந்தியிருந்த தலைமகள் தோழியரைக் குறிப்பால் இகழ்ந்து கூறியபடி யிது.

தன்னைத் தனியே விட்டுப் பிரிந்துபோன கணவனைத் தான் பொருந்தி மகிழும்படி திருந்திய சூழ்ச்சிகளைச் செய்யாமல் அருகில் இருந்துகொண்டு இனியன புரிந்து தோழியர் ஆற்றிப் போற்றுதல் தலைவிக்கு விரக வேதனையை மிகுதிப்படுத்துமாதலால் துயர் செய்பவர் என அவரைச் சுளித்திகழ்ந்தாள். நாளும் உடனிருந்து பழகி உறவுரிமை மிகுந்துள்ள எனக்கே இவ்வாறு இடரிழைப்பாராயின் பகைவர்பால் என்ன துன்பங்களையெல்லாம் செய்வரோ என அவரது இன்னு நிலைமையை எண்ணி வைகின்று

ளாதலால் "நட்பினுள் துயர் ஆற்றுபவர், துப்பில் எவன் ஆவர் கொல்?" என்றாள். "உண்ட வீட்டுக்கே இரண்டகஞ்செய் கின்றவர் அண்டை வீட்டுக்கு யாதுதான் செய்யார்" என்னும் பழமொழிப்படி இது உருவெடுத்து நின்றது.

இனியனசெய்யும் பாங்கியரை இன்னு செய்பவராக இங்ஙனம் இகழலாமோ? எனின், காமதாபத்தால் தலைவி கருத்தழிந்துள்ளமையான் இவ்வாறு உரைத்தாள் என்க.

"பதுமமலர் மெல்லணைகிடத்திப், பனிநீர் தெளித்துச், சாந்தணிந்து,
முதிர்வெங்காமக் கனலவிப்பான் முயலாநின்ற மொய்குழலீர்!
அதிருங்கடல்வான் முகட்டிலெழுந்தழற்றுங் கொடிய கதிர் பரப்பும்
மதியங்குளிர மருந்தறிவீர்! வடவைத்தழலும் அவிப்பீரே! (௧)

சீதை ஒருத்தி காதலரைத் தணந்துளாரில் சிறப்புடையள்
ஆதலுணர்ந்தேம், அருகிருந்தோர் அரக்கமாதர் ஆதலினால்;
காதலுளர்போல் தோழியர் சூழ்ந்து இவ்வாறியற்றின் கழிதுயரால்
ஏதமுழந்து உள்ளுயிர் சோரும் என்போல் அயர்வுற்றிருப்பாளோ" (நைடதம்)

இவை தமயந்தி உரைத்தன. தோழியர் செயல்கள் தனக்குத் துயரங்கள் எனக் குறித்து, இத்தகைய பாங்கியர் பக்கத்தில் இல்லாமையால் காதலனைப் பிரிந்திருந்தவர்களுக்குள் சீதை மிகவும் பாக்கியவதி என்று அவள் இதில் உரைத்திருக்கும் அழகைப்பார்க்க.

பிரிவின் துயரால் காதலி அயல்முனிந்தயர்வள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை சுநந்தைபால் உணரப்படும்.

### கதை

சுநந்தை என்பவள் நாகதத்தன் என்னும் வணிகனுடைய அருமைத் திருமகள். திருந்திய பண்பும் பெருந்தகவு முடையவள். இவளது உருவநிலைக்குத் தகுந்த வரனை மிகுந்த ஆர்வத்தோடு தந்தை உசாவி நின்றனுதலால் இவள் பருவ மெய்தியும் ஈராண்டுவரை தனியமர்ந்திருந்தாள். இங்ஙனம் இருந்துவருங்கால் ஏமாங்கத நாட்டிலே இராசமாபுரத்தில் சிறந்துநின்ற கந்துக்கடன் என்னும் வணிகர் தலைமகன் இவளது குணநலங்களையும்

அழகமைதியையும் கேள்வியுற்று விழைவுமீக் கூர்ந்தான். அவன் அறிவிலும் திருவிலும் உருவிலும் சிறந்தவன். அருளும் பொறையும் அமையப்பெற்றவன். பெருங் கொடையாளன். இவளை விரும்பி வந்து மணந்துகொண்டு அரும்பெறலமிர்தம் அடைந்தவர்போல் பெருங்களியுடையனாய் மகிழ்ந்து நுகர்ந்தான் இவளும் உயிரினும் இனியனா அவனை உவந்து பேணி உழுவலன் புடன் தழுவியிருந்தாள். முதிர் காதலோடு இச் சதிபதிகள் மருவியிருந்த அருமையை வியந்து அனைவரும் புகழ்ந்தார்.

"மணியும் முத்தும் மாசறு பொன்னும் பவளமும்
அணியும் பெய்யும் மாரியின் ஏற்பார்க்கு அவை நல்கிக்
கணிதமில்லாக் கற்பகம் கந்துக்கடன் ஒத்தான்;
இணைவேலுண்கண் நந்தையும் இன்பக்கொடி ஒத்தாள்"
(சீவகசிந்தாமணி)

உள்ளன யாவும் உவந்துகொடுத்த அவ் வள்ளலும் இவளும் கற்பகமும், காம வல்லியும்போல் பொற்புறப் புல்லியிருந்த அற்புத நிலையை இதில் அறிந்துகொள்க. இன்பக் கொடி = காம வல்லி. காமவல்லி என்பது கற்பக தருவில் படர்ந்திருக்கும் கொடி. "கற்பகம் சேர்கொடி காமவல்லி" (பிங்கலந்தை) இங்ஙனம் எங்கும்புகழப் பொங்கியகாதலோடு பொருந்திவருங்கால் வேந்துவினையை மேற்கொண்டு அவன் வேற்றிடஞ் சென்றான். அப்பிரிவில் இவள் மறுகியிருந்தாள். விரகவேதனையால் மெலிந் தயர்ந்தாள். அன்றில் தென்றல்முதலிய காமநலங்களைக் கன்றியிகழ்ந்தாள். காமனை வைதாள். தனியாயிருக்கும் என்னை அநியாயமாகக்கொல்கின்றாயே அடபாவிமதனா? என்று பதைத்துப் பழித்தாள்.

"அருவமாய் அணுவாய மனத்தையும்
விரைகொள் வாளி விடுத்துப் பிளத்தலால்
பொருவில் வேள்! கட்புலனிற் புலப்படும்
உருவுபோழ்தல் உனக்கரிதன்றரோ;

கூற்றம் என்னக் கொலைபுரி வேனிலான்
நூற்றிதழ்க் கமலத்திறை நோன்மைய
ஆற்றல்சான்ற மலர்க்கணை ஐந்தலது
ஏற்றம் நல்கின் உலகினை என்செயான். (2)

விரிந்த வேணி விமலன் வெகுளியால்
எரிந்து ளாரிற் பிழைத்தவர் யாவரே?
கரிந்தவேள் பிழைத்து எய்வது கன்னியர்
புரிந்த தீவினையின் புணர்ப் பாகுமே. (௩)

கொன்செய்வாளி குளித்தசெம் புண்ணிடைத்
துன்ப மெய்தத் தழல் சொரிந்தாலென
அன்பர்போல நின்று ஆரம் இறைப்பரால்
என்செயார் உயிர்த் தோழியர் இன்னுமே." (௪)

என முன்னம் தமயந்தி பதைத்த வண்ணமே மன்மதனையும் அருகிருந்து உபசரித்த தோழியரையும் இவள் பழித்துப் புலம்பினாள். முடிவில் விநயமாலை என்னும் தோழிவந்து இனியன பலகூறி இதமுடன் தேற்றினாள். அரச காரியமாதலின் போய்வரட்டுமே என்று முன்பு உறுதிகூறி உடன்படச்செய்து துணைவனை அனுப்பிவைத்தவளாதலால் அவளை இவள் சுளித்து நோக்கி, அன்றும் "கெடுத்தாய்! இன்றும் உரியவள்போல் அருகு நின்று உரைபல பிதற்றுகின்றாயே! அன்றி என் காதலரை யான் அடைதற்குரிய சூழ்ச்சிகள் ஒன்றும் செய்கின்றாயில்லை; அவரும் வந்தபாடில்லை; அம்மா! உங்கள் உறவும் அருளும் மிகவும நன்று; பழகினவர் கண்ணேயே இவ்வாறு படுதுயர் செய்கின்றீர்களே! பகைவர்பால் நீவிர் யாதுதான் செய்யீர்"! என மோதி முனிந்தாள். நட்பினுள் துயர் வரவை ஆற்றுபவர் துப்பின் எவனாவர் கொல்லோ? எனத் தலைவியர் தோழியரை வெறுத்து வைவர் என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள். பின்பு நாயகனை அடைந்தாள்; நலம் பல பெற்றாள். பிரிவாற்றாமையால் தம்மை இகழ்ந்து வைததைப் பின்பு தோழியர் இவளிடம் சொல்லி நகைத்தார்.

ஊறும் உறவில் உறுகண் உஞற்றுவார்
வேறென்ன செய்யார் விளம்பு.

தலைவி தோழியரை வெறுத்துப் புலம்பினமை இதனால் கூறப்பட்டது.

---

1166 கூடிநின்று கேமசரி கோதிலின்பம் துய்த்தாள்பின்
கோடிதுன்பேன் கொண்டாள் குமரேசா—கூடுங்கால்
இன்பங் கடல்மற்றுக் காமம் அஃதடுங்கால்
துன்ப மதனிற் பெரிது. (சு)

இ.—ள்.

குமரேசா! காதலனைக் கலந்திருந்து மிகுந்த இன்பங்களை அனுபவித்த கேமசரி பின்பு அவன் பிரிந்தபோது ஏன் அதனினும் பெருந் துன்பங்களை அடைந்தாள்? எனின், காம இன்பம் கடல்; மற்று அஃது அடுங்கால் துன்பம் அதனிற் பெரிது என்க.

இது, துன்ப நிலையைத் துடித்துக் கூறுகின்றது.

அஃது என்றது காமத்தை. அடுங்கால் = வருத்துங்கால். அதனின் = அக் கடலினும். இன் உருபு எல்லைப் பொருளது. பெரிது = மிகுதலுடையது.

மேல், தன் துன்பம் நீக்கத் துணையாவார் இல்லை என்றாள்; இதில், அஃது அளவிடலரியதென அலமருகின்றாள்.

கூடியிருக்குங்கால் காம இன்பம் கடல்போல் மிகுந்து களிப்பூட்டியது; காதலன் பிரிவில் அது வருத்தநேர்ந்தபோது அக்கடலினும் பெரிதாய்த் துன்புறுத்துகின்றதென்பதாம்.

துணைவனைப் பிரிந்து துயரடைந்து வருந்தியிருந்த தலைவியைத் தோழி நெருங்கி, நீ கலந்தின்புறுங்கால் களிப்புற்றிருந்தாய்; அங்ஙனமே பிரிவிலுறுந் துன்பத்தையும் பொறுத்துக் கொள்ளவேண்டும்; நல்லதைமட்டும் நயந்து அல்லது நேர்ந்தபோது அவலமுறுதல் அறிவாகாது; "நன்றாங்கால் நல்லவாக் காண்பவர், அன்றாங்கால் அல்லற்படுவது எவன்?" (குறள் 379) என இன்னவாறு சில நீதிகளை ஓதி உணர்த்த அதற்கு அவள் மாறு கூறியபடி யிது. முன்பு பெற்ற இன்பத்தினும் இப்பொழுது நான் உற்றுள்ள துன்பம் மிகவும் அதிகமாயுள்ளதே யான் எங்ஙனம் பொறுப்பேன் என ஏங்கி நின்றாள் ஆதலால் "துன்பம் அதனிற் பெரிது" என்றாள். புணர்வில் ஆர்ந்த இன்பம் கைகடந்து கழிந்துபோயது; பிரிவில் நேர்ந்த துன்பம் அனுப

வத்தில் நின்று அடர்ந்துள்ளதாதலால் இதனை நோக்க அஃது இழிந்ததாய் ஒழிந்ததென்க.

காம இன்பத்தைக் கடல் என்றாள் வரம்பு காணுவகை அவள் நுகர்ந்திருந்தமையான். அப்போகம் ஊழி ஓர் கணமாக உண ரச்செய்யுமாதலால் இங்கு ஆழியை ஓர் அளவு காட்டினாள் என்க. வரம்பிடமுடியாதபடி கடலனைய இன்பங்களை முன்பு அனுபவித் திருந்தவள், பின்பு அதனினும் மிகுதியான துன்பங்களை அடைந்தாள என்ற இதனால் சுகமும் துக்கமும் ஒருநிலைப்படா தென்பதாயிற்று. ஆகவே "இன்பமிதாம் இன்பமிதாம் என்ப வெல்லாம் எரியென நஞ்சென நினைக" என்றுவித்தகருரைத்த தத்துவநிலையும் ஈண்டு உய்த்துணர நின்றது.

"எரிதலைக் கொண்ட காமத்தின்பம் நீர்ப்புள்ளி அற்றால்,
பிரிவின்கட் பிறந்த துன்பம் பெருங்கடல் அனையதொன்றால்;
உருகிநைந்துடம்பு நீங்கின் இம்மையோடு உம்மையின்றி
இருதலைப் பயனும் எய்தார் என்று யாம் கேட்டுமன்றே"
புள்ளி = துளி. (சீவகசிந்தாமணி)

இது, கேமசரி காம நோயால் வருந்துங்கால அவள் தாயா கிய நிப்புதி உரைத்தது. அடிகளுரையை அடியொற்றி வைத து தன் அருமை மகளுக்கு அவள் ஆறுதல் கூறியிருக்கும் அழகை இதில ஆய்ந்துபார்கக.

பிரிவிடை நேர்ந்த துன்பம் பெரிதெனை அலமந்து குல மகள் மறுகுவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை கேமசரிபால் உணரப்படும்.

## கதை.

ஏமாங்கத நாட்டு வேந்தலாகிய சீவகனை மணந்து காம நலம் நுகர்ந்து கேமசரி களிப்புற்றிருந்தாள். இவளது போக வெள்ள த்தில் நீந்தி மோக மீக்கூர்ந்து அவன் மூழ்கிக்கிடந்தான். இவள் சுரத நிலையில் அவன் உள்ளம் பறிபோய் உருகி நின்று ஆதலால் உருவையும் தொழிலையும் வியந்து உவந்து புகழ்ந்தான்.

"திருவிற்கும், கற்பகத்தெரியல் மாலையார்
உருவிற்கோர் விளக்கமாம் ஒண்பொற்பூங்கொடி
முருகற்கும், அநங்கற்கும், எனக்கும், மொய்சடை
ஒருவற்கும், பகைத்தியால் ஒருத்தி வண்ணமே"

என அருத்தி யுரையாடி அகமிகமகிழ்ந்தான். திருவின் அழகும், முருகன் வேலும், மன்மதன் வில்லும், இறைவன் முடிப்பிறையும் இவளது உருவம், கண், புருவம், நெற்றிகளோடு உறழ்ந்துள்ளன எனக்குறித்து உளமுருகி அவன் உரைத்திருக்குந் திறனை இதில் ஊன்றி யுணர்ந்து கொள்க. காமதிலகங்களாகிய இவ் இருவரும் ஒருவரை ஒருவர் ஒருவாமல் பருகு காதலோடு மருவியிருந்தார். காதலும களிப்பும் மிகுந்து, கங்குலும் பகலும் விள்ளாது, சாதலும் பிறப்பும் இல்லாதவர்போல நாளும் தழுவி மகிழ்நது, உழுவலன்புடன் ஒழுகி வந்தார். இங்ஙனம் வருங்கால் ஒருநாள் இரவில் தனியே அவன் வழுவி யகன்றான். இவள் துயில் நீங்கி எழுந்தாள்; அவனை அயல் காணுமல் ஐயகோ! என அலமந்து பதைத்தாள்.

"திருமணி குயின்ற செம்பொற் றிருந்துபூங் கொம்பனாள், தன்
கருமணிப் பாவையன்னான் கரந்துழிக் காண்டல் செல்லாள்;
எரிமணி விளக்கமாடத்து இருளறு காறும் ஓடி
அருமணி இழந்து ஓர் நாகம அலமருகின்றது ஒத்தாள்"
(சிந்தாமணி)

இங்ஙன மறுகி ஓடி அருகெங்கும் தேடி எம் மருங்கும் காணுமையால் ஏங்கி யுளைந்தாள்; இனைந்து புலம்பினாள். இவள் புலம்பிய படியை அடியில் பார்க்க.

"யாண்டையாய்! ஐய, அஞ்சினேன் ஆருயிர்
ஈண்டு உடம்பொழிகதது ஏக வலிக்குமால
நீண்டதோளவனே! நிறை யான் இலேன்;
தீண்டுவங்தெனத் தேனின் மிழற்றினாள். (க)

கனிகொள் காமம் கலந்துயிர் ஒன்றலின்
இனியர் மங்கையர் என்பது கூறுவாய்!
பனிகொள் மாமதிபோல் பசப்பூர, யான்
தனியளாவது தக்கதுவோ சொலாய்! (உ)

கழலு நெஞ்சொடு கைவளை சோருமால்;
சுழலும் கண்களும் சூடுறு பொன் என;
அழலு மேனியும் ஆற்றலென்; ஐயவோ!
கிழலின் நீப்பரும் காதலும் நீத்தியோ? (௫)

முலைவைத்த தடத்திடை மூழ்கலுறின்
தலைவைத்து நிலத்தடி தைவருவாய்
சிலைவித்தகனே! தெருளேன் அருளாய்!
உலைவித்தனை என்உயிர் காவலனே! (௬)

நுனசீறடி நோவ நடந்து செலேன்
எனது ஆவி அகத்துறைவாய் எனும் நீ
புனைதாரவனே! பொய்உரைத்தனையால்
வினையேன் ஒழியத், தனி ஏகினையே! (௭)

பருமுத்துறையும் பணைவெம்முலை நின்
திருமுத்தகலம் திளையாது அமையா;
எரிமொய்த்தனலும் இகல்வேல் எரிபுண்
மருமத்தனலும் வகைசெய்தனையே! (௮)

புனமா மயிலே! பொழிலே! புனலே!
வனமார் வழையே! வரையே! திரையே!
இனமாமணிசூழ் எரிபூண் அவனைத்
துனயான் பெறுகோ? தொழுதேன் உரையீர்! (எ)

நெறிநீர் வளையும் நிழல் நித்திலமும்
பொறிநீர புனைந்தெழுதிப் புகழும்
வெறிதாரவன் எவ்வழி ஏகினன்? நீர்
அறிவீர்! உரையீர் அமர்தோளிணைகாள்! (அ)

இழுதார் சுடர்வேல் இளையான் அகலத்து
உழுதீர் உடன் வெம்முலைகாள்! வயிரத்
தொழுவாய் விடையைத் தொடர்கிற்றிலிர்! என்று
அழுதாள் தடமாக அணங்கிழையே. (௯)

மடமா மயிலே! குயிலே! மழலை
நடைமாண் அனமே! நலமார் கிளியே!
உடனும் என் ஐயனை என்றுருகாத்
தொடையாழ் மழலை மொழி சோர்ந்தனளே." (சிந்தாமணி)

இன்ன வகையாகப் பலவாறு பதைத்துப் புலம்பி இறுதி
யில் மயிலே குயிலே என்று விளித்து என் ஐயனை என்றவுடனே

யாதும் உரையாட முடியாமல் உருகி உயிர் சோர்ந்து இவள் மறுகி விழுந்தாள். அருகோடி வந்து தோழியர் அணைத்தெடுத்து ஆற்றி யிருத்தினர். அவ்வமயம் இல்லுறை தெய்வம் யாரும் வியப்ப ஒல்லெலன எழுந்தது.

"மல்லுறை அலங்கல் மார்பன் பிரிவெனும் எரியுள் வீழ்ந்து
கல்லுறை நாகுவேய்த்தோட் கதிர்மணி முறுவற் செவ்வாய்
வில்லுறை புருவமாதர் வெந்தனள் கிடப்ப, மின்றேய்
இல்லுறை தெய்வம் நோக்கி இரங்கிநின் றுரைக்குமன்றே"

கடிமனைநின்ற கன்னித் தெய்வம் இவள் படுநிலைக்கிரங்கிச் சில முடிவுரையாடின. "புணர்வில் இன்பமும் பிரிவில் துன்பமும், இணர்பூங் கோதாய்! உணர் பகல் இரவு என, உறழ்ந்து வருதல் இவ்வுலகத்தியற்கை நீ, உழந்துபடுதல் உணர்வன்றே" என உறுதி பலகூறி உணர்த்திநின்றது. நிற்கவே இவள் விதிர்த்து நோக்கி எதிர்த்துரை யாடினள். யான் கூடி நுகர்ந்த இன்பம கடல்போல்வதாயினும் இப் பிரிவுத் துயரம் அதனினும் பெரிதா யுள்ளதே! என இவள் மறுகி மொழிந்து மயங்கி விழுந்தாள். "காம இன்பம் கடல்; மற்று அஃதடுங்கால் துன்பம் அதனிற் பெரிது" என்பதை உலகம காண இவள் உணர்த்திநின்றாள்.

இன்பம் துளியா எழுகடலாய் நீண்டதே
துன்பம் பிரிவில் தொடர்ந்து.

காமதாபத்தின் கடுநிலை இதனால் கூறப்பட்டது.

---

1167. நள்ளிரவி லுந்துயிலை நண்ணாது சீத்தியேன்
கொள்ளைநோய் கொண்டாள் குமரேசா—தள்ளரிய
காமக் கடும்புனல் நீந்திக் கரைகாணேன்
யாமத்தும் யானே யுளேன். (எ)

இ.—ள்.

குமரேசா! நடு நிசியிலும் துயில் கொள்ளாது சீத்தி என் தனியிருந்து துயருழந்தாள்? எனின், காமக் கடும்புனல் நீந்திக் கரைகாணேன் யாமத்தும் யானே உளேன் என்க.

கடும் புனல் — பெரு வெள்ளம். ஆழ்ந்து விரிந்து சுழன்று சுளித்து விரைந்து மிகுந்த கொடு நீத்தம் என்பாள் கடும்புனல் என்றாள். கடுமை அடை கொடுத்தது அதன் கொடுமை நோக்கி.

காமத்தை நீந்தலாவது ஆசை மிகுந்தெழுந்தபொழுது அறிவு நாணங்களால் அதனை அடக்கி அமர்தல். நாணமாகிய நாவாயினால் நீந்தி நீந்திப் பார்த்தும் யாதும் நிலைகாண முடியாமல் காமம் நீண்டுநின்றதாதலால் **கரை காணேன்** என்றாள்.

கரை = எல்லை, முடிவு.

காணாது என எச்சமாக் கூறாது முற்றாக வுரைத்தது அக் காணாமைக்குத்தானே கரியாதல் காண.

நீந்தியும் என்பது நீந்தி என உம்மை தொக்கு நின்றது.

யாமம் = சாமம். நடு நிசி என்க. எத்துணைக் கவலைப் பட்ட உயிரும் நடுச் சாமத்தில் கண்ணயர்ந்து கிடக்கும் அப் பொழுதும் கூட உறக்கமின்றித் தனியே உளைந்திருந்தாளாதலால் யாமத்தும் உளேன் என்றாள். உம்மை அதனிலையுணாநின்றது.

மேல், காம நோய் கடலினும் பெரிதென்றாள்; இதில், அது கடத்தற்கரியதென்று கலங்கி நிற்கின்றாள்.

காமமாகிய கடுவெள்ளத்தை நாணால் நீந்தியும் கரை காணாமல் நள்ளிரவிலும் தனியே யான் நைந்துள்ளேன் என்பதாம்.

விரக வேதனையால் வருந்தியிருந்த தலைவி தன் நிலைமையை இங்ஙனம் உளைந்துரைத்தாள்.

முயன்று முயன்று பார்த்தும் ஒரு முடிவும் காணாமல் முடிவில் செயலற்றிருந்தமையால் " காணேன் " என்றாள். எனக்குத் துணையாய் ஒரு நாதியும் இல்லையே என்பாள் "யானே உளேன்" என்றாள். இதனால் தனியே கிடந்து அவள் துயருழந்தமை இனிதறியலாகும்.

காதலனை நினைந்து நினைந்து காமக் கடலுள் ஆழ்ந்து யாமத்திலும் உறங்காமல் அலமந்திருந்தபடியைத் தோழியர் கேட்க இவ்வாறு புலந்து மொழிந்தாள் என்க.

"வேம் என் நெஞ்சம்; மெய் வெதும்பும்; விடுக்கும் ஆவி வெய்
துயிர்க்கும்; பூமென்குழலார் புறநோக்கி நகுவார்நகுவதாயினேன்;
தாமமார்பன தான்புனைந்த தண்ணென் மாலை புணையாக
யாமக் கடலை நீந்துவேன்; யாரும் இல்லாத் தமியேனே."
(சிந்தாமணி)

இது, கனகமாலை உரைத்தது. தன் காதலனை எய்தப் பெறாது காம நோயால் கலங்கி உறக்கமிழந்து அவள் உளைந்துரைத்திருக்கு நிலையை இதில் ஊன்றிப் பார்க்க. அடிகள் கருத்தை இந்த அடியொற்றிவந்துள்ளமை அறியலாகும்.

பிரிவிடை வருந்திய குலமகள் இரவிலும் துயிலாமல் ஏங்கியிருப்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சீர்த்தியால் உணரப்படும்.

## கதை.

சீர்த்தி என்பவள் மாவலி மரபில் தோன்றியிருந்த விஜயவர்மன் என்னும் அரசனுடைய அருமைத்திருமகள். பல நலங்களுக்கும் இவள் நிலையமாய் நின்றாள். உருவும் திருவும் அறிவும் குணமும் பெருமகிழ்வோடு மருவிமகிழத் தன் பெயரியல்புக்கேற்பச் சிறந்த புகழுடன் இவள் விளங்கி இருந்தாள். இவளது அழகமைதிகளைக் கேள்வியுற்று அரசர் பலரும விழைவுமீக்கூர்ந்தார். அக் காலத்தில் காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து அரசுபுரிந்த நெடுமுடிக்கிள்ளி என்னும் சோழ மன்னன் பெரிது முயன்று இவளைத் திருமணஞ்செய்துகொண்டு அரியபோகங்களை நுகர்ந்து அகமிக மகிழ்ந்தான். அம் முடிமன்னனோடு அரியாசனத்தில் ஒருங்கமர்ந்திருந்து அரசவரிசைகள் யாவும் பெற்று விரசு கோலங்களோடு மேவி யிருந்தாளாதலால் இராசமாதேவி என எவரும இவளை ஏத்தி நின்றார். அரச இன்பங்களனைத்தையும் மறந்து இவளது இன்ப நலங்களில் அவன் மிக ஈடுபட்டிருந்தான். கால நிலைகளுக்கேற்பச் செய் குன்றுகளிலும், மலைச் சாரல்களிலும், செழுமலர்ச் சோலைகளிலும் தங்கி இவளுடன் கழிபெருங் காதலோடு அவன் களித்துவந்தான். வளமிகவுடைய இளமரக்காவில் ஒருமுறை இவர் மருவி மகிழ்ந்துபொழுதுபோக்கி வந்த விழுமிய நிலையினை இதனடியில்வரும் தொடரில் காண்க.

"நெடியோன் குறளுரு வாகி நிமிர்ந்து, தன்
அடியிற் படியை அடக்கிய அந்நாள்,
நீரிற் பெய்த மூரி வார்சிலை
மாவலி மருமான் சீர்கெழு திருமகள்
சீர்த்தி என்னும் திருத்தகு தேவியோடு
போதவிழ் பூம்பொழில் புகுந்தனன்; புக்குக்
கொம்பர்த் தும்பி குழலிசை காட்டப்,
பொங்கர் வண்டினம நல்லியாழ் செய்ய,
வரிக்குயில் பாட, மாமயில் ஆடும்
விரைப்பூம் பந்தர் கண்டுளம் சிறந்தும்;
புணர்துணை நீங்கிய பொய்கை அன்னமொடு
மடமயிற் பேடையும், தோகையும் கூடி
இரு சிறை விரித்தாங்கு எழுந்துடன் கொட்பன
ஒரு சிறைக் கண்டாங்கு உள்மகிழ்வெய்தி
மாமணி வண்ணனும், தம்முனும், பிஞ்ஞையும்,
ஆடிய குரவை இஃது ஆமென நோக்கியும்;
கோங்கலர் சேர்ந்த மாங்கனி தன்னைப்
பாங்குற இருந்த பல்பொறி மஞ்ஞையைச்
செம்பொற் றட்டில் தீம்பால் ஏந்திப்
பைங்கிளி யூட்டும் ஓர் பாவையாம் என்றும்;
அணிமலர்ப் பூம்பொழில் அகவயி னிருந்த
பிணவுக் குரங்கேற்றிப் பெருமதர் மழைக்கண்
மடவோர்க்கியற்றிய மாமணி யூசல்
கடுவன் ஊக்குவது கண்டு நகையெய்தியும்;
குருந்தும் தளவும் திருந்துமலர்ச் செருந்தியும்
முருகுவிரி முல்லையும் கருவிளம் பொங்கரும்
பொருந்துபு நின்று திருந்து நகைசெய்து,
குறுங்கால் நகுலமும், நெடுஞ் செவி முயலும்,
பிறழ்ந்துபாய் மானும், இறும்பு அக்லா வெறியும்,
வம்மெனக் கூஉய் மகிழ்துணை யொடுதன்
செம்மலர்ச் செங்கை காட்டுபு நின்றும்;
மன்னவன் தானும், மலர்க்கணை மைந்தனும்,

இன்னிள வேனிலும், இளங்காற் செல்வனும்,
எந்திரக் கிணறும், இடுங்கற் குன்றமும்,
வந்துவீ ழருவியும், மலர்ப்பூம் பந்தரும்,
பரப்புநீர்ப் பொய்கையும், கரப்புநீர்க் கேணியும்,
ஒளித்துறை இடங்களும், பளிக்கறைப் பள்ளியும்,
யாங்கணுந் திரிந்து தாழ்ந்து விளையாடி" (மணிமேகலை)

இவ்வழகியோடமர்ந்து உல்லாசமாயுலாவிப் பல்வகை வளங்களையும் பரிந்து நோக்கி அவன் கனிந்து புரிந்துள்ள காதலாடல்களை இதில் கருத்தூன்றிக் காண்க. ஆண்மயிலும், பெண்மயிலும், அன்னமும் கூடி ஆடியது கண்ணனும் நப்பின்னையும் பலராமரும் சேர்ந்து குரவைக்கூத்தாடியது போலிருந்ததெனவும், கோங்கம் பூவில் மாங்கனி கிடப்ப அதனருகே மயிலமர்ந்திருந்தது பால் கிண்ணத்தைப் பைங்கிளிக்கு ஓர் பெண் ஊட்டியது போன்றதெனவும், பல பட விரித்து அம்மலை வளங்களை விளக்கியிருக்கும் அழகைப்பார்க்க. இங்ஙனம் யாண்டும் பிரியாமல் உழுவலன்போடு தழுவியிருந்த அவன் பொருதிறங் காணவிரும்பி ஒரு முறை இவளை ஒருவி அகன்றான். அப்பிரிவிடை மெலிந்து இவள் பெருந்துயருழந்தாள். யானைத் தீயுண்ட விளாங்கனி போலக் காமத்தீயால் இவள் கலங்கி மயர்ந்தாள்.

"நறைகொப்புளிக்கும் மலர்வாளி நலிய ஆற்றுது உயிர்ப்பொறைகொண்டு
உறைதற்கரிதென்று இகல் வேழம் உண்ட கனி போல் உள்ளுடைந்து
மறுவற்றொளிரும் மதிமுகத்து மானேர் நோக்கி விடுத்திடவும்,
பெறுதற்கரிய உருவிதெனப் பிரியாதிருந்தது இன்னுயிரே"

என்றபடி தன்னிலை குலைந்து விரகவேதனையால் இரவிலும் துயிலாது தனியுளைந்திருந்தாள். தோழியர் பரிந்து வந்து தேறுதல் கூறி உபசரித்து நின்றார். என் துணைவரை யான் அடைய ஒரு துணையுமில்லையே! என்று புலந்து மொழிந்து இவள் கலுழ்ந்திருந்தாள். "காமக் கடும்புனல் நீந்திக் கரை காணேன்; யாமத்தும் யானேயுளேன்;" எனப் பிரிந்துள்ள குல மகளிர் வருந்தி மொழிவர் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

"நாணொருபால் வாங்க, நலனொருபால் உண்ணெகிழ்ப்பக்,
காமருதோட் கிள்ளிக்கென் கண்கவற்ற—யாமத்து
இருதலைக் கொள்ளியின் உள்ளெறும்பு போலத்
திரிதரும் பேருமென் னெஞ்சு" (முத்தொள்ளாயிரம்).

பெற்றிருந்த இன்பமெலாம் பேய்த்தேராய் நின்றதே
உற்றான் அகன்ற வுடன்.

பிரிந்து நின்ற தலைவி உளைந்திருந்தநிலை இதனால் கூறப்பட்டது.

---

1168. தேவி திலோத்தமையேன் தேம்பித் தனியிரவும்
கூவி யிருந்தாள் குமரேசா — மேவிநின்ற
மன்னுயி ரெல்லாந் துயிற்றி யளித்திரா
என்னல்ல தில்லை துணை. (அ)

இ.—ள்.

குமரேசா! இரவிலும் உறங்காது தனியிருந்து திலோத்தமை ஏன் மறுகி நொந்தாள்? எனின், மன் உயிர் எல்லாம் துயிற்றி அளித்து இரா என் அல்லது துணை இல்லை என்க.

இது, இரவுக்காலத்தை இகழுகின்றது.

உயிர்கள் நித்தமாய் என்றும் நிலைத்துள்ளமையான் மன்னுயிர் என்றாள். மன்னுதல்=நிலைத்தல். எல்லாம் என்றது தன்னை ஒழித்து மற்றுள்ள உயிர்கள் எல்லாவற்றையும் என்றபடி. துயிற்றி=துயிலப்பண்ணி; உறங்கச் செய்து என்க. துயில்=உறக்கம். இரா=இரவு. என் என்றது தலைவியை. துணை=கூட்டாளி. துணை பிரிந்து துயருழந்துள்ள என்னைத் துணையாகக் கொண்டமையான் இவ் இரவிற்கு உணர்வில்லை என்பதாம். தனக்கு உறக்கம் தராமையால் இங்ஙனம் உள்ளிகழ்ந்தாள்.

உயிர்கள் பகலில் விழித்தலைந்து உழைத்தலும், இரவில் அக் களைப்புத்தீரக் கண்ணயர்ந்து உறங்கலும் இயல்பு; அவ் இயற்கை நிகழ்ச்சியை இரவின் மேல் ஏற்றி "துயிற்றி" என்றாள். அளித்து=அளி செய்து; அருள் புரிந்து என்றபடி. உற

க்கமானது உயிர்களுக்கு அசதியை நீக்கிப் புதிய கிளர்ச்சியை விளைக்கு மாதலால் "அளித்து" என்றாள். எல்லாரையும் துயிற்றி அளித்த இரா என்னை மட்டும் துயிற்றாது கழித்து விட்டதே என இவ்வாறு கவன்று நின்றாள்.

மேல், தலைவி உறங்காதிருந்தமையை உளைந்துரைத்தாள்; இதில், இரவினை இகழ்ந்துரைக்கின்றாள்.

உலகத்தில் நிலைபெற்றுள்ள உயிர்களை எல்லாம் துயிலும் படி அருள்செய்து என்னையன்றி வேறொரு துணையுமின்றி இரவு இருந்ததெனபதாம்.

தலைவன் பிரிந்து போனபின் விரகவேதனையால் மெலிந்து உறக்கமும் கொள்ளாமல் தனியே இரவில் உளைந்திருந்த தலைமகள் இரவினை நோக்கி இவ்வாறு இகழ்ந்துரைத்தாள். எல்லாவுயிர்களும் உறங்கிக்கிடக்கத் தான் மாத்திரம் நள்ளிருளிலும் கண்விழித்துக் கலங்கி யிருந்தாளாதலால் "இரவு என் அல்லது துணை இல்லை" என்றாள்.

பிரிவில் வருந்தியுள்ள என்னைத் துணையாகக்கொண்டு இவ் அறிவு கெட்ட இரவு பெருகியுள்ளதே! இதற்கொரு போக்கில்லையோ? எனப் புலந்து மொழிந்தபடியிது. தலைவியை நினைந்து தலைவன் இங்ஙனம் துயிலொழிந்து புலம்புவதுமுண்டு. அது, கோவைத்துறையில் கண்படைபெறாதுகங்குல் நோதல் எனவரும்.

"அரவாம் பணியினர் வெங்கை புரேசர் அணி யழகின்
வரவாம் கதிர் என்றுறுமோ? உடுமொக்குள் வந்தெழவே
விரவாம் புயற்கர வோடவிர் மாமதி வெள்வளைசேர்
இரவாம் கடலில் விழுந்தமிழ்வேனை எடுப்பதற்கே"
(திருவெங்கைக்கோவை

"மயில்போ லினியமென் சாயல் நல்லாருடன் வல்வினையேன்
துயில் போன தின்னமும் தோன்றவும் காண்கிலன்; சோலையினங்
குயில் போல் மொழியவர் தங்குழல் போல் இருள் கூர்ந்து கொற்ற
அயில் போல் மறஞ்செய் கண் போலற நீளும் அநங்கங்குலே"
அற=மிகவும். (அம்பிகாபதிக் கோவை)

"வாமக் கலையல்குல் வாணுதலார் தஞ்சை வாணன் வெற்பில்
நாமக் கலவி நலங்கவர்போது நமக்களித்த
காமக் கனலவர் கையகல் காலைக் கடும்பனிகூர்
யாமக்கடலகத்துந் தனியாதினி என்செய்துமே?"
(தஞ்சைவாணன் கோவை)

தாயாய்ப்புவனம் புரக்கும் குலோத்துங்கன் தஞ்சை வெற்பில்
வாயாற் கெடுபவர் தாமுமுண்டால் மலைவாணர் குலத்
தூயான் அளகத்தைக் கங்குல் ஒவ்வாயென்று சொற்ற குற்றம்
ஓயாமல் என்னை விளைத்தது கோயித்து உயிருண்ணவே"
(குலோத்துங்கன் கோவை)

பிரிந்திருந்தவர் இரவை இகழ்ந்து நிற்கும் நிலைகளை இவற்றாள் உணர்ந்து கொள்க. உறக்கமில்லாமல் காதலர் உளைந்து கிடப்பர் என்பது கருத்து.

விரக வேதனையுற்ற தலைமகள் இரவினும் கண் விழித்து ஏங்கியிருப்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை திலோத்தமையால் உணரப்படும்.

கதை.

திலோத்தமை என்பவள் பல்லவ தேசத்தரசனாகிய தனபதி யுடைய அருமைத் திரு மனைவி. இவளது எழிலமைதியைக் கேள்வியுற்று விழைவு மீக்கூர்ந்து நெடிது நினைந்து, நெஞ்சம் கரைந்து, முடிவில் ஒரு நாள் மருவகம் என்னும் கடிமலர்ச் சோலையில் ஊழ் கூட்ட வந்து இவளை அவன் உவந்து கண்டான். காணவே இருவரும் உழுவலன்புடையராய் ஒருவரை ஒருவர் விழைந்து நோக்கி உளமுருகி நின்றார். பருகுகாதலோடு கந்தருவ முறையில் கலந்தார்; பின்பு உலகறிய மணந்தார். சந்திரபுரம் என்னும் திருநகரிலமர்ந்து இவளோடமர்ந்து அளவிலின்பங்களை நுகர்ந்து அவன் அகமகிழ்ந்து வந்தான்.

"நாறியும், சுவைத்தும், நரம்பின்னிசை
கூறியும், குளிர்நாடகம நோக்கியும்,
ஊறில் வெம்முலையால் உழப்பட்டும், அவ்
ஏறனுன் வைகும் வைகலும் என்பவே" என்றபடி

வைகிவருங்கால் செய்வினை கருதி அவன் சேணிடை நீங்கினான். அப்பிரிவினில் இவள் பெருந்துயருழந்தாள். உணவும் ஒழிந்தாள்; உறக்கமும் இழந்தாள்; கணவனையே கருதிக் கவலை மீக்கூர்ந்தாள். அவன் சென்ற நாளெல்லாம் சிறுவிரல்வைத்தெண்ணி இன்று வரும்; இன்று வரும்; என நாளும் நாளும் ஏங்கி நைந்து கிடந்தாள். தேளும் பாம்புமா என்று தென்றல் அன்றில்களைச் சீறி வைதாள். "மழலைத்தீஞ்சொல் மதர் நெடுங்கண் மடவீர்! கொடுந்தீக் கடவுளும், வெஞ்—சுழல்கட்பருவாய் நிருதியும், காரிருள் போல் நிறத்த சுடர்க்குஞ்சி—அழல்கட்கூற்றும், உவந்துறையும் தென்பால் திசை நின்று அசைந்து வரும்—குழவித் தென்றல் ஆருயிரைக் குடியாதன்புகூராதே" என இங்ஙனம் ஓராயிரம் வகையாக உரை பல பிதற்றி உளைந்தலமந்தாள். ஒரு நாள் நடு யாமத்தில் தனியேயமர்ந்து, கன்னத்தில் கைவைத்துக், கண்ணீர் சொரிந்து, கருத்தழிந்திருந்தாள். அவ்வமயம் சாருசேனை என்னும் தோழி வந்து, யாரும் அயலில்லாமல் இவ்வாறு அயர்ந்து படநேர்ந்ததே என்று இரங்கி நின்று இதம் பல புரிந்து அறிவுரையாடி ஆறுதல் செய்தாள். தன் துணைவன் வராதிருப்பதைக்குறித்து அத் துணைவியிடம் இவள் துயர் மிகுந்து மொழிந்தாள். ஒரு துணையும் பெறாத என்னை இரவே துணையாக எய்தியிருந்ததென வெய்துயிர்த்து நின்றாள். மன்னுயிரெல்லாம் துயிற்றியளித்த இரா எனை மட்டும் துயிற்றாது தன்னோடு துணைக்கொண்டதென்று குல மகளிர் குலைந்து மொழிவர் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

வாழி உறக்கமே! வந்தென் துயர்தீர
நாழிகை யேனும் நட.

கண்ணுறங்காது காதலிகலுழ்ந்திருந்தமை இதனால் கூறப்பட்டது.

1169 மாறிலுயர் வீலா வதியிரவை என்கொடிதாக்
கூறி யுளைந்தாள் குமரேசா — சீறும்
கொடியார் கொடுமையிற் றாங்கொடிய இந்நாள்
நெடிய கழியு மிரா. (கூ)

இ-ள்.

குமரேசா! பிரிவுற்றிருந்த லீலாவதி ஏன் இரவினை மிகவுங் கொடியது என இகழ்ந்திருந்தாள்? எனின், இந்நாள் நெடிய கழியும் இரா கொடியார் கொடுமையின் தாம் கொடிய என்க.

இது, இரவு மிகவும் கொடிய தென்கிறது.

கொடியார் என்றது தலைவனை. வருந்தியுழலும்படி தன்னைத் தனியே விட்டுப்பிரிந்து போனமையால் இங்ஙனம் முனிந்து மொழிந்தாள். இனிய துணைவரைக் கொடியர் என்றது ஆற்றுமையான் என்க. காதல் கைமிகுந்தபோது இங்ஙனம் ஓத நேரும். "கடியன்; கொடியன்; நெடியமால்; உலகங்கொண்ட, அடியன; அறிவருமேனி மாயத்தன்; ஆகிலும், கொடிய என்நெஞ்சம் அவனென்றே கிடக்கும் எல்லே! துடிகொள் இடைமடத்தோழீ! அன்னை என் செய்யுமே?" (திருவாய் மொழி) தலைவி நிலையில நின்று நம்மாழ்வார் தமது தலைவனை நோக்கி உரை செய்திருத்தல் காண்க. கொடுமையின் = கொடுமையைக்காட்டிலும். இன் உருபு எல்லைப் பொருளது. தாம் என்றது இரவுகளை. பன்மையில் குறித்தது பல நாளையும்நினைந்து. கண்ணோட்டமின்றி முன்கைவிட்டுப்போனமையால் கொடியார் என்றாள்; அப்படிப் போனவர் பின்பு இரங்கி வந்து அருள செய்யாமையை நினைந்து கொடுமை என்றாள்.

"தழாநெடுஞ் சூழிருள் என்றுதந் தண்டாரது பெயரா
எழா நெடுவூழி எழுந்த இக்காலத்தும் ஈங்கிவளோ
வழா நெடுந்துன்பத்தள் என்றிரங்கார்; அம்மனோ! இலங்கைக்
குழாநெடுமாடம் இடித்தபிரானார் கொடுமைகளே" (திருவிருத்தம்)

அடிகள் சுட்டியபடியே இது அடியொற்றி வந்துள்ளமை அறிக. நெடிய கழியும் = நீண்டு செல்லும். இந்நாள் நெடிய என்றதனுல முன்னாள் அவை குறிய என்பதாயிற்று. தலைவனைக்கூடியிருக்குங்கால் இன்பநிலையில் உள்ளம் பறிபோயுள்ளமையால் அந்தோ பொழுது விரைந்து போயதே என இரங்கி எழுதலும், பிரிந்த காலத்தில் துன்ப மிகுந்துபடுதலால் நேரம் தொலையவில்லையே என்று வருந்தியிருத்தலும் தலைவியர்க்கு இயற்கை என்க.

"பணந்தாழல்குற் பைந் தொடியீர்! பதுமத்திறைக்கும், வானவர்க்கும்
கணஞ்சேருலகின் மன்பதைக்கும், காலம் கணித்த கலைவல்லோர்
ஙணந்தார் தமக்கு ஓர் இமைப்பொழுது, மாறாக் காதல் மகிழ்நர்ப்பும்
தணந்தார்க்கு ஊழி ஆகும் எனச் சாற்றுதிருந்த தகை என்னே?"
தணந்தார்—பிரிந்தார். (நைடதம்)

இது, தமயந்தி உரைத்தது. பிரிவில் இரவு நெடிதென அவள் மறுகிப் புலம்பி மயங்கியிருந்தபடியை இதில் அறிந்து கொள்க. பதுமத்து இறை = பிரமன்.

மேல், இரவு உறக்கத்தை உதவவில்லை என்றாள்; இதில், அது நெடிது நீண்டு கொடிதாயுள்ளதென்கின்றாள்.

என் தலைவனது கொடுமையைக் காட்டிலும் இந்நாளில் நெடிது செல்கின்ற இரவுகள் மிகவும் கொடியன என்பதாம்.

பிரிவாற்றாது பேதுற்றிருந்த தலைமகள் இரவுப் பொழுதை இகழ்ந்துரைத்தபடி யிது. பிரிந்துபோன தலைவர் விரைந்து வராமல் கொல்கின்றார்; செறிந்து நின்ற கங்குல்கள் கடிதூழிந்து போகாமல் கனற்றுகின்றன; என்று கடுத்து வைகின்றாள் ஆதலால் கொடியரா எனவும், கொடிய எனவும் குறித்திகழ்ந்தாள்.

என்றும் ஒரு படியாய் நின்றுவரும் இரவுகளை இன்று நெடிய என்றது என்னை? எனின், பிரிவுத் துயரால் நிலைகுலைந்துள்ள தலைமகளுக்கு இரவு தொலையாப் பொழுதாய்த் துன்புறுத்தி நிற்கும் ஆதலால் அந் நிலையினை நினைந்தென்க.

> " கொடுவெஞ்சிலைவாய்க் கணையிற் கொடிதாய்
> நடுநாள் இரவின் நவைதான் மிகுமால்;
> நெடுவெண் ணிலவின் நிமிர்தேர் பரியாது
> அடுமால்; வழிநின்று அறனே அருளாய்!" (சிந்தாமணி)

" நீங்காமாயை யவர்தமக்கு நிறமே தோற்றுப் புறமேபோய்
ஏங்காக் கிடக்கும் எறிகடற்கும் எனக்கும் கொடியை யானுமே!
ஓங்கா நின்ற இருளாய் வந்து உலகை விழுங்கி மேன்மேலும்
வீங்காநின்ற கருநெருப்பின் இடையே எழுந்தவெண்ணெருப்பே"
வெண்ணெருப்பு = சந்திரன். (இராமாயணம்)

ஊழி பல ஓர் இரவாயிற்றே?' என்னும்,
கோழி குரலடைத்ததோ? என்னும்,—ஆழி
துயிலாதோ? என்னும், சுடர் மதியங் காற்ற
வெயிலால் உடலுருகா வீழ்ந்து" (நளவெண்பா)

பிரிவிடை வருந்தியிருந்த குலமகளிர் இரவைக் குறித்து இவற்றுள் இகழ்ந்திருத்தல் காண்க. கொடிய நெடிய என அடிகள் உரைத்தமையை அடியொற்றிவநது காதலிகளின் அல்லல் நிலைகளையும்; அல்லின் இயல்பையும் இவை அறிவுறுத்தி நிற்கும் அழகைப் பார்க்க. "கோவைத் துறையில் இது, விடியாமைக்கிரங்கல் எனவரும்.

"போகாத கங்குலின் கற்பாந்த காலமும் போய், ஒருநாள்
மாகாதலரையும் எய்துவமோ? வணங்கா அரசுக்கு
ஆகாயம் நல்கும் குலோத்துங்க சோழனளகை வெற்பில்
ஏகாமல் அம்மட்டு நிற்கிலன்றே இனி என்னுயிரே"
(குலோத்துங்கன்கோவை.)

பிரிவிடைவருந்தும் காதலிகளுக்கு இரவு கொடிதாகவும், நெடிதாகவும் தோன்றுதற்குக் காரணம் என்னை? எனின், காம நோய் பகலினும் இரவே மிகுந்துபடுமாதலால் அவ் இரவின் ஒழிவை அவர் எண்ணி எண்ணி வைது ஏங்கியிருப்பர் என்க.

"உரவேதும் இலார் உயிர் ஈர்தும் எனக்
கரவே புரிவார் உளரோ? கதிரோன்
வரவே எனையா ளுடையான் வருமே;
இரவே! கொடியாய்! விடியாய்!" என இரவைச் சீதை இகழ்ந்து வைதுள்ளமை ஈண்டெண்ணத்தக்கது.

தலைவனைப் பிரிந்து மெலிந்துள்ள தலைமகள் இரவினை இகழ்ந்து மொழிவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது, இவ் வுண்மை லீலாதேவிபால் உணரப்படும்.

## கதை.

லீலா தேவி என்பவள் அங்கதேசத்து மன்னனுடைய அருமைத் திருமகள். விழுமிய நிலையினள்; வியத்தகு கலையி

னள். உருவிலும் அறிவிலும் அக்காலத்திருந்த மகளிரெவரி லும் இவள் உயர்வெய்தி யிருந்தாள். இவளது எழிலமைதியை யும் பிற நலங்களையும் நோக்கித் தம் குலம் செய்த தவம் என இரு முது குரவரும் கொண்டாடி நின்றார். இக் குல மகளின் தோற்றம் இந் நில மகளுக்கோர் ஏற்றமாயிருந்தது.

"காமனார் களிப்புக் கொள்ளக் கவின்சுரந்தமைய ஓர்ந்து,
பூமனார் புனைந்து தந்த புனிதமென் பாவை" என்று

யாவரும் புகழ இவள் மேவி யிருந்தாள். பருவ மெய்தியவுடன் தோழியர் புடைசூழ ஏழ்நிலை மாடத்தில் இவள் இனிதமர்ந்து வந்தாள். வருங்கால் பதுமன் என்னும முடி மன்னன் இவளது வடிவழகைக் கேள்வியுற்று மையல்மீக் கொண்டான். அவன் பரதகண்ட முழுவதும் ஒரு குடைக்கீழ்க் கண்டவன். பெரு வலி யுடையவன்; மருவலரெவர்க்கும் மடங்கல் போன்றவன்; பேரெழிலாளன். அவனது பெருமித நிலையை அறிந்து இவளும் அவன்பால் ஆர்வமிகுந்தாள். திருவருள் கூட்ட இருவரும் மணந்தார். பெறலரும் அமிர்தம பெற்றவர்போல இவளை உவந்துகொண்டு அவன் உளமிக மகிழ்ந்தான். அரசபோகங்க ளனைத்தையும் மறந்து இவளது இன்ப நலங்களையே நுகர்ந்து இரவுபகலறியாது மருவியிருந்தான்.

"எறிதிரை சுருட்டு முந்நீர் இனிய தெள்ளமிழ்திேனாடும்
பொறை யுயிர்த்துலகில்வந்த பொலன்கொடி யனைய நங்கை
கறைகெழு குருதிவைவேற் கண்வலைப்பட்டு, வெம்போர்த்
திறல்கெழு சிங்கவேறு சிமிழ்ப்புண்டு கிடந்ததன்றே"

என்றபடி இம் மடந்தைமாட்டு அவன் மயங்கிக் கிடந்தான். ஒத்த காதலோடு உளங் கனிந்து உயிர் கலந்து இங்ஙனம் காம போகங்களை நுகர்ந்து வருங்கால் மேவலர் சதியால் ஓர் வெம் போர் விளைந்தது. அவ்விளைவினை யறிந்து அவன் வெகுண் டெழுந்தான். இவ் அழகியைத் தேற்றி அந்தப்புரத்தில் வைத்து விட்டுப் படைக் கடலோடு பகைமேற் சென்றான். இவள் பரு வரலுழந்து பதைத்திருந்தாள். அவன் பொருது வென்று விரைவில் வந்தான். அவனைக் கண்டவுடனே கலைபெற்ற மதி

போல் இவள் பொலிவுற்று நின்றாள். அவன் உவந்து தழுவி நலம் பாராட்டி உடல்தைவந்து முன்பு இழந்திருந்த அணிகலங் களை யெல்லாம் தன் கையால் எடுத்தணிந்து அடுதடுத்தணைத்து ஆர்வ மிருந்தான்.

"தூசும், கலையுங், தொலையா அழகெறிக்குட், தொடியும்,
வாசங்கமழு மது மலரோதியும், வண் களபம்
பூசுங் கனதனம் பூணுமுத் தாரமும், பூங்குழையும்,
ஆசும் பழுதில் பொன்னே! பண்டுபோல அணிந்தனமே"

என இன்னவாறு பல அன்புரையாடி இன்புறுத்தி நின்றான். அவனை உயிரினும் இனியனா உவந்து பேணி இவள் முயங்கி வந்தாள். இங்ஙனம் வருங்கால் பிறிதொருமுறை மறுபுல மன்னர் தருதிறை காண அவன் பிரிவுறலானான். போனவன் நெடுநாள் வரவில்லை. அந் நெடும் பிரிவில் இவள் கடுந்துயரடைந்தாள். உணவு ஒழிந்து உடல் மெலிந்து படர் மிகுந்து பதைத்தலமந் தாள். இரவிடை யாதும் துயிலாமல் விரக வேதனையால் வெய் துயிர்த்திருந்தாள் ஆதலால் கணம் ஓர் ஊழியாய்க் கதித்து நின்றது. பாழும் இரவு விரைவில் தொலையவில்லையே யென்று மறுகிப் புலம்பினாள். அகன்றுபோன அவரினும் அடுத்துள்ள இரவுகள் நெடியனவாய் நீற்றலால் அக் கொடியார் கொடுமையி னும் கொடியன என்று குறித்துவைத்தாள். பிரிந்துள்ள குல மகளிர் இரவினை இகழ்ந்து மொழிவர் என்பதை உலகம் இவள் பால் உணர்ந்துநின்றது. இவளது கற்பின் இயல்பையும், அற்புத நிலையையும் யோகவாசிட்டத்தில் காண்க.

பாழும் இரவே பழிபுரிந் தேன்முன்னேன்
ஊழியென நின்றாய் உருத்து.

இரவினை இகழ்ந்தமை இதனால் கூறப்பட்டது.

---

1170 மன்னன் பிரிய மறுகி யசோதரையேன்
கொன்னே அழுதாள் குமரேசா—முன்னுடி
உள்ளம்போன் றுள்வழிச் செல்கிற்பின் வெள்ளநீர்
நீந்தல மன்னோவென் கண். (ய)

இ.—ள்.

குமரேசா! தன் கணவனை நினைந்து கண்ணீர் சொரிந்து யசோதரை ஏன் கலுழ்ந்திருந்தாள்? எனின், உள்ளம் போன்று உள்வழிச் செல்கிற்பின், என் கண் வெள்ளநீர் நீந்தல என்க.

இது, அழுதிழிகண்ணளாய் அவலிக்கின்றது.

மன்னன் என்றது கௌதம புத்தரை. துறந்து போகுமுன் அரசர் பெருமானாய்ச் சிறந்திருந்தாராதலால் மன்னன் என்றும.

உள்வழி = உள்ள இடத்தே; அஃதாவது காதலர் போயிருக்கும்தேசத்தே. செல்கிற்பின் = செல்லவல்லனவாயின்; கில் என்பது ஆற்றலுணர்த்தி நின்றது. மனமானது நினைத்தவுடனே குறித்த இடத்திற்குச் செல்லவல்லது; கண்கள் உடம்போடு ஒன்றிநின்று சென்று காணுமேயன்றி உள்ளம்போன்று தானாகச் செல்ல வல்லன வல்ல ஆதலால் அம் மாட்டாமை தோன்றச் "செல்கிற்பின்" என்றாள்.

வெள்ளநீர் = வெள்ளம்போல மிகுந்த நீரை. "ஆறாகக் கண்ணீர் அழுது" என்றபடி பிரிவின் துயரால் கண்ணீர் பெருகி நிற்குமாதலால் வெள்ள நீர் என்றாள். கண்ணீர் வெள்ளம் என்றதனால் அவளது உள்ளத்துயரம் உணரலாகும்.

மேல், கண்ணுறக்க மின்றிக் கவன்றிருந்தாள்; இதில், கண்ணீர் சொரிந்து கலுழ்ந்திருக்கின்றாள்.

என் மனம் போல நாயகன் போயுள்ள தேயத்தின் கண்ணே என்னுடைய கண்கள் செல்ல வல்லனவாயின் வெள்ளமாகிய நீரில் அவை நீந்தா என்பதாம்.

பிரிந்து போன காதலனை நினைந்து நினைந்து தாரை தாரையாகக் கண்ணீர் சொரிந்து ஓயாது கலுழ்ந்திருந்த தலைமகளைத் தோழி நெருங்கி "வெள்ளமென அழுது இங்ஙனம் கொள்ளை நோய்கொண்டு குலைந்துபடின் உலகம் என்சொல்லும்? உன் தலைமையை நினைந்து சிறிது ஆறியிரு என்று தேறுதல் கூற அவள் இவ்வாறு மாறு கூறினாள்.

நாயகனை இடையறாது நினைந்திருத்தலால் தன் உள்ளம் அவன் உள்வழிச் சென்றதென்றாள்; அவ்வுள்ளம் போலவே கண்களும் அவன் பக்கம் சென்றிருக்குமாயின் இங்ஙனம் கடல் போல் நீர் சொரிந்து அழமாட்டா என்பாள். "செல்கிற்பின் கண் வெள்ள நீர் நீந்தல" என்றாள். நீந்தல என்றதனால் அவ் விழி நீர்ப் பெருக்கின் மிகுதியும், அது நிரந்தரம் பொழிந்து நின்ற நிலைமையும் அறியலாகும்.

"தழைத்த பொன்முலைத் தடங்கடந்து அருவிபோய்த்தாழப்
புழைத்த போல நீர் நிரந்தரம் பொழிகின்ற பொலிவால்
இழைக்கு நுண்ணிய மருங்குலாள் இணைநெடுங் கண்கள்
மழைக்கண் என்பது காரணக் குறி என வகுத்தாள்; (௧)

அரிய மஞ்சினோ டஞ்சன முதலிவை அதிகம்
கரிய காண்டலும் கண்ணினீர் கடல்புகக் கலுழ்வாள்;
உரிய காதலின் ஒருவரோடு ஒருவரை உலகில்
பிரிவெனும் துயர் உருவு கொண்டாலன பிணியாள்; (௨)

துப்பினூற்செய்த கைகொடு கால்பெற்ற துளிமஞ்சு
ஒப்பினான்தனை நினைதொறும் நெடுங்கண்கள் உகுத்த
அப்பினால் நனைந்து, அருந்துயர் உயிர்ப்புடையாக்கை
வெப்பினால் புலர்ந்து, ஒருநிலையுறாத மென்துகிலாள்"
(இராமாயணம்)

பிரிவிடை வருந்தியிருந்த சீதையின் நிலையினை இவை உணர்த்தி நின்றன. தன் கண்கள் வெள்ளம் என நீர் சொரிந்து மிதந்து கிடப்ப, அவள் உள்ளங்கரைந்து உருகியிருந்தபடியை இதில் ஊன்றிப்பார்க்க. கணவனைப் பிரிந்த காதலி கண்ணீர் சொரிந்து கலுழ்ந்துகிடப்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது இவ் வுண்மை யசோதரைபால் உணரப்படும்.

## கதை.

யசோதரை என்பவள் சுப்பிரபுத்தன் என்னும் அரசனுடைய அருமைத்திருமகள். கண் கொள்ளாக் கட்டழகு வாய்ந்தவள். இவள் பருவ மெய்தி உருவ நலங்கனிந்து கலை நிறை மதி போல் நிலவியிருக்குங்கால், கௌதமபுத்தர் அரசிளங் குமரராய்

ஒளி செய்து நின்றார். அவ் வமயம் அவருடைய பெயர் சித்தார்த்தன் என்க. பேரழகும் பேரறிவும் பிற நலங்களும் ஒருங்கமைந்திருந்த அவ் அருங்குணக் குரிசிலை மணந்து கொள்ள விழைந்து அரசகுமரிகள் பலர் ஆர்வமெய்தி நின்றார். அப் பெருமானை மருமகனாகப் பெறும் பேறு யாருக்கமையுமோ? என்று நேருக்கு நேராய் அரசரனைவரும நேர்நது நின்றனர். தருணமங்கையர் தம் உருவப் படங்கள் திசைகள் தோறும் நின்று நாளும் நாளும் இசைகளோடு வந்தன. அவர்களுள் ஒருவரையும் விரும்பாது உவர்த்து விடுத்து, இக் குலமகளையே அத்தலைமகனார் உவந்து கொண்டார். பெருமித நிலையில் திருமணம் புரிந்து ஒருவர அன்புடன் இருவருமருவிமகிழ்ந்தார். அல்லெனப்பகலென யாதுமறியாது புல்லியமர்ந்து இவர் போகம் நுகர்ந்தார்.

> "கொழு மென் இன்னகிற் கூட்டுறு மென்புகை
> கழுமு சேக்கையுள் காலையும் மாலையும்
> தழுவு காதல் தணப்பிலர் செல்பவே
> எழுமையும் இயைந்தெய்திய அன்பினார்."

என இனபம துயதது இவா இனிதமாந்திருந்தார். தன் கணவனை உயிரினும் இனியனாக இவள் உவந்து பேணினாள். கனவிலும் அவனையேகருதிக்கிடந்தாள்; புல்லிக்கிடக்கையில் துயில் விடை ஒரு நாள் சிறிது அவர் புடைபெயர்ந்தார்; உடனே இவள் துள்ளி எழுந்து அவரை அள்ளி அயர்ந்தாள். இவ்வாறு உழுவலன்புடன் இவள் ஒழுகிவருங்கால் அறவிய மனத்தராய் அவர் துறவு கொள்ள விழைந்தார். ஒரு நாள் இரவில் விரகுடன் எழுந்தார். கலாப மயில் போல் மலரணையில் அயர்ந்துறங்கும் இவளை உளைந்துளைந்து நோக்கினார்; பிரிய முடியாமல் சிறிது தூரம் அரிதில் நீங்கி வாயிலருகே போனார்; மறுபடியும் மறுகி வந்து இவள் மதி முகத்தை நோக்கி மயங்கி நின்றார். இவ்வாறு ஊசலாடுவது போல் பாசம் நின்றலைப்பப் பரிந்து திரிந்து முடிவில் துணிந்து வெளியே வந்து கண்டகம் என்னும் பட்டத்துக் குதிரை மீதேறிக் கடுகச்சென்று நெடுவனம் புகுந்து பிறவியற நோற்றார். இவள் விடிந்தெழுந்து நிகழ்ந்ததை யறிந்து படிமீது விழுந்து பதைத்துப் புரண்டாள். அவரது வடிவழகையும், குணநலங்களையும் நினைந்து நினைந்து புலம்பி நெடுமூச்செறிந்தாள்.

கலை நிறைந்த மதியனைய கவினமைந்த திருமுகமும், கருதார் நாணச் சிலை நிமிர்ந்த திரள் தோளும், திசை பரந்த மணிமார்பும் சிவந்து நீண்ட நிலையுயர்ந்த தடங்கரமும, நெடு நீலம் பூண்டடர்ந்து செறிந்த குஞ்சித் தலைமுடியும். காணுமல் தனியிருந்து வாழ்வேனே? தமியள் அந்தோ!

என இன்னவாறு பன்னூறு வகையாகப் பன்னி யழுதாள். கல்லும் மரமும கரைந்துருக வல்லிக் கொடி போல் துவண்டு இவள் வாய்திறந்து புலம்பினுள். எரியுறுபுழுவெனப் பிரிவெனுந் துயரால் இவள மறுகியயருங்கால் சந்தகன் என்னும் அந்தணன் கௌதமரைத் தேடி அழைத்து வருவதாகச் சேடியர்களிடம் கூறி விட்டு நாடிச்சென்றுன். வருவர்வருவர்என வழிமேல்விழிவைத்து இவள் மறுகி யிருந்தாள், அழுதழுது இவளது அழகிய கண்கள் வீங்கி இருந்தன. "தோழியர்நெருங்கி அம்மா! அண்ணல் வந்து விடுவர்; இவ்வண்ணம் உள்ள நீர் எலலாம் ஓட வெள்ளநீர் பெரு க்க வேண்டாம்" என்று இரக்கமொடு வேண்டினர். அவ்வள்ளல உள்ள இடத்தே என்னைத் தள்ளிவிடினன்றி என் கள்ள விழிகள் வெள்ளநீர் அடங்கா என இவள் வெம்பி மொழிந்தாள். பிரிநத குலமகளிர் கண்கள் இடையறுது அழுது வெள்ள நீரில் அமிழ் ந்து கிடக்குமென்பதை உலகம் இவளபால் உணர்நது நின்றது.

காதலன்பால் என்னுளம்போல் கண்ணுமுன்னே சென்றிருந்தால்
நோத லுருதே நோசிந்து.

காதலி கண் கலுழ்ந்திருந்தமை இதனுல் கூறப்பட்டது.

---

இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்.

காம நோயை மறைக்க முடியாமல் காதலி மறுகியிருப்பள். அதனை உரைககவும் நாணுவள். காமமும் நாணமும் கலக்க வருந்துவள். காமக்கடலில் கருத்தழிந்து கிடப்பள். அடுத்து ள்ள தோழியரைச் சுளித்திகழ்வள். பிரிவின் துயரம் பெரிதென அயர்வள். இரவிலும் துயிலாது ஏங்கி யுளைவள். ஒரு துணை யுமின்றி உறுதுயர் மிகுவள். கொடியதென இரவைக்குறித்து வைவள். கணணீர் சொரிந்து கலுழ்ந்திருப்பள் என்பதாம்.

ஙயஎவது படர்மெலிந்திரங்கல் முற்றிற்று.

# 118-ம் அதிகாரம் கண்விதுப்பழிதல்

அஃதாவது பிரிந்து சென்ற காதலனைக் காணவேண்டு மென்னும் அவாவினால் கண்கள் கலுழ்ந்து வருந்தல். காமதாப த்தால் மெலிந்து வருந்திய காதலி அழுதிழிகண்ணளாய் அயர் ந்து புலம்பி அப்புலப்பத்தில் தன் கண்களை இகழ்ந்து கூறுகின் றுளாதலால் படர்மெலிந்திரங்கலின் பின் இது வைக்கப்பட்டது. விதுப்பு=விரைவு; ஈண்டுக் காட்சிமேல் மூண்டுள்ள கடுப்பு என்க. அழிதல்=நிலைகுலைதல். காட்சி விதுப்பால் துயிலொ ழிந்து நின்று இரவும் பகலும் துயருழந்தழுதலால் கண்கள் நிலை குலைந்தயரு மாதலால் கண் விதுப்பழிதல் என நின்றது.

---

1171 காதலனைக் கண்டகண்ணைக் காமர் சுதஞ்சனையேன்
கோதுடைய தென்றாள் குமரேசா— ஆதரங்கொள்
கண்டாங் கலுழ்வ தெவன்கொலோ தண்டா நோய்
தாங்காட்ட யாங்கண் டது. (க)

இ.—ள்.

குமரேசா! பிரிந்து நின்ற சுதஞ்சனை தன் கண்களை ஏன் இகழ்ந்து கூறினாள்? எனின், தண்டாநோய் தாம் காட்ட யாம் கண்டது; கண் தாம் கலுழ்வது எவன் கொலோ? என்க.

இது, அழுத கண்ணைக்காதலி பழுது கூறுகின்றது.

தாம் இரண்டனுள் முன்னது அசையாய்க் கட்டுரைச்சுவை தோன்ற வந்தது; பின்னது பெயராய்க் கண்களைச்சுட்டி நின்றது. யாம் எனப் பன்மையில் குறித்தது தோழியையும் உட்படுத்தி. கலுழ்வது=அழுவது. கலுழ்தல்=அழுதல். "நின்று நீருகக் கலுழும் நெடும்பெருங்கண்" (கலி) "நினைத்தொறுங் கலுழும் இடும்பை எய்துக" (ஐங்குறுநூறு) "செங்கண் முலை மேற் கலுழ்ந்து முத்தத்திரளுகுத்து" (மணிமேகலை) "கலக்கம் உரோ தனம் கலுழ்ச்சி அழுகை" (பிங்கலந்தை). தண்டா நோய்=தணி யாத துன்பம். தண்டுதல்=தணிதல், நீங்கல். "தண்டுதலின்றி

லொன்றித் தலைத்தலைச் சிறந்த காதல்" (இராமாயணம், மிதிலைக்காட்சி (8) "தண்டா ஈகைத்தகைமாண் குடுமி" (புறம் 6) "தண்டாக்களிப்பின் ஆடுங்கூத்து" (மணிமேகலை 6,126) "தண்டாப் பெருந் துயர் தருமிவள் கண்" (பெருங்கதை 1, 38, 221) "உண்டு தண்டா மிகுவளத்தான்" (மதுரைக்காஞ்சி 17) "கண்டோர் தண்டா நலங்கொண்டனளே" (ஐங்குறுநூறு,278) இவற்றுள் தண்டாமை உணர்த்தி நிற்றல் காண்க.

எவன் கொலோ? = என்ன பயன் கருதியோ? அழுவதால் ஒரு பயனுமில்லை, ஆதலால் அழாதிருத்தலே நல்ல தென்பது கருத்து. கண்கள் முன்பு காதலனைக் காட்டியதனாலேதான் இப்பொழுது நீங்காத நெடுந்துயரை யான் கண்டு கரைகின்றேன்; இங்ஙனமிருப்பக் கண்கள் மேலும் அழுவது எதற்காக! என்பதாம்.

பிரிவாற்றாமல் அழுத கண்ணும் சிந்திய மூக்குமாய் அவலித்திருந்த தலைவி ஒருநாள் தோழி கேட்பத் தன் கண்களை முன்னிலையாக வைத்துச் சொல்லியபடியிது. விரகவேதனையால் இப்பொழுது யான் இப்படி வருந்தியுழலுதற்குக் காரணம் என் கண்களே யாகும்; என்னை? முன்பு காதலரை இக் கண்களே காட்டிக் கொடுத்தன; இவை காட்டாதொழியின் யான் அவரைக் காணாதொழிவேன்; ஒழியின் இப்பிரிவுத் துயரம் என்னை அணுகியிராது; இங்ஙனம் ஒரு கவலையும் உறாதுள்ள எனக்கு என்றுந் தணியாத பெருந்துன்பத்தைத் தம் காட்சியால் தந்தன என்பாள் "தண்டாநோய் தாம் காட்ட யாம் கண்டது" என்றாள்.

முன்பு தாமே வருத்தத்தை விளைத்துக் கொண்டு இப்பொழுது அருத்தமின்றி அழுதால் இதற்கு யார் என்ன செய்வார்? என்பாள் "கலுழ்வது எவன் கொலோ?" என்றாள்.

பிரிந்து போன காதலனை நினைந்து நினைந்து ஓயாதழுதலமைந்த காதலி தன் கண்களை வேறு பிரித்து முன்னிலைப்புறமாக இங்ஙன மொழிந்தாள் என்க.

இன்று பிரிவுத் துயரத்தைச் செய்து நிற்கும் பெரியரை அன்று காட்டித்தந்தது நீவிரே ஆதலால் என்னினும் உமக்கு

அவர் அண்மையராயும் உண்மையராயும் அமைந்துள்ளார்; அங்ஙனம் உரிமை மிகவுடைய நீர் அவரை அடைய முயலாது அயலவளாகிய என்னைக்குடைய'தாகாதெனபதாம்.

“கயலாலிவை என்று கவிழ்ந்து கிடந்து
அயலேன் அறியாமை யுரைத்ததெலாம்
இயலாததுவோ? இனியேற்கு இனியீர்!
உயலாவது கண்மலர்காள்! உரையீர்!” (சிந்தாமணி)

இது, கேமசரி உரைத்தது. கயல் எனத் தலைவர் புகழ்ந்து மொழிந்தபோது மகிழ்ந்து கிடந்த கண்களே! யான் அறியா வகை அவர் உமக்குப் பிரிவுணர்த்திச் சென்றாரோ? அவர் இருக்கும் இடத்தைக் காட்டியருளி யான் உய்யும வகையைச் செய்யீரா? எனத் தன் கண்களை நோக்கி வருத்தத்தோடு அவள் உரைத்திருத்தல் காண்க. இயலாததுவோ என்றது பிரிவினை. இனியீர்! என்பதில் இரு பொருளிருக்கும் அழகு பார்க்க.

இகழ்ச்சிக் குறிப்பால் இங்ஙனம் இசைத்தாள் என்க.

காதலி கண் கலங்கி யிருப்பள் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ் வுண்மை சுதஞ்சனைபால் உணரப்படும்.

## கதை.

சுதஞ்சனை என்பவள் மதிதரன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகள், அருந்தவத்தால் பிறந்தவள். அரும் பெறலுருவினள். பெருந்தக வுடையவள். சிறந்த அழகோடு உயர்ந்த குணங்களும் வாய்ந்து விளங்கி வருங்கால் திருவாதனம் என்னும் மரு மலர்ச் சோலையில் தோழியர் சிலருடன் கூடி ஒரு நாள் இவள் உலாவி வந்தாள். அவ்வமயம் காசிமன்னனாகிய கச்சன் என்பவன் வேட்டை நோக்கில் வந்து இளைப்பாறும் பொருட்டு முன்னதாகவே அடைந்து அங்குத் தங்கி யிருந்தானாதலால் இம் மங்கையைக் கண்டான். இவளது பருவ நிலையையும் உருவ நலனையும் நோக்கி அவன் உள்ள முருகினான். இவளும் அக் கட்டழகனைக் கண்டு காமுற்று நின்றாள். உள்ளம் பறிபோய் ஒருவரை ஒருவர் உவந்து பார்த்து இருவரும் உயிர்க்காதலோடு நய

ந்து நீங்கினர். பின்பு உலகறிய மணந்தார். இவர்தம் இன்ப நலங்கள் உம்பருலகத்தனவா யுயர்வெய்தியிருந்தன. இவளது காமநுகர்ச்சியில் அவன் மிகவும் காலாழ்ந்து கிடந்தான். கண்ணினும் உயிரினும் இனியளா இவளை அவன் கருதிப் பேணினன். இவள் கூந்தல் மலரில் வண்டு வந்திருப்பினும் அவன் கண்டு சகியாது கடுத்திகழ்ந்தான்.

"சுற்றம் நல்கூர வாழும் தோமுறு சிறியர் போல
இற்றிடை மெலியச் செம்மாந்து எழுமுலைப் பாரம்பார்த்தும்
சுற்றையங் குழலில் வீழ்ந்து மதுநுகர் களிவண்டீர்! இன்று
அற்றது நமக்கு மேலோர் அளி என அளித்த பேரே"

என இன்ன வகையாகக் களிப்பு மீதூர்ந்து பலப் பல படியா நலம் பாராட்டி நாளும் இங்ஙனம் காமபோகங்களை அவன் நுகர்ந்து வந்தான். வந்தவன் இடையே அரச காரியமாப் பிரிந்து அவந்தி நாட்டை அடைந்தான். அவனைப் பிரிந்த நாள் முதல் சரியாக உணவுறக்கங்களின்றிப் பெரிதும் இவள் வருந்தியிருந்தாள். பகலைவிட இரவினிடையே மிகவும் பரிபவமுழந்தாள். விரக வேதனையை மிகுத்தலால் சந்திரன் முதலிய இனிய பொருள்களை வெறுத்தாள்.

"தொய்யில் முலைகள் பசப்பூரத் துணைவர்ப் பிரிந்து துயில் துறந்த
மையல் மடவார் உயிர் கவர்வான் கூற்றம் போல வருமதியே!
ஐயமிலை உன் உடற் களங்கம் அழலுங்கொடியவிட மன்றே
வெய்ய பகுவாய்க் கரும்பாந்தள் விழுங்கியாற்ற துமிழ்ந்ததுவே;

வடவானலத்தின் உடன் பிறந்தாய், வளர்பூங்கலை ஒன்றெய்திய பின்
படர்வார் சடையோன் அழல்பரப்பு நுதற்கணோடு பயின்றிருந்தாய்,
சுடர்கால் கலைகள் நிறைந்து முழுமதியாங் காலைத் தொடர் அரவின்
விடவாயுறைந்தாய், மதியே! நீ வெம்மை கால்வ தரிதேயோ"

என்றபடி பரிவமிகுந்து பலவாறாகப் பன்னிப் புலம்பினள். பின்னர் உடலுறுப்புக்களை முன்னிலைப்படுத்தித் தனித்தனி உளைந்து மொழிந்தாள். முடிவில் இடையறாது அழுதிருந்த கண்களை நோக்கி இவை காட்டித்தந்ததனாலேதான் யான் அவரைக் காண நேர்ந்ததாதலால் இங்ஙனம் கொடுந் துயரம் செய்து விட்டு இப்

பொழுது இருந்தழுவானேன்? என இகழ்ந்து மொழிந்தாள். பின்பு கணவனை அடைந்து கலந்து மகிழ்ந்து நமி என்னும் புதல்வனைப் பெற்று இவள் நலமெய்தி இருந்தாள்.

“மூசிநாட் சுரும்பு பாய முருகுடைந்துருக்குஞ் சோலைக்
காசி நாட்டரசன் செங்கோற் கதிர்முடிக் கச்சன் என்பான்
மாசில்நாற் கடலந்தானை மன்ன, மற்றவற்குத்தேவி
தூசினுற்றுளும்புமல்நுற் சுதந்சனை சுடரும்பூணுய்; (௯)

வேய்ந்தகநிழற்றுங் கோதை மிளிர்மணிக் கலாப வட்டம்
போந்தகந் திகழ்ந்து மின்னுப் பூந்துகில் பொலிந்த அல்குல்
வாய்ந்தகங் கமழுங் கோதையவள் பெற்ற அரச சிங்கம்
நாந்தகக் கிழவர் சோவே நமி என்பான் நலத்தின் மிக்கான்” (சூளாமணி)

இவள் சரிதம் இதன் கண்ணும் குறிக்கப்பட்டுள்ளது காண்க.

காதலனைக் காட்டிக் கடுந்துயரஞ் செய்தகண்கள்
நோத லெவனோ நுவல்.

கலுழ்ந்த கண்களைக் காதலி இகழ்ந்து நின்றமை இதனால் கூறப்பட்டது.

1172 கண்டழுத கண்ணைக் கமலை கடுத்துநின்று
கொண்டிகழ்ந்தாள் என்னே குமரேசா—பண்டு
தெரிந்துணரா நோக்கிய வுண்கண் பரிந்துணராப்
பைதலுழப்ப தெவன். (உ)

இ—ள்.

குமரேசா! வருந்தி அழுத கண்ணைக் கமலை ஏன் இகழ்ந்து மொழிந்தாள்? எனின், தெரிந்து உணரா நோக்கிய உண்கண் பரிந்து உணராப்பைதல் உழப்பது எவன்? என்க.

இது, உழந்து படுதல் உணர்வன்றென்கின்றது.

தெரிந்து உணரா = ஆராய்ந்து அறியாமல். தெரிதல், வருவதை முன்னதாக மருவி ஆய்தல். உணர்தல், உற்றதைக் கடைபோக முற்ற அறிதல்.

நோக்கிய = பார்த்துவந்த. உண்கண் = மையுண்ட கண்கள் "பூவெழில் உண்கண் புலம்பு கொண்டு இனையும்" (நெய்தற்கலி 13) என்புழி இது வந்திருத்தல் காண்க.

உணரா என்பது ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம். இனி இதனை உடன்பாட்டு இறந்தகால வினையெச்சமாக்கொண்டால் முன்பு இவர் நல்லவர்; நம்மைவிட்டு என்றும் பிரியார்; எனக் காதலரை உணர்ந்து நோக்கிய கண்கள் இன்று உணராமல் உழப்பது எவனோ? என்று கொள்க.

பரிந்து உணரா = பகுத்து உணராமல். மேலெழுந்தபடி பாராமல் பிசமுயன்று நுனித்தறிதலைக் குறித்து நின்றமையால் பரிந்து என்றாள். பரிந்து = வருந்தி. ஊன்றியுணர்தல் என்க.

பைதல் = துன்பம். "பசி தினை வருந்திய பைதல் மாக்கள்" (மணிமேகலை) "பல நினைந்து இனையும் பைதல் நெஞ்சின் அலமரல் நோயுள் உழக்கும்" (கலித்தொகை) "எவ்வம் கரக்கும் பைதல் மாக்கள்" (புறம்) "மையலுள்ளமொடு பைதல் எய்தி" (பெருங்கதை) இவற்றுள் பைதல் உணர்த்தி நிற்றல் காண்க.

உழப்பது = உளைந்து வருந்துவது; உழத்தல = அவலத்தில் அழுந்தியயர்தல்.

மேல், தனக்கு வேதனை தந்தன எனக் கண்களைக் காதலி இகழ்ந்தாள்; இதில், அவை வேதனையுறுவது வீண் என்கின்றாள்.

முன்பு ஆராய்ந்தறியாமல் காதலனைக் கண்டு மகிழ்ந்த கண்கள் இப்பொழுது பகுத்து உணர்ந்தடங்காமல் வருந்தி யழுவதனால் யாது பயன்? என்பதாம்.

பண்டு தலைவனைக் கண்டு தந்ததனாலேதான் இப் படுதுயர் நேர்ந்ததெனப் பிரிவிடை வருந்திய தலைமகள் தன் கண்களை முன்பு இகழ்ந்து நின்றாள்; நிற்கவே, இப்படி வருமென்று தெரியாதே; தெரிந்திருந்தால் பாராது ஒதுங்கி விடுவோமே; என அவை உளைந்து கூற அதற்கு அவள் எதிர்ந்து கூறியபடியிது.

இன்னது செய்தால் இன்னது வருமென்று முன்னதாகவே ஓர்ந்து உணராமல் ஒரு காரியத்தை ஒருவன் செய்துவிட்டால்

பின்னர் அதனால் விளைந்த பயனை அவன் அமைந்து அனுபவிக்க வேண்டுமேயன்றி அயர்ந்தழுவதில் யாது பயன் என்பாள் "தெரிந்துணரா நோக்கிய கண் பைதல் உழப்பது என்?" என்ருள். கண்ணுக்கு உண் என்று அடைகொடுத்தது அதன் உருவ நிலை கருதி. அழகமைந்ததே யன்றி அறிவில்லை என்பது குறிப்பு. உண்ணுத கண் உணரவில்லையாயினும் பொறுத்துக் கொள்ளலாம்; உண்கண்ணு யிருந்தும் இங்ஙனம உணராதொழிந்தது வெறுக்கத் தக்கதென்பதாம்.

பலபல நினைந்து மிகு கவலையோடு பதைத்துக் கிடக்கும் துயர நிலைக்குப் பைதல் என்று பெயர். அத் துனபச்சுழியில் ஆழ்ந்தழுந்தமையால் உழப்பது எனக்குறித்தாள். என்? என்றது யாதொரு பயனும் இல்லை என்பதாம். வீண் என்றபடி.

முன்பு தெரிந்துணராது போயினும் இப்பொழுதாவது தாம் செய்த வினைப் பயன் என்று பகுத்துணர்ந்து பைதலுழவாமல் இருக்கலா மல்லவா? அதுவும் செய்யாமல் அலமந்தழுதல் அறிவன்றென்பது கருத்து. பிரிவாற்ருமல் வருந்துகின்றவள் தன் உள்ளத்துயரைக் கண்மேலேற்றி இங்ஙனம் உரைத்தாள் என்க.

"பெய் கடற் பிறந்து அயல் பிறக்கொணு மருந்து பெற்று
ஐயபொற்கலத் தொடு அங்கை விட்டிருந்த ஆதர் போல்
மொய் கிடக்கும் அண்ணல் தோள் முயங்கிடாது முன்னமே
கைகடக்க விட்டிருந்து கட்டுரைப்ப தென்கொலோ?"

இது, சீதை உரைத்தது. இராமனைக் கண்டவுடனே கட்டியணைத்துக்கொள்ளாமல் கையகலவிட்டு இப்பொழுது ஐயகோ! என அழுது புலம்புவதால் யாது பயன்? என அம்மாது தன்னை இகழ்ந்திருக்கும் அழகைப் பார்க்க. மருந்து = அமிர்தம். ஆதர் = மூடர். காதல் நிலையும் அதனையுடையார் நோதலியல்பும் இதனுல் இனிதறியலாகும்.

பிரிவிடை மெலிந்த கண்கள் அலமந்தழும் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ் வுண்மை கமலை பால் உணரப்படும்.

## கதை.

கமலை என்பவள் ஏமாங்கத நாட்டிலே இராசமாபுரத்தி லிருந்த சாகரதத்தன் என்னும் வணிகர் தலைவனுடைய இனிய மனைவி. வழிவழியாகச் சிறந்து வந்த பெரு மரபில் பிறந்தவள். எழிலமைதி முதலிய உயர் நலங்கள் யாவும் ஒருங்கமையப் பெற்றவள்; இக் கட்டழகியைக் கண்டபோது அவன் காதல் மீக்கொண்டு கலங்கி நின்றான். இவளும் விழைந்துவிரைந்தாள். பள்ளம் பாயும் வெள்ளம் போல் இருவருள்ளங்களும் மறுகியோட ஒருவரை ஒருவர் மருவி மகிழ்ந்து பின்பு உலகறிய மணந்தார். இத் தத்தைமொழியாளும் அத் தத்தனும் ஒத்த சிந்தையராய் உடனமர்ந்திருந்து அரிய போகங்களை நுகர்ந்து அறம் புரிந்து வந்தார். வருங்கால் இடையே வாணிக நிலையில் அவன் சேணிடை நீங்கினன். அந் நீக்கம் நீண்டு நின்றமையால் ஏக்க மீக்கொண்டு இரங்கி யிருந்தாள். நிலை குலைந்து தலை குனிந்து இடையறாது அழுதிருந்தமையால் இவளது முலைத் தடத்தில் கண்ணீர் என்றும் நிலைத்து நின்றது.

> "அலைத் தடங்கண் அருவி பாய ஆர வண்டல் அழியுமென்
> முலைத் தடத்தினூடு தோன்று முகமும், நீல ஒண்கணும்,
> சிலைத் தடக்கை மாரன் மாது சிந்தை மீது அழுந்திட
> உலைத்து விட்ட கமலம், வெய்ய உற்பலத்தை ஒத்தவே"

என்றபடி இவளது முகமும் கண்களும் கமலம் குவளைகள் போல் கொங்கைகள் மீது குலாவித் தோன்றின. இவ் வண்ணம் பிரிவாற்றுபல் பேதுற்றிருந்த இவள் இரவுக்காலங்களில் மிகவும் வருந்தினள். நிலவு முதலிய இனிய பொருள்கள் இவளுக்கு இன்னாதனவா யிருந்தமையால் சந்திரன் முதலியோரை முந்துற இகழ்ந்தாள்.

"விரிதெண்டிரை நீர்க் கருங்கடல்வான் முகட்டிலெழுந்த வெண் திங்காள்
மருவு திரை நீர்ச் சுவற்று சிகை வடவையிடத்தோ? மைவிளர்ப்பக்,
கருகுங்கொடிய வெவ்விடத்தின் கண்ணோ? தணந்தார் உயிர் பருக,
எரிவெங் கதிரால் உடல் வெதுப்ப யாண்டுக் கற்றாய்? அறியேமால்; (க)
விரவுகரிய கூரிருள்வாய் வெய்யோன் என்னக் கதிர் பரப்பி
மருவு கொழுநர்ப் பிரிந்தாரை வருத்தா திற்கு மாமதியே!

திரை செய் கடல் பொன் உருக்கிய போல் செங்கேழெய்தப் புலரியெழும்
இரவி கதிரால் சவி மழுங்கி யிருத்தல் யானே காண்பனல்; (உ)

கன்று குணிலாக் கனியுகுத்தோன் கடலினமுதம் கடைந்தெடுப்பக்
குன்றமிடலும் கலையனைத்துந் தகர்ந்து உள்ளாவிகுறைந்திலையே
துன்றுகதிர் வெண் கலைமதியே! சுலவுதிரைநீர்க் கடல் குடித்த
அன்று கலச முனி வயிற்றில் அற்றூ என்னில் அழலாயே;" (ங)

என்ற வண்ணம் அழன்று மொழிந்து இவள் அயர்ந்து புலம்பினாள். அருகு வந்து தோழியர் ஆதரித்து உபசரித்தபோதெல்லாம் விரக வேதனையால் அவரை இவள் மறுகி வைதாள். தனது உடலுறுப்புக்களையும் இகழ்ந்தாள். பிரிந்துபோய் இப்படிப் பெருந்துயர் செய்வார் என்று அன்று அவரைத் தெரிந்து நோக்காதிருந்து விட்டு இன்று பரிந்து அழுவதால் பயன் என்னையோ? எனத் தன் கண்களைக் குறித்து இவள் பழித்து நின்றாள். துணை பிரிந்த குல மகளிர் தமது இணை விழிகளை இகழ்ந்து மொழிவர் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

ஓராதே நோக்கி யுறுகண் உளற்றினாய்
தீராநோய் கொண்டாய் தெளி.

அழுவது அறிவன் றென்பது இதனால் கூறப்பட்டது.

---

1173 மேவிக் கலுழ்ந்தகண்ணை விந்தை இகழ்ந்ததேனோ
கூவி நகைத்தாள் குமரேசா! — தாவிக்
கதுமெனத் தாநோக்கித் தாமே கலுழும்
இதுநகத் தக்க துடைத்து. (ங)

இ-ள்.

குமரேசா! தன் காதலனை நயந்தழுத கண்களை மித்திரவிந்தை ஏன் நகைத்திகழ்ந்தாள்? எனின், கதும் எனத் தாம் நோக்கித் தாமே கலுழும் இது நகத்தக்கது உடைத்து என்க.

இது, அழுகின்றது சிரிக்கத்தக்க தென்கின்றது.

கதும் என = விரைவாக. கதும் என்பது விரைவுக் குறிப்புணர்த்தி வரும். "கண்ட விறெல்லாம் கதுமென வந்தாங்கே" "கதுமென நோக்கன்மின் வந்து" (கெய்தற்கலி 23, 30)

"யாமும் அவ்வயின் வருதும் நீர் கதுமேன எழுந்து போமின்" "மதிமுகம் கதுமேன வணங்கினுள்" (இராமாயணம் அகலிகை 22, உண்டாட்டு 49). இவற்றுள் "கதும்" உணர்தநிற்றலறிக. தாம் என்றது கண்களை. கலுழ்தல்=கலங்கி அழுதல். இது=கலுழா நின்ற இச் செயல். அண்மையில் சுட்டியதனுல் அதன் அணுக்கம் காணலாம்.

நோக்கி=பார்த்து. நோக்கின் நிலையைக் கதும் என விசேடித்தது ஆதியில் காதலரைக் காணுங்கால் பரபரப்போடு தன் கண்கள் பட்ட பாட்டினை நினைந்து. தாமே என்பதில் ஏகாரம் பிரிநிலை. "தன்னுலே தான் கெட்டால் அண்ணுவி என் செய்வார்" என்றபடி தானுகச் செய்துகொண்டு இப்பொழுது ஆனுதழுதால் இதற்கு நான் என்ன செய்வேன்? என நகையாடினுள்.

மேல், அறிவின்றிக் கண்கள் அழுகின்றன என்ருள்; இதில், அவற்றின் செயல் நகைக்கத்தக்க தென்கின்ருள்.

இக் கண்கள் காதலரை அன்று விரைந்து நோக்கி மகிழ்ந்து இன்று இருந்து அழுகின்றன; இச் செயல் சிரிக்கத் தக்க நிலையினையுடைய தென்பதாம்.

பிரிவில் மறுகியிருந்த தலைவி கலுழ்ந்து நின்ற தன் கண்களை நோக்கி இகழ்ந்து கூறிய படியிது.

பண்டு புரிந்த செயலால் வந்த தென்று கண்டு தெளியாமல் இங்கு மண்டியழுவது மடத்தனம என்பாள் "நகத் தக்கது என்ருள்". முன்பு அவரைப் பாராதிருந்தால் ஆருக அழுது இங்ஙனம் சீரழிய நேராதே; பார்த்ததனுல் வந்த பாரிழவு இது, என்று பரிந்துணர்ந்தமைக என்பது கருத்து.

கது மெனக் கண்டு கைக்கொண்டபடியே என்றும் அவரைக்கையகலாமல் வைத்திருக்க வேண்டும்; அது செய்யாமல் கையகல விட்டு இங்குக்கவலை யடைந் தழுதால் கழி மடம் என இழிவுரையாடி ஊர் சிரியாதா? சீ! அமைதியாயடங்கியிரு என்று கண்ணைக் குறித்து இவ வணணம கடுதது உரைததாள ஏனக.

"நண்ணார் தொழுவேல் நளன் மார்பகலம்
தண்ணாரணையில் தழுவும் கனவில்
எண்ணாது விழித்து விடுத்திடும் என்
கண்ணே! இஃதேன்கோல் கலுழ்வதுவே" (நைடதம்)

இது, தமயந்தி யுரைத்தது. பிரிந்து போன நளனைக் கனவில் தழுவி மகிழ்ந்திருக்குங்கால் நீ இடையே விழித்தொழித்து விட்டு இப்பொழுது ஓ வென்றழுகின்றாயே! என்னை இது? எனத் தன் கண்ணை நோக்கி அக் கட்டழகி இதில் உரைத்திருக்கும் அழுகைப் பார்க்க.

விரக வேதனையால் மறுகியுள்ள காதலிகள் விழிகள் மேல் பழி சுமத்தி அழுது புலம்புவர் என்பது இதனால் அறியலாகும்.

காதலி கண்கள் ஆதர மிகுந்தழு மென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை மித்திரவிந்தை பால் உணரப்படும்.

## கதை.

மித்திரவிந்தை என்பவள் அவந்தி நாட்டு மன்னனாகிய ஜய சேனனுடைய அருமைத் திருமகள். இயல் எழில் முதலிய உயர் நலங்களெல்லாம் இவள் பால் இயல்பாக இனிதமைந்திருந்தன. இவள் பருவ மெய்தித் தோழியர் புடை சூழக் கன்னி மாடத்தில் களித்திருக்குங்கால் இவளுடன் பிறந்த துணைவராகிய விந்தானு விந்தர் என்பவர் இவளைத் துரியோதனனுக்கு மணஞ் செய்ய விழைந்தார். இவள் எவரையும் மதியாது கண்ணனொருவனையே கருதியிருந்தாள். வசுதேவரோடு உடன் பிறந்த தங்கையாகிய ராஜாதி தேவியின் வயிற்றில் பிறந்தவளாதலால அம மணி வண்ணனுக்கு இயற்கையில் இவள் அத்தை மகளாயமர்ந்து நின்றாள். தன் அநதப்புரத்தின் அருகே இருந்த மரு மலர்ச் சோலையில் ஒரு முறை அச் சுந்தரன் உலாவி வருங்கால் அவனைக்கதுமெனக் கண்டு இவள் காதல் மீக் கொண்டாள். அன்று முதல் நாளும் நாளும் ஆர்வ மீதூர்ந்து அக் காளையைக் கைக் கொள்ளும் வேளையை எதிர் நோக்கி வெய்துயிர்த்து வந்தாள். இவளது நிலையினை அறிந்த துணைவரிருவரும் துரியோதனனை விரைந்து வந்து வரைந்து செல்லும்படி உறுதி சூழ்ந்து உடன்று

நின்றார். அவனும் படைக் கடலோடு பறந்து வந்தான். இவள் வருந்தி அயர்ந்தாள், விந்து சதன் என்னும் அந்தணனை மந்தணமாக அழைத்து வாசுதேவனிடம் போய்த் தன் ஆசை நோயையுரைத்து வரும்படி உணர்த்தி விடுத்தாள். அவ் வேதியன் விரைந்து சென்று உண்மையை உரிமையோடு ஓதி நின்றான். முன்னதாகவே இவள்மேல் மன்னிய காதலோடு மருவியிருந்த அப் பெருமான் களி மீக் கூர்ந்து கடுக வந்து உவளகம் புகுந்து இவளைத் தழுவி எடுத்துத் தேர்மேலேற்றிப் போர்மேல் வருவார் வருக என வீரமுழக்கஞ்செய்து வில்லேந்தி வெகுண்டு நின்றான். சுயோதனனோடு வந்திருந்தவர் அனைவரும் ஒன்றும் சொல்லாதகன்றார். அவ் வல்லாளன் இந் நல்லாளை ஒல்லையில் கொண்டு போய்த் தன் அணி நகர் புகுந்து, கடி மணம் புரிந்து, உளமகிழ்ந்திருந்தான்.

"மருவுயிர்த் தலர்ந்த மாலை வாள்வசுதேவன் தன்னோடு
ஒரு வயிற்று உதித்த நங்கை உயிர்த்தவள் வரி வண்டூத
விரை யெடுத் தெறிபூங்கோதை மித்திரவிந்தை, வையம
திருவயிற் றொருபால்வைத்த செம்மல் மேல் விழைதல் செய்தாள்;

வரிச் சிறை உவணப் பைம்புள் வலவயினுயர்த்த கார்மேல்
விருப்புறும் இளையாள் தன்னை வீறுசால்அவந்தியானும்
அரத்தமுண்டொளிரும் கூர் வேல் அடல் செய் விந்தானு விந்து
உருத்தெழு சினத்தபாந்த ளுயர்த்தகாவலற்கு நேர்ந்தார். (உ)

கொவ்வை வாய் பதித்தமுத்தக் கோவையிற் றிகழுமூரல்
அவ் வளைத்தளிர்க்கை மாதின் அரும பெறல் மன்றல் வேட்டுக்
கவ்வை நீர் வேலி காக்கும் காவலர் குழாத்தோடுற்றான்
வெவ்வழல் நச்சு நாக வெல் கொடியுயர்த்த வேந்தே. (௩)

காரெழில் கவற்றுங் கூந்தற் கையுனைந்தியற்றுக்சாமர்
வர் குடியிருந்து விக்கும் இள முல்லைக் கொடி அனைளை
ஆரமர் கடந்த கூர்வாள் அரசவை பணிக்கப்புக்கு
வார்மதுக் கமழும் பைந்தார் மாயவன் கவர்ந்து கொண்டான். (௪)

மொய்வரை துளக்குங் காற்று முகந்தெறி சிறைப்புட் பாகன்
மௌவலங் குழலினளை வெளவினனிற்றல் கண்டான்
வெவ்வரா வுயர்த்தோனுங்கு விழுச்சமம் புரியகில்லான்
தெவ்வடு சிலைக்கை மன்னர் திரளொடு சென்றான்மன்னோ; (௫)

வெம்மதஞ் செருக்கித்துஞ்சா வெண் பிறைக் கோட்டு வேழம்
கைம்முகந் தெடுத்த வேழக் கரும் பொடு நடக்கு மாபோல
வைம்முக மணிந்த வேற்கண் மாதொடு வடவை காலும்
செம்முகத் திகிரிமாயன் தேரிவர்ந்தேகினானால். (ரு)

நடாக்கரும் பெழுதி நட்ட நாகுவேயன்ன மென்றோட்
படாக்களி இளமென் கொங்கைப் பவள வாய் மயிலனானை
விடாக்களிச் சுரும்புண் கோதை விதியினிற் புணர்ந்து வேட்டான்
கடாக்களிறழைப்பவந்த காயமுற்றிகிரிமாயோன்.'' (பாகவதம்)

இவள் கண்ணனைக் காதலித்து நின்றதும், அவ அண்ணல் வந்து கவர்ந்து சென்றதும், பின்பு மணந்து மகிழ்ந்ததும் பிறவும இதன் கண் உணர்ந்து கொள்க. இதனால் இவளது அழகமைதியும், ஆர்வ நிலையும், அறியலாகும். உடலும் உயிரும் போல் உடனம ர்ந்திருந்து அரிய போகங்களை நுகர்ந்து வருங்கால் அக் கரியவன் மருவலர் மீது பொருதிறம கருதி ஒரு முறை ஒருவி யகன்றான். அப்பிரிவிடை இவள் பெரிதலமந்தாள். கங்குலும பகலும கவலை மீக்கூர்ந்து கண் துயிலாமல் கலங்கியிருந்தாள். ஒரு நாள் மாலைப் போது மேல் மாடத்தில் இவள் மறுகியிருக்குங்கால் வானத்தில் மருவியிருந்த பருவ மேகங்களைப் பரிந்து பார்த்தாள். "என் காதலரைப்போல உருவாயுலாவும் ஓ கரு மேகங்களே! அவர் விரைந்து வந்தருளும்படி எனது துயர நிலையை விவரமாக மொழிந்தருள வேண்டும்'' எனப் பலப்பல புலம்பி வேண்டினாள்.

மேகத்தைத் தூது போக வேண்டல்.

" ஆவும் சிந்தாமணியும் அம்புயமும் சங்கமும்
காவும் பணியவுயா கார் வேந்தே! —நாவினால்
சாதகமும் தோகைத் தனிமயிலும் போலவே
மேதகைய நின்வரவை வேட்டிருந்தேன்; பூதலத்துப்
பல்லுயிரும் காக்கப் பரமாம் உனக்கெனது
புல்லுயிரும் காக்கிற் புகழன்றோ?—வல்லதொரு
சீருயிரு மேகமே! செங்கண்மாற்கு ஆளானேன்
ஆருயிரும் ஏகமே அல்லவோ?—பேரரவ
நீலமஞ்சே! கேட்டியால் நின்னையல்லாது என்னையிந்தக்
காலம் அஞ்சேல் என்பாரைக் காண்கிலேன்;—ஓலமரு

விண்மாரியே! பெருமான் வேரித்துழாய் வேட்டுக்
கண்மாரி பெய்வதெல்லாம் கண்டாயே!—தண்மை
விளையும் பயோதரமே! வெம்பாத செம்பொன்
அளையும் பயோதரமே ஆனேன்;—இளைபிரியாக்
கோல மழையே! குயிலமாரனை அந்திக்
காலம் அழைப்பாமே காப்பார் ஆர்?—நீலநிற
மங்குலுக்கு வேந்தே! மலர்க் கண் புதைத்தனைய
கங்குலுக்கு நெஞ்சங் கரைகின்றேன்;—இங்கு
நடந்த கனமே! முலையிரண்டுந் தரள
வடந் தகனமே செய்து பாய்த்தேன்;—விடந்திரண்ட
திங்களெழில் இக்குச் சிலை மாரவேள் முனியில்
எங்களெழிலுக்கரசே! என் செய்வேன்?—மங்கலமா
இந்திரவில் வாங்கி எழுகின்றமைப்புயலே!
வந்திர வில் வாடை வருத்துங்காண்—அந்தரத்து
விண்ணே! உனக்கிவற்றை விண்டுரைத்தேன் அல்லாதென்
உண்ணேய வேட்கை எவர்க்கோதுவேன்?—கண்ணழலால்
வெந்தானிலத்துக்கும் வீழுகத் தாங்குகையால்
மந்தானிலத்துக்கு வாய் திறவேன்;—அந்தக்
குருந்தத்தை மாரன் குரகதமா மென்றே
வருத்தத்தை யங்குறைக்க மாட்டேன்;—கருத்துற்ற
மாதண்டலைவாய் மது கரததுக்கும் அவன்றன்
கோதண்ட நாணென்று கூறேனன்;—மூதண்ட
கோளக் குயிற்கெல்லாம் கோவே! அவன்றனது
காளக் குயிற்கும் கழறேனன்;—நாளொன்றில்
அன்புறுதேயன்று அரசனுடல் ஈர்வித்த
புன்புறவுக்கும் புகன்றிடேன்;—மென்புறத்துக்
கோம்பிக்கு உடல் பனிக்கும் கொச்சை மட மஞ்ஞைக்கும்
சோம்பித் தளரும் துயர் பணியேன்;—தேம்பிரசம்
நிற்கின்ற பூவைக்கும் நீள்குழலார் சொல்லியதே
கற்கின்ற பூவைக்கும் கட்டுரையேன்;—பொற்கால்
வெறிப்பதும வீட்டன்னம் வெண்பாலும் நீரும்
பிறிப்பது போல் நட்புப் பிறிக்கும்—குறிப்பறிந்து

காதலா லுள்ளக் கவலையது கேட்க
ஓதலாகாதென் றுரையாடேன்;—ஆதலால்
உள்ளே புழுங்குவதன்றி ஒருவர்க்கும்
விள்ளேன்; உனக்கு விளம்பினேன்; தெள்ளிய நூல்
ஓதுவாரெல்லாம் உதவுவார்க்கு ஒப்புரைக்க
ஏதுவாய் நின்ற எழிலியே! பூதலத்துப்
பெய்யுதவியும் புரிந்தாற் பேச்சுதவியுஞ் சிறிது
மெய்யுதவியும் புரிய வேண்டாவோ?—துய்ய
அடலாழியானடிக்கே அன்பாகிக் காதற்
கடலாழி மூழ்கினேன் கண்டாய்!" (மேகவிடுதூது)

இவ்வாறு கொண்டலை விளித்துக் கண்டபடி பிதற்றிக் கலங்கியிருந்தாள். இரவும் பகலும் இடையறாது அழுதலமர்ந்த இவள் ஒருநாள் தோழி கேட்கும்படி முன்னிலைப் புறமாகக் கண்ணை இகழ்ந்தாள். காதலித்து அன்று கண்ணனைக் கண்டு இன்று ஆவலித்தழுதால் யார் என்ன செய்வார்? என்று அங்கலாய்த்தாள். கதும் எனத் தாம் நோக்கித் தாமே அழுதல் நகுதற்குரியதாம் என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

தண்டாத காதலோடு தான்கண்டாய் இன்றழுதால்
கண்டார் நகைசெய்வர் காண்.

தான் கண்டழுதல் தவறென்பது இதனால் கூறப்பட்டது.

---

1174. ஆதிமந்தி ஏனோ அழுதலைந்து நீருலந்து
கோதுழந்து நொந்தாள் குமரேசா — ஏதும்
பெயலாற்றா நீருலந்த வுண்கண் உயலாற்றா
வுய்வில்நோய் என்கண் நிறுத்து. (ச)

இ.—ள்.

குமரேசா! அழுதழுது கண்ணீருலந்து ஆதிமந்தி ஏன் அலமந்துழன்றாள்? எனின், உயல் ஆற்றா உய்வு இல் நோய் என்கண் நிறுத்து உண்கண் பெயல் ஆற்றா நீர் உலந்த என்க.

பெயல்=பொழிதல், சொரிதல். "மழை பெயல் மாறிய கழைதிரங்கத்தம்" (பதிற்றுப்பத்து 41). பெயல் எனக் குறித்தது நீர்ப்பெருக்கின் இயல்பு தோன்ற. நீர் உலந்த=கண்ணீர் வறந்து நின்றன. உலத்தல்=கெடுதல், அழிதல். என்கண்= என்மாட்டு. கண் ஏழனுருபு. நிறுத்து=நிற்கச்செய்து.

உயல் ஆற்று=உய்ய முடியாத. உய்தல்=தப்பிப் பிழைத்தல். தனது அறிவு நாணங்களால் இயன்ற வரையும் முயன்று பார்த்தும் யாதும் தணியாமல் தன்னால் பொறுக்க முடியாதபடி காமநோய் கைமிகுந்திருந்ததாதலால் இனி உய்யமுடியாதென் றஞ்சி "உயலாற்று" என்றாள். உய்வு இல்=ஒழிவில் லாத. கடத்தற்கரியதாய், இடை நீங்காததாய்க் காமதாபம் கதித்து நின்றதாதலால் "உயலாற்று நோய்; உய்வில் நோய்" என்றாள். நோய் உய்வின்றி யிருப்பினும் தான் அதனை உய்ந்துபோக வல்லளாயின் சிறிது உறுதி கொண்டிருப்பள்; அதுவும் அமையாமையால் இங்ஙனம் அலமந்துரைத்தாள். உய்யா நோயுறினும் உயலாகும் வழிகிடப்பின் உயிர் உவந்து கொள்ளும் என்க. "உய்யா அருநோய்க்கு உயலாகும் மையல், உறீஇயாள் ஈத்த இம்மா" (கலி 139) அடிகள குறிப்பை இது அடியொற்றி வந்திருத்தலறிக.

மேல், கண்களின் செயலினை இகழ்ந்தாள்; இதில், அவற்றின் நிலைமையை உரைக்கின்றாள்.

எனது அழகிய கண்கள் யான் பிழைக்க முடியாமைக்கேதுவான கொடிய துன்பத்தை என்னிடத்தே நிலைபெறச் செய்து தாமும் அழமுடியாதபடி அவை நீர்வறந்து நின்றன என்பதாம்.

பிரிவாற்றாமல் அழுதழுது கண்ணீர் வற்றிக் கவன்றிருந்த தலைவி தன் கண்களைக்குறித்து ஒரு நாள் உரைத்தபடியிது.

அழமாட்டா என்னாது பெயலாற்று என்று குறித்தது அக் கண்ணீரின் மிகுதி காண. என்னை? பெயல் என்பது பெரும்பாலும் மழையையே உணர்த்தி வரும் ஆதலால் இங்கு நீர்வளம் தோன்ற அது நின்றதென்க.

"கயல்புரை உண்கண் அரிப்ப வரிவாரப்
பெயல்சேர் மதிபோல வாண்முகம் தோன்றப்
பலவொலி கூந்தலாள் பண்பெல்லாம் துய்த்துத்
துறந்தானை உள்ளி அழூஉம்" (நெய்தற்கலி 28)

இது, பிரிந்து போன தலைவனை நினைந்து ஓர் தலைவி அழுதிருந்த நிலைமையைக் குறித்தது. நீர்வார்ந்த கண்ணளாயிருந்த அவளது முகம் மழை சேர்ந்த மதிபோலிருந்ததெனை இதில் உணர்த்தியிருத்தல் காண்க.

துணைவன் தொலையிற் போனதனால் உணவு போய், உறக்கம் போய், உவகை போய், நடை போய், நலம் போய், நாணம் போய் யாரும் இரங்க இடையறாது அழுது கிடந்தாளாதலால் அவள் கண்ணீரும் போயதென்க.

"உள்ளம் போய் நாண்போய் உரைபோய் வரிநெடுங்கண்
வெள்ளம் போய் வேகின்ற மென்றளிர் போல்—பிள்ளைமீன்
புள்ளரிக்கு நாடன் திரு மடந்தை பூவாளி
உள்ளரிக்கச் சோர்ந்தாள் உயிர்" (நளவெண்பா)

நளனை நினைந்து தமயந்தி பட்ட பாட்டை இப் பாட்டு உணர்த்தி நின்றது. அக் கட்டழகி கண்ணீருலந்து காமதாபத்தால் கலங்கியிருந்த நிலையை ஊன்றி உணர்ந்து கொள்க. பிள்ளை மீன் என்றது மீன் குஞ்சுகளை. புள் = பறவை. பிள்ளை மீனைப் புள்ளரிக்கப் பார்த்திருந்ததனாலேதான் தன் பிள்ளையுயிரைப் பூவாளி உள்ளரிக்க நேர்ந்ததென வினை விளைவை உய்த்துணரும்படி இதில் வைத்திருக்கும் அழகைப் பார்க்க.

மேல் யாதும் அழுதலியலா வகை கண்ணீர் வறந்ததென்றதனால் அவள் கருத்துறு துயரம் காணலாகும். அன்போடு கலந்த துன்பம் உள்ளத்தே வரம்புகடந்து எழுந்ததாயின் கண்ணீர் வெள்ளமாயோடி விளிந்து படும் என்க.

"கள்ளநீர் வாழ்க்கையேமைக் கைவிட்டுக் காலும் விட்டான்;
பிள்ளைமை துறந்தானென்னுப் பேதுறு நிலையனாகி
வெள்ள நீர் வேலை தன்னில் வீழ்ந்த நீர் வீழ வெங்கண்
உள்ள நீர் எல்லாமாறி உதிர நீர் ஒழுக நின்றான்" (இராமாயணம்)

இது, விபீடணன் பிரிந்து செல்லும்போது கும்பகருணன் அடைந்து நின்ற நிலையைக் குறித்தது. தம்பி பிரிவில் தமையன் கொண்டிருந்த துன்ப நிலையைக் கண்ணீரால் அளந்து காட்டியிரு க்குந்திறனை இதில் ஆய்ந்தறிந்து கொள்க.

உயலாற்று வகை என்கண் நோயை நிறுத்தியதனுல் பெய லாற்றுவாறு உண்கண் நீர் உலந்த தென்றுள். "நோய் எல்லாம் நோய் செய்தார் மேலவாம்" ஆதலால் எனக்கு நோய் செய்த மையால் தமக்கு நோய் தானே வந்த தென்பது கருத்து.

தலைவனைப்பிரிந்த குலமகள் அழுதலமந்து கண்ணீர் வறந்து அயர்ந்து புலம்புவள் என்பது இதில உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை ஆதிமந்தி பால் உணரப்படும்.

## கதை.

ஆதிமந்தி என்பவள் கரிகால் வளவன் என்னும் சோழ மன்னனுடைய அருமைத திரு மகள். கலை பல கற்றவள்; கவி ன்மிகப்பெற்றவள். இவளது எழில் நிலையை அறிந்து அத்தி என்னும் சேர மன்னன் ஆர்வ மீதூர்ந்தான். அவன் பேரழகு டையவன்; நாட்டியக் கலையில் நன்கு கை தேர்ந்தவன். எழிலிசை முதலிய உயர் நலஙகளெல்லாம் ஒருங்கமைந்திருந்த அவ் இளவர சன் இவளை விழைந்து மணந்து உயர்ந்த போகங்களை நுகர்ந்து மகிழ்ந்தான்.

> "சந்தனச் சேற்றிடைத் தாம வார்குழற்
> பைந்தொடி படாமுலை குளிப்பப் பாய்தலின்
> மைந்தன தார்குழைந் துடைய வாய்திறந்து
> அஞ்சிலம் பணியலகுற் கலையொ டார்த்தவே"

என்றபடி கலவிநிலையில் இருவரும் அலகிலின்பங்களை அனு பவித்து வந்தார். வருங்கால் கழார் என்னும ஊரில் விழா ஒன்று நிகழ்ந்தது. அத்திருவிழா விற்கு இவ்இருவரும் போயினர். அங்கு க் காவிரி நதியில் வெள்ளம் பெரிதாய் மிகுந்து வந்தது; அதில் பல்வகை மக்களும் படித்துறைகளில் நின்று படிந்து குடைந்தனர். நீரில் நீந்துவதில் இவள் கணவன் யாரினும் சிறந்தவனுதலால் துணிந்து புகுந்து பலவகையாடல்களைச் செய்து நெடுந் தூரம்

போய் நிலை நீத்தாடி நிமிர்ந்து நின்றான். நீத்தம் மிகுந்து வந்தமையால் அவனை யீர்த்துச் சென்றது. செல்லவே கரையில் நின்ற இவள் மறுகி அலறினாள்; சிலர் அவனை மீட்ட முயன்றும் யாதுமுடியாமல் மீண்டு சென்றார். இவள் அருகுள்ள இடங்கள் யாண்டும் தேடி அலமந்தோடினாள்; எங்கும் காணாமையால் ஏங்கி அழுதாள்; தனது தலைமையையுமறந்து பல இடங்களிலும் தனியே திரிந்து தவித்தலைந்தாள். பட்டநிலைமையை நினைந்து பல படப்புலம்பினாள். ஒன்று அடியில் வருவது காண்க.

> "மள்ளர் குழீஇய விழவி னானும்,
> மகளிர் தழீஇய துணங்கை யானும்,
> யாண்டும் காணேன் மாண்தக்கோனை;
> யானும் ஓர் ஆடுகளமகளே; என்கைக்
> கோடீர் இலங்கு வளை நெகிழ்த்த
> பீடுகெழு குரிசிலும் ஓர் ஆடுகளமகனே." (ஆதிமந்தியார்.)

வீரர்கள்கூடி வில் வேல் முதலியன பயிலும் இடங்களிலும மகளிர் சேர்ந்து ஆடுமிடங்களிலும் இவள் தேடி யலைந்தபடியை இதில் தியங்கி யுரைத்திருத்தல் காண்க. மள்ளர்=போர்வீரர். துணங்கை=மகளிராடுகின்ற ஒருவகை ஆட்டம்; இருகைகளையும் மடக்கி விலாவி லடித்துக்கொண்டு விளையாடுவது என்க. "முடக்கிய இருகை பழுப்புடை யொற்றித் தொடக்கிய நடையது துணங்கையாகும்" (பிங்கலந்தை). சங்கினால் செய்த வளையல்கள் தன் கை நெகிழ்ந்தன என்றதனால் இவள் உடல் மெலிந்திருந்த நிலை உணரலாகும். கோடு=சங்கு. இங்ஙனம் மெலிந்தலைந்து பல வழிகளிலும் தேடி அழுதிழி கண்ணளாய் நதியயல் ஓடி முடிவில் கடலகம் சேர்ந்தாள். அங்கோரிடத்தில் மருதி என்பவளால் போற்றி வைக்கப்பட்டிருந்த தன் புருடனைக் கண்டாள். மறுகியோடித் தழுவிக்கொண்டாள். அவனும் ஆரத் தழுவி அவசமானான். இவரது காதல் நிலையை அம் மருதி நோக்கினாள்; உழுவலன்புடைய இவர்க்கு இத்துணை ஊறுபாடு நேர்ந்ததே என்று உள்ள முருகினாள்; உலகை வெறுத்தாள்; கடலுள் இறங்கினாள்; உடலந்துறந்தாள். அவளது செயலினை வியந்து ஆவலித்து நின்று இறைவனைத்துதித்துப் பெயர்ந்துவந்து

இருவரும் தமது நகரினை யடைந்தார். பிரிவிடை அழுது இவள் கண்கள் வீங்கியிருந்ததைப் பாங்கி பார்த்துப் பரிந்து நின்றாள். முன்பு காதலரைக் காட்டி எனக்கு இத்துயர் மூட்டியதனால் நீர் வறந்திங்ஙனம் நின்றன என விழிகளைச் சுட்டி இவள் மென்னகை செய்தாள். உயலாற்றா உய்வில் நோயைச் செய்தமையால் கண்கள் பெயலாற்றாவகை நீருலந்தன என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள். காதலனை நாடி இவள் கண் விதுப் பழிந்ததை அறிஞர் பலரும் வியந்து புகழ்ந்துளார்.

"திதலை மாமை தளிர்வனப்பு அழுங்கப்
புதலிவர் பீரி னெதிர்மலர் கடுப்பப்
பசலை பாய்ந்த நுதலே னாகி
எழுதெழில் மழைக்கண் கலுழ நோய் கூர்ந்து
ஆதிமந்தியின் அறிவு பிறி தாகிப்
பேதுற்றிசினே காதலந் தோழி" (அகநானூறு 135)

"அணிகிளர் சாந்தின் அம்பட் டிமைப்பக
கொடுங்குழை மகளிரின் ஒடுங்கிய இருக்கை
அறியாமையின் அழிந்த நெஞ்சின்
ஏற்றியல் எழில் நடைப் பொலிந்த மொய்ம்பின்
தோட்டிருஞ் சுரியல் மணந்த பித்தை
ஆட்டன் அத்தியைக் காணீ ரோ?என
நாட்டின் நாட்டின் ஊரின் ஊரின்
கடல்கொண் டன்றெனப் புனலொழிந்தன் றெனக்
கலுழ்ந்த கண்ணள் காதலற் கெடுத்த
ஆதிமந்தி போல
ஏதம் சொல்லிப் பேது பெரிதுறலே" (அகம் 236)

"வானுற நிவந்த நீனிறப் பெருமலைக்
கான நாடன் உறீஇய நோய்க்கென்
மேனி ஆய்நலம் தொலைதலின் மொழிவென் :
முழவுமுகம் புலராக் கலிகொள் ஆங்கட்
கழாஅர்ப் பெருந்துறை விழவினாடும்
ஈட்டெழிற் பொலிந்த ஏந்து குவவுமொய்ம்பின்

ஆட்டன் அத்தி நலனயந் துரைஇத்
தாழிருங் கதுப்பிற் காவிரி வவ்வலின்
மாதிரம் துழைஇ மதிமருண்டு அலந்த
ஆதிமந்தி காதலற் காட்டிப்
படுகடல் புக்க பாடல்சால் சிறப்பின்
மருதியன்ன மாண்புகழ் பெறீஇயர்
சென்மோ வாழி தோழி பன்னாள்
உரவுரு மேறொடு மயங்கி
இரவுப் பெயல் பொழிந்த ஈர்ந்தண் ஆறே" (அகம் 222)

இது, பிரிவிடை வருந்தியிருந்த தலைமகளுக்குத் தோழியுரைத்தது. காதலனைப் பிரிந்து மேனி நலந் தொலைந்திருத்தலினும் ஆற்றில் விழுந்து தொலைந்து போதல் நலம் என அப்பாங்கி உளைந் துரைத்திருக்கும் இதில் இவள் நிலையையும், மருதியையும் நினைந்திருத்தலறிக.

"மன்னன கரிகால் வளவன்மகள் வஞ்சிக்கோன்
தனைப் புனல்கொள்ளத, தானபுனலின் பின்சென்று
கன்னவில் தோளாயோ! என்னக் கடல்வந்து
முன்னிறுத்திக் காட்ட, அவனைத் தழீஇக்கொண்டு
பொன்னங்கொடிபோலப் போதந்தாள்" (சிலப்பதிகாரம்)

கணவனைப் பிரிந்து, கடுந்துயரடைந்து, கண்ணீருலந்து இவள் கலங்கியலைந்ததும், பின்பு கண்டு கொண்டதும், களித்து மீண்டதும், பிறவும் இவற்றுள் உரைக்கப்பட்டுள்ளன காண்க.

பெண்ணீர்மை நீங்கப் பிழைசெய்த கண்ணுந்தன்
உண்ணீ ரிழந்த துடன்.

கண்ணீர் வறந்திருந்தமை இதனல் கூறப்பட்டது.

---

1175. நோதலுற்ற தன்கண்ணை நோக்கி யிகழ்ந்தாளேன்
கோதை பதுமை குமரேசா — ஏதும்
படலாற்றா பைதல் உழக்குங் கடலாற்றாக்
காமநோய் செய்தவென் கண். (ஓ)

இ.—ள்.

குமரேசா! பதுமை ஏன் தன் கண்களைப் பழுதுரைத்தாள்? எனின், கடல் ஆற்ருக் காமநோய் செய்த என கண் படல் ஆற்ற பைதல் உழக்கும் என்க.

இது, கண்கள் உறங்காமல் அழுதிருந்தமையை யுரைக்கின்றது. படல் = உறங்கல். உறங்குங்கால் இமைகளிரண்டும் இணைந்து குவிந்து தொழிலொழிந்து விழிகள் அயர்ந்திருக்குமாதலால படல் என நின்றது. கண்படல், கண்படை, கண்பாடு என்பன உறக்கம் குறித்துவருவன அறிக.

கண்ணை மூடிமூடிப் பார்த்தும் ஒருசிறிதும் உறக்கம் வாராமல் உளமுளைந்து வருந்தியிருந்தாளாதலால அவ் அல்லல் நிலையைக் கண்மேலேற்றி "படல ஆற்ரு, பைதல் உழக்கும்" என்ருள். பைதல் = துன்பம்; இங்கு அழுதுழலல் என்க. படல ஆற்றின் பைதலுழவாதாதலால் அச்செயலறவை முதலில குறித்தாள். காதலனை நினைந்து நினைந்து யாதும துயிலாமல நோதலுற்றிருந்தமை இதனல் அறியலாகும.

"நோம் என் நெஞ்சே; நோம் என் நெஞ்சே;
இமைதீய்ப் பன்ன கண்ணீர் தாங்கி
அமைதற் கமைந்தநம காதலர்
அமைவில ராகுதல நோமென் நெஞ்சே" (குறுந்தொகை ச)

தன் காதலனை நினைந்து கண்ணீர்மல்கிக் கடுந்துயருழந்து ஓர் தலைவி இருந்தபடியை இதில் உரைத்திருத்தல காண்க.

கடலும் ஒப்புரைக்கலாகாதபடி காமநோய் மிக்கிருந்ததென்பாள் "கடல் ஆற்ரு" என்ருள். கடலைக் குறித்தது, கடத்தற்கு முடியாததாய் அளவிடலரியதாய் ஆழ்ந்து பரந்து அகன்றிருக்கும் அதன் நிலைமை நோக்கி.

மேல், கண்கள் பெயலிழந்து நின்றன என்ருள்; இதில் துயருழந்துள்ளன என்கின்ருள்.

கடலினும் பெரிதாகக் காம நோயை எனக்குச் செய்த கண்கள் தாமும் உறங்காதன வாய்த் துன்பத்தி லழுந்திக் கிடக்கின்றன என்பதாம்.

பிரிந்துநின்ற தலைவி கண்ணுறங்காது வருந்தியிருந்த நிலையைப் பாங்கி கேட்கப் பகர்ந்தபடியிது. தலைவன் பிரிவினல் நேர்ந்த நோயைக் கண்கள் செய்தனவாகச் சொல்லியது என்னை? எனின், அவனை முதலில் காட்டித்தந்தது கண்களே யாதலால அக்காட்சி மூலம் கருதி என்க.

காமம் கதுவப்பெறின் உறக்கமின்றி உளைந்துகிடக்க நேருமாதலால் தனது கண் படாமையை இங்ஙனம் கழறலானாள்.

"அதுகொல் தோழி காம நோயே?
வதிகுரு குறங்கும் இன்னிழற் புன்னை
யுடைதிரைத் திவலை அரும்பும் தீநீர்
மெல்லம் புலம்பன் பிரிந்தெனப்
பல்லிதழ் உண்கண் பாடொல்லாவே" (குறுந்தொகை 5)

இது, பிரிவு நிலையைப் புதிதாக அடைந்த ஓர் தலைவியுரைத்தது. அது என்றது உறங்காமையை. காம நோய் என்பது கண்படின்மையோ? எனத் தோழியிடம் அவள் வினவியிருத்தல் காண்க, காம நோயுடையார் உறக்கம் கொள்ளாமல் உழந்து கிடப்பர் என்பது இதனால் உணரலாகும்.

"தடமென்பணைத் தோள் மடமிகு குறுமகள்
சுணங்கணி வனமுலை முயங்கல் உள்ளி
மீனகண் துஞ்சும் பொழுதும்
யான்கண் துஞ்சிலன் யாது கொல்நிலையே?" (நற்றிணை 319)

என ஓர் காதலன் அலமந்துள்ளதும் ஈண்டு அறியத்தக்கது. காமநோயைக் கடல் என்றது ஒரு முடிவும் காணமல் துயரிடை ஆழ்ந்து உயிரடைந்துள்ள நிலை நினைந்தென்க.

"மயங்கும்; தெளியும்; மனம்நடுங்கும்; வெய்துற்
றுயங்கும்; வறிதேயுலாவும்; வயங்கிழைபோய்ச்
சோரும்; துயிலும்; துயிலாக் கருநெடுங்கண்
நீரும் கடைசோர நின்று." (நளவெண்பா)

கண்படலொல்லாது காமவேதனையால் தமயந்தி அலமந்தழுதிருக்கும் நிலைமையை இதில் அறிந்துகொள்க.

என்றது துயிலாது அழுது துயருழத்தலை. கண்முன் நின்றமை யால் அண்மையில் சுட்டினாள். இடர்ப்பட்டது எனவும் பாடம்.

மேல், கண்கள் பாயிற் படலாற்று என்றாள்; இதில், அவை நோயுட்பட்டன என்கின்றாள்.

எமக்கு இக்காம நோயைச் செய்த கண்கள் தாமும் துயி லாதழுது துயருழந்தன; இது மிகவும் இனிதென்பதாம். நாயகனை நினைந்து ஓயாதழுது உறங்காது வருந்தியிருந்த தலைமகள் தன் கண்களைக்குறித்து ஒரு நாள் உவந்து மொழிந்தபடி யிது.

அயர்ந்தினி துறங்கல், அஞ்சனந் தீட்டல், அதிசயங்கள் பார்த்தல் முதலிய நுகர்வு நலங்கள் யாதுமின்றி என்றும் துனியே மிகுந்து கண்கள் கலுழ்ந்திருந்தன ஆதலால் அவை நோய்வாய்ப்பட்டனவாக உவந்து "தாம் இதற்பட்டது" என் றாள். தன்னைத் துயர்ப்படுத்தியதால் தாமும் துயர்வாய்ப்பட் டன என்பதாம்.

தனக்கு இடர் செய்தவன் இடரடைந்து வருந்துவனாயின் அது வாதிக்கு மிகவும் இனிமையாகுமாதலால் "ஓஒ இனிதே" என இங்ஙனம் வாயாடி நின்றாள். ஏகாரம் தேற்றம்.

தலைவனைப் பிரிந்திருந்த குலமகள் உளநிலை கலங்கி விழி யினை இகழ்ந்து மொழிவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பகவதிபால் உணரப்படும்.

## கதை.

பகவதி என்பவள் காவிரிப்பூம் பட்டினத்திலிருந்த வாம தத்தன் என்னும் வணிசனுடைய அருமைத் திருமகள். நல்ல குணவதி. பொறையிலும் பொற்பிலும் சிறந்தவள். பருவ மெய்தி உருவ நலங்கனிந்து விழுமிய நிலையில் விளங்கியிருக்குங் கால் சவுந்தரதத்தன் என்னும வணிகர் தலைமகன் ஒருநாள் இவ ளைக் கண்டான். ஆசைமீக்கொண்டான். அவன் பெயரியல்புக் கேற்ப இளமை நலங்கனிந்து வடிவழகில் சிறந்திருந்தானாதலால் அவனை நோக்கியவுடனே இவளும் வேட்கைமீக் கூர்ந்தாள். ஒருவரை ஒருவர் உருவநோக்கி உழுவலன்புடன் உள்ளங்கலந்து

உயிரொன்றி நின்று பின்பு உலகறிய மணந்து, அரிய போகங்களை நுகர்ந்து இருவரும் இனிதமர்ந்திருந்தார். இங்ஙனம் இருந்துவருங்கால் இடையே அவன் பொருள்வளங்கருதி மறுபுலம் செல்ல விழைந்தான். அதனைக் குறிப்பாலறிந்து இவள் குலைந்து நடுங்கினாள். அவன், பொருளின் பெருமையையும், வினைசெயல் வகைமையையும் இனிமையாக எடுத்துக்கூறி "விரைவில் வருவல்; மறுகி அயரல்;" என ஆற்றித்தேற்றி அமர்த்திவிட்டு அகன்றுபோனான். சென்றவன் வினையாண்மையில் மூண்டு நெடுநாள் அங்கு நிலைத்து நின்றானாதலால் இவள் கடுங் கவலையோடு கலங்கியிருந்தாள். உளமிக வுருகி வழிமேல் விழிவைத்து நாளும் அவனை நாடிநின்ற இவள் பின்பு தன் தோள்முதலிய உறுப்புக்களைவாளாவெறுத்து வைதுபழித்தாள்.

"இலைகொள் பூணுடை ஏந்தலை ஏந்தினீர்
நிலைகொளா வகை நீத்திழிந்தீர் அநதோ!
முலைகளே! இனி முந்துற நின்றுநீர்
தலைகள் நீட்டலும் தக்கதுவோ சொலீர்? (க)

வாளும் வேலும் வடுவும் பிணையும் எந்
நாளும் நேரா நலமுறு கண்களே!
ஆளிமொய்ம்பனை யன்று கண்டீர்! இன்று
நீளவிட்டனிர்! நேடுமின் போயென்றாள்" (உ)

இங்ஙனம் பாடழிந்து பலபலபன்னி நிலைகுலைந்திருந்த இவளை அயலே நின்று ஓர் தூர்த்தன் நாளும் பார்த்து வந்தான். துணை பிரிந்து காமநோயால் வருந்தித் தனியே யிருத்தலால் தனக்கு இனியளாயிசைவள் என அவ் இளி மகன் நினைந்து துணிவு மீக்கொண்டு இடையிடையேவந்து காமக்குறிப்போடு கனிந்துநோக்கினான். அவனது உள்ளக் குறிப்பை இவ் வுத்தமியுணர்ந்தாள். உயிர் துடித்தாள். தனது எழிலுருவமல்லவா இம் முழுமகனுக்கு இப்படி விழைவினை விளைத்ததென்று தன்னையே வெறுத்துக்கொண்டாள். குரங்கு முகம்போல் தன் முகம் திரிந்திருக்க வேண்டுமென்று இறைவனை இவள் நினைந்து வேண்டினாள்.

அவ்வாறே அது ஆகி நின்றது. அவன் அஞ்சி ஒழிந்தான். பின்பு கணவன் வரவே தன் கவினுருவம் வரக் கருதினள்; உடனே பூரண சந்திரன்போல் பொலிந்து விளங்கினள். நிகழ்ந்ததை யறிந்து அவன் நெடிது வியந்தான்; தான் இகந்து நீங்கினும் நிலைதிரியாது தன்னைக் காத்து அவள் அமைந்திருந்த திறனை நினைந்து நினைந்து அவன் உவந்து புகழ்ந்தான். "கண்டார் இகழ்வனவே காதலன்தான் செய்திடினும் கொண்டானை யல்லால் அறியாக்குலமகள்" என்ற பெரியார் மொழிக்கு இவள் கரியாயிருந்ததை அனைவரும் கண்டு மகிழ்ந்தார். இவளது கற்புத் தன்மையைப் பத்தினிப் பெண்டிர் பலரும் கருதிப் புகழ்ந்தார்.

"வேற்றொருவன், நீள் நோக்கம் கண்டு நிறைமதி வாண் முகத்தைத்
தானோர் குரக்கு முகம் ஆகென்று, போன
கொழுநன் வரவே குரக்கு முகம் நீத்த
பழுமணி யல்குற் பூம் பாவை" (சிலப்பதிகாரம்)

இது, பாண்டியனுடைய தேவி முன் கண்ணகி உரைத்தது. இப் பதிவிரதையின் பெருமையை அப் பத்தினித் தெய்வம் அரசி முன் அறிவுறுத்தியிருக்கும் அமைதியை யறிக. இதனால் இவளது பான்மையும் மேன்மையும் நன்கு தெளியலாம். பிரிந்திருந்தபோது தன் முகம் கண்களை இகழ்ந்து நின்ற இவள் கொழுநன் வந்தவுடனே அவற்றை உவந்து கொண்டாள் என்ற இதனால் உடலுயிர் யாவும் அவனுக்கே உரிமை செய்திருந்த உண்மை இனிது புலனும். பிரிவாற்றாது வருந்தியுள்ள குலமகளிர் கலுழ்ந்த கண்களின் துயரை இனிது என உவந்துகொள்வர் என்பதை உலகம இவள் பால் உணர்ந்து நின்றது.

"அண்ணல் தன்னை முன் ஆர்வமுடன் கண்டிவ்
வண்ணம் என்னை வருந்த வைத்தீர் இன்றோ
எண்ணமின்றி யிருந்தழு கின்றனிர்
கண்ணரே யிது காணும் இனிதரோ"

தன் கண்ணைக் குறித்து ஓர் தலைவி இதில் கழறியிருக்கும் நிலையைப் பார்க்க.

காமநோய் எற்களித்த கண்ணேநீ கண்டாயே
ஏமநோய் எல்லாம் எதிர்ந்து.

நோய் செய்த கண் நோயுழந்த தென்பது இதனால் கூறப்பட்டது.

1177. கிர்த்தி மிகுநீல கேசியேன் தன்கண்ணைக்
கூர்த்திகழ்ந்து வைதாள் குமரேசா — வேர்த்தே
உழந்துழந் துண்ணீ ரறுக விழைந்திழைந்து
வேண்டி யவர்க்கண்ட கண். (எ)

இ.—ள்.

குமரேசா! தன் கண்களை ஏன் நீலகேசி கடுத்து வைதாள்? எனின், விழைந்து இழைந்து வேண்டி அவர்க்கண்ட கண், உழந்து உழந்து உண்ணீர் அறுக என்க.

இது, கண்ணைச் சபித்தமை கூறுகின்றது.

உழத்தல் = துன்பத்தில் அழுந்தல். உழந்து உழந்து என்றது அவலத்தில் அழுந்தி அழுதழுது என்றபடி. உள்நீர் = உள்ளமைந்த நீர். அறுக = அற்றுத் தொலைக. வியங்கோள் வைதற் பொருளில் வந்தது.

விழைந்து = விரும்பி. இழைந்து = குழைந்து. வேண்டி என்றதனால் அவர் வேண்டு முன்னரே தாமாக முன்புற ஆர்வ மீதூர்ந்து அவரை வேண்டி நின்றமை புலனும்.

அவர் என்றது தலைவனை. இது பொழுது தொலைவிற்போ யுள்ளமையால் தூரச் சுட்டினாள்.

தலை நாளில் தலைவன் எதிர்ப் பட்ட பொழுது ஆர்வமிகுந்து அகங்குழைந்து ஆவலோடு இடைவிடாது அவனை உவந்து பார்த்தாளாதலால் அந் நிலையினை நினைந்து "விழைந்து இழைந்து வேண்டிக்கண்ட" என்றாள். கண்ட காதலன் கையகன்று போனதனால் பண்டு நோக்கிய பான்மையை இகழ்ச்சிக் குறிப்போடு இங்ஙனம் பரக்க எடுத்துக் கூறினாள். விழைதல் இழைதல் வேண்டல் களாகிய அக நிகழ்ச்சிகளைக் கண்மேலேற்றி யது காட்சிக்கு அது கருத்தாவாயுள்ளமையான் என்க. காதலனைக் காட்டிவிட்டுத் தன்னீர்மை நீங்கும்படி தனக்கு உண்ணோயைவிளைத்தமையால் அவைஉண்ணீர்அறுக என்றாள். பெண் பாவம் பொல்லாதென்று தெரியாமல் புண்பாடு செய்து, கண் பாவம் கட்டியதனால் தன் பாடழிந்த தென்பதாம்.

மேல், கண்கள் நோயுழத்தலை இனிதென மகிழ்ந்தாள்; இதில், அவை நீர் வறந்து நிலகுலைக என்கின்றாள்.

விரும்பி நெகிழ்ந்து ஆவலோடு இடைவிடாமல் காதலரைக் கண்ட கண்கள் இன்று துன்பத்தில் அழுந்தி அழுதழுது, உள்ளிருக்கும் நீர் ஒழிக என்பதாம்.

பிரிந்துபோன தலைவன் விரைந்து வாராமையால் அவனை நினைந்துருகி வருந்தியழுதிருந்த தலைவியைத் தோழி நெருங்கி அம்மா! "உன் கண்கள் இமைகள் வீங்கி உள்ள நீரெல்லாம் போய் உதிர நீர் காணும்படி குழிந்து சிவந்துள்ளன; இனி அழுதலாகாது;" எனத்தழுவி மொழிய அவளை நோக்கித் தன் விழிகளை இகழ்ந்து இவள் எதிர் மொழிந்தபடியிது.

அல்லலில் ஆழ்ந்து தன்னகத்துள்ள நீர் முற்றும் அறவே வற்றி அலமந்தழிக என்பாள் "உழந்து உழந்து உள் நீர் அறுக" என்றாள். வெகுண்டு கூறுகின்றாளாதலால் மிகுதி தோன்ற இங்ஙனம் இருமுறை அடுக்கிக்கூறினாள்.

"அசைநிலை பொருள்நிலை இசைநிறைக்கு ஒருசொல் இரண்டு மூன்று நான் கெல்லை முறை அடுக்கும்" (நன்னூல்)

ஈண்டுப் பொருள் நிலை என்றது உவகை வெகுளி அச்சம் ஆர்வம் விரைவு முதலிய நிலைகளை என்க.

கணவன் பிரிந்துபோகக் கண்ணை நோக்கி இவ் வண்ணம் கடுத்து வைதது என்னை? எனின், பிரிவிடை மெலிந்து விரக தாபத்தால்மறுகியுள்ள மகளிர்தமக்கு மிகவுமுரிமையாய் அணுகியுள்ள பொருள்களை ஆர்வமிகுதியால் சலுகைசெய்து இவ்வாறு இகழ்வர் என்க.

"கொலைகொள் வேலவன் கூடலன் ஏகினன்;
இலை கொள் பூணுமக்கு என் செயும் ஈங்கெனு
மலைகொள் சந்தனம் வாய்மெழு கிட்ட தன்
முலைகொள் பேரணி முற்றிழை சிந்தினாள்;

அருங்கலக் கொடி யன்னவன் ஏகினன்;
இருந்திவ்வாகத்து எவன் செய்விர் நீரெனு
மருங்குல் நோவ வளர்ந்த வனமுலைக்
கருங்கண் சேந்து கலங்க அதுக்கினள்." (சிந்தாமணி)

துணைவனைப் பிரிந்து வருந்தி நொந்தபதுமை தனது தனங்களை இகழ்ந்து இதில் மொழிந்துள்ளமை காண்க.

"இளைக்கலாத கொங்கைகாள்! எழுந்து விம்மி என் செய்தீர்?
முளைக்கலா மதிக் கொழுந்து போலும் வாண் முகத்தினன்
வளைக்கலாத விற்கையாளி வள்ளல் மார்பின் உள்ளுறத்
திளைக்கலாகு மாகில் ஆன செய்தவங்கள் செய்மினே"
(இராமாயணம்)

இது, சீதை உரைத்தது. இராமனை எய்துதற்குரிய அரிய தவங்களைச் செய்யப் போகாமல் பொங்கி விம்மிப் புடைபரந்து இங்கு ஏன் தங்கியிருக்கிறீர்கள்? எனத் தன் கொங்கைகளை நோக்கி அம் மங்கை மொழிந்திருக்கும் அழகைப் பார்க்க.

தலைவனைப் பிரிந்து வருந்தியுள்ள தலைவி முன்பு அவனை விழைந்து கண்ட கண்களை இகழ்ந்து மொழிவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நீலகேசியால் உணரப்படும்.

### கதை.

நீலகேசி என்பவள் காசியரசனுடைய அருமைத் திருமகள். மாசில்லாதவள். தேசு மிகப் பெற்றவள். எழில் நிலையில் அக்காலத்திருந்த மகளிரெவரும் தனக்கு நிகரில்லாதவள். இயலிசை முதலிய கலை நலங்கள் யாவும் இவளிடம் இனிதமர்ந்திருந்தன. அழகிலும் அறிவிலும் சிறந்து பெருமித நிலையில் மருவியிருந்த இவ் அரசிளங்குமரியைத் தோழியரும் செவிலித் தாயரும் நாளும் பேணி நயந்து போற்றினர். ஒரு முறை இனிய நீர் நிலையில் பாங்கியரோடு இவள் நீந்தப் புகுங்கால் செவிலித்தாய் வந்து நின் மெல்லிடை பொறாது; ஒல்கி ஒசியும் ஆதலால் இங்ஙனம் செல்லலாகாதெனச் சொல்லித் தடுத்தாள்; இவள் யாதும் கேளாமல் ஆடல் விருப்பால் அங்கு நீடிப் புகுந்தாள்.

"போக்கிட மின்றி வீக்கமொடு பெருகி,
அம்மையும் அழகும் கொம்மையொடு கழுமிக்,
கால்பரந் திருந்த கருங்கண் வெம்முலை
மேலிருந்தன யான் பொறையாற்றேன்; என்று
ஒசிவது போலுநின் ஒசிநுசுப்புணராது
இனக்கிடை இப்புனல் குடைகுவை யாயின்
நினக்கிடை மற்றொன்று உடையையோ? எனக்
காதற் செவிலி கழறுபு விலக்கவும்
போதற் கண்ணே புரிந்த வேட்கையின்
ஐயரி பரந்த அரிமலர் நெடுங்கண்
மையுண்டு மதர்த்த மணியொழுக் கேய்ப்பக்
கோல ஆகத்துக் கொடி பட எழுதிய
சாதிங் குலிகம் ஆதியாகச்
சுட்டிச் சுண்ணமொடு மட்டித்துக் கலந்த
குங்குமக் கொழுஞ்சேறு கூடக் குழைத்திட்டு
இந்திரவில் நெகிழ்ந் துருகி யாங்கு
நீடுர வழியி னூடுநிமிர்ந் தொழுகிப்
பிணர் முரிப் பட்டுடைப் பெருநல அல்குற்
காசு நிழற் காட்டு மாசில் மாமை
ஆவி நுண்துகில் அணி நலம் நனைப்பப்
பூவினுட் பிறந்த புனையிழை போலத்
தண்ணீர் தோழியர் ஆடத் தான்தன்
கண்ணீ ராடுமோர் கனங்குழை." என்றபடி

பெண்ணீர்மையோடு யாண்டு மூவந்தாடி இவள் மன்னி இருந்தாள். கன்னிமாடத்தருகே யிருந்த மருமலர்ச் சோலையில் ஒரு நாள் இவள் உலாவி வருங்கால் மந்தரன் என்னும் மன்னன் கண்டான்; மையல் மீக்கொண்டான்; அவன், அரசர் பலரும் அடி தொழத்தக்க முடியுடை வேந்தன்; வடிவழகில் சிறந்தவன். அவனை விழைந்து நோக்கி உளங் குழைந்து இவள் உடன் துவண்டு நின்றாள். இவளது நிலையினை யறிந்து அவன் பெரு மகிழ்வடைந்து உயிருருகத் தழுவிப் பின்பு உலகறிய மணந்து அளவில் போகங்களை நுகர்ந்து ஆர்வமீதூர்ந்தான்.

"கத்திகைக் கருமென் கூந்தல் கயிற் புறத்தவிழ்ந்து வீழ
முத்தரிச் சிலம்பு பைம் பொற் கிண்கிணி முரன்று பாடத்
தத்தரி நெடுங்கண் சேப்பத் தட முலை தாங்கலாற்றாது
எய்த்து நுண்மருங்குல் தேம்ப ஏந்தலோடு ஆடினாளே"

என்றபடி காமநலங்கனிய அவனோடுகூடி மகிழ்ந்து இவள்குலாவி வந்தாள். வருங்கால் இடையே அவன் ஓர் போர்மேற் சென்றான். அவன் செல்லவே ஒளி இழந்த மணிபோல் உருவ நிலை குலைந்து விழி துயிலாமல் இவள் அழுதலமந்தாள். அருகு வந்தவரெவ ரையும் விரக வேதனையால் மறுகி வைதாள். நல்ல தவஞ் செய் திருந்தால் நாயகனைப் பிரிந்து இவ் அல்லலடைய நேர்ந்திராதே எனத் தன் உள்ளத்தையும் உயிரையும் உருத்து வெறுத்தாள் அன்று நீ காதலித்துக் கண்டதனால் இன்று நான் இந் நோதல் அடைந்தேன் ஆதலால் உண்ணீரிழந்து உலைந்து படுக எனக் கண்ணை இகழ்ந்தாள். இன்னவாறு பிரிவாற்றாமல் இவள் பிதற்றி நின்றன பல. "விழைந்து இழைந்து வேண்டி அவர்க் கண்ட கண் உழந்து உழந்து உண்ணீர் அறுக" என்று காதலிகள் உரைத்து நிற்பரென்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள். பின்பு மந்தரன் வந்து மருவி மகிழ்ந்தான். இவளது உள்ளக் கற்பையும் உழுவலன்பையும் உணர்ந்து வியந்தான்.

"மறுவிலேன் அமர் மாபத்தினியும்
காசியரசன் மாசில் மட மகள்
நீலகேசி என்னும் பெரும் பெயர்க்
கோலத் தேவி" (பெருங்கதை)

எனத் தனது வரன் முறையை உதயணனிடம் ஒரு முறை கூறி வருங்கால் இவ்வாறு அவன் உரைத்து நின்றான். இவளது பண்பும் பெருமையும், இவள்பால் அவன் வைத்திருந்த அன்பும் அருமையும் இதனால் நன்கு அறியலாகும்.

ஆர்வமுடன் நின்றவரை அன்றுகண்ட கண்களின்று
நீர்வறந்து நிற்க நெடிது.

காதலி கண்ணைச் சபித்து நின்றமை இதனால் கூறப் பட்டது.

1178. கையகன்ற காதலனைக் காணவிழைந் தேனுளைந்தாள்
கொய்மலர்ப்பூங் கோதை குமரேசா—மெய்யாகப்
பேணாது பெட்டார் உளர்மன்னோ மற்றவர்க்
காணா தமைவில கண். (அ)

இ—ள்

குமரேசா! அகன்று போன காதலனைக் காணவிழைந்து கோதை கண்கள் ஏன் கவன்றிருந்தன? எனின், பேணாது பெட்டார் உளர் மன்னோ மற்று அவரைக் காணாது கண் அமைவில என்க.

பேணாது = விரும்பாது. பேணல் = விரும்பல். பெட்டார் = விரும்பினார். "பெட்டாங்கு ஈயும் பெருவளம் பழுனி" புறம் (113) "பெட்டாங் கொழுகும் பெருமகன் போலவும்" (பெருங்கதை) "பெரும்புனல் நதிகளும் குளனும் பெட்புற" (இராமாயணம்) இவற்றுள் பெட்டல் உணர்த்தி நிற்றலறிக.

தன்னை விரும்பி நில்லாமல் தலைவர் அகன்று போனமையை நினைந்து "பேணாது" என்றும், அங்ஙனம் போனவரைக் கண்கள் காண விழைந்துள்ளமையை இகழ்ந்து "பெட்டார்" என்றும் சுட்டி மொழிந்தாள். உளரோ என்றது இலர் என்றபடி. மன் கழிவிரக்கம் தோன்ற நின்றது. அவர் என்றது தலைவனை.

அமைவு இல = அமைதியா யடங்கி நின்றில.

தலைவனைக் காணவேண்டுமென்னும் அவாவினால் தன்னை மீறிக் கண்கள் விரைந்து நிற்கின்றன என்பாள் "அமைவில" என்றாள். "காணலாகுமாயின் ஆவி காணலாகும்" எனச் சானகி விழைந்து நின்றதுபோலக் காதலரைக் காண விரைந்து காதலிகள் குழைந்து நிற்பாராதலால் தன் விதுப்பினைக் கண் மேலேற்றி இங்ஙனம் கையடித்து நின்றாள்.

மேல், நிலைகுலைந்து கெடுகவென்று கண்களை வைதாள்; இதில், அவற்றின் நிலையினை உரைத்து நிற்கின்றாள்.

தம்மை விரும்பாதவரைத் தாம் விரும்பினார் இவ் வுலகத் திலர்; அங்ஙனமாகவும் தம்மைக் காணாதகன்றுபோன காதலனைத்

தாம் காணவேண்டுமென்று விழைந்து நாணமின்றி என் கண்கள் கடுத்து நிற்கின்றன என்பதாம்.

காதலனைக் காண விழைந்து தன் கண்கள் மிகுந்து நிற்கு நிலையினைத் தலைவி இகழ்ந் துரைத்தபடியிது.

தம்மை விரும்பினாரைத் தாம் விரும்புதலும், விரும்பாதுநின்றாரை வெறுத் தொழிதலும் உலகத்தியற்கை; அவ் இயற்கையை மீறி என் கண்கள் எழுந்துள்ளன என்பாள் "பேணாது பெட்டார் உளரோ?" என இதமாக எடுத்துக் காட்டினாள்.

தம்மைக் காணாது தனியே தவிக்கவிட்டுப் போனவரைத் தாம் காணவேண்டுமென்று தவித்து நிற்கின்றனவே; இந் நாணக் கேட்டிற்கு நான் என்ன செய்வேன்? என்று தன் கண்களை இங்ஙனம் இகழ்ந்து நின்றாள்.

"நாணில மன்ற எம் கண்ணே; நாணோர்பு
சினைப் பசும் பாம்பின் சூல் முதிர்ப்பன்ன
கனைத்த கரும்பின் கூம்புபொதி அவிழ
நுண் ணுறை அழிதுளி தலைஇய
தண்வரல் வாடையு நம் பிரிந்திசினோர்க் கழலே?"
(குறுந்தொகை)

அழல் = தீ. ஏகாரவினா எதிர் மறை குறித்தது. நம்மைப் பிரிந்தவர்க்கு வாடை அழலாயிருந்தால் நம்பால் வந்திருப்பர் என்பது கருத்து. நுண் உறை = நுண்ணிய நீர்.

எம்மைப் பிரிந்துபோனவர் குளிர்ந்தவாடைக்காலம் வந்தும் இங்கு விரும்பி வராதிருக்க எமது கண்கள் அவரைக் காண விழைந்து கரைந்து நிற்கின்றனவே! இவற்றிற்கு யாதும் வெட்கமில்லையோ? என ஒருதலைவி இதில் விழிகளை இகழ்ந்திருத்தலறிக.

தன் காதல் நிலையைக் கண்மேலேற்றி இவ்வாறு ஓதலாமோ? எனின், விரக வேதனையுடையார்க்கு இஃதோர் விரகாம் என்க.

"வண்ணம் பசந்து புலம்புறு காலை
உணர்ந்த போல உறுப்பினைக் கிழவி
புணர்ந்த வகையிற் புணர்க்கவும் பெறுமே" (தொல்காப்பியம்)

பிரிவாற்றுமல் உடல் மெலிந்து பசலை பூத்துப் படருழந் தயருங் கால் கண் தோள் முதலிய தம் உறுப்புக்களை உணர்வுடையனவாக முன்னிலைப படுத்தித் தலைவியர் உரையாடுவர் என இஃது உணர்த்தி நிற்றல் காண்க.

பிரிந்துபோன நாயகனைக் காண விழைந்து காதலி கவன்றி ருப்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை கோதை பால் உணரப்படும்.

## கதை.

கோதை என்பவள் காவிரிப்பூம் பட்டினத்திலிருந்த பானு தான் என்னும் குறுநில மன்னனுடைய அருமைத் திருமகள். நிறை நல முடையவள். இவள் பருவமெய்தி எழில் நலங் கனி ந்து இனிதமர்ந்திருந்தாள். இவளது உருவ நிலைமை வியந்து அனை வரும் உளமுவந்து வருங்கால் அந் நகரிலிருந்த நருமினி என்னும் வறியவளொருநாள் இவள் தாயிடம் வந்தாள். அவ் இருவரும் இளமையில் மிகவும் கிழமையுற்றிருந்தார். காவிரி நதியில் ஒரு முறை மணல் வீடு கட்டி உருவங்களமைத்து உவந்து விளை யாடினர்; அதில் "இது பெண்; அது மாப்பிள்ளை; "என உல் லாசமாக உவந்து உரையாடுங்கால் உன் வயிற்றில் ஓர் ஆண் மகன் பிறந்து, என்பால் ஓர் பெண்பால் தோன்றுமாயின் அவ் இருவ ருக்கும் இவ்வாறு மணஞ்செய்து கொள்வோம் என இவள் தாயா ராகிய சாருவதி உரை செய்து நின்றுள். பின்பு இவள் பெருந் திருவுடையானுக்கு அருந்துணைவியானுள்; அவள் வறியனுக்கு மனைவியாய் ஓர் அருமைப் புதல்வனைப் பெற்றுள். அம் மைந் தன் காளைப் பருவத்தனுய்க் கனிந்து நின்றமையால் முன்பு மொழிந்திருந்ததை நினைந்து இவளிடம் வந்து அவள் மணங் குறித்து நின்றுள். இவள் சினந்து நோக்கினுள். செல்வச் சீமாட்டியாகிய என் அருமைப் புதல்வியை நல்குரவுடைய உன் மகனுக்கு எங்ஙனம் நல்குவது? என எள்ளி மொழிந்தாள். அவள் முன்னர் நிகழ்ந்துள்ளதை நினைப்பூட்டினுள்.

" பிள்ளைப் பருவத்தில் பேதைமையால் பேசியதை
உள்ளங்கொண் டாடி உளறுகின்றுய்—எள்ளளவும்
ஓர்ந்துணரா திங்குநீ ஓட்டவந்தாய் அம்மா நீ
ஆர்ந்த சமர்த்தியடி;

பூவினுறு செந்தேனைப் போந்து மதுகரமே
மேவி நுகரலன்றி மெல்ஈபோய்த்—தாவிவிழல்
ஆகுமோ? அவ்வாறே ஆகிவந்தாய் ஆகாதே
ஏகாய்! இவணீ யிகந்து''

என இவள் இகழ்ந்து மொழிந்தாள். அவள் வருந்தி யகன்றாள். நாயகன் வந்தவுடனே இதனை இவள் நவின்று நின்றாள். அவன் சினந் தெழுந்தான். அவ்வமயம் அயலமர்ந்திருந்த இத் தலைமகள் இவ்வுளவினைக் கேட்டு நிலையினை யறிந்தாள். நான் பிறக்கு முன்னரே பெற்றோர் எனக்கு மணமகனைப் பேசி முடித்துளார்; இனி வேறு நினைப்பது வீண் என வெறுத்தாள்; அந்தப்புரம் புகுந்து ஆடை அணிகளால் தன்னை அலங்கரித்துக் கொண்டு யாதும் கூசாமல் நருமினி இல்லை விரைவினிலடைந்து அவளது மகனடியில் விழுந்து வணங்கி மணமகனாக அவனை விழைந்து கொண்டாள். இவளது உள நிலையை யறிந்து ஊரவரெல்லாரும் உவந்து புகழ்ந்தார். இரு முதுகுரவரும் பெருவியப்புற்றுப் பேணி மகிழ்ந்து அமைந்தவாறே மணஞ் செய்து தந்தார். வறியவனாயிருப்பினும் கருதிய ஒருவனையே கைக் கொண்டு நின்ற இவளது கற்பின் தன்மையையும், அற்புத நிலையையும் வியந்து அறிஞரனைவரும் புகழ்ந்து போற்றினார். அடியில் வருவதும் காண்க.

"பெண்ணறி வென்பது பேதைமைத்தே என்றுரைத்த
நுண்ணறிவினோர் நோக்கம் நோக்காதே; எண்ணிலேன்
வண்டலயர்விடத்து யான் ஓர் மகட்பெற்றால்
ஒண்டொடி நீ ஓர் மகற் பெறிற், கொண்ட
கொழுநன் அவளுக்கென்று யான் உரைத்த மாற்றம்
கெழுமியவளுரைப்பக் கேட்ட விழுமத்தால்
சிந்தை நோய் கூரும் திருவிலேற் கென்றெடுத்துத்
தந்தைக்குத் தாயுரைப்பக் கேட்டாளாய், முந்தியோர்
கோடிக் கலிங்கம் உடுத்துக், குழல் கட்டி,
நீடித்தலையை வணங்கித் தலைசுமந்த
ஆடகப் பூம் பாவைஅவள் போல்வார் நீடிய
மட்டார்குழலார்பிறந்தபதிப்பிறந்தேன்'' (சிலப்பதிகாரம்)

இது, கண்ணகி யுரைத்தது. பாண்டிய மன்னன் மனைவி முன் அப் பத்தினித் தெய்வம் இப் பதிவிரதையைச் சுட்டி யுரைத்திருத்தல் காண்க. இதனால் மேற் குறித்த வுண்மையும், இவளது தன்மையும் இனிது புலனும். இங்ஙனம் உழுவலன்போடு தழுவியிருந்து தன் கணவனை இவள் உவந்து பேணி வருங்கால் அவன் பொருளீட்ட விழைந்து அயலிடம் சென்றான். சென்றவன் ஆண்டு மூன்றாகியும் மீண்டு வரவில்லை. அன்றிலும் பேடும் போல் ஒன்றியிருந்த அவன் பின்பு பிரிந்து நின்றபோது இவள் பெருந்துயருழந்தாள். அவனைக் காண விழைந்து கண்டுயிலின்றி இரவிடை நெடிது மறுகி யிருந்தாள்.

"விழுது படத்திணிந்த வீங்கிருள்வாய்ப் பட்டுக்
கழுதும் வழிதேடும் கங்குற்—பொழுதிடையே
நீருயிர்க்கும் கண்ணோடு நெஞ்சுருகி வீழ்வார்தம்
ஆருயிர்க்கும் உண்டோ அரண்?"

என இன்னவாறு பன்னிப் புலம்பி இன்னல் மீக்கூர்ந்தாள். தன் கருத்துறு துயரைக் கண் மேலேற்றி வெறுத்து நின்றாள். பேணாது பிரிந்து சென்ற அவரைக் காண வேண்டுமென்று கருதுகின்றதே! யெனத் தன் கண்களைக் குறித்து இகழ்ந்தாள். பேணாது பெட்டார் போல் அவரைக் காணாது கண்கள் அமைகில என்று பிரிந்திருந்த குலமகளிர் வருந்தி மொழிவர் என்பதை உலகம் இவள் பால் உணர்ந்து நின்றது.

காணாரைக் காணக் கருதிக் கலுழ்கண்ணே
மாணா வுனக்கிம் மதி.

கண் அமைந்து நின்ற நிலை இதனால் கூறப் பட்டது.

---

1179. உற்றபின்னும் ஏனோ உறங்காமல் ஊர்மிளை தன்
கொற்றவனை ஓர்ந்தாள் குமரேசா—பற்றமைந்து
வாராக்கால் துஞ்சா வரிற்றுஞ்சா வாயிடை
யாரஞருற்றன கண். (கூ)

இ—ள்.

குமரேசா! தன் காதலன் வந்த பின்பும் ஊர்மிளை ஏன் கண்ணுறங்காது கவன்றிருந்தாள்? எனின், வாராக்கால் துஞ்சாவரின் துஞ்சா ஆயிடை கண் ஆரஞர் உற்றன என்க. பற்று = அன்பு.

இது, கண்ணுறுந்துயர் எண்ணரிதென்கின்றது.

அஞர் = துன்பம். அத்துன்பம் பொறுத்தற்கரிய தென்பது தோன்ற ஆரஞர் என்றாள். ஆர் = மிகுந்த, நிறைந்த. "ஆரஞர் உற்றாரை அணங்கிய வந்தாயோ?" (கலி 120) என்புழி இஃதுணர்த்தி நிற்றலறிக.

ஆயிடை = அவ் இரண்டிடங்களிலும். அஃதாவது வாராமை வருதல்களாகிய அவ் ஈரிடங்களிலும். அ இடை என்பது ஆயிடை என நீண்டு நின்றது. செய்யுளில் ஓரோவழி அகரச்சுட்டு இங்ஙனம் நீண்டு வரும் என்க.

"நீட வருதல் செய்யுளுள் உரித்தே" (தொல்காப்பியம்) என்றபடி சுட்டு நீண்டு இடையே யகரம் பெற்று வந்தது. "தூக்கிற் சுட்டு நீளின் யகரமும் தோன்றுதல் நெறியே" (நன்னூல்) என்பதும் காண்க.

மேல், கண்கள் காதலர்பால் நீண்ட வேட்கையுடையன என்றாள்; இதில், அவை யாண்டும் துயிலா என்கின்றாள்.

காதலர் வாராத காலத்திலும் துயிலா; வந்த காலத்தும் உறங்கா; அவ் இருவழியிலும் என் கண்கள் மிகுந்த துன்பத்தைப் பொருந்தியுள்ளன என்பதாம்.

பிரிவுத் துயரால் கண்ணுறக்கமின்றி வருந்தியிருந்த தலைவியிடம் ஒரு நாள் தோழி வந்து, "காதலர் வந்தாலன்றி உங்கள் கண்கள் உறங்கா போலும்" என இரங்கி மொழிய அவ்வமயம் இவள் எதிர்ந்து மொழிந்தபடியிது.

துணைவன் பிரிந்திருந்தபோது துயர் மிகுதியால் துயிலின்றி புலந்து கிடந்தாளாதலால் "வாராக்கால் துஞ்சா" என்றாள்;

அயலே அகன்று போயிருந்த காதலன் இடையே ஒரு முறை வந்து மருவியிருந்தான்; அங்ஙனம் பொருந்தியிருக்கும்

காலும் மறுபடியும் அவன் எங்ஙனம் பிரிந்து போய் விடுவனோ? என்று இடையறாது கவன்று கவலை மிகுதியால் உறங்காதிருந் தாளாதலால் "வரில் துஞ்சா" என்றாள். வராவழி வேட்கை யாலும், வந்த வழி அச்சத்தாலும் துஞ்சவில்லை என்க.

இங்ஙனம் இரு வழிகளிலும் ஒரு சிறிதும் விழிகள் துயில வில்லையே! இனி என்றுதான் ஆறுதலடைந்து யான் இன்பம் அடைவனோ? எனத்தலைவி இவ்வாறு இரங்கி ஏங்கி நின்றாள். இரு வகைத் துஞ்சாமைக்கும் காரணம் முறையே அவாவும் அச் சமும் ஆகுமென்க.

> " நாணுக்கால் பெண்மை நலனழியும்; முன்னின்று
> காணுக்கால் கைவளையும் சோருமால்—காணேன்
> வண்டெவ்வம் தீர்தார் வயமான் வழுதியைக்
> கண்டெவ்வம் தீர்வதோர் ஆறு " (முத்தொள்ளாயிரம்)

நாணமின்றிக் காதலனை நயந்து நோக்கினால் நிறையுடைப் பெண் டிர்க்கு அஃதோர் குறையாய் முடியும்; நாணியடங்கி நின்றால் பிரிவாற்றாமையால் என் மேனி மெலியும்; ஆனால் இனி எவ் வகையில் யான் இடர் நீங்கி உய்ந்திருப்பேன் என ஒரு தலைவி இதில் உளைந்திருத்தல் காண்க.

தன் கணவனது பிரிவினை நினைதொறும் கவன்று குலமக ளிர் உறங்காது உளைந்திருப்பர் என்பது இதில் உணர்த்தப்பட் டது. இவ்வுண்மை ஊர்மிளையால் உணரப்படும்.

## கதை.

ஊர்மிளை என்பவள் சனகனுடைய அருமைத் திருமகள். சீதையைத் தெய்வ கதியாக் கண்டெடுத்துக் கனிந்து வளர்த்து உவந்து பேணி வருங்கால் அவ்வேந்தனுக்கு இம் மெல்லியல் பிறந்தாள். தனக்குத் தங்கையாகத் தோன்றிய இம் மங்கை யைக் கண்டு பொங்கிய உவகையளாய்ச் சானகி போற்றி வந் தாள். பருவ மெய்தியபொழுது அழகிலும் குணத்திலும் இவள் அத்திருவை யொத்து நின்றாள்.

" குணங்களை என் கூறுவது? கொம்பினைச் சேர்ந்து அவையுய்யப் பிணங்குவன; அழகு இவளைத் தவஞ்செய்து பெற்றது காண்!

கணங்குழையாள் எழுந்ததற்பின் கதிர்வானிற் கங்கையெனும்
அணங்கிழியப் பொலிவிழந்த ஆறொத்தார் வேறற்றார் ''
எனப் பேர் பெற்று நின்ற அப் பிராட்டி போலவே இவள் சீர் பெற்றிருந்தாள். இராமன் மிதிலையில் வந்து சீதையை மணந்து கொண்ட பின்பு இலக்குவனுக்கு இவளை மண முடித்துத் தந்தார். இவ் அழகியோடமர்ந்து ஆர்வ மீதூர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து அவ் இளையவன் சின்னாள் உளமகிழ்ந்திருந்தான். பின்னர் இராமன் வனம் புகுந்த பொழுது அவன் உடன் தொடர்ந்து போக இவள் உடல் உயிர் துடித்து இடர் மீக்கொண்டாள். பதினான்கு ஆண்டுகளாகத் தன் அண்ணனைப் பேணிக் கண்ணுறக்கமின்றி அவ் அண்ணல் இருந்தது போலவே இப் புண்ணியவதி அவனை எண்ணி யேங்கி இருந்துயருழந்தாள். " எழுந்திருக்கும்; ஏமாந்து பூமாந் தவிசின் விழுந்திருக்கும்; தன்னுடம்பை மீளச் செழுந்தரளத் தூளோடு சேர்க்கும்; துணையேதுமில்லாதே, நாளோடு நின்றழியும் நைந்து" என்றபடி இவள் நொந்து கிடந்தாள். இன்னவாறு இன்னல் பல அடைந்து இவள் இருந்து வருங்கால் முன்னிய காலங் கழிந்து முன்னவனோடு அம் மன்னவன் வந்தான். அவனைக் கண்டபோது இவள் களிமீக் கொண்டாள். உயிர் பெற்ற உடல் போல் அவனை உவந்து கொண்டு உளமிக மகிழ்ந்தாள். கிளைகளோடமர்ந்து அளவிலின்பங்களை நுகர்ந்தாள். வசந்த காலம் ஒன்றில் இளமரக்காவில் இனிதமர்ந்திருக்கச் சீதை விழைந்தாள். இராமன் இசைந்தான். இலக்குவனும் உடனெழுந்தான். தன் தங்கையும் உடன்வர வேண்டுமென்று சீதை வேண்ட இவளும் வேணவாவோடு மேவிநின்றாள். மனைவி, கொழுந்தி, தம்பி என்னும் இவர்களை உடனழைத்துக் கொண்டு அவ் வேந்தல் இரத மூர்ந்து நறுமலர்ச்சோலையை யடைந்தான். நீராடி உண்டுவந்து நாள் தோறும் காலை மாலைகளில் உலாவி வருங்கால் இவள் சனகியின் சாயை போலவும், இளையவன் இராமன் நிழல் போலவும் இனிதமர்ந்து சென்றார். அழகிய வளங்களை யெல்லாம் ஆர்வமுடன் நோக்கி அப் பெரியவன் தனது அருமை மனைவியிடம் உரிமை மீக்கூர்ந்து இனிது மொழிந்தான். சில அடியில் வருவன காண்க.

"இன்னதன்மையதாம் இளமரக்காவின் எழிலெலா மிரவிதன் குலத்து
மன்னவன் இராமன் மலர்க்கணுனோக்கி வனப்பெலா மனமுறக் கண்டு
அன்னமென்னடைநுண் மின்னிடை மருங்கு லணிதிகழ்மேகலையல்குல்
கன்னலுந் தேனும் கலந்த நன் மொழியாய்! காணெனக் காட்டினனெல்லாம்:

மென்னடை அன்னம் நின்னடைக் கஞ்சி வெளியிடை நின்றிடவெள்கித்
துன்னிடை மலர்ப்பூஞ் சோலையில் மறையத், தோகை நின் சாயலுக்குடை
ந்து, தன்னடை கெட்டே யினியுயிர் தாங்கோம் எனத்தழல் முழுகுவபோல
மின்னிடைப் பூணாய்! விரிமலரசோகின் மேற்சென்று வீழ்வன காணாய்;

உள்ளபோதினிதுண்டு, இலாதபோதவரோ டுறவுவிட் டுறுமிடந்தேடும்
ஒள்ளியரல்லார் உறவுபோல் நெடுநாள் உயர்தரு மலர் மது வுண்டு
மெள்ளஅம்மரம் பூமாறிடவிட்டு வேறொரு பூமரந்தேடிக்
கள்ளவிழ் கோதை கமழ் குழலணங்கே! களிவண்டு போவன காணாய்!

பொருகயல் நயனப் புரிகுழலாளே! பொய்த்தவ வேடத்தின் மறைந்து
விரிகடலுலகில் வேண்டியவண்ணம் வெவ்வினை செய்பவர் என்னத்
திரிதரு மீனைத் தப்பறக் கொத்தித் தின்றிடு முபாயமீ தெண்ணிக்
கருதிய கொக்கு மெய்சலியாது கண்முகிழ்த் திருப்பன காணாய்".

இன்னவாறு பல்வகைக் காட்சிகளையும் மாட்சிபெற அமை த்து அவ் வள்ளல் சொல்லிவருங்கால் அனைவரும் உள்ளமுவந்தார். பின்பு தம் அணி நகரடைந்தார். மணி மாடம் புகுந்தார். தம் துணைவிகளோடு துணைவரிருவரும் இனிதமர்ந்திருந்தார். அந்தப் புரத்தில் இளையவனோடு உளமகிழ்ந்திருந்தும் முன்னம்போல் இன்னமும் பிரிவுறநேருமோ? என்று இவள் பெரிது மறுகினள்; அதனை எண்ணுந்தோறும் கண்ணுறக்கமின்றிக் கவன்றிருந்தாள். காதலன் மீதுள்ள காதல் மிகுதியினால் அவனது பிரிவினை அஞ் சிக் காதலி கண்கள் துஞ்சாதலமரும் என்பதை உலகம் இவள் பால் உணர்ந்து நின்றது.

கழிபே ருவகையோடு காதலர்தாம் வந்தடைந்தும்
விழிதுயிலா தந்தோ வினை.

காதல் மிகுதியால் காதலி கண் துயிலாதென்பது இதனால் கூறப்பட்டது.

1180. உள்ளமறை தூதைமுன் ஊரறிந்த தென்றுநாண்
கொள்ளநின்றாள் என்னே குமரேசா — கள்ள
மறைபெறல் ஊரார்க் கரிதன்றால் எம்போல்
அறைபறை கண்ணார் அகத்து. (ம)

இ. — ள்.

குமரேசா! உள்ள நிலையைத் தன் கண்களால் ஊரறிந்து கொண்டது எனத் தூதை ஏன் உளமிரங்கி யிருந்தாள்? எனின்; எம்போல் அறைபறை கண்ணாரகத்து மறைபெறல் ஊரார்க்கு அரிது அன்று என்க.

இது, கண்கள் கைகடந்துள்ளன என்கின்றது.

மறை = இரகசியம். பிறர் அறியாதபடி தனக்குள்ளேயே அடக்கமாக மறைத்து வைத்திருப்பதென்க. இங்கு மறை என்றது விரக வேதனையை. காமநோயை மறை எனலாமோ? எனின், புறத்தே புலனாகாதபடி மறைக்கப்படுவனவற்றுள் இது தலைமையுடையதாகலான் ஆம் என்க. மறைத்தலாவது நிறையால் அடக்கி நிற்றல். "நிறை எனப்படுவது மறை பிறரறியாமை" என்பதும் காண்க. நிறையுடைப் பெண்டிர் தம் அகத்துள்ள மறையைப் புறத்தவரறியா வகை பொறையோடமர்ந்து போற்றிக் காப்பர்.

"பொறையாற்றா நுசுப்பினால் பூவீந்த கொடிபோன்றாள்
மறைபிற ரறியாமை மாணாநோ யுழந்தனை" (கலி, 132)

ஒரு தலைவி மறைகாத்து நின்ற நிலைமையை இஃதுணர்த்தி நிற்றல் காண்க. இங்ஙனம் இயற்கையாகவே நெஞ்சடக்கமுள்ள மகளிர் மரபில் பிறந்திருந்தும் என் கண்கள் என்னைப் பரிசு குலைத்து "ஊரே கேள்! நாடே கேள்!" என இன்னணம் பாடழித்துள்ளதென்று பரிந்து கூறுகின்றாளாதலால் கண்ணோடிணைத்துத் தன்னைக் குறித்து எம்போல்வார் என்றாள்.

அரிது அன்று என்றது எளிது என்றபடி. அகத்து = மனத்துள். கண்ணைப் பறை என்றது தன் அகத்திட்டதைப் புறத்தே புலப்படுத்தும் இயல்பு நோக்கி. "அறைபறையன்னர்கயவர்

தாம் கேட்ட மறைபிறர்க்கு உய்த்துரைக்கலான்" (குறள் 1076) என முன்னரும் இது வந்திருத்தல் அறிக. "ஓர்த்த திசைக்கும் பறை போல் நின்நெஞ்சத்து வேட்டதே கண்டாய்கனு" (கலி 92) என்பதும் காண்க.

மேல், கண் உறங்காது கவன்றிருக்கும் என்றாள்; இதில், அது உள்ளதை ஊரறிய உணர்த்திவிடும் என்கின்றாள்.

எம்போன்ற அறைபறையாகிய கண்களை யுடையாரிடத்துள்ள இரகசியங்களை அறிந்து கோடல் ஊரார்க்கு எளிது என்பதாம். பிரிவாற்றாது மெலிந்தழுதிருந்த தலைவியை ஒருநாள் பாங்கி நெருங்கி, நீ இங்ஙனம் உறங்காதுழந்து ஓயாதழுதால் உனது உள்ள நிலையை ஊரார் அறிந்து கொள்வார்; கொள்ளின் நம் வள்ளலை இகழ்வார்: "கண்ணனைய பெண்ணினும் பொன் என்ன அவ்வளவு பெரிதா? பொருளாசை பிடித்தவன்; போனவன் ஒரே போக்காய்த் தொலைந்து போனால் இளமை நலம் கனிந்து தனியே பாவம்! இங்கிருப்பவள் என்ன செய்வாள்?" என இன்ன வாறு பலபடப் பேசி நம் தலைவனை இகழ்ந்து பழிப்பர் ஆதலால் கண் கலுழாமல் முகமலர்ந்து உனது அகநிலையைப் பிறரறியா வண்ணம் இனிதமைந்து அடக்கமாக நீயிருக்கவேண்டும் என்று உரைத்து வேண்ட அவ்வமயம் அவளை நோக்கி இவள் உரைத்தபடியிது.

தன்னைத் தனியே தவிக்கவிட்டுப் பிரிந்துபோன தலைவனது கொடுமையையும் தனது காம தாபத்தையும் தலைவி மறைத்திருந்தும் அவள் கண்கள் ஓயாது அழுது இமைகள் வீங்கி எழில் சிதைந்து நிலைதிரிந்ததனால் அதன் மூலமாக அவளது உள்ளக்கிடக்கையை ஊரார் உணர்ந்து கொண்டு இரங்கினின்றார்; அதனை எதிரறிந்து நாணி "எம்போல் அறைபறை கண்ணாரகத்து மறைபெறல் ஊரார்க்கு அரிதன்று" என்று இங்ஙனம் பரிந்து மொழிந்தாள். தன் மறையைக் கண் வெளிப்படுத்தியதனால் அதனை அறைபறை என்றாள்.

"அறைபறை யனைய நீரார் அருமறைக்காவரோ? தான்"
(இராமாயணம்)

"பறையாய் அறையும் பசப்பென்று பகர்ந்து வாடி
அறைவாய்க் கடல் போல் அகன் காமம் அலைப்ப நின்றாள்"
(சிந்தாமணி)

"பறையறைந்தன்ன அலர்நமக்கொழித்தே" (அகம் 281)

"கரப்பவும் கரப்பவும் கைமிக்கு
உரைத்த தோழி உண்கணீரே" (நற்றிணை 263)

பறையும் கண்ணும் இவற்றுள் வந்திருக்கும்படியைப் பார்க்க. பறைக் கண்ணார் என வலி மிகாமல் இதில் இயல்பாய் நின்றது.

"வேற்றுமை யல்வழி இ ஐ என்னும்
ஈற்றுப் பெயர்க்கிளவி மூவகை நிலைய; அவைதாம்,
இயல்பாகுநவும், வல்லெழுத்துமிகுநவும்,
உறழா குநவும, என்மனார் புலவர்". (தொல்காப்பியம்)

நான் நிறையால் மறைத்தும் என் கண்கள் மறையை வெளிப்படுத்துகின்றனவே என்றதனால் அவள் கருத்து நிலைபுலனும். காதல் மகளிர் காதலரைக் காணுதலையார் என்பது குறிப்பு.

"பொறை தளர் கொம்பின்மேல் சிதரின மிறைகொள
நிறைதளராது அவர்தீமை மறைப்பென் மன், மறைப்பவும்,
முறை தளர்ந்த மன்னவன்கீழ்க் குடிபோலக் கலங்குபு
பொறை தளர்பு பனிவாரும் கண்ணாயின் எவன் செய்கோ?

தலையவிழ்பூஞ் சினைச்சுரும்பு யாழ்போல இசைப்பவும்
கொலைதளராது அவர்தீமை மறைப்பென்மன், மறைப்பவும்,
கிளையழிய வாழ்பவன ஆக்கம் போல் புல்லென்று
வளையானு நெகிழ்போடுந் தோளாயின் எவன் செய்கோ?" (கலி)

கண்ணீரும், தோள்மெலிவும், தன் அக நிலையைப் புறமறியச்செய்தன என ஓர் தலைவி இதில் உரைசெய்திருத்தல் காண்க. கொடுங்கோல் மன்னன் குடைக்கீழ் வாழும் குடிகளின் நிலைமையையும், சுற்றத்தாரைப் பேணாதவன் செல்வத்தியல்பையும் இதன்கண் உவமைகளாகச் சுட்டிக் காதலியின் ஆற்றாமையை விளக்கியிருக்கும் அருமையை யூன்றி யுணர்ந்து கொள்க.

காதலனைக் காணவேண்டுமென்று விரைந்து விழைந்து விரக தாபத்தால் உழந்திருந்த காதலி தன் செயல் நிலைகளைக், கண்மேலேற்றி முன்னிலைப் புறமாக இதுவரை மொழிந்து வந்து முடிவில் அது தன்னை மீறியுள்ளதெனக் குறித்துத் தன் இன்னல்

நிலையை இவ்வாறு விளக்கி நின்றாள். தன் விதுப்பைக் கண்மே லேற்றியதனால் இது கண்விதுப்பழிதல் என நின்றது.

தலைவி அடக்கமாயமர்ந் திருப்பினும் அவள் உள்ளக் கவலையை ஊரறியக் கண்கள் உணர்த்தி விடும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தூதை பால் உணரப்படும்.

## கதை.

தூதை என்பவள் உச்சைனி நகரத்திலிருந்த சாதுசந்தன் என்னும் வேதியனுடைய புதல்வி. வியக்கத்தக்க குணங்கள் யாவும் இவளிடமேயிருந்தன. அந்நகரில் பெருந்திருவோடு சிறந்திருந்த சாருதத்தன் என்னும் அந்தணர் தலைவன் இவளை விழைந்து மணந்து அரிய போகங்களை நுகர்ந்து அறங்கள் பல புரிந்து அக மகிழ்ந்து வந்தான். அவன் மிகுந்த வள்ளற் குண முடையவன்; எவர் வரினும் இல்லை யென்னாமல் ஈந்து நின்றான்; அதனால் உள்ளன யாவும் இழந்தான்; அல்லல் பல அடைந்தான். அவ் அல்லற் காலத்தும் அவனை இவள் அன்பு கூர்ந்து ஆதரித்து வந்தாள். அவன் வெளியே சென்றிருந்தால் வரும் வரையும் உணவும் நீரும் துறந்து வழிமேல் விழி வைத்து இவள் வாடி யிருந்தாள். அவன் சிறிது கவன்றாலும் இவள் பெரிதும் வருந்தி னாள். எவ்வகையிலும் துன்புறுவகை அவனை இன்புறுத்தி நின்றாள். தனது அணிகலன்கள் யாவும் விற்று அவனுக்கு ஆவன செய்தாள். நல்குரவாலும் புல்லியராலும் அல்லலுற்ற போதெல்லாம் இவள் அருகமர்ந்து இன்சொல்லாடி இதம் புரிந்து வந்தாள் ஆதலால் அவன் இடர் தீர்ந்து நின்றான்.

"சாமெனிற்சாதல்; நோதல்; தன்னவன் தணந்த காலைப்
பூமனும்புனைதலின்றிப் பொற்புடன் புலம்ப வைகிக்
காமனை என்றுஞ்சொல்லார்; கணவற்கைதொழுது வாழ்வார்;
தேமலர்த்திருவோ டொப்பார்; சேர்ந்தவன் செல்லல் தீர்ப்பார்"

என்றபடி அல்லல் தீர்த்துத் தன் கணவனை இவள் ஆதரித்து வருங்கால் சகாரன் என்னும் பொல்லாப் புல்லியன் அரசனிடம் போய்ச் சொல்லாதன சொல்லி அவன் மேல் கொலைக் குற்ற மேற்றிக் கொன்றுவிடும்படி கோள் மூட்டி விட்டான். அரச

னும் ஆராயாமல் கொல்லும்படி பணித்தான். அவனைக் கொலைக் களத்திற்கு அழைத்துச் சென்றார். அதனைக் கேட்டவுடனே நஞ்சு குடித்ததுபோல் இவள் நெஞ்சம் துடித்தாள். தன் நாயகனுக்கு முந்தித் தான் சாகத் துணிந்து தீயை வளர்த்து அதில் பாயச் சென்றாள். தெய்வத் திருவருளால் உண்மை தெளிந்து அவன் உய்ந்து வந்து இவளை உய்யச் செய்தான். தன் கொழுநனைக் கண்ட வுடனே அளவிலுவகையளாய்த் தொழுது போற்றித் துவண்டு நின்றாள்.

"அன்பர் துஞ்சிடில் துஞ்சுதல்; ஆங்கவர்
துன்பமெய்திடில், தாமும் அத்துன்புறல்;
இன்பமுற்றிடில் இன்புற்றிருத்தலே
மன் பெருந்தவம் கற்புடை மாதர்க்கே"

என்னும் நீதிக் கியைய இவள் நின்று நிகழ்ந்ததை யறிந்து மன் பதை வியந்து மகிழ்ந்து துதித்தது. இங்ஙனம் உழுவலன்புடையளாய்க் கெழுமிவருங்கால் ஒருமுறை அவன் பொருள் வளங் கருதி மறு புலஞ் சென்றான். அப்பிரிவில் இவள் மறுகியிருந்தாள். துயிலிழந்து துயருழந்து அழுதிருந்த இவளது அவல நிலையை அயலவரறிந்தார். அகமிக இரங்கினார்; இனிய இவளைத் தனியேவிட்டுப் போனது மிகவும் கொடுமை யென்று ஊரார் அவனைக் குறித்து வைதார். அதனை இவள் குறிப்பா லோர்ந்தாள். துயிலாதழுதிருந்த நம் செயலி விருந்துதானே அயலறிந்து இவ்வாறு ஆருயிர்த் துணையை இகழ நேர்ந்த தென்று இரங்கி யுளைந்து தன் கண்களை இகழ்ந்து கொண்டாள். "எம்போல் அறைபறை கண்ணா ரகத்து மறை பெறல் ஊரார்க்கு அரிதன்று" எனக் குலமகளிர் பெரிதும் வருந்துவர் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது. இவளது பதிவிரத நிலைமை வடமொழியில் மிருச்சகடிகம் என்னும் நாடகக் காப்பியத்தில் நன்கு காணலாம்.

உள்ளமறை யெல்லாம் உலகறியச் செய்ததே
கள்ள மிலாதவென் கண்.

கண்களின் நிலை இதனால் கூறப்பட்டது.

இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்.

பிரிந்த தலைவி கண்கள் காதலனைக் காண விழைந்து கலுழ்ந்திருக்கும். அவற்றை விநயமாக அவள் இகழ்ந்து மொழிவள். அழுவது பழுதென்பள். நீர் வறந்து அவை நின்று தியங்கும். உறக்கமின்றி உளைந்து நிற்கும், அந்நிலையினை நினைந்து தலைவி நகுவள். உழந்து படுக என அயர்ந்து புகல்வள். போனவரைக் காண விழைதலால் நாணம் இலை என்பள். அவர் வாராவழி போல் வரினும் உறங்கா. காதலி அகநிலையைக் கண்கள் புறமறியக் காட்டிவிடும் என்பதாம்.

௱௰௮-வது கண்விதுப் பழிதல் முற்றிற்று.

---

# 119-ம் அதிகாரம் பசப்புறுபருவரல்.

அஃதாவது பசப்படைந்து வருந்தும் வருத்தம். பசப்பு = நிற வேறுபாடு. பருவரல் = துன்பம். பருவரல் பலவகையினும் வருமாதலால் அஃது இன்னதனால் உற்றதென இங்கு இனஞ் சுட்டி நின்றது. பிரிவிடை மெலிந்து, உருவ நிலை குலைந்து, விரக வேதனையால் தலைவி மறுகி வருந்துதலை இதில் உணர்த்துகின்றார் ஆதலால் கண் விதுப்பழிதலின் பின் இது வைக்கப்பட்டது. முன்னது கண் விழைந்து பட்டபாட்டினைக் குறித்தது; இது உடல் முழுதும் திரிந்து இடரடைந்த நிலையினைக் குறித்ததென்க. அதிகார அமைவும் இதனானே புலனும்.

1181\. நேர்ந்து விடைகொடுத்த நிப்புதிபின் வெம்பசலை
கூர்ந்துளைந்தாள் என்னை குமரேசா—சார்ந்து
நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்தவென்
பண்பியார்க் குரைக்கோ பிற. (க)

இ—ள்.

குமரேசா! நாயகன் பிரிவை முன்பு இசைந்து நின்ற நிப்புதி பின்பு ஏன் பசந்து வருந்தினாள்? எனின், நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்த என் பண்பு பிற யார்க்கு உரைக்கோ என்க. இது, தலைவி பசந்திருந்தமை ‹

நயந்தவர் என்றது தலைவனை. பிரிந்துபோய் விரைந்து வருவல்; இரங்கி யருள்க என்று முன்பு பிரிவு வேண்டித் தன்னிடம் நயந்து நின்றமையை இங்ஙனம் நினைந்து கூறினாள். நயத்தல்— விரும்பி நிற்றல். “ புன்கண்யானையொடு புலி வழங்கத்தம் நயந்த காதலற் புணர்ந்து சென்றனளே ” (ஐங்குறுநூறு) (386). இதில் நயத்த லுணர்த்தி நிற்றல் காண்க.

“ நில்லென நிறுத்தான்; நிறுத்தே வந்து
நுதலும் முகனும் தோளும் கண்ணும்
இயலும் சொல்லும் நோக்குபு நினைஇ
ஐதேய்ந் தனறு, பிறையும் அன்று;
மைதீர்ந்தன்று, மதியும் அன்று;
வேயமன் றன்று; மலையும் அன்று;
பூவமன் றன்று; சுனையும் அன்று;
மெல்ல வியலு மயிலும் அன்று;
சொல்லத் தளரும் கிளியும் அன்று; என ஆங்கு,
அனையன பலபாராட்டிப் பையென
வலைவர் போலச் சோர்பத னொற்றிப்
புலையர் போலப் புன்கண் நோக்கித்
தொழலும் தொழுதான்; தொடலும் தொட்டான்;
காழ்வரை நில்லாக் கடுங்களி றன்னோன்
தொழூஉம், தொடூஉம், அவன் தன்மை
ஏழைத் தன்மையோ இல்லை தோழி! ” (கலி 55)

தன்னை நலம் பாராட்டித் தன் தலைவன் நயந்துநின்ற நிலைமையை ஒரு தலைவி தோழிக்குரைத்திருத்தலை இதில் ஊன்றிப் பார்க்க.

நல்காமை என்றது பிரிவினை. எளிதில் நல்குதற்கு இசையாதது ஆதலால் பிரிவை நல்காமை என்றாள். நல்குதல்—உவந்து கொடுத்தல். நேர்ந்தேன் = இசைந்து நின்றேன். பசந்த என் பண்பு = நிறங் குலைந்த எனது இயல்பினை. பசத்தல் = உடல் பசந்து ஒரு வகையாக வெளுத்துத் தோன்றல். பிரிவாற்றாது வருந்தியுள்ள மகளிரது உடல் நிலை திரிந்து நிற்குமாதலால் அந்நிறவேறு பாட்டைப் பசலை என்பர். பீர்க்கம் பூவை இதற்கு

ஒப்புக் கூறுவர். "பீரலர் போலப் பெரிய பசந்தன" (கைந் தற் கலி (26), "அரி நுண் பசலை பாஅய்ப் பீரத் தெழின் மலர் புரைதல் வேண்டும்" (அகம் 45), "மாரிப் பீரத்தலர் வண்ணம் மடவார் கொள்ள" (சிலப்பதிகாரம் கானல் 38), "பொய்கைப் பூத்த புழைக்கால் ஆம்பல் தாதேர் வண்ணம் கொண்டன, ஏதி லாளர்க்குப் பசந்த என் கண்ணே" (ஐங்குறுநூறு 34), "பொன் னேர் பசலைக்கு உதவாமாறே" (நற்றிணை 47).

"மின் தெளித்து எழுதி யன்ன விளங்குநுண் ணுசுப்பினல்லார்
பொன் தெளித்து எழுதி யன்ன பூப்புறப் பசலை மூழ்கிக்
குன்றொளித் தொழிய நின்ற குங்குமத் தோளி னுற்குக்
கன்றொளித்தகலவைத்தகறவையிற் கனிந்து நின்றார்" சிந்தாமணி

பசலையின் இயல்பு இவற்றுள் குறிக்கப்பட்டுள்ளமைகாண்க. முன்பு நயந்து நின்ற காதலர்க்குப் பிரிவை யுடம்பட்டு நின்றேன்; அங்ஙனம் உடம்பட்ட யான் இப்பொழுது உடல் பசந்து உளைந் திருக்கும் எனது நிலைமையை யாரிடம் உரைப்பேன்? என்ப தாம்.

தலைவன் பொருள் தேட அயலே பிரிந்து போன பின்பு அப் பிரிவாற்றுமையால் உருவு நிலை குலைந்து தனியே வருந்தித் தளர்ந்திருக்கும் தலைவி தனக்குள்ளேயே உளைந்துரைத்தபடி யிது. அன்று என் துணைவர் பிரிந்துபோக நான் உடம்பட்ட மையால் இன்று நிறந்திரிந்து இங்ஙனம் வருந்த நேர்ந்தது; இவ் வானத் துயர்க்கு எனது அறிவீனமே காரணமாகுமாதலால் இத னைப் பிறரிடம் சொல்லிப் பயன் என்னே? என்பாள் "பிற யார் க்கு உரைக்கோ?" என்றுள். ஓகாரம் உள்ளிரக்கம் தோன்ற நின்றது. என்னால் நேர்ந்ததை யானே அநுபவிக்க வேண்டு மென்று தன்னையே நொந்து தணிந்திருந்தாள் என்க.

இனி, நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் என்பதில், தலை வன் பிரிவு கேட்டு நயந்து நின்றும் இவள் நல்காதிருப்ப அவன் இனிது சூழ்ந்து அகன்று போனுன் என்பதும் அறிய நின்றது. நான் அவரை நயந்து நின்றும் விரைவில் வந்தருளாமல் இங் ஙனம் அகன்றுள்ளாரே! என அவனது நல்காமையை நினைந்து இவள் வருந்தியுள்ளமையும் புலனும்.

தன்பால் வந்து நயந்து கேட்டவர்க்கு உவந்து நல்காதவர் பின்பு உள்ளனவெல்லா மிழந்து அல்லல் பல அடைந்து யாரிடம் போவோமென்று ஓரிடந் தேடிப் பாரிடையுழல்வர் எனவும் இவ் அகத்தில் ஓர் புறப் பொருள் தொனித்து நிற்றலையும் நுனித் தறிந்துகொள்க.

துணை பிரிந்த தலைவி உடல் பசந்து வருந்துவள் என்பது கருத்து. இவ் வுண்மை நிப்புதிபால் உணரப்படும்.

## கதை.

நிப்புதி என்பவள் தக்க நாட்டிலே கேமமாபுரத்தில் இருந் தவள். பெண்மையும் அழகும் பிறழா மனத்திண்மையு முடை யவள். உண்மை யுணர்வினள். அந் நகரில் பெருந் திருவுடைய னுய்ச் சிறந்திருந்த சுபத்திரன் என்னும் வேத வணிகன் இவள் மீது காதல் மீக் கொண்டான். அவனது குண நலங்களை யறி ந்து இவளும் அவன்மேல் ஆர்வ மீதூர்ந்தாள். இருவரும் உழு வலன்புடையராய்த் தழுவி மகிழ்ந்து பின்பு உலகறிய மணந்து இனிய போகங்களை நுகர்ந்து அறம் புரிந்து வந்தார். வருங்கால் ஒரு முறை பொருள் நிலை கருதி அவன் மறு புலம் போக விழைந்தான். அவ் விழைவினை இவளிடம் நயமாக உரைத்தான்; பிரிவு என்று கேட்ட வுடனே இவள் உள மறுகி யுயிர்த்தாள். அவன் பொருளின் பெருமையை அருள் வரத் தெளித்து, ஆற்றி யிருத்தி, அகன்று போனான். அப் போக்கில் இவள் உள்ளம் போக்கி வெள்ளமென அழுது பசந்து மெலிந்து பதைத்திருந் தாள். பாங்கியர் ஆற்றியும் இவள் ஏங்கி யயர்ந்தாள். தனது நினைவு நிறை யாவும் அவன்பால் ஏகத் தினமும் உருகி இவள் தேம்பி யுளைந்தாள்.

"பசப்பு என் மேனி யதுவே; நயப்பு, அவர்
நாரில் நெஞ்சத்து ஆரிடை யதுவே;
செறிவும், சேண் இகந்தன்றே; அறிவே,
ஆங்கட் செல்கம் எழுகென ஈங்கே
வல்லா கூறியிருக்கும்; முள் ளிலைத்
தடவுநிலைத் தாழைச் சேர்ப்பற்கு
இடம் மன் தோழி! என் நீ ரோ எனினே."

இன்னவாறு தன்னுடைய நிலையினைத் தவித்து மொழிந்து இவள் தயங்கி யிருந்தாள். முன்னம் நாயகன் பிரிந்து போக இசைந்து நின்றமையால் இங்ஙனம் பசந்து வருந்த நேர்ந்ததென்று தன்னையே வைது கொண்டாள். நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்த மகளிர் பசந்த தம்பண்பைப் பிறர்க் குரைக்க நாணுவரென்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள். பின்பு காதலன் வந்தவுடன் கலந்து மகிழ்ந்தாள். புணர்வும் பிரிவும் இரவும் பகலும் போல் மாறிவருமாதலால் எதிர்ந்ததெதுவோ அதனை உவந்தனுபவிப்பதே உணர்வின் பயன் என உணர்ந்தமர்ந்தாள். பிரிவில் உளங்கவன்றவர்க்கு அறிவு வரும்படி உறுதி மொழிகள் பல உரைத்து வந்தாள். தனது அருமை மகளாகிய கேமசரி பிரிவாற்றாது ஒரு முறை வருந்தியபொழுது இவளருளிய அறவுரைகளை அறிஞர் பலரும் வியந்து போற்றினர். சில அடியில் வருவன காண்க.

“ எரிநுதி யுற்ற மாவின் இளந்தளிர் போன்று மாழ்கிப்
புரிநரம்பிசையிற் றள்ளிப் புன்கணுற் றழுதலாலே
அரிகுரற்கொண்ட பூசல் அகத் தவர்க்கிசைப்ப வீண்டித்
திருவிரி கோதை நற்றாய் நிப்புதி சேர்ந்து சொன்னாள்: (க)

விழுத்திணைப் பிறந்து, வெய்யவேட்கை வேரரிந்து, மெய்ந் நின்று
இழுக்கமொன்றானு மின்றி எய்திய தவத்தின் வந்து
வழுக்குதலின்றி விண்ணோன் வச்சிர நுதியினிட்ட
எழுத்தனுன் தந்த இன்பம் இன்னும் நீ பெறுதி என்றாள். (உ)

பிறங்கின கெடுங்கள் யாவும்; புணர்ந்தவர் பிரிவர்; பேசின்
இறங்கின வீழும் மேலா யோங்கிய; எண்ணில் யோனிப்
பிறந்தவர் சாவர்; செத்தார் பிறப்பவே; என்ன நோக்கிக்
கறங்கிசை வண்டு பாடுங் கோதை! நீ கவலல்; என்றாள். (ங)

மன்னுநீர் மொக்குள் ஒக்கு மானிடர் இளமை; இன்பம்
மின்னின் ஒத்து இறக்கும்; செல்வம் வெயிலுறு பனியி னீங்கும்;
இன்னிசை யிரங்கு நல்யாழ் இளியினும் இனிய சொல்லாய்!
அன்னதால் வினையினுக்கம் அழுங்குவதென்னை? என்றாள்.” (ச)

இவளது அறிவு நிலையும், பிரிவின் அனுபவங்களும், உறுதி கூறும் திறனும், உள்ளப் பான்மையும் இவற்றான் நன்குணரலாகும். காதலரைப் பிரிந்து பசந்தவர் நோதலுற்று அசந்து நிற்பர் என்பதையும், அந் நிலையிலும் அயலறியாவகை அடங்கியிருப்பர் என்பதையும் இவள் அறிவுறுத்தி நின்றாள்.

இசைந்து பிரிய இடங்கொடுத்தேன் இன்று
பசந்து கிடந்தேன் பரிந்து.

பிரிந்த மகளிர் பசந்து கவல்வர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1182. சார்ந்த வெள்ளி வீதியார் தம்மீது வெம்பசலை
கூர்ந்திவர்ந்த தென்னே குமரேசா—நேர்ந்த
அவர்தந்தார் என்னுந் தகையால் இவர்தந்தென்
மேனிமே லூரும் பசப்பு. (உ)

இ.—ள்.

குமரேசா! வெள்ளி வீதியார் மீது பசப்பு ஏன் மேவி நின்றது? எனின், அவர் தந்தார் என்னும் தகையால் பசப்பு இவர் தந்து என் மேனி மேல் ஊரும் என்க.

இது, உடையவன் பிரிந்தால் உடல் பசக்கும் என்கின்றது.

அவர் என்றது தலைவனை. இது பொழுது அகன்றுபோ புள்ளமை யான் சேய்மையில் சுட்டினாள். தகை = பெருமை.

இவர்தந்து = மீதேறி நின்று. இவர்தல் = ஏறுதல். "எக்கண் இவரல் மீக்கோள் ஏறுதல்" (பிங்கலந்தை). "குருதி கொப்புளிக்கும் வேலான் கூந்தல் மா இவர்ந்து செல்ல" (சிந்தாமணி) "எத்திசை மருங்கினும் இவர்ந்து மேலோங்கி" (பெருங் கதை) "கோதித்துராய்க் குன்று இவர்ந்து கொடிக் கொண்ட கோடைபால்" (கலி), "பரதனும் இளவலும் ஒரு நொடி பகிராது, இரதமும் இவுளியும் இவரினும்" (இராமாயணம்); இவற்றுள் இவர்தல் உணர்த்தி நிற்றல் காண்க. இவுளி = குதிரை.

பேணி = உடம்பு. ஊரும் = உலாவித் திரியும்.

பசப்பு = பசலை. பசுமை செம்மை வெண்மை ஆகிய இம் மூன்று நிறங்களும் ஒன்றாய்க் கலந்தபோது நின்று திகழும் நிறப் பண்பு பசப்பு என்க. "பசப்பு நிறனாகும்" என்றது தொல் காப்பியம். "பீதகம் பசப்புப் பிங்கலம் அரிதம், நாலும் காஞ்சனி யும் பொன்மையின் பெயரே" (பிங்கலந்தை). பசப்புப் பொன் னிறம் என்பது இதனால் புலனாகின்றது.

> "வாமான்றேர்க் கோதையை மான்றேர்மேற் கண்டவர்
> மாமையே யன்றோ இழப்பது—மாமையிற்
> பன்னூறு கோடி பழுதோ என் மேனியிற்
> பொன்னூறி யன்ன பசப்பு" (முத் தொள்ளாயிரம்)

மேல், தலைவி பசந்திருந்தமையை வருந்தி மொழிந்தாள்; இதில், அது உடலூர்ந்துள்ள நிலைமையை உளைந்துரைக்கின்றாள்.

காதலர் கொடுத்தார் என்னும் தருக்கினால் பசலையானது என் உடல் மீது உவந்து ஏறிப் பரந்து செல்கின்றதென்பதாம்.

நிறந்திரிந்து பசந்து வருந்தியிருந்த தலைமகளைத் தோழி பார்த்து அன்னே! என்னை யீது! கொன்னே பசலை பாய்ந்துள்ளதே என்று பரிந்து கேட்க அவள் மொழிந்தபடி யிது.

காதலன் பிரிந்துபோக அப் பிரிவாற்றாமையால் உடல் நிலை குலைந்து பசந்து நின்றாளாதலால் "பசப்பு அவர் தந்தார்" என்றாள். உயிர்த் துணைவர் உதவியதாதலால் அவருடைமை யாகிய தன் உடம்புமேல் உரிமையோடு உவந்து ஏறி ஊர்கின்ற தென்றாள். மேனி முழுவதும் பசப்பு மேவியுள்ளதென்பதை இங்ஙனம் விநயமாக வுரைத்தாள்.

"இவர்தந்து" என்றது அவர் தந்தார் என்பதற்கு எதி ராக இன்னோசை பயந்து அலங்காரமா யமைந்து நின்றது. தனியே இவரும் என்னாது தந்து எனத் துணை வினை சேர்த்தது அவ் வினைநிலையின் வேகம் காண.

பசப்புறுதல் மருவள் என்பது இதில் உணர் த்தப்பட்டது. இவ்வுண்மை வெள்ளி வீதியார்பால் உணரப்படும்.

## கதை.

வெள்ளிவீதியார் என்பவள் மதுரையிலிருந்தவர். நல்ல மதி நுட்ப முடையவர். பல்வகைப்பட்ட நூல்களையும் பழுதறப் படித்தவர். இளமையும் எழிலும் வளமையும் கல்வியும் ஒருங்கே வாய்ந்து பெரும் புலமையோடு இவர் விளங்கியிருந்தார். இவரது நுண்புலமையை யறிந்து சங்கப் புலவர்களும் வியந்தார். பரிசோதனைக்காகத் தம்பால் வரும் நூல்களைப் பெண்பாலென்று இகழாமல் இவர்பால் அன்பாலனுப்பி அவற்றின் நிலைகளைக் கேட்பது அவர்க்கு வழக்கமாயிருந்தது. அவ் வரிசையில் நம் தேவர் குறளும் வந்தது; அவ் அருமை நூலை இவர் ஆவலோடு நோக்கி அகமிக மகிழ்ந்து அதன் இயல்பினை வியந்து கவி ஒன்று பாடிச் சங்கத்துக்கனுப்பினார்; அஃது இதன் அடியில் வருவது:

> "செய்யா மொழிக்கும் திருவள்ளுவர் மொழிந்த
> பொய்யா மொழிக்கும் பொருள் ஒன்றே—செய்யா
> அதற்குரியார் அந்தணரே; ஆராயின் ஏனை
> இதற்குரியா ரல்லாதார் இல்" (வெள்ளி வீதியார்)

பொய்யா மொழி எனப் பொருந்தச் சுட்டி ஒன்றே எனத் தேற்றம் தோற்றவைத்து மாற்றறிந்து ஏற்றமுற வுரைத்திருக்கும் இவ் வெண்பாவின் ஒண் பொருளை ஊன்றி நோக்கிப் புலவர் பலரும் இவர் உள நிலையைப் போற்றி நின்றார். புலமையும் பொற்பும் வாய்ந்து தலைமையோடு இங்ஙனம் நிலவி நின்ற இவரைத் தேவசன்மன் என்னும் குலமகன் மணந்து அளவிலின்பங்களை நுகர்ந்து அகமிக மகிழ்ந்தான். அவன் உருவிலும் திருவிலும் அறிவிலும் சிறந்தவன். உழுவலன்போடு அவனுடனமர்ந்து இவர் உவந்து வந்தார். வருங்கால் இடையே வினைநலங் கருதி அவன் பிரிந்து சென்றான்; சென்றவன் ஒரு பதிலுமின்றி நெடிதயல் நின்றான்; இவர் பிரிவாற்றாது பெருந்துயருழந்தார்; அறிவிற் சிறந்திருந்தும் கணவன் மீதுள்ள காதல் மிகுதியால் நோதல்மீக் கூர்ந்தார்; எதிர்ந்த பொருள்களை யெல்லாம் பார்த்துப் பரிந்து புலம்பினார்; ஒருமுறை நிலாக் காலத்தில் ஊரில் திருவிழா நிகழ்ந்தது. நகரிலுள்ள இரு பாலாரும் பெரு மகிழ்வோடு குலாவி நின்றார்; தனியே வருந்தியிருந்த இவர் அந் நிலையினை நினைந்து

இரங்கி மொழிந்தார். அன்று இவர் மொழிந்தபடியை அடியில் காண்க.

"நிலவே, நீல்நிற விசும்பில் பல்கதிர் பரப்பிப்
பால்மலி கடலிற் பரந்து பட்டன்றே;
ஊரே, ஒலிவரும் சும்மையொடு மலிதொகு பிண்டிக்
கலிகெழு மறுகின் விழவு அயரும்மே;
கானே, பூமலர் கஞலிய பொழிலகம் தோறும்
தாம் அமர் துணையொடு வண்டு இமிரும்மே;
யானே, புனைஇழை நெகிழ்த்த புலம்புகொள் அவலமொடு
கனையிருங் கங்குலும் கண்படை இலனே;
அதனால், என்னொடு பொருங்கொல் இவ் வுலகம்?
உலகமொடு பொருங்கொல் என் அவலமுறு நெஞ்சே?
(நற்றிணை 348)

வண்டுகளும் துணைகளோடு கூடி மகிழ யான் மட்டும் தனியிருந்தழ நேர்ந்ததே என்று இவர் இதில் அனி மிகுந்துழந்திருக்கும் துயர்நிலை யறிக. நீரருகே நின்ற நாரை கொக்குகளை நோக்கிப் போனாரோடு இவர் தூது கூறியுள்ளார்.

"சிறுவெள்ளாங் குருகே! சிறுவெள்ளாங் குருகே!
துறைபோ கறுவைத் தூமடி யன்ன
நிறங்கிளர் தூவிச் சிறுவெள்ளாங் குருகே!
எம்மூர் வந்துஎம் உண்டுறைத் துழைஇச்
சினைக்கெளிற் றார்கையை, அவர் ஊர்ப்பெயர்தி
அனைய அன்பினையோ? பெரு மறவியையோ?
ஆங்கண் தீம்புனல் ஈங்கண் பரக்கும்
கழனி நல்லூர் மகிழ்நர்க்கு என்
இறை நெகிழ் பருவரல் செப்பாதோயோ" (நற்றிணை 70)

நீர்த் துறையிலே புகுந்து நெடிது துழாவிக் கெளிற்று மீனைத் தின்று களித்துப் போகும் ஓ சிறிய வெள்ளிய குருகே! அணி யிழந்துபடும் என் பிணியினை எனது காதலர்க்குச் சொல்லிக் கருணை செய்வாயா? அல்லது மறந்துவிடுவாயா? உன் எண்ணம் என்ன? சொல் எனக் குருகை நோக்கி இவர் கூறியிருக்கும் அழகைப் பார்க்க. பின்னர் ஒருநாள் திங்கள் கடல் அன்றில் முதலியவைகளை நோக்கிப் பொங்கி மொழிந்தாள்.

"திங்களும் திகழ்வான் ஏர்தரும்; இமிழ்நீர்ப்
பொங்குதிரைப் புணரியும் பாடு ஓவாதே
ஒலி சிறந்து ஓதமும் பெயரும்; மலிபுனற்
பல்பூங் கானல் முள்ளிலைத் தாழை
சோறு சொரி குடவயிற் கூம்புமுகை அவிழ
அளிபரந்து ஊட்டும் விளிவில் நாற்றமொடு
மையிரும் பனைமிசைப் பைதல உயவும்
அன்றிலும் என்புறம் நரலும்; அன்றி
விரல் கவர்ந் துழந்த கவர்வி னல்யாழ்
யாமம் உய்யாமை நின்றது;
காமம் பெரிதே களைஞரோ இலரே!" (நற்றிணை 335)

யாழோசை முதலியவற்றால் தம் காமம் பெருக யாமத்தும் துயி லாமல் இவர் அலமந்து புலம்பியுள்ள நிலையை இதில் ஊன்றி யுணர்ந்து கொள்க. பிறிதொரு முறை ஊரலரையும் தமது உடல் மெலிவையுங் குறித்து உளமுடைந்து மொழிந்தார்.

"வாடல் உழுஞ்சில் விளைநெற் றந்துணர்
ஆடுகளப் பறையி னரிப்பன ஒலிப்பக்
கோடை நீடிய அகன்பெருங் குன்றத்து
நீரில் ஆற்று நிவப்பன களிறட்டு
ஆளில் அத்தத்து உழுவை யுகளும்
காடிறந்தனரே காதலர்; மாமை
அரிநுண் பசலை பாஅய்ப் பீரத்து
எழில்மலர் புரைதல் வேண்டும்; அலரே
அன்னி குறுக்கைப் பறந்தலைத் திதியன்
தொன்னிலை முழுமுதல் துமியப் பண்ணிப்
புன்னை குறைத்த ஞான்றை வயிரியர்
இன்னிசை ஆர்ப்பினும் பெரிதே; யானே
காதலற் கெடுத்த சிறுமையொடு நோய் கூர்ந்து
ஆதிமந்திபோலப் பேதுற்று
அலந்தனென் உழல்வென் கொல்லோ? பொலந்தார்க்

கடல்கால் கிளர்ந்த வென்றி நல்வேல
வான வரம்பன் அடல்முனைக் கலங்கிய
உடைமதில் ஓரரண் போல்
அஞ்சுவரு நோயொடு துஞ்சாதேனே " (அகம் 45)

காதலன் அகன்று போனதையும், தம்மேனிமேல் பசலை பாய்ந்து நிற்றலையும் நினைந்து வருந்தி நோயொடு உழல்வேனே என இங்ஙனம் வாய்விட்டலறினர். மற்றொருமுறை கனவிடைத் தம் கணவனைக் கண்டு நனவினி விழந்து மீண்டும் அவரைக் கண்டாலன்றி யான் உயிர் வாழேன் என்று துயர்மீக் கூர்ந்தார்.

" எல்லிற் றென்னான் வெல்வே லேந்தி
நசைதர வந்த நன்னராளன்
நெஞ்சுபழு தாக வறுவியன் பெயரின்
இன்றிப் பொழுதும் யான் வாழலனே;
எவன்கொல்வாழி தோழி! நம் மிடை முலைச்
சுணங்கணி முற்றத்து ஆரம் போலவும்
சிலம்பு நீடு சோலைச் சிதர் தூங்கு நளிர்ப்பின்
இவங்கு வெள்ளருவி போலவும்
நிலங்கொண்டனவால் திங்களங் கதிரே " அகம் (362)

இவ்வாறு துயருழந்திருந்த இவர் பின்பு கொழுநனைக் காண விழைந்து வெளியேறித் தேடத் துணிந்தார். பிரிவுத் துயரால் உளைந்துமெலிந்து இவர் அலைந்தலமந்த நிலையினுக்கிரங்கிப்பலரும் வருந்தினர்.

" நெறிபடு கவலை நிரம்பா நீளிடை
வெள்ளி வீதியைப் போல நன்றுஞ்
செலவயர்ந்திசினால் யானே பல புலந்து
உண்ணா வுயக்கமொடு உயிர் செலச் சாஅய்த்
தோளும் தொல்கவின் தொலைய நாளும்
பிரிந்தோர் பெயர்வுக்கு இரங்கி
மருந்துபிறி தின்மையின் இருந்து வினையிலனே" (அகம் 147)

இது, ஔவையார் பாடியது. செல வுணர்த்திய தோழிக்குத் தலை மகள் சொல்லியதாகத் துறை யமைத்துச் சொல்லியபடி

பிது. இம் மெல்லியலாரைச் சுட்டி அந் நல்லிசைப் புலமையார் இதில் சொல்லியிருத்தல் காண்க. அழகு சிதைந்து உளமிக வுளைந்து கணவனை நாடி இவர் அலைந்து திரிந்தமை இதனால் அறியலாகும். இவ்வண்ணம் தேடி யலைந்த இவரைத் தாயரும் தோழியரும் தலைப்பட்டு, "வருந்தித் தேடின் அவரைக் காண்ட லரிது; தாமாகவே வந்து சேருவர்; அலையவேண்டாம்"; என்று ஒரு முறை வழிமறித்து நின்றார். அவ்வமயம் அவரை நோக்கி இவர் உரைத்த படியை அடியில் பார்க்க.

"நிலந்தொட்டுப் புகாஅர்; வானம் ஏறார்;
விலங்கிரு முன்னீர் காலிற் செல்லார்;
நாட்டின் நாட்டின் ஊரின் ஊரின்
குடிமுறை குடிமுறை தேரின்
கெடுநரும் உளரோநம் காதலோரே!"

எனத் தம துணிவு தோன்ற வுரைத்து உறுதியோடு சென்றார். உடல் மெலிந்து பசலை பாய்ந்து தம் நிறங் குலைந்திருத்தலை நினைந்து இவர் நெடிது வருந்தினார். அவ் வருத்தத்தோடு கவி ஒன்று பாடினார். அடியில் வருவது காண்க.

"கன்றும் உண்ணாது; கலத்தினும் படாது;
நல்லான் தீம்பால் நிலத்து உக்காஅங்கு
எனக்கும் ஆகாது; என்னைக்கும் உதவாது,
பசலை உணீஇய வேண்டும்
திதலையாகத்து என் மாமைக் கவினே" (குறுந். 27.)

இனிய நீர்மையோ டமைந்த தமது அரிய அழகைப் பசலை உண்டது கண்டு இவர் பரிந்துரைத்திருக்குந் திறனை இதில் அறிந்துகொள்க. என் ஐ = என்னுடைய ஐயன்; தலைவன் என்க. மாமை = நிறம். கவின் = அழகு. உணீஇய—உண்ணுதல். வேண்டும் என்றது வெறுப்பினால். நல்ல பசுவின்பால் வீணே நிலத்தில் சிந்தியதுபோல் தமது எழில் நலம் தம் கணவனுக்கு உதவாமல் பசலைவாய்ப் பட்டு இப்படிப் பாழ்போக வாவேண்டும் என இவர் இரங்கி அலறியிருக்கும் நிலை எவர்க்கும் இரக்கம்

கடல்கால் கிளர்ந்த வென்றி நல்வேல
வான வரம்பன் அடல்முனைக் கலங்கிய
உடைமதில் ஓரரண் போல்
அஞ்சுவரு நோயொடு துஞ்சாதேனே" (அகம் 45)

காதலன் அகன்று போனதையும், தம்மேனிமேல் பசலை பாய்ந்து நிற்றலையும் நினைந்து வருந்தி நோயொடு உழல்வேனே என இங்ஙனம் வாய்விட்டலறினர். மற்றொருமுறை கனவிடைத் தம் கணவனைக் கண்டு நனவினி விழுந்து மீண்டும் அவரைக் கண்டாலன்றி யான் உயிர் வாழேன் என்று துயர்மீக் கூர்ந்தார்.

"எல்லிற் றென்றான் வெல்வே லேந்தி
நசைதர வந்த நன்னராளன்
நெஞ்சுபழு தாக வறுவியன் பெயரின்
இன்றிப் பொழுதும் யான் வாழலனே;
எவன்கொல்வாழி தோழி! நம் மிடை முலைச்
சுணங்கணி முற்றத்து ஆரம் போலவும்
சிலம்பு நீடு சோலைச் சிதர் தூங்கு நளிர்ப்பின்
இவங்கு வெள்ளருவி போலவும்
நிலங்கொண்டனவால் திங்களங் கதிரே" அகம் (362)

இவ்வாறு துயருழந்திருந்த இவர் பின்பு கொழுநனைக் காண விழைந்து வெளியேறித் தேடத் துணிந்தார். பிரிவுத் துயரால் உளைந்துமெலிந்து இவர் அலைந்தலமந்த நிலையினுக்கிரங்கிப்பலரும் வருந்தினர்.

"நெறிபடு கவலை நிரம்பா நீளிடை
வெள்ளி வீதியைப் போல நன்றுஞ்
செலவயர்ந்திசினால் யானே பல புலந்து
உண்ணா வுயக்கமொடு உயிர் செலச் சாஅய்த்
தோளும் தொல்கவின் தொலைய நாளும்
பிரிந்தோர் பெயர்வுக்கு இரங்கி
மருந்துபிறி தின்மையின் இருந்து வினையிலனே" (அகம் 147)

இது, ஔவையார் பாடியது. செல வுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொல்லியதாகத் துறை யமைத்துச் சொல்லியபடி

கும் அரிதோ" (ஐங்குறுநூறு), "மாமயிலாங்குளவந்து முனை நிற்பன, சாயல் கற்பனகொலோ தையல்தன்னுடன்" (மணிமேகலை) "சாயலும் கிளவியும் தம்மொடுநிகர்த்த தோகையும் கிளியும் தொக்கவையகல" (பெருங்கதை) இவற்றுள் சாயல் குறித்தது நிற்றலறிக.

கைம்மாறு ஆ = பதிலாக. ஒருவர்பால் ஒரு பொருளைக் கொடுத்து அதற்கு ஈடாக மற்றொன்றை அவரிடமிருந்து வாங்கிக்கொள்வது கைம்மாற்றாகு மாதலால் இது கைம்மாறு என நின்றது.

சாயல் பசலைக்கும், நாண் நோய்க்கும் இங்கு மாற்றுப் பொருளாயின. இக் கைம்மாறு தலைமாறு இங்கு நிலைமாறி நின்றது. இஃது எதிர் நிரல் நிரை. புறத்தே மேனியில் நிகழ்வதால் சாயல் முன்னும் அகத்துள்ளமையான் நாண் பின்னும் குறிக்கப்பட்டன. புறமும் அகமும் ஒரு சேர நிலைகுலைந்துள்ளமையை இங்ஙனம் புலந்து மொழிந்தாள்.

"மேனிமறைத்த பசலையள் ஆனாது, நெஞ்சம் வெறியா, நினையா, நிலனேக்கா, அஞ்சா, அழாஅ, அரற்றா, இஃதொத்தி என்செய்தாள் கொல்! என்பீர்! கேட்டீமின்! பொன்செய்தேன்; மறையிற்றன் யாழ் கேட்டமானை அருளாது, அறைகொன்றுமற்றதன் ஆருயிர்எஞ்சப், பறையறைந்தாங்குஒருவன் நீத்தான்; அவனை அறைநவநாட்டினீர் கொண்டுதரின் யானும் நிறையுடையேனாகுவேன்' (கலி) ஓர் தலைவி நாணிழந்து பசலையடைந்து புலம்பியிருந்தலை இதில் அறிந்துகொள்க.

மேல், பசப்பு கணவனால் வந்ததென்றாள்; இதில், சாயலும் நாணும் அவனோடு போயின என்கின்றாள்.

பசலையையும் நோயையும் எனக்குக் கொடுத்துவிட்டு என் மேனி அழகையும் நாணையும் காதலர் கொண்டுபோயினர் என்பதாம்.

நிறங்குலைந்து விரகவேதனையால் உளங்கவன்றிருந்த தலைவியை நெருங்கி இதென்ன இப்படி அழகு சிதைந்து அலமரு

இன்றாய்! அயலறிந்தால் நகையாகுமே! சிறிது அடங்கியிரு என்று தோழி மொழிந்தபோது அவளை நோக்கி இவள் உரைத்த படியிது. பசலை படர்ந்தமையால் உடம்பில் அழகு போயது; காம நோய் மிகுந்தமையால் அகத்தே நாணம் போயதென்க. இப் போக்கு அப்போக்காளரால் நேர்ந்த தாதலால் அவர் வந்து புகுந்தாலன்றிப், புகுந்த இவை போதலும், போன அவை வருதலும் இல்லாம் என்பது கருத்து.

என் கட்டழகைக் குலைத்து; வெட்கத்தைக் கெடுத்து இவ்வாறு எட்டப்போன அவரை என்று நான் கிட்டப்பெறுவேன்! என இங்ஙனம் கிளந்து நின்றாள். மடம், பயிர்ப்பு முதலிய நீர்மைகளைக் குறியாமல் சாயலையும் நாணையும் குறித்தது மிருதுவான மினுமினுப்பினால் உடம்பையும், ஒள்ளிய உட்கூச்சத்தால் உயிரையும் தலைமையுற அலங்கரித்து நிற்கும் இவற்றின் நிலைமை நோக்கி என்க. இவை மனனுணர்வால் அறியத்தக்கனவேயன்றி இன்னபடித்தென வெளிப்படையாகக் காட்ட இயலா என்க.

"ஒப்பும் உருவும் வெறுப்பும் என்றா
கற்பும் ஏரும் எழிலும் என்றா
சாயலும் நாணும் மடனும் என்றா
நோயும் வேட்கையும் நுகர்வும் என்றாங்கு
ஆவயின் வரூஉம் கிளவி யெல்லாம்
நாட்டிய மரபின் நெஞ்சுகொளின் அல்லது
காட்டலாகாப் பொருள என்ப." (தொல்காப்பியம்)

நாயகனைப் பிரிந்த மகளிர் சாயலும் நாணும் இழந்து பாயலில் பசந்து கிடப்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சாந்தைபால் உணரப்படும்.

## கதை.

சாந்தை என்பவள் தருகலை என்னும் நகரிலிருந்த குறுநிலமன்னனுடைய அருமைத் திருமகள். கலைநலமுடையவள்; "பெண்மை நாண் வனப்புச் சாயல் பெருமடமாது பேசின்,

ஒண்மையின் ஒருங்குகூடி உருவு கொண்டனைய நங்கை" என இவள் நிலவி நின்றாள். அக்காலத்தில் மதுரையிலிருந்து அரசு புரிந்த சவுந்தரன் என்னும் பாண்டிய மன்னன் இவளது அழகு நலங்களை வினவியறிந்து ஆர்வமீதூர்ந்து நேரில்வந்து பாரெல்லாம் புகழ இவளை மணந்து கொண்டுபோய் மகிழ்ந்திருந்தான். அம் முடிமன்னனுக்கு முடிவிலின்பமாய் இவள் இனிதமர்ந்து வந்தாள். வருங்கால் கம்பர் ஒரு நாள் அங்குவந்தார். அரசன் அவரை உவந்துபசரித்துச் சிலநாள் உடனிருக்கச் செய்தான். அப்புலவர் பெருந்தகையினது புலமைச் சுவையைத் தன் தலைவி யோடமர்ந்து நாளும் நன்குநுகர்ந்தான். பின்பு வேண்டிய வரிசைகளை விழைந்து நல்கிப் பல்லக்குந்தந்து பண்புற விடுத்தான். அவ்வமயம் இவ் அரசிவந்து தன் கணவனருகே நின்று "இக்கவிகுலதிலகத்தின் புலமை நிலையினைச் சிறிது நான் நிறுத்துப் பார்க்கவேண்டுமாதலால் இச் சிவிகையிலேற்றி நாமிருவரும் முன்னும் பின்னும் முறையே நின்று தூக்கி நிறைசெய்து பார்ப்போமா?" என்று விநயமாக வுரைத்தாள். கல்வியருமை தெரிந்த இம்மெல்லியலது சொல்லருமையை வியந்து அச் செல்வப் பாண்டியனும் நல்லதென றிசைந்தான். இவர் தம் உள்ளப் பான்மையை வியந்து அக்கவிச் சக்கரவர்த்தி தம் உள் ளமுருகினார். இவள் திருமுகத்தை நோக்கி இனிய கவி ஒன்று பாடினார். அடியில் வருவது காண்க.

"உமையவளும் நீயும் ஒருங்கொப்பை; ஒப்பில்
உமையவளுக் குண்டங்கோர் ஊனம்; — உமையவள்தன்
பாகந்தோய்ந் தாண்டான் பலிக்குழன்றான்; பாண்டியன்நின்
ஆகந்தோய்ந் தாண்டான் அரசு" (கம்பர்)

இச் சதிபதிகளைப் புகழ்ந்து அக்கவியரசர் கனிந்துபாடியுள்ள இதில் அமைந்திருக்கும் பொருள் நலங்களை ஆய்ந்துணர்ந்து கொள்க. இங்ஙனம் புலவர் பாடும் புகழுடையளாய் நிலவியிருந்த இவள்பால் அலகின்பங்களை நுகர்ந்து வருங்கால் அத்தலைமகன் உலக நிலைகாண அயலகன்று போனான். இக்குலமகள் பிரிவாற்றாமல் நிலைகுலைந்திருந்தாள். உடல் மெலிந்து, நிறம் வெளுத்துப்

பசலைபூத்து, உளங்கவன்று கிடந்தாள். "நோயும் பசலையும் தந்து சாயலும் நாணும் அவர் கொண்டார்" என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

"என்னெஞ்சம் நாணும் நலனும் இவையெல்லாம்
மன்னன் புனலுடன் வெளவினான் — என்னே
அரவக் கல்குலாய், அறிலோன் றன்றோ
புரவலர் கொள்ளும் பொருள்" (முத்தொள்ளாயிரம்)

எழில்நலங்கள் யாவும் இழந்தேன் பசப்பாம்
பழிதவழ நொந்தேன் பரிந்து.

புறமும் அகமும் பொலிவிழந்திருந்தமை இதனால் கூறப்பட்டது.

1184. தேசு மிகுகனக சித்திரையேன் வெம்பசப்பைக்
கூசி யுளைந்தாள் குமரேசா — நேசமிக
உள்ளுவன் மன்யான் உரைப்ப தவர்திறமாற்
கள்ளம் பிறவோ பசப்பு. (௪)

இ—ள்.

குமரேசா! கணவனை நினைந்திருந்த கனக சித்திரை ஏன் பசப்படைந்து பதைத்து நொந்தாள்? எனின், யான் உள்ளுவன்மன் உரைப்பது அவர் திறம் பசப்பு கள்ளம் பிறவோ என்க. தேசுமிகு என்றது அவளது பேரழகின் பெற்றி கருதி.

உள்ளுதல் = நினைத்தல். இடைவிடாது நிலையாக என்றும் நினைப்பேன் என்பாள் "உள்ளுவன்மன்" என்றாள்.

அவர் திறம் என்றது தலைவன் செய்துபோன செயல் நிலைகளை. பசப்பு கள்ளம் = பசலை வந்து வஞ்சமாயுள்ளது. பசப்பினைக் கள்ளம் என்றது தனது அரும் பெறலழகினை அநியாயமாய்க் கொள்ளை செய்துள்ளமை கருதி. ஒருவன் இல்லாத சமயம் பார்த்து அவன் பொருளைக் கொள்ளை செய்துபோவது கள்ளர் இயல்பு ஆதலால் தலைவனில்லாதபோது வந்து அவனுக்குரிமையான தன் உருவத்திருவினை ஒருங்கே கவர்ந்துள்ள பசப்பினைக் கள்ளம் என்றாள். பிறவோ? என்றது கள்ளத்தைத்தவிர வேறு இல்லை என்றபடி.

மேல், பசலை நாயகன் தந்ததென்றாள்; இதில், அது வந்தது விந்தை என்கின்றாள்.

என் காதலரை நிலையாக யான் நினைக்கின்றேன்; அவர் திறங்களை வாயால் உரைத்து வருகின்றேன்; அங்ஙனமிருந்தும் பசப்பு வஞ்சனையாய் இங்ஙனம் வந்துள்ளதென்பதாம்.

பிரிவால் மெலிந்து பசலைபூத்து வருந்தியிருந்த தலைவியைப் பார்த்து நீ காதலரை நெஞ்சில் நினைந்துகொண்டால் இப்படி நிலைகுலைந்து வருந்த நேராது என்று தோழி கூற அவ்வமயம் அவள் கூறியபடியிது.

தலைவனது வடிவழகை இடையறாது நெஞ்சில் நினைந்தும், அவனது குணநலங்களை நாவில் நவின்றும் வந்தாளாதலால் "உள்ளுவன்; உரைப்பன்;" என்றாள். மனமும், வாக்கும் இவ்வாறு அவரை மருவி நிற்பக் காயத்தில் பிரிவுத் துயரமாகிய பசப்புவந்து இங்ஙனம் ஊர்ந்தது மாயம் என்றாள்.

முக்கரணங்களும் ஒன்றற்கு ஒன்று முறையே ஆதாரமாயமைந்துள்ளன ஆதலால் மனம் வாக்குகளின் வழித்தாய உடல் மட்டும் அவற்றிற்குமாறாய் நிலைதிரிந்து நிற்றல் "கள்ளம்" எனக் குறித்துத்தன் உள்ள நிலையை இவ்வாறுணர்த்தி நின்றாள்.

நான் பிரிவாற்றி யிருந்தும் என் அறிவாற்றலைக் கடந்து பசப்பு இங்ஙனம் படர்ந்துள்ளதே! யான் என் செய்வேன்? எனத் தன் செயலறவு தோன்ற இவ்வாறு உரை செய்தாள் என்க. என் ஆருயிர்த் துணைவர் வந்து என்னை அடைந்தாலன்றி யான் அடைந்துள்ள பசலை அகலாதென்பதாம்.

"பிறைபோர் சுடர் நுதற் பசலை
மறையச் செல்லுநீ மணந்தனை விடினே" (நெய்தற்கலி 8)

தலைவன் மணந்தால் பசலை மறையும்; அவன் தணந்து நின்றால் அது நிறைந்து நிற்கும் என இஃதுணர்த்தி நிற்றலறிக.

உடம்பின் பசப்பைக் காதலி உளைந்து கூறுவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கனகசித்திரைபால் உணரப்படும்.

### கதை.

கனகசித்திரை என்பவள் மேகரதன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகள். பெருவனப்பினள்; எழில் நிலைக்கோர் எடுத்துக் காட்டாக அக்காலத்தவர் பலரும் இவளை இசைத்து வந்தார். தருண மங்கையர் குழுமி அழகு குறித்து உரையாட நேர்ந்தால் அங்கு இவளது உருவ நிலையை உவந்து உரையாதிரார். பருவமெய்தி இவள் தனி யமர்ந்திருந்தபோது அரசிளங் குமரர்பலர் இவளை மணந்து கொள்ள விழைந்து தனித்தனிமால்கொண்டு நின்றார். அவருள் அச்சுவக்கிரீவன் என்பவன் ஆர்வமீக் கூர்ந்தான். அவன் மயூரகண்டன் என்னு முடிமன்னனுடைய தலைமைப் புதல்வன். அஞ்சா நெஞ்சினன்; அருந்திறலுடையவன். அரிதின் முயன்று இவளை மணந்து மகிழ்ந்தான், யாதும் பிரியாது நாளும் விழைந்து இவளது போக வெள்ளத்தில் மூழ்கிக் கிடந்தான். அவன் மணிமுடி சூடுங்கால் அரியாசனத்தில் இவள் உடனமர்ந்து அரிய வரிசைகள் பல ஆற்றப் பெற்றுக் கோப்பெருந் தேவியாய்க் குலாவியிருந்தாள். அப் போர் வீரனுக்கு இவள் ஆராவமுதமாயமைந்திருந்தமையை வியந்து அனைவரும் புகழ்ந்தார்.

"கண்ணார் கோதைக் காமரு வேய்த்தோட் கனகப்போர்
மண்ணார் சீர்த்திச் சித்திரை என்னு மடமாதின்று
எண்ணார் இன்பக் காதலியாகி இயல்கின்றாள்
பெண்ணார் சாயல் பெற்றனள் தேவிப் பெறுபட்டம்"
(சூளாமணி)

அன்புமிகுந்து இன்பநிலையமாய் இங்ஙனம் இவள் இருந்து வருங்கால் பொருதிறங் கருதி மருவலர்மீது ஒரு முறை அவன் போக நேர்ந்தது. இவளை ஆகந்தழுவி அன்புற முயங்கித்தான் போகவேண்டிய நிலையைப் பொருந்த வுணர்த்தி விரைந்து வருவ

லென நயம்பட வுரைத்து அவன் அகன்றுபோனான். இவள் பெருந்துயரோடு வருந்தி யிருந்தாள். தென்றல் வீசினும் அன்றில் கூவினும் இவள் அலமந்தயர்ந்தாள். விழிதுயிலிழந் தாள்; மேனி மெலிந்தாள்; பசப்பு மீதூரப் பதைத்தலமந்தாள். மாலதி என்னும் தோழி வந்தாள்; அரசர் பெருமானார் கூறிய படியே விரைவில் வருவர்; அவரது உரைகளை நினைந்து ஆறி யிருங்கள் என்று தேறுதல் கூறினாள். உள்ளுகின்றேன்; அவர் திறங்களை உரைத்து நிற்கின்றேன்; ஆயினும் பசலை என் மெய் யைக் கொள்ளைகொண்டுள்ளதே என்று இவள் குலைந்து மொழிந் தாள். பசப்பின் படர்ச்சியைக் குலமகளிர் இவ்வாறு உரைப் பர் என்பதை உலகம் இவள்பா லுணர்ந்து நின்றது.

போனவரை யுள்ளம் பொருந்திநின்றும் புன்பசலை
ஆனவரை யூரும் அடர்ந்து.

கருதினும் பசலை காந்துவரும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1185. மேனி பசந்து மெலிந்தாள் விநதைதன்
கோனகன்ற போதேன் குமரேசா — ஏனோ
உவக்காணெங் காதலர் செல்வார் இவக்காணென்
மேனி பசப்பூர் வது. (ரு)

இ—ள்.

குமரேசா! தன் கணவன் அயலகன்றவுடனே விநதை ஏன் உடல் பசந்து வருந்தினாள்? எனின், எம் காதலர் உவக் காண் செல்வார்; என் மேனி பசப்பு ஊர்வது இவக்காண் என்க.

உவக்காண் = உங்கே. இவக்காண் = இங்கே. உகரச் சுட் டும், இகரச்சுட்டும் இடைச்சொற்களை இடையே இங்ஙனம் ஏற்று வந்தன. "உதுக்காண், தையால்! தேறெனத் தேற்றி, அறனில்லான் பைய முயங்கியுழி" (கலி) இதில் உகரச்சுட்டுவந்துள்ளமைகாண்க. "அ இ உ அம் மூன்றும் சுட்டு" (தொல்காப்பியம்) என்றபடி சுட்டுப் பொருள்களைக் குறித்துவருங்கால் அகரம் தூரத்தி லுள்ளதையும், இகரம் அருகிலுள்ளதையும், உகரம் நடுவி லுள்ளதையும் குறித்துவரும்.

சென்றார் என்னாது "செல்வார்" என நிகழ்வினுரைத்தது அச்செலவுநிலை நினைவில் நிகழ்ந்துள்ள நிலைமை தெளிய.

காதலர் என்றபோது எம் எனப் பன்மையிலும், மேனி என்றவழி என் என ஒருமையிலும் குறித்தது என்னை? எனின், முன்னதில் தோழியையும் உடன் படுத்தினாள், பின்னதில் தன்னை மாத்திரம் தனியே பிரித்தாள் என்க. எம்காதலர் அங்கே செல்ல என்மேனி இங்கே பசப்பூர்ந்து நின்றது என்பதாம்.

துணைவர் சென்றது இன்றுதானே அதற்குள் உடம்பு முழுவதும் இவ்வாறு பசலை படர்ந்துள்ளதே என்று கவலையோடு வினவிய தோழியை நோக்கித் தலைவி யுரைத்தபடியிது.

தலைவன் பிரிந்தவுடனே தலைவி பசந்துபடுவள் என்பது கருத்து. இவ்வுண்மை விநதைபால் உணரப்படும்.

## கதை.

விநதை என்பவள் வசுகன் என்னும் குறுநில மன்னனுடைய அருமைப்புதல்வி. அரமடந்தை என இவள் வடிவழகில் சிறந்தவள். குணநலமுடையவள். பருவமெய்தி இவள் தனியிருந்து வருங்கால் சதமன் என்னும் அரசிளங்குமரன் கண்டு உளமிக வுருகினான். அப்பேரழகனை நோக்கி இவளும் ஆர்வமீதூர்ந்தாளாயினும் தன் நிறையுடைமையால் நெஞ்சடக்கி மீண்டாள். மீளுங்கால் காதலோடு இவள் பார்த்துச் சென்ற காட்சியை நினைந்து அவன் கருத்தழிந்து நின்றான். தனது அரண்மனையடைந்தான்; செயலொழிந்தான்; மயலுழந்தான். தனக்கு நண்பனும் மந்திரிமகனுமாகிய சுகலன் என்பவன் பெருந்திருவுடைய நீ இவ் அருந்துயரடைவது என்? என அருந்தி வினவினான். நிகழ்ந்ததையறிந்தான். அருங்கலை தெளிந்து அறிவிற் சிறந்து பெருவீரனுயுள்ள நீ ஓர் இளமங்கையின் பொருட்டா இவ்வாறு உளமுடைந்து நின்றாய்! நன்று! நன்று! என நண்பன் நகை புரிந்தான். வகை தெரியாது உளறுகின்றாய் என்று அவனை வைது முனிந்து இவளது வனப்பின் மாட்சியை அவன் மனங்

கொண்டுணரும்படி மறுகியுரைத்தான்.

“நயனும், நண்பும், நாணு நன்குடைமையும்,
பயனும், பண்பும், பாடறிந்து ஒழுகலும்;
நும்மினும் உடையேன் மன்னே; சும்மென
எதிர்த்த தித்தி ஏரிள வனமுலை
விதிர்த்துவிட்டன்ன வந்துண் சுணங்கின்
ஐம்பால் வகுத்த கூந்தற் செம்பொற்
றிருநுதற் பொலிந்த தேம்பாய் ஓதி
முது நீர் இலஞ்சி பூத்த குவளை
எதிர் மலர்ப் பிணையல் அன்ன இவள்
அரிமதர் மழைக்கண் காணு வூங்கே.”

எனப் பண்டொரு தலைமகன் சண்டுரைத்தபடியே அக்குலமகன் இவளைக் கண்டடைந்த நிலையைக் கொண்டுரைத்தான். இவள் கண்காணு முன்புதான் தன்பால் நயன் நண்பு முதலியன நன் கமைந்திருந்தன; கண்ட பின்பு அவையாவும் காணு தொழிந் தேன் எனத் தன் காதல் நிலையை இங்ஙனம் காட்டி நின்ற அவன் பின்பு சிறந்த வரிசைகளோடு வணிந்துவந்து இவளை மணந்து கொண்டு உயர்ந்த போகங்களை நுகர்ந்து வந்தான். அவனுக்கு இன்ப நிலையமாய் இவள் இனிதமர்ந்திருந்தாள். அவன் நல்ல போர் வீரனுதலால் அடிக்கடி அமர்முனைக்குச் செல்லலானுன். அங்ஙனம் செல்லநேர்ந்த போதெல்லாம் இவள் அல்லலுற்றழுங்கினுள். சிலமுறை இவளையும் உடன்கொண்டு சென்றுன். அடர்ந்த காட்டகத்தே ஒருமுறை இவள் தனியே தொடர்ந்து போங்கால் அண்டவாயு என்னும் நோயால் அவன் அயர்ந்து வீழ்ந்தான். இவள் ஆவி துடித்தாள்; அயலே அடித்து வீழ்ந்தாள். பின்பு மூர்ச்சை தெளிந்தாள். அலறி அழுதால் புலி முதலிய கொடிய மிருகங்கள் வந்து குடிகெடுத்துவிடுமே என்று குரலடங்கி யெழுந்தாள். பேச்சின்றிக் கிடக்கும் தன் பிராண நாயகனைப் பெயர்த் தெடுத்தாள்; எடுக்க முடியாமை யால் ஏங்கி யுளைந்தாள். சிறிது தெளிவுதோன்றியது; உடனே தன் கையாலணைத்துப் பைய எழும்படி பரிந்து வேண்டினுள்;

உடன் கலந்திருந்த காதலன் ஒருநாள் இடையகன்றான்; உடனே உள்ளங்கலங்கி காதலி உருக்குலைந்தாளாதலால் அந்நிலையினை நினைந்து பசப்பினை இவ்வாறு பகுத்துரைத்தாள்.

விளக்கு இருள் என்றதனால் கொழுநன் மூயங்கி யிருக்கும் போது பசப்பு முகங்காட்டாதென்பதும், அவன் சிறிது அகன்றால் அது படர்ந்து அடர்ந்துவிடும் என்பதும் அறிந்துகொள்ளலாகும்.

"சாயலின் மார்பன் சிறுபுறம் சார்தர
ஞாயிற்று முன்னர் இருள்போல மாய்ந்ததுஎன்
ஆயிழை மேனி பசப்பு" (குறிஞ்சிக்கலி 6)

கதிரவன்முன் இருள்போலக் கணவன் வரப் பசப்புப் போயது என இஃதுணர்த்தி நிற்றல் காண்க. அடிகள் சுட்டியபடியை அடியொற்றி இது வந்துள்ளமை யறியலாகும்.

"நளியிருஞ் சிலம்பின் நன்மலை நாடன்
புணரிற் புணருமார் எழிலே; பிரியின்
மணிமிடை பொன்னின் மாமை சாய, என்
அணி நலம் சிதைக்குமார் பசலை; அதனால்
அசுணம் கொல்பவர் கைபோல நன்றும
இன்பமும் துன்பமும் உடைத்தே
தண்கமழ் நறுந்தார் விறலோன் மார்பே" (நற்றிணை 304)

தலைவன் தழுவியிருப்பின் எழில் மிகுந்திருக்கும்; அவன் வழுவி யகலின் பசப்பு வந்து வருத்தும் என ஓர் தலைவி இதில் நொந்துரைத்திருக்கு நிலையை நுனித்தறிந்து கொள்க.

"ஊருண் கேணி உண்துறை தொக்க
பாசியற்றே பசலை காதலர்
தொடுவுழித் தொடுவுழி நீங்கி
விடுவுழி விடுவுழிப் பரத்தலானே" (குறுந்தொகை 399)

ஊருணியிற் படர்ந்த பாசி ஊரவர் நீரெடுக்க வருங்கால் அகன்று நிற்றலும், வாராக்கால் அடர்ந்து படிதலும் போல் காதலர் தொட்டபோது பசலை நீங்கி, அவர் விட்டவுடன் அது மேவிப் பரக்கும் என இஃதுணர்த்தி நிற்கும் அழகைப் பார்க்க. உடையவனைப் பிரிந்தவர் உடல் பசந்துளோவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சாருகாசினிபால் உணரப்படும்.

## கதை.

சாருகாசினி என்பவள் சுதர்மன் என்னும் அரசனுடைய அருமைத்திருமகள். உருவ நிலையில் இவள் உயர்ந்திருந்தாளாதலால் பருவமெய்தியபொழுது அரசர் பலரும் இவளை விழைந்து நின்றனர். அவருள் விதர்ப்ப தேயத்து வேந்தனுகிய வீமன் என்பவன் எவரினும் மேன்மையுடையவன். எண்டிசை எங்கணும் புகழக்குண்டினபுரத்தில் அவன் குலாவியிருந்தான். திருந்திய பண்பினன். அருந்தவரும் அவனது குணநலங்களை வியந்து புகழ்ந்துள்ளார்.

"அந்த நகரத்திருந் துலகம் ஆளும் அரசன் தவசீலன்;
சந்தமறையின் முறைபிறழான்; தானஞ்சொரியு மலர்க்கரத்தான்;
மைந்துமிகுந்த திணி தோளான்; மாருத் தரும சிந்தனையான்;
வெந்த மதவேள் எழுந்தனைய விளங்கு வனப்பி னுருவத்தான்;

ஓராயிர மாமறையவரும் ஒருபான்கோடிச் சேனைகளும்
தீராதுடன் சூழ்தர எங்கும் செல்லுஞ் சூரன்; ஞாதியரும்
பாராள் வேற்று மன்னவரும் பணியும் பதத்தான்; பணியாரை
வேரோடறுக்கும் சீற்றத்தான்; வீமன்என்னும் இயற்பெயரான்."

இங்ஙனம் பெருஞ்சீரோடு சிறந்திருந்த அவன் இவளை விரும்பிவந்து மணந்துகொண்டு அரும் போகங்களை நுகர்ந்து வந்தான். இவளது செயல் இயல்களில் அவன் உள்ளம் பறிபோய் உருகியிருந்தான்.

"வீரவேல் மன்னவன் விழையும் கற்பினள்;
மூரல் தோற்றுவகை முறுவல் செய்தலால்
சாருகாசினி எனச் சாற்று நாமத்தாள்;
ஓருமா நலமெலாம் திரண்ட வுள்ளத்தாள்." (பார்க்கவபுராணம்)

இதில் இவளது பெயர்க் காரணத்தை விளக்கியிருக்கும் பெற்றியை நோக்குக. அமைதியாய் நின்று அழகுறச் சிரிக்கும் இயல்பினையுடைய இவள் அளவில் இன்பங்களை அருளிக் கொழுநனை ஆதரித்து வந்தாள். அவனும் உழுவலன்புடன் தழுவி உயிரினும் இனியளா இவளை உவந்து பேணிவந்தான்.

வருங்கால் ஒருமுறை அவன் அயல் பிரிந்தான். இவள் துய ருழந்தாள். உடல் மெலிந்து பசலை படர்ந்து இடர் மிகுந்தாள். கொண்கன் முயக்கம் நீங்கியபொழுது பசப்புப் பாயும் என் பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள். பின்பு கொழு நன் வந்தவுடன் கூடிக் குலாவினாள். இவள் வயிற்றிலிருந்துதான் தமயந்தி பிறந்தாள்.

> காப்பறிந்த கள்ளனேனக் காதலனார் நீப்பறிந்து
> பாய்ப்புகுந்த தந்தோ பசப்பு.

உடையவன் கைவிடில் உடல் பசந்துவிடும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1187. மெள்ள அகன்றவுடன் மேனிபசந் தாள்சுதையேன்
கொள்ளைநோய் கொண்டாள் குமரேசா—உள்ளமுறப்
புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன் அவ்வளவில்
அள்ளிக்கொள் வற்றே பசப்பு. (எ)

இ—ள்.

குமரேசா! சுதை புடை பெயர்ந்தபோது பசப்பு ஏன் உடல்மிடைந்தது? எனின், புல்லிக்கிடந்தேன் புடை பெயர்ந் தேன் அவ்வளவில் பசப்பு அள்ளிக்கொள்வற்றே என்க.

புல்லி=பொருந்தி. இருந்தேன் என்னாது கிடந்தேன் என் றாள் அக்கிடையின் பாடு தோன்ற.

> "வட்டவாண் முகத்தொரு மயிலும் மன்னனும்
> கிட்டிய போதுடல் கிடைக்கப் புல்லினார்
> விட்டிலர்; கங்குலின் விடிவுகண்டிலர்;
> ஒட்டிய உடல்பிரிப் புணர்கிலாமையால்," (இராமாயணம்)

இதில் காதலர் புல்லிக்கிடக்கும் படியைப் பார்க்க.

புடைபெயர்ந்தேன் = அயல்புரண்டேன். அவ்வளவில்=அக் கணமே. அள்ளிக் கொள்வற்று=அள்ளிக் கொள்வதுபோல, ஏகாரம் தெளிவும் இரக்கமும் தோன்ற நின்றது. தரையில்

மிகுதியாகச் சிதறிக்கிடக்கும் பொருளைக் கையால் வாரி அள்ளிக்கொள்வது இயல்பாதலால் அது உடலில் அதிகமாகப் பரவியிருந்த பசப்புக்கு உரிமையாக வந்தது.

> "அள்ளிக்கொள்வன்ன குறமுகிழ வாயினும்,
> கள்ளிமேல் கைநீட்டார் சூடும்பூ அன்மையால்;
> செல்வம் பெரிதுடைய ராயினும் கீழ்களை
> நள்ளார் அறிவுடையார்." (நாலடியார்)

'அள்ளிக்கொண்டுண்ணக் காமம் கனிவித்தார்' (சீவகசிந்தாமணி) இவற்றுள் அள்ளுதல் வந்துள்ளமை காண்க.

மேல், தலைவன் நீக்கம் பார்த்துப் பசப்பு ஊக்கிவரும் என்றாள்; இதில், தன் அசதி நோக்கியும் அஃது அடர்ந்ததென்கின்றாள்.

என் கணவனை நன்குதழுவி அணையிற் கிடந்த நான் ஒருநாள் சிறிது அயல்புரண்டேன் உடனே பசலை திரண்டு உடல் படர்ந்ததென்பதாம்.

காதலன் பிரிந்து போனான் என்று அறிந்தவுடனே உடல் மெலிந்து பசலை படர்ந்து நிலைகுலைந்திருந்த காதலியைத் தோழி பார்த்து போனவர்கள் விரைவில்வந்து விடுவார்களே! அதற்குள் இவ்வாறு மெலிந்தயரலாமா? எனப் புகன்றபோது அவள் மொழிந்தபடியிது.

தன் ஆருயிர்த்துணையை ஆரத்தழுவி அமளியில் அயர்ந்து கிடந்த தலைவி ஒருநாள் உறக்க நிலையில் இயற்கையாகக்கை நெகிழ்ந்து சிறிது அயல் புரண்டாள்; புரளவே திடீரென்று துள்ளிவிழித்து உள்ளங்கலங்கி மறுபடியும் புல்லிக்கொண்டாள்; அங்ஙனம் புடை பெயர்ந்தபோது உடல்பசந்து போயது ஆனதால் அப்பசப்பு இருகையாலும் இப்படி அள்ளிக் கொள்ளலாம்படி அடர்ந்திருந்தது எனக் கடந்த நாளில் முன்பு நிகழ்ந்திருந்த ஓர் நிகழ்ச்சியை எடுத்துக் காட்டித் தன் பிரிவாற்றாமையை இவ்வாறு உரைத்தாள் என்க.

"புல்லிக்கிடந்தேன்" என்றதனால் அவளது உள்ளக் காதல் அறிய லாகும். புடை பெயர உடல் பசந்தது என்றதனால் அவள் உயி ரடைந்த துயரம் உணரலாகும். புடை பெயர்ச்சி தன் கருத் தின்றி நிகழ்ந்தமையால் உடல் துடிக்க மீண்டுணர்ந்து ஒட்டி உவந்து கொண்டாள்.

> "பொய்த்தலை மருங்குலாள் ஒருத்தி புல்லிய
> கைத்தலம் நீக்கினள்; கருத்தின் நீக்கலள்;
> சித்திரம் போன்ற அச்செயலோர் தோன்றற்குச்
> சத்திரம் மார்பிடைத் தைத்த தொத்ததே" (இராமாயணம்)

புல்லியிருந்த கை புடை பெயர்ந்ததும், உடனே காதலர் இடை நிகழ்ந்ததும் குறித்து இஃதுணர்த்தி நிற்கும்படியை உய்த்து நோக்குக. கணவன் கணம் பிரிந்தாலும் காதலி மனங்கலங்குவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுதைபால் உணரப்படும்.

## கதை.

சுதை என்பவள் மதுரையிலிருந்து அரசுபுரிந்த நெடுஞ் செழியன் என்னும் பாண்டியனுடைய அருமைத் திருத்தேவி. இவள் அதிரூபவதி. அரும் பெறலழகும் பெருங்குலக் கற்பும் ஒருங்கமையப் பெற்றவள். மண்ணியமணி யென ஒண்ணிற மமைந்த புண்ணிய வடிவினள். தன் பெயரியல்புக் கேற்ப வெண்ணிற முடையளாய் விளங்கியிருந்தாளாதலால் வெள்ளைத் தாய் என உலகம் இவளை அழைத்து வந்தது. சுதை = வெண் மை. அம் மன்னனுக்கு இன்னமிர்தமாய் இவள் இனிதமர்ந் திருந்தாள். கண்ணை இமை காப்பதுபோல் அவ் அண்ணல் இவளைக் காதலித்து நின்றான். ஐம்புல இன்பங்களும் ஆர நுகர்ந்து உழுவலன்போடு கெழுமியிருந்த அவனை உயிர் எனப் பேணி இவள் உவந்து வந்தாள். கனவிலும் நனவிலும் அவ னைக் கருதியிருந்தாளாதலால் இடை சிறிதகலினும் இவள் உடல் பசந்திளைந்தாள். ஒருநாளிரவு பஞ்சணையில் அவனை ஆரத் தழுவி அயர்ந்துறங்குங்கால் அழுந்தியிருந்த கைகள் அயல்

நெகிழ்ந்தன. உடனே இவள் துள்ளி விழித்தாள்; துடித்துத் தடவினள்; அவன் படுத்திருப்பதையறிந்து பதைப் பொழிந்து மீண்டும் பதிந்து கிடந்தாள். இன்னவாறு உலவாக் காதலோடு இவள் உறைந்து வருங்கால் ஒருமுறை மருவலர்மீது பொருதி றங்கருதி அவன் போக நேர்ந்தது. அப்போக்கினை இவளிடம் கூறின் போகவிடாள் என்று துணிந்து செவிலித்தாயிடம் தெளி வுறக்கூறிவைத்து அமயம் பார்த்து அவன் அகன்றுபோனன். இவள் அறிந்தயர்ந்து அலமந்து துடித்தாள். பாங்கியரும் தாய ரும் பலபலகூறிப் பரிந்து பேணினர். யாதுகூறினும் காதல் மீறி இவள் கடுந்துயருழந்தாள். அணிகலன்களை அவிழ்த் தெறிந்து அழுக்காடையோடு அயர்ந்து கிடந்தாள். ஆற்றிய எவரையும் அகற்றி யிசழ்ந்தாள்.

"ஆரந் தாங்கிய அலர்முலை ஆகத்து
பின்னமை நெடுவீழ்தாழத் துணைதுறந்து
அம்மாசூர்ந்த அவிர் நூற்கலிங்க மொடு
புனையா ஓவியம் கடுப்பப், புனைவில்
தளிரேய் மேனித் தாய சுணங்கின்
அம்பணைத் தடைஇய மென்றோள் முகிழ்முலை
வம்பு விசித்தியாத்த வாங்குசாய் நுசுப்பின்
மெல்லியல் மகளிர் நல்லடி வருட,
நரைவிரா வுற்ற நறுமென் கூந்தற்
செம்முகச் செவிலியர் கைம்மிகக் குழீஇக்
குறியவும் நெடியவும் உரைபல பயிற்றி
இன்னே வருகுவர் இன்துணையோர் என" (நெடுநல்வாடை)

இதம் பல செய்து நயம்பெற மொழிந்தும் இவள் கலங்கி மயங் கிக் கலுழ்ந்து கிடந்தாள். அமிர்தவதி என்னும் தலைமைத்தோழி வந்து உங்கள் தலைமையை மறந்து இவ்வாறு அலமரலாமா? என் றாள். அவ்வமயம் அவளை இவள் தலை நிமிர்ந்து பார்த்தாள்; உடனிருந்து நெடுநாள் என் நிலையறிந்த நீயும் நிலைதிரிந்து இவ் வாறு உரை செயலாமா? என உருத்து மொழிந்தாள். தலை வனைப் பிரிந்து தான் தரித்திருக்க முடியாதெனத் தன் நிலை

மையை அவன் நெஞ்சு கொள வுரைத்தாள். அன்று இவள் உரைத்தபடியை அடியில் பார்க்க.

"தண்ணீர் பிரிந்தக்கால் தண்டாமரை யுடனே
உண்ணீர்மை குன்றி யுலையுமால் — பெண்ணீர்மை
கொண்டானை யன்றிக் குலமகளுக் கென்றேனும்
உண்டோ? நீ தோழி! உரை."

இதனால் இவளது புலமை நிலையும் தலைவன்பால் வைத்துள்ள தனியன்பும் இனிதறியலாகும். கணவனைத் தழுவியிருந்து லொழியத் தான் தனியிருத்தல் ஒல்லேன் என இவள் தயங்கிக் கிடந்தாள்; வேண்டிய ஓர் தூதனை அப்பாண்டியனிடம் விடுத்தாள். அவ் ஆண்டகை வந்தான். ஆரத்தழுவி இவள் ஆருயிர் தளிர்த்தாள்; பசந்திருந்த மேனி எழில் மிகுந்து திகழ்ந்தது. புல்லியகை புடை பெயரின் பசலை அள்ளலாம்படி உடல் வரும் என்பதை உலகம் இவள்பாள் உணர்ந்து நின்றது.

தழுவியகை சற்றே தளரின் பசலை
எழுமே கடல்போல் இரைந்து.

காதலி கணமும் பிரியலாற்றாள் என்பது இதனால் கூறப்பட்டது

---

1188. மாசிலுயர் விநய மாலை பசந்துபின்
கூசிநொந்தாள் என்னே குமரேசா—மூசிப்
பசந்தாள் இவளென்ப தல்லால் இவளைத்
துறந்தார் அவரென்பார் இல். (அ)

இ—ள்.

குமரேசா! பசந்திருந்த விநயமாலை அயலாரை என் சினந்து மொழிந்தாள்? எனின், இவள் பசந்தாள் என்பது அல்லால் அவர் இவளைத் துறந்தார் என்பார் இல் என்க.

பசந்தாள் = நிறங்குலைந்தாள்.

இவள் என்றது தலைவியை, அவர் என்றது தலைவனை. தன்னை இவள் என ஒருமையிலும், தலைவனை அவர் எனப் பன்மையிலும் குறித்தாள் தனது நிலைமையும், அவனது தலைமையும் தோன்ற. ஒருவனை இவ்வாறு பன்மையிலுரைப்பது வழுக்கியல்பே யன்றி இலக்கண முறை யன்றென்ப.

"ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்,
ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்,
வழக்கினுகிய உயர்சொற் கிளவி
இலக்கண மருங்கிற் சொல்லா றல்ல." (தொல்காப்பியம்)

ஒருவனை அவர் என்றல் உலகவழக்கு என இஃதுணர்த்தி நிற்றலறிக. துறந்தார் = கைவிட்டு அகன்றார்.

மேல், தலைவனைப் பிரிந்திருக்க முடியாதென்னத் தலைவிதன் நிலைமையை உணர்த்தினுள்; இதில், தன்னை ஆற்றியிருக்கும்படி அறிவுகூற வருவார் அறிவிலிகள் என்கின்றாள்.

இவள் பிரிவாற்றாது உடல் பசந்தாள் என, என்னைக் குறை கூறுகின்றாரேயன்றி இங்ஙனம் பசந்துபடும்படி இவனை அநியாயமாய்த் துறந்து போயினார் என அவரை இகழ்ந்து சொல்பவர் ஒருவரும் இலர் என்பதாம்.

தலைவனைப் பிரிந்து பசலையடைந்து கவலை மிகுந்திருந்த தலைவி பாங்கியரைக் குறித்துப் பரிந்து மொழிந்தபடியிது.

உடல் மெலிந்ததே! நிறங்குலைந்ததே! பசலை படர்ந்ததே! பொலிவொழிந்ததே! போனவர் வந்துவிடுவார் என்று பொறுத் திருக்கலாகாதா? பெண்ணுக்கு அடக்கம் வேண்டாமா? என இன்னவாறு பலரும் பன்னி நின்றதைக் கேட்ட தலைமகள் அன்னே "இவள் பசந்தாள்" என என் தலையில் இரந்து குடிக் கிறார்களே! யன்றி இப்பசப்பு யாரால் வந்தது என்று ஓர்ந் துரைப்பார் ஒருவரும் இல்லையே! என உளைந்து கூறுகின்றாளா தலால் "அவர் துறந்தார் என்பார் இல்" என்றாள்.

நான் பசந்து படுவதற்குக் காரணம் தலைவர் என்னைத் துறந்து போனமையே ஆதலால் அம்மூலகாரணத்தை நோக்கி மொழியாமை முழுமூடம் என்பது குறிப்பு. துறந்துபோன காதலரைத் தொடர்ந்துபோய் யான் இங்குப் பசந்துகிடத்தலை யுணர்த்தி விரைந்தழைத்து வந்து என் வேட்கை நோயைத் தீராமல் வீணே அயல் நின்று வார்த்தையாடி ஆற்றுவதால் யாது பயன்? என்பதாம்.

உற்றதை ஓர்ந்து செய்யாமல் குற்றங்கூறிப் பற்றுடையார் போல் பாவனை செய்வது இனிப் போதும் போதும் எனப் பாங்கியரை இங்ஙனம் மோதி நின்றாள். உள்ளன்போடு தன்க்கு உரிமையாயுள்ளவரை இங்ஙனம் எள்ளி மொழியலாமோ? எனின் பிரிவாற்றாமையால் பேதுற்றவர் உரிமையாயருகுற்றவரையே அழன்று நிற்பர் என்க.

"ஆடகக் கொழும் பொன்வரை மார்பனைக்
கூடப் புல்லிவையாக் குற்றம் உண்டென்று
நீடெரித்திரள் நீண்மணித் தூணொடு
சூடகத் திரள், தோளணி வாட்டினாள்" (சிந்தாமணி)

துணை பிரிந்தபோது பதுமை தன் அணிகலங்களை இகழ்ந்து போக்கியிருந்த திறனை இதில் உணர்ந்துகொள்க. விரகவேதனை மிகுந்தபோது ஆற்றாமையால் தனது அருமை நாயகனையும் இகழ்வர் என்க.

"பஞ்சரங்கு தீயின் ஆவி பற்ற, நீடு கொற்றவில்
வெஞ்சரங்கள் நெஞ்சரங்க வெய்யகாமன் எய்யவே!
சஞ்சலம் கலந்தபோது தையலாரை உய்யவந்து
அஞ்சல்; அஞ்சல்; என்கிலாத ஆண்மை என்ன ஆண்மையே"
(இராமாயணம்)

இது, சீதை உரைத்தது. தனக்குக் காட்சி தந்து கரந்து போன இராமன் விரைந்து வந்து தனக்கு அருளவில்லையே என அப்பிராட்டி இதில் இகழ்ந்திருக்கும் அழகைப் பார்க்க.

சலந்த காதலன் பிரியின் காதலி அயலைப் புலந்து கூறுவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை விநயமாலைபால் உணரப்படும்.

## கதை.

விநயமாலை என்பவள் விசாகதத்தன் என்னும் வணிகனுடைய அருமைப் புதல்வி. இவள் பிறந்த அன்று ததாகரர் என்னும் உயர்ந்த முனிவரோடு விசாகன் உரையாடிக் கொண்டிருந்தான். அவர் கணித நூற் புலமையில் சிறந்தவர். இவள் உதயமான போது கோள்கள் நின்ற நிலையைக் கூர்ந்து நோக்கினர்.

இலக்கினாதிபதி ஐந்தாமிடத்திலும், அஞ்சுக்குடையவன் ஒன்ப திலும் அமைந்து நிற்றலால் "இவள் நெஞ்சு நலமுடையவள்; நிறை நலங்கள் யாவும் நிரம்பப் பெற்றவள்; புகுந்த இடம் பெருந்திரு வுடையதாய்ச் சிறந்திருக்கும்;" என இன்னவாறு சாதகம் குறித்து அம்மாதவர் உரைத்தார். பெற்றோன் கேட்டுப் பெரு மகிழ்வடைந்தான். வளமிகுந்திருந்தும் இளமையிலேயே உள வண்மதி யுடையளாய் ஒழுகி வந்தமையால் விநயமாலை என இவள் விளம்பப் பெற்றாள். விநயம் = பணிவு. கலைநிறை மதி போல் இனிது வளர்ந்து இவள் பருவ மடைந்தாள். இளமை நலங்கனிந்து அழகு சுரந்து ஒளி திகழ்ந்திருந்த இவளது உருவ நிலையைக்கண்டு அரசிளங் குமரர்களனைவரும் உளமுருகினின்றார்.

"மின்னைத் திரட்டி மிகப்பிழிந்து சாம்புநதப்
பொன்னை யுருக்கிப் புடமிட்டுப் — பின்னை ஒன்றாய்க்
கூட்டிப் பிடித்துக் குழைத்துமதி நுட்பமெலாம்
காட்டித் தனித்திருந்து கைவருந்தப் — பூட்டியமு
தூறு பருவத் தொரு பெண் ணுருவாக்கிக்
கூறும் அழகைக் குடியேற்றி — வீறு
நலமுற்ற பெண்கள் நலத்தில் தெரிந்து
திலமத்தனை யெடுத்துச் செய்த — நிலைபெற்ற
பிள்ளைக்குதலை மொழிப் பெண்ணழகும் இவ்வழகுக்கு
எள்ளத்தனையும இலை" என்று நிலைநின்று கண்டோர்

நெஞ்சுருகிப்போக இவ் வஞ்சி யிருந்தாள். இவளது நிலையினைக் குபேர மித்திரன் என்னும் வணிகர் தலைமகன் வினவி யறிந்து மனமிகவுருகி மையல் மீக்கொண்டான். அவன் ஏமாங்கத நாட் டில் இராசமாபுரத்தில் அரசு விழை திருவோடமர்ந்து நின்ற வன். அறிவிலும் அழகிலும் சிறநதவன். பெரிது முயன்று இவளை மணஞ்செய்து கொண்டான். அவனது குணநலங்களைக் கண்டு இவள் மனங்களிகூர்ந்து மருவி மகிழ்ந்தாள். உருவம் பரு வங்களிற் சிறந்து ஒத்த சிந்தையராய இவ் இருவரும் உழுவலன் போடு தழுவியிருந்து அளவிலின்பங்களை நுகர்ந்து ஆர்வமீதூர்ந் தார். இவரது இன்ப நுகர்ச்சி காதலுலகில் கைமிகுந்து நின்றது.

"உருத்தெரிதன்மைய; உயிரும் ஒன்று; தம்
அருத்தியும் அத்துணை; ஆபநீரினால்
ஒருத்தியும் ஒருவனும் உடலும் ஒன்றெனப்
பொருத்தினர் இவர் எனப் புல்லினாரரோ"

என்றபடி எல்லியும் பகலும் இடை தெரியாது புல்லி மகிழ்ந்து போகம் நுகர்ந்து இவர் பொங்கி யிருந்தார். இங்ஙனம் இருந்து வருங்கால் அந்நகர் மன்னவன் காரியமாக அவன் மறுபுலம்போக நேர்ந்தது. அந்நிகழ்ச்சியை இவளிடம் உரைக்க அஞ்சித் தோழியரிடம் சொல்லிவிட்டு அவன் மெல்லப் போயினான். அவன் போனதை யறிந்து இவள் புலம்பி வருந்தினாள். நிறங் குலைந்து, நெஞ்சங்கவன்று, உறங்காது இளைந்து இரங்கியிருந்தாள். பாங்கியரும் பிறரும் பரிந்துவந்து நெருங்கி நின்று இப்படிப் பசந்து படலாமா? போனவர் விரைந்து வருவர்; அடங்கியிருங்கள் என ஆற்றித் தேற்றினர். நான் பசந்துள்ளேன் என என்னைப் பழிக்கின்றீரே யன்றி இப் பசப்பு யாரால் வந்தது என ஓராதொழிந்தீர்! அம்மா! நும் உறவும் உணர்வும் அறவும் கொடிய என்று அவர்களை இவள் அழன்று மொழிந்தாள். "இவள் பசந்தாள் என்பதல்லால், அவர் துறந்தார் என்பார் இல்லையே!" எனப் பிரிந்த குலமகளிர் புலந்து மொழிவர் என்பதை உலகம் இவள் பால் உணர்ந்து நின்றது.

பேய்க்கோலம் செய்து பிரிந்தாரைப் பேசலர்யான்
போய்ப்பசந்தேன் என்பர் புறம்.

தலைவி புலந்து மொழிந்தமை இதனால் கூறப்பட்டது.

---

1189. ஓர்ந்த சுநந்தை உடல்பசந்தாள் பின்துணையைக்
கூர்ந்தேன் முனிந்தாள் குமரேசா — சேர்ந்து
பசக்கமற் பட்டாங்கென் மேனி நயப்பித்தார்
நன்னிலைய ராவ ரெனின். (கூ)

இ—ள்.

குமரேசா! பசந்து வருந்திய சுநந்தை கணவனை என் விநயமாக இகழ்ந்து மொழிந்தாள்? எனின், நயப்பித்தார் நன்

னிலையர் ஆவர் எனின் பட்டாங்கு என் மேனி பசக்க என்க.

பட்டாங்கு = பட்டவாறே; நிகழ்ந்துள்ளபடியே என்க.

"பட்டதை யெல்லாம் பட்டாங்கு உணர்ந்து" (பெருங்கதை) "இட்டார் பெரியோர் இடாதோர் இழிகுலத்தோர் பட்டாங்கி லுள்ளபடி" (நல்வழி) இவற்றான் பட்டாங்கு உணர்த்தி நிற்றல் காண்க. பசக்க = பசந்துகிடக்க. வியங்கோள் வெகுளிப்பொருளில் வந்தது. மன் நிலைபேறு தோன்ற நின்றது.

நயப்பித்தார் என்றது காதலனை. பிரியுங்கால் மிக நயமாகப் பேசித் தன்னை வசப்படுத்தி இசையும்படி செய்துபோனமையால் அவனது இயல்பினை இங்ஙனம் எண்ணி யுரைத்தாள்.

நயத்தல் = விரும்பல. நயப்பித்தல் = விருப்பமுறச் செய்தல்.

நல்நிலை = நீதிநிலை. அஃதாவது தன்னைப்போல் பிறரைப் பேணும் தகவுடைமை என்க.

என்னை நயப்பித்துப் பிரிந்தவர் நல்ல நிலையினை அடைவராயின் இப்பொழுது பட்டுள்ளபடியே என்மேனி நிலையாகப் பசந்து படுக என்பதாம்.

நம் தலைவர் மிகவும் நல்லவர்; சொல்லியபடி வந்துவிடுவர்; நீ அல்லலடையாதிரு என்று தோழி ஆற்றித்தேற்றியபொழுது தலைவி மாற்றுரைத்தபடியிது.

ஒன்றும் தெரியாத பேதையைப் பேச்சில் மருட்டி இப்படிப் பேதுறவிட்டுப்போன அவர் நல்ல நிதிநிலையினராயின் யான் இவ்வேதனையுடன் நிறங்குலைந்து இங்குமெலிந்து கிடக்கின்றேன் என்பாள் "நயப்பித்தார் நன்னிலையராவர் எனின் என் மேனி பசக்க" என்றாள்.

பொறுத்திருக்கும்படி தன்னை வற்புறுத்தி ஆற்றுகின்றாளேயன்றி அவரது கொடுமையை எடுத்துக்காட்டி இடித்தறிவுறுத்தி அவரைக் கொண்டுவரவில்லையே என்னும் சினத்தோடு இங்ஙனம் குறித்துரைத்தாள் என்க.

எனக்கு இவ் அல்லலைச் செய்து அகன்று நிற்கும் அவர் நல்லா இருந்தால் சரி என்று பெண்கள் இயல்பின்படி புண்பாட்டோடு தலைவி புலந்து மொழிந்திருக்கும் நிலைமை இதில் ஊன்றி யுணர்ந்து கொள்க.

அகன்ற காதலனை நினைந்து காதலி புலந்து புலம்புவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுநந்தை பால் உணரப்படும்.

### கதை.

சுநந்தை என்பவள் சேதி நாட்டு மன்னனாகிய பானுவர்மனுடைய அருமைத் திருமகள். சுமுகமுடையவள். பொறையும் அடக்கமும் பொருந்தப் பெற்றவள். அழகமைதி போலவே குணநலங்களும் இவளிடம் இனிதமைந்திருந்தன. இசையில் இவள் திசை மெச்ச நின்றாள். யாழ்தழீஇ இவள் பாடுங்கால் கேட்டு நின்றவரனைவரும் பரவசராய்க் கிளர்ந்து நின்றுள்ளார். சரீர நிலைபோலவே சாரீர நலமும் யாரும் வியப்ப இவள்பால் அமைந்திருந்தது. இவளுடைய கண் இதழ் மொழி முதலியன பெண்மை எழிலைப் பெருக்கி நின்றன.

"சீலக் கடல்குளமோ சிற்றோடையோ எனநீள்
நீலப்பெரிய நெடுங்கண்ணாள் — கோலமுந்நீர்க்
கண்ணாற் பவளம் கறுப்போ விளர்ப்போ என்று
எண்ணச் சிவந்த இதழினாள்—விண்ணமுதம்
காறியுமிழ் புளிப்போ கைப்போவென்று இந்திரன்வா
ஆறிவரத் தித்திக்கும் ஒண் சொல்லாள் — வீறியபொன்
மேருச் சிறுபந்தோ? மென்கழங்கோ? என்ன மிகப்
பாரித் தெழுந்த பயோதரத்தாள்." என்று ஒத்தமங்கையரும் உவந்து புகழ உருவ நிலையில் இவள் உயர்ந்திருந்தாள். இவள் பருவ மெய்திக் கன்னிமாடத்தில் மன்னிவருங்கால் அருகேயிருந்த மருமலர்ச் சோலையில் ஒருநாள் உலாவச் சென்றாள். அங்கே வேட்டை நோக்கில்வந்த தீர்க்கபாகு என்னும் அரசிளங் குமரன் இவளைக் கண்டான். அவன் அதிரூபவான்; ஆண்மை

யிற் சிறந்தவன். இவளை நோக்கியவுடனே மையல் மீக்கூர்ந்து மறுகி நின்றான். இவளும் அவன்மேல் ஆர்வமீதூர்ந்தாள். இருவரும் யாழோர் முறையில் ஆரமுயங்கிப் பின்பு பாரறிய மணந்து பேரின்பங்களை நுகர்ந்து ஓருயிரென்ன உடனமர்ந் திருந்தார். போகநுகர்ச்சியில் இருவரும் இணையொத்து மோக முற்றிருந்தமையால் யாதும் நினையாமல் ஆர்வமுற்று நின்றார்.

"பொருவரு மதனன்போல்வான் ஒருவனும், பூவின்மேல் அத்
திருவினுக்கு உவமைசால்வாள் ஒருத்தியும், சேக்கைப்போரில்
ஒருவருக்கு ஒருவர் தோலார் ஒத்தனர்; உயிரும் ஒன்றே;
இருவரது உணர்வும் ஒன்றே; என்றபோது யாவர் வெல்வார்."

என்றபடி நாளும் இவர் மேவி நின்றார். இங்ஙனம் உவந்துவருங் கால் மாளவ தேயத்தில் சுயம்வரம் ஒன்று உயர் நிலையில் நிகழ்ந் தது. அவ் விழவினைக் காண விழைந்து அவன் அங்குப்போகத் துணிந்தான். அப்போக்கினை இவளிடம் சொல்லின் பொறாது வருந்துவள் என்று அஞ்சி மாறுபாடாக வேறுபலகூறி விரைந்து வருவல் என நலம் பாராட்டி நயந்திருத்தி அவன் அகன்று போனான். இவள் பிரிவாற்றாது வருந்தியிருந்தாள். மெலிந்து பசந்தாள். விரகதாபத்தை மிகுத்தலால் நிலவு முதலியவற்றை நிந்தனை செய்தாள்.

"அல்லின் இருள்மாக் கடல் சுவற்றி, அளியன் முலைமேல் அழலூற்றிக்,
கொல்லும் கொடிய வெண்திங்காள்! கொழிக்கும் நினது கதிர் சிறிது
புல்லும் பொழுதில் ஒழியாது புனல்கான்று இந்துகாந்தம் எனும்
கல்லும் உருகும் எனில் உலகில் எவரே ஆவிகரையாதார்?

விளரிச் சுரும்பர் பாண்முரல விரிதண்படலைத் துழாய் மார்பன்
ஒளிருந்திகிரிச் சுடர்ப்படை என் றோராது உள்ளம் வெருவியதோ?
குளிர் வெண்மதியை நஞ்சுயிர்க்கும் கூர்முள்ளெயிற்றுக் கரும்பாந்தள்
எளிதிற் கவர்ந்தும் விழுங்காமல் என்னே வாளா உமிழ்ந்ததுவே?"

என இன்னவாறு இன்னலுழந்து பன்னிப்புலம்பினள். அரு கிருந்த பாங்கியர் இவளது பரிபவ நிலையைக் கண்டு பரிந்து தேற்றினர். "கடமன்னவர் சொன்ன மொழிதவறார்; நன்னிலை

யுடையவர்; முன்னிய கருமம் முடிந்தவுடனே இங்கு அடைந்தருளுவர்; நீங்கள் பசந்து வருந்தாமல் அடங்கியிருங்கள்" என ஆறுதல் கூறி ஆதரித்து நின்றார். அல்லலடைந்துள்ள என்னை ஆறியிரு எனத் தொல்லை செய்கின்றீர்; சொல்லியபடி வராமல் எல்லைகடந்து நிற்கும் அவ்வள்ளலிடம் போய் யாதும் சொல்லுகிலீர்; யான் புல்லிய பசலையடைந்தாலும் அவர் நல்லவராயிருந்தால் சரி என்று இவள் சொல்லி முனிந்தாள். "நயப்பித்தார் நன்னிலையராவர் எனின் என் மேனி பசக்க" என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

எள்ளும் பசலை எனக்களித்தார் ஆதலினால்
வள்ளலென நின்றார் வளர்ந்து.

தணந்து நின்ற தலைவனைக் குறிப்பால் இகழ்ந்து நின்றநிலை இதனால் கூறப்பட்டது.

---

1190. கண்டபசப் பூர்ந்திருந்தும் காந்திமதி பேணிநின்றாள்
கொண்டவனை என்னே குமரேசா — உண்ட
பசபபெனப் பேர்பெறுதல் நன்றே நயப்பித்தார்
நல்காமை தூற்றார் எனின். (ய)

இ—ள்

குமரேசா! பசப்புற்று வருந்தியிருந்தும் காந்திமதி ஏன் தன் நாயகனை நயந்து நின்றாள்? எனின், நயப்பித்தார் நல்காமை தூற்றார் எனின் பசப்பு எனப் பேர் பெறுதல் நன்றே என்க.

நயப்பித்தார் என்றது தலைவனை. பிரியுங்கால் தலைவி மனம் இசையும்படி இதம்படப் பேசினுனதலால் அதனை நினைந்து நயப்பித்தார் என்றாள். நயப்பித்தல் = விருப்புறச் செய்தல்.

நல்காமை = அருளாமை. என்றது பிரிந்துபோனவர் விரைந்துவந்து விருப்பி அளி செய்யாமையை என்க. "நடுங்கு நோய் செய்தவர் நல்காமை நினைத்தலின்" (நெய்தற்கலி 17)

இதில் அது உணர்த்தி நிற்றல் அறிக.

தூற்றல்=பலரும் அறியும்படி பழித்துக் கூறல்.

தன்னைவந்து ஆற்றவில்லை என்று தன் நாயகனைப் பிறர் தூற்றுவாராயின் அதனை நாயகி சகியாள் என்பதும், அங்ஙனம் தூற்ருதபடி ஏற்றவாறு தன் துயர் நிலையை மறைத்திருப்பள் என்பதும் இதில் அவள் உரைத்திருக்குந் திறனுல் உணரலாகும்.

"தன் எவ்வம் கூறினும் நீ செய்த அருளின்மை
என்னையும் மறைத்தாள் என் தோழி அதுகேட்டு
நின்னையான் பிறர் முன்னர்ப் பழிகூறல் தான் நாணி;
நோயடவருந்தியும் நீ செய்த அருளின்மை
ஆயமும் மறைத்தாள் என் தோழி அது கேட்டு
மாயநின் பண்பின்மை பிறர் கூறல் தான் நாணி" (கலி).

காதலனைப் பிறர் தூற்றுவர் என அஞ்சித்தன் நோதலை மறைத்து நின்ற ஓர் காதலி நிலையைத் தோழி அவனிடம் உரைத்திருத்தலை இதில் ஊன்றிப் பார்க்க.

என்னை நயப்பித்துச் சென்ற தலைவர் விரைபவந்து அருள் செய்யவில்லை என்று அயலவர் இகழாதிருப்பாராயின் உடல்முழுதும் பசந்துள்ளாள் எனப் பேர் பெறுதல் எனக்கு மிக இனிதென்பதாம்.

பசலை பாய்ந்து படருழந்தயர்ந்த தலைவியைப்பார்த்து உளமிக இரங்கி "இப்படிப் பதைக்கவிட்டுப் போனுரே! அவர் மனம் என்ன கல்லா? இரும்பா?" எனத் தலைவனைப் பாங்கியர் எள்ளி நின்றபோது அவர்களை நோக்கிக் குறிப்பாக அவள் சொல்லிய படியிது. ஏதோ சிறிது உடல் பசந்தாள் என்னுது பசப்பு மயமாகவே ஆயினுள் எனயான் இகழப்படினும் என் கணவனை உலகம் இகழாதிருக்குமாயின் எனக்கு அந்நிலை மிகவும் நல்லதே என்பாள் "தூற்ருர் எனின் பசப்பு எனப் பேர் பெறுதல் நன்றே" என்ருள், ஏகாரம் தெளிவுதோன்ற நின்றது. யான் என்ன துயரடைந்தாலும் என் அண்ணலை இகழாதீர் என்பதாம். பிரிவினுல் வருந்தித் தான் உருவ நிலை திரிந்தாலும்

தனக்காகப் பரிந்து தன் துணைவனைப் பிறர் குறைகூறின் அதனைக் காதலி பொறுள் என்பது இதனால் உணரலாகும். இது கோவைத் துறையில் தோழி தலைமகளை இயற்பழித்தவழித் தலைவி இயற்பட மொழிந்தது என வரும். இயல் = குணம். படமொழிதல் = குணமுடையராகக் குறித்து மொழிதல்.

"உழைகாதலிக்கும் கரத்தார் நிறைமதியொத்த சங்கக்
குழைகாதிற் பெய்பவர், தென்வெங்கைவாணர் குளிர்சிலம்பில்
மழைகாதலிக்கும் கொடையன்பர் மேற்பிறர் வாயுரைக்கும்
பிழைகாதிற் கேட்பவந்தோ படைத்தான் அயன் பெண்பிறப்பே"
(திருவெங்கைக்கோவை)

"வள்ளம் புனிபுனை கோடீச்சுரேசர் வரைத்தண் பொன்னி
வெள்ளம் சிலதினம் தாழினும் ஆங்குடன் மேவிப் பைங்கூழ்
உள்ளங்குளிர்ந்திடப் பாய்வதுபோல் அன்பர் ஒண்டொடி! நான்
கொள்ளனுர் நீக்கிப் புரப்பான் கருதிக் குறுகுவரே"
(கோடீச்சுரக்கோவை)

தலைவனைப் பிறர் குறை கூறியபொழுது அதனைப் பொறாமல் தலைவி இவற்றுள் எதிர் கூறியிருத்தல் காண்க. என் வள்ளலை எள்ளுவர் வெள்ளறிவினோர் எனவைதிகழ்ந்து, வெள்ளம் சிறிது தாழினும் பின்புவந்து பாய்ந்து பயிரை வளர்த்தல்போல் என் உள்ளம் குளிரவந்து காதலர் என் உயிரை வளர்ப்பர் என உரிமைதோன்ற உரைத்திருக்கும் அருமையை ஊன்றிப் பார்க்க.

"தொடிநடந் திழியச் சாஅயத் தோள் அவர்
கொடுமை கூறினவாயினும், கொடுமை
நல்வரை நாடற்கில்லை தோழி! என்
நெஞ்சிற் பிரிந்ததூஉம் இலரே; தங்குறை
நோக்கம் கடிந்த தூஉம் இலரே;
நிலத்தினும்பெரிதே நேர்ந்தவர் நட்பே" (என்பதும்காண்க)

வளைகள் கழன்றுவிடும்படி தன்மேனி மெலிந்துபடினும் தன்நாதன்மீது யாதும் கோது கூறலாகாதென ஓர் மாது இதில் உரைத்திருத்தல் காண்க.

"உற்றார்க் குரிய உடல்பசந்தால் ஊர் அவரைக்
குற்றம் உரைப்ப தெவன்?"

கொண்டானுடைமை பசந்தால் கண்டோருக்கு என்ன வந்தது? எனப்பண்டோர்தலைமகள்உரைத்துள்ளதும் ஈண்டுணரத்தக்கது.

பிரிவாற்றாமையால் தாம் பசந்து பரிந்திருப்பினும் தம் கொழுநரைக் குலமகளிர் உவந்து புகழ்ந்திருப்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை காந்திமதிபால் உண ரப்படும்.

## கதை.

காந்திமதி என்பவள் சோழ நாட்டிலே மணவூரிலிருந்து அரசுபுரிந்த சோமசேகரன் என்னும் சோழ மன்னனுடைய அருமைத் திருமகள். பேரழகினள். பருவமெய்திய பொழுது இவளது உருவநிலையை நோக்கி "இக்குலமகளை மனைவியாகப் பெறுதற்கு இந்நில வுலகில் யாவனுளன்?" எனக் கண்டவர் யாவ ரும் கொண்டாடி நின்றார். இங்ஙன நின்று வருங்கால் மதுரை யில் சந்திரகுல திலகனுப் அவதரித்திருந்த உக்கிரகுமாரபாண்டி யன் என்னும் அரசிளஞ்சிங்கத்தின் அழகாண்மைகளைக் கேள்வி யுற்று அப்பெருமானே இவ் ஒருமாதுக்கு உரியவனுவனென வுறுதி பூண்டார். அக் குலமகனும் இத் தலைமகளது எழில் நலங்களை வினவியறிந்து உளமிக வுருகினன். இருமுது குரவ ரும் உலகரும் பெருமகிழ்வுற மணவூரில் திருமணம் நிகழ்ந்தது. அங்கியங் கடவுள் அறிகரியாக மங்கலச் சடங்குகள் ஆற்றி இம் மங்கையை அவ் ஏந்தல் செங்கையில் சேர்த்தார்.

"ஆர்த்தன இயங்களெல்லாம்; அமரர் மந்தாரமாரி
தூர்த்தனர்; வேள்விச் செந்தீச் சுழித்தது வலமாய்த் துள்ளி;
வார்த்தன மடவார் நாவின் முளைத்தன வாழ்த்து; மன்றல்
பார்த்தனர் கண்களெல்லாம் பெற்றன படைத்த பேறு. (க)

பொதியவிழ் கடப்பந் தண்டார்ப் புயத்திளங் காளையன்னான்
முதியவர் செந்தீ ஓம்ப, இன்னிய முழங்கக், காந்தி
மதியை மங்கல நாண்பூட்டி வரிவளைச் செங்கைபற்றி
விதிவழி ஏனை மன்றல் வினையெலாம் நிரம்பச் செய்தான்" (உ)

(திருவிளையாடற்புராணம்)

பின்பு பவனி வந்து, அவனி யெலாம் உவந்து தொழத் தன் அணி நகரடைந்து, இப் பெண்ணாரமுதத்தோடமர்ந்து, எண்ணரும் போகங்களை நுகர்ந்து, அவ் அண்ணல் இன்புற்றிருந்தான். இங்ஙனம் இருந்து வருங்கால் வடபுல மன்னரொடு பொருதிடல் கருதிப் பெரும்படையுடன் அவ் அருந்திறலாளன் அகன்று போனான். பிரிவாற்றாமையால் பெருந்துயரோடு இவள் வருந்தி யிருந்தாள். அவனை நினைந்து நினைந்து நெடுமூச் செறிந்தாள். அவன் சென்ற திசையையே நோக்கி இன்று வரும்; இன்று வரும்; என ஏங்கியிருந்தாள். உணவும் துயிலுமிழந்து கணம் ஓர் ஊழியாக் கழித்து உடல் மெலிந்து நிறங்குலைந்து பசந்து படருழந்த இவளது நிலையினைப் பார்த்துத் தோழியரும் பிறரும் துயர் மீக்கூர்ந்தார். "இப் பெண்ணருங்கலம் நீராயுருகி இங்ஙனம் நிலைகுலைந்துழல அம் மன்னர் ஓராதிருந்தாரே! உள்ளன் புடையராயின் வாராதிருப்பாரா? வன்கண்மை தான் என்னே!" என இன்னவாறு பலபன்னித் தூற்றினார். தன் ஆவித்துணையை அயலவர் இகழ்வதை அறிந்து இவள் அகம் புலந்தாள். "யான் பசந்து படினும் எனக்கு மிக இனிதே; என் அழகனை இகழ்தல் இனி உங்களுக்கு அழகன்று" என்று அருகிருந்தவரை இவள் அழன்று மொழிந்தாள். தாம் பசப்புற்று வருந்தினும் தம் கொழுநரை இயற்பழிக்கும்படி குலமகளிர் இசைந்து நில்லார் என்பதை உலகம் இவள் பால் உணர்ந்து நின்றது.

ஏற்ற பசலை எனக்கினிதே என்றுணையைத்
தூற்ற லெவனோ துணிந்து.

கொழுநனை இகழின் குலமகள் பொறாள் என்பது இதனால் கூறப் பட்டது.

---

இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்

பிரிந்த காதலி பசந்து வருந்துவள். அவள் உடம்பு முழுவதும் பசலைபடரும். சாயலும் நாணும் சாராதொழியும். உடற் பசப்பை நினைந்து உள்ளங் கவல்வள். அது விரைந்து படுதலை

வியந்து நிற்பள். கொழுநன் அகன்றவுடனே அது புகுந்தடரும். புல்லியிருந்தகை புடை பெயரினும் பசலை ஒல்லையி லூர்ந்துவிடும். பசப்படைந்து பரிந்து புலம்புவள். அகன்ற துணைவனை யுள்ளே அழன்று கொள்வள். அவனைப் பிறரிகழ்ந்தால் பிழை என மொழிவள் என்பதாம்.

ாகக௯-வது பசப்புறு பருவரல் முற்றிற்று.

# 120-ம் அதிகாரம் தனிப்படர் மிகுதி.

அஃதாவது தனியே நின்று தலைவி துன்பமுறுதல். பிரிந்து போன தலைவர் தன்போல் விரகவேதனையுடையராயின் விரைந்து வந்தருளுவர்; அங்ஙனம் வாராமையால் துன்பமிலராய் அவர் இன்புற்றிருக்க யான் மாத்திரம் இங்குத் தனியே யிருந்து துன் புழக்க நேர்ந்ததே யென்று அவள் துயருறுந் திறங்களை இதில் உணர்த்துகின்றமையால் இது தனிப்படர் மிகுதி என நின்றது. மேல் உடல் பசந்து நிலை திரிந்தபடியை உரைத்தார்; இதில் உளங் கவன்று வருந்தியபர்தலை உரைக்கின்றாராதலால் அதன் பின் இது வைக்கப்பட்டது.

1191. கொண்டான் விழைந்துவந்து கொண்டபின்பே நீலபதி
கொண்டாளின் பெண்ணே குமரேசா — தண்டாதே
தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே
காமத்துக் காழில் கனி. (க)

இ—ள்.

குமரேசா! தான் விரும்பி நின்ற கணவன் விழைந்தமைந்த பொழுது நீலபதி ஏன் மகிழ்ந்து கொண்டாள்? எனின், தாம் வீழ்வார் தம் வீழப் பெற்றவர் காமத்துக் காழ் இல் கனி பெற்றார் என்க.

தாம் என்றது மனைவியரை. வீழ்வார் என்றது கொழுநரை.

காதலிகளால் காதலிக்கப்படுவார் கணவராதலால் அவரைத் தாம் வீழ்வார் என்றார். காதலிகளைத் தாம் என்றது அதிகாரத்தான். என்னை? பிரிவுத் துயரால் மறுகி நிற்கும் அவர்தம் நிலைமையே தலைமையாக இவண் அதிகரித்து வருதலான் என்க.

வீழ்தல் = விரும்பல். விழைவார் என்னாது வீழ்வார் என்றது அவ்வேட்கை வீழ்ச்சியின் விறல்தோன்ற. தேனில் வீழும் வண்டுபோலத் தலைவியர் விழைந்து வீழ்தற்கு நிலையமாய் நிற்றலால் தலைவர் இங்கு "வீழ்வார்" என நின்றார்.

தம் வீழ்ப் பெற்றவர் = தம்மைக் காதலிக்கும் பேற்றை அடைந்தவர். பெற்றவர் கனி பெற்றார் என்றதனால் மற்றவர் அது பெறார் என்பதாயிற்று.

காழ் இல் கனி = கொட்டையில்லாத பழம். காழ் = விதை.

"களர்வளர் ஈந்தின்காழ்கண்டன்ன" (பெரும்பாண்), "கலஞ் சிதையில்லத்துக் காழ் கொண்டு தேற்ற' (கலி), "படு காழ்ப் படுத்துத் தேய்வை யுறீஇக், கலுழி நீக்கும் கம்மியர்" (பெருங் கதை) இவற்றுள் காழ் உணர்த்தி நிற்றல் காண்க.

காமத்தைக் கனி என்றது சுவை பயந்து நிற்கும் அதன் இயல்புணர்ந்து. கனி என்றதனால் அது காய்த்துவரும் மரம் முதலியவும் கருதிக் கொள்க.

"ஏகம் முதற் கல்வி முளைத் தெழுந்து, எண்ணில் கேள்வி
ஆகம் முதற்றிண் பணை போக்கி, அருந்தவத்தின்
சாகம் தழைத்து, அன்பு அரும்பித், தருமம் மலர்ந்து,
போகம் கனி ஒன்று பழுத்ததுபோலும் அன்றே".

(இராமாயணம்)

கல்வி, கேள்வி, தவம், அன்பு, தருமங்களை மரமுதலாகக் குறித்து இன்பத்தைக் கனி என உருவகம் செய்து கம்பநாடர் இதில் அருளியிருக்கும் அருமையை நோக்குக. திருவயோத்தி இன்ப நிலையமாயிருந்தபடியை இது உணர்த்தி நின்றது.

காமம் என்பது அத்துச் சாரியை பெற்று வந்தது.

“ அத்தே வற்றே யாயிரு மொழிமேல்
ஒற்றுமெய் கெடுதல் தெற்றென் றற்றே
அவற்றுமுன் வரூஉம் வல்லெழுத்து மிகுமே” (தொல்காப்பியம்)
இவ் இயல் விதியின்படி “காமத்துக்காழ்” இயைந்த தென்க.

தாம் காதலித்து நின்ற கணவர் தம்மைக் காதலித்துவரப் பெற்ற மனைவியரே காம போகமாகிய விழுமிய கனியை இனிது பெற்றவராவர் என்பதாம்.

பிரிந்துபோன தலைவனை விழைந்து விழைந்து விரகதாபத்தால் மெலிந்திருந்த தலைவியைத் தோழி நெருங்கித் தங்களைப் போலவே அவரும் தங்கள்மேல் பெருங் காதலுடையராதலால் விரைந்துவந்தருளுவர் என ஆறுதல் செய்தபோது அவள் கூறிய படியிது. தான்காதல் கொண்டுள்ளபடி தன்னைக்காதலித்துத் தன் கணவன் வரவில்லை என்று கடுத்து நின்றாள் ஆதலால் தாம் விழ்வாரையும் தம் விழப் பெற்றவரையும் குறித்து மொழிந்தாள். பெற்றவர் பெற்றார் என்றது அப்பேற்றைத் தான் பெறவில்லை என வருந்தி என்க.

காதலன் கைவந்தபோது நேரும் காம போகத்தைக் காழில் கனி என்றாள் தடையாதுமின்றி அடையவளைந்து ஆர்வமொடு முழுவதும் தழுவி நுகரும் அமைதி கருதி.

“காழில் கனியுண் கடுவன் களங்கனியை
ஊழிற் பருகி யுருகுதிரு — மூழிக்
களத்தாதியை மதங்கா! காமக் குழுவி
வளத்தா ரிடம்தேடு வாய்” (மாறனலங்காரம்)

அடிகள் மொழியை முடியில் தாங்கி இது வந்திருத்தல் காண்க.

காதலனைக் கைக்கொண்ட பின்பே காதலி இன்புறுவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நீலபதியால் உணரப்படும்.

## கதை.

நீலபதி என்பவள் சீதரன் என்னும் அரசனுடைய அரு

மைத் திருமகள். அருந்தவத்தால் பிறந்தவள். சிறந்த குண வதி. அறிவு நலனும் உருவப் பொலிவும் இவள்பால் ஓர் தனி நிலைமை எய்தி நின்றன. பருவ மடைந்து கன்னிகாமடத்து இவள் மருவியிருக்குங்கால் அத்திபதி என்னும் அரசிளங்குமரன் இவளது பெருமித நிலைமை வினவி யறிந்தான். அவன் காந் தார நாட்டு மன்னன். இடவயம் என்னும் நகரிலிருந்தவன்; உலகடங்கலும் வென்றவன். கொடையிலும் திறலிலும் அக்கா லத்திருந்தவ ரெவரினும் உயர்ந்தவன். இத்தகைய அவன் இவள்மீது பெரு மோகங்கொண்டு மறுகி நின்று அரிதின் முயன்று முடிவில் மணந்து அளவில் போகங்களை நுகர்ந்து அக மிக மகிழ்ந்தான். அவன் விழைந்தவா றெல்லாம் குழைந்தி யைந்து இன்ப நிலையமா யிவள் இனிதமர்ந்து வந்தாள். இங்ங னம் இருந்துவருங்கால் ஒருமுறை அவன் மறுபுல மன்னர்மேல் பொருதிறங்கருதிப் போக நேர்ந்தது. அப் போக்கில் இவள் ஏக்க மீக்கூர்ந்து இருந்துயருழந்தாள். மாசடைந்த மணிபோல் தேசிழந்து தேம்பியிருந்த இவள் நாரை கிளி பூவை முதலிய பறவைகளைப் பரிந்தழைத்துத் தன் கொழுநனிடம் தூது போய் வரும்படி தொழுது வேண்டினாள். ஒரு நாள் சாளரவழியாக மிருதுவாய் வந்து தன் மேனியில் வீசிய தென்றலை நோக்கி அந்தோ! இந்தவாறு அந்தச் சுந்தரன் மேனியில் தோய்ந்தால் சிந்தை யுருகி இங்குவந்தருளுவரே! என்று மனந்துணிந்து அம் மந்தமாருதத்தை வாழ்த்தி அழைத்தாள்; பலவகையாகப் புகழ் ந்து தன் தலைவனிடம் போய் வருமாறு போற்றி நின்றாள்.

"வாள்மேவும் கண்ணார் வனமுலைமேல் ஆடவர்தம்
தோள்மேல் தவழ்ந்து சுகம் செய்வாய், — கோள்மேவும்
அம்புலியைத் தன்குட்டி யாய்வளர்க்கும் காமம்என்னும்
வெம்புலியை வாலுருவி விட்டிடுவாய், — வெம்பாப்
பழம் நழுவிப் பாலில் விழுந்ததுபோல் மாதர்
கொழுநரைப் போய் வலியக் கூடி — முழுதும்
அவராத்திரியாகாது அன்றைப் பொழுது
சிவராத்திரியாகச் செய்வாய், — யுவராசப்

பட்டம் உனக்குப் பரந்தாமன் கட்டினது உன்
சட்டம் அறிந்தன்றோ தனிமுதலே, — இட்டமுடன்
ஆகமே இன்புறநீ ஆலிங்கனஞ் செய்தால்
ஏமே மோட்சம் என்று செப்பாரோ?''

(தென்றல்விடு தூது)

இன்னவாறு பலபடத் துதித்துத் தென்றலை இவள் தன்றலைவனி டம் சென்றுவர வேண்டினாள். யுவராசப்பட்டம் என்றது பஞ்ச பூதங்களில் ஆகாயம் தலைமையானது; அதற்கு அடுத்தபடியாக வாயு எண்ணப்படுதல் கருதி. வண்ணம் பசந்து எண்ணங் கலங்கி இவ்வண்ணம் புலம்பியிருந்த இவள் அதன்பின் அவனை அயல கலவிடாமல் ஆரமுயங்கி இராகுலன் என ஓர் அருமைப் புதல் வனைப் பெற்றாள். இவளது உள்ளக் காதலை யறிந்து அவ்வள்ள லும் வியந்தான். இவ்வுத்தமியின் புத்திரப்பேற்றை உலகம் போற்றி நின்றது.

"அத்திபதி எனும் அரசன் பெருந்தேவி
சித்திபுரம் ஆளும் சீதரன் திருமகள்
நீலபதி எனும் நேரிழை வயிற்றில்
காலை ஞாயிற்றுக் கதிர்போற் றோன்றிய
இராகுலன்'' (மணிமேகலை)

இதில் இவளது பிறப்பும் சிறப்பும் பேரும் பிறவும் குறிக்கப்பட் டுள்ளன காண்க. இங்ஙனம் பேரரசியாய்ச் சிறந்திருந்த இவள் காதலன் கைபகன்றபோது வருந்திநின்று பின்பு அவன் விழைந் துவந்தவுடன் காமபோகங்களை நுகர்ந்து மகிழ்ந்தாள். தாம் விரும்பி நின்ற காதலர் தம்மை விரும்பிவரப் பெற்றபோதுதான் காமமாகிய காழில் கனியைக் குலமகளிர் கனிந்து நுகர்வர் என் பதை உலகம் இவள் பால் உணர்ந்து நின்றது.

அன்பன் விளைந்துவரும் அவ்வளவே ஆர்வமுற்றாள்
இன்பம் நுகர்வள் இனிது.

தலைவி தனியிருந்து தவித்தமை இதனால் கூறப்பட்டது.

1192. சீராமன் வந்தருளச் சீதையேன் முந்துவந்தாள்
கூரார் நெடுவேற் குமரேசா — நேராக
வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு
வீழ்வார் அளிக்கும் அளி. (2)

இ—ள்

குமரேசா! இராமன் வந்தருளியவுடனே சீதை என் சிந்தை மகிழ்ந்தாள்? எனின், வீழ்வார்க்கு வீழ்வார் அளிக்கும் அளி வாழ்வார்க்கு வானம் பயந்தற்று என்க.

இது, தலைவன் அளியின் தகைமை கூறுகின்றது.

வீழ்வார்க்கு = விரும்பி நின்றார்க்கு; அஃதாவது காதலித்து நின்ற மகளிர்க்கு. வீழ்தல் = விழைதல்.

வீழ்வார்என்றது கணவரை. விழைதலையுடையார் என்றபடி.

அளிக்கும் அளி = அகன்றுபோன காதலன் அளவறிந்து விரைந்துவந்து தலைவிக்கு அருள் செய்யும் தலையளி.

வானம் பயந்தற்று = மழைபெய்தாற் போலும். இங்கு மழையைக் குறித்தது ஒருவகைக் கிழமையான் என்க. என்னை! பொருளீட்டல் முதலிய காரணங்களை முன்னிட்டு மறுபுலஞ் சென்ற தலைவர்கள் பெரும்பாலும் மாரிக்காலத்தில் தம் ஊருக்கு வந்துவிடுவது வழக்கம்; அதனால் பிரிவாற்றியிருக்கும் தலைவியர் அக் கார்காலத்தை எதிர் நோக்கி யிருப்பராதலால் அவ்வழக்கமான நினைப்பின் பயனால்வானம்பயத்தலை இங்குவழங்கினாள்என்க.

"பொருள்தரப் போயினர்ப் பிரிந்த பொய்யுடற்கு
உருள்தரு தேர்மிசையுயிர்கொண்டு உய்த்தலான்
மருள்தரு பிரிவினை மாசுணம் கெடக்
கருட்னைப் பொருவின கால மாரியே" (இராமாயணம்)

பிரிவாகிய கொடிய நாகத்தின் கடியவேகம் கெடக் காலமாரியாகிய கருடன் வந்ததென் இதில் உரை செய்திருக்கு நிலைமை நோக்குக. பருவமழை தருண அளிக்கு ஒப்பாயது.

மேல், தலைவன் விரைந்துவந்த அளவே தலைவி மகிழ்ந்திருப்பள் என்றார்; இதில், அவளது நிலைமையை ஓர் உவமையால் உணர்த்துகின்றார்.

காதலிக்குக் காதலர் வந்து செய்யும் தண்ணளியானது இவ்வுலகத்து வாழ்கின்ற உயிர்கட்கு மழை வந்தருளிய மாண்பு போன்றதென்பதாம்.

பிரிவுத்துயரால் உருகியிருந்த தலைவியை ஒருநாள் தோழி நெருங்கி "என்ன! மழைமுகம்காணாத பயிர்போல் இப்படி மறுகுகின்றாய்; நம் தலைவர் விரைவில் வருவர்; அதுவரை ஆறியிரு" எனத் தேறுதல் கூறுங்கால் இவள் கூறியபடி யிது.

மாந்தர்க்கு மழை எப்படியோ அப்படியே மாதர்க்குத் தம் காதலர் அருள் ஆதாரம் என்பாள் "வீழ்வார்க்கு வீழ்வார் அளிக்கும் அளி, வாழ்வார்க்கு வானம் பயந்தற்று" என்றாள்.

தலைவன் அளியை மழையோடு ஒப்பவைத்தது என்னை? எனின், அதுபருவங்கண்டு பெய்தபொழுது உயிர்கள் உவந்து வாழ்தலும், பெய்யாவழி அவை உய்யாதொழிதலும்போல் அவன் அளவறிந்து வந்து தழுவியபொழுது தலைவி உளமிக மகிழ்தலும், வாராவழி அவள் மறுகி யழிதலும் கருதி என்க.

"வானம், துளிமாறு பொழுதின் இவ் வுலகம் போலும்
நின அளிமாறு பொழுதின் இவ் ஆயிழை கவினே" (கலி 25).

தன் தலைவி நிலையைத் தலைவனுக்கு உணர்த்தி அவன் அயலகலாவகை ஒரு தோழி நிலை செய்தபடியிது. அடிகள் குறிப்பை இஃது அடியொற்றி வந்துள்ளமை யறியலாகும்.

வானம் பயத்தலைத் தன் கோனளிக்கு உவமையாகக்குறித் திருத்தலான் அவனையன்றித் தனக்கு வேறு புகலிடமில்லை என்பது புலன்கொள நின்றது.

"எத்தனையும் வான்மறந்த காலத்தும் பைங்கூழ்கள்
மைத்தெழுந்த மாமுகிலே பார்த்திருக்கும்; மற்றவைபோல்
மெய்த்துயர் வீட்டா விடினும் வித்துவக் கோட்டம்மா! என்
சித்தம் மிக உன்பாலே வைப்பன் அடியேனே"
(பெருமாள் திருமொழி)

தலைவனை நோக்கிக் குலசேகர ஆழ்வார் உரைசெய்துள்ள இதில் மழையைக் குறித்திருக்கும் அழகைப் பார்க்க.

“ விழைவுறு பொருள்தரப் பிரிந்த வேந்தர் வந்து
உழையுற உயிருற உயிர்க்கும் மாதரின்,
மழையுற மாமுகம் மலர்ந்து தோன்றின,
குழையுறப் பொலிந்தன உலவைக் கொம்பெலாம் ”
(இராமாயணம்)

பிரிந்து வருந்தியிருந்த மாதர் தம் காதலர் வந்தவுடன் மகிழ்ந்து நின்றமைக்கு மழை பெய்ய உயிரினங்கள் உவந்து நின்றதை இதில் ஒப்புரைத்திருத்த லறிக. கரிந்து நின்ற மரங்கள் மழையுறச் செழுந்தளிரீன்று கிளர்ந்தெழுந்தனபோல் பிரிந்திருந்த மகளிர் கொழுநர் வர உளங்களி கூர்ந்து விளங்கி நின்றனர் என்ற இதனால் பிரிவிலும் புணர்விலும் அவர் மறுகி மகிழ்ந்திருக்கும் நிலைமை யுணரலாம்.

“ தன்னையே தனக்கொப்பவன் இரதியைத் தளரேல் என்று
இன்னவாறருள் செய்தலும் மகிழ்ந்தடி யிறைஞ்சிப்போய்ப்
பொன்னின்மால் இமயக்கிரி புகுந்தொரு புடையுற்றுள்
வன்னமாமுகில் வரவுபார்த் துறைதரு மயிலேபோல் ”
(கந்தபுராணம்)

இறைவனால் ஒழிந்துபோன தன் கொழுநனது வரவை இரதி எதிர்நோக்கி யிருந்தபடி யிது. இதன்கண்ணும் வானம் வந்துள்ளமை காண்க.

தன் கொழுநனைக் கண்டபோதுதான் குலமகள் உயிர் தளிர்த்து நிற்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சீதைபால் உணரப்படும்.

## கதை.

இராமன் வனம்போக நேர்ந்தபோது சீதையும் உடன் செல்லத் துணிந்தாள். அழகு குடிகொண்டு விழுமிதா யமைந்துள்ள மிருதுவான இனிய திருமேனி கொடிய வனவாசத்திற்குச் சிறிதும் இசையாதென்று அப் பெருமான் இயன்றவரை தடுத்துப் பார்த்தும் இப்பிராட்டி உடன் தொடர்ந்து சென்றாள்.

கணவனைக் கணமும் பிரிந்திருக்கமாட்டாமல் இக் காதலி கருதிச் சென்றதைக் கண்டு அனைவரும் உளமுருகி நின்றார். தான் சொல்லியும் கேளாமல் இம் மெல்லியல் வருவதை நினைந்து அவ் வில்லியும் வருந்தினன்.

" துறந்துபோமெனச் சொற்றசொல் தேறுமோ?
உறைந்த பாற்கடற் சேக்கை யுடன் ஒரீஇ
அறந் திறம்புமென்று ஐயன் அயோத்தியில்
பிறந்தபின்பும் பிரிவில ளாயினாள்" என இவளது உரிமையை வியந்து அருந்தவர்களும் பரிந்திரங்கினர். இங்ஙனம் உழுவலன் போடு தழுவிச் சென்ற இப் பெண்ணரசி பின்பு ஊழ் வலியால் பிரிந்து இலங்கைச் சிறையில் கலங்கி யிருந்தாள். அத் தனி நிலையில் தனது தலைவனை நினைந்து இவள் அடைந்துள்ள துயரங்கள் அளவிடலரியன. சில அடியில் வருவன காண்க.

" துயிலெனக் கண்கள் இமைத்தலும், முகிழ்த்தலும் துறந்தாள்;
வெயிலிடைத் தந்த விளக்கென ஒளியிலா மெய்யாள்;
மயிலியற் குயில் மழலையாள் மானிளம் பேடை
அயிலெயிற்று வெம்புலிக் குழாத் தகப்பட்டதன்னாள்; (க)

விழுதல், விம்முதல், மெய்யுற வெதும்புதல், வெருவல்,
எழுதல், ஏங்குதல், இரங்குதல், இராமனை எண்ணித்
தொழுதல், சோருதல், துளங்குதல், துயருழந் துயிர்த்தல்,
அழுதல் அன்றி மற்றயலொன்றும் செய்குவ தறியாள்; (உ)

அரிதுபோகவோ விதிவலி கடத்தலென் றஞ்சிப்
பரிதி வானவன் குலத்தையும் பழியையும் பாராச்
சுருதி நாயகன் வரும் வரும் என்பதோர் துணிவால்
கருதிமாதிரம் அனைத்தையும் அளக்கின்ற கண்ணாள்; (ங)

ஆவியந்துகில் புனைவதொன் றன்றி வேறறியாள்;
தூவியன்ன மென்புனலிடைத் தோய்கிலா மெய்யாள்;
தேவு தெண்கடலமிழ்து கொண்டு அநங்கவேள் செய்த
ஓவியம் புகையுண்டதே யொக்கின்ற உருவாள்; (ச)

கண்டிலன் கோலம் இளவலும், கனைகடல் நடுவண்
உண்டிலங்கை என்றுணர்ந்திலர், உலகெலாம் ஒறுப்பான்
கொண்டிறந்தமை யறிகிலராமெனக் குழையாப்
புண்திறந்ததின் எரிநுழைந்தா லெனப் புகைவாள்; (ரு)

மாண்டுபோயினன் எருவைகட்கு அரசன்மன்; மற்றோர்
யாண்டை என்னிலை யறிவுறுப்பார்கள்? இப்பிறப்பில்
காண்டலோ அரிதென்றென்று விம்முறும்; கலங்கும்;
மீண்டு மீண்டுபுக்கு எரிநுழைந்தா லெனமெலிவாள்; (சு)

அருந்து மெல்லடகு ஆரிட அருந்தும்? என்று அழுங்கும்;
விருந்து கண்டபோது என்னுறுமோ? என்று விம்மும்;
மருந்துமுண்டு கொல்யான் கொண்ட நோய்க்கென்று மயங்கும்;
இருந்த மாநிலம் செல்லரித்திடவும் ஆண்டெழாதாள்; (எ)

வன்கண் வஞ்சனை அரக்கர் இத்துணைப் பகல்வையார்;
தின்பர் என்னினிச் செயத்தக்க தென்று தீர்ந்தானோ?
தன்குலப் பொறை தன்பொறை எனத் தணிந்தானோ?
என்கொல் எண்ணுவேன்? என்னும் அங்கிராப்பகல்இல்லாள்; (அ)

பெற்றதாயரும் தம்பியும் பெயர்த்தும் வந்தெய்திக்
கொற்றமா நகர் கொண்டிறந்தார்களோ? குறித்துச்
சொற்ற ஆண்டெலாம் உறைந்தன்றி அந்நகர் துன்னான்
உற்ற துண்டெனப் படருழந்து உறுத நோயுறுவாள்." (கூ)

(இராமாயணம்.)

தன் காதலனைக் கருதி யுருகி இவள் மறுகியிருந்தவிதமும், மனநிலைகளும், பிறவும் இவற்றான் ஒருவாறு அறியலாகும். இக்கற்புத் தெய்வம் தனியேயிருந்து படர்மிகுந்து தவித்து நின்ற நிலைகளை இக் கவிப்படங்களில் ஊன்றிநோக்கி யுணர்ந்துகொள்க. இடையறாது நினைந்து கொண்டிருந்தமையால் சில சமயங்களில் இராமனது உருவெளித் தோற்றத்தைக்கண்டு உள்ளங் கரைந்து விரகதாப மிருந்து திங்கள் இரவு தென்றல்களை இவள் கன்றி யிகழ்ந்தாள்.

"கருமேகம் நெடுங்கடல் கார் அனையான்
தருமே தனியேன் எனதாருயிர்தான்
உருமேறுறழ் வெஞ்சிலை நாணொலிதான்
வருமே யுரையாய் வலியார் வலியே! (க)

கல்லாமதியே! கதிர்வாள் நிலவே!
செல்லா இரவே! சிறுகா இருளே!
எல்லாம் எனையே முனிவீர் நினையா
வில்லாளனை யாதும் விளித்திலிரோ? (உ)

தழல்வீச உலாய்வரு வாடைதழீஇ
அழல்வீர் எனது ஆவியறிந்திலிரோ?
நிழல்வீரை யனோருடன் நீர் நெடுநாள்
உழல்வீர்! கொடியீர்! உரையாடிலிரோ? (௩)

பேணும் உணர்வே, உயிரே, பெருநாள்
நாணின்றுழல்வீர்! தனி நாயகனைக்
காணுந்துணையும் கழிவீரலிர்! நான்
பூணும் பழியோடு பொருந்துவதோ? (௪)

என்றென்றுயிர் விம்மி இருந்தழிவாள்
மின்றன்னு மருங்குல் விளங்கிழையாள்
ஒன்றென்னுயிர் உண்டெனின் உண்டு இடர்; யான்
பொன்றும் பொழுதே புகழ்பூணும் எனா" (௫)

இன்னவாறு பிரிவாற்றாமல் பேதுற்றுப் புலம்பி அலமந்து இறுதியில் இறந்துபோகத் துணிந்தெழுந்தாள். அவ் வமயம் அனுமான் பாய்ந்து ஆறுதல் கூறச் சிறிது தேறியிருந்தாள். ஒரு மாதத்துள் தனது நாயகன் அங்கு வரவில்லையானால் தன் பிராணனைக் காணமுடியாதென ஆணைகூறி அவனை அகல விடுத்தாள்

"திங்கள் ஒன்றில் என் செய்தவம் தீர்ந்ததால்
இங்குவந்திலனே எனின், யாணர் நீர்க்
கங்கையாற்றங்கரை அடியேற்குத் தன்
செங்கையால் கடன் செய்கென்று செப்புவாய்"

இங்ஙனம் தன் உள்ளக்கிடக்கையை உறுதிபெற வுரைத்து உயிரொடுங்கி யிருந்தாள். பின்பு இராமன் வந்து அரக்கர் குலத்தை அடியோடறுத்து இராவணனைக் கொன்று வெற்றியோடு விளங்கிநின்று இவளைச் சிறைமீட்டினன். மீண்டுவந்து அவ் ஆண்டகையைக் கண்டபொழுது இவளடைந்த மகிழ்ச்சியை யார் சொல்லவல்லார்?

"எச்சில் என்னுடலுயிர் ஏகிற்றேயினி
நச்சிலை என்பதோர் நவையிலாள் எதிர்
பச்சிலை வண்ணமும் பவளவாயுமாய்க்
கைச்சிலை ஏந்திநின் றதனைக் கண்ணுற்றாள்.

மானமீது அரம்பையர் சூழ வந்துளாள்
போனபே ருயிரினைக் கண்ட பொய்யுடல்
தானது கவர்வுறுந் தன்மைத் தாமென
ஆனனங் காட்டுற அவனி எய்தினாள்;

பிறப்பினும் துணைவனைப் பிறவிப் பேரிடர்
துறப்பினும் துணைவனைத் தொழுது நான் இனி
மறப்பினும் நன்று இது மாறு வேறுவீழ்ந்து
இறப்பினும நன்றென ஏக்கம் நீங்கினாள்.

இராமன் நோக்கியருளியது.

கற்பினுக்கு அரசினைப், பெண்மைக் காப்பினைப்,
பொற்பினுக்கு அழகினைப், புகழின் சேக்கையைத்,
தற்பிரிந்தருள்புரி தருமம் போலிவை
அற்பினத் தலைவனும் அமைய நோக்கினான்" (மீட்சிப்படலம்)

அவ் வீரமூர்த்தி பேரார்வத்தோடு நோக்கியருளியபோது இவள் ஏக்கம் நீங்கி இன்பமீக் கூர்ந்தாள். அதன்பின் அயோத்தியை அடைந்தார்; அளவிலினபங்களை அனுபவித்திருந்தார். பிரிந்திருந்தகாலை வருந்திநின்ற இவள் பிராண நாயகன் வந்து உவந்தருளிய வுடன் மழை கண்ட பயிர்போல் உயிர் மகிழ்ந்து கொண்டதை நோக்கி அனைவரும வியந்து புகழ்ந்தார். "வீழ்வார்க்கு வீழ்வார் அளிக்கும் அளி வாழ்வார்க்கு வானம் பயந்தற்று" என்பதை உலகம் இவள்பால் உணர்ந்துநின்றது.

மழையிழந்த மென்பயிர்போல் வாடும் கொழுநன்
உழையிழந்த போதேன் னுயிர்.

தலைவியின் உயிர்நிலை இதனால் கூறப்பட்டது.

1193. வீழுந்தமதன் வந்தபின்பே மெல்லிரதி வாழ்வுவந்து
சூழ்ந்துநின்றாள் என்னே குமரேசா—சேர்ந்துதாம்
வீழுநர் வீழப் படுவார்க் கமையுமே
வாழுநம் என்னுஞ் செருக்கு. (௩)

இ—ள்.

குமரேசா! தான் விழைந்திருந்த மதன் விழுந்தபோது தன் வாழ்வினை இகழ்ந்துநின்ற இரதி அவன் எழுந்தவுடன் ஏன் உவந்துநின்றாள்? எனின், வீழுநர் வீழப்படுவார்க்கு அமையுமே வாழுநம் என்னும் செருக்கு என்க.

இது, காதலி வாழ்க்கைகாதலன் கையிலுள்ளதென்கின்றது.

வீழுநர் என்றது கணவரை. மனைவியர் விழைந்து நிற்றற்கு உரியவர் என்பதாம். வீழப்படுவார் என்றது மனைவியரை. கணவரால் விழையப்படுவார் என்க. செருக்கு=மனக்களிப்பு.

மேல், உலகிற்கு மழைபோலக் காதலிகளுக்குக் காதலர் ஆதாரம் என்றார்; இதில், அவரது உயிர்வாழ்க்கை அவர் கையிலுள்ளதென்கின்றார்.

தாம் விரும்பும் கணவரால்விரும்பப்படு மனைவியர்க்கே இன்புற வாழுவோம் என்னும் களிப்பு இனிது இயையும் என்பதாம்.

பிரிந்துபோன நாயகன் விரைந்து வராமையால் வருந்தியிருந்த நாயகி ஒருநாள் தன் வாழ்க்கையை இகழ்ந்து மொழிந்தபடியிது. இன்பமாயினிது வாழவேண்டுமென்று தான் எண்ணியிருந்த எண்ணமெல்லாம் தன் கொண்கன் வந்து அன்பு செய்யாமையால் அழிந்துபோயதென உளமுடைந்து மொழிந்து நின்றாளாதலால் "வாழுநம் என்னும் செருக்கு வீழுநரால் அமையும்" என்றாள். அவ் அமைவு எனக்கு அமையாமையால் இனி அமைந்து வாழமுடியாதென்பதாம். வீழுநர் விரைந்து வீழாராயின் வீழப்படுவார் சிறந்து வாழார் என்பது குறிப்பு.

காதலனைக் காணுவழி காதலி உயிர் வாழாள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இரதிபால் உணரப்படும்.

## கதை.

இரதி என்பவள் மன்மதனுடைய இனிய மனைவி. உருவ அமைதியில் எவரும் தனக்கு நிகரில்லாதவள். அழகுக்கு அதி தேவதையாகிய மதனனும் இவள்பால் பெருமோகமுடையனும் மருவி நின்றான் என்றால் இவளது பேரெழில் நிலையை யாவர் சொல்ல வல்லார்? உயிரும் உடலும்போல் ஒருமை யெய்திக் காம போகங்களின் கனிந்த நலங்களை உவந்து நுகர்ந்து உயர்ந்த நிலையில் இவ் இருவரும் விளங்கி யிருந்தார். இந் நிலவுலகில் இளமை எழில்களில் சிறந்து உழுவலன்போடு தழுவி வாழும் சதிபதிகளைக் கண்டால் "இவர் இரதியும் மன்மதனும்போ லிருக்கிறார்கள்" என இவரை ஒப்பெடுத்துக் காட்டி யாண்டும் உரைத்து வருகின்றனர். இதனால் இவரது உரிமையும் பெருமையும் உணரலாகும். ஆண் பெண் என்னும் இருதிறத்தார்க்கும் உருவ நிலையில் தனி எல்லையாய் நின்று அரிய இன்பங்களை அனுபவித்து இவர் இனிது வாழ்ந்துவந்தார். இங்ஙனம் இருந்து வருங்கால் சிவபெருமானின் மோன நிலையைக் கலைக்கும்படி வானவர் வந்து காமனை வேண்டினர். அவன் துணிந்தெழுந்தான். இவள் பரிந்து தடுத்தாள். யான் விரைந்து வந்து விடுவென், சிறிது அமர்ந்திரு; என ஆற்றி விடுத்து அவன் அடலோடு சென்றான். சென்ற அவன் அப் பொன்று முதல்வனால் பொன்றி மடிந்தான். அவன் அழிந்ததை யறிந்தவுடனே இவள் அலறி விழுந்தாள். அலமந்து புரண்டாள்; அயர்ந்து புலம்பினள். அன்று இவள் புலம்பினவற்றுள் சில இதனடியில் வருவன காண்க.

"செம்பதுமை திருக்குமரா! தமியேனுக்கு ஆருயிரே! திருமால் மைந்தா!
சம்பரனுக்கு ஒரு பகைவா! கன்னல் வரிச் சிலை பிடித்த தடக்கை வீரா!
அம்பவளக் குன்றனைய சிவன் விழியால் வெந்துடலம் அழிவுற்றாயே!
உம்பர்கள்தம் விழியெல்லாம் உறங்கிற்றோ? அயனரும் உவப்புற்றாரோ?

முன்னாளிற் புரமூன்றும் அட்டவன்பால் பொரப்போதல்முறையோ?என்று
சொன்னாலும் கேட்டிலையே! அமரர்பணி புரிவதுவே துணிந்திட்டாயே!
உன்னாகம் பொடியாகிப் போயினதே! இதுகண்டும் உய்வாருண்டோ?
என்னாவியாகிய நீ இறந்த பின்னும் யான் தனியே இருப்பதேயோ?,

மாறாகப் பரமன்விழி, நின்றாற்றலிலதாக, மற்றுன்மெய்யும்
நீறாக, விண்டெல்லாம் நெருப்பாகக் கவலைவிண்ணோர் நெஞ்சத்தாக
ஆறாதபெருந்துயரம் எனக்காக, எங்கொளித்தாய்! அருவாயேனும்
கூறாயோ? வறிதிருந்தாய் என்கணவா! யான்செய்த குறையுண்டோதான்?

வில்லால்முப்புரம்எரித்தபரம்பொருள் யோகந்தவிர்க்கவேண்டில்விண்ணோர்
எல்லாரும்இறந்தனரோ? என்கணவா! நீயோதான் இலக்காநின்றாய்
கொல்லாதுபோலவுனைக் கொன்றனரே! என்னுயிர்க்குங் கொலைசூழ்ந்தாரே
பொல்லாதபேர்க்கு நன்றிசெய்வதுதம் உயிர்போகும் பொருட்டேயன்றோ.

என்னபவம்செய்தேனோ? என்போல்வார்தமக் கென்ன இடர்செய்தேனோ?
முன்னையுள விதிப்பயனை யறிவேனோ? இப்படியே முடிந்ததையோ!
கன்னல் வரிச்சிலைபிடித்த காவலவோ! தமியேனைக் காத்திடாயோ?
வன்னிவிழி யாவுடைய பெருமானை நோவதற்கு வழக்கு ஒன்றுண்டோ?

பொன்செய்தார் முடிகாணேன்; அழகொழுகுந் திருமுகத்துப் பொலிவு
காணேன்; மின்செய்பூண் அணிகுலவும் புயங் காணேன்; அகன் மார்பின்
மேன்மை காணேன்; கொன்செய்பூங் கணைகாணேன்; சிலை காணேன்;
ஆடல்புரி கோலங் காணேன்; என்செய்வேன்? என் கணவா! என்னை
யொழித் தெவ்விடத்தே யிருக்கின்றாயே?

அந்நாளில் அழற் கடவுள் கரியாக வானவரோ டயன்மால் காணப்
பொன்னுரு மங்கலநாண் பூட்டியெனை மணஞ்செய்து புணர்ந்த காலை
எந்நாளும் இனியுன்னைப் பிரியலமென்றே வாய்மை யிசைத்தாய்! வேனில்
மன்னவோ! மன்னவோ! எனைத் தனியே விட்டேகல் வழக்கோசொல்லாய்?

போவென்று வரவிட்ட தேவரெல்லாம் பொடியாகிப் போன உன்னை
வாவென்று கடிதெழுப்ப மாட்டாரோ? நின் தாதை வலியன் என்பார்
ஓவென்று நானிங்கே அரற்றிடவும் வந்திலனால்; உறங்கினனோ?
வேவென்று நின் சிரத்தில் விதித்திருந்தால் அவரையெலாம் வெறுக்க
லாமோ?

நேயமொடு மறைபயிலுந் திசைமுகனைப், புரந்தரனை, நின்னைத்தந்த
மாயவனை, முனிவர்களை, யாவரையும், நின்கணையால் மருட்டிவென்றாய்
ஆயதுபோல் மதிமுடித்த பரமனையும் நினைந்திவ்வாறழிவுற்றாயே!
தீயழலின் விளக்கத்திற் படுகின்ற பதங்கத்தின் செயலிதன்றோ?

தண்பனிநீர்ச் சிவிறி கொண்டு விளையாடி, மலர்கொய்து, தண்கா நண்ணி,
எண்படும்பூம் பள்ளிமிசைச் சிறுதென்றல் கவரிகளா யினிது செல்ல
வெண்பளித நறுஞ்சாந்தச் சேறாடி இருவருமாய் விழைந்து கூடிக்
கண்படைகொண்டமர்வாழ்வும் பொய்யாகிக் கனவுகண்ட கதையாயிற்றே;

மருகென்றே அவமதித்த தக்கனார் வேள்வி செற்ற வள்ளல் தன்னைப்
பொருகென்றே தேவரெலாம் விடுத்தாரே அவராலே பொடிபட்டாயே;
எரிகின்றேன் உனைப்போல ஆறாத பெருந்துயரால் யானும் அங்கே
வருகின்றேன்; வருகின்றேன்; என்னுயிரே எனப்புலம்பி வருந்துகின்றாள்."
(கந்தபுராணம்.)

இன்னவாறு தன் கணவனை நினைந்து இவள் கதறியழுதாள். இதனால் இவளது கலை பயில் தெளிவும், உலகிய லறிவும், அலகி லின்பங்களை அனுபவித்திருந்தவிதமும், கொழுநன்பால் கொண்டுள்ள உழுவலன் புடைமையும் பிறவும் நன்குணரலாகும். அழி துயரோடு இங்ஙனம் அலமந்து கிடந்த இவள் இடையே சிறிது தேறி எழுந்தாள். பரமனை யடைந்து அடியில் விழுந்து தனக்கு மங்கலப் பிச்சை தந்தருளும்படி மறுகி வேண்டினாள். அப் பெருமான் இரங்கியருள மன்மதன் எழுந்துபோந்தான். அவனை உவந்து தழுவி இவள் உயிர் தளிர்த்து நின்றாள். காதலன் மறைந்தவுடனே இறந்துபோக வேண்டுமென்று துணிந்துநின்ற இவள் அவன் எழுந்து வரத பின் உயிர் வாழ்க்கையை மிகவும் விழைந்துகொண்டாள். இன்புற இனிது வாழ்வோம் என்னும் செருக்குக் கணவராலேதான் மனைவியர்க்கு அமையும் என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

இன்புற்று மாதர் இருப்பதெலாம் தங்கொழுநர்
அன்புற்று வந்த அளவு.

தலைவியின் வாழ்க்கை நிலை இதனால் கூறப்பட்டது.

---

1194. அன்று துணைவன் அழல இரேணுகையேன்
குன்றி யுளைந்தாள் குமரேசா—என்றுமே
வீழப் படுவார் கெழீஇயிலர் தாமவீழ்வார்
வீழப் படாஅ ரெனின். (௪)

இ—ள்.

குமரேசா! கணவன் வெறுத்திகழ்ந்தபோது இரே ணுகை ஏன் வருத்தமிகுந்தாள்? எனின், தாம் வீழ்வார் வீழப் படார் எனின், வீழப்படுவார் கெழீஇயிலர் என்க.

வீழப்படுவார் என்றது மனைவியரை. கொழுநரால் விரும்பப் படுவார் என்பதாம். அல்லது குண நலங்களால் சிறந்தவர் என்று உலகத்தாரால் விரும்பிப் போற்றப்படுவார் எனினுமாம்.

கெழீஇ இலர்—பொருந்தி யிரார். அஃதாவது நன்கு மதிப்போடு அமைந்திரார் என்பதாம். கெழுமுதல் என்பது கெழீஇ என அளபெடுத்து நின்றது. கெழுமுதல = பொருந்துதல், விருப்புதல். "கெழீஇய அவரைக் கிளந்துடன் போக்கி" (பெருங்கதை), "கெழீஇயினுள் கேள்வி நல்யாழ்க் கிளைநரம் பனைய சொல்லாள்" (சிந்தாமணி), "பிறங்குமலை கெழீஇய நாடு" (புறம் 232), "சின்மொழி ஐம்பாற் பின்னொடு கெழீஇய" (கலி 125) "கிளைஞருங் காயிடைக் கெழீஇய துண்டுகொல்" (பாகவதம் 1,6-21) "அவரொடுங் கேழீஇய நட்பைவேட்கிற்பாய்" (இராமாயணம்) இவற்றுள் கெழீஇ உணர்த்திநிற்றல் காண்க.

தாம் என்றது தலைவியரை. தாம் வீழ்வார் = தலைவியர் விரும்பும் தலைவரால். வீழப்படார் எனின் = தலைவிகள் விரும்பப் படாராயின். அளபெடை இரண்டனுள் முன்னது இன்னிசைதர நின்றது; பின்னது இசைநிறைக்க வந்தது. "புது நலம் பூவாடி யற்றுத் தாம் வீழ்வார் மதி மருள நீத்தக் கடை" (கலி 147). வண்டு தேன் நுகர்ந்துபோகப் பூ வாடியதுபோல் தலைவன்பிரிந்து போயின் தலைவி மெலிந்தயர்வள் என்னும் இதில் வீழ்வார் வந்துள்ளமை காண்க.

மேல், மனைவி வாழ்வு கணவன் கையிலுள்ள தென்றாள்; இதில், அவன் விழைந்துகொள்ளானாயின் அவள் இழிந்துபடுவள் என்கின்றாள்.

தாம் விழைந்துள்ள கணவரால் விரும்பப்படாராயின் விருப்ப முறுந் தலைவியரும் வெறுப்பினராவரென்பதாம்.

குறித்த காலத்தில் வராமல் தலைவன் தாமதித்து இருந்ததனால் வருத்தமீக்கூர்ந்து தன் வாழ்க்கையை வெறுத்துத் தன்னை யிகழ்ந்திருந்த தலைவியைத் தோழி நெருங்கி உங்கள் குணநலங்களை யறிந்து "கற்புக்கரசி; பொற்பினுக்கு அணி; பொறைக்கு

இறை, புகழின் சேக்கை " என உலகத்தாரெல்லாரும் தங்களை உவந்து புகழ்கின்றார்; இங்ஙனம் புகழ்ந்து போற்றப்படுகின்ற தாங்கள் இவ்வாறு இகழ்ந்துகொள்ளல் சரியா? சிறிது பொறுத் திருங்கள் என்று உரைத்துநின்றபோது அவளை நோக்கி இவள் உரைத்தபடியிது. நல்லவள் என்று எல்லாராலும் நான் புகழப் பட்டாலும் என் நாயகன் என்னை விரும்பிக்கொள்ளானுயின் அப் பாட்டால் யாது பயன்? "கொண்டவன் இகழ்ந்தால், கண்ட வர் இகழ்வர்" என்ற பழமொழிப்படி யாவரும் உள்ளே இழி வாகவே நினைப்பர்; ஆகவே என் இருப்பு மிகவும் வெறுப்பிற் குரியதே என வெறுப்போடுரைக்கின்றாளாதலால் "வீழ்வார் வீழப்படார் எனின், வீழப்படுவார் கெழீஇயிலர்" என்றாள். உலகியல்மேல் வைத்துத் தனது நிலைமையை இங்ஙனம் உரைத்து நின்றாள். முதலில் வீழப்படுவார் என்றது இனிமைப் பண் புடைமையால் எவராலும் விரும்பப்படுதல் கருதி. நாயகன் விரும்பாவழிப் பின்பு யாரும் நண்பாய் விரும்பி நில்லார் ஆதலால் கெழீயிலர் என்றாள். "கெழியின்மை கேட்டால் அறிக" (நான் மணிக் கடிகை), "கிளக்கலும் மன்னவன் கெழீஇ யானரோ" (பாகவதம்) கெழி என்னுஞ் சொல் நட்பையும், உள்ளக் கிளர்ச்சி யையும் முறையே இவற்றுள் உணர்த்திநிற்றல் காண்க.

> "உழுது பல்வளம் உய்த்த மழவிடை
> கிழவு பட்டிடிற் போற்றல் கெழீஇயதே;
> விழுமெய்யாங்கு முதிர்ந்திடின் வேட்டதன்
> மழலை மாதரும் மைந்தரும் போற்றிலார்"

இதன்கண்ணும் அஃதுணர்த்திநிற்றலை அறிந்துகொள்க.

குலமகளிர் மதிப்புறுதலும், மகிழ்ந்திருத்தலும் தம்மைக் கொண்ட தலைவர்கள் கொண்டாடி வருமளவே; அப்பேறு எனக்கு இல்லை ஆதலால் இனி எவ்வாறு யான் இனியளாவேன் எனத் தனியிருந்த தலைவி இவ்வாறு தயங்கி நின்றாள் என்க.

கணவன் விழைந்துவந்து உவந்து விரும்பி ஆதரியானுயின் மனைவி வருந்தி அயர்வள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இரேணுகைபால் உணரப்படும்.

## கதை.

இரேணுகை என்பவள் இரேணு என்னும் சூரியகுலத்து அரசனுடைய அருமைத் திருமகள், தன்னிகரில்லாத் தனி எழிலுடையவள். இவளது அழகு அறிவு அமைதி பொறை நிறை முதலிய குணநலங்களை நோக்கி அமரமங்கையரும் அதிசயித்து நின்றனர். அகநிலையிலும் புறநிலையிலும் இங்ஙனம் பெருநலனோடு நிலவி நின்ற இவள் பருவமெய்தி இனிய மணி மாளிகையில் தனியமர்ந்து வருங்கால் ஒருநாள் சமதக்கினி என்பவர் கண்டார். அவர் இரிசிக முனிவருடைய புதல்வர்; விசுவாமித்திரரோடு உடன் பிறந்த கௌசிகையின் வயிற்றில் பிறந்தவர்; கடும் பிரமச்சரிய விரதத்தைக் கைக்கொண்டு, நெடுங்காலம் குருகுல வாசம் செய்து, அரிய கலைகள் பலவும் பயின்று, ஞான சீலராய் அகமுக நிலையில் அமைதியுற்றிருந்தார்; அப்படியிருந்த அவரது உள்ளம் இவளைக் கண்டவுடனே கதிர்முகம் கண்ட கமலம்போல் கட்டவிழ்ந்து கரைந்துநின்றது. இவளும் அவரை ஆர்வத்தோடு நோக்கி அகங் குழைந்து நின்றாள். பின்பு தந்தையறிந்து உலகறிய இவளை அவருக்கு மணஞ்செய்து தந்தான். இவளோடமர்ந்து இன்பம் துய்த்து வருங்கால் இனிய புதல்வர் சிலர் பிறந்தார். இறுதியில் திருமாலின் கலையாய் ஒரு திருமகன் தோன்றினன். அவன் பரசுபாணியாய் நிலவி நின்றதால் பரசுராமன் என்று பெயரிட்டு இவ் அரசகுமரியோடு அகமகிழ்ந்திருந்தார். இங்ஙனம் ஆர்வமீதூர்ந்து அறநிலை வழாமல் காமபோகங்களைக் கனிந்து நுகர்ந்து வருங்கால் ஒருநாள் தண்ணீர் கொண்டுவரக் கங்காநதிக்கு இவள் சென்றாள். அவ்வமயம் அங்குச் சித்திரரதன் என்னுங் கந்தருவன் தன் காதலிகளோடு வந்து நீராடிக்கொண்டிருந்தான். அவன் அதியற்புதமான கட்டழகன். அவனைக் கண்டவுடனே இப்படியும் ஒரு பேரழகன் உளனோ? என்று இவள் பெரு வியப்புற்றுப் பேதுறலானாள். பின்பு, சீ! இது என்ன நெஞ்சு! என முன்னி யிகழ்ந்து தன்னிலை தெளிந்து தண்ணீர்கொண்டுபோனாள். நித்திய விதிப்படி மனையில் ஓமம் செய்து கொண்டிருந்த அவர் இவ்வளவு

தாமதம் என்ன? என இவளைச் சினந்து கேட்டார். இவள் தியங்கி நின்றாள். அவர் நிகழ்ந்ததை யறிந்து நெஞ்சுகனன்றார்; இவளைக் கொன்றுவிட வேண்டுமென்று கொதித்தெழுந்தார். அடுத்திருந்த பிள்ளைகளை அழைத்தார்; உள்ளம் பிழைத்த இவள் உயிர் பிழைத்திருத்தல் ஒல்லாதாதலால் கொன்றொழிமின் எனக் கூறி நின்றார். தாய் என அஞ்சி அச்சேயர் அகன்றார். முடிவில் இளைய மகனாகிய பரசுராமனைப் பார்த்து "என் சொல்லைக் கடந்த இப்பிள்ளைகளோடு இவளையும் கொல்லடா" என்றார். அவன் ஒல்லை யெழுந்தான்; தந்தை சொல்லியபடியே துணிந்து கொன்று அவரைத் தொழுது நின்றான். அவர் உவந்து தழுவி என் உரை கடவாமல் உறுவினை யாற்றிய ஓ அருமை மகனே! உனக்கு யாது வேண்டும் என அவனை வேண்டிநின்றார். அவன் வேறு யாதும் வேண்டாமல் இறந்தவரனைவரும் எழுந்து வரவேண்டும் என்றான். அவர் அவ்வாறே ஆகுக என்றார். இறந்தவரெல்லாரும் உறங்கினவர்போல் விரைந்தெழுந்தார். தந்தையின் தவ மகிமையையும், தனயனுடைய அறிவாண்மைகளையும் வியந்து அனைவரும் புகழ்ந்தார்.

"முத்தழற் கருமம் தாதை முயலுவான் அறல் வேட்டு, அன்னை
தத்துவெண்டிரை நீர்க் கங்கை சார்ந்தனள்; வானில் வாழும்
மைத்தடங் கண்ணரோடு மருவிநீர் விளையாடுற்ற
சித்திரரதனைக் கண்டாள் தெருமரல் உளத்திற் கொண்டாள். (௧)

அன்ன கந்தருவற்கண்டாங்கு ஆசையுற் றயர்ந்து நிற்பாள்
உன்னினள் ஓம காலம் ஒழிந்ததென் றோடி வந்தாள்
முன்னுற முனிவனேக்கி முனிந்து வெம்பிழை செய்நும்மோய்
என்னுமிங் கிவளைக் கொல்மின்! என்றலும் கேட்ட மைந்தர்; (௨)

தாயையாம் கொல்லோம் என்று தாழ்த்தன ராகத், தாய் என்று
எயரேணுகையை, இப்போழ்து எம் முறை இகழ்ந்த நின்றன்
நேயமார் துணைவர் தம்மை, நீ செகுத் திடுதி என்னத்,
தூயமாதவத்தோன் சொல்லத் துணித்தனன் பரசுராமன்; (௩)

தன்னுரை வழாதமைந்தன் தனைநனி யுவந்து தாதை
உன்னுளம் விழைந்தது என்கொல்? உதவுதும் பெறுதி என்ன
இன்னெழிற் பரசுராமன் இறந்தவர் பிழைப்ப என்னின்
மன்னிய திறப்பென்று எண்ணாது இருப்ப நீ வரம் ஈ என்றான்; ( )

மைந்தன் அங்கு உரைத்த வண்ணம் மாதவன் அருளமாய்ந்தோர்
உய்ந்தனர் எழுந்தார் உற்ற வுறக்கம் நீத் தெழுந்தாரேபோல்
தந்தையும், தாயும், சாற்றுந் தம்முனென் றுரைத்துளோரும்
அந்தமில் உவகை பூப்ப அமர்ந்தனன் கணிச்சியாளன்" (பாகவதம்)

மேல் நிகழ்ந்த வுண்மையைச் சுக முனிவர் பரிட்சித்து மன்ன னிடம் இவ்வாறு குறித்துரைத்துள்ளார். அழகன் என்று பொது நோக்கோடு பார்த்ததற்கே இந்த இழவு நேர்ந்ததே! குறிப்போடு நோக்கி மேலும் கடந்தவர்க்கு விளைந்துவரும் கேடு தான் யாதோ? என்று அக் காலத்திருந்த குல மகளிர் பலரும் இவளது நிலையினையறிந்து உளமறுகி நின்றார். மாண்டு விழுந்து மீண்டெழுந்த பின்னும் இவளை வேண்டி ஆதரியாமல் அவர் விலகி நின்றார். துணைபிரிந்த மான்போல் தனியே இவள் துயருழந் திருந்தாள். உற்றவர் கைவிடின் ஊரவர் இகழ்வரே என இவள் உளமிக மறுகினாள். பின்பு மைந்தன் வேண்ட அவர் வந்து மருவிக்கொண்டார். இவள் மகிழ்ந்திருந்தாள். தாம் வீழ்வரால் வீழப்படார் எனின் நல்ல குல மகளிரும் நலம் இலரென அல்ல லடைந்து அலமருவர் என்பதை உலகம் இவள் பால் உணர்ந்து நின்றது.

கொண்டான் விழைந்துவந்து கொள்ளானேல் கொண்டவளைக்
கண்டார் இகழ்வர் கழித்து.

உடையவன் கழித்தால் உலகமும் பழிக்கும் என்பது இத னல் கூறப்பட்டது.

1195. காதலன்றன் காதலைமுன் காணமல் கண்ணகியாம்
கோதை நொந்தாள் என்னே குமரேசா—ஆதரவாய்
நாங்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ
தாங்காதல் கொள்ளாக் கடை. (ரு)

இ—ள்.

குமரேசா! தன் கணவன் தன்பால் காதல்கொள்ளவில்லை என்று கண்ணகி ஏன் நோதல் கொண்டாள்? எனின், நாம் காதல்

கொண்டார் நமக்கு எவன் செய்பவோ தாம் காதல் கொள்ளாக் கடை என்க.

இது, ஒருதலைக் காதல் மிகுதுயர் என்கின்றது.

நாம் என்றாள் தோழியையும் தழுவி. தாம் என்றது தலைவனை. தான் என்னாது தாம் என்றது மரியாதை தோன்ற.

எவன் செய்பஓ=என்ன சுகத்தைச் செய்வரோ? சுகம் செய்தற்குக் காரணம் காதல் கொள்ளலே ஆதலால் அஃது இல்லா வழி உள்ளது யாதுகொல்? என இங்ஙனம் உசாவி நின்றாள். தெளிவாக அறியப் படாமையால் "எவன்" என்றாள்.

"யாது எவன் என்னும் ஆயிரு கிளவியும்
அறியாப்பொருள் வயிற் செறியத் தோன்றும்" (தொல்காப்பியம்)

மேல், கொண்டவன் விரும்பானாயின் கண்டவர் இகழ்வர் என்றாள்; இதில், அவள் கடுந்துயரடைவள் என்கின்றாள்.

நாம் காதலித்து நின்ற காதலர் நம்மேல் காதல்கொள்ளாத போது நமக்கு என்ன இன்பத்தைச் செய்வரோ என்பதாம்.

அயலகன்றுபோன துணைவனை விழைந்து துயருழந்திருந்த தலைவியைத் தோழி நெருங்கி நாம் விழைந்திருத்தலால் அவர் விரைந்துவந்து விடுவர்; உவந்திருங்கள்; என ஆறுதலாக மொழிந்தபோது அவள் உரைத்தபடி யிது.

நான் காதல்கொண்டிருத்தல்போல் எனது நாயகரும் என் மேல் காதல்கொள்வராயின் உடனே ஆதரவோடு வந்து என்னை இன்புறுத்தியிருப்பர்; அங்ஙனம் அவர் கொள்ளாமையால் இங்ஙனம் யான் தள்ளரிய துன்பத்தால் தவித்துழல்கின்றேன் என்பதாம். காதல் நிலையிலுள்ள தன் நோதலைத் தீர்த்தற்குக் காதலன் காதலே ஆதரவு என்பது குறிப்பு.

கணவன் விரும்பி வந்து விரைந்து ஆதரியானாயின் மனைவி பெருந்துயருடையளாய் வருந்தி அயர்வள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கண்ணகிபால் உணரப்படும்.

## கதை.

கண்ணகி என்பவள் ஆவினன் குடியிலிருந்து அரசுபுரிந்த குறுநில மன்னனாகிய பேகனுடைய அருமைத்திருமனைவி. தளிர் ஒளிர் மேனியள். குழலினும் இனிய மழலைமென்மொழியினள். கயலெனப் பிறழும் இயல் மிகு விழியினள். உள்ளினும் மகிழ் செய்யும் தெள்ளமிர்தமென அவ்வள்ளலுக்கு இவள் வாய்ந்திருந் தாள். இவ் அழகியோடமர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து அவன் இனிதமர்ந்து வந்தான். இங்ஙனம் வருங்கால் தேசிகை என்னும் தாசி ஒருத்தியைக் கண்டான். அவள் ஆடல் பாடல் அழகு என்னுமிவற்றில் ஈடெதிரிலள் எனப் பீடுமிகப் பெற்ற வள். தன்பால் பாடிப் பரிசில்பெற நாடிவந்த அவட்குக் கோடி என நிதியம் அவன் வாரிக் கொடுத்தான். அவனது பெருங் கொடையை நினைந்து அவள் இறும்பூதடைந்தாள். வளத்தோ டமையாது அவன் உளத்தையும் கொள்ளைகொள்ள ஊக்கி முயின்று சின்னாளில் அவனைத் தன் கைவசம் ஆக்கிக் கொண் டாள். அறிவும் ஈகையும் ஆண்மையுமுடைய அவன் மதுவீழ் வண்டுபோல் மதிமயங்கி அவளது மோக வலையில் மூழ்கிக்கிடந் தான். அவனது நிலையினை யறிந்து பதிவிரதையான இவள் பருவரலுழந்தாள். பாங்கியரை விடுத்து இயன்றவரையு முயன்று பார்த்தாள். அவன் மனம் திரும்பவில்லை. இவள் உடல் மெலிந்து படர்மிகுந்து விழிநீர் சிந்தி வெய்துயிர்த் திருந் தாள். இங்ஙனம் இருக்கையில் கபிலர் ஒருமுறை அங்கு வந் தார். இவளது நிலையினை யறிந்து நெஞ்சம் இரங்கி அரண் மனைக்குள் நேரே சென்றார். தனியிருந்தயரும் இவள் யார்? என விநயமாக அரசனிடம் இனிது வினவினார். அப்புலவர் பெருந் தகை அன்று புலன்கொள வினவியபடியை அடியில் பார்க்க.

"மலைவான் கொள்கென உயர்பலி தூஉய்
மாரி யான்று மழைமேக்கு உயர்கெனக்
கடவுட் பேணிய குறவர் மாக்கள்
பெயல்கண் மாறிய உவகையர் சாரற்
புனத்தினை அயிலும் நாட! சினப்போர்க்

கைவள் ளீகைக் கடுமான் பேக!
யார்கொல் அளியள் தானே? நெருநற்
சுரனுழந்து வருந்திய ஒக்கல் பசித்தெனக்
குணில்பாய் முரசின் இரங்கும் அருவி
நளியிருஞ் சிலம்பிற் சீறூர் ஆங்கண்
வாயில் தோன்றி வாழ்த்தி நின்று
நின்னும் நின்மலையும் பாட, இன்னாது
இகுத்த கண்ணீர் நிறுத்தல் செல்லாள்
முலையகம் நனைப்ப விம்மிக்
குழல் இனைவதுபோல் அழுதனள் பெரிதே'' (புறம் 143)

மலை வான் கொள்க=மலையை மழை கவிந்துகொள்க. அளியள்=அருள் செய்யத்தக்கவள்; அஃதாவது விரைந்துபோய் இரங்கிப்பேணுதற்கு உரியள் என்றபடி. கண்ணீர் சொரிந்து இவள் கலுழ்ந்திருந்த நிலையை இதில் ஊன்றி புணர்ந்து கொள்க. குறவர்கள் விழா எடுத்து மழையை வருவித்துப் பின்பு போக விடுத்துப் புனத்தில் தினையை விளைத்துண்ணுகின்ற மலைவளத்தையுடைய பேகனே! நின் ஊரகத்து அழுது தேம்பி அவல முற்றிருக்கும் இவ் அபலை யார்? எனத் தனக்கிவள் இன்னாரென்று தெரிந்ததாகக் காட்டிக்கொள்ளாமல் அவன் அறிந்து திருந்தும்படி அப் புலவர் திலகர் இதன்கண் அருளியிருக்கும் அழகைப் பார்க்க. விரகுடன் இவ்வாறு அவர் கூறியகன்றபின் சின்னாட் கழித்துப் பரணர் வந்தார்; இவள் காரணமாக அவனிடம் சென்று பல பாடல்கள் பாடினார். அவற்றுள் ஒன்று அடியில் வருவது.

''அருளாய் ஆகலோ கொடிதே; இருள்வரச்
சீறியாழ் செவ்வழி பண்ணி யாழநின்
காரெதிர் கானம் பாடினே மாக,
நீல் நறு நெய்தலிற் பொலிந்த உண்கண்
கலுழ்ந்துவார் அரிப்பனி பூணகம் நனைப்ப,
இனைத லானா ளாக இளையோய்!
கிளையைமன் எம் கேள்வெய் யோற்கு? என

யாம் தற்றொழு தனம் வினவக்; காந்தள்
முகைபுரை விரலில் கண்ணீர் துடையா
யாம் அவன் கிளைஞரேம் அல்லேம்; கேள் இனி,
எமபோல் ஒருத்தி நலன் நயந்து, என்றும்
வருஉம் என்ப வயங்கு புகழ்ப் பேகன்
ஒல்லென ஒலிக்குந் தேரொடு
முல்லை வேலி நல்லூரானே" (புறம் 144)

கருங்குவளை மலர்போன்ற கண்களிலிருந்து நிறைந்து வீழ்கின்ற நீர்த் துளிகள் மார்பை நனைப்ப வருந்தியிருந்த இளையாள் ஒருத்தியைக் கண்டு உளமிக இரங்கி நின் கிளையோ? என்று வினவினேன்; அதற்கு அருகிருந்தவர் அவளது கண்ணீரைத் துடைத்துப்பேகனுக்கு யாம் உறவினரல்லேம்;ஓர் பொது மகளையே நயந்து நாளும் அவர் புரையேறி வருகின்றார் என உரையாடி நின்றார்; என்னை ஈது? அன்னே! இளமை நலங்கனிந்த அவ் அழகியை நீ அருளா தொழிதல் அறவும் கொடிது என அப் புலவர் பெருமானார் இதில் அறிவுறுத்தி யிருத்தல் காண்க. இங்ஙனம் அறிவுரையாடி அவர் அகன்ற பின்னர் அரிசில்கிழார் என்னும் அறிஞர் வந்தார். அவருக்குச் சிறந்த அணிகலங்களோடு மிகுந்த பொருளையும் அவ்வள்ளல் அள்ளிக்கொடுத்தான். அவற்றை அவர் ஏற்றுக்கொள்ளாமல் இவ்வுத்தமியை உவந்து கொண்டாயாயின் அதுவே எனக்குச் சிறந்த பரிசில் என அக்கவிஞர் அருளினர். அன்று அவர் அருளிய பாடலை அடியில் பார்க்க.

"அன்னவாக நின் அருங்கல வெறுக்கை
அவைபெறல் வேண்டேம்; அடுபோர்ப் பேக!
சீறியாழ் செவ்வழி பண்ணி நின் வன்புல
நன்னாடு பாட, என்னை நயந்து
பரிசில் நல்குவை ஆயின், குரிசில்! நீ
நல்காமையின், நைவரச் சாஅய்
அருந்துயர் உழக்கும்நின் திருந்திழை அரிவை
கலிமயிற் கலாவம் கால்குவித் தன்ன
ஒலிமென் கூந்தற் கமழ்புகை கொளீஇத்

தண்கமழ் கோதை புனைய
வண்பரி நெடுந்தேர் பூண்க நின் மாவே'' (புறம் 146)

நின் துணைவியின் அரிய அளகம் அகிற் புகையூட்டி அணிமலர் சூட்டி இனிமையுறும்படி இன்றே குதிரைகளைத்தேரில் பூட்டி ஏறியருள்க என அவர் கூறியிருத்தலை இதில் கூர்ந்து நோக்குக. இவளது கூந்தலமைதியும், வெந்தெழில் நிலையும், இதனாலும் இனி தறியலாகும். புலவர் பெருமக்கள் வந்து உறுதி கூறியபோ தெல்லாம் சரி என இசைந்து அவர் அகன்றுபோனபின் அவன் மறந்து நின்றான். அத்தையல் மையலில்பட்டு அவன் தாழ்ந்து கிடக்க இத்தருண மங்கை தனித்திருப்பதை நினைந்து அனை வரும் தவித்து நின்றார்.

''கோதறு வனப்பால்,உறுப்பினால்,அன்பால்,குறைவற நிறைந்த பேருரிமை
மாதரும் இருக்க அவர் முகம் விரத்திவந்தவர்போல நோக்காராய்
யாது காரணமோ? இரவொடு பகலும் ஆடவருளம் நனிமயங்கல்;
தீது தீரனைய பரத்தையர் முன்பு செய்தவமன்றி என்னுளதே''

என இன்ன வகையாகப் பன்னியிருந்தார். முடிவில் பெருங் குன்றூர் கிழார் என்னும் பெரியவர் வந்தார். வழக்கம் போலப் பரிசிலை அவன் வாரிக்கொடுத்தான். அவர் அதனைக் கொள்ளா திகழ்ந்தார்; இவளை நீ கைக்கொண்டு வாழ்தலே எனக்குத்தக்க பரிசாமென அவனது கையைப்பற்றி இவளிடம் கடுகக்கொணர்ந் தார். அன்று அவர் கூறிய பாடல் அடியில் வருவது.

''கன்முழை அருவிப் பன்மலை நீந்திச்
சீறியாழ் செவ்வழி பண்ணி வந்ததைக்
கார்வான் இன்னுறை தமியள் கேளா
நெருநல் ஒருசிறைப் புலம்பு கொண்டுறையும்
அரிமதர் மழைக்கண் அமர்மா அரிவை
நெய்யொடு துறந்த மையிருங் கூந்தல்
மண்ணுறு மணியின் மாசற மண்ணிப்
புதுமலர் கஞல இன்று பெயரின்
அதுமன் எம பரிசில்; ஆவியர் கோவே!''. (புறம் 147)

ஆவியர் கோவே! என்றது பேகனை. ஆவி எனப் பெயர் பெற்று அவனது மரபில் முன்பு ஒருவன் நீதியோடு சிறந்திருந் தானுதலால் அக் குடிமுதல்வன் குணநிலையை அவன் கண்டு

தெளிய இங்கம் கொண்டு கூறினார், "அரிவை கூந்தல் புதுமலர் கனல இன்று நீ பெயரின் அது எம் பரிசில்" என அப்பெருமாளர் பேணியருளியபோது அவன் நாணி எழுந்தான்; பின்பு இவளை கயந்துகொண்டுபோய் உவந்து வாழ்ந்தான். முன்பு பிரியங்கொள்ளாமல் பிரிந்து நின்றகாலை வருந்தியிருந்த இவள் அவன் விழைந்துகொண்டவுடன் மகிழ்ந்து நின்றாள். தலைவன் கனிந்து காதலித்தபோதுதான் தலைவி களித்திருப்பள் என்பதை எவரும் காண இவள் உணர்த்தி நின்றாள்.

மேற் குறித்த பெருந்தகையாள ரெல்லாரும் இவளுக்காகப் பரிந்து பாடிய திலிருந்து இவளது பெருந்தகவும், திருந்திய பண்பும், அருங்குலக் கற்பும் அறியலாகும். கண்ணகி என்னும் பெயர் படைத்தார்க்கெல்லாம் இப்பிரிவுத் துயரம் இயல்போ எனக் கோவலன் மனைவியையும் இவளோடு கூட்டி நினைந்து பாவலர் சிலர் ஆவலித்துள்ளார்.

"கண்ணனைய கண்ணகியைக் கைவிட்டுப் பேகனும் ஓர்
பெண்ணை மருவிப் பிழைசெய்தான்;—எண்ணுமிப்பேர்
கொண்டாரைக் கொண்டவரிக் கோதுசெயல வேண்டுமென
உண்டோ ஏதேனும் உரை."

உள்ளனவெல்லாம் பிறர்க்கு உவந்துதவிய வள்ளலாதலால் அவனுயர்வு தோன்றப் பேகனும் என்றார். எல்லாரையும் ஆதரித்துவந்த அவன் தன் இல்லாளைக் கைவிட்டது இரங்கத்தக்க தென்பதாம். உம்மை உயர்வு சிறப்போடு எச்சமும் தோன்ற நின்றது. என்னை? கோவலனையும் குறித்து நிற்றலால் என்க. காதலனது காதலே தனக்குப்பேராதரவாக இவள் பேணியிருந்த உண்மை இதன் கண்ணும் காணலாகும். தாம் காதல் கொள்ளாக் கடை நாம் காதல் கொண்டதனால் யாது பயன்? எனத் தம் தலைவரை நினைந்து குலமகளிர் தயங்கியிருப்பர் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

காதலர்தாங் காதலின்றிக் கையகலின் காதலிபின்
நோதலன்றி ஏதாம் நுவல்.

தலைவன் அன்பே தலைவிக்கு இன்பாம் என்பது இதனால் கூறப்பட்டது.

1196. பண்டம்பை காமம் பரிந்துளைந்து துன்பமீக்
கொண்டாளீ தென்னே குமரேசா—கண்ட
ஒருதலையா னின்னாது காமங்காப் போல
இருதலை யானு மினிது. (சு)

இ—ள்.

குமரேசா! தன்னை விழையாத காதலனை விழைந்து நின்ற அம்பை என் துன்பமடைந்தாள்? எனின், காமம் ஒருதலையான் இன்னாது; காப்போல இருதலையானும் இனிது என்க.

காமம்=காமஇச்சை. ஒருதலை ஆன்=ஒருபக்கத்தில்.
இன்னாது=துன்பமுடையது.
காப்போல=காவின் பாரம்போல.

இருதலை ஆன் உம்—இருபக்கத்தின்கண்ணும். இனிது=இன்பமுடையது. மூன்றும் வேற்றுமைக்குரிய ஆன் உருபுகள் ஏழாம் வேற்றுமைக்குரிய இடப்பொருளில் வந்தன.

மேல், ஒருதலைக் காதலால் பயனில்லை என்றாள்; இதில், அது துயரமே பயக்கும் என்கின்றாள்.

காமவேட்கை ஒருபக்கமட்டுமிருப்பின் அது துன்பந்தரும்; காவின் பாரம்போல இருபக்கத்திலும் ஒத்திருப்பின் இன்பமாம் என்பதாம்.

அயலே அகன்று போயுள்ள நாயகன் குறித்த காலத்தில் வராமையால் வருத்தமீக்கூர்ந்து வாடியிருந்த காதலி தன் வேட்கை நிலையை இகழ்ந்துரைத்தபடியிது.

தான் காமுற்றிருத்தல்போலத் தன் கணவனும் தன்மேல் காமுறுவனாயின் தான் நோவுற நேராது; என்னை? அஃதுறின் அவன் விரைவில்வருவன்;வரவே மருவி மகிழ்வள்; இப்பொழுது அங்ஙனம்உறாமையால் விரகதாபமிகுந்து வெந்துயரோடுநொந்து கிடந்தாளாதலால் "ஒருதலைக் காமம் இன்னாது" என்றாள். இருநுனிகளிலும் ஒத்த சுமைகளையுடையதாயின் காவடித் தண்டை எளிதுதாங்கி இனிது செல்லலாம்; அவ்வாறின்றி ஒருபக்கத்தில் மட்டும் பாரமிருப்பின் ஓரடியும் செல்லமுடியாதபடி

உறதுயர்மிகும்; அதுபோல் காமமும் ஆடவர் மகளிர் என்னும் இருபாலாரிடமும் ஒப்பத்தோன்றின் இன்பமயமாய் இனிதமர்ந் திருக்கும்; அன்றி ஒருபால் மட்டுமாயின் பெருநோயாகும்; ஆத லால் இருபாலுங்கனிந்துள்ள அன்புடைக் காமத்திற்கு இருதலை யும் ஒத்துள்ள காவை ஈண்டு எடுத்துக் காட்டினாள்.

தன்னைக் காதலியாதவனைத் தான் காமுற்று நிற்றல் துன்ப மாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அம்பை பால் உணரப்படும்.

### கதை.

அம்பை என்பவள் காசியரசனுடைய அருமைத் திருமகள். தேசுமிகப் பெற்றவள். அம்பிகை அம்பாலிகை என்னும் மங் கையரிருவரும் இவளோடு உடன் பிறநதவராவர். பருவமெய்தி உருவிலும் அறிவிலும் ஒத்து யாவரும் புகழ இம் மூவரும் ஒரு மையாய் மேவியிருந்தார். இக்கன்னியர்க்குத் தகுதியான கண வர்களை அம்மன்னன் நெடிதுநாடி முடிவில் சுயவரம் குறித்து அரசரெவர்க்கும் ஓலைவிடுத்தான். வேந்தர் பலரும் விழைந்து வந்தனர்.

"காசிமன்னவன் கன்னியர் மூவரும்
தேசின் மிக்கவர்ச் சேர்வர்; என்று ஆள்விட
மாசில் தொல்குல மன்னவ ரீண்டினார்
மூசிவண்டினம் மொய்ப்பது போலவே" (பாரதம்)

இங்ஙனம் கூடியதை யறிந்து வீடுமரும் எழுந்தார்; சித்தி ராங்கதன், விசித்திரவீரியன் என்னும் தம் தம்பியர் இருவர்க் கும் மன்றல் குறித்து அவ்வெற்றி வீரர் அங்குவந்து சேர்ந்தார். சுயம்வரம் நிகழ்ந்தது; அதில் அரசரனைவரையும் அடங்கவென்று அம்மங்கையர் மூவரையும் கொண்டு சென்றார். செல்லுங்கால் இவ் அம்பை முன்பு காதலித்து நின்ற சாலுவன் என்னும் வீர னிடம் தான் சாரவேண்டுமென்று வீடுமரிடம் உரைத்தாள். அவர் உடனே விலக்கி விடுத்தார்.

"சமரில் முந்திய சாலுவன் மேல் மனம்
அமர நின்றதறிந்துழி அம்பையை
எமர்களுக்கு இஃது இயற்கையன் றென்னவே
அமரழிந்த அவனுழைப் போக்கினான்"

இவ்வாறுபோக்கிவிடவேஇவள் அவனிடம் போனாள். அவன் இவளை விழைந்துகொள்ளவில்லை. இவள் வெட்கி மீண்டாள். மறுபடியும் வீடுமரிடம்வந்து தன்னை விழைந்துகொள்ளும்படி குழைந்து வேண்டினாள். அவர் வெறுத்தகற்றினார். இவள் விழி நீர் சிந்தி வெய்துயிர்த்துத் தன் பேதைமையை இகழ்ந்து இனியாது செய்வது? என எண்ணி ஏங்கி மீண்டு தாதையிடம் வந்தாள்.

"கங்கை மைந்தன் கடிமணம் காதல் கூர்
மங்கை தன்னை மறுத்தபின் மங்கையும்
செங்கண் நீர் எழச், சிந்தை செந்தீயெழச்
சங்கையோடுதன் தாதையை நண்ணினாள்"

இவளது நிலைமையை வினவியறிந்து அவன் அகமிக இரங்கினான். இவளை ஏற்றுக்கொள்ளும்படி வீடுமரிடம் ஒரு தூதுவனை விடுத்தான். தூதன் சென்று கூறினான். அவர் ஒன்றும் இசையாது உவர்த்தொழித்தார். போனவன் மீண்டு ஆனதை உரைத்தான். அம்மானவன் வருந்தி மறுகிநின்று முடிவில் ஆய்ந்து பரசுராமரிடம்போய் உரை செய்யும்படி இவளை ஏவினான். தமக்குக் குருவாதலால் அம்மழுவாளி உரைசெய்தால் அவர் விழைந்துகொள்வர் எனத்துணிந்தனுப்பி அவன் உளைந்திருந்தான். இவள் எழுந்து சென்றாள்.

"வரிசையாலுயர் அநேகமண்டலமகீபர் சொன்னசொல் மறுக்கினும்
பரசுராமன் அருள்மொழிமறான்; அவனது இருபதத்திடை பணிந்து நீ
உரைசெய்தால், அவனுரைத்த சொல்லின்வழி ஒழுகிவந்துநினைஉவகையால்
விரைசெய்மாலை புனையாது விடுமன் மறுத்துமீளவும் விளம்புமேல்;

பின்னை எண்ணிய பெருந்தவம்புரிதி! என்று கூறிய பிதாவையும்,
அன்னை தன்னையும் வணங்கி நீடு சதுரங்கயானமிசை அம்புயப்
பொன்னை வென்றெழில்கொள் சாயலாள் இருபுறத்து மாதர் பலர்
பொலிவுடன்
தன்னை வந்துபுடைசூழ ஏகி யமதங்கிமைந்தன் நகர் சாரவே" (பாரதம்)

அவ்வீரமாதவன் வினவியோர்ந்து அருள் புரிந்து இவளையும் உடனழைத்துக்கொண்டு வீடுமரிடம் வந்து இவளை உரிமை செய்துகொள்ளுமாறு உரைத்து நின்றான். அவ்விரத சீலர்

அப்பாசுவீரனது அடிதொழுது நின்று ஐயனே! இது முடியா தென்றான். வெகுண்டு வருத்தியும் யாதும்பலியாமையால் அவன் அகன்று போனான். இவள் அழுன்று சென்று ஒதுங்கி நின்று அருந்தவம் புரிந்தாள். தான் விரும்பி நின்ற காதலர் தன்போல் தன்னை விழைந்து கொள்ளாமையால் இவள் பெருந்துயரடைந் தாள். இருவர்பாலும் அன்பு கனிந்து நின்றாலன்றி, ஒருதலைக் காமம் என்றும் துன்பமாம் என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள். விரிவைப் பாரதத்தில் காண்க.

காதல் இருதலையும் காணின் உயரின்பாம்
ஏதம் ஒருபா லெனின்.

ஒருதலைக் காமம் யாண்டும் இன்னாதென்பது இதனால் கூறப் பட்டது.

---

1197. காத லுயர்பதுமை காமனையேன் முன்னிகழ்ந்து
கோதுபட வைதாள் குமரேசா—யாதும்
பருவரலும் பைதலுங் காணான்கொல் காமன்
ஒருவர்க ணின்றொழுகு வான். (எ)

இ—ள்.

குமரேசா! காதல் மிகுந்த பதுமை ஏன் காமனை இகழ்ந் தாள்? எனின், காமன் ஒருவர்கண் நின்று ஒழுகுவான் பரு வரலும் பைதலும் காணான் கொல் என்க.

இது, மன்மதனை வைகின்றது.

பருவரல் = வருத்தம். உடல் மெலிந்து பசலைபடர்ந்து பரிந்து வருந்துதலால் பருவரல் என்றாள்.

பைதல் = துன்பம். பருவரலும், பைதலும் பொதுவாகத் துயர நிலைகளைக் குறித்துவரினும் முன்னது புறநிலையில் தோன் றுகின்ற பருமையான துயரங்களையும், பின்னது அகநிலையில் அடர்ந்துள்ள கொடுந்துன்பங்களையும் உணர்த்தியதென்க.

காணான்கொல்? என்றது கண்டால் இங்ஙனம் ஒருவர்கண் நின்றொழுகி உறுபழியாற்றாமல் இருவர் கண்ணும் ஒப்ப நின்று செப்பம் செய்வன் என்பது கருத்து.

ஒருவர் என்றது இங்குத் தலைவியை. ஒருத்தி, ஒருவன் என்னும் இருபாற்கும் இப்பெயர் பொதுவாய் வரும். "ஒருவர் என்னும் பெயர்நிலைக் கிளவி, இருபாற்கும் உரித்தே தெரியுங் காலை" (தொல்காப்பியம்) என்பதும் காண்க.

நின்று ஒழுகலாவது ஆசையை விளைத்து அல்லற்படுத்தல்.

மேல், ஒருதலைக் காமம் இன்னாதென்றாள்; இதில், அங்ஙனம் அக்காமத்தைவளர்த்த காமதேவன் கொடியனென்கின்றாள்.

காதலர் இருவர்கண்ணும் ஒப்பநிற்றற்குரிய காமக்கடவுள் அங்ஙனமின்றி ஒருவரிடமே நின்று பொருகின்றான்; அவ்விடத்துள்ள வருத்தந் துன்பங்களை அறியானோ? என்பதாம்.

காமதாபத்தால் வருந்தியிருந்த காதலி காமனை முனிந்துரைத்தபடியிது. எனக்கு இச்சையைவிளைத்திருப்பதுபோல்என் நாயகனுக்கும் விளைத்துவிட்டால் விரைந்துநாடி இங்குவந்தருளுவன்; வரின்யாம் இருவரும் கூடி இன்புற்றிருப்போமே; அவ் இன்ப உதவியை இயற்ற மனமில்லையாயின் என்கண் துன்பம் செய்யாமலாவது தொலைந்து போகலாம் அங்ஙனம் போயொழியினும ஒருவாறு ஆறியிருப்பேனே; இவ்வாறு ஒருவழியிலும் உதவாமல் காமன் பெருநோய் செய்கின்றானே என்று மறுகி நின்றாளாதலால் "ஒருவர்கண் நின்றொழுகுவான்" என அவன் ஒழுக்கத்தைப் பழித்தாள்.

உயிர்களின் அகத்திலமர்ந்து ஆசையை விளைத்து உலகவுற்பத்திக்கு மூலமாயிருக்கும் காமக் கடவுளும் இப்படி ஒருதலைப் பட்சமாய் நின்றுஉறு துயர்செய்தால் இனி யான் யாரைத்துணைக் கொண்டு எவ்வாறு உய்வேன் என இங்ஙனம் ஏங்கி நின்றாள்.

காமன், போக நுகர்ச்சிக்கு அதிதேவதை ஆதலால் தன் காதலன் கண்ணும் காதலை எழுப்பித் தனக்குக் கைதரும்படி இவ்வகை கருதி மொழிந்தாள். "பனியின்ற மாலூர்ந்தவன்வாக் காமன் கணை இரப்பேன் கால் புல்லிக்கொண்டு" (நெய்தற்கலி30) இதில், ஒரு தலைவி தன் காதலனைப் பெறக் காமனைக் கருதியிருத்தலறிக. கணை = மன்மத பாணங்கள்.

"தாமரைச் செங்கட்செவ்வாய்த் தமனியக் குழையினாய்! ஓர்
காமம் இங்குடையேன்; காளைசீவகன் அகலஞ்சேர்த்தின்,
மாமணி மகரம், அம்பு, வண்சிலைக் கரும்பு, மான்தேர்,
பூமலிமார்ப! சுவல் ஊரொடும் பொலிய என்றாள்." (சிந்தாமணி)

இது, சுரமஞ்சரி உரைத்தது. தான்கருதிய நாயகனைத் தரும்படி காமனை அவள் வேண்டியிருக்கும் அழகைப்பார்க்க.

"மாசுடையுடம்பொடுதலையுலறிவாய்ப்புறம்வெளுத்துஒருபோதுமுண்டு, தேசுடைத் திறலுடைக் காமதேவா! நோற்கின்ற நோன்பினைக்குறிக்கொள்கண்டாய், பேசுவதொன்றுண்டுஇங்குஎம்பெருமான்! பெண்மையைத்தலையுடைத்தாக்கும் வண்ணம், கேசவநம்பியைக்கால்பிடிப்பாள்என்னும்இப் பேறுஎனக்குஅருள்கண்டாய்."
(நாச்சியார் திருமொழி)

இதில், ஆண்டாள் காமனை வேண்டியுள்ளமை காண்க.

"காமவேள் கோட்டம் தொழுதார் கணவரொடு
தாமின்புறுவர் உலகத்துத் தையலார்
போகஞ்செய் பூமியினும் போய்ப்பிறப்பர்." (சிலப்பதிகாரம்)

காமன் இயல்பும், அவனைக் காதலர் கருதி நிற்கும் நிலையும் இவற்றான் இனிதறியலாகும். இருபாலாரும் இணைந்து நுகரும் இன்ப நிலைக்கு உரிமையாயுள்ள அவன் ஒருவர்கண் நின்றொழுகல் ஒல்லாதெனை இங்கு இவ்வாறு சொல்லியுளைந்தாள்.

பருவரலையும் பைதலையும் எடுத்துக்காட்டியது அவனுள்ளத்தில் அருள் வராமையையும், தன்பரிதாப நிலையையும் யாவரும் அறிய என்க. அவற்றைக் காணின் இப்படிக் குருட்டுத்தனமாய் வன்கண்மையோடு நின்று என்கண் கொடுமை செய்யான் என்பது குறிப்பு.

பிரிவில் உருகியுள்ள மகளிர் விரகவேதனையால் மறுகியிருப்பாரதலால் தம் பரிவுதோன்றக் காம நலங்களை வெறுப்பதோடு முடிவில் காமனையும் பழிப்பர் என்க.

'வெளிநின்றவரோ போய் மறைந்தார்;விலக்க ஒருவர் தமைக்காணேன்;
எளியள், பெண் என்று இரங்காதே எல்லியாமத்து இருளூடே
ஒளிஅம்பு எய்யுமன்மதனார் உனக்கு இம்மாயம் உரைத்தாரோ?
அளியேன்செய்த தீவினையே அன்றிலாகி வந்தாயோ?"
(இராமாயணம்)

இது, சீதை உரைத்தது, இராமனை நினைந்து அத்தேவி இதில் காமனை இகழ்ந்திருத்தல் காண்க. எளியள் என்றது துணையின்றித் தவிக்குந் தன் துயர்நிலை தோன்ற. பெண் என்றால் பேயும் இரங்குமே! இப்பாவி மதன் யாதும் இரங்காமல் காய்கின்றானே என்பாள் "பெண்ணென்று இரங்காதே" என்றாள். மதனார் எனப் பன்மையினுரைத்தது இகழ்ச்சிக் குறிப்பு. என்னை? ஆண்மகனாகிய அவரிடம் சென்று அம்பெய்யாமல் அபலையாகிய பெண்பாலிடம் நின்று புண்பாடு செய்கின்றானே இவன் நல்ல வில்லாளி என்று நகையாடியபடியிது.

> "மன்றல்நாறு மதுமலர் வாளிகொண்டு
> இன்று என் ஆருயிர் ஈருந்தகைமையால்
> குன்றவில்லி கொடுந்தழற் கண்ணில் வேள்
> பொன்றினான் எனல் பொய்யென வேண்டுமால்;
>
> அருவமாயும் என் ஆவிபதைத் துளம்
> வெருவுமாறு வினைசெயும் வேனிலான்
> கருமிடற்றிறை கண்ணில் எரிந்திடாது
> உருவம் எய்தின் உலகமும் உய்யுமே?" (நைடதம்)

இவை, தமயந்தி கூறியன. காமன் கொடுமையைக் குறித்து அவள் இதில் மறுகியிருத்தல் காண்க. அவளது காமதாபம் இதனால் காணலாகும்.

"மானம்ஒன்று, நிறைஒன்று, நாண்ஒன்று, மதியம்ஒன்று, குயில் ஒன்று, திங்குழற்கானம் ஒன்று, கவர்ந்துணும்; மாமதன்கணைக்கு இலக்கு என்னுயிரொன்று மேகொலாம்; வானமொன்று வடிவு அண்டகோளமே மவுலி; பாதலம் ஏழ்தாள்; மலைஎட்டும் நானமொன்றுபுயம்; முச்சுடருமே நயனமாப்பொலியும்அகிலேசனே" (காசிக்கலம்பகம்)

மதியும் குயிலும் குழலும் என் மான முதலியவற்றை யுண்டன; மன்மதன் எனது உயிரையே யுண்ணுகின்றான்; என ஒரு தலைவி தன் தலைவனை நோக்கி அலறியபடியிது. பிரிவிடைத் துயர்விளைக்கும் திங்கள் தென்றல் முதலிய காமோத் தீபங்களை வற்றினும் காமன் பெருந்துயர் தருவன் என்பது இதனால் அறிந்து கொள்ளலாம். துணை பிரிந்த தலைவி காமனைக் கடுத்து

நோவள் என்பது இதனால் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பதுமையார் பால் உணரப்படும்.

**கதை.**

பதுமையார் என்பவள் பல்லவ தேசத்தரசனுடைய அருமைத் திருமகள். மதியும் மயங்க வயங்கிய முகத்தினள்; மாந்தளிர் போலும் எந்தொளிமேனியள். இவளது அவயவ அழகும் சமுதாய சோபையும் யாரும் வியக்கத்தக்க விதமாய் விளங்கியிருந்தன. இவள் பருவமெய்தி இனிதமர்ந்திருக்குங்கால் நகரயலிருந்த குளிர் பூம்பொழிலிடைத் தனியே உலாவிவந்தாள். அவ்வமயம் இயல்பாக அங்கு வந்திருந்த சீவகன் என்னும் அரசிளங்குமரன் இவளைக் கண்டான். இவளது உருவ நிலையை நோக்கி உளமிக வுருகித் தெய்வ மகளோ? என ஐயமீக் கூர்ந்து அலமந்து நின்றான். பலபல நினைந்தான்.

"வரையின் மங்கைகொல்? வாங்கிருந் தூங்கு நீர்த்
திரையின் செல்விகொல்? தேமலர்ப் பாவை கொல்?
உரையின் சாயல் இயக்கிகொல்? யார்கொல்? இவ்
விரைசெய் கோலத்து வெள்வளைத் தோளியே"

என அம்மிளி மொய்ம்பன் மெய் மறந்து மயங்கிச் செய்வகை தெரியாது திகைத்து நின்றான். அங்ஙனநின்ற அவனை இம்மங்கையும் நோக்கி மையல் மீக் கொண்டாள். அன்றிவள் நோக்கி நின்றபடியை அடியில் பார்க்க.

"நோக்கினாள் நிறையும், நாணும், மாமையும், கவினும், நொய்திற்
போக்கினாள் வளையும்; போர்த்தாள் பொன்னிறப் பசலை; மூழ்கிற்
றாக்கினாள் அநங்கன் அப்புத்தூணியை; அமருளானாது
ஒக்கிய முருகன் வைவேல் ஓரிரண்டனைய கண்ணாள்" (சிந்தாமணி)

இங்ஙனம் காமுற்று நின்ற இருவரும் கந்தருவ முறையில் கலந்து மகிழ்ந்தார். பின்பு தந்தை அறிந்து உலகறிய இவளை அவனுக்குத் திருமணஞ் செய்து கொடுத்தான். அவண் தங்கியிருந்து இவளது பொங்கிய நலன்களை அவன் பொருந்தித் திளைத்துப் பெருங்களிப் பூர்ந்து போகநிலையில் பூரித்திருந்தான்.

"வாளும் வேலும் மலைந்தரி யார்ந்தகண்
ணாளும், வார்கழல் மைந்தனும், ஆயிடைத்
தோளும் தாளும் பிணைந்து உருவொன்றெய்தி
நாளும் நாகர் நுகர்ச்சி நலத்தரோ.

தணிக்கும் தாமரையாளை நலந்தன்னையும்
பிணிக்கும் பீடினி என்செயும் பேதைதன்
மணிக்கண் வெம்முலை தாம் பொர வாய் அவிழ்ந்து
அணிக்கந் தன்னவன் தார் அங்கு உடைந்ததே.

பரிந்த மாலை; பறைந்தன குங்குமம்;
கரிந்த கண்ணி; கலந்த மகிழ்ச்சியின்
அரிந்த மேகலை; ஆர்த்தன அஞ்சிலம்பு;
இரிந்தவண்டு; இளையார் விளையாடவே." (சிந்தாமணி.)

இங்ஙனம் உழுவலன்போடு தழுவியுவந்து அளவில் போகங்களை நுகர்ந்து வருங்கால் ஒருநாள் இரவு அவன் தனியே பிரிந்து வெளியே அகன்றான். இவள் விழித்தாள்; அருகு அவனைக் காணாமல் அயிர்த் தெழுந்தாள்; பதைத்து நொந்தாள்; பள்ளியறை முழுவதும் பரிந்து தேடினாள்; எங்கும் தோன்றாமையால் ஏங்கி விழுந்தாள்; பார்த்த பொருள்களை யெல்லாம் பழித்துப் புலம்பினாள். சில அடியில் வருவன காண்க.

"ஆக்கையுள்ளுறை ஆவிகெடுத்து அவண்
யாக்கை நாடி அயர்வது போலவும்
சேக்கை நாடித் தன் சேவலைக் காணிய
பூக்கணுடமோர் புள்ளும் ஒத்தாளரோ; (க)

கிளியை நோக்கி மொழிந்தது.

புல்லும் போழ்தினும் பூணுறின் நோம் என
மல்லற் காளையை வைதுமிழற்றுவாய்!
இல்லின் நீக்கம் உரைத்திலை நீ எனச்
செல்வப் பைங்கிளி தன்னையும் சீறினாள்; (உ)

பூவையைப் பார்த்துப் புலம்பியது

ஓவியக்கொடி ஒப்பருந்தன்மை எம்
பாவை பேதுறப் பாயலின் நீங்கி நீ
போவதோபொருள் என்றிலை நீ எனப்
பூவையோடும் புலப்பி மிழற்றினாள்; (ங)

வண்டைக்கண்டு வருந்தியது.

துனிவாயின துன்னுபு செய்தறியேன்;
தனியேயொரு பெண்ணுயிர் என்னொடுதான்
இனியாண்; இவளேயுள ளேனபுரையீர்
பனியார்மலர் மேற்படு வண்டினமே! (ச)

மலை முதலியவற்றை நோக்கி மறுகியது.

திரைவீழருவிந் திமிர்பொன் சொரியும்
வரையே! புனலே! வழையே! தழையே!
விரையார் பொழிலே! விரிவெண்ணிலவே!
புரையீர் உயிர்காவலன் உள்வழியே; (ரு)

அரமகளிரை விளித்தழுதது.

புணர்வின் இனிய புலவிப் பொழுதும்
கணவன் அகலின் உயிர் கையகறல்
உணர்வீர்! அமரர்மகளீர்! அருளிக்
கொணர்வீர் கொடியேன் உயிரைக் கொணர்வீர்!"

இன்னவாறு உலையிலிட்ட மெழுகுபோல் உருகிப் புலம்பி இவள் மறுகியழுதாள். இவளது துயர நிலையை யறிந்து உளமிக இரங்கி அமிர்தகலை என்னும் தோழி வந்து சில உறுதி நலங்களை இனிதுணர்த்தி அரிது தேற்றினாள். அன்று அவள் உரைத்த வுண்மைகள் மிகவும் அருமையானவை. சில அடியில்வருவன.

"பிரிந்தவர்க்கிரங்கிப் பேதுற்றழுத நம் கண்ணின் நீர்கள்
சொரிந்தவை தொகுத்துநோக்கிற் றொடுகடல் வெள்ளமாற்ற;
முரிந்தகம்பிறவி மேனாள் முற்றிழை! யின்னும் நோக்காய்
பரிந்தழுவதற்குப் பாவாய்! அடியிட்டவாறு கண்டாய்.

அன்பினின் அவலித்து ஆற்றாதழுவதும் எளிது; நங்கள்
என்பினின் ஆவிநீங்க இறுவதும் எளிது; சேர்ந்த
துன்பத்தாற்றுகைக்கப்பட்டார், துகைத்தவத்துன்பம் தாங்கி
இன்பமென்றிருத்தல்போலும் அரியதிவ்வுலகில் என்றாள்.

தேன்சென்ற நெறியும், தெண்ணீர்ச்சிறுதிரைப் போர்வை போர்த்து
மீன்சென்ற நெறியும், போலவிழித்திமைப் பவர்க்குத்தோன்றா;
மான்சென்ற நோக்கின் மாதே! மாய்ந்துபோம் மக்கள் யாக்கை,
ஊன்சென்று தேயச் சிந்தித்து உருவதோதகுவது? என்றாள்.

மயற்கையும் மக்கள் யோனிப் பிறத்தலும், பிறந்துவந்திங்கு
இயற்கையே பிரிவு சாதல் இமைப்பிடைப்படாத தொன்றால்
கயற்கணினளவும் கொள்ளார் கவற்சி; யுட் கவற்சிகொண்டார்
செயற்கையம் பிறவிநச்சுக் கடலகத் தழுந்துகின்றார்.

இளமையில் மூப்பும், செல்வத்திடும்பையும், புணர்ச்சிப்போழ்தில்
கிளைநரிற் பிரிவும், நோயில் காலத்து நோயும், நோக்கி
விளைமதுக் கமழும் கோதை! வேலினும் வெய்யகண்ணாய்
களைதுயர்; அவலம்வேண்டா; கண்ணிமைப்பளவும் என்றான்'' (சிந்தாமணி)

இவள் ஆறித்தேறி அமர்ந்திருக்கும் பொருட்டுத் தோழி உரைத்திருக்கும் உண்மைநலங்களை இவற்றுள் ஊன்றியுணர்ந்து கொள்க. இதனால் அவளது ஞானவியல்பு நன்குணரலாகும். இவ்வண்ணம் அவள் தேற்றியபின்பு தன் காதலன் எவ்வண்ணமும் வந்தருளுவன் என வழி நோக்கி இவள் அமர்ந்திருந்தாள். இரவுவந்தபோது விழிதுயிலாமல் விரகவேதனையால் இவள் உளைந்து கிடந்தாள். பசலை பாய்ந்து படர்மிகுந்து உடல்மெலிந்து உயிரோய்ந்துகிடக்கும் தன்னைக் காய்வதுபோல் அம்மன்னனையும் வருத்தினால் விரைந்துவந்தருளுமே எனக் காமனை வெகுண்டு வைதாள். பருவரலும் பைதலும் காணாமல் காமன் ஒருவர்கண் நின்றொழுகுவான் என்று குலமகளிர் மறுகிவைவர் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்துநின்றது.

ஆடவர்மேல் செல்லா தரிவையர்பால் நின்றுமதன்
ஆடல் புரிதல் அவம்.

காமனை இகழ்ந்தமை இதனால் கூறப்பட்டது.

---

1198. காதலன்பால் இன்சொல்லைக் காணாச் சுநீதியேன்
கோதென்றாள் வாழ்வைக் குமரேசா—காதலாய்
வீழ்வாரி னின்சொற் பெறாஅ துலகத்து
வாழ்வாரின் வன்கணா ரில். (அ)

இ—ள்.

குமரேசா! கணவன்கண் இனிய சொல்லைக் காணாமையால் சுநீதி ஏன் தன் வாழ்க்கையை இகழ்ந்து நின்றாள்? எனின், வீழ்வாரின் இன்சொல் பெறாது உலகத்து வாழ்வாரின் வன்கணார் இல் என்க. இது, தனிவாழ்வு பழுதென்கின்றது.

வீழ்வாரின் = கணவரிடத்தினின்றும், தான் விழைந்து வீழ்தற்கு இடனாய் நிற்றலால் காதலனை வீழ்வார் என்றாள்.

இன்சொல் = இனிமை பயக்கும் சொல். அயலகன்று போயுள்ள தலைவன் விரைவில் வருதல் முதலாக ஏதேனும் ஒன்றை உரிமையோடு பாங்கனிடம் உரைத்துவிடின் தலைவிக்கு அது மிகுந்த இன்பம் பயக்குமாதலால் அதனை இன்சோல் என் · ஆனைக் காணாவிடினும் அவரிடமிருந்து ஒரு சொல்லுங் கூடக் கேட்கவில்லையாயின் அவ்வாழ்க்கை வன்கண்ணதென்றாள்.

வாழ்வாரின் = வாழ்வாரைப்போல. இன் உருபு ஒப்புப் பொருளது. வன்கணார் = கொடியர். கல்நெஞ்சர் என்றபடி.

இன்சொற்பெறுதபோதே இறந்துபோகவேண்டும் அங்ஙனம் போகாமல் இருந்து வாழ்தல் பெருந் திண்மை என்பதாம். மேல், காமக்கடவுளை வைதாள்; இதில், தன்னையே நோகின்றாள்.

தாம் விரும்பும் காதலரிடத்திலிருந்து ஏதேனும் ஓர் இனிய சொல்லைப் பெறாமல் வாழ்கின்ற காதலிகள்போல வன்கண்மை யுடையார் இவ்வுலகத்தில் ஒருவரும் இலர் என்பதாம்.

மறுபுலம் போன நாயகனிடமிருந்து ஒருபதிலும் வரவில் லையே என நாயகி உளமுடைந்து உரைத்தபடியிது.

விரைந்து வந்தருளுவல் என்று முன்பு பிரிந்து சென்ற காதலர் மொழிந்தபடி வரவில்லையாயினும் இன்ன இடத்தில் இருக்கின்றேன்; இன்னவாறு செய்கின்றேன்; இன்ன நாளில் வருகின்றேன்; என ஏதாவது ஓர் சொல்லைத் தூதனிடம் சொல் லிவிடலாகாதா? அந்தோ ஒரு சொல்லுங்கூட எனக்கு இல்லையே! ஒருபற்றுக்கோடுமின்றி இப்படி வதை வாணாளாய்க் கிடப்பது எற்றுக்கு? எனத் தன் உயிர் வாழ்க்கையை இகழ்ந்து கூறு கின்றாளாதலால் வாழ்வாரின் வன்கணார் இல்லை என்று புன் கண்ணோடு இங்ஙனம் புலந்து நின்றாள்.

"மன்னுயிர் காத்திருங் காலம் வைகினேன்
என்னின் வேறு அரக்கியர் யாண்டையார் கோலோ?
என வைதேகி வருந்தியுரைத்துள்ளதும் ஈண்டறிந்துகொள்க.

"பல்லி படீஇய பசுநனைக் குரவம்
பொரிப்பூம் புன்கொடி பொழிலணிக் கொளாஅச்
சினையினி தாகிய காலையும் காதலர்
பேணா ராயினும் பெரியோர் நெஞ்சத்துக்
கண்ணிய ஆண்மை கடவ தன்றென
வலிய நெஞ்சம் வலிப்ப
வாழ்வேன் தோழி என் வன்கண்ணே" (குறுந்தொகை 341)

காதலன் வந்தருளாமையை நினைந்து தான் உயிர் வாழ்வது வன்கண்மை எனத் தன் வாழ்க்கையை முனிந்து ஓர் தலைவி இதில் உரைத்திருக்கும் நிலையைப் பார்க்க.

கணவன் கருதிமுந்தருளானாயின் மனைவி பெரிதும் நொந்து அயர்வாள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுநீதிபால் உணரப்படும்.

## கதை.

சுநீதி என்பவள் சூரியகுலத் தோன்றலாகிய உத்தானபாதன் என்னும் அரசனுடைய அருமைத்திரு மனைவி. நல்ல புண்ணியவதி. "தண்ணளி ததும்பும் கண்ணாள்; தளிர் நலங் கவற்றி வாய்ந்த வண்ண ஒண்மெய்யாள்; செய்ய மழலை மென் குதலை வாயாள்; பெண்ணலங் கனிந்துவந்த பெண்ணருங்கலம்; என்றிந்த மண்ணகம்புகழ, விண்ணும் மகிழ்ந்திட வயங்கி நின்றாள்." இங்ஙனம் விளங்கி நின்ற இவளை மணந்து மகிழ்ந்து அம் மன்னன் சிறந்த போகங்களை நுகர்ந்து அறங்கள் பல புரிந்து அரசு செய்து வந்தான். இவளும் அவனை ஆருயிரென ஆதரித்து வந்தாள். இடையே சுருதி என்பவளையுமணந்து இருவரையும் இணைபிரியாமல் அவன் மருவி வருங்கால் இவள் வயிற்றில் ஓர் புதல்வன் பிறந்தான். அவனுக்குத் துருவன் என்று பெயர். இவள் பேறுகாலம் வாய்த்திருந்தபொழுது இளையவளிடம அரசன் மோகமீறி யிருந்தானாதலால் நாளடைவில் இவளிடை அவன் சிறிது மனமாறலானான். அதனால் அவளும் இவளை அவமதித்து நின்றாள். நின்றும் இவள் பொறையும் அன்பும் பொருந்தித் தன் பெயரியல்புக்கேற்ப உயர் நலனோடு ஒழுகி

வந்தாள். ஒருநாள் தந்தையருகு இவள் மைந்தன் அணுகினன். அவ்வமயம் அயலிருந்த அவள் அவனை அழன்று நோக்கி "இங்கு என்ன உனக்கு? அகன்றுபோ!" எனச் சினந்து மொழிந்தாள். அவ் அருமைத்திருமகன் கண்ணீர்சிந்தித் தன் தாயிடம்வந்து கலுழ்ந்து நின்றான்.

"தன்இளங்குழவி செங்கட்டாமரை தழைத்த முத்தம்
பொன்னணிந்து இலங்குமார்பிற் பொழிதர நிற்றல்நோக்கி
என்னுயிர்! என்கண்! எந்தால்! என்னைநீ அழுங்கல்? என்று
மின்னுயிர்த் தொளிரும்பைம்பூண் மெல்லியல் வினவினாள். (க)

பட்டமை கண்டோர்கூறப் பசுஞ் சிறைக் கிள்ளை அன்னாள்
விட்டெரிகின்ற காட்டு வெங்கனல் படர்ந்து முற்றிச்
சுட்டவெப் புண்டபொன்னந் துணர்க்கொடி போலவாடி
கெட்டுயிர்ப் பெறிந்துசெங்கண் நித்திலம் சிந்திநின்றாள்; (2)

குதலைதெள்ளமுதின் தேனிற் கொண்டமென்பவளச்செவ்வாய்
மதலைநல் வினையிலேன் புல்வயிற்றகம்பொருந்திவந்தாய்;
விதலையுற்றிரங்கல்வேண்டா; விளைந்ததண்ணளியிற் காக்கும்
முதலைவாய் உம்பல்காத்த முழுமுதற்கடவுள் மாதோ." (பாகவதம்)

இங்ஙனம் ஆற்றிப் போற்றி இவள் அமர்ந்திருந்தாள். இதனால் இவளது மதிநலனும், மன நிலையும் இனிதறியலாகும். பெருந்தன்மையோடு இவ்வாறு இருந்த இவளை அவன் பிரிந்து நின்றான். சந்திரனை நோக்கிய சகோரம்போல அவனையே இவள் சிந்தித்திருந்தாள். தோழிகளிடமாவது தூதுவர் மூலமேனும் யாதேனும் அவன் சொல்லி யருளுவான் என உள்ள மறுகி நாளும்இவள் உருகியிருந்தாள். முடிவில் ஒருநாள் தனது வாழ்க்கையைவெறுத்துத் தன்னைத்தானே இவள் வைதுகொண்டாள். வீழ்வாரின் இன்சொற் பெறாது வாழ்வார்போல வன்கண்ணார் இலலை என உள்ளம் நொந்து குலமகளிர் சொல்லி நோவர் என்பதை உலகம் காண இவள்உணர்த்தி நின்றாள்.

காதலர்பால் ஓர்சொல்லுங் காணேன் கழிந்தினிமேல்
ஏதம் இருப்ப திவண்.

தலைவி வாழ்வை வெறுத்துநின்றநிலை இதனால்கூறப்பட்டது.

1199. காணு திலக்கணையேன் காதலன்சிர் ஆதரவாய்க்
கோணுது கேட்டாள் குமரேசா—நாணு
நசைஇயார் நல்கா ரெனினும் அவர்மாட்
டிசையு மினிய செவிக்கு. (௯)

இ—ள்.

குமரேசா! தன் காதலன் இசையை இலக்கணை ஏன் கனிந்து கேட்டாள்? எனின், நசை இயார் நல்கார் எனினும் அவர் மாட்டு இசையும் செவிக்கு இனிய என்க.

இது, கணவன் மொழியைத் துணைவி கருதிநின்றமை கூறுகின்றது.

நசைஇயார் = இச்சிக்கப்பட்டார். காதலர் என்க. தன் ஆசைக்கு இடமாய் நிற்றலால் காதலனை நசைஇயார் என்றாள்.
நசை = ஆசை. அளபெடை இசை நிறைக்கவந்தது.
நல்குதல் = வந்தருளுதல். இசை — சொல்.

அவர்மாட்டு இசையும் = அவரிடமிருந்துவந்த உரையும். தாம் நேரில் வராது தாமதித்திருப்பினும் தமது வருகை வர்த்தமானங்களைத் தூதுவர் மூலமாக ஓதிவிடின் அவை நாயகிக்குப் பெரிதும் ஆறுதலாகி இன்பம் பயக்கும் ஆதலால் “அவர் மாட்டு இசையும் செவிக்கு இனிய” என்றாள். அவரது காட்சியை யிழந்து கண்கள் கலுழ்ந்துழந்திருப்பினும் அவர் வாய்ச்சொல்லைக் கேட்டேனும் சிறிது ஆறியிருக்கலாம் என்றால் அதுவும் இல்லாதொழிந்ததே! இனி என்செய்வேன்? என ஏங்கியிருந்தாளாதலால் இங்ஙனம் இனைந்து கூறினாள்.

மேல், கணவனிடமிருந்து ஒரு சொல்லும் பெறவில்லையே என்றாள்; இதில், அச்சொல் தனக்கு இன்பமாம் என்கின்றாள்.

காதலர் வந்தருளாராயினும் அவரிடமிருந்துவரும் எவ்வகையான சொற்களும் என் செவிக்கு இனியன என்பதாம். பகைவரை வெல்லக் கருதிப் படையோடெழுந்துபோன தலைவன் நெடுநாளாகியும் வாராமையால் அவனை நினைந்து வருந்தி நிலை தளர்ந்திருந்த தலைவி ஒருநாள் தன் தோழியிடம் உரைத்தபடி

பிது. என்பால் அன்புகொண்டு இரங்கிஎழுந்தருளாராயினும் இரு க்கும் நிலை வரங்களை ஏதாவது ஓர் ஆள் மூலம் சொல்லிவிட லாகாதா? ஒரு சொல்லுங்கூடவா பஞ்சமாய் போயிற்று என்று அல்லலோடு அழுங்கி யுரைத்தாளாதலால் "நல்கார் எனினும்" என்றாள். இங்ஙனம் நல்காதிருந்தும் எவ்வாற்றானும் இனிய ராகவே எனக்கு அவர் இசைந்துள்ளார் எனத் தன் இசைவை இவ்வாறு இசைத்து நின்றாள்.

"குறுந்தாட் கூதளிர் ஆடிய நெடுவரைப்
பெருந்தேன் கண்ட இருகை முடவன்
உட்கைச் சிறுடை கோலிக் கீழிருந்து
ஊட்டுப நக்கியாங்குக் காதலர்
நல்கார் நயவார் ஆயினும்
பல்காற் காண்டலும் உள்ளத்துக்கு இனிதே"(குறுந்தொகை 60)
கோலி = வளைத்து.

முடவன் கொம்புத்தேனுக்கு ஆசைப்பட்டதுபோல் நான் ஆவல்கொண்டுள்ளேன்; காதலர் கருணைசெய்து வந்தருளவில்லை; ஆயினும் அவரை எண்ணுந்தோறும் எனக்கு இனிதாகவே யுள்ளது என ஓர் தலைவி இதில் உளைந்துரைத்திருக்கும் அழகைப் பார்க்க. அடிகள் கருத்தை இது அடியொற்றி யுள்ளமையை அறிந்துகொள்க.

பிரிந்தகன்ற கணவனிடமிருந்து ஏதேனும் ஒரு வார்த்தை வரின் அது மனைவிக்கு மிகுந்த இன்பமாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை இலக்கணைபால் உணரப்படும்.

### கதை.

இலக்கணை என்பவள் மத்திர தேசத்து மன்னன் மகள். பெரு வனப்பினள். "எழில் வளர் தளிர்மா மேனி இலக்கணை என்னும் நாமத்து ஒழுகரித் தடங்கணாள்" என இடங்கள் தோறும் ஏத்த நின்ற இவள் பருவமடைந்து பெருமித நிலையில் மருவியிருந்தாள். எம் மாதரும் வியந்து நோக்கச் செம்மாந் திருந்த இவளை மணந்துகொள்ள மன்னர் பலரும் விழைந்து

நின்றார். இவள் எவரையும் கருதாமல் கண்ணனொருவனையே காதலித்திருந்தாள். இவளது அழகமைதிகளை வினவியறிந்து அவ் அழகனும் இவள்மேல் ஆர்வமீதூர்ந்து நின்றான். எனக்கு எனக்கு என மனக்களிப்போடு மன்னர் மூண்டு நிற்றலை மத்திரன் அறிந்தான்; மெய்த்திறந்தேற ஓர் உபாயஞ் சூழ்ந்தான். மிகவும் உயரமான நெடிய கம்பத்தை நிலைபெற இனிது நட்டி, அதன் நுனியில் காற்றாடிபோல் விரைந்து சுழலும் பொறியொன்றமைத்து, அதன்மேல் மீன் வடிவில் உருவொன்று வைத்து, அதனை எவரும் நேரில் காணாவகை அயலமைத்துள்ள நீர்நிலையில் தோன்றும்படிசெய்து, அந் நிழலில் நோக்கி அச் சுழல் துளைவழியே அம் மச்சயந்திரத்தை வில்லால் எய்தவனே இம் மெல்லியலை எய்தலாம் என அவன் சொல்லிமுடித்தான். இதனைக் கேட்டவுடனே பலர் மாட்டோமென்று மறுகிநின்றார். சிலர் நசையால் வந்து முயன்று பார்த்து வசையோடு அயர்ந்து சென்றார். இவ் விதி கண்ணனுக்கு இல்லை என்று இக் கன்னி தடுத்தாள். அம் மன்னன் மறுத்தான். கண்ணன் வந்தான். தனது முன்னவதாரத்தை முன்னி யெழுந்து முனைந்து சென்று வில்லினை எடுத்தான்; சொல்லில் முடிக்கும் சூழ்ச்சியிலன்றி வில்லில் இவன் என்செயவல்லான்? என எல்லாரும் வியந்து நோக்கினார். அவ் வீர வில்லியாகிய இராமன் போலவே யாருமறியாவகை வில்லை வளைத்து அக் குறியை ஒல்லையில் வீழ்த்தினான்.

> "விடம்பொதி மிடற்றுப் புத்தேள் வெஞ்சிலை யிறுத்த வீரன்
> கொடுஞ்சிலை குழைத்தவாறும், குழைத்துநாண் கொளீஇயவாறும்
> அடுங்கணை துரந்தவாறும், ஆர்கொலோ தெரியக் கண்டார்?
> கடுங்கயல் துணிந்து மண்ணிற் கவிழ்ந்தது கண்ணிற் கண்டார்.

இங்ஙனம் அருஞ்செயலாற்றிய அப் பெருந்தகையாளனை அனைவரும் புகழ்ந்து துதித்தார். அரசன் பெருமகிழ்ச்சியடைந்து இவளைப் புனைந்துகொணர்ந்து அவனுக்கு மணஞ்செய்து தந்து யானைகள் குதிரைகள் இரதங்கள் முதலிய சிறந்த வரிசைகள் பல உவந்து கொடுத்தான். அவன் பெற்று மீண்டு தன் அணி நகர் புகுந்து முற்றிய காதலனாய் இப் பொற்கொடி

யோடு பொருந்தியிருந்து பெரும் போகங்களை நுகர்ந்து அரும் பெறலமிர்தம் அருந்தினர்போல் அகமிக மகிழ்ந்தான்.

" அளவில் வெங்காதற் பௌவத் தளறெழ அழுந்தலுற்ற
இளமயிலன்ன சாயல் இலக்கணை மன்றலாற்றி,
முளையின முல்லைமூரல் முருக்கிதழமுதம் துய்த்தான்
தளையவிழ்ந் தடைந்தோர்க்கு ஈறில் தனியின்புதருநம் தொல்லோன்"
(பாகவதம்)

இவ்வண்ணம் காம போகங்களை நுகர்ந்து களித்துவருங்கால் இடையே நரகாசுரனோடு அப் பெருமான் அமர் செய்ய நேர்ந்தது. இவளை ஆற்றியிருத்தி அகன்று போனன். இவள் நாள் ஓர் ஊழியாகக் கழித்து நைந்து கிடந்தாள். தோழியர் சூழ்ந்து தொழுதுபோற்றி ஆறுதல் கூறியும் இவள் அலமந்துழந்தாள். தன் காதலனிடமிருந்து ஏதேனும் ஓர் ஆதரவு வந்தாலன்றி இவள் சாதல் நேருமென யாவரும் பேதுறலானர். மறுநாள் அவ் அண்ணலிடமிருந்து ஓர் தூதுவன் வந்தான். கருதிய கருமம் முடிந்தது; பெருமான் விரைந்துவந்தருளுவர் என்று அவன் உரைசெய்து நின்றான். அவ் வுரையைக்கேட்டு இவள் உளங் களித்து உயிர் தளிர்த்து நின்றாள். "நசைஇயார் நல்கார் எனினும் அவர் மாட்டுஇசையும் செவிக்கு இனிய" என்பதை உலகம் இவள்பால் உணர்ந்துநின்றது.

பிரிந்துநின்ற பேதையர்க்குப் பேணினர்பால் ஓர்சொல்
அருந்தும் அமிர்த மது.

காதலன்சொல் காதலிக்குக் களிப்பூட்டுமென்பது இதனல் கூறப்பட்டது.

---

1200. நேர்ந்த பிரபையேன் நெஞ்சிகழ்ந்தாள் கொண்கனிடம்
கூர்ந்துரைக்க அஞ்சிக் குமரேசா—ஊர்ந்தே
உறாஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்
செறாஅஅய் வாழிய நெஞ்சு. (ய)

இ—ள்.

குமரேசா! தன் உள்ளத் துயரைப் பிரபை ஏன் காதலனிடம் சொல்ல அஞ்சினள்? எனின், உறாஅர்க்கு உறுநோய் உரைப்பாய் கடலைச் செறாஅய் வாழிய நெஞ்சு என்க.

இது, தன் நெஞ்சை நோக்கித் தலைவி யுரைக்கின்றது.

உறார்க்கு = பொருந்தாதார்க்கு. பிரிந்துபோன காதலர் தன் பால் அன்போடுவந்து சேராமையால் உறார் என்றாள்.

உறுநோய் = தன் உள்ளத்துற்ற நோய். அஃதாவது பிரி வினால் நேர்ந்துள்ள விரகதாபம்.

அன்புறுவார்க்குத் தன்துயர் உரைத்தால் அதனாலேதாவது பயனுண்டாகும்; அன்பு உறார்க்கு உரைப்பின் அவர் யாதும் உதவார் ஆதலால் அதனால் அவமானமேயாம்; ஆகவே முன் பிருந்த துன்பத்தோடு இப் புன் பழியும் பொருந்திப் பெருந் துயராய் முடியுமாதலின் அவரிடம் ஒன்றும் உரைக்கலாகா தென்பது குறிப்பு.

செறாய்—சினந்து தூர்ப்பாய். செறுதல்—கோபித்தல்.

இதில் செய்யுளிசை நிறைக்க இரண்டு மாத்திரை வேண்டி யிருந்தமையால் ஆகாரம் ஈரளபெடை எடுத்து நின்றது.

மேல், தூரம்போயுள்ள காதலனிடமிருந்து தூதுவன் மூலம் ஒரு வார்த்தை வரினும் இன்பமாம் என்றாள்; இதில், அவனுக்குத் தூதுவிடக் கருதித் துயரடைந்துரைக்கின்றாள்.

நம்மிடம் உறாதார்க்கு நாம் உற்றநோயை உரைக்கத் துணி கின்றாய் நெஞ்சமே! அதனினும் கடலைச் சினந்து தூர்ப்பாயா யின் நன்று என்பதாம்.

பிரிந்துபோயுள்ள காதலனுக்குத் தன் விரகவேதனையை உரைத்துவிடுத்தும் அவன் விரைந்துவந்தருளாமையால் தலைவி சினந்து மொழிந்தபடி யிது.

எல்லையற்ற நம் நோய் நிலையைச் சொல்லிவிட்டும் அவர் இரங்கி வரவில்லை; அப்படியிருந்தும் மேலும் அவரிடம் சென்று சேரவும், ஒன்று கூறவும் ஊக்கி நிற்கின்றாய்! எனத் தன் உள்ள த்தை உருத்து நோக்கி இங்ஙனம் உரைத்து நின்றாள். அன்பில் லாத அவரிடம்போய்ச் சொல்லுவதைவிட நமக்குத் துன்பம் செய்கின்ற இந்தக் கடலைத் தூர்க்க முயன்றாலும் பயனுண்டு என்பாள் "உரைப்பாய், கடலைச் செறாய்" என்றாள். இங்குக்

கடலைக் குறித்தது பிரிவுற்ற மகளிர்க்குக் கடலொலி காம்தாப த்தை மிகுவித்தல் கருதி.

திங்கள் குயில் தென்றல் இருள் முதலியனபோலக் கடலும் காமம் வளர்க்கும் இயல்பினதாதலால் அது மன்மதனுக்கு முரசமாகக் குறிக்கப்பட்டுள்ளது. "முத்தும் களபமும் தண் பனி நீரும் முயங்குமலர்த், தொத்தும் குளிரியும் தூய்மலர்ப் பாயலும் சூழ்ந்துபுறங், கத்துங் கடலும் கதலியு மாலியும் கங் குலும் இப், பத்தும் பெரும் பகை யாய்விட்டவாம் ஒரு பைந் தொடிக்கே" கடல் இதில் வந்திருத்தலறிக.

"காரிருள் நெடுங்களிறெழக், குயிலெனும் பெரிய காளம் அதிரப்,
பேருமகரத்துவச முன்புசெல, மின்பொருவு பெண்படையொடே
வார்முரசோலிட, மதிக்குடை நிழற்ற, மலையானிலமெனும்
தேரின்மிசை மாரன் இனி தேறினன் வசந்தனொடு தேவியொடுமே"

காமன் சின்னங்களுள் கடலும் ஒன்றாக இதில் வந்துள் ளமை காண்க. இங்ஙனம் காம வுரிமையாய்ப் பிரிவிடை நோய் விளைத்து நிற்றலின் கடலைக் கடுத்து நின்றாள்.

"பாய்திரை பாடோவாப் பரப்புநீர்ப் பனிக்கடல்!
தூவறத் துறந்தனன் துறைவனென்று அவன் திறம்
நோய்தெற வுழப்பார்கண் இமிழ்தியோ? எம்போலக்
காதல்செய் தகன்றாரை யுடையையோ நீ?" (நெய்தற்கலி 12)

"காமுற்ற கையறவோடு எல்லே இராப்பகல்
நீமுற்றக் கண்டுயிலாய் நெஞ்சுருகி ஏங்குதியால்
தீமுற்றத் தென்னிலங்கை யூட்டினான் தாள் நயந்த
யாமுற்றதுற்றாயோ? வாழி கனைகடலே" (திருவாய்மொழி)

கடல் முழக்கம் தலைவியர்க்கு இடரா யிருந்ததும், அதனை அவர் இகழ்ந்து நின்றதும் இவற்றுள் உணர்ந்துகொள்க.

"பேணுன், துறந்தானை நாடும் இடம் விடாயாயின்
பிறங்கிரு முந்நீர் வெறுமணலாகப்
புறங்காவிறபோக இறைப்பேன்; முயலின்
அறம்புணையாகலும் உண்டு" இதில் ஒருத்தி கடலைச் செறுத்திருக்குந் திறத்தினையறிக. முந்நீர் = கடல்.

"அலைக்கும் ஆழி அடங்கிட அங்கையால்
மலைக்குலங்களில் தூர்க்கு மனத்தினள்
நிலைக்கும் வானில் நெடுமதி நீள்நிலா
மலைக்க நீங்கு மிடுக்கினள் மாந்துவாள்" (இராமாயணம்)

காமதாபமிகுந்த சூர்ப்பணகை கடலைச் சினந்து தூர்க்க முயன்று துடித்துநின்றபடியை இதில் ஊன்றிப்பார்க்க.

தனித்திருந்த காதலி தன் கணவனைப் பலவகையிலும் நினைத்து வருந்துவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை பிரபையால் உணரப்படும்.

## கதை.

பிரபை என்பவள் புட்பாருணன் என்னும் அரசனுடைய அருமை மனைவி. அறிவோடு அழகும் அமையப் பெற்றவள். "மதியும் கண்டு மயங்கு முகத்தினள்; புதிய மாந்தளிர்போன் றொளிர் மேனியள்; அதிமெய்ரூபவதி என யாவரும், துதிசெய் தேத்தத் துலங்கி யிருந்தனள்." இவளை இன்னுயிர்த் துணைவி யாக்கொண்டு அம் மன்னன் மகிழ்ந்தான். இவளது போக நலங்களைப் பொருந்தி நுகர்ந்து பெருங் களிப்போடு அவன் இருந்துவருங்கால் இடையே ஒருமுறை பிரிந்தகன்றான். அப் பிரிவிடை இவள் மறுகி இருந்தாள். உணவொழிந்து உடல பசந்து இடர் மிகுந்து விழி துயிலாமல் அழுதலமந்தாள். விரக தாபத்தால் இவள் அடைந்த துயரங்கள் அளவிடலரியன.

"அல்லலுற்றழுங்கும்; வாடும்; ஆவி சோரும்; மெல்லிதழ்ப்
பல்லவங்கள் தீயுமாறு பாயலிற் படுத்திடும்;
ஒல்லையிற் பதைக்கும்; நெட்டுயிர்ப்பு வீங்கும்; வார்கழை
வில்லிவாளி தன்னையார் விலக்குவார்கொல்? என்னுமால்"

இன்னவாறு இன்னல்மீக் கூர்ந்து இவள் இனைந்து கிடந் தாள். ஒருநாளிரவு சந்திரன் தோன்றியபோது காமதாபம் கனன்று நின்றதாதலால் அவனைக்குறித்து இவள் கொதித்துப் புலம்பினள்.

"செய்ய கமலமலர் கூம்பச் சேர்ந்தகொடிய வெண்திங்காள்!
வெய்யகதிர்வாள் வீசியுயிர் வீட்டியதனுற் புகழ் பெறுக;
பொய்யில் தவத்தின் நிற்பயந்த புணரிவேந்தின் குலம்வாழ்க;
மையல்கூர் என்றனை நாளும் வருத்தாதொழிதல் வேண்டுமால்.

*தண்ணங்கதிர்வெண்மதி என்பார்,தழலாய்முடிந்ததென்னளவும்;*
*வண்ணவரிவில் மதன்பகழி மலராமென்பார், அவையும் உயிர்*
*உண்ணும் அரவக்கணைபோல வுடற்றுநின்ற; ஒரு பாவிப்*
*பெண்ணென்றயல் தூற்றிடப் பிறந்தேற்கு இன்னும் ஏதாம்*
*பேருலகே?*

*அலைவாய் விடத்தி னுடன்தோன்றி ஆவிகவரும் வெண்ணெருப்பே*
*உலையாப் புவனம் அனைத்தும் அழலொருங்கு கொளுத்தும் நுதற்கண்ணன்*
*தலைமேலுனது கலையொன்றே தரித்தான் என்றால் மிகவுமுயிர்க்*
*கொலைசூழ்குநரில் நினைபோலும் கொடியாருளரோ? கூறென்றாள்”*

இவ்வாறு நிலைகுலைந்து புலம்பிப் படாத பாடுபட்டுப் பதைத்தலமந்தாள். முடிவில் காதலனிடம் ஓர் தூதனை விடுத்தாள். அவன் மறுபுலம் சூழ்ந்து அரசகாரியமா ஆழ்ந்துநின்றானாதலால் உடனே விரைந்து வரமுடியவில்லை காலம் நீளவே இவள் கலங்கி யுளைந்தாள். தன் நோய் நிலையை யுரைத்து விடுத்தும் நாயகன் வந்தருளவில்லையே என்று இவள் சிந்தை நொந்து தேம்பி அயர்ந்தாள். அன்பில்லாதவரிடம் ஆசைப்பாடுரைப் பதினும் துன்பஞ்செய் கடலைத் தூர்த்தொழிக்கலாமென நெஞ்சோடுளைந்து நெடிது புலந்தாள். உறார்க்கு உறு நோய் உரைப்பது பயனில் செயலாதலால் அதனினும் கடலைச் செறுதல் எளிதெனக் குளறிப் பிரிவுற்ற குல மகளிர் தனி வாழ்வில் மறுகி நிற்பரென்பதை உலகம் இவள்பால் உணர்ந்துநின்றது.

காதலனைக் கைவிட்டுக் காசினியில் வாழ்வதினும்
சாதல் இனிது தனி.

*காதலி கருத்தழிந்து நின்றமை இதனால் கூறப்பட்டது.*

### இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

தான் விழைந்துநின்ற காதலன் தன்னை விழைந்துகொண்ட போதுதான் காதலி இன்பமுடையளாய் இனிதமர்ந்திருப்பள். உலகிற்கு மழைபோல அவன் இவட்கு உயிராதாரமாம். அவன் அன்புசெய்த அளவே இவள் இன்புற்று வாழ்வள். அவன் விழைந்துவரானாயின் இவள் இழிந்துபடுவள். அவன் காதலுறானாயின் இவள் ஏதமுறுவள். ஒருதலைக் காமம் என்றும் உறு

துயரே யாம். கணவன் அகன்றால் காமன் காய்வன். துணை பிரிந்துவாழ்தல் துன்பமேயாகும். காதலன் சொல்லும் காதலிக்கு இன்பமாம். அவனது ஆதரவை நாடி இவள் ஆர்வமீக் கூர்வள்.

௱உ௰வது தனிப்படர் மிகுதி முற்றிற்று.

## 121-ம் அதிகாரம் நினைந்தவர் புலம்பல்.

அஃதாவது பிரிந்துள்ள தலைவனும் தலைவியும் ஒருவரை ஒருவர் நினைந்து புலம்புதல். புலம்பலாவது உள்ளமுருகி அயலறியத் துயர்நிலையோடு உரையாடி நிற்றல். தனித்த இருவரும் நினைத்தயர்தலை உணர்த்துகின்றமையால் நினைந்தவர் எனப் பன்மையால் குறித்தார். தனியே படர்மிகுந்தபோது இப் புலப்பம வெளிப்படுமாதலால் தனிப்படர்மிகுதியின்பின் வைக்கப்பட்டது.

**1201.** மாதை நினைந்து மகிழ்ந்தான் பெரிதாகக்
கோதைமுன் என்னே குமரேசா—காதலின்பை
உள்ளினும் தீராப் பெருமகிழ் செய்தலால்
கள்ளினுங் காம மினிது. (க)

இ—ள்.

குமரேசா! மாக் கோதை என்னு மன்னன் பிரிந்திருந்தபோதும் தன் மனைவியை ஏன் நினைந்து மகிழ்ந்தான்? எனின், உள்ளினும் தீராப் பெருமகிழ் செய்தலால் காமம் கள்ளினும் இனிது என்க. இது, தலைமகன் சொல்லி நின்றது.

உள்ளினும் = நினைத்தாலும். உம்மை அதன் எண்மை தோன்ற நின்றது. தீரா = நீங்காத. தீர்தல் = நீங்கல், முடிதல். தீராமையும் பெருமையும் மகிழ்ச்சிக்கு அடைகளாய் நின்றன. நீங்காது நெடிது நின்று அளவிற் சிறிதாயினும், பெரிதாய்த் தோன்றி உடனே தீர்ந்தொழியினும் அம் மகிழ்ச்சி சிறப்புறுதாதலால் அதன் சிறப்பியல்பை இங்ஙனம் விளக்கியருளினர். இதனால் அதன் நிலைமையும் தலைமையும் உணரலாகும்.

கள்ளினும் = கள்ளைக்காட்டிலும். இன் உருபு எல்லை பொருளது. இனிது = இன்பமுடையது.

களிப்பினை விளைக்கும் இயல்பினதாதலால் கள்ளும் இங்குக் கொள்ளநேர்ந்தது. கள், உண்டபோது மாத்திரம் சிறிது உவகையைச் செய்து பின்பு ஒழிந்துபோம்; காமம், கருதிய போதெல்லாம் பெரிதும் மகிழ்செய்து நெடிது நிற்கும் ஆதலால் அதனினும் இது இனிது என நின்றது. "உள்ளினும் இனித்திடும்; உரையில் கேள்வியில், கொள்ளினும் இனித்திடும்; கூர்ந்து காட்சியில், அள்ளினும் இனித்திடும் காமம் ஆதலால், தெள்ளமிர் ததனைதிர் செப்பலாகுமோ?" எனப் பண்டொரு தலைமகன் கொண்டாடி நின்றதும் ஈண்டுக் கண்டுகொள்க.

காமபோகத்தை நினைந்தாலும் நீங்காத பெருமகிழ்ச்சியைத் தருதலால் அது கள்ளினும் மிக்க இன்பமுடையதென்பதாம்.

தனியே பிரிந்திருந்த தலைமகன் தனது மனைவியை நினைத்தபோது தன் அகத்திலெழுந்த இன்ப நிலையை அன்பு ததும்ப உவந்துரைத்தபடி யிது.

காமம் உள்ளினும் மகிழ் செய்யும் என்றதனால் உரைப்பினும் கேட்பினும் காணினும் அது பெரிதும் இன்பமாம் என்பது பெறப்பட்டது. உள்ளுதலாவது காம நிலைபமாயுள்ள காதலர் ஒருவரை ஒருவர் பிரிந்தகன்றாலும் தாம் செறிந்திருந்த நிலையை நினைந்துகொள்ளல். அங்ஙனம் கொள்ளுங்கால் தன்னை யறியாமலே உள்ளம் உள்ளே உவந்து திகழும் என்க. "உள்ளாது அமைந்தோர் உள்ளும், உள்ளில் உள்ளம் உள்ளுள் உவந்தே" (நெய்தற்கலி 1) என்பதும் காண்க. தான் உள்ளியபொழுது தன் உள்ளத்திலெழுந்த இன்பப் பெருக்கை வியந்து நின்றானாதலால் கள்ளினும் இனிதே என உயர்வாக அதனைஉவந்துகூறினான்.

"அரிசன்மேனி நல்லாள் அணிதுகில் அசைவின் சீரால்
கரிசன மன்னகொங்கை காண்டலும் தளர்ந்து ஓர் காலை
தெரிசனந் தன்னில் ஈதுஎன் சிந்தையைப் பிணித்ததென்றால்,
பரிசனந்தனில் என்னுமோ? என்றுயிர் பதைத்து நின்றான்;

கற்பகவல்லி யன்னாள் ஒருத்திதன் காதல் மூழ்கி
அற்பகல் ஏவல்செய்வான் ஆங்கவள் செல்லும் போதிற்
பொற்புறு படாத்தி னீங்கிப் பூண்முலை சிறிது தோன்றப்
பற்பகல் நோற்று வேண்டும் பரிசில் பெற்றானை ஒத்தான்''
அரிசனம் = மஞ்சள். (கந்தபுராணம்)

காதலிகளைக் கண்டபோது தம் உள்ளங்கொண்ட இன்ப நிலைகளைக் காதலர் இதில் உவந்து உரைத்திருத்தலறிக.

பிரிந்த தலைமகன் காதலியை ஓயாது நினைந்திருந்தானாதலால்அந் நினைவில் நிகழ்ந்த நிலைபினை இவ்வாறு உவந்துரைத்தான்.

"உள்ளினென் அல்லனோ யானே? பள்ளி
நினைத்தனென் அல்லனோ பெரிதே? நினைத்து
மருண்டனென் அல்லனோ வுலகத்துப் பண்பே?
நீடிய மாஅத்த கோடுதோய் மலிர்நிறை
இறைத்துணை சென்றற் றாஅங்கு
அனைப்பெருங்காமம் மீண்டுகடைக்கொளவே" (குறுந்தொகை 99)

இது, பொருள் முற்றி மீண்ட தலைமகன் தான் பிரிவுற்றிருந்த போது உள்ளிநின்ற நிலையைத் தோழியிடம் உரைத்துவந்தபடியிது. மாத்தகோடு = மாமரத்தின் கிளை. அகன்ற அன்றில் இரைதேடி மாலைக்காலத்தில் தன் பேடையை நினைந்து விரைந்து வந்ததுபோல் தானும் பொருளீட்டி மனைவியை விழைந்து விரைந்து வந்ததாக இதில் அவன் உரைத்திருக்கும் நிலையைப்பார்க்க.

பிரிந்தகன்ற காதலன் தன் காதலியை நினைந்து நினைந்து மகிழ்ந்திருப்பன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மாக்கோதையால் உணரப்படும்.

## கதை.

மாக்கோதை என்பவன் சேரநாட்டு மன்னன். அருளும் ஆண்மையும்அமையப்பெற்றவன். கலைபலபயின்று இளமையிலேயே புலமைநிரம்பி இவன் நிலவியிருந்தான். இங்ஙனம் இளவரசனாயிருந்துவருங்கால் ஒருநாள் சந்திரலேகை என்னும் மங்கையைக்

கண்டான். அவள் அனுசரன் என்னும் குறுநிலமன்னனுடைய அருமைத் திருமகள். யாரும் எதிரிலாப் பேரழகுடையவள். அவளைக்கண்டவுடனே இவன் காதல்மீக்கொண்டான். அவளும் இவன்மேல் ஆர்வமீதூர்ந்தாள். ஊரவே ஈருயிரும் ஒருயிராய் உடனுவந்திசைந்தார். பின்பு பெற்றோரிசையப் பேரிசையோடு பேணிமணந்தார். அதன்பின் மணிமுடிபுனைந்து யாண்டும் தன் அருங் காதலியோடு ஒருங்கமர்ந்திருந்து பெரும் போகங்களை இவன் நுகர்ந்து வந்தான். அவளது இன்பநலங்களை நாளும் நாளும் இவன் இனிது மாந்தியும் யாதும் திளையாமல் மேலும் மேலும் மால்கொண்டு நின்றான் ஆராவியல்பினதாய அமிர்த நிலையமாய் இவனுக்கு அவள் இனிது அமர்ந்திருந்தாள்.

"பாலுள பவளச் செவ்வாய்ப் பணைமுலை நிகர்த்தமென்றோள்
வேலுள நோக்கினாளோர் மெல்லியல், வேலையன்ன
மாலுள சிந்தையானோர் மழையுள தடக்கையாற்கு
மேலுள அரம்பைமாதர் என்பதோர் விருப்பை யீந்தாள்"

என்றவண்ணம் அவள் ஈந்து வந்தாள். வருங்கால் மறுநில மன்னர் இருவர் பொருதிறங் கருதி முறுகி நின்றார். அவ் இருதிறத்திலு மிருந்து பெரியார் சிலர் வந்து அவ் அமர் நிலையை விளக்கி அவரைச் சமாதானம் செய்தருளும்படி இவனைத் தாழ்ந்து வேண்டினர். அங்குச் சென்றுவர விழைந்தான்; தன் துணைவியைத் தேற்றி யிருத்தி இவ் வென்றி வீரன் அவண் விரைந்து சென்றான். போர் முனையில் மூண்டுநின்ற அவர் இவ் ஆண்டகையைக் கண்டவுடனே அகமிக மகிழ்ந்து முக மலர்ந்து கொண்டார். இவனது அறிவுரையின்படியே அமர் துறந்து அவர் அமைதியுற்று நின்றார். அந் நிலையில் சின்னாள் அங்கு இவன் தங்கியிருந்தான். முன்பு மனைவியுடன் சேர்ந்திருந்தபோது நேர்ந்துநின்ற இன்பநலங்களை யெல்லாம் நினைந்து மகிழ்ந்தான். பின்பு காதலோடு வந்து ஆதரம் பெருக அணைந்திருந்தான். "காமம் உள்ளினும தீராப் பெருமகிழ் செய்யும்" என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான். உழுவலன்போடு தழுவியிருந்து உயர்ந்த போகங்களை உதவிவந்த அவள் முடிவில் ஒருநாள் முடிந்து போனாள். அவள் இறந்த ஞான்று பரிந்து

புலம்பி இவன் பதைத்து நின்றான். அன்று இவன் அலமந்து புலம்பியபடியை அடியில் பார்க்க.

"யாங்குப் பெரிதாயினும் நோயளவு எனைத்தே?
உயிர்செகுக் கல்லா மதுகைத் தன்மையின;
கள்ளிபோகிய களரியம் பறந்தலை,
வெள்ளிடைப் பொத்திய விளைவிறகு ஈமத்து
ஒள்ளழற்பள்ளிப் பாயல் சேர்த்தி
ஞாங்கர் மாய்ந்தனள் மடந்தை
இன்னும் வாழ்வல் என்னிதன் பண்பே?" (புறம் 245)

பறந்தலை = பாழிடம்; அஃதாவது சுடுகாடு. ஞாங்கர் = முன்பு. கள்ளிபடர்ந்த களர்நிலமாகிய புறங்காட்டில் கட்டை யடுக்கிக் கடுந்தீக் கொளுத்தித் தன் மனைவியைக் கிடத்தி இவன்மறுகி யழுதிருத்தலை இதில் ஊன்றி யுணர்ந்துகொள்க. துணைவி யிழந்த துயரம் எவ்வளவு பெரிதாயிருப்பினும் என்னுயிரை அது தொலைத்துக்கொண்டு போகவில்லையே! அந்தோ யான் இன்னும் இருக்கவேண்டுமா? என்று இம் மன்னன் மறுகிநின்றதைக் கண்டு பலரும் உருகி நின்றார். இவன் நாயகிபால் வைத திருந்த அன்பும், அவளை யாண்டு மறவாமல் ஆதரித்து நின்ற பண்பும், பிறவும் இதனால் அறியலாகும்.

உள்ளியபோ தெல்லாம் உயிர்தளிர்க்குங் காமம்போல்
தெள்ளமிர்த மாமோ தெளி.

காம இன்பத்தின் மேன்மை இதனால் கூறப்பட்டது.

1202. பண்டேம கண்டன்றன் பத்தினியை யெண்ணியின்பம்
கொண்டானீ தென்னே குமரேசா—கண்ட
எனைத்தொன் றினிதேகாண் காமந்தாம் வீழ்வார்
நினைப்ப வருவதொன் றில். (உ)

இ—ள்.

குமரேசா! தனது மனைவியை நினைந்தபோதெல்லாம் ஏமகண்டன் ஏன் இனிது உவந்தான்? எனின், தாம் வீழ்வார்

நினைப்ப வருவது ஒன்று இல்; காமம் எனைத்து ஒன்று இனிதே காண் என்க.

இது, பிரிந்துசென்ற தலைமகன் காமநிலையையுணர்ந்துநின்றது.

எனைத்து ஒன்று = எவ்விதத்தினும். இனிதே = இன்பமானதே. ஏகாரம் தேற்றம். காண் என்றது முன்னிலையில் தான் சொன்னது தெளிய நின்றது. நான் கண்ட இனிமையை நீயும் கருதிக் காண்க என்பதாம்.

நினைப்ப வருவது ஒன்று இல் = நினைப்பதனால் வருவதொரு துன்பம் இல்லை. ஆகலான் என்பதை வருவித்துக்கொள்க. நினைந்தால் துன்பம் வருமோ? என்று அஞ்சி யிருந்தானாதலால் அது வாராமையை உவந்து இங்ஙனம் வாயாடலானான். இல்லாமையால் இனிது என்றதனால் இருப்பதாயின் இன்னாதென்பதாயிற்று.

இனி, காதலியை நினைப்பதனால் வருவதொரு துன்பமில்லையாயின் காமம் எவ்வகையினும் இனிதாம் எனவும் இதற்குப் பொருள் கொள்ளலாகும். இல்லை ஆகலான் இனிது என்றதனால் இருப்பது ஒன்றுண்டாய் அவன் இன்னாமை எய்தி யிருந்தான் எனப் பாங்கன் தன்னுள் எண்ணிக்கொள்ளும்படி இஃது அமைந்திருக்கும் நிலையைப் பார்க்க.

மேல், நினைப்பினும் காமம் இன்பம் தரும் என்றார்; இதில், எனைத்தளவும் அஃது இனிதாம் என்கின்றார்.

தாம் விரும்பிநின்றவரை நினைந்துகொள்வதனால் வருவதொரு துன்பம் இல்லையாகலான் காமம் எவ்வகையினும் இன்பமாவதோர் இயல்பினதே என்பதாம்.

பிரிந்திருந்த தலைமகன் தன் தலைவியிடமிருந்து தூதாய் வந்த பாங்கனிடம் ஓதியபடி யிது. பிரிவுக்காலத்தில் காதலியை நினைத்தால் வேதனையாகுமாதலால் அங்ஙனமாகாவகை தன் அறிவால் அடக்கித் தான் ஆற்றியிருந்தபடியைத் தன் ஆண்மை தோன்ற இங்ஙனம் உரைத்தான் என்க.

புணர்ந்திருந்த காலத்தில் நிகழ்ந்தெழுந்த இன்ப நலங்களை யெல்லாம் பிரிந்து நின்றபோது நினைந்துகொள்ள நேரும்; அங்ஙனம் நேருங்கால் காதலர்க்கு ஆறாத் துயரமாய் அந் நினைப்பு மீறி நிற்குமாதலால் நினைப்ப வருவதை இங்கு எடுத்துக் கூறினான். பண்டொரு தலைமகன் பிரிவிடைத் தன் துணைவியை நினைந்து மறுகியிருக்கும் நிலையை இதனடியில்பார்க்க.

> "தூமலர்த் தாமரைப் பூவின் அங்கண்
> மாயிதழ்க் குவளை மலர் பிணைத்தன்ன
> திருமுகத்தலமரும் பெருமதர் மழைக்கண்
> அணிவளை முன்கை ஆயிதழ் மடந்தை
> வார்முலை முற்றத்து நூலிடை விலங்கினும்
> கவவுப்புலந்துறையும் கழிபெருங் காமத்து
> இன்புறு நுகர்ச்சியிற் சிறந்ததொன் றிலெனெ
> அன்பால் மொழிந்த என்மொழி கொள்ளாய்
> பொருள்புரி வுண்ட மருளில நெஞ்சே!
> கரியாப் பூவிற் பெரியோர் ஆர
> அழலெழு தித் திய மடுத்த யாமை
> நிழலுடை நெடுங்கயம் புகல்வேட் டாஅங்கு
> உள்ளுதல் ஓம்புமதி இனிநீ முள் எயிற்றுச்
> சின்மொழி அரிவை தோளே பன்மலை
> வெவ்வறை மருங்கின் வியன் சுரம்
> எவ்வம் கூர இறந்தனம் யாமே" (அகம் 361)

இது பொருளீட்டம் கருதிப் பிரிந்து சென்ற தலைமகன் இடைவழியில் தன் நெஞ்சினை இகழ்ந்து சொல்லியது. தழுவியிருந்த கை சிறிது நழுவினும் பெரிதும் வருந்தும் காதலர் காமம் போல் சிறந்த இன்பம் யாண்டும் இல்லை என அன்போடு யான் எடுத்துணர்த்தியதையும் கேளாமல், மடத்தனமாகப் பொருளாசை கொண்டு புறப்பட்ட நெஞ்சே! நெடுந்தூரம் கடந்து வந்துவிட்டோம்; இனிக் காதலியை நினைந்து நோதலுறுவதால் யாது பயன்? அடங்கியிரு; என மனத்தை நோக்கி அவன் முனிந்து புலம்பியிருக்கும் நிலையை இதில் ஊன்றி யுணர்ந்து கொள்க. வேள்வியில் பலியிடும்படி யூபத்தறியிலகப்பட்ட ஆமை, நீர் நிலையிலுள்ள தன் துணையை நினைப்பதுபோல் தான் வனத்திலகப்பட்டு நின்று மனையிலிருக்கும் துணைவியை நினைப்

பது என உவமை குறித்திருத்தலால் அவனது உள்ளக் கலக்கம் உணரலாகும்.

"நெடுமணி யூபத்திட்ட தவழ்நடை யாமை நீள் நீர்த்
தொடுமணிக் குவளைப் பட்டம் துணையொடு நினைப்பதேபோல்
கடுமணிக் கயற்கண் நல்லார் காமமும் பொருளும் சிந்தித்து
அடுமணி ஆவி நீப்பார் அறிவினுல் சிறிய நீரார்." (சிந்தாமணி)

மேற்குறித்த அகப்பாடலை அடியொற்றி வந்து மறுமை நோக்கில் அமைந்து உறுதி நிலையை இஃதுணர்த்திநிற்றலறிக.

வினைநலங்கருதி அகன்றிருந்த காதலன் தன் மனைவியை நினைந்து விரைந்து மீள்வன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை ஏமகண்டன்பால் உணரப்படும்.

கதை.

ஏமகண்டன் என்பவன் சோமகாந்தன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகன். அருந்திறலுடையவன். சவுராட்டிர தேசத்திலே தேவநகரம் என்னும் பதியிலிருந்தவன். கல்வியறிவிலும் வில் வலியிலும் மிகச் சிறந்தவன். இவன் சித்திரசேனை என்னும் கன்னியை மணந்து சிறந்த போகங்களை நுகர்ந்து அறங்கள் பல புரிந்து அரசு செய்து நின்றான். நல்ல சுகி. "சோதிக்கமழையெனவே சூதத் தளிர் எனவே சாதிக்குந் தோளினள்; தாளினள்; சீதளித்த, நீள் மண்டலத்து நிலாவும் இருளும் போல், கேழ்மந்த காசத்தாள்; கேசத்தாள்; சூழ் மணியின், பைக்கொண்ட மாதளையும் பங்கயமும் என்றுலகோர் கைக்கொண்ட தந்தத்தாள்; கந்தத்தாள்; செய்க்குள், மடையோதிமப்பெடைக்கும் வஞ்சிக் கொடிக்கும் இடையா நடையாள்; இடையாள்;" என்றபடி உருவிலும் இயலிலும் செயலிலும் சிறந்து இவன் மனைவி பேரழகோடு நிலவியிருந்தாளாதலால் அவளை ஓர் கணமும் பிரியாது ஆர்வமிகுந்து காம நலங்களைக் கனிந்து மாந்தி மகிழ்ந்திருந்தான். இங்ஙனம் இருந்துவருங்கால் பொருதிறங்கருதி ஒருமுறை இவன் பிரிந்துசென்றான். அப்பிரிவாற்றாது அவள் மறுகி யயர்ந்தாள். விரகவேதனையால் அவள் உருகி யுழல்வதைக் கண்டு அருகு வந்து தோழியர் ஆற்றி நின்றார். அவர் ஆற்றி யருளியும் அவள் ஆற்றாதலமந்தாள். "பூசு சாந்தம்

மெய்யினிற் பொருக்கெழுந்து தீர்தன; வீசும் ஆலவட்ட நெஞ்சில் விரக வெம்மை மூட்டின; வாசம் வீசு நெட்டுயிர்ப்பின் மாலை தீந்து வாடின; ஆசை நோயின் வெம்மை தன்னை ஆற்றலாகுமோ கொலாம்?'' என இவ்வாறு அவள் அலமந்தயர்தலை நோக்கி முடிவில் இவனிடம் ஒரு தூதனை விடுத்தார். வந்த அவனை முந்த நோக்கித் தன் சிந்தையின் நிலையை இவன் தெரித்து நின்றான். காமதாபத்தால் கலங்கியிருந்தும் அது ஏமஞ்செய்ததாகத் தன் பெருமிதம் தோன்ற எடுத்து மொழிந்தான். பின்பு அவனோடு அடுத்துவந்து, அவளை ஆதரித்து மகிழ்ந்தான். தாம வீழ்வார் நினைப்ப வருவதொன்றில்லை யாதலால் காமம் எனைத்தும் இனிதே எனக் காதலர் சமர்த்தோடு மொழிவரென்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

காதலியை நெஞ்சங் கருதுங்கால் இன்பமன்றி
ஏதம் வருவ திலை.

தலைவன் நினைத்திருந்த நிலை இதனால் கூறப்பட்டது.

---

1203. நேர்ந்த கணவன் நினைந்திலனோ வென்றமலை
கூர்ந்துளைந்தாள் என்னே குமரேசா—ஓர்ந்து
நினைப்பவர் போன்று நினையார்கொல் தும்மல்
சினைப்பது போன்று கெடும். (௩)

இ—ள்.

குமரேசா! தன் கணவன் தன்னை நினைக்கவில்லை என்று அமலை ஏன் உரைத்துளைந்தாள்? எனின், நினைப்பவர் போன்று நினையார்கொல்? தும்மல் சினைப்பது போன்று கெடும் என்க.

இது, தும்மல்மேல் வைத்து செம்மல்நிலை கூறுகின்றது.

சினைப்பது = அரும்பி யெழுவது. சினை என்பது உருக் கூடாத கருவை யுணர்த்திவருமாதலால் ஈண்டு சினைத்தல் அரும்புதல் மேல் நின்றது.

மேல், பிரிந்திருந்த காதலன் நினைந்தபடி கூறினான்; இதில், காதலி கருதி நின்றமையைக் கழறுகின்றாள்.

எனக்குத் தும்மல் எழுவதுபோல் தோன்றிப் பின்பு எழாது ஒழிகின்றதாதலால் என் காதலர் என்னை நினைக்கத் தொடங்கி நினையாமலமர்ந்திருக்க வேண்டும் என்பதாம்.

பிரிந்திருந்த தலைவி தன்னுள் எழுந்த தும்மல் நிலையைக் கொண்டு தனது நாயகன் தன்னை எண்ணியுள்ள நிலையை யூகத்தால் இசைத்து நின்றபடியிது. நிகழ்ந்த ஒன்றால் அனுமானம் செய்கின்றாளாதலால் "நினையார் கொல்?" என்று ஐயமுறக் கிளந்தாள். பொருளீட்ட விழைந்து போர் நாட்டத்துடன் அயலே அகன்றுபோன காதலன் நெடுநாளாக வராமையால் அவனை நினைந்து நினைந்து மறுகியிருந்த காதலிக்கு ஒருநாள் தும்மல் வந்தது; வந்தும் அது செம்மையாய் எழாமல் இடையே தேய்ந்தொழிந்தது; ஒழியவே அக் குறிப்பைக்கண்டு தன் கணவன் தன்னை நினைக்கத் தொடங்கி நினையா தொழிந்திருப்பர் எனத் தோழியிடம் அவள் மொழிந்தாளாதலால் தும்மலைக் குறித்துக் காட்டி இவ்வாறு உரைத்து நின்றாள்.

தூரத்திலுள்ள உரிமையாளர் ஒருவரை ஒருவர் நினைத்த பொழுது அந் நினைக்கப்பட்டவர்க்குத் தும்மல் எழும் என்பது உலக வழக்கமாதலால் அவ் அனுபவநிலை இங்கு அமையவந்தது. விக்கலையும் இவ்வாறு ஒக்க எண்ணுவர். தும்மல் நல்ல அடையாளமாகக் கருதப்படுதலால் அஃது இங்கு முன்னுற நின்றது.

"துனைகதிர் முகந்தென முகப்பத் தும்மினான்
சினைமறைந்தொருகுரல் சீவ என்றதே" (சிந்தாமணி)

தும்முதல் நன்னிமித்தமாக இதில் குறித்திருத்தலறிக.

பிரிவாற்றாது மறுகியுள்ள பெண்கள் எப்பொழுதும் தம் காதலரையே கருதியிருப்பராதலால் கண்டநிமித்தங்களையெல்லாம் உறுதியாகக்கொண்டு உளைந்து மொழிவர் என்பது இதனால் உணரலாகும்.

"நலந்துடிக்கின்றதோ? நான்செய் தீவினைச்
சலந்துடித்து இன்னமும் தருவதுண்மையோ?
பொலந்துடி மருங்குலாய்! புருவம் கண்முதல்
வலந்துடிக்கின்றில; வருவதோர்கிலேன்;

முனியொடு மிதிலையில் முதல்வன் முந்துநாள்
துனியறு புருவமும் தோளும் நாட்டமும
இனியன துடித்தன; ஈண்டும் ஆண்டென
நனிதுடிக்கின்றன; ஆய்ந்து நல்குவாய்!'' (இராமாயணம்)

இவை, சிறையிடைத் தேம்பியிருந்த சீதை திரிசடையை நோக்கி உரைசெய்தன. தனது இடக்கண், இடப் புருவம், இடத் தோள் துடிக்கின்றமையால் என்ன எய்துமோ? என ஏங்கி வினவி முன்னம் நேர்ந்த ஓர் நன்மையையும் விளக்கி அவ் அம்மை இதில் உரைத் துளேந்திருக்கு நிலையை யூன்றி யுணர்ந்து கொள்க. இராமநாதன் வருவதற்கு முன்னதாக இது நிகழ்ந்ததென்க. பெண்களுக்குக் கண்கள் முதலியன இடந் துடிக்கின் நலமாம்; வலந்துடிக்கின் அவலமாம் என்பது துடி நூல் விதியாதலால் அதனை அடியொற்றி இங்ஙனம் அறையலாயினள்.

காதலன் நினைந்துநின்ற நிலையைப் பிரிந்திருந்த காதலிகள் உளைந்து கூறுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை அமலைபால் உணரப்படும்.

## கதை.

அமலை என்பவள் விதைய தேசத்தரசனாகிய தத்தன் திருமகள். இளமை சுரந்து எழில் நலங் கனிந்து விழுமிய நிலையில் இவள் விளங்கியிருநதாள். இவளது உருவ அமைதியை வினவியறிந்து அரசிளங் குமரர்களனைவரும் உளமுருகி நின்றார். இவள் யாரையும் கருதாமல் சீவகன் குமரனாகிய கோவிந்தன் என்பவனையே காதலித்து வந்தாள். அவன் இவளுக்குத் தாய் மாமன் மகன்; பேரழகன்; அறிவும் ஆண்மையும் அமைதியுமுடையவன். இக் கட்டழகியை மணந்துகொண்டு யாதும் விட்டகலாமல் விழைந்தமர்ந்து காமபோகங்களை நுகர்ந்துவந்தான்; இவரது இன்ப நுகர்ச்சி தேவ போகம்போல் இனிதமர்ந்திருந்தது. இங்ஙனம் இருந்துவருங்கால் அரச காரியமாய் அவன் அயலகன்று சென்றான். இவள் துயர் மிகுந்து துடித்திருந்தாள். அவனை எண்ணுந்தோறும் கண்ணீர் சொரிந்து கலங்கி யயர்ந்தாள். ஒல்கி ஒசிந்து மெல்லிடை யலச இவள் அல்லலுழந்து அலமருதலைக்கண்டு பாங்கியரும் பரிந்து பதைத்து நின்றார்.

"தார்வாய்மூரலுமினவண்டின்சிறைமெல்லளியால் இடைதளர்ந்து
சோர்வாள் திதலை பரந்தமுலைத் துணையிணுப்பண்மைதோய்ந்த
கூர்வாள் நெடுங்கண் நீர்வார்தல், கொற்றமாரன் விரகம் எனும்
ஈர்வாள் கைக்கொண்டு உயிர்போழ்தற்கு எற்றுநூல் போன்றிருந்ததுவே".

என்றபடி விரகதாப மிகுந்து இவள் இருந்தலமந்தாள். இவ்வண்ணம் இருந்தயருங்கால் இடையிடையே விக்கல் தோன்றும் பொழுதெல்லாம் அண்ணல் என்னை எண்ணுகின்றார் எனப் பாங்கியரிடம் இவள் ஏங்கி யுரைத்தாள். ஒருநாள் தும்மல் எழுந்து தோன்றாது மறைந்தது; அவ்வமயம் அருகேயிருந்த அமிர்த சுந்தரி என்னும் தோழியைப் பார்த்து "நமது நாயகன் என்னை நினைக்கத் தொடங்கினார்; உடனே காரியமிகுதியால் வேறுபடலானார்;" எனத் தனக்கு நேர்ந்த தும்மல் நிகழ்ச்சியைச் சொல்லி விளக்கினாள். அவள் நல்லதெனை நகைத்து ஒல்லையில் வருவர் என உறுதி கூறினாள். அவ்வாறே அவன் வந்தருளினன்; இவள் விழைந்து புல்லி மகிழ்ந்திருந்தாள். பிரிந்த காதலிகள் தமக்கு நேர்ந்த தும்மல் நிலையைக் கொண்டு தம் காதலர் தம்மை நினைந்திருக்கவேண்டும் என்று உவந்திருப்பர் என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

நெஞ்சில் எனைநினைந்தும் நீளநின்றார் மீளவந்தே
அஞ்சலெனச் செய்யார் அருள்.

கருதியிருந்த தலைவி மறுகிநின்றமை இதனால் கூறப்பட்டது.

---

1204. தன்னெஞ்சில் தன்றுணையைத் தாரைமுன் கொண்டேனே
கொன்னே யுளைந்தாள் குமரேசா—மன்னியே
யாமு முளேங்கொல் அவர்நெஞ்சத் தெந்நெஞ்சத்
தோஒ வுளரே யவர். (௪)

ள.

குமரேசா! தன் நெஞ்சுள் தனது கொழுநன் இருப்ப தாகத் தாரை ஏன் உருகி உரைத்தாள்? எனின், ஓ எம் நெஞ்சத்து அவர் உளரே! அவர் நெஞ்சத்து யாமும் உளேம்கொல்? என்க. இது, தலைமகன் அக நிலையைத் தலைவி ஐயுறுகின்றது.

யாம் என்றது தலைவியை. உம்மை இறந்தது தழுவிய எச்சம் என்க. உளேம் கொல் = இருப்பேமாதுமோ? இவ்வாறு ஐயுறவோடு கூறியது அவரது செய்கையை நினைந்து, என்னை அவர் வந்தருளாமையால் என்க. அவர் என்றது தலைவனை.

ஓ உளரே = எப்பொழுதும் தங்கியிருக்கின்றாரே. ஓகாரம் வியப்பும் இரக்கமும் விளக்கி நின்றது. அளபெடை இசை நிறைக்கவந்தது. ஏகாரம் தேற்றம்.

மேல், தலைவர் என்னை நினைப்பரோ எனத் தலைவி யுளைந்தாள்; இதில், தான் அவனை நினைந்துள்ள நிலையை யுரைக்கின்றாள்.

எமது உளத்தில் எம் துணைவர் எப்பொழுதும் நிலைத்துள்ளாரே; அவர் நெஞ்சத்து யாமும் இவ்வாறு அமைந்திருப்பேமோ? என்பதாம்.

வினைமேல் பிரிந்துபோயுள்ள தலைமகனை நினைந்து கவன்றிருந்த தலைமகள் ஒருநாள் தோழியிடம் சொல்லியபடி யிது.

அயலே அகன்றுபோயிருக்கும் காதலனை இடையறாது நினைந்திருந்தாள் ஆதலால் அந் நினைப்பின் முதிர்ச்சியால் தன் நெஞ்சில் அவன் நிலைத்திருப்பதாகக் குறித்தாள். என்றும் நீங்காமல் என் நெஞ்சுள் இங்ஙனம் அவர் இருத்தல்போல் யானும் அவர் உள் இருப்பேனோ? என்பாள் "அவர் நெஞ்சத்து யாமும் உளேம் கொல்?" என்றாள்.

அவர் உளத்தில் யாம் உளேம் ஆயின் நம்மை விழைந்து இங்கு விரைந்து வந்தருளுவர்; அங்ஙனம் வாராமையால் யாம் இரேமோ? என ஐயுறவோடு இங்ஙனம் ஏங்கி நின்றாள். யாம் என்றது இயற்கையாகிய தனித்தன்மைப் பன்மை.

காதலன் வரவையே நினைந்து பலவகையாகக் கருதிக் காதலி மறுகுவள் என்பது கருத்து.

தன் கொழுநனை எப்பொழுதும் குலமகள் உளங்கொண்டிருப்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தாரைபால் உணரப்படும்.

## கதை

தாரை என்பவள் வாலியினுடைய அருமை மனைவி. பேரழகோடு பெருந்தகவு முடையவள். அருங்கலை அமைதி யள். மகா வீரனான வாலி இவளோடு அமர்ந்து இன்பம் நுகர்ந்து இசைதிசை பரப்பி இனிது வாழ்ந்து வந்தான். அவன் கருதியவாறெல்லாம் கனிந்தமைந்து உறுதித் துணைவியா யிவள் உடனுறைந்திருந்தாள். அரசியல் முதலாகப் பலவகை நிலையிலும் தனது தலைவனுக்கு இவள் நலமிகச் செய்தாள். "அன்னை தயையும்; அடியாள் பணியும்; மலர்ப் பொன்னின் அழகும்; புவிப் பொறையும்; நன்னயஞ்சேர், வேசி துயிலும்; விறல் மந்திரி மதியும்; பேசில் இவையுடையாள் பெண்" என்றபடி இப் பெண்ணரசி நண்ணியிருந்தாள். கண்ணினும் இனியளா அவ் அண்ணல் இவளை எண்ணி நின்றான். துந்துபி என்னும் தானவனோடு போர்வேட்டெழுந்து அம் மானவன் பிரிந்தபோது இவள் மறுகி அயர்ந்தாள்; வெற்றி யெய்தி அவ் ஆண்டகை மீண்டுவந்தவுடன் உயிர்பெற்ற உடல்போல் இவள் உயர்ந்து விளங்கினாள். இங்ஙனம் யாதும் பிரிவாற்றாது இம் மாதரசி மருவிவருங்கால் தன் தம்பியான சுக்கிரீவன் மீது அவன் வெம்பி எழுந்தான்; அவ் அமயம் இவள் இடைபுகுந்து தடுத்தாள்.

> "ஆயிடைத் தாரை என்று அமிழ்திற்றோன்றிய,
> வேயிடைத்தோளினாள் இடை விலக்கினாள்;
> வாயிடைப் புகைவர வாலி சண்வரும்
> தீயிடைத் தன்னெடுங் கூந்தல் தீகின்றாள்"

இங்ஙனம் ஊழித் தீயெனக் கொதித்தெழுந்த அவன் முன் குளிர்ந்த முகத்தினளாய் வளைந்துகொண்டு தெளிந்த வுண்மையை உறுதிபெற இவள் மொழிந்தினாள். இராமன் என்னும் போர் வீரனை நும் தம்பி துணைக்கொண்டு வந்திருப்பதாக வதந்தி ஆதலால் இதுபொழுதமைந்தருளவேண்டும் என்று பணிந்து வேண்டினாள்.

> "கொற்றவ! நின்பெருங் குவவுத்தோள்வலிக்கு
> இற்றவ னல்லனால் ஈடுண்டு வருவான்
> பெற்றிலன்; பிறந்திலன்; பெயர்த்தும போர்செயற்கு
> உற்றது நெடுந்துணை யுடைமையால் என்றாள்"

இவ்வாறு இவள் உறுதிகூறி நின்றும் அவன் ஊக்கிச் சென்றான்; சென்றவன் தம்பியோடு பொருது இராம பாணத்தால் பொன்றி விழுந்தான். அதனை அறிந்து ஆவி துடித்து ஓவென அலறி அவன்மேல் உருகி வீழ்ந்து மறுகியழுதாள். இவள் அழுதபடியை அடியில் பார்க்க.

"வேய்ங்குழல், விழிகொள்நல்யாழ், வீணை என்றினைய நாண
ஏங்கினள்; இரங்கிவிம்மி யுருகினள்; இருகை கூப்பித்
தாங்கினள் தலையிற்சோர்ந்து சரிந்து தாழ்குழல்கள் தள்ளி
ஓங்கிய குரலால்பன்னி இனையன உரைக்கலுற்றாள். (1)

வரைசேர் தோளிடை நாளும் வைகுவேன்;
கரைசேரா இடர்வேலை காண்கலேன;
உரைசேர் ஆர் உயிரே! என் உள்ளமே!
அரைசே! யானிதுகாண அஞ்சினேன்; (2)

நய்யா நின்றனன் நானிருந் திங்ஙன்
மெய்வானோர் திரு நாடு மேவினாய்
அய்யா நீஎனது ஆவி என்பது
பொய்யோ? பொய்யுரையாத புண்ணியா! (3)

செருவார்தோளா! நின் சிந்தையுளேன் எனின்,
மருவார் வெஞ்சரம் எனையும் வௌவுமால்;
ஒருவேனுள் உளையாகின், உய்தியால்;
இருவேமுள் இருவேம் இருந்திலேம்; (4)

எந்தாய் நீ அமிழ்தீய யாமெலாம்
உய்ந்தேமென்று உபகார முன்னுவார்
நந்தா நாண்மலர் சிந்தி நண்பொடு
வந்தாரோ எதிர் வானுளோரெலாம்" (இராமாயணம்)

இன்னவாறு பல பன்னி யழுது பதைத்தலமந்தாள். "ஐயா! நீ எனது ஆவி என்றதும் பொய்யோ?" எனவும், நான் "நின் சிந்தையுளேன் எனின் மருவார் வெஞ்சரம் எனையும் வௌவுமால்" எனவும் தன் காதலனை நோக்கி இவள் கரைந்திருக்கும் நிலையையும், கருத்தமைதியையும் ஊன்றியுணர்ந்து கொள்க. இதனால் இவளது உழுவலன்புடைமையும உள்ளப் பண்பும் இனிதறியலாகும். "அவர் நெஞ்சத்து யாமும் உளேம

கொல்?" எனப் பிரிந்த காதலியர் தம் கணவரை நோக்கிக் கவன்றிருப்பர் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்துநின்றது.

என்னெஞ் சிருந்தார் இருந்தும் வரவொழிந்து
வன்னெஞ்ச ராஞர் மறந்து.

பிரிந்த கணவனைத் தலைவி நினைந்திருந்த நிலை இதனால் கூறப்பட்டது.

---

1205. கண்டாள்தன் னெஞ்சத்தே காதலனை நக்கண்ணை
கொண்டே னிகழ்ந்தாள் குமரேசா—தண்டாமல்
தந்நெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார் நாணார்கொல்
எந்நெஞ்சத் தோவா வரல். (ரு)

இ—ள்.

குமரேசா! காதலன் வந்து தன் நெஞ்சத்துள் நின்றான் என நக்கண்ணை ஏன் வெஞ்சொற் புகன்றாள்? எனின், தம நெஞ்சத்து எம்மைக் கடிகொண்டார் எம் நெஞ்சத்து ஓவா வரல் நாணார் கொல் என்க.

இது, தன் நெஞ்சினிலையை வஞ்சி யுரைக்கின்றது.

தம் என்றது தலைவனை. எம் என்றது தலைவியை. கடி = காவல், நீக்கல், கடிகொண்டார் என்றது அவர்அகத்தில் நாம் நுழையாவண்ணம் பாதுகாத்து நின்றார் என்றவாறு. "கொல் லேற்றுச் சுறவினம் கடிகொண்ட மருண்மாலை" (நெய்தற்கலி 6) "கொடியோரின்று அவன் கடியுடை வியன்புலம்" (பெரும் பாண் 41) இவற்றுள் கடி உணர்த்தி நிற்றல் காண்க.
ஓவாவரல் = இடையறாது வருதலை. ஓவுதல் = இடையறுதல்.

மேல், தலைவன் தன்னை நினைந்திருப்பனோ? என்று தலைவி யுளைந்தாள்; இதில், அங்ஙனமில்லையென இகழ்ந்து நிற்கின்றாள்.

தம்முடைய நெஞ்சில் நாம் புகாவகை நம்மைக் கடிந்துள்ள காதலர் எம்முடைய நெஞ்சுள் ஓயாது வருவதை நாணரோ? என்பதாம். நாணின் வரார் என்பது குறிப்பு.

பிரிவாற்றாமல் தனியே வருந்தியிருந்த தலைவி தன் தோழியிடம் மொழிந்தபடியிது. இரவும் பகலும் இடையறாது தன் நாயகனை நினைந்திருந்தாளாதலால் தலைவி யுளத்தில் அவன் உருவத்தோற்றம் நிலையாக வந்துகொண்டிருந்தது; ஆகவே "ஓவாவரல்" என இங்ஙனம் உரைத்து நின்றாள். தன்னையும் இவ்வாறே நினைந்து அவர் நெஞ்சகங்கொண்டிருந்தால் இங்கு விரைந்து வந்திருப்பாரே யன்றி இவ்வளவு தாமதமாய் அங்கு அமர்ந்திரார் எனப் புலந்து கொண்டாள் ஆதலால் "தம் நெஞ்சத்து எம்மைக் கடிகொண்டார்" என்றாள். தன் அகத்தில் என்னை ஒருபோதும் ஏற்றுக்கொள்ளாத அவர் என் அகத்து ஓயாமல் வருகின்றாரே! இவருக்கு வெட்கமில்லையா? என்பாள் நாணார்கொல்? என்றாள்.

காதலனை நினைந்து காதல் மிகுதியால் அலந்துநிற்கும் குலமகளிர் இவ்வண்ணம் புலந்து புலம்பிநிற்பர் என்க.

"தெருவே திரிவார் ஒரு சேவகனார்
இருபோதும் விடார் இது என்னைகொலாம்?
கருமாமுகில்போல்பவர் கன்னியர்பால்
வருவார் உளரோ? குல மன்னவரே" (இராமாயணம்)

இது, சீதை உரைத்தது. தன் நெஞ்சத்துள் இராமன் ஓவாது வந்துள்ளான் என அத் தேவி உளைந்து கூறியிருக்கும் அழகை இதில் ஊன்றியுணர்ந்துகொள்க.

தலைவன் எண்ணாதிருக்கும் நிலையைத் தலைவி எண்ணியுருகுவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை நக்கண்ணைபால் உணரப்படும்.

## கதை.

நக்கண்ணை என்பவள் பெருங்கோழி நாய்கன் என்னும் வணிகர் தலைவனுடைய அருமைத் திருமகள். பேரழகுடையவள். கல்வியறிவிலும் செல்வ நிலையிலும் இவள் மிகச் சிறந்திருந்தாள். "சேலெனப் பிறழ்ந்து வேலென மிளிர்ந்து செவ்வரி படர்ந்து தெள்ளமிர்தம், போலயல் வெளுத்து மாலெனக் கருகிப் பொலி.

வுறும் எழில்மிகு விழியாள்" எனத் தன் பெயரியல்புக் கேற்பக் கண்ணழகில் இவள் உயர் வெய்தியிருந்தாள். இவள் தகுதிக் கேற்ற வரனமையாமையால் தன் மரபி லெவர்க்கும் மணம் நேராமல் தனியிருந்து வந்தாள். இவள் குமரிருந்து வருவதைத் தமரறிந்திரங்கினர். இங்ஙனம் இரங்கிவருங்கால் ஒருநாள் இவள் பெருநற்கிள்ளி என்னும் அரசிளங் குமரனைக் கண்டாள்; ஆர்வ மீக் கொண்டாள். அவன் தித்தன் என்னும் சோழ மன்ன னுடைய மகன். நல்ல ஆண்மையாளன். அவனைக் கண்ட வுடனே காதல்மீக் கூர்ந்து கைவளை சோர்ந்து அஞ்சி நாணி இவள் அலமந்து நின்றாள். அந் நிலையை அடியில் பார்க்க.

> " அடிபுனை தொடுகழல் மையணற் காளைக்கு என்
> தொடிகழித் திடுதல்யான் யாய் அஞ்சுவலே;
> அடுதோள் முயங்கல் அவை நாணுவலே;
> என்போற் பெருவிதுப் புறுக என்றும்
> ஒருபாற் படாஅ தாகி
> இருபாற் பட்டஇம் மையலூரே" (புறம் 83)

இது, நக்கண்ணை யுரைத்தது. மைஅணல் = கரிய மீசை. அவனைப் பார்த்தபோது உளமுடைந்து வளை துறந்து உருகி புணர்ந்து தழுவ விழைந்ததும், தாய்க்குப் பயந்து ஊர்க்கு நாணி இவள் தவித்து நின்றதும், பிறவும் இதன்கண் அறிந்துகொள்ள வாகும். இங்ஙனம் ஆவலுற்று நின்ற இவளை அவனும் காத லித்துக் கலந்து மகிழ்ந்தான். களவு நிலையில் இவ்வண்ண முய ங்கி வருங்கால் இவளது ஊரகத்து ஆமூர் மல்லன் என்னும் வீரனுக்கும் அவனுக்கும் ஓர் போர் மூண்டது. அதில் அம் மல் லனை அவன் விரைந்து வென்றான். அவனது போராற்றலை வியந்து அவ்வூரவர் புகழ்ந்தார். சிலர் மாறுகி நின்றார். தன் காதலன் போர்த்திறத்தை ஒருழை யொதுங்கி நேரில் இவள் பார்த்து நின்றுளாதலால் வேற்றுப் புலநிலையை விளக்கிப் பாட்டு ஒன்று பாடினாள். அடியில் வருவது காண்க.

> " என்னைக்கு ஊரிஃது அன்மையானும்,
> என்னைக்கு நாடிஃது அன்மையானும்,

ஆடா டென்ப ஒருசா ரோரே;
ஆடன் றென்ப ஒருசா ரோரே;
நல்ல பல்லோர் இருநன் மொழியே;
அஞ்சிலம்பு ஒலிப்ப ஓடி எம்மில்
முழாவரைப் போந்தை பொருந்தி நின்று
யான் கண்டனன் அவன் ஆடு ஆகுதலே" (புறம் 85)

என்ஐ = என்னுடைய தலைவன். ஆடு = வெற்றி. தன் காதலன் வென்றிருந்தும் அவனை அயலான் என்று கருதி ஊரவர் சிலர் மாறாய் நின்றதைக் குறித்து இவள் மறுகி யுரைத்து உறுதிசெய்துவந்துள்ளமையை இதில் ஊன்றியுணர்ந்துகொள்க. இவ்வாறு பேராவலோடு பேணிநின்ற இவளை அவன் உலகமறிய மணந்து அலகில் போகங்களை நுகர்ந்து அரசுபுரிந்துவந்தான். யாதும் இடைபிரியாது உடலுயிர்போல இவ்விருவரும் ஒருமையோடு உரிமைசெய்து நின்றார். நின்றுவருங்கால் ஒருமுறை மறுபுல மன்னரோடு பொருதிறங்கருதி அவன்போக நேர்ந்தது. இவளை ஆற்றித் தேற்றி அமர்த்திவிட்டு அகன்றுபோனான். போன அவன் அங்கு வினையில் மூண்டு நின்றமையால் மனையில் மீண்டுவர நினையாமல் சிறிது நீண்டு நின்றான். அவனை நினைந்து நினைந்து இவள் நெஞ்சுளைந்திருந்தாள். ஒருநாளிரவு அருகேயிருந்த பிருகளை என்னும் தோழியை நோக்கித் தன் காதலன் வாராமையைக் குறித்துக் கடுத்து மொழிந்தாள். நான் அவரை நினைந்திருத்தல்போல் என்னையும் அவர் எண்ணியிருப்பாராயின் இங்கு இப்படி எய்தாதிருப்பாரா? என்று வெய்துயிர்த்தாள். தன் நெஞ்சில் என்னைக் கடிந்துள்ளவர் என் நெஞ்சில் நாளும் வந்து குடிகொண்டுள்ளார் எனப் பிரிந்துள்ள குலமகளிர் வருந்தி மொழிவர் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

தாமெம்மை எண்ணார் தமையெண்ணி எம்முள்ளம்
வேமால் விரைந்து விழைந்து.

தலைவனை நினைந்து தலைவி தவித்துள்ளமை இதனால் கூறப் பட்டது.

1206. உற்ற துணையைமுன் உள்ளிநின்ற நீலிபின்
குற்றமென்றேன் மாண்டாள் குமரேசா—பற்றமைந்து
மற்றியா னென்னுளேன் மன்னோ அவரொடியா
னுற்றநா ளுள்ள வுளேன். (சு)

இ—ள்.

குமரேசா! தன் கொழுநனையே நீலி ஏன் நினைந்திருந்தாள்? எனின், யான் மற்று என்னுளேன்? யான் அவரோடு உற்றநாள் உள்ள உளேன் என்க.

இது, உடையானை உள்ளாவழி உயிர் நில்லாதென்கின்றது. யான் என்றது தலைவியை. இருமுறை கூறியது புற நிலையிலும் அக நிலையிலும் தான் அமைந்திருக்கும்நிலையை அறிந்துகொள்ள. நாள் என்றது கொழுநனோடு கூடியிருந்த காலத்தை. அந் நாளில் நிகழ்ந்த இன்பநலங்களை நாள் என்றதனால்இஃது ஆகு பெயர். உள்ளஉளேன்—நினைத்தலால் நிலைத்திருக்கின்றேன்.

மேல், என்னை அவர் மறந்திருந்தும் நான் அவரை நினைந்துள்ளேன் என்றாள்; இதில், அங்ஙனம் நினைந்து வருதலினாலே தான் உயிர் அமர்ந்து உள்ள தென்கின்றாள்.

என் காதலனோடு புணர்ந்திருந்த நாளை நினைநதுள்ளதனாலேதான் நான் இவ்வளவிலாவது உயிர் வாழ்ந்திருக்கின்றேன்; அதனைத் தவிர வேறு எனக்கு யாதுள்ளதென்பதாம்.

பிரிந்துபோன காதலனை நினைந்து நினைந்து ஏங்கியிருந்த தலைவியை ஒருநாள் தோழி நெருங்கி இப்படி ஓயாமல் உள்ளுதலினாலேதான் உயிர் உலர்ந்து படுகின்றாய்; நம வள்ளல்வந்தருளுவார்; நீ உள்ளாது சிறிது ஓய்ந்திரு; என உணர்த்தியபொழுது அவள் உரைத்தபடி யிது.

காதலனிடமிருந்து தூது முதலியன யாதும் வாராமையை நினைந்து வேதனையோடு வெய்துயிர்த்துத் தன் உயிர்வாழ்க்கைக்கு ஒரு பற்றுக்கோடும் இல்லையே என்று உளைந்து நின்றாளாதலால் "மற்று யான் என்னுளேன்" என்றாள். நாயகனோடு சேர்ந்திருந்தபோது நேர்ந்திருந்த இன்பநலங்களை நினையுந

கடல்கால் கிளர்ந்த வென்றி நல்வேல
வான வரம்பன் அடல்முனைக் கலங்கிய
உடைமதில் ஓரரண் போல
அஞ்சுவரு நோயொடு துஞ்சாதேனே" (அகம் 45)

காதலன் அகன்று போனதையும், தம்மேனிமேல் பசலை பாய்ந்து நிற்றலையும் நினைந்து வருந்தி நோயொடு உழல்வேனோ என இங்ஙனம் வாய்விட்டலறினர். மற்றொருமுறை கனவிடைத் தம் கணவனைக் கண்டு நனவினி விழுந்து மீண்டும் அவரைக் கண்டாலன்றி யான் உயிர் வாழேன் என்று துயர்மீக் கூர்ந்தார்.

"எல்விற் றென்னான் வெல்வே லேந்தி
நசைதர வந்த நன்னராளன்
நெஞ்சுபழு தாக வறுவியன் பெயரின்
இன்றிப் பொழுதும் யான் வாழலனே;
எவன்கொல்வாழி தோழி! நம் மிடை முலைச்
சுணங்கணி முற்றத்து ஆரம் போலவும்
சிலம்பு நீடு சோலைச் சிதர் தூங்கு நளிர்ப்பின்
இலங்கு வெள்ளருவி போலவும்
நிலங்கொண்டனவால் திங்களங் கதிரே" அகம் (362)

இவ்வாறு துயருழந்திருந்த இவர் பின்பு கொழுநனைக் காண விழைந்து வெளியேறித் தேடத் துணிந்தார். பிரிவுத் துயரால் உளைந்துமெலிந்து இவர் அலைந்தலமந்த நிலையினுக்கிரங்கிப்பலரும் வருந்தினர்.

"நெறிபடு கவலை நிரம்பா நீளிடை
வெள்ளி வீதியைப் போல நன்றுஞ்
செலவயர்ந்திசினால் யானே பல புலந்து
உண்ணா வுயக்கமொடு உயிர் செலச் சாஅய்த்
தோளும் தொல்கவின் தொலைய நாளும்
பிரிந்தோர் பெயர்வுக்கு இரங்கி
மருந்துபிறி தின்மையின் இருந்து வினையிலனே" (அகம் 147)

இது, ஔவையார் பாடியது. செல வுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொல்லியதாகத் துறை யமைத்துச் சொல்லியபடி

கடல்கால் கிளர்ந்த வென்றி நல்வேல
வான வரம்பன் அடல்முனைக் கலங்கிய
உடைமதில் ஓரரண் போல
அஞ்சுவரு நோயொடு துஞ்சாதேனே " (அகம் 45)

காதலன் அகன்று போனதையும், தம்மேனிமேல் பசலை பாய்ந்து நிற்றலையும் நினைந்து வருந்தி நோயொடு உழல்வேனே என இங்ஙனம் வாய்விட்டலறினார். மற்றொருமுறை கனவிடைத் தம் கணவனைக் கண்டு நனவினி விழுந்து மீண்டும் அவரைக் கண்டாலன்றி யான் உயிர் வாழேன் என்று துயர்மீக் கூர்ந்தார்.

" எல்லிற் றென்றான் வெல்வே லேந்தி
நசைதர வந்த நன்னராளன்
நெஞ்சுபழு தாக வறுவியன் பெயரின்
இன்றிப் பொழுதும் யான் வாழலனே;
எவன்கொல்வாழி தோழி! நம் மிடை முலைச்
சுணங்கணி முற்றத்து ஆரம் போலவும்
சிலம்பு நீடு சோலைச் சிதர் தூங்கு நளிர்ப்பின்
இவங்கு வெள்ளருவி போலவும்
நிலங்கொண்டனவால் திங்களங் கதிரே" அகம் (362)

இவ்வாறு துயருழந்திருந்த இவர் பின்பு கொழுநனைக் காண விழைந்து வெளியேறித் தேடத் துணிந்தார். பிரிவுத் துயரால் உளைந்துமெலிந்து இவர் அலைந்தலமந்த நிலையினுக்கிரங்கிப்பலரும் வருந்தினார்.

" நெறிபடு கவலை நிரம்பா நீளிடை
வெள்ளி வீதியைப் போல நன்றுஞ்
செலவயர்ந்திசினால் யானே பல புலந்து
உண்ணா வுயக்கமொடு உயிர் செலச் சாஅய்த்
தோளும் தொல்கவின் தொலைய நாளும்
பிரிந்தோர் பெயர்வுக்கு இரங்கி
மருந்துபிறி தின்மையின் இருந்து வினையிலனே" (அகம் 147)

இது, ஔவையார் பாடியது. செல வுணர்த்திய தோழிக்குத் தலை மகள் சொல்லியதாகத் துறை யமைத்துச் சொல்லியபடி

தருவதாகும். கன்று பால்நுகர்வதுபோல் தம் இன்ப நலத்தைக் கொண்கன் நுகரவில்லையே என்ற இதனால் அவன்பால் இவர் வைத்துள்ள அன்பு நிலை புலனும். இங்ஙனம் வருந்தி நின்ற இவர் முடிவில் அவனைக் கண்டு மகிழ்ந்தார். உடனே பசப்பு நீங்கியது; இவர் உவப்பு மீக் கொண்டார். ஒரு நாள் தோழி எதிர்ந்து முன்பு பசந்திருந்தபடியைப் பரிந்து மொழிந்தாள். உடையவனுல்வந்த உரிமையினுல் உடல்மீது இங்ஙனம் அலைந்து இவர்ந்துநின்றதென இவர் உவந்து பகர்ந்தார். "அவர் தந்தாரென்னுந் தகையால் இவர்தந்து என்மேனிமேல் பசப்பு ஊரும்" என்பதை உலகம்காண இவர் உணர்த்தி நின்முர்.

தண்டாமல் வெம்பசலை தானிவர்ந்து நின்றதிது
கோண்டான் கோடுத்த கோடை.

பசப்பின் படர்ச்சி இதனால் கூறப்பட்டது.

1183 உள்ளநாண் சாயல் ஒருங்கிழந்து சாந்தையேன்
கொள்ளைநோய் கொண்டாள் குமரேசா—தள்ளரிய
சாயலும் நாணும் அவர்கொண்டார் கைம்மாறு
நோயும் பசலையுந் தந்து. (ங)

இ—ள்.

குமரேசா! நாணமும் சாயலும் இழந்து சாந்தை ஏன் காமநோய் கூர்ந்தாள்? எனின், கைம்மாறுநோயும் பசலையும் தந்து சாயலும் நாணும் அவர் கொண்டார் என்க.

சாயல் = அழகு. இளமைதவழ்ந்து மெல்லிய நீர்மையோடு மகளிர் மேனியில் திகழும் எழிலமைதியை உணர்த்திவரும் இதனை மென்மை என்பர். "சாயல்மென்மை"(தொல்காப்பியம்) என்பதும் காண்க. மென்மையோடமைந்த இனிய பொலிவினை உருவிலுடையதாதலால் மயிலினை மாதர்சாயலுக்கு உவமைகூறுவர். "மயிலன்ன சாயலாய்" (ஏலாதி), "மயில்மயில் குளிக்குஞ் சாயல் சாஅய்" (சிறுபாண்), "இவள்தன்போற் சாயல் மஞ்ஞைக்

சா! தன் கணவனை மறந்தறியேன் என இரா வதி ஏன் உளைந்துரைத்தாள்? எனின், மறப்பின் எவன் ஆவன் மன்கொல் மறப்பு அறியேன் உள்ளினும் உள்ளம் சுடும் என்க.

இது, தலைவி உள்ளியிருந்தமையை உணர்த்துகின்றது.

மறப்பின் = மறந்துவிடின். எவன் ஆவன் = என்னநிலை யாவனோ? இறந்துபடுவேன் என்றவாறு. மன்னும் கொல்லும் ஒழிவும் ஐயமும் உணர்த்தி நின்றன.

மேல், நினைப்பினாலேதான் நிலைத்துள்ளேன் என்றாள்; இதில், மறப்பேனாயின் இறப்பேன் என்கின்றாள்.

மறத்தலறியாதயான் காதலனை நினைக்கவும் என் நெஞ்சத் தைச் சுடுகின்றது; இனி மறந்துவிடின் என்னாவன்? என்பதாம்.

மறப்பறியேன் என்றதனால் அவளது நினைப்புநிலை தெளிய லாம். தான் மறந்தாலும் தன் நெஞ்சம் மறவாதெனக் கொழுநன் மேல் தனக்குள்ள உழுவலன்பினை இவ்வாறு உரைத்துநின்றாள்.

காதலனை நினைந்து நினைந்து நெடுங்கவல்கொண்டு தவித் திருந்த தலைவியைத் தோழி நெருங்கி "நினைப்பினாலேதான் இப்படி உருக்குலைந்து போகின்றாய்; நினையாமல் சிறிது ஆறி யிரு" எனத் தேறுதல் சொல்லியபொழுது அவள் கூறியபடியிது.

ஓயாமல் நினைந்து கொண்டிருக்கும் பொழுதே பிரிவுத் துயரம் எரிபோல் நீண்டு என் நெஞ்சைச் சுட்டெரிக்கின்றதே! நினையாதொழியின் என்நிலை என்னாம்? என உளங்கலங்கி உரைக்கின்றாளாதலால் "மறப்பின் எவனாவன் கொல்?" என்றாள்.

உள்ளின் உள்ளம் வேகின்றது; உள்ளாது மறப்பினோ உயிர் இறப்பதாம்; இங்ஙனம் இருதலைக் கொள்ளியின் உள்ளே றும் பொத்து யான் உயிர்பதைத்தலமர அவர் ஒன்றும் பாரா மல் பாராமுகமாய் நின்றுள்ளாரே! என்று தனது துணைவன் வரா மையை நினைந்து இவ்வாறு மனமறுகி நின்றாள் என்க.

"உள்ளின் உள்ளம் வேமே; உள்ளா
திருப்பின், எம் அளவைத்தன்றே; வருத்தி
வானோர் வறறே காமம்;
சான்றோரல்லர்யாம் மரீஇயோரே" (குறுந்தொகை 102).

மரீஇயோர் = மருவி நின்றவர்; தலைவர் என்க. ஓர் தலைவி பிரிவாற்றாமல் நினைந்து புலம்பி யிருக்கும் நிலைமை இஃது துணர்த்தி நிற்றல் காண்க. அடிகள் குறிப்பை இது அடியொற்றிவந்துள்ளமை அறியலாகும்.

பிரிந்துள்ள குலமகள் தன் கொழுநனை நினைந்து கவல்வள் என்பது கருத்து. இவ்வுண்மை இராவதிபால் உணரப்படும்.

## கதை.

இராவதி என்பவள் விராட தேசத்து வேந்தனாகிய உத்தரனுடைய அருமைத் திருமகள். உத்தம குணங்கள் யாவும் ஒருங்கமையப் பெற்றவள். சித்திரக் கலையிலும் இசையிலும் எத திறத்தவரும் ஏத்த நின்றவள். பேரெழிலுடையவள். பருவமெய்தி உருவ நலங்கனிந்து விழுமிய நிலையில் விளங்கியிருக்குங்கால் பரிட்சித்து மன்னன் இவளை விழைந்து நின்றான். தனக்கு மாமிமகனாய் மருவிநின்ற அக்கோமகன் மீது காதல் கூர்ந்து இவளும் கருத்துருகியிருந்தாள். அவன் சிறந்த சீருடன் விரைந்துவந்து இவளை மணந்துகொண்டு அத்தினபுரியை யடைந்து அரும்பெற லின்பங்களை நுகர்ந்து அகமிக மகிழ்ந்தான். இவளது போக நலங்களைப் பொருந்திமாந்தி யாதுந்திளையாமல அவன் ஆர்வமுற்றிருந்தான்.

> "வேந்தன் உத்தரன் மெய்த்தவத்தீன்றருள்
> ஏந்துகொங்கை இராவதி என்னுமோர்
> காந்தள் மெல் விரற கன்னி யிள நலம
> மாந்தினன்கமழ் மன்றலந தாரினான்" (பாகவதம்).

அவனது காம நுகர்ச்சியைக் குறித்துச் சூத முனிவர் முதலிய மாதவர்களும் இவ்வாறு உவந்து ஓதி நின்றனர். இங்ஙனம் இன்ப நிலையமாயிருந்த இவளோடு இணைபிரியாமல் அன்புகனிந்தமர்ந்து அவன் அரசு புரிந்து வந்தான். வருங்கால் வடபுல மன்னர் மிடல்கண்டுவர அவன் அடல் கொண்டெழுந்தான். இவளும் உடன் தொடர்ந்தாள். "மறு புலம் வருதல் முறையாகாது; நான் விரைவில் வருவல்; சிறிது ஆறியிரு;" என இவளைத் தேற்றி யிருத்திவிட்டு அவன் தேரேறிச் சென்றான்.

சென்றவன் கிம்புருடம் அரிவருடம் கேதுமாலம் முதலிய மண்டலங்களை வென்று வருங்கால் இடையே தருமதேவதை ஓர் பசு வடிவங்கொண்டு மூன்று கால்களையும் முடம்படவளைத்து ஒரு காலூன்றி இவன் முன்நின்றது. இவன் இரங்கி நோக்கி அதன் அருகு சென்று முதுகுதைவந்து அந்நிலைக்குக் காரணம் யாது? எனக்கனிந்து கேட்டான். அது, கலிபுருடன் செய்த கொடுமை என்று ஒலிசெய்து நின்றது. உடனே அக்கொடியோனை வெகுண்டு அவன் உடைவாளை உருவினான். அக்கலியன் விரைந்து அடிபணிந்து அபயமென நின்றான். அவன் அளிசெய்து நின்று என் ஆட்சியின் எல்லையுள் நில்லாதொழிக என்றான். எங்கும் நின் ஆட்சியாதலால் எங்கேனும் சிறிது தங்க அருள் என்று கலியன் மீளவும் தாழ்ந்து வேண்டினான். சூதாட்டம், கள்ளுக்கடை முதலிய புல்லிய இடங்களில் பொருந்தியிரு எனப் போக்கியருளினான்.

"சூது, உயிர் கோறல், பானம், துவரெனத் துவர்த்த செவ்வாய்
மாதர் செம்பொன்னிற் சொல்பொய், வருந்துனி, மதம், வெங்காமம்,
ஏதமாம் வயிரமாகி இருத்தி நீ போதி! என்று
கோதை வெண்குடையான் கூறக்கொடுங் கலிவணங்கிப் போனான்"

இவ்வாறு கலி நீங்கியபின் அறக் கடவுளும் அவ் ஆண்டகையை வழுத்திச் சென்று முழுவலியோடு தழுவி யமர்ந்து வளமிகச் சுரந்து உளமகிழ்ந்து நினறது.

"மெய்யெனும் ஒருதாளூன்றி நின்றவெள்ளேறு, மற்றைச்
செய்தவம், புனிதம், தீதிலளி, எனத் தெரித்த மூன்று
மையறுதாளூமூன்றி மகிழ்ந்தது; அம்மாட்சித்தாய
மொய்திரை வேலி ஞாலம் முழுவளஞ் சுரந்ததம்மா" (பாகவதம்.)

இங்ஙனம் அறந்தலை எடுக்க, மறந்தலை தாழ, அருந்திறல் புரிந்த அப்பெருந்தகையாளன் திரும்பிவருமுன் அவனைப் பிரிந்திருக்கலாற்றாது இவள் பெருந்துயருழந்தாள். இரவும் பகலும் விழிதுயிலாமல் அவனை நினைந்து நினைந்து நெஞ்சங்கரைந்தாள். ஒருநாள் மரகதம் என்னும் தோழிவந்து துணைவன்மேல் செல்லும் நினைவினை ஒழிந்து சிறிது ஆறியிருக்கும்படி தேறுதல் கூறினாள். ஓயாமல் உள்ளியிருக்கும் பொழுதே உள்ளமுருகி

இங்ஙனம் என் உயிர்பதைக்கின்றதே! அவரை உள்ளா தொழி யின் யான் எங்ஙனம் உய்வேன் என இவள் உளைந்து மொழிந்து புலம்பியிருந்தாள். மறப்பின் இறப்பேன் ஆதலால், "மறப்பறி யேன்" என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

மறந்து சிறிது மனந்திரும்பின் அன்றே
இறந்து விடுமேன் னுயிர்.

தலைவனை மறந்திருக்கமுடியாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

1208. காதலனை முன்னினைந்து காய்ந்திலனென் றேனுவந்தாள்
கோதை வருச்சி குமரேசா—மீதாய்
எனைத்து நினைப்பினுங் காயார் அனைத்தன்றோ
காதலர் செய்யுஞ் சிறப்பு. (அ)

இ—ள்.

குமரேசா! தன் கணவனை நினைத்ததைக் குறித்து வருச்சி ஏன் மறுகியுரைத்தாள்? எனின், எனைத்து நினைப்பி னும் காயார்; அனைத்தன்றோ காதலர் செய்யும் சிறப்பு என்க.

எனைத்து = எவ்வளவு. வேண்டிய மட்டும் என்றவாறு.

காயார் = வெகுண்டு வெறார். காய்தல் = வெறுத்தல். அனைத்து அன்றோ = அவ்வளவேயல்லவோ? அதைத் தவிர அவர்செய்யும் சிறப்புவேறு ஒன்றும் இல்லை என்றபடி.

மேல், மறப்பறியேன் என்றாள்; இதில், தனது நினைப் பினிலைமையை உரைக்கின்றாள்.

காதலரை எவ்வளவு நினைந்தாலும் காய்ந்து கொள்ளார்; அவ்வளவே எனக்கு அவர் செய்யும அருள் என்பதாம்.

எப்பொழுதும் எண்ணி ஏங்கியிருந்த தலைவியை ஒருநாள் தோழிநோக்கி நீங்கள் இவ்வாறு கருதியுருகுவதால் நம் இறை வர் விரைவில் வந்தருளுவார் என உறுதிகூறித் தேற்ற அதற்கு அவள் உரைத்தபடி யிது.

நான் இடைவிடாது நினைந்தாலும் தடையுறாமல் வந்து காதலர் என் நெஞ்சில் தங்கியுள்ளார்; யாதும் வெறுத்து அகலவில்லை; பொறுமையோடே பொருந்தி நிற்கின்றார்; என்பாள் "எனைத்து நினைப்பினும் காயார்" என்றாள். அனைத்தன்றோ என்றது காயாமையாகிய அவ்வளவே என்றவாறு. என் நினைப்பின் வண்ணம் உருவெளித் தோற்றமாய் அகத்தில் நிலைதருள்ளாரேயன்றி அவர் நினைந்து விழைந்து நேரேவந்தருள வில்லை என்பது குறிப்பு. ஓயாமல் நினைப்பினும் காயார் எனக் குறிப்பினால் இங்ஙனம் வாயார வைதாள்.

காதலன் விரைந்து வாராதனை நினைந்து காதலி புலந்து மொழிவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வருச்சியால் உணரப்படும்.

## கதை

வருச்சி என்பவள் தெய்வத் திருவருளால் பிறந்தவள். வேதவித்துக்கள் புரிந்த மந்திரவலியால் வேனனுடைய இடக்காத்திலிருந்து இவள் தோன்றினாள். இவளது உருவநிலையை நோக்கித் திருமகள் அமிசமெனப் பிரமனும் வியந்தான். இத்தருண மங்கையைக்கண்டு பிருது மன்னன் பெருமோகங் கொண்டான். அவன் அமரர் பலர்பால் அரிய வரபலங்கள் பெற்று அவனி முழுவதும் தனதாக்கொண்டு அரசர்பெருமானாய் நிலவி நின்றான். அவ் அருந்திறலாளன்மேல் இவளும் ஆவல்மீக்கூர்ந்தாள். அழகிலும் அன்பிலும நிறையொத்திருந்த இவ் இருவருக்கும் அயனருளால் விதிமுறைவழாது பெருமிதநிலையில் திருமணம் நிகழ்ந்தது. அடியில் வருவது காண்க.

"எங்கெழில் வாய்ந்த வேனன் இடக்கரங் கடையத் தோன்றும்
மாந்தளிரனைய மேனி மழைமதர் நெடுங்கணங்கை
காந்தியும் கவினும் நோக்கிக் கவியிளஞ் சுரும்பர் பாடத்
தேந்துளி பிலிற்றுந் தண்பூந் திருமகளிவளே என்றான்;

பில்குதேன் கமழலங்கற் பிருது வென்றுரைக்கப் பெற்ற
கொலகளிற் றுழவற்கந்த வருச்சியைக் குவளை தாழ
வில்லுமிழ் கணையை வென்று, வேலினுக்கு ஓலையிட்ட
சில்லரித் தடங்கணாளைத் திருமணம் புணர்த்தினான்." (பாகவதம்)

இது, மயித்திரேயன் என்னும் முனிவர் உரைத்தது. இவ ளது எழிலும் இயல்பும் இதனால் இனிதறியலாகும். இவ் அழகி யோடமர்ந்து அளவில் போகங்களை நுகர்ந்து அக் குலமகன் உளமகிழ்ந்து வந்தான். வருங்கால் நிலவளங்காண அவன் அய லகல நேர்ந்தான். அவனைப் பிரியலாற்றாது இவள் மறுகியயர்ந் தாள். விரைவில் வருவதாக உறுதி கூறிவிட்டு உரிய படைக ளோடு அரிதினீங்கி அவன் அகன்று போனான். இவள் கவன் றிருந்தாள். இரவும் பகலும் இடையறாது நினைந்து விரகதாப மிகுந்து வெதும்பி யிருந்தாள். தென்றல வீசினும், அன்றில் கூவினும் சிந்தை கலங்கித் தெருமரலுழந்தாள். திங்களை நோக்கிச் சினந்து புலம்பினாள்.

"சுடர்கான் றெழுந்த வெண்திங்காள் ! என்னே சுடுதி ஆரமுதத்
துடனீபிறந்த பாற்கடலின் தன்மை யுணராயாயினும்.
மடலார் கமலப் பொகுட்டுறையும் பூத்தேள் காணுமறைக்கொழுந்தின்
படர்வார்சடையில் வீற்றிருக்கும் பான்மையேனும் அறிந்திலையே.

தருவு மணியும் இருநிதியும் தண்ணங் கமல மலர்த்தவிசிற்
றிருவுமுயிர்த்த பாற்கடலிற் றெள்ளா ரமுதத்துடன் பிறந்தாய்,
பெருவெண்மதியே! நீயுறைதல் பெம்மான்மௌலி; கதிரமிழ்தின்
உருவம்; அநங்கன் உறவொன்றும் விடுத்தியேல் மற்றுனை நிகரார்"

இனையவாறு மறுகிப் புலம்பி மயங்கியிருந்தாள். காதல னையே நினைந்து நோதல்மீக் கொண்டிருந்த இவளிடம் ஒருநாள் மாதினி என்னும் தோழிவந்து அரசுவந்தருளும்; நீங்கள் ஆறி யிருங்கள் என்று தேறுதல் கூறினாள். அவளை இவள் இகழ்ந்து பார்த்தாள்; நான் நினைந்துள்ளபடியே என் நெஞ்சில் வந்துகாத லர் நிலைத்துள்ளார்; அவ்வளவேயன்றி அவர் விரைந்து வந்த ருளுவார் என விழைந்து நிற்பது வீண் எனப் புலந்து நின்றாள். எனைத்து நினைப்பினும காயார்; அனைத்தே காதலர் செய்யும் அருள் என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

எண்ணியெண்ணி ஏங்கி யிளைத்தேன் இனிமண்ணில்
நண்ணி யிருத்தல் நவை.

தலைவி நினைந்தயர்ந்தமை இதனால் கூறப்பட்டது.

209. மண்டோ தரியேன் மறுகி யுயிரழிந்தாள்
கொண்டானை யெண்ணிக் குமரேசா—தண்டி
விளியுமெ னின்னுயிர் வேறல்ல மென்பார்
அளியின்மை யாற்ற நினைந்து. (கூ)

இ—ள்.

குமரேசா! தனது நாயகன் அருளாமையை நினைந்து மண்டோதரி ஏன் ஆருயிர் பதைத்தாள்? எனின், வேறு அல்லம் என்பார் அளிஇன்மை ஆற்ற நினைந்து என் இன் உயிர் விளியும் என்க. நினைந்து விளியும் என்றதனால் அந் நினைவு நிலை தெளியலாம்.

விளியும் = அழியும். இன் உயிர் என்றது இன்ப நலங்களை அனுபவித்தற்குரிய இனிய உயிர் என்றவாறு.

அளி இன்மை = இரக்கமில்லாமை. அஃதாவது பிரிந்துள்ள தலைவி வருந்தியயர்வாளே என்று இரங்கிவந்தருளாமை.

இருவேமும் ஒருவேம் என்று முன்பு உரிமையாய் உறுதி செய்து நின்றவர் இதுபொழுது அருள் செய்யாமையை மிகவும் நினைந்து எனது இனிய உயிர் அழிகின்றதென்பதாம்.

பிரிவாற்றி நெடுநாளாக உருகியிருந்த தலைவி தன் நாயகன் தன்னைக் கருதி வராமையை நினைந்து மறுகி யுரைத்தபடியிது.

வேறல்லம் என்பார் என்றது உருவத்தால் இருவரேனும் உள்ளத்தால் ஒருவரே எனத் தழுவியிருந்தகாலத்தில் உழுவலன்போடு தலைவன் உரைசெய்திருந்தானாதலால் அதனை நினைந்து இவ்வாறு இனைந்து மொழிந்தாள்.

“என்றேனு மெய்யும் உயிருமொப்பா மென்ன யானஞ்சுவேன்
ஒன்றேயல, இரண்டேஎன்கையால்; ஒருநாள் விளைவின்
கன்றே யெறிந்த குலோத்துங்க சோழன் கல்யாணி யன்னீர்!
சென்றே யுமைப்பிரியேன்; பிரிந்தாலெங்ஙன் தேறுவனே”
(குலோத்துங்க சோழன்கோவை.)

“மறியாரிடத்தினர் கோடீச்சுரேசர் மலரடி செங்
கெறியாலடைந்தவர் நீங்குவரோ? துடிநே ரிடையாய்!
வறியார் மனைப்பொன் மழைபோல் மருவுனை வைத்தகலற்கு
அறியாதவனல னின்னினும் வேறென் னரும்பொருளே.”
(கோடீச்சுரக் கோவை)

"உயிர்நீத்த தேகமும், ஒண்மணி நீத்த வுரகமும், வார்
மயிர்நீத்த மானும், கலைநீத்த திங்களும், வாங்கிமுற்றாப்
பயிர்நீத்த சூலும் நிற்பாற்றி னென்னீர்க்குப் பின்னுவதன்றிச்
செயிர்நீத்த பொற்றொடியாய்! மூந்துசேக்குந் திறனில்லையே."
(தணிகைப் புராணம்.)

நம்முள் யாதும் நாம் "வேறல்லம்", யாண்டும் பிரியேன் எனத் தலைவன் தலைவியிடம் உரைத்துள்ளதை இவற்றுள் உணர்ந்துகொள்க. இங்ஙனம் உரிமையோடு முன்பு உறுதிகூறி நின்றவர் இப்பொழுது அதற்கு மாறாகப் பிரிந்துபோயினர்; போயினும் விரைந்து வரவில்லை; வராது நிற்பினும் தூதன் மூலமாகவாவது யாதேனும் ஓதி விடலாம்; அதுவும்கூட இல்லையே; அவர் கருணையிருந்தவாறென்னே! என்று உருகியுளைந்து உயிர் தேய்கின்றாளாதலால் "அளியின்மை ஆற்ற நினைந்து என் உயிர்விளியும்" என்றாள். நான் விளியாவகை அவர் அளிசெய்து வரவேண்டும் என்பது குறிப்பு.

காதலன் ஆதரவு செய்யாதிருந்தால் காதலி சாதல் நிலையளாய்த் தவித்தயர்வள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மண்டோதரியால் உணரப்படும்.

## கதை.

மண்டோதரி என்பவள் மயனுடைய அருமைத் திருமகள். அரும்பெற லழகினள். பெருந்தகவினள். இவளது உருவ நலனைக் கண்டு உம்பருலகமுழுவதும் வியந்து நின்றது. இவள் தகுதிக்குத் தகுந்த மணமகனை நாடி மயன் மறுகியிருந்தான். அங்ஙனம் இருந்து வருங்கால் இராவணன் அருந்தவம் புரிந்து திரிலோகாதிபத்தியத்தையடைந்து தேவர்முதல் யாவரும்வணங்கத் தேவியலோடு மேவி நின்றான். அவன் திக்குவிசயம் செய்து வரும்போது மயன் பக்கலடைந்தான். அவனது அழகு இளமை ஆண்மை முதலிய இனிய நலங்களைக் கண்டு, உளமிக மகிழ்ந்து குலமுறையறிந்து இவளை அவனுக்கு நலமுறத்தந்தான். இவ் அற்புத அழகியைப் பெற்று அளவிலானந்தங்கொண்டு இலங்கையையடைந்து அரியபோகங்களை நுகர்ந்து அவன் ஆர்வமீதூர்ந்தான். இந்திர போகமும் எளிதெனும்படி இங்ஙனம் இன்

பம் அனுபவித்து வருங்கால் இச் சுந்தரிபால் ஓர் மைந்தன்பிறந் தான். அவனுக்கு மேகநாதன் என்று பெயரிட்டார்.

"இந்திரனும் சசியும்போல் இலங்கிழை மண்டோதரியும் தானுமேய்ந்து
சிந்தையுவந் தனுபவித்துச் செல்கின்ற காலத்துத் திருவனாள் பால்
வந்துபிறந்திடு மைந்தன் மழையிடித்த தெனவாய்விட் டழுதலாலவ்
வெந்திறல் மைந்தனை மேகநாதன் எனப் பெயரிட்டா னிலங்கைவேந்தன்."

பின்பு இந்திரனை வென்றதனால் அவன் இந்திரசித்து எனப் பேர் பெற்றான். இங்ஙனம் போகந்துய்த்து இவ் இருவரும ஏகபோகமா யிருந்து வந்தார். இவளது அனுபவ நலங்கள் அளவிடலரியன. அர மடந்தையர் பலர் தோழிகளாய் நின்று இவட்கு ஊழியம் புரிந்தனர். மலரணையில் இவள் விழிதுயிலுங்கால் அருகு நின்று அவர் தொழில் புரிந்த நிலையை அடியில்வரும் கவியில் காண்க.

"அரம்பை மேனகை திலோத்தமை உருப்பசி ஆதியர்மலர்க் காமன்
சரம்பெய்தூணிபோல் தளிரடி தாம்தொடச், சாமரை பணிமாறக்,
கரும்பையும் சுவைகைப்பித்த சொல்லியர் காமரங் கனியாழின்
நரம்பினின்னிசை செவிபுக, நாசியிற் கற்பக விரைநாற;"

இவ்வகையான அற்புதநலங்கள் அமர்ந்து திகழ இவள் அமளியில் துயின்றாள். இங்ஙனம் இன்பச் சிறப்போடு இனி தமர்ந்திருந்த இவள்பால் ஐம்புல இன்பங்களும் ஆர நுகர்ந்து அவ்வீர வேந்தன் விளங்கியிருந்தான். அவன் அமரர்கோனோடு போர்விழைந்து ஒருமுறை அமராவதிக்குச் சென்றான். அப் பிரிவில் மறுகி இவள் உருகியிருந்தாள். அவன் மீண்டு வந்த போது இவள் உவந்துயிர் தளிர்த்தாள். ஒருவா அன்புடன் இங்ங னம் உரிமையெய்தி நின்ற இவளை ஆருயிர் அமிழ்தமென அவன் ஆதரித்து வந்தான். இடையே சீதையை விழைந்து தீதுமீக் கூர்ந்து அவன் மாறுபடலானான். அவனது வேறுபாட்டை யறிந்து இவள் வெதும்பி வருந்தினாள். அறிவு கூறியும் அவன் அருளாது நின்று முடிவில் அழிந்தான். அவன் அழிந்ததைக் கேட்டு அலமந்து துடித்து விரைந்து களம்புகுந்து மெய்யிறுகப் புல்லிக் கல்லும் மரமும் உருக இவள் கரைந்து அழுதாள். அன்று இவள் அழுது புலம்பிய படியை அடியில்பார்க்க.

“ அன்னையோ! அன்னையோ! ஆகொடியேற் கடுத்தநாள் அரக்கர் வேந்தன்
பின்னையோ இறப்பது? முன் பிடித்திருந்த கருத்ததுவும் பிடித்திலேனோ?
முன்னையோ விழுந்ததுவு முடித்தலையோ படித்தலைய முகம்காட்டாயோ?
என்னையோ என்னையோ இராவணனார் முடிந்தபரி சிதுவோ பாவம்;

வெள்ளெருக்கஞ் சடைமுடியான் வெற்பெடுத்த திருமேனி மேலும்கீழும்
எள்ளிருக்கு மிடனின்றி யுயிரிருக்கு மிடனாடி யிழைத்தவாறோ?
கள்ளிருக்கு மலர்க்கூந்தற் சானகியை மனச்சிறையிற் கரந்த காதல்
உள்ளிருக்கு மெனத்தேடி உடல்புகுந்து தடவியதோ ஒருவன் வாளி.

ஆரம்போர் திருமார்பை யகன்முழைகளெனத் திறந்திவ் வுலகுக்கப்பால்
தூரம்போயின ஒருவன் சிலைதுரந்தசரங்களை போரிற்றோற்றும்
வீரம்போ யுரங்குறைந்து வரங்குறைந்து வீழ்ந்தானை வேறே கெட்டேன்
ஓரம்போ உயிர்பருகிற் றிராவணனை மானுடனாருற்றமீதோ? (௯)

காந்தையருக் கணியனைய சானகியார் பேரழகும், அவர்தம் கற்பும்,
ஏந்துபுயத் திராவணனார் காதலும், அச்சூர்ப்பநகை யிழந்த மூக்கும்,
வேந்தர்பிரான் தயரதனார் பணியினால் வெங்கானில் விரதம் பூண்டு
போந்ததுவும், கடைமுறையே புரந்தரனார் பெருந்தவமாய்ப் போயிற்றம்மா

தேவர்க்கும் திசைக்கரிக்குஞ் சிவனார்க்கு மயனார்க்குஞ் செங்கண்மாற்கும்
ஏவர்க்கும் வலியானுக் கென்றுண்டாம் இறுதிஎன வமாப்புற்றேன்
ஆவற்கணீயுழன்ற அருந்தவத்தின் பெருங்கடற்கும் வரமென்றான்ற
காவற்கும் வலியானோர் மானுடனாருள ரென்னக் கருதினேனோ? (௰

அரைகடை யிட்டமைவுற்ற முக்கோடியாயுவு முன்னறினார்க்கேயும்
உரைகடையிட்டளப் பரியபேராற்றற் றோளாற்றற் குலப்போ வில்லைத்
திரைகடை யிட்டளப்பரிய வரமென்னும் பாற்கடலைச் சீதையென்னும்
பிரைகடையிட் டழிப்பதனை யறிந்தேனோ தவப்பயனின் பெருமை
பார்ப்பேன்

ஆரனா ருலகியற்கை யறிதற்கா ரவையேழும் எழுமஞ்சும்
வீரனாருடல்துறந்து விண்புக்கார் கண்புக்க வேழவில்லால்
நாரநாண் மலர்க்கணையா னானெல்லாந் தோளெல்லா நைய எய்யும்
மாரனார் தனியிலக்கை மனித்தனா ரழித்தனரே வரத்தின் மாண்பால். (௭

ஆரா அமுதா யலைகடலில் கண்வளரும்
நாராயணனென்றிருப்பேன் இராமனை நான்;
ஓராதே கொண்டகன்றாய் உத்தமனார் தேவிதனைப்
பாராயோ நின்னுடைய மார்பகலம் பட்டவெலாம். (அ

என்றழைத்தனள் ஏங்கி எழுந்தனள்
பொன்றழைத்த பொருவரு மார்பினைத்
தன்தழைக்கைகளால் தழுவித்தனி
நின்றழைத்துயிர்த்தாள் உயிர் நீங்கினாள்.” (இராமாயண

நீராயுருகி நெடிது புலம்பி முடிவில் இவ்வாறு இவள் முடிந்து தீர்ந்தாள். இவளது முடிவினை யறிந்து அமரர் முதலனைவரும் மறுகி யிரங்கினர். பிரிவாற்றாமல் உயிர் நீத்த இவள் கற்புநிலையைக் கண்டு இராமரும் கரைந்துநின்றார். தன்தலைவனை நினைந்து நினைந்து நிலைகுலைந்து அழுது புலம்பியபொழுது இவள் உரைசெய்திருக்கும் அறிவுரைகளால் இவளுடைய குண நலங்களும், உணர்வு நிலையும் இனிதுணரலாகும். ஓருயிராக ஒன்றியிருந்த காதலன் வேறுயொழியின் காதலி ஆறுதழிவள் என்னும் பேருரைக்கு இவள் ஓர் ஆதாரமாயினளெனை அனைவரும் வியந்தார். "வேறல்லம் என்பார் அளியின்மையை ஆற்ற நினைந்து என் இன்னுயிர் விளியும்" என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

அண்ணல் அருளேயென் ஆருயிருக் காதரவென்
றெண்ணாத தென்னே யிது.

காதலி உயிர்நிலை இதனால் கூறப்பட்டது.

---

1210. வான்மதியை நோக்கி வசுமதியேன் வாழ்த்தினாள்
கோனுருவைக் காணக் குமரேசா—தானே
விடாஅது சென்றாரைக் கண்ணினாற் காணப்
படாஅதி வாழி மதி. (ய)

இ—ள்.

குமரேசா! வான் மதியைப் பார்த்து வசுமதி ஏன் வாழ்த்தி நின்றாள்? எனின், வாழி மதி! விடாது சென்றாரைக் கண்ணினால் காணப் படாதி என்க.

இது, திங்களை நோக்கி மங்கை மொழிந்தது.

மதி = சந்திரனே. படாதி = மறையாமல் நிற்பாயாக. படுதல்=மறைதல். மறையாது நின்றருள்க என மதியை நோக்கிக் குறையிரந்து வேண்டுகின்றாளாதலால் வாழி என வாழ்த்தி நின்றாள். வாழிய என்பது இங்ஙனம் யகரம் குறைந்துவந்தது.

"வாழிய என்னும் செயவென்கிளவி, இறுதியகரம் கெடுதலு முரித்தே" (தொல்காப்பியம்) என்பதும் காண்க.

விடாது சென்றாரை = அகத்தில் விடாமல் நின்றே புறத்திற் போனவரை. காதலன் பிரிந்து போயிருப்பினும் அவனை இடையறாது நினைந்துள்ளமையால் அவன் உருவம் தன் நெஞ்சில் நிலைத்துள்ளது ஆதலால் "விடாது சென்றார்" என்றாள். என்னையும் கைவிடாமல் தம் காரியமும் பார்க்கப் போயுள்ள சமர்த்தர் என்பது குறிப்பு.

மேல், தலைவன் வந்தருளாமைக்கு இரங்கினாள்; இதில், அவனைக் கண்டு மகிழவேண்டிக் கரைந்து நிற்கின்றாள்.

ஓ மதியே! என் நெஞ்சில் நிலைத்து நின்றே நீங்கிப்போனவரை நான் கண்ணாரக்கண்டுமகிழும்படிகருணைசெய்களன்பதாம்.

காதலனைப் பிரிந்து கலங்கியிருந்த காதலி ஒருநாள் கலைமதியை நோக்கி மொழிந்தபடியிது.

பிரிந்துபோன அவனைத் தன் கண்ணினாற் காணுதற்கு மதியை மறையாதிருக்குமாறு வேண்டியது என்னை? எனின், தலைவன் பார்வையும் தன் பார்வையும் ஏககாலத்தில் அதில் சேருமாயின் அவ்வளவிலாவது ஆறுதலாம் என்பது கருதிஎன்க.

"மட்டுவிரியு மலர்வாளி வருந்துந் தமியேன் உயிர்சோரப்
பட்டபுழையில் அழலுமிழும் கதிர்கள் சுருக்கிப் பார்வேந்தின்
எட்டுவரையும் இகழ்ந்துபொலங் கிரியோடிகலு மிருதடந்தோள்
தொட்டகதிர் மென் கரத்தாலென் உடலந்தொடுவாய் சுடர்த்திங்காள்!"
(நைடதம்)

இது, தமயந்தி உரைத்தது. நளன் தோளைத் தீண்டிய கிரணங்களால் தன்னையும் தொட்டருளும்படி திங்களை நோக்கி அம் மங்கை இதில் வேண்டியிருக்கும்அழகைப்பார்க்க. சந்திரன் விரகதாபத்தை மிகுவிக்கும் இயல்பினனாதலால் விரகிகள் அவனிடம் உரிமையோடு தம் குறைகூற நேர்வர் என்க.

"கண்மணி வள்ளத்துள்ளே களிக்குநின் முகத்தைநோக்கி
விண்மதி மதுவினாசை வீழ்ந்ததென் றெருத்தியுன்னி
யுண்மகிழ் துணைவனோடும் ஊடுநாள் வெம்மை நீங்கித்
தண்மதி யாதியாகில் தருவன் இந்நறவை என்றாள்" (இராமாயணம்)

மது வருந்துகின்ற ஓர் காதலி தன் முகத்தின் பிரதிபிம்பத்தை மதி என மயங்கி அதனிடம் குறையிரந்திருக்கும் நிலையை இதில் அறிந்துகொள்க.

கண்ணினாற்காண என்றது நேரே கிட்டவந்து தன்னைத் தொட்டருளாராயினும் எட்ட நின்றாவது ஒன்றாய் ஒட்டிக் காணின் அக்காட்சியால் தன் ஆற்றாமை சிறிது தணியும் என அலமருகின்றாளாதலால் அத்தேட்டம் கொண்டாள்.

"கண்ணிற் காணினும், கட்டுரை கேட்பினும்,
நண்ணித் தீண்டினும், நல்லுயிர் நிற்குமென்று
எண்ணி ஏந்திழை தன்னை யுடம்பெலாம்
தண்ணென் சாந்தம் வைத்தாலொப்பத் தைவந்தான்" (சிந்தாமணி)

காதலித்தோரைக் காணினும் கேட்பினும் இன்பமாமென இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

ஒருநாளிரவு மேன்மாடத்தின் நிலாமுற்றத்தில் கண்ணுறக்கமின்றிக் கவன்றிருந்த தலைவி, தலை நிமிர்ந்து சந்திரனை நோக்கித் தன் கொண்கனைச் சிறிது கண்டு மகிழும்படி நேரே நின்றருளுக என்று பரிந்து வேண்டுகின்றாளாதலால் "மதி! படாதி" என இவ்வாறு மறுகி நின்றாள்.

இனி, மதியே! இன்னும் மறையாது நிற்கின்றாயே; நீ மறைந்துபடின்நான் உறங்கிவிடுவேன்; அதனிடையே தோன்றும் கனவிலாவது என்காதலரை மனக்கண்ணால் கண்டு மகிழ்வேன்; அது நோாவகை நீ நேர்ந்து நிற்கின்றாய் எனத் திங்களைப் புலந்து கூறியதாகவும் இதற்குப்பொருள்கொள்ளலாகும்.

காதலனைக்காண விழைந்து காதலி கவன்றுருகுவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வசுமதியால் உணரப்படும்.

## கதை.

வசுமதி என்பவள் மகததேசத்து மன்னனாகிய தருசகனுடைய அருமைத் திருமனைவி. பெருவனப்பினள். பொறுமை மிக்கவள். இவளோடமர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து இராசகிரியம் என்னும் திரு நகரிலிருந்து அவன் அரசபுரிந்து வந்தான். அம் மன்னனுக்கு இன்பநிலையமாயிவள் இனிதமர்ந்திருந்தாள். இவளையாதும் பிரியாமல் அன்புமீதூர்ந்து ஆருயிர்க்கிழமையோடு அவன் ஆதரித்து நின்றான். நின்று வருங்கால வத்தவதேயத்து மன்னனாகிய உதயணனுக்கும் பாஞ்சால மன்னனுக்கும கொடும் போர் மூண்டது. அதில் உதயணனுக்கு உதவிசெய்ய அவன் உவந்து சென்றான். செல்லுங்கால் நல்லுரை பல கூறி இவளைத் தேற்றியிருத்திவிட்டுத் தேரேறிப்போனான். இவள் ஆற்றாமையோடு அலமந்திருந்தாள். பிரிவிலுருகி விழி துயிலாமல மறுகியிருக்குங்கால் அருகுநின்ற தோழியர் ஆற்றிப் போற்றிக்குளிர்ந்தமலர்கள்செழுந்தளிர்கள்முதலியவற்றைக் கொணர்ந்து பரப்பி அமைந்து உபசரித்தார். தனக்குஇங்ஙனம் இதஞ்செய்து நின்ற அவரை இவள் இகழ்ந்து நோக்கி இனந்தெரியாமல இப்படி ஏன் இடர்புரிகின்றீர் என்று புலந்து புலம்பினாள்.

“ துணர்த்தார் அளக மட நல்லீர்! சுடுவெங்காமக் கொடுந்தீயைத்
தணிப்பா னெண்ணிக் கொடுவந்த தண்ணென் கதிர்கால் வெண்டரள
மணித்தாழ் வடமும், வியன்சினைத்தே மாவின்றளிரும், எஞ்ஞான்றும்
அணித்தாயிருந்த வடவையும் வெங்கானிற் றீயும் அமைத்தனவே.

அந்தாமரையின் மடநல்லீர்! மலயமுயிர்ப்ப வலர்பொதுளும்
சந்தாடவிற்றவழ்ந்து நறும் தண்ணெனருவி தோய்ந்து மலர்ப்
பைந்தா தாடிமுருகுயிர்த்துப் பசும்பொற் சிறுசாளர நுழையும்
மந்தாநில மினறழல்வ தெல்லாம் தமியேனிழைத்த வல்வினையே”

இன்னவாறு தன்னிலை குலைந்து பல் பன்னியயர்ந்தாள். ஒருநாளிரவு நிலாவெளியில் கண்ணுறக்க மின்றிக் கலுழ்ந்திருக்குங்கால் அண்ணாந்து நோக்கி அம்புலியைப் பார்த்தாள். என் நாயகன் தங்கியிருக்குமிடம் உனக்குத் தெரியுமாதலால் எனது நிலையினை அவரிடம் உரைசெய்து இவ்விடம் வரும்படிசெய்க;

இன்றேல் உன்னை அவர் காணும் சமயம் நானும் உடன் காணும்படி நயந்தருள்க; அல்லது விரைந்து மறைந்துபோ; நான் உறங்கியாவது அவரைக் கனவில் காண்பேன்; என இவ்வகையாகக் கலைமதியைப் பார்த்துப் பல பல கூறினாள். பிரிந்த மகளிர் தம் தலைவரைக் காண மதியிடம் குறையிரந்து நிற்பர் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

செல்லாமல் சென்றகன்ற செம்மலையென் கண்காண
நில்லாய் மதியே நிலைத்து.

மதியை நோக்கி மறுகி மொழிந்தமை இதனால் கூறப்பட்டது.

இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்.

காமம் உள்ளினும் தீராப் பெருமகிழ் செய்யும். காதலர் அதனைக் கருதி மகிழ்வர். காதலனை நினைந்து காதலி கவல்வள். அவனது உள்ள நிலையை உள்ளி யுளைவள். தன்னுள் அவனை எண்ணியிருப்பள். புணர்ந்த நாள் இன்பினை நினைந்து நெஞ்சுருகுவள். மறந்தறியேன் என மறுகி நிற்பள். காதலன் தன்னை நினைந்து வரவில்லையே யென்று இனைந்தயருவள். அவன் அளிசெய்து வாரானாயின் தன் உயிர் அளியும் என்பள். அவனைக் காண விழைந்து கலைமதியை வணங்குவள் என்பதாம்.

௱உ௰௧-வது நினைந்தவர் புலம்பல் முற்றிற்று.

## 122-ம் அதிகாரம் கனவு நிலை யுரைத்தல்.

அஃதாவது துணைபிரிந்து நிலை தளர்ந்திருந்த தலைவி தான் கண்ட கனவினது நிலைமையைத் தோழிக்குச் சொல்லுதல். அக்கனவு நினைவின் மிகுதியால் நிகழ்வதாகலின் நினைந்தவர் புலம்பலின் பின் இது வைக்கப்பட்டது.

1211. நேர்ந்த கனவை நிமலை இனிதெனமுன்
கூர்ந்துவந்தாள் என்னே குமரேசா—சேர்ந்துதான்
காதலர் தூதொடு வந்த கனவினுக்
கியாதுசெய் வேன்கொல் விருந்து. (க)

இ—ள்.

குமரேசா! தான் கண்ட கனவை நிமலை ஏன் உவந்து புகழ்ந்தாள்? எனின், காதலர் தூதொடுவந்த கனவினுக்கு விருந்து யாது செய்வேன் என்க.

இது, உற்ற கனவை உவந்துகொண்டது.

தூது = தூதுவன். அவனுவான் ஒருவர் உரைத்து விடுத்ததை அவருக்குரியவரிடம் வந்து உணர்த்தி நிற்பவன் என்க.

விருந்து என்றது புதியராய் வந்தவர் உவந்து அருந்துதற்குரிய இனிய உணவுகளை. காதலரிடமிருந்து ஏதாவது ஒரு தூது வந்ததாயின் அது காதலிகளுக்கு ஓர் ஆறுதலாகுமாதலால் அவ்வகையில்வந்த தூதினை உவந்து இவ்வாறு கொண்டாடினள்.

"நமக்கு ஒன்று உரையாராயினும், தமக்கு ஒன்று
இன்னா இரவின் இன்றுணையாகிய
படப்பை வேங்கைக்கு மறந்தனர் கொல்லோ
துறத்தல் வல்லியோர் புள்வாய்த் தூதே" (குறுந்தொகை 266)

தன் தலைவனிடமிருந்து யாதொரு தூதும் வாராமையைக் குறித்து ஒரு தலைவி இதில் உளைந்திருத்தலறிக. தூதின் வரவு காதலிகளுக்கு மிகுந்த ஆதரவாம்என்பது இதனால் அறியலாகும்.

காதலர் விடுத்த தூதுடன் வந்த கனவினுக்கு யான் உபகாரமாக யாது செய்வேன் என்பதாம்.

துணைபிரிந்து துயருழந்திருந்த தலைவி ஒருநாளிரவு தான் கண்ட கனவினை உவந்து கூறியபடி யிது.

காதலன் விரைந்துவந்தருளும் என அவனிடமிருந்து ஒரு தூதுவன் வந்ததாகக் கனவு கண்டாள் ஆதலால் "காதலர் தூதொடு வந்த கனவு" என்றாள். வாடி நின்ற பயிர்க்கு ஓடி வந்த மழைபோல் தன் ஆருயிர்க்குப் பேராதரவாய் நீடி நின்றமையான் அக் கனவிற்கு என்ன கைம்மாறு செய்வது? என எண்ணி ஏங்குகின்றாளாதலால் "விருந்து யாது செய்வேன் கொல்?" என்றாள். செய்வது இன்னதென்று தெரியாமல் இவ்வகை திகைத்தது தனக்கு உய்திற மருளி நின்ற அதன் உதவி

நிலையை ஓர்ந்து. பேருதவி செய்தவர்க்கு நேராக யாது உபகாரம் செய்வது? என ஆராய நேருமாதலால் அவ் வகையில் ஆராய்ந்து முடிவு காணுமல் இவ்வாறு தடுமாறி நின்றாள்.

"ஆதலான் ஒன்றுதவுதல் ஆற்றலேன்;
யாதுசெய்வது என்றெண்ணி யிருந்தனென்,
வேத நன்மணி வேகடம் செய்தன்ன
தூத!என்னினிச் செய்திறம்?சொல்லென்றாள்." (இராமாயணம்)

இது, அனுமனை நோக்கிச் சீதை உரைத்தது. தூது வந்து தனக்கு அவன் செய்த பேருதவிக்குத் தான் செய்வது யாது சொல்? என அவ் அம்மை உவந்து உளைந்திருக்கு நிலையை இதில் உணர்ந்து கொள்க.

காதலரை இடையறுது நினைந்திருப்பவர்க்குக் கனவுக் காட்சி நிகழுமாதலால் அந்நிகழ்ச்சியை நனவில் அவர்உரைத்து மகிழ்வர்.

"மத்தளம்கொட்ட வரிசங்கம் நின்றூத
முத்துடைத் தாமம் நிரைதாழ்ந்த பந்தற்கீழ்
மைத்துனன் நம்பி மதுசூதன் வந்தென்னைக்
கைத்தலம் பற்றக் கனாக்கண்டேன் தோழீ நான்; (க)

வாய்நல்லார் நல்ல மறையோதி மந்திரத்தால்
பாசிலை நாணல் படுத்துப் பரிதிவைத்து
காய்சின மாகளி றன்னான் என்கைபற்றித்
தீவலம் செய்யக் கனாக்கண்டேன் தோழீ நான்." (திருமொழி

இவை, ஆண்டாள் உரைத்தன. தான் கருதியிருந்த தலைவனைக் கனவில் கண்டு அந் நிலைகளை நனவில் உவந்து அக் கோதை கூறியிருத்தலை இதில் கூர்ந்து பார்க்க.

தான் கண்ட கனவினைக் காதலி மகிழ்ந்துகொண்டாடுவள் என்பது ... ல் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை நிமலைபால் உணரப்படும்.

## கதை.

நிமலை என்பவள் சுமந்து என்னும் குறுநில மன்னனுடைய அருமைத் திருமகள். வடிவழகிலும் குணநிலையிலும் அக் காலத்திருந்த அரசிளங் குமரிகள் எவரினும் இவள் உயர்வெய்தி யிருந்தாள். இவளது எழில் நலங்களைக் கேள்வியுற்று அருணச்சுவன்

என்னும் அரசிளங் குமரன் ஆசைமீக் கொண்டான். அவன் கோசல தேசத்து மன்னன். அருந்திறலும் பெருந் தகவும் ஒருங்கமையப் பெற்றவன். பெரு வனப்பினன். "வளர் முலைச சாந்த மழிந்திடப் புரளு மணிநெடுங்குழைப்பிளம் பிடியார், உள மகிழ்தூங்க வாவுமான் தேரிற் சேட்டிளம் பரிதியினுலவும், தழை யவிழ் அலங்கல் துயல்வரு தடந்தோள் திறல் அருணச்சுவன்" (கூர்ம புராணம்) என அருந்தவரும் உவந்து புகழ அவன் விளங்கி நின்றான். உருவிலும் திருவிலும் சிறந்து பெருமித நிலையில் இங்ஙனம் உயர்ந்திருந்த அவன் இவளைப் பெரிதும் விழைந்து நின்றான். முடிவில் வந்து மணந்து சென்று சிறந்த போகங்களை நுகர்ந்து செம்மாந் திருந்தான். இவளது இன்ப நலத்தை வியந்து அன்புரையாடி நாளும் ஆர்வமீதூர்ந்தான்.

"அயிலுந் தொழும்விழி விஞ்சையர் நாட்டினை அச்சுறுத்தக்
குயிலுந்தொழுமொழி கின்னரர் நாட்டைக் குழைப்பவைகும்
மயிலுந்தொழுமெழில் மாதர் நல்லாள் மணிக் கொங்கைதழீஇ
பயிலுந்தொறும் விருந்தாயினள் ஈதென்ன பண்பிவட்கே"

என இன்னவாறு இவளைப் புகழ்ந்து கொண்டாடி அவன் மகிழ்ந்திருந்தான். ஈருடலுக்கு ஓருயிரென்ன ஒருவா அன்புடன் இவ் இருவரும் மருவி வருங்கால் மருவலர் மீது பொருதிறங் கருதி ஒருமுறை அவன் மறுபுலம் போனான். அப் பிரிவினை யாற்றாமல் இவள் பெருந்துய ருழந்தாள். கணவனையே நினைந்து உணவும் துயிலும் இழந்து உளைந்திருந்த இவள் ஒருநாள் சிறிது கண்ணயர்ந்தாள். அவ்வமயம் தன் காதலனிடமிருந்து ஒரு தூதன் வந்ததாகக் கனவு கண்டாள்; உடனே களித்தெழுந்தாள். நிகழ்ந்த கனவைப் புகழ்ந்து மகிழ்ந்தாள். "காதலர் தூதொடு வந்த கனவினுக்கு விருந்து யாது செய்வேன்?" எனப் பிரிந்த குலமகளிர் உவந்து புகழ்வர் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

வாடும் பயிர்க்கு வருமழைபோல் என்னுயிர்க்கு
நீடும் கனவொன்று நின்று.

கண்ட கனவைத் தலைவி கருதிநின்றமை இதனால் கூறப்பட்டது.

1212. காமர் சுதன்மைதன் கண்ணுறங்க முன்னயந்தாள்
கோமனையி லென்னே குமரேசா—யாமம்
கயலுண்கண் யானிரப்பத் துஞ்சிற் கலந்தார்க்
குயலுண்மை சாற்றுவேன் மன். (உ)

இ—ள்.

குமரேசா! சுதன்மை என் துயிலை நயந்திருந்தாள்? எனின், கயல் உண்கண் யான் இரப்பத் துஞ்சின் கலந்தார்க்கு உயல் உண்மை சாற்றுவேன் என்க.

கயல்=ஒருவகை மீன். இடை அகன்று இருபுடையும் குவிந்து ஒளியோடு மிளிர்ந்திருக்குமாதலால் இதனைக் கண்ணுக்கு உவமை கூறுவர். அங்கயற்கண்ணி, மீனாக்ஷி என்பன இதன் சிறப்பால் எய்திய பெயர்களாம்.

கயல் உண்கண்=கயல்போன்ற மையுண்ட கண். கயல் உண் என்றது இயலும் செயலும் காண. இயற்கை எழிலும், செயற்கை அழகும் சேர்ந்த கண் என்க. இனி, உண் என்பதற்கு உண்ட என்று கொண்டு கயலைவென்ற கண் எனினுமாம்.

துஞ்சின்=உறங்குமாயின். உயல் உண்மை=உய்ந்திருக்கும் தன்மை. அஃதாவது தப்பிப் பிழைத்திருக்கும் நிலைமை. கலந்தார்க்கு = தழுவியிருந்தவர்க்கு. அல்லும் பகலும் யாதும் அகலாது முன்பு புல்லியிருந்தமையைநினைந்து இங்ஙனம் சொல்லலானாள். சாற்றுவேன் = தெளியச் சொல்லுவேன்.

மேல், வந்த கனவை மகிழ்ந்து நின்றாள்; இதில், அதன் வரவை மீண்டும் விழைந்து நிற்கின்றாள்.

கயல் போலும் எனது அழகிய கண்கள் யான் இரங்கி வேண்ட உறங்குமாயின் காதலர்க்கு நான் உய்ந்திருக்கும் நிலையை உரைத்துவிடுவேன் என்பதாம்.

கண் உறங்காது கவன்றிருந்த தலைவி தோழியிடம் ஒரு நாள் மொழிந்தபடியிது. துயில முயன்றும் முடியாமையால் கவலைகொண்டு கூறுகின்றாளாதலால் "இரப்ப" என்றாள்.

உறக்கம் வந்தால் கனவுவரும்; அக் கனவில் காதலர் தோன்றுவர்; தோன்றின் அவ்வயம் அவரிடை நான் பிரிவாற்றி உயிர் பிழைத்திருக்கும் நிலைமையை நன்கு உரைத்து விடுவேன் என உளேர்ந்து விழைந்துள்ளாளாதலால் "துஞ்சின் உயல் உண்மை சாற்றுவேன்" என்றாள்.

"பாங்கியரே நானும் பணிந்துறங்கும் பாயலிலே
ஈங்கொருவர் என் கனவில் எய்தினார்; ஆங்கவரை
யார்? என்றேன் நான்; தெரியல் ஆரென்றார்; எத்தரோ
நீர்? என்றேன்; சென்னியிலே நீரென்றார்; பாருமிவர்
பந்தென்றேன்; நின்குதிபூம் பந்தென்றார்; வெண்ணீறோ
சந்து? என்றேன்; போய் வநதேன் சந்தென்றார்; எந்தவூர்
நாடு? என்றேன்; நல்லுறவே நாடென்றார்; கையிலே
ஓடென்றேன்; கோபமா யோடென்றார்; போடுமிது
கோதென்றேன்; நீயதாம் கோதென்றார்; இங்குண்டோ
வாதென்றேன்; நாடினேன் வாதென்றார்; ஏதுசடைப்
புல்லென்றேன்; வந்திறுகப் புல் என்றார்; நெஞ்சிவர்க்குக்
கல் என்றேன்; நேசமினிக் கல்லென்றார்; நல்லதிவர்,
வம்பென்றேன்; நின்முலைக்கே வம்பு என்றார்; எண்ணியதென்
நம்பென்றேன்; நம்மையே நம்பென்றார்; கெம்புமிவர்
வாக்கென்றேன்; நாமணைய வாக்கென்றார்; ஆருடனே
தாக்கென்றேன்; கொங்கையொடு தாக்கென்றார்; போக்கரென்
போமென்றேன்; நால்வேதம் போம் என்றார்; பித்தரிவர்
ஓமென்றேன்; ஏதுமறியோம் என்றார்; தாமரைக்கைத்
தீயேதென்றேன்; காமத்தீ என்றார்; கண்விழித்தேன்
போயே மறைந்தார் புறம்போகார்;" (திருக்காளத்தி நாதருலா)

தன்னிகரில்லாத் தலைவரைத் தன் இன்னுயிர்த் துணைவராயெண்ணியிருந்த ஓர் தலைவி தன் கனவில் அவரோடு உரையாடியிருக்கும் நிலையை இதில் ஊன்றி யறிந்துகொள்க.

தன் காதலனைக் கனவிலும் காதலி கருதியிருப்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை சுதன்மைபால் உணரப்படும்.

## கதை.

சுதன்மை என்பவள் தருமசந்தன் என்னும் குறுநில மன்னனுடைய அருமைத் திருமகள். உருவிலும் திருவிலும் சிறந்து தன் பெயரியல்புக்கேற்ப உயரிய குணநலங்களும் அமைந்து விழுமிய நிலையில் இவள் விளங்கி யிருந்தாள். இவளது அழகமைதிகளை வினவி யறிந்து சோமகாந்தன் என்னும் அரசிளங்குமரன் ஆசைமீக் கூர்ந்தான். அவன் சவுராட்டிர தேசத்து மன்னன். அரிய நலங்கள் பல அமையப்பெற்றவன். "கைக் கொடையினால், எழுகரும்புயலை வென்றான்; மெய்க்கண் அழகால், உருவவேள் மதனை வென்றான்; வைக்கு நிதியால், அளகை மன்னவனை வென்றான்; எக்கு மிகு போகமதில், இந்திரனை வென்றான்;" என யாவரும் வியந்து புகழ உயர்ந்திருந்த அவன் இவளை விழைந்து வந்து மணந்து கொண்டுபோய்ச் சிறந்த போகங்களை நுகர்ந்து மகிழ்ந்திருந்தான். அவனுக்கு ஆருயிர்த் துணைவியாயமர்ந்து அளவிலின்பங்களை இவள் அருளிவந்தாள். இவளது இனிய நலங்களை வியந்து முனிவர் பலரும் புகழ்ந்தார்.

"கற்பால், வடமீன் புறங்கண்டாள்; கவினால், இரதி சசி கமலை
பொற்பார் அரம்பை திலோத்தமையைப்பொருதுபுறங்கண்டாள்;அரையன்
இற்பாற்கிழமை பூண்டறங்க ளெடுத்தாள்; சுதன்மை எனும்பெயராள்,
கற்பார் சோமகாந்தனுயிர் இரண்டாமென்ன நண்ணினாள்" (விநாயகபுராணம்

இங்ஙனம் நண்ணிநின்ற இவளை யாதும் அகலாமல் அவ் அண்ணல் ஆதரித்து வந்தான். வருங்கால் ஒருமுறை அரச காரியமாக அவன் அயலிடம் சென்றான். அப் பிரிவினைப் பொறாமல் இவள் மறுகி யுளைந்தாள். இரவும் பகலும் அவனையே கருதி யுருகியிருந்த இவள் துயிலு மிழந்து அயர்வுறலானாள். கண்ணுறங்குமாயின் கனவிடையாவது அவரைக் கண்டு எனது நிலைமையை உரைசெய்வேன் என்று கனவினை விரும்பிப் பல பல புலம்பினாள். "கயலுண்கண் துஞ்சின் கலந்தார்க்கு உயல் உண்மை சாற்றுவேன்" என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

உள்ளநிலை வள்ளற் குரைத்திடுவன் என்கண்கள்
மெள்ள வுறங்கி விடின்.

காதலி கனவை விழைந்துநின்ற நிலை இதனால் கூறப்பட்டது.

1213. ஊற்ற கனவில் உவந்தாள் வசுந்தரிதன்
கொற்றவனை என்னே குமரேசா—பெற்ற
நனவினு னல்கா தவரைக் கனவினாற்
காண்டலி னுண்டென் னுயிர். (௩)

இ—ள்.

குமரேசா! காதலனைக் கனவில் கண்டு வசுந்தரி ஏன் களித்திருந்தாள்? எனின், நனவினால் நல்காதவரை கனவினால் காண்டலின் என் உயிர் உண்டு என்க.

நனவு = விழித்திருக்கும் சமயம். அஃதாவது பொறிகள் புலன்களோடு உலாவி நிற்கும் காலம் என்க.

நல்காதவர் என்றது காதலனை. பிரிந்துபோன அவன் விரைந்துவந்தருளாமையால் நல்காதவர் என இங்ஙனம் மொழிந்து நின்றாள். நல்காதவரைக் கனவு நல்கியுள்ளதென்கின்றாள்.

நனவில் நேரே முயங்கி மகிழ்ழுறாயினும் கனவிலாவது கண்டு வருகின்றேனாதலால் என் உயிர் வாழ்க்கை இவ் வளவில் நிலைத்துள்ளது என்பாள் "காண்டலின் என் உயிர் உண்டு" என்றாள். இதனால் தன் நாயகனை இவள் நயந்து நிற்கும் நிலை அறிந்துகொள்ளலாகும்.

"தச்சன் செய்த சிறுமா வையம்
ஊர்ந்தின் புறாஅ ராயினும், கையின்
ஈர்த்தின்புறூஉம் இளையோர் போல
உற்றின்புறேஎ மாயினும் நற்றேர்ப்
பொய்கை யூரன் கேண்மை
செய்தின் புற்றனெம் செறிந்தன வளையே". (குறுந்தொகை 61)

காதலனை நேரே முயங்கப் பெறாமல் அவனுரிமையை நெஞ்சில் நினைந்துவந்த தலைவி உளைந்து உரைத்தபடி யிது. தேர்மேல் ஏறி இன்புறாமல், அதனை யீர்த்து மகிழும் இளைஞரைத் தனக்கு ஒப்புக்கூறி இதில் அவள் உவைத்திருக்கும் நிலைமையை ஊன்றிப் பார்க்க. மா = குதிரை. வையம் = தேர்.

மேல், கண்ணுறங்கினால் காதலனைக் கனவில் கண்டு மகிழலாம் என்றாள்; இதில், அக் காட்சியின் மாட்சியை யுரைக்கின்றாள்

நனவின்கண் வந்தருளாத நாதரைக் கனவில் கண்டு வருதலி னால் என் உயிர் நின்று வருகின்றதென்பதாம்.

காண்டல் இல்லையாயின் உயிர் மாண்டொழியும் என்பது குறிப்பு. இதனால் அக் காட்சி நிலை புலனும். பிரிந்து வருந்தி யிருந்த தலைவி கனவின் கண் இடையிடையே தன் கணவனைக் கண்டு சிறிது ஆறிநின்றுளாதலால் அந் நிலையினைத் தோழியிடம் ஒருநாள் அவள் உரைத்தபடி யிது.

ஆதவனைக் காணாத அம்புயம்போலக் காதலனைக் காணமல் கவினிழந்திருந்த நீ சிலகாலமாகப் பொலிவமைந்துள்ளாயே இதற்குக் காரணம் யாது? என அவள் கருதி வினவியபொழுது இவ்வாறு இவள் உரைசெய்தாள் என்க.

"கானலஞ் சேர்ப்பனைக் கண்டாய் போலப்
புதுவது கவினினை என்றி ஆயின்,
நனவின் வாரா நயனி லாளனைக்
கனவிற் கண்டுயான் செய்தது கேளினி;
அலந்தாங்கமையலெ னென்றானைப் பற்றி என்
நலந்தாராயோ வெனத் தொடுப்பேன் போலவும்,
கலந்தாங்கே யென் கவின்பெற முயங்கிப்
புலம்ப லோம்பென அளிப்பான் போலவும்,
முலையிடைத் துயிலும் மறந்தீத் தோயென
நிலையழி நெஞ்சத்தேன் அழுவேன் போலவும்,
வலையுறு மயிலின் வருந்தினை பெரிதெனத்
தலையுற முன்னடிப் பணிவான் போலவும்,
கோதை கோலா விறைஞ்சி நின்ற
ஊதையஞ் சேர்ப்பனை அலைப்பேன் போலவும்,
யாதென் பிழைப்பென நடுங்கியாங்கே
பேதையை பெரிதெனத் தெளிப்பான் போலவும், ஆங்கு,
கனவினாற் கண்டேன் தோழி! காண்டகக்
கனவின்வந்த கானலஞ் சேர்ப்பன்,
நனவின் வருதலும் உண்டென
அனைவரை நின்றது என் அரும் பெறலுயிரே" (நெய்தற்கலி)

பிரிவில் வருந்தியிருந்த ஒரு தலைமகள் தனது கணவன் வந்து கலந்ததாகக் கனவு கண்டு அந் நிலையினைத் தோழியிடம் இதில் உரைத்திருக்கும் திறங்களை ஊன்றி யுணர்ந்துகொள்க. அடிகள் கருத்தை இஃது அடியொற்றிவந்துள்ளமை அறியலாகும்.

கனவுக் காட்சி காதலிகளுக்கு உயிராதாரமாய் நின்று இன்பம் தரும் என்பது கருத்து. துணைவனைக் கனவிற் கண்டு மனைவி களித்திருப்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை வசுந்தரிபால் உணரப்படும்.

## கதை.

வசுந்தரி என்பவள் கோசலதேசத்து அரசனாகிய அரிந்தம னுடைய அருமைத் திருமனைவி. இனிய மொழியினள். மன நல முடையவள். இசை நூற் கலையில் இசைமிகப் பெற்றவள். இப் பெண்ணரும் கலத்தை விண்ணுயர் அமிழ்தென விழைந்து கொண்டு அவ் அண்ணல் மகிழ்ந்துவந்தான. இச் சதிபதிகளது அன்புரிமையையும் இன்ப நிலைகளையும் கண்டு யாவரும் வியந் தார். காவலர்க் கரசனான அவன்பால் ஆவல்மீக்கொண்டு இத் தேவியும் மேவருஞ் சீரோடு மேவியிருந்தாள்.

"கடையோர் போலக் காமத்திற் கழுமாது
இடையோர் இயல்பின தாகி, இலலது
உடையோர்க்கு உரிய உதவி நாடி
ஆனுச் சிறப்பின் யாவர்க் காயினும்
தானப் பெரும்பயந் தப்புத லின்றி
ஓசை யோடிய உலவாச் செல்வத்துக்
கோசல வளநாட்டுக் கோமாற் பிழையாத்
தேவியர்க் கெல்லாந் தேவி யாகிய
திருத்தகு கற்பிற் றீங்குயிற் கிளவி
வரிக்குழற் கூந்தல் வசுந்தரி" (பெருங் கதை)

நீர்வள நிலவளங்களில் சிறந்து அடைந்தவரெவர்க்கும கோசல நாடு ஆதரவா யிருந்ததும், அதன் தலைவனுக்குத் தலை மைத் தேவியாய் இக் குலமகள் நிலவி யிருந்ததும் இதில் உரை செய்துள்ளமை காண்க. இங்ஙனம் உழுவலன்போடு பெருமித

நிலையில் மருவி வருங்கால் அக் கோமகன் பாஞ்சால தேசத்து மன்னனோடு போர் செய்ய நேர்ந்தது. அமர்மேல் மூண்டு அவன் அகன்று நின்றபோது இவள் தனியே கவன்றிருந்தாள். தன் துணைவனை நினைந்து நினைந்து நெடுந்துயர் மிகுந்து நிலை தளர்ந்து வநத இவளைத் தோழியர் நெருங்கி உறுதி பல கூறி உளந்தேற்றி நின்றார். நினைவு மிகுதியால் இடையிடையே கனவின்கண் தனது கொழுநனைக் கண்டுவந்தாளாதலால் அக் காட்சி இவளுக்கு மிகவும் களிப்பூட்டி நின்றது. அக் கனவு நிலை தன் உயிர் நிலைக்கு உறுதி பயந்துள்ளதென உழையிருந்தவர் பால் உரைசெய்து வந்தாள். "நனவினால் நல்காதவரைக் கன வினால் காண்டலின் என் உயிர் உண்டு" என்பதை உலகம்காண இவள் உணர்த்தி நின்றாள்.

காதலர்தாம் வந்து கனவில் கலந்தின்பம்
ஈதலால் சாதல் இலை.

கனவினால் தலைவி இனிதிருந்தமை இதனால் கூறப்பட்டது.

1214. கண்டுநின்ற மாயை கனவின்கண் காமவின்பம்
கொண்டுவந்தாள் என்னே—குமரேசா—தண்டாக்
கனவினா லுண்டாகுங் காம நனவினா
னல்காரை நாடித் தரற்கு. (௪)

இ—ள்.

குமரேசா! நனவில் நல்காதிருந்த காதலனை மாயை ஏன் கனவில் கலந்து மகிழ்ந்தாள்? எனின், நனவினான் நல்காரை நாடித் தரற்கு கனவினான் காமம் உண்டாகும் என்க.

இது, காம இன்பம் கனவுதந்த தென்கின்றது

நாடித் தரற்கு = தேடிக்கொண்டுவந்து தருதலான். நான்க னுருபு மூன்றன் பொருளில் வந்தது. பிரிந்துபோன காதலன் இருந்துவரும் இடம் தனக்குத் தெரியாதிருந்தும் கனவு அவனைக் கொணர்ந்து கூட்டியருளுதலால் நாடித் தரும் என்றாள். நனவு நல்காததைக் கனவு நல்கியதென அதன் உதவி நிலையை உவந்து கூறியவாறிது.

காமம் என்றது அதனாலான இன்பத்தை. இது ஆகு பெயர். நனவிற் பிரிந்த காதலனை நினைவிற் கொண்டிருந்தாளாதலால் அந் நினைவின் கனத்தால் அவனைக் கனவிற் கலந்ததாகக் கண்டு இங்ஙனம் கருதி யுரைத்தாள் என்க.

மேல், கனவுக் காட்சியால் உயிருண்டென்றாள். இதில், அதனால் இன்பமும் உண்டென்கின்றாள்.

நனவின்கண் வந்து அருள் செய்யாரைத் தேடிக் கொணர்ந்து தருதலான் கனவின்கண் இன்பம் உண்டாகும் என்பதாம்.

அகன்றுபோன காதலனை நினைந்து கவன்றிருந்த தலைவி அவன் இரவு வந்து கலந்துள்ளதாகக் கனவு கண்டாளாதலால் அவ் இன்ப நிலையை அன்புடைத் தோழிக்கு அவள் உரைத்த படி யிது. நனவில் துன்பமடைந்திருந்தவள் கனவில் இன்ப நுகர்ந்தமையால் அதன்பால் அன்புகொண்டு இங்ஙனம் உரைத்தாள் என்க. பிரிவாற்றாமல் பேதுறுவார்க்குக் கனவு ஒருவாற்றான் உதவி நிற்கும் என்பது இதனா லுணரலாகும்.

> "அஞ்சலென் றகன்றுநீ அருளாது துறத்தலின்,
> நெஞ்சழி துயரட நிறுப்பவும் இயையுமன்;
> நனவினால் நலம்வாட நலிதந்த நடுங்கஞர்
> கனவினால் அழிவுற்றுக் கங்குலுமாற்றாக்கால்" (கலி 53)

தலைவி பிரிவாற்றி யிருந்த நிலைமையைத் தோழி தலைவனுக்கு உரைத்தபடி யிது. கனவு அவளுக்கு ஆறுதலாயிருந்ததை இதில் அறிந்துகொள்க.

> "துனியுறு புலவியைக் காதல் சூழ்சுடர்
> பனியெனத் துடைத்தலும் பதைக்கும் சிந்தையாள்
> புனையிழை ஒருமயில் பொய்யுறங்குவாள்
> கனவுஎனும் நலத்தினால் கணவற் புல்லினாள்" (இராமாயணம்)

நனவில் ஊடியிருந்த ஒருத்தி கனவி னுதவியால் கூடி மகிழ்ந்திருக்குந் திறனை இதில் நாடி யறிந்துகொள்க.

கைவராத காதலனைக் கனவில் கலந்து காதலி மகிழ்ந்து கொள்வள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை மாயைபால் உணரப்படும்.

## கதை

விளவல தேயத்து அரசகுமாரியாகிய மாயை என்பவள் அல்லம தேவனை விழைந்து அல்லும் பகலும் அல்லலுழந்து அலமந்திருந்தாள். அவ் அழகனைக் கலந்தின்புற வேண்டும் என்னும் காதலால் ஆனவரையு முயன்று யாதும் அமையாமையால் நோதல்மீக் கூர்ந்தாள். முடிவில் அக் குழகன் அமைந்ததாக அமர்ந்திருந்து பின்பு அகன்றுபோனான். அவனை நினைந்து நினைந்து இவள் நெடுங் கவல்கொண்டாள். வெயிலிடைவைத்த வெண்ணெய்போல் மயலிடைப் பட்டு உளமிக வுருகி உயிர்த்துயிருழந்தாள். இடையறாது எண்ணியிருந்த இவள் அவனது உருவெளித் தோற்றத்தை மலரணையில் கண்டு மயங்கி முயங்கினாள். தழுவியபொழுது அங்கு ஒன்றுமில்லாமையால் இவள் தவித்துத் திகைத்தாள்.

"நாடிய ஆடி நிழலென அணைமேல் நண்ணுறத் தோன்றிய இறையை
ஓடினள் விழுந்து தழுவுறத் தழுவ வுறாமையால் அணைமிசை விழுந்தே
ஆடியினிழலைப் பற்ற நீட்டியகை ஆடியிற் றாக்க நின்றழுது
வாடுறு மழலைப் பேதையே போல வருந்தினள் மதர்விழி மாயை;

சொல்லருமழகன் திருவுரு விழியிற் றோன்றலால் மீளவும் எழுந்து
புல்லினள் மலர்மென் கைகளால் வெளியைப் புல்லல்போற் சுவைத்தனள்
வெறுவாய், வல்லியிவ்வாறு வெளிமயக்குற்று வள்ளல் தன்கைப் படாமை
யினால், அல்லமனலனீ தூரு வெளி என்ன அயிர்த்தனள் உண்மையையன்றே

அருந்தவ நெடுநாள் முயன்று தான்பெற்ற அமுதை வாய்வைத் திடுமளவில்
கரந்தவறுதல்போல் அல்லமதேவன் கட்புலத் துற்றுமென்றோளிற்
பொருந்துற வெளிபோல் வராமையால் தீயிற் புழுவெனப் பதைபதைத்
தரிவை, வருந்தினள் காமம் அல்லமனன்றி வடிவுளார் யார் கடந்திடுவார்!"

(பிரபுலிங்கலீலை)

இவள் மயங்கித் தழுவி மறுகி யுளைந்தபடியை இவற்றுள் ஊன்றி நோக்கி யுணர்ந்து கொள்க. காம நோயால் இவ்வண்ணம் கலங்கியிருந்த இவள் அயர்ந்து உறங்குங்கால் அவ் அண்ணலைக் கலந்து களிப்பதாகக் கனவு கண்டாள். உடனே விழித்தெழுந்தாள். பொழுதும் விடிந்தது. தன் கனவு நிலையைத்

தோழிகளிடம் இவள் கூறி மகிழ்ந்தாள். அடியில் வருவன காண்க.

"விண்ணினைக் குத்திக் கையிளைப்பவர்போல் வேனெடுங்கண்ணியங்கிருந்த அண்ணலைத் தழுவித் தழுவியே வருந்தி அவசமுற் றணைமிசை யுறக்க எண்ணுறுநினைவால்அவன் புணர்ந்ததுபோல் இன்கனவொன்று கண்டெழுந்தாள், கண்ணகனிலத்தி னிருள் குடிப்பவனும் கருங்கடல் முகட்டினி லெழுந்தான்;
காலையில் மாலை வார்குழல்மாதர்க் கண்டுரை செய்வள் அல்லமன்றன் கோலமென் சொல்வேன்? விழியெதிர் தோன்றிக் குறுகில் என் கைப்படா னதனல், சாலவும் நைந்து துயின்றனன் கனவில் தடமுலை குழைந்திடப் புல்லி, மேலு நல்லருள் செய்துன்னை நான் என்றும் விடுகிலென் என்றனன் என்ருள்". (பிரபுலிங்கலீலை)

நனவில் கூடாதவனைக் கனவில் கூடி இவள் களித்துள்ளதையும், அதனை அயலறிய உரைத்து மயலடர்ந்திருத்தலையும் இதில் அறிந்து கொள்க. "நனவினுல் நல்காரை நாடித்தரற்குக் கனவினுல் காமம் உண்டாகும்" என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்ருள்.

வந்து கனவில் மருவி யருளின்பம்
தந்து தணிவர் தனி.

கனவிலும் காமம் நுகரலாமென்பது இதனுல் கூறப்பட்டது.

---

1215 ஏனோ கனவை இனிதென்று பஞ்சசனி
கோனுவந்து கொண்டாள் குமரேசா—ஆன
நனவினுற் கண்டதூஉ மாங்கே கனவுந்தான்
கண்ட பொழுதே யினிது. (ரு)

இ—ள்.

குமரேசா! பஞ்சசனி கனவினை ஏன் இனிது என உவந்து கொண்டாள்? எனின், நனவினுல் கண்டதும் ஆங்கே கனவும் தான் கண்டபொழுதே இனிது என்க.

கண்டதூஉம் = கண்டு நுகர்ந்த இன்பமும். அளபெடை இன்னிசை தர வந்தது. ஆங்கே = அப்பொழுதே. கனவும்

தான்—கனவின்கண் கண்டு நுகர்ந்த இன்பமும். கனவு இங்கு ஆகு பெயராய் நின்றது. உம்மை இறந்தது தழீஇயது.

மேல், கனவிலும் இன்பமுண்டாம் என்றாள்; இதில், அது நனவுபோலவே உண்மையாம் என்கின்றாள்.

நனவில் கண்டு மகிழ்ந்த இன்பம்போலக்கனவில்கண்டதும் அப்பொழுதே இனிதாம் என்பதாம்.

பிரிவாற்றியிருந்த தலைவி தன் காதலனைக் கனவிற் கண்டு இன்பந்துய்த்தேன் என்றாள்; அது கேட்ட தோழி, கனவு பொய்த்தோற்றம் ஆயிற்றே; அதில் தோன்றிய இன்பம் எப்படி உண்மையாம்? என்ன, அவ்வமயம் அவள் உரைத்தபடியிது.

நனவில் முன்பு கண்டபொழுது எவ்வாறு அவர்பால் இன்பம் அனுபவித்தேனோ அவ்வாறே இதுபொழுது கனவிலும் மெய்யாக அனுபவித்தேன் எனத் தன் கனவு நிலையை இங்ஙனம் உறுதியாக வுரைத்தாள் என்க.

காதலிகளுக்குக் கனவும் நனவுபோல் இன்பந்தரும் என்பது கருத்து. இவ்வுண்மை பஞ்சசனிபால் உணரப்படும்.

## கதை.

பஞ்சசனி என்பவள் பரதன் என்னும் அரசனுடைய அருமைத் திருமனைவி. இந் நில மண்டலம் பரதகண்டம் எனத் தன் பெயரால் நிலவி நிற்கும்படி தனிச் செங்கோல் செலுத்திய அம் மன்னர்பிரான் இவளை இன்னுயிர்த் துணைவியாக் கொண்டு இசைபுரிந்து நின்றான், இவளுடைய வடிவழகும் குண நலங்களும் படிமுழுவதும் பரவ நின்றன. அரசபோகங்க ளனைத்தையு மறந்து அல்லும் பகலும் அகலாதமர்ந்து இவளது இன்ப நலங்களை மாந்தி அன்புமீக் கூர்ந்து அவன் அரும்பகல் கழித்தான்.

“ கண்கவர் உருவுகண்டும், கயல்மலைப்பன்ன கண்ணாள்
பண்கவர் மழலைகேட்டும், படாமுலைத் தடத்திற் றோய்ந்தும்,
விண்கவர் பவளச் செவ்வாய் விளையமு தூறலுண்டும்,
மண்கவர் குவவுத் தோளான் வருபகல் கழிப்பான் மன்னோ ”

என்றபடி அம் மன்னன் மன்னிவருங்கால் அருவினை கருதி ஒருமுறை மறுபுலம் சென்றான். அப் பிரிவிடை யுருகி இவள் மறுகி யயர்ந்தாள். தோழியர் ஆற்றியும் ஆழ்ந்து யுளைந்தாள். அனவரதமும் நெஞ்சில் நினைந்திருந்தாளாதலால் கனவிடை வந்து அவன் கலந்ததாகக் கண்டு மகிழ்ந்தாள். அக் கனவுக் காட்சியை நனவைப்போலவே நயந்து புகழ்ந்தாள். "கனவுந்தான் கண்ட பொழுதே இனிது" என்பதை எவரும் காண இவள் உணர்த்தி நின்றாள். பின்பு வினைமுடித்து அவ் ஆண்டகை மீண்டு வந்து இவளை மேவி மகிழ்ந்தான். இவளும் ஆவி குளிர்ந்தாள். அதன் பின் அவனை யாதும் பிரியாமல் அமர்ந்திருந்து சுமதி, சுந்தன், திருணபிந்து, தேவதாசிந்து, தௌமியன் என்னும் புதல்வர் ஐவரைப் பெற்றுப் புகழ்மிக வாழ்ந்தாள். முடிவில் ஞான சீலனாய் அவன் தவ நிலையை யடைந்தபொழுது இவளும் உடன் தொடர்ந்து உறுபணி யாற்றி அவனோடு உறைந்திருந்தாள். அவனது வாழ்க்கை நிலையைக் குறித்து அருந்தவர்களும் உவந்து புகழ்ந்துளார். அடியில் வருவது காண்க.

"புனைகுடைப் பரதன் என்போன் போற்றுதன் பெயரேபெற்றுப்
பனிவரை எல்லையாம் இப் பாரகம் பொலியக் காத்துத்,
தனியெழில சேருமபஞ்ச சனி யிளமுலையிற் புல்லி
வனைகழற் சுமதி யாதி மைந்தர் ஐவரைப் பெற்றானல்; (க)
எவ்வகைக் குலமும் அஞ்ச வங்கெழில் திணிதோள் மைந்தர்
ஐவரும் அவனி காப்ப ஐவரை அகத்துள் வென்றோன்
கைவரை யழைப்பவந்த காரணற்கு அன்பு பூண்டு
மைவரை யருவிச் சாரல் மருவினன் மன்ன வென்றான்" (உ)
(பாகவதம்)

முனிவர் முதல் அனைவரும் புகழ இங்ஙனம் நிலவியிருந்த அவனைத் துணைவனாக் கொண்டு இவள் அணுகியிருந்ததும், கனவினும் மறவாமல் கருதிவந்ததும் இதனால் அறியலாகும். நனவு போலவே கனவினும காதலிகள் இன்பம் நுகர்வர் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

நனவகன்ற காதலரை நல்கி யருளும்
கனவே எனக்குக் கதி.

கனவுநிலை காதலிகட்கு இனிதாம் என்பது இதனால் கூறப்பட்டது.

1216. உற்ற கனவை உவந்தாள் ஏனனவைக்
குற்றமெனா நொந்தாள் குமரேசா—மற்ற
நனவென வொன்றில்லை யாயிற் கனவினாற்
காதலர் நீங்கலர் மன். (சு)

இ—ள்.

குமரேசா! உவள் ஏன் நனவினை இகழ்ந்து கனவை உவந்திருந்தாள்? எனின், நனவு என ஒன்று இல்லை ஆயின் கனவினால் காதலர் நீங்கலர் என்க.

இது, நனவினும் கனவு நல்லதென்கின்றது.

ஒன்று என்றது ஒரு பாவி என்றவாறு. நனவை இங்ஙனம் வெறுத்துக் கூறியது தனக்கு இடையூறு விளைத்தமை குறித்து. கனவு, கண்ணுறங்க வரும்; நனவு, கண்விழிப்பி லெழும்; அவ்விழிப்பு நிலையில் துணைவன் மேவானாதலால் அஃது இழிப்புற நின்றது.

"கனவினாற் காணிய கண்படா வாயின்
நனவினால் ஞாயிறே! காட்டாய் நீயாயின்" (நெய்தற்கலி)

ஓ சூரியனே! காதலரைக் கனவில் கண்டு மகிழும்படி என் கண்கள் உறங்காதுழல் கின்றன; நீயாவது நனவில் அவரைக் காட்டியருளாயா? என ஒருத்தி இதில் கேட்டிருத்தல் காண்க.

பிரிவுத் துன்பத்தில் வருந்தியுள்ள மகளிர்க்குக் கனவு ஓரோவழி காதலரைக் கையகப்படுத்தி இன்பநிலையமாயிருக்குமாதலால் அதன்பால் அன்புகொண்டு அவர் நண்புசெய்வர் என்க.

மேல், கனவுக் காட்சியை உவந்து நின்றாள்; இதில், நனவை இகழ்ந்துரைக்கின்றாள்.

நனவு என்று சொல்லப்படுகின்ற ஒரு பாவி இல்லையாயின் கனவின்கண் வந்து கலந்திருந்த காதலர் என்னைப் பிரிந்துபோகார் என்பதாம்.

தன் காதலனைக் கனவில் கலந்துகளித்திருந்த காதலி விழித்தெழுந்தபொழுது அக் கனவின்பத்தை விழைந்து நனவினை வெறுத்துரைத்தபடியிது.

"மனவே யணியும் திருவெங்கை வாணர் வரையணங்கு
சினவேலிறைவ! நின் தோளொடு கொங்கை திளைக்கவரும்
கனவே யுயரும் துறக்கமென்பாள்; நினைக் காண்பரிய
நனவே துயரந்தருகின்ற தீவெந் நரகென்பளே"
(திருவெங்கைக் கோவை)

கனவைச் சுவர்க்கமாகவும், நனவை நரகமாகவும் இதில் ஒருத்தி குறித்திருத்தல் காண்க. பிரிந்துபோன கணவனைக் காணாமல் நினைந்து வருந்துகின்றவள் கனவிடை அவனைக் கண்டு களித்தாளாதலால் அதனை இங்ஙனம் உவந்து கொண்டாள். நனவை இகழ்ந்தது அவ் இன்ப நலனை எய்தாவண்ணம் இடையே புகுந்து தடைசெய்து விடுதலான் என்க.

"கொழித்துத் தமிழ்கொள்ளும் கிள்ளிக்குலோத்துங்கன் கோழிவெற்பில்
வழுத்தித் தலைவர் கனவில் வந்தார்; வெண்ணெய் வாருகைக்கே
அழுத்திக் கடையப் பெருந்தாழி யங்குடைந் தாலெனவே
விழித்துக் கெடுத்தது தோழி என் பாவி விழித் துணையே"
(குலோத்துங்க சோழன் கோவை.)

கனவின்பம் கைகூடாவகை நனவுசெய்ததென ஒரு தலைவி அதனை இதில் இகழ்ந்திருக்கும் அழகைப் பார்க்க.

விழிப்பு வாராதொழியின் என் காதலனைக் கனவில் மருவி எப்பொழுதும் களித்திருப்பேன்; அங்ஙனம் இல்லாவகைபாவி நனவு இடையே புகுந்து என்னைப் பரிசுகுலைக்கின்றதே எனப் பருவரலோடு இங்ஙனம் உரைக்கலானாள்.

கனவுநிலையைக் காதலிகள் விழைந்துநிற்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை உஷைபால் உணரப்படும்.

## கதை.

உஷை என்பவள் வாணாசுரனுடைய அருமைத் திருமகள். பெரு வனப்பினள். அமர மங்கையரும் வியந்து நோக்கும்படி

சிறந்த எழிலோடு விளங்கியிருந்தாளாதலால் இவளை மணந்து கொள்ள விழைந்து அரசிளங் குமாரரனைவரும் அலந்து நின்றார். இவள் எவரையும் விரும்பாமல் பெருமித நிலையில் தனியமர்ந் திருந்தாள். தோழியர் பலருடன் கன்னிமாடத்தில் இவள் மன்னி வருங்கால் அநிருத்தன் என்பவனைத் தெய்வகதியாய்க் கனவிற் கண்டு களிப்புமீக் கொண்டாள். அவன் மன்மதன் அம்சமான பிரத்யும்மனன் புதல்வன், கண்ணனுக்குப் பேரன். அக் கட்டழகனைக் கனவிற் கலந்த இவள் நினைவுற் றெழுந்து நேரொன்றுங் காணுமல் நெடுந்திகில் கொண்டாள், அவனது காமர் நிலையையே கருதி யுருகினுள். வேறொரு யென்ன வெய்து யிர்த்து விரகமீக் கூர்ந்தாள். இவளது நிலையினை உய்த்தறிந்த சித்திரரேகை என்னும் தோழி உற்றது யாது? என அற்றம் வினவினுள். அவளிடம் இவள் உள்ளதை யுரைத்தாள்.

"கள்ளவிழ் கோதை! கண்டேன் கனவினில் ஒருவன் தன்னை
அள்ளிலைப் பூணினுன்றன் அம்பகட் டார மார்பும்,
புள்ளுண விரிந்த பைந்தார்ப் பொன்வரை பொருவு தோளும்,
ஒள்ளொளி நகையும், ஆவி யுண்டவென் றுருகினுளால்" (பாகவதம்).

இங்ஙனம் இவள் மறுகி யுரைத்ததை அப் பாங்கி பாங்குடன் நோக்கி உண்மையை யூகஞ் செய்தோர்ந்தாள். அவள் கைதேர்ந்தவளாதலால் தன் சிந்தையிலாய்ந்து செய்த மந்திர வலியால் ஒருநாளிரவு அவன் உறங்கும்பொழுது அமளியோ டெடுத்துக் கொணர்ந்து அவனை இவளது மேன் மாடத்தில் விடுத்து மெல்ல ஒதுங்கி வெளியே போனுள். அவன் விழித் தெழுந்தான்; விம்மித மெய்தினுன்; புதிய மாளிகையைக் கண்டு அதிசயமடைந்த அவன் அருகே நின்ற இவளை அமர்ந்து நோக்கி அகந் திகைத்தான்; சந்திர பிம்பமோ? என முதலில் மயங்கிநின்ற அவன் பின்பு முந்தி விழைந்து முயங்கி மகிழ்ந்தான். புனலொடு புனல் கலந்தாற்போல் இருவரும் உருகி மருவி உயிர் தளிர்த் தெழுந்தார். இவளது இன்ப நலங்களிலாழ்ந்து மதுவீழ் வண்டுபோல் இரவுபகலறியாது அவன் இழிந்து கிடந்தான். துயிலோடுவந்த அவன் இவளை மயலொடு தழுவி மயங்கியிருந்த படியை அடியில் வருவனவற்றால் இனிதறியலாகும்.

“கயலுயர் குரிசில் ஈன்ற கட்டெழிற் காளையாங்குத்
துயிலொரீஇ எழுந்து துஞ்சாச் சுடர்மணி விளக்கமென்னக்
குயில்வதற்கரிய பொன்னங் கொழுந்தென மருங்கு நின்ற
மயிலியல் வதனம் நோக்கி மதிகொல்? என்று அயிர்த்தல் செய்தான்;
முறுவல்வா ணிலவேயன்றி முகிழ்நகை நிலவு பாய்ந்து
நறைகமழ் குமுதப்போது நலந்திகழ் புரிவு நோக்கிப்
பொறிநுதல் வியர்ப்பநின்ற பொற் கொழுந்தனைய பேதை
மறுவில் வாண்முகமென் றெண்ணி மைந்தன் உண்மகிழ்வுபூத்தான்;
ஆழிவாய் அமிழ்துபெற்ற ஆயிர முளரிச் செங்கட்
சூழ்கழற் குரிசிலன்ன சுடரிலை நெடுவேற் காளை
காழகில் கழுமவுண்டு கடைகுழன் றிருண்டு நெய்த்த
தாழ்குழல் கழுமுற்றெய்தாத தடமுலை தழுவினானால்;
கூந்தலம் பிடியோடாடும் கொல்சினக் களிறுபோலக்
காந்தழலுமிழும் வேலான் கங்குலும் பகலும் வில்லான்
மாந்தளிர் குழைவுகூர வழிந்தழ கொழுகுமேனி
ஏந்திழை முறுவல் மாந்தி இருந்தனன் கரந்து மன்னோ.”

(பாகவதம்)

தன் கன்னியை மருவி இங்ஙனம் கரந்திருந்த அவனை ஒரு நாள் வாணன் கண்டு வன்சினங்கொண்டு வெஞ்சிறைப் படுத்தான். பின்பு இவள் கருத்தறிந்து அவனுக்கு இவளை மணஞ் செய்துகொடுத்து வேண்டிய வரிசைகளை விழைந்து நல்கினான். “படுமதக் களிறு சூழப், பாய்பரி வெள்ளமீண்ட, இடிமுரசதிரப் பொற்றேர் ஏறி வண்டிரைக்கும் பைந்தார், அடல் அநிருத்தன் தன்னோடு ஆம்பலிற் கமழும் செவ்வாய், மடமயிலன்ன சாயல் மகளை ஆங்குதவினானே.” இவ்வாறு உதவிய இவளை அவன் உவந்து கொண்டுபோய்த் தன் திரு நகரடைந்து சிறந்த போகங்களை நுகர்ந்து செம்மாந்திருந்தான். முதலில் அவனைக்கனவில் கலந்து விழித்தபொழுது இவள் நனவை இகழ்ந்தாள்; அக் கனவினை விழைந்தாள். ‘‘நனவு என ஒன்று இல்லையாயின், கனவினால் காதலர் நீங்கலர்’’ என்று காதலிகள் கருதி யுளைவர் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

பொல்லா நனவு புகுந்திலதேல் என்கனவில்
எல்லாம் இனிதா மெனக்கு.

கனவைக் கருதியுள்ளமை இதனால்கூறப்பட்டது.

1217 கண்ட சிகண்டினிதன் காதலனை முன்கனவிற்
கொண்டிகழ்ந்தாள் என்னே குமரேசா—அண்டி
நனவினா னல்காக் கொடியார் கனவினான்
என்னெம்மைப் பீழிப் பது. (எ)

இ—ள்.

குமரேசா! கனவில் கண்ட காதலனைச் சிகண்டினி ஏன் கடுத்து இகழ்ந்தாள்? எனின், நனவினால் நல்காக் கொடியார் கனவினால் எம்மைப் பீழிப்பது என்? என்க.

இது, கனவின் பொய்மையைக் கண்டு கலுழ்கின்றது.

பீழிப்பது = துயரப்படுத்துவது. பீழை = துன்பம். கொடியார் என்றது தலைவனை. பிரிந்துபோய் நெடுநாளாகியும் வந்தருளாமையால் நொந்து கூறியபடி யிது. எம்மை எனப் பன்மையிற் குறித்தது தன் தன்மை தோன்ற. தலைவி பெருமித நிலையினளாதலால் இவ்வாறு உரை செய்தாள் என்க.

பகலில் வந்து நேரே தலையளி செய்யாதவர் இரவில் புகுந்து வீணே என்னை ஏன் இப்படித் தொந்தரவு படுத்துகிறார் என்பாள் "கனவினால் பீழிப்பது என்?" என்றாள்.

"களியானைத் தென்னன் கனவில்வந் தென்னை
அளியான், அளிப்பானே போன்றான்;—தெளியாதே
செங்காந்தள் மென்விரலாற் சேக்கை தடவந்தேன
என்காண்பேன் என்னலால் யான்" (முத்தொள்ளாயிரம்)

தலைவன் வந்து அளிசெய்து தழுவியதாகக் கனவு கண்டு அது பொய்யென்றறிந்து ஒருத்தி இதில் புலம்பியிருத்தல்காண்க. நனவின்கண்வந்து எனக்கு அருள் செய்யாத கொடியவர் கனவில் வந்து என்னை வருத்துவது வம்பு" என்பதாம்.

பிரிவுத் துயரால் மறுகியிருந்த காதலி அரிதில் கண்ணயர்ந்தபொழுது தன் காதலன் வந்து கலந்து கைச்சரசம் செய்வதாகக் கனவு கண்டெழுந்தாள்; எழவே அங்கு ஒன்றுங் காணமை

யால் உள்ளங்கன்றி அவள் இங்ஙனம் உரைத்தாள் என்க. இவ்வாறு உரைத்ததைத் தோழி பின்பு தலைவனுக்கு உணர்த்துவள். அது, கோவைத்துறையில் கனவுநலிவுரைத்தல் எனப்படும். அடியில்வருவன காண்க.

"மின்னவிர் வயக்கிழை ஞெகிழச் சாஅய்
நன்னுதல் பசத்தலாவது? துன்னிக்
கனவிற் காணும் இவளே
நனவிற் காணாள் நின் மார்பே தெய்யோ" (ஐங்குறுநூறு 234).

"மாறாத தெவ்வென்ற வாணன் தென்மாறைவளநகர்போற்
பூணாகம் எல்லியிற் புல்லினையாக அப்பொய்யை மெய்யாப்
பேணா மகிழ்ந்து பெருந்துயில் ஏற்றவள், பின்னை நின்னைக்
காணாள்; கலங்கினளால், கலங்காமனக் காவலனே"
(தஞ்சைவாணன் கோவை)

"நெய்யார் மழுவரன் கோடீச்சுரமன்ன நேரிழையாள்
ஐயா! நெருநற் கனவிடை நீ வந்ததுவும், அவள்
கையாமலரைப்பிடித்ததும், மீது கலந்திடருள்
செய்யாதகன்றதும், சொல்லிநைந்தாளிதென்சித்திரமே"
(கோடீச்சுரக்கோவை)

கனவில்வந்து மெய்யே கலந்தருளாமல் பொய்யாய் நீர் போயிருத்தலால் ஐயோ தலைவி அலமந்துள்ளாள் எனத் தலைவனிடம் தோழி உரைத்திருத்தலை இவற்றுள் உணர்ந்து கொள்க.

பிரிந்துள்ள தலைவி கனவின் கலப்பை நினைந்து வருந்துவள் என்பது கருத்து. இவ்வுண்மை சிகண்டினிபால் உணரப்படும்.

## கதை.

சிகண்டினி என்பவள் தேவசேனன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகள். உருவிலும் திருவிலும் அறிவிலும் சிறந்து பெருமித நிலையில் விளங்கியிருந்தாளாதலால் இவளை மணந்துகொள்ள விழைந்து அரசிளங் குமரர்கள் பலர் முனைந்து நின்றார். இவள் எவரையும் விரும்பாமல் தனியமர்ந்து வந்தாள்.

வருங்கால் ஒருநாள் நகரயலிருந்த பனிமலர்ச் சோலையுள் தனியே இனிது உலாவி நின்றாள்; அவ் வமயம் தெய்வகதியா அங்கு வந்த அந்தர்த்தானன் என்னும் சுந்தரனைக் கண்டாள்; அவன் பிருது மன்னனுடைய அருமைத் திருமகன். பெருவனப்பினன்; பேரறிவாளன். இவளைக் கண்டவுடனே அவன் கடுமையல் கொண்டான்; இவளும் அவன் மேல் காதல்மீக்கூர்ந்தாள். பள்ளம் பாயும் வெள்ளம்போல் இருவரும் உள்ளம் பாய்ந்து உருகிப் புல்லி உயிரொன்றாகி உவந்து மாந்தினார். இவரது போகநுகர்ச்சி ஏகநிலையில் இனிதமைந்து நின்றது.

"ஏந்திள வனமுலை இரண்டும் பாய்ந்து தண்
சாந்தகம் கிழிதரத்தழுவிக் கைகளால்
மோந்தனன் புட்குரல் முழக்கம் கேட்டனன்;
மாந்தினன் இதழ்நறு மருவிப் புல்லினான்."

"வாட்டடங் கண்ணியும் மறிந்தன்னானாம்
கோட்டிளங் குவிமுலை கோட்டு மண்கொள
மூட்டிய காதலின் முயங்கிச் செய்யவாய்
ஓட்டமும் பருகினாள் உவப்புற்றாளரோ."

என்றவாறு இவ் இருவரும் ஒத்து நுகர்ந்து உயிர்தளிர்த்தெழுந்தார்; பின்பு உலகறிய மணந்து இவளை உடன்கொண்டு போய்த் தன் அணிநகரடைந்து மணிமுடி புனைந்து அளவிலின்புடன் அரசுபுரிந்தான். அவனை யாதும் பிரியாமல் அருகமர்ந்திருந்து இவள் அகமகிழ்ந்து வந்தாள். வருங்கால் அசுவமேதம் என்னும் யாகம் ஒன்று யாவரும் வியப்ப அவன் ஆற்றி நின்றான்; அதில் இந்திரன் இடையூறாகவந்து வேள்விக் குதிரையைக் கவர்ந்துபோனான். அவனை விரைந்து தொடர்ந்து சினந்து பொருது அதனை மீட்டிவந்து வேள்வியை முடித்து அவன் மெய்ப்புகழ்கொண்டான். இங்ஙனம் வீரத்திறலோடு விளங்கிநின்ற அவன் ஒருமுறை மருவலர் மீது பொருதிறங்கருதி மறுபுலம் போனான். அவன் உருவினை நினைந்து வருகையை விழைந்து இவள் மறுகியிருந்தாள். அவனை இடையறாது கருதியிருந்தமையால் பலமுறையும்கனவில்கண்டு இவள் களித்தெழுந்தாள்; விழித்தபொழுது காணாமையால் ஆற்றாமையோடு இவள் இழித்

துளைந்தாள். நனவில் வந்து கருணைசெய்யாது இவர் கனவில் புகுந்து என்னை ஏன் இப்படித்தொந்தரவு செய்கின்றார் எனச் சுழித்து மொழிந்தாள். பின்பு அவன் போர்முடித்து வந்த பொழுது விழைந்துதழுவி இவள் மகிழ்ந்துகொண்டாள். பாவ கன், பவமானன், சுசி என்னும் மக்கள் மூவரைப்பெற்று மிக்க சிறப்போடு மேவிநின்றாள். இத்தேவியை ஆவி எனக்கொண்டு அகமிகமகிழ்ந்து அவனிபுரந்தஅவனை அனைவரும் புகழ்ந்தார்.

"திசையெலாம்புகழ் நல்லெழிற் சிகண்டினி என்னும்
பசிய கோதையை மணந்து, பாவகன், பவமானன்,
சுசி எனப்படுமைந்தரையீன்று, தொல் வேள்வி
இசைகொளப்பலபுரிந்தனன் இசைக்கும் அவ்வேந்தன்'
(பாகவதம்)

இவளது எழில்நிலையும், கொழுநன்மீது வைத்துள்ள உழுவலன் பும், அவனது உயர்வும் பிறவும் இதன்கண்ணும் உரைக்கப் பட்டுள்ளன காண்க. காதலால் அவனைக் கனவிற்கண்டு கடிந் திகழ்ந்ததைப் பின் தோழியர் நினைவிற்கொண்டு இவள் நேரு ரைத்து நகைத்தார். "நனவினால் நல்காக்கொடியார் கனவினால் எம்மைப் பீழிப்பது என்?" எனப்பிரிந்தமகளிர் புலந்து நிற்பர் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

கையகன்று போனவர்நான் கண்ணுறங்க வந்துபுல்லி
வெய்யதொழில் செய்வ தெவன்.

கனவின் வரவைக்கடிந்து நின்றமை இதனால் கூறப்பட்டது.

---

1218 காமருயர் சத்தியைமுன் கண்விழித்தாள் கண்டிலளே
கோமகனை என்னே குமரேசா—ஏமமாய்த்
துஞ்சுங்காற் றோண்மேல ராகி விழிக்குங்கால்
நெஞ்சத்த ராவர் விரைந்து. (அ)

இ—ள்.

குமரேசா! கண்விழித்தபோது கண்ணனைக்காணுமல்

சத்தியை என்கவன்று நின்றாள்? எனின், துஞ்சும்கால் தோள் மேலராகி விழிக்குங்கால் விரைந்து நெஞ்சத்தராவர் என்க.

துஞ்சும்கால்—உறங்கும்பொழுது. "துஞ்சல், உறங்கல் தூங்கலாகும்" (பிங்கலந்தை). தோள்மேலராகி என்றது மார்போடு அழுந்தத்தழுவிக் கிடந்தமையை நினைந்து.

நெஞ்சத்தராவர் = மனத்தகத்தே மறைந்துநிற்பார். விரைந்து என்றது கண் திறந்து பார்க்குமுன்னமே கரந்துபோயினார் என அக்கரப்பின்கடுமை தோன்ற நின்றது.

மேல், கனவில்வந்து கைதவஞ்செய்தார் என்றாள்; இதில், நினைவிலென்றும் நிலைத்துள்ளார்என்கிறாள்.

நான் அயர்ந்துறங்கும் பொழுது என்தோள்மீது அமர்ந்து முயங்கி விழித்தவுடன் விரைந்து மனத்துள் ஒளித்துநின்றார் என்பதாம்.

காதலன்வந்து தன்னைக்கலந்து இன்புறுவதாகக் கனவுகண்ட காதலி உவந்தெழுந்து அவனில்லாமையால் அலமந்துரைத்த படியிது. விழித்தவுடனே தன் உளத்தகத்து அவன் ஒளித்துக் கொண்டான் என்பாள் "விழிக்குங்கால் நெஞ்சத்தராவர்" என்றாள். எப்பொழுதும் மனதில் அவனை இவள் நினைத்துள்ளமை இதனால் இனிது புலனாகும்.

"தெற்றெனக் கண்ணுள்ளே தோன்ற, இமையெடுத்துப்
பற்றுவேன் என்று யான் விழிக்கும் கால் மற்றும் என்
நெஞ்சத்துள் ஓடி ஒளித்தாங்கே துஞ்சாநோய்
செய்யும் அறனில் லவன்." (நெய்தற்கலி 27)

அடிகள்வாக்கை இஃது அடியொற்றி வந்துள்ளமை காண்க. விரக நோயை மிகுவித்துக் கரவு செய்து நிற்றலால் "அறன் இல்லவன்" எனத் தலைவி அவனை இகழலாயினாள். கண்ணில் கண்டவனைக் கை விட்டேனே என்று வாய்விட்டவாறிது. கனவிழந்ததைக் காதலிகள் கருதி வருந்துவர் என்க.

"தேவாசுரரிறைஞ்சுங் கழலோன் தில்லை சேரலர்போல்
ஆவா கனவும் இழந்தேன்; நனவென்றமளியின்மேல்
பூவார கலம் வந் தூரன் தரப் புலம்பாய் நலம்பாய்
பாவாய்! தழுவிற்றிலேன்; விழித்தேன் அரும்பாவியனே"
(திருக்கோவையார்)

கனவில்வந்த தலைவனைத்தழுவி யின்புறாமல் கையகலவிட்டேனே என்று ஒருதலைவி தன் விழிப்பு நிலையை இதில் இழித்திருத்தல் காண்க. ஆவா என்றது ஐயோ என்று வெய்துயிர்த்தவாறு.

"நீள்நகர் நிறையாற்றாள் நினையுநள் வதிந்தக்கால்
தோள்மேலா எனநின்னை மதிக்குமன் மதித்தாங்கே
நனவெனப் புல்லுங்கால் காணாளாய்க் கண்டது
கனவென வுணர்ந்துபிற் கையற்றுக் கலங்குமே" (கலி 126)

தன் காதலனைக் கனவில் தோள்மேலனாக்கண்டு நனவில் காணாளாய் ஒருத்தி இதில் நைந்திருத்தலறிக. இடையறாது கருதி யிருந்தவள் உறங்கத்தொடங்கிய பொழுதும் கணவன் நினைவாகவே கிடந்தாள்; கிடக்கவே இடையே வந்து அவன் அடையவளைந்து தன்னை ஆரத்தழுவியதாகக் கனவு கண்டாள்; கண்டவள், கடுத்து விழித்தாள்; விழித்து நோக்க அவனை அருகே காணோம்; ஆகவே பழையபடியே தன்நினைப்பில் அவன் நிலைப்பதாயினான்; ஆதலால் துஞ்சுங்கால் தோள்மேலும், விழிக்குங்கால் நெஞ்சத்திலும் உறைந்துள்ளான் என இங்ஙனம் உரைத்தாள் என்க. கனவிலும் நனவிலும் தன்காதலனைக் காதலிகருதியிருப்பள என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சத்தியை பால் உணரப்படும்.

## கதை.

சத்தியை என்பவள் கோசல தேசத்து அரசனாகிய நக்கினசித்து வின் அருமைத்திருமகள். அரும்பெறலுருவினள். இவளது எழில்நலங்களை வினவியறிந்து முடிமன்னர் பலரும் இவளை மணந்துகொள்ள விழைந்து மையல்மீக்கொண்டு மன்றாடிநின்றார். அவர் நிலைகளை இவள் தந்தைதெறிந்து சதுருடன் ஓர்உறுதியைத் துணிந்து உலகறியச் செய்தான். கூரிய கொம்புகளுடைய ஏழு கொழுத்த காளைகளைச் செழிப்புறவளர்த்துப் பாய்ச்சலில்பயிற்றி, ஊற்றமிக வைத்து, அவற்றைத்தழுவி நிறுத்தினவன் எவனோ அவனே இவளைத் தழுவுதற்குரியான் என வழுவறக்குறித்தான். இவள்மேல் நசையுற்றிருந்த அரசர் பலரும் திசைகள் தோறுமிருந்து திரண்டுவந்தார்; பொருவிடை தழுவப்புகுந்தார்;

அவை உங்காரம்செய்து பொங்கிப்பாய அவர் போர்வலியிழந்து புரண்டுபோயினர். அப்போக்கை அடியில் பார்க்க.

"குளிறுவெண்டரங்கக்குரவைவான்பசும்பொற்குடுமிமால்வரையினுல்மறுகி
அளறெழக்கடைய விளையமுதென்ன அலர்முலைச்சுந்தரியை தன்னைக்
களிறுமாய் செந்நெற்கழனிசூழ் கிடந்த கோசலநாடு காத்தளிக்கும்
ஒளிறுவேற்றடக்கை நக்கினசித்து என்றுரைபெறு மன்னவனுயிர்த்தான்;

ஏழிருங்கடலும் கூப்பிடப்பரவை யெழுந்ததெள்ளமுதினை வெருட்டி
ஏழிசைகடந்த மழலையந்தீஞ்சொல் இளநகைப் பவளவாய் மகளை
ஏழிருங்குன்றும் எதிர்பொருதுடைய ஏந்துதோட் கோசலத்திறைவன்
ஏழ்விடைதழுவும் ஏறழ்வலி படைத்தாற்கீகுதும் எனவுரை இசைத்தான்;

செறிதிசை தழுவு கொற்றவேற்றனைத்திரளினர்; திங்கள்வெண்குடையர்;
மறிதிரைதழுவு குழவிவெங்கதிர்போல் வயங்குநீள்முடியினர்; தெய்வ
நறுவிரைதழுவு மாலைதாழ் மார்பர்; நாகின விடைபுரை நடையர்;
இறுவரை தழுவு திணிபுயத்தரசர் எழுவிடைதழுவுவானிறுத்தார்;

இடியுருமேற்றிற் சிலைத்தெதிர்நடக்கும் ஏழ்விடை தழுவுவான் ஏற்ற
படுகளிச்சுரும்பு படிந்துழக்கிழிந்த பனிமலர்ப்பசுந்தொடை மார்பும்,
குடவரைபொருவு திணிதடந்தோளும்; கூர்நுதிக்கோடுழக்கலங்கி
வடியிருநெடிய குடுமிவேற்றடக்கை மன்னவர்மதவலியழிந்தார். (பாகவதம்)"

ஐம்புலன்களுக்கும் அமிர்தமென இன்பநிலையமாய் இவள் இனிதமர்ந்திருந்ததும், இவள்மேல் ஆவல்கொண்டுவந்து காவலர்பலர் கருத்தழிந்து சென்றதும், பிறவும் இதனுல் அறியலாகும். பெறுதற்கரிய பொருளாய் இவ்வாறு இவள் இருந்துவருவதைக்கண்ணனும் அறிந்து காதல் மீக்கொண்டான். விசயனோடு சூழ்ந்து கோசலம் புகுந்துஇவள்தந்தையிடம் தான்வந்ததையுரைத்தான். அவன்விடைகள் ஏழையும் வெளியே விடுத்தான். அவை ஊழித்தீயென உருத்தெழுந்தன. அக்கோமகன் கொதித்துப் பாய்ந்து அவ்வேழையும் ஏழாவகை எதிர்த்தடக்கினன். திண்ணிய திமில்களையுடைய அவை மண்ணிடை மண்டியிட்டு வாய்விட்டு நின்றன. இம்மெல்லியலைத் தழுவும் பொருட்டுக் கொல்லேறுகள் தழுவி அவ்வல்லவன் நின்றதைக கண்டு எல்லாரும் வியந்தார்; ஏத்திப் புகழ்ந்தார். "அண்டர்தம் கொழுந்து தெண்டிரைப் பிறந்த ஆரமுதன்ன அஞ்சாயற், பண்டருமழலைப் பவளவாய் அணங்கின் பணையிள வனமுலைதழுவக், கொண்டலின் ஓரேழ்

உருவுகொண்டு ஓரேழ் கொல் சினவிடைதழீஇயினுல்'' எனப் புடைநின்றெவரும் போற்றித் துதித்தார். உடனே அரசன் இவளை அலங்கரிப்பித்து அவனுக்குமணஞ்செய்து கொடுத்தான். அவன் உவந்துகொண்டு தன்நகரையடைந்து சிறந்த போகங்களை நுகர்ந்து இவளோடு செறிந்திருந்தான். தன் கண்ணினும் உயிரினும்இனியனுஅக்கண்ணனை இவள் எண்ணியொழுகி இன்புறுத்தி வந்தாள். வருங்கால் பாண்டவர்க்கும் கௌரவர்க்கும் போர் மூண்டு நின்றமையால் பஞ்சவர்க்கு உதவிசெய்ய அவ் அஞ்சன வண்ணன் அகன்றுபோனுன். அப்பிரிவினை ஆற்ருமல் இவள் உருகியிருந்தாள். இடையருது கருதியிருந்தாளாதலால் அரிதாகக் கண்ணயருங்கால் அவ் அண்ணல் வந்து தன்னைமருவுவதாகக் கனவுகண்டு மறுகியெழுந்து அருகொன்றும் காணுமல் பலமுறை அலமரலானுள். துஞ்சுங்கால் தோள்மேலராவர்; விழிக்குங்கால் விரைந்து நெஞ்சத்தராவர்; என்பதை உலகம் காண இவள் உணர்த்திநின்ருள்.

மெல்லயான் கண்ணயர்ந்தால் மெய்ம்முயங்கி மேல்விழித்தால்
ஒல்லை யோளிவ ருளம்.

காதலனைக்கனவில் மருவியமை இதனுல் கூறப்பட்டது.

---

1219. காதலனைத் தன்கனவிற் கண்ட குரு தத்தையேன்
கோதயல்மேற் சொன்னுள் குமரேசா—ஏதும்
நனவினு னல்காரை நோவர் கனவினுற்
காதலர்க் காணு தவர். (கூ)

இ—ள்.

குமரேசா! காதலனைக் கனவிற்கண்ட குருதத்தை என் அருகிலுள்ளவரை மறுகி நொந்தாள்? எனின், கனவினுல் காதலர்க்காணுதவர் நனவினுல்நல்காரை நோவர் என்க.

காணுதவர்நோவர் என்றதனுல் கண்டவர் அங்ஙனம்நோவார் என்பதாயிற்று. நனவுக்காட்சி ஒன்றையே நாடிநிற்பவர்க்குக்

கனவுக்காட்சியின் மாட்சி எவ்வாறுபுலனாகும்? என்று புலந்துகூறு
என்க.

நனவு கனவு உறக்கம் என உயிர்கட்குரிய அனுபவநிலைகள் மூன்று. நனவாவது மெய் வாய் கண் முதலியபொறிகள் விழிப்பாய்த் தொழிற்பட்டுப் புலன்களை நுகர்ந்து நிற்பது. உறக்கமாவது, பொறிகளின் இயக்கம் அடங்கி அயர்ந்து தூங்குவது. கனவாவது, தெளிந்த விழிப்பும் அயர்ந்த உறக்கமுமின்றி மனநிலையில் நினைவோடிருப்பது. இவற்றை முறையே சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி என்பர். கனவின்காட்சி ஒரோவழி நனவு நிகழ்ச்சிக்கு முன்னறிகுறியாகவும் மூண்டுநிற்கும். அக்காட்சியின் காலநிலையும் கோலமுங்கொண்டு மேல்விளையும் நலம் தீங்குகளை நாடிக்காணலாம். சில அடியில்வருவன காண்க.

“படைத்தமுற் சாமத்தோராண்டிற் பலிக்கும்; பகிரண்டாய்க்
கிடைத்தபிற்சாமத்தில், திங்கள் எட்டாவதிற்கிட்டும் என்பர்;
இடைப்பட்டசாமத்து மூன்றினிற்றிங்களுள் மூன்றென்பரால்;
கடைப்பட்ட சாமத்து நாட்பத்திலே பலன் கைப்பெற்றதே; (க)

பெற்றம் பசுமன்னர் ஆனை குதிரைபொன் காணப்பெற்றால்
சுற்றம் தழைக்கும்; துயரம்கெடும்; புளிச்சூதம்முதல்
மற்றும் தழைத்த பசுமரம் பால்மரம் ஏறிநின்றே
யுற்றங்குணரின் நலம்வந்து கூடும் என்றோதினரே; (உ)

சொல்லுங்கனவினில் தானே பிற்சாகில், சுடர் அரவம்
பல்லொன் றுறவலத் தோளிற் கடிக்கிற், பலவிதத்தால்
செல்வம்புகுந்திடும்;தேள் அட்டை பாம்பிவை சேரப்பெற்றால்
மல்குந்திருவொடு புத்திரலாபமும் வந்திடுமே; (ங)

திருவரும் என்பர் எரிவது காண்கிற்; புகையைக்கண்டால்
வருவது நோய்என்பர்; வானவர் செற்றலர் மாதவத்தோர்
பொருவரு பூண்முலை யாரொடு பூசுரர்என்றிவர்கள்
ஒருவருடன் சொல்லிற் சொல்லிய நன்மை யுறும் என்பரே”
(கனநூல்)

கனவுக் காட்சியைக் குறித்து இன்னவாறு பல சொல்லப்பட்டுள்ளன. கனவின்கண் காதலரைக் கண்டு கொள்ளாதவர் நனவில் அருளாதாரை நகையாடி நோவர் என்பதாம்.

பிரிவில் மறுகியிருந்த தலைவி அருகிலுள்ளவர்களைக் குறிப்பால் இகழ்ந்துரைத்தபடியிது. அகன்றுபோன தலைவர் இன்னும் வந்தருள வில்லையே; நம் பெருமாட்டி தனியேயிருந்து துயர்மிகுந்து உழல இவர் இங்ஙனம் பேசாமல் ஒதுங்கியிருப்பது பெரும்பிழை எனத்தோழியர் முனிந்து மொழிந்த பொழுது தன் காதலனை ஆதரித்து அவள் இங்ஙனம் உரைத்தாள் என்க.

தன் கனவில் வந்து துணைவர்கலந்தருள்வதை அவர்கண்டிருந்தால் இவ்வாறு கடுத்துரையார் என்பாள். "கனவினால் காதலர்க் காணாதவர் நோவர்" என்றாள்.

தாங்களும் காதலரைப்பெற்று, இடையே பிரிவுறநேர்ந்து, கனவிடை அவரைக் கலந்தனுபவித்தறிந்திருந்தால், நனவில் நல்க வில்லையென என் துணையைத் தூற்றி இகழார்; அங்ஙனம் அறியாமையால் இங்ஙனம் இகழ்ந்து கூறுகின்றார் எனப்புலந்து நின்றாள் என்க. தனக்கு அனுகூலமாக இரங்கியுரைப்பினும் தன் கொழுநனைப்பிறர் இகழ்ந்துரைக்கக் குலமகளிர் சகியார்என்பது இதனால் அறியலாகும். தன் காதலனைக் கனவில் கலந்ததைக் காதலினை மறிய வுரைப்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை குருதத்தை பால் உணரப்படும்.

## கதை.

குருதத்தை என்பவள் ஏமாங்கத நாட்டிலே சிங்கபுரி என்னும் நகரிலிருந்த குறுநில மன்னனாகிய தருமகுத்தனுடைய அருமைத்திருமகள். உருவப் பொலிவோடு அறிவு நிலையிலும் இவள் மிகச்சிறந்திருந்தாள். பருவமெய்தித் தனியமர்ந்து வருங்கால், பனிமலர்ச்சோலையுள் ஒருநாள் சாகரன் என்பவன் இவளைக் கண்டு மோகமீக்கொண்டான். அவன் பேரறிவுடையவன்; அந்நாட்டு மதிமந்திரியின் தலைமைப் புதல்வன்; கருமச்சூழ்ச்சியும்;

கட்டுரை வன்மையும்; தரும நீதியும்; தழுவிய தன்மையன். விழைவு மீக்கூர்ந்து கெழுதகைமையோடு அவன் விரும்பி நின்ற போது இவளும் அவனை விழைந்து நோக்கினாள். இருவரும் முத லில் கந்தருவரியல்பில் கலந்துபின்பு உலகறிய மணந்து அலகில் போகங்களை நுகர்ந்து அகமகிழ்ந்து வந்தார். வருங்கால் அரச காரியமாக அவன் அயலிடம் சென்றான். அவனைப்பிரிந்திருக்க லாற்றாது இவள் வருந்தி யுழந்தாள். கண்ணுறங்காது கலங்கி அயர்ந்தாள்; அருகே நண்ணியிருந்தாரை நயவாதிகழ்ந்தாள், காம வேதனையை எண்ணியிழித்தாள்.

"காமம் கடலிற் பெரியது; கையகன்றால் அங்ஙனே
தோமங்கடல் வடவைக்கு மிக்காவதென்? தோல்வி உயிர்க்கு
ஏமம் கடலுலகத்திலின்றேனும் இனியொழிக
பேமங்கடலைப் பிரானையுன்னானை பெற்றியரே"

என இன்னவாறு பல பன்னிப்புலம்பிப் பருவரல்மிகுந்துமறுகி யுளைந்தாள். இடையறாது கருதியிருந்தமையால் கனவின் கண் தன்காதலனை இடையிடையே கண்டு களித்தாள். உணவொழிந்து உறக்கமிழந்து மனமறுகியிருக்கும் இவளது அல்லல் நிலையை நோக்கி அருகிருந்த தோழியர், அகன்றுபோன தலைவர் விரைந்து வரவில்லையே! என உளமிக இரங்கி இகழ்ந்து நின்றார். அவ் இளிப்பு நிலையையறிந்து இவள் சுளித்துநோக்கினாள். என் துணை வர் கனவில் வந்தருள்வதைக் காணுதவர் கண்டபடி யெல்லாம் இப்படிப் புலம்புகின்றார் எனப் புலந்து மொழிந்தாள். பின்பு அவன் வந்தடைந்தபொழுது மகிழ்ந்துதழுவி யாண்டும்பிரியாமல் அமர்ந்திருந்து சீதத்தன் என்னும் ஓர் புதல்வனைப்பெற்றுச்சிறந்து விளங்கினாள். இவளது எழிலமைதியையும், இல்லக்கிழமையை யும் குறித்து அனைவரும் ஏத்திப் புகழ்ந்தார்.

"பொன்னுடைய மார்பிற் புகழ்மந்திரி பொலந்தார்த்
தன்னுடைய நுண்ணுணர்விற் சாகரற்குத் தக்காள்
கொன்னெடிய வாட்கட் குருதத்தை, சீதத்தன்
மன்னடுக்க வீங்குதிரடோள் மடங்கலன்னான்" (சிந்தாமணி)

இவளுடைய கொழுநன் இயல்பும், உழுவலன்போடு அவனுக்கு இவள் இனிதமர்ந்திருந்ததும், தனிமகனைப்பயந்ததும், பிறவும் இதன்கட் குறிக்கப்பட்டுள்ளன காண்க. முன்பு பிரிவாற்றியிருந்த காலத்தில் தன்கனவு நிலையையுரைத்துக் காதலனை இவள் ஆதரித்து நின்றதை யாவரும் வியந்தார். "கனவினால் காதலரைக் காணாதவர், நனவினால் நல்காரை நோவர்" என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

அண்ணல் கனவில் அருள்வ தறியாரிவ்
வண்ணம் உளறல் வசை.

காதலனைக்காதலி ஆதரித்துள்ளமை இதனால் கூறப்பட்டது.

1220. கண்டாள் கனவின்கட் காதலனை மாதவியேன்
கொண்டயலை நொந்தாள் குமரேசா—கண்ட
நனவினா னந்நீத்தா ரென்பர் கனவினாற்
காணார்கொ லிவ்வூ ரவர். (௰)

இ—ள்.

குமரேசா! தன்காதலனை இகழ்ந்த ஊரவரை மாதவி ஏன் இகழ்ந்து மொழிந்தாள்? எனின், இவ் வூரவர் நனவினான் நம் நீத்தார் என்பர்; கனவினால் காணார் கொல்? என்க.

நம் நீத்தார் என்பர் = நம்மை விட்டு நீங்கினார் என்று நமது காதலரை இவ்வூரார் இளித்துக்கூறுவர். நீத்தல் = துறந்துபோதல. பன்மையில் குறித்தது தோழியையும் உளப்படுத்தி.

நனவின்கண் நம்மைத்துறந்து போயினாரென்ன இவ்வூரிலுள்ள மகளிர் நம்காதலரை இகழ்ந்து பழிப்பர்; அவர் கனவில் வந்தருளுதலைக் காணாரோ? என்பதாம்.

பிரிந்து போயுள்ளகணவன் விரைந்துவராமையை நினைந்து பொதுமக்கள் இரக்கமுற்றுத் தனக்காகப் பரிந்துரைத்தபோது தலைவி அவரைக் குறிப்பாக எதிர்ந்துரைத்தபடியிது.

இம் மெல்லியலைத் தனியே விட்டு அப்பொல்லாதவர் இப்படிப் போயிருந்தாரே! இளமங்கை உளம் நைந்தயா வளந்தேடப் போனாரோ? இது என்ன போக்கு! என இன்னவாறு பலபலவாக மகளிர் பன்னிப்பேசினர்; தனக்காக இங்ஙனம் அவர் இரங்கிப் பேசினும் தன் தலைவன் இதில் பழிக்கப்படுதலால் அதனைப் பொறுக்கமாட்டாமல் இவள் மறுத்துரைக்கின்றாள் என்க.

பாங்கியர் இவ்வாறு இளித்துரைப்பது கோவைத்துறையில் இயற்பழித்தல் எனப்படும். இயல் = குணம். தலைவனது குணங்களை இகழ்ந்துரைத்தல் என்க.

"அன்புடை நெஞ்சத் திவள் பேதுற, அம்பலத்தடியார்
என்பிடை வந்தமிழ் தூறநின் றாடி யிருஞ் சுழியற்
றன்பெடை நையத் தகவழிந் தன்னம் சலஞ்சலத்தின்
வன்படை மேற்றுயிலும் வயலூரன் வரம்பிலனே"
(திருக்கோவையார்)

"வையம் புரக்கும் குமார குலோத்துங்கன் வாழுறந்தைக்
கொய்யம் புயமனைக் கொம்பனையாய்! கொண்டகாதல் கண்டு
மெய்யன்ப ரென்றிருந்தே மவர்தாம் வந்து மெள்ளமெள்ளப்
பொய்யன்ப ராகிவிட்டார் இனி யாரன்பைப் போற்றுவமே"
(குலோத்துங்க சோழன் கோவை)

"நல்லார் தொழுந்திருக் கோடீச்சுரத் துறை நம்பர்வெற்பில்
வல்லார் முலை! அந்த வல்லாளர்க் குன்றன் மனமருவு
வில்லார் அழல்முன் மெழுகொத் துருகி மெலிதலுறும்;
கல்லார் மனமெனக் கல்லா யிருக்குமக் காவலர்க்கே"
(கோடீச்சுரக்கோவை)

பிரிந்தகன்ற தலைவனை அயலவர் இகழ்ந்திருக்கும் நிலைகளை இவற்றுள் உணர்ந்துகொள்க. இப்பழிப்புரையைச் சகிக்கமாட்டாமல் தலைவி அவரை மறுத்துரைப்பள்; அது, இயற்பட மொழிதல் எனப்படும். அஃதாவது தலைவன் குணமிக வுடையவன் என்று குறித்துப்பேசல்.

"புணராவிரகமும் போகா இரவும் புணர்முலைமேல்
இணரார் பசப்பும் பிறவுமெல்லாம் இருள்கூர்ந்தறல்போல்
வணரார் குழற்பிறை வாணுதலாய்! தஞ்சைவாணன் வெற்பர்
உணரா திருப்பது வேறொன்று மல்லநம் ஊழ்வினையே"
(தஞ்சைவாணன் கோவை)

"அலைக்குந் துயரத்தி னெஞ்சுக்கும் துஞ்சல் அயர்த்த என்கண்
நிலைக்குந் தலைவர் பிரிந் தகலார்; நிகரார் நகரம்
குலைக்கும் தடக்கைக் களிற்றான் குலோத்துங்கன் கோழிவெற்பின்
முலைக்குங் கொடுங்கைக்கும் எய்தார்மின்னே யென்முதல்வினையே"

(குலோத்துங்கன் கோவை)

"அஞ்சார் புறஞ்செற்ற சிற்றம்பலவர் அந்தண் கயிலை
மஞ்சார் புனத்தன்று மாந்தழையேந்தி வந்தாரவரென்
நெஞ்சார்; விலக்கினும், நீங்கார் நனவு; கனவுமுண்டேல்
பஞ்சார் அமளிப்பிரிதலுண்டோ எம்பயோதரமே!"

(திருக்கோவையார்)

"உருப்பவிர் தீக்கதிர் காலும் பரிதி யுலகமெல்லாம்
விருப்பவிர் மேகம் விளைப்பதன்றோ? விழுமக் கடலுள்
அருப்பவிர் பூண்முலையாய்! விழுந்தியா னழுந்தத்துறந்தங்கு
இருப்பவரே எனதாருயிர் காவற் கிருப்பவரே"

(தணிகைப்புராணம்)

என் காதலர் உழுவலன்புடையவர்; அவர் அளவறிந்து வாரா திருப்பது எனது பழவினையேயாகும்; நனவில் அகன்றிருந்தாலும் கனவிடை வந்து கலந்தருள்கின்றார்; அவரது அருள்நிலை தெரியாமல் மருள்கொண்டு புலம்புவது மடமையாகும்; அவரே எனக்கு உயிராதாரம்; எனத் தலைவி உரையாடியிருக்கும் திறங்களை இவற்றுள் ஊன்றிப்பார்க்க.

தான் நோதலுறினும் தன் காதலன்மீது யாதும் கோதுகூற நேராமல் காதலி ஆதரித்து நிற்பள் என்பது கருத்து.

"மாத்தின் இயன்றகொல் மன்னவன் கண் எனப்
பைந்தார்த் தந்தையை நொந்த நோயள்" (பெருங்கதை)

தன் காதலனுக்கு இடர்செய்ததாக நினைந்து தன் தந்தையை வாசவதத்தை இதில் நொந்திருத்தல் காண்க. தன்னைப்பெற்றவரே யானாலும் தன் கணவனைக் குற்றம் சொல்லப் பதிவிரதை பொறாள் என்பது இதனால் அறியலாகும்.

தன் நாயகன் கனவில் வந்தருள்வதைக் காதலி காட்டி மொழிவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மாதவிபால் உணரப்படும்.

## கதை

மாதவி என்பவள் வேதசன்மன் என்னும் வணிகனுடைய அருமைப்புதல்வி. அரிய குணநலங்கள் பல அமையப்பெற்றவள்.

மாந்தளிரெனச் சேந்தொளிர் மேனியள். "பூணும் அழகும், புறப் பொருளும் தன்னிழலில் காண அழகெறிக்கும் காந்தியாள்" எனக் கண்டவரெவரும் கொண்டாட நின்ற இவள் இனிய பூஞ்சோலை யில் ஒருநாள் தனியே உலாவி வந்தாள். அவ்வமயம் தெய்வகதி யாயங்கு வந்திருந்த **மித்திரகாமன்** என்னும் வணிகர் தலைமகன் இவளை உவந்துநோக்கி உளமுருகி நின்றான். அவன் அங்க நாட் டின் தலைநகரமாகிய **சண்பை** என்னும் திருநகரிலுள்ளவன். பெருநிதியுடையவன். உருவிலும் சிறந்தவன். இவளைக் கண்ட வுடனே காதல் மீக்கொண்டு கருத்துன்றி நின்றான். இவளும் அவன்மீது ஆர்வமீதூர்ந்து ஆழநோக்கி அகம் நெகிழ்ந்து நின்றாள். உள்ள நிலைதெளிந்து பள்ளம் பாயும் வெள்ளம்போல இவளை விழைந்து தழுவி அவன் வியந்திருந்தான். பின்பு உலகறியமணந்து அலகிலின்பங்களை நுகர்ந்து நலம்பாராட்டி அறம்பல புரிந்து அமர்ந்து நின்றான். "வானிற் சுரபியின்பால் வண்மையுடைக் கற்பகம்பூந் தேனிற் கலந்தனைய செவ்விதழாள்" என வௌவி மகிழ்ந்து எவ்வகையும் பிரியாமல் அவன் இருந்துவந்தான். வருங் கால் இடையே பொருள்வினை கருதி மறுபுலம்போனான். அப்பிரிவில் வருந்தி இவள் மறுகியிருந்தாள். சென்ற அவன் நெடுநாள் அங்கு நின்றிருந்தமையால் இவள் உடலொளி குன்றிப் பசலை படர்ந்து பதைத்துழந்தாள். தன் கொழுநனை நினைந்து வழிமேல் விழிவைத்து அழிதுயரோடு இவள் அலமந்துழல்வதைக்கண்டு ஊரிலுள்ளவர் பேரிரக்கங்கொண்டு ஆறுதல் கூறி ஆற்றித்தேற்றினர். இவள் யாதும் தேறாமல் காதல்நோயால் கருத்தழிந்து நின்றாள். இவளது நிலையினை அறிந்து அத்தலைவனை இகழ்ந்தார். இளங்குமரியை இவ் வாறு உளைந்துழலும்படிவிட்டு அவன் வளந்தேடப்போனதை வைது பழித்தார். தன் துணைவன்மீது பழிப்பேறுவதை இவள் நுனித்தறிந்தாள்; அவர் நோக்கியமரும்படி சில போக்குரையாடி னாள். கனவில் வந்து காதலர் என்னைக் கலந்தருள்வதைக் காணா மையால் இவ்வூரவர் இவ்வாறு வீணாக எனது காதலனைத் தூற்று கின்றார் என வேதனையோடு இவள் வெகுண்டு மொழிந்தாள். கொழுநன்மீது வைத்துள்ள இவளது உழுவலன்பினை நோக்கி அனைவரும் உளமகிழ்ந்து நின்றார். தாம் வருந்தினும் தம் தலைவர்

மீது அயலவர் குறைசொல்லக் குலமகளிர் சகியார் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது. இவளது இயல்பினை எவ ரும் புகழ்ந்து நின்றார்.

> "தண்புனற் படைப்பைச் சண்பைப் பெரும்பதி
> மூட்டில் வாழ்க்கைச் செட்டியர் பெருமகன்
> மித்திரகாமன் நற்பெருங் கிழத்தி" (பெருங்கதை)

இதில் இவளைச் சுட்டியிருத்தல் காண்க. நல்லியல்பும் பெருந் தன்மையுமுடைய சிறந்த பதிவிரதையா யிவள் இருந்தவுண்மை இதன்கண் வந்துள்ள அடைமொழிகளால் அறிந்துகொள்ளலாம்.

**ஏந்தல் பிரிந்தார் எனவிகழ்வர் என்கனவில்**
**போந்தின் பருள்வர் புகுந்து.**

தலைவியின் தகவுடைமை இதனால் கூறப்பட்டது.

---

## இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

காதலன் தூதினைக் கனவில் கண்ட காதலி நனவில் உவந்து புகழ்வாள். மேலும் அக்கனவினை விரும்பி யமர்வாள். கனவுக் காட்சியே தனக்கு உயிராதாரம் என்பள். நனவிலரியதைக் கனவு நல்கும் என்பள். அஃது இன்ப நிலையம் என அன்பு கூர்வாள். அக் கனவினை விழைந்து நனவினை வெறுப்பள். கனவு நிலையை நினைவிற் கொண்டு கவல்வள். விழித்தபொழுது காதலர் ஒளித்தனர் என உள்ளங்குழைவள். கனவில் வந்து காதலர் அருளுவர் என ஆதரமுறுவள். பிரிந்து போயினர் என அவரை இகழ்ந்து கூறு வாரை இவள் புலந்து மொழிவள் என்பதாம்.

ொஉஉ-வது கனவுநிலையுரைத்தல் முற்றிற்று.

---

## 123ம் அதிகாரம் பொழுது கண்டிரங்கல்.

அஃதாவது மாலைக்காலம் வந்தவுடன் அதனைக்கண்டு தலை மகள் வருந்துதல். அந்திப்பொழுது விரகதாபத்தை விளைக்குமாத லால் பிரிந்துள்ள காதலர்க்கு அது மிகுந்த துயரமாய் மேவி நிற்கு மென்க. நனவில் மறுகியிருந்த நிலையை இதில் உணர்த்துகின்ற ராதலால் கனவுநிலை யுரைத்தலின் பின் இது வைக்கப்பட்டது.

1221. மாலைவா வேண்மாள் மறுகியேன் வைதிகழ்ந்தாள்
கோலமயி லூருங் குமரேசா—மேலெழுந்த
மாலையோ வல்லை மணந்தா ருயிருண்ணும்
வேலைநீ வாழி பொழுது. (க)

இ—ள்.

குமரேசா! மாலைப்பொழுதைக் கண்டவுடன் வேண்மாள் ஏன் இகழ்ந்து வைதாள்? எனின், மாலையோ? அல்லை; மணந்தார் உயிருண்ணும் வேலை நீ வாழி பொழுது என்க.

இது, அந்திப்பொழுதை அழுன்றுரைக்கின்றது.

மணந்தார் = மணஞ்செய்துகொண்டவர். கலியாண மான மகளிர் என்க. பொழுது = அந்திப்பொழுதே! மாலைக் காலத்தை முன்னிலைப் படுத்தித் தன் முகமாக அழைக்கின்றாளாதலால், பொழுது எனமெல்ல விளித்தாள்.

வாழி என்றது வயிற்றெரிச்சலோடு மறைமுகமாக வைத வாறு. நீ வாழாதொழிக என்பது குறிப்பு.

பொழுதே! நீ மாலைக்காலமோ? எனின், அன்று; காதலரை மணந்து கொண்ட மகளிரது உயிரை யுண்ணுகின்ற இறுதிக் காலமேயாம் என்பதாம்.

தனியே தவித்திருந்த தலைவி அந்திப்பொழுது வந்தடைந்த சமயம் சிந்தை நொந்து கூறியபடியிது.

மாலைக்காலமானது, பிரிவாற்றாமல் மறுகியிருக்கும் காதலிக்கு விரகதாபத்தை மிகுவித்துப் படுவேதனையை விளைக்குமாதலால் அதனை'' ''உயிர் உண்ணும் வேலை'' என்றாள்

வேலை என்றது காலம் என்றவாறு. ''கடலும் கடலின் கரையும் பொழுதும், வினையும் காலையும், வேலை என்றாகும்'' (பிங்கலந்தை). ''அந்த வேலையில் திதிபெருந் துயருழந்தழிவாள்'' (இராமாயணம்) இவற்றுள் வேலை உணர்த்தி நிற்றல் காண்க.

மாலையோ! அல்லை; என்றது வெளிப்படையாக வழங்கும் உலகவதந்தியை மறுத்துக்கூறியபடி. அறியாதவர் மாலைக் காலம்

என்று உன்னை மயங்கிக் கூறுகின்றார்; உண்மையில் என்னைக் கொல்லுங்காலமாகவே நீ கூடிநிற்கின்றாய் எனக் கொதித்துச் சொல்லுகின்றாள் என்க.

"வாலிழை மகளிர் உயிர்பொதி யவிழ்க்கும்
காலையாவது அறியார்
மாலை என்மனார் மயங்கியோரே" (நெய்தற்கலி 2)

மாலையை மகளிர் உயிர் ஒழிக்கும் காலம் என ஒருத்தி இதில் குறித்திருத்தலறிக. உயிர் பொதி அவிழ்க்கும் என்றது உயிரைப் பொதிந்து நின்ற உடலினின்று அதனை நீக்கும் என்றவாறு.

"பைந்தொடியாள் ஆவி பருகுவான் நிற்கின்ற
அந்தி முறுவலித்த தாமென்ன—வந்ததால்
மையார்வேற் கண்ணாள் வனமுலைமேல் ஆரழலைப்
பெய்வான் அமைந்த பிறை." (நளவெண்பா)

தமயந்தி உயிரைப்பருக எழுந்ததுபோல் அந்திப் பொழுது வந்ததென இஃது உரைத்து நிற்றல் காண்க. குழவி மதியை அதன் இள நகையாக உரை செய்திருக்கும் அழகைப்பார்க்க.

"கயங்கள் என்னும் கனல் தோய்ந்து, கடிநாண் மலரின் விடம்பூசி
இயங்கு தென்றல் மன்மதவேள் எய்தபுண்ணி னிடை நுழைய;
உயங்கு முணர்வும், நன்னலமும், உருகிச்சோர்வாள் உயிருண்ண
வயங்குமாலை வானோக்கி இதுவோ கூற்றின் வடிவென்றாள்" (இரா)

பிரிவாற்றாமல் உருகியிருந்த சீதை மாலையை நோக்கி மறுகி நொந்தபடியிது. உயிருண்ணும் என அடிகள் குறித்தவாறே இவை அடியொற்றி வந்துள்ளமைகாண்க. பிரிந்துள்ள மங்கையர்க்கு மாலைக்காலம் பெருந்துயரமாயிருக்கும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வேண்மாள் பால் உணரப்படும்.

## கதை.

வேண்மாள் என்பவள் செங்குட்டுவன் என்னும் சேர மன்னனுடைய அருமைத் திருமனைவி. அழகில் சிறந்தவள்; அறிவிலுயர்ந்தவள்; பொறையிலும் நிறையிலும் புகழ்மிகப் பெற்றவள். இப் பெண்ணரசியைக் கண்ணினும் இனியளாய் அவ் அண்ணல் காத

வித்து நின்றான். அவ் அரசர் பெருமானுக்கு அன்பு நலங்கனிந்த இன்ப நிலையமாய் இவள் இனிதமர்ந்திருந்தாள். வசந்தகாலத்தில் ஒருமுறை இவள் மலைவளம் காண விழைந்து அதனைத் தலைவனிடம் உரைத்தாள். உடனே அவன் உவந்தெழுந்து, சிறந்ததேரில் இவளோடமர்ந்து, படைகள் புடைசூழப் பெருமித நிலையில் சென்று, கருதிய மலையையடைந்து, படமாடமமைத்துக் காட்சிகள் பலவுங்கண்டு களித்திருந்தான்.

"விளங்கி லவந்தி வெள்ளிமாடத்து
இளங்கோ வேண்மாள உடனிருந்தருளி
துஞ்சாமுழவின் அருவி ஒலிக்கு
மஞ்சுசூழ்சோலை மலைகாண் குவமெனப்
பைந்தொடியாயமொடு பரந்தொருங்கீண்டி
வஞ்சிமுற்றம் நீங்கிச் செல்வோன்,
கோங்கம் வேங்கை தூங்கிணர்க் கொன்றை
நாகம் திலகம் நறுங்கா ழாரம்
முதிர்பூம் பரப்பின் ஒழுகுபுன லொளித்து
மதுகர ஞிமிறொடு வண்டினம் பாட
நெடியோன் மார்பில் ஆரம்போன்று
பெருமலை விலங்கிய பேரியாற்றடை கரை
இடுமணலெக்கர் இயைந்தொருங் கிருப்ப" (சிலப்பதிகாரம்)

இவ்வாறு இருக்குங்கால் மதுரையில் தன் கணவனையிழந்த துயரால் கண்ணகி கடுந்துயருழந்ததையும், தென்னவன் தான் மறந்து செய்ததையறிந்து இறந்தொழிந்ததையும், அவன் மனைவி மறுகிமாண்டதையும் அறிஞர் சிலர் வந்து இம்மன்னனிடம் உரைத்தார். அதனைக்கேட்டவுடனே இவன் மனம் பதைத்தான்; அரசபதவியையும் ஆட்சியின் பொறுப்பையும் வெறுத்துக் கூறினான். மாண்ட பாண்டியனை மதித்துப் போற்றினான்; அவன் இறந்தான் என்றவுடனே உயிர் துறந்த அரசி பெரியளா? கண்ணகி பெரியளா? எனத் தன் அருகிருந்த இத்தேவியிடம் வினவினான்; அதற்கு இவள் "அரசியே வியக்கத்தக்கவள்; ஆயினும் விண்ணுலகேறிய அப்புண்ணியவதியைப் போற்றி நிற்பதோடு கண்ணகிக்கு இம்மண்ணுலகறிய ஓர் கோயிலமைத்து நாம் வழிபடவேண்டும்" என்று தன் கொழுநனை இவள் வழிபட்டு நின்றாள். அடியில் வருவது காண்க.

"தென்னர் கோமான் தீத்திறங் கேட்ட
மன்னர் கோமான் வருந்தினன் உரைப்போன்,
எம்மோரன்ன வேந்தர்க்கு இற்றெனச்
செம்மையி னிகந்தசொற் செவிப்புலம் படாமுன்
உயிர்பதிப் பெயர்ந்தமை யுறுக வீங்கென
வல்வினை வளைத்த கோலை மன்னவன்
செல்லுயிர் நிமிர்த்துச் செங்கோலாக்கியது;
மழைவளங் கரப்பின் வான்பேரச்சம்;
பிழையுயி ரெய்திற் பெரும்பே ரச்சம்;
குடிபுர வுண்டுங் கொடுங்கோலஞ்சி
மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்,
துன்பமல்லது தொழுதக வில்லெனத்
துன்னிய துன்பம் துணிந்துவந் துரைத்த
நன்னூற் புலவற்கு நன்கனமுரைத்து; ஆங்கு
உயிருடன் சென்ற ஒருமகள் தன்னினும்
செயிருடன் வந்த இச்சேயிழை தன்னினும்
நன்னுதல்! வியக்கும் நலத்தோர் யார்? என
மன்னவன் உரைப்ப, மாபெருந் தேவி
காதலன் துன்பம் காணாது கழிந்த
மாதரோ பெருந்திரு வுறுக வானகத்து;
அத்திறம் நிற்க; நம் அகனாடடைந்த இப்
பத்தினிக் கடவுளைப் பரசல் வேண்டும்." (காட்சிக்காதை)

என இவ்வாறு இவள் வேண்டியவுடனே அவ் ஆண்டகை அவ்வாறே ஆலயமமைத்துச்சாலவும் போற்றினான். இதனால் இப் பதிவிரதையின் மதிநிலையும், மன நலமும், அவ் அதிபதியின் குண நலனும், இனிதறியலாகும். அறவிய மனத்தராய் நெறிமுறை யொழுகி ஒருவா அன்புடன் இங்ஙனம் ஒழுகி வருங்கால் ஆரிய மன்னர்மேல் போர்வேட்டெழுந்து அவ்வீரிய வேந்தன் வெகுண்டு போனான். அவனைப்பிரிந்திருக்கலாற்றாது இவள் பெருந் துயரு ழந்தாள். அவனது வரவினை எண்ணி வைகலும் மெலிந்து வெய்து யிர்த்திருந்தாள். பகற்பொழுது ஒருவாறு ஆறியிருப்பினும் இரவில் இவள் விரகதாபமிருந்து உருகி யுளைந்தாள். அந்தியானபோது அதனை அந்தகனுமெனச் சிந்தைமிக நொந்து சீறியிகழ்ந்தாள். "மாலையோ? அல்லை; மணந்தார் உயிருண்ணும் வேலை" எனப் பிரிந்த காதலியர் மாலைப் பொழுதைக்கண்டு மிகவும் வருந்தி இகழ்ந்து நிற்பர் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

"நுளையர் விளரி நொடிதருந் தீம் பாலை
இளிகிளையிற் கொள்ள இறுத்தாயால் மாலை,
இளிகிளையிற் கொள்ள இறுத்தாய்மன் நீயேல்
கொளைவல்லாய் என் ஆவி கோள்வாழி மாலை! (க)

பிரிந்தார் பரிந்துரைத்த பேரருளினீழல்
இருந்தேங்கி வாழ்வார் உயிர்ப்புறத்தாய் மாலை,
உயிர்ப் புறத்தாய் நீயாகில் உள்ளாற்ற வேந்தன்
எயிற்புறத்து வேந்தனோடு என்னாதி மாலை! (உ)

பையுள் நோய் கூரப் பகல்செய்வான் போய்வீழ
வையமோ கண்புதைப்ப வந்தாய் மருள்மாலை!
மாலை நீ யாயின் மணந்தார் அவராயின்
ஞாலமோ நல்கூர்ந்தது வாழி மாலை!" (சிலப்பதிகாரம்)

மாலைப்பொழுதைக்கண்டு ஓர் தலைவி உயிர் உலைய வந்ததாக இதில் மறுகிப்புலம்பி யிருக்கும் நிலையைப் பார்க்க. அடிகளருள் மொழியை இது அடி யொற்றி வந்துள்ளமை அறிக.

அந்திப் பொழுதோநீ ஆவியுணும் அந்தகனாய்
முந்திக் கிளர்ந்தாய் முனைந்து.

மாலையில் தலைவி மறுகி நின்றமை இதனால் கூறப்பட்டது.

1222. மாசிலுயர் கேசினிமுன் மாலைதனைக் கண்டவுடன்
கூசிவைதாள் என்னே குமரேசா—ஆசுடைய
புன்கண்ணை வாழி மருண்மாலை எங்கேள்போல்
வன்கண்ண தோநின் துணை. (உ)

இ—ள்.

குமரேசா! மாலைப்பொழுதை நோக்கிக் கேசினி ஏன் மறுகிப்புலம்பினாள்? எனின், மருள்மாலை புன்கண்ணை வாழி! எம் கேள் போல் நின்துணை வன்கண்ணதோ? என்க.

இது, மாலையும் பிரிவுநோய் மருவியதென்கின்றது.

மருள்மாலை = மருளுகின்ற மாலைக்காலமே! மருளல் = மயங்கல். அஃதாவது பகலும் இரவும் தம்முட்கலத்தல். சந்தி என்பதும் காண்க. தெளிவாகப் பொருள்களைக் காணமுடியாதபடி மருளுதலைச் செய்தலால் மருள்மாலை எனினுமாம். இனி, பிரிந்துள்ள மகளிர்க்கு மருட்கையை விளைத்து நிற்றலால் மருள் அடை வந்ததெனவுமாம்.

புல்லென் மருண்மாலைப் போழ்தின்று வந்தென்னைக்
கொல்லாது போதல் அரிதால்; அதனோடியான்
செல்லாது நிற்ற விலேன்.'' (நெய்தற்கலி 28)

மாலைப்பொழுதைக் குறித்து ஒருத்தி இதில் வருந்தியிருத்தலறிக.

புன்கண்ணை = துன்பமுடையை. புன்கண் = துன்பம். எம்கேள் = எமது சுற்றம். என்றது தலைவனை. நின்துணை = நினது துணைவனும். இறந்தது தழுவிய எச்சவும்மை இதில் தொக்கு நின்றது. வன்கண்ணதோ = கொடுமையையுடையதோ?

மேல், மாலைப்பொழுது தனக்குத் துயர்செய்ததென்றாள்; இதில், அதுவும் துயருறுகின்றதென்கின்றாள்.

மயக்கத்தையுடைய மாலைக்காலமே! நீ துயரமுடையையாய்த் தோன்றுகின்றாய் ஆதலால் எமது நாயகன் போலவே உனது காதலனும் கொடுமையுடையனோ என்பதாம்.

பிரிவாற்றாமல் வருந்தியிருந்த தலைவி மாலையை நோக்கி மறுகிப் புலம்பியபடியிது. மாலைக்காலம் இருளடர்ந்து பொலிவிழந்து தோன்றியதால் தன்போல் அதுவும் துணை பிரிந்து துயருழந்துள்ளதாக எண்ணிச் சொல்லுகின்றாளாதலால் "நின்துணை, எம்கேள்போல் வன்கண்ணதோ?" என்றாள்.

விரகதாபத்தால் உளநிலை குலைந்து துயரடைந்திருப்பார்க்கு உலகிலுள்ள பொருள்களும் அவ்வாறே தம்போல் துன்பமுடையனவாய்த்தோன்றுமாதலால் அங்ஙனம் தோன்றிய மாலைக்காலத்தைப் புன்கண்ணுடையதாத் தன்னோடொப்பவைத்து இங்ஙனம் புகன்று நின்றாள் என்க. தன் செயலறவை அயலொரு பொருள் மேல் ஏற்றிக் கூறியவாறிது. இதனை அகப் பொருட்டுறையில் "**தன்னுட் கையாறெய்திடுகிளவி**" என்பர்.

"கனவுநலி வுரைத்தலும், கவினழி வுரைத்தலும்,
தன்றுயர் தலைவற் குரைத்தல் வேண்டலும்,
துன்புறல் பாங்கி சொல்லெனச் சொல்லலும்,
அலர்பார்த்துற்ற அச்சக்கிளவியும்,
காமமிக்க கழிபடர் கிளவியும்,
தன்னுட் கையா றெய்திடு கிளவியும்"(அகப்பொருள் விளக்கம்

என இன்னவாறு விரக நிலைகள் பல வருவனவாகும். தனது அகத்துறு துயரைப் புறத்துறு பொருள்மேல் பொருத்திப் புகலுங் கால் மாலையோடு மாத்திரம் அன்று கடல், அன்றில், திங்கள் முதலிய பலவின் மீதும் படுத்துக்கூறுவர்.

"பூங்கணைவேளைப் பொடியாய் விழவிழித்தோன் புலியூர்
ஓங்கணைமேவிப் புரண்டு விழுந் தெழுந்து ஓலமிட்டுத்
தீங்கணைந்தோரல்லும் தேறாய் கலங்கிச் செறிகடலே!
ஆங்கணைந்தார் நின்னையும் உளரோ சென்றகன்றவரே?"
(திருக்கோவையார்)

அணைமேவல், புரளல், விழுதல், எழுதல், ஓலமிடல், அல்லும் தேறாமல் கலங்கியயர்தல் தலைவியிடத்துள்ள துயர்நிலைகள்; அவை கடலுக்கும் உளவாகக் குறித்து அணைந்தவர் நின்னையும் அகன் றுளரோ? என அதனைநோக்கி இதில் வினவியிருத்தல் காண்க.

"வம்புற்றனை, வெண்மதியால் ஒடுங்கினை, வண்டிழந்தாய்,
அம்புற்றனை, மிகுகண்முத்துகுத்தனை, அம்புயமே!
நம்புற்றரவணி எம்மான் திருவெங்கை நாட்டிறையை
வெம்புற்றனை, எனைப்போலென்பதின்று வெளிப்பட்டதே."
(திருவெங்கைக்கோவை

"நிலமே சுழித்தனை, கீழ்வளைவீழ்த்தினை, நீடலரின்
குலமே சுமந்தனை, உள்ளலைந்தாய், குறுகாரை முந்நீர்க்
கலமேற ஏற்றிய கோழிக் குலோத்துங்கன் காவிரிவாய்ச்
சலமே! உனக்கும் உண்டோ அன்பராலுள்ள சஞ்சலமே?"
(குலோத்துங்கன் கோவை)

"நீறணிமேனியர் கோடீச்சுரநம்பர் நேசர்முன்பொய்
கூறல்கைதாய்! இன்றுவம்புற்றலைவாய் குருகிழந்து
வீறளியார்கள் இரங்கக் கண்ணீர்சிந்தி மெய்பசந்திவ்
வாறடைந்து என்னையொத்தாய்! பிரிந்தார்கொல் உன்அன்பருமே?"
(கோடீச்சுரக்கோவை)

"தன்போற் சினத்துரு மேந்திய கோன்கன்னித் தாழ்துறைவாய்ப்
பொன்போல் மலர்ப்புன்னைக் கானலு நோக்கிப் புலம்புகொண்ட
என்போல் இரவினெல்லாந் துயிலாதுநின் றேங்குதியால்
அன்போடொருவற் கறிவிழந்தாயோ அலைகடலே!"
(பாண்டிக்கோவை)

"கண்ணீர் கவிழ்த்துக் கருந்துகளாடிக் கருகி நெகிழ்ந்து
உண்ணீர் கழிய வெளிவந்து நின்றனை உற்பலமே!
விண்ணீள் வரையின் எனைப்போற் குறிபொய்த்து மெல்குவிக்கும்
தண்ணீரிலாத தலைவனை நீயுங்கொல் சாற்றுகவே"
(தணிகைப்புராணம்)

"மன்றிரும் பெண்ணை மடல்சேர் அன்றில்!
நன்றறை கொன்றனர் அவரெனக்? கலங்கிய
என் துயர் அறிந்தனை நாறியோ? எம்போல
இன்றுணைப் பிரிந்தாரை யுடையையோ நீ?

பனியிருள் சூழ்தரப் பைதலஞ் சிறுகுழல்!
இனிவரி லுயருமற் பழியெனக் கலங்கிய
தனியவர் இடும்பைகண் டினைதியோ? எம்போல
இனியசெய் தகன்றாரை யுடையையோ நீ?" (நெய்தற்கலி 12)

வாயும் திரையுகளும் கானல் மட நாராய்!
ஆயும் அமருலகும் துஞ்சிலும் நீ துஞ்சாயால்;
நோயும பயலைமையும் மீதூர எம்மே போல்
நீயும் திருமாலால் நெஞ்சம் கோட்பட்டாயோ?"

கோட்பட்ட சிந்தையையாய்க் கூர்வாய அன்றிலே!
சேட்பட்ட யாமங்கள் சேராது இரங்குதியால்,
ஆட்பட்ட எம்மேபோல் நீயும் அரவணையான்
தாட்பட்ட தண்துழாய்த் தாமம் காமுற்றாயோ?
(திருவாய்மொழி)

"புன்கண்கூர் மாலைப் புலம்புமென் கண்ணேபோல்
துன்ப முழவாய் துயிலப் பெறுதியால்
இன்கள்வாய் நெய்தால்! நீ எய்தும் கனவினுள்
வன்கண்ணார் கானல் வரக் கண்டறிதியோ?" (சிலப்பதிகாரம்)

"போவாய் வருவாய் புரண்டு விழுந்திரங்கி
நாவாய் குழற நடுங்குறுவாய்—தீவாய்
அரவகற்றும் என்போல ஆர்கலியே! மாதை
இரவகற்றி வந்தாய்கொல்? இன்று" (நளவெண்பா)

அன்றில் கடல் முதலியனவும் தம்போல் பிரிவுத்துயாமுடையனவாகச் சமமாகச்சிந்தித்து விரகிகள் பிரலாபிப்பர் என்பதையும், அவர் நிலைகளையும் இவை உணர்த்தி நிற்றல் காண்க.

"பால்வாய்ப் பிறைப்பிள்ளை யொக்கலைக் கொண்டு பகலிழந்த
மேல்பாற் றிசைப் பெண் புலம்புறுமாலை உலகளந்த
மால்பாற்றுழாய்க்கு மனமுடையார்க்கு நல்கிற்றையெல்லாம்
சோல்வான் புகுந்து இதுவோர் பனிவாடை துழாகின்றதே"
(திருவிருத்தம்.)

பிரிவில் மறுகியுள்ளதாக மாலைப்பொழுதை இதில் உருவகித்திருக்கும் அழகைப் பார்க்க. பகல் ஆகிய துணைவனை இழந்த என்க.

மாலையும் தன்போல் துன்பமுடையது என்றவள் இடையே வாழி என்றது என்னை? எனின், பிரிவு நிலையில் தனக்குத் துயர்

செய்துவந்தது தானும் இதுபொழுது அதனை அனுபவிக்க நேர்ந்த தென்னும் அகமகிழ்ச்சியால் என்க.

> "பறைவாய் ஒலியோதம் பந்தருகளும்
> துறைசேர் சிறுகுடியார் துஞ்சினும் துஞ்சாய்!
> நிறையின் மருண்மாலை எம்போல நீத்த
> துறைவனுடையையோ நீ வாழி வீராய்!"

பிரிவு நிலையில் ஆழியைநோக்கிப் புலம்பிய ஒருத்தி வாழி என இதில் வழுத்தியிருத்தலறிக. வீராய் = கடலே! வீரை = கடல். விரகநோய்மீக்கொண்டவர் தம்மைப்போலவே அயலையும் எண்ணி அலமருவர் என்பது இதனாலறியலாகும்.

மாலைக்காலமும் தன்போல் மறுகியுள்ளதாகப் பிரிவிலுள்ளவர் பிதற்றி நிற்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கேசினிபால் உணரப்படும்.

## கதை.

கேசினி என்பவள் அமரசிம்மன் என்னும் குறுநில மன்னனுடைய அருமைத்திருமகள். பொற்பும் நிறையும் பொறையும் செறிவும் நற்குடிப்பிறப்பும் நலமுறவுடையவள். இவளது எழில்நலங்களை வினவியறிந்து மன்னர் பலரும் மையல்மீக்கொண்டு மறுகி நின்றார். அவருள் கருநடதேசத்து அரசனாகிய சதசிந்து என்பவன் தலைசிறந்து நின்றான். அவன் நல்ல தருமவான். அருந்திறலாளன். அறிவிலும் உருவிலும் திருவிலும் சிறந்தவன். மறுபுல மதிமான்களும் இவனது குணநலங்களையும், பெருமித நிலைகளையும் போற்றி நின்றனர். சில அடியில் வருவன காண்க.

> "தருநிழலரசுவைகும் சதமகன் திருவின் மிக்கான்;
> உருவினில் மதனின் மிக்கான்; உலத்தினிற்பலத்த தோளான்;
> செருவினில் அரியேறன்னான்; தேனொடு ஞிமிறும்பாட
> முருகுடைந் தொழுகுந்தாரான்; மூவுலகளிக்கும் வேலான்; (க)
>
> அரசர் வந் திடுதிரை யளக்கு முன்றிலான்
> முரசுகள் அனுதின முழங்கு மன்றலான்;
> கரைபொரு திரையெறிகடலந் தானையான்;
> அருவரை மார்பினன்; ஆளிமொய்ம்பினன்." (உ)

இங்ஙனம் ஊழமைந்து நின்ற அவன் இவளை மிகவும் விழைந்து பெரிது முயன்று மணஞ்செய்துகொண்டு அரியபோகங்களை நுகர்ந்து அகமகிழ்ந்து வந்தான், இவளும் அவனுக்கு ஆராத இன்ப நிலையமாயமைந்திருந்தாள்.

"எப்பணியால் இன்புறுவர் காதலர் அக் காதலரை
அப்பணியால் அப்பொழுதே அன்புறுத்தி—ஒப்ப
மனங்குழையும் வண்ணம் மகிழ்விப்பதன்றே
கனங்குழையார் தங்கள் கடன்''

என்றபடி இவள் இணங்கியிருந்து இன்புறுத்திவருங்கால் அவன் வினைமேலூக்கி வெளியகன்று சென்றான். சென்றவன் அமர் முனையில் மூண்டு சிலநாள் அங்கு அமர்ந்துநின்றான். அப்பிரிவினை ஆற்றாமல் இவள் மறுகியயர்ந்தாள். இவள் மறுகுறும்போதெல்லாம் அருகிருந்த தோழி ஆறுதல் கூறினாள். "அண்ணல் விரைவில் வந்தருளுவர்; நீ மறுகிநொந்தயரல்;'' என நாளும் நாளும் அவள் நயந்து போற்றினாள்; ஒருநாள் அவளை இவள் முனிந்து நோக்கித் தனது அவல நிலையையிகழ்ந்து நுவலலானாள்.

"வாடுவதே தொழி லாக்கி எனக்கு, வருவரெனப்
பாடுவதே தொழிலாக்கி நினக்குப்பைங் தோகையன்னாய்!
நீடுவதே தொழிலாக்கித் தமக்கு, நினைகலரைக்
கூடுவதே தொழிலாவது முண்டுகொல்? குன்றகத்தே''

என இன்னவாறு பலகனற்றியுரைத்து இவள கலுழ்ந்திருந்தாள். தென்றல் வீசினும் அன்றில் கூவினும் சிந்தை குலைந்து தெருமந்துளைந்தாள். கண்டபொருள்களெல்லாம் தன்போல் காம நோய் கொண்டுள்ளனவாகக் கருதிப் புலம்பினாள். ஒருநாள் அந்திப் பொழுதை நோக்கி இவள் ஆற்றாது பிதற்றினாள்.

"தெளிவின்றி மெய்மயங்கித் தேம்பிஅயர்ந்தே
ஒளியின்றி என்போல் உளைகின்றாய்! — அளியின்றி
வந்துநின்ற மாலையே! வாராமல் உன்றுணையும்
உந்திநின்ற துண்டோ? உரை''

என்று இங்ஙனம் உரையாடி நொந்து பலவாறு இவள் உளைந்திருந்தாள். அவன் வினைமுடித்து விரைந்து வந்தான். உடனே இவள் விழைந்து தழுவி உவந்துகொண்டாள். பிரிந்திருந்தபோது மாலையை நோக்கி இவள் பரிந்து மொழிந்ததைப் பாங்கியர் மூலம்

அவன் அறிந்து நகைத்தான். துணைபிரிந்த மகளிர் மாலைக்காலத்தையும் தம்மோடு இணையாக எண்ணி இணைந்திருப்பர் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

மாலையே என்போல் மயங்கியுள்ளாய் நின்றுணையும்
மாலையிட்டுப் போயதோ மற்று.

காதல் நோயைமாலையும்கொண்டதென்பது இதனுல்கூறப்பட்டது.

1223. மண்டுபுகழ் மானவதி மாலைவாத் துன்பமிக்
கொண்டுழந்தாள் என்னே குமரேசா—மிண்டிப்
பனியரும்பிப் பைதல்கொண் மாலை துனியரும்பித்
துன்பம் வளர வரும். (௩)

இ—ள்.

**குமரேசா!** மாலைவந்தவுடன் மானவதி ஏன் மறுகி நொந்தாள்? எனின், பனி அரும்பிப் பைதல்கொள் மாலை துனி அரும்பித் துன்பம் வளர வரும் என்க.

இது, அந்திப்பொழுது அருந்துயராம் என்கின்றது.

பனி—குளிர்ச்சி. பைதல்—பசப்பு. துனி—மனவெறுப்பு. "பனிமலர் நெடுங்கண் பசலை பாயத், துனிமலி துயரமொடு அரும்பட ருழப்போள்" (ஐங்குறுநூறு 477).

இதில் பனியும் துனியும் உணர்த்தி நிற்றல் காண்க.

பொழுது அடைந்த சமயம் சூரியவெப்பம் தணிந்து குளிர்ந்த வாடை வீசி வானம் பசந்து நிற்குமாதலால் "பனியரும்பிப் பைதல்கொள்மாலை" என்றாள். மாலை பனியரும்பிப் பைதல் கொண்டது; நான் துனியரும்பித் துன்பம் கொண்டேன் என்றபடி. பனி துனிக்கும், பைதல் துன்பத்திற்கும் காரணமாகும். அந்தி நிலையை வருணித்துத் தன்சிந்தை நிலையைத் தெரிவித்தாள். "வல்லிருள் புதைப்பச் செல்சுடர் சுருக்கி, வெய்யோனீங்கிய வெறுமைத் தாகிக் கையறவந்த **பைதல்மாலை**" (பெருங்கதை) மாலை, துன்பம் வரவந்ததென இது சுட்டிநிற்றலறிக. கையற-செயலொழிய.

மேல், மாலையின் நிலையினை உரைத்தாள்; இதில், அதன் செயலினை யுரைக்கின்றாள்.

குளிர்ச்சியடைந்து பசப்புற்று நின்ற மாலைக்காலமானது மகளிர்க்கு வெறுப்பை விளைத்து வெந்துயர் விளைக்கும் என்பதாம்.

துணைவனை நினைந்து ஏங்கியிருந்த தலைவி பாங்கியிடம் பகர்ந்த படியிது. தன்னுள் மருவியிருந்த விரகதாபம் அந்திவரப் பெருகி நின்றதாதலால் அது துன்பம் வளர வந்ததென்றாள். துயர் மிகுந்த பொழுது உயிர்வாழ்க்கையில் வெறுப்புத்தோன்றுமாதலால் துனி அரும்பி எனத் தன் உள நிலையைக் குறிப்பித்தாள்.

துணைபிரிந்து தனித்துள்ள மகளிர்க்கு எப்பொழுதும் துயரமாயிருக்குமாயினும் அந்திப் பொழுதில் காட்டுத்தீ போல் அதுமிக உந்தி நிற்குமாதலால் மாலையை இங்ஙனம் நொந்து கூறினாள்.

"சுடர்செல் வானம் சேப்பப் படர்கூர்ந்து
எல்லுறு பொழுதின் முல்லை மலரும்
மாலை என்மனார் மயங்கியோரே;
குடுமிக் கோழி நெடுநகர் இயம்பும்
பெரும்புலர் விடியலு மாலை;
பகலு மாலை துணையி லோர்க்கே." (குறுந்தொகை 234)

காலை உச்சி மாலையாகிய எல்லாப்பொழுதும் எனக்கு மாலை போல் வேதனையேயாகும் என ஒருத்தி இதில் மாலையைக்குறித்து உரைத்திருத்தலறிக. துணையிலோர் = கணவனைப்பிரிந்த மகளிர்.

பிரிவில் உருகியுள்ளவள் மாலை வர மறுகி நிற்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மானவதிபால் உணரப் படும்.

### கதை.

மானவதி என்பவள் வீரவன்மன் என்னும் சோழ மன்னனுடைய அருமைத்திருமகள். பெருந்தவத்தால் பிறந்தவள். வடிவழகிலும் குணநலங்களிலும் மிகச்சிறந்தவள். பருவமடைந்து அரமடந்தை போல் இவள் தனியமர்ந்திருந்தாள். இவளது விழுமிய நலங்களை வினவியறிந்து **விக்கிரம பாண்டியன்** என்னும் வேந்தன் இவளை விழைந்து வந்து மணந்து கொண்டான். அவன்

மதுரையிலிருந்து அரசுபுரிந்த அபிடேக பாண்டியனுடைய அருமைத் திருமகன்; அருங்கலைவிநோதன்; பெருந்தகையாளன். அவ் அரசிளங்குமரனது ஐம்புலன்களுக்கும் இன்பநிலையமாய் அன்புமிகுந்து எழிலமைதியோடு இவள் இனிதமர்ந்திருந்தாள்.

"வேயெனப் பணைத்ததோளும், ஆய்மயிற்
பெடையெனச் சிறந்த சாயலும், மடமருள்
மானெனக் கிடந்த நோக்கமும், தேனென
அமிழ்தூற்றிருக்கு மழலையங் குழலிசை
வண்டுபாட்டயரும் கொண்டையும், தொண்டையஞ்
செவ்வாய் வனப்பும் மூரல் வெண்முத்தும்,
உற்பல மலர்ந்த அற்புதப் பதுமமும்,
இடுகிடை யொல்க அடிபரந் தெழுந்து
கச்சு வீசிய முற்று முலையும்,
இலவல ரெள்ளிய நலனுடை யடியும்
ஓவியம் பெற்று மேவியதென்ன"

உருவநலங்கனிந்து நிறையிலும் கலையிலும் சிறந்து உயரிய நிலையில் நிலவியிருந்த இத்தேவியோடு மேவியிருந்து அலகில் போகங்களை நுகர்ந்து அக்குலமகன் அரசுபுரிந்து வந்தான். வருங்கால் ஒருமுறை குறுநிலமன்னரிருவர் தம்முட் பொருதிறங்கருதிப் பொங்கிநின்றார். அச் சமர் மூளாவகை தடுக்கும் பொருட்டுத் தண்ணளியோடு இம்மன்னன் போனான். அவனைப் பிரிந்திருக்க மாட்டாமல் இவள் பெருந்துயருழந்தாள். உணவு துறந்து உடல் பசந்து இவள் இடர்மிகுந்திருத்தலைக்கண்டு தோழியர் உளமிக இரங்கிப் பலபலவாக அறவுரை கூறி ஆற்றிப்போற்றினார். "ஆருயிரோம்புமாறு அகன்று போயுள்ள அப்பேரருளாளர் இங்கு விரைந்து வந்தருள்வார்; நீ வருந்தியயரல்;" எனப்பொருந்திய அன்போடு அவர் புகன்றருள் செய்தார். இவள் அவரை முனிந்து நோக்கித் தன் துணைவனை நயமாக இகழ்ந்து நின்றாள்.

'மன்னுயிர் காவல் தனதான அவ்வுயிருள்
என்னுயிரும் எண்ணப் படுமாயின்—என்னுயிர்க்கே
சீரொழுகு செங்கோற் செழியற்கே தக்கதோ
நீரொழுகப் பாலொழுகா வாறு."

என இன்னவாறு பலபன்னியுளைந்தாள். அந்திப்பொழுது வந்தவுடன் விரகதாபம் மிகுந்துநின்றமையால் அதனை வெகுண்டு வைதாள். கண்டதையெல்லாம் கடுத்து இகழ்ந்தாள்.

"மாலைவரக் கண்டான் மயங்கி மறலிநிறம்
சாலமுழுச் சிவப்போ தானென்ருள்;—காலரவம்
போலவரக் கண்டு பொதியின் மலைப்புலியை
வாலுருவி விட்டான் மதன் என்ருள்;—பாலுருவி
விட்டதுபோல் வெண்ணிலவு வீசுவதை வெண்ணெருப்பாச்
சுட்டநெருப்பேதென்று சொல்லிஞள்;—முட்டக்
குயில்வாய் விடமிருப்பக் கூற்றுதைத்தார் என்னே
இயல்வேலை நஞ்சுண்டதென்ருள்;—செயல் மாரன்
தாழை மலரணியாத் தன்பகைவன் மேல் எய்யாது
ஏழையெனை எய்யுமதி என் என்ருள்;—சூழ
உருகு மினத்தோ டுயிர்த்துயிர்த்து நெஞ்சம்
சருகுபட வாடித் தளர்ந்து"

இங்ஙனம் மறுகியிருந்த இவளை அருகுநின்று தோழியர் ஆற்றித் தேற்றினர். தேற்றியும் மாலையில் துயரமாய் இவள் மயங்கியிருந்தாள். பிரிந்த மகளிர் முன் "மாலை துன்பம் வளர வரும்" என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

**மாலையிட்ட நாதன் மருங்கிலனேல் புன்மாலை**
**காலனிட்ட தூதாம் கடுத்து.**

மாலையின் துயரம் இதனுல் கூறப்பட்டது.

---

1224. **மா**சில் கிருதாசி மாலைவர அஞ்சியுளம்
கூசிநொந்தாள் என்னே குமரேசா—ஆசையுறு
காதல ரில்வழி மாலை கொலைக்களத்
தேதிலர் போல வரும். (ச)

இ-ள்.

**குமரேசா!** மாலைக்காலம் வந்தபொழுது கிருதாசி ஏன் அதனை அஞ்சி அயர்ந்தாள்? எனின், காதலர் இல்வழி மாலை கொலைக்களத்து ஏதிலர் போல வரும் என்க.

ஏதிலர்—பகைவர். யாதும் அன்புரிமையில்லாதவர் என்பதாம். மாலையை ஏதிலரோடு ஒப்பவைத்தது வேதனை செய்யும் வெம்மை நோக்கி. இல்வழி=இல்லாத இடத்து. காதலர் உள்வழி இனியதாய் நின்றதாதலால் அவர் இல்வழி வந்த அதன் பொல்லாநிலையை இங்ஙனம் சொல்லி வருந்தினள். கொலைக்களம்=கொல்லுகின்ற

இடம். போர்க்களம் என்க. சினமூண்டு வன்கண்மையோடுஉருத்து மேல்வரும் இடமாதலால் கொலைக்களம் ஈண்டுக் குறிக்கப்பட்டது.

மேல், மாலை தொலையாத் துன்பமாய்த் தோன்றி நின்ற தென்றாள்; இதில் கொலையாளிபோல்கொதித்துவந்ததென்கின்றாள்.

தமக்குரிய காதலர் தம் அருகேயில்லாதபொழுது மாலைக்கால மானது கொலைக்களத்துப் பகைவர் போல் கொதித்துவரும் என்பதாம்.

அந்தி வந்தடைந்தபோது தலைவி நொந்து கூறியபடியிது. பகலெல்லாம் சிறிது ஆறியிருந்தவள் இரவு நெருங்கியவுடன் பேய் வாய்ப் பட்ட பிள்ளைபோல் காம நோய்வாய்ப்பட்டு நடுங்கினாள்; அந்நிலையைக் கண்டு தோழியிரங்கித் தேற்றக் காலக் கொடுமையை அவளிடம் இங்ஙனம் கடுத்துரைத்தாள் என்க.

மாலைக்காலத்தை கொலையாளி என்று குறித்தது தனக்கு உயிர் வாதனையாய் உற்றுநிற்கும்அதன் ஊற்றம் கருதி.

> "அழல்புரை வெம்பனி அளைஇ, வாடை
> யுழல்வுகொண் டுறாஅ தொல்லென் றூர்தரச்,
> செங்கேழ் வானக் கம்பலம் புதைஇ,
> வெங்க ணீரதாகி, வேலிற்
> புன்கண் மாலைபோழ" (பெருங்கதை)

மாலைப்பொழுது வேலைப்போல் போழ்ந்தது என்று குறித்து அதன் இயல்பும் நிலையும் இதில் உரைத்திருத்தலறிக.

> "மைவானிறத்து மீனெயிற்று வாடையுயிர்ப்பின் வளர்செக்கர்ப்
> பைவாய் அந்திப் பட அரவே! என் னாவளைத்துப் பகைத்தியால்
> எய்வான் ஒருவன் கை ஓயான்; உயிரும் ஒன்றே; இனியில்லை;
> உய்வானுற இப்பழிபூண உன்னோடெனக்குப் பகையுண்டோ?"
> (இராமாயணம்)

இது சீதை உரைத்தது. இராமனை நினைந்து பிரிவாற்றாமல் வருந்தியிருந்தபோது அந்திவர அதனைநோக்கி இங்ஙனம் நொந்து கூறினாள் என்க. மாலைக்காலத்தைப் பாம்பாக உருவகித்துத் தன் துயர நிலையை உளமுருகும்படி அந்த அம்மை அதனிடம் உரை செய்திருக்கும் அழகை யூன்றிப்பார்க்க.

"விடவந்த காரவெம்பாலிற் பராங்குசர், மெல்லியலுக்கு
இடர்வந்த தாலென்றிரங்கிப் புணர்ந்திலர்; இன்னுயிரை
அடவந்த காலன்கொலோ? அறியேன்; இன்றிவ் அந்திவந்து
படவந்த காரப் பெரும்புகையோடிப் பாக்கின்றதே"
(சடகோபரந்தாதி)

உயிரைக் கொல்லவந்த காலனோ? என மாலைக்காலத்தைக் குறித்துக் காதலி இதில் மறுகியிருத்தல் காண்க.

இரவும் மாலையும் விரக நோயை மிகுவிக்கும் இயல்பின வாதலால் பிரிவுடையார்க்குக் கொடுந்துயரமாய் அவை மிகுந்து வரும் என்பது இதனால் அறியலாகும்.

"எல்லை கழிய, முல்லை மலரக்,
கதிர் சினந் தணிந்த கையறுமாலை
உயிரை வரம்பாக நீந்தினமாயின்
எவன்கொல் வாழி தோழி!
கங்குல் வெள்ளம் கடலினும் பெரிதே" (குறுந்தொகை)

மாலையும் கங்குலும் சாலவும் துன்பமென ஒரு தலைவி தன் தோழியிடம் இதில் உரைத்துள்ளமை யறிக.

தனித்த மங்கையர் மாலையில் தளர்ந்து வருந்துவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கிருதாசிபால் உணரப்படும்

## கதை.

கிருதாசி என்பவள் அமிர்தசேனன் என்னும் அரசனுடைய அருமைத்திருமகள். அதி ரூபவதி. தேவகன்னியரும் ஆவல் கொண்டு விழைந்து நோக்கத்தக்க மெய்யழகோடு இவள் விளங்கி யிருந்தாள். பெருமித நிலையில் இங்ஙனம் மருவியிருந்த இவள் ஒருவரையும் உவந்துகொள்ளாமல் கன்னிமாடத்தில் தனியே மன்னியிருந்தாள். ஒருநாள் நகர் மருங்கிருந்த பொழிலிடைப் புகுந்து இனிது உலாவி வந்தாள். அவ்வமயம் அங்குத் தெய்வ கதியாய் வந்திருந்த குசநாபன் என்னும் அரசிளங் குமரன் இவள் எதிர்ப்பட்டான். அவன் குசன் என்னும் முடிமன்னனுடைய அருமைத்திருமகன்; அரிய கலைகள் பலவும் பயின்றவன்; பெரிய போர் வீரன். உலகநிலை காண விரும்பிப் பல இடங்களிலுந்திரிந்து அலகில் நலங்களை ஆய்ந்து அறிவன அறிந்து வருகின்ற வழியில்

அவனடைந்தான். அவ்வருந்திறலாளன் இவளைக் கண்டவுடனே அழலுறு வெண்ணெய் போல் உளமிகவுருகி அலமரலானான். மதி மண்டலம்போல் விளங்கும் இவளது முகமண்டலத்தில் வைத்தகண் வாங்காது மயங்கிப்பித்தேறி நின்றான். இதழ் பல் முதலிய அவயவ நலங்களை வியந்து புகழ்ந்து அவாவிலமுழ்ந்தினான்

"கெண்டையர்தடங்கட்பாவை கேழ்கிளர் இதழ்க்கொப்புன்னில்
தொண்டையங் கனியுண்டென்று சொல்வனேல் அதுவும்துப்பால்;
உண்டிடும் விருப்பினோருக் குலப்புறா அமிர்தம் நல்கிக்
கொண்டிருந்திடினே ஒப்பாம்; இல்லையேல் கூடாதன்றே; (க)

முகையுறு தளவும், புள்ளின் முருந்தமும், குருந்தும், முத்தும்,
அகையுறு முடுவும் சாற்றின் அணியெயிறதற் கொவ்வாவால்;
நகையது தெரிந்தோர் வெஃக நன்னலம் புரியு நீரால்
நிகர் பிறிதில்லை; திங்கள் நிலா வெனிலாகு மன்றே (உ)

மயிரெறிகருவி வள்ளை தோரண மணிப்பொன்னூசல்
பெயர்வன நிகர்க்குமென்று பேசுதல் பேதை நீர்த்தாம்;
செயிரற வுலோகமாக்குந்திகைமுகக் கொல்லன்செய்த
உயிரெறி கருவிபோலும் ஒண்குழைக்காதுமாதோ! (ங)

கொங்குறு கூந்தலாள்தன் கோலவாண்முகத்துக் கொப்பாந்
திங்களென்றுரைக்கிற் றேயும்வளர்வுறும் சிறப்பதன்றால்;
பங்கயமெனினு முண்டோர் பழுதுமற்றதற்குமென்னில்
அங்கதற்கதுவேயல்லாலறையலாம்படிமற்றுண்டோ;" (ச)

என்று பண்டொரு தலைமகன் கொண்டாடி நின்றதுபோல் அக்குலமகனும் மோகங்கொண்டு மொழிந்துளைந்தான். அவனது உருவநிலையை நோக்கி இவளும் உருகியிசைந்தாள். உடனே மருவி மகிழ்ந்து பின்பு உலகறிய மணந்து இவளை யாண்டும் ஒருவாமல் அணுகியிருந்து அரிய போகங்களை நுகர்ந்து **மகோதயம்** என்னும் திருநகரிலமர்ந்து அவன் அரசுபுரிந்து வந்தான். அவனது ஐம்புலன் களுக்கும் இன்ப நிலையமா யிவள் இனிதமர்ந்திருந்தாள். இங்ஙனம் இருந்துவருங்கால் **கிரிவிரசம்** என்னும் அணிநகரில் ஓர் அமர் மூண்டு நின்றது. அப்பதிக்கு அதிபதியாகிய **வசு** என்பவன் இக்குசநாபனுக்குத் தம்பியாதலால் அவனுக்கு ஆதரவாக அங்குப் போதரலானான். இவன் வரவினையறிந்து மருவலரஞ்சி உறுபகை யொழிந்து ஒடுங்கிச் சென்றார். துணைவன் வேண்டச் சிலநாள் அங்கு இவன் தங்கியிருந்தான். அப்பிரிவினையாற்றாமல் மறுகி யிருந்த இவள் கணம் ஓர் ஊழியாகக் கழித்து வந்தாள். தோழியர்

தேற்றியும் துயருற்றுளைந்தாள். ஒருநாள் அந்திப்பொழுதில் சிந்தைமிக நொந்தாள். பறவைகள் தத்தம் துணைகளோடு சேக்கையில் சேருவதை நோக்கிநின்ற இவள் தன் சேர்க்கையை நினைந்து ஏக்கமீக் கொண்டாள். விரகவேதனை மிகமீறி நின்றது. அவ்வமயம் தன்னருகே நின்ற தலைமைத்தோழியை நோக்கித் தன் பரிபவ நிலையைப் பையவுரைத்துப் பரிந்து புலம்பினாள். மாலையில் மயங்கி இவள் மறுகிப்புலம்பியபடியை அடியில் பார்க்க.

'ஒள்ளிய பிறைவா ளுருவியுட்கருகி உடல்சிவந் துருத்துமேல்வெகுண்டே
அள்ளியவாடை யுயிர்ப்புமுன் தொடர அடல் மிகுந்தார்த்தெழுந்தந்தோ
எள்ளிஎன் உயிரைப்பருகினன் மாலை எனும் பெயர்புனைந் தொருகாலன்;
அள்ளிலைவடிவேல் அண்ணலையடைந்தீதறைந் துவாதோழி! என்றயர்ந்தாள்'

மாலைக்காலத்தை காலன் என்று உருவகஞ்செய்து இதில் இவள் உரைத்திருக்கும் அழகை யூன்றிநோக்குக. இதனால் இவளது அறிவமைதியும் பிரிவின் துயரும் பதிவிரத நிலையும் அறியலாகும். இங்ஙனம் உருகியிருந்த இவள் அவன் வந்தவுடன் மருவிமகிழ்ந்தாள். கணவன் பிரிந்திருந்த பொழுது மாலையை நோக்கி இவள் வருந்தி நின்றதைத் தோழி பின்பு துணைவனிடம் மொழிந்து நகைத்தாள். காதலரில்வழி மாலைக்காலம் கொலையாளிபோல் தோன்றும் என்பதை உலகம்இவள் பால் உணர்ந்து நின்றது.

கொல்ல வெகுண்ட கொலைஞன்போல் வெம்மாலை
ஒல்லை யெழுந்த துருத்து.

மாலைப்பொழுது சாலக்கொடிதென்பது இதனால் கூறப்பட்டது.

---

1225. மாது சுதேட்டிணையேன் மாலைதனை வெம்பகையாக்
கோதுரைத்து நொந்தாள் குமரேசா—ஏதேனும்
காலைக்குச் செய்தநன் றென்கொல் எவன்கொல்யான்
மாலைக்குச் செய்த பகை. (ரு)

இ—ள்.

குமரேசா! மாலைப்பொழுதைக் கண்டவுடன் சுதேட்டிணை ஏன் மறுகிப்புலம்பினாள்? எனின், யான் காலைக்குச்செய்த நன்று என்கொல்? மாலைக்குச்செய்த பகை எவன்கொல்? என்க.

நன்று = நன்மை. பகை = தீமை. நன்று என்றதனால் காலை இதமாய் நின்றதும், பகை என்றதனால் மாலை துயரமாய் வந்ததும் அறியலாகும். இவ்வண்ணம் அவைசெய்வதற்கு ஏதாவது இடையூறு தான் செய்திருக்கவேண்டுமேயென்று ஐயமுற்றுத் தனக்குள்ளேயே வினவிக்கொண்டாள். என்கொல் = யாதோ? எவன் என்பதே வினாவின் பூரண உருவம்; அது குறைந்து என் என வந்தது. என்னை, என்ன, என்னே, ஏன் எனவும் வரும். இவ்வினா அஃறிணை இருபாற்கும் பொதுவாம் என்க.

"அத்திணை மருங்கின் இருபாற் கிளவிக்கும்
ஒக்கும் என்ப எவனென் வினாவே" (தொல்காப்பியம்)
"எவனென் வினாவினைக் குறிப்பிழி யிருபால்" (நன்னூல்)

எவன் என்பதோடு கோல் சேர்த்தது தன் வினா ஐயமாதல் தோன்ற. காலையை முதலில் குறித்தது முந்தி வந்தமையான்.

மேல், கொடிய பகைவன்போல் மாலை கொதித்து வந்ததென்றாள்; இதில், அங்ஙனம் வருதற்கு யான் என்ன தீமைசெய்தேன் என்கின்றாள்.

நான் காலைக்குச் செய்த உபகாரம் யாது? மாலைக்குச்செய்த அபகாரம் என்ன? என்பதாம்.

மாலைப்பொழுதைக் கண்டு காதலி மறுகியுரைத்தபடியிது. காலை இனியதாயும், மாலை இன்னாதாயும் தனக்குத் தோன்றி நின்றமையால் அதற்கு என்ன நன்மை செய்தேன்; இதற்கு என்ன தீமை செய்தேன் என்றாள். நாயகனோடு கூடியிருக்குங்கால் காலை வெறுப்பிற்குஇடமாயிருந்தது; மாலை விருப்பிற்குரியதாய் நின்றது. என்னை? பொழுது விடியின் கலவியின்பம் விலகநேருமாதலால் அவ்விடிவுகாலை முடிவுகாலமாக வெறுக்கப்பட்டது; பகலெழுந்த பின் மீண்டும் போகங்கருதி எப்பொழுது பொழுதடையும் என்று மாலையை விழைந்து எதிர்நோக்கி நின்றாளாதலால் அது விருப்பிற்கிடமாயிருந்தது என்க. இங்ஙனமிருந்த அவை இது பொழுது நேர் மாறாய் நின்றமையால் இவ்வாறு கூறலானாள். பிரிவினுருகியுள்ளவர்க்கு மாலை வரவு பெருவேதனையாயிருக்குமாதலால் அதனை நோக்கி ஆற்றாது அலமருவர் என்பது இதனால் அறியலாகும்.

"நினையுமென் உள்ளம்போல் நெடுங்கழி மலர்கூம்ப
இனையும் என் நெஞ்சம்போல் இனங்காப்பார் குழல் தோன்றச்,
சாயஎன் கிளவிபோல் செவ்வழி யாழ் இசைநிறப்ப்,
போய என் ஒளியேபோல் ஒருநிலையே பகல்மாயக்,
காலன்போல் வந்த கலக்கத்தோ டென்றலை
மாலையும் வந்தன்றினி" (நெய்தற்கலி 25)

மாலையைக் காலனோடு ஒப்பவைத்து ஒரு தலைமகள் உளமறுகிப் புலம்பியிருக்கும் நிலையினை இதில் ஊன்றிப்பார்க்க.

"அருந்தாவிடமும் அருந்தியவ் வானவர் ஆருயிரைத்
தருந்தாரு வெங்கையில் எவ் வகையானும் தனைத்தப்பியே
இருந்தாலும், ஆவிகவர்வான் மதிப்பிள்ளை யீன்றுவைக்கும்
பெருந்தாப மாலைக்கு இவள் என்கொலோ பிழை செய்ததுவே!"
(திருவெங்கைக்கோவை)

அந்திப்பொழுதை ஒருவாறு கடந்து அதன்பின் மதியைக் கண்டு மறுகிக்கலுழ்ந்த தலைவியினிலையைப் பாங்கியறிந்து புலம்பிய படியிது. தான் ஒழிந்துபோயும் உயிரை வாங்கும் பொருட்டு ஒரு பிள்ளையைப் பயந்து வைத்ததே இந்த மாலைக்கு இவள் என்ன பிழை செய்தாள்? என அவள் இரங்கியிருக்கும் அழகைப் பார்க்க. இதனை இது அடியொற்றியுள்ளமை காண்க.

மாலைக் காலம் காதலிகளுக்குக் கடுந்துயர் விளைக்கும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுதேட்டிணைபால் உணரப்படும்.

## கதை.

சுதேட்டிணை என்பவள் சாமந்தன் என்னும் குறுநில மன்னனுடைய அருமைத்திருமகள். மறுவற்ற உருவுடையளாதலால் சர்வாங்கசுந்தரி என எவரும் புகழ இவள் உயர் வெய்தியிருந்தாள். "அன்னமென்னடை ஆரமுதன்னசொற், சொன்னசாயற் சுதேட்டிணை" என இன்னவாறு நன்னலமெய்தி நின்ற இக் கட்டழகியை விராட தேசத்து அரசனாகிய **விராடன்** மணந்துகொண்டு சிறந்த போகங்களை நுகர்ந்துவந்தான். அரச போகங்களனைத்தினும் இவளது இன்ப நலத்தையே அவன் மிகவிழைந்து நின்றான். "துறக்க இன்பமும் இவளோடமர்ந்த உறக்க இன்பத்தை ஒவ்வாது" என ஒருமுறை அவன் உவந்து புகழ்ந்தான்.

'ரைப் பெருங்கடல் வளைஇய உலகமும்,
அரிது பெறு சிறப்பிற் புத்தேள் நாடும்,
இரண்டும் தூக்கிற் சீர்சாலாவே;
பூப்போல் உண்கண் பொன்போல் மேனி
மாண்வரி ஆகக் குறுமகள்
தோள்மாறு படூஉம் வைகலொடு எமக்கே''

என இவள் மெய் நலம் வியந்து அவன் வைகி வந்தான். வருங்கால் அங்கதேசத்தில் ஓர் அமர் மூண்டு நின்றதாதலால் அம்மன்னனுக்கு உதவியாய் அங்கு அவன் சென்றான். தன் நாயகன் வரவை எதிர்நோக்கி இவள் நைந்திருந்தாள். பகற்காலத்தில் ஒருவாறு ஆறியிருந்தாலும் மாலைவந்தபொழுது சாலவும் நொந்தாள். அன்றிலைப் பழித்தாள்; தென்றலைவெறுத்தாள்; திங்களைக் கண்டு சினந்து புலம்பினாள்.

"பணந்தாழ் அரவுண்டுமிழ் மதியே! அமிழ்தினோடும் பலதேவ
கணந்தாம் வெருவும் விடத்தொடும் வந்ததனாலன்றோ கணவர்புயம்
மணந்தாருள்ளம் குளிர்ப்பேறத் தண்ணென் கதிர்கள் வழங்குவதும்,
தணந்தாருள்ள மிகவெதும்ப தழல் போலுருக்குந் தன்மையுமே;

"விரிந்த திரைப்பாற் கடற் பிறந்த விடமோரிரண்டில் ஓர் கடவுள்
மருந்தினுகர்ந்த கரியவிட மீட்டும் உலகில் வந்ததுவே!
பரந்து கனலும் மதிக்கலையாம் வெள்ளைவிடத்தைத் தேவர்பலர்
அருந்த அருந்த நாளும் வளர்வதெவன் கொல் அறியேமால்''

இவ்வகையில் பலபலகூறி இவள் வருந்தியிருந்தாள். நாயகன் திரும்பிவந்தவுடன் இவள் மயக்கந்தீர்ந்து மகிழ்ந்து கொண்டாள். அவன் அகன்றிருந்தபோது "காலையைக்காட்டிலும் மாலை கடுந் துயர் செய்கின்றதே! இதற்கு யான் என்ன இடர் செய்தேன்?'' என்று பன்னிப் புலம்பி இவள் இன்னலுழந்திருந்த நிலையை அம்மன்னனிடம் சொல்லித் தோழியர் புன்னகை செய்தார். இவளது கெழுதகைமையை யறிந்து அவன் உளமிகவுவந்தான். பிரிந்திருப்பவர் மாலைக்காலத்தை இகழ்ந்து நிற்பர் என்பதை உலகம் இவள் பால் உணர்ந்து நின்றது.

**உள்ளந் துடிக்க உயிர்பதைக்க வந்ததே**
**கொள்ளைசெய் மாலை கொதித்து.**

அந்தியடல் இதனால் கூறப்பட்டது.

1226. மாசிலுயர் காஞ்சனைமுன் மாலைநோய் செய்ததெனக்
கூசி நின்றாள் என்னே குமரேசா—வீசியுறு
மாலைநோய் செய்தன் மணந்தா ரகலாத
காலை யறிந்த திலேன். (கூ)

இ—ள்.

குமரேசா! தன்காதலன் பிரிந்துநின்ற பொழுது காஞ்சனமாலை ஏன் மாலையில் மறுகியிருந்தாள்? எனின், மாலை நோய் செய்தல் மணந்தார் அகலாத காலை அறிந்தது இலேன் என்க.

மணந்தார் = கலந்தார். என்றது காதலரை. மணத்தல் = கூடுதல், கலத்தல். "திருந்திழை மென்றோள் மணந்தவன்" (நெய்தற்கலி 14)

இதில் மணத்தல் உணர்த்தி நிற்றல் காண்க.

அகலாத காலை = பிரியாதபொழுது. அஃதாவது அவர் உடனிருந்த சமயம். அறிந்தது இலேன் = உணர்ந்தேனில்லை.

"வெண்மணல் விரிந்த வீததை கானற்
றண்ணந் துறைவன் தணவா ஊங்கே
வாலிழை மகளிர் விழவணிக் கூட்டு
மாலையோ அறிவேன் மன்னே; மாலை
நிலம் பரந்தன்ன புன்கணோடும்
புலம் புடைத்தாகுதல் அறியேன்யானே" (வெள்ளி வீதியார்)

"சிறுபுன் மாலை யுண்மை
அறிவேன் தோழி அவற்காணூங்கே" (குறுந்தொகை 352)

இவை யீண்டெண்ணற் குரியன.

மேல், மாலை பகையாய் நின்று துயர் செய்ததென்றாள்; இதில், அச்செயல் நிலையை இன்றுதான் அறிந்தேன் என்கின்றாள்.

மாலைக்காலம் துன்பம் செய்தலை என்காதலர் அருகிருந்த பொழுது யான் அறிந்ததில்லை என்பதாம்.

பொழுதடைந்தவுடன் விரகதாபமிகுந்து மறுகியலமந்த தலைவியைத் தோழி நெருங்கி "என்றும் வந்த மாலைதானே; இன்று ஏன் அதனைக்கண்டவுடன் இப்படி நொந்து படுகின்றாய்?" என்று நுவன்று தேற்ற அவளை நோக்கி அவள் கவன்றுரைத்தபடியிது.

கழிந்ததற் கிரங்கிக் கலுழ்ந்து நின்றாளாதலால் "அறிந்ததிலேன்" என்றாள். அறிந்தேனாயின் அவரை அகல விட்டிரேன் என்பது குறிப்பு.

"துளங்கும்ஒளித் திங்கள்தனை அம்புலியென் றுலகமெல்லாம் சொல்லக்
கேட்டும்,
பளிங்கனைய வயிற்றினது விழுங்கியமான் புறந்தோன்றப்பார்த்தும்,
கெட்டேன்;
இளங்கொடிய புலியிதென அறிந்திலேன்; அறிந்தேனேல், என்பட்டாலும்,
களங்கனிமா மிடற்றிறையைத், திருவெங்கைக்காவலனைக்கைவிடேனே."
(திருவெங்கைக் கலம்பகம்)

தலைவனை அகன்றிருந்த தலைவி கலைமதியை நோக்கிக் கவலையிருந்து நிலைகுலைந்துரைத்தபடியிது. திங்கள் நோய் செய்தலை முன்பு அறிந்திலேன்; அறிந்தேனேல் காவலனைக் கைவிடேனே என அவள் இரங்கியிருத்தல் காண்க. சந்திரனைக் குறித்து இதில் உரைத்திருக்கும் அழகையூன்றிப்பார்க்க. இதனை அடியொற்றி இது வந்துள்ளமையையறிந்துகொள்க.

மணந்தார் அருகிருந்த போது மாலை இன்பமாயும், அவர் அகன்றபோது துன்பமாயும் மகளிர்க்குத் தோன்றுமாதலால் அது நோய் செய்ததாக இங்ஙனம் நொந்து புலம்பினாள்.

"மாலை நீ, உள்ளங்கொண்ட கன்றவர் துணைதாராப் பொழுதின்கண்
வெள்ள மான் நிறம் நோக்கிக் கணை தொடுக்குங் கொடியான்போல்
அல்லற்பட்டிருந்தாரை அயர்ப்பிய வந்தாயோ"? (க)

மாலை நீ, ஈரமில் காதலர் இகந்தருளா விடஞ்ஞேகிப்
போர்தொலைந்திருந்தாரைப் பாடெள்ளி நகுவார் போல்
ஆரஞருற்றாரை அணங்கிய வந்தாயோ? (உ)

மாலை நீ, கந்தாதல் சான்றவர் களைதாராப் பொழுதின்கண்
வெந்ததோர் புண்ணினகண் வேல்கொண்டு நுழைப்பான்போல்
காய்ந்த நோயுழப்பாரைக் கலக்கிய வந்தாயோ?" (நெய்தற்கலி 3)

பிரிந்திருந்த தலைவி மாலையை நோக்கி இதில் புலம்பியிருத்தல் காண்க. வெள்ளமான் = வெள்ளத்திலகப்பட்டமான். நிறம் = மார்பு. மானை எய்து கொல்லும் கொலைஞன்போலவும், மானிகளை இகழ்ந்துநகும் வன்கண்ணன்போலவும், படுபுண்ணில் நெடுவேலை நிந்த கொடியோன்போலவும் கடுநோய் செய்ததென மாலையைக் குறித்து அக் குலமகள் இதில் மறுகியிருக்கும் நிலையைப் பார்க்க.

அருந்துணை பிரிந்தவர்க்கு மாலைக்காலம் பெருந்துயராயிருக்கும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை காஞ்சனை மாலைபால் உணரப்படும்.

## கதை.

காஞ்சனை மாலை என்பவள் சூரசேனன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகள். அக்காலத்திருந்த அரசிளங் குமரிகளெவரும் வியந்து புகழ்த்தக்க சிறந்த அழகோடு இவள் விளங்கியிருந்தாள். ஒண்மையும் ஒளியும் ஓங்கிய நிறையும் பெண்மையும் அறிவும் பெருகியிருந்த இவளது உருவநிலையையறிந்து மலயத்துவசன் என்னும் பாண்டிய மன்னன் ஈண்டியகாதலோடு ஏங்கியிருந்தான். அவன், மதுரையை நிறுவி வளமுறச்செய்த குலசேகரபாண்டியனுடைய அருமைத் திருமகன். நல்ல நீதிமான். பல்வகைக் கலைகளையும் பழுதறப்பயின்றவன். அறிவும் சீலமும் அமையப்பெற்றவன்.

"மனுவற முவந்து தன் வழிச்செல நடத்தும்
புனிதன்; மலயத்துவசன்; வென்றி புனை பூணன்;
கனியமுத மன்ன கருணைக்குறையுள்; காட்சிக்கு
இனியன்; வடசொற் கடல் தமிழ்க் கடல் இகந்தோன்"

என அருந்தவரும் இங்ஙனம் உவந்துகூற உயர்ந்திருந்த அவன் இவளைவிழைந்து வந்து மணந்துகொண்டு சிறந்த போகங்களை நுகர்ந்து தேவராசன்போல் யாவரும் தொழ மேவியிருந்தான். இங்ஙனம் இருந்துவருங்கால் மகப்பேறு கருதி ஒருவேள்விசெய்தான். அவனது அன்பின் பயனாக அம்பிகையே ஓர் அருமகவாகி அதில் அரும்பித்தோன்றினாள்; அப்பெண்மகவைப் பெருமகிழ்வோடேந்தித் தன் மனைவியிடம் அவன் பேணிக்கொடுத்தான். இவள் விழைந்துபெற்று மார்போடணைத்து மகிழ்ந்து நின்றாள்.

"செய்யவாய் வெளிறாது, துணைமுலைக்கண் கருகாது, சேல்போல் நீண்ட
மையவாய் மதர்த்தகருங் கண் பசவாது, ஐயிரண்டு மதியந்தாங்காது,
ஐயஆலிலைவருந்தப்பெறாது பெறு மகவையெடுத்தணைத்தாள்; மோந்தாள்;
துய்யவாய் முத்தங்கொண் டின்புற்றாள் முன்பெற்ற தோகையன்னாள்"

இங்ஙனம் இவள் மகிழ்ச்சியில் திளைத்து நிற்க மன்னன் சிறந்த தானங்கள் பல செய்து நின்றான். அன்று அவன் செய்த நிலையை அடியில் பார்க்க.

"சிறை விடுமின்; சிறைக்களமும் சீத்திடுமின்; எழாண்டு தேயத்தீட்டும்
இறை விடுமின்; அயல்வேந்தர் திறை விடுமின்; இறைநிதியமீட்டும் ஆயத்
துறை விடுமின்; ஆலயமும் அறப்புறமும் பெருக்கும் எனத்தொழாரைக்

காய்ந்த

கறைவிடு மின் னயில் வேலான் வள்ளுவனைக் கூஉய் முரசங்கறங்கச்சாற்றி;
கல்யாண மணிமௌலி வேந்தரையும் கால்யாப்புக் கழல நீத்துக்
கொல்யானை பரி நெடுந்தேர் அரசுரிமை தொன்முறையாற் கொடுத்துப்
போக்கிப்
பல்லாருங் கொள்கவெனப் பண்டாரந்தனைத்திறந்து பசும்பொன் னுடை
வில்லாருமணிக்கொடும்பூண் வெறுக்கைமுதல்எனைப்பலவும்வெறுப்பவீசி;
தூமரபின்வருபெருமங்கலகவிகட்கு இருநிதியம் துகில்பூண் பாய்மா
காமர்கரி பரித்தடந்தேர் முதலாய பல பொருளும் களிப்ப நல்கிக்
கோமறுகு களிதூங்கச் சுண்ணமொடும் எண்ணெய் விழாக் குளிப்ப நல்கி
மாமதுரா நகரன்றி மற்றுமுள நகரெங்கு மகிழ்ச்சி தூங்க;
இவ்வண்ணம் நகர்களிப்ப இறைமகனும் களிப்பெய்தியிறைவர் சொன்ன
அவ்வண்ணம் சாத முதல்வினை நிரப்பித், தடாதகை என்றழைத்துத் தேவி
மெய்வண்ண மறையுணரா இறைவிதனை மேனைபோல் மேனாள் நோற்ற
கைவண்ணத்தளிர் தீண்டி வளர்ப்ப இமவான் போலக் களிக்கு நாளில்"
(திருவிளையாடற் புராணம்)

இதனால் அவனது திருவும் திறலும் அருளும் அறமும் குண மும் கொடையும் பிறவும் இனிதறியலாகும். அப்பெருந்தகைக் குப் பொருந்திய இன்ப நிலையமாய் இவள் செறிந்திருந்தாள். ஆவியும் உடலும்போல் இவளுடன்கூடி அவன் மகிழ்ந்து வருங் கால் போரியல் பொடுங்க ஒருமுறை ஆரிய மண்டலம்போனான். மாறுயிருந்த மன்னரிருவரும் இவ்வீரனுரையால் வெம்பகை நீங்கி னர். அவர் உவந்து வேண்டச் சில நாள் அங்கு இவன் தங்கி யிருந்தான். இவள் துணைபிரிந்த அன்றில்போல் இங்குத்துடித் தலமந்தாள். உணவும் துயிலு மொழிந்து கனவிலும் அவனை நினைந்து கலங்கலானாள். ஒருநாளிரவு சிறிது கண்ணயர்ந்தபோது அவன் கைவந்ததாகக் கனவுகண்டு கடுத்தெழுந்தாள்; விழித்தவுட னில்லாமையால் வெதும்பி நொந்தாள்.

"ஓராற்றான் என்கண் இமைபொருந்த அந்நிலையே
கூரார் வேல் மாறன் என் கைப்பற்ற—வாரா
நனவென் றெழுந்திருந்தேன் நல்வினையொன்றில்லேன்
கனவும் இழந்திருந்த வாறு"

என இன்னவகையாகப் பன்னிப் புலம்பிப்பதைத்துளைந்தாள்.

பகலைவிட மாலையடைந்தபொழுது மறுகியுழந்து அதன் துயர் நிலையைச்சுட்டித் தோழியரிடம் சுளித்துரைத்தாள். மாலைநோய் செய்தலை மணந்தார் அகன்ற காலைதான் கண்டேன் என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

மன்ன ரகன்றபின்னே மாலையெனும் பாவிதுயர்
இன்னதேனத் தேர்ந்தே னிருந்து.

துணை பிரியின் மாலை இணைபெரியாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1227. மண்டு புகழ்த்திதியேன் மாலைவரக் காமநோய்
கொண்டுமிக நொந்தாள் குமரேசா—உண்டான
காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய். (எ)

இ-ள்.

**குமரேசா!** மாலைக்காலம் வந்தபோது திதி ஏன் காம நோய்மிகுந்து கலங்கியுளைந்தாள்? எனின், இந்நோய் காலை அரும்பி பகல் எல்லாம் போது ஆகி மாலை மலரும் என்க.

இது, காமநோய் மாலையில் மிகும் என்கின்றது.

நோய் = காமநோய். உற்றஉயிரை வாட்டி உடலை நிலைகுலையச் செய்தலால் காமம் நோய் என நின்றது. இந்நோய் என அண்மையிற் சுட்டியது தன்னகத்துள்ள அதன் தன்மை நோக்கி.

காலை = காலைப்பொழுது. அஃதாவது சூரியன் உதயமாகிப் பத்துநாழிகை வரையுள்ள காலம் என்க. பகல் இரவு ஆகிய ஒருநாள் ஆறுபாகமாகப் பகுக்கப்படும். அவை காலை, நண்பகல், ஏ ற் பா டு, மாலை, இடையாமம், வைகறை என்பனவாம். ஒவ்வொன்றுக்கும் பப்பத்து நாழிகை யுரிமையாகும்.

அரும்பு=மொட்டு. போது = பேரரும்பு. மலர் = விரிந்த பூ. பூவானது முதலில் அரும்பாய் மிளிர்ந்து, பின்பு பொதியமைந்து போதாய்த்திரண்டு, அதன்பின் வாயவிழ்ந்து மலர்ந்து திகழும்; அதுபோல் காமம் காலகதியில் கதித்தெழும் என்ற வாறு. காமத்தைப் பூவாக உருவகித்தது பருவநிலையில் அது உருவாகி உயர்தலை நோக்கி.

காம நோயானது காலைப்பொழுதில் கிளைத்து, பகல்முழுதும் உருவாகித்திரண்டு, மாலைப்பொழுதில் விரிந்து நிற்கும் என்பதாம்.

பிரிவாற்றியிருந்த தலைவி அந்தி வந்தவுடன் சிந்தை கலங்கித் தேம்பி நின்றாள்; அவ்வமயம் அங்குவந்த தோழி இவளது நிலைமையை நோக்கி நெஞ்சமிரங்கிக் "காலையில் ஆறியிருந்தீர்களே! இப்பொழுது என்ன இப்படி வேறுபட்டிருக்கிறீர்கள்?" என்று விழைந்துவினவினாள்; வினவவே இது காமநோய் செய்த வேலை என மாலையின் கொடுமையை அவள் மறுகியுரைத்தாள் என்க.

விரகதாபமானது பகலில் சிறிதாய் அடங்கியிருத்தற்கும் இரவில் பெரிதாய் அடர்ந்தெழுதற்கும் காரணம் என்னை? எனின், காலைப்பொழுதானது விழித்தெழுந்த சமயமாதலால் காதலனைக் கனவில் கூடியதை நினைந்து சிறிது ஆறியிருப்பள்; பொழுது ஏற ஏற அவ் ஆறுதல் மாறி ஆசைமீறி நிற்கும்; பின்பு பொழுதடையுங்கால் பிராணிகள் யாவும் தத்தம் துணைகளோடு அடைய வருமாதலால் அவ் அடைவை நோக்கித் தன்கிடையை நினைந்து துணைமேல் ஆர்வமீதூர்ந்து அலமந்துழல்வள்; ஆதலால் "காலை அரும்பி, பகல் எல்லாம் போதாகி, மாலை மலரும்" எனக்காலவயத்தால் காமம் பெருகிநிற்றலை இங்ஙனம் உணர்த்தி நின்றாள் என்க.

'பருவத்தால் அரும்பிப், போதாய்ப் பையவே அலர்ந்து முற்றி
மருவித்தேம் கனிகொண்டுள்ளால் மனங்கொள வழிந்த காமம்"
(சூளாமணி)

"காலையரும்பிப், பகலெல்லாம் போதாயிருந்த காமமலர்
மாலை மலர்ந்து பொறுமல் ஒரு மாயை நாம மணி வல்லி
மூலையிருந்து புறம் போந்து விரி வெண்ணிலாமென் முற்றத்தில்
பீலிமஞ்ஞை என வீழ்ந்து மதநோய் மிக வாய் பிதற்றுமால்"
(பிரபு லிங்கலீலை)

"காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலரும் மயலினள்" (திருப்பூவண நாதருலா)

அடிகள் அருள் மொழியை இவை அடியொற்றி வந்துள்ளமை காண்க. காலம் நேர்ந்தால் காமம் காட்டுத் தீபோல் கனன்றெழும் என்பது கருத்து.

"குடத்து விளக்கேபோல் கொம்பன்னார் காமம்
புறப்படா; பூந்தார் வழுதி—புறப்படின்
ஆபுகு மாலை அணிமலையில் தீயேபோல்
நாடறி.கெளவை தரும்" (முத்தொள்ளாயிரம்)

மாலைக்காலத்தில் காமம் மலைத்தீபோல் ஒலித்தெழும் என இஃது உணர்த்தி நிற்றலறிக. இதில் குறித்துள்ள உவமை நிலைகளை யூன்றிப்பார்க்க.

விரகிகள் மாலைப்பொழுதில் சாலப்பதைப்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை திதிபால் உணரப்படும்.

### கதை.

திதி என்பவள் தக்கனுடைய அருமைத் திருமகள். அருந் தவப்பேற்றால் பிறந்தவள். இக்கட்டழகியைக் காசிபர் மணந்து கொண்டு காமபோகங்களைக் கருத்தூமுற்ற நுகர்ந்து களித்தார். இங்ஙனம் இருந்து வருங்கால் அவ் அருந்தவக்குரிசில் ஒரு முறை மறுபுலம் பிரிந் தகன்றார். சிந்து மன்னன் செய்த புத்திர காமேட்டி என்னும் அரியவேள்விக்கு அழைக்கப்பட்டிருந்த மையால் அங்குப்போய்ச் சிலநாள் அவர் தங்கியிருந்தார். அப் பிரிவினை யாற்றாது பெரிதும் இவள் மறுகியுளைந்தாள். பின்பு அவர் அரிதின் அடைந்தபொழுது இவள் மருவி மகிழ்ந்தாள். அவரும் ஒருவாற்றானும் ஒருவாமல் உடன் அமர்திருந்து உள மகிழ்ந்து வந்தார்; இடையே ஓர் விரதகாலம் நேர்ந்தது. பிர தோடம் என்னும் புண்ணியதினத்தை முன்னிட்டுப் பன்னிரு நாள் அவர் தனியகன்றிருந்தார். தன்னாலான வரையும் பொறுத்திருந்த இவள் ஒருநாள் மாலையில் காமதாபம் கனற்ற நொந்தாள். தாமம் வாடத் தவித்துளைந்தாள்; முடிவில் நாணிழந்து வலிந் தெழுந்து அம்மோன முனிவரை நெருங்கி முயங்க விரைந்தாள். இது பொழுது சரியில்லை என்று இயன்றவரையும் அவர் நயந்து மொழிந் தார். "நீத்தமிக் கெழுந்தபோது நிறுத்த ஓர் அணையுமுண்டோ? மீத்தலைக் கொண்டகாமம் விலக்குத லரிதே யந்தோ, காத்தருள் என்னை என்று கரைந்துமேல் விழுந்து கொண்டாள்;" ஆகவே அவர் மோகந்தீர முயங்கி யருளினார். மாலை நேர்ந்தபோது விரகதாபத்தால் மறுகி யெழுந்து வலியப்போய்த் தன் காதலனை இவள் மருவி மகிழ்ந்ததைக்குறித்து மயித்திரேயன் என்னுமுனிவ வியந்து கூறியுள்ளார். அடியில் வருவது காண்க.

" பூசல்மேல் எழுந்து காமன் பொருசிலை குழையவாங்க
மாசிலாக் குழவித் திங்கள் வந்தெழு மாலைப்போதில்
பாசிழைப் பரவையல்குற் படர்முலைத் திதி காமுற்றுக்
காசிபன் தன்னை நோக்கிக் கலவியிற் களிப்பேம் என்றாள்; (ச)

பேய்பல தொடரச் செந்தீப் பிறங்குவார் சடிலத்தண்ணல்
பாய்சின விடைமேற்கொண்டு படர்ந்துலாம் பதமீ தாமால்;
சாயநுண் மருங்குல் தேய்க்கும் தடமுலைப் பவளச்செவ்வாய்
ஆயிழை! கலத்தற்காலம் அன்றெனக் கூறினால்; (உ)

காலம் அன்றெனவும், காமம் கைம்மிகக் கலங்கி யாற்றாள்,
சேலமாந் தளிர்க்கைபற்றிச் சேயிழை குழைந்தாளாகக்
கோலம் வீற்றிருந்த கொம்மைக் குவிமுலை குழையப் புல்லிப்
பால்வளை காம நோயைப் பண்ணவன் தீர்த்தான் மன்னோ " (பாகவதம்)

மேற்குறித்த உண்மையை இஃது உணர்த்தி நிற்றல் காண்க. காம நிலையும், அது கதித்தெழுங்காலமும், அது கொதித்தெழுந்த போது யாவராலும் அடக்க முடியாதென்பதும், பிறவும் இதனால் அறியலாகும். பகலெல்லாம் சிந்தையை அடக்கியிருந்த இவள் அந்திப்பொழுது வந்தவுடன் காமம் கைம்மிகக் கருத்தழிந்து போய்த் தன் காதலனைத் தழுவிய நிலையைப் பின்பு கருதியபொழு தெல்லாம் பெரிதும் நாணினாள். காமநோய் மாலையில் வளர்ந்து நிற்கும் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

**காற்றுற்ற தீயென்னக் காமநோய் மாலையுற**
**ஏற்றமுற் றோங்கி யெழும்.**

அந்தியிற் காமம் அடர்ந்தெழும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1228 அன்றுபார்த்த சீமதியேன் அந்திவா அஞ்சியுளம்
குன்றி யுளைந்தாள் குமரேசா—நின்ற
அழல்போலு மாலைக்குத் தூதாகி யாயன்
குழல்போலுங் கொல்லும் படை. (அ)

இ—ள்.

**குமரேசா!** மாலைப் பொழுதையும் வேய்ங் குழலையும் சீமதி ஏன் வெறுத்திகழ்ந்தாள்? எனின், அழல்போலும் மாலைக்குத் தூது ஆகி ஆயன் குழல் கொல்லும் படைபோலும் என்க.

இது, புல்லாங் குழலிசை பொல்லாதென்கின்றது.

அழல் = தீ. குழல் = புல்லாங்குழல். ஆயன் = பசுக் காப்போன். ஆ = பசு. அதனையுடையவன் ஆயன் என்க.

படை என்றது வேல் வாள் முதலிய ஆயுதங்களை. படுத்தலைச் செய்வது படை. படுத்தல் = கொல்லல். மாலையை அழல் என்றது அதன் வெம்மை நோக்கி.

"எந்தீவரமதி மாழ்கிச் சேவ்வானம் எனுங்கொடிய
செந்தீ வர, மதியாரும் வெண் மேவரத், தேம்பும் எம்மேல்
இந்தீவரமதி ரேகவில் வேள்விடின் ஏதுசெய்வோம்
நந்தீவரமதி ளுடாளும் வெங்கை நபந்தவனே" (திருவெங்கைக் கலம்பகம்)

அந்தியைச் செந்தீ என்று குறித்து ஒரு தலைவி இதில் அலமந்திருத்தல் காண்க. இந்தீவரம் = கருங்குவளைமலர். இது மன்மத பாணங்களுள் ஒன்று. அதிரேகம் = அற்புதம். மாலைத் தீயில் வெதும்புகின்ற நம்மேல் அதிசய வில்லையுடைய மன்மதன் மலர்க் கணைவிடின் ஏது செய்வோம் என அம்மாது மறுகியிருக்கும் நிலையைப் பார்க்க. தீவரமதி = சிறந்த அறிவு.

மேல், மாலைப்பொழுது காம நோயை மிகுவிக்கும் என்றாள்; இதில், அது குழலிசையை விடுத்துக் கொல்லுகின்றதென்கின்றாள்.

தீயைப்போன்ற கொடிய அந்திப்பொழுதுக்குத் தூதாகி முந்தி வந்து ஆயனது குழலிசை வேல்போல் அடுகின்றதென்பதாம்.

ஆயன் குழலை ஏவித் தீயமாலை என்னை மாயச் செய்கின்றதே எனத் தோழியிடம் வாய்விட்டுத் தலைவி வருந்திய படியிது.

பசுக்களை மேய்க்கும் இயல்பினரான இடையர் அந்திப்பொழுதில் தம் கன்று காலிகளை ஒன்றுபடுத்தி ஊருக்குத் திருப்பவேண்டி வேய்ங்குழலை ஊதுவர்; அவ் இனிய ஓசையைக் கேட்டு உளமிக மகிழ்ந்து அந்நிரை முழுதும் ஒருமுகமாய் ஊர் நோக்கி யெழு என்க. ஆயனாய் வந்த மாயனே முதன் முதல் இக் குழலை மிக்க அழகாக இசைத்தருளினன்; ஆதலால் இது ஆயன் குழல் என வந்தது. இது, மூங்கிலால் செய்யப்படும்; சந்தன மரம், வெண்கலம்,

செங்காலி, கருங்காலி என்பவற்ருலும் செய்யலாமாயினும் மூங்கிலால் செய்வதே உத்தமம் ஆதலால் அதன் பெயரால் வேய்ங்குழல் என வழங்கப்படும். வேய் = மூங்கில்.

"ஓங்கிய மூங்கில் உயர்சந்து வெண்கலமே
பாங்குறு செங்காலி கருங்காலி—பூங்குழலாய்!
கண்ணன் உவந்த கழைக்கிவைகள் ஆமென்ருர்
பண்ணமைந்த நூல்வல்லோர் பார்த்து"

இதன் பிறப்பும் சிறப்பும் இதில் உரைக்கப்பட்டுள்ளன காண்க. கண்ணன் ஆதியில் இதனை வாய்வைத்து இசைத்தபொழுது ஆனிரை முதல் யாவும் பரவசமாகி மிக மகிழ்ந்து நின்றன.

"தெறித்த கன்றுவாய் வைத்தவம் மூலையுணு; திரண்டு
கறித்த புல்லுணு கறவை; பூங் கற்பகச் செங்கேழ்
முறிக்கொழுங் கவின் கவற்றிய முகிணைகைச் செவ்வாய்
மறைக்கொழுந்தின் வேய் இன்னிசை அஞ்செவி மடுத்தே. (க)

வட்டவாயழற் றிகிரியான் வடித்த வேயிசையால்
பட்டபாதவம் தளிர்ப்பவும், பச்சிளந்தென்றல்
சுட்டசூடுற வெதும்பமத் துடியிடை மடவார்
கட்டுமின்றளிர்க் கண்ணிகள் வாடின கரிந்த. (உ)

மதம்பெய் மாமருப் பொசித்தவன் மணிக்கழை யிசையால்
வெதும்பு வெங்கதிர் வெம்மையிற் றீரவும், பசும்பொன்
துதைந்தபோலும் அஞ்சுணங்கணி முலையினூர்க் கமுதம்
ததும்பு திங்களந் தண்கதிர் தழலெனக் கனலும்." (பாகவதம்)

இக் குழல்கொண்டு கோபாலன் இசைத்துள்ள அற்புதநிலையை இதில் அறிந்துகொள்க. அவ் அண்டர்பிரான் இதனிசையை மிகவும் கொண்டாடி நின்ருனதலால் "வேணுகானலோலன்" என அவனுக்கு ஒரு பெயரும் போந்தது. அவ் ஆயர்குலக்கொழுந்து முதல் வழி வழியாக அம் மரபினர் இதனைத் தமக்குரிமையாக் கொண்டு நிரைமேய்க்கலானூர். அவ் வழியில் வந்த ஆனுயநாயனூர் இக் குழலினை யிசைத்து அளவறு பேறு பெற்ருர். அவர் பசு மேய்க்கச் சென்ற நிலையும், இப் பசுங்குழல்கொண்டு செய்த இசையும், அடியில்வருவன காண்க.

"சேவடியிற் றொடுதோலும், செங்கையினில் வெண்கோலும்,
மேவுமிசை வேய்ங்குழலும் மிகவிளங்க வினைசெய்யும்
காவல்புரி வல்லாயர் கன்றுடை ஆன் நிரைசூழப்
பூவலர்தார்க் கோவலனார் நிரைகாக்கப் புறம்போந்தார்; (க)

ஏழுவிர விடையிட்ட இன்னிசை வங்கியமெடுத்துத்
தாழுமலர் வரிவண்டு தாது பிடிப்பன போலச்
சூழுமுரன்றெழ நின்று தூய பெருந் தனித் துளையில்
வாழியநந் தோன்றலார் மணி அதரம் வைத்தூத; (உ)

ஆனிரைகள் அறுகருந்தி அசைவிடா தணைந்தயரப்,
பானுரைவாய்த் தாய்முலையிற் பற்றுமிளங் கன்றினமும்
தானுணவு மறந்தொழியத், தடமருப்பின் விடைக்குலமும்,
மான்முதலாம் கான் விலங்கும், மயிர் முகிழ்த்து வந்தணைய."
வங்கியம்—குழல் (பெரியபுராணம்).

ஆயர்க்கு உரிமையாயமைந்து இக் குழல் விளைத்துள்ள இசை நலமும், இன்ப நிலையும், பிறவும் இதனால் அறியலாகும்.

இதனை மாலைக்குத் தூது என்றது அக்காலத்தில் ஊதப்படுதலானும், அதன் வரவை முன்னோடி அறிவித்தலானும் என்க.

"சோலைத் தும்பி மென் குழலாகத், தொடைமேவும்
கோலைக்கொண்ட மன்மத ஆயன் குறியுய்ப்ப
நீலத்துண்கண் மங்கையர்சூழ நிரையாவின்
மாலைப்போதில்மால்விடைஎன்னவருவாரும்." (இராமாயணம்)

மங்கையரைப் பசுக்களாகவும், காளையரைக் காளைகளாகவும், வண்டைக் குழல் ஆகவும், மன்மதனை ஆயன் ஆகவும் குறித்து மாலைப்பொழுதில் மால்கொண்டு அவர் பள்ளியிடம் நோக்கிவந்தனர் என இங்ஙனுரைத்து நிற்கும் அழகை ஊன்றிப்பார்க்க. மாலைக்குத் தூதாகிக் குழல் இதில் மருவி வந்துள்ளமை காண்க.

இவ் இனிய குழலைக் கொல்லும் படை என்றது திங்கள் முதலியனபோலக் காமதாபத்தை மிகுவித்து மாலைப்போதோடு தோன்றி இதன் இசை மறுக்கம் செய்தலால் பிரிந்துள்ள மகளிர் இதனைக் கொலைக் கருவியாகக் குறித்து வருந்தியுழல்வர் என்க.

"பல்கதிர் மண்டிலம், பகல்செய் தாற்றிச்
சேயுயர் பெருவரைச் சென்றவண் மறையப்,
பறவை பார்ப்புவயி னடையப், புறவின்
மாவெருத் திரலை மடப்பிணை தழுவ,
முல்லை முகைவாய் திறப்பப், பல்வயின்
தோன்றி தோன்றுபு புதல்விளக் குறூஉ,
மதர்வை நல்லான் மாசில் தெண்மணி
கொடுங்கோற் கோவலர் குழலோ டொன்றி
ஐதுவந் திசைக்கும் அருளில் மாலை
ஆள்வினைக்கு அகன்றோர் சென்ற நாட்டும்
இனைய வாகித் தோன்றின்,
வினைவலித் தமைதல் ஆற்றலர் மன்னே." (நற்றிணை 69)

பிரிந்திருந்த தலைவி அந்திப்போதில் நொந்து புலம்பியபடி யிது. சூரியன் மறைய, பறவைகள் குஞ்சுகளிடம் அடைய, காட்டிலுள்ள கலைமான் தன் பெண் மானைத் தழுவ, முல்லையரும்பு மலர, பல இடங்களிலும் காந்தள் தோன்றி விளங்க, பசுவின் கழுத்துமணி ஆயர் குழலோடு பொருந்தி ஒலிக்கப், புகுந்தெழுந்த பொல்லாமாலை தன் காதலர் போயிருக்குமிடத்தும் தோன்றிய தாயின் வினைமேல் வலித்து நில்லாமல் விரைந்துவந்தருளுவார் என அவள் வருந்தி மறுகியிருக்கும் நிலையை இதில் அறிந்துகொள்க. புறவு = காடு. தோன்றி = காந்தட்பூ. தோன்றுபு = தழைத்து.

"புன்கண் மாலையொடு பொருந்திக் கொடுங்கோற்
கல்லாக் கோவலர் ஊதும்
வல்வாய்ச் சிறுகுழல் வருத்தாக் காலே" (அகம் 74)

"இம்மாலை, கோவலர் தீங்குழலினைய அரோஎன்
பூவெழிலுண்கண் புலம்புகொண் டினையும்" (நெய்தற்கலி 13)

"தெண்ணீர் நறுமலர்த்தார்ச் சென்னி யிவ வளவன்
மண்ணகம் காவலனே என்பரால்—மண்ணகம்
காவலனே யானக்கால் காவானோ மாலைவாய்க்
கோவலர்வாய் வைத்த குழல்" (முத்தொள்ளாயிரம் 61)

கோ = பசு. அதனைக் காத்தலில் வல்லவர் கோவலர் என்க குழலை ஆயருதுவர்; அது மாலையொடு மருவிவரும்; விரகதாபத்தை விளைத்துப் பிரிவிலுள்ளவர்க்கு மிகுநோய் செய்யும் ஆதலால் கோல் லும் படை என அதனை அவர் எள்ளி வருந்துவர் என்பது இவற்றால் அறியலாகும்.

> "தாழ்துணை துறந்தோர் தனித்துயர் எய்தக்,
> காதலர்ப் புணர்ந்தோர் களிமகிழ் வெய்தக்,
> குழல்வளர் முல்லையிற் கோவலர் தம்மொடு
> மழலைத் தும்பி வாய் வைத்தூத
> அறுகாற் குறும்பெறிந் தரும்புபொதி வாசம்
> சிறுகாற் செல்வன் மறுகிற் றூற்ற
> எல்வளை மகளிர் மணிவிளக்கு எடுப்ப
> மல்லன் மூதூர் மாலைவந் திறுத்தென" (சிலப்பதிகாரம்)

மாலைக் காலம் குழலிசையோடு தோன்றித் துணைதுறந்தாரைத் துயருறுத்தும் என்பதை இதன்கண்ணும் காண்க. மாலையும் குழலும் மதன வேதனையை விளைக்கும் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ் வுண்மை சீமதிபால் உணரப்படும்.

## கதை.

சீமதி என்பவள் சவுதாசன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகள். அழகு குடிகொண்ட விழுமிய வடிவினள். கலை நிறைந்த மதிபோல் ஒளிதிகழ்ந்த முகமும், அரிபரந்தகன்று கயலெனப் பிறழ்ந்து மலரென மிளிர்ந்த கண்ணும், செழும்பவளம் போல் சிவந்து கனிந்த இதழும், சிறந்தமைந்து நறுமணம் கமழ்ந்து பெருமித நிலையில் மருவியிருந்த இவளது உருவினை நோக்கி அரமகளிரும் உளமிக மறுகி அதிசயமுடையராய் ஆர்வமுற்று நின்றார்.

"ஒளியுமிழ்ந்து நல் வட்டமாய் எழில்திகழ் உவாமதி எனத்தோன்றி நளினமென்மணம் வீசுவாண்முகம் எனின் நன்று; கீழிதழ்சேந்து வளர்செழுந் துகிர்க்கடிகைபோல்திரண்டதினடுவெண்ஓர்வரைசேரின் கனைகணும் உலகளித்திடும் அரசர் இற் கிழத்தியாய்க் களிகூரும்"

என்ற உருநூல் விதிப்படி எழில்கூர்ந்திருந்த இவளை எய்தவிழைந்து அரசிளங் குமாரர்களனைவரும் ஆவல் மீக் கொண்டு அலமந்து திரிந்

தார். இவள் எவரையும் விரும்பாமல் தனியமர்ந்திருந்தாள். ஒரு நாள் அம்பரீடன் என்பவனைக் கண்டாள். அவன் சூரியகுலத் தோன்றல். நாபாகன் என்னு முடிமன்னனுடைய அருமைத் திரு மகன். அரிய கல்விமான். பெரிய போர்வீரன். அக் கட்டழக னைக் கண்டவுடனே காதல்மீக்கொண்டு இவள் கரைந்து நின்றாள். அவனும் இவளது அற்புத நிலையை நோக்கி ஆர்வமீதூர்ந்து அகமிக வுருகினான். பின்பு உலகறிய மணந்து இனிய போகங்களை நுகர்ந்து அமிழ்தமென உவந்து கணமும் இவளை இணைபிரியாதிருந்தான்.

"குங்குமம் குயின்ற கொம்மைக் குவிமுலை குளிர்ப்பத்தைவந்து,
அங்கலுழ் மேனியல்குற் காசுடன் திருத்தி, யம்பொற்
பொங்குபூஞ் சிலம்பிற் போர்த்த பூந்துகழ் அவிழ்த்து, மாதர்
கொங்கலர் கோதை சூட்டிக் குழல்நலந் திருத்தினானே"

என்றபடி அருத்தி மிகுந்து அநங்கலீலைகள் பல ஆற்றி அமரர் கோன்போல் அவன் அகமகிழ்ந்து வந்தான். அறங்கள் புரிந்து ஆருயிரோம்பி ஐம்புலன்களும் களிப்ப இன்பம் நுகர்ந்து அவன் இருந்தபடியை அருந்தவர்களும் வியந்து புகழ்ந்தார்.

"கையினால் அரிபூசனை காதலித் தியற்றி
மெய்யினாற்றிகழ் நாவில் நன்னாமமே விளம்பி
வையமே முதலாய் வரும் பொருளெலா மாலோன்
பொய்யிலா வுருவெனு மவன் புலமையார் புகல்வார்? (க)

அரிய மாதவ வசிட்டனே யாதி அந்தணரால்
புரவிவேள்கள் பயன்விழையான் பலபுரிந்து
மருவும் ஏழ்பெருந் தீவும் ஓர் மதிக்குடை நிழற்றி
உரைசெய் இந்திரபோக முற் றுவந்தனன் உரவோன்" (பாகவதம்)

என அறவோரனைவரும் புகழ அவன் முறைசெய்துவந்தான். இத னால் அவனது அரசியல்பும் ஆள்வினைத்திறமும் அறிவமைதியும் இன்பச் சிறப்பும் இனிதறியலாகும். இங்ஙனம் இவளோடமர்ந்து பெரும்போகங்களை நுகர்ந்து வருங்கால் அமராவதியில் ஓர் அமர் மூண்டு நின்றது. அமரர் வந்து வேண்ட அங்கு அவன் அமர்ந்து சென்றான். அவனைப் பிரிந்திருக்கமாட்டாமல் இவள் பெருந்துய ருழந்தாள். தாதிகள் பல நீதிகள் கூறி அருகிருந்து தேற்றியும்

இவள் ஆற்றுதலமந்தாள். காலையும் பகலும் ஒருவாறு ஆற்றியிருப்பினும் மாலையில் இவள் சால வருந்தினாள். அந்திப்பொழுதில் காளைகளோடு கலந்து ஆனிரைவருவதைக் கண்டும் ஆயர் குழலிசையைக் கேட்டும் இவள் ஆவி பதைத்தாள்.

> "தருமக்கடவு ளெனும் இமிலேறு தனக்கு இனமாய்
> வருமக்குலத்தெறும் ஆன்கழுத்தார்த்த மணி எனுளம்
> பொருமக் கறங்குவதென்றால் புன வேய்ங்குழல் அவர் தேர்
> திருமக் கடவி வருமுன்னர் ஆருயிர் தின்றிடுமே".

என்று இன்னவாறு பல பன்னி ஏங்கினாள். "ஆலைக் கரும்பாய் அலமந்தேன் ஐயகோ மாலைக் குழலால் மருண்டு" எனப் பல முறை வெருண்டு புலம்பினாள். ஆயன் குழல் மாலைக்குத் தூதாய் வந்து கொல்லும் எனச் சொல்லிக் குலமகளிர் வருந்துவர் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்துநின்றது.

> புலிவாய் ஒலிகேட்ட புல்வாய்போல் மாலைக்
> குழல்வாயால் நொந்தேன் குலைந்து.

வேய்ங்குழலிசை சாந்துயர் தரும் என்பது இதனால் கூறப்பட்டது.

1229. மாலைவரின் இவ்வூர் மறுகுமென மாளவியேன்
கோல மிழந்தாள் குமரேசா—சாலப்
பதிமருண்டு பைத லுழக்கு மதிமருண்டு
மாலை படர்தரும் போழ்து. (௯)

இ—ள்.

குமரேசா! மாலைப்பொழுதுவரின் இவ்வூர் மறுகி வருந்தும் என மாளவி ஏன் உருகி மொழிந்தாள்? எனின், மதி மருண்டு மாலை படர்தரும் போழ்து பதி மருண்டு பைதல் உழக்கும் என்க.

இது, மாலை நேருங்கால் மாய்வு நேரும் என்கின்றது.

பதி = ஊர். பைதல் = துன்பம். மதி = சந்திரன். மாலை படர்தரும் போழ்து—அந்திப்பொழுது நெருங்கிவரும் சமயத்தில்.

மேல், மாலைக் குழல் உயிரை மாய்க்கின்றதென்றாள்; இதில், அவ் இழவையறிந்து ஊரார் அழுவர் என்கின்றாள்.

மதியொடு கலந்து மாலைக் காலம் வரும்பொழுது இப்பதி யினர் மயங்கிப் படுதுயரடைவர் என்பதாம். மதிமருண்டு என்ப தற்கு அறிவு மருளும் வகைவந்த மாலை எனவுமாம்.

நெடுநாளாகப் பிரிவாற்றிவந்த தலைவி முடிவில் ஒருநாள் உறுதி தோன்றத் தோழியிடம் உரைத்தபடி யிது.

இன்று மாலைவருங்கால் நான் இறந்துபடுவேன்; படின் தன் துணையை நினைந்து அநியாயமாக ஒரு பெண் மாண்டுபோனளே! ஐயோ! என இவ் வூாரெல்லாரும் திரண்டு உளமிக இரங்கித் தெருவுதோறும் தியங்கி அழுது புலம்புவர் என்பாள் "மாலை படர்தரும்போழ்து பதிமருண்டு பைதல் உழக்கும்" என்றுள்.

இனிஎன்னல் ஆற்றியிருக்கமுடியாது; அந்தியானது பிரிந்தார்க் குப் பெரு நோயை விளைக்குமாதலால் அவ்வமயம் கட்டாயம் என் ஆருயிர் போய்விடும் என்று தனது அல்லல் நிலையை இங்ஙனம் அலமந்து சொல்லினள்.

மாலை நிலையை விரித்துத் தன் நிலையைக் குறித்தது அக் காலம் காமதாபத்தை மிகுத்துக் கடுந்துயராற்றலாமென்க.

"புள்ளும் மாவும் புலம்பொடு வதிய
நள்ளென வந்த நாரில் மாலை
பலர்புகுவாயில் அடையக் கடவுநர்
வருவீர் உளிரோ? எனவும்
வாரார் தோழி! நம் காதலோரே" (குறுந்தொகை 118)

பறவைகளும் மிருகங்களும் கூட மாலையின் தத்தம் துணை களை நினைந்து துயரொடுவதியும்; அத்தகைய காலத்தில் என் காத லர் வாராராயின் என் நிலையாதாம்? என ஒரு தலைவி இதில் புலம்பி யிருத்தல் காண்க. நார் இல் மாலை என்றது மதிமருண்டு தன் உயிர் நிலைகுலையும்படி வந்த அதன் கொடு நிலைநோக்கி நார் = அன்பு.

மாலையில் மங்கையர் உயிர்வாதனையுற்று உழந்துபடுவர்என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மாளவிபால் உணரப்படும்.

## கதை.

மாளவி என்பவள் தேவநந்தன் என்னும் குறுநில மன்னனுடைய அருமைத் திருமகள். பேரழகி. இவளது எழிலமைதியை வினவி யறிந்து அக்காலத்திருந்த அரசகுழுவனைத்தும் விழைவுமீக்கூர்ந்து வெதும்பி நின்றது.

"மாரவேள் மகுடத் தலையெடுத்துவப்ப, மன்னவர் மனங்களிதூங்க,
வீரவேல் குமுதம் அமுதம் மென்கரும்பை விழிஇதழ் மொழிமுலையென்ன
நேரமர்ந் தொவ்வா தொளியிழந் தொளிய, நிறைமதி முகமெதிர் நாண
எரெலா நிறைந்து **மாளவி** எனும்பேர் எய்திவீற்றிருந்தனள் இனிதே."

என முனிவரும் புகழ இவள் தனியமர்ந்திருந்தாள். தோழியர் தொழுதுபணி செய்ய எழிசைபாடி யாழிசை பயின்று கழங்கும் பந்தும் கைமுகந்தாடிக் களிப்போடு இவள் நாள் கழித்து வந்தாள்.

"ஒத்த பருவத் துயிர்ப்பாங்கியர் சூழச்
சித்திரமா மண்டபத்தில் சென்றிருந்து—முத்தமுலை
விம்மமைபு நுண்ணிடையாள் வெண்முத்த மிட்டிழைத்த
அம்மனை வாங்கியெறிந் தாட அவை—தம்ம
திருமுகச் செவ்வி திருடத் திகழ்வின் திங்கள்
வருவதுவும் போவதுவுமான—இருகை
வனசமலர்மாறி மாறிவினை யாடும்
இனியகளி அன்னங்கள் என்ன"

என்றவாறு நன்னயமுற ஆடிக் கன்னிமையோடு இவள் களித்துவருங்கால் கீர்த்தி என்னும் மன்னவன் வந்து இவளை மணந்து கொண்டான். அவன் சந்திரகுலவேந்தன்; **தருமநேத்திரன்** என்னும் அரசனுடைய அருமைத் திருமகன்; அருந்திறலுடையவன். அப் பெருந்தகையாளன் இவளை விழைந்து மணந்து அரும்பெறலமிர்தம் அடைந்தவன்போல் உவந்து நுகர்ந்து உளங்களிகூர்ந்தான். அத் திருமகனுக்குப் பேரின்பநிலையமாயிவள் பெருகியிருந்தாள். "குங்குமத் தோளினானும் கொழுங்கயற் கண்ணினாளும் தங்கிய காமபோகம் தணப்பறப் பருகிவந்தார்" என்றபடி மருவி வருங்கால் ஒருமுறை மருவலர்மீது பொருதிறங்கருதி அவன் மறுபுலம் போனான். இவள் மறுகி யிருந்தாள். பாங்கியர் ஆற்றி உபசரித்தும் இவள் ஆற்றாதலமந்து ஆவி பதைத்தாள்.

" குதலைமொழியீர்! மெய்வெதும்பும் கொடுந்தீயாற்ற வேண்டுதிரேல்
பொதியவரையி னறுஞ் சாந்தம் பூசி முலை மேல் புகைந்தழலக்
கதலியிளம்பூங் குருத்ததனால் வீசிவீசிக் கனற்றுவதென்?
மதியின்தழலை அவிப்பதற்கோர் மருந்துண்டாகில் சொல்வீரே!

கொங்கு விரியு மலர்க்குழலீர்! கொழுநர்ப் பிரிந்தார் வருந்துற வான்
எங்கும் குருதி யிறைத்ததுபோல் குடபாற்றிசையின் எழுஞ்செக்கர்
பொங்குவடவைக் கொழுந்தீயே; அதனாலன்றோ பூசுரர்கள்
அங்கை நிறையப் புனல்வாரி யிறைத்து நாளுமவிப்பதுவே"

என இன்னவகையில் பல பல பிதற்றி மாலைப்பொழுதில் சாலவும் வருந்தினாள். தன்னுயிர்போம் எனத் தளர்ந்து குலைந்தாள். பின்னர் அம் மன்னன் வந்தபோது மகிழ்ந்து தழுவி அகலா திருந்து ஒரு புதல்வனைப் பயந்தாள். அக் குமாரனுக்குச் சஞ்ஞக்கினன் என்று பெயர். மகவின் முகம் நோக்கி உவகைமீக் கூர்ந்து மேலும் இவள்பால் உழுவலன்போடு தழுவியிருந்து அவன் உலகம் புரந்தான். அவனுடைய அரசும் ஆண்மையும் எவரும் புகழ உயர்வெய்தி நின்றன. அடியில்வருவது காண்க.

"அரசுகுவிந்து திறையளக்கும் ஓதை அயல்பொற் குணில் பொருமும்
முரசுமுழங்கும் ஓதையினை அவிக்கு மம்பொன் முற்றத்து
விரைசெல் மான்தேர்க் கீர்த்தி எனும் வெள்வேற்காளை யருள்மைந்தன்
புரசையானை வேல்வேந்தர் போற்றும் புகழ்ச் சஞ்ஞக்கினனே"
(கூர்மபுராணம்)

இதனால் அவனது ஆட்சிநிலையும், அருங்குல மாட்சியும் இனிதறியலாகும். தன் பெயர்நிலைக்கேற்பப் பெருங் கீர்த்திமானாய் இங்ஙனம் சிறந்திருந்த அவனுக்குத் தகுந்த தேவியாயிவள் அமைந்திருந்தாள். அவன் பிரிந்திருந்த போது மாலையை நோக்கி இவள் மருண்டு மொழிந்ததைத் தோழியர் பின்பு சொல்லி நகைத்தார். இவள் உள்ளம் நாணி உவந்து நின்றாள். மாலை படர்தரும்போழ்து பதி மருண்டு பைதல் உழக்கும் என் மகளிர் மதிமருண்டு புகல்வர் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

அந்திவரின் இவ்வூரேன் ஆவி நிலைகண்டு
நொந்து கவலு நோசிந்து.

அந்தி நேரின் ஆருயிர் தீரும் என்பது இதனால் கூறப்பட்டது

1230. அன்று பவித்திரையேன் அந்தியின்கண் உள்ளியுயிர்
குன்றி யிருந்தாள் குமரேசா—என்றும்
பொருண்மாலை யாளரை யுள்ளி மருண்மாலை
மாயுமென் மாயா வுயிர். (ய)

இ—ள்.

**குமரேசா!** அகன்றுபோன தன் நாயகனை நினைந்து பவித்திரை ஏன் உயிர்தேய்ந்திருந்தாள்? எனின், மாயா என் உயிர் பொருள் மாலையாளரை உள்ளி மருள்மாலை மாயும் என்க.

பொருள்மாலையாளர் = பொருளில் பேராசையுடையவர். பொருளில் மால்கொண்டு அதன்மயமாகவே உள்ளவர் என்க மால் = மயக்கம். தன்னை மறந்து பொருளை விழைந்து நின்றார் என அவர் தனி நிலையை இளித்துக் கூறியவாறிது. "நம்மினும் பொருளே காதலர் காதல்; அருளே காதலர்; என்றி நீயே" (அகநானூறு 53). பொருளைக் காதலித்துநின்றாரேயன்றி நம்மீது அருள் செய்து காதலர் வரவில்லை என்று ஓர் காதலி தோழியிடம் இதில் கலுழ்ந்திருத்தல் காண்க.

மருள்மாலை = மயங்குகின்ற மாலைப் பொழுதின்கண்.

"வந்தது மாலை; புகுந்தது போது; வடவைச் செந்திக்
கொந்ததுபோலக் கொதித்தது திங்கட் கொழுந்து; மனம்
நொந்தது; கொன்றைவனத்தார் அத்தார் நல்க நோக்கமொன்றும்
தந்திலர்; என்கொல் மனத்துணை யாரென்று சாற்றுபவே"
(வலமலிழும்மணிக்கோவை)

தலைவனை நினைந்து மாலையில் காதலி இதில் மனம் நொந்துள்ளமை காண்க. கொந்து = திரள்.

மாயா உயிர் = சாகமாட்டாத உயிர். மாய்தற்கு வேண்டிய ஏதுக்கள் மலிந்திருந்தும் மாயாமல் வதை வாணனாய் மண்டிக் கிடக்கின்றது என மன வெறுப்போடு உரைத்தபடி யிது. காம நோய் மிகுந்து, கடுந்துயருழந்து, உணவுதுயிலொழிந்து, உடல் மெலிந்து, உளநிலை குலைந்து, போதலும் வருதலுமாய் உயிர் ஊசலாடி யுள்ளமையான் மாயா உயிர் என்றாள்.

மேல், துயர்நிலை குறித்தாள்; இதில், உயிர்நிலை யுரைக்கின்றாள்.

மாயாத எனது உயிர் பொருளாசை யுடையாரை நினைந்து மயங்குகின்ற மாலைக்காலத்தே மாய்கின்றதென்பதாம்.

பிரிவாற்றியிருந்த தலைவி அந்திப்பொழுதில் சிந்தை நொந்து தோழியிடம் உரைத்தபடியிது. தன்மேல் காதல்கொண்டு அருள் செய்து வாராமல் பொருளையே காதலித்து அதன் வசமாய் நிற்பவர் என்பாள் பொருள்மாலையாளர் என்றாள். பொருள் ஈட்டச் சென்ற தலைவன் குறித்த காலங் கடந்தும் வந்து சேராமையால் இங்ஙனம் நொந்து கூறினாள் என்க. மாலையில் உயிர்மாயும் என்றது அக்காலம் காமநோய் மிகுவிக்குமாதலால் அதனை ஆற்றாமல் ஆவி போய்விடும் என வாய்விட்டனள்.

"நிறைந்தோர்த் தேரு நெஞ்சமொடு, குறைந்தோர்
பயனின்மையிற் பற்றுவிட் டொரூஉம்
நயனில் மாக்கள்போல, வண்டினம்
சுனைப்பூநீத்துச் சினைப்பூப் படர,
மையின் மானின மருளப், பையென
வெந்தாறு பொன்னி னந்தி பூப்ப,
ஐயறி வகற்றும் கையறு படரொடு
அகலிரு வானம் அம்மஞ் சீனப்,
பகலாற்றுப்படுத்த பழங்கண்மாலை
காதலர்ப் பிரிந்த புலம்பின் நோதக
ஆருறு ருறுநர் அருகிறஞ் சுட்டிக்
கூவீஇ எறிஞரின் அலைத்தல் ஆனு
தென்னற வியற்றிய நிழல்காண் மண்டிலத்து
உள்ளூது ஆவியிற் பைப்பய நுணுகி
மதுகை மாய்தல் வேண்டும் பெரிதழிந்து
இதுகொல் வாழி தோழி! என்னுயிர்
விலங்குவெங் கடுவளி எடுப்பத்
துளங்குமரப் புள்ளிற் றுறக்கும் பொழுதே." (அகம் 71)

இது, துணைபிரிந்து வருந்தியிருந்த தலைவி அந்திவாத் தோழியிடம் அலமந்துரைத்தது. மாலைக்காலமானது கூரிய வேல்கொண்

டெறியும் கொலைஞரைப்போலக் கொல்லா நின்றது ஆதலால் வலி மாய்ந்து என் உயிர் செல்லாநின்றதெனை அம் மெல்லியல் இங்ஙன் சொல்லி யிருக்கும் நிலைமையைப்பார்க்க. அந்த நிலைமை வருணித்துள்ள அழகையும் இதன்கண் வந்துள்ள உவமை நலங்களையும் ஊன்றி நோக்கி யுணர்ந்துகொள்க. பழங்கண் = துன்பம். நிழல் காண் மண்டிலம் = கண்ணாடி. மதுகை = வலி.

தன்னை உள்ளாதவரைத் தான் உள்ளி நைந்ததனால் இவளது உள்ளக் காதலும் உழுவலன்புடைமையும் உணர நின்றன.

“மரம்சா மருந்தும் கொள்ளார் மாந்தர்;
உரம்சாச் செய்யார் உயர்தவம்; வளங்கெடப்
பொன்னும் கொள்ளார் மன்னர்; நன்னுதல்!
நாம்தம் உண்மையின் உளமே; அதனால்
தாம்செய் பொருளளவு அறியார்; தாம்கசிந்து
என்றூழ் நிறுப்ப நீளிடை யொழியச்,
சென்றோர் மன்றநம் காதலர்; என்றும்
இன்ன நிலைமைத் தென்ப
என்னோரும் அறிப இவ் வுலகத்தானே” (நற்றிணை 226)

பொருள்மேல் போன தன் தலைவனை நினைந்து ஒரு தலைவி யிரங்கியவாறிது. மரம் சாகும்படி மாந்தர் மருந்து கொள்ளார்: உளவலி கெடும்படி ஒருவரும் தவஞ்செய்யார்; குடி வருந்தும்படி மன்னர் வரி வாங்கார்; உலக நிலை இங்ஙனம் இருப்ப என் தலைவரோ, என்னை உயிர்மாயும்படி செய்துவிட்டு அவர் பொருள் செய்யப் போயினர் என அவள் புலம்பியுள்ளமை காண்க.

“மின்னனவேணியர் கோடீச்சுரேசர் வியன் சிலம்பில்
மன்னவரென்றனைப் பித்தளையென்று வரைந்து தனிப்
பொன்னினுக் கேகினர் என்னுயிர் வேளம்பிற் போன பின்வந்
தன்னதை யார்க்களித்தாருடன் வான்வரிங் கன்புடனே?”
(கோடீச்சுரக்கோவை)

பித்து அளை = பைத்தியத்தைப் பொருந்துகளென்றும், பித்தளை என்றும் இருள் பொருள் தோன்ற இசைந்து நின்றது.

"தண்ணே யனையவர் நீங்கினராலினிக் காமன் எய்யும்
புண்ணே புகப்புக என்னுயிர்போம்; பொன்னின் மாரிபெய்யும்
விண்ணே யெனுங்கைக் குலோத்துங்கன் கோழி விளங்கிழையாய்!
பெண்ணே இறைவரும், பொன்னே நமரும் பெறுவதெங்கே?"
(குலோத்துங்கசோழன் கோவை)

பிரிவால் என் உயிர்மாயும் ஆதலால் பொருள்மாலையாளராய அவர் அதுகொண்டு எவரோடு வாழ்வர்? எனத் தலைவி இவற்றுள் இரங்கியிருக்கும் நிலையைப் பார்க்க.

போன அவர் இன்னும் வரவில்லையே! வருவதாகக் குறித்த பருவமும் கடந்து போயதே! கருமமே கண்ணுகக் கருதியுள்ளாரோ? கருதிய பொருள் உறுதியாகக் கைவரவில்லையோ? உயிர்க் காதலியைக் காட்டிலும் ஊனப் பொருள்என்ன அவ்வளவு பெரிதா? இங்கு வந்து என்னை வருத்துகின்ற இந்தக் கொடிய மாலை அங்குத் தோன்றி அவரை வருத்தாதா? என இன்னவாறு பலபல நினைந்து பதைத்துழன்றமை உள்ளி மாயும் என்றதனுல் உணரலாகும்.

இளையிருள் பரந்ததுவே எற்செய்வான் மறைந்தனனே
களைவரும் புலம்பு நீர் கண்பொழீஇ யுகுத்தனவே
தளையவிழ் மலர்க் குழலாய்! தணந்தார் நாட்டுளதாங்கொல்
வளைநெகிழ எரிசிந்தி வந்தவிம் மருண்மாலை? (க)

கதிரவன் மறைந்தனனே காரிருள் பரந்ததுவே
எதிர்மலர் புரையுண்கண் எவ்வநீர் உகுத்தனவே
புதுமதி புரைமுகத்தாய்! போனார்நாட் டுளதாங்கொல்
மதியுமிழ்ந்து கதிர் விழுங்கி வந்தவிம் மருண்மாலை? (2)

பறவை பாட்டடங்கினவே பகல் செய்வான் மறைந்தனனே
நிறைநிலா நோய்கூர நெடுங்கணீர் உகுத்தனவே
துறுமலரவிழ்குழலாய்! துறந்தார்நாட் டுளதாங்கொல்
மறவையாய் என்னுயிர்மேல் வந்த இம் மருண்மாலை? (௩)
(சிலப்பதிகாரம்)

இதில் ஒரு தலைவி உள்ளி யுளைந்திருக்கு நிலையை யறிக. பிரிந்துள்ள மகளிர் பலவாறு நினைந்து பதைத்துழல்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை பவித்திரைபால் உணரப்படும்.

## கதை.

பவித்திரை என்பவள் ஏமாங்கத நாட்டிலே இராசமாபுரி யிருந்த பானுதத்தன் என்னும் வணிகர் தலைவனுடைய அருமைத் திருமகள். நல்ல குணவதி. தன் பெயரியல்புக்கேற்பப் புனித சீலையாய் இவள் இனிதமர்ந்திருந்தாள். இவளது எழிலமைதியைக் கண்டு தனபாலன் என்னும் வணிகர் தலைமகன் உளமுருகி நின்றான். அவன் வளமிக வுடையவன். அந்நாட்டு மன்னனுக்கு இன்னுயிர் நண்பன். காளைப் பருவம் கனிந்துநின்ற அவன் இவள்மேல் பெரு மையல்கொண்டான். இவளும் அவன்பால் காதல்மீக் கூர்ந்து கரைந்து நின்றாள். இங்ஙனம் ஒத்த நிலையில் உருகிநின்ற இவளை அவன் உவந்து மணந்து உயர்ந்த போகங்களை நுகர்ந்துவந்தான். வருங்கால் பொருள்செயல் கருதி அவன் அயலகல நேர்ந்தான். அக் குறிப்பினை யறிந்து இவள் குலைந்து வருந்தினள். விரைந்து வருவன்; நீ அழுங்கி அயரல்; என அழுந்தத் தழுவி ஆர்வ முரை யாடி இவளை ஆற்றித்தேற்றி அவன் அகன்று போனான். பிரிவி ஆழந்து இவள் மறுகி யிருந்தாள். நாள் பல கழிந்தும் அவன் வந் தருளாமையால் இவள் நைந்தலமந்தாள். சொல்லியபடியே அவன் ஒல்லையில் வருவனென்ன உள்ளிஇருந்தஇவள் பல்வகையாகப் பரிந்து பதைத்தாள். குறிகேட்டும், கோடிழைத்தும், வெறி கொண்டுழ ன்று பின் தன் நெஞ்சை வெறுத்து வைதாள்.

> "ஒருவிய காதலர் தாமொழிந்தாங்கு ஒழியார் வரினும்
> வருவர் என்று ஆற்றவும், ஐயுற்று நையவும்; வான்பிணியுள்
> இருவிய இந்நிலை இன்றியும் ஆழி இழைப்பதனால்
> வெருவிய ஆவி பழியெழ நீங்கலு மேவும் நெஞ்சே."

என இங்ஙனம் கூவிப் புலம்பிக் குலைந்திருந்தவள் மாலைப்பொழுதில் சாலப் பதைத்தாள். அவ் வமயம் தத்தம் பேடைகளோடு பறவை கள் சேக்கையில் சேர்தலை நோக்கி இவள் நெருமந்துளைந்தாள். இப் பாவி அந்தி இங்குவந்து மதனவேதனை செய்வதுபோல் என் காதலர் சென்றுள்ள இடத்தேயும் சேர்ந்தெழுந்ததாயின் என்னை நாடி விரைந்து வந்தருளுவாரே; அங்கெழுந்து அவரைக் காய்வ தில்லை கொல்! என்று வாய் புலம்பினாள்,

"அழுவக் கடற்கழி மீனிரைதேர் அன்னம், பேடைபுடை
தழுவக் கடிமரச் சேக்கைகள் நாடும்தண் மாலையம்போது
எழுவக் கதவுறழ் தோளூரத்தாரெய்து நாட்டும் உண்டாய்ப்
பழுவக் கனலிற் சுடவல்லதோ அவர் பாலினுமே"

என இன்னவாறு அழுது புலம்பிப் பிரிவாற்றுமல் இவள் அலமந்திருந்தாள். வெளிநாடு போயிருந்த அவன் வினைமுடித்துவந்தான். இவள் உடனே அவனை உயிர் தளிர்ப்பத்தழுவி உவந்துகொண்டாள். அதன்பின் அகலாதமர்ந்து ஒரு புதல்வனைப் பயந்தாள். அவனுக்குப் பதுமுகன் என்று பெயர். அவன் சிறந்த மதிமான்; பருவமடைந்தவுடன் சீவக மன்னனுக்குத் தோழனுயினுன்.

"செட்டி தனபாலன் மனையாள் சினவு வாட்கட்
பட்டநுதல் மின்னினகு பவித்திரைக்குத் தோன்றி
மட்டுமலர் மார்பின் மதயானை எயிறுழுதாங்கு
இட்டகுறி தார் திவளப் பதுமுகன் இவ்விருந்தோன்"(சிந்தாமணி)

இதில் இவள் குறிக்கப்பட்டிருத்தல் காண்க. காதலன் பிரிந்து நின்றபோது மாலையில் கடுந்துயராய் இவள் உயிர் குலைந்திருந்ததைப் பின்பு நினைந்து நாணினுள். "மருள் மாலையில் மாயா உயிர் மாயும்" என ஆயிழையார் அலமந்து நிற்பர் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

வேலைத் துரும்பாய் வெருண்டுழன்றேன் என்றுனையை
மாலைக்கண் எண்ணி மனம்.

மாலைப்பொழுது உயிர்வாதையாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்.

மணந்தவர்க்கு மாலைக் காலம் பெருந்துயர் தரும். பிரிந்த மகளிர் அதனை இகழ்ந்து மொழிவர். அது, நோய் வளர வரும் என நொந்து புலம்புவர். பகை என அதனைப் பழித்து நிற்பர். இடர் செய்கின்றதென ஏங்கி யுளைவர். துணையுள் வழித் தோன்று தென்பர். காம நோயை வளர்த்துக் கனற்று மென்பர். வேய்ங்குழல் அதற்கு வெந்தூது என்பர். அஃது ஆவியைப்போக்கும் பாவி என்பர். போன துணைவரை நினைந்து ஆருயிர் போகும் என்பர் என்பதாம்.

உஉ௩-வது பொழுதுகண்டிரங்கல் முற்றிற்று.

# 124ம் அதிகாரம் உறுப்புநலனழிதல்.

அஃதாவது அவயவங்களின் அழகு குலைதல். பிரிந்துவருந்திக் காமதாபத்தால் மெலிந்திருந்த தலைவியினுடைய கண் தோள் நுதல் முதலிய உறுப்புக்கள் பொலிவிழந்திருத்தலை உணர்த்துகின்றமையான் இஃது உறுப்பு நலனழிதல் என நின்றது. மாலையில் உளநிலை குலைந்து அழுதலமந்தமையான் நிகழ்வதாகலான் பொழுது கண்டிரங்கலின் பின் இது வைக்கப்பட்டது.

1231 காமர் சுதட்சிணையேன் கண்ணின் நலமிழந்தாள்
கோமகனை எண்ணிக் குமரேசா—தாமே
சிறுமை நமக்கொழியச் சேட்சென்றா ருள்ளி
நறுமலர் நாணின கண். (க)

இ—ள்.

குமரேசா! சுதட்சிணையின் அழகிய கண்கள் ஏன் பொலிவழிந்திருந்தன? எனின், சிறுமை நமக்கு ஒழியச் சேண் சென்றார் உள்ளி கண் நறுமலர் நாணின என்க.

இது, கண் நலனிழந்தமை கழறுகின்றது.

உறுப்பு நலனழிதல் என்னும் இவ் அதிகாரத்தில் கண்ணை முதலில் குறித்தது என்னை? எனின், "கண்ணிற் சிறந்த உறுப்பில்லை" என்றபடி எல்லா அவயவங்களினும் சிறந்ததாகலான் அது முன் எண்ண நின்றது.

சிறுமை என்றது விரக நோயை. உடலை மெலிவித்துப் பசலை படர்வித்துப் பெருமை குலைத்து உயிரைச் சிறுமைப் படுத்துமாதலால் பிரிவுத்துயர் சிறுமை என நின்றது. நமக்கு ஒழிய=நமக்குக் கொடுத்துவிட்டு. இது தோழி கூறுகின்றாளாதலால் தன்னையும் உளப்படுத்தி நமக்கு எனப் பன்மையில் குறித்தாள்.

சேண்=நெடுந்தூரம். "சேண் இகந்து கல்லூர்ந்த மாணிழை வையை" (பரிபாடல்). "பசியில்லாகுக; பிணி சேண் நீங்குக." (ஐங்குறுநூறு) "உயாமும் நீளமும் அகலமும், சேணே" (பிங்க

லக்தை) "காதலன் சேணில் நீங்கக் கவுசிகி தரிக்கலாற்ருள்" (இராமாயணம்) இவற்றுள் சேண் உணர்த்திநிற்றலறிக.

மலர் என்றது குவளைப் பூவை. அது கண்ணுக்கு உவமையாக உரைக்கப்படுதலால் ஈண்டு எண்ணநின்றது. "மாதர் வாண்முகத்து மணித்தோட்டுக் குவளைப் போது புறங்கொடுத்துப் போகிய செங்கடை" (சிலப்பதிகாரம்) என்றபடி முன்பு தமது எழிலுக்கு இணையாகாமல் தலைகவிழ்ந்திருந்த குவளைமலர் முன் தாம் இது பொழுது பொலிவழிந்திருந்தமையால் "கண் நாணின" என்ருள்.

நமக்குத் துயரத்தைக் கொடுத்துவிட்டு அயலகன்றுபோனவரை நினைந்து அழுது தேம்பியதால் நம் கண்கள் அழகிழந்தன என்பதாம்.

பிரிவிடை மெலிந்து புலம்பியழுது பொலிவிழந்திருந்த தலைவியை நோக்கித் தோழி யுரைத்தபடி யிது.

கொழுநனை இடையருது நினைந்தழுதமையால் கண்கள் பசந்து அழகு சிதைந்திருந்தன ஆதலால் "சேண் சென்ருர் உள்ளி கண் நறுமலர் நாணின" என்ருள். உள்ளுதலால் அழநேர்ந்தது; அவ் அழுகையால் கண்களின் அழகு குன்றியது; குன்றவே முன்பு தம் எழிலுக்கு ஈடாகமாட்டாமல் இழிந்துநின்ற நீல மலர்க்குமுன் இதுபொழுது அவை நாண நேர்ந்தன என்க.

"பூக்கஞு லூரனை உள்ளிப்
பூப்போல் உண்கண் பொன்போர்த்தனவே" (ஐங்குறுநூறு 16)

"மாசறக் கழீஇய யானை போலப்
பெரும்பெயல் உழந்த விரும்பிணர்த் துறுகல்
பைத லொருதலை சேக்கு நாடன்
நோய் தந்தனனே தோழி!
பசலை யார்ந்தன குவளையங் கண்ணே" (குறுந்தொகை 13)

பிரிந்துள்ள மகளிர் துணைவனை நினைந்து இணைவிழி பசந்து துயர் மிகுந்து உயிருளைந்திருப்பரென்பதை இவை யுணர்த்தி நிற்றல் காண்க. உள்ளம் உள்ளாதிருப்பின் கண்கள் வெள்ளநீர் பெருக்கி எள்ளலுரு ஆதலால் உள்ளி என அதனை முன் கொள்ளவைத்தார்.

சேட் சென்ருர் என்றது எளிதில் கிட்டாதபடி நெடுந்தூரத்தில் எட்டப்போயிருக்கும் அவரது இருப்பு நிலையைச் சுட்டி என்க. இங்ஙனம் தூர நீங்கியுள்ளவரை உள்ளுவதனால் ஒரு பயனுமில்லையாதலால் அவர் வரும்வரையும் ஆறியிரு என்பது குறிப்பு.

துணை பிரிந்துள்ள காதலி கண்கள் கவினிழந்திருக்கும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுதட்சிணைபால் உணரப்படும்.

## கதை.

சுதட்சிணை என்பவள் சுபாகு என்னும் சிற்றரசனுடைய அருமைத் திருமகள். உத்தம குணங்கள் யாவும் ஒருங்கமையப் பெற்றவள். உயர்ந்த ரூபவதி. இளமை தவழ்ந்து எழில்நலங் கனிந்து விழுமிய நிலையில் இக் குலமகள் தனியே விளங்கியிருக்குங்கால் திலீபன் என்னும் தலை மகன் இளவரசனாய் நிலவியிருந்தான். அவன் சூரியகுலத் தோன்றலாகிய அஞ்சுமானுடைய அருமைத் திருமகன். திருந்திய பண்பும் பெருந்தகவும் பேரறிவு முடையவன். அரும்பெற லழகினன். அவ் அரசிளங் குமரன் ஒருநாள் உலாவருங்கால் கன்னிமாடத்தருகே கலாப மயில்போல் நிலாவி நின்ற இவளைக் கண்டான்; காதல் மிகுந்து கரைந்து நின்றான். இவளும் அவனை அள்ளி நோக்கி உள்ள முருகினாள். அவனுடைய தோள் மார்பு விழி முதலிய அவயவ நலங்களை மீளமீள ஆழப் பார்த்து ஆசைமீக்கொண்டு அலமந்து நின்றாள்.

> "தாமரை யனைய கண்ணும், தடக்கையும், பவழவாயும்,
> பூமரு பூவைக் கண்ணிப் புதுமலர் ஒளியும் காட்டித்
> தூமரு நீல மென்னு மணிதுணர்ந்தனைய குஞ்சிக்
> காமருகாளை கன்னி கண்களைச் சிறைக் கொண்டிட்டான்"

என்றபடி இவளது நிறையும் நாணும் நிலைகுலையச் செய்த அவ் இறைமகன் மறுகி வந்து மருவி மகிழ்ந்து பின்பு உலகறிய மணந்து அரிய போகங்களை நுகர்ந்து அரசு புரிந்துவந்தான். வருங்கால் ஒருமுறை அருவினை கருதி அவன் மறுபுலம் போனான். இவள் கலை பிரிந்த பிணைபோல் கலங்கியிருந்தாள். தன் காதலன் வரவை

நாளும் நாளும் கருதி ஏங்கி உறுதி குன்றி உடல் பசந்து தோள் மெலிந்து பொலிவிழந்திருந்த இவளது நிலையினைக் கண்டு பலர் நெஞ்சம் இரங்கினர். ஒருநாள் சுதஞ்சனை என்னும் தோழி நெருங்கி "நமது அரசபெருமானார் விரைவில் வந்தருளுவார்; நாம் வருந்தி அயரும்படி அவர் வன்றுயர் செய்யார்; சென்ற இடத்தில் நின்ற வினையை நன்று முடித்து இன்றே வருவர்; அல்லது நாளை வந்து விடுவர்;" என இன்னவாறு இன்னுரையாடி அவள் ஏத்தித் தேற்றினாள். அவள் ஆற்றிவந்த ஆர்வ நிலையை இவள் போற்றி நின்றாள். உருக்குலைந்து உவந்துபடுகின்ற என்னுயிர் உன் உரை யமிர்தால் கிளர்ந்து உய்ந்துள்ளதென உவந்து மொழிந்தாள்.

"தோளே, தொடிகொட்பு ஆனு; கண்ணே,
வாளீர் வடியின் வடிவிழந் தனவே;
நுதலும் பசலை பாயின்று; திதலைச்
சில்பொறி யணிந்த பல்கா ழல்குல்
மணியேரைம்பால் மாயோட்கு; என்று,
வெவ்வாய்ப் பெண்டிர் கௌவை தூற்ற;
நாமுறுதுயரம் செய்யலர் என்னும்
காமுறு தோழி! காதலங் கிளவி
இரும்புசெய் கொல்லன் வெவ்வுலைத் தெளித்த
தோய்மடற் சின்னீர் போல
நோய்மலி நெஞ்சிற்கு ஏமமாம் சிறிதே"

என்றவண்ணம் தன்னை ஆற்றிவந்த தோழி உதவியை இங்ஙனம் இவள் போற்றிவந்தாள். பின்பு அம்மன்னன் வந்தபோது பெரு மகிழ்வுடன் மருவி யமர்ந்து ஒரு புதல்வனைப் பயந்தாள். அவனுக்குப் பகீரதன் என்று பெயர். அத் தங்க மகனே இவ் அங்கணுலகில் கங்கைகொணர்ந்தவன். அக் குலமகன் பேரும் இத் தலைவன் சீரும் அக்காலத்திலேயே எங்கும் ஏற்றமுற்றிருந்தன.

"அஞ்சுமான் புதல்வன் நோக்கினும் குழையும் அனிச்சமென் போதில், வில் லெறிந்த, பஞ்சினில் மிதிப்பின் முண்ணையிற் சிவக்கும் பாடகச் சீறடி மகளிர், நெஞ்சுகூட் டுண்ணுந் திலீபன்; மற்றவன்சேய் கங்கை நீணிலத் தினிற் கொணர்ந்த, எஞ்சலில் கீர்த்திப் பகீரதன் என்ன உலகெலாம் ஏத்திடும் குரிசில்" (கூர்மபுராணம்)

அமரர்முதல் அகிலமும் புகழ இங்ஙனம் நிலவி நின்ற இவ் இனிய மகனையும் அவ் அரிய கொழுநனையும் இவள் எய்தி மகிழ்ந்து இன்பமிக் கூர்ந்தாள். துணைவன் தூரம்போயிருந்தபோது நினைந் தழுது நீராயுருகி இவள் கண்கள் நிலைகுலைந்திருந்ததை அவன் அறிந்து வருந்தி ஆர்வ மிகுந்தான். சேட் சென்றுரை உள்ளிக் கண்கள் நறுமலர் நாணின என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

கண்ணனைய காதலனுர் கையகல நெய்தலுமென்
கண்ணேதிராய் நின்றதே காண்.

கண்கள் நலனழிந்தமை இதனால் கூறப்பட்டது.

---

1232. தேசு மிகுமாயா தேவி பசந்துகண்
கூசி நொந்தாள் என்னே குமரேசா—பேசி
நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்
பசந்து பனிவாரும் கண். (உ)

இ—ள்.

**குமரேசா!** தன் நாயகன் அகன்று நின்றபோது மாயா தேவி ஏன் கண்கலுழ்ந்துபசந்திருந்தாள்? எனின், பசந்து பனி வாரும் கண் நயந்தவர் நல்காமை சொல்லுவபோலும் என்க.

நயந்தவர் = நாம் விரும்பியுள்ளவர். என்றது காதலரை. நம்மை முன்புவிழைந்திருந்தவர்எனவுமாம்.நல்குதல் = இரங்கிவந்தருளுதல்.

பசந்து = பசப்படைந்து. பனி = நீர். வாரும் = சொரியும். பசத்தலும், பனிவார்தலும் பிரிவினல் நேர்ந்த துயர்நிலைகள் என்க. "ஆலமுண்டு அமுதம்பொழிதரு நெடுங்கண்" என்றபடி இடைகறுத்துப் புடை வெளுத்து எழில் கனிந்து பொலிவமைந்திருந்த கண்கள் துணை பிரிந்தபொழுது அழுதலமர்ந்து நிலைகுலைந்து நின்றன ஆதலால் "கண் பசந்து பனிவாரும்" என்றாள். "நயந்தோர் உண்கண் பசந்து பனிமல்க" (ஐங்குறுநூறு 37) என்பதும் காண்க.

பிரிவில் மறுகியுள்ள தலைவி நிலையைப் பசப்பினாலும், கண்ணீராலும் பிறர் கண்டு கொள்வாராதலால் "கண் சொல்லுவ" என்றாள்.

மேல் பிரிவாற்றாமையால் கண்கள் கவினிழந்தன என்றாள்; இதில், கலுழ்ந்து கரைந்தன என்கின்றாள்.

நிறங்குலைந்து நீர் பொழிகின்ற கண்கள் நாம் விரும்பிகின்ற காதலர் நமக்கு அருள் செய்யாமையை உரைப்பனபோலும் என்பதாம்.

கணவனை நினைந்து கலுழ்ந்திருந்த தலைவியைத் தோழி தேற்றியபடி யிது. நீ இவ்வாறு கண் கலங்கி யிருந்தால் இந் நிலையினை அயலவர் கண்டு நம் தலைவர் வந்தருளாமையை அனுமானித்து அறிந்து கொள்வர்; கொள்ளின் குறித்தபடி வரவில்லை; பொய்யர் என அவரை வைவர்; போனவர் வரும் வரையும் ஆறியிருந்தால் என்ன? அதற்குள் என்ன அவசரம்? என உன்னையும் இகழ்வர்; ஆதலால் இருபாலும் இகழ்வு நேராவகை அமைதியாயிரு என்று ஆற்றுகின்றாள் என்க. இங்ஙனம் ஆற்றியும் தன்னை மீறி இவள் கண்கள் ஊற்றெடுத்து ஒழுகிகின்றன ஆதலால் "வாரும்" என அந் நீரின் பெருக்கை ஓர வுரைத்தாள்.

"யாம் எம் காமம் தாங்கவும், தாம் தம்
கெழுதகைமையின் அழுதன தோழி
கன்றுற் றப்படுத்த புன்றலைச் சிறு அர்
மன்றவேங்கை மலர்பதம் நோக்கி
ஏறுதிட்ட ஏமப் பூசல்
விண்டோய் விடாகத் தியம்பும்
குன்றநாடற் கண்ட எம் கண்ணே." (குறுந்தொகை 241)

தான் அடங்கியிருந்தாலும் தன் கண்கள் அடங்காமல் உழுவலன்போடு கொழுநனை நினைந்து அழுதன என ஒருத்தி இதில் உளைந்திருத்தலறிக. கெழுதகைமை = உரிமை.

நாயகன் அகன்றுநின்ற பொழுது நாயகி ஓயா தழுது உளைந்திருப்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மாயா தேவிபால் உணரப்படும்.

## கதை.

மாயாதேவி என்பவள் கோலிய தேசாதிபதியாகிய அஞ்ச னன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகள். மகா புனித வதி. அருள் அடக்கம் பொறை நிறை முதலிய குண நலங்க ளுக்கெல்லாம் ஓர் தனி நிலையமாய் இவள் இனிதமர்ந்திருந்தாள். "கண்ணெதிர் கண்டோர் யாரும் கைகுவித்திறைஞ்சி வாழ்த்தப் பெண்ணமிர்தென்ன வந்த பெருமித நிலையள்" என உருவிலும் அறிவிலும் சிறந்துநின்ற இத் திருமகளைச் சுத்தோதனன் என்னும் அரசன் விழைந்துவந்து மணந்துகொண்டான். அவன் உத்தர கோசலம் என்னும் தேசத்துக்கு அதிபதி. அழகில் சிறந்தவன். அருந்திறலுடையவன். பெருங் கருணையாளன். அக் கோமகன் இக் குலமகளை உவந்துகொண்டு கபிலவாஸ்து என்னும் நகரிலிருந்து அரிய போகங்களை அனுபவித்து அரசுபுரிந்துவந்தான். காதல் நலங் கனிந்து ஆதரமிகுந்து ஈருயிரும் ஓருயிரா யிணைந்து நுகர்ந்து இவ் இருவரும் இன்புற்றிருந்தார். இவரது இன்ப நுகர்ச்சி இமை யவருலகினது என எவரும் புகழ்ந்தார். இங்ஙனம் இணைபிரியா மல் இவளோடமர்ந்து நலமிக மாந்தி நயந்துவருங்கால் அம்மன் னன் தம்பியாகிய கனிதோதனன் மீது பகைவர் சிலர் படையெடு த்து வந்தார். அதனை யறிந்து அழன்றெழுந்து உறுதிபல கூறி இவளைத் தழுவி நிறுத்தித் தன் துணைக்குத் துணை செய்ய அவன் தேரேறிப் போனான். இவள் ஆருயிர் பதைத்து அயர்ந்துழந்தாள். கொழுநனையே நினைந்து விழி துயிலாமல் அழுதலமந்து உளமிக மறுகி உளைந்து கிடந்தாள். பாங்கியர் தேற்றியும் பரிந்து மயங்கி னாள். இவளுடைய பொறிபுலன்கள் யாவும் அவனுடைய வரவையே நாடி மறுகியுள்ளபடியைத் தோழியரிடம் உருகி மொழிந்தாள்.

"முழவுத லரைய தடவுநிலைப் பண்ணைக்
கொழுமட விழைத்த சிறுபொற் குடம்பைக்
கருங்கால் அன்றில் காமர் கடுஞ்சூல்
வய்வுப்பெடை அகவும் பானாட் கங்குல்
மன்றம் போழும் இனமணி நெடுந்தேர்
வாரா தாயினும், வருவது போலச்
செவிமுதல் இசைக்கும் அரவமொடு
துயில் மறந்தனவால் தோழி என் கண்ணே"

என்றபடி இன்னவாறாக எண்ணி யேங்கி இவள் இணைந்திருந்தாள். சின்னாட் கழித்து அவன் நண்ணியபொழுது இவள் உள்ளங் குளிர்ந்து உவந்து தழுவி உயிர்தளிர்த்து நின்றாள். இவளுடைய திருவயிற்றிலிருந்து தான் அருள் வள்ளலாகிய புத்த பகவான் சித்தார்த்தனன் என்னும் பெயரோடு தோன்றினார். உலக முழுவதும் உவந்து போற்றும் தலைமையமைந்த அக் குலமகனைப் பெற்று, அப் பேற்றின் அதிசயத்தால் ஏழாம் நாள் இவள் இன்னுயிர் தீர்ந்தாள்.

"உலும்பினி வனத்துள் ஒல்குழைத் தேவி
வலம்படு மருங்குல் வடுநோ யுறாமல்
ஆன்றோன் அவ்வழித் தோன்றினன் ஆதலின்
ஈன்றோள் ஏழுநாள் இன்னுயிர் வைத்தாள்" (விம்பசாரகதை)

"புத்தன்தாய் நண்டிப்பி வாழை புனமூங்கில்
கத்தும் விரியன் மடுஞ்சிலந்தி—இத்தனையும்
வேலாலும் வாளாலும் அன்றியே தாங்கொண்ட
சூலாலே தம்முயிர்க்குச் சோர்வு." (உலோகவசனம்)

இவள மகப்பேறெய்தி உடனே மாய்ந்து போனதை இவையும் உணர்த்தி நிற்றல் காண்க. தழுவியிருந்த பொழுது இவள் செய்துவந்த செழுதகையையும், பிரிந்த காலையில் கண்பசந்து கலுழ்ந்திருந்ததையும் அம்மன்னன் நினைந்து நினைந்து நெஞ்சங் கரைந்தான். பிரிந்த மகளிர் கண்கள் பசந்து பனி வாரும் என்பதை உலகம் இவள்கண் உணர்ந்து நின்றது.

காதலனார் நீங்கக் கலைமதியும் என்முகமுன்
ஏதமற நின்ற தெதிர்ந்து.

தலைவி அழுது முகம் வாடினமை இதனால் கூறப்பட்டது.

1233. சாம்ப லதியேன் தணந்தநாள் தோள்மெலிந்து
கூம்பி யிருந்தாள் குமரேசா—தேம்பித்
தணந்தமை சால அறிவிப்ப போலும்
மணந்தநாள் வீங்கிய தோள். (௩)

இ—ள்.

குமரேசா! காதலன் நீங்கின்ற காலைச் சாம்பவதி ஏன்

தோள் மெலிந்து தேம்பி யிருந்தாள்? எனின், மணந்தநாள் வீங்கிய தோள் தணந்தமை சால அறிவிப்ப போலும் என்க.

தணந்தமை = நீங்கியுள்ளமை. தணத்தல் = நீங்கல், பிரிதல். மணந்த நாள் = கூடியிருந்த நாள். "மணந்தனை அருளாயாயினும் பைபயத் தணந்தனையாகி யுய்ம்மோ" (ஐங்குறு நூறு 83). மணத்தலும், தணத்தலும் இதில் உணர்த்திநிற்றல் காண்க.

மணந்த நாள் வீங்கிய தோள் என்றதனால் தணந்த நாள் அது மெலிந்திருந்தமை பெறப்பட்டது. பிரிவு நிலையைக் கண்ணும் தோளும் கலுழ்ந்து மெலிந்து முன்னுற அறிவிக்கும் ஆதலால் தோள் இங்கு எண்ண நின்றது.

> "**மணக்குங்கால்** மலரன்ன தகையவாய்ச் சிறிது நீ
> **தணக்குங்கால்** கலுழ்பானுக் கண்ணெனவு முளவன்றோ
> சிறப்புச் செய்துழையராப் புகழ்பேற்றி, மற்றவர்
> புறக்கொடையே பழிதூற்றும் புல்லியார் தொடர்புபோல்; (க)
>
> "எங்குநீர் அளிக்குங்கால் இறைசிறந்து ஒருநாள் நீர்
> நீங்குங்கால் நெகிழ்போடும் வளை எனவும் உளவன்றோ
> செல்வத்துட் சேர்ந்தவர் வளனுண்டு, மற்றவர்
> ஒல்கிடத் துலப்பிலா உணர்விலார் தொடர்புபோல்; (உ)
>
> ஒருநாள்நீர் அளிக்குங்கால் ஒளிசிறந்து ஒருநாள் நீர்
> பாராட்டாக்கால் பசக்கும் நுதல் எனவும் உளவன்றோ
> பொருந்திய கேண்மையில் மறையுணர்ந்து, அம்மறை
> பிரிந்தக்கால் பிறர்க்குரைக்கும் பீடிலார்தொடர்புபோல்" பாலைக்கலி25

துணைபிரிந்தபொழுது நிலை திரிந்து மெலிந்துபடும் உறுப்புக்களைக் குறித்து இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

மேல், கண்பசந்ததென்றாள்; இதில், தோள்மெலிந்ததென்கின்றாள்.

காதலர் கூடியிருந்த காலத்தில் பூரித் துயர்ந்த தோள்கள் அவர் பிரிந்தமையை விளங்க உணர்த்துவனபோல இதுபொழுது மெலிந்து நின்றன என்பதாம்.

கேள்வன் பிரிந்து நாள் பல கழிந்தமையை நினைந்து தோள் மெலிந்து துயருழந்திருந்த தலைவியைத் தோழி நெருங்கிச் சொல்லியபடி யிது. தோள்களின் மெலிவைப் பிறர் கண்டு இவள் துணை

பிரிந்துள்ளாள் என அறிந்து கொள்வாராதலால் "தணந்தமை தோள் அறிவிப்ப" என்றாள் இங்ஙனம் அவர் அறியின் இருவரையும் பழி தூற்றுவாராதலால் அத் தூறல் நேராவாறு நீ ஆறியிரு என்பது குறிப்பு.

காதலனோடு கலந்திருக்கும்பொழுது உள்ளங் களித்து உடல் பூரித்திருந்தாளாதலால், ஒளி தவழ்ந்து எழில் சுரந்து விழுமிய நிலையில் தோள்கள் விளங்கியிருந்தன; அவன் அயலகன்றபோது கவலை மிகுந்து கலுழ்ந்திருந்தாளாதலால் அவை மெலிந்தன என்க.

"இதுமற் றெவனோ தோழி! முதுநீர்ப்
புணரி திளைக்கும் புள்ளிமிழ் கானல்
இணர்வீழ் புன்னை எக்கர் நீழல்
புணர்குறி வாய்த்த ஞான்றைக் கொண்கற்
கண்டன மன் எம் கண்ணே; அவன் சொற்
கேட்டன மன் எம் செவியே; மற்றவன்
மணப்பின் மாணலம் எய்தித்
தணப்பின் ஞெகிழ்ப தடமென் தோளே" (குறுந்தொகை 299)

இது, தன் நிலைமையைத் தலைவி தோழிக்கு உரைத்தது. மணந்த நாள் சிறந்திருந்த தோள் தணந்த நாள் மெலிந்ததெனப் பிரிவின் பீழையை அவள் உணர்த்தியிருத்தல் காண்க. கொண்கனைக் கண்ட கண்ணினும், கேட்ட செவியினும் அவனைத் தோய்ந்த தோளே மிகத் தேய்ந்து வாடின என இதில் சுட்டியிருக்கும் அழகைப் பார்க்க. கானல் = கடற்கரைச் சோலை. எக்கர் = சொரி மணல். ஞெகிழ்தல் = மெலிதல். சால அறிவிப்பபோலும் என்றதனால் தோள் மிகவும் மெலிந்திருந்தமை அறிய நின்றது. வேர் பரிந்ததாள்போல் கேள் பிரிந்ததோள் விரைந்துவாடும் என்றவாறு.

"யானெவன் செய்கோ பாண, ஆனாது
மெல்லம் புலம்பன் பிரிந்தெனப்
புல்லென் றனை என் புரிவளைத் தோளே" (ஐங்குறுநூறு 133)

பிரிந்தவுடனே தோள்பொலிவழிந்ததென இதில்புகன்றிருதல்அறிக.

"வன்மருங்குல் வாளரக்கியர் நெருக்கவங் கிருந்தார்
கன்மருங்கெழுந்து என்றும் ஓர் துளிவரக் காணு
நன்மருந்துபோல் நலனற உணங்கிய நங்கை
மென்மருங்குல்போல் வேறுள அங்கமு மெலிந்தாள்." (இராமாயணம்)

இது, பிரிவாற்றாமையால் வருந்தியிருந்த சீதையின் நிலையைக் குறித்தது. அந்த அம்மையின் அவயவங்கள் யாவும் அறவேமெலிந்திருந்தன என இஃதுணர்த்தி நிற்கும் அழகைப் பார்க்க. உறுப்பு நலனழிதல் என்பதன் பொருளை யிங்கு உணர்ந்து கொள்க.

துணைபிரிந்த காதலி தோள் மெலிந்து தேம்புவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மைசாம்பவதிபால் உணரப்படும்.

## கதை.

சாம்பவதி என்பவள் சாம்பவந்தருடைய அருமைப் புதல்வி. பெரு வனப்புடையவள். பருவமடைந்து குமரிருக்கும் இந்திராணி போல் தமர்புடை சூழ இவள் தனியமர்ந்திருந்தாள். இவளது உருவ நிலையை வினவி யறிந்து அரசிளங் குமாரர்களனைவரும் ஆர்வ மெய்தி நின்றார். இங்ஙனம் நிற்குங்கால் சமந்தகம் என்னும் திவ்விய மணியை அணிந்துகொண்டு வேட்டைக்குச்சென்ற பிரசேனன் என்னும் அரசனைச் சிங்கம் ஒன்று கொன்று வீழ்த்தியது. அவ் அமயம் இயல்பாக அங்குவந்த இவள் தந்தை அம் மடங்கலை மடக்கி மாய்த்து அயலே ஒளிவீசிக்கிடந்த அவ் இரத்தினத்தை எடுத்துச் சென்றான். அவ் அரதனத்தைத் தேடிவந்த கண்ணான் அவ் அடிச் சுவட்டைப் பின்பற்றி நடந்து முடிவில் சாம்புவந்தரது நகரை யடைந்தான். அவ் எண்கின் வேந்தன் முதலில் இகல் கொண்டெழுந்தான்; பின்பு இனம் தெரிந்து மனமகிழ்ந்து அவ் வாசுதேவனைத் தனது இனிய மணி மாளிகைக்குள் தனி யழைத்துச் சென்று பணிவுடனுபசரித்தான். அவன் அமர்ந்திருக்குங்கால் இக் குலமகளைக் கண்டு அத் தலைமகன் காமந் தலைக்கொண்டு நிலை மயங்கி நின்றான். இவளும் அவனை நோக்கிய கண் இமையாமல் நோக்கி நோக்கி அயல் மறைந்து நின்று ஆர்வ மீதூர்ந்தாள்.

"நீலமா மணிக்குன்றேய்ப்ப நிழலெழுந் திலங்கு மேனிக்
கோலவா யரசகாளை குங்குமக் குவவுத் தோளான்
மேலவா நெடுங்கணோட்டம் மீட்டவை விலக்கமாட்டாள்
மாலைவாய்க் குழலி சால மம்மர்கொள் மனத்த ளானாள்."

என்றவண்ணம் அம்மால் மேல் மால்மீக் கொண்டு இவள் மறுகி நின்றாள். இவளது கருத்தையும் அவனது காதலையும் தாதையறிந்து ஆதரிகுந்து அவ் ஒண்மணியோடு இப் பெண்மணியையும் அவனிடம் உவந்து கொடுத்தான். அவன் விதிமுறை மணந்து உள மகிழ்ந்து கொண்டு தன் வளநகரடைந்தான்.

"வெண்மணி சுழிக்கும் தெண்ணீர் வியன்பணை விதர்ப்ப வேந்தன்
கண்மணி யனைய நங்கை காதலங் கொழுநற்கு ஆங்குப்
பெண்மணியோடு மூன்னீர்ப் பிறந்த செங்கதிரினன்ன
ஒண்மணி எண்கின் வேந்தன் உவப்பொடும் உதவி நின்றான்;

எண்கின் வேந்தளித்த சாம்பவதி எனும் இலவச் செவ்வாய்ப்
பணைகணி மழலைத் தீச்சொற் படாமுலைப் பவள வல்லி
கண்கவர் மணியினோடு காண்டக விளக்கங்கொண்டு
மண்கவர் கமலத் தாளான் மாகடல் என்ன மீண்டான்" (பாகவதம்)

இவளது உருவநலனும், உள்ளக் காதலும், அவ் வள்ளல் மணந்து இவளை மணியோடு கொணர்ந்ததும், இதன் கண்ணும் உரைக்கப்பட்டுள்ளன காணக. இங்ஙனம் மீண்ட அவன் பெருங் காதலோடு மருங்ககலாமல் இவளை மருவி மகிழ்ந்து நலம் பாராட்டி நயந்திருந்தான். இருந்தும் அவன் எங்கேனும் அயலகல நேருமோ? என்று இவள் அஞ்சி அயர்ந்தாள். அங்ஙனம் அஞ்சியபோதெல்லாம் அஞ்சலெனஆரத் தழுவி அன்புரையாடி அவன் ஆற்றியருளினான்.

"குவளை நாறும் குவையிருங் கூந்தல்,
ஆம்பல் நாறும் தேம்பொதி துவர்வாய்க்
குண்டுநீர்த் தாமரைக் கொங்கின் அன்ன
நுண்பல் தித்தி மாஅயோயே!
நீயே, அஞ்சல் என்றஎன் சொல் அஞ்சலையே;
யானே, குறுங்கால் அன்னம் குவவு மணற்சேக்கும்
கடல்சூழ் மண்டிலம் பெறினும்
விடல்சூழலன் யான் நின்னுடை நட்பே"

என இன்னவாறு பல இன்னுரை பகர்ந்து இணை பிரியா திருந்தான். இருந்த அவன் பிருந்தா வனத்தில் நிகழ்ந்த வேள்வி விழாவிற்கு வேந்தர் வேண்ட விரைந்து போனான். அப் போக்கில் இவள் ஏக்க மிகுந்து இனைந்திருந்தாள். உடல் அசந்து நுதல் பசந்து,

தோள் மெலிந்து, நாளும் அவனை நினைந்து நைந்து கிடந்தாள். இவள் நிலையைக் கண்டு பாங்கியர் பரிந்திரங்கினர். "நுதல் பசந்தன்றே! தோள் சாயினவே! நிதலையல்குல் வரியும் வாடின! என்னாகுவள் கொல் இவள்?" என இன்னவாறு உழுவலன்போடு அழுது புலம்பித் தோழியர் தொழுது தேற்றியும் இவள் தேறாது அழுந்து தோள் முதலியன மெலிந்து துயருற்றிருந்தாள். "மணந்தநாள் வீங்கிய தோள், தணந்த நாள் சால அறிவிப்பபோலும்" என்பதை உலகம் அறிய இவள் உணர்த்தி நின்றாள்.

நீர்பிரிந்த மென்றாள்போல் நீர்பிரியத் தோள்மெலிந்து
ஏர்பிரிந்து நொந்தாள் இவள்.

துணை பிரியின் தோள்மெலியும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1234. பண்டு சயமதிதன் பைந்தொடிசோர்ந் தேனுநொந்தாள்
கொண்டவனை எண்ணிக் குமரேசா—கண்ட
பணைநீங்கிப் பைந்தொடி சோரும் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள். (4)

இ—ள்.

**குமரேசா!** நாயகன் பிரிந்தபோது சயமதி ஏன் தொடி சோர்ந்து தோள்வாடி இருந்தாள்? எனின், துணை நீங்கித் தொல் கவின் வாடிய தோள் பணை நீங்கிப் பைந்தொடி சோரும் என்க.

பணை = பெருமை. தொடி = வளையல். கவின் = அழகு.

துணை நீங்கியதால் பணை நீங்கியது; தோள் வாடியதால், தொடி சோர்ந்ததென்க. வளையல் பசும்பொன்னால் செய்திருந்தமையால் பைந்தொடி என்றாள். பசுமை அடை கொடுத்தது மாற்றுயர்ந்த தங்கம் என அதன் ஏற்றந்தோன்ற.

தொல்கவின் என்றது பழைய அழகு என்றவாறு. அஃதாவது துணைவன் நீங்குதற்கு முன்னிருந்த இயற்கை எழில் என்க.

"மங்குல் விசும்பின் வளர்பிறைபோலவும்,
பொங்குநீர்ப் பொய்கையில் பூவே போலவும்,
நாளினும் நாளினும் நந்தி வனப் பெய்தித்

தோளும் தாளும் உடம்பும் தலையும்
உகிருமயிரும் ஒருங்கு குறைவின்றி
ஓதிய வனப்போடுயர்நெறி மூற்றி'' என்றபடி இயலெழிலோடு

இனிது திகழ்ந்திருந்த அவயவங்கள் யாவும் இதுபொழுது நிலை குலைந்து பொலிவிழந்திருந்தன ஆதலால் அப் பழைய நிலையை நினைந்து "தொல்கவின்" என இங்ஙனம் துளங்கி யுரைத்தாள்.

மேல், தோள்மெலிந்த தென்றாள்; இதில், வளைகழன்றதென்கின்றாள்.

துணைவர் பிரிந்தமையால் பழைய அழகிழந்ததோள்கள் இன்று பெருமை யிழந்து பசிய வளைகள் கழல நின்றன என்பதாம்.

இது, பிரிவில் மெலிந்திருந்த தலைவியைப்பார்த்துத் தோழி யுரைத்தது. கணவன் பிரிந்தபொழுது கவலை மிகுதியால் உடல் மிக மெலிந்தாள்; மெலியவே கையிலணிந்திருந்த வளையல்கள் கலலாயின; ஆகலான் தோள்வாடுதலையும், தொடிசோர்தலையும் சுட்டி யுரைத்தாள். நீ இவ்வாறு அல்லற்பட்டிழந்தால் அயலறிந்து தூற்றும் ஆதலால் ஆற்றியிரு என்பது குறிப்பு.

வேறு உறுப்புக்களைக் கூறாமல் தோளைக் குறித்தது முயக்கில் அதற்குள்ள முதன்மை நோக்கி.

"அரசுபகை தணிய முரசுபடச் சினைஇ
ஆர்குரல் எழிலி கார்தொடங் கின்றே;
அளியவோ அளியதாமே ஒளி பசந்து
மின்னிழை நெகிழச் சாஅய்த்
தோன்னலம் இழந்த என் தடமென் தோளே" (ஐங்குறுநூறு 455)

"ஐயவி யன்ன சிறுவீ ஞாழல்
செவ்வி மருதின் செம்மலொடு தாஅய்த்
துறையணிந் தன்றவர் ஊரே; இறையிறந்து
இலங்குவளை நெகிழச் சாஅய்ப்
புலம்பணிந் தன்றவர் மணந்த தோளே" (குறுந்தொகை 50)

"ஈயார் பொருளும், இறையாக் கிணறும், என்த் துணைவர்
தோயா முலைகள் நலமிழந்தேன்; மகிழ்கூடு மொரு
மாயாமயமலர் வெங்கை புரேசர் மணிவரைமேல்
வேயாம் பணைபுரை மென்றோட் கருங்கண் விளங்கிழையே"
(திருவெங்கைக்கோவை)

புல்லியிருந்த கணவன் புறம் நீங்கின் தொல்நவி னிழந்து தோள் முதலியன வாடி அல்லலிலழுந்தி மெல்லிய திருப்பா என்பதை இவை உணர்த்தி நிற்றல் காண்க.

துணைவன் பிரிவில் துணைவி தோள் மெலிந்திருப்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது இவ்வுண்மை சயமதியால் உணரப்படும்.

## கதை.

சயமதி என்பவள் தாதகி நாட்டிலே கணபுரம் என்னும் நகரி லிருந்த அசுவதமன் என்னும் குறுநில மன்னனுடைய அருமைத் திருமகள். கவின்குடி கொண் வியன்படி வடிவினள். உருவம் போலவே அறிவிலும் சிறந்து திருவிலும் உயர்ந்து பெருமித நிலை யில் இவள் மருவி யிருந்தாள். இவளது அற்புத நிலையை யறிந்து பவணமாதேவன் என்னும் அரசிளங்குமரன் மிகவிழைந்துநின்றான். அவன் அந் நாட்டு மன்னனாகிய தேவமித்திரன் என்னும் அரச னுடைய அருமைத் திருமகன். யாவரும் வியந்து புகழச் சிறந்த குணவானாய் விளங்கியிருந்தான். பேரருளுடையவன். அப் பெருந் தகையாளன் இவளை விரும்பிவந்து மணந்துகொண்டு சிறந்த போகங்களை நுகர்ந்து பூமிமாதிலகம் என்னும் நகரிலிருந்து அரசு புரிந்துவந்தான். அவனது இராசதானி நகரம் எல்லா இன்ப நலங் களுக்கும் இடமா யிருந்தமையால் அமராவதி என எவரும் புகழ உயர்வெய்தி நின்றது.

> " ஏம மாகிய துப்புரவு எய்திய
> பூமிமாதிலகம் எனும் பொன்கிளர்
> நாம நன்னகர் வீதிகள் தாமெலாம்
> காமவல்லி கிடந்தன போன்றவே " (சீவக சிந்தாமணி)

இவ்வாறு போக நலங்கள் கனிந்த அப் பொன்பதியி லமர்ந்து மன்னுயிர் இன்புற இன்னருள் சுரந்து மாநிலம் புரந்து அம்மன்னன் மகிழ்ந்து நின்றான். அவனை ஆருயிராக அணைந்து பேணி அரும் போக நிலையமா யிவள் அமர்ந்திருந்தாள். ஐம்புலன்களும் ஆரத் துய்த்து இங்ஙனம் அவன் அமர்ந்திருப்பினும் அவனுளத்தில் மறுமை நோக்கமே மருவியிருந்தது.

தருமமும் தவமும் உயிர்க்கு உறுதிதரும் என அவன் கருதி யிருந் தானாதலால் உய்திபெற எவரிடமும் அவற்றை உரைத்து வந்தான்.

"வீறழி வினைசெய் காலன் வைரவாள் வலையிற் பட்டால்
சாறழி குவளைமாலை யவரையும், தனமும், நீக்கி
யாறிழி வரையி ற்றேன்றும் அறம்நனி நினைப்பர் செய்பொன்
ஏறெழில் நெறியினேறி இருவிசும்பு ஆளு நீரார்.'' (சிந்தாமணி)

சுவர்க்கத்தில் மேன்மைபெறு மியல்பினர் எழிலேறுபோலத் துணிந்தெழுந்து மகளிரையும் பொருளையு மறந்து, அறம்புரி கொள் கையில் ஊன்றுசெய்து நிற்பர் என இதில் அவன் உணர்த்தியிருத் தல் காண்க. இதனால் அவனது உள்ளப்பான்மையும் உணர்ச்சித் திறனும் உணரலாகும். அறவிய மனத்தனாய்ப் பிறவுயிர் ஓம்பி நெறிவழுவாமல் அவன் ஒழுகிவருங்கால் இந்துமானர் என்னு முனிவர் ஒருவர் வந்தார்; தம் தவநிலைக்குச் சிலர் இடையூறு செய்கின்றமையின் அத் தடையை நீக்கித் தரவேண்டுமென்று அவனிடம் வேண்டினர். அவ் வேண்டுகோட் கிசைந்து அவன் விரைந்து சென்றான்; இவள் பிரிந்திருக்கமாட்டாமல் பெருந்துய ரடைந்தாள். அவனை நினைந்து நினைந்து நெஞ்சங் கரைந்து, உடல் மெலிந்து, படர் மலிந்து உளைந்து கிடந்தாள். மெலிவு கூர்ந்து, பொலிவு தீர்ந்து, கைவளை சோர்ந்து, கலுழ்ந்து கிடந்த இவளைப் பாங்கியர் நெருங்கிப் பரிந்து தேற்றினர். பின்னர் அம் மன்னன் வந்தான். இவள் உவந்து தழுவிப் பழமைபோல் விளங்கியிருந் தாள். துணைவன் நீங்கியபொழுது தொல்கவின் வாடித் தொடி சோரும் என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

பாம்பின்வாய்ப் பட்ட பனிமதிபோல் பாவைமெய்
கூம்பும் பிரிவிற் குலைந்து.

தோளின் மெலிவு இதனால் கூறப்பட்டது.

---

1235. காமர்தோள் வாடிக் கலுழ்ந்தாள் சிவமதியேன்
கோமகனை நாடிக் குமரேசா—தாமாக்
கொடியார் கொடுமை யுரைக்குந் தொடியொடு
தொல்கவின் வாடிய தோள். (ரு)

-ள்.

குமரேசா! தோள் மெலிந்து தொடி கழன்று சிவமதி ஏன் பொலிவிழந்திருந்தாள்? எனின், தொடியொடு தொல்கவின் வாடியதோள் கொடியார் கொடுமை உரைக்கும் என்க.

காதலரைக் கோடியார் என்றது குறித்த பருவத்தே வந்தருளவில்லை என்னும் கொதிப்பால் என்க. கொடுமை = வன்கண்மை.

தொடி = வளையல். முன்கையில் வரிசையாத்தொடுக்கப்படுவது ஆதலால் தொடி என வந்தது. அதற்கு வாட்டமாவது நிரையாய் நிலைத்து நில்லாமல் நெகிழ்ந்து வீழ்தல். தலைமை தோன்ற அதனை முதலில் குறித்தது தோள்மெலிவை முன்னுற உணர்த்தி விடும் அதன் நிலைமை நோக்கி. "தொடி நெகிழ்ந்தனவே; தோள் சாயினவே" (குறுந்தொகை 239) என்பதும் காண்க. செயற்கை அழகும், இயற்கை எழிலும் சோத் தொலைந்தன என்பது தொடி, தோள் என்றதனால் ஓர நின்றது. கவின் = கனிந்த எழில். மேனியில் கவிந்துள்ள அவயவங்கள் யாவும் நலமுறஅமைந்து பொலிவுற்றிருக்கும் எழில் நிலை கவின் என வந்தது. தொல்கவின் என்றது நாயகன் அயலே செல்லுதற்கு முன்னிருந்த நல்லழகை.

> "தொல்கவின் தொலையத் தோள்நலம் சாஅய்
> நல்கார் நீத்தன ராயினும், நல்குவர்
> நட்டனர் வாழி தோழி" (நற்றிணை 14)

கணவன் அயலகன்றால் கவின் தொலையு என இஃதுணர்த்தி நிற்றலறிக. இது, தலைவி தோழியை நோக்கி உரைத்தது.

வளையல்கள் கழன்று பழைய எழில் குலைந்து மெலிந்துள்ள தோள்கள் காதலரது கொடுமையை ஊரார் அறிய உரைக்கின்றன என்பதாம்.

தலைவி வாடி யிருந்த நிலையை நோக்கித் தோழி யுரைத்தபடி யிது. தோளின் மெலிவால் ஆள் அகன்றுள்ளதென அயலறிந்து கொள்ளுமாதலால் தோள் உரைக்கும் என்றாள்.

இம் மெலிவு கோவைத்துறையில் கவினழி புரைத்தல் எனவரும்.

> "கருவரை யெங்கள் திருவெங்கை வாணர்தங் கண்ணழித்த
> ஒருவரையன்ன எழிலுடையீர்! இங்கு உமதருளால்
> இருவரை பொன்னும், இருவேலை முத்தமும், ஈன்றனவால்;
> குருவரையன்னமென்றோளுடையாட்குக் குறை யென்னையே".
> வரைவேலை என்றது முலை கண்களை. (திருவெங்கைக்கோவை)

" காவியவாரிக் குலோத்துங்கசோழன் கல்யாணி வெற்பா!
தீவியவாண் மதி மாசுண்ட கோலமும், சீரணிச்ச
மேவியமாந்தளிர் வெவ்வெயிற்கே வெம்பு மேனியும், பொன்
ஓவியமேற் புகையுண்டது மாம் இவள் உன் பொருட்டே"
(குலோத்துங்கசோழன்கோவை)

" ஏரேற்ற கொங்கையிளங்கொடி மாந்தளிர் எய்ந்தவண்ணம்
காரேற்ற கங்குலிற் பீரலர் போன்றது; காவியுண்கண்,
வாரேற்ற பைங்கழல் வாணன்தென் மாறையில் வாவியின்கண்
நீரேற்ற செங்கழுநீர் மலர்போன்றது; நின்பொருட்டே"
(தஞ்சைவாணன்கோவை)

காரிலகுங் கண்டர் கோடீச்சுர மன்ன காரிகைமெய்
பீரிலகுற்றது; அகலா எழிலும் பெரிதகன்றது;
ஆரிலகுஞ் சுடர்வேலோய்! நிலத்திடை அங்கங்குழு
மேரிலராயிடிற் சீருளராவர் கொல்? ஏழையரே" (கோடீச்சுரக்கோவை).

உறுப்புநலனழிந்து தலைவி உளைந்திருக்கு நிலையைத் தோழி தலைவனிடம் உரைத்தபடியிவை. முலைகள் இரண்டும் பொன்போர்த் தாற்போல் பசலை பூத்தன; விழிகள் முத்துக்கள்போல் நீர் துளித்தன; தளிர்மேனி வாடிப் புகையுண்ட ஓவியம்போல் பொலிவழிந்தது; அவயவங்கள் யாவும் அழகிழந்தன; என அவள் உளைத் திருக்கும் அழகை இவற்றுள் ஊன்றிப்பார்க்க. ஏர் = அழகு.

தலைவன் பிரிந்து நின்றால் தலைவி மெலிந்திருப்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சிவமதிபால் உணரப்படும்.

## கதை.

சிவமதி என்பவள் சயதுங்கன் என்னும் குறுநில மன்னனுடைய அருமைத் திருமகள். அற்புத வடிவினள்; விற்பனமுடையவள். அழகமைதியிலும் குண நலங்களிலும் மிகவும் சிறந்து எவரும் வியந்து புகழ இவள் விளங்கியிருந்தாள். "குலனும் செல்வமும் நலனும் நாணும், பயிர்ப்பும் உட்கும் இயற்கை எரும், மடனும் அன்பும் மாசில் சூழ்ச்சியும், இடனுடை யறிவும்என்றிவை பிறவும்" இனிதுடையளாய் இசைபெற்றிருந்த இவளை எய்த விழைந்து அரசர் பலரும் ஆசைவயத்தராய் ஊசலாடி நின்றார். அவருள் மகதநாட்டு மன்னனாகிய தருமவாகன் என்பவன் மிகவும் தகுதியாளனா யுரிமையெய்தி நின்றான். அவன் அரச சபையிலிருக்

குங்கால் முனிவர் சிலர் வந்து இவளது எழில் நலங்களை வியந்து புகழ்ந்து அகன்று சென்றார். அவர்கள் உரையால் அவன் உள்ள முருகினான். காமதாபம் கனற்ற மாமயல் மிகுந்து மறுகியுழன்றான்.

"பாதகமென்னுக் கடிந்த காமத் தீ பங்கமுற்று உறை விடம்பெறாது
மாதவருரைத்த மொழிவழிவந்து மன்னவன் செவிவழி புகுந்தாங்
கூதைவந்தலைக்கும் வெளிவிளக்கதனினுளம் அலைவுற வலைத்தோங்கிக்
காதலங்கொழுந்து வளர்ந்திட வுருகிக் கனலினி விடுமெழுகானான்

சந்திர கலையால் நெக்குநீர் பொழிவ சந்திரகாந்தமே யல்லால்
அந்தரசாதிச் சிலையினுண்டாகாது; அவள் இவன் மனைவியென்றயனார்
முந்தவே விதித்த விதியினாலடங்கா மோகமும் தாகமு மிகுந்து
புந்திகெட்டறிவு நிறைபொறை தேற்றம் போக்கினான்; யாக்கையும்
தளர்ந்தான்."

என்றவாறே விரகதாபத்தாலுழந்து விழைந்தலமந்த அவன் பெரிது முயன்று முடிவில் வந்து இவளை மணந்துகொண்டு அரியபோகங் களை நுகர்ந்து அகமிக மகிழ்ந்தான். அவனது ஐம்புலன்களுக்கும் இன்பநிலையமா யிவள் இனிதமர்ந்திருந்தாள். அக் கோமகனுக்குக் கோப்பெருந்தேவியாய்க் குலாவி யிருந்து யாண்டும் இன்பங்கனிய அன்பாற்றிவந்த இவளது அருங்குலக் கற்பு நிலை பெரும் புகழோடு எங்கும் பேச நின்றது அடியில் வருவதும் காண்க.

"இன்பம் கலந்த இந் நகர்க்கு இறைவன்
தன்பெருமாட்டி தலைப்பெருந் தேவி
சிதைவில் கற்பிற் சிவமதி என்னும்
பேருடை மாதர்" (பெருங்கதை)

என நீருடையுலகில் யாரும் புகழச் சீரொடு நிலவி இவள் சிறந்து வீற்றிருந்தாள். இங்ஙனம் இருந்து வருங்கால் வேந்தரிருவர்க்கு நேர்ந்த வெம்போர் தணிக்க அவ் ஏந்தல் விரைந்து சென்றான். அவன் குறித்த பருவம் கழிந்தும் வாராமையால் வருத்தமீக் கூர்ந்து இவள் வாடியிருந்தாள். கைவளை சோரக், கண்ணீர்வார, எண்ணுதன எண்ணி ஏங்கிக் கிடந்தாள். பின்பு அவ்வண்ணல்வந் தடைந்தான்; இவள் உண்மகிழ்ந்து கொண்டாள். துணைபிரிந்த பொழுது குலமகள் தோள் மெலிந்து தொடிகழன்று தொல்கவின் இழந்திருப்பள் என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

காம்போர்தோள் தெம்பி நின்று காதலனார் நீங்கியதை
ஓம்பா துரைக்கு முணர்.

வாடியதோள் வசையுரைக்கும் என்பது இதனால்கூறப்பட்டது.

---

1236. மாணிக்க மாலையேன் வாடித் தொடிநெகிழ்ந்து
கோணிக் கலுழ்ந்தாள் குமரேசா—பூணும்
தொடியொடு தோளெகிழ நோவல் அவரைக்
கொடிய ரெனக்கூறல் நொந்து. (சு)

இ—ள்.

குமரேசா! தன் கொழுநனைப் பிறர் பிழைகூற வருந்தி மாணிக்க மாலை ஏன் தோள் மெலிந்து நொந்தாள்? எனின், அவரைக் கொடியர் எனக் கூறல் நொந்து தொடியொடு தோள்நெகிழ நோவல் என்க. இது, தலைவனை ஆதரித்துத் தலைமகள் உரைத்தது.

அவரை என்றது காதலனை. இது பொழுது அவன் தூரம் போயுள்ளமையான் சேய்மையில் சுட்டினாள்.

தொடி ஒடு தோள் நெகிழ = வளைகள் கழன்று விழுமாறு தோள்கள் மெலிய. கழலலும், நெகிழ்தலும் உடல் மெலிவைப் புலப்படுத்தி அவள் உளத்துயர் துயரை உணர்த்தி நின்றன.

நோவல் = வருந்துவேன். நொந்து நோவல் என்றாள் தன் சிந்தைநிலை தெளிய. நோதல் மேலும் நோவு நேர்ந்ததென்றவாறு.

என் காதலரைக் கொடியர் எனப் பிறர் கூறுதலையறிந்து வருந்தி, வளைகள் கழலும்படி என் தோள் மெலிதலைக் கண்டு நோகின்றேன் என்பதாம்.

பிரிந்துபோன தலைவன் விரைந்து வந்தருளவில்லையே என்று பக்கத்திலுள்ளவர் அவனைப் பரிந்திகழ்ந்தபோது தலைவி வருந்தி மொழிந்தபடியிது.

இனியராய என் காதலரைக் கோடியர் என்றல் மிகவும் அநியாயமாம் எனத் தன் நெஞ்சுள் அலமந்து நின்றாளாதலால்

"கூறல் நொந்து" என்றாள். தோள் நெகிழ நான் நோவது அவர் வாராமைக்காக அன்று; அவரைக் கொடியர் எனக் கூறும் உங்கள் கொடுமைக்காக என்பது கருத்து. ஆதலால் அவரை அங்ஙனம் கூறலாகாதென்பது குறிப்பு

"மன்ற மராஅத்த பேஎமுதிர் கடவுள்
கொடியோர்த் தெறூஉம் என்ப யாவதும்
**கொடியரல்லர்** எம்குன்று கெழுநாடர்
பசைஇப் பசந்தன்று நுதலே
ஞெகிழ ஞெகிழ்ந்தன்று தடமென்தோளே" (குறுந்தொகை 87)

விரைந்து வருவல் என உறுதிகூறிப் பிரிந்துபோன தலைவன் குறித்த நாளில் வாராமையால் அவற்கு ஏதேனும் ஊறு நேர்ந்திருக்குமோ! என்று தலைவி உளங்கலங்கி உரைத்தபடியிது. சத்தியம் தவறிக் கொடுமைசெய்தாரைத் தெய்வம் தண்டிக்கும் என்பரே! என் நாயகர் கொடியரல்லர்; அவரை அருள் புரிந்தாளுக எனத் தெய்வம் பராவி அவள் மெய்குழைந்து செய்திருக்கும் செயலைப் பார்க்க. மராத்த கடவுள் = மராமரத்தி லுறையும் தெய்வம். பேம் = அச்சம். நாயகன் வந்தருளாமையைக் குறித்துத் தனக்காகத் தோழியர் பரிந்து கூறிய இதில் நாயகி இவ்வாறு வருந்தி நின்றமையால் அவன்பால் இவளுக்குள்ள உழுவலன்பு உணர நின்றது.

"அடம்பமர் நெடுங்கொடி யுள்புதைந் தொளிப்ப
வெண்மணல் விரிக்கும் தண்ணந்துறைவன்
கொடிய னாயினும் ஆக
அவனே தோழி! என் உயிர் காவலனே"

கொடியர் எனக் கூறிய தோழியை எதிர்த்து ஓர் தலைவி இதில் உரைத்திருக்கும் நிலையைப் பார்க்க.

கொண்டான்மேல் கொடுமை கூறின் தலைவி மண்டி நோவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை மாணிக்க மாலைபால் உணரப்படும்.

### கதை.

மாணிக்கமாலை என்பவள் மதுரையிலிருந்து அரசுபுரிந்த அநந்தகுண பாண்டியனுடைய அருமைத் திரு மனைவி. அருங் குலக் கற்பினள். அழகு அறிவு அமைதி முதலிய உயர் நலங்கள்

யாவும் இவளிடம் ஒருங்கே குடிகொண்டிருந்தன. இவளது உருவ நிலையைக் கண்டு பருவ மங்கையரும் உருகி வியந்தனர். பொன்னின்ஒளியும், பூவின் மணமும், தன்னுடல் விளங்க இவள் தகவுடனிருந்தாள். இவளுடைய இடைவனப்பும், நடையமைப்பும், இயற்கைநலனும் அதிசயநிலையில் அமைந்திருந்தன ஆதலால் விழைவு நீங்கிய முனிவரும் அவற்றை வியந்து புகழ்ந்தனர்.

"அறந்திகழ்தவமும்அகிலமும்இதனல்அழியுமென்றுஅயன்படைத்திலனோ?
சிறந்தவேல்விழியைமுன்படைத்தயர்ந்துசெங்கரம்சோர்ந்ததோ?திகைத்து
மறந்ததோ? கரந்துவைத்ததோ? களப வன முலைப்பொறை சுமந்துருகி,
இறந்ததோ? உளதோ? இல்லையோ? இனிமேல்எய்துமோ?அறியொணுது
இடையே;

கடிகமழ் மலரும் கலவையும் அழகும் கதிர்மணிப் பணிகளும் சுமந்து
கொடியெனவிளைசந்து நிறைவறப்பூத்த கொம்பெனஅசைந்தசைந்தொல்கி
அடியிணை படியிற்படப் பொருதஞ்சி அன்புறு கடகரிப்பின்போம்
பிடிஎனக்,கன்னி நடைபயில் அன்னப்பெடையென, மடநடை பெயர்வாள்"

என்றபடி நடைமுதலிய நலங்கள் நன்கமைந்து உயர்நிலையிலிருந்த இவளை உயிர்நிலையா உவந்து பேணி அவ் வேந்தன் சிறந்த போகங்களை நுகர்ந்துவந்தான். அப் பாண்டிய மன்னனுக்கு வேண்டிய போகங்களை விளைத்து ஈண்டிய இன்பநிலையமா யிவளிருந்து வந்தாள். வருங்கால் பகைவர் சிலர் மிகை கொண்டெழுந்து அவன்பால் நவைசெய்து நின்றார். வெவ்வினை செய்து நிற்கும அத் தெவ்வரை அடக்குமாறு திரண்ட படைகளை யனுப்பி அவனும் சினந்துடன்சென்றான். அவன் பொருமுனை புகுந்துநின்றபொழுது இவள் பிரிவிடை வருந்தி மறுகியிருந்தாள். கணமோர்யுகமாக்கருதி உருகியிருந்தாளாதலால் விரகதாபத்தால் இவள் உடல் மெலிந்தது; பசலைபடர்ந்தது; தொடுத்திருந்த வளைகள் சோர்ந்து கழன்றன; படுத்த படுக்கையில் பதைத்துளைந்தாள்; அடுத்து நின்று தோழியர் ஆற்றிவந்தும் இவள் ஆற்றுதுழந்து, தென்றல் முதலிய இன்ப நலங்களையெல்லாம் கன்றி இகழ்ந்து கடுத்துப் புலம்பினள்.

"தங்கள்மலைச்சந்தனத்தைத்தழற்குழம்போஇதுஎன்னும்;தாபம்தோன்றத்,
தங்கள்கடற்றண் முத்தைக் கண்முத்தால் நீறாக்கும்; தக்கோராய்ந்த,
தங்கள் தமிழ்க்குழலிசையைத் தன் செவிக்கு விடம்என்னும்;தபனனேகத்,
தங்கள்குலக்கலைமதியைத்தபனனெனும்என் பட்டாள்தனி பொறுதாள்;"

இன்னவாறு துனி மிகுந்து பல புலம்பித் துயருழந்திருந்தாள். இவளது நிலையினை யறிந்து தோழியர் நெஞ்சம் இரங்கினர். அப் பஞ்சவன் வாராமல் பாணித்துள்ளதைக் குறித்துத் தம்முட் பரிந்து புகன்றார். தன் துணைமேல் தூறலேறலை இவள் துருவி யறிந்து மேலும் வருந்தி மெலியலானாள். "அவரைக் கொடியர் எனக் கூறலை நொந்து தொடியொடு தோள் நெகிழ நோவல்" என்பதை யாவரும் தெளிய இவள் உணர்த்தி நின்றாள். பின்பு அத்தோன்றல் வந்தான்; இவள் தோய்ந்து மகிழ்ந்தாள்.

மற்றோர் வசைக்கு மறுகி யுடல்மெலிவை
எற்றே மறைப்ப னினி.

தலைவியின் உளமெலிவு இதனால் கூறப்பட்டது.

1237. சித்திர வல்லிபோய்ச் செப்பென்ன நெஞ்சினுக்கேன்
கொத்துரைமுன் சொன்னாள் குமரேசா—உத்தமர்முன்
பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்கென்
வாடுதோட் பூச லுரைத்து. (எ)

இ—ள்.

**குமரேசா!** கொழுநனைப் பிரிந்திருந்தபொழுது சித்திர வல்லி ஏன் தன் நெஞ்சை நோக்கி நெகிழ்ந்துரைத்தாள்? எனின், நெஞ்சே! கொடியார்க்கு என் வாடுதோள் பூசல் உரைத்து பாடு பெறுதியோ? என்க.

இது, மஞ்சனிடம் கூறிவரும்படி வஞ்சி நெஞ்சொடு கூறுகின்றது.

பாடு = பெருமை, மேம்பாடு. பெறுதியோ? என்றது அப் பேற்றின் அருமை தெரிந்து ஆர்வங்கொள்ள.

பூசல் = முழக்கம், ஆரவாரம். கலகம், அபாயமுதலியவற்றால் நிகழும் பேரொலி பூசல் எனப்படும். "பூசல் தமரம் கோசனை புலம்பல், ஆகுலம் கோலாகலம் ஆரவாரம் என்ப" (பிங்கலந்தை) வாடுதோள் பூசல் = தோள் வாட்டத்தால் நேர்ந்த பேரலரை.

கொடியார்க்கு என்றது பிறர் கூற்றை யுட்கொண்டு கூறிய வாறு. இனியராய அவரைக் கொடியார் எனக் கூற நேர்ந்ததே என்று கவலை கூர்ந்து குறித்தபடி யிது.

மனமே! என்னைத் தனியே தவிக்கவிட்டு அகன்றுபோயுள்ள அக்கொடியவரிடம் போய் என் துயர்நிலையைச் சொல்லி உயர்வடைதியோ? என்பதாம்.

தலைவன் வந்தருளவில்லையே யென்று பரிந்து நொந்து தோழியர் அவனைப் பழித்து வருங்கால் அதனைப்பொறுமல் தலைவி ஒரு நாள் மறுகி நின்று தன் நெஞ்சைநோக்கித் தூதுபோகக் கெஞ்சிய படி யிது.

பிரிவாற்ருமல் இவள் மெலிந்து பசந்துகிடந்தாள்; அக்கிடையினை நோக்கி "ஐயோ! அபலையை இவ்வாறு தனியே கவலைகூர விடுத்து அவர் அகன்று நின்றுள்ளாரே! இது என்ன நிலை?" என இன்னவாறு அயலார் பன்னிப் பேசினர்; அப்பேரலரையறிந்து வருந்தித் தன் மனத்தை முன்னிலைப்படுத்தித் தன்னிலையை இங்ஙனம் அவள் உரைத்தாள் என்க. தன் தோள் மெலிவினல் ஊரெங்கும் நேர்ந்துள்ள போலரைப்போய்ச் சொல்லிவா என்பாள் "என் வாடு தோட் பூசல் உரைத்து" என்ருள். பாடு பெறுதலைக் குறித்துக் காட்டியது தான் தூதுபோய்ப் படும் பாட்டுக்கு ஓர் ஊதியம் உண்டு என உவந்து மனம் விரைந்துபோதற்கு என்க. பட்ட பாட்டுக்குப் பயனில்லையாளுல் முட்டாள்கூட முயலமாட்டாருதலால் முயற்சியில் மூண்டெழும்படி முந்துற அதனைக் காட்டி வைத்த நலம் ஈண்டுக்கண்டு மகிழத்தக்கது. மையல் கொண்டமகளிர் தம் காதலரிடம் தூது போய் வரும்படி கிள்ளை மயில் முதலிய உரிமைப் பொருள்களிடம் சொல்லி விடுவர் ஆதலால் அவ்வகையில் உள்ளமும் இங்குக் கொள்ளவந்ததென்க. தூது போதற்குரிய பொருள்கள் இவை என்பதை அடியில் வரும் கவியில் காண்க.

> "இயம்புகின்ற காலத் தெகினமயில் கிள்ளை
> பயம்பெறு மேகம் பூவை பாங்கி—நயந்தகுயில்
> பேதை நெஞ்சம் தென்றல் பிரமரம் ஈரைந்துமே
> தூதுரைத்து வாங்குந் தொடை" (இரத்தினச்சுருக்கம்)

எகினம் = அன்னம். பிரமரம் = வண்டு. தொடை = மாலை.

இங்குக் குறித்தனவேயன்றி நாரை முதலாக வேறு சிலவும் தூதிற் குரியனவாகக் கொள்ளப்பட்டுள்ளன. தலைவி நிலையில்

நின்று ஓர் புலவர் மதுரைச் சொக்கநாதரிடம் தமிழைத் தூது விட்டுள்ளார். அடியில் வருவது காண்க.

" பெண்களெல்லாம் வாழப்பிறந்தமையால் என்மனத்திற்
புண்களெல்லா மாறப் புரிகண்டாய்—ஒண்கமலத்து
அன்னம் தனைவிடுப்பேன் அன்னந்தான் அங்கவரை
இன்னந்தான் கண்டறியா தென்பரே—மன்னெந்தாய்
அப்பாலோர் வண்டை அனுப்பின் அவர்காமம்
செப்பாதே என்றால் திகைக்குமே—தப்பாது
மானைப்போய்த் தூதுசொல்லி வாவென்பேன் வல்லியப்பூந்
தானைப் பரமர்பாற் சாராதே—ஏனைப்பூங்
கோகிலத்தை நான் விடுப்பேன் கோகிலமும் காக்கையினம்
ஆகி வலியானுக்கு அஞ்சுமே—ஆகையினால்
இந்த மனத்தைத் தூதா யேகென்பேன் இம்மனமும்
அந்தமனோ நீதர்பால் அண்டாதே—எந்தவிதம்
என்றென் றிரங்கினேன் என்கவலை எல்லாம் பொற்
குன்றனையாய்! உன்னுடனே கூறுகேன்" (தமிழ்விடுதூது)

அன்னம், வண்டு, மான், குயில், மனம் என்னும் இவை தூதாய்ப்போனால் இன்ன இன்ன வகையில் அம்முன்னவனிடம் ஏதமுறும் ஆதலால் ஏதம் யாதுமில்லாத நீயே தூதுபோக வேண்டுமென்று தமிழை நோக்கி இதில் உரைத்திருக்கும் அழகைப்பார்க்க.

" குருகை விடுத்தாள் எனக்குருகே, கூறாய்! சுகத்தை விடுத்தாள் என்று
அருகுவளருஞ்சுகமே, சென்றறையாய்! நிறை நீர் தெரிந்து பால்
பருகும் அனமே, அனம் விடுத்த படி சென்றுரையாய்! படிவருளத்
தருகும் பசும்பொன் மதிற்காசி யுடையார் வரித்தோ லுடையார்க்கே."

கைவளை கழன்று, இன்பம் இழந்து, உணவு ஒழிந்து கிடக்கின்றாள் என என் நிலைமையைத் தலைவரிடம்போய் உரைத்துவருக என ஓர் தலைவி நாரை முதலியவற்றை நோக்கிச் சிலேடை அணி திகழ இதில் ஓதி யிருத்தல் காண்க. குருகு=வளையல், நாரை. சுகம்=இன்பம், கிளி. அனம்=அன்னப் பறவை, சோறு.

" முன்றில்வாய் மடற்பெண்ணைக் குரம்பைவாழ் முயங்கு சிறை
அன்றில்காள்! பிரிவுறு நோய் அறியாதீர்! மிகவல்லீர்
தென்றலார் புகுந்துலவு திருத்தோணி புரத்துறையும்
கொன்றைவார் சடையார்க்கு என் கூர்பயலை கூறீரே" (தேவாரம்)

"சுடர்வளையும் கலையும் கொண்டு அருவினையேன் தோள்துறந்த
படர்புகழான் திருமூழிக்களத்துறையும் பங்கயக்கண்
சுடர் பவள வாயனைக்கண்டு ஒரு நாள் ஓர் தூய் மாற்றம்
படர் பொழில்வாய்க் குருகினங்காள்! எனக்கு ஒன்று பணியீரே"
(திருவாய்மொழி)

"நீரிருக்க மடமங்கைமீர்! கிளிகள்தாமிருக்க, மதுகரமெலாம்
நிறைந்திருக்க, மடவன்னமுன்ன நிரையாயிருக்க, உரையாமல்யான்
ஆரிருக்கினும், என்னெஞ்சமல்லதொரு வஞ்சமற்ற துணையில்லை என்று
ஆதரத்தினொடு தூதுவிட்ட பிழை யாரிடத்துரை செய்து ஆறுவேன்?
சீரிருக்கு மறை முடிவு தேடரிய திருவரங்கரை வணங்கியே
திருத்துழாய்தரில் விரும்பியே கொடு திரும்பியே வருத லின்றியே
வாரிருக்கு முலை மலர் மடந்தையுறை மார்பிலே, பெரிய தோளிலே
மயங்கி இன்புறமுயங்கி என்னையு மறந்து தன்னையு மறந்ததே"
(திருவரங்கக்கலம்பகம்).

தன்னிகரில்லாத் தலைவனிடம் போய்த் தம் நிலைமையை உரைத்துவரும்படி அன்றில் குருகு நெஞ்சங்களை இவற்றுள் தூதாக விழைந்துள்ளமை காண்க. சென்ற நெஞ்சம் திரும்பாமல் அவ் அழகனை முயங்கி அங்கேயே நின்றுவிட்டது என இறுதியில் தலைவி நெகிழ்ந்து புலம்பியிருக்கும் நிலையை அறிந்துகொள்க.

பூசல் உரைத்துப் புகழ்பெறுதி என்ற இது கோவைத் துறையில் தன் துயர் தலைவற்கு உணர்த்தல்வேண்டல் என வரும்

"விழிக்கிடனுகும் நுதலார் தம் வெங்கையில் வேந்தொடு பெண்
பழிக்கலை என்றொரு வார்த்தையை யாரும் பகர்ந்து, மிகும்
சுழிக்கிடனுகும் திருப்பாற் கடலெனத் தோன்று புகழ்
மொழிக்கிடனுகுதும் என்பாரைக் கண்டில மொய் குழலே"
(திருவெங்கைக்கோவை)

"அங்காவியங்கண்ணி கோடீச்சுரவள்ளல் அன்பர் முன் போய்
எங்காரிகை பொன் னிற மேற்று மாலாயின ளெனவே
அங்காதரத்தினுரைத்தோர் எனக்கு என்றன் ஆருயிரீந்து
இங்காய் தனக்கொரு பெண்ணீந்து உயர்புகழ் ஏற்பவரே"
(கோடீச்சுரக்கோவை)

"எந்நாளும் இன்பம் எளிதுறு சூழ்ச்சி யிருப்ப விட்டுப்
பன்னாளும் இன்னற் படுவதென்னே? பையுளோடரிய
நன்னுண் இகக்க இன்னேபுறம் போந்து நலி நெஞ்சமே!
அந்நாள் அகன்றிலம் என்றூர் பதிசென்றடுத்தும் வம்மே"
(தணிகைப்புராணம்)

"செங்கால் மட நாராய்! தென்னுறந்தை சேறியேல்
நின்கால்மேல் வைப்பன் என் கையிரண்டும்—நன்பாற்
கரையுரிஞ்சி மீன்பிறழும் காவிரிநீர் நாடற்கு
உரையாயோ யானுற்ற நோய்" (முத்தொள்ளாயிரம்)

பிரிவிலுழந்து துணையை நினைந்து மயல்மிகுந்து அயல் உதவி நாடி மகளிர் மறுகியிருக்கும் நிலை இவற்றால் அறியலாகும்.

பகுத்தறிவில்லாத நாரை முதலியவற்றை விளித்துத் தன் துயர் நிலையை உரைத்து வரும்படி இங்ஙனம் பழிச்சி வேண்டல் உணர்ச்சிமிக்க தலைவியர்க்கு அடுக்குமோ? எனின், விரகதாபத்தால் உளநிலைகுலைந்து செயலறியாது அயர்வோடு துயருறுகின்றவர் கண்டவற்றை யெல்லாம் தமக்குப் பற்றுக்கோடாகக் கருதிக் கொண்டு உறுதிவேண்டி இவ்வாறு கழறநேர்வர் என்க.

"கானலும் கழறாது, கழியும் கூறாது,
தேனிமிர் நறுமலர்ப் புன்னையு மொழியாது,
ஒருநின் னல்லது பிறிதியாதும் இலனே;
இருங்கழி மலர்ந்த கண்போல் நெய்தற்
கமழிதழ் நாற்றம் அமிழ்தென நசைஇத்
தண்டா தூதிய வண்டினம் களிசிறந்து
பறவை தளரும் துறைவனை நீயே
சொல்லல் வேண்டுமால் அலவ! பல்காற்
கைதையம் படுசினை எவ்வமொடு அசாஅம்
கடற்சிறு காக்கை காமர் பெடையொடு
கோட்டுமீன் வழங்கும் வேட்டமடி பரப்பின்
வெள்ளிறாக் கனவு நள்ளென் யாமத்து
நின்னுறு விழுமம் களைந்தோள்
தன்னுறு விழுமம் நீந்துமோ எனவே" (அகநானூறு 170)

நின்விழுமம் களைந்தோள் தன் விழுமம் நீந்துமோ? என என் துணைவனிடம்போய் நீ சொல்லல்வேண்டும் என்று அலவனை நோக்கி ஒரு தலைவி இதில் அலமந்திருத்தல் காண்க. அலவன் = நண்டு.

பிரிவிலுருகியிருக்குமகளிர் உளநிலை குலைந்து அருகில் நேர்ந்த பொருள்களிடமெல்லாம் தம் தலைவரை வரவேண்டிப் பலபல கூறிப் பரிந்து நிற்பர் என்பது இதனால் நன்கு அறிந்துகொள்ளலாகும்.

காதலனிடம் தூதுபோய் வரும்படி தன் நெஞ்சை நோக்கிக் காதலி புலம்புவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சித்திரவல்லிபால் உணரப்படும்.

## கதை.

சித்திரவல்லி என்பவள் முசுகுந்தச் சக்கரவர்த்தியினுடைய அருமைத் திருமனைவி. அதிரூபவதி. இவளது சுந்தர நிலையை

வியந்து இந்திராணியும் புகழ்ந்துளாள். இப் பேரழகியோடமர்ந்து பெரும் போகங்களை நுகர்ந்து எங்கும் இசைபரப்பி அம்மன்னன் செங்கோல் செலுத்திவந்தான். அக்குலமகனுக்கு அளவிலின்பங்களை யருளி உழுவலன்போடு இவள் தழுவியிருந்தாள். காதல் நலங்கனிந்து யாதும் அகலாமல் ஆதரம் பெருகி ஈருயிரும் ஓருயிரா யிணைந்தமர்ந்து இவர் மகிழ்ந்து வருங்கால் அமராவதியில் ஓர் அருஞ்சமர் மூண்டது. வலன் என்னும் அசுரன் வன்பகை கொண்டு வானவர் கோனோடுவந்து மலைந்தான். கருங்கடல்போலப் பெரும் படை இரண்டு ஒருங்கே வந்து கொடும் போர் புரிந்தது. வானவரைத் துணைக்கொண்டு தன்னால் ஆனவரையும் பொருது பார்த்தும் அத்தானவர்கோனை வெல்ல முடியாமல் இந்திரன் மிகவும் தத்தளித்து நின்றான். நின்றவன் இவ்வேந்தன் வந்தாலன்றித் தனக்கு ஆதரவாக யில்லையென்று தேர்ந்தெண்ணி ஆதரவோடு ஒரு தூதனை விடுத்தான். அவன் வந்து வேண்டினான்; வருவது காணக.

"நிருதர் போற்றிய வலாசுரன் தன்னொடு நேர்ந்து
பொருது வென்றிலன் ஆதலால் பூதலம்புரக்கும்
குருதி வேற்படை முசுகுந்த மன்னனைக் கூவி
வருக வென்றொரு தூதனை விடுத்தனன் மகவான். (க)

எய்து தூதவன் இருநிலம்புக்கனன் இமையோர்
நாயகன் பணி யுரைத்தலும் நன்றெனா வினவி
மாயிருந்திறல் வீரர்தம் படையொடும் வான்மேற்
போயினான் முசுகுந்தன் என்று உரைபெறும் புகழோன்" (உ)
(கந்தபுராணம்)

இங்ஙனம் போனவன் வானவரிறைவனைக் கண்டு மகிழ்ந்துரையாடி நிகழ்ந்ததை யறிந்து அத்தானவர் தானைமேல் தாளாது சென்றான். மடங்கலேறுபோல் அடர்ந்தெழுந்து இவன் அடு போராற்றினான்; அப்படை யுடைந்தொழிந்தது. அவ்வெற்றியைக் கண்டு இந்திரன் உவந்துவந்து இவனைப் புகழ்ந்து தழுவிச் சிறந்த உபசாரங்கள் செய்து சின்னாள் தன்னோடு அமர்ந்திருக்க வேண்டினான். அவ்வேண்டுகோட் கிசைந்து இவ் ஆண்டகை அங்குத் தங்கியிருந்தான். இங்கு இவள் பிரிவாற்றாமல் பெருந்துயருழந்தாள். பாங்கியர் தேற்றியும் பரிந்தலமந்தாள். இவளது நிலையினை அயலவர் அறிந்து மிகவும் வருந்தினார். அகன்றுபோயுள்ள மன்னர்

விரைந்து வரவில்லையே யென்று இரங்கி மொழிந்தார். அந்தப் புரத்திலடங்கியிருந்தும் தனது அவலநிலை எந்தப்புரத்தும் தெரிந்ததே யென இவள் ஏங்கியுளைந்தாள். என் காதலரிடம் நீயேனும் போய் உண்மையை யுரைத்து உடனழைத்துவாராயா? எனத் தன் நெஞ்சினை நோக்கி இவள் நெடிது புலம்பினாள். "நெஞ்சே! என் வாடுதோட் பூசலுரைத்துப் பாடுபெறுதியோ?" என்பதை யாரும் அறிய அன்று இவள் உணர்த்தி நின்றாள்.

வள்ள லிடம்போயேன் வன்னிலையைச் சொல்லியிசை
யுள்ளமே கொள்க வுடன்.

நெஞ்சொடு கழிந்து கிளந்தமை இதனால் கூறப்பட்டது.

1238. பண்டு துணைவி பசந்ததனைச் சிந்துலனுட்
கொண்டுளைந்தான் என்னே குமரேசா—மண்டி
முயங்கிய கைகளை யூக்கப் பசந்தது
பைந்தொடிப் பேதை நுதல். (அ)

இ—ள்.

குமரேசா! தழுவியகை நழுவியபோது தன் காதலி உடல் பசந்ததே எனச் சிந்துலன் ஏன் உளைந்துநின்றான்? எனின், பைந்தொடிப் பேதைநுதல்முயங்கியகைகளைஊக்கப்பசந்தது என்க.

இது, தனித்து நின்ற தலைவன் நினைத்தயர்கின்றது.

ஊக்க = மேலெழுப்ப. அஃதாவது சேர்ந்து தழுவி யிருந்த கைகளைச் சிறிது நெகிழ்ப்ப என்க. ஊக்கல் = எழுப்பல், தளர்தல். நீக்க என்னாது ஊக்க என்றது அந்நெகிழ்ச்சி நிலைதெரிய.

பைந்தொடிப் பேதை நுதல் = பசும்பொன்னானியன்ற அழகிய வளைகளை யணிந்த பேதையினுடைய நெற்றி.

பேதை என்றது கள்ளம் தெரியாத வெள்ளறிவினள் என்பது கருதி. உள்ளூரங்கொண்டு உறுதுயர் பொறுத அபலை என அவளது எண்மையும் மென்மையும் எண்ணியுரைத்தவாறு. பெண்

மைக்குரிய பெருங்குணங்களுள் மடம் ஒன்றாதலும் ஈண்டறியத் தக்கது. "பேதைமை என்பது மாதர்க்கு அணிகலம்" என்பதும் காண்க. புல்லியகை மெல்ல நெகிழினும் அல்லலுழந்து பசந்த மெல்லியல், இக்கல்லதர் பல கடந்து நான் காலகன்று நின்றுள்ள இதில் யாதாவளோ? என நோதல்கூர்ந்து காதலன் இங்ஙனம் ஓதலானான் என்க.

"அஞ்சுவது அறியாது அமர்துணை தழீஇ
நெஞ்சுணப் பிரிந்தன்றாயினும், எஞ்சிய
கைபிணி நெகிழின் அஃது எவனோ? நன்றும்
சேய அம்ம இருவாமிடையே;
மாக்கடற்றிரையின் முழங்கி வலனேர்பு
கோட்புலி வழங்கும் சோலை
எனைத்தென்று எண்ணுகோ முயக்கிடைமலைவே" (குறுந்தொகை 237)

இது, பிரிந்து நின்ற தலைமகன் வருந்தியுரைத்தது. முயங்கிய கை சிறிது நெகிழினுமயங்கி அயர்கின்ற எமக்கு இந்நெடும் பிரிவு எவ்வளவு துயராம் என அவன் ஏங்கியுள்ளமை காண்க.

என்காதலியை அழுந்தத் தழுவியிருந்தகைகளை ஒரு நாள் அணையில் சிறிது நெகிழ்த்தேன் உடனே அவள் நெற்றி பசந்தது என்பதாம்.

வினை மேலூக்கி அயலே பிரிந்து போயுள்ள தலைவன் முன்பு தன் துணைவியிடம் அமளியில் நிகழ்ந்த ஓர் அரியநிலையை நினைந்து அயர்ந்து கூறியபடியிது.

ஆர்வத்தோடு அழுந்தத்தழுவி அவன் முயங்கிக்கிடந்த பொழுது ஒருநாள் இடையே சிறிது கைகள் நெகிழ்ந்தன; நெகிழவே தலைவி நிலைகுலைந்து நெடுந்துயில் கொண்டாள்; கொள்ளவே உடல் மெலிந்து உறுப்புக்கள் பசந்தன ஆதலால் "கைகளை ஊக்கப் பேதை நுதல் பசந்தது" என்றான்.

நுதலை முதலில் குறித்தது உடலுறுப்புக்களில் நெற்றி முன்னுற நிற்பது ஆதலால் அவ்வுடற்பசப்பு முந்துற அதில் முனைந்து தோன்றும் என்க.

தழுவியிருந்த கைகள் சற்றே நழுவினும் அழுது பசந்து அலமருவள் என்ற இதனால் அவளது உழுவலன்புடைமையுணர்நின்றது.

வார்முலை முற்றாத்து நூலிடையிலகினும் ஏர் நிலை குலைந்து சாலவும் வருந்துவளே! இப்படிக் காடும் மலையுங்கடந்து நெடுந்தூரம் வந்து நான் நீடி நின்றால் எப்படி அங்கு நிலைத்திருப்பாள்? அந்தோ இப்பொழுதே போய் அவளை எய்தியருள வேண்டும் என வெய்தின் வருவன் என்க.

பிரிந்து நின்றவன் இடையே மனைவியை இவ்வாறு நினைந்து விரைவன் என்றதனால் அவனது நெடுங்காதல் புலனும்.

"கவவுக்கடுங் குரையள்; காமர் வனப்பினள்;
குவவுமென் முலையள்; கொடிக் கூந்தலளே;
யாங்குமறந் தமைகோ யானே; ஞாங்கர்க்
கடுஞ்சுரை நல்லான் நடுங்குதலைக் குழவி
தாய்காண் விருப்பின் அன்ன
சாஅய் நோக்கினளே மாஅயோளே" (குறுந்தொகை 132)

இடையே பிரிந்த தலைவன் தன்காதலியின் இயல்பை நினைந்து பாங்கனிடம் உரைத்தபடி யிது. இளங்கன்று தன் தாயைக்காண விரும்பி நிற்றல்போல் தன்னை விழைந்து நோக்கி அவள் உளைந்து நின்றதையும், அவளது எழிலியல்புகளையும் எண்ணியெண்ணி யுருகி இத்தகையாளை எப்படி மறந்திருப்பேன்? என்று அவன் ஏங்கி யிருக்கும் நிலையை இதில் ஊன்றி யுணர்ந்துகொள்க. கவவுதல் = இறுக முயங்குதல். கடும் சுரை நல் ஆன் = விரைந்து சுரக்கும் நல்ல பசு. மாயோள் = அழகிய நிறத்தையுடையாள்.

புறத்தே பிரிந்தாலும் அகத்தே காதலியை எப்பொழுதும் நினைத்திருப்பதனால் சேர்ந்திருந்த காலையில் நிகழ்ந்த அவளதுசெயல் இயல்புகளையெல்லாம் அயலறிய இங்ஙனம்மயலொடுபுகலலாயினான்.

"வரும்புண்டரீகம் இரண்டால் ஓர் கல்லும், என் வன்னெஞ்சமாம்
இரும்பும் குழைத்த மதுரைப் பிரான் வெற்பில் எழ்பரியோன்
விரும்புந் தடமணித்தோ வலவா! வெஞ் சுரமிதன்றே
கரும்பும், கனியும, இளநீரும், பார்எங்கும் கண்களினே" (மதுரைக்கலம்பகம்)

பிரிந்துபோன தலைவன் வினைமுடித்து மீண்டுவருங்கால் இடைவழியில் தலைவியின் உருவெளித் தோற்றத்தைக்கண்டு பாகனிடம் உரைத்தபடியிது. அவளது மொழி இதழ் முலைகளைக் கரும்பு கனி இளநீர்களாகக் குறித்து அவன் இதில் கரைந் திருத்தல் காண்க.

கலந்திருந்த சமயம் துணைவியிடம் நிகழ்ந்த நிலைகளைப் பிரிந்துநின்ற பொழுது தலைவன் நினைந்துருகுவன் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை சிந்துலன்பால் உணரப்படும்.

## கதை.

சிந்துலன் என்பவன் சந்திரகுலவேந்தன். தாரா நகரிலிருந்து அரசுபுரிந்தவன். பல கலைகளையும் பழுதறப் பயின்றவன். போர் வாளன். இவனுடைய மனைவி பெயர் சுமதி. அவள் சிறந்த குணவதி. தன் பெயரியல்புக் கேற்ப உயரறி வுடையளாய் ஒளிசெய்து நின்றாள். அவளது எழில் நலங்கள் எவரும் வியக்கத் தக்க நிலையில் இனிதமைந்திருந்தன அவளுடைய அவயவங்களின் அமைப்பையும் அருமையையும் வியந்து புலவர் பலரும் பல படப் புகழ்ந்துள்ளார்.

"கொடிமின் னொழுக்காக் குளிர்புயல்மேல் நின்ற
படிமன்னு கூந்தலுடைப் பாவை,—தொடிமன்னு
செங்கைக் குமாரவேள் செவ்வேலை ஒப்பாக்கச்
சங்கப் புலவர்க்குத் தானுரைப்ப—அங்கடுத்து
மாரவேள் அம்பாக்கின் வார்புருவக் கென்சிலையும்
நேருமே என்னும் நெடுங்கண்ணாள்,—சீருலாம்
கார்அளகம், வில்நுதல் வேல் கண்குமிழ்மூக் கூசல்காது
ஆரம்எயி றம்பலிதழ், ஆடிகவுள்,—வேரல்தோள்,
காந்தளங்கை, ஓதி கொங்கை, காயம் இடை, வாழைதொடை,
மாந்தளிர் செந்தாளென்று மாதரெனப் — போந்தவர்கள்
எல்லார்க்கும் ஒப்ப இசைப்பவற்றை ஒப்பாக்கல்
பொல்லாதென வுயர்ந்த புத்தமுதம்"

என்று ஒத்த மங்கையரும் உவந்துபோற்ற உருவிற்சிறந்து ஒப்பற்ற நிலையில் இவள் உயர்ந்திருந்தாள். இக் கட்டழகியோடு கலந்திருந்து அம் மன்னன் மன்னிய போகங்களை நுகர்ந்து மகிழ்ந்து வந்தான். அவனை யாதும் பிரியாமல் ஆர்வமீதூர்ந்து அன்றிற் பேடைபோல் இவள் ஒன்றியிருந்தாள். புல்லி யுறங்குங்கால் அவன் மெல்ல அசைந்தாலும் உள்ளங் கலங்கி இவள் உளறிவிழிப்பாள். இவளது கெழுதகைமையை யறிந்து அளவிலின்போடு அவன் தழுவி ஒழுகி னன். இங்ஙனம் ஒழுகி வருங்கால் ஒருமுறை அவன் அயலகல நேர்ந்தது. மறுபுல மன்னரிருவர் பொருதிறங் கருதி முறுகி நின்ற மையான் அவர்க்கு உறுதிகூறி உறவுசெய்ய உடன்று சென்றான்.

அப்பிரிவில் இவள் பெரிதலமந்தாள். உடல்மெலிந்து, பொலிவிழந்து, அழுதயர்ந்து கிடந்த இவளை அமிர்தினி என்னும் தோழி நாளும் ஆற்றிவந்தாள். இவள் பதியினை நினைந்து உயிர் பதைத்துழல்வதைக் கண்டு அன்னே! என்னை யிது? என அவளும் பரிந்து புலம்பினாள்.

" என்னுயிர் வாட எனதொளி வாட எனக்குயிராம்
நின்னுயிர் வாட நினதொளி வாட, நெடும்புனலுள்
தன்னுயிர்ப் பாவையும் சாம்ப நினது தடங்கண் அந்தோ
மன்னுயிர்ப் போடக் கலுழ்வதென் னேமணிப் பூண்முலையே?"

என்று இன்னவாறு பாங்கியும் வருந்த இவள் ஏங்கியிருந்தாள். சென்ற அவன் மூண்ட போரைத் தடுத்து மீண்டுவர எழுந்தான். எழுங்கால் சின்னாள் அமர்ந்தருளும்படி அம் மன்னர் வேண்டி நின்றமையால் சிறிது அவண் மேவியிருந்தான். ஒருநாள் இவளை உள்ளியுளைந்தான். மருவி யிருக்குங்கால் சிறிது புடை பெயரினும் இவள் மறுகியலமந்ததை அவன் கருதி உருகினான். உடனே விடை கொண்டு விரைந்து வந்தான். இவள் உவந்து தழுவி ஒளிதிகழ்ந்து நின்றாள். இவளுடைய திரு வயிற்றி லிருந்துதான் புகழ்க் குரிசிலாகிய போஜன் பிறந்தான். முயங்கிய கைகள் சிறிது நெகிழ்ந்தாலும் காதலி நுதல் பசந்துபடும் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

பேய்வாயிற் பிள்ளைபோல் பேதை யிவள்பசந்து
நோய்வாய் நுடங்கு நொசிந்து.

நெற்றி பசந்தநிலை இதனால் கூறப்பட்டது.

---

1239. மேவியகோன் சற்றே விலக விதர்ப்பையேன்
கூவி யழுதாள் குமரேசா—நீவும்
முயக்கிடைத் தண்வளி போழப் பசப்புற்ற
பேதை பெருமழைக் கண். (௯)

இ—ள்.

குமரேசா! காதலன் சிறிது விலகினும் விதர்ப்பை ஏன் பெரிதும் கவன்றாள்? எனின், முயக்கு இடைத் தண்வளி போழ பேதை பெருமழைக் கண் பசப்பு உற்ற என்க.

வளி=காற்று. இரவு சாளர வழியாக இனிதாய் வீசுகின்ற குளிர்ந்த மந்தமாருதம் இங்குக் குறிக்க நின்றது ஆதலால் தண்வளி என்ருன். போழ = நுழைந்து போக. போழ்தல்=ஊடறுத்துப் போதல். போழ என்றதனுல் ஈருடலும் ஒருருவாய் இணைந்து ஒன்றியிருந்தமை உணர்ந்து கொளலாம். பேதை என்றது பருவம் பற்றியன்று; தன்மை குறித்து நின்றது. கபடு சூது அறியாத மடவரல் என்றவாறு.

பெரு மழைக்கண்=பெரிய குளிர்ந்த கண்கள். அகன்று பரந்து குளிர்ந்த கருங் கண்ணளாய்ச் சிறந்திருந்தாளாதலால் அவ் விழியழகில் ஈடுபட்டு இங்ஙனம் விளம்பி நின்ருன்.

"பூவொத் தலமருந் தகைய வேவொத்து,
எல்லாரும் அறிய நோய் செய்தனவே
தேமொழித் திரண்ட மென்ருேள் மாமலைப்
பரீஇ வித்திய ஏனற்,
குரீஇ ஓப்புவாள் பெருமழைக் கண்ணே" (குறுந்தொகை 72)

பிரிந்திருந்த காதலன் தனது காதலியை நினைந்து புலம்பியிருக்கும் இதில் அவளது கண்ணைக் கருதி அவன் உருகியுள்ளமை காண்க.

"அருஞ்சுரம் நீந்திய நம்மினும், பொருந்தார்
முனையரண் கடந்த வினைவல் தானைத்
தேனிமிர் நறுந்தார் வானவ னுடற்றிய
ஒன்ருத் தெவ்வர் மன்னெயில் போலப்
பெரும்பாழ் கொண்ட மேனியள் நெடிதுயிர்த்து
வருந்துங்கொல் அளியள் தானே சுரும்புண
நெடுநீர் பயந்த நிரையிதழ்க் குவளை
எதிர்மலர் இணைப்போது அன்ன தன்
அரிமதர் மழைக்கண் தெண்பனி கொளவே" (அகம் 381)

பிரிந்துபோன தலைவன் இடைச்சுரத்தில் நின்று தன் அருந் துணைவியை நினைந்து இரங்கிய பொழுது அவள் மழைக்கண் துனி கோடலைக்குறித்து இதில் மறுகியிருத்தல் காண்க.

புகையும் காற்றும் யாண்டும் புக வல்லனவாதலால் ஈண்டு வளிவழங்க நேர்ந்தது. தண் வளி போழ என்றது இடை வெளி யின்மை தேற. காற்று ஊடு போகும் வகை இடை பிரிந்தாலும்

காதலி ஆற்றுதலமருவள் என்பது கண் பசப்பால் காண நின்றது. இதனால் அவளது ஆர்வநிலை புலனும்.

மேல், நுதல் பசந்த நிலைமை நுவன்றான்; இதில், கண் பசந்தமை கழறுகின்றான்.

புல்லியிருந்த கைகளுக்கு இடையே மெல்லிய காற்று உள் நுழைந்து போகப் பேதையினுடைய குளிர்ந்த கண்கள் பசந்து நின்றன என்பதாம்.

பிரிந்து அகன்றுபோயுள்ள காதலன் கலந்திருந்த காலையில் தன் காதலியிடம் நிகழ்ந்த நிலைகளை நினைந்து நெகிழ்ந்தபடி யிது.

அழுந்த முயங்கி அமளித் தலத்தில் தலைவியோடு அயர்ந்து கிடக்குங்கால் இடையே புடைவளைந்து புல்லியிருந்தகைகள் மெல்ல நெகிழ்ந்தன; நெகிழ்ந்த அவ் இடைவெளி மிகவும் நுண்ணிது; நூலிழை கூடப் புக முடியாது; தென்றற் காற்று மட்டும் சிறிது சென்று வர இயலும்; அவ்வளவு அகலவே அவள் எவ்வளவோ திகில்கொண்டு என்னே ஈது! என ஏங்கிப் பதைத்தாள்; அப் பதைப்பின் பயனாக அவளது உடலொளி குன்றி, விழிகள் பசந்தன ஆதலால் அந் நிலையினைப் போர்வயிற் பிரிந்து நின்ற தலைமகன் ஒருநாள் நினைந்து "முயக்கிடைத் தண்வளி போழப் பேதை மழை கண் பசப்புற்ற" எனப் பண்டு நிகழ்ந்த அதனைத் தன் நெஞ்சோடு சொல்லி நெடுங்கவல் கொண்டான் என்க. சிறிது அகலினும் இங்ஙனம் பெரிதும் கவன்ற அவள் இப் பெரும் பிரிவில் என்ன பாடு படுவளோ? நாம் இன்னே சேரவேண்டும் என விழைந்தெழுந்து அவன் விரைந்து வருவன் என்பது குறிப்பு.

"உழை யணர்ந்துண்ட இறைவாங்கு உயர் சினைப்
புல்லரை இரத்திப் பொதிப்புறப் பசுங்காய்
கல்சேர் சிறுநெறி மல்கத் தாஅம்
பெருங்கா டிறந்தும் எய்தவந் தனவால்
அருஞ்செயற் பொருட்பிணி முன்னி யாமே
சேறும் மடந்தை! என்றலின், தான்தன்
நெய்தல் உண்கண் பைதல் கூரப்,
பின்னிருங் கூந்தல் மறையினள் பெரிதழிந்து,

உதியன் மண்டிய ஒலிதலை ஞாட்பின்
இம்மென் பெருங்களத்து இயவர் ஊதும்
ஆம்பலங் குழலின் ஏங்கிக்,
கலங்கஞர் உறுவோள் புலம்புகொள் நோக்கே" (நற்றிணை 113)

இது, பொருள் தேடப் பிரிந்த தலைவன் தன் காதலியின் உரு வெளித் தோற்றத்தை இடைவழியில் கண்டு இனைந்து புலம்பியது மடந்தாய்? பொருளவாவினால் பிணிக்கப்பட்டுள்ளேன் ஆதலால் அதனை ஈட்டுதற்குச் சென்று வருகின்றேன் என்றவுடனே குவளை மலர்போன்ற கண்கள் கவலை கூர்ந்துகலுழ, கூந்தல் விரிந்து கவிழ, முகங் கவிழ்ந்து, இனிய குழல்போல அன்று ஏங்கியழுத அவள் பார்வைகள், பெருங்காடு கடந்து வந்தும் ஈண்டு என் கண்முன் எய்தவந்தன என அவன் ஏங்கியிருந்தலை இதில் ஊன்றி யுணர்ந்து கொள்க. உழை = மான். அலாந்து = அண்ணாந்து. இரத்தி = இலந்தைச் செடி. மான் நிமிர்ந்து தழை யுண்ணும்பொழுது சிறிது வளைந்து இலந்தை கனியுதிர்க்கும் காடு என்க. கலருந்ததிக் காலையில் நிகழ்ந்த நிலையைப் பிரிந்து நின்றபொழுது காதலர் நினைந்துகவல்வர் என்பதை இதுவும் உணர்த்திநிற்றல் காண்க.

துணைவன் துயிலிடைச் சிறிது அயலகல நேரினும் துணைவி உயிர்பதைத் தயர்வள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை விதர்ப்பைபால் உரைப்படும்.

## கதை.

விதர்ப்பை என்பவள் விந்துமான் என்னும் விதர்ப்ப வேந்த னுடைய அருமைத் திருமகள். இவளது இயற்பெயர் சுகேசினி. உருவினும் அறிவினும் இவள் மிகவும் சிறந்தவள். பருவமெய்திக் கன்னி மாடத்தில் இவள் மன்னியிருக்குங்கால் மன்னர் பலரும் இவளை மணந்துகொள்ள விழைந்து மனங் கரைந்து நின்றார். இவள் எவரையும் உவந்து கொள்ளாமல் இகந்து நின்றாள். இங்ஙனம் இருந்து வருங்கால் சூரியகுலத் தோன்றலாகிய சகரன் என்பவன் இவளது விழுமிய நிலையை வினவியறிந்து காதல்மிகுந்து மாதவர் சிலரைத் தூதுவிடுத்தான். அவர் ஆதரவுகூறி அகன்று

போனார். அவர் போனபின்னர் அம்மானவன் இத்தையலையே நினைந்து மையலில் ஆழ்ந்து மறுகிக் கிடந்தான்.

" மாதவர் போன பின்னர் மண்டப நீங்கி மன்னன்
ஆதுலர் போலப் பள்ளி யறை புகுந்து, அமளி நண்ணி,
மீதெலாம் அனங்கவாளி குளித்திட வெளியிற்புக்குக்
காதலங் கடலுட்டாழ்ந்தான் கரைநிலை கண்டிலாதான்"

என்றவாறே கரை காணுக் காதலோடு உரைசெயல் குன்றி உளைந் திருந்தான் விரைவுடன் சென்ற அவர் இவளுடைய தந்தையைக் கண்டுஅக்கோமகனது ஆர்வநிலையைஅறியஉரைத்தார். அம்மன்னன் மகிழ்ச்சி மீக்கூர்ந்து தன் மகளது கருத்தையுசாவினான். அவ்இளங் கோவினது எழில் நலங்களை முன்னதாகவே யறிந்து இவள் ஆர்வ முற்றிருந்தாளாதலால் அம்மணவுரையைக் கேட்டவுடனே மனங் களித்து நின்றாள். அந்நிலையினைத்தெளிந்து அத்தலைமகன் விரைந்து வந்து இவளை மணந்துகொண்டு தன் அணிநகரடைந்து இணைபிரியா திருந்து அரிய போகங்களை நுகர்ந்து அகமிகமகிழ்ந்து ஆர்வமீதூர்ந் தான். அப் போர் வீரனுக்கு ஆரா இன்ப நிலையமாயமர்ந்து இவள் அரும்போகம் விளைத்தாள். ஏமமுற நிகழ்ந்த அக் காமப் போரில் இருவரும் கதியொத்திருந்தார்.

" புருவவிற் கோலி யுள்ளம் போழ்ந்து கட்கணைகள் ஓட
உருவத்தா ருடைய ஒற்றை வலம்புரி ஒலிப்ப விம்மி
வரிமுலைக் களிநல்யானை மருமம்பாய்ந்துழக்க, மன்றல்
விரிமலர்க்கோதை காம வெஞ்சமம் விளைத்திட்டாளே; (க)

" திருநுதற் பொடித்த வேர்வில் தேங்கமழ் திலகம் தேயப்,
புரிமுறுக் கவிழ்ந்து தாழ்ந்த பொலங்குழை திருவில் வீச,
மருமலர்க் கூந்தல் சோர, வசமழிந் துருகி வேந்தன்
எரிமணி யாரமார்பி னின்றுயில் பொருந்தி னாளே" (உ)

என்றபடி நாளும் பொருந்தி மகிழ்ந்து திருந்திய இன்பில் திளைத்து வருங்கால் பகைப்புல மொன்றில் அவன் மிகைத்தெழுந்துபோனான். அப்போக்கில் ஏக்கமிக்குற்று ஆவி குலைந்த யாக்கைபோல இத் தேவி தேம்பிக்கிடந்தாள். பொருகளம் புகுந்திருந்த அத் திரு மகன் வெற்றி மிகப் பெற்றுத் தன் படைகளோடு பாசறையை யடைந்தான்; அன்று நடு யாமத்தில் தன் இல்லக் கிழத்தியை எணண லானான். ஒருநாளிரவு அமளியில் புல்லி யுறங்குங்கால் கைகள்

மெல்ல நெகிழ்ந்தன; அவ்வழி மெல்லியதென்றல் வீச உடனே இவள் துள்ளி எழுந்து உள்ளம் பதைத்து உண்கண் பசந்தாள் ஆதலால் அவ் ஆர்வ நிகழ்ச்சியை நினைந்து அகமிக வுருகி அக்கணமே தேரிலேறித் திருநகர் நோக்கி அவன் விரைந்து வந்தான். வருங்கால் பாகன் செலுத்தும் வேக நிலையைக் கண்டு ஓகைமீக்கொண்டான். உரைபல கூறி உவந்துகொண்டாடினன்.

"கார்கண்ட கண்டர் திருவெங்கை வாணர் கனகவெற்பில்
போர்கண்ட மன்னவர், நல்வலவா! நம் புரவி நெடுந்
தேர்கண்டபோதில் இரிந்தார்; இனிமணித் தேரெதிர்சென்
நீர்கண்ட மீனென உண்மகிழ்ந் தேவரும் நேரிழையே"

என இன்னவாறாக எண்ணி மகிழ்ந்து அவ் அண்ணல் வந்து நண்ணியபொழுது இவள் உவந்துநோக்கி உயிர்தளிர்த்தெழுந்தாள். அவன் விரைந்து தழுவி மகிழ்ந்துகொண்டான். பிரிந்திருந்த காலையில் இவள் பசந்துகிடந்த நிலையை அவன் அறிந்து பரிந்தான். முயக்கிடைத்தண்வளி புகினும் பேதை கண் பசக்கும் என்பதை உலகம் இவள்கண் உணர்ந்து நின்றது. இவள் வயிற்றில் பிறந்த புதல்வனுக்கு அசமஞ்சதன் என்று பெயர்.

"சகரன் என்றுரைதரு தாமவேலினன்
துகழறும் எழிற் சுகேசினியைத் தோய்ந்து பார்
இகழசமஞ்சதன் என்னும் ஏந்தலை
மகவென உயிர்த்தனன் மகிழ்ந்துமுன்னமே" (பாகவதம்)

இவளது எழில் நிலையும், மகப்பேறும் இதில் குறித்துள்ளனகாணக.

**சேர்ந்த அணையில் சிறிதசைந்தேன் அவ்வளவில்**
**ஏந்திழையாள் ஏங்கினாள் எய்த்து.**

காதலன் கை சிறிதகலினும் காதலி கண் பசந்தழும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1240. காமர் விருந்தைதன் கண்ணுதல்கள் ஏன்பசந்த
கோமகன்முன் நீங்கக் குமரேசா—தாடமிகு
கண்ணின் பசப்போ பருவர லெய்தின்றே
ஒண்ணுதல் செய்தது கண்டு. (ய)

குமரேசா! கணவன் பிரிந்து நின்றபொழுது விருந்தை யின் கண்களும் நெற்றியும் ஏன் பசந்திருந்தன? எனின், கண்ணின் பசப்பு பருவரல் எய்தின்று ஒண்ணுதல் செய்ததுகண்டு என்க.

இது, கண்ணும் நுதலும் பசந்த நிலை கூறுகின்றது.

பருவரல் = துன்பம். எய்தின்றே = அடைந்தது. ஏகாரம் இரக்கம் தோன்ற நின்றது. ஒள் நுதல் = ஒள்ளிய நெற்றி. ஒளி தவழ்ந்து, எழில் சுரந்து விழுமிய நிலையில் நுதல் விளங்கி யிருந்த மையை அடை உணர்த்தி நின்றது. நுதல் செய்தது என்றது அது பசந்து பீட்ட பாட்டினை. பிரிவாற்றாமையால் மகளிர்க்கு உளவாம் நிறக் குலைவைக் கண் முதலிய உறுப்புக்களே முன்னுறக் காட்டும் ஆதலால் அவை ஈண்டு எண்ணுற நின்றன.

"பூவொடு புரையும் கண்ணும், வேய் என
விறல்வனப் பெய்திய தோளும், பிறை என
மதிமயக்குறூஉம் நுதலும், நன்று
நல்லமன் வாழி தோழி! அல்கலும்
தயங்குதிரை பொருத தாழை வெண்பூக்
குருகென மலரும் பெருந்துறை
விரிநீர்ச் சேர்ப்பனொடு நகாஅ வூங்கே" (குறுந்தொகை 226)

நாயகனோடு நகுமுன்கண் தோள் முதலியன நலனுடையனவாயிருந் தன; நகைத்துப் பிரிந்தபின் அவை நலனழிந் திழிந்தன என ஒருத்தி இதில் உளமறுகி உளைந்திருத்தல் காண்க. மேல், கண்பசந் தமை கூறினான்; இதில், அது கவன்று நொந்தமை கூறுகின்றான்.

ஒள்ளிய நெற்றி பசந்த நிலையைக் கண்டு கண்களின் பசப்புத் துன்பமுற்றது என்பதாம்.

பிரிவு நிலையில் தலைவியின் அவயவங்கள் மறுகி நின்ற நிலை யைத் தலைவன் கருதி யுருகிய படியிது.

காதல் மிகுந்து கனிந்து கலந்து அமளியில் துணைவியோடு அவன் அமர்ந்துகிடந்த ஒருநாள் இடையாமத்தில் சிறிது புடை நெகிழ்ந்து புரண்டான்; உடனே அவள் வெருண்டு விழித்து மேனி பசந்தாள்; அப் பசப்பு கண்ணைக் காட்டிலும் நெற்றியில் முந்துறக் கலந்து நின்றது ஆதலால் அந் நிலையினை நோக்கிக் கண் கவன்றது

என்பான் "நுதல் செய்தது கண்டு கண் பருவரல் எய்தியது" என்றான். இதனால் அவளது உறுப்புக்கள் ஒன்றைக் காட்டிலும் ஒன்று முற்பட்டு நலனழிந்து பிரிவில் உழந்திருந்த நிலை உணர நின்றது. இத்தகைய உழுவலன்புடையாளைப் பிரிந்து நிற்றல் பெரும் பாவமாதலால் விரைந்து சேரவேண்டுமென்று அவன் விழைந்தெழுந்துவந்தான் என்க.

பிரிந்து வருந்திய மகளிரது கண்ணும் நெற்றியும் விரைந்து பசக்கும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை விருந்தைபால் உணரப்படும்.

## கதை.

விருந்தை என்பவள் காலநேமி என்னும் அவுண மன்னனுடைய அருமைத் திருமகள் அருங்குலக் கற்பினள். யாரும் நேரிலாப் பேரழகோடு இவள் சீரமைந்திருந்தாள். இயற்கை யெழிலிலும், செயற்கை யறிவிலும் சிறந்திருந்த இவளைத் தெய்வ மங்கையரும் கைதொழுது நின்றார். உருவிலும் திருவிலும் உயர்ந்த பருவ மங்கையர் பலர் பணிந்து போற்றப் பெருமித நிலையில் இவள் மருவி யிருந்தாள். இவளது விழுமிய நிலையை வினவி யறிந்து சலந்தரன் என்னும் அசுரர் கோமான் ஆசைமீக்கொண்டான். அவன் அருந்தவத்தால் உலக முழுவதையும் தனக்கு உரிமையாகப் பெற்றுத் தன் ஆணையை எங்கும் செலுத்தி இசை மிகுத்து நின்றான். அவ் வீர வேந்தன் விழைந்துவந்து இப் பேரழகியை மணந்துகொண்டு நாரணம் என்னும் நகரிலமர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து அரசு புரிந்தான். இவளது இன்பச் செவ்வியில் அவன் மிகவும் இழிந்து கிடந்தான்.

"வாளினால் மிடைந்த கண்ணாள் வருமுலைத் தடத்துள்வைகித்
தோளினால் மிடைந்து புல்லித் தொண்டைவாய் அமுதமாந்தி"

என்றபடி நாளுநாளும் நயந்து மாந்தி அம்மீளிமொய்ம்பன் வியந்து வந்தான். இவளும் ஆருயிர்க் கிழமையோடு அவனை ஆதரித்து நின்றாள். அவன் சிறிது அகலினும் உறுதுயர் மிகுந்து இவள் உளங் கவன்றாள். உழுவலன்போடு இங்ஙனம் உடனுறைந்து

வருங்கால் இந்திரன்மீது அவன் போர்வேட்டெழுந்தான் அவனைப் பிரிந்திருக்கமாட்டாமல் இவள் பெருந்துயரடைந்தாள். இவளைத் தழுவித் தேற்றி விரைவில் வருவதாக விழைவுரை கூறி நயந்து நிறுத்தி அவன் விரைந்து போனான். பகையடங்க வென்றான்; பாசறையிகந்து பரிந்துவந்தான். ஆவி யடைந்த உடல்போல் அவனை யடைந்து இத் தேவி திகழ்ந்தாள். தான் பிரிந்து நின்ற பொழுது மெலிந்து பசந்து இவள் பொலிவிழந்திருந்ததை அவன் அறிந்து வருந்தினான்; அதன்பின் அகலாதிருந்தான். பின்னர் ஒருமுறை அமர்மேல் மூண்டு அமரர் அனைவரையும் அடங்கவென்று, அரியை யும் இகழ்ந்து, முடிவில் அரன்மீதும் அடல்கொண்டெழுந்தான். அவ்வமயம் இவள் அறிவுபல கூறி ஆர்வமொடுதடுத்தாள். அவன் யாதும் கேளாமல் வீர வெறியோடு விரைந்து சென்றான். சென்ற வன் பொன்று முதல்வனால் பொன்றி முடிந்தான். இன்றுவரும்; நாளை வரும்; என அவனை எண்ணி எண்ணி இவள் ஏங்கியிருந்தாள் இங்ஙனம் இவள் இனைந்திருப்ப இவள் மீது முன்னதாகவே திரு மால் பெருமால் கொண்டிருந்தார் ஆதலால் தம் கருத்தை நிறை வேற்றக் கருதிச் சலந்தரன்போல் வடிவமைந்து அரண்மனையி னருகிருந்த மருமலர்ச் சோலையுள் வந்து மறைந்திருந்தார்.

"இருந்திடும் எல்லையில் எமக் கற்புடை
விருந்தை என்றிடுமவள், வேந்தன் செய்கையைத்
தெரிந்திலள்; ஆற்றவும் சிந்தை நொந்து மெய்
வருந்தினள்; உய்ந்திடும் வண்ணம் காண்கிலாள்; (௧)

பரிதலுற்றிரங்கினள்; பதைத்துச் சோர்ந்தனள்;
ஒருதனித் திருக்கிலள்; உரையும் ஆடலள்;
திரிதலுற் றலவினள்; செய்வ தோர்கிலள்;
இருதலைக் கொள்ளியின் எறும்பு போன்றுளாள்." (௨)

(கந்தபுராணம்)

இங்ஙனம் பெருந்துயரோடு துணையினை நினைந்து சிறகிழந்த பறவைபோல் துடித்தலமந்து கிடந்த இவள்முன் கணவன்போல் வந்து மாயன் மாயஞ்செய்து நின்றான். இவள் யாதும் தேறாமல் நாயகன் என்றே நம்பி நயந்து களித்து வியந்தெழுந்தாள் அவன் உவந்து தழுவி உள் புகுந்துகொண்டு கள்ளமாகவே கலந்து மகிழ்ந் தான். இவளது போக வெள்ளத்தில் மூழ்கி நாளும் மோக மீதூர்ந் தான். இரவுபகலறியாது சுரதந்திளைத்துத் துய்த்துக் களித்தான்.

"புல்லிய விருந்தையைப் புணர்ந்து மாயவன்
எல்லியும் பகலும் ஓரிறையும் நீங்கலான்
அல்லியந் தேனுகர் அளியைப் போல் அவள்
மெல்லிதழமுதமே மிசைந்து மேவினான்" (கந்தபுராணம்)

இவ்வாறு மேவி வருங்கால் ஒருநாள் பகலில் அவன் மெய்ம் மறந்துறங்கினான். அவ் வுறக்க நிலையில் அவனது உண்மையுருத் தோன்றியது. தோன்றவே இவள் துணுக்கமீக் கொண்டாள்; அணுக்க அமர்ந்து ஆய்ந்து நோக்கினாள். வஞ்சகன் என்று நெஞ்சகம் தெளிந்தாள். ஐயகோ! என்று அஞ்சியயர்ந்தாள்; அருங் கற்பழிந்ததே! யென்று அலறித் துடித்தாள்; உலறிக் கடுத்து அவனை உருத்துச் சபித்தாள். அன்று இவள் பதைத்துக் சுழித்துப் பழித்துச் சபித்த படியை அடியில் பார்க்க.

"அருந்ததி யன்ன கற்பழிந்த தன்மையால்
வருந்தினள்; உயிர்த்தனள்; மாயம் யாவையும்
பொருந்திய தன்னுயிர்ப் போத நீர்மையால்
தெரிந்தனள் சீதரற்கு இதனைச் செப்புவாள்: (க)

பொற்புறு கணவனைப் போல வந்து எனைப்
பற்பகல் புணர்ந்தனை! பகைவர் மாயையால்
கற்புடை மனைவியைக் கவர்ந்து போக நீ
சொற்படு பழியினைச் சுமத்தி யாலென்றாள்." (கந்தபுராணம்).

இச் சாபமே பின்பு சீதையை இராவணன் கவர்ந்துபோதற்குக் காரணமாய் நின்றது. பிறர் மனை ஏகின் தன் மனை போகும் என்னும் இயற்கை விதி இங்கு எழ நேர்ந்தது. தெய்வமேயாயி னும் தான் செய்த வினைப்பயனை எய்தி நுகர்ந்தாலன்றி யாண்டும் உய்தியில்லை என்பதும் ஈண்டுணர நின்றது. காமத்தின் தீமையும், அதனை நிலைமீறிக் கொண்டவர் கொலையஞ்சார்; பொய் நாணார்; மானம் பேணார்; ஈனங்களைத் துணிந்து புரிவர் என்பதும் இதனால் அறிய நின்றன. இப் பதிவிரதை இவ்வாறு சாபம் கூறித் தன் மானங் குலைந்ததை நினைந்து நினைந்து மறுகிப்புலம்பி அருகே மூண்டு நின்ற எரியிற் பாய்ந்து ஆருயிர் தீர்ந்தாள். இவளது கற்புநிலையை வியந்து வானும் வையமும் வாழ்த்தி நின்றன. தன் கொழுநன் சிறிது பிரியினும் பசந்து மெலிந்து படருழந்தயர்ந்து பரிந்திருந்த இவள் அவன் இல்லை யென்றறிந்தவுடனே தானும் இல்லாமல்

போனதைப் புகழ்ந்து எல்லாரும் துதித்தார். காதலன் பிரிந்து போயின் கண்ணும் நுதலும் பசலை பூத்துக் காதலி கலுழ்ந்திருப்பள்; அவன் எய்தாதொழியின் அவள் இறந்து படுவள் என்பதை உலகம் இவள் பால் உணர்ந்து நின்றது.

கண்ணும் நுதலும் கவின்தோளும் ஒன்றினேன்று
முன்னம் பசந்த முனைந்து.

பிரிவில்அவயவங்கள் மறுகியிருந்தமை இதனால் கூறப்பட்டது.

## இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்.

காதலன் அயல் நீங்கின் காதலியின் கண்ணழகு நீங்கும். அது நிறங் குலைந்து நீர் சொரியும். அவள் தோள் மெலிந்துபடும். வளையல் கழன்று விழும். எழில் இகந்து விடும். அந் நிலைகளைக் கண்டு அவள் நொந்து கவல்வள். தன் நெஞ்சைத் தூதுபோக நேர்ந்துரைப்பள். பிரிந்துபோன அவனும் இவளைக் கலந்திருந்த காலையில் நிகழ்ந்தவற்றை யெல்லாம் நினைந்து நெடிது மயங்குவன். கண்கள் பசந்து கலுழ்ந்துழந்தைக் கருதி அயர்வன். நுதல் பசந்து நொசிந்துகிடந்ததை நொந்து புலம்புவன் என்பதாம்.

௱உ௪-வது உறுப்பு நலனழிதல் முற்றிற்று.

---

## 125-ம் அதிகாரம் நெஞ்சொடு கிளத்தல்.

அஃதாவது விரகநோய் மிகுந்து மறுகியிருந்த தலைவி அருகு நின்றவர் அகன்றபோது தன் நெஞ்சை நோக்கி நெகிழ்ந்துரைத்தல். கிளத்தல்=சொல்லல். "மஞ்சன் பிரிய நெஞ்சொடு கிளந்து, துஞ்சாதுழந்து துயரொடு புலம்பலும்" என்பதும் காண்க. புறத்தொரு துணையும் இல்லாமையால் ஆற்றாமை மீதூரத் தன் அகத்தொடு சொல்லி ஆற்றுகின்றாள் என்க. உடல் மெலிந்து படருழந்து அவயவங்கள் பொலிவிழந்து அயர்ந்தல மந்து ஆவி தவித்த பொழுது உளத்தோடு இங்ஙனம் உளைந்து உரைக்க நேருமாதலால் உறுப்பு நலனழிதலின் பின் இது வைக்கப்பட்டது.

1241. மாதிரத்தி னுவளியேன் மையல்நோய் கூர்ந்துநெஞ்சைக்
கோதுரைத்து நொந்தாள் குமரேசா—ஏதும்
நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே எனைத்தொன்று
மெவ்வநோய் தீர்க்கு மருந்து. (க)

இ—ள்.

குமரேசா! இரத்தினவளி என் மையல்நோய் மிகுந்து தன் நெஞ்சோடு புலம்பினாள்? எனின், நெஞ்சே! எவ்வநோய் தீர்க்கு மருந்து எனைத்து ஒன்றும் நினைத்து ஒன்று சொல்லாயோ என்க. இது, நெஞ்சை நோக்கி வஞ்சி யுரைக்கின்றது.

எவ்வம் = வருத்தம், துன்பம். இங்கு நோய் என்றது காம தாபத்தை. எவ்வகையினும் தீராமல் இடையறாது துயர் செய்கின்றமையால் எவ்வநோய் என்றாள். "இறைவனை நெகிழ்ந்த எவ்வ நோய் இவள் தீர" (நெய்தற்கலி 10) "எவ்வ நெஞ்சிற்கு ஏமமாக" (ஐங்குறுநூறு 393), "எவ்வந் தீர்ந்திருந்தாள்" (சிந்தாமணி 874) "கூட்டிடைப்பட்ட கோட்புலிபோல, வேட்டிடைப்பட்ட எவ்வப் பொழுதினும்" (பெருங்கதை 5, 3, 10) இவற்றுள் எவ்வம் உணர்த்தி நிற்றல் காண்க. இங்ஙனம் அடை கொடுத்தது நோயின் கொடுமையைத் திருத்தமாகமருத்துவற்குத் தெளிவுறுத்தவேண்டி.

எனைத்து ஒன்றும் = யாதாயினும் ஒன்றை. தீர்க்கும் என்று சுட்டியதனால் நோய் நீக்கத்தில் அவள் கொண்டுள்ள நோக்கம் தெளியலாம். நினைத்து = நன்றாக அறிந்து. இங்ஙனம் எச்சரித்தது கண்டபடி சொல்லிவிடலாகாதென்பது கருதி. கைகண்ட மருந்தாயிருக்க வேண்டும் என்பது கருத்து. ஒன்று என்றது சொல்லுவதில் எளிமை தோன்ற. பல என்றால் அதற்கு மலைவுதோன்றும் என்று இவ்வாறு தொடங்கினாள். சோல் என்று அதிகாரத்தோடு கட்டளையிடாமல் "சொல்லாயோ?" என நளினமாக வணங்கிய மொழியால் சொல்லியது இரங்கி நின்று உடனே அஃது இணங்கியருள என்க.

நெஞ்சமே! தீராத என் காம நோயைத் தீர்த்தற்குரிய யாதாயினும் ஓர் மருந்தை நீ ஆராய்ந்து சொல்லியருள் என்பதாம்.

பிரிவாற்றாமல் மறுகியிருந்த தலைவி ஒருநாள் அருகொருவரும் இல்லாத சமயம் ஆற்றாமை மீதூர்ந்து தன் நெஞ்சை நோக்கி நெகிழ்ந்துரைத்தபடியிது. அகத்துற்ற நோய்க்கு மருந்துகேட்கின்றாளாதலால் மனத்திடை வேண்டினாள். நெஞ்சு கேட்குமா? பேசுமா? அதற்குக் காது, வாய், முதலியன யாதுமில்லையே; உறுப்புணர்வில்லாத அதனிடம் உணர்வுடைய மகள் இப்படி உரையாடல் இயல்பாமோ? எனின், காம நோய் கொண்டபொழுது எவரும் மன மயங்கி நிற்பாராதலால் அவ்வமயம் அவர் எவர் கண்ணும் எவற்றினிடமும் இவ்வாறு உய்திவேண்டி உரைக்கநேர்வர் என்க.

"நோயும் இன்பமும் இருவகை நிலையில்
காமம் கண்ணிய மரபிடை தெரிய;
எட்டன் பகுதியும் விளங்க; ஒட்டிய
உறுப்புடையதுபோல், உணர்வுடையதுபோல்,
மறுத்துரைப்பதுபோல், நெஞ்சொடு புணர்த்தும்;
சொல்லா மரபி னவற்றொடு கெழீஇச்
செய்யா மரபிற் றொழிற்படுத் தடக்கியும்,
அவரவர் உறுபிணி தமபோலச் சேர்த்தியும்,
அறிவும் புலனும் வேறுபட நிறீஇ,
இருபெயர் மூன்றும் உரியவாக
உவமவாயிற் படுத்தலும், உவமமொடு
ஒன்றிடத்துஇருவர்க்கும்உரியபாற்கிளவி" (தொல்காப்பியம்)

தலைவன் தலைவி என்னும் இருவரும் காமம் கதுவிநின்ற பொழுது நெஞ்சுமுதலானவற்றோடு நேர்ந்து மொழிவர் என்பதை இதில் ஓர்ந்துகொள்க.

"ஊரவர்க்கெல்லாம் பெருநகை யாகி என்
ஆருயிர் எஞ்சுமன் அங்கு நீ சென்றீ
நிலவுமிழ் வான் திங்காள்! ஆய்தொடி கொட்ப
அளிபுற மாறி அருளான் துறந்த அக்
காதலன் செய்த கலக்குறு நோய்க்கு ஏதிலார்
எல்லாரும் தேற்றார் மருந்து" (நெய்தற்கலி 28)

என் எவ்வ நோய்க்கு மருந்து வேறு யாரும் தேறார் ஆதலால் நீயே கூறியருள் என்று திங்களை நோக்கி ஓர் மங்கை இதில் உரைத்திருத்தல் காண்க. ஆர்உயிர் எஞ்சுமன் = என் அரிய உயிர் போகா நிற்கும். போமுன் போந்து புகன்றருள் என்பது குறிப்பு.

காமம் நோய் என்றதனால் அதன் பரிகாரம் மருந்து என நின்றது. காம நோய்க்கு மருந்தாவது பிரிந்த காதலர் மீண்டு வந்து பொருந்தலேயாம். "நோய்க்கு மருந்தாகிய கொண்கன் தேரே" (ஐங்குறுநூறு 101). பிரிந்துபோன தலைவன் தேர் திரும்பி வரின் அதுவே இருந்த தலைவியின் எவ்வநோய்க்கு மருந்தாம் என இதில் அமைந்திருத்தலறிக.

"பூழ்க்கா லன்ன செங்கால் உழுந்தின்
ஊழ்ப்படு முதுகாய் உழையினம் கவரும்
அரும்பனி அச்சிரம் தீர்க்கும்
மருந்து பிறிதில்லை அவர் மணந்த மார்பே" (குறுந்தொகை 68)

என் காம நோய்க்கு எனது காதலர் மார்பே மருந்து; வேறொன்றுமில்லை என ஒரு தலைவி இதில் உளைந்து மொழிந்திருத்தல் காண்க. அச்சிரம் = முன்பனிக்காலம். அக் காலம் விரகதாபத்தை மிகுவிக்கும் ஆதலால் அதன் வெம்மைதோன்றக் குறித்தாள். காடைக்கால் போன்ற தாள்களுடைய உழுந்த நெற்றினை மான்கள் கவர்ந்துண்ணும் என்று அக் கால நிலையை வருணித்தது, விலங்கும் கூட இனத்தோடு அமர்ந்து நுகர்ந்து களிக்கும் பொழுது நான் மட்டும் எவ்வ நோயோடு தனித்து இருந்து கழிகின்றேனே எனத் தன் துயர் நிலையை அயலறிந்துகொள்ள இவ்வாறு உரைத்தாள் என்க. இதனால் அவளது அறிவும் உரையாடும் சதுரும் உணரலாகும். பூழ் = காடை. ஊழ்ப்படு = உதிர்ந்துபட்ட.

மணந்த மார்பே மருந்துஎன்றதனால் அவ்அருந்துணைவன்வரவில்லையானால் இவள் இறந்துபடுவள் என்பது உணர்ந்துகொளநின்றது.

"என்னா ராயினும் இனிநினை வொழிக
அன்ன வாக இனையல் தோழி! யாம்
இன்ன மாக நத்துறந் தோர் நட்பு எவன்?
மரனா ருடுக்கை மலையுறை குறவர்
அறியா தறுத்த சிறியிலைச் சாந்தம்
வறனுற் றார முருக்கிப் பையென
மரம்வறி தாகச் சோர்ந்துக் காங்கென்
அறிவும் உள்ளமும் அவர்வயிற் சென்றென
வறிதால் இகுளைஎன் யாக்கை; இனி அவர்
வரினும் நோய் மருந்து அல்லர்; வாராது
அவணா ராகுக காதலர்; இவண்நம்
காமம் படாஅ வருந்திய
நோய்மலி வருத்தம் காணன்மார் எமரே" (நற்றிணை 64)

இது பிரிவில் மறுகியிருந்த தலைமகள் ஒருநாள் தோழியிடம் மனமுடைந்து உரைத்தது. இங்ஙனம் இருந்தயரும்படி நம்மைத் துறந்து போன அவர் விரைந்துவந்தருளார்; என் அறிவும் மனமும் அவரிடம் போயின; உடல்மட்டும் வறிதே இங்குள்ளது; நோயாளி இறந்துபோனபின் மருந்து வந்ததுபோல் நாயுயிராய் நான் கழிந்துபோனபின் இனிமேல் அவர் இங்கு வந்தாலும் பயனில்லை; தாய் தந்தையர் முதலிய என் தமர்கண்டு வருந்தாவண்ணம் நான் இறந்து போகின்றேன்; என் போக்கு இப்படி முடிந்தது அந்தோ! என அக் குலமகள் இதில் நொந்து கூறியிருக்கும் நிலையைப் பார்க்க. மரவுரியை உடுக்கும் குறவர் சந்தன மரத்தின் பட்டையைச் சீவியபின் அதிலிருந்து இனிய நீர் உகுவதுபோல் தன் உடம்பினின்று உணர்வும் உள்ளமும் உகுந்துபோயின என அவள் உளைந்துரைத்திருக்கும் உவமையின் குறிப்பை யூன்றியுணர்ந்துகொள்க.

காம நோயின் கொடுமையும், அதற்குக் காதலனே மருந்து என்பதும், அவன் வந்தருளினாலன்றிக் காதலி உய்ந்துபடாள் என்பதும், பிறவும் இதனால் உணரலாகும்.

விரக நோய் மிகுந்தபொழுது காதலி உளத்தோடு உளைந்து புலம்புவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை இரத்தினவளிபால் உரைப்படும்.

## கதை.

இரத்தினவளி என்பவள் வசுபூதி என்னும் அரசனுடைய அருமைத் திருமகள். கந்தருவமரபினள். "செந்திருவும் அயல் நின்று செயலியல் கண்டுளம்வியந்து மயல் மீக்கொள்ள வந்தமடமங்கைஎன வருபுகழோடெழில்மிகுந்து வயங்கி நின்றாள்". போழகொடு இங்ஙனம் பெருகி நின்ற இவள் யாரையும் விரும்பாமல் அரசமாளிகையில் தனி அமர்ந்திருந்தாள். சந்திரலேகை, சித்திரலேகை, அனங்கலேகை என்னும் தோழியர் மூவர் இவளுடன் கூடியிருந்தார். அவர் உரிமையோடு உழையிருந்து ஊழியம் புரிந்துவர இவள் கலைகள்பல தெளிந்து தலைமையெய்தி நின்றாள்.

யாழிசை முரன்றும், ஏழிசை பயின்றும், அணிமலர் கொய்தும் குளிர்நீர் படிந்தும் களிமீக்கூர்ந்து களித்து வருங்கால் ஒருநாள் இரத்தினசூடன் என்னும் கட்டழகனைத் தெய்வ கதியாய்க் கண்டு மையல்மீக் கொண்டாள். அவன் சங்கசூடன் என்னும் நாகர் மன்னனுடைய அருமைத் திருமகன். அறிவு வீரம் அழகு இளமை முதலிய உயர் நலங்கள் யாவும் ஒருங்கமையப்பெற்றவன். அவ் அரசிளங் குமரன் மேல் ஆசை மிகுந்து இவள் அலமந் துழன்றுள். மாலைப் பொழுது வந்தது; வரவே மால்மீக் கூர்ந்தாள்; மறுங்கி மயங்கி யுருகி யுளைந்தாள்.

"பானிலாச் சொரியும் அந்தண் பச்சிளங் குழவித் திங்கள்
வானுலாய்த் திரிதல் நோக்கிக் காதல் மீதூர மாழ்கி
வேனிலான் பகழிபாய மெல்லணைப் புறத்து வீழ்ந்து
கானுலா மலர்மென் கூந்தற் கண்படை பொருந்திஞளே" (காசிகாண்டம்)

இங்ஙனம் அருந்துயில் கொண்டு அயர்ந்து கிடந்த இவள் கனவிடை அவனைக் கலந்து மகிழ்ந்தாள். களித்து விழித்தாள்; விழிக்கவே வெளியிலொன்றும் விழி யெதிர் காணுள்; பழியென நாணிப் பதைத் தெழுந்தாள்; பரிந்து நைந்தாள் அருந்துயரோடு அலமரலாஞள். அடியில் வருவன காண்க.

"சூழ்சுடர்க் கற்றை காலுந் துளங்கொளி இரத்தினசூடன்
காழிருட் கங்குல் மேய கனவினில் அழகு வாய்ந்த
பாழியந் தடந்தோள் வெற்பிற் பணைமுலை ஞெமுங்கப் புல்லி
யாழினேர் புணர்ப்பின் இன்பக் கடலகத்தழுந்திஞளே.

கனவெனக் கருதாது இன்பக் கடலிடைத் திளைத்து நாணி
நனவென விழித்தலோடும் நல்லிருட் பிழம்பு நீங்கிப்
பனியிரு விசும்பிற் செங்கேழ்ப் பரிதியஞ் செல்வன் தோன்ற
புனைசெய் மேகலையாள் காமம் பொறுக்கலாள் புழுங்கி நைந்தாள்")
(காசிகாண்டம்.

காம தாபத்தால் கடுந்துயரடைந்து இவள் கலங்கி நின்ற நிலையை இதனுல் அறிந்துகொள்ளலாம். இவ்வாறு உளைந்து கிடந்த இவளைத் தெய்வ அருளால் வந்து அவன் மணந்துகொண்டான். இவளது இன்பநலங்களிலாழ்ந்து அன்புமீதூர்ந்து யாதும்பிரியாமல் அவன் ஆதரித்து வந்தான். இரதியும் மதனும்போல் சூதபோகங் களை மாந்தித் தொடர்ந்து வருங்கால் அடர்ந்த படை வலியால்

பகையரசர் சிலர் மிகை கொண்டு நின்றார். அந் நிலையினை யறிந்து நெடுஞ்சினங் கொண்டு அடுபோராற்ற அவன் அகன்று போனான் இவள் பிரிவாற்றாது பெருந்துயரடைந்தாள். உணவுந் துயிலு மிழந்து கணமும் அவனையே கருதிக் கிடந்தாள். ஒளியிழந்த மணி போல் பொலிவழிந்து கிடந்த இவள் உளநிலை குலைந்து பலபல புலம்பினாள். தென்றலை அன்றிலைச் சீறி யிகழ்ந்தாள். கங்குலைக் கடிந்தாள். திங்களை எமன் என்று சினந்து திட்டினாள்.

"குறமுயலும் சிலகலையும் இழந்தொருமான் உயிரைக்
கொள்ளைகொள்ள எழுந்த மதிக் கூற்றே! ஆற்றாச்
சிறுதுயிலும் பெருமூச்சும் கண்டும் இரங்கலையால்
தெறுமறலி நீயே; இத் தெண்ணிலாவும்
எறியு நெடும் பாசமே; உடலுமறக் கூனி
இருள்நிறமு முதிர் நரையால் இழந்தாய் போலும்
நறு நுதலார் என்கொல் உனை மதுரேசர் மிலைச்சும்
நாகிள வெண் திங்கள் என நவில்கின்றாரே"

என்று இன்னவாறு பன்னிப் புலம்பி அயல் நின்றாரும் இரங்க இவள் இயல்குன்றியிருந்தாள். இனியன வெல்லாம் இங்ஙனம் இன்னாதனவாகத் துனி மிருந்து கிடந்த இவள் ஒருநாள் தனது மனத்தை நோக்கி அந்தோ நெஞ்சமே! இவ் அருந்துயர் தீர ஏதேனும் ஓர் மருந்துரையாயா? என வருந்தி மொழிந்தாள். "எவ்வ நோய் தீர்க்கு மருந்து எனைத்தொன்றும் சொல்லாயோ நெஞ்சே!" என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

வெங்காம வெம்பிணிக்கோர் மெய்ம்மருந்து நெஞ்சமே
எங்கேனும் உண்டோ இசை.

நெஞ்சொடு நேர்ந்து கிளந்தமை இதனால் கூறப்பட்டது.

---

1242. பேதையென்றேன் நெஞ்சைப் பிரபா வதியிகழ்ந்தாள்
கோதை புனைவேற் குமரேசா—நீதமுறு
காத லவரில் ராகநீ நோவது
பேதைமை வாழியென் னெஞ்சு. (உ)

இ—ள்.

குமரேசா! தன் காதலனைக் கருதி நின்ற நெஞ்சைப் பிரபாவதி ஏன் பேதை என இகழ்ந்து நொந்தாள்? என்னின், என்

நெஞ்சு வாழி! அவர் காதல் இலராக நீநோவது பேதைமை என்க.

அவர் என்றது கொழுநனை. இதுபொழுது பிரிந்துபோ யுள்ளமையால் அப் போக்கைச் சுட்டி அவர் என்றாள்.

நோவது = வருந்துவது. பேதைமை = அறியாமை.

வாழி என்றது உன் வாழ்வு நன்றாயிருக்கிறது எனக் குறிப் பால் இகழ்ந்துரைத்தவாறு.

மேல், வருந்துகின்ற எனக்கு ஓர் மருந்து சொல் என்றாள்; இதில் ஒன்றும் சொல்லாமல் காதலனையே நினைந்து கரைந்துள்ள மனத்தை இகழ்ந் துரைக்கின்றாள்.

என் நெஞ்சே! நம் மீது அன்பிலராய் அவர் அகன்று நிற்கவும் வந்தருளுவார் என்று அவரையே விழைந்து நீ கவன்று நிற்பது வீண் மடமை என்பதாம்.

பிரிந்துபோன கணவனை ஓயாமல் நினைந்து நினைந்து வருந்தி யுலைகின்ற மனத்தை நாயகி ஒருநாள் இகழ்ந்துரைத்தபடியிது.

அகன்று சென்ற அவன் அன்பு செய்து விரைந்துவந்தரு ளாமையால் "அவர் காதல் இலர்" என்றாள். காதலுடையராயின் நான் இப்படி நோதலடைந்து நொந்துபடவிட்டு ஒன்றும் நோக்கா திருப்பார்? என்று நுவன்று புலந்தாள். அருளின்றி அகன்று நிற்கும் அவரை வருவர் வருவர் என்று கருதி மனமறுகி யயர்வது மடமை என்பாள் "நீ நோவது பேதைமை" என்றாள்.

இங்கு இருந்துகொண்டு இங்ஙனம் எண்ணுதல வெண்ணி ஏங்கி வருந்துவதனால் ஒரு பயனும் உண்டாகாதாதலால் நாமே அங்குச் சென்று அவரைச் சேரவேண்டும் என்பது கருத்து.

பிரிந்த காதலனை நினைந்து நைந்து காதலி கரைந்துருகுவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை பிரபாவதி பால் உணரப்படும்.

## கதை.

பிரபாவதி என்பவள் சூரியகுலத் தோன்றலாகிய இரகு மன்னனுடைய அருமைத் திரு மனைவி. அர மடந்தையரும் அதி

சயித்து நோக்கத்தக்க அரும்பெற லுருவினள். பெருங்குண நிலையினள். அக் காலத்திருந்த அரசிளங் குமரிகளனைவரும் பாசி வணங்க இப்பெண்ணரசி எண்ணருஞ் சீரோடு இனிதமர்ந்திருந்தாள். "தண்மதி யனைய தவளவெண் குடைக்கீழ்த் தமனியத் தவிசிடையமர்ந்து மண்ணொடு விண்ணு மகிழ்வுறச் செங்கோல் மருவிய நள னெனு மன்னன்" என மாபெரும் புகழோடு மன்னியிருந்த அக் கோமகன் இக் குல மகளுடன் குலாவியிருந்து அலகில் போகங்களை நுகர்ந்து அக மகிழ்ந்து வந்தான். அறிவும் வீரமும் கொடையும் நீதியும் அவனிடம் குடிகொண்டிருந்தனவாதலால் அவனது ஆட்சி நிலை திசைமுகம் எங்கணும் இசை மூண்டு நின்றது. அரிய வேள்வி கள் பல புரிந்து அமரடங்கவென்று அமரரும் புகழ நிலவி நின்ற அவன் ஒருமுறை உலகநிலை காண உளம் விழைந்து நின்றான். அந் நிலையினை யறிந்து இவள் நெடுங் கவல் கொண்டாள். பிரிவஞ்சி அயரும் இவள் பெற்றியை யோர்ந்து பேணித் தழுவி விரைவில் வருவல் என உறுதி பல கூறி அரிதினிருத்தி அவன் அகன்று போனான். இவள் அப் பிரிவினை யாற்றாது பெருந்துயர் கூர்ந்து வருந்தி யிருந்தாள். அவன் வரவையே கருதி யுருகி யுளைந்தாள். கரணங்கள் யாவும் அவனிடம் ஓட மாணவேதனையோடு இவள் மறுகிக் கிடந்தாள். மதிப்பிரபை, மதனலேகை, வசந்தவதி என்னும் தோழியர் அருகு நின்று ஆற்றி வந்தார். எவ்வளவு தேற்றி வந்தும் இவள் ஆற்றுதலமந்தாள். இடையே வசந்த காலம் வந்தது. அரண்மனையருகே அழகுற அமைந்திருந்த இனிய பூஞ்சோலையுள் சந்திரகாந்தக் கற்களால் சமைத்திருந்த சுந்தரமான வசந்த மாளிகையில் இவளை எழுந்தருளச்செய்து பாங்கியர் பக்கம் நின்று பரிவாற்றி வந்தார். சண்பகம் அசோகம் சந்தனம் மகிழம் முதலிய இள மரங்கள் குளிர்தளி ரீன்று, நறுமலர்கான்று எழிலுறநின்ற அப் பொழிலகம் விரகதாபத்தை மிகுத்து மேலும் இவட்கு வெந்துயர் விளைத்தது. செங்காலன்னமும், பைங்காற் கிள்ளையும், மயிலும், குயிலும் இயல் துணையோடு மருவி மகிழும் அப் பருவக் காட்சி பிரிவிலுள்ள இவட்குப் பரிபவமா யிருந்தமை யால் தனது அருந்துணை வரவில்லையே என்று பெருங் கவலை கூர்ந்து வருந்தி யுளைந்து பாங்கியரிடம் பரிந்து புலம்பினள்.

"மறலித் திசையில் மலயாசலம் என
இருத்திய தாருத்திகொண் டிளங்கால் பரப்பிக்,
காவலைப் பல்லவக் கனல்நா அசைப்பக்,
குறைவறு குயில்வாய்க் குறட்டினில் அடக்கிப்,
பொறிதிகழ் அரிக்கரி அதனிடைச் சொரிந்துள்
இசைத்திடு மஞ்சரிப் பசைக்கோல் அசைத்து,
மத வீரனுக்கு வசந்தக் கருமான்
பனிமலர்ச் சாயகம் பண்ணி நீட்டினன்;
இன்னமும் வந்திலர் கேள்வர்
புன்னையங் கருங்குழல் அன்னமென்னடையே!"

என இன்னவாறு தன்னிலை சூழ்ந்து பன்னிப் புலம்பி அம் மன்னனையே எண்ணி மறுகிக் கிடந்த இவள் ஒருநாள் தன் நெஞ்சை நோக்கி நெகிழ்ந்திகழ்ந்தாள். வாரதவரை வருவர் வருவர் என்று கருதி யுருகி யுளைகின்ற மனமே! உனக்கு யாதும் அறிவில்லையா? என மறுகி மொழிந்தாள். "அவர் காதல் இலராக நீ நோவது பேதைமை" என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள். பின்பு அக் குலமகன் வந்தான்; கூடி மகிழ்ந்தான்; இவள் ஓர் தலைமகனைப் பயந்து தழைத்தினிதிருந்தாள் அம் மகனே அச மகாராசனாய் அகிலமும் புரந்து தசாதனைப் பெற்றவன்.

"திசைவிளங்க நல்லறத்தினை நிறுவிய செங்கோல்
இசைதரும்படி செலுத்திய ரகு வெனும் இறைவன்
அசன் எனும் பெயர் அரசனை அளித்தனன்; அசனும்
தசரதன் தனைத் தந்தனன் மூச்சகம் தளிர்ப்ப" (பாகவதம்)

இதில், இவளுடைய கணவனும் மகனும் பேரனும் கலந்து நின்றுள்ளமை காண்க. இதனால் இவள் இராமனுக்கு நாலாவது தலைமுறையில் மேலோங்கி யிருந்தமை புலனும். இவளது உழுவலன்பும் கற்பும் உலகமெங்கும் புகழ நின்றன.

காதலிலார் பின்போய்நீ கண்டதென்ன நெஞ்சமே
ஏதமொன்றே அந்தோ இழிவு.

விழைந்துபோன நெஞ்சை இகழ்ந்து நின்றமை இதனால் கூறப்பட்டது.

1243. நாதனைமுன் உள்ளிநின்ற நன்னெஞ்சை விந்துமதி
கோதுரைத்தாள் என்னே குமரேசா—நீ தான்
இருந்துள்ளி யென்பரித னெஞ்சே பரிந்துள்ளல்
பைதனோய் செய்தார்க ணில். (ங)

இ—ள்.

குமரேசா! தன் கணவனை உள்ளி நின்ற நெஞ்சை விந்துமதி ஏன் எள்ளி நொந்தாள்? எனின், நெஞ்சே! இருந்து உள்ளிப் பரிதல் என்? பைதல் நோய் செய்தார்கண் பரிந்து உள்ளல் இல் என்க. இது, கருதிய நெஞ்சிற்கு அறிவு கூறுகின்றது.

உள்ளி = உள்ளூற நினைந்து. எண்ணல், நினைத்தல் களினும் உள்ளல் மிக உறுதியானது. அவை மனத்தினடியாகக் கிளைப்பன; இது, சித்தத்தினடியாய்ச் செழித்து நிற்பது. அந்தக் கரணங்களுள் ஆழ்ந்த சிந்தனையாய் அமர்ந்து நின்றமையால் உள்ளி என்றாள். பரிதல் = உருகி வருந்தல். உள்ளல், பரிதலுக்குக் காரணமாதலின் அது முன்னுற நின்றது.

பிரிவிலுள்ள காதலனை நினைக்க நினைக்க நெஞ்சம் நெடுந்துயராய் நீண்டு நிற்கும் ஆதலால் அந் நோய் நிலையை இங்ஙனம் நுவன்று காட்டினாள்.

" கருங்கோட்டுப் புன்னைத் தங்குந் துறைவற்குப்
பசந்து நுதலழியச் சாஅய்
நயந்த நெஞ்சம் நோய்ப்பா லஃதே" (ஐங்குறுநூறு 161)

துணைவனை நினைந்த நெஞ்சம் நோய்வாய் இனைந்துபடும் என ஓர் தலைமகள் அலமரலோடு இதில் உணர்த்தி நிற்றலறிக.

பைதல் = வருத்தம், துன்பம். நோய் = விரகதாபம். மெய் நிறங் குலைத்து, வெம்பசலை விரித்து, உய்திறமின்றி உழலச் செய்கின்றமையால் காமம் பைதல் நோய் என்றாள். உடல் நோயினும் கொடியதாய் உள்ளங் கவற்றி உயிரைச் சுடுகின்ற அதன் கொடுமையை அடை யுணர்த்தி நின்றது. தனது விரக வேதனை நாயகன் பிரிவினால் நேர்ந்ததாதலால் அந் நோயை அவன் செய்ததாகக்

குறித்தாள். "விளியாநோய் செய்திறந்த அன்பிலவனை" (நெய் தற் கலி 27) என்பதும் காண்க.

பரிந்து உள்ளல் = இரங்கி நினைத்தல். பரிவு என்பது மனப்பற்றைக் குறித்துவரும். "பரிவும் ஆர்வமும் ஈரமும் பற்றே" (பிங்கலந்தை)

மேல், காதல் இலர் என்றாள்; இதில், அவர் நோதல் செய் தார் என்கின்றாள்.

என் நெஞ்சே! வீணே நீ இங்கு இருந்துகொண்டு காதலரை நினைந்து வருந்துவதனால் யாது பயன்? இத் துயரஞ் செய்துள்ள அவரிடம்நம்மேல் இரங்கிவரக் கருதுதல் யாதும் இல்லை என்பதாம்.

தனியே வருந்தியிருந்த காதலி தன் நாயகனை விடாமல் விழைந்துழன்ற மனத்தை முன்னிலைப்படுத்தி இன்னுரை யாடிய வாறிது.

பிரிவுநிலை அறியாத பேதையாயிற்றே! அவள் நிலை எவ்வா றாயிற்றோ? என அவர் எண்ணி இரங்கி யிருந்தால் தண்ணளி யோடு இங்கு நண்ணியருள்வர்; அங்ஙனம் விரைந்துவந்தருளாமை யால் "பரிந்து உள்ளல் அவர்கண் இல்லை" என்றாள். இங்ஙனம் அன்பின்றி அகந் திரும்பி ஆண்டு அமர்ந்து நிற்கும் அவரை ஈண்டு இருந்து எண்ணி ஏங்குவதால் என்ன பயன் என்பாள் "இருந்து உள்ளல் என்?" என்றாள்.

நம்மை மறந்திருப்பாரை நாம் மறந்துவிட வேண்டும்; இல்லா விட்டால் மானங் கெட்டுப்போய் அவரிருக்கு மிடத்தை யடைந்து மருவிக்கொள்ள வேண்டும்; இவ் இரண்டுள் ஒன்றைத் துணிந்து செய்யாமல் இங்ஙனம் இருந்து வருந்துவது பெரும் பேதைமை என்பது குறிப்பு.

நெஞ்சொடு இவ்வாறு நேர்ந்துரைத்தது நினைப்பு நீடிக் காம நோயை விளைத்து நிற்கும் அதன் நிலையை நோக்கி.

"கானல் மாலைக் கழிப்பூக் கூம்ப,
நீனிறப் பெருங்கடல் பாடெழுந்து ஒலிப்ப,
மீனார் குருகின் மென்பறைத் தொழுதி
குவையிரும் புன்னைக் குடம்பை சேர,

அஞ்சு வண்டார்க்கும் அல்குறு காலைத்,
தாழை தளரத் தூங்கி மாலை
அழிதக வந்த கொண்டலொடு கழிபடர்க்
காமர் நெஞ்சம் கையறு பினையத்
துயரம் செய்துநம் அருளார் ஆயினும்
மறுஅ லியரோ அவருடைக் கேண்மை;
அளியின் மையின் அவணுறை முனைஇ,
வாரற்க தில்ல தோழி! கழனி
வெண்ணெல் அரிநர் பின்றைத் ததும்பும்
தண்ணுமை வெரீஇய தடந்தாள் நாரை
செறிமடை வயிரிற் பிளிற்றிப் பெண்ணை
அகமடற் சேக்குந் துறைவன்
இன்றுயில் மார்பிற் சென்ற என் நெஞ்சே" (அகம் 40)

இது, பிரிவாற்றாத தலைவி தன் நெஞ்சு நிலையைக் குறித்துத் தோழிக்குச் சொல்லியது. கானல் அருகுள்ள கழிப் பூக்கள் கூம்ப, கருங்கடல் முழங்க, பறவைத் தொகுதிகள் சேக்கையை அடைய, எல்லாப் பிராணிகளும் தத்தம் பதிகளில் தங்கி இன்புறும் காலமாகிய மாலைப் பொழுதில் காதலனிடம் தன் நெஞ்சம் சென்றது என அவள் தஞ்சமின்றி இதில் தவித்திருத்தல் காண்க. துயரம் செய்து நம்மை அருளாதொழிந்த அவனை மறவாமல் போய் அங்கு மன்னி நின்றது ஆதலால் அது இங்கு வாராதொழிக என நெஞ்சை அவள் வைதிருக்கும் அழகு பார்க்க. கொண்டல் = கீழ் காற்று. பிரிந்த மகளிர் வருந்தி அயரும்படி போந்தமையான் "அழிதக்கவந்த" என அவ் வளிநிலையைக் குறித்தாள். கழனியில் நெல் அரிபவர் பறையினை முழக்க, அவ் ஒலியைக் கேட்டு நாரை பயந்து அயல் நிலத்துள்ள பனையில் தங்கும் துறைவன் என்றது தன் மனம் இடம் பிரிந்துபோயுள்ள இயல்பினை நோக்கி. இதனால் அவளது அறிவு நிலையும், பரிவுரையும், நெஞ்சு பறிபோய் நின்ற திறமும், பிறவும் இனிது புலனும். பெண்ணை = பனை. பிளிற்றி = ஒலித்து. தொழுதி = தொகுதி. குவை இரும் புன்னைக் குடம்பை = திரண்ட பெரிய புன்னைமரச் சேக்கை. பிரிந்துள்ள காதலிகள் பரிந்து புலம்பும் திறன் இதனால் அறிந்துகொள்ளலாம்.

தூரம் போயுள்ள கணவனை நினைந்து மகளிர் நேரம் போகாமல் நெடிது பிதற்றுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை விந்துமதிபால் உணரப்படும்.

கதை.

விந்துமதி என்பவள் சசிவிந்து என்னும் சந்திரகுல அரசனுடைய அருமைத் திருமகள். அரும்பெற லழகினள். இவளது அங்க அமைதியும் சமுதாய சோபையும் எங்கணும் வியந்து பேசநின்றன. பருவ மெய்தியும் ஒருவரையும் வரையாமல் பெருமிதநிலையில் இவள் தனியமர்ந் திருந்தாள். வேந்தர் பலர் விழைந்து வந்தும் இவ் ஏந்திழை எவரையும் எண்ணு திகழ்ந்தாள். தகுந்த வரனை நேர்முகமாகத் தெரிந்துகொளச் சூழ்ந்து சுயம்வரம் குறித்து இவள் தந்தை உலகெங்கும் ஓலை போக்கினன். போகவே காவலரனைவரும் ஆவல்கொண் டெழுந்தார். வண்டினங்கள் தேனைய வாவி வருதல்போல் மண்டலத்தரசர்கள் இவ் ஒண்டொடியை விரும்பி ஒருங்கு வந்தடைந்தார். வதுவை நாள் வந்தது. அதி விசித்திரமா யலங்கரித்திருந்த கலியாண மகா மண்டபத்தில் அரசரெல்லாரும் ஒருங்கு திரண்டு நெருங்கி நெளிந்தார். மனக் கடுங் காதல் விம்ம, மாலை தாழ் புயங்கள் வாட எனக்கு எனக்கென்று தனித்தனி ஏங்கி யிருந்தார். அவ் வமயம் தோழியர் அருகு சூழ்ந்து வரத் திருமகள்போல் எழுந்து அம் மணிமாளிகையினிடை இவள் எழில் திகழ வந்தாள். கண்ணும் மனமும் களிப்புற இப் பெண்ணரசி வந்ததை விண்ணும் வியந்தது.

"வெண்ணிலாக்கற்றை விளிம்புவிட் டெறிக்கு மணிவடம் சுமந்தறவீங்கித்
தண்ணறுங் கலவைச் சேற்றினு ளலர்ந்த தாமரை முகிழ்நலங் கவற்றி
வண்ணம வீற்றிருந்து சுணங்கு பூத்தலர்ந்த வருமுலை யுலகமோ ரேழும்
உண்ணிய எழுந்தகூற்றிரண்டென்ன உத்தரீகத் திடை ஒளிர்; (க)

வாளெனப் பிறழ்ந்து, கடைக்குழை எறிந்து, மதர்த்தரி பரந்துயிர் பருகி,
ஆள்வழக்கறுக்கு மதர்விழிக் கூற்றம் ஆடவரகலுமின் என்னத்
தாளதாமரையிற் பெய்த பொற்சிலம்புந் தவளைவாய்ச் சதங்கையுமாற்ற,
களிறும்பிடியும், அன்னமென் பெடையும் நிகரழிந்திடத்தனி நடந்தே."

என்றபடி நடந்துவந்த இவளைக் கண்டவுடனே மன்னரெல்லாரும் மால்கொண்டுழந்தார். இப் பேரழகியை எய்தும் பேறு இங்கு வந்துள்ளபேர்களில் யாருக்கு எய்துமோ? என்று அலமந்துளைந்தார்

"முருந்துறழினிய மூரல் முகிழ்முலைப் பசியவேய்த்தோட்
கருந்தடங் கண்ணி செவ்வாய் கமழ்திரை அமிழ்த மாந்த
அருந்தவம் புரிந்தோர் மண்ணில் அரசரோ? அமரரேயோ?
தெரிந்தில மென்ன மாழ்கித் தெருமால் எய்தி நிற்பார்"

என்றவாறு அங்கிருந்தவரனைவரும் இறும்பூதெய்தி எதிர்நோக்கி நிற்ப இவள் அவை நடுவிருந்த ஒளிர்மணி மேடையில் எழுந்து நின்று அரச குழுவில் விழி பாப்பித் தெய்வம் பராவித் தன் கையி லிருந்த மாலையை ஓர் குலமகன் மீது குறித்து வீசினாள். அது குறி தவறாமல்போய் அவன் கழுத்தில் விழுந்தது. கலை மதிபோல் அவன் களித்தெழுந்து வந்து தன் கழுத்திலிருந்த மாலையை இவள் கழுத்தில் சூட்டினான். அவனது இளமை எழில்களும் பெருமித நிலையும் கண்டு இக் குலமகளுக்குத் தகுந்த தலைமகன் அவனே என்று அனைவரும் கொண்டாடி நின்றார். அவன் சூரியகுலத் தோன்றல்; யுவனாச்சுவன் என்னும் முடி மன்னனுடைய அருமைத் திருமகன்; அறிவு பொறுமை ஆண்மை முதலிய உறுதி நலங்க ளெல்லாம் ஒருங்கே யுடையவன். அவன் பெயர் மாந்தாதா என்பது. அவ் அரசிளங் குமரன் தனக்கு மருகனாயமைந்ததை நினைந்து சசிவிந்து பெரிது மகிழ்ந்து பெருஞ் சிறப்போடு அவனுக்கு இவளை மணஞ்செய்து கொடுத்தான். அவன் உவந்து கொண்டு போய்த் திருவயோத்தியை யடைந்து அரிய போகங்களை நுகர்ந்து இவளை யாதும் அகலாமல் ஆர்வமுற்றிருந்தான். அவனது ஐம் புலன்களுக்கும் ஆரா இன்பநிலையமா யமர்ந்து இவள் அன்பு செய்து வந்தாள். வருங்கால் இமயமலைச் சாரலில் அருந்தவம் புரிந்துவந்த சாமகானர் என்னும் முனிவரிடம் அரிய கலைகள் சில அறிந்து வரவிரும்பி அவன் அகன்றுபோனான். இவள் பெருந் துயரோடு வருந்தியிருந்தாள். பிரிவாற்றாமல் மறுகியுள்ள இவளை அருகிருந்து பலர் ஆற்றித் தேற்றினர். பதுமசேனை பாகீரதி என்னும் தோழியர் இருவர் நாளும் நன்கு போற்றிவந்தார். வந்தும் இவள் சிந்தை நொந்து தெருமந்து நின்றாள். இடையறாமல் அவனையே கருதிநின்ற இவள் ஒருநாள் தன் நெஞ்சை எதிர்நோக்கி இகழ்ந்தாள். நம்மேல் தண்ணளி செய்துவாராத அவ் அண்ணலை எண்ணி இங்கிருந்து நோவதனால் என்ன பயன் மனமே! நாமே அங்குப் போவோம் வா என்று புலம்பலானாள். "பரிந்து உள்ளல் அவர்கண் இல்லை ஆதலான் நெஞ்சே நீ இருந்து உள்ளிப் பரிதல் என்? என்பதை உலகம் அறிய இவள் உணர்த்தி நின்றாள். பின்பு அக் கோமகன் வந்தான்; இவள் கூடி மகிழ்ந்தாள். இவ் அரசியோ

டமர்ந்து அகிலமும் புரந்து மக்கட்பே றெய்தி மிக்க சீர்த்தியோடு அவன் மேவி யிருந்தான்.

"வந்தெழு மாந்தாதா எனும் பெயரோன் வையகம் பொதுவறப் புரந்து
விந்தைசேர் புயத்தான் எனுஞ் சசிவிந்தின்வீ றுசால் மகள் விந்துமதியைக்
கொந்தவிழலங்கல் சூட்டினன் வேட்டுக் குலவெழில் மைந்தர் மூவரையும்
செந்தளிருருவத்தைம்பதெண்ணினராம்சேயிழை யாரையும்அளித்தான்".
(பாகவதம்.)

இவளை மாலை சூட்டி மணந்து மகிழ்ந்து வையகம் புரந்து மகப்பே றெய்தி மிகப் பேருடன் அம் மன்னன் இருந்த நிலையை இதன் கண்ணும் அறிந்துகொள்க. பிரிவாற்றாமல் உழுவலன்போடு இவள் உருகிப் புலம்பியபடியை அனைவரும் உணர்ந்து வியந்தார்.

உள்ளன்பி லாரைநீ உள்ளியுள்ளி யிங்கிருந்தால்
உள்ளமே என்னும் உணர்.

எண்ணிய நெஞ்சை எதிர்ந்து மொழிந்தமை இதனால் கூறப்பட்டது.

1244 காதலனைக் காணக் கருதிநெஞ்சை வேண்டிநின்றாள்
கோதைநங்கை என்னே குமரேசா—போதலர்ந்த
கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே யிவையென்னைத்
தின்னு மவர்க்காண லுற்று. (ச)

இ—ள்.

குமரேசா! தன் கொழுநனைக் காண விரும்பி வெண்காட்டு நங்கை ஏன் நெஞ்சினை வேண்டிநின்றாள்? எனின், நெஞ்சே கண்ணும் கொளச் சேறி அவர்க் காணலுற்று இவை என்னைத் தின்னும் என்க.

இது, கண்களையும் உடன் கொண்டுபோ என்கின்றாள்.

கண்ணும் என்பதில் உம்மை இறந்தது தழீஇயது. நெஞ்சம் முன்னமே சென்றிருந்தமையால் அதனோடு உம்மை கொடுத்து இதனையும் கூட்டினாள்.

கொளச்சேறி = கொண்டுசெல்வாயாக. இகர விகுதி றகரம் ஊர்ந்து எதிர்காலம் பற்றி ஏவலில் வந்தது "முன்னிலைக் கிளவி இஐ ஆய் எனவரூஉ மூன்றும், ஒப்பத் தோன்றும் ஒருவற்கும் ஒன்றற்கும்" (தொல்காப்பியம்)

அவர்க் காணல் உற்று = அவரைக் காண விரும்பி. அவர் என்றது இப்படி என்னைத் துயருற இருத்திவிட்டுத் தூரம்போயுள்ளாரே அப் பேரன்பாளர் எனப் புலந்துரைத்தவாறு

இவை = இக் கண்கள் முன்னுற அணுகியுள்ளமையான் அண்மையில் சுட்டினுள். அவரைக் காட்டு காட்டு என ஓயாமல் அரித்து என்னைத் தொந்தரவு படுத்துகின்றதென்பாள் "தின்னும்" என்ருள். காட்சியில் விதுப்புற்றுக் கண்கள் நின்ற நிலை இதனுல் உணரலாகும். நம்மை விரும்பி வாராதவரை வருவர் வருவர் என வீணே விழைந்து விழைந்து இருந்துழல்வதனுல் யாது பயன்? வேண்டுமானுல் அவரிடம் விரைந்துபோ என்று முன்பு நெஞ்சை நோக்கி நெகிழ்ந்துரைத்தாள்; இதில் அங்ஙனம் போகும்போது கண்ணையும் கூட்டிக்கொண்டுபோ என்கிருள்.

நெஞ்சே! இக் கண்களையும் நீ உடன் கொண்டுபோ; இல்லையாயின் அவரைக் காண விரும்பி என்னைத் தின்னுவதுபோலத் தினமும் இவை வருத்தும் என்பதாம்.

கணவன் பிரிந்துபோன பின் தனியே வருந்தியிருந்த தலைவி, தன் மனத்தை நோக்கி உரைத்தபடி யிது.

தான் அடங்கேயிருந்தாலும் தன்னை மீறி ஓயாமல் அவனையே நினைந்து நினைந்து மனம் நெடிது ஓடியது; கண்களும் அவனைக் காண அவாவி இடையருது கரைந்திருந்தன ஆதலால் நெஞ்சையும் கண்ணையும் இங்ஙனம் நேர்ந்துரைத்தாள். இவளுடைய கரணங்கள் காதலனை நாடிக் கரைந்துருகி நின்ற நிலை இதனுல் உணர்ந்து கொளலாம். என்னைக் கொண்டுபோ, எனக்குக் காட்டு என்னுமல் கண்ணைக் கூட்டிப்போ என்றது தன்னைச் சொல்ல நாணி. இவ்வாறு சமர்த்தாக வுரையாடல் மகளிர்க்கு இயற்கையாம்.

பிரிந்து போகாத பொறிகளைப் போவதாகக் குறித்து முன் னிலையில் விளித்து இன்னனம் உரைத்தது தன்னிலை யிழந்து அவள் தவித்துள்ளமை யான் எனக.

பிரிவில் உருகியுள்ள மகளிர் கருதிய காதலனைக் காண விழைந்து அருகில் நேர்ந்த பொருள்களிடமெல்லாம் பலவாறு மறுகிப் புலம்புவர். ஒன்று அடியில் வருவது காண்க.

"பங்கு செறிந்தன்ன பல்கதிரிடை யிடைப்
பால்முகந் தன்ன பசுவெண் ணிலவின்
மால்பிடர் அறியா நிறையுறு மதியம்!
சால்பும் செம்மையும் உடையை யாதலின்
நிற்கரந் துறையும் உலகம் இன்மையின்
எற்கரந்துறைவோர் உள்வழி காட்டாய்;
நற்கவி னிழந்த என் தோள்போற் சாஅய்ச்,
சிறுகுபு சிறுகுபு செரீஇ,
அறற்கரி பொய்த்தலின் ஆகுமோ அதுவே?" (நற்றிணை 196)

இது, பிரிவாற்றாத தலைமகள் கலை மதியை நோக்கி யுரைத்தது. மேகங்களின் மீது படர்ந்து, பூரண கலைகளோடு பொலிந்து விளங்குகின்ற ஓ சந்திரனே! நீ நல்ல சீர்மையும் நேர்மையுமுடை யவன்; நீ அறியாத இடம் உலகில் ஒன்றுமில்லை; ஆதலால் என்னைப் பிரிந்துபோன கணவர் உறைந்துள்ள இடத்தைக் காட்டமாட் டாயா? அங்ஙனம் விரைந்து காட்டாதமையினாலே தான் என் தோள்போல் மெலிந்து, சிறிது சிறிதாய்த் தேய்ந்து, பொலிவு குன்றி யுழல்கின்றாய்! நெஞ்சறிந்ததைச் சொல்லாமல் பொய்த்ததனாலேதான் கண்டதையும் காட்டமாட்டாமல் கண்ணழிந் தழிகின்றாய் போலும் என அவள் இதில் இகழ்ந்துரைத்திருக்கும் நிலையைப் பார்க்க. மால் = மேகம். பங்கு = பல கூறுகள். இனிய இயல்புடைய திங்களை இவ்வாறு இளித்துக் கூறியது விரக வேதனை யால் எனக.

"வருமதன் கொடியன் என்பாள்; வரிக்குயிற்கு ஆற்றே னென்பாள்;
ஒருமதி முனியேல் உன்னைக் கும்பிடு கின்றேன் என்பாள்;
ஒருவரும் வெங்கை யீசற்கு உரைப்பவர் இலையோ! என்பாள்
முருகலர் அணைதீ தென்பாள்; மொய்குழல் மையல்கொண்டே."
(திருவெங்கைக்கலம்பகம்)

தன் காதலனையே கருதி யுருகி ஒரு மாது இதில் கலங்கி யிருத்தல் காண்க.

பதிவிரதையின் பொறி புலன்கள் யாவும் பதியினிடமே ஓடிப் பதிந்து நிற்கும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வெண்காட்டு நங்கைபால் உணரப்படும்.

## கதை.

வெண்காட்டு நங்கை என்பவள் கங்கன் என்னும் குறுநில குரிசிலுடைய அருமைத் திரு மகள். பொறையிலும் நிறையிலு பொற்பிலும் சிறந்தவள். இவளது எழில் நிலையை வினவி யறிந்து "பரஞ்சோதியார் என்னும் அருந்திறலாளர் மிக விழைந்து நின்றார் அவர் சோழ நாட்டிலே, செங்காட்டங்குடி என்னும் ஊரிலே ஓ சிறந்த வீரக்குடியில் பிறந்தவர். உயர்ந்த கலைகள் பல தெளிந்தவர் வேல் வாள் முதலிய படைக்கலப் பயிற்சியில் மிகவும் வல்லவர். அந் நாட்டு மன்னனுக்குச் சேனைத் தலைவராய்ச் செழித்து நின்றவர். அவ் வீரமகனார் வேறு மகளிர் யாரையும் விழையாமல் இவள் மீதே பேராவல்கொண்டு பெருகி நின்றார். "படைக்கடல் கடந்த என் பாடெல்லாம் இவள் தன் கடைக் கண்ணால் உடைந்து கழிந் தொழிந்ததுவே" என அவர் மொழிந்திரங்கினார். அவரது மயல் நிலையை அயலு மறிந்தது; அதனால் அலரும் எழுந்தது.

> "மண்காட்டு படை மன்னர் மகிழ் தூங்கஅமர் தூங்கி
> விண்காட்டு புகழோடு மேய பரஞ்சோதியார்
> பண்காட்டு மொழிமடவார் பணிகாட்ட இனிதமர்ந்த
> வெண்காட்டு நங்கை தனை விழைந்து வெளி காண நின்றார்."

இங்ஙனம் நின்ற அவரது நிலையினை யறிந்து தகுந்த அறிஞர் சிலர் இவள் தந்தையிடம் வந்து தாம் வந்த வகையை வழியுடனுணர்த் தினார். அவன் மகளிடஞ் சென்று தகவுடனுசாவினான்; முன்ன தாகவே அவரது குண நலங்களை யறிந்து மணமகனாக நினைந்து தெய்வம் பராவி எய்துவதை எதிர்நோக்கி இருந்தாளாதலால் இச் செய்தி கேட்டவுடன் உய்திவந்ததெனெ உளமிக மகிழ்ந்தாள். அவ் வுளவினை யோர்ந்து அவன் உவந்துவந்து உறுதி கூறி விளை தழைத்து மிகுந்த சிறப்போடு அவருக்கு இவளை மணஞ்செய்து

கொடுத்தான். அரும் பெற லமிர்தம் அடைந்தவர்போல் இவளை உவந்துகொண்டு போய் இணைபிரியாமல் உடனமர்ந்திருந்து சிறந்த போகங்களை நுகர்ந்து அறம்பல புரிந்து அவர் அகமிக மகிழ்ந்தார். இவளும் குறிப்பறிந்து விருப்புற நடந்து அவருக்கு இன்ப நிலையமா யிருந்துவந்தாள். உழுவலன்பொடு இங்ஙனம் தழுவி வருங்கால் வடபுலத்தில் பகைவர் சிலர் மிடல் கொண் டெழுந்து தம் அரசனுக்கு இடர் பல விளைத்தார்; அவ் விளை வினை யறிந்து அவ் வீரர் வெகுண்டெழுந்தார். அவ்வமயம் "படை யுடன் சென்று வடபுல மடைந்து பகை வென்று வருக" என்று அரசனிடமிருந்து ஆணையும் வந்தது. வரவே போர்க்கோலம் புனைந்து பொங்கிப் போனார். இவள் அவரையே நினைந்து மறுகி யிருந்தாள். பிரிவாற்றாமையால் உடல் மெலிந்தது; பசலை படர்ந் தது; துயர் மிகுந்திருந்த இவளைச் சந்தனம் என்னும் தோழி அயலிருந்து தேற்றினாள். அமர்மேல் சென்ற அவர் நெடு நாள் அங்கு அமர நேர்ந்தது. முடிவில் பகை யடங்கவென்று திறை கைக்கொண்டு படைகளோடு மீண்டு அவர் அரசனை யடைந்தார். அவரது வெற்றித் திறத்தைக் கண்டு வேந்தன் வியந்து மகிழ்ந் தான். அருகே நின்ற அமைச்சர் பலரும் அவரைப் புகழ்ந்து போற்றினார்.

"மன்னவர்க்குத் தண்டுபோய் வடபுலத்து வாதாவித்
தொன்னகரம் துகளாகத் துளை நெடுங்கை வரை யுகைத்துப்
பன் மணியும், நிதிக்குவையும், பகட்டினமும், பரித்தொகையும்
இன்னன எண்ணிலகவர்ந்தே இகலரசன் முன் கொணர்ந்தார். (க)

கதிர்முடி மன்னனு மிவர்தம் களிற்றுரிமை ஆண்மையினை
அதிசயித்துப் புகழ்ந்துரைப்ப அறிந்த அமைச்சர்கள் உரைப்பார்
மதியணிந்தார் திருத்தொண்டு வாய்த்தவலி யுடைமையினால்
எதிரிவருக் கிவ் வுலகில் இல்லையென எடுத்துரைத்தார்." (பெரியபுராணம்)

இங்ஙனம் புகழ் மிகப் பெற்று வெற்றித் திருவோடு அவ் வேந்தனிடம் அமர்ந்து தாம் போந்த புலத்தில் நேர்ந்தபோர்த்திறங் களை ஆர்த்தியுடன் விரித்துரைத்து அங்குத் தங்கியிருந்தார். அவர் வந்திருப்பதை யறிந்து சிந்தை களித்தாள். அவரைக் கண்டு மகிழ வேண்டுமென்று காதல் மண்டி யெழுந்தது. கடும் பசியால்

களைத்துக் கிடந்த ஒருவன் உண்ணுதற்கு அன்னம் உலையேறிய தென்றுணர்ந்தவுடன் அது இலையேறுவதை யெதிர்நோக்கி ஏங்கி யிருத்தல்போல் இவள் இனைந்திருந்தாள். இவளுடைய உள்ளம் பள்ளம் பாயும் வெள்ளம்போல் அவனிடம் துள்ளிப்போயது. கண்களும் காண அவாவிக் கடுத்து நின்றன. அந் நிலையை நெஞ்சொடு நேர்ந்துரைத்தாள். இவை அவரைக் காண விரும்பி என்னை நலிகின்றனவாதலால் நெஞ்சே! இக் கண்களையும் உடன்கொண்டு செல்க எனத் தலைவியர் உரைத்து நிற்பரென்பதை உலகம் காண இவள் உணர்த்திநின்றாள். பின்பு அவர் வந்தருளினார்; இவள் மகிழ்ந்து கூடி ஓர் மைந்தனைப் பெற்றாள். அச் செல்வ மகனே சீராளன் என்னும் பேரோடு சிறந்து விளங்கினான்.

நீள்கண்ணும் நெஞ்சும் நிறைமான மின்றியக்
கேள்கண்ணே ஓடும் கிளர்ந்து.

மனமும் கண்ணும் மறுகி நின்றமை இதனால் கூறப்பட்டது.

---

1245. காமர் குணவதியேன் கைவிடா தோம்பி நின்றாள்
கோமகன்முன் செற்றும் குமரேசா—ஏமமறச்
செற்றா ரெனக்கை விடலுண்டோ நெஞ்சேயா
முற்றா லுறாஅ தவர். (ரு)

இ—ள்.

குமரேசா! தன் நாயகன் சினந்து நின்றும் குணவதி ஏன் இகழ்ந்துவிடாமல் நெஞ்சு உவந்து நின்றாள்? எனின், நெஞ்சே! யாம் உற்றால் உறாதவர் செற்றார் எனக் கைவிடல் உண்டோ? என்க.

செற்றார் = வெறுத்தார். செறுத்தல் = சினமீக்கொள்ளுதல். தலைவன் விரும்பிவந்து அருளாமையால் செற்றார் என்றாள். விடல் உண்டோ என்றது விடமுடியாதென்றவாறு.

உற்றால் = பொருந்தி நின்றால்; உள்ளன்போடு விழைந்து நின்றால் என்றவாறு. உறாதவர் = அன்புறாமல் அகன்றுள்ளவர். அளபெடை இசை நிறைக்க வந்தது.

நெஞ்சே! யாம் அன்புற்று நின்றால் அன்புறாத அவர் நம்மை இகழ்ந்து வெறுத்தார் என்று நாம் இகந்துவிட முடியாதென்பதாம்.

பிரிந்துபோன நாயகன் விரைந்து வந்தருளாமையால் அவன் மனந் திரும்பிச் சினந்திருப்பதாகக் கருதிச் "செற்றார்" என்றாள். இங்ஙனம் செறுத்து நிற்கும் அவரை வெறுத்துவிடத்தக்க மனத் துணிவு தனக்கு இல்லை என்பாள் "கைவிடல் உண்டோ?" என்றாள். யாம் என்றது மனத்தையும் உடன் படுத்தி. வன்மஞ் சாதிக்கும் தன்மை சிறிதுமின்றி மென்மையோடிருக்கின்ற நாம் அவர் தங்கியுள்ள இடத்தை யடைந்து வலியப்போய் தழுவிக் கொள்வதே தகுதி என்பது கருத்து. பிரிவாற்றாமையால் பெருந் துயருழந்தாலும் தன் அருந் துணையைப் புலந்து கைவிடாமல் தலைவி அலந்து நிற்பள் என்பது இதனால் அறிந்துகொளலாம்.

"கண்ணும் தோளும் தண்ணறுங் கதுப்பும்
பழநலம் இழந்து பசலை பாய
இன்னுயிர் பெரும்பிறி தாயினும் என்னதூஉம்
புலவேன் வாழி தோழி!
கானலம் பெருந்துறைச் சேர்ப்பன்
தானே யானே புணர்ந்த மாறே" (நற்றிணை 219)

உடல் நிலை குலைந்து உயிர் பிரிவதாயினும் என் காதலனை நான் புலவேன் என ஒரு தலைவி இதில் உரைத்துள்ளமை காண்க.

காதலன் கருதாதிருப்பினும் காதலி நெஞ்சம் அவன்பால் உருகி ஓடும் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ் வுண்மை குணவதியால் உணரப்படும்.

## கதை.

குணவதி என்பவள் ஆய் வள்ளலுடைய அருமைத் திரு மனைவி. அருங்குலக் கற்பினள். தன் பெயரியல்புக்கேற்ப உயர் குணங்கள் யாவும் ஒருங்கமையப்பெற்றுப் பெருந் தகவோடு இவள் விளங்கி யிருந்தாள். இப் பெண்மணியைக் கண்மணி எனக் காதலித்து அவ் அண்ணல் ஆதரித்து நின்றான். பொதியமலையருகே யிருந்த ஆய்குடி என்னும் திரு நகரில் அமர்ந்து இரதியும் மதனும்போல்

சூரத போகங்களை நுகர்ந்து இவர் சுகித்து வந்தார். வருங்கால் கொங்கு நாட்டிலிருந்த குறுநிலக் கிழவர் சிலர் தமிழ் நாட்டை இகழ்ந்து தருக்கி நின்றார். ஆய்க்குமாறாய் வாய்க்கு வந்தபடி பேசி நோய்க்கிடமாயுள்ளார் என அங்கிருந்துவந்த இருவரும் இடை புகுந்தியம்பினர். அவரை வென்றடக்கி வர ஆய் வெகுண்டெழுந் தான். இவள் அவனைப் பிரிந்திருக்கமாட்டாமல் வருந்தி யலமந் தாள். இவளை அருகணைத்து, ஆரத் தழுவி, முதுகு தைவந்து, மதிமுகந் தடவி, அதிமுத்தாடி, மறத்திறந்தெரித்து, மதியுடன் படுத்தி, அடுபடையோடு அவன் அகன்றுபோனான். நாளும் நாளும் அவனையே நீள நினைந்து நெட்டுயிர்ப் பெறிந்து இக் கட்டழகி கலுழ்ந்திருந்தாள். பாங்கியர் ஆற்றியும் தாங்கருந் துயரோடு தவித்துளைந்தாள். தனம் வேறுபட்டு, விழி வேறுபட்டுத், தளர்ந்து மொழி, மனம் வேறுபட்டு மறுகிக்கிடந்த இவள் சில முறை தனியே புலம்பினாள். தான் விழைந்திருந்தும் அவன் விரைந்து வந்தருள வில்லையே என்று உளைந்து நின்றுளாதலால் மனத்தை நோக்கி அங்கு என்னபோக்கு? என இகழ்ந்து கொண்டாள். கொண்டவள் உடனே அவர் வெறுத்திருந்தாலும் நம்மால் மறந்து விடமுடியுதா? என்று மறுத்துரைத்தாள். "நெஞ்சே! செற்றார் எனக் கைவிடல் உண்டோ?" என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள். பின்பு அவன் வெற்றி பெற்று வந்தான். இவள் விழைந்து தழுவி மகிழ்ந்து வாழ்ந்தாள். முடிவில் அவன் முடிவுற நேர்ந்தபோது இவளும் உடனே தன் உயிரை விடுத்தாள். அருகிருந்த உரிமை மகளிரும் ஆவி துறந்தனர். தன் பதியைப் பிரிந்திருக்கமாட்டாமல் உடன் தொடர்ந்துபோன இப் பதிவிரதை யின் கற்பு நிலையை அனைவரும் வியந்தார். அமரரும் புகழ்ந்தார். தாய்போல் எவர்க்கும் தண்ணளி செய்திருந்த ஆய் இப்பெண்ணரசி யோடுவிண்ணுல கெய்திய பொழுது இம் மண்ணுலகம் மிகவு மறுகி நின்றது. ஒன்று அடியில் வருவது காண்க.

"ஆடுநடைப் புரவியும், களிறும், தேரும்,
வாடா யாணர் நாடும், ஊரும்,
பாடுநர்க் கருகா ஆஅய் அண்டிரன்
கோடேந் தல்குற் குறுந்தொடி மகளிரோடு

காலன் என்னும் கண்ணிலி யுய்ப்ப,
மேலோர் உலகம் எய்தினன் எனாஅப்
பொத்த வரையுட் போழ்வாய்க் கூகை
சுட்டுக்குவி எனச் செத்தோர்ப் பயிரும்
கள்ளியம் பறந்தலை ஒருசிறை யல்கி
ஒள்ளெரி நைப்ப உடம்பு மாய்ந்தது;
புல்லென் கண்ணர் புரவலர்க் காணாது
கல்லென் சுற்றமொடு கையழிந்து புலவர்
வாடிய பசிய ராகிப் பிறர்
நாடுபடு செலவின ராயினர் இனியே" (புறநானூறு 240)

இது, ஆய் இறந்து பட்டதைக் குறித்துக் குட்டுவன் கீரனார் என்னும் புலவர் பாடியது. குதிரை யானை தேர் ஊர் முதலியன பரவும் பாடி வந்தவர்கட்கு ஈந்துவந்த ஆய் தேவியோடு மேலுலக மெய்தினன்; அவன் உடம்பு ஈமத்தில் எரிந்தொழிந்தது; புலம்பி அழுத கண்ணராய்ப் புலவர்கள் இனி அயல் நாடு போவாராயினர்; என அவர் உள்ளம் உருகி யுரைத்திருத்தல் காண்க. இதனால் அவ் வள்ளலது உள்ளன்பும், உதவியின் பெருமையும், உயர் குண வியல்பும், அவன் இல்லாமையால் உலகில் நேர்ந்த அல்லல் நிலையும், பிறவும் இனிது புலனும். சுட்டுக்குவி என்று செத்தோரை அழைப்பதுபோல் கூகை கூவும் எனப் புறங்காட்டின் இயற்கைக் காட்சியை இதில் குறித்திருத்தலறிக. தன் ஆருயிரை நீத்து அப் பேருபகாரியோடு பேணிச் சென்ற இப் பெருமாட்டியின் உருநாட்டி உலகம் வழிபட்டு வந்தது. காதலனைக் காதலிகள் கைவிட்டிரார் என்பதற்கு இவளையே காட்டாக அக் காலத்தவர் காட்டி நின்றார்.

"தாய்காணாச் சேய்போல் தவித்தார் புலவரெலாம்
தீய்வாய் விழுந்ததெனத் தேம்பியே—ஆய் வள்ளல்
பண்டிறந்த போது பதைத்தார் பதையாதோ
உண்டுவந்து நின்ற உயிர்".

இவளது பிரிய நாயகன் பிரிவில் உலகம் மறுகி நின்றபடியை இதுவும் உணர்த்தி நிற்றல் காண்க.

கொண்டான்மேல் கோபமீக் கொள்ளல் குலமகளுக்
குண்டோ மனமே உரை.

காதலியின் விழைவு நிலை இதனால் கூறப்பட்டது.

1246. காய்ந்ததன் நெஞ்சைக் கலாவதிமுன் வஞ்சமென்று
கூர்ந்திகழ்ந்தாள் என்னே குமரேசா—சார்ந்து
கலந்துணர்த்துங் காதலர்க் கண்டாற் புலந்துணராய்
பொய்க்காய்வு காய்திியென் னெஞ்சு. (சு)

இ—ள்.

குமரேசா! கலாவதி என் தன் நெஞ்சை நோக்கி வஞ்சக் காய்வு காய்கின்றாய் என வருந்தினாள்? எனின், என் நெஞ்சு! கலந்து உணர்த்தும் காதலர்க் கண்டால் புலந்து உணராய்; பொய்க் காய்வு காய்தி என்க.

காய்வு = வெறுப்பு. பொய்க் காய்வு என்றது உள்ளே விருப்பங்கொண்டு வெளியே வெறுப்புடையார்போல் சினப்பது.

காய்தி = வெறுக்கா நின்றாய். காய்தல் என்பது உவத்தலுக்கு எதிர்மொழி. "நல் வினையே நோக்கி நின்றாரைக் காத்தி, அயற் பேரைக் காய்தி"(இராமாயணம்)இதில் காய்திவந்துள்ளமை காண்க.

மேல், வெறுத்து நின்றாலும் காதலனைக்கைவிட லரிதென்றாள்; இதில், அவனை உள்ளுறவேண்டி நின்றதை விளக்கி நிற்கின்றாள்.

என் நெஞ்சே! கூடியறிவிக்குங் காதலரைக் கண்டால் ஊடியறியாத நீ இதுபொழுது பொய்யாக வெறுக்கின்றாய் என்பதாம்.

பிரிந்துபோயுள்ள காதலனிடம் தானே வலிந்து சென்றுவது கண்டு மகிழவேண்டும் என்று காதலி ஒருநாள் துணிந்தாள்; துணிந்தவள் உடனே சொன்னபடி வாாமல் இவ் இன்னலுற விட்டு அங்கு மன்னி நிற்பவர்பால் என்னபோக்கு? என எண்ணி யுளைந்தாள்; அங்ஙனம் உளைந்தவள் அச் சஞ்சலங்கொண்ட நெஞ்சினை நோக்கி இங்ஙனம் சலித்து உரைத்தாள் என்க.

தலைவன்பால் தவறு கண்டு தலைவி பிணங்கியபோதெல்லாம் அவன் வணங்கிய வாயினனாய் "நான் வழுவொன்றும் செய்ய வில்லை; இது முழுவதும் மெய்; உன்னை ஒழிய நான் ஒருத்தியையும் கண்டறியேன்; என்னை நம்பியருள்;" என இன்னவாறு இன்னுரை

யாடிக் கெழுதகைமையோடு தழுவி யுணர்த்துவன் ஆதலால் "கலந்துணர்த்தும் காதலர்" என்றாள்.

"பாவைநீ புலவியி னீடல்; பாவியேற்கு
ஆவியொன் றிரண்டுடம் பல்லது ஊற்றுநீர்க்
கூவல்வாய் வெண்மணல் குறுகச் செல்லுமே
மேவிப்பூங் கங்கையுள் விழைந்த அன்னமே" (சீவகசிந்தாமணி)

மற்றொருத்தியை விரும்பினாய் எனக் காந்தருவதத்தை புலந்த பொழுது சீவகன் கலந்துணர்த்தியிருத்தலை இதில் அறிந்துகொள்க. கங்கையில் களித்த அன்னம் ஓர் இளிந்த கிணற்றை நெருங்காது அதுபோல் உன்பால் மகிழ்ந்த நான் வேறோர் பெண்பாலை விரும்பேன் என அன்புரையாடி அவன் ஆற்றியிருக்கும் அழகு பார்க்க.

புலவி நீங்குமாறு இவ்வாறு தலைவனுரைப்பது கோவைத் துறையில் "நின்னலது யாரையும் நினையேன் என்றல்" என வரும்.

"மின்னை யலாமல் உவமையில் வேணிநம் வெங்கைபுரி
மன்னை யலாமல் அடியார் பிறரை மதிப்ப ரெனின்
நின்னையலாமல் நினைவேன் பிறரை என் நெஞ்சகத்திற்
பொன்னையலாமலெதிரிலையாகிய்பூங்கொடியே!" (திருவெங்கைக்கோவை)

"மன்னும் புலவியை மாற்றியும், தேற்றியும் வல்ல வண்ணம்
இன்னுந் தெளிந்திலை என்னேயென் னேயென்செய் கேனிதற்கு
முன்னம் படிந்து முழுகுநன் னீர்க்கங்கை முன்னுறையும்
அன்னம்படியுங் கொலோ உவராழியில் ஆரணங்கே" (தஞ்சைவாணன் கோவை)

"தேங்கமழ் கொன்றையர் கோடீச்சு ரேசர் சிலம்புறுதே
மாங்கனி யார்ந்து சுகமா இருந்திடு வண்கிளிபோய்
வேங்கருங் கானத் திடைக்காஞ் சிரங்காய் மிசைக்கிடுமோ?
பாங்கரும் பாமுலே! நான் அறியே னொரு பாவமுமே" (கோடீச்சுரக்கோவை)

"நான் காதலினென்று சொல்லுகின்றேன் நறுந் தேனுண்டவாய்
தீங்கான வேம்புண்ணுமோ? அணங்கே! சேரர் பாண்டியர்தம்
ஆங்காரந் தீர்த்த குலோத்துங்க சோழ னளகை வெற்பில்
நீங்காது மாலுண்ட நெஞ்சே இரும்புண்ட நீரொக்குமே."
(குலோத்துங்கசோழன் கோவை.)

"புல்லாது காலில் விழவும் எண்ணாது புழுங்கி எனைக்
கொல்லாது கொல்லுதல் குற்றமன்றோ? எங் குருப்பரனைக்
கல்லாது வாடுநர் போனினைத்தா யென்னைக் காதல் நின்னை
அல்லாது ஒருவரை யும்மறியேன் உண்மை ஆரணங்கே" (சீகாழிக்கோவை)

காதலன் கலந்துணர்த்தியிருக்கும் திறங்களை இவை உணர்த்தி நிற்றலறிக. காதலி புலத்தலும், காதலன் உணர்த்தலும் இன்ன வகையில் நிகழும் என்பது இதனால் இனிது புலனும்.

கொழுநன் கூடியிருந்தபொழுது பலமுறை இவள் ஊடநேர்ந்தது; அங்ஙனம் நேர்ந்தபோதெல்லாம் தன் நெஞ்சம் நிலைத்து நில்லாமல் அவனை உள்ளுவந்து கூடலை விழைந்து நின்றதாதலால் அதனை நினைந்து "புலந்து உணராய்" என்றாள். அணுகியிருக்குங்கால் அவ்வாறு ஆர்வமுற்று நின்ற நீ அவர் அகன்றுள்ள இப்பொழுது இங்ஙனம் சினந்து நிற்பது வஞ்சம் என்பாள் "பொய்க்காய்வு காய்தி" என்றாள்.

தூரம்போயுள்ள காதலனைத் துருவி யடைந்து கலந்து மகிழ வேண்டும் என்று காதலி விழைந்தெழுந்தாள்; எழுந்தவள் அங்கு எப்படிப் போவது? என நாணத்தால் புழுங்கி நைந்தாள்; நைந்தவள் தன் அழுங்கலுக்கு நிலைக்களனாய் நின்ற நெஞ்சினைநோக்கிஇங்ஙனம் நெகிழ்ந்துரைத்தாள் என்க. இதனால் அவள் நிலை தெளியலாம்.

பிரிந்திருந்த தலைவி பலபல நினைந்து பரிந்து புலம்புவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கலாவதிபால் உணரப்படும்.

## கதை.

கலாவதி என்பவள் கருநட தேசத்து அரசனுடைய அருமைத் திருமகள். அருந்தவத்தால் பிறந்தவள். உருவ நூலிற் குறித்துள்ள உத்தம இலக்கணங்களெல்லாம் ஒருங்கமையப்பெற்று இவ் வித்தகி விளங்கி யிருந்தாள். இவ்வளது எழில் நலங்களை யறிந்து மறுபுல மன்னரும் விழைவுமீக் கூர்ந்தார். அமரரும் வியந்து ஆர்வமீதூர்ந் தார். இவள் வடிவழகை முடிவுற எண்ணிப் படி முழுதும் பலர் பலபல வகையாப் புகழுரையாடினர். சில அடியில்வருவன காண்க.

"பள்ளநீ ருலகிற் பயில்வோ ருயிர்
கொள்ளை கொண்டுணக் கூற்றெழுளி யிட்டொரு
வள்ளத் தாமரை மீது வதிந்ததே
கள்ளுண்கோதை முகத்துறை கண்களே;" (க)

முல்லை மெல்லரும் பீன்ற முழுநெறி
அல்லி புல்லிய ஆம்பல் உண்டா மெனில்
வில்லெறிந்து மிளிர்புருவக் கொடி
வல்லிசெங்கனி வாய்க்கிணை யாகுமால். (உ)

அணிக்கு மூன்றுலகத்தும் இக் காரிகை
அணிக்கு நல்லெழில் செய்யும் அழகினுக்கு
இணைக்கொணு தென்றெழுதிய ரேகைகொல்
மணிக்கழுத்தின் வரையொரு மூன்றுமே? (ரு)

பண்ணெறிந்த பனிமொழிக் கோல்வளை
தண்ணிலா வடம் சேர்ந்து தடமுலை
வண்ணத் தூசில் மறைத்திலரேல் உயிர்
உண்ணும் உண்ணும் உலக மனைத்துமே. (ச)

அழகு பூத்த அணிமுலை அவ் வயிற்று
ஒழுகுமென் மயிர்க்கு ஓங்கெழில் வேனிலான்
விழைவின் ஆலிலை மீது மணி குழைத்து
எழுது வல்லி யலதிணை யில்லையால்." (காசிகாண்டம்)

இங்ஙனம் எழிலமைந்து விழுமிய நிலையில் விளங்கியிருந்த இவள் ஒருநாள் மாலையில் குளிர்பூஞ் சோலையில் தனியே உலாவி நின்றாள். அவ்வமயம் மாலியகேது என்னும் அரசிளங் குமரன் தெய்வகதியாய் அங்கு வந்தான். இத் தையலைக்கண்டான். உடனே மையல்மீக்கொண்டு மறுகி யுருகினான். எண்ணாதன எண்ணி ஏங்கி யுளைந்தான். அன்று அவன் எணணிநின்றபடியை அடியில்பார்க்க.

"தண்ணந் தாமரைத் தாக்கணங்கோ? என
எண்ணல் நெஞ்சம்; இன்றெய்தல் அரிதெனப்
பெண்ணுருக் கொ டுயிர்களைப் பெட்பொடும்
உண்ணக் கூற்றம் ஒளியிட் டுறைந்ததே;

வள்ளைவார் குழையோ? வளர் கொங்கையோ?
கள்ளம்பூத்த கருநெடுங் கண்களோ?
உள்ளமாழ்கி யுலையத் தடங்கையால்
அள்ளி அள்ளி என் ஆருயிர் உண்டதே" (காசிகாண்டம்.)

என இவ்வண்ணம் உள்ளி உள்ளி உள்ளங் குழைந்து அவன் உழந்து நின்றான். இவளும் அவனை உவந்து நோக்கி உளங் கரைந்தாள். கரையவே தலையளியோடு தழுவி மகிழ்ந்தான். பின்பு உலகமறிய வதுவை துணிந்து அலகில் சீருடன் அருமணம் புரிந்தான்.

"பதலை ஆர்ப்பப் பணில முழங்கிடப்
பிதிர் சுணங்கணி பேரிள மென்முலைக்
கதிர்செய்முத்த முறுவற் கலாவதி
வதுவையாற்றினன் மாலியகேதுவே." (காசிகாண்டம்)

இங்ஙனம் இவளை மணந்துகொண்டுபோய்ச் சிறந்த போகங்களை நுகர்ந்து நாளும் நாளும் அவன் நயந்து களித்தான். புலவி காட்டியும், கலவி யூட்டியும் அலகி லின்பங்கள் அமைய அமர்ந்து அம்மீளி மொய்ம்பனுக்கு வேள் விருந்தென இவள் விளைந்திருந்தாள். இங்ஙனம் இருந்துவருங்கால் காசியில் நிகழ்ந்த ஓர் வேள்வி விழாவிற்கு அவன் விரைந்து சென்றான். அப் பிரிவில் பெருந்துயரோடு இவள் வருந்தி யிருந்தாள். அவன் வரவை நாளும் எதிர் நோக்கி நைந்து கிடந்தாள். கிடந்தவள் ஒருநாள் அவனிடம் விரைந்துபோகத் துணிந்தெழுந்தாள். உடனே நாணி யுளைந்தாள்; அவன் வந்தருளாமையை நினைந்து மறுகிச் சினந்தாள். அச் சினந்த நெஞ்சைச் சீ என இகழ்ந்தாள். இங்ஙனம் உழந்து கிடக்குங்கால் அவன் விரைந்துவந்தான். இவள் அவனை விழைந்து தழுவி மகிழ்ந்துகொண்டாள். பிரிவி லுருகியுள்ள பொழுது "பொய்க் காய்வு காய்தி" எனத் தம் நெஞ்சை நோக்கி மகளிர் மறுகி மொழிவர் என்பதை உலகம் இவளிடம் உணர்ந்து நின்றது.

நாயகன்பால் செல்வமேனின் நான்மாட்டே னென்றுநெஞ்சே
நீயழல்வ,தேனோ நிமிர்ந்து.

மனம் வெறுத்திருந்தமை இதனால் கூறப்பட்டது.

---

1247. ஆசையும் நாணும் அடா அயிர்த்திரையேன்
கூசி மொழிந்தாள் குமரேசா—ஆசுடைய
காமம் விடுவொன்றோ நாண்விடு நன்னெஞ்சே
யானோ பொறேனிவ் விரண்டு. (எ)

இ—ள்.

குமரேசா! ஆசையும் நாணமும் வருத்த அயிர்த்திரை ஏன் மனத்தோடு மறுகி மொழிந்தாள்? எனின், நல் நெஞ்சே! காமம் விடு, ஒன்றோ நாண்விடு இவ் இரண்டு யானோ பொறேன் என

நல் நெஞ்சே என்றது நலம் தீங்குகளை நாடி அறிந்து நன்மையைக் கொள்ளுந் தன்மையை என்றவாறு. இங்ஙனம் புகழ்ந்து சொல்லியது தனக்கு வேண்டியதைத் அம் மனமும் உடன் பட்டு உவந்துகொள்ள.

ஒன்றோ என்றது இரண்டுள் ஏதாவது ஒன்றை என்றவாறு. விடுதலையில் தனக்குள்ள பொது நிலையைப் புலப்படுத்தியபடி யிது. காமம் முந்துறக் கிளர்ந்தெழுந்தமையான் முதலில் குறித்தாள் அதனைக் கடுத்துத் தடுத்தலின் நாணம் அடுத்து வந்தது.

இவ் இரண்டு = காமமும் நாணமும் ஆகிய இவ் இரண்டனையும். இதில் முற்றும்மை தொக்கு நின்றது.

பொறேன் = தாங்ககில்லேன். யானோ என்றது நீ பொறுத் தாலும் யான் பொறேன் என வேற்றுமை தோன்றப் பிரித் துரைத்தாள். ஓகாரம் பிரிநிலை.

காம நாண்களுக்கு நெஞ்சு பிறப்பிடமாதலால் தள்ளவும் கொள்ளவும் அது தலைமையாய் நின்றது.

நல்ல மனமே! ஒன்று காம வேட்கையை விடு; இல்லையாயின் நாணத்தை விடு; இவ் இரண்டனையும் ஒருங்கே யான் தாங்க முடியாது என்பதாம்.

தலைவனைப் பிரிந்து தவித்திருந்த தலைவி ஒருநாள் வேட்கை மீதூர்ந்து அவனிடம் அடையலாம் என்று துணிந்தெழுந்தாள்; உடனே சீ! அங்கு எப்படிப்போவது? என்று நாணத்தால் சாம்பி அடங்கினாள்; மறுபடியும் கிளர்ந்தெழுந்தாள்; மீளவும் கூசி ஒடுங்கினாள்; இன்னவாறு இச்சையாலும் இலச்சையாலும் ஈர்க்கப்பட்டு இழுபறிப்போடு மறுகிக் கிடந்து முடிவில் மனத்தை நோக்கி இங்ஙனம் உரைத்தாள் என்க.

இச்சையுடையார்க்கு இலச்சை இல்லை என்றபடி காமமும் நாணமும் ஒன்றற்கு ஒன்று மாறுபாடுடையதாதலால் ஏதாவது ஒன்றை ஒழித்துவிட வேண்டினாள். இயற்கையாகவே நாணமிக வுடைய குலமகள் காமமீதூர்ந்தபோது ஏமமின்றி யினைவள் ஆதலால் இவ்வகை இரங்கலானாள்.

"நெஞ்சே நிறையொல் லாதே; அவரே
அன்பின்மையின் அருள்பொருள் என்னார்,
வன்கண் கொண்டு வலித்துவல் லுநரே;
யாவது மதியிற் கிவரோர் போலக்
கனைய ராயினும் கண்ணினிது படீஇயர்
அஞ்சேல் என்மரும் இல்லை; அந்தில்
அளிதோ தானே நாணே
யாங்கா வாவது நீங்கப் படினே" (குறுந்தொகை 395)

இது, பிரிவாற்றாத ஓர் தலைமகள் தோழிக்கு உரைத்தது. நெஞ்சோ நிறை கடந்து நிமிர்ந்து நிற்கின்றது; போன அவரோ அருள் செய்து வரவில்லை; கண்ணுறங்காது கலுழ்ந்து கிடக்கின்ற என்னை அஞ்சேல் என ஆதரிப்பாரும் இலர்; இந் நாணம் நீங்கித் தொலையின் நானுவது அங்குப் போய்த் தொலைவேன் என அவள் இதில் புலம்பியிருத்தல் காண்க. உயிரினும் சிறந்த நாணத்தையுந் துறந்து தன் நாயகனைக் காதலி நயந்து நிற்பள் என்பது இதனால் அறிந்துகொள்ளலாம். அடியில் வருவனவும் காண்க.

"பூணினை ஓம்புநர் இல்லை உடல்கெடின், போர்ச்சிலையின்
எணினை ஓம்புநர் இல்லை புகழ்கெடின், ஈர்ங்குழல்! மெய்ம்
மாணினை ஓம்புநர் இல்லை பொல்லாங்கு வரின், உரிய
நாணினை ஓம்புநர் இல்லை கற்போடி நலிவுறினே" (தணிகைப்புராணம்)

ஏர்க்குந் தலைவ ருடன் போகும் அன்புக்கென் நாணழியிற்
சீர்க்குந் தகைமையிற் பெண்மை என்னும்? திசை நாலிரண்டும்
போர்க்குங் கவிகைக் குலோத்துங்க சோழன் புகாரனையாய்!'
யார்க்கும் தனுவிற் படுநாணன்றோ குண மாவதுவே"
(குலோத்துங்கசோழன்கோவை)

"கனத்தினை நேர்கண்டர் கோடீச்சுர வெற்பின் கண்ணுறுமென்
தனத்துடன் தோன்றி என் கண்மணிபோலத் தணத்தலின்றி
மனத்துணையாகி யிருந்திடு நாண்முன் மதிநுதலாய்!
வனத்திடைச் சென்றது நான் ஏகுவேன்இறை வன்பினென்றே."
(கோடீச்சுரக்கோவை).

"ஊணிலையாக நஞ்சுண்டோன் திருவெங்கை யூரனைய!
வாணிலையாகு மதர்விழியாய்! முன் வனைந்திருந்த
பூணிலையாகும் அவயவம்போலப் பொலிவழிவார்
நாணிலையாகில் தனுவால் பயனென்னை நங்கையர்க்கே"
(திருவெங்கைக்கோவை).

காம வேட்கையாற் கலங்கி நாணழிவிற்கு இரங்கி மகளிர் நைந்து புலம்பியுள்ள நிலைகளை இவற்றுள் உணர்ந்துகொள்க. தனு நாண் என்பதில் சிலேடையணி யுள்ளமை காண்க.

வெட்கம் விடு? அல்லது வேட்கையை விடு எனத் தலைவி நெஞ்சிற்கு நேர்ந்து சொல்லியதுபோல் வினைமேல்போன தலைவனும் நினைவு நீடி நேர்ந்து சொல்லுவன். அடியில் வருவது காண்க.

"அற்சிரம் நின்றன்றாற் பொழுதே முற்பட
ஆள்வினைக்கு எழுந்த அசைவில் உள்ளத்து
ஆண்மை வாங்கக் காமம் தட்பக்
கவைபடு நெஞ்சம் கட்கண் அகைய
இருதலைக் கொள்ளி யிடை நின்று வருந்தி
ஒருதலைப் படாஅ உறவி போன்றனை
நோங்கொல் அளியள் தானே யாக்கைக்கு
உயிரிடத் தன்ன நட்பின் அவ்வுயிர்
வாழ்த லன்ன காதல்
சாத லன்ன பிரிவரி யோளே" (அகம் 339)

தன் தலைவியை நினைந்து ஓர் தலைமகன் இதில் அலமந் துள்ளமை காண்க. ஆண்மை வினைமேலூக்க, காமம் மனைமே லீர்க்க, இடை நின்று தவித்தமையான் இருதலைக் கொள்ளியின் எறும்பு என்றான். உறவி = எறும்பு. "வாழ்தல் உயிர்க் கன்னள்" (குறள் 1124) என்பதை அடியொற்றிவந்து காதலருமையை இஃதுணர்த்தி நிற்றலறிக. நாணும் வேட்கையும் நலியக் காதலி நைந்து புலம்புவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை அயிந்திரைபால் உணரப்படும்.

## கதை.

அயிந்திரை என்பவள் அசுவதரன் என்னும் குறுநில மன்ன னுடைய அருமைத் திருமகள். மாக மங்கையரும், நாக கன்னி யரும் நயந்து புகழச் சிறந்த எழிலோடு இவள் திகழ்ந்திருந்தாள். பெருந்தகவுடையவள். "அருந்தவம்புரிந்தோர்க்கல்லால் அயிந்திரை என்னும் தெய்வ மருந்தினை விருந்துகொள்ள மற்றவர்க்கு ஆவதுண்டோ?" என்று மேவியிருந்த இவளை நார்முடிச்சேரலன்

என்னும் சேர மன்னன் மணந்து ஆர்வமீதூர்ந்தான். அவன் பெரிய போர் வீரன். அம் முடி மன்னனுக்கு முடிவிலின்பமாய் இவள் குடி செய்திருந்தாள். இப் பெண்ணரசி யடைந்தபின் மண்ணரசெலாந் தொழ அவன் மன்னி யிருந்தான். இப் பதி விரதை யுடைமையால் அவன் அதிபுக ழெய்தினன். அவனைப் போற்றிநின்றவரெல்லாரும் இவளையும் உடன் ஏத்தி நின்றார்.

"வெண்டிரை முந்நீர் வளைஇய உலகத்து
வண்புகழ் நிறுத்த வகைசால் செல்வத்து
வண்டன் அனையமன் நீயே; வண்டுபட
ஒலிந்த கூந்தல் அறஞ்சால் கற்பிற்
குழைக்கு விளக்காகிய ஒண்ணுதற் பொன்னின்
இழைக்கு விளக்காகிய வவ்வாங்கு உந்தி
விசும்பு வழங்கு மகளி ருள்ளுஞ் சிறந்த
செம்மீன் அனையள்நின் தொன்னகர்ச் செல்வி" (பதிற்றுப்பத்து)

"வளந்தலை மயங்கிய பைதிரந் திருத்திய
களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல்!
எயில்முகஞ் சிதையத் தோட்டி யேவலிற்
றோட்டி தந்த தொடிமருப்பியானைச்
செவ்வுளைக் கலிமா வீகை வான்கழற்
செயலமை கண்ணிச் சேரலர் வேந்தே!
பரிசிலர் வெறுக்கை! பாணர் நாளவை!
வாணுதல் கணவ! மள்ளர் ஏறே!
மையற விளங்கிய வடுவாழ் மார்பின்
வசையில் செல்வ! வான வரம்ப!
இனியவை பெறினே தனிதனி நுகர்கேம்
தருகென விழையாத் தாவில் நெஞ்சத்துப்
பகுத்தூண் தொகுத்த ஆண்மைப்
பிறர்க்கென வாழ்தி நீ யாகன் மாறே." (பதிற்றுப்பத்து 38)

இவளது அழகமைதியும், கணவனது குண நலங்களும் இதில் குறிக்கப்பட்டுள்ளன காண்க. இவளை அருந்ததியோடு ஒப்ப வைத்தது கற்புநிலை நோக்கி. செம் மீன் = அருந்ததி. இதனால் இவளது அருமையும் பெருமையும் இனிது புலனும். இவளைக் கணமும் பிரியாமல் கலந்து நுகர்ந்து அம் மன்னன் மகிழ்ந்து வருங்கால் நன்னன் என்னும் சிற்றரசன் செருக்கு மிகுந்து

சிறுமைபல செய்தான். அவனைப் பொருதடக்கிவரப் படைகளோடு அவன் பொங்கிப் போனான். பிரிவாற்றாமல் பருவரல் கூர்ந்து இவள் பெரிதலமந்தாள். அவ் அழகனையே நாடி, எழில் மேனி வாடி, இன்றுயில் வீடி, வழிமேல் விழிவைத்து மறுகிக் கிடந்தாள். துணையை நினைந்து அணைமேல் புரண்டு இவளடைந்த அல்லல்கள் பல.

> “ விரிகின்ற மெல்லமளி வெண்ணிலவின் மீதே
> சொரிகின்ற காரிருள்போற் சோரும்—புரிகுழலைத்
> தாங்கும்; தளரும்; தழலே நெடிதுயிர்க்கும்;
> ஏங்குந் துயரோ டிருந்து ”

என்ற படியே பெருந்துயரோடு இவள் பொருந்தி யுழன்றாள் பாங்கியர் தேற்றியும் ஏங்கி யிகழ்ந்தாள். போர்முகம் போயுள்ள அத் தேர் வேந்தன்பால் நேரே போவேன் என்று சிலமுறை பொங்கி யெழுந்தாள். இது பெண்மைக்கு அடாதென்று உடனே உள்ளூற நாணி ஒடுங்கி யிருந்தாள். ஆசையும் நாணும் அலைப்ப இன்னவண்ணம் இன்னலுழந்த இவள் ஒருநாள் தன் நெஞ்சினை நோக்கி இவ் இரண்டனுள் ஏதாவதொன்றை விட்டுத் தொலை என்று வெட்டெனப் பேசினாள். நல் நெஞ்சே! “காமம் விடு; ஒன்றோ நாண்விடு, இவ் இரண்டும் யானோ பொறேன்” எனப் பிரிந்த மகளிர் பரிந்து மொழிவர் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது. போன அம் மன்னன் பகை வென்று மீண்டான்.

> “பொன்னங் கண்ணிப் பொலந்தேர் நன்னன்
> சுடர்வீ வாகைக் கடிமுதல் தடிந்த
> தார்மிகு மைந்தின் நார்முடிச்சேரல்”

எனப் பேர் பெற்று வந்த அவனைக் கண்டபோது கார்பெற்ற தோகைபோல் இவள் களித்துயிர் தளிர்த்தாள். பிரிவிலுருகி மனத்தொடு இவள் மறுகிப் புலம்பிய படியைத் தோழியர் அவனிடம் சொல்லிச் சிரித்தார்.

நான்வேண்டின் நெஞ்சமே நாண்கோள்க நாயகனே
தான்வேண்டு மேன்னினைந்து சா.

நாண்கொள நேர்ந்தமை இதனால் கூறப்பட்டது.

1248. பண்டு சுரதி பதிபின்னே சென்றதென்றேன்
கொண்டிகழ்ந்தாள் நெஞ்சைக் குமரேசா—மண்டிப்
பரிந்தவர் நல்காரென் றேங்கிப் பிரிந்தவர்
பின்செல்வாய் பேதையென் னெஞ்சு. (அ)

இ—ள்.

குமரேசா! தன் நாயகன் பின் சென்ற நெஞ்சைச் சுரதி ஏன் பேதை என இகழ்ந்தாள்? எனின், என் நெஞ்சு! அவர் பரிந்து நல்கார் என்று ஏங்கிப் பிரிந்தவர் பின் செல்வாய் பேதை என்க. இது, காதலி நெஞ்சைக் கடிந்து நின்றது.

பரிந்து = இரங்கி. பிரிவிலுள்ள தனது பரிபவ நிலை எவரும் இரங்கத் தக்கதென்று கருதிப் "பரிந்து" என்றாள். நல்கார் என்று = அருள் செய்யார் என்று கருதி. ஏங்கி = ஏக்கமுற்று. ஏங்கலாவது கருதியது கைகூடாது நீட அதனை நினைந்து நினைந்து நெடுமூச் செறிந்து நெடுங்கவலோடு நிலைகுலைந்துழலல்.

பிரிந்தவர் என்றது நம்மை இப்படி இருந்து தேயவிட்டுப் பிரிந்துபோனவர் என அப்போக்கைச் சுட்டிப் புலந்து கூறியவாறு.

ஏங்கி என்றதனால் அவனை நீங்கி நிற்றலிலுள்ள துயர்நிலை புலனும். சென்றாய் என்னாது செல்வாய் என்றாள் நாளும் தொடர்ந்து ஊசலாடுதல்போல் ஓடி யுழலுதலால்.

மேல், காமம் விடு என்றாள்; இதில், அதனை விடாது சென்ற நெஞ்சை வெகுண்டு வைகின்றாள்.

என் நெஞ்சே! அவர் இரங்கிவந்தருளார் என்று ஏங்கிப் பிரிந்துபோனவர்பின் விரைந்து போகின்றாய் நீ பேதை என்பதாம்.

குறித்த எல்லையில் வாரமல் பிரிவு நீட்டித்து நின்ற தலைவன் மீது நினைவு நெடி தோடி நிலைகுலைந்திருந்த தலைவி ஒருநாள் தன் நெஞ்சினை இகழ்ந்துரைத்தபடி யிது.

அல்லல் நிலை பொருத மெல்லியல் என்று நம் இயல்பினை நன்கு அறிந்திருந்தும் சொல்லியபடி வாரமல் கல் நெஞ்சாய் இருக்கும் அவர்பால் கசிந்துருகிச் செல்வது முழு மூடம் என்பாள் "பேதை"

என்றாள். அன்பில்லார் பின்போதல் அறியாமை என்றவாறு. நெஞ்சு பின் செலும் என்றது தன் சிந்தனை முழுதும் காதலன் வசமாய்ச் சென்றுபடுதலால் என்க.

“அம்ம வாழி தோழி சிறியிலை
நெல்லி நீடிய கல்காய் கடத்திடைப்
பேதை நெஞ்சம் பின்செலச் சென்றோர்
கல்லினும் வலியர் மன்ற
பல்லிதழ் உண்கண் அழப்பிரிந்தோரே” (ஐங்குறுநூறு 334)

இது, பிரிவாற்றாத தலைமகள் தோழிக்கு உரைத்தது. காதலன் பின் சென்ற நெஞ்சைப் பேதை என்றிகழ்ந்து இதில் அவள் கலுழ்ந் திருத்தல் காண்க.

“ஏர்ப்பின்னை தோள்முன் மணந்தவன் ஏத்த எழில் திகழும்
சீர்ப்பொன்னை வென்ற செறிகழலோன் தில்லைச் சூழ்பொழில் வாய்க்
கார்ப்புன்னை பொன்னவிழ் முத்த மணலிற் கலந்தகன்றார்
தேர்ப்பின்னைச் சென்ற என் னெஞ்சு என்கொலா மின்று செய்கின்றதே”
(திருக்கோவையார்)

“நாளானவைகளிற் கோடைச்சுரேசர் நகத்திறை பொய்ச்
சூளார் மனத்தோ டுறவாய்ப் பிரிந்துழித் துன்பமதில்
மீளாது கல்லாயிருக்கக் கல்லாது நினைவழிந்து
வாழாளனை நீ வருத்தல் என் இங்கு மடநெஞ்சமே” (கோடைச்சுரக்கோவை

“மடநெஞ்சமென்றும் தமதென்றும் ஓர் கருமங் கருதி
விடநெஞ்சையுற்றார் விடவோ அமையும், அப் பொன்பெயரோன்
தடநெஞ்சங் கீண்ட பிரானார் தமதடிக்கீழ் விடப்போய்த்
திடநெஞ்சமாய் எம்மை நீத்து இன்று தாளுந்திரிகின்றதே” (திருவிருத்தம்

“கருங்கழி கிடந்த கானலங் கரைவாய்
மெய்படு கடுஞ்சூள் மின்னெனத் துறந்தவர்
சுவலுளைக் கவனப் புள்ளியற் கலிமான்
நோக்க மறைத்த பரிதிகொள் நெடுந்தேர்ப்
பின்னொடு சென்றஎன் பெரும்பேதை நெஞ்சம்
சென்றுழிச் சென்றுழிச் சேறலும் உளவோ?
அவ்வினைப் பயனுழி அருந்தவம் பெறுமோ?
இடைவழி நீங்கியென் எதிருறுங் கொல்லோ?
அன்றியும் நெடுநாள் அமைந்துடன் வருமோ?
யாதென நினைக்கிலன் மாதோ
பேதை கொள்ளா தோழிமனம் கடுத்தே” (கல்லாடம் 82)

காதலர் பின் சென்ற நெஞ்சைப் பேதை என இகழ்ந்து காதலிகள் புலந்து மொழிந்திருக்குந் திறங்களை இவற்றுள் உணர்ந்து கொள்க.

தலைவனை இடையறாது நினைந்து தலைவி தவித்து நிற்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுரதிபால் உரைப்படும்.

## கதை.

சுரதி என்பவள் நருமதன் என்னும் மகுடவர்த்தனனுடைய அருமைத் திருமகள். அதிரூபவதி. "திருவும் வியக்கும் உருவு கொள் காரிகை" என உலகம் புகழ இவள் நிலவி யிருந்தாள். இக் குலமகளது நிலையினை யறிந்து சயத்துவசன் என்னும் தலைமகன் காதலித்துத் தவித்து நின்றான். அவன் சந்திர குல வேந்தன். சர்வாங்கசுந்தரன். சிறந்த போர் வீரன். பேராவலோடு மறுகி நின்ற அவன்மேல் இவளும் உருகி நின்றாள். அவ் வுண்மையை யுணர்ந்து உவகை மீக் கூர்ந்து விரைந்து வந்து விதிமுறைவழாமல் இவளை அவன் மணந்து கொண்டான். இப் பதிவிரதையோடு அமர்ந்து அதிபோகங்களை நுகர்ந்து முதுநிலம் புரந்து அவ் அதி பதி அமரபதிபோல் அகமகிழ்ந் திருந்தான். அன்பு அமைதி அறிவு செறிவு உருவம் பருவங்களில் இச் சதிபதிகளிருவரும் சரி யொத்திருந்தாராதலால் ஒருவரை ஒருவர் பிரியாமல் பருகு காத லோடு உருகி நுகர்ந்து சுரத போகங்களில் பரவசராயிருந்தார். வசந்த முதலான பருவ காலங்களுக்கு இசைந்த வகையான இனிய மாளிகைகளி லமர்ந்தும், இசை யமுதயின்றும், புதுமலர் சூடியும், பூம்புனலாடியும் பொழுது போக்கி நின்றார்.

"மணிவடம் சுமந்த புணர்முலைக்கு ஒதுங்கி
ஈயாமாக்கள் தீமொழி யுவர்ந்த
சிற்றிடை படைத்த பேரமர்க் கண்ணியர்
கரைகொன் றிரங்குந் திரைசெய்நீரப் பட்டத்து
மைவிழி சேப்பச் செவ்வாய் விளர்ப்பக்
கருங்குழல் சரிய வெள்வளை கலிப்பச்
சீராட் டயரும் நீராட் டயர்ந்து
புலவியிற் றீர்ந்து கலவியிற் றிளைக்கு
நீரமகளிர் பேரெழில் காட்ட"

என்றபடி இவர் திரு நகர மெங்கணும் காமர் காட்சி கனிந்து நின்றது. அன்பு சுரந்து இங்ஙனம் இன்பம் நுகர்ந்து வருங்கால் விதேகன் என்னும் அசுரவேந்தன் அடல்மீக்கொண்டு அமர்செய்ய வந்தான். அவனை அடுந்திறங்கருதிப் பெரும் படைகளோடு அம் மன்னன் பெயர்ந்துபோனான். அப் பிரிவில் இவள் பெருந் துய ரோடு பேதுற் றிருந்தாள். பாங்கியர் தேற்றியும் ஏங்கி அயர்ந் தாள். தன் நினைவெல்லாம் துணைவன்மேல் நெடிதோடி நிற்ப நிலை குலைந்திருந்த இவள் ஒரு நாள் நெஞ்சினை எதிர்விளித்து நெகிழ்ந்து புலம்பினாள். போன அவன் அத்தானவனை வென்று தாழாது வந்தான். வரவே அவனைத் தழுவி மகிழ்ந்து இவள் தழைத்து நின்றாள். போரில் நேர்ந்த கொலைப்பழி தீரக் கோசி கரைக்கொண்டு ஒரு வேள்விசெய்து அவன் விளங்கிநின்றான். அவன் போர்வென்ற திறம் பாரெங்கும் பரவி நின்றது.

“விட்ட விட்ட வெங்கணையெலாம் விலக்கிவாள் அவுணன்
வட்ட வெஞ்சிலை குழைத்தலும் வருசயத் துவசன்
கட்டழற்புகை கான்றெறி கணை கதி ராழி
தொட்டுமற்றவன் மணிமுடிக் கருந்தலை துணித்தான். (க)

வெய்யதானவப் பகைப்படுத்து அடுகள வேள்வி
செய்துமுற்றிய சயத்துவசனுக் கருள்சிறந்து
மையில் கோசிகன் மாலுள மகிழ ஓர் வேள்வி
எய்தி யாற்றினன் ஆங்கவன் எழுமையும் துடைத்தான்.” (உ)
(கூர்மபுராணம்.)

பகை கடிந்து புகழடைந்து புண்ணியம் புரிந்து எண்ணியவா றெய்தி அம்மன்னன் நண்ணியிருந்த வுண்மை இதன்கண்ணும் குறிக்கப்பட்டுள்ளமை காண்க. அமர்மேல் அகன்றபோது இவள் தனியே கவன்று நெஞ்சொடு புலம்பி நெகிழ்ந்திருந்ததைப் பின்பு அவன் அறிந்திரங்கினான். “பிரிந்தவர் பின்செல்வாய் பேதை என் நெஞ்சு!” என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

அன்பிலார் பின்சென் றலமந்தாய் நெஞ்சமே
என்பயனீ கண்டாய் இசை.

சென்ற நெஞ்சைச் சிறியிகழ்ந்தமை இதனால் கூறப்பட்டது.

1249. சென்றதன் நெஞ்சைச் சினந்து சுநந்தனியேன்
குன்ற மொழிந்தாள் குமரேசா—என்றுமே
உள்ளத்தார் காத லவராக வுள்ளிநீ
யாருழைச் சேறியென் னெஞ்சு. (௯)

இ—ள்.

குமரேசா! தன் காதலன்பால் சென்ற நெஞ்சைச் சுநந்தனி ஏன் கடிந்து மொழிந்தாள்? எனின், என் நெஞ்சு! காதலவர் உள்ளத்தாராக உள்ளி நீ யார் உழைச் சேறி என்க.

இது, தலைவனை நினைந்தலைந்த நெஞ்சை இணைந்து இகழ்கின்றது.

உழை = இடம். உள்ளி = நினைத்து. சேறி = செல்கின்றாய். நெஞ்சு = மனமே! அண்மையிலுள்ளமையின் விளி இயல்பாய் நின்றது. என்நெஞ்சு என்றது தன்னோடு அதற்குள்ள உரிமை தோன்ற. நீ என்றது அதன் நிலை தெரிய.

காதலர் என்னாது இடையே ஓர் வகரம் அழுத்தியது பாவின் தளைநோக்கி யன்று அவர் நிலைநோக்கி என்க. என்னை? காதலுடைய அவர் என இனிப்போடு எட்டிச் சுட்டியவாறு.

காதலவர் உள்ளத்தார் ஆக = ஆசையாளர் உன் அகத்தே யிருக்க. உள்ளம் = உள் இடம். அஃதாவது நெஞ்சகம்.

மேல், பிரிந்தவர் பின்செலல் பேதைமை என்றாள்; இதில், அவர் இருந்துள்ள இடம் தெரிந்திலை என்கின்றாள்.

என் நெஞ்சே! காதலர் நின் அகத்து அமர்ந்திருக்கின்றார்; இங்ஙனம் இருக்க நீ விழைந்தெழுந்து புறத்தே தேடி யாரிடம் போகின்றாய் என்பதாம்.

பிரிந்துநின்ற தலைவனை யிடையறாது நினைந்து நினைந்து உளைந்திருந்த தலைவி தன் மனத்தை நோக்கி உரைத்த படியிது.

கனவிலும் நனவிலும் கணவனை நினைவில் கொண்டே நிலைத்திருந்தாளாதலால் "காதலவர் உள்ளத்தார்" என்றாள். இங்ங

னம அகத்திருப்பதை அறிந்திருந்தும் புறத்தே புசைகெட்டுத் தேடியலைவது எதற்காக என்பாள் "யார் உழைச் சேறி" என்றாள். சென்றனை, சென்றாய், என்னுமல் சேறி என்றதனால் அச்செலவு நிலை நிகழ்விலுள்ளமை புலனும்.

நினைப்பு மீண்டுமீண்டும் நீண்டெழுந்து அவ் ஆண்டகையையே நாடி அலைந்து நின்றமையால் இங்ஙனம் புலம்பி நின்றாள். நெஞ்சு பிறந்தாய் நிலைகுலைந்துளைந்துத், தஞ்சமின்றித் தனியே புலம்பி இவ் வஞ்சியர் பிரிவில் மறுகியிருந்தமை இதனால் அறிய நின்றது.

"குணகடல் முகந்து, குடக்கேர் பிருளி,
மண்டிணி ஞாலம் விளங்கக், கம்மியர்
செம்பு சொரி பானையின் மின்னி, எவ்வாயும்
தன் தொழில் வாய்த்த இன்குரல் எழிலி,
தென்புல மருங்கில் சென்றற் றாங்கு,
நெஞ்சம் அவர்வயிற் சென்றேன ஈண்டொழிந்து
உண்டலளித்தேன் உடம்பே; விறற்போர்
வெஞ்சின வேந்தன் பகையலைக் கலங்கி
வாழ்வோர் போகிய பேரூர்ப்
பாழ்காத் திருந்த தனிமகன் போன்றே" (நற்றிணை 153)

இது, பிரிவிடை மெலிந்த தலைமகள் தன் நெஞ்சம் காதலனிடம் சென்றமையால் தான் தனியே தவித்திருந்தமையை உரைத்துளைந்த தென்க. மேகம், கீழ் கடலில் நீரை முகந்தெழுந்து மேல்பால் ஏகி மின்னிப்பெய்து தென்பால் சென்றதுபோல் என்மனம் அன்பர்பால் போயது; ஆதலால் வலியுடை வேந்தன் வந்து நலிவு செய்த பொழுது குடிகள் அடியோடு நீங்க அப் பாழ் நகரில் ஒரு மகன்போன்று நான் தனியே துனிமிகுந்துள் [illegible] குலமகள் உருகி யுரைத்திருக்கும் நிலையை இதில் ஊன்றிப் பார்க்க. எழிலி = மேகம். ஏர்பு இருளி = எழுந்து போய் இருண்டு. இங்கு மேகத்தை நெஞ்சோடு ஒப்ப வைத்தது என்னை? எனின், உள்ள நீரையெல்லாம் ஒழித்துவிட்டு அது ஒளிந்துபோனதுபோல் நாணம் மடம் முதலிய நீர்மைகளெல்லாவற்றையும் உதிர்த்துவிட்டு இது ஒழிந்துபோனதென மனத்தின்போக்கை நோக்கிப் புலந்து கூறினள் ஆதலால் அப் புலம் தெரிய என்க. பிரிவிலுள்ள மக்ளிர்

மனம் பறிபோய் இவ்வாறு மறுகிப் புலம்பல் மரபாதலால் அந் நிலையில் இவள் பன்னி நின்ருள். தன் நெஞ்சம் காதலனிடம் சென்று திரிதலைச் செயலழிந்து இங்ஙனம் அயலறியச் செப்பி நின்றமையால் அவன்பால் இவள் கொண்டுள்ள மயல்நிலை புலனும்.

" குழற்கோவலர் மடப்பாவையும் மண்மகளும் திருவும்
நிழற்போல் வனர் கண்டு நிற்குங்கொல்? மீளுங்கொல்? தண்ணந்துழாய்
அழற்போ லடுஞ் சக்கரத் தண்ணல் விண்ணோர் தொழக்கடவும்
தழற்போற் சினத்த அப்புள்ளின்பின் போன தனி நெஞ்சமே"
(திருவிருத்தம் 3.)

திருமாலைப் பிரிந்திருக்க மாட்டாமல் பெருமால் கொண்டு நின்ற நம்மாழ்வார் தம் நெஞ்சம் அந் நாயகனிடம் போய் நண்ணி நின்றதைக்குறித்து நாயகி நிலையில் அமர்ந்து அவர் வாய்மலர்ந்து கூறியவாறிது. போன நெஞ்சம் நின்றுவிடுமோ? மீளுமோ? என்றதனால் அஃதின்றி யமையாமை நன்கு தெரியலாம்.

" கஞ்சந் தொடர்ந்து வருங்கழலார்பின் கனிந்துதொடர்
நெஞ்சந் தொடர்ந்துடன் சென்றதுவோ? இடைநின்றதுவோ?
வஞ்சந் தொடர்ந்து பின் மீண்டதுவோ? அன்றி மாண்டதுவோ?
நஞ்சந் தொடர்ந்து பொலிகளத்தார் சண்பை நாட்டகத்தே."
(சீகாழிக்கோவை.)

ஒரு தலைவி தனது நெஞ்சு சென்ற நிலையைக் குறித்து இதில் நொந்து புலம்பி யிருத்தலறிக.

காதலனை நீள நினைந்து காதலி கலங்கியிருப்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுநந்தனிபால் உணரப்படும்.

## கதை.

சுநந்தனி என்பவள் அனந்தகணன் என்னும் சிற்றரசனு டைய அருமைத் திருமகள். பெருவனப்பினள். உருவம்போல வே அறிவிலும் சிறந்தவள். பருவமடைந்து இவள் தனியமர்ந் திருந்தாள். இளமை தவழ்ந்து எழில்நலங் கனிந்து விழுமிய நிலையில் மருவியிருந்த இவள்மேல் மறுபுல மன்னரும் மையல் கூர்ந்து நின்றார். இவள் எவரையும் கருதாமல் ஒத்த பாங்கிய ருடன்கூடி உவகையாடல்கள் புரிந்து ஓவியக் கலை பயின்று உல்

வாசமாக மேவியிருந்தாள். ஒரு நாள் மாலையில் மாளிகையருகே யிருந்த குளிர் பூஞ்சோலையில் தோழியரோடு சென்று பந்தாட விழைந்தாள். அவ் ஆடலில் மிகவும் கைதேர்ந்திருந்த கனகவல்லி என்பவள் ஏதாவது ஓர் பந்தயம் வைத்தே ஆடவேண்டும் என்றாள். அவள் சொல்லிய படியே இம்மெல்லியலும் இசைந்தாள். "எவள் தோல்வி யடைந்தாளோ அவளது அணிகலங்கள் வென்றவளுக்கு உரியவாம்" எனப் பந்தயம் குறித்தார்; பந்தாடல் நிகழ்ந்தது. பீடுபெற நின்று அன்று இவள் ஆடிய நிலையை வியந்து யாவரும் புகழ்ந்தார்.

"மந்தர வெற்பு மறிகடலும் இன்றமுதம்
தந்தருளும் செவ்வாய்த் தளிரியலாள்—செந்திருவோ
டொத்தகலாத உயிர்ப்பாங்கியை விளித்து
முத்த மணல் பரந்த முன்றில்வாய்—இத்தலையில்
வென்றாள் உடைந்தாள் விரிபசும்பொற் பூண்கொள்க
என்றாள் பொருந்தி இளந்தளிர்க்கைக்—கன்றுடைக்,
காமர்மணிமே கலைகலிப்பப், பூண் ஒலிப்பச்,
சேமவிடை யின்றென்று தோராத—தாம
முலைமேல் துகில்நுடங்க முண்டகச்செம் போதிற்
சிலைமேல் சிறுவியர்வு சோரத்—தலைமேல்
சுரும்பர் எழுந்தார்ப்பத் துகள்மாலை தூர்ப்பக்
கருங்குவளைக் கண்பிறழ்வு காட்டப்—பெரும்புவியின்
முந்தடித்துச் செல்வ முறையால் தொடர்வதென
அந்தரத்து மங்கை யடுத்தெழுவான்—பந்தடித்துப்
பூவை விளையாடும் போதில்"

என்றபடி அழகொழுக நின்று இவள் ஆடிவருங்கால் ஓர் ஆடல்மா மீதமர்ந்து தெய்வ கதியாய்ச் சச்சந்தன் என்னும் அரசிளங் குமரன் அங்கு வந்தான். அவன் ஏமாங்கத நாட்டு மன்னனாகிய சீவகனுடைய அருமைத் திருமகன். அரும்பெற லழகினன். அவன் வந்தவுடனே இவள் சிந்தை திகைத்துப் பந்தாடலை விடுத்துச் செயலறியாது அயலொதுங்கினாள். அவனும் மயல்மிகுந்து மறுகி நின்றான். இருவர் மனமும் ஒருவர்மீது ஒருவர் உருகி யோட அரிதினீங்கினர். பின்பு அவன் உலகறிய வந்து இவளை மணந்துகொண்டுபோய்ச் சிறந்த போகங்களை நுகர்ந்து அறந் தவாமல் நின்று அரசுபுரிந்தான். தன் தந்தை கூறியிருந்த அரசியல்

முறைகளைச் சிந்தையுட்கொண்டு செயல்புரிந்து வந்தானுதலால் அவனது ஆட்சி நிலை எங்கும் மாட்சியுற்று நின்றது. முடிசூட்டிய பொழுது அவனுக்குச் சீவகன் உணர்த்திய உறுதி மொழிகளுள் சில அடியில் வருவன காண்க.

"குடிபழி யாமையோம்பிற் கொற்றவேல் மன்னர்மற்றுன்
அடிவழிப் படுவர்கண்டாய்; அரும்புகழ் கெடுதல்அஞ்சி
நொடியல் ஓர் எழுத்தும்பொய்யை; நுண்கலை நீத்தநீந்திக்
கொடியெடுத் தவர்க்குநல்கு கொழித்துணர் குமர! என்றான். (க)

காய்ந்தெறி கடுங்கல்தன்னைக் கவுட்கொண்ட களிறுபோல
ஆய்ந்தறிவுடையராகி அருளொடு வெகுளிமாற்றி
வேந்தர்தாம் விழைபவெல்லாம் வெளிப்படார் மறைத்தல்கண்டாய்
காந்தகவுழுவர் ஏறே! நன்பொரு ளாவதென்றான். (உ)

வாய்ப்படுங் கேடுமின்றும் வரிசையின் அரிந்துநாளும்
காய்த்தநெற் கவளந்தீற்றிற்; களிறுதான் கழனிமேயின்,
வாய்ப்படலின்றிப் பொன்றும், வல்லனாய் மன்னன் கொள்ளின்,
நீத்தநீர் ஞாலமெல்லாம் நிதிநின்று சுரக்குமன்றே." (ங)
(சீவகசிந்தாமணி)

குடிகள் மகிழ்ந்து புகழும்படி இதம்புரிந்தருள்க; பொய்யை மறந்தும் பேசற்க; அரிய கல்வியாளரை ஆதரித்தொழுகுக; தான் கருதியுள்ள வினைக்குறிப்பை எதிரிகள் அறியாவகை பாதுகாத்து, எறிந்த கல்லைக் கவுளில் அடக்கிச் சமயநோக்கி நிற்கும் யானை போல அடக்கமாய் நின்று அருந்திறல்புரிக; உலகினை வருத்தி வரி வாங்கற்க; இவ்வாறு செய்துவரின் வையகம் நின்கையதாய் வளஞ்சுரந்துவரும் என அவன் இவற்றுள் உணர்த்தியிருத்தல் காண்க. இதில் குறித்துள்ள உவமை நயங்களை ஊன்றி யுணர்ந்து கொள்க. இளமையிலேயே தாதையிடம் இவ்வாறு அரசுறுதிகளை அறிந்திருந்தானுதலால் தன் ஆட்சியை அழகுறச்செலுத்தி அரும் புகழ் படைத்துப் பெருந்தகவோடு அவன் பெருகி நின்றான். உருவம் பருவம் அன்பு அறிவுமுதலியவற்றால் ஒத்து அவனுக்கு இன்ப நிலையமா யிவள் இருந்து வந்தாள். வருங்கால் மறுபுல மன்னர் இருவர்க்கிடையே ஓர் பெரும்போர் மூண்டு முனைந்துநின்றது. அப்போர்வினை தணிக்க அங்கு அவன் போக நேர்ந்தது. அப்பிரிவில்

உருகி இவள் மறுகியிருந்தாள். தான் வருவதாகக் குறித்திருந்த பருவம் வந்தும் அம்மன்னன் வந்தருளாமையால் இவள் நொந்து புலம்பினாள். இன்று வருவர்; நாளை வருவர் என நாளும் எண்ணி வழிமேல் விழிவைத்து வாடி அயர்ந்தாள். கனவிலும் அவனையே கருதிக்கிடந்தாளாதலால் நினைவிலும் உருவெளி நீடிநின்றது. ஒரு நாள் தன் நெஞ்சை நோக்கி இவள் நெடுஞ்சொல்லாடினாள். ஆருயிர் நாதர் அகத்திலிருக்க நீ புறத்தில் யாரைத்தேடிப் புலங்கெட்டுப்போகின்றாய்! என்று பொங்கி மொழிந்தாள். "காதலவர் உள்ளத்தார் ஆக உள்ளி நீ யாருழைச் சேறி என் நெஞ்சு?" என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

ஆசைக் கொழுநன் அகத்திருக்க நெஞ்சேநீ
ஆசையெலாம் போதல் அவம்.

மனம் மறுகியலைந்தமை இதனால் கூறப்பட்டது.

1250 கொண்டானை நெஞ்சகத்தேகொண்டிருந்தும் ஏனலைந்தாள்
குண்டலகேசி குமரேசா—கொண்டாடித்
துன்னாத் துறந்தாரை நெஞ்சத் துடையேமா
இன்னு மிழத்துங் கவின். (ம)

-ள.

குமரேசா! கொழுநனை நினைந்துருகின்ற நெஞ்சைக் குண்டலகேசி ஏன் இகழ்ந்து நின்றாள்? எனின், துன்னாத் துறந்தாரை நெஞ்சத்து உடையேமா இன்னும் கவின் இழத்தும் என்க.

துன்னாத் துறந்தார் = நெருங்காமல் நீங்கினார். துன்னல் = நெருங்கல். "தொடர் நாயாத்த துன்னருங் கடிநகர்" (பெரும்பாண்) இதில் துன்னல் உணர்த்திநிற்ற லறிக. துன்னுமையைக் குறித்தது முன்பு துன்னி யிருந்தபோது அனுபவித்த நன்னயங்களை உன்னி என்க.

" அன்னமென் சேக்கையுள் ஆரா தளித்தவன்
துன்னி அகலத் துறந்த அணியளாய்,

> நாணும் நிறையும் உணர்கல்லாள், தோள்நெகிழ்பு
> பேரமர் உண்கண் நிறைமல்க, அந் நீர்தன்
> கூரெயிறுடிக் குவிமுலைமேல் வார்தரத்,
> தேர்வழி நின்று தெருமரும் ஆயிழை" (நெய்தற்கலி 29)

இன்புறத் துன்னி யிருந்தவன் பின்பு துறந்துபோனமையான் தொல்கவினிழந்து ஒருதலைமகள் இதில் உள்ளழிந்துள்ளமையறிக.

இன்னும் என்றது முன்னம் இழந்திருந்தவைகளை நினைந்து. என்ன இழவு? எனின், தொடி கழன்று, தோள் மெலிந்து, நுதல் பசந்து, உடல்மெலிந்து, ஒளிமழுங்கிப் பொலிவிழந்துள்ளமை என்க. முன்னர்ப் புறக்கவின் இழந்தேம்; இனி அகக் கவினாகிய நிறையும் ஒழியும் என்றவாறு.

மேல், காதலவர் தன் நெஞ்சிலுள்ளார் என்றாள்; இதில், அதனால் தனக்கு நேர்ந்துள்ள நிலையினை யுரைக்கின்றாள்.

என் நெஞ்சே! நம்மை அனுகாவண்ணம் அகன்றுபோனவரை நம் அகத்திடையே கொண்டுளேம்; ஆதலால் நம் அழகெல்லாம் இன்னும் இழந்து படுவேம் என்பதாம்.

பிரிந்துபோன கணவனை யாதும் மறவாமல் எப்பொழுதும் நினைந்துகொண்டே யிருத்தலால் "துறந்தாரை நெஞ்சத்து உடையேம்" என்றாள். இங்ஙனம் நினைக்க நினைக்கக் காமநோய் மிகும்; அது மிகவே உடல் ஒளி குன்றும், பசலை படரும், உளநிலை குலையும், நாண் ஒழியும் ஆதலால் "கவின் இழத்தும்" என்றாள்.

> "நீயலையே சிறு பூவாய்! நெடுமாலார்க்கு என் தூதாய்
> நோயெனது நுவலென்ன நுவலாதே இருந்தொழிந்தாய்;
> சாயலொடு மணிமாமை தளர்ந்தேன் நான் இனி உனது
> வாயலகில் இன்னடிசில் வைப்பாரை நாடாயே" (திருவாய்மொழி)

> "வரைபொரு நீண் மார்பின் வட்கார் வணக்கும்
> நிரைபொரு வேலமாந்தைக் கோவே!—நிரைவளையார்
> தங்கோலம் வவ்வுத லாமோ? அவர்தாய்மார்
> செங்கோலன் அல்லன் என" (முத்தொள்ளாயிரம்)

காம நோயுடையார் கவினிழந்து ஏமமின்றி இனைந்து புலம்புவர் என்பதை இவற்றுள்ளும் அறிந்துகொள்க.

நம்மை மறந்திருப்பாரை நாமும் மறந்துவிட வேண்டும்; அது மாட்டாமல் மீட்டு மீட்டும் நினைப்பேமாயின் கேட்டுட் படுவேம் எனத் தன் நெஞ்சொடு சொல்லித் தலைவி இங்ஙனம் நேர்ந்து நின்றாள் என்க. காதலரை மறக்கமுடியாமல் நோதல் மீக் கூர்ந்து மகளிர் மறுகி நிற்பர் என்பது இதனால் அறியலாகும்.

"தம்முடைய தண்ணளியும் தாமும் தம் மான் தேரும்
எம்மை நினையாது விட்டாரே விட்டகல்க;
அம்மெ னிணர அடம்புகாள்! அன்னங்காள்!
நம்மை மறந்தாரை நாமறக்க மாட்டேமால்" (சிலப்பதிகாரம்)

தன்னைத் துறந்துபோன துணைவனை மறந்திருக்க முடியாமல் ஒருத்தி இதில் உளைந்திருத்தலறிக. அடம்பு = பூங்கொடி.

இவ்வாறு உழந்து படுதலால் கவின் இழந்துபடும் என்க.

இவ் இழப்பினை எடுத்துக் காட்டியது அந் நினைப்பினை ஒழிக்க வேண்டி. நினைப்பிற்கு நிலைக்களமாகிய மனத்தோடு இங்ஙனம் உரைத்ததனால் அவரை மறந்திருக்க முடியாமை புலனாம். துறந்து போன அவர் திரும்பிவந்தாலன்றிக் கவலையும் ஒழியாது; கவினும் நிலையாதென்பது கருத்து. இதனால் அவள் காதல் நிலை காணலாம்.

"பொருள்வயிற் பிரிந்து பொலங்கல வெறுக்கையோடு
இருள் வயின் வந்த இன்னுயிர்க் காதலன்
மார்பக மணைந்த நேரிழை மடந்தையர்
மருங்குல் போலப் பெருங் கவின் எய்தி" (பெருங்கதை)

பிரிந்துபோன கணவர் திரும்பிவந்தபொழுது தான் இழந்த கவினை எய்தி மகளிர் இனிதமர்ந்திருப்பர் என இஃதுணர்த்திநிற்றலறிக.

காதலி மனம் காதலனையே கருதி யுருகும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை குண்டலகேசியால் உணரப்படும்.

## கதை.

குண்டலகேசி என்பவள் குணவீரன் என்னும் மண்டலீகனுடைய அருமைத் திருமகள். அரும்பெற லுருவினள். காவியப் புலமையிலும், ஓவியக் கலையிலும் இவள் மிக வுயர்ந்திருந்தாள்.

"ஓவியத்தும் எழுத ஒண்ணுதபொற் பாவை" என மேவியிருந்த இவளை மேவ விழைந்து அரசிளங் குமரர் பலர் மிக மயங்கி நின்றார். அவருள் அடவி என்னும் அரசன் பெரிது முயன்று இவளை அரிதி னடைந்தான். அவன் பெரிய போர் வீரன். அரிய கலைகள் பல ஆய்ந்து தெளிந்தவன். வாரண வாசி என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்தவன்; அருந்திறலமைந்த பெரும் படையாளன். அவனது ஊரும் பேரும் சீரும் எங்கணும் சிறந்து நின்றன. அடியில்வருவதும் காண்க.

> "காண்டற் காகாக் கடல்மருள் பெரும்படைத்
> தீண்டற் காகாத் திருந்துமதி லணிந்த
> வாரண வாசி வளந்தந் தோம்பும்
> ஏரணி நெடுங்குடை இறைமீக் கூரிய
> படைநவில் தடக்கைப் பைந்தார்க் கருங்கழல்
> அடவி அரசெனும் ஆண்டகை" (பெருங்கதை)

என நீண்ட புகழோடு நிலவிநின்ற அவன் ஈண்டிய காதலோடு வந்து இவளை மணந்துகொண்டு போய் வேண்டிய போகங்களை நுகர்ந்து விளங்கியிருந்தான். அவ் ஆண்டகைக்கு அரும்போக நிலையமா யிவள் அமர்ந்து வந்தாள். இவரது இன்ப நுகர்ச்சி உம்ப ருலகத்தது என எவரும் உவந்து புகழ நிவந்து நின்றது. இங்ஙனம் இருந்து வருங்கால் மகத மன்னனாகிய தருசகன் மீது அவன் போர்வேட் டெழுந்து தன் படைகளோடு விரைந்து போனான். இவள் பருவரல் கூர்ந்து பதைத் துழன்றாள். அந்தியும் பகலும் நீர் அறாத கண்ணளாய்ச் சிந்தையுள் ளுருகிச் செயலழிந்து கிடந்தாள். தோழியர் அருகு நின்றாற்றியும் ஆற்றாமை மீதூர்ந்து இவள் அலமந் துளைந்தாள். உணவொழிந்தாள்; துயிலிழந்தாள்; நிறங் குலைந்தாள்; நிறை தளர்ந்தாள்; கனவும் அவனையே கருதிக் கிடந்தாள். இன்னவாறு இன்ன லுழந்திருந்த இவள் சில முறை தன் நெஞ்சொடு பலபல பன்னிப் புலம்பினாள். ஓ நெஞ்சே! நம்மைத் துறந்துபோய் மறந்திருப்பவரை உள்ளூற நாம் நினைந் துள்ளதனாலே தான் நம் இயற்கை யெழில் சிதைந்து இழிந்துபட நேர்ந்தோம் என உளைந்து மொழிந்தாள். "துன்னாத் துறந்தாரை நெஞ்சத் துடையேம் ஆதலால் கவின் இன்னும்இழத்தும்" என்பதை உலகம்காண அன்றிவள் உணர்த்தி நின்றாள்.

இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்.

பிரிந்த தலைவி காம நோய்க்கு ஓர் மருந்து சொல்லென்று தன் னெஞ்சினை வருந்திக் கேட்பள். காதலனை நினைந்து நோவது பேதைமை என்பள். இங்கிருந்து வருந்தாதே அங்கு விரைந்து போ என்பள். கண்ணையும் உடன் கொண்டுபோ என்று கலுழ்ந்து நிற்பள். வெறுத்தாலும் அவனை விடலரி தென்பள். நெஞ்சு நிலை திரியினும் அதனை வஞ்சம் என்பள். காமம் விடு, இன்றேல் நாணம் விடு என்று கடிந்து கொள்வள். நல்காதவரை நயவற்க என்பள், காதலவர் உள்ளத்தார் என்பள். அவரைஉளங்கொண்டு நின்றால் கவின் ஒழிந்துபோம் என்பள் என்பதாம்.

வண்டுதேன் உண்டு மதிமயங்கும் என்னெஞ்சம்
கோண்டானைக் கோண்டு படும்.

நினைந்து தளர்ந்து நிறங் குலைந்தமை இதனால் கூறப்பட்டது.

௱உ௰ரு-வது நெஞ்சொடு கிளத்தல் முற்றிற்று.

---

# 126ம்-அதிகாரம் நிறை யழிதல்.

அஃதாவது தலைமகள் தனியே தளர்ந்து மன நிலை குலைந்து மறுகி அயர்தல். நிறையாவது அகத்துறு மறையைப் புறத்தவர் அறியாமல் அடக்கிநிற்றல். வேட்கை மிகுதியால் அந் நிலை யழிந்து வாய் விடுதலைஇஃதுணர்த்தி நிற்றலால் நிறையழிதல் என நின்றது. முன்பு மனத்தொடு பிதற்றி நின்றவள் பின்பு மயல்மீறிச்செய லழிந்து அயலறியும்படி வாய்விட்டுவெளிப்படையாகப் புலம்புகின்றாளாதலால் நெஞ்சொடு கிளத்தலின் பின் இது வைக்கப் பட்டது.

1251. காமமிக நாணம் கழன்றேன் மதயந்தி
கோமகனைச் சேர்ந்தாள் குமரேசா—ஏமமுறு
காமக் கணிச்சி யுடைக்கு நிறையென்னு
நாணுத்தாழ் வீழ்த்த கதவு. (க)

இ—ள்.

குமரேசா! காதல் மிகுந்த மதயந்தி ஏன் கணவன்பால் நிறை யழிந்து சென்றாள்? எனின், நிறை என்னும் நாணுத்தாழ் வீழ்த்த கதவு காமக் கணிச்சி உடைக்கும் என்க.

கணிச்சி=மழு. இது வல்லிரும்பால் பிறைபோல் வளைவாகச் செய்யப்பட்டுக் கைப்பிடியோடு கலந்திருக்கும். "பரசு கணிச்சி நவியமும் மழுவே", தோட்டியும் மழுவும் குறிகையும் கணிச்சி". (பிங்கலந்தை). "மருந்தில் கணிச்சி வருந்த வட்டித்து" "மாற்றருங் கணிச்சி மணிமிடற்ரேனும்," (புறம் 42, 56) "சிறருங் கணிச்சி யோன் சினவலின்" (கலி 2) "கற்றைவார் சடைமுடிக் கணிச்சி வானவன்" (இராமாயணம்.) இவற்றுள் கணிச்சி குறித்திருத்தலறிக.

காமத்தைக் கணிச்சி என்றது உளத்தைப் பிளந்தெறியும் அதன் உறுதி நோக்கி. "காமக்கணிச்சியால் கையறவு வட்டத்துச், சேமத் திரைவீழ்த்துச் சென்றமளிசேர்குவோர்". (பரிபாடல் 10)

தாழ்=தாட்பாள். இது, கதவின் பின்புறம் தழுவியிருந்து அதனை நிலையுடன் சேர்த்து இறுகப் பிணித்துக் காழ் செய்து நிற்றலால் தாழ் என நின்றது. "தாழ் செறி கடுங் காப்பு" (கலி) என்றதனுல் காப்பில் இதன் உறுதி காணலாம். "ஒளித்தறை தாழ் கோத்து உள்ளகத்து இரீஇ" (மணிமேகலை) "வன்னிலைக் கதவ நூக்கித் தாழக்கோல் வலித்து" (திருவிளையாடற் புராணம்) இவற்றுள் தாழ் உணர்த்தி நிற்றல் காண்க. "காழும் சீப்புங் கடிகையும் தாழாம்" (பிங்கலந்தை)

நாணைத் தாழ் என்றது நிறைக்கு உறுதி செய்து நிற்கும் அதன் நிலையினை நோக்கி. அகத்திலுள்ளனவற்றைப் புறத்தவர் கொள்ளாவகை கதவு அரண்செய்து நிற்றல்போல் நிறை மகளிரது மானத்தைக் காத்து நிற்கும் ஆதலால் அது கதவு என நின்றது. கதவு எவ்வளவு வலியுடையதாயினும் தாழ் இல்லையாயின் அது தளர்ந்து பெயர்ந்துபோம்; அதுபோல் நிறை எவ்வளவு நிலைத் திருப்பினும் நாண் இல்லையாயின் அது நலம்பயவாது ஆதலால் அதற்கு இது தாழ் என வந்தது. நிறையும் நாணும் கதவும் தாழும்போல் கலந்து நின்று காப்பு ஆற்றும் என்க. இதனுல் அவற்றின் இயல்பும் இயைபும் இனிதறிந்து கொள்ளலாம்.

காம இச்சை கதித்தெழுந்த பொழுது நிறை நாண்கள் நெஞ்சில் ஒழிந்துபோம் ஆதலால் அவற்றைக் "காமக் கணிச்சி உடைக்கும்" என்றுள்.

நாணமாகிய தாட்பாள் பூட்டிய நிறை என்னும் கதவினைக் காமமாகிய கணிச்சி உடைத்துவிடும் என்பதாம்.

அயலகன்றுபோன தலைவனையே நினைந்து மயல் மிகுந்து நாணமின்றி, வீணே புலம்பிக் கிடந்த தலைவியைத் தோழி ஒருநாள் நீள நோக்கி "இது என்ன வேலை? உன்னத நிலையிலுள்ள நீ இன்னவாறு பின்னமாகிப் பன்னி அயராலாமா? இது பெண்மைக்கு அழகாமா; நின் நிறையும் நாணும் நிலை குலையாமல் போற்றி நீ ஆற்றி நிற்க வேண்டாமா?" என்று தேற்றி நின்றாள்; அவ்வமயம் அவளை நோக்கி இவள் உரைத்தபடி யிது. நாணாது புலம்புகின்றேன் என்று என்மேல் நவைகூறுகின்றாய்; காமம் செய்த கொடுமையைக் காணாய் போலும் என்பாள் அது பெண்மையை உடைத்தெறிந்த தன்மையை யுணர்த்தினாள். திறக்கும் என்னாது உடைக்கும் என்றது, கொள்ளைக்காரர் செயல்போல் ஒருங்கே குலைத்துத் தன் அகத்தமைந்திருந்த அருநிறை முதலிய யாவும் அள்ளிப் போயது என அதன் அடல்நிலை தெரிய வந்த.

"நிறைத்தாழ் பறித்து என் நெஞ்சகம் புகுந்து
கள்வன் கொண்ட உள்ளம் இன்னும்
பெறுவன் கொல்லென மறுவந்து மயங்கி" (பெருங்கதை )

"யாவனே யானுமாக அருநிறைக் கதவம் நீக்கிக்
காவலென் நெஞ்சமென்னும் கன்னிமாடம் புகுந்து
நோவவென்னுள்ளம் யாத்தாய் நின்னையு மாலையாலே
தேவரிற் செறிய யாப்பன் சிறிதிடைப் படுகவென்றாள்" (காந்தருவதத்தை)

"கண்ணுறக் காளையைக் கண்டலும் கைவளை
மண்ணுறத் தோய்ந்தடி வீழ்ந்தன; மாமையும்
உண்ணிறை நாணும் உடைந்தன; வேட்கையும்
ஒண்ணிறத் தீவினைத்தாள் உருக்குற்றாள்." (சிந்தாமணி)

"வேலியங் குறுஞ்சூல் விளைகாய்ப் பஞ்சினம்
பெருவெள் ளிடையிற் சிறுகாற் பட்டென
நிறைநாண் வேலி நீங்கித் தமியே
ஒருழி நில்லா தலமரல் கொள்ளுமென்
அருந்துணை நெஞ்சம்" (கல்லாடம் 89)

" விருப்பொன்று பட்டவர் உளநிறை யுடைத்தென
வரைச்சிறை யுடைத்ததை வையை" (பரிபாடல் 6)

" நிறையும் உண்டோ காமம் காழ்கொளின்" (மணிமேகலை)

" நிறை என்பது இல்லைக் காமம் நேர் நின்று சிறக்குமாயின்"
(சூளாமணி)

" நிறையழி காமநோய் நீந்தி அறையுற்ற
உப்பியல் பாவை உறை யுற்றது போல
உக்குவிடும் என் னுயிர்" உறை = மழைத்துளி. (நெய்தற்கலி 21)

காமக் கணிச்சி நிறை நாணங்களை உடைக்கும் என அடிகள் குறித்தபடியே இவையும் அடியொற்றி வந்துள்ளன காண்க.

என் நெஞ்சைக் காமம் கைக்கொண்டமையால் நான் நிறையிழந்து நிலைகுலைந்துள்ளேன்; ஆதலால் என்னைக் குறை கூறாதே என்பது குறிப்பு.

விரகதாப மிகுந்தபொழுது மகளிர் நிறையழிந்து புலம்புவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை மதயந்திபால் உணரப்படும்.

## கதை.

மதயந்தி என்பவள் அமரசிம்மன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகள். எவரும் வியக்கத்தக்க நிலையில் இவள் விளங்கி யிருந்தாள். தான் பிறந்த குடிக்கு இவள் தோற்றம் ஓர் ஏற்றமாய் நின்றது. "மானவர்க் கமிர்தமாக மதயந்தி வதிந்தாள் என்ன, வானவர் மகளிர் தாமும் மகிழ்ந்துளம் வியந்து நின்றார்." இதனால் இவளது இயல்பும் உயர்வும் இனிது புலனும். மித்திரசகன் என்னும் அரசிளங் குமரன் இவள் மேல் ஆவல் மீக் கொண்டு அலமந்து நின்றான். அவன் சூரியகுலத் தோன்றல். சுதாசன் என்னும் மன்னனுடைய அருமைத் திருமகன். சிறந்த அழகன். இவளை விழைந்துவந்து மணந்துகொண்டுபோய்ச் சிறந்த போகங்களை நுகர்ந்து அம் மன்னன் மகிழ்ந்துவந்தான். இவரது இன்ப நுகர்ச்சி திருந்திய முறையில் சிறந்திருந்தது. வசந்த முதலிய கால நிலைகளுக்கு இசைந்த வகையில் இனிய மாளிகைகளி லமர்ந்தும், பனி

நீர் படிந்தும், நறுஞ்சாந்தணிந்தும், நறுமலர் புனைந்தும், அரியன நுகர்ந்தும், கந்தருவர் போலக் களித்து நின்றார். உழுவலன் போடு தழுவி யிருந்து இங்ஙனம் காம போகங்களைத் துய்த்து வருங்கால் ஒருமுறை வேட்டைமேல் எழுந்து அவன் காட்டை யடைந்தான். அடைந்த அவன் முனிவர் சிலர் வேண்டுகோளால் உடன் வந்த பரிவாரங்களோடு அயல் நாடு புகுந்து பின்னுள் அமர் நேர்ந்தது. இவள் துயர்மீக் கொண்டு துடித்திருந்தாள். துணை யிழந்த அன்றில்போல் அணைமீதுழுந்து நாளும் அலமந்து கிடந்தாள். "கோல் வளைகள் தோற்றாள்; குவி முலைகள் பீர்பூத்தாள்; நால் வகைய பண்பும் நழுவினாள்;" என்று பால் வந்தவரெவரும் பரிந்து பேச இவள் படருழந் தயர்ந்தாள். அனுரதி, பிரதிபை என்னும் பாங்கியரிருவர் பக்க நின்று ஆற்றியும் இவள் ஏங்கி யிருந்தாள். சில சமயங்களில் பலபல புலம்பினாள். "மாமன் மகனார் மருங்கலின் அக்கணமே காமனார் காயவர் கடுத்து" எனவும், உள்ளமே ஓர்மருந்தை யோர்ந்துரையாய் வெங்காமக் கொள்ளைநோய் தீரக் குறித்து" எனவும் இன்னன பல பன்னிப் பிதற்றினாள். அருகிருந்தவர் "என்னே இது! நம் பெண்மைக்கு அழகா? அரசிக்கு அடக்கம்வேண்டாமா?" என்று அடர்ந்து மொழிந்தார். காம தாபம் புகுந்தபோதே என் நிறையும்நாணும் அறைபோயினவே; நான் என்செய்வேன்? எனத் தன் செயலழிந்து இவள் தளர்ந்து பகர்ந்தாள். "நிறை என்னும் நாணுத்தாழ் வீழ்த்த கதவு காமக் கணிச்சி உடைக்கும்" என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள். பின்பு அரசன் வந்தான்; இவள் மருவி மகிழ்ந்து ஓர் மைந்தனைப் பெற்றாள். அவனுக்கு அச்சுமகன் என்று பெயர். அடியில் வருவது காண்க.

"அன்னவன் அளித்த விறல்கெழு புதல்வன், ஆடகப் பசியபொற்பித்திரின்
மின்னவிர் திதலை யணிந்து கன்னனுருத்தவெம்முலைமதயந்தி கணவன்
கன்னவில் திரடோள் மித்திரசகன் மற்றவன் மகன் கனை கதிரெறிக்கும்
பன்மணிச் சூட்டு வானரா நெற்றிப் பார்முழுதேத்தும் அச்சுமகன்."

(கூர்மபுராணம்)

இவளது இயலும் எழிலும் துணையும் மகவும் இதில் குறிக்கப் பட்டுள்ளன காண்க. பிரிவில் இவள் உள்ளம் பறிபோய்த் தள்ளருந்

தாயரோடு தவித்திருந்ததை அவ் வள்ளல் பின் அறிந்து வருந்தி வியந்தான். இவள் உள்ளம் நாணி உவந்திருந்தாள்.

உள்ளநிறை நாணம் ஒழியும் உறுகாம
வெள்ளம் பெருகி வரின்.

நிறையழிந்த நிலை இதனால் கூறப்பட்டது.

---

1252. அன்றனங்க மோகினியேன் யாமத்தும் காமமிகக்
குன்றி யிருந்தாள் குமரேசா—துன்றி நின்ற
காம மெனவொன்றோ கண்ணின்றென் னெஞ்சத்தை
யாமத்து மாளுந் தொழில். (உ)

இ—ள்.

குமரேசா! அனங்கமோகினி ஏன் யாமத்திலும் உறங்காமல் காம நோயால் கலங்கி யிருந்தாள்? எனின், காமம் என ஒன்று கண் இன்று என் நெஞ்சத்தை யாமத்தும் தொழில் ஆளும் என்க. இது, நிறையழிந்து இரவுழந்திருந்தமை கூறுகின்றது.

ஒன்று என்று குறித்தாள் காமத்தின் கொடுமை குறிக்க. ஓ என்பது இரக்கம் தோன்ற நின்றது. இப்படியும் ஒன்று உலகத்தி லுள்ளதே என உள்ளஞ்சி யுரைத்தபடி யிது.

கண் என்றது கண்ணோட்டத்தை. அஃதாவது கண்ணோடிச் செய்யும் இரக்கம் என்க. "காலன் என்னும் கண்ணிலி யுய்ப்ப" (புறம் 240) "காவு எழூஉம் கண்ணில் குழியில்" (நாணமணிக் கடிகை 16) இவற்றுள் கண் உணர்த்தி நிற்றல் காண்க.

யாமத்திலும் விழி துயிலாவகை தனக்கு அழிதுயர் செய்தமையால் காமத்துக்கு அருள் இல்லை என்பாள் "கண் இன்று" என்றாள். காமத்திற்குப் பிறப்பிடம் நெஞ்சம் ஆதலால் தனக்குத் தாயா யமைந்துள்ள அதனைப் பேயும் துயில் கொள்ளும் நள்ளிரவிலும் துயிலவிடாமல் தொழில் கொல்டலைத்தல் மிகவும் கொடுமை என்பது குறிப்பு.

யாமம்=நடுச்சாமம். அவ்வாமயம் எவ்வகைப் பிராணியும் துயின்று கிடக்கும் ஆதலால் துயில் நிலையமாயுள்ள அதன் இயல்பு தோன்ற யாமத்தும் என உம்மை கொடுத்து ஊன்றி யுரைத்தாள். "யாமத்தும் துயிலலள் அலமரும் என் தோழி" (குறிஞ்சிக்கலி). துயிலாது அலமந்துள்ள ஒருத்தியின் துயர் நிலையை யாமத்தால் இதில் அளந்து காட்டியிருத்தல் காண்க. "துஞ்சூர் யாமத்தும் துயிலறியலரே" (ஐங்குறுநூறு 13). என்பதும் அறிக.

மேல், காமத்தால் நிறையழிந்ததென்றாள்; இதில், யாமத்தி லும் அது துயர் செய்த தென்கின்றாள். காமமானது நடுச் சாமத்தும் என் நெஞ்சத்தை அலைத்து வருத்துகின்றது ஆதலால் அது, அருளின்றி மிகவும் கொடிதாயிரா நின்றதென்பதாம்.

நடு நிசியிலும் உறங்காமல் படுதுயரோடு பதைத்துக் கிடந்த தலைமகள் தோழியிடம் உரைத்தபடி யிது.

விரகதாபமுடையவர் யாதும் கண்ணுறங்காமல் எண்ணுதன எண்ணி ஏங்கிக் கிடப்பர்; அக் கிடையில் அவர் நெஞ்சம் அலை வாய்த் துரும்புபோல் அலைந்துழலும் ஆதலால் அந் நிலையுழந்த இவள் "என் நெஞ்சத்தை யாமத்தும் காமம் தொழில் ஆளும்" என்றாள். தொழில் ஆளலாவது நாயகன்பால் போக்கி யலைத்தல். காம நோயால் நெஞ்சம் கலங்கி யலையக் கடுந்துயரோடு இவள் புலம்பி யிருந்தமை இதனால் இனிது புலனும்.

"யாம நடுநாள் துயில்கோண் டோளித்த
காமநோயிற் கழீஇய நெஞ்சம்
தானவர் பாற்பட்ட தாயின்
நாமுயிர் வாழ்தலோ நகைநனி யுடைத்தே" (நெய்தற்கலி 5)

பிரிந்துபோன அவர்பால் நெஞ்சம் பரிந்துபோயது; இனிமேல் நாம் இருந்து வாழ்தல் இளிவுஎன ஒருத்தி இதில் இனைந்திருத்தல்காண்க.

எல்லாரும் இனிதுறங்குங் காலத்தில் யான் மட்டும் இன்ன அழுந்திருக்கும்படி காமம் இடர்செய்கின்றதே! எவரும் எனக்குத் துணையாயில்லையே என இங்ஙனம் இரங்கி நின்றாள் என்க.

"நாவலந் தண்பொழில் இன்புடன் துயில,
உலகற விழுங்கிய நள்ளென் கங்குல்
துயிலாக் கேளுடன் உயிரிரை தேரும்
நெட்டுடற் பேழ்வாய்க் கழுதும் உறங்கப்,
பிள்ளையும் பேடையும் பறைவரத் தழீஇச்
சுற்றமுஞ் சூழ்ந்து குருகுகண் படுப்பக்,
கீழரும்பு அணைத்த முள்ளரை முளரி
இதழ்க் கதவடைத்து மலர்க்கண் துயில,
விரிசினை பொதுளிய பாசிலை யொடுக்கிப்
பூவொடும் வண்டொடும் பொங்கரும் உறங்க,
என்கண் துஞ்சா நீர்மை
முன்கண்டு ஓதாது அவர்க்கு நம் குருகே" (கல்லாடம்)

உலகம் துயில, பேயும் உறங்க, பறவையும் படுக்க, தாமரையும் துஞ்ச, வண்டொடு சோலையும் மகிழ்ந்து தூங்க, நான் மாத்திரம் தூங்காதிருக்கின்றேனே; இவ் அல்லல் நிலையை அவரிடம்போய் இன்னமும் அன்னம் சொல்லாதிருக்கின்றதே! நான் என்ன செய்வேன்? என ஒருத்தி இதில் அலமந்திருத்தல் அறிக.

"பண்ணோ ஒழியா; பகலோ புகுதா;
எண்ணோ தவிரா; இரவோ விடியாது;
உண்ணோவு ஒழியாது; உயிரோ அகலாது
கண்ணோ துயிலா; இதுவோ கடனே" (இராமாயணம்)

இராமனை நினைந்து சீதை இரவில் புலம்பியபடி யிது. காமம் யாமத்தும் நெஞ்சினை யலைக்கும் என்பதும், அதனை யாற்றுமல் மகளிர் வாய்விடுவர் என்பதும் இவற்றால் அறிந்து கொள்ளலாம்.

காமதாப முடையவர் யாமமும் துயிலாமல் அலமருவர் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ் வுண்மை அனங்க மோகினிபால் உணரப்படும்.

## கதை.

அனங்கமோகினி என்பவள் நாக மன்னனுடைய அருமைத் திருமகள். மன்மதனும் மால்கொண்டு மயங்கி நோக்கத்தக்க சிறந்த அழகியாய்த் திகழ்ந்திருந்தாள் ஆதலால் அனங்கமோகினி என இவள் விளங்கி நின்றாள். இவளை மனைவியாகப் பெறத்தக்க

பெருந்தவமுடையார் யாவரோ என அருந்தவர்களும் ஆவலோடு எதிர்பார்த்திருந்தனர். இங்ஙனம் இருந்துவருங்கால் ரிபுஞ்சயன் என்னும் அரசிளங் குமரன் காசியில் பெருங்குணக் குரிசிலாய் அமர்ந்திருந்தான். "தவறில் சீர் மனுகுலத் துதித்த, பூழிவெம் பருதியனைய வேற்றடக்கை ரிபுஞ்சயன்" என அவனது குலமும் வலமும் எங்கணும் புகழ நின்றன. அக் கோமகன் தெய்வ வரங்கள் பல கைவரப் பெற்று வையக முழுவதும் செய்ய கோலோச்சித் திவ்விய தானங்களைச் செய்து சிறந்திருந்தான் ஆதலால் திவோதானன் என்னும் சிறப்புப் பெயரோடு விளங்கி நின்றான். வீரம் கொடை நியாய முதலியவற்றில் சிறந்து நின்ற அவனது குண நலங்களை யறிந்து ஆதிசேடனும் வியந்தான். அத் தலைமகனே தன் குல மகளைப் பெறத் தகுந்தவன் என்று குறித்து மகிழ்ந்து இவளை அழைத்துவந்து தழைத்த அன்புடன் அவனுக்குத் திருமணஞ் செய்து கொடுத்தான். இவளை உவந்துகொண்டு அவன் உள்ளங் களித்தான், இப் பேரழகி யோடமர்ந்து பெரும் போகங்களை நுகர்ந்து ஆருயி ரின்புற அரசு புரிந்தான். அவனது ஆட்சியில் உலகமெங்கும் உயர் நலங்கள் பெருகி யிருந்தன. அவனுடைய அரசு நிலையையும் அருந்திறலையும் குறித்து அமரரும் புகழ்ந்துளார். சில அடியில் வருவன காண்க.

"எற்றெதிர் கொடிய பகை நெடுங் கானிற்கு, எரிசுடர் வழங்குதீக் கடவுள்;
ஆற்றல்வெம்பாசத் தொன்னலர்க்கடந்த வென்றியால், ஆழ்கடற்கிறைவன்;
போற்றுமிவ்வுலகிலுயிரெலாம் உயிரிற்புரப்பவன்; அரும்பொருளெவையும்
மாற்றிடா தெவர்க்கும் உதவலால் அளகை மன்னவன் என்னவீற்றிருந்தான்;

நனந்தலையுலகம் ஒருகுடை நிழற்று நாளில், மென் கிள்ளையந் தீஞ்சொல்
கனிந்தழ கொழுகும்பச்சிளங்கழைத்தோட்கருங்கயல்மருட்டுவாட்டடங்கண்
மனங்கவ ருருவச் செழுங்கொடிப் புருவ வாளரக் கூட்டிதழ்க் கனிவாய்
அனங்கமோகினியைப்பஃறலைச்செஞ்சூட்டணிகெழுசேடன்வந்தளித்தா

கொடைக்கடனிறுக்குந் தடக்கைவே லுழவன் அளிக்குநாடெவற்றினும் [ன்
குறையா, உடைப்பெருஞ் செல்வரல்லது வறுமையுழந்துளோர் ஒருவரும்
இல்லை; விடற்கருங் கற்பிற் றம்மனை யலது பிறர்மனை விழைகுநர் இல்லை;
இடர்க்கடற் புணையாப் பிறவி வேறுக்கு மகவிலாது உறைகுநர் இல்லை;

மழைமுகில் வறப்ப நிலமிசைப் பைங்கூழ் வாடுநர் இல்லை; எஞ்ஞான்றும்
கழிபெரு நோயின் வருந்துநர் இல்லை; கனியினுமினிய மென் மழலைக்
குழவியம் பருவத்திறக்குந ரில்லை; குற்றமி லொழுக்கமே யன்றிப்
பழிபடுகரும மென்பது மறந்தும் பயில்குநர் இல்லை அப்பதியின்."

அவன் செங்கோலில் உலகம் தங்கியிருந்த நிலையை இவற்றால் நன்கு அறிந்துகொள்ளலாம். இதில் இவளது எழில்நிலை குறித்திருக்கும் இயல்பினை நோக்குக. உழுவலன்புடைய இவளைத் தழுவியிருந்து அளவிலின்பந் துய்த்து இங்ஙனம் அவன் அரசுபுரிந்து வருங்கால் இந்திரன் பொறாமையால் இடர்பல புரிந்தான். அவ் அரும்பகை களைய அவன் மருங்ககல நேர்ந்தான். இவள் பெருங் கவலையோடு பிரிந்தயலிருந்தாள். நாளும் அவனையே நினைந்து நைந் தலமந்தாள். நள்ளிரவிலும் துயிலாமல் உள்ளம் பதைத்து உழந்து கிடந்தாள்.

> " தாங்கு நிலவின் தழல்போய்த் தலைகொள்ளத்
> தேங்குழல்சேர் வண்டு சிறைவெதும்ப—ஓங்குயிர்ப்பில்
> தாமங் கரியாத் தனியே தளர்கின்றாள்
> யாமம் கரியாக இன்று "

என்றபடியே கன்றியிருந்த இவளைச் சித்திரசேனை என்னும் தோழி நெருங்கி ஆற்றியிருக்குமாறு தேற்றிப் போற்றினாள். யாதும் கண்ணுறங்காவண்ணம் உண்ணேய் மிகுந்து என் எண்ணம் அவ் அண்ணலிடமே ஓடி யலைகின்றதே யான் என்னசெய்வேன்? என இவள் இனைந்து நின்றாள். நின்றவள் காமம் கொடிதெனக் கடுத்து வைதாள். " என் நெஞ்சத்தை யாமத்தும் தொழிலாளும் ஆதலால் காமம் கண் இன்று " என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

> நெஞ்சை யலைத்து நிறையழித்து நிற்குமே
> எஞ்சாத காமம் எழுந்து.

யாமமும் துயிலாதிருந்தமை இதனால் கூறப்பட்டது.

---

1253. ஓர்ந்து விசாலைதன் உள்மறைத்தும் காமமீக்
கூர்ந்துநின்ற தென்னே குமரேசா—நேர்ந்து
மறைப்பேன்மற் காமத்தை யானோ குறிப்பின்றித்
தும்மல்போற் றோன்றி விடும். (௩)

இ—ள்.

**குமரேசா!** புறம் அறியாவகை மறைத்தும்விரகநோயால் விசாலை ஏன் வெய்துயிர்த்திருந்தாள்? எனின், யானோ காமத்தை மறைப்பேன்; குறிப்பின்றித் தும்மல்போல் தோன்றிவிடும் என்க.

மன் என்பது மிகுதி தோன்ற நின்றது. "பண்பிலனுதல் அறிவேன் மன்" (நெய்தற் கலி) என்புழிப்போல மறைப்பேன்மன் =மிகவும் அடக்கி நிற்பேன். இங்ஙனம் நான் முயன்று நிற்பினும் காமம் நீண்டெழுந்து என்னையு மீறி வெளியாகிவிடுகின்றதென்பாள் "குறிப்பின்றித் தோன்றி விடும்" என்றாள். குறிப்பு இன்றி என்றது தன் கருத்தின்படி நில்லாமல் கதித்தெழுந்ததை நோக்கி. தன் குறிப்பாவது அது வெளிப்படலாகாதென்னும் கருத்து.

காமம் அடங்காமல் தோன்றற்குத் தும்மலை உவமை காட்டியது அதன் இயற்கை யெழுச்சியின் இயல்பு நோக்கி. தும்மல் என்பது உண்ணின்று சினைத்தெழுகின்ற ஓர் உயிர்ப்பின் திரட்சி. அதனை மறைக்க முடியாது; மறைப்பினும் நில்லாது. உண்ணும் பொழுதும், பலர் முன்னும் எண்ணுதெழுந்து தன்னையுடையானை இன்னான் என அது காட்டிவிடும்; அதுபோல் காமமும் தன் கருத்தின்றிக் கடுத்தெழுந்து வெளிப்பட்டுத் தன்னைக் காட்டிநின்றதெனத் தான் நிறையழிந்து நிலைகுலைந் துள்ள உண்மையை இங்ஙனம் உரைசெய்து நின்றாள்.

மேல், காமம் நெஞ்சை யலைத்து நிலைகுலைக்கும் என்றாள்; இதில், அதனை அடக்கமுடியா தென்கின்றாள்.

காமத்தைப் பிறர் அறியாவகை யான் மிகவும் மறைக்கா நின்றேன்; அது என் குறிப்பில் நில்லாமல் தும்மல்போலத் தானே வெளிப்பட்டே விடா நின்றதென்பதாம்.

விரகதாபத்தால் நிறையழிந்து புலம்பி மறுகி யிருந்த தலைவியைப் பார்த்து "இப்படி வாய்விடலாமா? கொஞ்சம் அடக்கி யிருக்கலாகாதா?" என்று தோழி அறிவுறுத்தினாள்; உறுத்தவே அவளை உருத்து நோக்கி "நான் அடக்கித்தான் பார்க்கின்றேன்; இப்பழிப்பட்ட காமம் வெளிப்பட்டு விடுகின்றதே! நான் என் செய்வேன்? எனத் தன் செயலறவை அயலறிய இங்ஙனம் உரைத்தாள் என்க.

காமம் மறைப்பினும் மறைந்து நில்லாதென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை விசாலைபால் உணரப்படும்.

## கதை.

விசாலை என்பவள் சோமநந்தன் என்னும் குறுநில மன்னனுடைய அருமைத் திருமகள். அதிசய அழகினள். "காமன் றன் பெற்றெடுத்த கன்னிகையோ என்றமரர் கோமகனும் மாமயல் மீக் கொள்ளவே, காமரெலாம், கூடி ஒரு வடிவு கொண்டதெனத் தெய்வ ஒளி நீடி நிலத்தில் நிலவினள்" என இவள் நிலவி நின்றாள். அக் காலத்திருந்த இளவரசகளெல்லாம் இவள்மேல் அளவில் காதலோடு அலைந்து முயன்றும் யாதும் பயனின்றி அலமந்து நின்றார். இவள் எவரையும் மதியாமல் தனியே தகவுடனிருந்தாள். ஒருநாள் மாளிகை யருகே யிருந்த குளிர்பூஞ்சோலையுள் தோழியரிருவருடன் புகுந்து மாலையில் உலாவினள். அவ் வமயம் தெய்வகதியாய் அங்கு ஓர் அரசிளங் குமரன் வந்தான். இவளைக் கண்டான்; உடனே காதல்மீக் கொண்டு கருத்துருகி நின்றான். அவன் ஆதவகுலத்துதித்த மாதவத்தோன்றல். துந்து என்னும் அரசனுடைய அருமைத் திருமகன். அரும்பெறல் அழகும் பெரும் போர் வீரமும் ஒருங்கமையப் பெற்றவன். விசயன் என்னும் பெயரோடு இசைமிகுந்து நின்றான். அவன் மேல் இவளும் ஆவல்மீக் கொண்டாள். கொண்டும் அமயம் அமையாமையால் அவனை நயந்து நோக்கி, நாணமீக் கொண்டு நகைமுகங் காட்டி அகன்றுபோனாள். போனபின் மயங்கி அம் மானவன் மறுகினான். தன் உள்ளமெல்லாம் கொள்ளைகொண்டு போன அக் கள்ள நோக்கினையே கருதிக் கலங்கி உறுதிகுன்றி யுளைந்துள முருகினான். உரை பல பிதற்றினான்.

> "தெண்ணீர்ப் பனிக்கயத்து மட்டவிழ்ந்த தேங்குவளைக்
> கண்ணீர்மை காட்டிக், கடல்போல் அகன்ற என்
> உண்ணீர்மை யெல்லாம் ஒரு நோக்கினிற் கவர்ந்த
> பெண்ணீர்மை மேனாட் பிறந்தும் அறியுமோ?"

என்றபடி அவன் மறுகிப் புலம்பி மாலொடு பெயர்ந்தான். பெயர்ந்தவன் பின்பு தகுந்தவர்களை இவளுடைய தந்தையிடம் விடுத்தான். வந்த அவர் அவன் சிந்தை நிலை யுரைத்துச் சிறப்பையும் குறித்தார். இவளது மன நிலை தெரிய அவன் மனைவியை அனுப்பினான். அக் குலமகளைக் கண்ட நாள்முதல் காமந் தலைக்கொண்டு

அவனை எய்தும்பேற்றை எதிர் நோக்கித் தெய்வம் பரவித் தேம்பி யிருந்தாளாதலால் தாயுரை கேட்டபோது தழைத்தெழுந்தாள். அதன்பின் அருமணம் குறித்து அவனை அழைத்துவரச் செய்தார்.

"கண்ணுறக் கலந்த காமவேகம்
ஒண்ணிறச் செந்தீ யுண்ணிறைக் கடங்கிய
ஆதுலைபோல உள்ளகங் கனற்ற
மறுத்து அவற்காணும் குறிப்பு மனத்தடங்கிப்
பண்கெழு விரலிற் கண்கழூஉச் செய்து
தெய்வம் பேணிப் பையென இருந்த"

என்றவண்ணம் மையலோடிருந்த இவளை அவ் ஐயன் வந்து மணந்து கொண்டுபோய் மகிழ்ந்திருந்தான். அவன் பெரிய போர்வீரனாத லால் அரிய பகைகளை யடக்கி அவனிமுழுதும் இனிதுபேணி வந்தான். அப் போர் வீரனுக்குப் பேரின்ப நிலையமா யிவள் பெருகி யிருந்தாள். இங்ஙனம் இருந்து வருங்கால் மறுபுலந் தன்னில் பொருதிறங் கருதி முடிமன்னர் இருவர் முண்டு நின்றார். இவ் ஆண்டகை அவரை யடக்கி வர ஆண்டுச் செல்ல நேர்ந்தது. இவள் அல்லலுழந்து தனியே அலமந்திருந்தாள். மிகவும் அடக்க முடையளா யிருந்தும் நிறை யழிந்து இடையிடையே மறுகிப் புலம்பினாள். அதனை அயலறிந்த தென்று பின்பு அறிந்து நாணி னாள். காமம் தன்னையு மீறி வெளிப்பட்டுவிட்டதே என வெள்கி ஒருநாள் தோழியிடம் உள்கி யுரைத்தாள். "யானோ மறைப்பேன்; என் காமம் குறிப்பின்றித் தும்மல்போல்தோன்றி விடும்" என்பதை உலகம் அறிய இவள் உணர்த்தி நின்றாள். பின்பு அவ் அழகன் வந்தான்; இவள் உளமகிழ்ந்து தழுவி ஓர் புதல்வனைப் பயந்தாள். அம்மகனுக்குக் காருகன் என்று பெயர். இவளுடைய கணவன் தன் பெயரியல்புக் கேற்ப எங்கும் சயமே கொண்டு இசை முகந்து நின்றான். அவனது வீர நிலையைக் குறித்து அறிஞர் பலரும் வியந்து புகழ்ந்துளார். அடியில்வருவது காண்க.

"மருவலர் மனைவாழ் மங்கையர் கழுத்தில் மங்கல நாணினைத் தாயர்
வெருவொடு நோக்கி நாளையும் காண விதிக்கெனத் தெய்வதம் பரவ
எரியுமிழ் கதிர்வாள் கைத்தலத்தெடுக்குமெறுழ்வலி விசயன்நன்மைந்தன்
கருதலர்வயிற்றில்தீப்படவிழிக்கும்கல்செய்தோட் டிறல்கொள் காருகனே"
(கூர்மபுராணம்)

இவளுடைய கணவனது அருந்திறலையும், பகையஞ்சியிருந்த பண்பையும் குறித்து இதில் விளக்கியிருக்கும் அழகைப் பார்க்க. பிரிவில் இவள் காம தாபத்தை மறைக்கமுடியாமல் மறுகியிருந்த நிலையைப் பின்பு அக் கோமகனும் அறிந்து இரங்கினான்.

தாய்மறைத்த சூல்மறைந்து தங்கினுமே தன்காம
நோய்மறைக்க லாமோ நுவல்.

காம வேகத்தின் கடுநிலை இதனால் கூறப்பட்டது.

---

1254. மாளவிதன் காம மறைத்தும் நிறைகடந்து
கோளடர்ந்த தென்னே குமரேசா—நீள
நிறையுடையேன் என்பேன்மன் யானோ என்காம
மறையிறந்து மன்று படும் (௪)

இ—ள்.

**குமரேசா!** தன் காமதாபத்தை மறைக்க முடியாமல் மாளவி ஏன் மறுகி நின்றாள்? எனின், யான் நிறையுடையேன் என்பேன் மன்; என் காமம் மறை இறந்து மன்று படும் என்க.

நிறை = கற்புநிலை. இதுபெண்மைக்குப் பெருமையானபோணியாதலால் அதனைத் தான் உடைத்தாயிருத்தலை உவந்து கூறினாள்.

மறை இறந்து = மறைத்தலைக் கடந்து இறத்தல் = வரம்பு மீறி நிற்றல். மன்று = வெளி. பலர் வந்து கூடும் சந்தி என்க.

மன்று படும் என்றது பலரும் அறியும்படி வெளிப்பட்டுமா நின்றது என்றவாறு. படும் என நிகழ்விற் கூறியது அது நெடிதோங்கி நிற்கும் நிலை கருதி.

மறையிறத்தலும், மன்று படலும் ஒன்றன்பின் ஒன்று ஒன்றியெழுந்தமையான் அம்முறை தோன்ற நின்றன. முன்னது அகத்தில் நிகழ்ந்தது; பின்னது புறத்தில் கிளர்ந்த தென்க.

நானோ நிறையுடையேன் எனப் பெருமிதத்தோடு நிமிர்ந்து நிற்கின்றேன்; என் காமமோ மறையிறந்துபோய் மன்றிலும் மறுகிலும் பட்டு மானங் கெடுகின்றதே; இவ் ஈனத்திற்கு என் செய்வேன்? எனத் தலைவி இனைந்து மொழிந்துள்ளமையை இதில் உணர்ந்துகொள்க.

மேல், காமம் மறைப்பினும் வெளிப்படும் என்றாள்; இதில் அது மன்றறியச் சென்று திரிகின்றதென்கின்றாள்.

யான் நிறையுடையேன் என்று பெருமிதம் கொண்டுளேன்; என் காமம் நிலை மீறிப் பலரறிய வெளிப்படா நின்றதென்பதாம்.

பிரிவு நோயால் அறிவு போய் அலமந்திருந்த தலைவியை ஒரு நாள் தோழி நெருங்கி நிறையுடைய நீ புறமறிய இவ்வாறு புரை படலாமா? விரக தாப மிகுந்தெழுந்தாலும் அதனை அகத்தில் அடக்கிக் கொள்ளலாகாதா? என்று அறிவுறுத்த அவ்வமயம் அவள் உரைத்தபடி யிது.

தன்னாலானவரையும் மறைத்துப் பார்த்தும் மறைபடாமல் தன் காம நோய் புறத்தார்க்குப் புலப்பட நேர்ந்தமையால் தனது நிறையழிவிற்கு இரங்கி இங்ஙனம் உரை செயலானாள். நெஞ்சு பறிபோய்த் தன் செயலழிந்து இவள் தவித்துள்ளமை இதனால் நன்கறியலாகும்.

"மன்செய்த முன்னாள் மொழிவழியே யன்னவாய்மை கண்டும்
என்செய்த நெஞ்சும் நிறையு நில்லா; என தின்னுயிரும்
பொன் செய்த மேனியன் தில்லை யுறாரிற் பொறையரிதாம்;
முன்செய்த தீங்குகொல்? காலத்து நீர்மைகொல்? மொய்குழலே"
(திருக்கோவையார்)

நெஞ்சமும் நிறையும் தன்வழி நில்லாமல் நீங்கி யொழிந்தன; எனத் தலைமகள் இதில் ஏங்கி மொழிந்துள்ளமை காண்க.

தனது அகநிலையை எவரும் எளிதிலறியா வகை இனிது பேணி உறுதிசெய்து நிற்கும் அரிய குணமே நிறையாம்; அத் தகைய உயிரியல்பைத் தனக்கு மிக உரிமையாக வுடைய குல மகளது உள்ளத்தையும் பிளந்து துள்ளியெழுந்து வெளியே புலனாய்க் காமம் இளிவு செய்தமையான் "என் காமம் மறை யிறந்து மன்று படும்" என்றாள்.

"கைவரை நில்லாக் காமவேக
மன்று முதலாகச் சென்று முறை நெருங்க" (பெருங்கதை)
என்றதும் காண்க.

பிரிவினுள்ள மகளிர் விரக நோயால் நிறைபோய் வருந்துவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது, இவ் வுண்மை மாளவியால் உணரப்படும்.

## கதை.

மாளவி என்பவள் மத்திர தேசத்து அரசனாகிய அசுவபதியி னுடைய அருமைத் திரு மனைவி. அவன் இளவரசனா யிருக்கும் பொழுதே இவளது அழகு நிலையி லீடுபட்டுக் களவுமுறையில் கலந்து உளமுருகி நின்று பின்பு உலகறிய மணந்து அலகில் போகங் களை நுகர்ந்து ஆர்வமீதூர்ந்தான். அக் கோமகனுக்குக் கோப் பெருந் தேவியாய்க் குலாவியிருந்து கோன்முறையிலும், நூன் முறையிலும் பான்முறை சூழ்ந்து இவள் மேன்முறை புரிந்தாள். அன்பிலும் அறிவிலும் சிறந்து இன்ப நிலையமா யிருந்த இவளை யாதும் அகலாமல் ஆருயிர்போல் பேணி அவன் அரசுபுரிந்து வந்தான். உழுவலன்போடு இங்ஙனம் தழுவிவருங்கால் பரிதிகன் என்னும் மறுபுல மன்னன் செய்த ஓர் அரிய வேள்விக்கு ஆதர வோடு அழைத்திருந்தானாதலால் அங்கு அவன் போதரலானான். அப் போக்கில் இவள் ஏக்கமிகுந்து இனைந்து வாடினாள். சயந்தி என்னும் தோழி நெருங்கி அறிவுரை கூறி ஆற்றி நின்றாள்.

"ஆண்கடன் அகறல்; அதுநோன் றொழுகுதல்
மாண்பொடு புணர்ந்த மாசறு திருநுதற்
கற்புடை மகளிர் கடனெனக் காட்டி" அற்புமிக வமைந்து பற்பல வுரைத்துப் பரிந்து தேற்றியும் பருவரல் கூர்ந்து இவள் பதைத் தழன்றாள். நள்ளிரவிலும் துயிலாமல் நாயகனை நினைந்து வாய் மிகப் புலம்பினாள். "சந்திரவதனா, தாமரை நயனா, இந்திர திருவா, சுந்தரவுருவா, சென்றெனை மறந்தாய், நின்றருள் துறந் தாய், நொந்துழல் கின்றேன், வந்தருள் புரியாய்," என்று இன்ன வாறு பன்னி யுளைந்தாள். உருக்குலைந்து உள்ளம் பறிபோய்த் தள்ளருந் துயரோடு இவள் தவித்திருந்ததைக் கண்டு அங்குள்ளவ ரெல்லாரும் உருகி இரங்கினார். தனது மயல்நிலை அயலறிய நேர்ந் ததை யறிந்து மேலும் இவள் துயர் மிகுந்தாள். தன் அருநிறை கடந்து காமம் பெருமிறை செய்ததே என இவள் அலமாலானாள். நிறையுடைய தன் காமம் மறைபிறந்து மன்றுபடும் என்பதை உலகமறிய அன்றிவள் நின்றுணர்த்தினாள்.

பின்பு அக் குலமகன் வந்தான்; இவள் கூடி மகிழ்ந்தாள் இவளுடைய அருமைத் திருவயிற்றி லிருந்துதான் சாவித்திரி

என்னும் தலைமகள் பிறந்து கற்புக்கரசியாய்க் கனிந்து விளங்கினாள்.

எல்லாரும் கண்டிகழ என்காம நீண்டதே
நில்லா வினைபோல் நிமிர்ந்து.

காமம் மறையிறந்து மறுகுறிய நிலைமை இதனால் கூறப்பட்டது.

1255. ஆவ லுடன்சென் றலமந்தாள் ஆவினிதன்
கோவின்பின் என்னே குமரேசா—பூவுலகில்
செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோ
யுற்றா ரறிவதொன் றன்று. (ரு)

இ—ள்.

குமரேசா! அகன்று நின்ற கணவன் பின்னே ஆவினி ஏன் விழைந்து சென்றாள்? எனின், செற்றார் பின் செல்லாப் பெருந்தகைமை காம நோய் உற்றார் அறிவது ஒன்று அன்று என்க. இது, காமம் சிறுமைமிகச் செய்யும் என்கின்றது.

செற்றார் = வெறுத்தார். செறுத்தல் = வெறுத்தல், பகைத்தல். இங்குச் செற்றார் என்றது தலைவனை. துன்பத்தில் உழலும்படி தன்னைக் கைவிட்டுத் தூரம் போயுள்ளவர் நேரமாகியும் வந்தருளாமையால் இகழ்ந்து நின்றார் என்று கருதிச் செற்றார் என்றாள். பின் செல்லலாவது மனத்தால் இடைவிடாது நினைத்தல்.

தம்மைச் செற்றகன்ற காதலரைச் சகுந்தலையும், தமயந்தியும், நினைந்துருகியதும் ஈண்டு நினைந்துகொளத்தக்கது.

பெருந்தகைமை = பெரிய தன்மை. அஃதாவது அரியன ஆற்றிநிற்கு மேன்மை. அறிவது ஒன்று அன்று = அறிவதொரு பொருளா யிராது. பெருந்தன்மையைக் காணமுடியாதென்பது கருத்து.

காம நோயானது மானங் கருதாமல் ஈனமுறச் செய்யும்; செய்யவே அதனையுடையார் பெருந்தகையாளராய் நிற்க முடியாது ஆதலால் "பெருந்தகைமை, காமநோ யுற்றார் அறிவது ஒன்று அன்று" என்றாள். உற்றார் அறியார் என்றதனால் காமம் உறாதவரே பெருந்தகைமை பேணிப் பெருமிதமுடையாராய் நிற்பர்

என்பதாயிற்று. காமத்தால் தான் நிறையழிந் துள்ளமையை இவ்வாறு பிற குறிப்பில் வைத்து முறைசெய்து காட்டினாள். காமம் ஆண்பாலை மானங் கெடுத்து மதி யழிக்கும்; பெண்பாலை நிறை யழித்து நிலை குலைக்கும் என்பது குறிப்பு.

மேல், தன் காம நோய் கைகடந்து நின்றதென்றாள்; இதில், அதனால் தனக்கு நேர்ந்துள்ள சிறுமையை யுரைக்கின்றாள்.

தம்மை இகழ்ந்து நின்றார்பின் விழைந்து செல்லாத மேன்மையைக் காம நோயுடையார் அறியார் என்பதாம்.

பிரிந்துபோயுள்ள தலைவனையே நினைந்து நினைந்து நிலையழிந்திருந்த தலைவி ஒருநாள் அவனிடம் செல்ல எழுந்தாள்; அருகு நின்ற தோழி இங்ஙனம் செல்லல் நின் பெருந்தகைமைக்குப் பொருந்துமா? என்று தடுத்தாள்; அவ்வமயம் அவள் உரைத்தபடி யிது.

காதலனிடம் இடையறாது தன் நினைவு நெடிதோடி நிற்றலால் தானும் நெஞ்சமும் அவன் பின் போனதாகக் குறித்தாள். பின் என்றது அவனைத் தொடர்ந்து சென்றமை தோன்ற.

> " கருநாயிறு போல்பவர் காலொடு போய்
> வருநாள் அயலே வருவாய் மனனே!
> பெருநா ளுடனே பிரியாது உழல்வாய்
> ஒருநாள் தரியா தொழிவார் உளரோ" (இராமாயணம்.)

தன் நெஞ்சம் இராமர் பின் சென்றதைக் குறித்துச் சீதை இதில் உரைத்திருக்கும் அழகைப் பார்க்க.

காதலனையே நினைந்து காதலி கருத்துருகி நிற்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை ஆவினிபால் உணரப்படும்.

## கதை.

ஆவினிஎன்பவள் கேசி என்னும் அரசனுடைய அருமைத்திருமகள். எழில் குடிகொண்ட ஒளிதவழ் மேனியள். இவள் பருவமெய்தி இனிதமர்ந்திருக்குங்கால் மறுபுல மன்னர் சிலர் இவளை மணந்து கொள்ள விழைந்து மயங்கிவந்தார். இவள் எவரையும் விழையாது தனியமர்ந்திருந்தாள். இருந்தவள் ஒருநாள் நகர் மருங்கிருந்த குளிர் பூஞ் சோலையிடை ஒளிகான்று நின்ற வசந்த மாளிகையி லமர்ந்து இசைந்த கீதங்களைப் பயின்று மாலையில் உவந்த நெஞ்சின

ளாய் உலாவி நின்றாள். அவ்வமயம் அங்கோர் அரசிளங் குமரன் வந்தான். அவன் சேரர் மன்னர் மரபிற் பிறந்தவன். சிறந்த அழகன்; பேரறிவாளன்; பெருங் கொடை வள்ளல். பெருங் கடுங்கோ என்னும் பெயரினன். இவளைக் கண்டவுடனே மய்யல் மீக் கொண்டு அவன் மறுகி நின்றான். இவளும் அவனை உருவ நோக்கி உளமிக வுருகினாள். இருவரும் கந்தருவ முறையில் கலந்து மகிழ்ந்தார். முதன்முறை எழுந்து செல்லுங்கால் பிரிந்தகலுகின்ற அவன் திரும்பி வருவனோ? என இவள் வருந்தி மறுகினாள். அவன் அருகணைந்து ஆரமுயங்கி முதுகு தைவந்து மதி முகம் நீவி ஆணை கூறி ஆற்றிப்போற்றி இவளைத் தேற்றியருளினான். அவ்வமயம் அவன் சொல்லியபடியை அடியில் பார்க்க.

> "மெல்லியல் அரிவை! நின் நல்லகம் புலம்பல்;
> நிற்றுறந் தமைகுவெ னாயின், எற்றுறந்து
> இரவலர் வாரா வைகல்,
> பலவாகுக யான் செலவுறு தகவே" (பெருங்கடுங்கோ)

என நிலைபெற மொழிந்து அவன் நெகிழ்ந்து போனான். இதனால் அவனது வண்மையும் தண்மையும் உண்மையும் உணரலாம். இந் நிலையிற் சென்ற அத் தலைமகன் பின்பு உலகறிய வந்து இக் குலமகளை மணந்து அலகில் போகங்களை நுகர்ந்து அகமகிழ்ந்து வந்தான். வருங்கால் இடையே அரசுவினை கருதி அவன் அயல் பிரிய நேர்ந்தது. இவள் துயர் மிகுந்து தனியே துடித்திருந்தாள். தான் வருவதாகக் குறித்திருந்த பருவம் வந்தும் அவன் வந்தருளாமையால் இவள் சிந்தை மிக நொந்தாள். சொல்லியவாறு வராதிருப்பினும் அவன் மீது யாதும் குறை கூறாமல் தன் வினைப்பயன் இவ் வகை விளைந்து வருத்துகின்றது; வேறு யாரை நோவது? எனத் தோழியிடம் இவள் துளங்கி யுரைத்தாள்.

> "முன்னொரு நாளில் உடலுயிர் நீ என
> உள்ளம் கரிவைத்து உரைசெய்த வூரர்
> தம்மொழி திரிந்து தவறுநின் றுளவேல்,
> அவர்குறை யன்றால்; ஒருவன் படைத்த
> காலக் குறிக்கொல்? அன்றியு முன்னைத்
> தியங்குடல் ஈட்டிய கருங்கடு வினையால்
> காலக் குறியை மனந்தடு மாறிப்

பின்முன் குறித்த நம் பெருமதி அழகுகொல்?
நனவிடை நவிற்றக் கனவிடைக் கண்ட
வுள்ளொழு கலக்கத துடன் மயங்கினமால்
குறித்தவிவ் விடைநிலை ஒன்றே
மறிக்குலத் துழையின் விழிநோக்கினளே!"

மான்போன்ற மருண்ட பார்வையினை யுடைய தோழியே! என இவ்வண்ணம் விளித்து உய்வண்ணமின்றி இவள் உளைந்து பல புலம்பினுள். உழை=பெண்மான். நாயகனை இடைவிடாது நினைந்து இங்ஙனம் படருழந்திருந்த இவளை ஒருநாள் தோழி நெருங்கி நம்மை மறந்திருப்பவரை நாமும் சிறிது மறந்திருக்க வேண்டும்; ஆதலால் அவர்பால் நினை வொழிந்தமர்க என நிலை பெற மொழிந்தாள். நான் மறந்திருப்பினும் என்னெஞ்சம் அவரையே நினைந்து செல்கின்றதே என இவள் இனைந்திருந்தாள். செற்றார் பின் செல்லாப் பெருந்தகைமை காமநோயுற்றார் அறியார் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

உள்ளமுயி ரெல்லா முடையான்பின் செல்லநான்
எள்ளலுற நின்றே னிவண்.

உளமழிந்து நின்றநிலை இதனுல் கூறப்பட்டது.

---

1256. சென்றுநின்ற காதலன்பின் செல்லநினைந் தேனுளைந்தாள்
குன்றுச் சுகலை குமரேசா—கன்றியே
செற்றவர் பின்சேறல் வேண்டி யளித்தரோ
எற்றென்னை யுற்ற துயர். (சு)

இ—ள்.

குமரேசா! தன் நாயகன் பின் செல்ல விழைந்து சுகலை ஏன் நைந்து நின்றாள்? எனின், செற்றவர் பின் சேறல் வேண்டி அளித்து அரோ என்னை உற்ற துயர் எற்று என்க.

செற்றவர்=செறுத்துப் போனவர். தன் கருத்தின்படி வாராது நிற்றலால் அவரை இங்ஙனம் குறித்தாள்.

சேறல் வேண்டி=செல்லுதலை விரும்பி. அளித்து—அளியை யுடையது; அருள் செய்கின்றது என்றபடி. அரோ என்றது அச் செயலியலை வியந்து.

துயர் — காம நோய். எற்று — எத்தன்மைத்து? அதன் இயல்பு அதிசயமுடையதென இகழ்ச்சியோடு குறித்தபடி யிது.

தன் கணவனைக் காண நினைந்து போவாளோடு தான் பெருகி நிற்றற்கு விரகதாபமே காரணமாதலால் தன் நிலையினை அதன் தலைமேலேற்றி "அளித்தரோ" என இங்ஙனம் இளித்து நின்றாள்.

மேல், செற்றவர் பின் மனம் சென்றுழல்கின்ற தென்றாள்; இதில், அங்ஙனம் செல்லும்படி காமம் செய்த தென்கின்றாள்.

வெறுத்தகன்றவர் பின்னே நான் விரும்பிப் போம்படி இரங்கி அருள்கின்றது; என்னையுற்ற காம நோய் எத்தன்மைத்து என்ப தாம்.

கணவனையே நினைந்து நினைவு நீடியிருந்த தலைவி தனது விரக தாபத்தின் கொடுமையைக் குறிப்போடு வியந்துரைத்தபடி யிது.

பிரிந்துள்ள தலைவனை எவ்வாறாவது அடைந்து மகிழவேண்டும் என்னும் ஆசையானது தன்னெஞ்சை நாளும் அலைத்து நின்றமை யால் தனது உள்ளநிறை குலைந்து இங்ஙனம் உரைசெய்தாள என்க.

காமமானது நிறைமானங்களை நீக்கி நிலைகுலைக்கும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை சுகலையால் உணரப்படும்.

## கதை.

சுகலை என்பவள் சந்திரகுலத் தோன்றலாகிய அனமித்திர னுடைய அருமைத் திரு மனைவி. பல கலைகளையும் பயின்று தெளிந்தவள். சிறந்த குணவதி. கொண்டானையே தெய்வமென்று கொண்டாடி நின்றவள். இப் பதிவிரதையோ டமர்ந்து அதி போகங்களை நுகர்ந்து மூதுநிலம் புரந்து அவ் அதிபதி அகமிக மகிழ்ந்தான். பேரழகனுயினும் ஏர் குடிகொண்ட இவளது இன்பச் செவ்வியிலாழ்ந்து அன்பாற்றி நின்றான்.

> "குங்குமச் சேறு தோய்ந்த குறிஞ்சிப்பூங் கோதைபோலும்
> அங்கலுழ் திதலை பூத்த அரும்பிள முலையினல்லார்
> பைங்கணைக் காமனென்னப் பகர் அனமித்திரப் பேர்ச்
> சிங்கவேறு" (கூர்மபுராணம்)

என அழகிலும் ஆண்மையிலும் எங்கும் புகழ்பெற்று நின்ற அவனுக்குப் பொங்கிய போக நிலையமா யிவள் தங்கி யிருந்தாள்.

உழுவலன்புடையாராய் இவ் இருவரும் இங்ஙனம் உவந்து வருங்கால் தெவ்வர் சிலர் திரண்டெழுந்து செறுத்து நின்ருர். அவரை வென்றடக்கிவர வியன் படைகளை யனுப்பி அவ் வேந்தனும் பின் விரைந்து சென்ருன். சென்றவன் போர் முனையில் பாசறை யமைத்துச் சில காலம் அங்குத் தங்க நேர்ந்தது. பிரிவாற்ருமல் பெருந்துயர் கூர்ந்து அவன் உருவையே நினைந்து இவள் உளமுருகி யிருந்தாள். பகலில் ஒருவாறு ஆறியிருந்தாலும் இரவில் மிகவும் பருவரலுழந்தாள். அந்திப்பொழுதடைந்தபொழுது சிந்தை கலங்கி அரும்படர் கூர்ந்தாள். கலைஞான முடையவளாதலால் அக் காலக் காட்சியை நோக்கிப் பலபல புலம்பினுள்.

"கோடிய கோலினன் செருமுகம் போலக்
கனைகதிர் திருகிக் கல்சேர்ந்து முறைபுகப்,
பதினெண் கிளவி யூர்துஞ்சிய போல்
புட்குலம் பொய்கை வாய்தாட் கொள்ள,
வேள்சரத் துடைகுநர் கோலம் நோக்கி
இருள்மகள் கொண்ட குறுநகை போல
முல்லையும் மௌவலு முருகுயிர்த் தவிழத்,
தணந்தோ ருளத்திற் காமத் தீப்புக,
மணந்தோர் நெஞ்சத்து அமுத நீர்விட,
அன்றில்புற் சேக்கைபுக் கலகுபெடை அணைய,
அந்தணர் அருமறை யருங்கிடை அடங்க,
முதிர்கனி மூலம் முனிக்கண மறுப்பக்,
கலவையும் பூவும் தோள்முடி கமழ
விரிவலை நுளையர் நெய்தல் ஏந்தித்
துத்தம் கைக்கிளை அளவையின் விளைப்ப,
நீரா மகளிர் செவ்வாய் காட்டிப்
பசுந்தாட் சேக்கொள் ஆம்பல் மலர,
முக்கட் கடவுள் முதல்வனை வணங்கார்
தொக்கதீப் பெருவினை சூழ்ந்தன போலவும்,
துறவால் அறனுல் பெறலில் மாந்தர்
வின்ளா அறிவின் உள்ளம் போலவும்,
செக்கர்த் தீயொடு புக்கநன் மாலை!
என்னுயிர் வளைந்த தோற்றம் போல
நாற்படை வேந்தன் பாசறை
யோர்க்கும் உளையோ? மனத்திறன் ஓதுகவே."

என்றபடி மாலைக்காலத்தில் பலவாறு பிதற்றி மயங்கி யுயங்கினுள்.

ஒருநாள் தருமநந்தனி என்னும் தோழி நெருங்கி நாம் இந்தப் பாடுபட்டு நைந்து கிடப்ப நம்மை மறந்திருக்கு மன்னர் பெருமானை நாமும் சிறிது மறந்து ஆறியிருக்க லாகாதா? என்று தேறுதல் கூறினள். நான் மறந்திருந்தாலும் என் னெஞ்சம் அவரே தஞ்ச மென்று அவாவித் தாவி ஓடுகின்றதே நான் என்செய்வேன் என இவள் ஏங்கி மொழிந்தாள். செற்றவர் பின் சேறல் வேண்டி என்னையுற்ற துயர் அளித்துள்ளது என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

நின்ற நிறையழித்தேன் னீர்மையெலாஞ் சிந்தியதே
ஒன்றாத காமம் உருத்து.

நிறைபோய் நெஞ்சழிந்தமை இதனால் கூறப்பட்டது.

---

1257. உள்ளநாண் நீங்கி உரோகிணியேன் காமமீக்
கொள்ள விருந்தாள் குமரேசா — தள்ளாத
நாணென வொன்றோ வறியலங் காமத்தாற்
பேணியார் பெட்ப செயின். (எ)

இ—ள்.

குமரேசா! உரோகிணி ஏன் யாதும் நாணாது காதலனைப் பேணி நின்றாள்? எனின், பேணியார் காமத்தால் பெட்ப செயின் நாண் என ஒன்று அறியலம் என்க. தள்ளாத என்றது உயிரினும் சிறந்ததாய் நாண் அமைந்திருக்கும் அருமை கருதி.

பேணியார் என்றது தலைவரை. காதலியால் பேணப்பட்டவர் என்றவாறு. பேணல் = விரும்பல், போற்றல்.

பெட்ப = விருப்பமானவைகளை. அவையாவன காம நலங்கள். கலவிக் காரணங்கள் பலவாதலால் அந் நிலையெல்லாம் நினைந்து பன்மையில் குறித்தாள். பெட்டல் = பேணல், விரும்பல். "பிணையும் பேணும் பெட்பின் பொருள" (தொல்காப்பியம்).

ஒன்றோ என்றது ஒரு சிறிதும் என்றபடி. நாணம் என்பது இருந்த இடமும் தடந் தெரியாமல் ஒழிந்து போயதென்பாள்

"நாண் என ஒன்றோ அறியலம்" என்றாள். காமமும் நாணமும் தம்முள் மாறுபாடுடையதாதலால் ஒன்று கதித்தெழுங்கால் மற்றது காந்தொழியும் என்க.

கௌவை அஞ்சிற் காமம் எய்க்கும்;
எள்ளற விடினே, உள்ளது நாணே" (குறுந்தொகை 112)

எய்க்கும் = குறையும். காமம் நீங்கின் நாண் ஓங்கும் என இஃதுணர்த்தி நிற்றல் காண்க. கௌவை = அலர் மொழி.

நாணம் ஆனது பெண்ணுக்கு உயிரினும் சிறந்த உயர்குண மாதலால் அது கையகன்றதெனக் குறித்துக் காதலன்பால் தனக்குள்ள மையல் நிலையை இங்ஙனம் உணர்த்தினாள் என்க.

"பொன்னருங் கலனும் தூசும் புறத்துள துறத்தல் வம்பே,
நன்னுதல் ஒருத்தி தன்பால் அகத்துள நாணும் நீத்தாள்;
உன்னருந் துறவு பூண்ட உணர்வுடை ஒருவனேபோல்
தன்னையுந்துறக்குந்தன்மைகாமத்தேதங்கிற்றம்மா" (இராமாயணம்)

அரிய நாணமும் காமத்தால் இரியல்போம் என இஃதுணர்த்தி நிற்கும் அழகைப் பார்க்க.

காதலர் கனிந்து வந்து ஆசையால் இனியன செய்யின் நாணம் என்பதனை யாதும் யாம் கண்டிலம் என்பதாம்.

பிரிந்து போன தலைவன் விரைந்து வாராமையை நினைந்து பலவாறு புலம்பியிருந்த தலைவி அவன் வந்தணைந்தபொழுது யாதும் பிணங்காமல் விழைந்து இணங்கி மகிழ்ந்து நின்றாள்; அந்நிலையினை யறிந்த தோழி "எவளிடம்போய் இங்ஙனம் இருந்து களிக்கின் றாரோ; வீணே நான் இங்கிருந்து கழிகின்றேன்; ஆணுவார்க்கு இஃதழகா? வரட்டும் சொல்லுகிறேன்;" என அவர் வருமுன் னெல்லாம் வளமை கொழித்திருந்தாயே; வந்தவுடனே ஒன்றும் பேசாமல் இந்தப்படி செய்தாய்; என்னையிது? எனப் புன்னகை செய்ய அவள் சொன்னபடி யிது.

நாணை விதந்து குறித்தது "பெண்மை நலத்துக் கணியென்ப நாணம்" (நான்மணிக்கடிகை) ஆகலான் அந் நலனிழந்துள்ள தன்னிலை தெரிய என்க.

"உள்ளத் துணர்வுடையான் ஓதிய நூலற்றால்
வள்ளன்மை பூண்டான்கண் ஒண்பொருள்—தெள்ளிய
ஆண்மகன் கையில் அயில்வாள் அனைத்தரோ
நாணுடையாள் பெற்ற நலம்"

மதிமான் கற்றநூல், வள்ளல் கைப்பொருள், வீரன் கைவாள் இவை நாணுடையாள் நலத்துக்கு ஒப்புரைத் துள்ளமை காண்க. உளமுயர்ந்து, புகழ் புரிந்து, யாண்டும் நிலைகுலையாமல் தலைமை யெய்தி நாண் நண்ணியிருக்கும் என அதனை எண்ணியிருத்தலை இதில் நுண்ணிதி னுணர்ந்து கொள்க.

இத்தகையநாண் காதலன் செய்கையால் கையகன்றுபோயது யான் செய்வது? என் என வெய் துயிர்த்து நின்றாள்.

"காமான் தரித்த பெருமான் இறைவன்
பொன்பழித் தெடுத்த இன்புறு திருவடி
உளம் விழுங்காத களவினர் போல என்
உயிரோடும் வளர்ந்த பெருநாண் தறியினை
வெற்பன் காதற் காலுலை வேலையின்
வலியுடைக் கற்பின் நெடுவளி சுழற்றிக்
கட்புலங் காணாது காட்டை கெட வுந்தலின்,
என்போல் இந்நிலை நின்றவர் படைக்கும்
பேறுங் கொழிக பெருநாண் கற்பினர்
எற்பே றுடைய ராயிற்
கற்பிற் றோன்றாக் கடனு குகவே." (கல்லாடம் 37)

தலைவன்மேல் வைத்துள்ள காதலாகிய சூறைக் காற்று அடித்தபொழுது நாணம் காணாது ஒழிந்துபோயது என ஒருத்தி யிதில் உளைந்திருத்தல் காண்க. கால்=காற்று. காட்டைகெட உந்த=கணப்பொழுதில் விரைந்துதள்ள, நாணைத்தறி என்றது தூண்போல் நின்று தனக்கு ஏண் செய்திருந்த அதன் இயல்பு நோக்கி.

"மற்பாய் விடையோன் மகிழ்புலி யூரென் னொடும் வளர்ந்த
பொற்பார் திருநாண் பொருப்பர் விருப்புப் புகுந்து நூந்தக்
கற்பார் கடுங்கால் கலக்கிப் பறித்தெறியக் கழிக
இற்பாற் பிறவற்க வேழையர் வாழி எழுமையுமே" (திருக்கோவையார்)

பொருப்பர் விருப்புப் புகுந்து நூந்த நாண் கழிந்ததென இதுவு முணர்த்தி நிற்றல் காண்க. காதலன் கைதொடின் நாணம் கால் விடும் என்பது கருத்து.

கொழுநன் தழுவி இனியன செய்யின் தலைவி பரவசமா யுருகி நிற்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை உரோகிணி பால் உணரப்படும்.

## கதை.

உரோகிணி என்பவள் தக்கனுடைய அருமைத் திரு மகள். ஒளி தவழ்ந்த மேனியள். எழில் நலங்களுக்குத் தனி நிலையமாய் இவள் இனிதமர்ந்திருந்தாள். அந்தரத்தவருள் மிகவும் சுந்தரனை சந்திரன் இவளை முந்துற விழைந்து இந்திரன் முதலிய எவரும் நாண இயல்மணம் புணர்ந்தான். மயல் மிகுந்து யாதும் அயலக லாமல் அரிய போகங்களை நுகர்ந்து அகமிக மகிழ்ந்தான். அசுவினி முதலிய மற்ற இல்லக் கிழத்திகள் எவரினும் இவளையே அவன் உயிர்க்கிழமையோடு உவந்து பேணினன். இவளும் ஆர்வமீதூர்ந்து அவனை ஆரப் புல்லி அகலாதிருந்தாள். உழுவலன்போடு தழுவி யிருக்கும் சதிபதிகளுக் கெல்லாம் கெழுதகைமையோடு இவர் உவமை கூற நின்றார். "சந்திரனும் உரோகிணியும் தாமிணைந்து நின்றதுபோல் தழைத்து நின்றார்" எனச் சிறந்த காதல் நிலைக்கு உயர்ந்த முன் மாதிரியாய்ப் புகழ்ந்து பேச இவர்விளங்கி யிருந்தார்.

> "திருவுகொள் உரோணி உருவுநலம் விரும்பிய
> விரிகதிர்ச் செல்வனின் வியப்பத் தோன்றி" (பெருங்கதை).

தன் தேவியைத் தழுவிநின்ற அரசனுக்கு உரோகிணியை மருவிநின்ற மதியினை இதில் உவமை குறித்திருத்தல் காண்க. மேடமுதல் மீனம் வரையுள்ள இராசி மண்டலத்தில் சந்திரன் முறையே சஞ்சரித்து வருங்கால் இடபத்தில் மட்டும் இன்பமீக் கூர்ந்து இனிது வந்திருப்பன். ஏன்? எனில், அவ் இல்லம் இவளுக்கு இடமா யுள்ளமையான் என்க. இக் காதலியோடு ஆதரவாய் அங்கு அவன் அமர்ந்திருக்கும் அமயம் மங்கல நாளாக் கருதி எங்கும் மணம்புரிந்து கொள்வர். இக் கொள்கை தொன்று தொட்டுத் தொடர்ந்து வருகின்றது. சில அடியில்வருவன் காண்க.

> "மண்ணிட மலிர எங்கு மாந்தரும் வந்து தொக்கார்
> ஒண்ணிற உரோணி யூர்ந்த ஒளிமதி யோண்பொனுட்சித்
> தெண்ணிற விசும்பினின்ற தெள்மதி முகத்து நங்கை
> கண்ணிய வீணை வாட்போர்க் கலாமின்று காண்டுமென்றே"
> பொன் = வியாழன். (சிந்தாமணி)

"வானூர் மதியம் சகடணைய வானத்துச்
சாலி யொருமீன் தகையாளைக் கோவலன்
மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத்
தீவலஞ் செய்வது காண்பார்க ணோன்பென்னை" (சிலப்பதிகாரம்)

"அங்க ணிருவிசும்பு விளங்கத் திங்கட்
சகடம் வேண்டிய துகடீர் கூட்டத்துக்
கடிநகர் புனைந்து கடவுட் பேணிப்
படுமண முழவொடு பருஉப்பணை யிமிழ
வதுவை மண்ணிய மகளிர்" (அகம் 136)

இவர் மருவியுள்ள அமயத்தை மங்கலமாகக் கருதி இங்ஙனம் மணந்திருத்தலை எங்கும் அறிந்துகொள்ளலாம். சகடு = உரோகிணி. இதனால் இவரது செறிவி னருமையும், உரிமை யுயர்வும் இனிதுணரலாகும். பிரிவிலுள்ள மகளிர் இவளை நினைந்து பெருமூச் செறிவர். என்னை? இவளைப்போல் இணை பிரியாமல் துணைவனோடு மருவி யிருக்கும் பேறு தமக்கு இல்லையே என்னும் ஏக்கத்தால் என்க.

"திண்ணிலை மருப்பின் ஆடு தலையாக
விண்ணூர்பு திரிதரும் வீங்குசெலல் மண்டிலத்து
முரண்மிகு சிறப்பிற் செல்வனோடு நிலைஇய
உரோகிணி நினைவனள் நோக்கி, நெடிதுயிரா
மாயிதழ் ஏந்திய மலிந்துவீழ் அரிப்பனி
செவ்விரல் கடைக்கண் சேர்த்திச் சில தெறியாப்
புலம்பொடு வதியும் நலங்கிளர் அரிவை" (நெடுநல்வாடை)

துணை பிரிந்திருந்த ஒரு தலைவி இணை பிரியாதுள்ள இவளது பேற்றை நினைந்து இதில் பிதற்றி யிருத்தலறிக. ஆடுதலையாக = மேடராசி முதலாக. ஊர்பு திரிதரும் = ஊர்ந்து வருகின்ற. செல்வனோடு நிலைஇய = சந்திரனோடு நிலைத்திருந்த. இனிய காதல் நிலைக்கு இவர் தனி நிலையமா யிருந்தமை இதனானும் அறிந்துகொளலாம். இங்ஙனம் எவரும் வியந்துகொள்ள முயங்கியிருந்த அவன் இவளது போக நலத்தில் ஆவலடங்காமல் மேலு மேலு மயங்கி மெய்ம் மறந்திருந்தான். உலகநிலையில் தனக்கு உரிமையா யமைந்துள்ள கரும நிலையையு மறந்து இவளையே தழுவி உவளகத்தில் ஒடுங்கிக் கிடந்தான். அதனால் ஒருமுறை நிலவொழிந்தது; இருள் மிகுந்தது. அதனைப் பிரமனறிந்து பெரிதுஞ் சினந்து இவனிடம் வந்து இத

முடன் நின்று மைய அழைத்தான். இவன் பதறி வெளி வந்தான். அவன் பரிந்து நோக்கினான். வெய்யது விளைந்தது; இனி மய்ய லொழிந்து நீ செய்வன செய்; என வைது தெளித்து அவன் நொய்தினகன்றான். அதன்பின் இவன் உய்திறனோடு உணர்ந்து புரிந்தான். தன் கருமமும் மறந்து காமமே கண்ணாய் இவளோ டழுந்தி அவன் களித்திருந்ததிலே பின்பு எங்கும் பழிப்புற நேர்ந்தது. அடியில்வருவன காண்க.

"மண்ணகங் காவலின் வழுக்கி, மன்னவன்
பெண்ணருங் கலத்தொடு பிணைந்த போருள்
விண்ணகம் இருள்கோள விளங்கு வெண்மதி
ஒண்ணிற உரோணியோடு ஒளித்த தோத்ததே" (சீவகசிந்தாமணி)

அருமை மனைவியையே விழைந்து தனது அரச காரியத்தை மறந்து ஏமாங்கத மன்னன் காமங் கன்றியிருந்தமைக்கு வெண் மதியின் செய்கையை இங்கு முன்னாக எண்ணி யிருத்தலறிக.

"மதலை மாடத்து மடமொழி மாதரோடு
உதயன குமரன் ஒடுங்கிய உவகையன்
விண்ணுறை தேவரும் விழையும் போகத்துப்
பெண்ணுறை யுலகம் பெற்றோன் போலவும்,
நோக்கருங் கதிரவன் நீக்கம் பார்த்துப்
பைங்கதிர் விரிக்கும் பனிமதிக் கிழவன்
அங்கண் ஞாலத் தளவை யாகிய
பன்னாட் பக்கம் செல்லாது சின்னாள்
வெண்முக நிலாவொளி சுருங்க மெல்லென
உண்மகிழ் உரோணியோடு ஒளித்தது போலவும்,
திகழ்மணி மார்பன் அகநகர் ஒடுங்க" (பெருங்கதை)

அந்தப்புரத்தி லமர்ந்து எந்த வேலையையு மறந்து பதுமாபதி யோடு உதயணன் பதிந்திருந் தமைக்கு இவளோடு சந்திரன் இணைந்திருந்ததையே இதில் உவமை கூறியிருத்தல் காண்க. இவற் றால் இவரது உழுவலன்புடைமையும், அளவிலின்பமும் அறியலா கும். இங்ஙனம் பிரிவின்றி மருவிவருங்கால் மற்றொரு மனைவி யாகிய கார்த்திகை மேல் அவன் ஆர்த்தி மிகுந்து ஒருமுறை சிறிது அங்குத் தங்கி நின்றான். அந் நிலையினை யறிந்த இவள் புலவிமீக் கூர்ந்து பொங்கிப் பொருமிக் கலகம் புரியுங் கருத்தோடு தலைவன்

வரவைக் குறித்துத் தவித்து நின்றாள். பின்னாட் கழித்து அவன் வந்தான்; வந்தவன் இன்னுரையாடி இனிது முயங்கினான்; இவள் தன்னை மறந்து தழுவி மயங்கினாள். காமத்தால் பேணியார் பெட்ப செயின் தலைவியர் நாண் என ஒன்று அறியார் என்பதை உலகம் அறிய இவள் உணர்த்தி நின்றாள்.

காமநோய் கண்டார்பின் காணார் நிறைநாணம்
மாமயலே காண்பர் மறிந்து.

நாணிழந்து நின்றமை இதனால் கூறப்பட்டது.

1258. காசில் இராதையேன் கண்ணன் பணிமொழியால்
கூசி யுளைந்தாள் குமரேசா—நேசமிகு
பன்மாயக் கள்வன் பணிமொழி யன்றோநம்
பெண்மை யுடைக்கும் படை. (அ)

இ—ள்.

குமரேசா! கண்ணனது இனிய மொழியால் இராதை ஏன் நிறை நிலைகுலைந்து உளம் உருகிநின்றாள்? எனின், நம் பெண்மை உடைக்கும் படை பன்மாயக் கள்வன் பணிமொழியன்றோ என்க.

பலபொய்களையும் நயமாகப்பேசித் தனது நலங் கவர்ந்துநின்ற மையான் "பன் மாயக் கள்வன்" என்றாள். அகட விகடமான கபட நாடகங்கள் பல செய்தவன் என்றவாறு.

பெண்மை = பெண்ணின் தன்மை. அஃதாவது நிறை நாண் முதலிய குண நலங்களோடு நிலைத்திருக்கு மேன்மை. உடைக்கும் என்ற குறிப்பால் அதன் உறுதிநிலை யுணர நின்றது.

படை = படைக்கலம், சேனை. மொழியைப் படை என்றது அது படுத்தி நிற்கும் பாட்டை நோக்கி. அரிய நிறைக் காவலோடமைந்திருந்த பெரிய அரணைச் சிதைத்துத் தன்னை எளிதாக உரிமை செய்து கொண்டமையான் அவ் வுரையினை வியந்து இங்ஙனம் உரைத்தாள் என்க.

"பழுத்தநல் லமுதின் இன்சாற்று வெள்ளம் பாவியேன்மனமகந்தோறும் உள்புக்கு, அழுத்தநின் செங்கனிவாயின் கள்வப் பணிமொழிநினைதொறும் ஆவிவேமால்" (திருவாய்மொழி 10, 3, 4)

பணிமொழியால் உயிருருகிய தென இஃதுணர்த்திநிற்ற லறிக பணிவுடையனா யினிது மொழிந்தமையால் பணிமொழி என்றுள்.

"ஈருடலுக் கோருயிரே யல்லாமல் நம்முடைய
ஆருயிருக் கோர்பிரிவோ யாதுமிலை—பாரறிய
உன்னைநான் எய்தியபின் ஓர்பிழையும் செய்தறியேன்
என்னைவே றெண்ணல் இனி"

தன்னை ஐயுற்றுப் புலந்த தலைவியை நோக்கி ஒரு தலைவன் இதில் மொழிந்திருத்தல் காண்க. இன்னவாறு புலந்த பொழுது அவன் நயந்து பல பேசுவன்; அங்ஙனம் பேசுங்கால் "உமது மாயம் தெரியும்; வாயை நிறுத்தும்;" என இவள் வலிந்து நிற்பள்.

"மாயப் பொய்ம்மொழி சாயினை பயிற்றி எம்,
முதுமை எள்ளல்; அஃது அமைகுந்தில்ல" (அகம் 6)

"கண்டேனின் மாயம் களவாதல் பொய்ந் நகா
மண்டாத சொல்லித் தொடாஅல், தொடீஇயநின்
பெண்டி ருளர் மன்னோ ஈங்கு" (மருதக்கலி 25)

மாயம், பொய், களவு எனத் தலைவன் இயல்பினை யிகழ்ந்து புலவிசெய் திருக்கு நிலையைப் பார்க்க.

மேல், நாயகன் செயலால் நாணழிந்த தென்றுள்; இதில், அவன் உரையால் நிறை போய தென்கின்றுள்.

பல மாயங்கள் வல்ல நாயகனது இனிய மொழியானது நமது அரிய நிறையை யழிக்கும் பெரிய படையாய் நின்ற தென்பதாம்.

நம் என்றது தோழியையும் தழுவி. தனது எண்மையை அவளும் தன் தன்மையாக் கொண்டு உரையடங்க இங்ஙனம் உரைத்தாள். இதனுல் அவளது உளநிலை புலனும்.

பிரிந்து நின்ற காதலன் பிற மங்கையரை விழைந்திருந்ததாக ஐயங்கொண்டு அகம் புலந்திருந்த தலைவி அவன் வந்து சில பேசிய வுடன் சிந்தை யுருகிச் சேர்ந்து மகிழ்ந்தாள்; அச் செயல் நிலையை ஓர்ந்த தோழி அயல் நாள் வந்து "கருதியிருந்தவாறே உறுதியோடு சிறிது ஊடி நிற்கலாகாதா?" என்று குறுஞ்சிரிப்போடு கூடிக் கேட்டாள்; அவ்வமயம் அவள் இவ்வகை உரைத்தாள் என்க.

கள்ளன் என ஒருவனை ஒருமுறை கண்டுபிடித்தால் பின்பு அவன் எள்ளப்பட்டு இழிந்து நிற்பன்; இவனது கள்ளம் கண்டு கடுத்து நின்றபோதெல்லாம் சிலசொல்லால் உள்ளமுருக்கி உயர்ந்து நின்றுளுதலால் மாயக்கள்வன் என்றாள். மாயமாவது வெய்யன் என வெறுக்காவகை மையலேற்றி மயக்குதல். "பெய்யுமாமுகில் போல் வண்ணா! உன்றன் பேச்சும் செய்கையும் எங்களை, மைய லேற்றி மயக்க உன்முகம் மாயமந்திரந் தான் கொலோ" (திருமொழி கண்ணன் மொழியால் தன் பெண்மை உடைந்து உண் மயங்கி நின்றதை வியந்து ஆண்டாள் இதில் உரைத்துள்ளமை காண்க.

பல முறையும் பலவகையாகப் பேசி நலமுற நயப்பித்து நின்றுளுதலால் அந் நிலையெல்லாம் நினைந்து பல் மாயம் என்றாள்.

"பழுதறு தெய்வம் காட்டப் பண்டையின்
உளுவல் நலத்தால் ஓருயிர் என்றும்,
கடுஞ்சூள் தந்தும், கைபுனை புனைந்தும்,
பூழியம் போனகம் பொதுவுடன் உண்டும்,
குழமகக் குறித்துச் சிலமொழி கொடுத்தும்,
கையுறை சுமந்தும், கடித்தழை தாங்கியும்,
உயிரிற் றளர இரங்கியும், உணங்கியும்,
பனையும் கிழியும் படைக்குவன் என்றும்,
இறடியஞ் சேவற்கு எறிகவண் கூட்டியும்,
புனமும் எம்முயிரும் படர்கரி தடிந்தும,
அழுங்குறு புனலெடுத்து அகிற்புகை யூட்டியும்,
ஒளிர்மணி யூசல் பரியவிட் டுயர்த்தும்,
இரவினரில் தங்க எளிவர இரந்தும்,
இருவியம் புனத்திடை எரியுயிர்ப் பெறிந்தும்,
தெரிந்தலர் கொய்தும், பொழிற்குறி வினவியும்,
உடலொடும் பிணைந்தகை ஆய்துயில் ஒற்றிச்
செறியிருட் குழம்பகம் சென்று பனிங்கெடுத்த
இறபொழிற் கிடைக்கு மளவு நின் றலைந்தும்,
பன்னாட் பன்னெறி அழுங்கினர்; இன்று
சூளுற வாய்மையும் தோற்றி
நீளவும்பொய்த்தற்குஅவர்மனம்கரியே" (கல்லாடம்86)

முன்பு பலவகையாக நலவுரிமை செய்து நின்ற தலைவன் பின்பு அந் நிலை திரிந்து நீங்கியதை நினைந்து ஓர் தலைவி இதில் ஏங்கி யிரங்கி யிருத்தலறிக. இறடி = தினை. இருவி = கதிர் அறுத்த

நினைத்தாள். அன்புடையராய் நின்று அன்றுசொன்ன சூளெல்லாம் பொய்த்து இன்று இன்ன செய்தார் ஆதலால் இதற்கு அவர் மனமே சாட்சியாய் அவர்க்கு ம்தியுறுத்தட்டும் என அவள் மறுகியிருக்கும் அழகைப் பார்க்க. இங்ஙனம் மறுகிப் புலந்து மாறியிருந்தபோதெல்லாம் அவன் வந்து சில கூறியவுடனே இவள் புலவி நீங்கி நிறையறைபோய்க் கரைகடந்த காதலோடு கலந்து விடுவள் ஆதலால் "பெண்மை உடைக்கும் படை" எனக் காதலன் உரையை இங்ஙனம் வியந்து நின்றாள்.

புலவி மிகுந்திருந்தாலும் தலைவன் மொழி கேட்டால் தலைவி உளமுருகிவிடும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை இராதைபால் உணரப்படும்.

### கதை.

இராதை என்பவள் கண்ணனுடைய அருமைத் திரு மனைவி. புண்ணிய வுருவினள். தன் கண்ணினும் உயிரினும் இனியனு அக் கண்ணனை இவள் எண்ணி யொழுகினள். அப் பெருமானும் பிறரெவரினும் இவளிடமே பெருமால் கொண்டு பெருகி நின்றான் ஆதலால் இராதாகிருட்டிணன் என இவள் பெயரோடு பிணைந்து அவன் பேச நின்றான். இவள் பெயரை இங்ஙனம் தலையிலேந்தி நிலவி நிற்கும் இதனால் இக் குலமகள் பால் அத் தலைமகன் கொண்டிருந்த காதல் நிலை இனிது புலனும். யாதும் பிரியாமல் அனவரதமும் இவளோ டமர்ந்து சுகித்திருந்தான். "அல்லும் நண் பகலும் அகலாமலே, புல்லி யின்பம் பொருந்தி நுகர்ந்தனர்" என இவரது நுகர்ச்சி நிலை போக வுலகத்தும் புகழ்ச்சியுற நின்றது. காதல் வெள்ளம் கரைபுரண்டோட இவ்வண்ணம் களித்துவருங்கால் அக் கள்ளப்பிரான் மெள்ள அகன்றுபோய்க் கோவியரிடைப் புகுந்தான். அத் தேவியர் கண்டு ஆவி யுருகி அருகணைந்து பருகு காதலோடு பல பல புலம்பினர். அன்று அவர் அயல் வளைந்து நின்று மயலொடு புலம்பியபடியை அடியில்பார்க்க.

"காதளவோடி நீண்டு கடைசிவந் தகன்று போர்க்குப்
போதருகென்னு நீலப் போதினுக்கு ஓலை போக்கும்
மாதர்மென்னோக்கி னுண்கண் மயிலியல் மாதரெல்லாம்
தாதுறு மறுகுசூழ்ந்த தம்புலம் அகன்று மொய்த்தார்; (க)

விசும்பிடஞ் சிறியதென்ன வீங்கிளங் கொங்கை தாங்கி,
ஒசிந்து நுண் மருங்குல் நோவ, ஒலிகருங் கூந்தல் தாழ,
அசும்புபொற் கலாபம் எங்க. அணிசிலம்பரற்ற ஓடிப்
பசும்புயல் வண்ணத் தண்ணல் பண்வலைச் சென்று பட்டார்; (உ)

பொருப்பினால் மாரிகாத்த பூவைபோல் நிறத்தாய்! என்னே
கருப்புவார் சிலைகால் கோட்டிக் கலம்பெய்தோள் கழியவாங்கிச்
சுருப்புநாண் தொடுத்துத் தூணி தொலைவுற மாரன் எய்யும்
அருப்பு வெம் பகழி மாரி அமைத்திலை ஐய! என்பார்; (ங)

மல்லல்நீர் யமுனையாற்று வல்விடம் அகற்ற வல்லாய்
முல்லைவாய் பொழிந்ததேறல் மூழ்கி வெவ்வழல்வாய் கான்று
கொல்லிய எழுந்த வாடைக் கொலைவிடம் அகற்றாய் என்னே?
அல்லியங் கமலச் செங்கண் அமல! என் றயர்ந்து நிற்பார்; (ச)

பண்ணுறு கிளைநின் செங்கேழ்ப் பவளவாய் முத்தம் நாளும்
உண்ணவைத்திலையோ நங்கட்கு உதவிலை ஒருநாள் என்னே?
பெண்ணலங் கனியவந்த பேய்முலை யூறு பாலும்
வெண்ணெயு மினிது மாந்தும் விடைநடைக் குரிசில்! என்பார்." பாகவதம்

இன்னணம் உண்ணெகிழ்ந்துருகி உரைபல பிதற்றிக் கரையழி காதலோடு கனிந்து நின்ற அம் மங்கையரை மகிழ்ந்து மருவி மதன போகங்களை விளைத்து ஆண்டு அவன் நீண்டிருந்தான்.

"அருப்பிள நிலவுகால ஆரமொத் திலங்கும் அந்தண்
சிரிப்பினும், புருவஞ் செய்யும் செயலினும், நகைகூர் தீஞ்சொல்
விருப்பினும், மலர்க்கண் நோக்கின் விளைவினும், களிநல் யானை
மருப்பிளங் கொங்கை மாதர் மனமகிழ் விளைத்தல் செய்தான்"

இவ்வாறு களித்து நின்று சுரத லீலைகள் பல புரிந்து அலகிலாடல் செய்து அங்கு அவன் தோய்ந்திருப்ப இங்கு இவள் காய்ந்திருந்தாள். பிரிவாற்றாமையால் பெரிதும் அலமந்து கிடந்த இவள் ஒருநாள் மாளிகை யருகேயிருந்த சோலையுட் புகுந்து வாவியின் கரையில் வதிந்து மாலையில் அவனை நினைந்து சாலவு மறுகினாள். நீர் நிலை முதலியவற்றை நோக்கி நெடிது புலம்பினாள்.

"வண்டா யிதழ்குடைந்து வாயவிழ்ந்து செய்யபொலந்
தண்டா துறைந்த தடந் தாமரைக்கண் துஞ்சுதியால்,
கண்டாய்நீ யிலையோகொல் களவத்தேங் காதலனை
விண்டா யின்றிலையோ தண் விரி நீரக் கொழுஞ் சுனையே!
மட்டருந்து வாகைபுனை மழலையிசைச் சுரும்பூதி
நெட்டிதழ் தேயப்பெரிது நெரிக்குமிதழ்க் கருநெய்தால்!
பட்டமரந்தளிர் தளிர்ப்பப் பண்ணூருங் குழலிசைத்த
கட்டெழிலெங் காளையுருக் காட்டுதற்கென் செய்வேமே?

முள்வாய்வெண் சங்குநனி முரலுமிசை செவியோர்ந்து
கள்வாய்ச் செங்கழுநீர் நீள் காலனைய செங்கமலத்து
உள்வாய்க்கண் துயில்குருகே ! ஒன்றுமுணர்ந்தாயிலையே
புள்வாய் அங்கிடந்த கரும்புயல் கரந்து போயதுவே"

என இன்னவகையாப் பன்னி யிரங்கி இடருழந்திருந்த இவள் அவன் கோவியரிட மேவி யிருத்தலைப் பாவை ஒருத்தியாலறிந்து பதைத்துக் கொதித்தாள். அவ் வஞ்சகர் இங்கு வரட்டும் பார்ப்போம்; வழி சொல்லுகின்றேன் என்று நெஞ்சம் புலந்து நெடிதுயிர்த்திருந்தாள். அந் நெடியவன் வந்தான்; இவள் படியிற் படிந்து பாராது கிடந்தாள். இவள் எண்ணந் தெரிந்து அக் கண்ணன் பரிந்தான்;

"ஆவிநீ யல்லதொன் றில்லை ஆதலால்
பாவியேன் இத்துயர் பார்க்க வல்லனோ?
கோவியல் முறையிடைக் குறுகினேனலால்
தேவியே! எவரையும் தீண்டவில்லையே" என அவ்

ஆண்டகை நெருங்கி அணைத்தெடுத்து ஆரத் தழுவி ஈண்டிய அன்போடு இதம்பல புகன்றான். உடனே இவள் உள்ளமுருகி உவந்து புல்லி உயிர் தளிர்த்தாள். வருமுன் தான் கருதியிருந்த உறுதியெல்லாங் குன்றி வந்தவுடன் ஒன்றும் பேசாமல் இவள் உருகி முயங்கியதைக் குறித்து மதனிகை என்னும் தோழி மறுநாள் நகைத்தாள். "அவரது உருவக்காட்சி அது; உரையின் மாட்சி இது; நான் எவ்வாறு நிறையோடு நிலைத்தெதிர் நிற்பேன்? என்னைக் குறை கூறாதே போ" என்று இவள் உரைசெய்து விடுத்தாள். "பன் மாயக் கள்வன் பணி மொழி நம் பெண்மையுடைக்கும்" என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

கள்ளம் பெருகினின்ற காதலரைக் கண்டவுடன்
உள்ள முருகி விடும்.

பெண்மை பெயர்ந்தமை இதனால் கூறப்பட்டது.

1259. உள்ளம் புலந்திருந்தும் உற்றவுடன் ஏன்சுருதி
கொள்ள அணைந்தாள் குமரேசா—தள்ளிப்
புலப்ப லெனச்சென்றேன் புல்லினேன் நெஞ்சம்
கலத்த லுறுவது கண்டு. (கூ)

இ—ள்.

குமரேசா ! சுருதி புலந்திருந்தும் கணவன் வந்தவுடன்

ஞன் கலந்து கொண்டாள் ? எனின், புலப்பல் எனச் சென்றேன் நெஞ்சம் கலத்தல் உறுவது கண்டு புல்லினேன் என்க.

புலப்பல் என = புலந்து நிற்பேன் என்று துணிந்து. எதிரே நின்றால் நாயகனது உருவிலும் உரையிலும் உருக நேரும் என்று கருதி முகந்திரும்பி அயலகன்றாள் ஆதலால் "சென்றேன்" என்றாள். இங்ஙனம் அவள் செல்ல, அவளுடைய உள்ளம் அவனை விரைந்து தழுவ விழைந்து நின்றது ஆதலால் "என் நெஞ்சம் கலத்தல் உறுவது கண்டு" என்றாள். சென்றேன் புல்லினேன் என்றது விரைவு தோன்ற நின்றது. என்னை ? புலவியோ டமைந்த அச் செலவு நிலை சிறுதும் நீளாமல் உடனே கலவியில் கடுக நேர்ந்ததென அச் செயல் நிகழ்ச்சிகளின் நிலை தெரிய என்க.

மேல், பெண்மை உடைந்த தென்றாள்; இதில், தன் தன்மையை உரைக்கின்றாள்.

காதலர் வந்தபொழுது ஊடி நிற்பல் என உறுதிகொண்டு பிறிதோரிடம் போயினேன்; என் நெஞ்சம் நிறையின்றி அறைபோய் அவரோடு மருவலுறுதலை யறிந்து யான் உருகித் தழுவினேன் என்பதாம்.

பிரிந்துபோன கணவன் விரைந்து வாராமையை நினைந்து வருந்தியிருந்த தலைவி ஒருநாள் தோழியிடம் இனி அவர் வந்தால் யாதும் பேசாமல் ஊடி வன்மஞ் சாதிப்பேன் என உறுதி செய்திருந்தாள்; அதன்பின் அவன் வந்து சேர்ந்தான்; இவள் சொல்லியபடி செய்யாமல் ஒல்லையில் விழைந்து அவனைப் புல்லியுவந்தாள்; அது கண்ட தோழி என்ன, சொன்னபடி நடந்ததா? எனப் புன்னகை செய்தாள்; நான் என்னசெய்வேன்? சொன்னவண்ணம் துணிந்துதா னிருந்தேன்; என் நெஞ்சம் இழிந்து கரைந்துபோயது ஆதலால் இனி நிற்பதால் பயனில்லை என்று தெளிந்து தழுவி மகிழ்ந்தேன் எனத் தன்பால் வழுவின்மை தோன்ற இங்ஙனம் அழகுற மொழிந்தாள் என்க.

தனியே ஊடியிருந்தாலும் நாயகனைக் கண்டவுடன் தன் நெஞ்சங் கரைந்து நாயகி கூடிவிடுவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை சுருதிபால் உணரப்படும்.

## கதை.

சுருதிஎன்பவள் திவோதாஸன் என்னும் அரசனுடைய அருமைத் திரு மகள். முடிவு காண்பரிய வடிவழகுடையவள். இவளது எழில் நிலையைக் குறித்து அக்காலத்திருந்த இளங் குமரிகளெல்லாரும் விழைந்து பேசி வியந்து நின்றார்.

> " ஈசன் சிலையும், எழில்வான் பவளமும்,
> சேய்வலங்கை வேலும், திரள் முத்தும்,—பாசிலைய
> வஞ்சியும், வேயும், வளர்தாமரை மொட்டும்,
> மஞ்சில்வரு மாமதிபோன் மண்டலமும்,—எஞ்சாப்
> புருவமும், செவ்வாயும், கண்ணும், எயிறும்,
> உருவ நுசுப்புமென் றோளும்— மருவினிய
> கொங்கையும் வாண்முகமுமாக் கொண்டாள்; கோலஞ்சேர்
> பங்கயப்போதனைய சேவடியாள்;" எனப் பாவிடை வைத்து

யாவரும் புகழ இவள் மேவியிருந்தாள். இவளை மணந்துகொள்ள விழைந்து மன்னர் பலரும் அலைந்துழந்தும் யாது முடியாமல் அலமந்து நின்றார். முடிவில் உத்தானபாதன் என்னும் முடி மன்னன் வந்து கடிமணம் புரிந்தான். அவன் சூரியகுலத் தோன்றல். பேரழகும் பேரறிவும் பெரு வீரமுமுடையவன். ஓராழி செலுத்திப் பேரரசுகள் எல்லாரும் இறைஞ்சப் பார்முழுதும் ஆண்டவன்.

> " முத்தார மார்பன் முடி மன்னவர் வந்திறைஞ்சப்
> பைத்தாடரவஞ் சுமைகூர் கடற்பார் பரித்தான்
> கொத்தார் அலங்கற்குளிர் வெண்குடைக் கோதை வெள்வேல்
> **உத்தான பாதன்** என ஓது முலங்கொள் தோளான்" (பாகவதம்)

இங்ஙனம் விளங்கியிருந்த அவன் இவளை விழைந்து மணந்து சிறந்த போகங்களை நுகர்ந்து மகிழ்ந்திருந்தான். அவன் இன்பங் திளைத்து இறும்பூதெய்த இவள் அன்பாற்றி நின்றாள். இவளுடைய செயலுரைகளில் உளம்பறிபோய் மேலுமேலும் அவன் மயல் மீறி நின்றான்.

> " கன்னல்பசுந் தேனொழுகு கனிபழுத்தா லனையமொழிக் காலவேற்கட்
> பொன்னவிரும் சுணங்கணிந்தபொம்மல் முலைச்சுருதிஎனும்புரைதீர்வல்லி"
> (காசிகாண்டம்)

என இன்னவண்ணம் குறைதீர்ந்திருந்த இக்குலமகளோ டமர்ந்து அலகிலாடல்கள் புரிந்து அத்தலைமகன் அரசுபுரிந்து வருங்கால் ஒருமுறை உறுவினை கருதி மறுபுலம் போனான், அப் பிரிவினை

யாற்றாது பெரிதலமந்து இவள் மறுகியிருந்தாள். விரகதாபத்தால் இவள் உருகியுழந்த பரிபவ நிலையை யறிந்து அருகிருந்தவரும் இரங்கினர். "பொரிந்தது முத்தம்; புகைந்தது சாந்தம்; பொருக்கெழுந்தே, கரிந்தது பூவணை; ஏதுபடாள் பனிக் கால் பரப்பி, விரிந்தது வான நிலா வெள்ளங்காண், உன்னை விட்டொரு நாள் பிரிந்ததற்கு இத்தனையுண்டோ?" எனக் கண்டோர் இரங்கக் கடுங்கவலோடு இவள் கலுழ்ந்து கிடந்தாள். கிடந்தவள் அவன் விரைந்து வாராமையை நினைந்து ஒருநாள் வெய்துயிர்த்தெழுந்தாள். என்னை இப் பாடுபட விட்டுப் பாராமுகமாயிருக்கும் அப் பீடுடையார் இனி யிங்கு நாடி வந்தால் யாதும் பேசாமல் ஊடியிருக்க வேண்டும் என்று உள்ளந்துணிந்து உறுதிசெய்து நின்றாள். அம் மன்னன் மறு நாளே வந்தான். அருகு நெருங்குமுன் இவள் உருகி ஓடி உவந்து தழுவினாள். இவள் துணிந்து நின்றதை முன்னதாகவே அறிந்திருந்த தோழி நீங்கள் நினைந்துகொண்டபடி புலந்ததுண்டோ? என்று கலந்து கேட்டாள். இவள் கையை விரித்தாள். என் மனம் அவரைக்கூட விழைந்ததால் நான் ஊடமுடியவில்லை என உண்மை தெரித்தாள். நெஞ்சம் கலத்தலுறுவது கண்டு புலத்தலொழிந்து புல்லினேன் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

உடையானை நாடி யுளமுயிர்க ளோடின்
தடையாவர் செய்வர் தகைந்து.

நெஞ்சம் கலந்துநின்ற நிலை இதனால் கூறப்பட்டது.

1260 ஊடிநில்லா தேனோ உடனே நருமதைமுன்
கூடி மகிழ்ந்தாள் குமரேசா—நீடி
நிணந்தீயி லிட்டன்ன நெஞ்சினார்க் குண்டோ
புணர்ந்தூடி நிற்பே மெனல். (ம)

இ—ள்.

குமரேசா! நருமதை ஏன் ஊடிநில்லாமல் தன் கணவனைக் கண்டவுடனே கூடி மகிழ்ந்தாள்? எனின், நிணம் தீயில் இட்டன்ன நெஞ்சினார்க்கு புணர்ந்து ஊடி நிற்பேம் எனல் உண்டோ? என்க.

நிணம் = கொழுப்பு. இது வெண்ணெய்போல் உருகுந் தன்மையுடையது ஆதலால் உருக்கத்திற்கு உரிமையாக இங்கு உரைக்க நின்றது. "நெருப்புச் சினந்தணிந்த நிணந் தயங்கு கொழுங்குறை" "தானுயிர் செகுத்த மான் நிணப் புழுக்கோள்" "கொள்ளிவைத்த கொழு நிணம் நாற" "விழுக்கு நிணம் பெய்த தயிர்க்கண் விதவை" (புறம் 125, 152. 325, 326), "முளவுமாத் தொலைச்சிய பைந்நிணப் பிளவை" (மலைபடு கடாம் 176), "நிணக் கொழுங் குருதிவாட்கை" போழ் நிணப் புழுக்கல் தேனெய் பொழிந்துகப் பெய்து மாந்தி" சிந்தாமணி 610, 1233) "செந் நிறக் குருதியிற் பைந்நிணங் கெழீஇ" "செந்தடிக் குருதிப் பைந்நிணக்கொழுங்குடர்" (பெருங்கதை 1, 46-52). இவற்றுள் நிணம் குறித்து நிற்றலறிக. "விரவிய நிணம் கொழுப்பு விளரொடு விழுக்குமாமே" (நிகண்டு).

"நிலந்தவாத செந்நீரிடை நிணக்கொழுஞ் சேற்றில்
புலர்ந்த காலையில் பொறிவரி அமபெனும் தும்பி
கலந்த தாமரைப் பெருவனம் கதிரவன் கரத்தால்
மலர்ந்ததாமெனப் பொலிந்தன உலர்ந்தவர் வதன" (இராமாயணம்)

இது போர்க்களத்தைக் குறித்த ஓர் வருணனை. இறந்துபட்டவர்களுடைய முகங்கள் வீரப் பொலிவோடு விளங்கிக் கிடந்தன ஆதலால் அவை தாமரைகளோடு இங்கு ஒப்பிடலாயின. தண்ணீரிடைக் குழைச் சேற்றில் தோன்றி வண்டுகள் படியத் தாமரை நிலவும்; அதுபோல் செந்நீரிடை நிணச் சேற்றில் அமர்ந்து அம்புகள் படிய வீரர் முகங்கள் விளங்கியிருந்தன ஆதலால் "உலர்ந்தவர் வதனம் தாமரை வனம் மலர்ந்த தாமெனப் பொலிந்தன" என்றார். இதன் கண்ணும் நிணம் வந்திருத்தல் காண்க. அதன் இயல்பும் நிலையும் இதனால் இனிதுணரலாகும். படுகளக் காட்சியைக் கவி காட்டியிருக்கும் அழகை இதில் ஆராய்ந்துபார்க்க.

புணர்ந்து = நெருங்கி. ஊடி நிற்பேம் எனல் = பிணங்கி நிற்பேம்என்னும் திண்மை. உண்டோ என்றது இல்லை என்றபடி.

மேல், தான் புலந்திருந்தாலும் தன் நெஞ்சம் நெகிழ்ந்து போயதென்றாள்; இதில், அந் நெகிழ்ச்சி நிலையை ஓர் உவமையால் உணர்த்துகின்றாள்.

நிணத்தைத் தீயிலிட்டாற்போல நெகிழ்ந்துருகும் நெஞ்சினை யுடையார்க்குத் தலைவனை நெருங்கி ஊடி நிற்கும் திண்மை உண்டாகாது என்பதாம்.

பிரிந்து நின்ற தலைவன் பரத்தையரைக் கலந்துள்ளதாகக் கனன்றிருந்த தலைவி அவன் அடைந்தவுடனே யாதும் புலந்து கொள்ளாமல் விரைந்து தழுவி மகிழ்ந்துகொண்டாள்; அந் நிலை யறிந்த தோழி மறுநாள் இவள் நீராடும்பொழுது இரவு ஏதாவது ஊடல் நிகழ்ந்ததா? என உண்மையோடு உரையாட அவ்வமயம் அவளை நோக்கி உரைத்த படியிது.

ஊடி நிற்கும் நெஞ்சுறுதி தனக்கு இல்லை என்பாள் நிணத்தை நேர் குறித்தாள். நிணம், நெஞ்சிற்கும்; தீ, காமதாபத்திற்கும் நேரம் என்க. இட்ட என்றது தீயும் நிணமும் தனித்தனி அகன்று கிடந்தால் நிணம், நிலைகுலையாதிருக்கும்; அதனைத் தீயில் இடின் உடனே உருகிப்போம் ஆதலால் அவ்வுரிய நிலை தெரிய என்க. காமமும் நெஞ்சும் தனித்திருந்தாலும் நாயகன் நெருங்க வில்லையாயின் நெஞ்சு நிலைத்திருக்கும்; அவன் நெருங்கித் தொடின் உடனே அது நெகிழ்ந்துபோம் என்க. பஞ்சு தீயிட்டன்ன நெஞ்சு என்றது நிணம் குறித்தது அது தீயிடின் உருவற ஒழிந்துபோம்; இது உருவழிந்து மீண்டும் உறைந்திருக்கும் ஆதலால் அவ் வுறுதி கருதி என்க. காதலன் நெருங்கியபொழுது நெஞ்சு நெகிழ்ந்துருகினும் பின்பு நிறையோடு நிறைந்திருக்கும் என்பதாம்.

நெஞ்சினேற்கு என்று தன்னை நேரே குறியாமல் நெஞ்சினார்க்கு எனப் புறத்தவர் மேல் வைத்துப் பொதுவில் நிறுத்தித் தன் நிலைமையைக் குறிப்பா லுணரும்படி இங்ஙனம் சமர்த்தாக வுரைத்தாள் என்க. நெருப்புற்ற நிணம்போல் நெஞ்சுருகியதென்றத னால் இவளது உள்ளப் பண்பும் உழுவலன்பும் உணரலாகும்.

"நெருப்புறு வெண்ணெயும், நீருறும் உப்பும் என இங்ஙனே
பொருப்புறு தோகை புலம்புறல்; பொய்அன்பர் போக்கு; மிக்க
விருப்புறு வோரை விண்ணோரின் மிகுத்து நண்ணார் கழியத்
திருப்புறு சூலத்தினோன் தில்லைபோலும் திருநுதலே!"
(திருக்கோவையார்)

அன்பர் போக்குப் பொய் ஆதலால் நீ உருகிப் புலம்பாதே என ஒரு தலைவியைத் தோழி தேற்றியிருக்கும் இதில் உருக்கத்திற்குக் குறித்திருக்கும் உவமைகளை நோக்குக. "ஆசில் அணியிழை தீயயல் வைத்த, மெழுகு செய் பாவையின் உருகு நெஞ்சினள்" (பெருங்கதை) என்பதும் காண்க.

குலமகள் மறுகியிருந்தாலும் தலைமகன் வந்தவுடன் உளமுருகிவிடும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நருமதைபால் உணரப்படும்.

## கதை.

நருமதை என்பவள் நாகர் கன்னிகை. அரும்பெற லழகினள்; பெருந்தகவுடையவள். இப் பெண்ணரசி எண்ணரு நலத்தோடு கன்னிமாடத்தில் இருந்து வருங்கால் அசுரர் பலர் நாகருக்குப் பெருந்துயர் விளைத்தார். அவ்வமயம் பூதலமன்னனாகிய புருகுச்சன் பாதலம் புகுந்து அப் பகைவரை வென்று நாகரை ஆதரித்து நலம் புரிந்தான். அவ் வீரனது போரியல்லை வியந்து இப் பேழகியை அவனுக்கு மணம்புரிந்து தந்தார். இக் குலமகளோடமர்ந்து அலகில் போகங்களை நுகர்ந்து அறம்பல தழைக்க அத் தலை மகன் அரசு புரிந்தான். அவனது இன்ப நலனும் இவளது அன்பு நிலையும் எங்கும் வியந்துபேச நின்றன. இருதலைப் புள்ளினுக்கு ஒருதலை உயிரென உழுவலன்போடு இங்ஙனம் தழுவிவருங்கால் அமரர் சிலர் வேண்ட அமர் நிலை கருதி அவன் அகன்றுபோனான். இவள் தனியே கவன்று தவித்திருந்தாள். புல்லியிருந்த கைகள் மெல்ல நெகிழினும் அல்லலுறுகின்ற இவள் அவன் அயல் நீங்கி நின்ற காலை மயலோங்கி நொந்தபடியை யார் சொல்லவல்லார்? அருமந்த மேனி அரும்படர் கூர இவள் தெருமந் துழன்றாள். ஈர்க்கிடை போகா இளமுலை பசந்து பார்க்கிடையாகப் பருவரல் கூர்ந்தாள். கழுது கண் துயிலுங் கங்குற் பொழுதிலும் இவள் கண்படாமல் ஏங்கிக் கிடந்தாள். இன்ன வகையா யின்ன லுழந்தவள் சின்னாள் கழிந்தும் அம் மன்னன் வாராமையால் என்னை யீது! என உன்னி யுசாவினாள். தெய்வ மங்கையர்பால் மையல்கொண்டு மருவியுள்ளனாக ஐயமெய்தினாள். அவ் வெய்யவர் இனி இவண் எய்தில

பொழுது செய்வது யாதெனச் செயிர்த் துளைந்தாள். புலந்து பொங்கிப் போக்கவேண்டும் என்று ஊக்கி நின்றாள். உள்ளங் கனன்றாள். தள்ளருந் துயரோடு இங்ஙனம் தளர்ந்தழுன்றாள்.

“ புலவி யுள்ளமொடு பொருந்தாக் கண்ணள்
கலைபிணை திரியக் கையற வெய்தி
மெல்விரல் நெரித்து விம்மி வெய்துயிர்த்து
அல்லியங்கோதை அழுதுழற் றாஅங்கு
எல்லையி லிருந்துயர் எய்தினள் ” எனச் சொல்லருந் துயரொடு துழங்கி யிருந்தாள். அத் தோன்றல் வந்தான். வரவே கதிரவனைக் கண்ட கமலம்போல இவள் மதிமுக மலர்ந்தது. ஊன்றி யிருந்தபடி ஊடலும் துனியு மொன்று மின்றி உளமிக வுருகி அளவில் காதலோடு அவனை ஆரத்தழுவி ஆவி குளிர்ந்தாள். நினைந் திருந்தபடி சிறிதேனும் புலந்து நில்லாமல் இவள் கலந்துவந்ததைக் குறித்து அனந்தனி என்னும் தோழி அனந்தலாடினாள். அவர் நேர் வந்து நெருங்குமுன்னரே என் நெஞ்சம் நெகிழ்ந்துருகியதே; நான் எவ்வாறு புலந்து நிற்பேன் என்று இவள் செவ்வாய் மலர்ந்தாள். தீயிலிட்டன்ன நெஞ்சினார்க்கு நாயகனிடம்ஊடிநிற்கமுடியா தென்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள். அவ் வந்த வனோடு இங்ஙனம் இன்புற்று வாழ்ந்து ஓர் மைந்தனைப் பெற்றாள். அவனுக்குத் திரிசதசியு என்று பெயர். வசுதன் எனவும் கூறுவர். நாகர் மங்கையாகிய இவளை மனைவியாகப் பெற்றமையால் அவ் அரசன் பெயர் புகன்றார்க்கும் அரவின்பயம் அணுகாதிருந்தது. அடியில்வருவது காண்க.

“உரகருந்தம்மி னுடன் பிறந்தவளாம் ஒரு நருமதை தனை யளிப்ப
விரிமலர்த் தொடையல் அரசனு மணந்து விளங்குதன் பெயர்மொழிந்தவ
ர்க்கும், அரவினின்வெருவுன் அடைந்திடாவாறும் அடைந்துலகொருகுடை
நிழற்றித், தரியலர் புகழுந் திரிசதசியனும் தநயனை யுயிர்த்தன னன்றே.”
(பாகவதம்)

இப் பெண்ணரசியை யடைந்து எண்ணரு நலங்களை யெய்தி அவ் அண்ணல் இருந்த உண்மை இதன்கண்ணும் காண்க. அவன் பிரிந்துநின்றபொழுது புலந்திருந்தும் அருகில்வந்தவுடன் சிறிதும் ஊடாமல் பெரிதும் விழைந்துருகி இவள் மருவி மகிழ்ந்ததைச் அவனும் செவிலியும் பின்பு அடிக்கடி சொல்லி நகைத்தார்.

உட் சுவரில் புள்ளிகள் இட்டுப் பெண்ணியல் பெண்ணமா இழைத்து வைத்தாள்; வைத்தவள் ஆற்ருமை மிகுதியால் நாள்தோறும் அவற்றைத் தொட்டுத் தொட்டு எண்ணிக் கணக்கிட்டு வந்தாள்; இடையருது அங்ஙனம் நிகழ்ந்து வரலால் விரல் தேய்ந்துபோயது ஆதலால் "அவர் சென்ற நாள் ஒற்றி விரல் தேய்ந்த" என்ருள். கண்கள் பஞ்சு பூப்ப, விரல்கள் நைந்து தேய, இவள் நெஞ்சுருகி நெடிது விழைந்திருந்தமை இதனுல் இனிது புலனும்.

என்னுடைய கண்ணும் விரலும் இன்னவாறு புண்ணுயிருப்ப, அவர் என்னை எண்ணு திருக்கின்ருரே எனத் தலைவி இங்ஙனம் அலமரலோடு எண்ணியிரங்கி யிடருழந்தாள் என்க. இது கோவைத் துறையில் நாள் எண்ணிவருந்தல் என வரும்.

"தெண்ணீரணி சிவன் சிற்றம்பலஞ் சிந்தி யாதவரிற்
பண்ணீர் மொழியிவளைப் பையுளெய்தப் பனித்தடங்கண்
உண்ணீருக ஒளிவாடிட நீடு சென்ருர் சென்றநாள்
எண்ணீர்மையி னில னுங் குழியும் விரலிட்டறவே" (திருக்கோவையார்)

கண் ஒளிவாடி, நாள் எண்ணி விரல் தேய்ந்து ஒரு பெண்ணிருந்த நிலையை இதன்கண்ணும் காண்க.

"நோற்ருேர் மன்ற தாமே கூற்றம்
கோளுற விளியார் பிறர்கொள விளிந்தோரெனத்
தாள்வலம் படுப்பச் சேட்புலம் படர்ந்தோர்
நாளிழை நெடுஞ்சுவர் நோக்கி நோயுழந்து
ஆழல் வாழி தோழி" (அகநானூறு 61).

"சேணுறை புலம்பி னுள்முறை இழைத்த
திண்சுவர் நோக்கி நினைந்து கண்பனி
நெகிழ்நூன் முத்தின் முகிழ்முலைத் தெறிப்ப,
மையற விரிந்த படையமை சேக்கை
ஐயமென் தூவி அணைசேர் பசைஇ,
மையல்கொண்ட மதனழி இருக்கையள்;
பகுவாய்ப் பல்லி படுதொறும் பரவி
நல்ல கூறென நடுங்கிப்
புல்லென் மாலையொடு பொருங்கொல்தானே" (அகம் 289)

"செய்குறி ஆழி வைகல்தோ றெண்ணி,
எழுது சுவர் நினைந்த அழுதுவார் மழைக்கண்" (அகம் 351).

பிரிந்து சென்ற நாள்களைச் சுவரில் குறித்துவைத்து, அவற்றை எண்ணியெண்ணி இன்னலுழந்து கண்ணீர் பெருக்கிப், பல்லியை நோக்கி நல்லது சொல்லென நயந்து சொல்லி மெல்லியலார் அல்ல லுற்றிருந்த நிலையை இவற்றுள் அறிந்து கொள்க. பிறவுயிர்கள் பயன் கொள்ளும்படி இறந்தவரே தவஞ் செய்தவராவர்; அங்ஙன மின்றி எமன் கொள்ள வீணே இருந்து மடிந்தவர் அவமுடையரே யாவர் எனத் தம் உளத்தே துணிந்தெழுந்து பொருளீட்டிவா ஊக்கத்தோடு முயற்சிமேல் சென்றார் என்று தலைமகன்து செலவு நிலையைக் குறித்து முதலில் சுட்டியிருக்கும் அழகைப் பார்க்க.

சுவரிலிட்ட பொட்டுகளை எண்ணுதலே யன்றித் தலைவன் வரவு கருதி வட்டமாகக் கோடிழைத்தும் பார்ப்பர். அதாவது கண்களை மூடிக்கொண்டு மணலில் வளையமாகக் கோடு கீறுவர்; அங்ஙனங் கீறுங்கால் முதலில் தொட்ட இடத்தை முடிவு வந்து நேரே ஒட்டிவிடின் அவன் அன்றே வந்தருளுவன் எனவும், சிறிது விலகிவிடின் இரண்டு மூன்று தினங்களுள் வருவன் எனவும், பெரிதும் அகன்றுபோயின் வர நெடுநாட் செல்லும் எனவும் குறிக் கொண்டு நிற்பர் என்க. இன்னும் ஒருவகையா மன்னி நோக்குவர்: முன்னங் கீறிய வட்டக் கோட்டுக்குள் சுழிசுழியாக் சுற்றுஞ் சுழித்து இரண்டு இரண்டாகச் சேர்த்து எண்ணுவர்; எண்ணிவருங் கால் இரட்டையாக நின்று விடின் தலைவன் வந்துவிடுவன் எனவும், ஒற்றைப்படின் வந்தருளான் எனவும் சிந்தை கொள்வர் என்க.

"மாடநீள் மருகற் பெருமான் வரிற்
கூடு நீ யென்று கூடல் இழைக்குமே" (தேவாரம்)

"கூடற் பெருமானைக் கூடலார் கோமானைக்
கூடப்பெறுவேனேல் கூடென்று—கூடல்
இழைப்பான்போல் காட்டி யிழையா திருக்கும்
பிழைப்பிற் பிழைபாக் கறிந்து." (முத்தொள்ளாயிரம்)

"வாடை குளிர மருந்தறிவார் இல்லையோ?
கூடல் இனியொருகால் கூடாதோ?—ஓடை
மதவா ரணத்துதயன் வத்தவர்கோ னட்டிற்
கதவா தோதமியேன் கண்." (வச்சத்தொள்ளாயிரம்)

"சென்றார் வரைய கருமஞ் செருவேலான்
பொன்றாங் கணியகலம் புல்லப் பொருந்துமேல்
குன்றாது கூடுகெனக் கூறிமுத்த வார்மணல்மேல்
அன்றாங் கணியிழையாள் ஆழி யிழைத்தாளே." (சிந்தாமணி)

"ஆழிதிருத்தும் புலியூ ருடையா னருளின் அளித்து
ஆழிதிருத்து மணற்குன்றில் நீத்தகன்றார் வருகென்று
ஆழி திருத்திச் சுழிக்கணக் கோதி நையாமல் ஐய
வாழி திருத்தித் தரக்கிற்றியோ வுள்ளம் வள்ளலையே." (திருக்கோவையார்)

"பூமகன் புகழ் வானவர் போற்றுதற்
காமகன் அணி வாணுதல் தேவகி
மாமகன் மிகு சீர் வசு தேவர்தம்
கோமகன் வரில் கூடிடு கூடலே" (நாச்சியார் திருமொழி)

"மைம்மறந்த நீலஒண்கண் வார்புனற் சொரிந்து; யாழ்
கைம்மறந்த; கூடல் எண்ணி மெல்விரல்கள் கன்றின;
பொம்மல் வெம்முலைத் தடம் கலம் துறந்த; பூமறந்து
அம்மெலோதி சோர்ந்தது; உள்ளம் ஆர்வமோ டழிந்ததே" (நைடதம்)

"கூடலிழைத்ததிற் கண்ணீர் சொரிந்து குறிப்பொருநாள்
நீடல்கண்டேங்கி வரிக்குறி பார்த்தின்று நெஞ்சுருகி
வாடலுற்றாங்கு நந்தேர்வரல் நோக்கி மயங்கிடுமே
ஆடல்புரிசிவன் கோடிச்சுரத்து நம் ஆருயிரே" (கோடிச்சுரக்கோவை)

"குழைத்தபூங் கொம்பனாள் ஒருத்தி கூடலை
இழைத்தனள் அவ்வவள் இட்ட போதெலாம்
பிழைத்தலும், அனங்கவேள் பிழைப்பில் அம்பொடும்
உழைத்தனள்; உயிர்த்தனள்; உயிருண்டென்னவே" (இராமாயணம்)

"மின்னகு மணிவிரல் தேய, வீழ்கணீர்
துன்னரும் பெருஞ்சுழி யழிப்பச், சோர்விேனாடு
இன்னகை நுனைச்சியர் இழைக்கும் சூழிசால்
புன்னையம் பொதும்பரும் புக்கு நோக்கினான்." (உயுத்தகாண்டம்)

சுழிக்குஞ் சுழிக்குத் தொகைவேறு வேறுறச் சோர்வனேயா
லழிக்குங் கண்ணீர் பல காலுமந்தேர் வளமாமனைத்தும்
செழிக்குந் தமிழ்க் குருகூர்ச் சடகோபன் சிலம்பினில் என்
விழிக்கும் கரத்துக்கும நானென்னவோ வெவ் வினை செய்ததே"
(மாறன்கோவை)

"விழிக்குந் திருநுத லான் கொடியேன் வெவ் வினையனைத்தும்
அழிக்குந் திறலுடையான் காழி சூழ் துறையாய், சுவைத்தேன்
மொழிக் குங் குமமுலையாள் விரல்கன்ற, வெண்முத்த மணற்
சுழிக்குங்கழிக்கும்ஒழிக்குங்கண்ணீரென்று துன்புறுமே" (சீகாழிக்கோவை)

"மெய்யில் அணைத்துருகிப் பைய அகன்றவர்தாம்
மீள்வர் எனக் கருதிக் கூடல் வளைத்தறவே
கையிலணைத்தமணற் கண்பனி சோர் புனலிற்
கரைய இருந்தழுவீர்! கடைதிறமின் திறமின்" (கலிங்கத்துப்பரணி)

காதலன் வரவையே கருதிச் சுவரில் குறித்த சுன்னங்கள் எண்ணியும், கோடு கிழித்துச் சுழிகளிழைத்தும் நீடிய ஆசையால் நாடிப் பார்த்தும், மகளிர் வாடியிருப்பர் என்பதை ஒரு படியாக இவை உணர்த்திநிற்றலறிக.

காதலனை விழைந்து காதலி நின்ற நிலையைக் கண் விரல்கள் மேல்வைத்து விளக்கியுள்ள இது அவன்வயின் விதும்பலாதலறிக.

தலைவனை அவாவி வழிமேல் விழி வைத்துத் தலைவி தவித்திருப்பள் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ் வுண்மை அலம்புசைபால் உணரப்படும்.

## கதை.

அலம்புசை என்பவள் இக்குவாகு மன்னனுடைய அருமைத் திருமனைவி. அதி ரூபவதி. மகா பதிவிரதை. இக் குணவதியோடு இணைபிரியாதிருந்து அதிபோகங்களை நுகர்ந்து அவ் அதிபதி அரசுபுரிந்து வந்தான். வருங்கால் பெரும் போர் ஒன்று மறுபுலந் தன்னில் முறுகி யெழுந்தது; அவ் அருஞ்சமர் தணிக்க அப் பெருந்தகை விரைந்தான். அந் நிலையறிந்த இவள் நிலைகுலைந் துளைந்தாள். அவன் உரிமையோடு தழுவி விரைவில் வருவல் என உறுதி கூறி இரதமேறிச் சென்றான். இவள் பருவரலோடு பதைத்திருந்தாள். அவன் குறித்த பருவம் வந்தும் வந்தருளாமையால் இவள் மிகவும் நொந்து கலுழ்ந்தாள். மழைக்காலம் வந்தது; அக் கால நிகழ்ச்சியை நோக்கி இவள் சாலவும் பதைத்தாள். மின்னலையும் வான வில்லையும் பார்த்து இன்னல் மீக் கூர்ந்தாள். இந்திர கோபம் என்னும் செந்நிறப் பூச்சிகள் முந்துற ஊர்தலையும், காந்தள் முல்லை முதலிய மலர்கள் அலர்தலையும், மயில் முதலிய பறவைகள் களித்தாடலையும் கண்டு இவள் சுழித்துழந்தாள். கண்ணீர் சிந்திக் கடுந் துயரோடு இவள் நண்ணியிருக்கு நிலையினை யெண்ணிச் சந்திரசேனை என்னும் தோழி சிந்தை யுருகினாள். இன்னும் வரவில்லையே! என்று அம் மன்னன் நிலையை இகழ்ந்து மறுகி மொழிந்தாள்.

“ விரிகடல் பருகி அளறுபட் டன்ன
கருநிற மேகம் கல்முகடு ஏறி
நுண்டுளி பொழிய நோக்கி ஒண்டொடி

பொலங்குழை மின்னப் புருவ வில்லிட்டு
இலங்கெழிற் செவ்வாய்க் கோபம் ஊர்தரக்,
கைத்தலம் என்னும் காந்தள் மலர,
முத்திலங் கெயிறெனு முல்லை அரும்பக்,
குழலும் சுணங்கும் கொன்றை காட்ட,
எழிலுடைச் சாயல் இளமயில் படைப்ப,
உண்ணிறை யுயிர்ப்பெனும் ஊதை யூர்தரக்
கண்ணீர்ப் பெருமழை பொழிதலின் ஒண்ணிறத்து
அஞ்சனக் கொழுஞ்சே றலம்பி எஞ்சா
மணியும் பொன்னும் மாசறு வயிரமும்
அணிகிளர் அகிலும் ஆரமும் உரிஞ்சிக்
கொங்கை என்னும் குவட்டிடை இழிதரப்
பொங்கு புயல் காட்டி யோளே; கங்கை
வருவிசை தவிர்த்த வார் சடைக் கடவுள்
அரிவை பாகத் தண்ண லாரூர்
எல்லையி லிரும்பலி சொரியும்
கல்லோ சென்ற காதலர் மனமே"

என்றபடி மாதுயரோடு பாங்கி மறுகி மொழிய இவள் உருகியிருந்தாள். அவனது வரவையே எதிர்பார்த்து வழிமேல் விழி வைத்து வாடி அயர்ந்தாள். சென்ற நாள்களைச் சுவரில் குறித்து அப் புள்ளிகளை மீளமீள விரல்வைத்து ஆற்றாமையால் நாளும் நாளும் எண்ணி நீள வுயிர்த்தாள். அவ் அண்ணலைப் பார்த்துப் பார்த்து எண்ணி வந்தமையால் கண்ணும் பஞ்சுபூத்துக் கைவிரலும் தேய்ந்ததெனக் கண்ணீர் வடித்து முடிவில் ஒருநாள் படியில் சாய்ந்தாள். "கண்ணும் வாள் அற்ற; அவர் சென்றநாள் ஒற்றி விரலும்தேய்ந்த" என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள். பின்பு அம் மன்னன் வந்தான்; இவள் மருவி மகிழ்ந்து ஓர் புதல்வனைப் பயந்தாள். அவனுக்கு விகுக்கி என்று பெயர்.

"நெய்மிதி கவளந் தெவிட்டிநின்றடர்க்கு நிழல் சுழி தறுகண்மால் யானை பெய்முகில் என்னக் கொடைக்கட ளிறுக்கும் இக்குவாகுப் பெயர்ப் பெரியோன், ஐயசெங்கமல மலரினுல் கங்குல் முகத்தினில் அரனடி யேத்தி வெய்யவன் குலத்து விளக்கெனப் பெற்ற விடலைவேல் விகுக்கி என்றுரைப்பார்" (கூர்மபுராணம்)

இவளது கொழுநன் இயல்பும், குலமகன் நிலையும் தலைமையும் பிறவும இதில் குறிக்கப் பட்டுள்ளமை காண்க.

கண்பூத்துக் கைதேய்ந்து காமநோய் நெஞ்சலைப்ப
எண்பூத் திருந்தேன் இனைந்து.

காதலனை விழைந்து காதலி நின்ற நிலை இதனால் கூறப்பட்டது.

1262. பண்டுகோப் பெண்டு பதியை மறவாதுட்
கொண்டிருந் தாள் என்னே குமரேசா—கண்டாய்
இலங்கிழா யின்று மறப்பினென் றோண்மேல்
கலங்கழியுங் காரிகை நீத்து. (உ)

இ—ள்.

குமரேசா! யாண்டும் தன் கணவனை மறவாமல் பெருங் கோப்பெண்டு ஏன் கருதி யிருந்தாள்? எனின், இலங்கிழாய்! இன்று மறப்பின் என் தோள்மேல் காரிகை நீத்து கலம் கழியும் என்க.

இழை = ஆபரணம். காரிகை = அழகு. கலம் = அணிகலம்; இங்குக் கைவளையல் என்க. கழியும் = கழன்றொழியும்.

இலங்கு இழாய் = விளங்கிய அணிகளையுடையவளே. என்றது தோழியை. இலங்குதல்—விளங்குதல், ஒளிர்தல். "இலங்கு நிலவின் இளம்பிறை போல" (ஐங்குறுநூறு 443). ஐகார ஈற்றுப் பெயர் விளியேற்குங்கால் ஆய் எனத் திரியுமாதலால் இழாய் என நின்றது. "இ ஈ யாகும்; ஐ, ஆய் ஆகும்."(தொல்காப்பியம்.)

அழகிய அணிகளை யுடைய தோழியே! காதலரை யான் இன்று மறப்பேனாயின் அழகு நீங்கி என் தோள் வளைகள் கழன்று போம் என்பதாம். இன்று என்றது என்றும் மறவாமை தோன்ற.

பிரிந்து நின்ற தலைவனை இடையறாது நினைந்து தலைவி வருந்தி யிருந்தாள்; அங்ஙனம் இருந்தவளை ஒருநாள் தோழி நெருங்கி அம்மா இப்படி நீள நினைந்துகொண்டிருந்தால் மேனி மெலிந்துபோம் ஆதலால் சிறிது மறந்து ஆற்றவேண்டும் என்று பரிந்து வேண்டினாள்; வேண்டவே அதற்குஇவள் நீ சொன்னபடிசெய்தால் இன்னபடியாம் என இங்ஙனம் இசைத்தாள் என்க.

காதலனைச் சிறிது மறந்தாலும் உயிர்பதைக்கும்; பதைக்கவே உடல் மெலியும்;மெலியவே அழகுகுலைந்து வளைகள்கழலும் ஆதலால் "மறப்பின் காரிகை நீத்துக் கலம் கழியும்" என்றாள்.

கொழுநனையே கருதி உள்ளம் உருகிக் குலமகள் உயிருளைந் திருப்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பெருங் கோப்பெண்டின்பால் உணரப்படும்.

## கதை.

பெருங்கோப் பெண்டு என்பவள் மதுரையிலிருந்து அரசு புரிந்த நெடுஞ்செழியன் என்னும் பாண்டிய மன்னனுடைய அருமைத் திருத்தேவி. அரும்பெறலுருவும், பெரும் பொறைக் கற்பும் ஒருங்கமையப் பெற்றவள். யாவரும் போற்று மேவரு சீரினள். “ பெண்ணருங் கலமெனப் பிறந்து பேரெழில், விண்ணர மகளிரும் விழைந்து போற்றிட, எண்ணரு நலனொடும் இருந்த நங்கை ” எனப் பெரும் புகழோடு விளங்கியிருந்த இப் பெண்ணரசியை யெய்தி எண்ணரும் போகங்களை நுகர்ந்து அவ் வண்ணல் இனிது வீற்றிருந்தான். அப் பேரரசோடு ஓராசனத்தில் நேரமர்ந்திருந்து அரச மரியாதைகள் யாவு மடைந்து விரசுகோலங்களொடு மேவி யுள்ளமையால் கோப்பெருந்தேவி, பெருங்கோப்பெண்டு என மாப்பெரும் பெயருடன் இவள் மருவி விளங்கினாள். இவளது இயற்பெயர் சௌந்தரவல்லி என்பர். இக் கட்டழகியை யாதும் விட்டகலாமல் அவன் களித்து வந்தான். ஈருயிரும் ஓருயிரென உழுவலன்போடு இங்ஙனம் தழுவி வருங்கால் வடபுல ஆரியர் மிடல்கொண்டெழுந்து அடல்செய்து நின்றார். அவரை அடல் சாய்த்து வர அடுபடையோடு அவன் அகன்று சென்றான். அப் பிரிவில் இவள் பெரிது மறுகி யுருகி யிருந்தாள். கனவிலும் அவனையே கருதிக் கிடந்தாள். நள்ளிரவில் மெள்ளக் கண்ணயர்ந்த போதும் அவ் வள்ளல் தேர் வந்ததாகத் துள்ளியெழுந்தாள்.

> “ புள்ளுந் துயின்று, பொழுதிறு மாந்து, கழுதுறங்கி,
> நள்ளென்ற கங்குல் இருள்வாய்ப் பெருகிய வார்பனி நாள்
> துள்ளுங் கலைக்கைச் சுடர்வண்ணனைத் தொழுவார் மனம்போன்று
> உள்ளுமுருக ஒருவர் திண் தேர்வந்து உலாத்தருமே ”.

என இன்னவாறு உளைந்து புலம்பிப் பின்பு உருவெளி யென்று தெரிந்து பருவரல் கூர்ந்தாள். நினைப்பின் பயனாக இந் நெடுந் துயர்கள் நிலைத் தெழுகின்றன ஆதலால் சிறிது நினைவொழிந்திருக்கவேண்டும் என்று பாங்கியர் பரிந்து வேண்டினார். ‘ நினைந்து வருதலினாலேதான் இவ்வளவாவது இருந்துவருகின்றேன்; அரசைமறந்துவிடுவேனாயின் யான் இறந்துபடுவேன்;’ என இவள் எதிர்ந்து கூறினாள். இவளது ஆர்வ நிலைமை யறிந்து அவரும் அடங்கியிருந்தார்.

"மறப்பின் காரிகை நீத்துக் கலம் கழியும்" என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள். பின்பு அவ் வேந்தன் வந்தான்; இவள் உவந்து கூடி உயிர் தழைத்திருந்தாள். முடிவில் அம் முடி மன்னன் கோவலனை ஆராயாமல் கொல்வித்ததனால் ஆவலித்து வீழ்ந்து ஆருயிர் துறந்தான். அவன் இறந்தான் என்று உடனே இவளும் இன்னுயிர் நீர்ந்தாள். பிரிவாற்றாமல் இவள் விரைந்துயிர் துறந்ததை யறிந்து அனைவரும் வருந்தி அலமந்திரங்கினர். அமரரும் வியந்து அருளொடு புகழ்ந்தார். முடிவில்வருவது காண்க.

"அரிமான் ஏந்திய அமளிமிசை யிருந்த
திருவீழ் மார்பிற் றென்னர் கோமான்
தயங்கிணர்க் கோதை தன்துயர் பொறாஅன்
மயங்கினன் கொல்லென மலரடி வருடித்
தலைத்தாள் நெடுமொழி தன் செவி கேளாள்
கலக்கங் கொள்ளாள் கடுந்துயர் பெறாஅள்
மன்னவன் செல்வுழிச் செல்க யானெனத்
தன்னுயிர் கொண்டவன் உயிர் தேடினள் போல்
பெருங்கோப் பெண்டும் ஒருங்குடன் மாய்ந்தனள்".
(சிலப்பதிகாரம்)

கொழுநனைத் தழுவி உழுவலன்புடன் இவள் உயிர் போன படியை இதில் ஊன்றி புணர்ந்துகொள்க. இதனால் இவளது கற்பு நிலையும், கணவனை மறவாத காதலியல்பும் இனிது புலனும்.

உள்ளா திருப்பின் உடனுயிர்போம் என்னைநீ
எள்ளா திருக்க இனி.

தலைவி நினைந்திருந்த நிலை இதனால் கூறப்பட்டது.

---

1263. நாதன் வரவினையே நச்சி நலமிகுபூங்
கோதைநின்றாள் என்னே குமரேசா—ஓதும்
உரனசைஇ யுள்ளந் துணையாகச் சென்றார்
வரனசைஇ யின்னு முளேன். (௩)

இ—ள்.

குமரேசா! காதலன் வரவையேகருதியுருகிப்பூங்கோதை ஏன் மறுகி யிருந்தாள்? எனின், உரன் நசைஇ உள்ளம் துணையாகச் சென்றார் வரல் நசைஇ இன்னும் உளேன் என்க.

உரன் = வலி, அறிவு. "உள்ளியது முடிக்கும் உரனுடை யுள்ளத்து" (புறம் 206). இதில் உரன் உணர்த்திநிற்ற வறிக. "வலி மார்பு ஊக்கம் ஞானம் திடம் உரம்" (பிங்கலந்தை)

நசைஇ = விரும்பி. நசை என்னும் பெயர்ச்சொல் அளபெடுத்து வினையெச்சமாய் நின்றது. சென்றார் வரல் நசைஇ= பிரிந்துபோன அவர் வருதலை விரும்பி.

"மலையிடைப் போயினர் வரனசைஇ நோயொடு
முலையிடைக் கனலும் என் னெஞ்சு" (பாலைக்கலி 36)
"அவலநோய் செய்தான்கண் பெறல் நசைஇ"(நெய்தற்கலி 6)
"பொருணசை யுள்ளந் துரப்பத் துறந்தார்
வருநசை பார்க்குமென் னெஞ்சு" (திணைமொழி 14)

அடிகள் குறிப்பை இவை அடியொற்றி வந்துள்ளமை காண்க.

கல்வி யறிவிலும், வில் வலியிலும் சிறந்திருந்த தலைவன் தனது வெற்றித் திறத்தை உலகில் விளக்கிவர விரும்பிச் சென்றுள்ளதலால் "உரன் நசைஇச் சென்றார்" என்றாள். உள்ளம் துணையாக என்றது படை முதலாக வேறு துணையாதுமின்றித் தன் மனமே துணையா வூக்கத்தோடு போனதலால் அப் போக்கு நிலை கருதி. இதனால் அவனது உள்ளத் துணிவு உணர நின்றது

மேல், மறந்தால் இறந்து படுவல் என்றாள்; இதில், உயிரோடு இருந்து வருவது கணவனை நினைந்து நிற்பதனால் என்கின்றாள்.

வெற்றியை விரும்பித் தன் மனமே துணையாகச் சென்றவர் வருதலை விரும்பி யான் இன்னும் இருக்கின்றேன் என்பதாம்.

காதலன் வருகையையே யிச்சித்து ஓயாது நச்சி யிருந்தால் நலிந்துபட நேருமாதலால் அந் நசையைச் சிறிது ஒழித்திருக்க வேண்டும் என்ற தோழியை நோக்கித் தலைவி உரைத்தபடி யிது.

ஆருயிர்த் துணைவர் வந்தருளுவார் என்னும் ஆசையாலே தான் என் ஆவி நிலைத்துள்ளது என்பாள் "வரல் நசைஇ இன்னும் உளேன்" என்றாள். இன்னும் என்றது பிரிவாற்றாமை யால் முன்னமே தொலைந்துபோயிருக்கவேண்டிய உயிர் அங்ஙனம்

தொலையாமல் நிலையா யிருப்பவரை இருந்து வருகிறது என அவ் இருப்பின் இயல்பு தெரிய வந்த.

"வாரா தொழி யானென்னும் வண்மையினால்
ஓராயிர கோடி இடர்க் குடையேன்;
தீரா ஒரு நாள் வலி சேவகனே
நாராயணனே தனி நாயகனே" (இராமாயணம்)

அளவிடலரிய துயரங்களை யடைந்தும் அழிந்தொழியாமல் தன் உயிர்தரித்திருந்தது நாயகன் வருவன் என்னும் நசையாலே தான் எனச் சீதை இதில் உணர்த்தி நிற்றலறிக.

"சென்றுசென் றழியும் ஆவி திரிக்குமால் செருவிற் சேமக்
குன்று நின்றனைய தம்பி புறக்கொடை காத்து நிற்பக்
கொன்றுநின் தலைகள் சிந்தி அரக்கர்தம் குலத்தை முற்றும்
வென்றுநின் றருளுங் கோலம் காணிய கிடந்த வேட்கை" (யுத்தகாண்டம்)

இது, இராவணனை நோக்கிச் சீதை யுரைத்தது. பிரிவாற்றாமல் பரிதபித்து நாள்தோறும் உடலைவிட்டு வெளியேபோய்க் கொண்டிருக்கிற உயிரை உள்ளே கொணர்ந்து நிறுத்திவைப்பது தனது நாயகன் வந்து வீரவேட்டை யாடி வில்லொடு நிற்கும் காட்சியைக் காணும் ஆசையே என அத் தலைவி இதில் உணர்த்தியிருக்கும் நிலையைப் பார்க்க. அழியும் ஆவியை வேட்கை திரிக்கும் என்க.

"பொருநான் மதனை யழித்தே இமையப் பொருப்பில் மணத்
திருநாள திற்றரும் வெங்கை புரேசர் செழுஞ் சிலம்பிற்
கருநாண்மலர் விழி மாதே என்றுயிலும் காதலரீங்கு
ஒருநாள் வருவரென்றே நின்றது ஆவி உடலகத்தே" (திருவெங்கைக் கோவை)

சென்றவர் வருவர் என்றே என் ஆவி நின்றுள்ளது எனத் தன் தோழியை நோக்கி ஒருத்தி இதில் உரைத்திருத்தலறிக.

காதலன் வந்தருளுவன் என்னும் ஆசையால் காதலி உயிர் தரித்திருப்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பூங்கோதையால் உணரப்படும்.

## கதை.

பூங்கோதை என்பவள் தேவமீடன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகள். குண நலங்களிலும் எழில் நிலையிலும் அக்

காலத்திருந்த அரசிளங் குமரிகள் எவரும் தனக்கு இணையிலராக இவள் உயர் வெய்தி யிருந்தாள். இவளை மணந்துகொள்ள விழைந்து மன்னர் பலர் மயங்கி வந்தார். எவரையும் விரும்பாமல் கன்னிமை காத்துத் தன்னனைய தோழிகளுடன் இன்னொளி மாளிகையில் இவள் மன்னியிருந்தாள். இருந்தவள் ஒருநாள் நகர் மருங்கிருந்த நறுமலர்ச் சோலையில் புகுந்து உலாவினாள். அவ் வமயம் தெய்வகதியாய் அவ்வழி வந்த அரசிளங் குமரனை இவள் கண்டாள். அவன் திரிசதேச்சு என்னும் சூரியகுலத்து மன்னனுடைய அருமைத் திருமகன். உருவிலும் அறிவிலும் பொரு விறந்தவன். பொருதிறத்தில் முருகமூர்த்தி எனப் பெருங்கீர்த்தி பெற்றவன். சம்பூதி என்னும் பெயரினன். இளமையிலேயே போராற்றலோடு நிலவியிருந்தமையால் அவனது வரன்முறையை வியந்து அமரரும் புகழ்ந்துளார். அடியில் வருவதும் காண்க.

"கற்சிறை யழித்துக் கரையலைத் தொழுகுஞ் சரயுவும் கங்கையுமுடைய
மற்படு திணி தோட் டிரிசதேச்சென்னு மன்னவன் இனிதருள் புதல்வன்
வெற்பகங்கிழிய வேற்படை பணித்த வென்றி கூர் முருகுறழ் தோற்றத்து
எற்படுசுடர்வேல் எழுழ்வலித்தடக்கை ஏந்தல் சம்பூதி என்றுரைப்போன்"
(கூர்மபுராணம்)

இதில் அவனது தோற்றமும், ஏற்றமும் குறித்திருத்தலறிக. முருகு உறழ் தோற்றம் என்றதனால் அவனுடைய அழகும், இளமையும், அற்புத நிலையும் இனிது புலனும். இங்ஙனம் விழுமிய நிலையில் நிலவியிருந்த அவனைக் கண்டவுடனே இவள் காதல்மீக் கொண்டாள். அவனும் அளவிலாவலோடு உளமிக வுருகி யுளைந்து நின்றான். இங்ஙனம் உழுவலன்போடு உழந்து நின்றவர் கந்தருவ முறையில் கலந்து மகிழ்ந்தார். களவு நெறியில் ஒழுகி யெழுந்து கலவிக் கோலத்தோடு வந்த இவளைத் தோழி எதிர்ந்து கண்டாள். இவளது வடிவ நிலையில் ஐயங்கொண்டு நெடிது நினைந்து அருகு நெருங்கி அவள் விநயமாகப் பைய வினவினாள்.

"இருள் புரி கூந்தலும் ஏழில்நலஞ் சிதைந்தது;
மருள்புரி வண்டறை மாலையும் பரிந்தது;
ஒண்ணுதற் றிலகமும் அழிந்தது; கண்ணும்
மைந்நிற மொழிந்து செந்நிறம் எய்தி
உள்ளறி கொடுமை யுரைப்ப போன்றன;
சேதகம் பார்த்தது செவ்வாய்; மேதகு
குழைகெழு திருமுகம் வியப்புள் ளுறுத்தி,
இழைகெழு கொங்கையும் இன்சாந்தழீஇக்,
கலையுந் துகிலும் நிலையிற் கலங்கி,
என்னிது விளைந்த வாறு?"

என இன்னவகையாயிகம்பெறநின்று நன்னயமாக அவள் களிநகையு டன் கேட்டாள். புதிய பூர் சுனையில் இனிய நீராடினேன்; இனையவா றுயது; என இவள் எதிர்மொழி தந்தாள். உடுத்த ஆடை நனையா மல் நீ மடுத்து ஆடிய அம் மாயச் சுனை எங்கே? என அவள் வாயை வளர்த்தாள். அச்சுனை நீ காணமுடியாது; சேணிடையுள்ளது; என்று இவள் நாணமொடு நகைத்தாள். இன்னணம் நகையாடிப் போனபின் அம்மன்னன் வந்து எண்ணரிய சீருடன் யாருமறிய இவளை மணந்துகொண்டான். அத் திருமகன் தனக்கு மருகனா யமைந்ததை நினைந்து இவளுடைய தந்தை உளமிகவுவந்து அரிய வரிசைகள் பல ஆர்வமொடு தந்தான். இவளோ டெழுந்து தனது அணிநகரடைந்து அலகில் போகங்களை நுகர்ந்து அவனி யின்புற அவன் அரசு புரிந்துவந்தான். வருங்கால் வானவருக்கும் தானவருக் கும் வன்சமர் மூண்டது. அவ் அமர்முனையில் அமரரை ஆதரிக்க அவன் ஆர்வமொடு சென்றான். இவள் அல்லலுழந்து தனியே அலமந்திருந்தாள். அவன் வரவையே விழைந்து நாளும் மறுகி யிருந்த இவளை மனோசிலை என்னும் சேடி ஒருநாள் நெருங்கி அவ்விழைவொழிந் திருப்பின் சிறிது ஆறுதலாமெனத் தேறுதல் கூறினாள். அந் நசையிருந்தேயாதான் இந்நிலையிலாவது என்னுயிர் நண்ணியுள்ளது இல்லையேல் விண்ணுல கெய்திவிடும் என இவள் உண்மையை யுரைத்தாள். “உரன் நசைஇ உள்ளந் துணையாகச் சென்றார் வரல் நசைஇ யின்னும் உளேன்” என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

வருவரேன் றெண்ணி வழிமேல் விழிவைத்
தொருவா திருந்தே னுயிர்.

காதலியின் உயிர்நிலை இதனால் கூறப்பட்டது.

---

1264. காமர் சுசீதைபோன் காமமீக் கூர்ந்துநின்றாள்
கோமகனை நாடிக் குமரேசா—ஏமமுறக்
கூடிய காமம் பிரிந்தார் வரவுள்ளிக்
கோடுகோ டேறுமென் னெஞ்சு. (௪)

இ—ள்.

குமரேசா! பிரிந்துசென்ற கணவனையே நினைந்து நினைந்து

சுநீதை ஏன் காமமீக்கூர்ந்து கலுழ்ந்திருந்தாள்? எனின், கூடிய காமம் பிரிந்தார் வர உள்ளி என் நெஞ்சு கோடு கோடு ஏறும் என்க.

வரவு உள்ளி = வருதலை நினைந்து.

கோடு = கொம்பு; மரக்கிளை. அடுக்கு பன்மை குறித்து நின்றது. பல கிளைகளிலும் ஒன்றன்மேலொன்றாய்ப் பாய்ந்து தாவி உச்சியில் ஓடுகின்றதென்றவாறு.

உழுவலன்போடு கூடி அளவிலின்பங்களை நுகர்ந்துவருங்கால் அவற்றை உதறி விடுத்து முயற்சிமேல் முனைந்து சென்றுளாதலால் அச்செலவு நிலையின் அருமையை வியந்து கூடிய காமம் பிரிந்தார் என்றாள். இங்ஙனம் பிரிந்து போன அவர் விரைந்து வருவர் என நினைந்து நினைந்து உள்ளம் துள்ளி உச்ச நிலையில் உள்ள தென்றவாறு.

முன்பு கூடி மகிழ்ந்த காமநலத்தைத் துறந்து போனவர் மீண்டு வருதலை நினைந்து என் நெஞ்சு மேன்மேல் நிமிர்ந்தெழுகின்ற தென்பதாம்.

சேணிடை நீங்கிய நாயகன் வருகையை வேணவாவோடு பேணிநின்ற தலைவி தன் நெஞ்சு நிலையை உணர்த்தியபடி யிது.

நெடுந்தூரத்தில் வருபவரை உயர்ந்த மரத்தின் உச்சிமேலேறி நச்சிப் பார்ப்பதுபோல் இவள் மனம் ஆவலோடு மேலும் மேலும் தாவிக் காதலன் வரவையே நாடி நீடி நின்றது ஆதலால் "என் நெஞ்சு கோடு கோடு ஏறும்" என்றாள்.

காதலன் வருகையை நினைந்து காமம் கதித்தெழும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுநீதைபால் உணரப்படும்.

## கதை.

சுநீதை என்பவள் கனிதரன் என்னும் குறுநில மன்னனுடைய அருமைத் திருமகள். பெண்மை நிலைக்கோர் உண்மை நிலையமா யிவள் ஒளிசிறந்திருந்தாள். இவளது எழில்நிலையை வினவியறிந்து அங்கன் என்னும் அரசிளங்குமரன் அளவிலாவலோடு உளமுருகி நின்றான். அவன் சூரியகுலத் தோன்றல். உன்முகன் என்னு முடிமன்னனுடைய அருமைத் திருமகன்.

சாக்குச மனுவிற்குப் பத்தாவது தலைமுறையில் வந்தவன். உத்தம குணங்கள் யாவும் ஒருங்கமையப் பெற்றவன். உலகமுழுவதும் பொதுவற வுடையனாய் அலகில் புகழோடு நிலவி நின்றவன். "ஆழிசூழும் அகனிலம் வழிமுறை, ஆழியொன்று செலுத்தினன் அங்கனே" என இங்ஙனம் எங்கும் இசைபெற்று நின்ற அவன் இவள்மேல் பொங்கிய காதலனாய் வந்து மங்கலமுறையோடு மணம் புரிந்துகொண்டான்.

"வந்த ஆதி மனுமுதலாக ஈ
ரைந்தென்றோது தலைமுறையான் அங்கண்
விந்தை சேர்புயன் வேட்டனன் வாண்முகம்
இந்து நேருஞ் சுநீதையை என்பவே." (பாகவதம்)

இவ்வண்ண மணந்துகொண்டு இவ் அணங்கோடமர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து அவன் ஆர்வமீதூர்ந்தான். அவனுக்கு இன்பநிலையமா யினிதமர்ந்திருந்து இவள் அன்பாற்றி வந்தாள்.

"வாசமார்மாலை மன்னவன் முன்னாள் மருவிடா வெகுளியின் மலைந்து
பூசல்வேள் பலகா லெய்த புண்ணுக்குப் புணர்முலை வேதுகொண்டொற்றி
மாசிலாமணி செய் சூடகக் காந்தள் மலர்க்கரம் ஆகமேற் கட்டி
ஆசைநோய் தீர அமுதமாயுதகம் அளித்தனள் அரிவையர் பெருமாள்.

கண்டகண் வாங்கா திருவருமதனாற் கலவியும் புலவியும் விளைந்து
முண்டக வதனம் வெயராரும்பிடினு முகிழ்முலை வடமசைந்திடினும்
கொண்டலங் குழலில் வண்டலம்பிடினும் குறைவிலா நிரையிடரெய்தி
மண்டலத் தரசன் சிந்தையம்மங்கை மருங்குலின் ஒருவழித்தன்றே.

தானைசென்றார்க்க, மங்கலமிடற்றுச் சலஞ்சலம் புலம்பிடத், தனக்கோட்
டானை சென்றடர, மாத்தலைமயங்க, அல்குலந்தேரினைச் செலுத்தி
மீனைவென் றடுகண் வேல்படப் புருவவில் வளைத்தயோத்தியர் வேந்தைத்
தேனைவென் றினித்தசெஞ்சொலாளின்பச்செருத்தொழில்பற்பல
[விளைத்தாள்."

என்றபடி இவள் விளைத்துவர அவன் திளைத்திருந்தான். இங் ஙனம் இருந்துவருங்கால் வாள்வினையோடொன்றிய ஆள்வினை யொன்றில் அவன் அகல நேர்ந்தது. இவள் கவலைகூர்ந்து கலுழ்ந் திருந்தாள். இரவும் பகலும் அவனையே கருதி மறுகிக்கிடந்தாள். அவ்வள்ளல் வருகையையே உள்ளித் தன் உள்ளம் ஓயாது துள்ளி

யெழுகின்ற நிலையைத் தோழியிடம் ஒருநாள் இவள் வெள்கி யுரைத்தாள். "பிரிந்தார் வர உள்ளி நெஞ்சு கோடு கோடேறும்" என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

அணைகடந்த வெள்ளம்போ லாருயிரு நெஞ்சும்
துணைநினைந் தோடுந் துணிந்து.

நெஞ்சு நீடிய நிலை இதனால் கூறப்பட்டது.

---

1265. காதலனைக் கண்டபின்பே காமர்சீ மந்தனிதன்
கோதகன்றாள் என்னே குமரேசா—ஏதமறக்
காண்கமற் கொண்கனைக் கண்ணாரக் கண்டபின்
நீங்குமென் மென்றோட் பசப்பு. (ரு)

இ—ள்.

குமரேசா! காதலனைக் காணாமல் கலுழ்ந்து கிடந்த சீமந்தனி கண்டபின்பு ஏன் பசப்பு நீங்கி மகிழ்ந்துகொண்டாள்? எனின், கண் ஆரக் கொண்கனைக் காண்கமன்; கண்டபின் என் மென் தோள் பசப்பு நீங்கும் என்க.

காண்க = காண்பேனாக. வியங்கோள் வேண்டுகோட் பொருளில் வந்தது. காணவேண்டும் என்பது கருத்து.

கண் ஆர = கண்கள் நிறைய. காட்சியில் தனக்குள்ள ஆர்வ நிலை இதனால் அறிய நின்றது. கண்டபின் நீங்கும் என்றதனால் காணுமுன் யாதும் நீங்காதென்பதாயிற்று. கேட்டதனால் மட்டும் வாட்டம் போகாதென்றவாறு.

என் கண்களார எனது கணவனை நான் நன்குகாணவேண்டும்; அவ்வண்ணம் கண்டபொழுதுதான் என் மெல்லிய தோள்மே லடர்ந்த பொல்லாத பசப்பு நீங்கும் என்பதாம்.

நாயகன் வரவையே விழைந்து நாளும் நைந்திருந்த தலைவியைத் தோழி நெருங்கி "அவர் விரைந்துவந்தருளுவார் நீ வீணே நொந்துழலாமல் சிந்தை தேறியிரு" என மூண்டுற ஆறுதல் கூற அவ்வமயம் அவளை நோக்கி இவள் கூறியவாறிது.

அவர் வருவர் என்று சொன்னதைக் கேட்டவுடனேயே என் உள்ளம் உவந்து துள்ளுகின்றது; ஆயினும் அவரைக் கண்ணாரக் கண்டபின்புதான் நான் கண்ட துயரமெல்லாம் நீங்கிப்பண்டுபோல் ஒளி சிறந்து என் உயிர்மகிழும் என்பாள் "மென்தோள் பசப்பு, கண்டபின் நீங்கும்" என்றாள். "வானுயர் வெற்பன் வருவான் கொல் என் தோழி, மேனி பசப்புக் கெட" (திணைமொழி 4 என்பதும் காண்க.

பிரிவாற்றாமையால் உடல்மெலிந்து பசந்து கிடந்தாளாதலால் அப்பசப்பு நிலையை இங்குக் குறித்து நின்றாள். உடையவன் அடையவந்த பொழுதுதான் உடல் மெலிவகன்று எழில் வடிவமைந்து உளமிக மகிழ்ந்து குலமகள் நிலவிநிற்பள் என்பதாம்.

"தோள்கவின் எய்தின; தொடிநிலை நின்றன;
நீள்வரி நெடுங்கண் வாள்வனப் புற்றன;
ஏந்து கோட்டி யானை வேந்துதொழில் விட்டென
விரைசெலல் நெடுந்தேர் கடைஇ
வரையக நாடன் வந்த மாறே." (ஐங்குறு நூறு 498)

காதலன் வந்தவுடன் காதலி நின்ற நிலையை இது குறித்திருத்த லறிக. உடையவன் இன்றேல் உடல் நிலை குன்றும் என்க.

கையகன்ற கணவனைக் கண்டபொழுதுதான் உய்திகொண்டு மனைவி உவந்து நிற்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சீமந்தனியால் உணரப்படும்.

## கதை.

சீமந்தனி என்பவள் சித்திரவர்மன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகள். பெருந்தவத்தால் பிறந்தவள். பேரழகும் பெருங்குணங்களும் ஒருங்கமையப்பெற்றவள். இவளது எழில் நிலையை வினவியறிந்து நிடததேசத்து வேந்தனாகிய சந்திரசேனன் என்பவன் விழைந்துவந்து முந்துற இவளை மணந்துகொண்டான். அக்கட்டழகனோடமர்ந்து கருதிய போகங்களை நுகர்ந்து யாதும் விட்டகலாமல் இவள் விளங்கியிருந்தாள். இவரது இன்பநுகர்ச்சி உழுவலன்போடு ஒன்றியிருந்ததாதலால் அளவிலா நிலையில் நிலவி நின்றது. உடலும் உயிரும் ஒருவாது மருவி விடலரும் போகம் இங்ஙனம் பருகிவருங்கால் ஒருநாள் மருவலர்மேல் அவன் முறுகி

அகன்றான். இவள் பருவரல் கூர்ந்து மறுகியிருந்தாள். ஆண்டு மூன்றாகியும் அவன் மீண்டுவராமையால் இவள் அரும்படருழந்து அலமந்து கிடந்தாள். அயிற்சுவை துறந்து, துயிற்சுவை மறந்து, அல்லும் பகலும் அழுது மெலிந்து, எல்லையில் பசலை எங்கும் படர்ந்து, தொல்லை வெம்பிணி ஓர் புல்லிய உருவாய், அல்லல் நிலையிலழுந்தியதாமெனச் சொல்லருந் துயரொடு துழங்கியிருந்த இவளைத் தேசிகை என்னும் தோழி நாளும் ஆசைகூறி ஆற்றி வந்தாள். திங்கள் பலகழிந்தும் அவர் வந்தருளவில்லையே; எங்ஙனம் இங்குத் தங்கியிருப்பேன்? இனிச் சாதலேயன்றி நோதலும் இல்லை என்று முடிவில் இவள் நொந்து மொழிந்தாள்.

> "பொன்னேர் மேனி நன்னலஞ் சிதைத்தோர்
> இன்னும் வாரார் ஆயின்
> என்னும் தோழி! நம் இன்னுயிர் நிலையே?"

எனத் தன்னிலையழிந்து இவள் தவித்து நின்றாள். இந்நிலையில் அம்மன்னன் வந்தான். வருங்கால் இடையே அனுரதன் என்னும் குறுநில மன்னன் அவனை எதிர்கொண்டழைத்துத் தனது இனிய நகரில் இருத்தி ஓர் பெருவிருந்து செய்தான். அங்கு அவன் தங்கியிருப்பதைத் தூதரிருவர் வந்து இங்கு முந்துற உரைத்தார். தோழியரும் செவிலியரும் வாழி என்று வந்து இவளை மகிழ்ந்துபசரித்து அண்ணல் வந்தருளினார்; இனி யாதும் வருந்தல் என மருந்துறழ் மொழிகளால் மனங்குளிரவுரைத்தார். என் ஆருயிர்த் துணையைக் கண்ணார யான் கண்டபின்னரே என் உண்ணோய் நீங்கியுய்தி பெறுவேன் என இவள் உரைசெய்து நின்றாள். பின்பு அம்மன்னவன்வந்தான்; இவள்மகிழ்ந்து தழுவி விளங்கியிருந்தாள். "கொண்கனைக் கண்ணாரக் கண்டபின் என் மென்தோட் பசப்பு நீங்கும்" என்பதை உலகம் காண இவள் உணர்த்திநின்றாள்.

ஆதவனைக் கண்டலரும் அம்புயம்போல் என்னுயிரேன்
காதலனைக் கண்டலரும் காண்.

நேரில் காண நேர்ந்தமை இதனால் கூறப்பட்டது.

1266. பண்டு பதிவிரதையைப் பார்த்தேனே சத்யபாமை
கொண்டுவந்து நின்றாள் குமரேசா—மண்டி
வருகமற் கொண்கன் ஒருநாட் பருகுவன்
பைதனோ யெல்லாங் கெட. (௬)

இ—ள்.

குமரேசா! தன் கணவன் வருகையையே எதிர்நோக்கிச் சத்தியபாமை ஏன் உருகியிருந்தாள்? எனின், கொண்கன் ஒருநாள் வருக மன் பைதல் நோய் எல்லாம் கெடப் பருகுவன் என்க.

கொண்கன் = கணவன்; மணந்துகொண்டவன் என்பதாம்.

கொண்கன் வருக என்றது வினையை முற்குறித்ததனால் அவ்வருகையில் இவளுக்குள்ள ஆர்வநிலை இனிது புலனும். வருநாள் உறுதியாகத் தெரியாமையால் ஒருநாள் என்றாள்.

பைதல் நோய் என்றது பிரிவினால் நேர்ந்துள்ள விரகதாபத்தை. "பைதல் நெஞ்சத்து மையல் கொள்ளா" (பெருங்கதை 1, 33). "பரிசழி பைதல் நோய் மூழ்கி" (நெய்தற்கலி 21). இவற்றுள் பைதல் நிலை காண்க.

பருகல் = குடித்தல். பருகுவன் என்றதனால் கலவி நிலையில் இவள் கருதியுள்ள காதல் நிலை யறியலாம். நீர் வேட்கையுடையார் நீரைக் கண்டுழி வாரிக்குடிப்பதுபோல் காமவேட்கையுடையார் காதலரைக் கண்டுழிப் பரவசரா யுருகி மருவுவராதலால் "பருகுவன்" என்றாள். "பருகுகாதலிற் பாடியாடினார்" (சிந்தாமணி); "பருகுவனள்போல" (பெருங்கதை). ஆர்வ நுகர்ச்சிக்குப் பருகல் வந்திருத்தலறிக. அவன் வருமுன்னரே பருகலை நச்சி இவள் உருகியதனால் இது விதும்பலாயிற்று. "மருவி வரலுற வேண்டும் என் தோழி, உருவழி யுண்ணேயு கெட" (திணைமொழி ஐம்பது) என்பதும் ஈண்டெண்ணத் தக்கது.

இத்துணைநாளும் வாராதுள்ள நாயகன் ஒருநாள் இங்கு வருவானாக; வந்தால் இந் நோயெல்லாந் தீர நுகர்ந்து மகிழ்வேன் என்பதாம்.

நெடுநாள் வராமல் பிரிவில் நிலைத்திருந்த தலைவன் விரைவில் வருவதாகத் தூதர்மூலம் தெரிந்தவுடன் தலைவி ஆதரமிகுந்து

இங்ஙனம் உரைத்தாள் என்க.

அயிலாமை துயிலாமை முதலிய அவலங்கள் முழுவதும் நீங்க அமிர்தத்தை அள்ளிக் குடிப்பதுபோல் கணவனை ஆரத் தழுவி ஐம்புலன்களும் அமைய நுகர்வேன் என்பாள் "பைதல் நோய் எல்லாம் கெடப் பருகுவன்" என்றாள்.

"படுசுடர் மாலையொடு பைதல் நோ யுழப்பபாளைக்
குடிபுறம் காத்தோம்பும் செங்கோலான் வியன்தானை
விடுவழி விடுவழிச் சென்றாங்கு அவர்
தொடுவழித் தொடுவழி நீங்கின்றாற்பசப்பே" (நெய்தற்கலி 14)

நீதிமன்னன் படைவர நோலர் கெடுதல்போல் காதலன் வரப் பைதல் நோயும் பசப்பும் நீங்கின என இஃதுணர்த்திநிற்றலறிக.

வருவர் வருவர் என முதிர் காதலோடு நாளும் எதிர்நோக்கி நின்றாள் ஆதலால்வருகஎன வியங்கோளால் வேண்டிமொழிந்தாள்.

"காய்சின வேந்தன் பாசறை நீடி
நம்நோய் அறியா அறனி லாளர்
இந்நிலை களைய வருகுவர் கொல்லென
ஆனு தெறிதரும் வாடையொடு
நோனேன் தோழி என் தனிமை யானே." (அகம் 294)

உரியவன் வருகையை ஒருத்தி இதில் உருகி நினைந்துள்ளமையறிக.

நாயகன் வாராநாளெல்லாம் தீராநோயளாய்த் தியங்கியிருந் தாளாதலால் அவன் வந்தவுடன் ஆரநுகரும் அனுபோக நிலையை ஆராமையோடு இவ்வாறு அவாவி நின்றாள் என்க.

"பன்னெடுங்காலம் நோற்றுத் தன்னுடைப் பண்பிற்கு ஏற்ற
பின்னெடுங் கணவன் தன்னைப் பெற்று இடைபிரிந்து முற்றும்
தன்னெடும் பீழை நீங்கத் தழுவினள் தளிர்க்கை நீட்டி
நன்னெடும் பூமி யென்னும் நங்கைதன் கொங்கை ஆர."
(இராமாயணம்)

இராமன் வனவாசமுடிந்து மீண்டுவந்து திருமுடி சூடிய பொழுது பூமிதேவி மகிழ்ந்துகொண்டபடி யிது. பீழை = துன்பம். தன் நாயகன் வரக் கொங்கைஆர நன்கு தழுவி நோய் நீங்கினாள் என இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

காதலன் வரவில் ஆவல்கூர்ந்து காதலி கதித்திருப்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சத்தியரதைபால் உணரப்படும்.

## கதை.

சத்தியரதை என்பவள் கேகயன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகள். கண்கொள்ளாக் கட்டழகினள். இவளது உருவ நலன் மறுபுல மெங்கணும் வியந்து பேச நின்றது. பருவ மெய்திக் கன்னி மாடத்தில் மன்னியிருக்குங்கால் மன்னர் பலரும் மையல்மீக்கொண்டு இவளை எய்த முயன்று ஏங்கியலைந்தார். இவள் எவரையும் கருதாமல் அறிவுநூல்களை ஆய்ந்து பெருமித நிலையில் மருவியிருந்தாள். ஒருநாள் நகர் மருங்கிருந்த குளிர்பூஞ்சோலையில் தனியே இவள் உலாவி வருங்கால் அங்குத் தெய்வ கதியாய் வந்த சத்தியவதனன் என்னும் அரசிளங்குமரனைக் கண்டாள். அவன் சூரியகுலத் தோன்றல். திரையாருணன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகன். பேரழகும் பேராண்மையு முடையவன். அவனைக் கண்டவுடனே இவள் காதல் மீக்கொண்டாள். அவனும் உளமிகவுருகி அளவிலாவலோடு அலமந்து நின்றான். நயந்து நோக்கி நகைமுகங் கோட்டி விரைந்து கண்புதைத்து இவள் நாணி நின்றமையால் அவன் வேணவாவுடன் சில விளம்பலானான்.

"கிள்ளை ஏந்திக் கிளைநரம்பி னடங்கு சிவந்த காந்த ளங்கைத்
தெள்ளாரமுதே! மலர்த்திருவே! தேனே! கனிந்த செழுங்கனியே!
கள்ளக்கருங்கட் குடங்கையால் கரியேன் உயிரைக் கள்ளுநர்போல்
அள்ளி அள்ளி அருந்து நீங்கு ஆகாது உன்பேரறிவினுக்கே. (க)
உருவமருங்கு லுள் வாங்கத் தேய்த்துக் கரிகள் எட்டுமெறும்
செருவேற்றெழுந்த இரண்முலையை மறையாது, அணங்கென்றைய முறு
மருள்போயொளிப்ப இமைத்து அனங்கன் வாளியானுள் வருந்தாமல்
அருளேக்களித்தமதர் நெடுங்கண் புதைத்தல் என்மேல் அன்பேயோ? (உ)
விழைந்தோர் சொம்மை முலையல்லால் வேற்றோர் மருந்தி னமையாத
கழிந்தகாமப் பிணியகலக் கனிவாய்த் தம்பல் மருந்தருந்திப்
பிழிந்ததேறலனையமொழிப் பேதைதடந்தோள் நலனுகர்வான்
எழுந்தவுள்ளம் இவ்விடமே சேர்தற்கியைந்த இடம் என்றான்." (ங)

இங்ஙனம் விழைந்து மொழிந்து கந்தருவ நிலையில் கலந்து பின்பு உலகறிய மணந்து உயர்போகங்களை நுகர்ந்தான். ஆரா இன்ப நிலையமாய் அவனுக்கு இவள் அமர்ந்திருந்தாள். அரும்பெற லமிர்தென வியந்து மருங்ககலாமல் மருவி வருங்கால் வசிட்ட முனிவர் செய்த பெரு வேள்விக்கு ஒரு முறை அரசன் போக நேர்ந்தது. அரசை அமைச்சர் பேணிவந்தார். இவள் கணவனையே

நினைந்து கலுழ்ந்திருந்தாள். அணிதுறந்து பணிமறந்து உடல் மெலிந்து படருழந்து பரிந்து கிடந்தாள். சுகன்னி, சுகாந்தை முதலிய தோழியர் பலரும் நாளும் ஆற்றிவந்தார். வேள்வி முடிந்து மன்னன் மீண்டு வந்தான்; அவன் வரவினை உறவினர் சிலர் முந்துற வந்து இவ் அரசிக்கு உரைத்தார். வள்ளல் வரின் அள்ளி நுகர்வல் என உள்ளந் துள்ளி இவள் உருகியிருந்தாள். அத்திரு மகன் வந்தான்; இவள் மருவி மகிழ்ந்தாள். "வருக கொண்கன், பைதல் நோய் கெடப் பருகுவன்" என்பதை உலகம் இவள்பால் உணர்ந்துநின்றது. ஆண்டு மூன்று கழிந்தபின் இவள் வயிற்றில் ஓர் அருமைத் திருமகன் பிறந்தான். அவனே சத்திய சீலனாகிய அரிச்சந்திரன் என்க. அரும்பெறலழகும் பெரும்பொறைக் கற்பும் அருமகப்பேறும் ஒருங்கமையப் பெற்ற இவளை மருங்கமையப் பெற்று அம்மன்னன் மாநிலம் புரந்ததை மேனிலமும் புகழ்ந்தது

"ஆடகமுளரிப் பொகுட்டில் வீற்றிருக்கும் ஆரமென் முலைத்திரு மடந்தை
பாடுறுமந்தாரகலம் வீற்றிருப்பப் பார் பொதுவறத்தனி புரக்கும்
ஓடைமால் யானைச் சத்தியவதனன் உயிர்நிகர் எழிலுடை மைந்தன்
படைவிழ் நறுந்தார் மன்னவர் போற்றும் அடல் அரிச்சந்திரன் என்பான்"
(கூர்மபுராணம்)

இவளுடைய கணவன் பெருமையும், புதல்வன் அருமையும், இதன்கண்ணும் குறிக்கப்பட்டுள்ளனகாண்க. அம்மன்னனுக்குத் திரிசங்கு என்று பிரசித்தமாய் வழங்கும் பெயர் காரணத்தால் வந்தது. மூன்று சங்குகளின் வடுக்கள் அவன் தலையில் அழுத்தப்பட்டுள்ளமையால் அப்பெயர் வழுத்தப்பட்டது என்க.

வள்ளலுறின் தெள்ளமிர்தை வாரியுண்டல் போல்விழைந்
தள்ளி நுகர்வ னமர்ந்து.

தலைவி பருக விழைந்திருந்தமை இதனால் கூறப்பட்டது.

1267. மன்னன் வருமுன் மருதி பலநினைந்தாள்
கொன்னேயீ தென்னே குமரேசா—முன்னம்
புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ கலப்பேன்கொல்
கண்ணன்ன கேளிர் வரின். (எ)

இ—ள்.

குமரேசா! தன் காதலன் வருமுன் மருதி ஏன் பலநினைந்து

உளைந்தாள்? எனின், கண் அன்ன கேளிர் வரின் புலப்பேன்கொல்? புல்லுவேன்கொல்லோ? கலப்பேன்கொல்? என்க.

கண் அன்ன கேளிர் என்றது கணவனை. கண்போல் உரிமை யுள்ளவன் எனத் தனக்கு அவன்பாலுள்ள அருமை தோன்றக் குறித்தாள். "கண்போன்ற மாமன் மகள்" (சிந்தாமணி); "கண் ணுண் மணிபோல் மகவு" (இராமாயணம்); "கண்போற் காதலர்" (பெருங்கதை). இவற்றுள் கண் உவமை வந்துள்ளமை காண்க.

கேள் = அன்பு; உரிமை. கேளுடையவர் கேளிர் என்க.

புலத்தல் = ஊடல். புல்லுதல் = கூடல். கலத்தல் = புலத்த லும், புல்லலும் ஆகிய இரண்டும் கலந்து நிற்றல். அஃதாவது புலந்து நீடாமலும், விரைந்து வீழாமலும் மூண்டுற அவர் விழைந் தணைந்தபின் இணங்கியமர்தல். இனி, கலப்பேனோ என்றதற்குப் புலவியும் புல்லலுமின்றிப் பிரிதற்கு முன்னிருந்ததுபோல் பழைய நிலையில் கலந்து வாழ்வேனோ எனினுமாம்? ஒன்றிலும் துணிவு தோன்றாமல் நின்றாளாதலால் ஐயமாயுரைத்தாள். கொல் என்னும் இடைச்சொல் மூன்றிடத்தும் ஐயப்பொருளை யுணர்த்தி நின்றது.

கண் போன்ற என் காதலர் வரின் ஊடல் கூடல் உவத்தல் என்னும் இவற்றுள் யாதினைச் செய்வேன் என்பதாம்.

பிரிந்து போன நாயகன் விரைந்து வந்தருளுவன் என அறிந்த உடனே நாயகி விழைந்து நினைந்தபடி யிது.

பருவங்கண்டு வாராமையால் பிணங்குவோம் என்று நினைந் தாள்; உடனே ஆர்வமீதூர்ந்து அணைந்துகொள்வோம் என்று துணிந்தாள்; பின்பு அவர் முகம் புகுந்து மூண்டுற முயங்கின் அதன் பின் இணங்கிவிடுவோம் என எண்ணினள் என்க.

இங்ஙனம் பலவாறு நினைந்தமையால் இவளது மனநிலையும் மையலியல்பும் அறியலாகும்.

"நலத்தகை எழிலுண்கண் நல்லார்தம் கோதையால்
அலைத்தபுண் வடுக்காட்டி அன்பின்றி வரின்எல்லா
புலப்பேன்யான் என்பேன்மன் அந்நிலையே அவற்காணின்
கலப்பேன் என்னும்இக் கையறு நெஞ்சே;

கோடெழில் அகலல்குற் கொடியன்னார் முலைமூழ்கிப்
பாடழி சாந்தினன் பண்பின்றி வரின் எல்லா
ஊடுவேன் என்பேன்மன் அந்நிலையே அவற்காணின்
கூடுவேன் என்னுமிக் கொள்கையி னெஞ்சே;
இனிப்புணர்ந்த எழில்நல்லார் இலங்கெயிறு உறாஅலின்
நனிச்சிவந்த வடுக்காட்டி நாணின்றி வரின் எல்லா
துனிப்பேன்யான் என்பேன்மன் அந்நிலையே அவற்காணின்
தனித்தே தாழும்இத் தனியில் நெஞ்சே;

என வாங்கு

பிறைபுரை ஏர்நுதால்! தாமெண்ணியவை யெல்லாம்
துறைபோதல் ஒல்லுமோ தூவாகா தாங்கே
அறைபோகு நெஞ்சுடை யார்க்கு." (மருதக்கலி 2)

தான் புலக்கக் கருதிடும் தன் நெஞ்சம் கலத்தலை விழைந்து காதலன்பால் ஓடி நின்றதெனத்தனது ஒல்லாமையையும் உள்ள நிலையையும் ஒருத்தி இதில் உரைத்திருந்தலறிக.

தலைவன் வருமுன்னரே கலவிநிலைகளை விழைந்து விரைந்து நின்றமையால் இது விதுப்பாயிற்று. இதுவரை தலைவி விதும்பல் நடந்தது. இனி அடுத்து வருவது தலைவன் விதும்பல் என்க.

பிரிந்த காதலன் வரின் கலந்துகொள்வதைக் குறித்துத் தலைவி பலபல நினைந்து நிற்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மருதிபால் உணரப்படும்.

## கதை.

மருதி என்பவள் நருமன் என்னும் குறுநில மன்னனுடைய அருமைத் திருமகள். அழகும் பொறையும் அறிவும் தகவும் உளமலி நிறையும் வளமுறப் பெற்றவள். இவளுடைய இயல்நலங்களை வினவியறிந்து எழினி என்பவன் மயல் மிகுந்தான். அவன் அதிகமான்அஞ்சி என்னும் அரசனுடைய அருமைப் புதல்வன். நல்ல அழகன். நோக்கிய மங்கையர் உள்ளங்களைப் போக்கறப் பிணிக்கும் நோக்குடையான் என ஔவையாரும் ஒருமுறை அவனைநோக்கி யுரைத்துள்ளார். அடியில் வருவது காண்க.

"பூப்போல் உண்கண் பசந்துதோள் நுணுகி
நோக்கிய மகளிர்ப் பிணித்தன்று." (புறநானூறு 96)

என இங்ஙனம் கண்கவர் வனப்போடு கனிந்திருந்த அவன் விழைந்துவந்து இவளை மணந்துகொண்டான். அன்றிலும் பேடையும்போல் ஒன்றிய அன்புடன் ஒன்றி மருவி இவர் இன்புற்றிருந்தார். "நாகர்தம் பதியிலுள்ள நலத்தவர் போல நாளும், போகமார்ந்திருந்தார்" என இவரது நாகரிக்நிலை எங்கும் புகழ்ச்சியுற்று நின்றது. தன்னைப்போலவே மன்னுயிர்களும் இன்புற்று வாழும்படி அவன் அன்புசெய்துவந்தான். தன் நாட்டிலுள்ளவர்கள் யாதொரு வாட்டமும் உறாவகை ஆட்சி செலுத்தி வந்தமையால் அவனது மாட்சியை அறிஞர் பலரும் போற்றி நின்றார். ஒன்று அடியில் வருவது காண்க.

> "எருதே இளைய நுகம் உணராவே;
> சகடம் பண்டம் பெரிதுபெய் தன்றே;
> அவலிழியினும், மிசை ஏறினும்,
> அவணது அறியுநர் யார்? என உமணர்
> கீழ்மரத் தியாத்த சேம அச்சன்ன
> இசை விளங்கு கவிகை நெடியோய்! திங்கள்
> நாள்நிறை மதியத் தனையை, இருள்
> யாவணதோ நின் நிழல்வாழ் வோர்க்கே?" (புறம் 102)

இது, அவனது அரசுநிலையை வியந்து ஒளவை யுரைத்தது. அவல் = பள்ளம். மிசை = மேடு. பெரிய பண்டங்களை ஏற்றிச் செல்லும் வண்டி இடையே ஏதேனும் இடையூறுறின் அத்தடை நீக்கும் சேம அச்சைப்போல இடர் நீக்கி ஏமஞ்செய்து கலைநிறை மதிபோல் நிலவிநிற்றலால் அவன் குடைநிழலில் வாழ்வோர் துயரமாகிய இருளினை அறியார் என இதில் இசைத்திருத்தலறிக. இதனால் அவனது அறிவும் திறனும் அருளும் புகழும் அறியலாகும். இங்ஙனம் அளிசெய்து ஒளியோடு வாழ்ந்துவருங்கால் பகைவர் சிலர் மிகைசெய்து நின்றார். அவர்மேல் அமர்குறித் தெழுந்து அவன் அகன்று போனான். அப்போக்கில் இவள் புலம்பியிருந்தாள். போன அவன் தானைகளுடன் மூண்டு சமர்புரிந்தான். திங்கள் ஆறு சென்றும் தெவ்வரை வெல்லாது தியங்கி நின்றான். முடிவில் நெடிது முயன்று கடும்போராற்றி அரிதின் வென்று அவரது அரணங்களையழித்து வரகும் கொள்ளும் விரவிவிதைத்து வன்சினந் தணிந்து வாகைசூடி உவகையுடன் மீண்டான். அவ்வெற்றித் திறத்தைக்கண்டு அனைவரும் அவனை வியந்து வாழ்த்தினர்.

"மதியேர் வெண்குடை அதியர் கோமான்
கொடும்பூண் எழினி — கொடாஅ
உருகெழு மன்னர் ஆரெயில் கடந்து
நிணம்படு குருதிப் பெரும்பாட் டீரத்து
அணங்குடை மரபின் இருங்களந் தோறும்
வெள்வாய்க் கழுதை புல்லினம் பூட்டி
வெள்ளை வரகும் கொள்ளும் வித்தும்
வைகலுழவ! வாழிய பெரிது." (புறம் 392).

அன்று அவன் வென்று செய்த திறங்கள் இதன்கண்ணும் குறிக்கப்பட்டுள்ளன காண்க. இங்ஙனம் வெற்றிச் சிறப்புடன் அக் கொற்றவன் மீண்டு வருவதை ஒற்றர் சிலர் ஓடிவந்து உற்றவரிடம் உரைத்தார். நகர மாந்தர் எதிர்கொண்டழைக்க இரைந்தெழுந்தார். உவளகத்திருந்த இவளறிந்து உள்ளந் துள்ளி உவந்தெழுந்தாள். அச் சுந்தரன் வந்தவுடன் புலப்பதா? புல்லுவதா? அல்லது பொதுவாக நிற்பதா? என்று விதுப்புற்றுளைந்தாள். "கண் அன்ன கேளிர் வரின், புலப்பேன் கொல்? புல்லுவேன் கொல்லோ? கலப்பேன் கொல்?" என்பதை உலகம் காண இவள் உணர்த்திநின்றாள்.

ஊடலைமுன் காட்டி உயிரனையான் வாடுமுனம்
கூடி மகிழ்வன் குழைந்து.

காதலி நாடியிருந்தமை இதனால் கூறப்பட்டது.

1268. வேந்தன் வினைமுடிவை வேண்டி விறல்நீலன்
கூர்ந்துநின்றான் என்னே குமரேசா — சேர்ந்த
வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து
மாலை யயர்கம் விருந்து. (அ)

இ—ள்.

குமரேசா! அரசனது வினைமுடிவை நினைந்து நீலன் ஏன் தனது மனைவியை விழைந்து நின்றான்? எனின், வேந்தன் வினைகலந்து வென்றீக மனைகலந்து மாலை விருந்து அயர்கம் என்க.

சென்ற எழு கவிகளால் தலைவி தலைவனை விழைந்து நின்ற நிலைகளை புணர்த்தினர்; இனி இதுமுதல் வருகின்ற மூன்று கவிகளால் தலைவன்விழைந்து விரைந்துள்ளமையை புணர்த்துகின்றார்.

வினை என்றது போரினை. அது, வென்று என்றதனால் விளங்கி நின்றது. வென்றீக = வெற்றிபெறுவதாக. வியங்கோள் வாழ்த்துதற் பொருளில் வந்தது.

மனை என்பது மனைவியை. இல்லின் பெயர் இல்லாளுக்கு ஆனமையால் இது, ஆகுபெயர் என்க.

"பிறிதின் பெயரால் பிறிது பொருள்சொலின்
அறிவோர் அதனை ஆகுபெயர் என்ப." (அவிநயம்)

விருந்து அயர்கம் = போக நலன்களை நுகர்ந்து மகிழ்வேம். அயர்தல் = களித்தல்; உவந்து கொண்டாடல். "துயரறு கிளவியோடு அயர்ந்தீகம் விருந்தே" (பாலைக்கலி 32); "கழிபெருஞ் செல்வக் கள்ளாட்டு அயர்ந்து" (மணிமேகலை 6,102); "மகளிர் ஒண்டழை அயரும் துறைவன்" (ஐங்குறுநூறு 147); "வைவான் மருப்பிற் களிறுமணன் அயர்பு" (பரிபாடல் 2). இவற்றுள் அயர்தல் உணர்த்தி நிற்றலறிக.

மாலை = அந்திப்பொழுது. அக் காலத்தைக் குறித்தது காம நிலையமாயிருத்தலின் என்க. அடியில் வருவது காண்க.

"பகலிடம் விளக்கிய பருதியஞ் செல்வன்
அகலிடம் வறிதாக அத்தத்து
உயர்வரை யப்பால் கதிர்கரந் தொளிப்ப,
வினைக்கும் பொருட்கும் நினைத்து நீத்துறையுநர்
எல்லை கருதியது இதுவென மெல்லியற்
பணைத்தோள் மகளிர்க்குப் பயிர்வன போல
மனைப்பூங் காவின் மருங்கிற் கவினிய
பைந்தார் முல்லை வெண்போது நெகிழ,
வெறுக்கைச் செல்வம் வீசுதல் ஆற்றாது
மறுத்துக் கண்கவிழ்ந்த மன்னர்போல
வாசம் அடங்கிய வாவிப் பன்மலர்
மாசில் ஒண்ணொளி மணிக்கண் புதைப்பப்,
பெருமை பீடற நாடித் தெருமந்து
ஒக்க லுறுதுயர் ஓம்புதல் உள்ளிப்
பக்கந் தீர்ந்த பரிசிலர் உதயாச்
செறுமுகச் செல்வரிற் சேராதுபோகி
புறுபொருள் உள்ளாது உவப்ப வீசி
வெறுவதுவிடா விழுத்தகு நெஞ்சத்து
உரத்தகையாளர் சுரத்துமுற் சீறூர்
எல்லுறுபொழுதிற் செல்லல் ஓம்பி

மகிழ்பகம் அயின்றிசி ஞங்கு மல்லிகை
அவிழ்தாது ஊதி அளிதுயில் அமரப்,
புண்கண்மாலை போழத் தன்கண்
தீராக்கற்பின் தேவியை மறந்து
போராக் கழற்கால் பெருந்தகை புலம்பி " (பெருங்கதை)

மாலைப் பொழுதில் தனது காதலியை நினைந்து உதயணன் இதில் உளைந்திருத்தலறிக.சூரியன் மறைய, முல்லை மலர, தாமரை குவிய, மல்லிகைத்தாதில் வண்டு துயில்கொளவந்த மாலை என்க. உலோபி களையும், வள்ளல்களையும் குறித்து இதில் உரைத்துள்ள நிலைகளை யூன்றி யுணர்ந்துகொள்க. காதல்நலங் கனியச் செய்தலால் மாலைக் காலம் இங்ஙனம் ஆதரவுகொள நேர்ந்தது.

அரசன் போர்முனையில் பொருந்தி வெல்வானாக;யாம் மனைவி யைச் சென்று கூடி மாலையில் மகிழ்ந்துகொள்வோமாக என்பதாம்.

அரச காரியமாய்ப் போர்மேல் சென்ற தலைவன் முடிவில் ஒருநாள் பாசறையிலிருந்து தனது தலைவியை நினைந்து விழைந்து நின்றபடியிது.

அரசனது வினைமுடிந்தாலொழியத் தான் மனைபுகுந்து மகிழ முடியாது ஆதலால் "வேந்தன் வினை வென்றீக" என வேண்டி நின்றான். வினைமுடியுமுன்னரே மனைவியை நினைந்து இங்ஙனம் விரைந்து நின்றமையான் இது அவள் வயின் விதும்பல் ஆயிற்று.

போரில் மூண்டிருக்குங்கால் மனைவியின் நினைவு முனைந்து தோன்றாது; அது முடிவாகி வெற்றிகைகூடும் என்று தெரிந்த பொழுதுதான் வீட்டு நினைவு மிகுந்தெழும் ஆதலால் வென்றி நிலையை விழைந்து கூறினான்.

" கிழவி நிலையே வினையிடத்து உரையார்;
வென்றிக் காலத்து விளங்கித் தோன்றும். "
(தொல்-கற்பியல் 45)

என்பதும் ஈண்டெண்ணத்தக்கது. உரையார் என்றதனால் தலை வியை வினையின்கண்ணும் நினைந்து நிற்பர் என்பதாயிற்று. பாசறையிலமர்ந்து வினைமுடிவையும் விருந்தயர்தலையும் ஒருங்கு நினைந்து தலைவன் இங்ஙனம் உளங்களித்து நின்றான் என்க.

"பெருஞ்சின வேந்தன் அருந்தொழில் தணியின்
விருந்து நனிபெறுதலும் உரியள் மாதோ
இருண்டு தோன்று விசும்பின் உயர்நிலை யுலகத்து
அருந்ததி யனைய கற்பிற்
குரும்பை மணிப்பூட் புதல்வன் தாயே." (ஐங்குறுநூறு 442)

"உலகுடன் னிழற்றிய தொலையா வெண்குடைக்
கடல்போற் றானைக் கலிமா வழுதி
வென்றமர் உழந்த வியன்பெரும் பாசறைச்
சென்று வினை முடித்தன மாயின், இன்றே
கார்ப்பெயற்கு எதிரிய காண்டகு புறவிற்
கணங்கொள் வண்டின் அஞ்சிறைத் தொழுதி
மணங்கமழ் முல்லை மாலை யார்ப்ப
உருக்காண் வந்தன்று பொழுதே வல்விரைந்து
செல்க பாகநின் னல்வினை நெடுந்தேர்
வெண்மணல் அரிபர் மடியாய்த் தண்ணுமை
பன்மலர்ப் பொய்கைப் படிபுள் ளோப்பும்
காய்நெற் படப்பை வாணன் சிறுகுடித்
தண்டலை கமழுங் கூந்தல்
ஒண்டொடி மடந்தை தோளிணை பெறவே." (அகம் 204)

வேந்தன் வினை வென்றவுடன் மனைகலந்து மாலை விருந்தயர்வேம் எனத் தலைவன் நினைந்துள்ளமையை இவற்றுள்ளும் உணர்ந்து கொள்க.

"வந்து வினை முடித்தனன் வேந்தனும்; பகைவரும்
தம் திறை கொடுத்துத் தமர் ஆயினரே;
முரண் செறிந் திருந்த தானை இரண்டும்
ஒன்றென ஓர்த்தன; படையே நின்தேர்
முன்னியங் கூர்தி பின்னிலை யீயாது
ஊர்க பாக! ஒருவினை கழிய
தண் குடவாயி லன்னோள்
பண்புடை ஆகத்து இன்துயில் பெறவே" (அகம் 44)

வினைமுடிந்தவுடன் மனைவியை விழைந்து தனது தேரை விரைவில் செலுத்தும்படி பாகனை ஒரு தலைவன் இதில் ஏவியிருத்தல் காண்க.

வினைமேல் சென்ற தலைவன் மனைவியை நினைந்து விழைந்து நிற்பன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நீலன்பால் உணரப்படும்.

## கதை.

நீலன் என்பவன் வஞ்சி நகரி லிருந்தவன். செங்குட்டுவன் என்னும் சேரமன்னனுக்குச் சேனாதிபதியாய் இவன் சிறந்து நின்

542

றான். அஞ்சா நெஞ்சினன். மருவலர் நிலைகளை ஒற்றியறிவதிலும் வல்லவனாதலால் ஒற்றன் ஆகவும் இவன் உயர்ந்து விளங்கினான். அரசன்பால் பேரன்புடையவன். அம்மன்னன் ஒரு முறை வச்சிரம், மகதம் முதலிய நாடுகளின் மீது போர்மேற்கொண்டெழுந்தான். இவனும் தனது அருமை மனைவியாகிய தருமதை என்பவளைத் தேற்றியிருத்திவிட்டுச் சேனைகளோடு திரண்டுசென்றான். போன இடங்களில் போர்மிக மூண்டு நின்றமையால் ஈராண்டுகள் கழிந்தும் யாரும் மீண்டு வரவில்லை. அக்கட்டழகி கடுந்துயருழந்து கலங்கியிருந்தாள். முடிவில் பகையடங்கவென்று அம்மன்னன் உயர்புகழ் கொண்டான். வெற்றிக் களிப்போடு பாசறையில் படைகள் சூழ அவன் வீற்றிருக்குங்கால் இவன் வீட்டை நினைந்து வேட்கைமீக் கூர்ந்தான். அன்றிரவு முழுதும் கண் துயிலின்றிக் கருதிக் கிடந்தான். இல்லினை அடைந்தவுடன் தான் எய்தி நுகரும் இன்ப நலங்களையெல்லாம் நினைந்து நினைந்து நெஞ்சமுருகினான். "வெங்கனல் மீமிசை வைத்த வெண்ணெயின், நெஞ்சக முருக நிறுத்தலாற்றாய்" அருத்தியுற்றிருந்தான். மறுநாள் விடிந்தது; அரசன் அணிசெய்தெழுந்தான். படைகள் நடந்தன; அணிநகரடைந்தன. இவன் மனை புகுந்தான்; அளவிலின்பங்களை நுகர்ந்து உளமிக மகிழ்ந்தான். இவன் போலவே மற்ற வீரர்களும் தத்தம் காதலிகள்பால் ஒத்த அன்புடன் துய்த்து மகிழ்ந்தார். அடியில் பார்க்க.

"தண்மதி யன்ன தமனிய நெடுங்குடை
மண்ணக நிழற்செய மறவாள் ஏந்திய
நிலந்தரு திருவின் நெடியோன் தனாது
வலம்படு சிறப்பின் வஞ்சி மூதூர்
ஒண்டொடித் தடக்கையின் ஒண்மலர்ப் பலிதூஉய்
வெண்டிரி விளக்கம் ஏந்திய மகளிர்
உலக மன்னவன் வாழ்கென்று ஏத்திப்
பலர்தொழ வந்த மலரவிழ் மாலை
போந்தைக் கண்ணிப் பொலம்பூந் தெரியல்
வேந்துவினைமுடித்த வேந்துவாள் வலத்தர்
யானை வெண்கோடுழுத்திய மார்பும்,
நீள்வேல் கிழித்த நெடும்புண் ஆகமும்,
எய்கணை கிழித்த பகட்டெழில் அகலமும்,
வைவாள் கிழித்த மணிப்பூண் மார்பமும்,
மைம்மலர் உண்கண் மடந்தையர் அடங்காக்
கொம்மை வரிமுலை வெம்மை வேதுறீஇ,

அகிலுண விரித்த அம்மென் கூந்தல்
முகில் நுழை மதியத்து முரிகருஞ் சிலைக்கீழ்
மகரக் கொடியோன் மலர்க்கணை துரந்து
சிதரரி பரந்த செழுங்கடைத் தூது
மருந்தும் ஆயதீம் மாலைமன்றுயர்ந்த
இருங்கனித் துவர்வாய் இளநிலா விரிப்பக்
கருங்கயல் பிறழும் காமர் செவ்வியின்
திருந்தெயிறு அரும்பிய விருந்தின் மூரலும்
மாந்தளிர் மேனி மடவோர் தம்மால்
ஏந்து பூண் மார்பின் இளையோர்க்கு அளித்துக்
காசறைத் திலகக் கருங்கறை கிடந்த
மாசில் வாண்முகத்து வண்டொடு சுருண்ட
குழலும் கோதையும் கோலமும் காண்மார்
நிழல் கால் மண்டிலம் தம்மெதிர் நிறுத்தி
வணர்கோட்டுச் சீறியாழ் வாங்குபு தழீஇப்
புணர்புரி நரம்பிற் பொருள்படு பத்தர்க்
குரல் குரலாக வருமுறைப் பாலையின்
துத்தம் குரலாத் தொன்முறை யியற்கையின்
அந்தீங் குறிஞ்சி அகவல் மகளிரின்
மைந்தர்க்கு ஓங்கிய வருவிருந்து அயர்ந்து'' (சிலப்பதிகாரம்)

பிரிந்துசென்ற வீரர் வேந்துவினை முடிந்தவுடன் மனைகலந்து மாலையில் விருந்து அயர்ந்துள்ள நிலைகளை இதில் ஊன்றிப்புணர்ந்து கொள்க. மாலைக்காலமானது போரில் புண்பட்ட வீரர்களுடைய மார்பங்களை மடந்தையர் கொம்மை முலையால் வெம்மைதீர வேது கொண்டு ஒத்தி, விருந்தயர்ந்ததென்று கூட்டிக் காண்க. அடிகளது சொல்லும் பொருளும் இதில் அமைந்து வந்துள்ளமையறிக. இங்ஙனம் களித்த வீரரெவரினும் தலைவனான நீலன் சாலவும் திளைத் தான். போர்மேற்போன தலைவன் ''வேந்தன் வினைகலந்து வெல்க; யாம் மனைகலந்து மாலை விருந்தயர்வம்'' என வினைமுடிவில் நினைந்து விரைந்து நிற்பன் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி

இல்லிலுள இன்னமிழ்தை யின்றேபோ யெய்தியென்றன்
அல்லலெலாம் தீர்வ னற.

வினைமேல் போனவன் விழைந்துநின்றமை இதனுல் கூறப்பட்டது.

**1269.** ஏனோனா ளெண்ணி யினைவ ளெனமனையைக்
கோனனுமுன் றேர்ந்தான் குமரேசா—ஆன
ஒருநாள் எழுநாள்போல் செல்லுஞ்சேட் சென்றார்
வருநாள்வைத் தேங்கு பவர்க்கு. (௯)

இ—ள்.

**குமரேசா!** பிரிவின்கண் நாள் நெடிது நீளும் என்று மனைவியை நினைந்து அனு ஏன் மறுகி நின்றான்? எனின், சேண் சென்றார் வருநாள் வைத்து ஏங்குபவர்க்கு ஒருநாள் எழுநாள் போல் செல்லும் என்க.

இது, தலைவி நிலையை எண்ணித் தலைவன் தவிக்கின்றது.

சேண் சென்றார் = நெடுந்தூரம் போயுள்ளவர். தலைவன் வினைமேல் பிரிந்து போயிருக்கும் இடம் வெகு தூரமாயிருந்தமையால் சேட் சென்றார் என்றான். "மீட்கும் வேட்கையொடு சேட் புலம் போகி". (பெருங்கதை 3, 2); "சேண் விளங்கும் புகழ்" (புறம் 10) இவற்றுள் சேண் குறித்து நிற்றலறிக.

வைத்து = மனத்தில் குறித்துவைத்து. பிரிந்து செல்லும் தலைவன் இன்னநாளில் திரும்பிவருவல் என உறுதிகூறி அகல்வன்; அகலவே தலைவி நெஞ்சில் அந்நாள் அழுத்தமாகப் பதிந்திருக்கும் ஆதலால் " வருநாள் வைத்து " என்றார்.

ஏங்கல் = வருந்தல். எண்ணிய பொருளை எய்த விழைந்து எதிர்நோக்கி வெய்துயிர்த்து நிற்கும் இன்னல் நிலை ஏங்குதல் என்க. "ஏங்கிய நினைவுடன் இனைந்தழுதுகுத்த, கண்ணீர்கொண்டு மண்ணினை நோக்கி" (பெருங்கதை 4, 14), நோயுடை நெஞ்சத்து எறியா இனைபு ஏங்கி, யாவிரும் எங்கேள்வற் காணீரோ என்பவள்" (நெய்தற்கலி 29), "ஏங்கிய பொருமலன் இழிகணீரினன்" (இராமாயணம், மீட்சி 79); இவற்றுள் ஏங்கல் உணர்த்திநிற்றல் காண்க.

எழுநாள் என்றது பலகாலமாம் என்றபடி. "எழுபது கோடி யுறும்" (குறள் 639) "எழுபிறப்பு" (குறள் 62) "எழுமை எழு பிறப்பு" (குறள் 107) "எழுமை" (குறள் 126) "எழுமையும்"

(குறள் 398) "எழுமையுந்தான்" (குறள் 835) "எழுநாளேம்" (குறள் 1278). ஏழ் என்னும் எண்ணம் இவற்றுள் எண்ணப்பட்டிருத்தலை ஈண்டு எண்ணிக்கொள்க.

பிரிந்து நெடுந்தூரம் போயுள்ளவர் வருகின்ற நாளை எதிர் நோக்கி ஏங்குந் தலைவியர்க்கு ஒருநாள் எழுநாள்போல் நீளும் என்பதாம்.

வினைமேல் பிரிந்துபோன தலைவன் தொழில் முடிவில் மனைவியை நினைந்து மறுகிய படியிது.

தான் திரும்பி வருநாளை நினைந்துகொண்டு கணம் ஓர் ஊழியாக் கழித்துக் கிடப்பள் ஆதலால் விரைந்து போகவேண்டும் என்று விழைந்தெழுந்தவன் "வருநாள் வைத்து ஏங்குபவர்க்கு ஒருநாள் எழுநாள்போல் தோன்றும்" எனப் பிரிவிலுள்ள மகளிர் நிலையைப் பொதுவாக இங்ஙனம் எண்ணி நின்றான் என்க. என்றும் ஒருபடியாயமைந்துள்ள நாள் பிரிந்தார்க்கு நெடிதாய்த் தோன்றுதற்குக் காரணம்? அக்காலம் நெருப்பிலுற்றதுபோல் விரகதாபத்தால் நொந்து விருப்புமீதூர்ந்து துடித்திருத்தலால் என்க.

"நீயும் பாங் கல்லை காண் நெஞ்சமே! நீளிரவும்
ஓயும் பொழுதின்றி ஊழியாய் நீண்டதால்
காயும் கடுஞ்சிலை என் காகுத்தன் வாராறேல்
மாயும் வகையறியேன் வல்வினையேன் பெண்பிறந்தே. (க)
தெய்வங்காள்! என்செய்கேன்? ஓரிரவு ஏழூழியாய்
மெய்வந்து நின்று எனதாவி மெலிவிக்கும்
கைவந்த சக்கரத்து என் கண்ணனும் வாரானால்
தைவந்த தண்தென்றல் வெஞ்சுடரில் தானடுமே." (திருவாய்மொழி)

ஓர் இரவு ஏழ் ஊழியாய் நின்று ஆவி மெலிவிக்கும் என நாயகி நிலையிலமர்ந்து நம்மாழ்வார் இதில் வாய்விட்டிருத்தலறிக.

"பலபல ஊழிகளாயிடும் அன்றியோர் நாழிகையைப்
பலபல கூறிட்ட கூறாயிடும் கண்ணன் விண்ணனையாய்!
பலபல நாளன்பர் கூடிலும் நீங்கிலும் யாமெலிதும்
பலபல சூழலுடைத்து அம்ம வாழியிப் பாயிருளே" (திருவிருத்தம் 16)

"மணக்கும் பல்பகல் ஓர் நொடி; வனமுலை மருமம்
தணக்கும் ஓர் கணம் ஊழி நாளாம்." (கூர்ம புராணம்)

பிரிந்தார்க்கு நாழிகை ஓர் ஊழியாகவும், செறிந்தார்க்கு ஊழி ஓர் கணமாகவும் தோன்றும் என இவற்றுள் குறித்துள்ளமை

யறிக. இவ்வாறு பிரிவில் மறுகுவனே என்று மனைவியை எண்ணி யிரங்கியதனால் தலைவனது உள்ளக்காதல் உணரலாகும்.

“ அன்னமென் னடையும் நோக்கும் சாயலும் அணியும் ஏரும்
மின்னினுண் ணுசுப்பும் வெய்யமுலைகளு முகமுந் தோன்ற
என்மனத் தெழுதப்பட்டாயாயினும் அரிவை கேளாய்!
உன்னை யான் பிரிந்த நாள் ஓர் ஊழியே போன்ற தென்றான்.”
(சிந்தாமணி 2100)

இது, சீவகன் தன் காதலியாகிய குணமாலையை நோக்கி யுரைத்தது. அகன்று நின்றபொழுது ஒருநாள் பெரு ஊழியாய் வளர்ந்து நின்றதென ஆண்மையாளனை அவன் புகன்றுள்ளத னால் பெண்மகளுக்கு அது என்னும் என்பது எளிது புலனும்.

சேணிடைப் பிரிந்து நின்றாலும் இல்லிலுள்ளவளை எண்ணி நல்ல வீரரும் ஏங்கியுளைவர் என்பது இதனால் அறியலாகும்.

“ பாங்காளை, வேளை மருட்டு கண்ணாளைப், பகற்பொழுது
தூங்காளைக், காமசுரதஞ் செய்வாளை, என் சொல்லுக்குப் பின்
வாங்காளை, மோகம் வளரவைப்பாளை, என் மார்பைவிட்டு
நீங்காளை, எப்படியோ பிரிந்தாலும் என் நெஞ்சகமே?”

எனத் தனது துணைவியை நினைந்து பிரிவில் ஒருவன் இதில் உருகி யிருத்தலறிக. இவ்வாறு உருகி நின்றதெல்லாம் அவன் விரைவில் வருதற்கு ஏதுவாம் என்க.

“ வருநாள் கழிவதொன் றில்லையென்றேவற் புறுத்தியதும்,
ஒருநாள் கழிவதில்லாக் கடியுற்றதும் உன்னியுன்னிப்
பெருநாள் கழிவனபோலும் கணத்திற் பிழைப்பதுண்டேல்
திருநாள் கழிவதில்லாத் தொண்டை நாடன்ன தேமொழிக்கே”.
(தணிகைப் புராணம்.)

இவ் அருமைக் குறளை அடியொற்றி இது வந்துள்ளமை காண்க.

“வழிப்பட்ட கருமுகில்காள்! முற்பட்டென் வரவுரைமின், மலர்ந்தபுன்னை
கழிப்பட்ட புலவகற்றுங் கடைஞாழல் மருங்கிரண்டு கயல்போல் நீண்ட
விழிப்பட்ட புனலுந்தன் மெய்ப்பட்ட பசலையும் பொய்ப் பட்ட ஆழிச்
சுழிப்பட்ட விரற்றளிரும் துயர்ப்பட்ட மனமுமுடைத் தோகையாட்கே”
(திருப்பாதிரிப்புலியூர்க் கலம்பகம் 62.)

தான் மீண்டு வருங்கால் வழியிடை எதிர்ப்பட்ட மேகங்களை நோக்கித் தன் வரவை முந்துறப் போய் மனைவியிடம் விரைந்து சொல்லும்படி ஒரு தலைவன் இதில் வேண்டி யிருத்தலறிக.

பிரிந்துபோன தலைவன் தலைவியை விழைந்து விரைந்து வருவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அனுவின் பால் உணரப்படும்.

## கதை.

அனு என்பவன் சந்திரகுலத் தோன்றல். நகன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகன். அஞ்சாமை ஈகை ஆண்மை அறிவு அழகு முதலிய உயர்நலங்கள் யாவும் ஒருங்கமையப் பெற்றவன். இவன் பருவமெய்தி உருவவேளென மருவி நின்றபொழுது தன் தகுதிக்கேற்ற தருண மங்கையை அரச வருணங்களில் ஆராய்ந்து தெளிந்து முடிவில் அனுரதி என்பவளை மணம்புரிந்து கொண்டான். அவள் சுதன்மன் என்னும் சிற்றரசனுடைய அருமைத் திருமகள். அதிரூபவதி. அவளது இன்ப நலனை வியந்து பண்புபாராட்டி அன்புரையாடி இவன் ஆர்வமீதூர்ந்தான்.

"ஊன்றோய்த்தெடுத்து நிணம்பருகி ஒளிறுவடிவேற் றடங்கண்ணாள்
தேன்றோய்த் தெடுத்த செங்கனிவாய்த் தேறல் எளிதிற்பெற்றமையால்
மான்றேறிரவி கெடவிமைக்குஞ் சிந்தாமணியும் வளர்நிதியும்
கான்றோய் தருவும் இந்நிலத்தில் முயன்றால் கடிதிற் பெறலாமே; (க)

களவும் கொலையும் பயின்ற விழி கனியில் அமிழ்திற் கோற்றேனில்
அளவுந் தீஞ்சொற் படர்முலையாள் அழகுபூத்த முகம்போலக்
குளனில் நதியில் தடஞ்சுனையில் கண்டதுண்டோ குளிர்வண்டீர்!
தளவம்பொதிந்த குமுதமொடும் கழுநீரலர்ந்த தாமரையே?". (உ)

இன்னவண்ணம் பலவாறாக அவளது நலம்பாராட்டி எல்லியும் பகலும் இடைதெரியாமல் புல்லி மகிழ்ந்தான். அவளும்உள்ளமுருகி உழுவலன்போடு தழுவியிருந்தாள். தம் பெயரியல்பிற்கேற்ப மதனும் இரதியும்போல் ஒருவாறுவந்து உளங்களிகூர்ந்து பருகு காதலுடன் மருவி வருங்கால் மறுபுலந்தன்னில் அருவினை கருதி ஒருமுறை இவன் பிரிவுற நேர்ந்தான். அதில் பருவரல் கூர்ந்து அவள் மறுகியிருந்தாள். கருதிய கருமம் முடியாமையால் திங்கள் ஒன்பது சென்றும் இவன் திரும்பாது நின்றான். கணம் ஓர் ஊழியாக் கழித்து வழிமேல் விழிவைத்து நாளும் இவனையே நாடி அவள் நைந்து கிடந்தாள். அவளது அலமாலை நோக்கி அயலவரும் இரங்கினர். 'சின்னஞ் சிறியளான இவளைத் தன்னந்தனியே விடுத்து இன்னமும் வராமல் நம்மன்னன் நின்றுள்ளது என்ன

நீதி?' என இன்னவாறு ஊரவர்பேச அவள் ஊறுபட்டிருந்தாள். இவன் தினமும் அவளையே நினைந்து தியங்கியிருந்தான். அவளது இயலையும் செயலையும் எண்ணி எண்ணி மயல்மிகுந்து மறுகி அயல்பிரிய நேர்ந்ததே! என்று துயருழந்துயர்ந்து விதியை நொந்து ஒரு நாள் இவன் வெருண்டு புலம்பினன்.

"நறையொழுகுங் குழலாளை, அமுதொழுகு மொழியாளை, நயனவேலிற் பிறையொழுகு நுதலாளைப் பிரிந்திருக்க இப்பிறப்பிற்பெரிதும் யான்செய் குறை எதுவோ? மதன்கணைக்குமிகவருந்த எனைவிதித்த கொடியோனை மறையவனும் கலைமகளைப் பிரிந்திருந்தால் தெரியுமிந்த வருத்தந்தானே"

இங்ஙனம் வருந்தியிருந்த இவன் முடிவில் விரைந்தெழுந்தான். ஆண்மகனான நானே இவ்வாறு அல்லற்படின் பெண்மகள் என்ன பாடுபடுவாளோ? என எண்ணி இரங்கினன். நாழிகை ஓர் ஊழியா போங்கியிருக்கும் ஆதலால் இனி இங்குக் கணமும் நிற்கலாகா தென்று தேறி நேர்ந்து கடிது வந்தான். மனை புகுந்தான். இவனைக் கண்டவுடனே அவள் உளம்பூரித்து உவந்து தழுவி உயிர் தளிர்த் தாள். தான் கருதிவந்தபடியே பிரிவில் அவள் மறுகியிருந்ததை யறிந்து இவன் மனமிகவுருகினன். "சேண்சென்றார் வருநாள் வைத்து ஏங்குபவர்க்கு ஒருநாள் எழுநாள்போற் செல்லும்" என் பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான். திங்கள் சில கழிந்தபின் அவள் ஓர் மைந்தனைப் பெற்றாள். அவனுக்கு ஆனகத் துந்துமி என்று பெயர். அடியில் வருவது காண்க.

"உருமென விடிக்கும் பெருங்குரல் வேழத்தினமருப்புழுதிடுந் தழும்பும், அரிவையர் முலைக்கோட் டழுந்திடுந் தழும்பும் ஆரமும் அணிந்திடுமாபன் பொருவருதடந்தோள் அநுவின் நன்மைந்தன் புலால்கமழ்ந்தாத்த [நீரொழுகி
எரியுமிழ்ந்திலங்கும் அலங்கிலை நெடுவேல் ஆனகந்துந்துமி என்பான்".
(கூர்மபுராணம்)

இவனது வீறும் சீரும் பேறும் பிறவும் இதனால் இனிது புலனும்.

காந்தம் இரும்பைக் கவரும் எனதுள்ளம்
காந்தை கவரும் கனிந்து.

காதலன் மனைநினைந்துவந்த நிலை இதனால் கூறப்பட்டது.

1270. உள்ளி யுடையுமென வோர்ந்தே யுன்னிமுனங்
கொள்ள விரைந்தான் குமரேசா—அள்ளிப்
பெறினென்னாம் பெற்றக்கால் என்னாம் உறினென்னாம்
உள்ள முடைந்துக்கக் கால். (௰)

இ-ள்.

குமரேசா! நினைந்து நினைந்து மனைவி நெஞ்சுடைந்து போம் என்று உன்னி ஏன் கடிது விரைந்தான்? எனின், உள்ளம் உடைந்து உக்கக்கால், பெறின் என் ஆம்? பெற்றக்கால் என் ஆம்? உறின் என் ஆம்? என்க.

உக்கக்கால் = இறந்து பட்டபின். உகுதல் = கழிதல், அழிதல். "இன்னுயிர் உகுக்கிய இருந்த கோதையை" (சிந்தாமணி 2636); "உண்ணாது உதத்தெனை" (மலைபடுகடாம் 148); "உக்கு விடும் என்னுயிர்" (நெய்தற்கலி 21); "உக்கவர் ஒழிதர உயிருளோ ரெலாம்" (இராமா, நிகும்பலை 58); "ஒழுகுபு சோர்ந்தாங்கு உக்கது என்னெஞ்சம்" (பெருங்கதை 1, 33, 132). இவற்றுள் உக்கல் உணர்த்திநிற்றல் காண்க. கால் வினையெச்சவிகுதி.

பெறில் என்றது கண்ணுறக் காணப் பெறுதலை. பெற்றக்கால் என்றது கண்டு கைக் கொள்ளுதலை. உறின் என்றது ஒன்றித் தழுவுதலை. உறல் = பொருந்தல். உடைந்து என்றது நிலைகுலைந்து உலைதலை. உகுதலுக்கு முன் நிகழ்வதாகலான் முதலில் நின்றது.

மேல், பிரிந்துள்ள மகளிர்க்கு ஒருநாள் எழுநாள்போல் நீளும் என்றான்; இதில், தன்மனைவி மனமுடைந்து போவளே என்று மறுகி எழுந்தான்.

மனைவி உள்ளமுடைந்து ஒழிந்துபோயின் பின்பு நாம் போய்ப் பெறினும், பெற்றடைந்தாலும், உற்றணைந்தாலும் யாது பயன்? என்பதாம்.

தன்னை நினைந்து நினைந்து நெடுந்துயரால் மனைவி நெஞ்சு உடைந்து நிலை குலைந்து போவள்; அங்ஙனம் போகாதபடி நாம் விரைந்து புகுந்தருளவேண்டும் என்று வினைமேல்போன தலைவன் விழைந்தெழுந்த படியிது.

வினைவயின் மூண்டு நின்றபொழுதும் மனைவியை நினைந்து காதலர் மறுகிவருவர் என்பது இதனால் அறியநின்றது.

“உண்ணினல்லன உண்ணாவள்; சாந்தமும்
தண்ணந் தாரும் தணக்கிற் புனையவள்;
கண்ண கன்றிடிற் காமரு சாயல் அம்
பெண்ணணங்குயிர் பெற்றிட வல்லளோ? (க)

பாடு கிள்ளைப் பனிமொழி கேட்கிலள்;
ஆடு தோகையின் ஆடலும் காண்கிலள்;
வாடின் வாடும்; மகிழின் மகிழும், நான்
வீடின் எங்ஙனம் மெல்லியலுய்வளோ? (உ)

நெஞ்சு நொந்து கணம் என்னை நீங்குறின்
அஞ்சு வெண்பிறைத் தீச்சுடல் ஆற்றலள்;
துஞ்சின் யான் மதிச் சூடு பொறுத்திவண்
வஞ்சி எங்ஙன் உயிரொடு வாழ்வளோ?” (பாகவதம்) (ந)

இவை, போரில் உயிர்விட நேர்ந்தபொழுது தன் மனைவியை நினைந்து புரஞ்சனன் என்னும் அரசன் புலம்பியன என்க. சாதல் நிலையிலும் காதலியின் நினைவு மீதூர்ந்து காதலன் மறுகி அயர்வன் என்பது இதனால் இனிதுபுலனும்.

வினைமேலகன்ற தலைவன் மனைவி நிலையை நினைந்து விரைவில் வருவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கிள்ளி பால் உணரப்படும்.

## கதை.

கிள்ளி என்பவன் உறையூரிலிருந்து அரசுபுரிந்த சோழ மன்னன். சிறந்தபோர்வீரன். பெருங்கொடையாளன். நலங்கிள்ளி சேட்சென்னி என இவன் விளங்கி நின்றான். இவனுடைய அருமை மனைவி பெயர் மானவி. எழில் நலங்களில் அவள் மிகவும் சிறந்தவள். “வானவர் மகளிரும் வடிவழ கமைதியில், மானவி யோடெதிர் மானுவரோ?” என மாநிலம் புகழ அவள் மருவியிருந் தாள். அப்பேரழகியுடனமர்ந்து பெரும் போகங்களை நுகர்ந்து அறம் பலபுரிந்து இவன் ஆட்சிசெய்து வந்தான். வருங்கால் குறும் பர் சிலர் அரும்பி ஆங்காங்கு இடர்செய்து நின்றார். அத் தெவ் வரை யடக்கி வரச் சேனைகளுடன் இவன் செல்ல நேர்ந்தது. இவனைப் பிரிந்திருக்க முடியாமல் மனைவி வருந்தி யயர்ந்தாள்.

விரைந்து வருவன் என உவந்து தழுவி உறுதி கூறிவிட்டு இவன் உடன்று சென்ருன். அவள் தனியே கவன்று தளர்ந்துகிடந்தாள். துணைபிரிந்த அன்றில்போல் துடித்தலமந்து படித்தலமே பாயலாய்ப் பரிந்துகிடந்த அவளைத் தோழியர் தேற்றி அனைவரையும் போற்றி ஆறுதல் கூறியும் ஆற்ருதழுதாள். கண்ணுறக்க மின்றிக் காதலனையே நினைந்து காதல்நிலையிலுள்ள தனது நோதல்நிலையை யாரும் அறிந்திலர்என அவலமீதூர்ந்து தெய்வம்பராவித் தேம்பிநொந்தாள்.

"இங்கணையும் ஒருகணைவிட்டு இருகணையும் துயிலவொட்டாது இரவெல்லாம் வந்து ஐங்கணைவேள் பொருவதெல்லாம் அறுகணை வேணியன் அறிவான்; யாரை நோவேனே?"

என இவ்வாறு பேரன்போடு புலம்பி அவள் பேதுற்றிருப்பப் பிரிந்துபோன மன்னன் பொருந்தலரைவென்று பெரும் புகழ் பெற்றுப்பாசறையில் பொருந்தியிருந்தான். தீயோரைத் தேய்த்து நல்லோரைக்காத்து மீட்டும்பகை எழாவண்ணம் நாட்டு நலங்கருதிச் சிலகாலம் அங்கோர் தலைநகரில் இவன் தங்கி நின்ருன். இவனது வெற்றித் திறம் எங்கும் வியந்து பேச நின்றது. ஒன்று அடியில் வருவது காண்க.

"கொண்டைக் கூழைத் தண்டழைக் கடைசியர்
சிறுமாண் நெய்தல் ஆம்பலொடு கட்கும்
மலங்குமிளிர் செறுவின் தளம்புதடிந்து இட்ட
பழன வாளைப் பரூஉக்கட் டுணியல்
புதுநெல் வெண்சோற்றுக் கண்ணுறை யாக
விலாப்புடை மருங்கு விசிப்ப மாந்தி
நீடுகதிர்க் கழனிச் சூடுதடு மாறும்
வன்கை வினைஞர் புன்தலைச் சிறாஅர்
தெங்கு படு வியன் பழம் முனையின், தந்தையர்
குறைக்கண் நெடும்போர் ஏறி விசைத் தெழுந்து
செழுங்கோட் பெண்ணைப் பழந்தொட முயலும்
வைகல் யாணர் நன்னாட்டுப் பொருநன்
எஃகு விளங்கு தடக்கை இயல்தேர்ச் சென்னி
சிலைத்தார் அகலம் மலைக்குநர் உளரெனின்,
தாமறிகுவர் தமக் குறுதி; யாம் அவன்
எழுவுறழ் திணிதோள் வழுவின்று மலைந்தோர்

வாழக் கண்டன்றும் இலமே; தாழாது
திருந்தடி பொருந்த வல்லோர்
வருந்தக் காண்டல் அதனினும் இலமே." (புறம் 61)

இது, இம்மன்னனைக் குறித்து மதுரைக் குமரனார் என்னும் புலவர் பாடியது. வயல்களில் நெய்தலும் ஆம்பலுமே களைகளாக வுள்ளன; தழைபுடை உடுத்தகடைசியர் அவற்றைக் களைந்தெறி வர்; அங்கு மலங்கு மீன்கள்உழலும்; சிறுவர்கள் வாளைமீன்களைப் பிடித்துச் சமைத்து வெண்சோற்றோடு விலாப் புடைக்கத் தின்று இளநீர்களை வேண்டாமென்று வெறுத்து, வைக்கோற்போரின் மீதேறிப் பனம்பழங்களைப் பறிக்க முயல்வர்; நாளும் புது வரு வாயையுடைய அத்தகைய வளமிக்க நல்ல நாட்டுக்குத் தலைவனாய் வேலொடு விளங்கும் சென்னியுடன் எதிர்த்தவர் அதனால் நேரும் துயரங்களை அவரே அறிவர்; அவனைப்பகைத்தவர் யாண்டும் வாழ யாம் கண்டிலம்; அவன் சரண்புகுந்தவரே என்றும் இன்புற்று வாழக் காண்கின்றேம்; என இதில் அவர் உரைத்திருத்தல் காண்க. இதனால் இவனது நிலவளம், நீர்வளம், நிதிவளம், குடிவளம், அடங் கலரை அடுதல், அடைந்தாரை ஆதரித்தல் முதலிய உயர்நலங்க ளெல்லாம் இனிது புலனும். இங்ஙனம் வினைமுடித்து மேன்மை யோடு விளங்கியிருந்த இவன் முடிவில் மனைவியை நினைந்தான்; சிறிது பிரியினும் பெரிதும் கவல்வளே! இந்நெடும் பிரிவை எவ் வாறு ஆற்றுவள்! நம்மை எண்ணி யெண்ணி அவள் மனமுடைந்து போயின் பின்னர் நம் வாழ்க்கை என்னும்? அன்றோ இன்னே போகவேண்டும் என விழைந்தெழுந்தான்; விரைந்து தேர்விடும் படி பாகனை நயந்து தூண்டிநகரடைந்து மனைபுகுந்தான். நிலைகுலைந்து கிடந்த அவள் இவனைக் கண்டவுடனே களித்தெழுந்தாள். இவன் ஆரத்தழுவி அருள்புரிந்தான். அவள் ஆவிகுளிர்ந்து இன்புடன் மேவியிருந்தாள். நாயகி உள்ளமுடைந்துபோவள் என உள்ளிரங் கிப் பிரிந்த நாயகன் விரைந்து வருவன் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

உற்ற பசியால் உயிருலைந்த பின்னுணவு
பெற்றதனால் என்ன பயன்.

தலைவன் உளமுருகி வந்தமை இதனால் கூறப்பட்டது.

## இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

தலைவன் வரவையே இடையறாது எதிர்பார்த்திருந்ததனால் தலைவியின் கண்கள் ஒளிகுறைந்தன; நாள் எண்ணி விரல்கள் தேய்ந்தன. அவரை நினையாதொழியின் நீமொழில் சிதையும். நினைந்திருந்தலினாலேதான் உயிர் நிலைத்துள்ளது. நினைந்த நெஞ்சம் நிமிர்ந்தேறுகின்றது. அவரைப் பார்த்த பின்புதான் பசப்பு நீங்கும். இன்பம் ஓங்கும். களிப்பு வளரும். வினைமுடிந்தவுடன் தலைவன் மனைவரவிரைவன். பிரிவில் ஒருநாள் எழுநாள் போலாம் என உள மிக உளைவன். பருவம் தவறாமல் பரிந்துவந்தடைவன் என்பதாம்.

௱உ௰எ-வது அவர்வயின் விதும்பல் முற்றிற்று.

## 128-ம் அதிகாரம் குறிப்பறிவுறுத்தல்.

அஃதாவது தலைவி, தலைவன், தோழி என்னும் இவர் தம் குறிப்பினை ஒருவர்க்கு ஒருவர் அறிவுறுத்தல். உறுத்தல் = உள்ளத்து அழுந்த உணர்த்தல். இது, பிரிந்துநின்ற தலைவன் விரைந்து வந்தடைந்தபின் விழைவு மிகுதியால் நிகழ்வதாகலின் அவர் வயின் விதும்பலின் பின் வைக்கப் பட்டது. கக௦-ம் அதிகாரத்தில் குறித்த குறிப்பறிதலுக்கும், இதற்கும் வேறுபாடு என்னை? எனின், அது களவு நிலையில் தலைமகள் நிலையைத் தலைமகன் தனிநின்றறிதல்; இது, கற்புநிலையில் கலந்துநின்று கருத்தை உணர்தல் என்க.

1271. காமர் கனகங் கரந்தும் அவள்கண்ணால்
கோமகனேன் கண்டான் குமரேசா—காமம்
கரப்பினுங் கையிகந் தொல்லாநின் னுண்கண்
உரைக்க லுறுவதொன் றுண்டு. (க)

இ—ள்.

குமரேசா! தன் காமக் குறிப்பைக் கனகம் மறைத்தும் அவள் கண்ணால் என் கணவன் அறிந்து கொண்டான்? எனின், கரப்பினும் கை இகந்து ஒல்லா நின் உண்கண் உரைக்கல் உறுவது ஒன்று உண்டு என்க.

இ-ள், தலைவியின் குறிப்பையறிந்து தலைவன் உரைத்தது.
கரத்தல் = மறைத்தல். இகத்தல் = கடத்தல். ஒல்லா = நில்லாமல்.

கை இகந்து ஒல்லா என்றது கைகடந்து மீறி என்றவாறு. அவள் அடக்கிநின்ற திறம் இதனால் அறிய நின்றது.

ஒன்று உண்டு என்றது ஒரு காரியம் உள்ளது என்றவாறு. அஃதாவது தான் பிரிந்துபோவன் என்று அவள் நினைந்து கொண்டது.

நீ சொல்லாது மறைத்தாலும் நில்லாதெழுந்து நின் அழகிய கண்கள் சொல்லலுறுவதான காரியம் ஒன்று உள்ளது அதனை யான் உணர்ந்துகொண்டேன் என்பதாம்.

வினைமேல் அகன்றுசென்ற தலைவன் திரும்பிவந்து மனை கலந்து வாழுங்கால் மறுபடியும் பிரிந்துபோவனோ? என்று ஒரு நாள் மனைவி கலங்கி நின்றாள். அந்நிலையினைக் குறிப்பானறிந்து அவளிடம் அவன் உரைத்தபடியிது.

தன் கலக்கத்தை நாணால் மறைத்தும் அவளுடைய கண் பார்வையால் அதனை இவன் காண நேர்ந்ததாதலால் "கரப்பினும் நின்கண் உரைக்கலுறுவது" என்றான். உரைக்கும் இயல்பில்லாத கண் உரைக்கும் என்றது உபசாரம். தான் உணர்ந்து கோடற்கு உதவியாய் நின்றமையால் உயர்நிலையில் அலங்காரந் தோன்ற இங் ஙனம் உரைத்தான் என்க. "பகைமையும் கேண்மையும் கண் உரைக்கும்"(குறள் 709); "ஒருவன் முகன் உரைக்கும் உண்ணின்ற வேட்கை" (நான்மணிக்கடிகை 70). இவற்றுள் கண்ணும் முகமும் உரைக்கும் என வந்துள்ளமை காண்க. உரைத்தது என்னாது உரைக்கலுறுவது என்றது அத்தொழில் நிகழ்ச்சியின் தொடர்ச்சி கருதி.

நெடுநாளாகப் பிரிந்து அடைந்தமையால் காதல் மிகுந்து கனிந்து தழுவி முயங்கி யெழுந்த பின் நாளும் நலம் பாராட்டி முகந்தடவிக் குழல்முடித்து முதுகு தைவந்து கண் மை நீவித் தொய்யிலெழுதி இனியன பல செய்தான்; செய்யவே இவ்வாறு அளவுமீறிச் செய்கின்றமையால் மீண்டும் பிரிந்துபோவாரோ? என்று அவள் நினைந்து கவன்றாள்; அக்கவலையைக் குறிப்பாலறிந்து

கொண்ட இவன் இனி யான் மன்றும் பிரியேன்; யாதும் ஐயுறேல்; என அளிசெய்தருள்வன் என்க. பிரிந்துவிடுவரோ என்று உருக்குமணி எண்ணி யயர்ந்தபொழுது அதனைக் குறிப்பாலறிந்த கண்ணன் அப் பெண்மணியைத் தேற்றியிருக்கும் நிலையை அடியில் பார்க்க.

"ஐதேய்ந் தல்குற் கலைதிருத்தி, அம்மென் முலைதாழ் வடஞ் சேர்த்தி,
மைதாழ் கூந்தல் கமழ முடித்து, அயில்வேலுண்கண் மையெழுதி,
வெய்தா முன்போற் கை செய்தேன்; ஐயுற்றுள்ளம் மெலிவுறேல்;
பைதாழல்குல் வேய்மென்றோட் பவளத்துவர்வாய்ப் பசுங்கொடியே! (க)
பரிவுற்றுரைப்ப நுதல் பசலை பூத்த தென்கொல்? பணிமொழியாய்!
பிரியேனின்னைப், பிரியிலுயிர் உய்யேன்; என்றேப் பெய்வளையைப்
புரவித்தடந்தேர் மிசையேற்றிக் கண்ணன் போரேற்றிடும் அரசர்
வெருவவரி வெஞ்சிலை குழைதக்குந்தம்முனோடும் விரைந்தகன்றான்." (உ)

(கூர்ம புராணம்)

கண்ணன் புனைந்து புகழ்ந்ததும், உருக்குமணி நினைந்து கவன்றதும், அக்கருத்தைக் குறிப்பாலறிந்து ஆற்றியருளி அவளை அவன் அணைந்துகொண்டதும் இதில் ஊன்றி யுணர்ந்துகொள்க.

நாயகி நெஞ்சுள் எண்ணியதை அவள் கண்ணால் நாயகன் உணர்ந்துகொள்வன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை கனகம்பால் உணரப்படும்.

## கதை.

கனகம் என்பவள் மனுமான் என்னும் மண்டலீகனுடைய அருமைத் திருமகள். ஒளிவளர் உருவினள். உயர்நலமுடையவள். தன் பெயர் நிலைக்கேற்பப் பொன்னெளி மேனியளாய்ப் பொருந்திக் கன்னிமை காத்துக் கனிந்து நின்றாள். பருவங்கடந்து உருவஞ் சிறந்து எழில்மிகுந்திருந்த இவள்மேல் ஆசைமீக்கூர்ந்து அரசிளங் குமரர்கள் பலர் ஊசலாடி நின்றார்.

"வனசரோருகம் நீங்கியும் மன்னர்தம்
மனசரோருகம் நீங்கலள் மன்னெழிற்
கனகம் என்னும் இக்கன்னியைக் கைக்கொள
அனக மாதவம் செய்தவன் யாவனோ?"

என இவளது நிலைமையை வியந்து மணவினையை நயந்து நகரமாந்தர் யாவரும் ஆவலோடிருந்தனர். காவலனும் இவள் தகுதிக்கு ஒத்த வரனைப் பகுதிதோறும் மிகுதியும் ஆராய்ந்து வந்தான்.

"காதலால் அறியவுரு காமம்; காதலே
ஏதிலார் உணர்வினுல் எண்ணலாவதன்று;
ஆதலால், மாதராள் திறத்தின் ஆணை நூல்
ஓதினுர் உரைவழி ஒட்டற் பாலதே."

என்று அறிஞர்களுடன் ஒட்டி உசாவினுன். இவ்வாறு உசாவி வருங்கால் சிங்ககேது என்னும் அரசிளங்குமரன் ஒரு நாள் இம் மங்கையைக் கண்டான். அவன் சிறந்த மதிமான். கனகபல்லவம் என்னும் நகரிலிருந்து அரசுபுரிகின்ற மனுதரன் என்னு மன்னவனுடைய அருமைத் திருமகன். அரும்பெறலழகும் பெரும்போர் வீரமும் ஒருங்கமையப்பெற்றவன்.

"கற்றவர் புகழுஞ் சீர்த்திக் கனகபல்லவத்தை ஆளும்
கொற்றவன் சிறுவன் கோலக் குங்குமக் குவவுத் தோளான்;
செற்றவர்ச் செருக்குஞ் செய்கைச் செருவல்லான் சிங்ககேது
மற்றவன் பிறந்தபின்றை மண்மகள் மகிழ்ந்த தென்றான்."
(சூளாமணி)

இங்ஙனம் இசைமிகுந்து நின்ற அவன் இவளைக் கண்டவுடனே காதல்மீக்கொண்டான். இவளும் அவன்மேல் மையலாகி மறுகி நின்றாள். அதன்பின் உலகமறிய மணந்து இவளை உவந்துகொண்டு போய் உயர்ந்தபோகங்களை நுகர்ந்து அவன் உளங்களித்திருந்தான்.

"குமிழ்மிசை மறிந்து மீண்டு குழைபொருதலைக்குங்கண்ணாள்
அமிழ்துறழ் பவளவாயின் அருந்தியிற் குறித்த தூய
கமழ்திரை அமுத மாந்தப் பெற்றதால் புலவு காலும்
இமிழ்திரை அமுத முண்ட புலவரோ என்னை நேர்வார்?"

என இன்னவாறு இவளது இன்பநலனை வியந்து அன்புபாராட்டி நாளும் அவன் ஆர்வமுற்று வந்தான். ஒருமுறை சிந்துநாட்டில் நிகழ்ந்த செருமுனைக்கு அவன் செல்ல நேர்ந்தது. அப்பிரிவில் இவள் அல்லலுற்றிருந்தாள். அவன் ஒல்லையில் மீண்டு இவளை உவந்து புல்லி நயந்து பேணி நின்றான். நின்றும் மீளவும் பிரிந்து போம்கொல்? என்று மீளவும் நினைந்து நாளும் உளைந்து நைந்து கவன்றாள். தன் கவலையை வெளிப்படுத்தாதிருந்தும் இவள் கண் மறுகி நிற்றலை அவன் குறிப்பாலறிந்தான்; யான் இனி யாண்டும் பிரியேன் என இவளை ஆரத்தழுவி அவ் ஆண்டகை ஆற்றியருளினான். "கரப்பினும் நின் உண்கண் உரைப்பதொன்றுண்டு" என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

உள்ளியதை யுன்கண்ணுல் ஓர்ந்தேன் இனியுன்னைத்
தள்ளி யகலேன் தனித்து.

கண்ணின் குறிப்பு இதனுல் கூறப்பட்டது.

1272. நின்ற திரிமதியின் நீர்மைபெரி தென்றரிமன்
குன்றுதே னின்றான் குமரேசா—நன்றாகக்
கண்ணிறைந்த காரிகைக் காம்பேர்தோட் பேதைக்குப்
பெண்ணிறைந்த நீர்மை பெரிது. (உ)

இ—ள்.

குமரேசா! பிரிவை நினைந்து திரிமதி மறுகியபொழுது அவள் பெரும்பேதை என நாயகன் ஏன் நகையாடினான்? எனின், கண் நிறைந்த காரிகைக் காம்பு ஏர் தோள் பேதைக்குப் பெண் நிறைந்த நீர்மை பெரிது என்க.

காரிகை = அழகு. காம்பு = மூங்கில். நீர்மை = தன்மை.

கண்ணிறைந்த காரிகை என்றது காதலியின் பேரழகை வியந்து. அவளது எழில்வடிவம் இவனது கண்ணையும் மனத்தை யும் கவர்ந்துள்ளமை இதனால் இனிதுபுலனும். "கண்ணுள் இருந் தாய்; எண்ணுள் நிறைந்தாய்;" எனத் தன் காதலியை நினைந்து ஒருவன் கரைந்திருத்தல் காண்க.

காம்பு ஏர் தோள் = மூங்கிலை யொத்த தோள்களையுடைய. ஏர் இதில் உவம உருபாய் நின்றது. "கயலேர் கண்பனி மல்க;" "முகையே ரிலங்கெயிற் றின்னகை மாதர்" (நெய்தற்கலி 10; 22.) இவற்றுள் ஏர் உருபாய் வந்துள்ளமை காண்க.

காதலிக்கு என்னாது பேதைக்கு என்றது அவளது வெள்ளன் மையைச் சுட்டி. பெண் நிறைந்த நீர்மை என்றது மடமையை. நாணம் முதலிய பெண்மைக்குணங்களுள் மடமையும் ஒன்று ஆத லால் அதனையே இங்குக் குறிக்கொண்டு குறித்தான். இங்ஙனம் குறித்தது, தான் ஒன்றும் கருதாதிருந்தும் தன்னைப் பிரிந்து போவதாக நினைந்து கொண்டு வீணாக அவள் கவன்று நிற்கும் நிலை யினைநோக்கி. தான் மடமையால் நினைந்ததை நாணால் மறைத்து, நிறையால் பொறுத்து, அச்சத்தால் நடுங்கி, பயிர்ப்பால் ஒடுங்கி, இங்ஙனம் படாத பாடுகள் படுகின்றாளே இவள் பெண்மைப்பா டிருந்தபடி யென்னே! என்று வியந்துகொண்டான் ஆதலால் "நிறைந்த நீர்மை பெரிது" எனக் குறிப்போடு இகழ்ந்து நின்றான்.

மேல், தலைவியின் கருத்தை அவள் கண்ணால் அறிந்தேன் என்றான்; இதில், அவள் அங்ஙனம் கருதியது மடமை என்கின்றான்.

கண்ணிறைந்த அழகும் மூங்கிலையொத்த தோள்களுமுடைய இப் பேதைக்குப் பெண்மை நிறைந்த மடமை பெரிது என்பதாம்.

தலையளிசெய்து கலந்திருக்கும் போதே பிரிந்து போவரோ என்று அலந்தலைக்கொண்டு அலமந்து நின்ற தலைவியை இகழ்ந்து தலைவன் தோழியிடம் மொழிந்தபடி யிது.

இல்லாத பிரிவை என் தலைவி மேலேற்றி இவ்வாறு மல்லாடுகின்றாளே இது என்ன மடமை என்பான் "பேதைக்கு நீர்மை பெரிது" என்று விநயமாக இங்ஙனம் சொல்லாடி நின்றான்.

"தத்தையை அனைய சொல்லாள் ஒருத்திதன் நிழற்றன்னை
அத்தடந் தன்னில் நோக்கி அளியனை அறியாது ஈண்டோர்
மைத்தடங் கண்ணினாளோ மருவினை என்று சேயன்
கைத்தலந் தன்னை விட்டு வெகுண்டனள் கரையிற் போனாள். (க)

உட்டெளி வில்லா நங்கை ஒலிபுனல் தடத்து ளாடும்
கட்டழ குளதோர் காளை கவிரிதழ் வெருட்ப நோக்கி
கிட்டியான் நிற்க உன்றன் கேழ்கிளர் அதரத்து எச்சில்
இட்டனள்யார் இங்கு? என்று வெகுளிகொண் டகலிப்போனாள்." (உ)

(கந்தபுராணம்.)

பொய்கையில் நீராடும்பொழுது காதலிகள் தம் காதலரோடு மாறுகிப் போராடிய படியிவை. அவர்தம் காதலியல்பையும் பேதை நீர்மையையும் இவற்றுள் ஊன்றிநோக்கி யுணர்ந்துகொள்க.

நாயகன் அயலகல்வதை யஞ்சி ஆசைமிகுதியால் காதலி அலமருவள் என்பதும், அதனைக் குறிப்பாலறிந்து தோழியிடம் கூறி அவளை அவன் தேற்றிநிற்பன் என்பதும் இதன் கருத்தாம் என்க.

கணவன் கலந்திருப்பினும் பிரிவை நினைந்து மனைவி மறுகுவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தாரிமதி பால் உணரப்படும்.

கதை.

தாரிமதி என்பவள் ஆனகத்துந்துமி என்னும் அரசனுடைய அருமைத் திருமகள். வடிவழகில் இவள் படிபுகழ நின்றாள். மன்னனுக்கு இவள் இளைய மகளாதலால் மிகவும் வளமையோடு

பாராட்டி வளர்த்துவந்தான். ஆகுகன், இந்திரன் என இருவர் இவளுக்கு முன் பிறந்திருந்தார். அவ் அரசகுமாரரிருவரும் தம் தங்கையாகிய இம் மங்கையை அளவிலன்புடன் ஆதரித்துவந்தார். விழுமிய நிலையில் வளர்ந்து பருவமடைந்து எழில்நலங் கனிந்து கன்னிமாடத்தில் தனியமர்ந்திருந்தபொழுது அரசிளங்குமரர் பலர் இவளை மணக்குறிகொள்ள விரைந்து மறுகி யலைந்தார். அருகி லெவரும் அணுகாவண்ணம் இவள் அமைதிசெய்து நின்றாள். திருமகள் என உருவெழில் திகழ்ந்துள்ள இவளைப் பெறுவதற்குரிய மருமகனை நாடி மன்னனும் மனங்கவன்று நின்றான்.

"இலைத்தொழில் மதாணி பூண்மைக்குநீள் மார்பன் ஆனகந்துந்துபி மக்கள், மலைத்தடந் திணிந்தோட்டியல்கொள் ஆகுகனும் மானவேல் தடக்கை இந்திரனும், அலைத்தெறி தரங்கக் கருங்கட லெனநீண்டு அரி பரந் தொழுகும் வாட்டடங்கட், சிலைக்கரும் புருவத் திரிமதி என்னும் திங்களிக் குதலையாந் திருவும்." (கூர்மபுராணம்)

இவளது உருவ அமைதியும், மொழியின் இயல்பும், பருவ நிறைவும் இதன்கண்ணுறும் குறிக்கப்பட்டுள்ளமை அறிக. இவ்வாறு பெருமித நிலையில் மருவியிருந்த இவள் ஒருநாள் பொழிலகம் புகுந்து இனிதமர்ந்து நின்றாள். அவ்வமயம் ஊழ்கூட்ட வந்து வேள் என அங்கோர் அரசகுமாரன் அணுகி வந்தான். அவன் இயக்கர் மரபினன். அரிமன் என்னும் பெயரினன். அரும்பெற லுருவினன். இவளைக் கண்டவுடனே வியந்து நோக்கி நயந்து நின்றான். இவளும் அவனைக் கனிந்து நோக்கிக் காமமீதூர்ந்து கலங்கி நின்றாள். இவளது நிலைமையை யறிந்து பெரிதுவந்து மறுகி யுளைந்து நெடிது புகழ்ந்து அவன் நெஞ்சு முருகினான்.

"பொன்னங் குடுமி நெடுவரையோ? பொறிவண் டிமிராத் தாமரையோ?
பின்னற் றிரைதாழ் பாற்கடலோ? அங்கண் விசும்போ? பேருலகோ?
மின்னுக் கதிர்மா மணிச்சுடிகை நாகருறையும் வியன்பதியோ?
தன்னந் தனியிங் கெனையாள நின்று றுறையும் தனியிடமே? (க)

வண்டுஞ் சுரும்பும் நறுந்தேனு நிமிரும் வழங்கு கருங்கூந்தற்
பண்டோய் குதலைச் செங்கனிவாய்ப் பாவை தடங்கண் அருள்நோக்கம்
தண்டா தோங்கும் காமநோய் தீர்க்கு மருந்தாய்த் தளராமல்
கொண்டேன் ஆவி வேனில்வேள் கொள்ளாது எளிதி னிறுத்தியதே." (உ)

என இவ்வாறு அருந்தி யுரையாடி அலமந்து நின்ற அவன் அருகணைந்து இவளை மருவி மகிழ்ந்தான். பின்பு உலகறிய மணந்து

உயர் போகங்களை நுகர்ந்தான். இரதியும் மதனும்போல் சுரத நலங்களைத் துய்த்து இவர் பரவசரா யிருந்தார். "புல்லுதல், நகைத்திடல், புணர்நகக்குறி, பல்லுறல், மத்தனம், பயிலும் நாடனம், ஒல்லொலி காணல்மேல் நிலைகையாதிய எல்லையில் புணர் நிலைக்கு இயைந்தன" என இவ்வகை அமைந்தன யாவும் இணைந்து புரிந்து உவந்துவந்தார். ஒருங்கால் அவன் இடையே பிரிந்து நெடிது கழிந்து பின் கடிதின் வந்து பெரும் பசியாளன்போல அருங் காதலுடன் ஒருங் கலந்திருந்தான். இருந்தும் இன்னும் அவன் பிரிந்து போவனோ? என இவள் இன்னலுழந்தாள். வெளியே சிறிது உலாவப் போயினும் "எதுவரை போவது?" என்று விதிர்வொடு நோக்கி வெருண்டு வினவினாள். காதல் மிகுதியால் பேதுறுகின்ற இவளது பேதைமையை வியந்து இனி யாதும் அகலேன்; எனத் தோழிமூலம் ஓதி இவளை ஆற்றியருளினான். "பேதைக்குப் பெண்ணிறைந்த நீர்மை பெரிது" என்பதை இவளிடம் கண்டு உலகம் காண அவன் உணர்த்தி நின்றான்.

ஏதும் பிரியா திருந்தாலும் ஏங்கிநிற்பள்
பேதையிவள் பெண்மை பெரிது.

காதலி பேதையள் என்பது இதனால் கூறப்பட்டது.

---

**1273.** ஏனோ கமலவதி இன்னணியில் உண்டென்று
கோனேகை கொண்டான் குமரேசா—ஆன
மணியிற் றிகழ்தரு நூல்போல் மடந்தை
அணியிற் றிகழ்வதொன் றுண்டு. (௩)

இ—ள்.

குமரேசா! கமலவதியின் எழிலில் ஓர் இதமுளதாகக் கருதிச் சுபதேவன் ஏன் உளமகிழ்ந்தான்? எனின், மணியில் திகழ்தரு நூல்போல் மடந்தை அணியில் திகழ்வது ஒன்று உண்டு என்க.

மணி = பளிங்குமணி. அணி = அழகு. அஃதாவது முகத்தில் முனைந்து தோன்றும் வனப்பு. அக நிலையை அறிந்து கோடற்கு அணி இங்குக் கருவியாக வந்துள்ளமையால் அதற்கு முகச்சாயை என்று பொருள்கொள்ள நேர்ந்தது.

"ஒண்சுடர் ஞாயிற்று விளக்கத்தான் ஒளிசாம்பும்
நண்பகல் மதியம்போல் நலஞ்சாய்ந்த அணியாட்கு" (கலி 121)

இதில் அணி உவமைக்கு வந்திருத்தல் காண்க.

முன்னர்ப் பேதை என்றான்; இங்கு மடந்தை என்றான் அவளது நீர்மையும், நிலைமையும் கருதி.

ஒன்றுண்டு என்றது ஒரு குறிப்பு என்றவாறு. அஃதாவது முன்னம்போல இன்னமும் காதலன் பிரிய நேருமோ? என்னும் பீழை.

மேல், காதலி கருத்து கண்ணில் தெரிந்ததென்றான்; இதில், முகத்தில் விளங்கியதென்கின்றான்.

பளிங்குமணியுள் தொடர்ந்து விளங்கும் நூல்போல இம்மடந்தையின் அழகிய முகத்தில் அமர்ந்து ஒளிர்வதொரு காரியம் உளது என்பதாம்.

என்றும் பிரியேன் என்றவர் இடையே பிரிந்துசென்று நெடுநாள் நின்று இதுபொழுது அடைந்து முதிர் காதலோடு முயங்கிவருகின்றார்; இனியும் அவ்வாறு அகன்று செல்வர்கொல்? என்று அயிர்த்து அலமந்தும் அதனை வெளிக்குக் காட்டாமல் அடக்கமாக அமைந்துள்ள தலைவியின் குறிப்பை அவள் மேனி நிலையாலும், முகத்தாலும் அறிந்து தலைவன் மொழிந்தபடி யிது.

பளிங்குமணிகளை ஒழுங்குபடக் கோத்துள்ள நூலிழை யானது அவற்றை ஊடுருவி உள்ளே கிடந்தாலும் புறத்தே எவர்க்கும் எளிது புலனும்; அதுபோல் இவள் அகத்திலுள்ளது முகத்தில் தெரிகின்றதென்பான் "மணியில் திகழ்தரும் நூல்போல் மடந்தை அணியில் திகழ்வது" என்றான். திகழ்தல் = விளங்கித் தோன்றல். நூலை ஒப்புக்காட்டியது பல மணிகளை அது பற்றித் தோன்றல்போல் வெள்ளையான பல எண்ணங்களையும் எண்ணி யுளைந்து இறைந்திருக்கும் இவளது இயல்பு நோக்கி.

"மென்னூல் எழினியின் உள்ளே கதிர்த்த விளக்கொளிபோல்
நன்னூல் கிளர்ந்த அணியுட் கிடந்தோர் நலந்திகழும்
பன்னூறு கோடிநற் பாங்கியர்சூழப் பைம் பூம் பொழில்வாய்ப்
பொன்னூ புரங்கள் புலம்பப் புகுநம் புனக்கிளிக்கே." (தணிகை,களவு.480)

திரையுள் ஒளிரும் விளக்கொளிபோல் நம் கிளிக்கு அணியுட் கிடந்து ஓர் நலந்தெளிரும் ஒன்று கூட்டி நோக்குக. எழினி = திரைச் சேலை. இது, இதனை அடியொற்றி வந்துள்ளமை காண்க.

தன் கருத்தின் கலக்கத்தைப் புறத்து வெளிப்படுத்தாமல் அருத்தியுடையளாய் நடித்து வந்தாலும் அவளது வருத்த நிலையைக் குறிப்பா லறிந்துகொண்டா னாதலால் ஒன்று உண்டு என்றான். இவ்வாறு உண்மையுணர்ந்தவன் தன் பிரிவின்மையை உணர்த்திப் பரிவகற்றி இவளை மருவிநிற்பன் என்க.

> "தேர்செல வழுங்கத் திருவிற் கோலி
> ஆர்கலி எழிலி சோர்தொடங் கின்றே;
> வேந்துவிடு விழுத் தொழில் ஒழிய
> யான்தொடங் கினனால் நிற்புறந் தரவே." (ஐங்குறு நூறு 428)

இனி எங்கும் பிரிந்து போகேன்; நின்னையே பேணி இங்கு நிலைத்து நிற்பேன் என ஒரு தலைமகன் தனது காதலியின் கலக்க நிலையைக் குறிப்பால் அறிந்து அருத்தியோடு இதில் உணர்த்திநிற்ற லறிக.

மனைவியின் மனக்கருத்து அவள் முகத்தால் வெளிப்படும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கமலவதி பால் உணரப்படும்.

## கதை.

கமலவதி என்பவள் மதிதரன் என்னும் குறுநில மன்னனுடைய அருமைத் திருமகள். நல்ல சீலமுள்ளவள். இவளது உருவநிலைமை வினவியறிந்து சுபதேவன் என்னும் சோழமன்னன் உளமுருகி நின்றான். அவன் தன் பெயரியல்புக் கேற்ப எவ்வுயிர்க்கும் மிக இனியனானவன். அரிய குண நலங்கள் பல அமையப் பெற்றவன். சிதம்பரத்திலிருந்து எங்கும் செங்கோல் இதம்பெறச் செலுத்தினவன். அவனது ஆட்சிக் காலத்தில் அப் பதி மிகவும் மாட்சியுற்றிருந்தது. அதன் மாநில வளங்களைக் குறித்து மறுபுல வேந்தரும் அருமறை முனிவரும் வியந்து புகழ்ந்து விழைந்து நின்றனர். சில அடியில் வருவன காண்க.

> "தருக்கமல மலமென்னத் தத்தைகள் பேசுவ பொழில்கள்;
> மருக்கமல மலர்மன்னும் வண்டிசை பாடுவ தடங்கள்;
> இருக்கமல மலரமுறை இயம்புவன இருங் கிடைகள்;
> முருக்கமல மலகிடுமந் திரவழன் முற்றுவ மனைகள்; (க)

மருந்து தருவனை மொழியார் மருந்து தருவனம் மொழியார்;
அருந்ததிக்குக் கற்பளியார்; அருந்ததிக்குக் கற்பளியார்;
பொருந்தவரைத் திறந்திகழ்வார் பொருந்தவரைத் திறந்திகழ்வார்;
இருந்தவரை மாமாளிகையி லிருந்தவரை மாடமவி. (உ)

இவ்வாறு வளம்பெருக்கு திருப்பதியூர் வளநகரில்
ஒவ்வார்கள் நிறைபயனுற் றொருமுறைவண் குடைகவிதரச்
செவ்வாய்மை அரசாளும் செங்கோலின் ஒருகோமான்
தவ்வாத மன்பயிரெலா மொழுகப்புரி காப்பேனர்." (ங.)

(திருவானைக்காப் புராணம்)

வளம்பல மிகுந்து இங்ஙனம் சிறப்புமிக்க நிலையில் விளங்கியிருந்த அவ்
வேந்தன் இவளை விரும்பி மணந்துகொண்டு சிறந்த
போகங்களை நுகர்ந்து ஒருங்கமைய அரசுபுரிந்துவந்தான். அவ
னுக்கு அரும்பெறல் ஆருயிர்போல் ஒருங்கமர்ந்து உளங்கனிந்து
உயரின்பங்களை இவள் உதவிநின்றாள். இவளது அன்பமைதியும்
இன்பநிலையும் பண்புடைமையும் மண்புகழ நின்றன.

"மன்னவற்குத் திருவனையாள்; வாய்ந்தபெருங் கற்புடையாள்;
கன்னியர்கள் அரசென்னும் கமலவதி எனும்பெயராள்."

என இன்னவண்ணம் இசைமிகப் பெற்று இவள் இருந்து
வருங்கால் அரசன் வினைநலங் கருதி அயலகன்று போனான். அப்
பிரிவில் இவள் கவலைகூர்ந்து கடுந்துயருழந்தாள். அவன் விரை
வில் மீண்டு மேவி வருகின்றான். அதன்பின் யாண்டும் பிரியாமல்
அவன் அமர்ந்திருந்தான். ஒருநாள் இவ்வகை உவந்து மருவி
வருங்கால் அவன் பிரிய கருதியுள்ளதாக இவள் உளமிக வெருவி
ஒருமுறை அலமந்து நின்றாள். இவளது நிலைமையைக் குறிப்பா
லறிந்த அவன் குலேசவல்லி என்னும் தோழியிடம் உன் அரசி
இல்லாத ஒன்றை எண்ணிக்கொண்டு அல்லலுறுகின்றாள் எனச்
சொல்லி நகைத்தான். அவள் மெல்லவந்து உள்ளதை யுரைத்
தாள். இவள் உள்ளந்தெளிந்து உறுதிகொண்டாள். தனது
அகநிலையைப் புறத்தாலறிந்து தலைவன் புரிந்தருளியதை வியந்து
மகிழ்ந்தாள். "மடந்தை அணியில் கிடப்பது ஒன்று உண்டு"
என்பதை உலகம் காண இவள் உணர்த்திநின்றாள்.

எண்ணம் அகத்தோன் றிருப்பதென இம்மங்கை
வண்ணம் உணர்த்தி வரும்.

அணியாலறிந்தமை இதனால் கூறப்பட்டது.

1274. உண்டுமய மென்ன உவந்தான் சுதமதியுட்
கொண்டநகை கண்டேன் குமரேசா—மிண்டு
முகைமொக்கு ளுள்ளது நாற்றம்போற் பேதை
நகைமொக்கு ளுள்ளதொன் றுண்டு. (௪)

இ—ள்.

குமரேசா! சுதமதியின் புன்னகை கண்டு குரவசன் ஏன் உண்மையறிந்து உண்ணகை கொண்டான்? எனின், முகைமொக்குள் உள்ளது நாற்றம்போல் பேதை நகைமொக்குள் உள்ளது ஒன்று உண்டு என்க.

முகை = பூ அரும்பு. மொக்குள் = முகிழ், மொட்டு. அஃதாவது மலரும் பருவத்தில் அரும்பின்கண் புடைத்துத் தோன்றும் திரட்சி. முகிழ்த்திருத்தலால் மொக்குள் என நின்றது.

"மொக்குளே குமிழி பூவின் முகிழ் என மொழியலாமே" (நிகண்டு)
"பூவின் மொட்டும் குமிழியும் மொக்குள்" (பிங்கலந்தை).

நாற்றம் = மணம், வாசம். நாற்றம்போல் என்றதனால் அந்நகையுள் உவகை மணந்து ஊற்றம் பெற்றுள்ளமை புணர்கின்றது.

நகை மொக்குள் என்றது குறுஞ்சிரிப்பை. அஃதாவது பற்கள் வெளியே தோன்றாமல் மெல்ல நகுதல். இது புன்னகை எனப்படும். காமக் கருத்தை நகை புலப்படுத்தும் ஆதலால் அஃது இங்கு வகைபெற வந்தது.

> "காம அவிநயம் கருதுங் காலைத்
> துாவுள் ளுறுத்த வடிவும் தொழிலும்,
> காரிகை கலந்த கடைக்கணும், கவின்பெறு
> மூரல் முறுவல் சிறுநிலா அரும்பலும்,
> மலர்ந்த முகமும், இரந்தமன் கிளவியும்,
> கலந்தன பிறவும் கடைப்பிடித்தனரே." (அவிநயம்)

காமநிலைக்கும் நகைக்கு முள்ள உரிமை இதனால் இனிது புலனும். இந்நகை காதலர்க்கு ஆதரவாய் நின்று பேரின்பம் பயக்கும் ஆதலால் நகை விருந்து என இதனை உவந்து கொண்டாடுவர்.

> "வருந்துந் துன்ப இருளகற்றி வயங்கும் அமரர் கடைந்து முனம்
> அருந்தும் அமிழ்திற், கையறவுற்று அழியும் ஆவி தளிர்ப்பிக்கும்
> செருந்திகமழும் பூங்கோதைத் தெய்வக்கமல முகத்தரும்பி
> முருந்தும் வெள்ளைநிலாக் கொழுந்தும் முத்தும்பொருவு முகிழ்நகையே."
> (கூர்மபுராணம்)

காதலியின் நகையை வியந்து காதலன் மகிழ்ந்து கொண்டாடி யிருக்கு நிலையை இதில் ஊன்றி யுணர்ந்து கொள்க.

மேல், முகக்குறிப்புரைத்தான்; இதில், நகைக்குறிப்புரைக்கின்றான்.

அரும்பின் முகிழ்ப்பில் நறுமணம் அடங்கியுள்ளதுபோல் இப் பேதையின் குறுநகைப் பொலிவுள் ஓர் மருமம் மருவியுள்ளது என்பதாம்.

பிரிந்துவந்த தலைவன் முதல்நாள் ஆராமையோடு முயங்கி மகிழ்ந்தான்; சுரத நுகர்வில்துடித்து நின்ற அவனது பாவச நிலையை யறிந்து, இவ்வளவு ஆர்வமுடையவர் எவ்வாறு இதுவரை அடங்கி யிருந்தார்; இனி எங்கும் அகன்று செல்லார் என உள்ளுற உவந்து கொண்டாள்; கொண்டவள் மறுநாள் இவனைக் கண்டவுடன் இரவில் நிகழ்ந்ததை நினைந்து சிறிது முறுவல்செய்தாள்; அந்நகைநிலையை நோக்கித் தோழியிடம் அவன் உரைத்தபடி யிது.

அரும்பில் நறுமணம் அடங்கியிருப்பினும் அவ்வமயம் வெளியே வீசாது; அதுபோல் தலைவியின்நகையின்கருத்து அப்பொழுது வெளிப்பட விளங்காமையால் "முகை மொக்குள் நாற்றம் உள்ளது போல் நகைமொக்குள் ஒன்று உண்டு" என்றான். தெள்ளிதிற் றெரியாமையால் உள்ளது ஒன்று என அநுமானத்தால் உறுதி கொண்டுரைத்தான்.

முகை நகைக்கும், மொக்குள் நகைப் பொலிவிற்கும், நாற்றம் அதன் கருத்திற்கும் ஒப்பாம் என்க.

"முகைப்பதம் பார்க்கும் வண்டினம் போலத்
தகைப்பெருங் காமத்துத் தாம்வீழ் மகளிர்
நகைப்பதம் பார்க்கும் நனிநாக ரிகத்துச்
சொல்வி னுண் பொருள் காட்டி" (பெருங்கதை 1, 35)

"நகைப்பதம் பார்க்கும் இளையோர்" (சிலப்பதிகாரம் 14; 163)

"நகைசால் அவிழ்பதம் நோக்கி நறவின்
முகைசூழுந் தும்பியும் போன்ம்" (முல்லைக்கலி 5)

"முகைவனப் பேந்திய முற்றா இளமுலைத்
தகைவளர்த் தெடுத்த நகையொடு" (புறம் 336).

முகையும் நகையும் இவற்றுள் வந்துள்ளமை அறிக.

அகத்தில் உவகை எழின் முகத்தில் நகை எழும் ஆதலால் அந் நிலையில் உளம் உவந்துநின்ற தலைவி, வெளியில் ஒளிமிகுந்து புன்னகை செய்ய அதில் என்னதோ உண்டு எனத் தலைவன் இங்ஙனம் எண்ணி நின்றான் என்க.

களவு நிலையில் உளமலி உவகையோடு புதுமையாக இளநகை எழுமே யன்றிக் கற்பு நிலையில் கலந்து பழகிய பின் அது நிகழ்ந்து வருமோ? எனின், இன்பக் காதலர்பால் என்றும் அஃது அன்புற்று வரும் என்க. ஒன்று அடியில்வருவது காண்க.

ஓதிமம் ஒதுங்கக் கண்ட உத்தமன் உழைய ளாகும்
சீதைதன் நடையை நோக்கிச் சிறியதோர் முறுவல் செய்தான்;
மாதவள் தானும் ஆண்டு வந்துநீர் உண்டு மீளும்
போதகம் நடப்ப நோக்கிப் புதியதோர் முறுவல் பூத்தாள்.''
(இராமாயணம்).

இராமனும் சீதையும் கோதாவரிநதியின் அருகமர்ந்திருந்த போது அவர்பால் முறுவல் நிகழ்ந்துள்ளமையை இஃதுணர்த்தி நிற்றல் காண்க. அன்னம் அகலக்கண்ட இராமன், சீதையின் மென்னடையை நோக்கிப் புன்னகைசெய்தான்; போதகம்போதலை நோக்கிக், காதலன் பெருமித நடையை நினைந்து அம்மாது முறுவல் பூத்தாள் என்க. ஓதிமம்=அன்னம். போதகம்=யானை. நடை அழகில் அவை ஒவ்வாமையை நினைந்து ஒருவரை ஒருவர் உவந்து இவ்வாறு நகை புரிந்து நின்றார் என்க. இதனால் அவரது உள்ளக் காதலும், உழுவலன்புடைமையும், உயரிய நிலையும் உணரலாகும்.

குலமகளிர் மிகவும் நாண முடையாராதலால் தமது காதற் கருத்தை எளிதில் வாய்திறந்து வெளியிடார்; மெல்ல நகைத்தே உள்ளுருகிநிற்பர் என்க. மணவினைமுடிந்து புதுமணஅமளியையடைந்தபொழுது முதன்முறை கலவியைவிழைந்து நளன் மிக விரைந்தான்; அந்நிலையினையறிந்து தமயந்தி தன்னுள்ளே புன்னகைபுரிந்தாள்; அந்நகைக்குறிப்புணர்ந்து அம்மன்னன் களிப்பு மீக்கூர்ந்து கலந்துமகிழ்ந்தான். அன்று நிகழ்ந்தபடியை அடியில் பார்க்க.

“பகைக்கடல் சுவற்றும் வைவேற் பகட்டெழில் மார்பினுன்றன்
அகத்திடைப் பெருகி யோங்கும் ஆசையங் கடலை யின்னே
முகைத்தெழு முல்லைமாலை முருகுலாம் கோதை நாணல்
தகைத்திடல் அரிதென்றெண்ணித் தன்னுளேமகிழ்ச்சி கூர்ந்தாள்.

குருமணி வலய மின்னுங் குங்குமக் குவவுத் திண்டோள்
முருகுலாந் தாம மார்பன் முறுவலின் குறிப்பு நோக்கித்
திருநலங் கனிய நின்ற செழுங்கடை மழைக்கட் பேதை
வருமுலை ஞெமுங்கப் புல்லி மலரணை மேவினனே" (நைடதம்)

முறுவற் குறிப்பால் உறுவதோர்ந்து அக் குருசில் உவந்துகொண்ட நிலையை இதன்கண் ஊன்றி யுணர்ந்து கொள்க.

"முனிபவர் ஒத்திலராய் முறுவல் கிளைத்தலுமே
முகிழ்நகை பெற்றம் எனு மகிழ்நர் மணித்துவர்வாய்
கனிபவளத் தருகே வருதலும் முத்துதிரும்
கயல்கள் இரண்டுடையீர்! கடைதிறமின் திறமின்."
(கலிங்கத்துப்பரணி)

முகிழ்நகை கண்டு கொழுநர் கொண்ட நிலையை இங்குணர்த்தி நிற்றலறிக. காதலியின் நகைக் குறிப்பைக்கொண்டு காதலன் அவளுடைய கருத்தறிந்து மகிழ்வன் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ் வுண்மை சுதமதியால் உணரப்படும்.

## கதை.

சுதமதி என்பவள் அரிகேது என்னும் அரசனுடைய அருமைத் திருமகள். அழகில் சிறந்தவள். உத்தம மகளிர்க்குரிய உயர்ந்த இலக்கணங்கள் பல இவளது உருவி லமைந்திருந்தன. "நெற்றி மூவிரல் அகலமாய்ச் சின்மயிர் நெறித்திடு நாம்பின்றிக், குற்ற மின்றி வெண்பிறை யென இருந்திடிற், குலவிய திருவெய்தும்; உற்ற சேர்த்திக ரேகை சேர்ந்திடி லவள் உரியள் மன்னவர்க்கு;" என்னும் இன்னவகையான நன்னயங்கள் யாவும் எய்தியிருந்த இவளை எய்தி மகிழ விழைந்து வேந்தர் பலர் வெய்துயிர்த்து நின்றார். இவள் எவரையும் மதியாமல் சூரவசன் என்னும் அரசிளங் குமரனையே குறிக்கொண்டு நின்றாள். அவன் சந்திரகுலத் தோன்றல். மது என்னு முடி மன்னனுடைய அருமைத் திரு மகன். அதி மேதாவி. யாரும் நிகரிலாப் பேரழ குடையவன்.

"மணிக்குடம் பதித்த தன்ன வருமுலை மகளிர் வேட்பத்
துணைப்புயம் அழகு காட்டும் சூரவசன்" (கூர்மபுராணம்)

எனவரும் இதனால் அவனது எழில்நிலை புலனும். இங்ஙனம் விழுமிய நிலையில் விளங்கியிருந்த அவனும் இவளையே நெடிது விழைந்து நின்றான். முடிவில் பெரிய சீர்களுடன் வந்து இவளை

இனிது மணந்துகொண்டு அரிய போகங்களை நுகர்ந்து அவன் அக மிக மகிழ்ந்தான். இவள் அன்பு கனிந்து அவனது ஐம்புலன் களுக்கும் இன்ப நிலையமாயிருந்துவந்தாள். வருங்கால் இடையே பிரிந்து படையோடு அவன் ஓர் முனை முகம் போனான். மனநிலை குலைந்து இவள் மறுகியிருந்தாள். அவன் வினை வென்று மீண்டு மனையகம் புகுந்து இவளை விழைந்து தழுவி உவந்து களித்தான். வசந்த காலம் வந்தமையால் உய்யானங்களை யடைந்து இவளோடு னமர்ந்து உவகை யாடல்கள் புரிந்தான்.

> "இதுவே மடந்தை! நாம் மேவிய பொழுதே;
> உதுவே மடந்தை! நாம் உள்ளிய புறவே;
> இனிதுடன் கழிக்கில் இளமை
> இனிதால் அம்ம இனியவர்ப் புணர்ப்பே."

> "உயிர்கலந்து ஒன்றிய செயிர்தீர் கேண்மைப்
> பிரிந்துறல் அறியா விருந்து கவவி,
> நம்போல் நயவரப் புணர்ந்தன
> கண்டிகு மடவால்! புறவின் மாவே."

துணையோடு கூடிய வாழ்க்கையே மணமுடையதாகும்; அவ் இளமையே இன்பயனுடையதாம்; பிரிவில் எவ்வளவு பெருந்துய ருள்ளது; அதனை ஒருபோதும் இனி மருவலாகாது. நம்மைப் போலவே பொழில் மருங்கு உலாவும் விலங்கினங்களும் இணை பிரியாது வந்து இன்பம் நுகர்கின்றன பார்! என இன்ன வகையாக அன்பு ததும்ப அருளுரையாடி அவன் மருவிமகிழ்ந்தான். புறவு = முல்லை நிலம். மா = மான் முதலிய மிருகங்கள். கண்டிகு = காண்க. உளமிக உருகி அவன் உரையாடு நிலையை இவள் ஓர்ந்து வியந்தாள். இவ்வளவு ஆர்வமுடையவர் எவ்வகை பிரிந் திருந்தார்; இனி அகன்று செல்லார் என உள்ளூற நகைத்து உவந்து நின்றாள். இவளது நகை நிலையை யறிந்து அவனும் உவகைமீக் கொண்டான். பேதை நகைமொக்குளுள் ஒன்று உண்டு என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

> புன்னகையுள் ஒன்று புலனுவ தின்றறிந்தேன்
> அன்னமே ஐய மகல்.

நகைக்குறிப்பறிந்தமை இதனால் கூறப்பட்டது.

1275. உண்டு மருந்தென் றுவந்தான் முருக்கைமுன்
கொண்டசெயல் கண்டேன் குமரேசா—மண்டிச்
செறிதொடி செய்திறந்த கள்ள முறுதுயர்
தீர்க்கு மருந்தொன் றுடைத்து. (ரு)

இ—ள்.

குமரேசா! முருக்கை நகை புரிந்தபோது அதில் ஓர் வகை யுள்ளது என நாயகன் ஏன் நயந்து நின்றான்? எனின், செறி தொடி செய்து இறந்த கள்ளம் உறுதுயர் தீர்க்கும் மருந்து ஒன்று உடைத்து என்க.

செறி தொடி=செறிந்த வளைகளை யுடையாள். என்றது தலைவியை. கைக்கு ஒன்பது வளைகளை நெருக்கமாக அடுக்கி யிருந்தாள் ஆதலால் செறிதொடி என்றான். செறிவு=நெருக்கம். "செறிதொடிப் பொன்னேர் மேனி மடந்தை" (ஐங்குறுநூறு.)

இறந்த = போன. இறத்தல் = கடந்துபோதல். அவள் அடி பெயர்ந்து சென்றமையால் இறந்த என்றான். கள்ளம் என்றது தன் கருத்தை அவள் கவர்ந்து போனதைக் குறித்து.

மேல், நகைக் குறிப்புரைத்தான்; இதில், செய்கைக் குறிப் புணர்த்துகின்றான்.

நெருங்கிய வளைகளை யுடையாள் புரிந்துபோன வஞ்சம் எனதுபெருந் துயரத்தை நீக்கத்தக்கதோர் மருந்தினை யுடையது என்பதாம்.

கூடி மகிழ்ந்து வருங்கால் தலைமகள் ஒருநாள் கூடமாகச் செய்துபோன நிலையைக் குறித்துத் தலைமகன் உரைத்தபடி யிது.

முன்பு பிரிந்துபோய் நின்ற நிலவளங்களைக் குறித்து உரை யாடி வருங்கால் அங்குள்ள குலமகளிர் நிலைகளையும், பொது மகளிர் இயல்புகளையும் வியந்து பேசினான்; பேசவே அவன்மேல் ஐயங்கொண்டாள்: மறுபடியும் பிரிவரோ? மறு மங்கையரையும் சுவைத்திருப்பர் கொல்? என நீள நினைந்தாள்; நினைந்தவள் நெஞ்சங்கனன்றாள்; தான் சூடியிருந்த மலர் மாலையை அவிழ்த்தெறிந்து அயலே அகன்று போனாள்; போகவே இவளது செயலை அறிந்து செய்வதொன்று மறியாது அவன் தியங்கி நின்றான்; பின்பு அப்

போக்கை நினைந்து பார்த்தான்; போன நிலத்தைப் புகழ்ந்து பேசினமையால் மறுபடியும் அங்கு நாம் பிரிந்துபோவம் என்று வருந்தியோ? அல்லது வேறுவிதமாக நினைந்தோ தான் புனைந்திருந்த மாலையைப்பிரித்தெறிந்தாள்! ஆயினும், இச்செயல் உள்ளன்போடு நிகழ்ந்துள்ளமையான் உண்மையை உணர்த்தி உவந்து கொள்ளலாம் என்று துணிந்து தோழியிடம் உரைத்தான் ஆதலால் "இறந்த கள்ளம், மருந்துஉடைத்து" என்றான். அதன்பின் பாங்கி சென்று அவனது பழுதின்மையை யுணர்த்த இவள் உளந்தெளிந்து உவந்துகொண்டாள். மணமாலையைஎறிந்த குறிப்பு என்னை? என்று பின் வினவியபொழுது மணந்தவர் மணங் குன்றினர் என்று நினைந்து மணமுடையதனை இகழ்ந்தெறிந்தேன் என்றாள். இங்ஙனம் தலைவி செய்கை பலவகையில்நிகழும். ஒருநாளிரவு அரசனொருவன் நகர் சோதனைக்குச் சென்று வைகறையில் வந்தான்; தன்னைத் தனியே வைத்து வெளியே போயினார் என்று சினந்து தான் அணிந்திருந்த இரவிக்கையைக்கழற்றி எறிந்துவிட்டு அரசி கடுத்துப் போனாள். அரசன் திகைத்து அச் செய்கையைக் குறித்துத் தோழியிடம் வினவினான். அடியில் வருவது காண்க.

"வேந்து முறையில் வெளிநகரின் சோதனைக்காப்
போந்து விடியப் புகுதந்தேன்—ஏந்திழைதான்
பூண்டிருந்த கச்சைப் புறமெறிந்து போயினாள்
ஈண்டிருந்த தென்னே இது?"

அங்ஙனம் எறிந்ததற்குக் காரணம்? "உங்கள் தலைவர் புறம் காக்கப் போயிருக்கின்றார்; இனி உமக்கு உள்ளே காவல் எற்றுக்கு?" எனத் தன் கொங்கைகளை இகழ்ந்து அம் மங்கை செய்தபடி என்க. காதலிகள் கருத்தும், செய்கையும், குறிப்புணர்த்தும் திறனும் இதனால் இனிது புலனும்.

" பாடல் பயிலும் பணிமொழி தன்பணைத்தோள்
கூடல் அவாவால் குறிப்புணர்த்தும்—ஆடவற்கு
மென்றீந் தொடையாழின் மெல்லவே தைவந்தாள்
இன்றீங் குறிஞ்சி யிசை." (தண்டி—கோள்.)

தன் காதலனை இரவில் வரும்படி ஒரு காதலி குறித்தபடி யிது. குறிஞ்சி என்னும் பண் இடையாமத்திற்கு உரியது; பலர் நடுவே

யாழை வாசித்துக் கொண்டிருக்கும் பொழுது அயலே வந்து உலாவிநின்ற தன் துணைவன் அறிந்துகொள்ளும்படி அவ் இசையை யாழில் வருடிக் காட்டினுள். நடுநிசியில் வரின் மருவி மகிழலாம் என்னும் குறிப்பை அவன் மட்டும் அறியும் வகையில் மிகவும் வியமாக இவள் அறிவுறுத்தியிருக்கும் அழகை இதில் ஆய்ந்து பார்க்க. குறிப்பறிவுறுத்தலில் இது தொழில் நுட்பம் என்க. இது, களவு நிலையில் நிகழ்ந்தது; இங்கு வந்துள்ளது கற்பு நெறியில் என்க. மருந்து என்றது உளைந்து நின்ற தன் துயரம் களைந்து படும் என்பது கருதி.

"நெடுந்தேர் வழங்கு நிலவு மணல் முற்றத்துப்
பந்தொடு பெயரும் பரிவி லாட்டி
அருளினும் அருளா ளாயினும், பெரிதழிந்து
பின்னிலை முனியல் மா நெஞ்சே! என்னதூஉம்
அருந்துயர் அவலம் தீர்க்கும்
மருந்து பிறி தில்லை யான் உற்ற நோய்க்கே" (நற்றிணை 140)

ஆடிய பந்துடன் காதலி அகன்றுபோன குறிப்பை நோக்கிக் காதலன் உரைத்தபடி யிது. அவள் பொருந்தியருள்வதே தான் உற்ற நோய்க்கு மருந்தாம் என அவன் உணர்த்தியிருத்தலறிக.

இதுவரை தலைவியின் குறிப்பைப் பலவகை நிலையிலும் தலைவன அறிந்த வாறும். கண், நாணம், முகம், நகை, செய்கை என்னும் ஐவகை யானும் குறிப்பறி வுறுத்தி யிருத்தலை முறையே இதில் அறிந்துகொள்க.

தன் கருத்தைத் தலைவி செயலால் குறித்து விடுவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை முகுந்தைபால் உணரப்படும்.

### கதை.

முகுந்தை என்பவள் சுகுந்தலன் என்னும் பெரு நிலக் கிழவனுடைய அருமைத் திருமகள். அழகில் இரதி என இவளை உலகில் வழங்கினர். "கண்டவர் மனமும் கண்ணும் கவர்ந்து கட்டழகு வாய்ந்து, முண்டக மலராள் என்ன முகுந்தை முன் திகழ்ந்து நின்றுள்" என்று எங்கும் வியந்து பேச எழில் நிலையில் இவள் இசை மிகுந்திருந்தாள். இவளை அடைய விரும்பி அரசர் பலரும்

அலமந்து நின்றார். அவருள் சேணிகன் என்பவன் வேணவா வுடன் வந்து இவளை மணந்துகொண்டான். அவன் மகததேசத்து மன்னன். அருங்கலை விநோதன். பெரும் பொறையாளன். இராசமாகிருகம் என்னும் நகரிலிருந்து அரசு புரிந்தவன். மகா நீதி மான். அரசர் பலரும் அடிதொழுதேத்த முடிபுனைந் தாண்டவன். "எரிமிடைந்தனைய மாலை யினமணி திருவில் வீசும், திருமுடி ஆரமார்பிற் சேணிகன்" என நீணில மெங்கணும் அவன் புகழ் நிலவி நின்றது. அவனது நாடும் நகரமும் பீடுமிகப் பெற்றுப் பெருவளங்களுடையனவாய் மறு புலங்களும் புகழத் திருமலிந் திருந்தன. அடியில்வருவன காண்க.

"கயலினம் உகளிப் பாய முல்லையம் பொதும்பிற் காமர்
புயலின மொக்குள் வன்கட் குறுமுயல் புலம்பிக் குன்றத்து
அயல்வளர்கின்ற ஆமான் குழவியோடிரிந்து, செந்நெல்
வயல்வளர் கரும்பிற் பாயும் மகத நாடு என்ப துண்டே. (க)

இரும்பிடி தழீஇய யானை யிழிமதம் கலந்து சேறாய்ச்
சுரும்பொடு மணிவண்டார்க்கும் துகிற்கொடி மாடவீதிப்
பெருங்கடி நகரம் பேசின் இராசமாகிருகம் என்பர்
அருங்கடி அமரர் கோமான் அணிநகர் ஆயதொன்றே."
(சீவகசிந்தாமணி)

அவனது அவனி நலனும், அரசு திருவும் இவற்றால் இனிது புலனும். இங்ஙனம் உயர் நிலையில் ஒளி செய்திருந்த அவன் இவ் அழகியுடனமர்ந்து விழுமிய போகங்களை நுகர்ந்துவியந்துவந்தான். இவளது சுரத நுகர்வில் பரவசனாகி அவன் பதிந்து கிடந்தான். "கொங்கை முகங்குழையக், கோதை புறனவிழ, அங்கைவளைகள் அழுந்தவே—மங்கை, மலரணையில் மன்னற்கு மாறாத இன்ப நிலை விருந்திட்டாள் நெடிது" என இவள் நிலைத்தருள அவன் இன்பம் திளைத்துவந்தான். வருங்கால் ஒருமுறை அயல்பிரிந்து மறுபடியும் வந்து இவளை மருவிமகிழ்ந்தான். அப்பிரிவில் இவள் மிக மறுகியிருந் தாளாதலால் இனிஅவனை யாண்டும் அகலவிடலாகாதென்று கவலை கொண்டுநின்றாள். அந்நிலையைக் குறிப்பாலறிந்த அவன் இவளது உள்ளன்பை வியந்து உவந்துகொண்டான். "செறிதொடி செய் திறந்த கள்ளம் உறுதுயர்தீர்க்குமருந்து ஒன்றுடைத்து" என்பதை உலகம் காண இவள் உணர்த்திநின்றாள்.

கடைக்கண்ணால் நோக்கிக் கடுத்தாள் அதனுள்
உடைத்தாவ தோர்ந்தேன் உவந்து.

செய்கைக் குறிப்பறிந்தமை இதனால் கூறப்பட்டது.

1276. கண்டு கணவன் கலந்திருந்தும் காந்திகையேன்
கொண்டு கவன்றாள் குமரேசா—மண்டிப்
பெரிதாற்றிப் பெட்பக் கலத்த லரிதாற்றி
அன்பின்மை சூழ்வ துடைத்து. (சு)

இ—ள்.

குமரேசா! கணவன் வந்து கலந்திருந்தபொழுதும் காந்திகை ஏன் கலங்கி நின்றாள்? எனின், பெரிது ஆற்றிப் பெட்பக் கலத்தல் அரிது ஆற்றி அன்பின்மை சூழ்வது உடைத்து என்க.

இது, தலைவன் செய்கைகளில் ஐயுற்றுத் தலைவி உரைத்தது.

பெரிது ஆற்றி என்றது கணவன் மிகுந்த காதலுடன் தன்னை அணைந்துநின்று புகழ்ந்து போற்றியதை நினைந்து. ஆற்றுதல்—ஆதரித்துச்செய்தல். பெட்ப—விரும்ப.

அன்பின்மை என்றது பிரிவை. பிரிவினால் தனக்குத் துன்பம் நிகழுமாதலால் அதனை அன்பின்மையாக் குறித்தாள்.

சூழ்வது உடைத்து = ஆழ்ந்து எண்ணுவதையுடையது. சூழ்தல்—எண்ணுதல். தன்னைப்பிரிந்துபோகநினைந்தவர் அதனை மறைக்கும்பொருட்டுத் தந்திரமாக முந்துற எண்ணி அளவுமீறி இங்ஙனம் அளவளாவித் தழுவுகின்றார் என்பாள் "கலத்தல், அன்பின்மை சூழ்வது உடைத்து" என்றாள்.

அளவளாவி மிகவும் போற்றி நான் உளமகிழும்படி நாயகன் கலப்பது, மேலும் அரிதாகப்பொறுத்து அவரதுபிரிவைநினையும்படியுளது என்பதாம்.

வினைமுடிந்து மீண்டுவந்த தலைவன் மிகவும்ஆர்வத்தோடு மனைவியைத்தழுவி நலம்பலபாராட்டி இவள் உளங்களிக்கும்வகை உவந்துபே

ணினான்; பேணவே இவ்வளவுஆவலுடன் போகத்தில் அவசரப் படுவதால் மறுபடியும் பிரிந்துபோய்விடுவரோ? என்று நினைந்தாள்; நினைந்துநின்ற அவ் ஐய நிலையைத் தோழியிடம் இவ்வாறு உரைத்தாள் என்க.

கூடியிருக்கும்பொழுதே பிரியும்குறிப்புடன் காதலர் சில இனிய செயல்களையும், புதிய மொழிகளையும் காதலிகளிடம் புரிந்துபுகல்வர்; அக்குறிப்பினைக் கைகண்டவள் முன்னதாகத் தெரிந்துகொள்வள; காணுதபேதை பிரிந்தபின் தெரிந்து பின்பு எச்சரிக்கையாயிருந்து கொள்வள் ஆதலால் அந்நிலையிலுள்ள இவள் எதிரறிந்து இங்ஙனம் இயம்பி நின்றாள்.

அயலகல நினைந்த சீவகன் தன் மனைவியாகிய பதுமையிடம் முதல்நாள் இரவு பெரிதாற்றி அரிய நீதிகள் சொல்லுபவன்போல் உரிமையோடு சிலஉரைகளாடினான். அவ்வுரைக்குறிப்பைஅதுபொழுது அவள் அறியவில்லை; பின்பு அவன் பிரிந்தபின்னரே அதனைத் தன் தாயின்வாயிலாத் தெரிந்துகொண்டாள். அடியில் காண்க.

"வினைக்கும் செய்பொருட்கும் வெயில் வெஞ்சுரம்
நினைத்து நீங்குதல் ஆண்கடன்; நீங்கினால்,
கனைத்து வண்டுணும் கோதையர் தங்கடன்
மனைக்கண் வைகுதல் மாண்பொடெனச் சொன்னான்; (க)

விரைசெய் தாமரை மேல்விளை யாடிய
அரைச அன்னம் அமர்ந்துள வாயினும்
நிரைசெய் நீலம் நினைப்பில என்றனன்
வரைசெய் கோல மணங்கமழ் மார்பினான்." (சிந்தாமணி)

சீவகன் இப்படி உரைத்தான் என அவன் மனைவி தனது தாயிடம் உரைத்தாள்; உரைக்கவே, அவள் உரைத்தபடியை அடியில்பார்க்க.

"அன்னம்தான் அவன்; தாமரைப் போதுநீ;
நின்னை நீங்கினன்; நீங்கலன் காதலான்;
இன்னதால் அவன் கூறிற்று எனச் சொன்னாள்
மன்னன் ஆருயிர் மாபெருந் தேவியே." (சிந்தாமணி)

காரியங்கருதி நீங்கியுளான்; நின்மேல் காதல் நீங்கலன்; அன்னம் தாமரையை விரும்புமேயன்றி அருகிலிருந்தாலும் கருவிளைமலரை விரும்பாது; அதுபோல் நின்னை விரும்பியவன் எளிதாகவரினும் பரத்தையரைவிரும்பான்; பொறுத்திரு; எனக்குறிப்

பறிந்து தன்மகளுருக்கு அவள் உரைத்திருக்குந் திறங்களை இதில் ஊன்றியுணர்ந்துகொள்க. நீலம் = கருநெய்தற்பூ.

நாயகன் உவந்து கொண்டாடினும் அவன் பிரிவின் குறிப்பை நாயகி அறிந்துகொள்வள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை காந்திகைபால் உணரப்படும்.

## கதை.

காந்திகை என்பவள் சதயமான் என்னும் அரசனுடைய அருமைத் திருமகள். பெருவனப்புடையவள். உருவிலும் அறிவிலு மிகவும் சிறந்து பெருமிதநிலையில் மருவியிருந்த இவளைப் பல்யானைச்செல்கெழு குட்டுவன் என்னும் சேரமன்னன் விழைந்துவந்து மணந்துகொண்டான். அவன் நல்ல நீதிமான். ஆட்சித்திறத்தில் மாட்சிமிகப்பெற்றவன். தன் குடைநிழ லில் நின்ற உயிர்கள் என்றும் இடரின்றி வாழும்படி இதம்பலபுரிந்து, அறம்பலபேணி, எங்கும் அவன் இசைபரப்பி நின்றான்.

"தீதுசேண் இகந்து, நன்றுமிகப் புரிந்து,
கடலும் கானமும் பலபயம் உதவப்,
பிறர்பிறர் நலியாது, வேற்றுப்பொருள் வெஃகாது,
மையில் அறிவினர் செவ்விதின் நடந்து, தம்
அமர்துணைப் பிரியாது, பாத்துண்டு மாக்கள்
மூத்த யாக்கையொடு பிணியின்று கழிய
ஊழி யுய்த்த உரவோர் உம்பல்" (பதிற்றுப்பத்து22)

என இங்ஙனம் அறவோர் எவரும்புகழ முறைசெய்திருந்த அவன் இவளோ டமர்ந்து உயர்போகங்களை நுகர்ந்து உவந்துவந்தான். அவனுக்கு இவள் அரும்பெறலமிர்தமென அமர்ந்து பெரும்போக நிலையமாய்ப் பெருகியிருந் தாள். இவளை மனைவியாகப் பெற்றது அம்மன்னனுக்கோர் பெரும் பாக் கியமா மதிக்கப் பெற்றிருந்தது.

"கார்மலர் கமழும் தாழிருங் கூந்தல்
ஒரீஇயின போல விரவுமலர் நின்று
திருமுகத் தலமரும் பெருமதர் மழைக்கண்
அலங்கிய காந்தள் இலங்குநீர் அழுவத்து
வேயுறழ் பணைத்தோள் இவளோடு
ஆயிர வெள்ளம் வாழிய பலவே" (பதிற்றுப்பத்து.)

இது பாலைக் கௌதமனார் என்னும் புலவர் பெருமானார் அவனை நோக்கி ஒருமுறை உவந்து கூறியது. இதில் இவளது எழிலியல்பும், விழுமிய நிலையும் விளங்கியுள்ளமை காண்க. இவளை துணைபிரியாது மருவிவாழ்ந்து

வருங்கால் கொங்குநாட்டின்மீது ஒருமுறை அவன் படையெடுத்துச் சென்றான். இவள் பிரிவாற்றாமையால் பரிவுற்றிருந்தாள். அவன்வினைமுடிந்து மீண்டு மனைபுகுந்து இவளை மகிழ்ந்து மருவிப் புகழ்ந்து போற்றி ஆர்வமீக் கூர்ந்து ஆற்றி யருளினன். ஆகந் தழுவி அகங்குழைந்து நலம் பாராட்டி அவன் நயந்துபேணி வருவதைக் கண்டு இன்னும் பிரிந்து விடுவரோ? என்று இவள் வருந்தி யயர்ந்தாள். பரிந்து பல நினைந்து திருந்துற மொழிந்தாள். பிரிந்த நாயகன் வந்து பெரிது ஆற்றிப் பெட்பக் கலப்பினும் அது அன்பின்மை சூழ்வதாம் என நாயகி ஐயுற்று அலமருவள் என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

தழுவிப் புகழ்ந்து தகைசெய்வ தெல்லாம்
வழுவி யகலும் வழி.

பெரிது பேணினும் பிரிவு காண்பள் என்பது இதனால்கூறப்பட்டது.

---

1277. காமருயர் காளிந்தி கைவளைபோய் நொந்தாளேன்
கோமகன்முன் நீங்கக் குமரேசா—ஏமமிகு
தண்ணந் துறைவன் தணந்தமை நம்மினு
முன்ன முணர்ந்த வளை. (எ)

இ—ள்

குமரேசா! கண்ணன் நீங்கியபொழுது காளிந்தி ஏன் கை வளைசோர்ந்து கலங்கினாள்? எனின், தண் அம் துறைவன் தணந்தமை நம்மினும் வளை முன்னம் உணர்ந்த என்க.

தண்ணம் துறைவன் என்றது தலைவனை. குளிர்ந்த அழகிய நீர்த்துறைகளை யுடையவன் என்றவாறு. அவனது செல்வநிலையை நோக்கி இங்ஙனம் சொல்லியதென்க வாவி குளம் பொய்கை முதலிய பல நீர்நிலைகளை யுடையதாய் உயர்ந்த வளமிகுந்த சிறந்த நாட்டின் அதிபதி என்பதாம். “தண்ணந்துறைவன் தகுதி” (ஐங்குறுநூறு 164.) “தண்ணந்துறைவ, தகாஅய் காண்நீ” (நெய்தற்கலி. 8) இவற்றுள் தலைவனைக் குறித்திருத்த லறிக.

தணந்தமை = பிரிந்தமையை. தணத்தல் = பிரிதல்.
“தாங்கருங் காமத்தைத் தணந்து நீ புறமாற” (நெய்தற்கலி 4)

"துணப்பில் வேட்கை தலைத்தலை சிறப்ப". இவற்றுள் தணத்தல் உணர்த்தி நிற்றல் காண்க. நம்மினும் எனப் பன்மையிற் குறித்தது தோழியையும் உட்கொண்டு.

மேல், தலைவன் செயல் பிரிவு குறித்ததென்றாள்; இதில், அதனால் மெலிய நேர்ந்த தென்கின்றாள்.

இனிய அழகிய நீர்நிலைகளையுடைய துணைவன் நீங்கினமையை நம்மினுமுன்னதாக இவ்வளைகள் உணர்ந்துகொண்டன என்பதாம்.

தலைவன்வந்து கலந்திருக்கும்பொழுதே காரியநிமித்தம் சிறிது அயலகல நினைந்தான்; அந் நிலையைக்குறிப்பாலறிந்த தலைவி புலந்து உரைத்தபடியிது.

அவன் பிரியுமுன்னரே இனிப் பிரிந்து விடுவான் என்று நினைந்துகொண்டாள்; கொள்ளவே அவ் ஏக்கத்தால் தோள்கள் மெலிந்தன; அவை மெலிய அவற்றில் அணிந்திருந்த வளைகள் நெகிழ்ந்தன ஆதலால் வளை முன்னம் உணர்ந்த என்றாள். உணருந் திறனில்லாத வளையை உணர்ந்த என்றது, தனக்கு உரிமையாய் உதவிய அருமையை வியந்து. தன் உணர்ச்சியை ஆற்றாமை மிகுதியால் அதன் மேலேற்றி இங்ஙனம் உரைத்தாள் என்க.

"அறிவஞர் உழந்தேங்கி ஆய் நலம் வறிதாகச்
செறிவளை தோளூர இவளை நீ துறந்ததை." (நெய்தற்கலி 10)

"கலையொடு மானிரங்கு கல்லதர் அத்தம்
நிலையஞ்சி நீள்சுரந் தல்குவர்கொல்? தோழி!
முலையொடு சோர்கின்ற பொன்வண்ணம் அன்றோ
வளையோடு சோருமென் தோள்." (திணைமொழி ஐம்பது)

"கேளார் கொல்லோ தோழி! தோள
இலங்குவளை நெகிழ்த்த கலங்கலுர்." (நற்றிணை 214.)

"பயிரொன்று கலையும் சங்கும் பழிப்பறு நலனும் பண்பும்
செயிரின்றி யலர்ந்த பொற்பும் சிந்தையும் உணர்வும் தேசும்
வயிரஞ்செய் பூணும் நாணும் மடனும் தன்னிறையும் மற்றும்
உயிரொன்றும் ஒழிய எல்லாம் உகுத்து ஒரு தெரிவை நின்றாள்."
கலை = ஆடை. (இராமாயணம்.)

விரல்கள் வளைமுதலியன இழந்து நிற்றலை இவற்றால் அறிந்துகொள்க. துணை பிரியின் அணிபிரியும் ஆதலால் யாண்டும் பிரியாதருள வேண்டும் என்று குறிப்பித்தவாறு. பிரிவில் உடல்மெலிவும், வளை ஒழிவும், தனிமைக்கு உளவாம் என்றதனால், அவன் வரவில் மெலிவகன்று, ஒளிமிகுந்து, எழில் திகழ்ந்து, உளமகிழ்ந்து, பொலிவடைந்து அவள் பொங்கிக் களிப்பள் என்பதாயிற்று.

"பண்டு வருங் குறிபகர்ந்து பாசறையில், பொருள் வயினிற் பிரிந்துபோன
வண்டு தொடர் நறுந்தெரியல் உயிரனைய கொழுநர்வர மணித்தேரோடும்
கண்டுமனம் களிசிறப்ப ஒளிசிறந்து மெலிவகலும் கற்பினார்போல்
புண்டரிக முகமலர அகமலர்ந்து பொலிந்தனபூம் பொய்கையெல்லாம்."

(இராமாயணம்)

நாயகன் தணந்தபோது மெலிந்திழிந்து, அவன் அடைந்தபொழுது ஒளிசிறந்து நாயகி உயர்ந்துள்ள நிலைக்குச் சூரியனைக் கண்டு தாமரை மலர்ந்துள்ள நிலையை எடுத்துக்காட்டி இஃதுணர்த்தி நிற்றலறிக. கணவனுடைய பிரிவைநினைந்தவுடனே கைவளைகழன்று மனைவி மறுகி நிற்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை காளிந்தி பால் உணரப்படும்.

## கதை.

காளிந்தி என்பவள் யமுனா நதியின் அம்சமாய்ப் பிறந்தவள் சூரியனுடைய பேரியற் புதல்வி மணிநிற மேனியள். நறுமணம் கமழும் குளிர்பூஞ்சோலையில் ஒருநாள் இவள் தனியே அமர்ந்திருக்கையில் விசயனோடு அங்கு வேட்டைக்கு வந்த கண்ணன் இவளைக் கண்டான். காணவே காம பரவசனாய்க் கருத்துருகி நின்றான். இவளது உருவிலும் இசையிலும் உள்ளம்பறிபோய் உழைநெருங்கினான். இவள் மெள்ள எழுந்து மயிலியல்வதுபோல் ஒயிலுடனசைந்து அயலிலுள்ள மாதவிப் பொதும்பரில் மறைந்தாள். அவன் மையல் மீறி மறுகி மீண்டான். எண்ணம் வேறாய் வண்ணம்மாறி வேர்த்து வெதும்பி வந்த அக்கண்ணனைப் பார்த்தன் பார்த்தான். "என்னை ஈது"? என்று புன்னகை செய்தான். அவன் உண்மையை யுரைத்தான். உரைத்தபடியை அடியில் பார்க்க.

"தண்ணறுங் கமல வீட்டின் தாக்கணங் கனைய கோதை
வண்ணப்பூஞ் சோலை சூழ மாதவிப் பந்தர் தன்னில்
பெண்ணலங் கனிய நின்று பேரியாழ் உளர்ந்துபாடும்
பண்வலை வீசி என்றன் ஆருயிர் படுத்தாள் என்றான்." (கூர்மபுராணம்)

இதனைக் கேட்டவுடனே விசயன் கேலி புரிந்தான். எல்லாரையும் மயக்கி மாலுறுத்தவல்ல நீரும் ஒருத்தியால் மயங்கி மாலானீரா? மால் என்ற பெயர் உமக்குச் சாலவும் பொருந்தும்; விண்ணவரெவரையும் வெல்வேன் என்பீர்; ஒரு பெண்ணினுக்குடைந்து பேதுறுகின்றீர்! என இன்னவாறு மைத்துனக் கேண்மையில் அவன் அசதியாடினான். கண்ணன் அவனைச் சினந்து நோக்கினான்; இனந்தெரியாமல் மனம்போனபடி பேசுகின்றாய்! நான் கண்டதுபோல் நீயும் நேரில் அவ் ஆரணங்கைக் கண்டிருந்தால் இப்படி வாய் பேச மாட்டாய் என்று வருந்தி நின்றான்.

"காவியும் கயலும் வேலும் கருவிளை மலரும் வென்று
மாவடு வருட்டு நோக்கின் வருமுலைப் பவளச் செவ்வாய்
ஓவியர் எழுத ஒண்ணு ஒண்டொடி வனப்பு முற்றும்
மேவரக்காணில் ஈது விளம்பலை நீயும் என்றான்."

இவ்வாறு நொந்து கூறியவுடனே அவன் சிந்தையிரங்கித் திகைத்து எழுந்தான். இவளிருக்கும் இடத்தை நாடி விரைந்து வந்தான். புகுந்து பார்த்தான்; வியந்து நின்றான்.

"குங்கும மெழுகி யோங்கு குலிகமென் செப்பே கொங்கை;
செங்கயலிணையே வாட்கண்; திருமறு மார்பன் சொன்ன
அங்கலுழ் மேனிச் செய்ய ஆரணங்கு இவளே; இன்ன
கொங்கவிழ் சோலைதானே குறித்திடும் இடமதாமால். (க)

ஈர்க்கிடை புகாது வீங்கும் இளமுலை நெருக்கிற் பட்டுப்
போக்கறக் கிடந்த நெஞ்சம் ஒருவழி மீட்டுப் போதந்து
எக்கற அனைத்தும் என்பால் இயம்பிய வேந்தன் தன்னை
வாக்கினால் இகழ்ந்த என்போல் யாருளர் வன்கணோரே?" (உ)

என இங்ஙனம் உண்மையுணர்ந்து தன்னை யிகழ்ந்து கண்ணனைப் புகழ்ந்து இவளது பெண்மையை வியந்து தனக்குத் தங்கையாகப் பாவித்து அவ்வண்ணல் மேன்மையை அகங்கொள்ள விளக்கினான். அவ்வமயம் அவ்வண்ணலும் அங்கு வந்தான். அவனை நயந்து நோக்கி இவள் உவந்து நின்றாள். உடனே இரதத்திலேற்றிக் கொணர்ந்து இந்திரப்பிரத்தத்தில் வைத்து இயல் மணம்புணர்ந்தான்.

"கத்திகைக் கருமென் கூந்தல் துரோபதை, உலூபி, காமர்
சித்திராங்கனையி னோடும் சுபத்திரை திருவை மானும்
முத்துறழ் முறுவற் செவ்வாய் முகிழ்முலைக் காளி தன்னை
வித்தகப் பூண்கள் யாவும் விழுமிதிற் புனைந்தானன்றே.

வலம்புரிச் சங்கம் ஆர்ப்ப வார்முரசுயர்த்த தோன்றல்
அலங்கலங் குன்றமன்ன கவினனுக்கு அழல்சான்றாகக்
கலஞ்சுமந் தெழுந்துவீங்கும் சுதிர்முலைக் காளிதன்னை
நலம்படும்ஒரைதன்னில் நன்மணம்முடிப்பித்தானே." (கூர்மபுராணம்)

இன்னவா மணந்துகொண்டு பின்புதுவாரகையையடைந்து இவளோடமர்ந்து உயர்போகங்களை நுகர்ந்துஅவ் வேந்தல் இனிது வாழ்ந்துவந்தான். அம்மன்னனை இன்னுயிரெனத் தழுவி இவள் இன்புற்றிருந்தாள். இங்ஙனம் இருந்து வருங்கால் ஒருமுறை அவன் வடமதுரை போய்வர நினைந்தான். அதனை இவள் எதிரறிந்து ஏங்கிநின்றாள். கண்துயிலின்றிக் கவலையோடிருந்தமையால் உடல்மெலிந்து வளைகழன்று நின்றது. அந்நிலையைச் சோமி என்னும்தோழிநோக்கி ஏது மெலிவு? என ஆதரவுடன் வினவினாள். என்சாமி நீங்குவதை யறிந்து இவ்வளைகள் இவ்வாறாயின என்று இனைந்து மொழிந்தாள். இதனை அப்பெருமானறிந்தான்; இவளது உரிமையை யுவந்து உளமிக வியந்து அன்புமீக் கூர்ந்தான்; பின்பு பிரியாதமர்ந்து பேணியருளினன். "தண்ணந் துறைவன் தணந்தமை நம்மினும் வளை முன்னம் உணர்ந்த" என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

நீங்குவர்கோல் என்ன நினைத்தேன் நினைக்கவளை
நீங்கி விழுந்த நிலம்.

உரியவன் உறைநீங்குமுன் வளைநீங்கும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1278. காதலனர் நீங்குமுன்னே காஞ்சனிதன் மெய்பசந்து
கோதுழந்தாள் என்னே குமரேசா—போத
நெருநற்றுச் சென்றாரெங் காதலர் யாமும்
எழுநாளே மேனி பசந்து. (அ)

இ—ள்.

குமரேசா! கணவன் அகன்று செல்லுமுன்னரே காஞ்சனி ஏன் பசந்து நொந்தாள்? எனின், எம் காதலர் நெருநற்றுச் சென்றார்; யாமும் மேனி பசந்து எழு நாளேம் என்க.

நெருநற்று = நேற்று. நெருநல், நெருநை, நெருநற்று, நென்னல் என்பன முதல்நாளைக்குறித்துவரும் ஒருபொருட் சொற்கள்.

மேனி = உடல், நிறம். பசந்து = நிறங்குலைந்து. பிரிவினால் மகளிர்க்கு உளவாம் நிறவேறுபாட்டைப் பசப்பு என்பர். தளிர் என மினிர்ந்து, ஒளிதவழ்ந்து, எழில்சுரந்திருந்தவள் உளமுறு கவலையால் அந் நிலைதிரிந்தமையை நினைந்து "மேனி பசந்து" என்றாள். "மணிபொரு பசும்பொன்கொல்? மாவீன்ற தளிரின்மேல், கணிகாரம்கொட்கும்கொல்? என்றாங்கு அணிசெல, மேனி மறைத்த பசலையள்" (நெய்தற்கலி 26), "மேனி பசப்பதெவன்" (ஐங்குறுநூறு 217), "பசந்தமேனியள் படர்நோயுற்று" (சிலப்பதிகாரம் 13; 68). இவற்றுள் பசப்பு வந்துள்ளமை காண்க.

மேல், செயற்கை அணி சிதைந்தமை குறித்தாள்; இதில், இயற்கை எழில் இழந்தமையை யுணர்த்துகின்றாள்.

எமது காதலர் நேற்றுத்தான் பிரிந்து போயினர் யாமும் மேனி பசந்து ஏழுநாளுடைய மாயினேம் என்பதாம்.

பிரிவு கருதிநின்ற தலைவனது நிலையைக் குறிப்பாலறிந்து, தலைவி தோழியிடம் உரைத்தபடியிது வினைநலங்கருதி அயலகல விழைந்து அவ் விழைவினை வெளிப்படுத்தாமல் அடக்கமா யமர்ந்து அவன் ஒழுகி வந்தான்; வந்தவன் ஒருநாள் பிரயாணத்தைத் துணிந்து வைத்து அதனைப் பாங்கி யிடம் சொல்லி இவளுக்கு உணர்த்திவர வேண்டினன்; அவள் மறுநாள் வந்து இவளிடம் உரைத்தாள்; உரைக்கவே, அவர் நீங்க நினைந்தது நேற்றே; யான் ஏழுநாளைக்கு முன்னமே அதனை எதிரறிந்து கொண்டேன்; அறிந்த அன்றே என் உடம்பு முழுவதும் பசலை படர்ந்து படருழந்துள் ளேன்; இதோபார்! என்று பதிலுரைத்தாள் ஆதலால் "காதலர் நெருநற்றுச் சென்றார்; யாம் மேனிபசந்து எழுநாளேம்" என்றாள்.

செல்லு முன்னமே அல்ல லீதாயின், சென்றால் இவள் கதி என்னமோ? என இன்னுமையோடு விரைந்து மீண்டு இங்கு நிகழ்ந்ததையுரைத்து அவரைப் பிரிந்து போகாமல் பொருந்தும் வகை புரிந்து அவள் நிறுத்தி விடுவது இதன் கருத்தாம் என்க.

"அம்ம வாழி தோழி! காதலர்
பாவை யன்னஎன் ஆய்கவின் தொலைய
நன்மா மேனி பசப்பச்
செல்வல் என்பதம் மலைகெழு நாடே." (ஐங்குறுநூறு 221.)

காதலர் சென்று விடுவர் என்று நினைத்த உடனே உடல் பசந்து ஒருத்தி இதில் உளைந்திருத்த லறிக.

"சிறுபுன் புறவொடு சிற்றெழால் சீறும்
நெறியரு நீள்சுரத் தல்குவர்கொல்? தோழீ!
முறிமெழில் மேனி பசப்ப அருளொழிந்
தார்பொருள் வேட்கை யவர்." (திணைமொழி 15)

நான் மருளொடு பசந்துபட அவர் அருளொழிந்து போயினர் என ஒரு குலமகள் இதில் அலமந்திருத்தல் காண்க. மேனி பசந்து என்றதனால் இவள் உடலொளி குன்றியிருந்தமை யுணர நின்றது.

"வெருவரு கானம் நீந்திப் பொருள் புரிந்து
இறப்ப எண்ணினர் என்பது சிறப்பக்
கேட்டனள் கொல்லோ தானே தோட்டாழ்பு
சுரும்புண ஒலிவரும் இரும்பல் கூந்தல்
அம்மா மேனி ஆயிழைக் குறுமகள்
சுணங்கு சூழாகத்து அணங்கென உருத்த
பல்லிதழ் உண்கண் பரந்தன பனியே." (அகம் 161)

கணவன் பிரிவன் என்று கேட்டவுடனே ஒரு குலமகள் மேனி பசந்து அழுதிருக்கும் நிலையை இதில் அறிந்துகொள்க.

"காதலார் அகன்றபோழ்திற் கற்புடை மகளிர்போலப்
போதெலாம் குவிந்த பொய்கைத் தாமரை பொலிவுநீங்க
மீதுலாந் திகிரி வெய்யோன் மறைதலும், சிறுவெள்ளாம்பல்
தாதெலாமலர நக்குத் தம்மையே மிகுத்தவன்றே." (சூளாமணி)

உரியவர் அயலகலின் குலமகளிர் பொலிவிழந் தயர்வர் என இஃதுணர்த்திநிற்றலறிக. காதலன் பிரிவன் என்று நினைந்தவுடனே காதலி பசந்து வருந்துவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை காஞ்சனிபால் உரைப்படும்.

## கதை.

காஞ்சனி என்பவள் கருணாகரன் என்னும் பெருநிலக்கிழவனுடைய அருமைத் திருமகள். அரும்பெற லுருவினள். பெரும்

பொறைக்கற்பினள். தன்னிகரில்லா உன்னத நிலையினள். பொன்னொளி மேனியளாய் இன்னெழில் சுரந்திருந்த இவள் ஒருமுறை பொழிலகம் புகுந்து தனியேயுலாவி நிற்குங்கால் தொண்டைமான் இளந்திரையன் என்னும் அரசிளங்குமரன் அங்குவந்தான். அவன் பீலிவளை என்னும் நாககன்னிக்கும் சோழமன்னனுக்கும் பிறந்தவன், பேரழகன். இவளைக் கண்டவுடனே காமம் தலைக்கொண்டு கருத்துருகி நின்றான். இவளும் அவனை ஆர்வமொடு நோக்கி அகங்குழைந்து நின்றாள். அந் நிலையினை யறிந்து, உளமிக மகிழ்ந்து அருகணைந்து அன்புரைகள் பல அவன் இன்புற ஆடினான்.

"வளியூடியங்காது அறநெருங்கி வருவெம் முலையிற் செம்மாப்பும்
அளிய மருங்கின் வறுமையு நீர் அந்தோ கண்டீ ரிலைபோலும்
தளவமூரற் கருங்குழல்மேல் தணவாதிருந்தீர் மணிவண்டீர்!
களிகொள் நறவம் வாய்மடுத்த மயக்கம் கொல்லோ கழறுகவே? (க)

கன்னிப் பெடைவண்டினஞ் சூழ்ந்து களிக்குஞ் சுரும்பர்தாதாடும்
புன்னைப்பொதும்பர் நெடிதுயிர்த்துப் புலம்புற்றிருக்கும் மடநெஞ்சே!
மின்னுக்கொடியினொசிமருங்குல் வெள்வேல்நெடுங்கண்வேய்த்தடந்தோள்,
அன்னப்பெடையின் செங்கனிவாய் அமுதம் என்னுள் தரும் என்றான்". (உ)

என இன்னவாறு தன்னை மறந்து வண்டையும், நெஞ்சையும் நோக்கி மறுகிப் புலம்பி உருகிநின்ற அவன் இவளை மருவி மகிழ்ந்து பின்பு உலகறிய மணந்து அலகிலின்பங்களை நுகர்ந்து அறநலங்கள் புரிந்து அரசுபுரிந்துவந்தான். அவனது செங்கோல் மாட்சியும், திறலும், வண்மையும் எங்கும் பரவி இசைபெற்று நின்றன.

"மலர்தலை யுலகத்து மன்னுயிர் காக்கும்
முரசு முழங்கு தானை மூவருள்ளும்
இலங்குநீர்ப் பரப்பின் வளைமீக் கூறும்
வலம்புரி யன்ன வசைநீங்கு சிறப்பின்
அல்லது கடிந்த அறம்புரி செங்கோற்
பல்வேல் திரையன்" (பெரும்பாணாற்றுப்படை.)

என நல்லோரெல்லாரும் நயந்து புகழ உயர்ந்திருந்த அவன் ஒருமுறை மறுபுலந் தன்னிற் பொருதிறங் கருதி உறு படையுடன் உடன்று சென்றான். அப்பிரிவில் இவள் பெரிதும் வருந்தி உளங்கவன்று, உடல் மெலிந்து, படருழந்து பதைத்திருந்தாள்.

“ஆழி யிழைப்பப் பகல்போம்; இரவெல்லாம்
தோழி துணையாத் துயர் தீரும்—வாழி
நறுமாலை தாராய் திரையவோஒ என்னும்
செறுமாலை சென்றடைந்த போது.”

என்றபடி கன்றி யுழன்ற இவள் சந்தனை என்னும் தோழியை நோக்கி எனது ஆவித்துணை அயலகனுமுன் என்னுடல் பசலை படர்ந்து ஒளியிழந்து போயது என உளமிக மறுகி யுரைத்துளைந்தாள். “காதலர் நெருநல் சென்றார்; யாம் மேனி பசந்து எழுநாளேம்” என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

“அமரக மருங்கிற் கணவனை யிழந்து
தமரகம் புகூஉம் ஒருமகள் போலக்
கதிராற்றுப் படுத்த முதிராத் துன்ப மோடு
அந்தியென்னும் பசலை மெய் யாட்டி
வந்திறுத் தனளால் மாநகர் மருங்கு.” (மணிமேகலை5)

சூரியனாகிய தனது நாயகனைப் பிரிந்தமையால் அந்தி என்னும் மங்கை பசலைபடர்ந்த மெய்யளாய் நொந்திருந்தாள் என இதில் வந்துள்ளமைகாண்க. செவ்வானத்தின் செவ்வி தெரித்தபடியிது. பசப்புநிலை இன்னதென்பது இதனால் எளிது புலனாம்.

மேனி மிகமெலிந்து வெம்பசலை மேவியதே
கோனகலு முன்னே குலைந்து.

உடல்பசந்த நிலை இதனால் கூறப்பட்டது.

1279. சேவடியு மென்றோளுந் தேவகிமுன் நோக்கிநின்றாள்
கோவகலு மென்றேன் குமரேசா—மேவும்
தொடிநோக்கி மென்றோளு நோக்கி அடிநோக்கி
அஃதாண் டவள்செய் தது. (கூ)

இ—ள்.

குமரேசா! நாயகன் பிரிந்துபோவன் என்றவுடன் தன் தோளையும் காலையும் நோக்கித் தேவகி ஏன் துளங்கி நின்றாள்? எனின், தொடி நோக்கி, மென் தோளும் நோக்கி, அடிநோக்கி ஆண்டு அவள் செய்தது அஃது என்க.

இது, தலைவியின் குறிப்பைத் தலைவனிடம் தோழி யுரைக்கின்றது.

தொடி = வளையல். அடி = பாதம். உடலுறுப்புக்கள் எவற்றினும் அடியிலிருப்பதால் இது அடி என நின்றது.

அஃது = அக் குறிப்பு. அஃதாவது உடன் போக்கு. ஆண்டு = அப்பொழுது. தோழி போய்ப் பிரிவுணர்த்திய அச் சமயம் என்க.

அவள் என்று சுட்டியது அவளது தலைமையும், நிலைமையும் தெரிய தனித்தனி ஒவ்வொன்றையும் இடைவிட்டுத் தெளிவாகக் குறித்து நோக்கினாள் ஆதலால் அதனை அவன் நுனித்துணருமாறு தொடி முதலாக அடியோளி நயமாக மெல்ல இவ்வாறு இவள் நிறுத்தி யுரைத்தாள் என்க. இதனால் பாங்கி உரையாடும் பாங்கு புலனாம்.

தனது கைவளையை நோக்கி, மெல்லிய தோளைப் பார்த்துப், பின்பு காலை நோக்கி அப்பொழுது அவள் செய்தது அது என்பதாம்.

கூடியிருந்த தலைவன் மறுபடியும் காரியங்கருதிப் பிரிந்துபோக நினைந்து அவ் உண்மையைத் தோழியிடம் சொல்லித் தலைவிக்கு உணர்த்த வேண்டினான்; அவ்வாறே போய் இவள் உணர்த்தினாள்; உணர்த்தவே அவள் தொடி முதலியவற்றை நோக்கி அடி பெயர்ந்து அந்தப் புரத்துள் புகுந்தாள்; புகவே இவள் மீண்டு வந்து அச் செயல் நிலைகளை இவனிடம் இவ்வாறு உரைத்தாள் என்க.

தொடியை நோக்கியது, என் காதலன் பிரியின் இவ் வளைகள் கழன்று விழும் என்பது குறித்து; தோளை நோக்கியது, வளைகள் நெகிழ்ந்தொழியுமாறு இவை மெலிந்துபடும் என்று கருதி; அடியை நோக்கியது, தொடியும் தோளும் அங்ஙனம் கழன்று மெலிந்துபட யான் துயரில் அழுந்தி யுழலாவகை அவருடன் தொடர்ந்துபோயருள்க எனக் கால்களைப் பார்த்துக் குழைந்து வேண்டியபடி என்க.

அவர் அகன்று சென்றால் நானும் உடன் தொடர்ந்து போவேன் எனத் தான் அகத்தில் துணிந்த கருத்தை வாய்திறந்து சொல்லாமல் தன் நோக்கால் இவள் குறித்திருக்கும் அழகை இதில் கூர்ந்து பார்க்க. இது குறிப்புநுட்பம் என்க. இக் குறிப்பு நோக்கைக் காதலிகள் மிகவும் சாதுரியமாகக் கையாண்டுகொள்வர். ஒன்று அடியில் வருவது காண்க.

" காதலன் மெல்லுயிர்க்குக் காவல் புரிந்ததால்
பேதையர் ஆயம் பிரியாத—மாதர்
படரிருள்கால் சீக்கும் பகலவனை நோக்கிக்
குடதிசையை நோக்கும் குறிப்பு."

களவு நெறியில் ஒழுகி நின்ற காதலனை இரவில் வரும்படி ஓர் காதலி உணர்த்தியபடி யிது. சூரியனைச் சுட்டிவிட்டு, மேலத் திசையை நோக்கியது பொழுதடைந்தபின் வருக என்றவாறு. அயலில் நின்ற தோழியர் யாரும் அறியாவகை நோக்கினால் இவள் உணர்த்தியதை அவன் நுனித்துணர்ந்துகொண்டு அரும்பசிக்கு ஓர் அமிர்தம் கிடைத்ததுபோல் பெருங்களிப்போடு பெயர்ந்து சென்றுளதலால் "குறிப்பு, காதலன் உயிர்க்குக் காவல் புரிந்தது" என்றான். காவல் புரிந்தது என்றதனால் அவனது ஆவல் நிலை தெரிந்தது. குறிப்பறிவுறுத்தலின் திறம் இன்னதென்பது இதனால் இனிது புலனாம்.

" பயிருறு கிண்கிணி, பரந்த மேகலை
வயிரவான் பூணணி வாங்கி நீக்கினாள்;
உயிருறு தலைவன்பால் போக உன்னினாள்;
செயிருறு திங்களைத் தீய நோக்கினாள்." (இராமாயணம்)

தன் காதலனைத் தேடி இரவில் வெளியே போன ஒரு காதலியின் குறிப்புணர்த்திய பாசுரமீது. பிரிந்துபோன அவன் விரைந்து வரவில்லை என்று நெடிது வருந்தியிருந்த இவள் முடிவில் அவன் இருக்கும் இடத்தை யடையத் துணிந்தெழுந்தாள்; எழுந்தவள் காலிலுள்ள சிலம்பையும், இடையிலணிந்திருந்த மேகலையையும் கழற்றி எறிந்தாள்; ஏன் நீக்கினாள்? எனின், அவையிருந்தால் நடக்கையில் ஒலித்துத் தன் போக்கைப் புறமறிய வுணர்த்திவிடும் என்று கருதி என்க. இங்ஙனம் வறிதே போம்பொழுது இனிய நிலா வெளியே மிகவும் ஒளிவீசி நின்றது; அதனால் தன் கள்ளந் தெரிந்து விடும் என்று உள்ளங் கூசிச் சந்திரனை உருத்து நோக்கி மறுத்து வந்து மனை புகுந்தாள் என்க. காமக் கருத்துடைய காதலிகள் குறிப்பொடு நோக்கிக் குலாவி நிற்குந் திறங்கள் இங்ஙனம் பலவுள; அவற்றைக் குறித்துணர்ந்து கொள்க.

நாயகனை யாண்டும் பிரியாமல் நாயகி நயந்து நிற்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தேவகிபால் உணரப்படும்.

## கதை.

தேவகி என்பவள் தேவகன் என்னும் சிற்றரசனுடைய அருமைத் திருமகள். குணநலங்களில் சிறந்தவள். அதிரூபவதி. மகா பதிவிரதை. இக்குலமகளை வசுதேவன் என்னும் தலைமகன் விரும்பினன். அவன் சூரசேனன் என்னும் அரசனுடைய அருமைக் குமரன். பெருந்தகையாளன். உருவிலும் திருவிலும் அறிவிலும் அன்பிலும் நிறையொத்திருந்த இவளை அவன் நெடிது விழைந்து கடிமணம் புணர்ந்தான். அத் திருமணம் வடமதுரையில் மிகவும் சிறப்புடன் நடந்தது. அரசகுமாரர்கள் அணியமர்ந்திருக்க, அரிய இயங்கள் பலபல முழங்கப் பெருமித நிலையில் நிகழ்ந்த அம் மணவினை மாண்பு மறுபுல மெங்கணும் புகழ்பெற நின்றது.

> "பருந்து சூழ்தரு பரிதிவேற் படை வசுதேவன்
> புரிந்தவெள்வளை பொலமுரசுடைபட முழங்கச்
> சுரும்பு சூழ்பசுந் தோட்டநாண் மலர்த் தொடைசூட்டித்
> திருந்து வெண்ணகைத் தேவகி திருமணம் புணர்ந்தான்" (பாகவதம்)

இங்ஙனம் மணம்புரிந்து அரிய போகங்களை நுகர்ந்திருந்தார். இவரது மனைவாழ்க்கை அறம்பல தழைக்க அமைந்து நின்றது. கண்ணும் இமையும்போல் கலந்து இப் பெண்ணமிர்தத்தோடு உவந்து அவ் அண்ணல் அமர்ந்து வருங்கால் மண்ணவர் செய்த தவத்தால் திருமாலே வந்து இவள் வயிற்றில் உருவாகி யுறைந்தார். அக்கருவுட்கொண்ட பொழுது இவள்உருவம் திரிந்தது. ஆலிலைபோலிருந்த வயிறு சாலவும் பருத்தது; ஒல்கி ஒசிந்திருந்த இடை உரங்கொண்டு திகழ்ந்தது. அந்நிலையைக் குறித்து அறிஞர் வருணித்திருக்கும் திறங்களை அடியில்வருங் கவிகளில் காண்க

> "விண்ணிடை இரண்டு வெற்பு நின்றிடா வென்ன மேலோர்
> எண்ணிய அனுமானத்தால் எய்துநுண் மருங்குல், மங்கை
> அண்ணலங் கருப்பந்தாங்கு மாற்றின்அவ் வளவையன்றிக்
> கண்ணளவானும் யார்க்குங் காண்வரத் தோன்றிற்றன்றே. (க)
>
> உலகனைத்தினையும் உண்டோன் தமதிடத் தூறுதீம்பால்
> மலைவுற நுகர்ந்து நாளும் வளர்வனென்றுவந்து கொல்லோ
> இலவிதழ்க் கோதையெல்லா வுறுப்பினும் எழில்கொண்டோங்கி
> அலர்சுணங் கணிந்து வீங்கி அணிமுலை பருத்ததன்றே. (உ)

அருப்பமென் றெவருங்கூறு மருங்குறு வறுமை ஐயன்
கருக்குழி யுற்றஞான்றே தீர்த்தகாரணத்தால், யார்க்கும்
உருப்பநோய் செய்யும் வெய்ய வறுமைவிட்டோட நாளும்
திருக்கிளர் பதஞ்சேர்ந்தோர்க்குத் தீர்ப்பதற்கு ஐயமின்றே. (௩)

வாட்டங் கண்ணி மார்பின் வந்துதிக்கொண்ட ஞான்றே
கோட்டமுற் றுலகெத்தேய்ந்த கொடியிடைப் பகைநாள்நாளும்
ஈட்டிய கருவால்வீங்கும் இகழ்ச்சிநோ ளுறைமை யன்றோ
மோட்டிளங் குரும்பைபோலு முலைமுகம் கறுத்ததன்றே. (௪)

ஆவணித் திங்கள்தன்னில், அமரபக்கத்தில், நன்கு
மேவுரோகணியில், தூய்தாய் விளங்கும் அட்டமியில், நாளும்
தாவில்சீர் புதன்வாரத்தில் தகைபெறுங் கங்குற்பாளுன்
தேவகி யுலகமீன்ற செல்வனை யினிதின் ஈன்றாள். (கூர்மபுராணம்)

இவளது உருவ அமைதியும், கருமின் பேறும் இதனால் இனிதறிய லாகும். அவ்வண்ணக் குழவியே கண்ணன் எனப்பெயர்பெற்று மண்ணும் விண்ணும் புகழ எண்ணரிய நலங்களை இங்கு இயற்றி நின்றது. இங்ஙனம் திருவமர்ந்திருந்த இவளோடு அவ் அறிவ னமர்ந்து மகிழ்ந்துவருங்கால் கேகயநாட்டில் நிகழ்ந்த ஓர் வேள்வி விழாவிற்கு அவன் போகநேர்ந்தது. அப்பிரிவை இவளிடம் நேரில் கூறின் நிலைகுலைந்தயர்வள் என்று கூசிச் சாந்திகை என்னும் தோழி யின் மூலம் மெல்லச் சொல்லி விடுத்தான். அவள் விநயமாக வந்து அதனை இவள்பால் இனிது மொழிந்தாள். இவள் உள்ளம் கலங்கி ஒன்றும் பேசாமல் தன் உடல் முழுவதையும் ஒருமுறை உருவ நோக்கிப் பெருமூச் செறிந்தாள். அவள் மறு பேச்சில்லாமல் சென்று அக்குறிப்பை அவனிடம் உரைத்தாள். அதன்பின் அவன் பிரிந்து போவதை விடுத்து அமர்ந்திருந்தான். இவள் கருதிச் செய்த குறிப்பைப் பாங்கி அவன்பால் தெரிய விரும்பினுள். உடம் பைப் பார்த்துவிட்டுப் பெருமூச்சு விட்டது ஆவிபோனால் இந்தத் தேகம் நில்லாது; அதுபோல் எனது நாதன் நீங்கினால் நான் இங்கு இரேன் என்பாள் அங்ஙனம் செய்துநின்றாள் என அக் குறிப்பின் கருத்தை அவன் விரித்துரைத்தான். தலைவன் பிரியநேரின் குல மகளிர் அவனோடு உடன்போகத் துணிவர் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

கைவளையு மென்றேளுங் காலுங்கண் ணேக்கிநின்றாள்
பெய்வளையென் செய்வாள்கொல் பின்.

தலைவியின் உடன்போதற் குறிப்பு இதனால் கூறப்பட்டது.

1280. உண்டான பெண்மை யுடையளென இந்திரையென்
கொண்டாட நின்றான் குமரேசா— தண்டாத
பெண்ணினாற் பெண்மை யுடைத்தென்ப கண்ணினாற்
காமநோய் சொல்லி யிரவு. (ய)

இ—ள்.

குமரேசா! பெண்மை மிக வுடையாள் என இந்திரையைக் கணவன் ஏன் புகழ்ந்து நின்றான்? எனின், கண்ணினால் காமநோய் சொல்லி இரவு பெண்ணினால் பெண்மை யுடைத்து என்க.

பெண்மை = பெண்ணின் தன்மை. அஃதாவது நாணம், நிறை அச்சம், பயிர்ப்பு, மென்மை முதலிய மேன்மைகள்.

"செறிவும் நிறையும் செம்மையும் செப்பும்
அறிவும் அருமையும் பெண்பா லான" (தொல்காப்பியம்.)

மறை வெளிப்படுத்தாமல் அடக்கமாய் நின்று ஒழுகிவரும் தன்மைகள் பெண்பாலார்க்கு உரிமையாயுள்ளன என இஃதுணர்த்தி நிற்றலறிக. இரவு = யாசித்தல், கெஞ்சிக்கேட்டல் என்க. சொல்லி என்றது காமதாபத்தின் கொடுமையையும், பரிதாபத்தையும்விரித்து உரைத்து என்றவாறு. கண்ணினால் சொல்லலாவது பார்வைக் குறிப்பால் ஓர்ந்துணர வைத்தல்.

தன் காமதாபத்தை வாய்திறந்து சொல்லாமல் கண்ணினால் குறித்து வேண்டி நிற்கும் பெண்ணினாலேதான் பெண்மையுடையது என்பதாம்.

இனி, பெண்ணினால் பெண்மையுடைத்து; கண்ணினால் காமநோய் சொல்லி இரவுடைத்து எனவுமாம். பெண்ணீர்மை பெண்ணால் பேணப்படுவது போல், காமதாபம் கண்ணால் பேணப்படும் என்றவாறு. காதலியின் உள்ளக்காதலை அவளது கண்ணால் உணர்ந்து காதலன் உவந்து கூறியதென இதனை ஓர்ந்துகொள்க.

கணவனைப் பிரிந்து தனியே இருக்க முடியாது; பிரியின் உயிரிழந்த உடல்போல் ஒழிவுற நேரும்; ஆதலால் அப்பேருளாளர் யாண்டும் அகலாமல் என்னுடன் ஈண்டே இனிதமர்ந் திருக்க வேண்டும்; அல்லது உடன் கொண்டு போகவேண்டும்; என இங்

நனம் உளங் கொண்டுள்ள தன் காதல் நிலைமை வாயால் ஒன்றுஞ் சொல்லாமல் கண்பார்வையாலேயே யாவும் தலைவி உணர்த்தி நின்றுளாதலால் அவ்வுண்மை நிலைமை ஓர்ந்துணர்ந்த தலைவன் அவளது பெண்மையை வியந்துரைத்த படியிது. அவன் பிரிந்து போதலை மறந்து இவளுடன் கலந்திருத்தலையே துணிந்து அன்பு கனிந்து அமர்ந்து நிற்றல் இதன் பயனும் என்க.

இராத்தலை மேற்கொண்டவர் யாண்டும் இழிவினையடைவர்; இவள் யாதும் அடையாமல் மேன்மையுடனின்று காரியமும் கைக் கொண்டாள் ஆதலால் அப் பேரியல்பை நினைந்து கண்ணினால் இரவு, பெண்ணின் மேலும் ஓர் பெண்மையுடையது என இங்ஙனம் உவந்து புகழ்ந்தான் என்க.

தங்கள் காமத்தை வெளிப்படையாக வாய்விட்டுச் சொல்லாமல் கண்களாலேயே பெண்கள் உணர்த்தி விடுவர் என்பதும், அக்குறிப்பைக் காதலர் உணர்ந்துகொள்வர் என்பதும் இதனால் உணரலாகும்.

> "சோர்குழல் ஒருத்தி தன் வருத்தஞ் சொல்லுவாள்
> மாரனை நோக்கி, ஓர் மாதை நோக்கினாள்;
> காரிகை இவள் அவள் கருத்தை நோக்கி, ஓர்
> வேரியந் தெரியலான் வீடு நோக்கினாள்." (இராமாயணம்)

ஒரு காதலி தனது விரகதாபத்தைத் தோழியிடம் உணர்த்தி உறுதிவேண்டியபடியிது. மதன விதனம் பொறுக்கமுடியாதென்பாள் மன்மதனது சித்திரத்தை நோக்கினாள்; உடனே போய்க் காதலனை அழைத்து வந்தருள்க என்பாள் அருகிலிருந்த பாங்கியை நோக்கினாள்; அவள் இதோ போய்க் கொண்டு வருகின்றேன் என்பாள் அவனிருக்கும் திசையை நோக்கினாள் என்க. ஒருத்தி மாரனை நோக்கி மாதை நோக்க, அப் பாங்கி அக்கருத்தை அறிந்து அவளுடைய கணவனது மனையை நோக்கினாள் என்று காண்க. வேரி = வாசம். தெரியல் = மாலை. மணம்பொருந்திய அழகிய மாலையையுடையான் எனத் தலைவனது இன்பச் சிறப்பை நினைந்து கூறியவாறு. தெரியலான் என்பதில் வேறொரு தொனியு முள்ளது; என்னை? அவளது விரகவேதனை தெரியாதிருக்கும் பெரியான் என இகழ்ச்சிக் குறிப்போடு எண்ணி உரைத்தபடியாம்; கண்ணினால்

காமநோய் சொல்லிறிக்கும் தன்மையும், அதன் நுண்மையும் இத னால் இனிது புலப்படும். உள்ளக்கருத்தை நோக்கின் குறிப்பால் உணர்த்தி வந்தமையால் இது, குறிப்பறிவுறுத்தல் எனச் சிறப்புற்று நின்றது.

தலைவியின் உள்ளக் காதலை அவள் கண்ணால் உணர்ந்து தலை வன் உவந்து நிற்பன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை இந்திரையால் உணரப்படும்.

## கதை.

இந்திரை என்பவள் சந்திரகாசன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகள். உத்தம குணங்களெல்லாம் ஒருங்கமையப் பெற்றவள் சர்வாங்க சுந்தரி. சந்திர வதனமும், தாமரை நயன மும், செந்தளிர் மேனியும் திகழ்ந்து நின்றவள். இவளது பேரெழில் நிலையை வினவியறிந்து நன்மாறன் என்னும் பாண்டிய மன்னன் இவளை விழைந்து வந்து மணந்துகொண்டான். அவன் மகா வீரன். அதி மேதாவி. பெருங் கொடையாளன். தன்னை அடைந்தவ ரெவராயினும் அவரை ஆதரித்தருளும் அருந்திறலுடையவன்.

> "வல்லா ராயினும் வல்லுந ராயினும்
> புகழ்த லுற்றோர்க்கு மாயோன் அன்ன
> உரைசால் சிறப்பிற் புகழ்சால் மாற!" (புறம் 57)

எனப் புலவர் புகழ நிலவி நின்ற அவன் இவளோடமர்ந்து அலகில் போகங்களை நுகர்ந்து அரசு புரிந்து வந்தான். "செந்திருவை யடைந் துயர்ந்து தேவரிடைச் சிறந்தொளிரும் திருமால்போல, இந்திரையை மணந்து மகிழ்ந் தெவ்வுலகும் புரந்தருளும் இசை சால் ஏந்தல்!" என இவளது பேற்றை வியந்து அவன் மிகவும் போற்ற நின்றான். இப் பெரும்பாக்கியவதியும் அப் பெருந் தகையாளனும் ஒருயிரெனப் பொருந்தி யுவந்து வருங்கால் மறுபுலத் துள்ள இரு பெரு வேந்தரும் இகலூக்கி நின்றார். அவரை வென் றடக்கி அவரது அரசுகளைக் கவர்ந்துகொள்ள இம் மன்னன் எதிர் நோக்கி நின்றான். பருவமறிந்து ஒருமுறை படைகளோடெழுந் தான். அப் பிரிவினை நினைந்து இவள் பெருந்துய ருழந்தாள். தன் கருத்துறு துயரைக் கண்ணீரால் காட்டினாள். அவ் அண்ணல்

அகலாது இவனை அணைந்து நின்றான். அவ்வமயம் அங்கு இடைக்காடர் வந்தார். அப் புலவர் பெருமானை அக் குலமகன் புகழ்ந்து போற்றி யுவந்து உபசரித்தான். அவனது அமர் நோக்கையும், இவனது அவல நோக்கையும் அவர் தகவுடனறிந்து அரசை நோக்கி ஒரு கவி உரைத்தார். அடியில் வருவது காண்க.

"ஆனா ஈகை அடுபோர் அண்ணல்! நின்
யானையும் மலையிற் றோன்றும்; பெரும! நின்
தானையும் கடலென முழங்கும்; கூர்நுனை
வேலும் மின்னின் விளங்கும்; உலகத்து
அரைசுதலை பனிக்கும் ஆற்றலை ஆதலின்,
புரைதீர்ந் தன்றது புதுவதோ அன்றே;
தண்புனற் பூசல் அல்லது நொந்து
களைக வாழி வளவ என்று நின்
முனைதரு பூசல் கனவினும் அறியாது,
புலிபுறங் காக்கும் குருளை போல
மெலிவில் செங்கோல் நீ புறம் காப்பப்
பெருவிறல் யாணர்த் தாகி, அரிநர்
கீழ்மடைக் கொண்ட வாளையும், உழவர்
படைமிளிர்ந் திட்ட யாமையும், மறைநர்
கரும்பிற் கொண்ட தேனும், பெருந்துறை
நீர்தரு மகளிர் குற்ற குவளையும்,
வன்புலக் கேளிர்க்கு வருவிருந் தயரும்,
மென்புல வைப்பின் நன்னாட்டுப் பொருந!
மலையின் இழிந்து மாக்கடல் நோக்கி
நிலவரை இழிதரும் பல்யாறு போலப்
புலவ ரெல்லாம் நின் நோக்கினரே;
நீயே, மருந்தில் கணிச்சி வருந்த வட்டித்துக்
கூற்றுவெகுண் டன்ன முன்பொடு
மாற்றிரு வேந்தர் மண்ணோக் கினையே." (புறம் 42)

இவனது சேனைப் பெருக்கும், ஆட்சித் திறமும், நிலவளமும், குடிகளின் மகிழ்வும், புலவர்களை ஆதரித்த நிலைமையும், போர் வேட்டு நின்ற தலைமையும் பிறவும் இதனால் இனிது புலனும். ஆனாஈகை = நீங்காத கொடை. அஃதாவது மேலும் மேலும் கொடுக்கவேண்டும் என என்றும் இடையறாது விரும்பி நிற்கின்ற வண்மை என்க. நதிகள் கடலை நோக்கி நிற்றல்போல் கவிகள் அவனை நோக்கி நின்றனர் என்றது அவனது பெருந்திருவையும், தருந் திறனையும், விரிந்து பரந்து எல்லையின்றி நின்ற ஆதரவையும்

எண்ணி யென்க. இங்ஙனம் பெருந்தகைமையோடு சிறந்திருந்த அவன் அவ் அறிவுரையை மகிழ்ந்து பேணி அமைந்து அமர்ந்து நின்றான். தன் பிரிவை அறிந்து உருகி வருந்தி அம் மனவருத்தத்தை வாய் விட்டுச் சொல்லாமல் கண்ணால் காட்டிக் கனிந்து நின்ற இவளது பெண்மையை நினைந்து நினைந்து நெஞ்சம் வியந்தான். "கண்ணி னால் காமநோய் சொல்லி இரவு, பெண்ணினால் பெண்மையுடைத்து" என்பதை உலகம் இவள்கண் உணர்ந்து நின்றது.

காம நிலையைத்தன் கண்ணினால் காட்டிநின்றாள்.
ஏமமிவள் பெண்மை இனிது.

தலைவியின் உண்மை நிலை இதனால் கூறப்பட்டது.

இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்.

தலைவியின் உள்ளக் குறிப்பைத் தலைவன் அவள் கண்ணால் அறிந்து கொள்வன். அவளது தன்மையை மகிழ்ந்து நிற்பன். அவள் முகக் குறிப்புணர்வன். நகைநலந் தெரிவன். உள்ளக் கருத்தை ஓர்ந்து தெளிவன். அவள், அவனது ஆர்வ நிலையை நோக்கி ஐயுறு வள். போவன் என்று பெருந் துயரடைவள். பிரியு முன்னரே யுருகி அயர்வள். அவனுடன் போதலை அவாவி அக் கருத்தைக் குறிப்பாலுணர்த்துவள். அவளுடைய பெண்மை நிலையை வியந்து அவன் பேணி நிற்பன் என்பதாம்.

௱௨௮-வது குறிப்பறிவுறுத்தல் முற்றிற்று.

## 129-ம் அதிகாரம் புணர்ச்சி விதும்பல்.

அஃதாவது தலைவியும் தலைவனும் கலவியில் விரைதல். உள்ளக் குறிப்பை யுணர்ந்துகொண்டவுடன் காதலர் புணர்ந்து மகிழ விரைந்து நிற்பர் ஆதலால் குறிப்பறிவுறுத்தலின் பின் இது வைக் கப்பட்டது. ௧௧௧-ம் அதிகாரத்தில் வந்துள்ள புணர்ச்சி மகிழ்த லுக்கும் இதற்கும் வேறுபாடு என்னை? எனின், அது களவு நெறி யில் தலைவியிடம் நுகர்ந்த கலவியின்பத்தைத் தலைவன் மகிழ்ந்து புகழ்ந்தது; இது, கற்பு நிலையில் காதலிருவரும் அவ் இன்ப நுகர்ச்சியை விழைந்து அன்புகனிந்து விரைந்ததென்க.

1281. கண்டு மகிழ்ந்து களித்தங்கி காதலிமுன்
கொண்டுவந்தாள் என்னே குமரேசா — கண்டாமல்
உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்
கள்ளுக்கில் காமத்திற் குண்டு. (க)

இ—ள்.

குமரேசா! தன் காதலனைக் கண்டவுடன் சுவாகாதேவி ஏன் களித்து மகிழ்ந்தாள்? எனின், உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும் கள்ளுக்கு இல்; காமத்திற்கு உண்டு என்க.

இது, காமத்தின் களிப்புரைக் கின்றது.

உள்ளல் = ஊன்றி நினைத்தல். நினைப்பு எல்லாச் செயல்களுக்கும் மூலமாதலால் அம் முதன்மை தோன்ற முதலிற் குறித்தார்.

களித்தலும் மகிழ்தலும் இன்ப நிகழ்ச்சிகளாயினும் முன்னதினும் பின்னது ஒரு படி மேலானது. களிப்பு, உணர்ச்சியோடொன்றி நிற்கும்; மகிழ்ச்சி, உணர்வுருவழிந்து பரவசமாய் மருவியெழும் என்க.

கள்ளைக் காமத்தோடு இணைத்து வைத்தது உள்ளக் களிப்பூட்டும் உரிமை நோக்கி. கள்ளை உண்டபொழுது மட்டும் களிப்பும் மகிழ்ச்சியும் உண்டாகுமேயன்றிக், கண்டபொழுதும் கருதியவுடனும் உண்டாகா ஆதலால் உள்ளக் களித்தலும், காண மகிழ்தலும் கள்ளுக்கு இல்லை என்றார். காமமோ, நினைப்பினும் நோக்கினும் களிப்பையும் மகிழ்ச்சியையும் விளைக்குமாதலால் அவ்வுண்மையை யுணர்த்திக் கள்ளினும் இனிது என அதன் தன்மையை இங்ஙனம் விளக்கியருளினர். "உள்ளினும் தீராப் பெருமகிழ் செய்தலால், கள்ளினும் காமம் இனிது" (குறள் 1201); "உண்டார்கண் அல்லது அடுநறாக் காமம்போல் கண்டார் மகிழ்செய்தலின்று" (குறள் 1090). என முன்னரும் வந்துள்ளன காண்க.

நினைத்த மாத்திரத்தே களிப்படைதலும், கண்டவுடனே மகிழ்ந்து கோடலும் கள்ளருந்தினார்க்கு இல்லை; காமமுடையார்க்கு உண்டு என்பதாம்.

காதலனைக் கண்டவுடனே யாதும் தாழாமல் கலந்து மகிழ்ந்த தலைவி அம்மகிழ்ச்சி நிலைமையைத் தோழிக்கு உரைத்தபடி யிது. அயலமர்ந்தபோது வாடியிருந்த நீ சிறிது ஊடி நிற்கலாகாதா? உடனே கூடிவிடவேண்டுமோ? என்று அவள் நாடிக் கேட்டதனால் தன்னை மயக்கிய காமத்தின் தன்மையை இன்னவகையி லிசைத் துணர்த்தினள். காமக் களிப்பின் இயல்பை எளிதில் தெளிதற்குக் கள்ளின் களிப்பை எடுத்துக் காட்டினள்.

"மடாஅ நறவுண்டார் போல மருளா
விடாஅது உயிரொடு கூடிற்று என் உண்கண்
படாஅமை செய்தான் தொடர்பு" (நெய்தற்கலி 30)

"வெளுத்தன சேயிதழ்; விழி சிவந்தன;
அளித்தொகை எழுந்தன; அளகம் சோர்ந்தன;
குளித்திடு மலர்த்தடம் கொடியனார்க்கெலாம்
களித்திடு கணவரும் கள்ளும் ஒத்தவே." (கந்த புராணம்.)

"இலவிதழ் துவர்விட, எயிறு தேனுக,
முலைமிசைக் கச்சொடு கலையு மூட்டற
அலைகுழல் சோர்தர அசதி யாடலால்
கலவிசெய் கொழுநரும் கள்ளும் ஒத்தவே." (இராமாயணம்)

"கோதறுங் குவளை நாட்டம் கொழுநர்கள் நாட்டம் கொள்ளத்,
தூதுளங் கனியை வென்ற துவர்த்தவாய் வெண்மைதோன்ற,
மாதரு மைந்தர் தாமும் ஒருவர்மேல் ஒருவர் வைத்த
காதலங் கள்ளுண்டார்போல் முறைமுறை களிக்கின்றாரை."
(சுந்தரகாண்டம்.)

"நாம மருடலும் நட்பும் தணப்பும்
காமமும் கள்ளும் கலந்துடன் பாராட்டத்
தாமமர் காதலரொடு ஆடப் புணர்வித்தல்
பூமலி வையைக்கு இயல்பு." (பரிபாடல் உ௰)

காமத்தோடு கள்ளை யிணைத்து இவை உணர்த்தியுள்ளமை காண்க.

"கலவிக் களியின் மயக்கத்தால்
கலைபோ யகலக் கலைமதியின்
நிலவைத் துகில் என்று எடுத்துடுப்பீர்
நீள்பொற் கபாடம் திறமினோ" (கலிங்கத்துப்பரணி)

காமக் களிப்புடையார் நிலைமை இது காட்டி நிற்றலறிக. கணவனைக் கண்டவுடன் காதலி கலந்து களிப்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுவாகாதேவிபால் உணரப்படும்.

## கதை.

சுவாகா தேவி என்பவள் அங்கினி தேவனுடைய அருமைத் திரு மனைவி. வியக்கத் தக்க மெய்யழகுடையவள். இவளது அங்க அமைதியும், சமுதாய சோபையும் எங்கும் வியந்து புகழும்படி சிறந்து விளங்கி யிருந்தன. மகா பதிவிரதை. மதிநல முடையவள் நாயகனது குறிப்பறிந்து அவனுக்கு ஆய பணிகளையே ஆய்ந்து புரிந்து பலவகையிலும் அன்பாற்றி ஆதரவு செய்துவந்தாள்.

"மதியின் அமைச்சாய்; ஏவற்குச் சிலதியாகி, வனப்பினுக்குப்
புதுமென் மலரிற் றிருக்கணங்காய்ப், பொறையிற் பூமிதேவியாய்,
முதிரும் அன்பில் தாயாகி, முயங்கும் இன்பக் கலவி தனக்கு
இதயமுருக்கும் கூத்தியென ஈறிலின்பம் பயந்தாளாய்; (க)

கற்பிற்கினிய அருந்ததியாய்க், கண்ணும் மனமும் தனிகவரும்
பொற்பிற்குயர்வான் உருப்பசியாய்ப், புனித ஒழுக்கமுடையாளாய்,
வெற்போர் அனுவாம் எனப் புடைத்துச் செம்மாந்தெழுந்து வீங்குமுலை
அற்போருருவு கொண்டனைய அணங்கை விழைவின் மணம் புரிக."

என்றபடியே இனந்தெரிந்து இவளை மணந்து கொண்டு அங்கியங் கடவுள் அகமிக மகிழ்ந்தான். ஆவிச்சுவை நுகர்வில் அவன் அதிபதியா யிருந்ததுபோலவே காமச் சுவை நுகர்விலும் கைதேர்ந்து இரவும் பகலும் இணைபிரியாமல் இவளோ டமர்ந்து சுரத ஆடல்கள் புரிந்து இரதம் களிந்து இன்பம் துய்த்து அன்பாற்றிவந்தான்.

"விரைதலே சமம் தாக்கென்னும் வேகமும் உச்சம் நீசம்
புரைதவிர் சமமென்றோதும் பொருண்மையும் குணத்திற் பற்றிப்
பரவும் ஐவகையில் ஈரைம் பகுதியால் பிறவால் சேர்தல்
உரைதரு புணர்ச்சியாகும் உபரியு மனைய தொன்றே; (க)

உறுத்தலே நெருக்கல் மெல்ல வுரோசுதல் உறுதல் முன்றா
மறுத்தவிர் தருவு சூழ்ந்த வல்லியே மரமேற் கோடல்
செறித்த வெள்ளரிசி பாலார் தீம்புனல் செயிர்தீர் காட்சிப்
புறத்திலோ ருறப்புறுத்தல் புணர்ச்சியிற் புல்லற் பால; (உ)

வைத்தலே துடித்தல் ஒற்று மரமொப்பு விலங்கு சுற்றே
யுத்தர மதுக்கல் உள்ளீ டோங்கு சம்புடாதி தன்றால்
பத்துடனென்றும் எனைப் பல்வகை யுறுப்பு நாடி
முத்திறத் தமிர்தமுண்டல் முன்மொழி சுவைத்தலாமே." (௩)

எனவரும் இன்னவகையான மதன லீலைகளில் மன்னியாழ்ந்து அவன் மருவிக் களித்தான். அவன் விழைந்தவாறெல்லாம் குழைந்திணங்கி மெய்யின்பநல்கி இவள் விளங்கி யிருந்தாள். இங்ஙனம் இருந்துவருங்கால் மேரு மலையில் நிகழ்ந்த தேவயாகத்

திற்கு அவன் போக நேர்ந்தது. அங்குச் சப்த ரிஷிகளுடைய பத்தினிமார்களை ஒருநாள் மாலையில் கண்டு அவன் பெருமால் கொண்டான். அவர்கள் சிறந்த கற்புடையவர்களாதலால் யாதும் பலியாமல் காம வேதனையிருந்து ஏமமின்றி அவன் ஏங்கி வருந்தினன். அச் சந்தாபம் பொறுக்கமுடியாமல் தவித்துவந்தான். வரவே அவனது நிலையினை யறிந்து இவள் உளமிக இரங்கி அம் முனிவர் மனைவியர் போலவே உருவம் எடுத்து முறைமுறை முயங்கி மோகத்தைத் தீர்த்தாள். அடியில்வருவது காண்க.

> "மேருக் குன்றத்து ஊருநீர்ச் சரவணத்து
> அருந்திறல் முனிவர்க்கு ஆரணங்கு ஆகிய
> பெரும்பெயர்ப் பெண்டிர் பின்புளம் போக்கிய
> அங்கி மனையாள் அவரவர் வடிவாய்த்
> தங்கா வேட்கை தனையவள் தணித்ததூஉம்
> கேட்டும் அறிதியோ வாட்டிறற் குரிசில்!" (மணிமேகலை 18)

மேற்குறித்த வுண்மை இதில் உரைக்கப் பட்டுள்ளமையறிக. அங்கி = அக்கினி. இதனால் இவளது உழுவலன்பும், உள்ளப் பண்பும் இனிது புலனும். தன்னைப் பிரிந்துபோய்ப் பிறரை விழைந்ததை யறிந்தும் கணவனைக் கண்டவுடனே யாதும் புலந்து நில்லாமல் இவள் மகிழ்ந்து கலந்ததைவியந்து அனைவரும் புகழ்ந்துகொண்டார். உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும் காமத்துக்கு உண்டு என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

> கண்டபோ தெல்லாம் களிப்பூட்டும் காமம் கள்
> உண்டபோ தொன்றே யுறும்.

காமம் பெரு மகிழ்வுடையதென்பது இதனால் கூறப்பட்டது.

1282. ஊடா தயிரா வதியுவந்தாள் காதலன்றான்
கூடாமுன் என்னே குமரேசா—நாடித்
தினைத்துணையு மூடாமை வேண்டும் பனைத்துணையுங்
காம நிறைய வரின். (உ)

இ—ள்.

குமரேசா! பிரிந்த நாயகன் வந்தபொழுது அயிராவதி ஏன் யாதும் ஊடாமல் அணைந்துகொண்டாள்? எனின், பனைத்துணை யும் காமம் நிறையவரின் தினைத்துணையும் ஊடாமைவேண்டும் என்க.

தினை பனை என்பன சிற்றெல்லைக்கும், பேரெல்லைக்கும் ஒப்பாய் வந்தன. "தினைத்துணை நன்றி" (குறள் 104); "தினைத்துணை யாம் குற்றம்" (குறள் 433) என முன்னும் வந்துள்ளமை காண்க.

ஊடாமை = பிணங்காமை. வேண்டும் என்றது உறுதி தோன்ற நின்றது. ஊடினால் உயிர் வேதனையாம் என்பது குறிப்பு.

காமத்துக்குப் பனையை அளவு காட்டியது அதன் மிகுதிகாண.

"நாமமுந்நீர் போலக், காம வெந்நோய் கையிகந் தன்றே" என இதில் கடலை உவமை கூறியுள்ளமை காண்க.

மேல், காமம் கண்டவுடனே களிப்பூட்டும் என்றாள்; இதில், அது மண்டி யெழுங்கால் முண்டி நிற்கலாகாதென்கின்றாள்.

காமம் பனையளவினும் மிகுதியாக மீறியெழின் தினையளவு கூட ஊடலாகாதென்பதாம்.

பிரிவில் வாடியிருந்த தலைவி நாயகன் வந்தவுடன் சிறிதும் ஊடாமல் கூடி மகிழ்ந்தாள்; அந் நிலையினையறிந்த தோழி கொஞ்ச நேரமாவது புலந்து நிற்கலாகாதா? என்று புன்னகை யாடினாள்; அவ்வமயம் அவளை நோக்கி இவ்வாறு உரைத்தாள் என்க.

காமம் நிறையவரின் ஊடாமை வேண்டும் எனப் பொதுவாகக் காதலிகளுக்கு நீதி கூறுவாள் போன்று தனது புணர்ச்சி விதுப்பினை இங்ஙனம் உணர்த்தியருளினாள். இதனால் இவளது உணர்ச்சித் திறனும், உரையாடும் விநயமும் அறியலாகும்.

காதலனோடு பிணங்கி நில்லாமல் காதலி விரைவில் இணங்கி மகிழ்வள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை அயிராவதிபால் உணரப்படும்.

## கதை.

அயிராவதி என்பவள் மகத நாட்டிலே இராசகிரியம் என்னும் நகரிலிருந்தவள். பதுமாபதி என்னும் அரசிளங் குமரியின் ஆருயிர்த் தோழி. கூரிய மதியினள்; சீரிய செயலினள். விநயமாக உரை யாடுவதில் மிகவும் வல்லவள். வடிவழகோடு கலையழகு முடையவள்.

"ஏந்தின வனமுலை எழில்வளைப் பணைத்தோள்
மாந்தளிர் மேனி மடமான் நோக்கின்
ஆய்ந்த கோலத்து அயிராவதி" (மகதகாண்டம்).

என உலகம் புகழ இவள் நிலவி யிருந்தாள். பந்தாட்டத்தில் இவள் நன்கு கைதேர்ந்தவள். ஒருமுறை கௌசாம்பி நகரில் பந்தாட்டவிழா ஒன்று நிகழ்ந்தது. அவ் ஆடலில் கைதேர்ந்த மங்கையர் பலரும் அங்குக் கூடியிருந்தார். அரசிகள் முன்னிலையில் ஆட்டந் தொடங்கியது. காஞ்சனமாலை முதலிய கன்னியர் ஆடியபின் இவள் முந்துறப் புகுந்து பந்துகள் எடுத்து அந்தரத் தெறிந்து விந்தைபல புரிந்து இடை சிந்தாமல் ஈராயிரமுறை எற்றியடித்து முற்றி நிறுத்தினாள். அக் கூட்டத்தில் நின்று அன்று இவள் பந்தாடிய விந்தையை அடியில் பார்க்க.

"செயிர்தீர் பதுமைதன் செவிலித் தாய்மகள்
அயிரா பதியெனும் அம்பணைத் தோளி
மானேர் நோக்கிற் கூனி மற்றவள்
தானேர் வாங்கித் தனித்தனி போக்கி
நாற்றிசைப் பக்கமும் நான்கு கோணமும்
காற்றினும் கடிதாக் கலந்தன ளாகி
அடித்தகைத் தட்டியும், குதித்துமுன் புரியா
அகங்கை யொட்டியும், புறங்கையிற் புகுத்தியும்,
தோள்மேற் பாய்ச்சியும், மேன்மேற் சுழன்றும்,
கூன்மேற் புரட்டியும், குயநடு வொட்டியும்,
வாக்குறப் பாடியும், மேற்படக் கிடத்தியும்,
நோக்குநர் மகிழப் பூக்குழல் முடித்தும்,
பட்ட நெற்றியிற் பொட்டிடை யேற்றும்,
மற்றது புறங்கையிற் றட்டினள் எற்றியும்,
முன்னிய வகையான் முன்னீ ராயிரம்
கைந்நனி யடித்துக் கையவள் விடலும்:" (வத்தவகாண்டம்)

இவள் பந்தாடி யிருக்கும் பான்மை மேன்மைகளை இதில் ஊன்றி யுணர்ந்து கொள்க. இதனால் இவளது அழகும், குணமும், அருந்தொழில் திறனும், அமைதியும் பிறவும் இனிது புலனும். இவளைச் சயதுங்கன் என்னும் மதிமான் மணந்து அதிபோகங்களை நுகர்ந்து அமைச்சியல் புரிந்து வந்தான். ஒத்த உருவம் ஒத்த பருவம் ஒத்த அன்பு முதலிய உத்தம நலங்களெல்லாம் ஒருங்கமையப் பெற்ற இச் சதிபதிகளின் மனை வாழ்க்கை அதி

மேன்மையோடமைந்திருந்தது. "ஈருடலுக் கோருயிராய் ஈறி லின்பம் துய்த்துவந்தார்" என்றபடி ஒத்து நுகர்ந்துவருங்கால் ஒருமுறை அரச காரியமாய் மறுபுலம் புகுந்து அருவினை முடித்து அவன் மறுபடி வந்தான். வரவே பருகுவனள் போல் இவள் உருகி விரைந்து ஒரு சிறிதும் ஊடாமல் அவனை மருவி மகிழ்ந்தாள். "காமம் நிறையவரின் இனைத்துணையும் ஊடாமை வேண்டும்" என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

ஊடல் சிறிதும் உணரார் உறுகாமம்
நீட லுடையார் நிமிர்ந்து.

கூட விழைந்தமை இதனால் கூறப்பட்டது.

1283. பேணாது போனவனைப் பேணியேன் தெய்வானை
கோணாது நின்றார் குமரேசா—வீணாகப்
பேணாது பெட்பவே செய்யினுங் கொண்கனைக்
காணா தமையல கண். (௩)

இ—ள்.

குமரேசா! பேணாது அகன்றுபோன உன்னைத் தெய்வயானை யம்மையார் ஏன் காண விழைந்து கடுகி நின்றார்? எனின், பேணாது பெட்பவே செய்யினும் கொண்கனைக் காணாது கண் அமையல என்க. கொண்கண் = கணவன்.

பேணாது = விரும்பிப் பாதுகாவாமல். பெட்பவே = தன்மனம் விரும்பியபடியே. செய்யினும் என்பதில் உம்மை அச் செயலின் கொடுமை தோன்ற நின்றது. பெட்பு = விருப்பம்.

அமையல = அமைந்து நின்றில. அடங்காமல் மீறி அவாவி விரைகின்றன என்றவாறு. அமைதல் = அடங்கி நிற்றல்.

காணாது என்றதனால் அவன் வீட்டைவிட்டு வேறு நாடி வெளியே போயுள்ளமை வெளியாம்.

பேணாமையோடு பெட்பனவும் செய்தல் பெரும் பிழை ஆதலால் அந் நிலை தெரிய வுரைத்தாள். பேணாமை, காணாமைக் கும்; பெட்ட செயல், விட்டொழிதற்கும் ஏதுவா யிருந்தும்

அங்ஙனம் விடாது விழைந்தமையால் இது விதுப்பாயிற்று.
"பேணாது பெட்டார் உளர்மன்னோ மற்றவர்க், காணாது அமைவில கண்" (குறள் 1178) என முன்னரும் வந்துள்ளமை காண்க.

என்னை விரும்பிப் பேணாமல், தன் மனம் விரும்பியபடியே செய்தொழுகினும் கணவனைக் காணாமல் என் கண்கள் அமைகின்றில என்பதாம்.

நயந்து பேணாமல் அகன்று போயுள்ள நாயகனை நீ ஓயாது விழைந்து உருகுகின்றாயே; சிறிது மறந்து நிற்கலாகாதா? என்ற தோழியை நோக்கி நாயகி யுரைத்தபடி யிது.

தலைமகனை உரிமையோடு பராமரித்து வராமல் பராமுகமாய்ப் பரிதபிக்கவிட்டுப் பிற மகளிரை விரும்பித் தலைமகன் ஒழுகிநின்றமையால் "பேணாது பெட்பவே செய்யினும்" என்றாள். அவ்வழு நிலையைத் தெளிவாக வெளிப் படுத்தாமல் இங்ஙனம் குழுவாக வுரைத்தது கெழுதகைமையான் என்க. இவ்வாறு வெறுப்பன செய்யினும் அவனைக் காணவேண்டும் என்று விருப்பமீக் கூர்ந்து விரைந்து நின்றமையால் "கண் காணாது அமையல" என்றாள். தன் விதுப்பைக் கண்மேலேற்றிக் கருத்தை விளக்கினாள். பேணாதொழிந்தும் அவனைக் காண நினைந்து வேணவாவுடன் விரைந்துள்ளதனால் இவளது உண்மைக் காதல் உணர நின்றது.

> "மாணா செயினும் மறுத்தாங்கே நின்வயிற்
> காணின் நெகிழும் என் நெஞ்சாயின், என்னூற்றாய்
> பேணாய் நீ பெட்பச் செயல்" (மருதக்கலி 26)

அடிகள் சொல்லியபடியை இது அடியொற்றி வந்துள்ளமை யறிக.

காணாது அமையல என்றதனால் காதலன் எப்பொழுது வருவான்? எப்பொழுது வருவான்? என வழிமேல் விழி வைத்து வரவு எதிர்பார்த்து இவள் மறுகி யிருந்தமை அறிய நின்றது.

> "மறப்பிலள் கொழுநனை வரவு நோக்குவாள்
> பிறப்பினொடு இறப்பெனப் பெயரும் சிந்தையாள்
> துறப்பரு முகிலிடைத் தோன்று மின்னெனப்
> புறப்படும் புகும் ஒரு பூத்த கொம்பனாள்." (இராமாயணம்)

தனது நாயகன் வரவை எதிர் நோக்கி ஒரு நாயகி உழந்துநின்ற ய இதில் ஊன்றிப் பார்க்க. மாடத்திலிருந்து வெளியே

வந்து பார்ப்பாள்; காணாமையால் உள்ளே புகுவாள்; இங்ஙனம் ஆசையோடு ஊசலாடி அலமந்தபடியை முகிலிடை மின் எனப் புறப்படும்; புகும்; என்றதனால் அறிந்துகொள்க.

"ஆளும் கொழுநர் வரவு பார்த்து, அவர்தம் வரவு காணமல்
தாளும் மனமும் புறம்பாகச் சாத்துங் கபாடம் திறமினோ. (க)

வருவார் கொழுநர் எனத்திறந்தும், வாரார் கொழுநர் என அடைத்தும்
திருகும் குடுமி விடியளவும் தேயும் கபாடந்திறமினோ." (கலிங்கத்துப்பரணி)

காதலிகளின் கண் விருப்பை இதன் கண்ணும் கண்டுகொள்க. அவர் புணர்ச்சி விதும்பலும், உணர்ச்சி நிலையும் இதனால் உணர்ந்து கொள்ளலாம். தன்னைப் பேணுதகலினும் தலைமகனைக் காண விழைந்து தலைமகள் தவித்து நிற்பள் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ் வுண்மை தெய்வயானையால் உணரப்படும்.

## கதை.

தெய்வயானை என்பவர் திருமகளின் தலைமகளாவார். சுந்தரி அமுதவல்லி என்னும் இருவர் திருமாலின் அருமைப் புதல்விய ராய்த் தோன்றிப் பருவமெய்தியவுடன் முருகமூர்த்தியை மணந்து கொள்ள விழைந்து அருந்தவம் புரிந்தார். அப் பெருமான் தேவர் கள் வேண்டுகோட் கிணங்கிச் சூர்முதல் கடியப் பார்மிசை வர வேண்டி யிருந்தமையால் அவரை அருள் சுரந்து நோக்கிப் "போர் முடிந்தவுடன் வந்து மணம் புரிந்து கொள்கின்றேன்; அதுவரை யும் மண்ணிலும் வானிலும் பொருந்தி யிருங்கள்" என்று வரம்பு செய்துவிட்டு வினைமேல் வந்தார். வரவே அமுதவல்லியை இந்திரன் கொண்டுபோனான்; அங்கு அவன் பட்டத்து யானையாகிய ஐராவதம் அக் குலமகளை நாளும் நன்கு பேணி வந்தது; அதனால் தெய்வ யானை எனப் பெயர் பெற்றுச் சிறந்திருந்தார்; சுந்தரியை முனிவ ரொருவர் வளர்த்துவந்தார்; வருங்கால் வேடர் குலத்தில் வள்ளி என்னும் பெயருடன் விளங்கி நின்றார். அடியில் வருவன காண்க.

"செந்திரு மணந்த கேள்வன் உயிர்த்தருள் தெய்வக்கற்பின்
சுந்தரி அமுதவல்லி என்பவர் சுடர்வேற் செங்கை
மைந்தனை மணப்ப வுன்னி மலர்விரி சரவணத்து
முந்தருந் தவங்கள் ஆற்ற முருகனுக்கு அண்மிக் கூறும்; (க)

இந்திரன் பாங்கர் அண்மி இருமதி அமுதவல்லி!
சுந்தரி புவியின் மாட்டுத் தூகளறு முனிபாற்றோன்றி
வெந்திறல் வேடர்சார்பில் விளங்குதி, கருத்துமுற்றப்
பிந்துற வரைதும் செல்மின் என்றனன் பெயர்ந்துபோந்தான். (உ)

அன்னணம் அமுதவல்லி அமரர்கோன் பாங்கர் அண்மி
மன்னுநாற் கோட்டு வேழம் வளர்த்திடத் தெய்வயானை
என்னும் அப்பெயரின் வைகி எம்பிரான் பரங்குன்றத்து
முன்னினன் வதுவையாற்றத் தவப்பயன் முற்றி நின்றாள்; (௩)

துளங்கெரிவளர்த்து மூழ்கிச் சுந்தரி வடிவு நீக்கி
விளங்கு சூக்கும தேகத்தின் மேதகு தொண்டைநாட்டில்
வளங்கொண்மேற்பாடி மாட்டு வளர்வரைச்சாரலண்மி
உளங் கொளும் அன்புபொங்க உயர்தவம் ஆற்றுகின்றாள்". (௪)
(தணிகைப்புராணம்)

இவ்வாறு அவர் நிற்ப அமரர்மேல் விழைந்துபோன அவ் வீர வள்ளல் அசுரரைக் களைந்து, சுரர்க்கு அருள் புரிந்து மீண்டு வந்து திருப்பரங்குன்றத்தை யடைந்து அங்குத் தேய்வயானையைத் திரு மணம் புணர்ந்து சிறந்து வீற்றிருந்தார். சில்லாண்டுகள் கழிந்த பின் வள்ளியையு மணந்து கொள்ள விழைந்து அவ் வள்ளல் கள்ள மாக அகன்றார். கற்பு, களவு என்னும் இருவகை நெறிகளையும் உலகறிய முறைசெய்தருள ஐயன் உரிமையோடு பிரிந்தார். அப் பிரிவில் அம்மையார் பெரிதும் வருந்தினார். கண்ணும் கருத்தும் அவரையே கருதி நின்றன. சென்ற அவர் அக் கன்னியைக் களவு முறையில் மணந்து அளவிலின்பங்களை நுகர்ந்து உளமகிழ் கூர்ந்து உடனழைத்து வந்தார். வரவே இவர் மகிழ்ந்தெழுந்து வணங்கி நின்றார். அவர் விழைந் தணைந்து உவந்தருளினார். வள்ளி யும் வணங்கினாள். இவர் உள்ளங் கனிந்து அள்ளியணைத்துத் தங்கை என்று அம் மங்கையை உபசரித்தருளினார். அடியில்பார்க்க.

"ஆரணம் தெரிதல் தேற்றா அறுமுகன் வரவு நோக்கி
வாரண மடந்தை வந்து வந்தனை புரிய, அன்னாள்
பூரணமுலையும் மார்பும் பொருந்துமா றெடுத்துப் புல்லித்
தாரணி தன்னில் தீர்ந்த தனிமையின் துயரந் தீர்த்தான். (க)

ஆங்கது காலை வள்ளி அமரர்கோன் அளித்த பாவை
பூங்கழல் வணக்கஞ் செய்யப் பொருக்கென எடுத்துப் புல்லி
ஈங்கொரு தமியளாகி இருந்திடுவேனுக்கு இன்றோர்
பாங்கிவந் துற்ற வாறு நன்றெனப் பரிவு கூர்ந்தாள்." (கந்தபுராணம்)

இதனால் இந்த அம்மையின் உழுவலன்பும், வழுவறு பண்பும், விழுமிய நிலையும் எளிதறியலாகும். தம்மைப் போற்றாது விடுத்து வேற்றூர் புகுந்து மாற்றாள் ஒருத்தியைக் கொண்டுவந்தபோதும் யாதும் மனங் கோணாமல் கணவனை விழைந்து புகழ்ந்து மகிழ்ந்து கொண்ட இவரது பெருந் தன்மையை வியந்து அனைவரும் புகழ்ந்தார். "பேணாது பெட்பவே செய்யினும் கொண்கனைக் காணாது அமையல கண்" என்பதை உலகம் இவர்கண் உணர்ந்து நின்றது.

எள்ளி யகன்றாலும் என்றுணையை எஞ்ஞான்றும்
உள்ளி யுருகு முளம்.

தலைவியின் விழைவுநிலை இதனால் கூறப்பட்டது.

---

1284. ஊடிநின்றும் கௌதமியேன் உற்றவுடன் நாயகனைக்
கூடி மகிழ்ந்தாள் குமரேசா—கோடியே
ஊடற்கட் சென்றேன்மற் றோழி யதுமறந்து
கூடற்கட் சென்றதென் னெஞ்சு. (௪)

இ—ள்.

குமரேசா! ஊடி நின்ற கௌதமி ஏன் கணவனைக் கண்டவுடன் தன்னை மறந்து கூடி மகிழ்ந்தாள்? எனின், தோழி! ஊடற்கண் சென்றேன் அது மறந்து என் நெஞ்சு கூடற்கண் சென்றது என்க. கோடியே = மாறுபட்டு.

ஊடல்—பிணக்கு. அஃதாவது மனந் திருகி நிற்றல். அது என்றது ஊடி நிற்கும் அந் நிலையை. கூடல் = முயங்கல்.

தன் கணவனைக் காண விழைந்து கண்பட்ட பாட்டை மேலே உரைத்தாள்; இதில், அவனைக் கண்டவுடன் நெஞ்சு சென்ற நிலையை யுரைக்கின்றாள்.

தோழி! நான் ஊடலின்கண் துணிந்து சென்றேன்; என் மனம் அதனை மறந்து கூடலை விழைந்து நின்றது என்பதாம்.

நாயகன் மீது சிறுதுனி கொண்டு ஊடத் துணிந்தவள் உடனே அந் நிலைமாறிக் காதல் மீறிக் கலந்துகொண்டாள் ஆதலால் நான் "ஊடற்கண் சென்றேன், என் நெஞ்சு கூடற்கண் சென்றது" என்றாள். தன்வசமிழந்து தழுவியபடி யிது.

தன் வேட்கையை நெஞ்சின்மேலேற்றி நவினளாகத் தோழியிடம் இங்ஙனம் உரைத்தாள் என்க. அவ்வினைமீறி மனம் தாவி ஓடலால் நான் என்னவோ ஊடி எதிர் நிற்க முடியும்? எனத் தனது ஏலாமையை இசைத்து, இச்சையின் உச்ச நிலையை விளக்கினாள்.

> "வெதிர்பொரு தோளினாள் ஒருத்தி வேந்தன் வந்து
> எதிர்தலும் தன் மனம் எழுந்து முன் செல
> மதிமுகம் கதுமென வணங்கினாள்; அது
> புதுமையாதலின் அவற்கு அச்சம் பூத்ததே." (இராமாயணம்)

கணவன் உரிய பருவத்தில் வரவில்லை என்று சினந்திருந்து ஊடி நின்ற ஒருத்தி, அவன் வரவும் மனம் பிறந்தாய் மருவியபடியை இது அறிவுறுத்தியிருத்தல் காண்க. முகம் கவிழ்ந்தது, கருதிய புலவியைக் கடைபோகச் செய்யவில்லையே என்னும் நாணத்தால் என்க. அவன் அணுகியது, இவளது செயலும் இயல்பும் இன்னவென்று முன்னுறத் தெரியாமையால் என்க. ஊடலின் திறனும், காதலி நிலையும் இதனால் உணரலாகும். வெதிர் = மூங்கில்.

உள்ளங் கனன்று எவ்வளவு ஊடியிருந்தாலும் கொழுநனைக் கண்டவுடன் தன்னை மறந்து தழுவிக்கொண்டதனால் இவளது உழுவலன்பும், உளமலி இன்பும் எளிது புலனாம்.

> "ஊடுவீர் கொழுநர் தங்கள் பால் முனிவொழிந்து கூடுதலினுங்களைத்
> தேடுவீர் கடைகள் திறமினோ இனிய தெரிவைமீர் கடைகள் திறமினோ"
> (கலிங்கத்துப்பரணி)

ஊடலொழிந்து மகளிர் கூடியபடியை இதில் கூர்ந்துபார்க்க. கூடுதலில் உங்களைத் தேடுவீர் என்றது பரவசராய்த் தம்மை மறந்து போவர் என்றவாறு. காதலியின் ஊடல் கடைபோக நில்லாதென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கௌதமியால் உணரப்படும்.

## கதை.

கௌதமி என்பவள் கோசலிய தேசாதிபதியாகிய அஞ்சனன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகள். பெருங்கவினுடையவள். "அருங்கல மகளிர்க்கேற்ற அழகெலாம் தொகுத்து

மற்றோர், இருங்கலி புலகங் காணப் படைத்தவன் இயற்றினன் கொல்?'' என எவரும் வியந்து பேச எழில் நலங் கனிந்து இவள் உயர்ந்திருந்தாள். இவளை இக்ஷுவாகு குலத் தோன்றலாகிய சுத்தோதனன் என்று முடி மன்னன் விழைந்து வந்து மணந்து கொண்டான். அப் பேரரசனுக்குப் பெரும்போக நிலையமாய் இவள் பெருகியிருந்தாள். இவளது காமச் சுவையிலாழ்ந்து அவன் கரை தெரிவரியதோர் களிப்பில் மூழ்கினன். ஒருவ ருடலில் ஒருவர் ஒதுங்கி இருவருயிரும் ஒன்றென உருகி யிணைந்து இங்ஙன மருவி மகிழ்ந்து வருங்கால் தருமசந்தன் என்று முனிவரொருவர் வந்தார். அவர் அரிய தவவொழுக்க முடையவர். கங்கைக் கரையில் பெரிய வேள்வி ஒன்று பேணிச் செய்தார். அத் தவநிலைக்குக் கொடியர் சிலர் இடையூறு செய்தமையால் அதனைக் காத்தருளும் படி இவனைத் துணைவர வேண்டினர். "தன்னுயிர்க்கு இரங்கான் பிறவுயிரோம்பு மன்னுயிர் முதல்வன்" என மன்னியிருந்த அம் மன்னர் பெருமான் தன்னலம் துறந்து அன்னவர் பின் போனன். இன்னருள் சுரந்து இங்ஙனம் அவன் பிரிந்துபோக இவள் இன்ன லுழந்து பரிந்திருந்தாள். குறித்த பருவம் கடந்தும் அவன் வந்தரு ளாமையால் கருத்துளைந்து மிகவும் கடுத்து நின்றாள். தீவ திலகை என்னும் தோழி நாளும் இவளை ஆற்றிவந்தாள். ஒருநாள் அவளைப் பரிந்து நோக்கி இவள் பலபல புகன்றாள்; "ஆடவர் அறவும் கொடியவர்; பெண்மைநிலை தெரியாத நிண்மையாளர்; கண்ட பொழுதுமட்டும் மானே! தேனே! மயிலே! குயிலே! கனியே! கரும்பே! பாலே! அமுதே! எனச் சாலவும் புகழ்ந்து தழுவி நுகர்வர்; காணுதபோது யாதும் பேணுமல் இல்லை மறந்து கல்லா யிருப்பர்; அம்மா! அவர்தம் பொல்லாமை கொடிது; இனி எல்லாம் தெரியும்" எனச் சொல்லாடி நொந்தாள். விரகதாபத்தால் கனன்று வைது இங்ஙனம் இவள் புலந்திருந்தாள். பிரிந்துபோன அம்மன்னன் அன்று மாலை விரைந்தடைந்தான். இவள் ஒன்றும் பேசாமல் உவந்து தழுவியுளங்களித்தாள். மறுநாள் இவளைத்தோழி கண்டு ஊடிய துண்டோ? என்றாள். இவள் நாணி நகைத்தாள்; நான் கருதியிருந்த பிணக்கெல்லாம் அவர் அருகே வந்தவுடனே உருவழிந்து போயின; என் உள்ளம் உருகியோடி அவரை மருவி

நின்றது என முறுவலோடுரைத்தாள். "தோழி! நான் ஊடற்கண் சென்றேன்; அதை மறந்து என் நெஞ்சம் கூடற்கண் சென்றது" என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

வெள்ளமெதிர் மென்கரைபோல் வெங்காம மீறிவரின்
உள்ள முடையு முடன்.

கூடி நின்ற நிலை இதனால் கூறப்பட்டது.

1285. கானியந்த வன்பழியைக் காணாள் தமயந்தி
கோனடைந்த போதேன் குமரேசா—தானு
எழுதுங்கால் கோல்காணாக் கண்ணேபோல் கொண்கன்
பழிகாணேன் கண்ட விடத்து. (ரு)

இ—ள்.

குமரேசா! கணவனைக் கண்டபொழுது அவனது பழியை மறந்து தமயந்தி ஏன் மகிழ்வு கொண்டாள்? எனின், எழுதுங்கால் கோல் காணாக் கண்ணேபோல் கண்ட இடத்து கொண்கன் பழி காணேன் என்க.

இது, தலைவனைக் கண்டபொழுது தலைவிகொண்டநிலையுரைக்கின்றது.

கோல் = அஞ்சனக் கோல். அஃதாவது கண்ணுக்கு மை தீட்டும் கருவி என்க. இமைகளிடை ஊடாடி வருதற்கு அமைவாக மெல்லிய வழியால் அழகுற அமைக்கப்பட்டிருக்கும் ஆதலால் இது, கோல் என நின்றது. "அஞ்சனக் கோலின் ஆற்றும் நாகம்" (சிந்தாமணி 1894). என்புழி இதன் மென்மை காண்க.

எழுதல் = தீட்டுதல். பழி = குற்றம். அஃதாவது என்றும் பிரியேன் என்றவர் அடிக்கடி பிரிய நேர்ந்ததும், பிரிந்து நின்ற போது பருவங் கடந்து சேர்ந்தது முதலிய தவறுகள் என்க.

கண்ட இடத்துக் காணேன் என்றதனால் காணாத இடத்துக் காண்கின்றேன் என்பதாயிற்று.

அஞ்சனக்கோல், எட்டநிற்கும் பொழுது காணப்படும்; கிட்ட நெருங்கி இமையில் மை தீட்டும்பொழுது கண்ணுக்கு அது காணப்

படாது ஆதலால் "எழுதும் கால் கோல் காணாக் கண்ணேபோல்" எனத் தான் காணமாட்டாமைக்கு அதனை எடுத்துக் காட்டினாள்.

"காதல் மிக்குழிக் கற்றவும் கைகொடா
ஆதல் கண்ணகத்து அஞ்சனம் போலுமால்" (சிந்தாமணி 1632)

இது, அடிகள் குறிப்பை அடியொற்றி வந்துள்ளமை யறிக.

மேல், காதலனிடம் ஊட முடியாமை கூறினாள்; இதில், அவன் பிழையை நாடமுடியா தென்கின்றாள்.

மைதீட்டுங்கால் அஞ்சனக் கோலைக் காணமாட்டாத கண்ணே போல் கணவனைக் கண்டவுடன் அவனது குற்றங்களை அறிய கில்லேன் என்பதாம்.

தலைவன் அகன்று நின்றபொழுது அவன்மேல் பிழைகள் பல எண்ணிச் சினந்திருந்த தலைவி அவன் வந்தவுடனே ஒன்றும் பேசாமல் விழைந்து தழுவி மகிழ்ந்து கொண்டாள் ஆதலால் "கண்ட இடத்துக் கொண்கன் பழிகாணேன்" என்றாள். தான் காணாமைக்கும் கண்ணை ஒப்புக்காட்டியது தன் தன்மைதோன்ற. தூரம் நிற்கும் கால் அவருடைய தவறுகளெல்லாம் தவறாமல் எணணப் படுகின்றன; நேரே வந்து நெருங்கியபொழுது ஒன்றும் தோன்றாமல் ஆர்வமே மீதூர்கின்றது; ஆதலால் புலந்துநிற்க முடியாமல் கலந்துகொண்டேன் எனத் தோழியிடம் இவ்வாறு கூறி நின்றாள்.

கோல், கணவனுக்கும்; கண், தலைவிக்கும், ஒப்பாம் என்க. கோல், அணைந்து தொழில் புரிந்தபோது கண்எழில்மிகுந்து திகழும்; அதுபோல் அவன் நெருங்கித் தழுவி நின்றபொழுது இவள் ஒளி மிகுந்து உள மகிழ்வள் என்பது இதனால் உணர நின்றது.

கண்டவிடத்துப் பழி காணாமைக்குக் காரணம் காந்தம் இரும்பைக் கவர்ந்துகொள்வதுபோல், கொண்டவன் வர இவள் மண்டிய காதலால் மருவிவிடுதலால் பிறிதொன்றும் அறியமுடியவில்லையென்க.

"கண்ணிணைபு கலுழ் பேங்கினள்;
தோள் ஞெகிழ்பு வளை நெகிழ்ந்தனள்;
அன்னையோ எல்லீரும் காண்மின் மடவரல்
மென்னடைப் பேடை துணைதரத் தற்சேர்ந்த

அன்னவான் சேவற் புணர்ச்சிபோல் ஒண்ணுதல்
காதலன் மன்ற அவனை வரக்கண்டாங்கு
ஆழ்துயரம் எல்லாம் மறந்தனள் பேதை
நகையொழிந்து நாணுமெய் நிற்ப இறைஞ்சித்
தகையாகத் தையலாள் சேர்ந்தாள் நகையாக
நல்லெழில் மார்ப னகத்து." (நெய்தற்கலி 31)

காதலனைக் கண்டவுடன் துயரமெல்லாம் மறந்தனள் என ஒருத்தியின் இயல்பினை இதில் உணர்த்தியிருத்தல் காண்க. "என்னை முலையிடை வாங்கி முயங்கினான் நீத்த கொலைவனைக் காணேன்" என்று முன்னம் பலவாறு பழித்து நின்றவள். அவன் வந்தவுடன் யாதும் பழியாமல் அயலார் நகைக்கும்படி மயலொடு மேல்வீழ்ந்து மருவி மமர்ந்த நிலையை இதன்கண் உருவி நோக்கி யுணர்ந்து கொள்க. அவன் அருகு நெருங்கின் இவள் உருகி ஒன்றுவள் என்க.

"நெடிய திரண்ட தோள்வளை நெகிழக்
கொடிய ரெகிய குன்று கெழு நாடன்,
வருவதோர் காலையின் முகம் திரியாது
கடவுட் கற்பின் அவனே பேணி
மடவை மன்ற நீயெனக் கடவு
துனியல் வாழி தோழி! சான்றோர்
புகழு முன்னர் நாணுப்
பழியாங் கொல்பவோ காணுங் காலே?" (குறுந்தொகை 252).

தொடி நெகிழ்ந்து துயருறும்படி பிரிந்துபோன கொடியர் வந்தவுடன் யாதும் ஊடாமல் ஏன் உவந்தாய் என்று தோழியை நோக்கித் தலைவி கூறியவாறிது. காணுங்கால் பழிகாணேன் எனத் தனது உழுவலன்பினை அவள் இதில் உணர்த்தி யுள்ளமை காண்க.

காதலன் கண்ணெதிர்ப்பட்ட பொழுதே காதலி தன்வய மிழந்து அவன் வயமாய்ப் பரவசமுற்று நிற்பள் என்பது கருத்து.

கணவனைக் கண்டவுடன் பிழையொன்றுங் காணுமல் மனைவி அவனை உவந்து தழுவிக்கொள்வள் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ் வுண்மை தமயந்தியால் உணரப்படும்.

## கதை.

உருவிலும் திருவிலும் சிறந்து ஒளிவளர் மேனியளாய் எழில் சுரந்திருந்த தமயந்தியை நளமகாராசன் மணந்து அளவிலின்பங்

கலை நுகர்ந்து உள மகிழ் கூர்ந்தான். அவனுக்குப் பேரின்ப நிலையமா யமர்ந்து பெரு மகிழ் ஊட்டி இக் குலமகள் குலாவி யிருந்தாள். "அங்கைவேல் மன்னன் அகலம் எனுஞ் செறுவில், கொங்கை ஏர் பூட்டிக் குறுவியர் நீர் — அங்கடைத்துக், காதல் வரம் பொழுக்கிக் காமப் பயிர் விளைத்தாள், கோதையரின் மேலான கொம்பு" என இங்ஙனம் ஆதாம் பெருக்கி அவனை ஆதரித்து வந்தாள். இச் சதிபதிக ளிருவரும் இன்ப நிலைக்கோர் அதிபதிகளாய் நின்றார். எழுமையிலும் செய்த புண்ணியப்பயனை ஒருமையில் துய்த்து ஒருவாதுவந்து உழுவலன்புடன் ஒழுகி வருங்கால் கலியின் புணர்ப்பினால் இவர் கானகம் புகுந்தார். அங்கு இவள் அலைந்து திரிய முடியாதென்று இரங்கி அலமந்து ஒருநாளிரவு இவளைத் தனியே விடுத்து அம் மன்னன் தனைந்துபோனான். இவள் இடையே விழித்தாள்; தடவிப் பார்த்தாள்; கொழுநனைக் காணுமையால் குலை நடுக்கங் கொண்டாள்; அலறி யெழுந்தாள்; அழுது புலம்பி அயலெங்கும் தேடி மானினம் பேடைபோல் மறுகித் துடித்தாள். அன்று இத் தையல் துடித்தபடியை அடியில் பார்க்க.

"வெய்ய துரையென்று மெல்லமளியைத் தடவிக்
கையரிக் கொண் டவ்விடத்தும் காணமல்—ஐயகோ
என்னப்போய் வீழ்ந்தாள் இனமேதி மென் கரும்பைத்
தின்னப் போம் நாடன் திரு. (க)

அழல் வெஞ்சிலை வேடன் அம்புருவ ஆற்று
துழலும் களிமயில்போல் ஓடிக்—குழல்வண்
டெழுந்தோட வீழ்ந்தாள் இருகுழைமேற் கண்ணீர்க்
கொழுந்தோட வீமன் கொடி. (உ)

வான்முகிலும் மின்னும் வறுநிலத்து வீழ்ந்ததுபோல்
தானும் குழலும் தனி வீழ்ந்தாள்—ஏனம்
குளம்பால் மணிகிளைக்கும் குண்டுநீர் நாடன்
இளம்பாவை கைதலைமே லிட்டு." (நளவெண்பா)

இவ்வாறு உள்ளங் கலங்கி உயிர் பதைத்துத் துள்ளித் துடித்தவள் அவ் வள்ளலை யழைத்து வாய்விட்டுப் புலம்பினாள்.

"நேரலார் போரேறே! நிடதத்தார் கோமானே!
ஆரவரை மார்பா! அளியேன் உயிர்க் குயிரே!
காரிருள்வாய் யான்புலம்பக் கானகத்து விட்டகன்றும்,
சாரலையால் இன்னும் இதுவோ நின் தண்ணளியே? (க)

வாவும் இளமான்காள்! மயில்காள்! மடப்பிடிகாள்!
கூவும் கரிய குயில்காள்! மென் புள்ளினங்காள்!
ஆவியென மேவி அகலேம் என அகன்ற
காவலன்றான் போன வழி எனக்குக் காட்டீரே? (உ)

என்று உருகி இரு கண்ணீர் ஆலியுகத்
தன்றுத் ததும்பப் புலம்பித் தமியளாய்
மின்று ரிடை நுடங்கச் செல்வான் விறல் வேந்தன்
பொன்று ரடி நோக்கிப் பூங்கொடிபோல் வீழ்ந்தழுதாள்." (நைடதம்)

இன்னணம் ஏங்கி அலமரத இவளை முனிவர் சிலர் தேற்றித் தந்தையிடம் சேர்த்தார். பிரிந்துபோன நளன் இவளை நினைந்து கவன்று அயர்ந்து சென்றான். வழியிடைப் பறந்துபோகின்ற பறவைகளை நோக்கிப் பழியுடைய தன்னைப் பார்க்கலாகாதென்று இகழ்ந்துபோகின்றனவோ? எனத் தன்னுள் எண்ணி யுளைந்தான்.

"ஆவியன்னதோர் அணங்கினை அரையிருள் நீத்த
பாவியேன் முகம் நோக்குறிற் பழி வரும் என்றோ
மேவு சேக்கையிற் குருகினம் பேட்டினம் வெருவிச்
சேவலோடகன் றேகுவ தெனமனம் திகைத்தான்."

பின்பு கடற்கரையில் நண்டுகள் ஓடுவதைக் கண்டு நைந்து புலம்பினன்.

"காதலியைக் காரிருளிற் கானகத்தே கைவிட்ட
பாதகனைப் பார்க்கப் படாதென்றோ—நாதம்
அளிக்கின்ற ஆழிவாய் ஆங்கு அலவ! ஓடி
ஒளிக்கின்ற தென்னோ உரை.

பானலே! சோலைப் பசுந் தென்றல் வந்துலவும்
கானலே! வேலைக் கழிக்குருகே!—யானுடைய
மின்னிமைக்கும் பூணாள் வீங்கிருள்வாய் ஆங்குணர்ந்தால்
என்னினைக்கும் சொல்லீர் எனக்கு."

என இன்னவாறு அவல மீதூர்ந்து கவலையோடு சென்றவன் முடிவில் அயோத்தியை அடைந்து அரசனிடமிருந்தான். ஆண்டுகள் சில கழிந்தபின் மீண்டு வந்தான். அவன் உருவையே கருதி உள முருகியிருந்த இவள் அவன் வரவும் துள்ளி யெழுந்து வெள்ளநீர் சொரிந்து அடிமிசை விழுந்து அயாவுயிர்த்து நின்றாள். இவளது நிலையைக் கண்டு அவனும் நெஞ்சமுருகினன் அடியில் காண்க.

"பாதித் துகிலோடு பாய்ந்திழியுங் கண்ணீரும்
சீதக் களபதனஞ் சேர்மாசும்—போத
மலர்ந்ததார் வேந்தன் மலரடியில் வீழ்ந்தாள்
அலர்ந்ததே கண்ணீர் அவற்கு.

வெவ்விடத்தோ டொக்கும் விழியிரண்டும் வீழ்துயில்கொள்
அவ்விடத்தே நீத்த அவரென்றே—இவ்விடத்தே
வாரார் முலையாளம் மன்னவனைக் காணாமல்
நீரால் மறைத்தனளே நின்று." (நளவெண்பா)

போரவலோடு இங்ஙனம் கூடி நின்றவர் பின்பு தமது நகரினை யடைந்து உவந்து வாழ்ந்தார். விழி துயிலுங்கால் படுவனத்தில் தனியே விடுத்தகன்ற பழியொன்றையும் கருதாமல் கணவனைக் கண்டவுடன் உழுவலன்போடு தழுவிநின்ற இவளது தகவுடைமையை வியந்து அனைவரும் புகழ்ந்தார். "கொண்கன் பழி காணேன் கண்டவிடத்து" என்பதை உலகம் காண இவள் உணர்த்திநின்றாள்.

உள்ளதுனி யெல்லாம் உறுகதிர்முன் வெம்பனிபோல்
வள்ளலுற மாய்ந்த மறைந்து.

பழிகாண வழியில்லை என்பது இதனால் கூறப்பட்டது.

1286. கண்டவுடன் ஓர்தவறும் காணாமல் ஒள்ளெயிற்றி
கொண்டாள் உவந்து குமரேசா—மண்டியெதிர்
காணுங்காற் காணேன் தவறாய காணாக்காற்
காணேன் தவறல் லவை. (சு)

இ—ள்.

குமரேசா! காதலனைக் காணுமுன் பிழை எண்ணிக் கடுத்திருந்த எயிற்றி அவனைக் கண்டவுடன் ஏன் களித்து நின்றாள்? எனின், காணுங்கால் தவறு ஆய காணேன்; காணாக்கால் தவறல்லவை காணேன் என்க.

காணுங் கால் = கணவனைக் காணுமிடத்து. கணவன் என்பது இதில் வருவிக்கப்பட்டது.

தவறு ஆய = பிழைகளாயவை. ஆய என்றது உருப்படியாய் வெளிப்பட்டவை என்றவாறு. எனவே உருப்படாமல் ஒளிந்தன சில உள என்பதாயிற்று. தப்புகள் பல என்பது தோன்றப் பன்மையில் குறித்தாள். அவ்வளவும் மறந்தேன் என்பதாம்.

தவறு அல்லவை காணேன் = தவறுகளைத் தவிரப் பிறவற்றைக் காணமாட்டேன். தவறுகளையே காண்கின்றேன் என்றபடி. இரண்டு எதிர்மறை கூடி ஓர் உடன்பாட்டை உறுதிப்படுத்தியது.

மேல், கொண்கனைக் கண்டபொழுது குற்றங்கண் உண்டானதை யுரைத்தாள்; இதில், காணாதபொழுது கண்டதை யுணர்த்துகின்றாள்.

காதலரைக் காணுமிடத்துப் பிழைகளைக் காண்கிலேன்; அவரைக் காணாத இடத்துப் பிழைகளையன்றி வேறொன்றையும் காண்கிலேன் என்பதாம். நாயகன் நேரில் வருமுன் பலபல கூறிச் சீறி நின்றவள் அவன் வந்தவுடன் யாதும் கூறாமல் கூடி மகிழ்ந்தாள்; மகிழவே, மறுநாள் தோழி கண்டு "அவரைக் காணுமுன் என்னவெல்லாமோ என்னிடம் சொல்லித் துள்ளினாய்; கண்டவுடன் யாதொன்றும் காணேனோ; என்னே? இது!" என்று புன்னகை புரிய, அவ்வமயம் அவளை நோக்கி நாயகி இவ்வாறு கூறினாள் என்க. அவன் அகன்றிருந்தபொழுது கவன்று கலுழ்ந்து, செய்த பிழைகளை யெல்லாம் சேர எண்ணிச் சினந்திருந்தாள் ஆதலால் காணாக்கால் தவறுகளே காண நேர்ந்தன; அவன் வந்தவுடன் உள்ளங் கரைந்து உவந்தெழுந்து அவ்வெல்லாவற்றையும் மறந்து நின்றாள் ஆதலால் "காணுங்கால் தவறாய காணேன்" என்றாள். இதனால் இவளது காதல் நிலை காணலாகும். "கார் காண நின்ற களிமயில்போல் காதலனை நேர்காண நின்றேன் நெகிழ்ந்து" என்றபடி காதலரைக் கண்டவுடனே ஆதரமிகுந்து காதலிகள் களித்திருப்பாராதலால் அவர் ஏதம் யாதும்எண்ணார்என்க.

"பேணுங் கொழுநர் பிழைகளெலாம்
பிரிந்தபொழுது நினைந்து அவரைக்
காணும் பொழுது மறந்திருப்பீர்
கனப்பொற் கபாடந் திறமினோ." (கலிங்கத்துப்பரணி)

இது, இதனை அடியொற்றி வந்துள்ளமை யறிக. அவர் தூரம் போயுள்ளபொழுது பிழைகளெல்லாம் பெருகித் தோன்றுகின்றன; நேரே வந்தவுடன் ஒன்றும் தோன்றாமல் அவை மறைந்து போகின்றன; ஆதலால் முன்பு உன்னிடம் சொல்லியபடி

புலந்திருக்க முடியவில்லை என்று தோழியிடம் புகன்றுள்ளமை யால் இது புணர்ச்சி விதும்பல் ஆயிற்று.

பிரிந்துநின்றபொழுது புலந்திருந்தாலும் கொழுநன் அடைந்த வுடனே தலைவி விரைந்து தழுவி உவந்துகொள்வள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை எயிற்றியால் உணரப்படும்.

## கதை.

எயிற்றி என்பவள் சோழ நாட்டிலே கழார் என்னும் ஊரில் இருந்தவள். பேரறிவுடையவள். பல நூல்களையும் வழுவறப் பயின்று புலமை நிரம்பி இவள் நிலவி யிருந்தாள். சீரிய கூரிய நீர்ந் சொற்களமைந்த திவ்விய கவிகளைச் செவ்வியிற் பாட வல்ல வள். அக் காலத்திருந்த நல்லிசைப் புலமை மெல்லியலார் எல்லா ரினும் இவள் மிக மேன்மையுற்று நின்றாள். கலையிலும், கவினிலும் தலைமை எய்தி நின்ற இக் குலமகளைக் கீரன் என்னும் தலைமகன் பெரிதும் விரைந்து அரிதின் மணந்து அரிய போகங்களை நுகர்ந்து ஆர்வ மீதூர்ந்தான். அவன் ஓர் குறுநிலத் தலைவன். பெரிய போர் வீரன். சோழ மன்னனுக்குச் சிறந்த சேனாதிபதியா யமர்ந் திருந்தான். அவ் அருந்திறலாளன், இப் பெருந் தகையாளைக் கலந்து மகிழ்ந்து களிகூர்ந்து வந்தான். மலரும் மணமும்போல் ஒருவாதுறைந்து இங்ஙனம் மருவி வந்தமையால் கழார்க் கீரன் எயிற்றியார் என்று இவள் பேர்பெற்று நின்றாள். இப் பேரழகியோ டமர்ந்து இணைபிரியாது இன்பந் துய்த்து வருங்கால் அவ் வீர மகன் அரசகாரியமாய் ஒருமுறை அமர் முனைக்குப் போகநேர்ந்தது. முதலில் இவளைப் பிரியமாட்டாமல் மறுகி நின்று அவன் அரிதி னீங்கினான். அறிவுடைய இவள் அப் பிரிவில் ஆறியிருந்தாள். பிரிந்து போன அவன் இடைவழியில் இவளை நினைந்து நினைந்து நெடுந்துய ரடைந்தான். மனம், வினைமேல் நோக்க, உயிர் மனைமே வீர்க்க நிலை யின்றி யுழன்றான்; முடிவில் தன்நெஞ்சொடு புலம்பி நெகிழ்ந்துயர்ந்து பின்பு துணிந்தெழுந்து விரைந்து சென்றான். சென்றவன் வினை முடிந்து குறித்த பருவத்தில் வந்தான். இவள் வருத்தம் நீங்கி மருவி மகிழ்ந்தாள். மீண்டும் ஒருமுறை பிரிந்து போனான். போர் நீண்டு நின்றமையால் ஆண்டு ஒன்றாகியும் ஆண்டே அவன்

அமர்ந்து நின்றான். சொல்லியபடி வாராமையால் இவள் அல்லலுழந்து அவலமீதூர்ந்தாள். தோழி ஆற்றியும் ஆயா மிருந்தாள்; நமது இயல்பினை யறிந்தும் இவ்வாறு அயலமர்ந்துள்ளாரே! என்று அவளிடம் ஒருநாள் இவள் அலமந்து புலம்பினாள்.

“மாசில் மரத்த பலியுண் காக்கை
வளிபொரு நெடுஞ்சினை தளியொடு தூங்கி
வெல்போர்ச் சோழர் கழாஅர்க் கொள்ளும்
நல்வகை மிகுபலிக் கொடையோடு உகுக்கும்
அடங்காச் சொன்றி அம்பல் யாணர்
விடக்குடைப் பெருஞ்சோறு உள்ளுவன இருப்ப
மழையமைந் துற்றமால் இருள் நடுநாள்
தாம்நம் உழையர் ஆகவும், நாம் நம்
பனிக் கடுமையின் நனிபெரிது அழுங்கித்
துஞ்சா மாகலும் அறிவோர்
அன்பிலர் தோழி நம் காத லோரே.” (நற்றிணை 281).

அவர் நம் பக்கத்திலிருக்கும்போதும் குளிரின் கடுமையால் நடு யாமத்தில் கண்ணுறங்காமல் நாம் கலங்கியுள்ளதை முன்னர் அறிந்திருந்தும் இப் பருவகாலத்தில் இன்னும் வந்தருளவில்லை யானால் நம் காதலர் அன்புடையராவரா? என வன்பொறை யழிந்து இதில் இவள் நொந்துரைத்துள்ளமை காண்க. காக்கை மழையில் நனைந்துகொண்டு கழார் என்னும் பதியில் பலிச்சோற்றை விழைந்திருத்தலைக் குறித்துக் காட்டியது, தலைவனை விழைந்து தான் அலந்திருக்கும் நிலையை யுணர்ந்துகொள்ள என்க. “புன்கண் மாலையும் புலம்பும், இன்றுகொல் தோழி! அவர் சென்றநாட்டே?” (குறுந்தொகை 330). என ஒருநாள் மாலைக் காலத்தில் இவள் மாலுழந்து மொழிந்தாள். இரவெல்லாம் உறக்கமில்லாமல் ஏங்கியிருந்த இவள் ஒருநாள் நடுச் சாமத்தில் வாடையை நோக்கி வைது புலம்பினாள். அன்று இவள் புலம்பியபடியை அடியில் பார்க்க.

“விண்ணதிர்பு தலைஇய விரவுமலர் குழையத்
தண்மழை பொழிந்த தாழ்பெயற் கடைநாள்
எமியமாகத் துனியுளம் கூரச்,
சென்றோர் உள்ளிச் சில்வளை நெகிழப்,
பெருநசை யுள்ளமொடு வருநசை நோக்கி
விளியும் எவ்வமொடு அளியள் என்னாது

களிறுயிர்த் தன்ன கண்ணழி துவலை
முளரி கரியு முன்பனிப் பானாள்
குன்றுநெகிழ்ப் பன்ன குளிர்கொள் வாடை !
எனக்கே வந்தனை போறி ? புனற்கால்
அயிரிடு குப்பையின் நெஞ்சு நெகிழ்ந் தவிழுங்
கொடியோர் சென்ற தேஎத்து மடியாது
இனையை யாகிச் செல்மதி
வினைவிதுப் புறுநர் உள்ளலும் உண்டே" (அகம் 163)

குளிர்ந்த வாடையே ! இங்கு வந்ததுபோல் காதலர் சென்ற இடத்தும் சென்று வீசுக; அங்ஙனம் வீசின் வினையையே விழைந் துள்ள அவர் என்னை நினைதலும் உண்டாகும் என மனமிக மறுகி இவள் உரையாடி யிருக்கு நிலையை இதில் ஊன்றி யுணர்ந்துகொள்க. காதலனைக் கொடியோர் என்றது அருள் செய்து வரவில்லையே என்ற ஆற்றாமையால் என்க. இதனால் இவளது காதல் நிலையும், கவி பாடும் ஆற்றலும் இனிது புலனும். இங்ஙனம் கவன்று கலுழ்ந் திருந்தவள் அவன் வந்தவுடன் ஒன்றும் புலந்துகொள்ளாமல் விழை ந்து கலந்து மகிழ்ந்துகொண்டாள். பின்னும் ஒருமுறை பொருள் மேல் விழைந்து அவன் மறுபுலம் போகத் துணிந்து அத் துணி வினைத் தோழியிடம் உரைத்து இவளை உடன்படுத்த வேண்டினன். அவளும் பொருள் வரவின் பெருமையை விளக்கி இவளிடம் உரிமை யொடு வேண்டினள். இவள் அவளை உளைந்து நோக்கி "முன்பு அவர் பிரிந்துநின்றபொழுது, யான் அடைந்த துயர்களை நீ அறிந்ததில்லை யோ? எது வருவதாயினும் யாண்டும் பிரியலாகாதென உறுதியாக வேண்டியருள்" என உரைத்து விடுத்தாள். இவ்வாறு பிரிவுடன் படாமல் இவள் மறுகி நின்றும் அவன் அறிவுரையாடி விரகுடன் அகன்றான். இவள் பரிவொடு கவன்று பதைத்திருந்தாள் பலபல நினைந்து பருவரல் கூர்ந்தாள். ஒரு முறை தோழியை நோக்கிக் "காதலர் என்னை நினைந்து நிற்பாரா? கருமக் கவலையால் மறந்திருப் பாரா ? உடல்மெலிந்து, படர் மிகுந்து, பசலை யடைந்து, அபலை யாகிய நான் இங்ஙனம் கவலை கூர, அவர் யாதும் அருள்புரியாமல் பொருளையே கருதி மருள் புரிந்துள்ளாரே; அம்மா! அவரது அன்புடைமைதான் என்னே ?" எனத் துன்பொடு புகன்றாள்.

"அம்ம வாழி தோழி! பொருள்புரிந்து
உள்ளார் கொல்லோ காதலர்? உள்ளியும்
சிறந்த செய்தியின் மறந்தனர் கொல்லோ?
பனிகடி கொண்ட பண்பில் வாடை
மருளின் மாலையொடு அருளின்றி நலிய
நுதலிறை கொண்ட அயலறி பசலையொடு
தொன்னலம் சிதையச் சாஅய்
என்னள்கொல் அளியள் என்னு தோரே." (அகம் 235)

என இன்னவாறு இன்னலுழந்து பிழைபல எண்ணி இவள் பேதுற்றிருந்தாள். அவன் கருமமுடித்துக் கடிதின் வந்தான். இவள் ஒரு குறையுங் கூறாமல் அவனை மருவி மகிழ்ந்தாள். காணாத போதெல்லாம் குறைபல கூறிக் கொதித்திருந்தவள் அவனைக் கண்டவுடன் ஒன்றும் பேசாமல் உவந்துகொண்டதைக் கண்டு அனைவரும் வியந்து நின்றார். காதலனைக் காணுங்கால் தவறுகள் காணேன்; காணாக்கால் அவை யாண்டேன் என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

காதலனைக் கண்டவுடன் காமமே கண்டுநின்றேன்
ஏதமொன்றுங் காணேன் எதிர்ந்து

தலைவியின் மனநிலை இதனால் கூறப்பட்டது.

1287. பானுமதிபுலந்தும் பாணித்து நில்லாதேன்
கோதுவந்து சேர்ந்தாள்—குமரேசா—தானுக
உய்த்த லறிந்து புனல்பாய் பவரேபோல்
பொய்த்த லறிந்தென் புலந்து. (எ)

இ—ள்.

குமரேசா! பானுமதி யாதும் புலந்து நில்லாமல் தன் கணவனை ஏன் விரைந்து சேர்ந்தாள்? எனின், உய்த்தல் அறிந்து புனல்பாய் பவரேபோல் பொய்த்தல் அறிந்து புலந்து என் என்க.

உய்த்தல் = தள்ளுதல்; இழுத்துச் செல்லுதல் என்க. "தண் புனல் வண்டல் உய்த்தென" (ஐங்குறுநூறு 69), "பின்னின்று உய்த்தர இன்னே வருகுவர்" (முல்லைப்பாட்டு 15); வெம்முனை வேட்டுவர் உய்த்தனர்" (சிந்தாமணி 425); "வெருவுற உய்த்தவன்

நெஞ்சம் போல்" (நெய்தற் கலி 3); "உய்த்த பெருங்கிரி" (இராமா, மாயாசீதை 27). இவற்றுள் உய்த்தல் உணர்த்தி நிற்ற லறிக.

புனல்=நீர். இங்கு நீ ரோட்டம் என்க.

பொய்த்தல் அறிந்து=பிழை படுதலை நன்றாகத் தெரிந்தும். புலந்து என்=ஊடியதனால் பயன் என்? ஊடுதல் வீண் என்பது குறிப்பு. அறிந்தேன் எனவும் பாடம்; அங்ஙனம் கொண்டால், புலந்து நின்று அப் புலவி நிலையாமையை யுணர்ந்தேன் என்று கொள்க. புலவியாவது கலவியில் தாழாமல் நிலையாய் நிமிர்ந்து நிற்றல். அந் நிலை என்னிடம் நிலைக்கவில்லை யெனத் தன்னிலையை இங்ஙனம் உணர்த்தி நின்றாள்.

> "உலர்தரு வயிரத் திண்டோள் ஒழுகிவாளொளிகொள் மேனி
> மலர்ந்தபூந் தொடையல் மாலை மைந்தர்பால் மயிலினன்னார்
> கலந்தவர் போல ஒல்கி ஒசிந்தன சில; கைவாராப்
> புலந்தவர் போல நின்ற வுளசில பூத்த கொம்பர்." (இராமாயணம்)

மலர்பறிக்கச் சென்ற மகளிருடைய கைகளுக்கு எட்டிய பூங்கொடிகள் வளைந்து துவண்டன; எட்டாதவை நிமிர்ந்து நின்றன என்பதற்குக் கலந்தவரையும், புலந்தவரையும் இணைத்துக் காட்டி இஃதுணர்த்தி நிற்கும் அழகைப் பார்க்க.

விரைந்து இழுத்துச் செல்லுதலை யறிந்து வைத்தும் மிகுந்த நீரோட்டத்தில் பாய்வாரைப்போல முடியாமை தெரிந்துகொண்டு புலந்து நின்றதனால் யாது பயன்? என்பதாம்.

கொழுநன் நெருங்கியவுடன் யாதும் தாமதியாமல் விரைந்து முயங்கிய தலைவியைப்பார்த்துக் கொஞ்சம்ஊடிப்பார்க்கக்கூடாதா? என்று தோழி கேட்டாள்; கேட்கவே, பார்த்துப் பயன் என்? நெஞ்சந்தான் என்னை ஈர்த்துப் போகின்றதே எனத் தன் போக்கினை இங்ஙனம் உரைத்தாள் என்க.

விரைந்து செல்கின்ற வெள்ளப் பெருக்கில் ஒருவன் துள்ளிக் குதித்தால் அவனை அது அள்ளிக்கொண்டு போதல்போல் காமப் பெருக்குத் என் நெஞ்சைக் கடுத்து அடித்துக்கொண்டுபோன தாதலால் யான் யாதும் எதிர்த்து நிலைத்து நிற்க முடியவில்லை எனத் தனது நிலையினை மிக விநயமாக இவள் உணர்த்தியிருக்கும் அழகைப் பார்க்க. இதனால் இவளது உள்ளநிலை உணரலாகும்.

புனல் காமத்திற்கும், நெஞ்சு புனல்பாய்பவர்க்கும் ஒப்பாகக் கொள்க. "காமம் கடும் புனல் உய்க்குமே" (குறள் 1134); "காமக் கடும்புனல் நீந்திக் கரைகாணேன்" (குறள் 1167) என முன்பு உருவகமாய் நின்றது; இங்கு உவமையாய் வந்தது.

தம்மை ஈர்த்துக்கொண்டு போம் என்பதை முன்னுறத் தெரிந்தும் ஆற்று நீரில் பாய்ந்து அதன் வழியாயிழுபட்டு அலைப் படுவாரை எடுத்துக் காட்டியது, காம வேட்கையோடு எதிர்த்துத் தான் புலந்து நின்றால் தன்னிலை அந்நிலையாம் என்று தோழி அறிந்துகொள்ள என்க. "பேர்யாற்று நீர்வழிப் படூஉம் புணைபோல், ஆருயிர் முறைவழிப் படூஉம்" (புறம் 192); "மன்னன் சீர்வழிப் பட்டதே மண்பதை; மற்றொன் செய்யும், நீர்வழிப் பட்ட புணை" (நீதிநெறி விளக்கம் 44). நீர்வழிப் படுபவையை உவமையாக்கி இவை உணர்த்தி நிற்றல் காண்க.

காம வேட்கை கரைகடந்து நின்றது ஆதலால் நான் புலந்து நிற்க முடியாமல் கலந்துகொண்டேன் என்பது கருத்து.

புலவி நிலையை மறந்து தலைவி கலவியை விழைந்துகொள்வள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பானுமதியால் உணரப்படும்.

## கதை.

பானுமதி என்பவள் விதிசா நகரத்திலிருந்து அரசு புரிந்த நந்தன் என்னும் அரசனுடைய அருமைத் திரு மனைவி. உத்தம குணங்களெல்லாம் ஒருங்கமையப் பெற்றவள். இவளது உருவ நலம் பெருமித நிலையில் இனிதமைந்திருந்தது. "புயலோ, குழலோ! கயலோ, கண்ணோ! குமிழோ, மூக்கோ! இதழோ, கனிரோ! பல்லோ, முத்தோ!" என எவரும் வியந்து சொல்லும்படி இவளுடைய அவயவங்கள் யாவும் யாதொரு நவையுமின்றி எழில் நலங் கனிந்து ஒளி திகழ்ந்து நின்றன. இக் கட்டழகியை யாதும் விட்டகலாமல் மதுவீழ் வண்டுபோல மண்டி மூயங்கி அம் மன்னன் மயங்கியிருந்தான். அரியாசனத்தமர்ந்து அரச காரியங்களை நடாத்தும் பொழுதும் இவளை இணைபிரியாமல் உடனிருத்தி அவன் உளங்களி கூர்ந்தான். இங்ஙனம் யாமமும் பகலும், இடை தெரியாமல்

காம பரவசனாய்க் களித்து வருவதைக் கண்டு நெடுநாள் வருந்தி நின்ற பகுசுருதன் என்னும் அமைச்சன் ஒருநாள் அரசனிடம் தனியே வந்து இனிய உறுதிகளை உரிமையோடுரைத்தான்.

> "வடந்திகழ் முலையினார்தம் காமத்தின் மதர்த்த மன்னர்க்கு
> அடைந்தவா மாண்பும் ஆங்கொன்றில்லை; அவ் அரசர்வாழ்க்கை
> கடந்தவழ் கடாத்த வேழம் களித்தபின், கல்விமாணா
> மடந்தவழ் ஒருவன் மேல் கொண் டன்னதோர் வகையிற்றாமே."

மான இன்னவகையில் இதம்பலகூறினான். கூறியும் அம்மன்னன் மனந்திரும்பாமல் மையலே மிகுந்து இவளது இன்ப வெள்ளத்தில் ஆழ்ந்து எல்லாவற்றையும் மறந்து அந்தப்புரத்திலேயே அழுந்தியிருந்தான்.

> "நாகத்தால் விழுங்கப்பட்ட நகைமதிக் கடவுள் போலப்
> போகத்தால் விழுங்கப்பட்டுப் புறப்படான் புன்சொல் நாணன்
> ஆகத்தான் அமைச்சர் நுண்ணூற் றோட்டியால் அழுத்திவெல்லும்
> பாகர்க்கும் தொடக்க நில்லாப பகடுபோல் பொங்கியிட்டான்.
>
> கற்சிறையழித்து வெள்ளம் கடற்கு அவாயாங்குக் கற்றோர்
> சொற்சிறையழித்து வேந்தன் துணைமுலை துறத்தல் செல்லான்
> விற்சிறை கொண்ட போலும் புருவத்து விளங்கு வேற்கண்
> நற்சிறைப்பட்டு நாடும் நகரமும் காவல் விட்டான்."

என்றபடியே ஆவல்விடாமல் யாவையும் விட்டுத் தேவியொடுமேவி அவன் திளைத்திருந்தான். அவனுக்கு ஆவியும் அமிர்தமுமா யமர்ந்து ஆரா இன்பம் இவள் அளித்துவந்தாள். வருங்கால் சாரதாநந்தர் என்னும் பெரியவ ரொருவருடைய அறிவின் திறத்தால் அருவினைகருதி அவன் மறுபுலம் போனான். அரசியல்பின் உயர் நிலையை அயலிடம்போய் அறிந்துவரின் மனந்திரும்பி மதிவரும் என்று விரகுடன் உய்த்திருந்தும் பிறிதொரு பேரழகியை விழைந்து அவன் அகன்றிருப்பதாக வதந்தி யெழுந்தது. இவள் சினந்து கொதித்துச் செயிர்த்திருந்தாள். அவன் திங்கள் மூன்று கழிந்து மீண்டுவந்தான். வரவே இவள் ஒரு சிறிதும் ஊடாமல் உள்ளமுருகி அவனை உவந்து மருவினாள். மிகுந்த காதலுடையார் புலந்து சாதியார் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

> காதலனார் ஏதமெலாம் கண்டவுட னொன்றுமின்றிப்
> போத லறிந்தேன் புலந்து.

புலந்து நில்லாமல் கலந்து கொண்டமை இதனால் கூறப்பட்டது.

1288. காதலே கொண்டு களித்தாள் குமுதங்கோன்
கோதுசெய்தும் என்னே குமரேசா—மோதி
இளித்தக்க இன்னா செயினுங் களித்தார்க்குக்
கள்ளற்றே கள்வநின் மார்பு. (அ)

இ—ள்.

குமரேசா! நாயகன் இகழ்ந்து இடர் செய்தும் குமுதம் ஏன் அவனை என்றும் விழைந்து நின்றாள்? எனின், இளித்தக்க இன்னா செயினும் கள்வ நின்மார்பு களித்தார்க்குக் கள் அற்றே என்க. இது, தன் காதல் நிலைமையைத் தலைவனுக்குத் தலைவி யுரைக்கின்றது. இளித்தக்க = இகழும்படியான. இன்னா = துன்பங்களை.

கள்வ என்றது காதலனை. தலைவியின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டுள்ளவன் என்று குறிப்பித்தவாறு. இது, ஒளிப்பான் களிப்புரை என்க.

மார்பைக் கள்ளோடு ஒப்புவைத்தது மேலும் மேலும் விருப்பத்தை விளைத்து நிற்றல் கருதி. கள்ளானது தன்னைக் குடித்தவர்க்கு இளிவு, வறுமை, பழி முதலியவற்றை விளைத்து வரினும் அதனை வெறுத்தொழிக்காமல் குடியர் மென்மேலும் விழைந்து பருகுவர்; அதுபோல் தலைவனது ஆகம், நாணம் நிறைகளை இழப்பித்து இளிவு செய்யினும் அதனை வேணவாவோடு தலைவி மருவி வருதலால் "நின் மார்பு கள் அற்றே" என்றாள். இளித்தக்க செய்யினும் களித்தார்க்குக் கள் இனிதாதல்போல, இன்னா செய்யினும் எனக்கு நின் மார்பு இனிதாயுள்ளது என்றவாறு. கள் வெறி போல் காம வெறியும் உள்ளுணர்வொழித்து உறுகளிப்பூட்டும் ஆதலால், அஃது இங்கு உள்ள நேர்ந்தது. "நவ்வி நோக்கியர் இதழ் நிகர் குமுதத்து நறுந்தேன், வவ்வு மாந்தரிற் களிமயக்குறுவன மகரம்" (இராமாயணம்). இதில் களிப்பு நிலை காண்க.

மேல், புலவி நிலையை யுரைத்தாள்; இதில், கலவிக்கருத்தைக் குறிப்பித்தாள்.

கள்வனே! இளிவரவான துன்பங்களைச் செய்யினும் நின் மார்பு, களிப்புடையார்க்குக் கள்ளைப்போல் எனக்கு இனிதாயுள்ளது என்பதாம்.

ஊடுதற்குக் காரணமிருந்தும் அதனைச் செய்யமாட்டாமல் கலவியை விழைந்து நின்ற தலைவி தன் நிலைமையைத் தலைவனிடம் உரைத்தபடி யிது.

பிழைகள் பல செய்யினும் அவன்மேல் விழைவுமிகுகின்றது என்றதனால் இவளது கெழுதகைமை புணர நின்றது.

> "தகவுடை மங்கையர் சான்றாண்மை சான்றார்
> இகழினும் கேள்வரை ஏத்தி யிறைஞ்சுவார்" (பரிபாடல் 20)

தலைமகன் இகழினும் குலமகள் அவனை ஏத்தி யிறைஞ்சுவாள் என இஃதுணர்த்தி நிற்றலறிக. இறைஞ்சுதல் = வணங்குதல்.

வெறுப்பன செய்யினும் கணவனை மனைவி விழைந்துகொண்டாடுவள் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை குமுதம் பால் உணரப்படும்.

## கதை.

குமுதம் என்பவள் சத்திரகித்து என்னும் இராசனுடைய அருமைத் திருமகள். இவளுடைய வடிவழகும் குணநலமும் யாண்டும் புகழ நின்றன. முடிமன்னர் பலரும் இவளை மணந்துகொள்ள விழைந்து முனைந்து திரிந்தார். அவருள் மகததேசத்து மன்னனாகிய அமிர்தாகன் என்பவன் முதன்மை யெய்தி நின்றான். அவன் பேரறிவும் பெருந்திருவும் பெருங்கவினும் அருந்திறலும் ஒருங்கமையப் பெற்றவன். வில்லாடலில் மிகவும் வல்லவன்; அத் தலைமகன் இக் குலமகளைக் காதலித்து வந்து உலகறிய மணந்து கொண்டுபோய் உயர்ந்தபோகங்களை நுகர்ந்து உவந்திருந்தான். அவனுக்கு இன்ப நிலையமாயமர்ந்து யாண்டும் இவள் அன்பாற்றி வந்தாள். இவளது சுரத நுகர்வில் பரவசனாய் உளமிக வுருகி அளவி லுவகையுடன் விழைவுரையாடி அவன் நாளும் நாளும் ஆர்வமீக்கூர்ந்தான்.

> "செம்பவழ மேய்ப்பத் திகழ்ந்திலங்கு சேவடியின்
> வம்பழகு நோக்கி வழிபடுவ தேசாலும்
> அம்பவழ வாயும் அளகம் சேர் வாணுதலும்
> எம்பவமோ நங்கையாம் எம்மை யறியேமே."

என்றபடி இங்ஙனம் அவன் தன்னை மறந்து புகழ இவள் இன்னமிர்தமாயிருந்து வந்தாள். வருங்கால் விதைய தேயத்து வேந்தன்,

மகளுக்குச் சுயம்வரம் நிகழ்ந்தது. மிகவும் உயரமான கம்பத்தின் நுனியில் திரிபன்றி வடிவமாயமைந்த பொறியின் குறியை ஒரே தொடையில் எய்து வீழ்த்தினவனுக்கே தன் அருமை மகள் உரியளாவள் என யாண்டும் முரசறைவித்து அரசருக்கெல்லாம் விரைவுடன் அவன் ஓலை போக்கினான். அவ் அரசகுமரி பேரழகியாதலால் யாவரும் பேராவலோடு அங்குச் சேரலாயினர். இவனும் செல்ல விழைந்தான். இவளிடம் யாதும் சொல்லாமல் கரவாக அகன்று விரைவுடன் சென்றான். அரசரெல்லாரும் வெள்ளம் என வந்து ஆண்டு ஈண்டியுள்ளதைக் கண்டு இவன் உள்ளம் வியந்தான். உரிய நாள் வந்தது; விழா எழுந்தது; மதிமந்திரி ஒருவன் எதிர்வந்து நின்று "சிலை இது; சிலீமுகங்கள் இவை; கடுந்திகிரி வேகத்து இலைமுகத்துழலுகின்ற எந்திரம் அது; எய்வார் எய்க;" என இனிது மொழிந்தான். வந்த வீரரெல்லாரும் முந்துற எழுந்தார்; அவ்வெந்திரம் நோக்கினார்; சிந்தை கலங்கினார்.

> "பிறையெயிற்றெரிகட் பேழ்வாய்ப் பெருமயிர்ப்பைம்பொற் பன்றி
> யறை பெனத் திரியுமாப்பொற் பூமியினிறைந்து மன்னர்
> உறுகணை ஒன்றும் வில்லும் உடன்பிடித்துருவ நேமிப்
> பொறிதிரிவதனை நோக்கிப் பூமழை தூக்கி நின்றார்."

இவ்வாறு மறுகி நின்றவர் பின்பு வேணவாவினால் விரைந்து முன் வந்தார். வில் எடுத்தார்; அம்பு தொடுத்தார்; சொல்லிய குறியிடம் யாதும் செல்லாமல் எல்லாம் சோர்ந்துபோயின. இவன் அடுத்துவந்து கடுத்துத் தொடுத்தான். அத்தொடை மட்டும் அதனைத் தோய்ந்து மீண்டது. அது மீண்ட நிலையை அடியில் காண்க.

> "பில்கித்தேன் ஒழுகும் கோதைப் பிறர்மனையாள்கட் சென்ற
> உள்ளத்தை யுணர்வின் மிக்கான் ஒழித்திடப் பெயர்ந்ததேபோல்,
> மல்லல் நீர் மகதநாதன் தாந்த கோல் மருள ஓடிப்
> புல்லி அப்பொறியை மோந்து புறங்கொடுத்திட்டதன்றே."
> (சிந்தாமணி, 2186)

இவன் கணைபோய்க் குறியைத்தொட்டு வீழ்ந்ததற்கு உணர்வுடையான் உள்ளம் பிறர்மனைமேல் ஓடி மீண்டதை உவமைகாட்டி இந்நூலார்த்தி நிற்கும் அழகை ஊன்றியுணர்ந்துகொள்க. அவ் வில் விழா ஆறு நாள் தொடர்ந்து நடந்தது; இறுதியில் சீவகநம்பி

வென்று அந்நங்கையை மணந்துகொண்டான். அனைவரும் நாணி யகன்றார். இவனும் வெட்கமீதூர்ந்து வீட்டுக்கு வந்தான். தன்னைக் காணாமல் கைவிட்டு ஓர் கன்னியை நாடிக் கரந்து போயுள்ளான் என்பதை அறிந்து சினந்து உள்ளங்கனன்றிருந்த இவள் அவன் அடைந்தவுடனே யாவுமறந்து அவனை அணைந்துகொண்டாள். அவன் கள்ளஞ்செய்து போனதை நினைந்து தான் உள்ளம் புலந் திருந்ததையும், உற்றவுடன் ஒன்றும் பேசாமல் உவந்து கலந்த தையும் குறித்து மறுநாள் இவளை அவனிடம் சிரித்துச்சொல்லிப் “பொல்லாக் கள்ளம் எல்லாரையும் மயக்கும்” என்று புன்னகை யோடு புல்லிக்கொண்டாள். “எல்லி யிடையே யிடர்செயினும் இந்துவா, அல்லி யலரும் அகம்” என்றபடி தன் பெயர் நிலைக் கேற்ப இவள் உளம் மலர்ந்து வந்தாள். இளித்தக்க இன்னா செயி னும் கள்வ! நின்மார்பு இனியது என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

வெம்பிப் புறஞ்சுடினும் வெங்கதிரைத் தண்கமலம்
நம்பி அகத்தே நகும்.

தலைவியின் உள்ளக்களிப்பு இதனால் கூறப்பட்டது.

**1289.** காமத்தின் செவ்வி கழறி மறுகினான்
கோமான் குசனேன் குமரேசா—காம
மலரினு மெல்லிது காமம் சிலரதன்
செவ்வி தலைப்படு வார். (௯)

இ—ள்.

குமரேசா! காமச் செவ்வியைக் கருதியுரைத்துக் குசன் ஏன் மறுகினான்? எனின், காமம் மலரினும் மெல்லிது; அதன் செவ்வி தலைப்படுவார் சிலர் என்க.

இது, புலவி நீடியதை நினைந்து தலைமகன் புகன்றது.

மலரினும் என்பதில் இன் உருபு உறழ்பொருளது. உம்மை அதன் மென்மைதோன்ற நின்றது. செவ்வி = பருவம். தலைப் படுவார் = கூடிநுகரப் பெறுவார். தலைப்படல் = கூடப்பெறுதல்.

ஊடலில் நீடி உள்ளங்கருகாமல் உவந்து கலந்து பக்குவத்துடன் காமம் துய்ப்போர் அரியர் என்பான் "அதன் செவ்விதலைப் படுவார் சிலர்" என்றான். சிலர் என்றதனால் பலர் பெறார் என்பதாயிற்று. அப்பலருள் நானும் ஒருவன் எனத் தன்னைக் குறிப்போடு நொந்துகூறியவாறிது.

மெல்லிய மலரினும் காமம் மிக மென்மையுடையது; அதன் தன்மையறிந்து பொருந்தி மகிழ்வார் சிலரே என்பதாம்.

நாயகி ஊடலில் நீடிக் காலம் கடந்து நிற்றலைக்கண்டு நாயகன் உளங்கனன்று உரைத்தபடி யிது.

காம இன்பம் நுகர்தற்குரிய காதலர் இருவரும் கருத்தொத்துப் பருவம் கெடாமல் கலந்து துய்ப்போரே பாக்கியவான்களாவர்; அப்பாக்கியம் எனக்குக் கிடைக்கவில்லை எனத் தனது அபாக்கிய நிலையை நொந்து இங்ஙனம் கூறினான் என்க.

காம இன்பத்தின் மேன்மைக்கு மலரை எடுத்துக் காட்டியது மணம் சுவை முதலியன வாய்ந்து இதம்பயந்துள்ள அதன் மாட்சி கருதி. மலரிலுள்ள தேனைப் பருவம் கண்டு வந்து வண்டு நுகர்தல் போல் கலவியின்பமும் காலம் கடவாமல் நுகரவேண்டும்; செவ்வி கெடின் இருதலையும் இன்றாம் என்க. "வண்டோரனையர் ஆடவர்; பூவோரனையர் மகளிர்;" என்றபடி காதலர் மருவியுள்ளமையால் பருவம் தவறாமல் அவர் பருகவேண்டும் என்பதாம்.

"போதவாய் திறந்தபோதே பூம்பொறி வண்டு சேர்ந்தாங்
கூதுமே; மகளிர்க்கு ஒத்த போகமும் அன்னதொன்றே;
யாது நீ கவல வேண்டா ஆழகுடைய நம்பி
காதலான் தவத்தின் மிக்கான் கண்ணுறும் நாளை என்றான்."

(சிந்தாமணி. 1456)

"கயங்கெழு நறுமலர் கயங்குருவகைப்
பயங்கெழு தேனுகர் சுரும்பின் பான்மைபோல்
வயங்கிழை மகளிரை மனம் திருத்தியே
முயங்கினர்க்கன்றி மற்றின்ப முற்றுமோ?" (பிரமோத்தரகாண்டம்)

காமபோகம் மலரோடுறழ்ந்து இவற்றுள் வந்துள்ளமை காண்க.

மலர், தொட்டெடுத்து மோந்து பார்க்கும்வரையும் நிறமும் மணமும் சிறிது நிலைத்திருக்கும்; காமம், கருதியவுடனே கண்டு ஓர் ஊழியாய் நீண்டு, நிணம் தீபிட்டதுபோல் நிலைகுலைந்துபோம் ஆதலால் "காமம் மலரினும் மெல்லிது" என்றான். பருவம் தவ ருமல் பயன்படுத்தவேண்டும் என்பது கருத்து. தவறின் இரு திறத்தும் அருவருப்பாம் என்பது குறிப்பு.

நெடும்புலவிகொண்டு மனைவி நிமிர்ந்து நின்றால் கணவன் கடுந்துயர் கூர்ந்து கலங்கி நிற்பன் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை குசன்பால் உணரப்படும்.

## கதை.

குசன் என்பவன் கௌசிகாது குல முதல்வனாகிய அரசகுலத் தோன்றல். அற்புத நிலையினன். இந்நிலவுலகம் பலவகை நலங் களிற் சிறந்து உயர்நிலையடையும்படி மலரவனருளால் இவன் வந்து தோன்றினன். "மலருளானைவரும், பிரமன் அன்றளித்த வென் றிப் பெருந்தகைக் குசன் என்றேரதும் அரசர் கோன்" (இராமா யணம்) என இவன் வரன்முறை குறித்து அமரரும் முனிவரும் வியந்து புகழ்ந்துள்ளார். குசன் என்னும் பெயர்க்குப் பூமி பால கன் என்பது பொருள். கு = பூமி. அதனை ஆதரவோடு நன்கு பரிபாலனம் செய்தவன் குசன் என்க. வையம் உடலாக அதனை உய்யத்தாங்கும் உயிர்போலமர்ந்து இவன் உறுதிசெய்து நின்றான். இவன் பருவமெய்தி உருவமேவொளி ஒளி சிறந்து நின்றபொழுது விதர்ப்பதேசத்து வேந்தன் மகளாகிய வைதர்ப்பி என்பவள் இன் னெழில்மிகுந்து கன்னிமை காத்துக் கனிந்திருந்தாளாதலால் அப் பெண்ணரசியை மணந்து, எண்ணரிய போகங்களை நுகர்ந்து, விண் ணரசும்புகழ மண்ணரசு புரிந்து மகிழ்ந்திருந்தான். அரசக்குரிய குணநலங்களெல்லாம் ஒருங்கேயமைந்து உயர்ந்திருந்தானாதலால் இவனது செங்கோல் எங்கும் பரவி இசைபெற்று நின்றது.

"தூங்காமை அரணுடைமை படையுடைமை துணிவுடைமை தூய்மை கேண்மை, நீங்காமை அறிவுடைமை நாணுடைமை பொறைமை புன்மை நெறிச்செல்லாமை, பூங்காமை எனக்கொடுக்குங் கொடைமடமை யிவை தழுவிப் புரவு பூண்டோன், தீங்காம் ஐவகைப் பயந்தீர்த்து, ஆறகற்றி, ஏழ்நிலைக்கோல் செலுத்தா நின்றான்." கா = கற்பகம். மை = மேகம்.

என்றபடியே நிறைகுணத்தனாய் நின்று இறைமைபேணி இவன் முறைமை செய்துவந்தான். இப்பேரரசனுக்குப் பெரும் போக நிலையமாயமர்ந்து அரும்போகங்களையுதவி அப்பேரழகி சீரமைந் திருந்தாள். புது மணை நகரில் அதிபோகராய் இங்ஙனமிருந்து வருங்கால் விதர்ப்ப மன்னன் நகரில் விழா ஒன்று நிகழ்ந்தது. அவ் வரசன் நேரேவந்து தனது அருமை மருகனாகிய இவனை ஆர்வ மோடழைத்தான். இன்னுயிர்த் துணைவியுடன் இவ் அண்ணல் எழுந்து அவ் அணிநகரடைந்தான். அங்குப் பெருஞ்சிறப்போடு இவனைத்தனியே வைத்து நகர்வலம் செய்வித்தார். அப்பவனிக் காட்சி அவணி எங்கும் அதிசயமானது. மங்கையர் பலரும் பொங்கிய ஆவலோடு போந்து மொய்த்தார். இவனைக்கண்டு வியந்தார்; காதல் மீக் கொண்டார்; உள்ளமுருகினார்; உரை பல பிதற்றினார்; தள்ளருமாலொடு தவித்துளைந்தார்; இவனை முயங்கப் பெறாத பெண் பிறவி ஒரு பிறவியா? என்று தம்முள் மயங்கி மம்மர்நோய் கூர்ந்தார்.

> “சாந்தகங் கிழிய மாலைத் தடமுலை நெருங்கப் புல்லிச்
> சேர்ந்தெழு நங்கைமாரே திருநங்கைமார்கள்; அல்லார்
> கூந்தலுமுலையுமுத்தும் கோதையும் சுமந்து வைவான்
> போந்த அந் நங்கைமார்கள் பொய்ந் நங்கைமார்கள் என்பார்;
>
> “இடம்பட அகன்று நீண்ட இருமலர்த் தடங்கண் என்னும்
> குடங்கையி னொண்டுகொண்டு பருகுவார் குவளைக்கொம்பின்
> உடம்பெலாம் கண்களாயின் ஒருவர்க்குமின்றி யொப்ப
> அடங்கவாய் வைத்திட் டாரப் பருகியிட்டிமின் என்பார்.”

இவனது வடிவழகை நோக்கி மகளிர் பலரும் இவ்வாறு மறுகிவாய்விட்டு உருகி அலமர இவன் அரசமாளிகையடைந்து அனைவரும் பரிசியேத்த அமர்ந்திருந்தான். விழா முடிந்த பின் வரிசைபலபெற்றுத்தேவியோடெழுந்து தனது திருநகர்சேர்ந்தான் ஆவி ஒன்றாய் இவர் மேவி வருங்கால் ஒரு நாளிரவு விதர்ப்பநாட்டு மகளிரின் மேன்மையைக்குறித்து வியந்து பேசினான். அவ்வம யம் உள்ளூற வுவந்திருந்தாளாயினும் மறுநாள் அவள் “எவளையோ நினைந்தல்லவா இங்ஙனம் உவந்து சொல்லுகிறார்” என்று உள்ளந் திருகினாள். ஊடல் மேற்கொண்டாள். இவன் நயந்து சொல்லி யும் அவள் நிமிர்ந்து நின்றாள். அவளது ஊடல் நிலையறிந்து

இவன் வாடி வருந்தினன். ஊடல் சிறிது நீடினும் காதலர் வாடி வருந்துவர்; ஆதலால் "காமம் மலரினும் மெல்லிது" என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான். பின்பு இவனுக்குப் புதல்வர் நால்வர் பிறந்தார். அவருக்கு முறையே குசாம்பன், குசநாபன், ஆதூர்த்தன், வசு என்று பெயர். குசநாப னுடைய மகன் பிள்ளை பேரன்தான் பின்பு விசுவாமித்திரராய் விளங்கி நின்றார். அவருக்குக் கௌசிகர் என்று பெயர் வந்ததற்குக் காரணம் குசனாகிய இவன் மரபில் வந்தமையான் என்க.

அன்பமைந்து காம அளவறிந்து சேர்ந்தார்பே
ரின்பமைந்து நிற்ப ரிவண்.

செவ்வி தெரிந்து சேர விரைந்தமை இதனால் கூறப்பட்டது.

---

1290. மாரிடைமுன் னுள்ள மறுகித் துணையினுமால்
கூர நின்றாள் என்னே குமரேசா—ஏரமைந்த
கண்ணிற் றுனித்தே கலங்கினாள் புல்லுதல்
என்னினுந் தான்விதுப் புற்று. (0)

இ—ள்.

குமரேசா! கண் சிவந்து கலங்கி மாரிடை ஏன் முன் விழைந்தாள்? எனின், கண்ணின் துனித்தே கலங்கினாள் புல்லுதல் என்னினும் தான் விதுப்புற்று என்க.

இது, புலவியினும் கலவி கனிந்து நின்றமை கழறுகின்றது.

கண்ணின் துனித்து = கண்ணால் புலந்து. துனித்தல் = புலத்தல். புலவியிலும், கலவியிலும் பெண்களின் கண்கள் சிவந்து காட்டும் ஆதலால் அக்காட்சியைக் குறித்துக் "கண்ணிற் றுனித்தே" என்றான்.

"வாயிற் சிவப்பை விழிவாங்க, மலர்க்கண் வெளுப்பை வாய்வாங்கத்
தோயக்கலவி அமுதளிப்பீர்! துங்கக் கபாடம் திறமினோ"
(கலிங்கத்துப்பரணி)

காதலிகள்பால் கலவியில் நிகழும் நிலையை இது காட்டி நிற்றல் காண்க. என் என்றது தலைவனை. தான் என்றது தலைவியை.

விதுப்பு = விழைந்து விரைதல். தன்னைக்காட்டிலும் கலவி

யில் தலைவி மிகவும் விரைந்து நின்றாள் ஆகலால் "என்னினும் தான் விதுப்புறாக் கலங்கினாள்" என்றான். "புலவி நெஞ்சமொடு கலவியுட் கலங்கி" (பெருங்கதை 3,14.) என்புழிப் பதுமாபதியின் விதுப்பு நிலை காண்க.

புல்லுதல் = தழுவுதலை. தனது விரகதாபம் நீங்கக் காதலி முன்னம் ஆதரவோடு முயங்கிய நிலையை நினைந்தவனாதலால் அப்புல்லல் நிலையை இங்ஙனம் புகழ்ந்து சொல்லுகின்றான்.

"அறல் என அவிர்வரும் கூந்தல், மலரென
வாண்முகத் தலமரு மாயிதழ் மழைக்கண்,
முகை நிரைத் தன்ன மாவீழ் வெண்பல்,
நகை மாண் டிலங்கு நலங்கெழு துவர்வாய்க்,
கோலமை விழுத்தொடி விளங்க வீசிக்,
காலுறு தளிரின் நடுங்கி, ஆனாது
நோயசா வீட முயங்கினள்
வாராய் மகளிரிற் பெறற்கரி யோளே." (அகம் 162)

தலைவி விதுப்புற்றுப் புல்லியபடியைத் தலைவன் இதில் சொல்லியுள்ளமை காண்க. மேல், ஊடல் நீடியதை நினைந்து உளைந்துரைத்தான்; இதில், கூடல் நேர்ந்ததைக் குறித்துரைக்கின்றான்.

கண்ணளவில் ஊடிக் கலவியை என்னினும் முன்னுறவிழைந்து தலைவி கலங்கி நின்றாள் என்பதாம்.

புறத்தே சிறிது ஊடி அகத்தே பெரிதும் கலவியை விழைந்து நின்ற தலைவியின் நிலையைக் குறித்துத் தலைவன் உரைத்தபடி யிது.

கலந்து மகிழ விழைந்தாளாயினும், முந்துறப் புலந்திருந்தமையால் வெளிப்பட விரைந்துகொள்ளாமல், குறிப்பினால் சாடைகள் பல செய்து குழைந்துழந்தாளாதலால் விதுப்பும், கலக்கமும் விளைந்து நின்றன.

"பாசிழை ஒருத்தி ஆற்றாப் புலவியாள் பைந்தாரான் முன்
பூசலில் வாசம் காலிற் போக்கியும், புனைபூண் காஞ்சி
ஓசையைச் செவியி லுய்த்தும், கலவியி னுருவங் கீட்டும்
தூசினை யுடுத்தும், போர்த்தும், தூதுவிட்டவள்போல் நின்றாள்."
(திருவிளையாடல்)

"உய்த்தபூம் பள்ளியின் ஊடல் நீங்குவான்
சித்தமுண்டு ஒருத்திக்கு, அது, அன்பன் தேர்கிலான்;
பொய்த்ததோர் மூரியால் நிமிர்ந்து போக்கினள்
எத்தனை இறந்தன கடிகை யீண்டென்றாள்." (இராமாயணம்)

"வேகம் விளைய வருங்கொழுநர்
மேனி சிவந்த பழிதீரப்
போகம் விளைய நகை செய்வீர்
புனைபொற் கபாடந் திறமினோ." (கலிங்கத்துப்பரணி)

புறத்தே புலந்திருந்தாலும் அகத்தே கலவியை விழைந்து தலைவரோடு தலைவியர் விளையாடியிருந்த நிலைகளை இவை உணர்த்தி நிற்றலறிக. இங்ஙனம் புணர்ச்சியை விழைந்து இயற்றி வந்தவள், இது பொழுது இயல்பு திரிந்து புலவியில் நிமிர்ந்துள்ளாள் ஆதலால் இவள் என் நினைவியலள்; அயலவளே; எனத் தலைவன் உளம் புலந்து இங்ஙனம் உரைத்தான் என்க.

புணர்ச்சியை விழைந்து உணர்ச்சியை உரைத்தமையால் இது புணர்ச்சி விதும்பல் ஆயிற்று.

நாயகி ஊடி நின்ற நாயகன் வாடி வருந்தியமை என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மாரிடையால் உணரப்படும்.

## கதை.

மாரிடை என்பவள் யதுகுல மன்னனாகிய சூரனுடைய அருமைத் திருமனைவி. பெருவனப் புடையவள். "பாரிடை உருவில் அறிவினில் திருவில் பண்பினில் எவருமே நேரா, மாரிடை வானில் வயங்கிய அமிர்தாய் மன்னனுக்கின்னலம்பயந்து, காரிடை மலர்ந்த மின்னலங் கொடிபோல் கனிந்தினிதிருந்தனள் களித்தே" எனத் துறைதந்திருந்த இக் குலமகளோடமர்ந்து அத் தலைமகன் அளவிலின்பங்களை நுகர்ந்து அதிக மகிழ்ந்தான். அவனது குறிப்பறிந்து விருப்போடார்ந்து நாளும் இவள் நன்குற்றி வந்தாள். காதல் நலங் கனிந்து ஆதரமிகுந்து ஒத்த நிலையில் உயிரொன்றி புவந்து வந்தமையால் இவரது இல்வாழ்க்கை இன்ப நிலையமாயினைந்து நின்றது. எல்லியும் பகலும் இடைதெரியாமல் இங்ஙனம் இவர் புல்லி மகிழ்ந்து வருங்கால் நல்ல ஓரையில் ஓர் செல்ல மகன் பிறந்தான். அப்பிள்ளைக்கு வாசுதேவன் என்று பெயரிட்டு வளர்த்துவந்தார். ஈன்றணிந்தாய அவ்வமயம் இம் மெல்லியலைப்பிரிந்து அம்மன்னன் வேறோரிடம் மேவியிருந்தான். கலவி நிலைக்கு இயல்பில்லாத காலம் இதுவென்று கையகன்று

அவன் எண்ணியவாறெல்லாம் இன்புறுத்தி வந்தான் ஆதலால் அவ் அண்ணல் இவள்மேல் அன்பு மீதூர்ந்து ஆர்வமுற்று நின்றான். ஊடற்காலத்தில் அவனினும் முந்திக் கூடலை விழைந்து இவள் குணம் பல புரிந்தாள். புல்லுதல் என்னினும் விரைந்து கலங்கினாள் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

> நோக்களவி லூடி நடங்கினாள் நண்புணர்வில்
> ஊக்கி யுளைந்தா ளுயிர்.

காதலி கலவி விழைந்து நின்றநிலை இதனால் கூறப்பட்டது.

## இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

காமம் நினைப்பினும் காணினும் களிப்பு மீக்கூரும். அது கதித்தெழுந்தபொழுது ஊடலை ஒழித்தொழுகவேண்டும். காதலன் கருதாது அகலினும் காதலி அவனைக் காண விழைவள். ஊடலில் நீடாமல் அவனைக் கூட விழைவள். அவனிடம் குற்றம் காணாள். குணமே காண்பாள். புலந்து நில்லாள். கலந்தே களிப்பாள். காமம் மலரினும் மெல்லிது ஆதலால் அதனைப் பருவமறிந்து நுகர்ந்துகொள்வர். காதலர் உள்ளம் கலவியில் துள்ளும் என்பதாம்.

க௨௯-வது புணர்ச்சி விதுப்பல் முற்றிற்று.

# 130ம் அதிகாரம் நெஞ்சொடு புலத்தல்.

அஃதாவது தலைவியும் தலைவனும் புலவியி லுழந்து மலைவுமிருந்து தம் மனத்தொடு மறுகிப் புலம்பல். கலந்தலை விழைந்து கதித்து நுகர்ந்து மிருந்து நின்றபொழுது இப்புலத்தல் நிகழும் ஆதலால் புணர்ச்சி விதும்பலின் பின் வைக்கப்பட்டது. க௨௫-ம் அதிகாரத்தில் வந்துள்ள நெஞ்சொடு கிளத்தலுக்கும் இதற்கும் வேற்றுமை என்னை? எனின், அது பிரிவு நிலையில் விரகதாபமிகுந்து மறுகியுளைந்து துணையினை நினைந்து துயருழந்துரைத்தல்; இது, மருவியுள்ளபொழுது இடையே புலவியிருந்து இருவரும் தனியே அயலமர்ந்து செயலயர்ந்து மயலொடு பிணங்கல் என்க,

1291. சாவி புலந்தீர்த்(த) தன் னெஞ்சை நோக்கியப்பா
கோமி யிகழ்ந்தாள் குமரேசா - ஏதும்
அவர்நெஞ்சு அவர்க்காதல் கண்டும் எவனெஞ்சே
நீயெமக் காகா தது. (க)

இ - ள்.

குமரேசா! புலந்திருந்த சாமி தன் நெஞ்சை ஏன் இகழ்ந்து நொந்தாள்? எனின், அவர் நெஞ்சு அவர்க்கு ஆதல் கண்டும் நெஞ்சே! நீ எமக்கு ஆகாதது எவன்? என்க.

இது, தன் நெஞ்சைக் கடிந்து தலைவி சொல்கின்றது.

அவர் என்றது தலைவனை. கண்டும் என்பதே அறிந்திருந்தும். ஆகாமல் போனமை அறியாமையாயினை அறிவுறுத்தற்கு வியப்புறுத்திய படியிது.

அவர்க்கு ஆதல் = காதலர்க்கு உரிமையாய் அங்கே பரிவுசெய்து நிற்றல். தன்னை விழைந்து வராமல் அவர் வன்மம் சாதித்திருந்ததற்கு அவருடைய மனம் வசமாயுள்ளது என அதன் நிலையை உணர்த்தித் தன் நெஞ்சொடு புலந்தாள்.

எவன் = காரணம் என்ன? இன்னவாறு வினவியது தன் மனம் தகவின்றி ஓடலை வியந்து. உடன் பிறந்தும் உதவாமல் உட்பகையாயுள்ளாயே! எனத் தன் உள்ளத்தை எள்ளிக் கூறியவாறிது.

“கடைஇய நின்மார்பு தோயலம் என்னும்
இடையும் நிறையும் எளிதோ? நிற்காணின்
கடவுபு கைத்தங்கா நெஞ்சென்னும் தம்மோடு
உடன்வாழ் பகையுடை யார்க்கு.” (மருதக்கலி 12)

தன் நெஞ்சு தனக்கு உதவாமல் காதலனுக்கே இதமாயுள்ளதென ஒருத்தி இதில் உளைந்திருத்தலறிக.

நெஞ்சே! காதலர் நெஞ்சம் அவர்க்கு வசமாய் அடங்கி நிற்பதைக்கண்டும் நீ எமக்கு வசமாயிராமல் எழுந்துபோவது என்ன? என்பதாம்.

தலைவனும் தலைவியும் கலந்து மகிழ்ந்து வருங்கால் இடையே சிறிது பிணங்க நேர்ந்தது; அப்பிணக்கில் அவன் பேசாமல் கொஞ்சம் ஒதுங்கியிருந்தான்; அவன் அங்ஙனம் இருக்க, இவள் மனம்

பொருமல் தினமும் அவனையே நினைந்து தியங்கி நின்றாள்; இன்று பேசுவார்; நாளைப்பேசுவார்; நாளை நின்று பேசுவார்; என இன்னவாறு நாளும் நாளும் ஆறுநோக்கி அமர்ந்து பார்த்தாள்; ஒன்றும் பலிய வில்லை; ஆகவே ஒருநாள் தன் நெஞ்சை நோக்கி இங்ஙனம் உரைத்தாள் என்க.

"அவர் நெஞ்சு அவர்க்கு ஆதல்" என்றது தன்னை நினையாமல் அவனுக்கு உதவியாய் அவன் மனம் அமைந்து நிற்றலை நோக்கி, நினைந்தால் உடனே நேர்ந்து வந்து சேர்ந்து விடுவரே; அவ்வாறு சேரவொட்டாதபடி அவர் நெஞ்சம் கல்லாயிருக்க, நீ என் நெருப் புற்ற வெண்ணெய்போல் நிலைகுலைந்துருகி இப்படி விருப்புற்று ஓடுகின்றாய்? என்று தன் நெஞ்சை உருத்து நின்றாள் ஆதலால் "எவன் நெஞ்சே! நீ எமக்கு ஆகாதது" என்றாள். உனக்குச் சொந்தமாகப் புத்தியில்லை ஆனாலும், பிறரைக்கண்டாவது பிழைக்க லாகாதா? என்பாள் கண்டும் என்று தன்நெஞ்சைக்கடிந்து கூறினாள்.

பிறரை நோக்கிப் பேசாமல் தன் உள்ளத்தை நோக்கியுரைத் தமையால் இது உட்சொல் என்க. சொல்லானது உட்சொல், புறச்சொல், ஆகாயச் சொல் என மூன்று வகைப்படும். உட்சொல் லாவது தன் நெஞ்சொடு சொல்லல்; புறச்சொல் ஆவது பிறர்கேட்க உரைத்தல்; ஆகாயச் சொல்லாவது, தானாகவே ஆலோசனைக் காகக்கூறிக்கொள்ளல் என்க. இவை, முறையே நெஞ்சொடு சொல் லல், கேட்போர்க் குரைத்தல், தானே கூறல் எனவரும்.

> "நெஞ்சொடு கூறல், கேட்போர்க் குரைத்தல்,
> தஞ்சம் வர அறிவு தானே கூறல் என்று
> அம்மூன் றென்ப செம்மைச் சொல்லே." என்பதும் காண்க.

உள்ளும் புறமும் சொல் நிகழும் இடம் இதனால் உணரலாகும்.

புலவியிலும் தலைவி மனம் தலைவனை நினைந்து நலிந்துநிற்கும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சாவி பால் உணரப்படும்.

## கதை.

சாவி என்பவள் அங்கதேசத்து அரசனுடைய அருமைத் திருமகள். நல்ல சீலமுள்ளவள். இயல் எழில்களில் மிகவும்

உயர்ந்திருந்தாளாதலால் எவரும் இவளை வியந்து நின்றனர். "சந்திரனே போன்ற முக சந்திரலோகத்தவரும்; இந்திரர் இந்திரைகளெல்லாரும், கந்தருவமங்கையரும் இந்த மடமங்கையைக் காணின் நங்கையென்னப்போற்ற நலமுடையாள்" என இக்குல மகள் நிலவியிருந்தாள். இவளது உருவ நிலையை வினவியறிந்து சுமதி என்னும் அரசிளங் குமரன் ஆர்வமீதூர்ந்தான். அவன் சூரிய குலக் குரிசிலாகிய இக்ஷ்வாகுவின் மரபில் வந்தவன். பேரறிவாளன். அவனது குண நலங்களைக் கேள்வியுற்று முன்னதாகவே இவள் மனமுருகியிருந்தாள். ஆதலால் மகிழ்வுடன்பட்டு இருவரும் விரைந்து மணந்தார். இப்பதிவிரதையோடமர்ந்து விசாலை என்னும் நகரிலிருந்து அதிபோகங்களை நுகர்ந்து அவன் அகமிக மகிழ்ந்தான். ஒத்த நலன், ஒத்த எழில், ஒத்த அன்போடமைந்திருந்தமையால் இவரது இன்ப நுகர்ச்சியும் பண்புடைமையும் இல்வாழ்க்கை நிலையும் எங்கும் இசைமிக்கிருந்தன.

"நிறை யிதழ் இறந்து மதுவுண் டருந்தும்
விருந்து கொள் மலரும் புரிந்துறை மணமும்,
செந்தமிழ்ப் பாடலும் தேக்கிய பொருளும்,
பாலும் சுவையும், பழமும் இரதமும்,
உடலும் உயிரும் ஒன்றிய தென்னக்
கண்டோர் தெளிந்தும் கலந்த வுள்ளுணர்வால்
பாலும் அமுதமும் தேனும் பிலிற்றிய
இன்பமர் சொல்லி நண்புமனக் குறியும்
வாய்மையும் சிறப்பும் கிழமெனக் கடவார்
விண்ணவர் தலைவனும் வீயா மருந்தும்
அளகைக் கிறையும் அரும்பொருள் ஈட்டமும்
கண்ணனும் காவலும் முனியும் பசுவும்
ஒன்றினும் தவறு ஒருங்கினையர் தனபோல்
நீடி நின்றுதவும் கற்புடை நிலையினர்"

எனப் பாடிவரும்படி இவர் பீடுபெற்றிருந்தார். உழுவலன்போடு தழுவி மகிழ்ந்து இங்ஙனம் ஒழுகி வருங்கால் இராமனும் இலக்குவனும் வேள்வியை முடித்துக் கோசிக முனிவரோடு மிதிலையை நோக்கி வந்தார். அவ்வரவினை யறிந்து அவரை எதிர்கொண்டழைத்துத் தன் நகரிடையிருத்தி உவந்துபசரித்துச் சிறந்தவிருந்து செய்து அவன் புகழ்ந்து விடுத்தான். அவ் அரசனது உள்ளன்பை வியந்து அவ்வள்ளல்முதல் மூவரும் உள்ளமிகவுவந்து அவனைப்

புகழ்ந்து போயினர். அடியில் வருவன காண்க.

"அரும்பிளவு கொங்கைத் திதிமுனம் விரதம் ஆற்றுழி யிவ்விடமாகும்
பொருந்தலர்க்கடந்த இக்குவாகுப்போர்ப் புரவலன் அலம்புசை என்னும்
கரும்பினைக் கலந்தாங்களித்திடும் விசாலன் கட்டிய நகரமீதவன்றன்
பொருந்திய மருமான் சுமதி யிந்நகரம் புரவுபூண்டிருந்தனன் என்றான்;
கோசிகன் இவ்வாறுரைக்கும் எல்லையினிற் கோதறு சுமதி வந்தெய்தி
ஆசைகள்தோறும் தன்புகழ் நிறவும் ஐயனை அளவளாய்த்தழீக்கொண்டு
ஏசறுந்தனத நகர்வயிற்கொணர இயற்றிய விருந்தெதிர் விரும்பி
மாசறு முனிவும் தம்பியும் தொடர மிதிலையூர் மருங்கணைந்தனனால்."
(கூர்ம புராணம்)

இவ்வாறு அணைந்த அப்பெருமான் அங்கு வில்லை வளைத்துச் சீதையை மணந்துகொள்ள அமர்ந்து விழா நிகழ்ந்தபொழுது அம்மணவினையைக்காண விரைந்து இச்சதிபதிகளிருவரும்சென்று அதிவிமரிசையோடு தங்கி அவ் அற்புதமன்றலைக்கண்டு மீண்டார். மீளுங்கால் அந்நகர மகளிருடைய எழில் நலங்களை வியந்து அவன் புகழ்ந்து பேசினான். எவளையோ பார்த்து நயந்துள்ளதனாலல்லவா இப்படிப்புகழ்ந்து கூறுகின்றீர்கள் என்று இவள் சினந்து சீறினாள். மாளிகை யடைந்தவுடன் ஒன்றும் பேசாமல் உருத்திருந்தாள். அவன் சிரித்தகன்று அரச விசாரணையைச் செய்துகொண்டு அந்தப்புரத்துள் ஒரு வாரமாக அணுகாதிருந்தான். வலிந்து வந்து பேசுவர் என்று இருநாளாக நினைந்திருந்த இவள் அவன் வராதிருப்பதைக்கண்டு மறுகிப்புழுங்கினாள். கனவிலும் அவன்மீதே நினைவோடி நின்றமையால் தன் மனநிலையை ஒருநாள் இவள் வைதிகழ்ந்தாள். அவர் நம்மை இகழ்ந்திருத்தலைத் தெரிந்தும் நாம் ஏன் அவரை நினைந்து வருந்தவேண்டும் என்று புலந்து மொழிந்தாள். மனத்தொடு பிதற்றி இங்ஙனம் மறுகியிருந்த இவள் பின்பு அவனை மருவி மகிழ்ந்தாள். "அவர் நெஞ்சு அவர்க்கு ஆதல் கண்டும் எவன்நெஞ்சே! நீ எமக்கு ஆகாதது" என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

என்னோடு பன்னா ளிருந்தும் எவனெஞ்சே
மன்னோடு போனாய் மறந்து.

தலைவி நெஞ்சொடு புலந்த நிலை இதனால் கூறப்பட்டது.

1292. சென்றுநின்ற தன்னெஞ்சைச் சிறியேன் ஔசிகை
குன்றவொறுத்தாள் குமரேசா—என்றும்
உறாஅ தவர்க்கண்ட கண்ணு மவரைச்
செறாஅரெனச் சேறியென் னெஞ்சு. (௨)

இ—ள்.

குமரேசா! நாயகன்மேல் சென்ற தன் நெஞ்சை ஔசீகை ஏன் இகழ்ந்து நின்றாள்? எனின், என் நெஞ்சு! உறாதவர்க் கண்ட கண்ணும் செறார் என அவரைச் சேறி என்க.

உறாதவர்க் கண்ட கண்ணும் = அன்பு பொருந்தாதவரைக் கண்டவிடத்தும். கண் ஏழனுருபு. உம்மை அவர்பின் செல்லா திருத்தற்கு ஏதுவை வலியுறுத்தி நின்றது. அளபெடை இசை நிறைக்க வந்தது. உறுதல் = உரிமையோடு மருவல்.

செறார் என = வெகுண்டு வெறார் என்று துணிந்து. செறுதல் = உள்ளே சினத்தல். சேறி = செல்லாநின்றாய். செல் என்னும் வினைப்பகுதி முன்னிலை ஏவல் ஒருமையில் இகரவிகுதி பெற்று முதல் நீண்டு இங்ஙனம் முடிந்து நின்றது.

மேல், தன் மனம் தலைவனை நினைந்து தவித்து நின்றதை யுரைத்தாள்; இதில், அவன்பின் அது சென்றதை யுரைக்கின்றாள்.

என் நெஞ்சே! காதலர் அன்பின்றி நிற்பதை யறிந்திருந்தும் வெகுளார் என்று நம்பி அவர் பின் செல்கின்றாய் இது நன்றன்று என்பதாம். என் என்றது தன்னோடு அதற்குள்ள உரிமை யுணர.

நாயகனையே நினைந்து நாடி நின்ற நெஞ்சை நோக்கி நாயகி புகன்றபடி யிது. புலவியிருந்து காலம் நிகழ்ந்து தலைவன் பராமுகமாய் மாறி நின்றமையால் உறாதவர் என்றாள்.

செறார் என நம்பி நீ செல்லுகின்றாய், அவர் இதுபொழுது அன்பிலராயிருத்தலால் இங்கு ஏன் வந்தாய்? என்று இகழ்ந்து பேசுவர்; அவ்வமயம் மானங்கெட்டு மறுகி நிற்பாய்! எனத் தன் நெஞ்சை நோக்கித் தலைவி இவ்வாறு நெகிழ்ந்துரைத்தாள் என்க. தன்னை மீறித் தன்மனம் தலைவனிடம் சென்றது என்றதனால் அவன்பால் இவளுக்குள்ள ஆர்வநிலை புலனும்.

"வருவது கொல்லோ தனே? வாராது
அவணுறை மேவலின் அமைவது கொல்லோ?
புனவர் கொள்ளியிற் புகல்வரு மஞ்ஞை
இருவி யிருந்த குருவி வருந்துறப்
பந்தாடு மகளிரிற் படர்தரும்
குன்றுகெழு நாடனொடு சென்றவென் னெஞ்சே" (ஐங்குறுநூறு 295)

காதலனை நாடித் தன் நெஞ்சு சென்ற நிலைமையைக் குறித்து ஒருத்தி இதில் உளைந்திருக்கின்றாள். மஞ்ஞை படர்தரு நாடன் என்றது தனது தலைவனது நிலைமை நிலைமையை விளக்கியது.

"கண்மூன் றுடையானும் காக்கையும் பையரவும்
என்னின்ற ஆயும் பிழைத்ததென் — பொன்னின்ற
கோங்கரும் பன்ன முலையாய்! பொருள்வயின்
பாங்கனோர் சென்ற நெறி." (நாலடியார்)

பிரிவில் வருந்தியிருந்த தலைவி தோழியிடம் ஒருநாள் மறுகி யுரைத்தபடி யிது. நெற்றிக்கண்ணால் காமனை எரித்தழித்தவர் அப்படியே ஒழித்துவிடாமல் மடமாதுயும் அவனைப் பிழைக்க வைத்தமையால் முக்கண்ணனையும், இனம் தெரியாமல் குயிலை வளர்த்து விட்டமையால் காக்கையையும், சந்திரனை விழுங்கிக் கொல்லாமல் மீண்டும் உமிழ்ந்துவிட்டமையால் பாம்பையும், பிறந்தவுடனே தன்னைக்கொன்றிருந்தால் காமதாபத்தால் இவ்வாறு வருந்தநேராது ஆதலால் தன்னைவளர்த்து வாலிபமாக்கி நின்ற தனது அன்னையையும், அவள் எண்ணி இரங்கியிருக்கும் அழகைப்பார்க்க. மன்மதன், குயிலொலி, நிலவு, தாய், காதலன் பிரிந்து போவதற்கு இடமாயிருந்த வழி, இவைகளுக்குறித்து நைந்து வருந்தியிருக்கும் இதனால் அவளது மன நிலையும், காதல் மாண்பும் இனிது புலனும்.

கணவனோடு ஊடி நின்றபொழுதும் மனைவி அவனை நாடி நிற்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை ஒளசீநைபால் உணரப்படும்.

## கதை.

ஒளசீநை என்பவள் காசி தேசத்து அரசனுடைய அருமைத் திருமகள். சர்வாங்க சுந்தரி; சிறந்த குணவதி. நிறையும் பொறையும் நிலைத்த நெஞ்சினள். "ஆதி அயன் மேக்கூர் அரம்பையரை ஆக்குங்கால், மாதிரிகை யாக வுன்னும் வாய்ப்பினாள்" என வாய்ந்

திருந்த இவளைப் புரூரவன் என்பான் சந்திர குலத்தோன்றல் விரைந்து வந்து மணந்து கொண்டான். அவன் அதிமேதாவி; பெரிய போர்வீரன். உருவில் மதன்; அறிவில் புதன்; செறுவில் முருகன்; மணமுடிவிலிருந்த அவளை மருமகளாகக்கண்டவுடன் காசி மன்னன் பெரிது மகிழ்ந்து, வரிசை பல தந்து, புரசை யானைமேலேற்றி, வீர கோலங்களுடன் விரைந்து விடுத்தான். தனது அணிநகரடைந்து இக்குலமகளோடமர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து அத்தலைமகன் அரசு செய்துவந்தான். வருங்கால் ஒரு முறை அவன் ஊர்வசியைக் கண்டான்; பேராசைகொண்டான். அவளும் இவ் அழகனை நோக்கி உவகைமிக உருகினாள். உருகவே இருவரும் பரவசமாய் மருவி மகிழ்ந்தார். அவளது போக வெள்ளத்திலாழ்ந்து மோக மீக்கூர்ந்து இவன் மூழ்கிக்கிடந்தான். அவள் சிறிது நீங்கினும் இவன் பெரிதும் ஏங்கிப் பேதுற்று நின்றான். சின்னாட் கழிந்தபின் ஒருநாள் இவனை அவள் ஒருவி அகன்றாள். அகலவே இவன் கவலை மீக்கூர்ந்து கலங்கிப்பதைத்தான். கண்ட இடமெல்லாந் தேடியும் அவளைக் காணாமையால் கருத்தழிந்து புலம்பினான். அன்று இவன் புலம்பியவற்றுள் சில அடியில் வருவன காண்க.

“தண்காட்டின் மேவுந்து தாங்கு கிளிகாள்! உமைப்போல்
பண்காட்டுந் தீஞ்சொலெழிற் பாவை எங்கண்? பகரும் எனும்;
வெண்காட்டுந் திங்கள் முக மெல்லியலை அன்னவள் தன்
கண்காட்டு மான்காள்! நீர் காட்டாததென்? எனுமே;
பாட்டொலி வண்டொலி பயிலு மதுகரி! உனது
கோட்டிவர் அன்னமென்னடைக் குழலைக் கொம்பினை நீ கண்டதுண்டோ?
காட்டுதி நீ யிங்கெனினுங் கலந்த பிடிகாள்! உமைப்போல்
பூட்டும் இடையாள் நடந்துபோய நெறி ஏது? எனுமே;
காந்தளை நேர் கரதலத்தாள் காந்தவழி மாமலைவாய்க்
காந்தளையின் வாழ் அரிகாள்! கண்டீரோ? கழறும் எனும்;
மாந்தளிர்போற் பொலமேனி மயிலை யாங்குந் தேர்ந்து நறை
மாந்தளிகாள்! என்னை நொந்தோ வழங்காத வாறெனுமே.” பாகவதம்

இங்ஙனம் கிளிகள், மான்கள், யானைகள், சிங்கங்கள், வண்டுகள் முதலானவற்றை நோக்கி மண்டிய காதலோடு பிதற்றி இவன் மறுகியலைந்தான். இதனால் அத்தையல்மீது இவன் கொண்டுள்ள மையல் நிலை புலனாம். இவ்வாறு அலமந்து நின்ற இவனது நிலையினைக் கண்டு உவகை மீக்கொண்டு அவ்வரமகள் அருகே வந்தாள்,

இவன் ஆர்வமொடு முயங்கி யாதும் அகலாமல் மயங்கியிருந்தான். தன்னை மறந்து இவ்வண்ணம் அவனைத் தழுவியிருந்த அவனை இவள் உழுவலன்போடு நினைந்து உளமுருகியிருந்தாள். சித்திர லேகை என்னும் தோழி கூறிய தேற்றியும் அவன் மீளாதிருந்தமையால் அவனை ஆராமை மீதூர்ந்து நீள நினைந்துவந்த நெஞ்சை ஒருநாள் இவள் நேர்ந்து முனிந்தாள். "உறாதவர்க் கண்ட கண்ணும் அவரைச் செறாஅரெனச் சேறி என் நெஞ்சு" என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

அன்பிலார் என்ப தறிந்தும் அறிவின்றிப்
பின்போதல் நெஞ்சே பிழை.

உள்ளம் ஊடி நின்ற நிலை இதனால் கூறப்பட்டது.

---

1293 கொண்டான் பின்சென்ற நெஞ்சைக் கோமளமுன்னொந்திகழ்ந்து
கொண்டாளேன் தென்னோ குமரேசா — தண்டாடிக்
கெட்டார்க்கு நட்டாரில் லென்பதோ நெஞ்சே நீ
பெட்டாங் கவர்பின் செலல். (௩)

இ—ள்.

குமரேசா! கொழுநனை நினைந்த நெஞ்சைக் கோமளம் ஏன் இகழ்ந்து நொந்தாள்? எனின், நெஞ்சே! நீ பெட்டாங்கு அவர்பின் செலல் கெட்டார்க்கு நட்டார் இல் என்பதோ என்க.

பெட்டாங்கு = விரும்பியபடியே. செலல் = செல்லுதல். முக்காலத்திற்கும் ஒத்தியலுமாறு இங்ஙனம் தொழிற் படக்கிளந்தது அச்செலவின் நிலைமை தெரிய. கெட்டார் என்றது வறியவரை. கேடுடையவர் என்றபடி. பொருளிழந்து ஒன்றுமிலராய்த் துயருழந்து நிற்பவர் என்க. நட்டார் = நட்புடையவர். "இல்லாரை எல்லாரும் எள்ளுவர்" என்றபடி ஒருவன் கெட்டவுடனே எல்லாரும் அவனை விட்டொழிவர் ஆதலால் கெட்டார்க்கு நட்டார் இல்லை என்றாள். "கேளும் கிளையும் கெட்டோர்க்கு இல்லை" (நற்றிணை) என்பதும் காண்க.

"இட்ட மெத்திய வெய்யவர் இடுக்கண்வந் திறுத்தால்
முட்டவத்தலைப் பகைவ ராகுவர் என முன்னோர்
பட்டுரைத்தன காட்டுமா பானுவாற் பரியும்
கட்டகட்டலைக் கொட்டைவான் சரோருகக்களையே." (இரகுவமிசம்)

நீரில் வளர்ந்திருக்குங்கால் தாமரைக்கு இதம் புரிந்து வந்த சூரியன், அது களைந் தெறியப்பட்டபொழுது அதனைக் கடுத்து எரித்தலைமையை எடுத்துக்காட்டி, முன்பு நட்பாய் இருந்தவரும் ஒருவன் கெட்டபொழுது பின்பு பகைவராய் நின்று அவனை வருத்துவர் என இதனுணர்த்தும் நிற்றலறிக. கட்ட = களைந் தெறிந்த. கள்ளலைச்சரோருகம் = தேன் பொருந்திய தாமரை.

நெஞ்சே! நீ விரும்பியபடியே காதலர் பின் போதல், ஒன்றும் இல்லார்க்கு உறவில்லை என்னும் உறுதியே என்பதாம்.
தன்மனம் தன்னைத் தனியேவிட்டு நாயகனை அவாவிப் போயது என நாயகி நொந்துரைத்தபடி இது.

அங்ஙனம் போனதற்குக் காரணம் யாது எனக் கருதி ஆராய்ந்து இறுதியில் அறுதியிட்டுக் "கெட்டார்க்கு நட்டார் இல் என்பதோ" என்று உறுதிகொண்டு இங்ஙனம் உயிருளைந்து நின்றாள்.

கெட்டாரோடு தன்னை ஒப்பவைத்தது நாயகனைப் பிரிந்து நாண முதலியன இழந்து நைந்துள்ளமையான் என்க.

பன்னாளும் என்னோடு பழகியிருந்தும் இன்னல் நிலையில் இன்னவாறு என்னைத் தனியே விட்டு அன்னவர் பின் போனது அன்றோ கொடிது என்றவாறு.

> "கெட்ட காலையும் கெட்டோர் உவப்ப
> நட்டோர்க் காற்றும் நன்ன ராளன்"

என்னும் இன்ன பெருந்தன்மையை நீ எய்தியிருக்கவேண்டும்; அங்ஙனம் செய்யாது சென்றது வெய்யது என வெம்மையோடு வெறுத்திகழ்ந்தாள்.

புறத்திலுள்ள அவர்தான் அப்படிப் போனார்; அகத்திலுள்ள நீயுமா இப்படிப்போகவேண்டும் என்று தன் மனத்தோடு புலந்து மறுகி நின்றாள் ஆதலால் இது நெஞ்சொடுபுலத்தல் ஆயிற்று.

வந்தது அப்படி; வாய்த்தது இப்படி; இனி என்பாடு எந்த விதமாய் எப்படியாமோ? எனச் சிந்தைநொந்து தியங்கி நின்றாள்.

"வேந்தரிகுல் விடுக் கப்படு வாவை விரசுகரும்
தாம்தழுவாமை விளக்குலபோல் தணந்தாரென என்
மாந்தளிர் மேனி யனைப்பும், மென்றோளின் வரிவளையும்,
போந்தன; போயிற்று அவர்புறம் நெஞ்சும் புறக்கணித்தே."
(தணிகைப்புராணம்)

தலைவன்பின் தன் நெஞ்சு போன நிலையைக் குறித்து ஒரு குல மகள் இதில் உரைத்திருத்தல் காண்க. அரசன் ஒருவனை வெறுத்து விட்டால், அவனை யாரும் விரும்பாததுபோல், கணவன் என்னைக் கைவிட்டதனால் எல்லாம் மெய்விட்டுப்போயின; அதோடு நெஞ் சம் தொலைந்தது என அவ்வுத்தமி தருசமற்றுத் தவித்து நிற்கும் நிலையைப்பார்க்க. விரசுகரும் = நெருங்கிய பக்குக்களும். தழு வார் = நெருங்கார். தணந்தார் என = நாயகன் பிரிந்தாரென்று.

உற்றவர் உறவுப்பிரிந்தால் மற்றவரெல்லாம் பகையாவரென மறுகி நின்றாள் "ஆதலால் கெட்டார்க்கு நட்டார் இல்லை" என் னும் முதுமொழியை வேதனையோடு நினைந்து ஆதரவு கொண்டாள்.

"புரளுந்திரை எறியுங்குரை கடலும் பகை, தமிழோன்
பொதியப்பகை, மதியப்பகை, மதனன்பகை, முலைசேர்
தாளம் பகை, பனையன்றில்கள் பகை, அந்தியில் பகையே,
தமரும் பகை, அனையும் பகை, சகியும் பகை, நகர்வாழ்
திரளும் பகை, மலர் சிந்திய அணையும் பகை, பனி நீர்
திமிரும் குளிர் காயம் பகை, எனில் என் செய அடியேன்?
அருளுஞ் சுகம் அருள்கின்றிலர் பெயர் சங்கரர் எனவே
அணிவெங்கையி லமர்கின்றவர் அறுவென்குறை அனமே!"
(திருவெங்கைக் கலம்பகம்)

எல்லாம் பகையா யிடர்புரிகின்றன; ஒருவரும் தனக்கு உதவி செய்யவில்லை என உள்ளம் புலந்திருந்த ஒருத்தி இதில் உளைந்து ரைத்துள்ளமை காண்க.

புலவி நிலையிலும் கொழுநனை நினைந்து குலமகள் அலமருவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கோமளம் பால் உணரப்படும்.

## கதை.

கோமளம் என்பவள் குணசேகரன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகள். அரும்பெறலுருவும் பெருங்குணங்களும் ஒருங்கமையப்பெற்றவள். இளமை சுரந்து, அழகுகனிந்து, அறிவு

நிறைந்து, விழுமிய நிலையில் இவள் விளங்கியிருந்தாள். இன்ன வாறு கன்னிமை கனிந்திருந்த இம்மங்கையின் நிலையினை வினவி யறிந்து வங்கியசேகரன் என்னும் அரசிளங்குமரன் வேட்கைமீக் கூர்ந்தான். அவன் பெயிருவதிலகன்; பெருமையிலிருந்து அரசுபுரிந்த வழுதிமன்னர் மரபில் வந்தவன்; அரியகலைகள் பலவும் பயின்ற வன். அருந்திறலுடையவன். சிறந்த நீதிமான்.

"அங்கியை மதிமர வென்றவர் ஆழியுள்
தங்கிய கலையெலாந் திரட்டி தன்னொடும்
பொங்கிய நிலாமதி போலத் தோன்றினன்
வங்கிய சேகர வழுதி மன்னனே. (க)

"செய்யகோல் மநுவழி செலுத்த நீர்மையால்
பொய்கெழு கலிப்பகை புறந்தந் தோடத் தன்
வையகம் பல்வளம் சுரப்ப வைகலும்
மெய்கெழு மன்பதை மிக்க வாலரோ." (திருவிளையாடற் புராணம்)

இதனால் அவனது புலமையும் நிலைமையும் தலைமையும் புல னும். அத் தலை மகன் விழைந்து வந்து இக் குலமகளை மணந்து கொண்டு உளமிக மகிழ்ந்து அவளிவின்பங்களை நுகர்ந்து அரசு புரிந்து வந்தான். அவனது ஆட்சிக்காலத்தில் பலவளங்களும் மலிந்து நாடு மிகவுயர்ந்திருந்தது.

"வெங்கயல் மீன்கொடி வங்கிய சேகரன் வெண்குடை நீழலின்வாய்
வங்கமுலாவிய தென்கடல் ஞாலமடந்தையும், மாசறு சீர்ச்
செங்கமலாலய மங்கையும், வாலிப திண்பதுமாலய மேல்
நங்கையும் ஓவற மங்கலமான நயம்பெறு வாழ்வுறு நாள்."

இங்ஙனம் வாழ்ந்து வருங்கால் விக்கிரம சோழன் என்னும் வேந்தன் இவன் மேல் பகைமை பூண்டு படையெடுத்து வந்தான். இவன் இறைவன் திருவருளைச் சிந்தித்துத் தன் சேனைகளுடன் பொங்கி எழுந்து தேர் மேலேறி அப்போர் மேல் போனான். அப் பிரிவிடை மறுகிப் பெரிதும் வருந்தி இவள் உருகியிருந்தாள். துணைவனையே நினைந்து துயிலிழந் துழந் தமையால் எழில் நிலை திரிந்து, விழிநீர் சொரிந்து கழிபேரவலமொடு கவன்றுகிடந்தாள்.

"பசலை பாய்ந்த மேனியள், நெடிது நினைந்து
செல்கதிர் மழுங்கிய புலம்புகொள் மாலை
மெல்விரல் சேர்த்திய நுதலள், மல்கிக்
கயலுமிழ் நீரிற் கண்பனி வாரப்
பெருந்தோள் நெகிழ்ந்த செல்லலொடு
வருந்துமால் அளியள் திருந்திழை." (அகம் 169)

என அருந்துயருடன் இவள் இருந்து வருங்கால் அப்பொருந்திறலாளன் போர்வென்று மீண்டான். அவனைக்கண்டவுடனே கதிர்கண்ட கமலம்போல் முகமலர்ந்து மகிழ்ந்து தழுவி அதன் பின் கைபகலாமல் களித்துவந்தாள். ஒருமுறை வைகை நதியில் புது வெள்ளம் வந்துபொருது மறுகப்படி அங்கு நீர் விழா நிகழ்ந்தது. மைந்தரோடு மகளிர் நீராட விரைந்து ஏர்மிகச்செய்து பேராரவாரத்தோடு பெருகி யெழுந்தார்.

"வந்து மதுரை மதில்பொரூஉம் வான்மலர் தாஅய்
அந்தண் புனல்வையை யாறெனக் கேட்டு
மின்னவிர் ஒளியிழை வேய்வோரும்,
பொன்னடர்ப் பூம்புனை திருத்துவோரும்
அகில் கெழு சாந்தம் ஆற்றி யாற்றப்
புகைகெழு சாந்தம் பூசு வோரும்.
கார்கொள் கூந்தல் கதுப்பமைப் போரும்,
வாச நறுநெய் யாடி வான்றுகள்
மாசறக் கண்ணடி வயக்கி வண்ணமும்
தேசும் ஒளியும் திகழ நோக்கி
வாசமணத் துவர் வாய்க் கொள்வோரும்" (பரிபாடல்)

என இன்னவாறு எழில்செய்து சென்று நதி நீராடிக் களித்திருந்து நின்றார். விழாவின் முடிவில் முறைப்படி அரசன் பவனி வந்து மணி மண்டபம் அடைந்து அரியாசனத்தமர்ந்தபோது மரகத வல்லி என்னும் தாசி பரதம் புரிந்தாள். அக் கலையில் மன்னன் வல்லவனாதலால் அவளது நாட்டியத்தை வியந்து பரிசில் பல தந்து அவளை வரிசை செய்து விடுத்தான். அதனை இவள் தெரிந்தாள்; அவள் மேல் அவன் உள்ளம் போக்குடையதாக மாறுபட நினைந்து இவள் மறுகிப் புலந்தாள். மன்னன் பல புகன்று தேற்றியும் இவள் புலவி குன்றாதிருந்தமையால் அவன் புன்னகைசெய்து போய் ஏழு நாள் வரையும் அந்தப்புரத்துள் வராதிருந்தான். மறுநாள் முதலே இவள் உருகியுளைந்தாள்; அவனையே கருதி அலமந்து நின்று தோழி முதலானவர்களைத் தூது விடுத்தாள்; அத் தோன்றல் தோன்றவில்லை. தன் நெஞ்சம் அவனையே தேடித் தொடர்ந்தும், அப்பதநேசவன் வந்தருளாமையால் இவள் பரிந்து புலம்பினாள். மானமில்லை என்று தன் மனத்தை யிகழ்ந்தாள்; ஊடியுள்ள பொழுதும் உத்தமியுள்ளம் கொழுநனையே நாடி நிற்கும் என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

எல்லா மிழந்தாளென் றெண்ணியோ நெஞ்சவர்பின்
சொல்லாமல் போனாய் தொடர்ந்து.

நினைந்த நெஞ்சை யிகழ்ந்து நின்றமை இதனால் கூறப்பட்டது.

1294. நின்றா புகலாக நெஞ்சை நிலாவதியேன்
குன்றா இகழ்ந்தாள் குமரேசா — ஒன்றி
இனியன்ன நின்னொடு சூழ்வார்யார் நெஞ்சே
துனிசெய்து துவ்வாய்காண் மற்று. (௪)

இ—ள்.

குமரேசா! துனி கொள்ளாவில்லை என்று தன் நெஞ்சை நிலாவதி ஏன் இகழ்ந்து கொண்டாள்? எனின், நெஞ்சே! துனி செய்து துவ்வாய்காண் மற்று இனி அன்ன நின்னொடு சூழ்வார் யார் என்க. ஒன்றி = பொருந்தி.

இது, மனத்தொடு பகைத்து மா றுகின்றது.

அன்ன = அத்தகைய எண்ணங்களை. அவையாவன ஊடிநிற்கும் திறங்களை என்க. அத்திறங்கள் பலவாதலால் பன்மையிற்குறித்தாள். நின் என்றது நிலையின்றி யுழல்கின்ற அதன் நிலை தெரிய.

இனி என்றது பின் வருங் கால நிகழ்ச்சியை உணர்த்தி நின்றது. முன்னம் அளவளாவிச் சூழ்ச்சித் திறங்களை உன்னோடு கலந்து எண்ணியது போல் இன்னமேல் எண்ணேன் என்பாள் "இனி அன்ன சூழ்வார் யார்?" என்றாள். ஒருவரும் சூழார் என்பதாம். தன் கருத்தைப் பிறர்மேல் வைத்து இவ்வாறு இதமாக உரைத்தாள். திண்மையில்லாத உன்னுடன் உண்மையான காரியங்களை உசாவி யெண்ணல் புன்மையாம் என்பது குறிப்பு.

சூழ்தல் = எண்ணி ஆராய்தல். துனி = பிணக்கு. துவ்வாய் = நுகராய். காண் என்றது கருத்தை வற்புறுத்திக் காட்டியவாறு.

மேல், மனம் ஓடிய படியை உரைத்து நொந்தாள்; இதில், அது கூடிய நிலையைக் குறித்திகழ்கின்றாள்.

மனமே! முன்னதாகப் புலவியை விளைத்துப் பின்பு கலவியை நுகரக் கருதா யாதலால் இனிமேல் புலந்துகொள்ளுந்திறங்களை உன்னோடு கலந்து எண்ணேன் என்பதாம்.

தலைவனிடம் தவறு கண்ட இடத்தும் ஊடுதல் இல்லாமல் அவனோடு கூட விரைகின்ற மனத்தை நோக்கித் தலைவி உரைத்தவாறிது.

தமது மாசை நினைந்து வருந்தி அவர் ஆசைகொண்டு ஊசலாடி அலமரும்படி சிறிது புலந்து நின்று அதன் பின் கலந்து நுகர்வது தானே; முன்னதாக விரைந்து விழுகின்றாயே! உனக்கு என்ன கொள்கை என இங்ஙனம் நெஞ்சை இகழ்ந்து நின்றாள். நெஞ்சை இவ்வாறு வேறு பிரித்துக் கூறுதல் இயல்பாமோ? எனின், விரகதாபமுடையவர் அயலுற்று நிற்கும் இனிய பொருள்களையெல்லாம் நோக்கி மயலோடு இங்ஙனம் மறுகிப் புலம்புவர் என்க. சில அடியில் வருவன காண்க.

"மாதுற்றமேனி வரையுற்ற வில்லி தில்லைநகர் சூழ்
போதுற்ற பூம்பொழில் காள்! கழிகாள்! எழிற்புள்ளினங்காள்!
ஏதுற்று அழுதி என்னீர், மன்னுமீர்ந்துறைவர்க்கு இவளோ
தீதுற்ற தென்னுக்கென்னீர், இதுவோ நன்மை செப்புமினே."
(திருக்கோவையார்)

"வானவர்க்கு இறைவன் நிலங்கிடைக் கொண்டு
திருவுட னிறைவிழி ஆயிரத் திரளும்
இமையாது விழித்த தோற்றம் போலக்
கஞ்சக் கொள்ளை யிடையற மலர்ந்து
௫ மணஞ்சூழ் கிடந்த நீள்கருங் கழியே!
கருங்கழி கொடுக்கும் வெள்ளிறவு அருந்தக்
கைபார்த்திருக்கும் மடப்பெடைக் குருகே!
பெடைக்குரு கணங்கின் விடுத்தவெண் சினையொடு
காவலடை கிடக்கும் கைதையம் பொழிலே!
௧௰ வெம்மையொடு கூடியும் தண்மை பொருந்தியும்
உலக இருள் தூக்கும் செஞ்சுடர் வெண்சுடர்
காலங் கோடா முறை முறை தோற்ற
மணி நிரை குயிற்றிய மண்டபமாகிப்,
பொறைமாண் டுயிர்க்கும் தாயா மண்மகள்
௧௫ களையா துடுக்கும் பைந்துகி லாகி,
வேனிற் கிழவன் பேரணி மகிழ
முழக்காது தழங்கு மாமுர சாகி,
நெடியோன் துயிலாது அறிவொடு துயிலப்
பாயற் கமைந்த பள்ளியறை யாகிச்,
௨௰ சலபதி யாய்ந்து சேம நிலைவைத்த
முத்துமணி கிடக்கும் செறியிருள் அரங்காய்ப்,
புலவுடற் பரதவர் தங்குடி ஓம்ப
நாளும் விளைக்கும் பெருவய லாகிக்,
கலமெனும் நெடுந்தேர் தொலையாது ஓட
௨௫ அளப்பறப் பரந்த வீதிய தாகிச்,

சுறவயேற்று நெடுங்கொடை செய்ய
முழக்கமொடு பணைத்த அமர்க்கள மாகி,
மகரத்தேர்ப்பய காவியுறும் அமை யா
மணிவிளக்கு நிறைத்த அரைய மாகி,
௩௰ நீர்செய் யார்த்தூர் சகார் அமைத்த
தீவளர் வட்டக் குண்டம் ஆகி,
எண்டிசைக்கும் பருவாய்த் துளைமணிப் பார்த்தன்
தண்டினின்று எரியும் தகளியும் ஆகிப்,
பஞ்சவன் நிறைத்த தண்புனல் வேண்டி
௩௫ மாறிக் குளித்த நீறணி பெருமாற்கு
அமுத போகனாக் கழுமென உதவும்
அடுந்தீ மாறு மடைப்பள்ளி ஆகி,
இன்றும் பலவாய் மன்றுவங் கடலே!
நுங்கள் இன்பம் பெருக்குனை என்பால்
௪௰ தண்ணம் அறையவற்கு இன்றியென் ஒருத்தி
நெருப்புறு மெழுகின் உள்ளம் வாடியும்,
அருவி தூங்கக் கண்ணீர் கொண்டும்,
அரவின் வாய்த் தேரையிற் பலவும் நினைந்து,
நிலையாக் கூளின் நிலையா நெஞ்சம்
௪௫ கொண்டனள் என்னெனை என்முகம் நாடி.
உற்ற வாய்மை சுற்றம் தருகிலீர்
அன்றெனின் நாப்பில் ஒன்றுபட்டு ஒருகால்
இயமோ ஆயாம் பெறுவது என்? என்று
வினவா திருக்கும் கேண்மை
௫௰ மனநேல் நாடின் சொல்லினும் கொடிதே." (கல்லாடம் 24)

பொழில், கழி, புள், கடல் இவைகளை நோக்கி ஒருத்தி புலம்பியிருத்தல் காண்க. கடலைக்குறித்து இதில் வருணித்திருக்கும் அருமையையும், பொருள் நயங்களையும் நுணுகி அறிந்து கொள்க.

"விடாது விழுங்கு வெண்டிங்களைப் பாம்பே வெண்ணிலவால்
சுடாது விடில் விடும், தொல்புவி வட்டமும் சூழ்கடலும்
வடாதும், தெற்கும், வலம்புரிந்தாரும் மைதோய் வரையும்,
குடாதும் குணாதும் உடையான் கொடிமிசைக் கோளரவே"
(துரியோதனன் கலம்பகம்)

விரகதாபத்தால் வருந்தியிருக்கும் எங்களைச்சுடாது விடின், பாம்பு உன்னை விழுங்காது விடும் எனச் சந்திரனைப்பார்த்து ஒரு மங்கை இதில் நொந்து சொல்லியிருத்தல் காண்க. துரியோதனன் கொடியில் பாம்பு வரைந்திருக்கும் ஆதலால் கொடிமிசை அரவு என்றாள். அவ் அரவக்கொடியோன் இமயமலை வரையும் உலக

மையுடையான் என விளக்கி, அவனது குடை நிழலில் வாழு கின்ற மனைக்கு இடையூறு செய்யாதே; செய்யின் உய்தியில்லை; உன்னைப் பாம்பு கடிக்கும் என மதியை இவள் வைது அச்சுறுத்தி யிருக்கும் அழகைப் பார்க்க.

விரகிகளுடைய மன நிலையும், அவர் நெஞ்சு முதலிய இன மான பொருள்களை எதிர்நோக்கி முதிர்காதலோடு மறுகிப் புலம் புந்திறனும் இவற்றால் இனிதறியலாகும்.

புலந்து சினந் திருந்தாலும் கொழுநனைக் கண்டவுடனே தலைவி விரைந்து கலந்து கொள்வள் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை நிலாவதி பால் உணரப்படும்.

## கதை.

நிலாவதி என்பவள் நன்னன் என்னும் குறுநில மன்னனு டைய அருமைத் திருமனைவி. சிறந்த அழகி. உயர்ந்த குண நலங்களையுடையவள். “கன்னலின் சுவை புளிக்கிடக் கனிந்திடுந் தீஞ்சொற், பொன்னம் பூஞ்சுணங் கரும்பிய புணர்முலைக் கொடி” என உருவம் செயல் யாவும் இனியனவாயிவள் புனித முற்றிருந் தாள். அற்புத நிறமும், விற்பன நிறைவும், பொற்பும் பொறை யும் கற்பும் கனிந்திருந்த இப்பெண்ணரசியோடமர்ந்து எண்ணரிய போகங்களை நுகர்ந்து, புண்ணியங்கள் பல புரிந்து நன்னன் புகழ் வளர்ந்து நின்றான். இவளை மனைவியாகப் பெற்றது அவனுக் கோர் பெரும் பாக்கிய மாகப் பேச நின்றது. அக் காலத்திருந்த பத்தினிப் பெண்டிரனைவரும் உத்தம நாயகி என இவளை உவந்து புகழ்ந்தார். தன் கற்புக்கு அறிகுறியாக அருந்ததி வடிவை யெழுதிய கொடியை இவள் அமைத்திருந்தாள். இவளது பெண்மை நிலையும், அவனது வண்மை நலனும் உலகமெங்கும் வியந்து புகழ நின்றன ஆதலால் அவன் பெயரைச் சொல்லின வரையும் கள்ளர் முதலிய கொடியவரும் அல்லல் செய்யாமல் ஆதரித்துவிடுவர். அடியில் வருவது காண்க.

“படியோர்த் தேய்த்த பனிவில் ஆண்மைக்,
கொடியோள் கணவற் படர்ந்திகுமெனினே
தடியும் கிழங்கும் தண்டினர் தரீஇ,
ஓம்புநர் அல்லது, உடற்றுநர் இல்லை.” (மலைபடுகடாம்)

ப்பொற்புக் கொடி கற்புக் கொடியாயிருந்ததும், இவளுடைய கணவனை நாடிச்செல்லுமளவிற் காட்டு வழியிலுங்கூடப் போற்றப்பட்டதும், இதில் குறித்திருத்தல் காண்க. இக்குலமகளை இடைபிரியாது முயங்கி மகிழ்ந்து வருங்கால், அந்தத்தலைமகன் வளவனுக்கு உதவியாக ஓர் அமர்முனைக்கு அகன்று சென்றான். இவள் தனியே தவன்று மயங்கியிருந்தாள். கவலை மிகுதியால் உடல்மெலிந்து பசலை படர்ந்து பரிந்துளைந்தாள். பகலில் ஒருவாறு ஆறியிருந்தாலும் இரவில் மிகவும் மயங்கி வருந்தினாள். பொழுது விடிந்திலதே; ஆதவன் எங்கொளித்தான் என மாறுயர் கூர்ந்தாள்.

> "தூஉத் தீம்புகை தொல்விசும்பு போர்த்ததுகொல்?
> பாஅய்ப் பகல்செய்வான் பாம்பின்வாய்ப் பட்டான்கொல்?
> மாஅ மிசையாள் கோமன் நலனவர் தறுப்பலார்
> மாஅமை யெல்லாம் பசப்பு."

எனக் காமநோயம் கொண்டு கலங்கியிருந்தாள். வருவதாகக் குறித்த காலத்தும் அவன் வரவில்லை. கார்ப்பருவம் வந்தும் போர்ப்புலம் கடந்து வந்தருளவில்லையே என்று நொந்து புலம்பினாள். அமர் முடிந்து அவன் விரைந்து வந்தான்; இவள் உவந்து தழுவி உளங்களித்தாள். ஆராக்காதலுடன் காதலனை இங்ஙனம் ஆதரித்துவந்தாள். ஒருமுறை இவள் பூப்பெய்தியிருந்தபொழுது அவன் காப்பு நாடி நாட்டிடைப் போனான். நீராடிப்பதினாறு நாளாகியும் அவன் பிரிவாயிருந்தான். அச்சமயம் அவ்வாறு தாமதமாய் அகன்று நின்றது தகாதென இவள் புலந்து நின்றாள். அவன் வந்து புகுந்தால், முகங்கொடுத்துப் பேசலாகாதென்று இவள் அகங்கடுத்திருந்தாள். அவன் அயல் நாள் வந்தான்; இவள் மயலோடு மருவி மகிழ்ந்து கொண்டாள். தனது நெஞ்ச நிலையை நினைந்து நீள நாணினாள். துனிசெய்து துய்வாமல் துள்ளி விழுந்து அள்ளி முயங்கினாய் இனி நின்னொடு ஒன்றாகுவேன் என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

> ஊடி யதன்பின் உடன்படாய் என்னெஞ்சே
> ஓடி விழுந்தா யுடன்.

நெஞ்சு விழைந்த நிலை இதனால் கூறப்பட்டது.

---

1295. மாசில்லா மாண்டவியேன் மன்பிரிவை யஞ்சியென்றுங்
கூசி யுளைந்தாள் குமரேசா—பேசிற்
பெறாஅமை யஞ்சும் பெறிற்பிரி வஞ்சும்
அறாஅ விடும்பைத்தென் னெஞ்சு. (௫)

இ—ள்.

குமரேசா! தன் கணவன் உவந்து வந்து அணைந்திருந்த போதும் மாண்டவி ஏன் அஞ்சி நின்றாள்? எனின், பெறாமை அஞ்சும் பெறின் பிரிவு அஞ்சும் என் நெஞ்சு அறா இடும்பைத்து என்க. இது, தலைவி தனது நெஞ்சநிலையை யுணர்த்துகின்றது.

பெறாமை அஞ்சும் = காதலனை அடையப் பெறாமையை நினைந்து வருந்தும். இதனால், காதலும் நிலையும் காணலாகும்.

அறா இடும்பைத்து = நீங்காத துன்பத்தை யுடையது.

அளபெடைகள் ஈரிடத்தும் இசை நிறைக்க வந்தன.

காதலர் அகன்று நின்றபொழுது அவரை அடையப்பெறாமைக்கு அஞ்சும்; அடைந்தக்கால் பின் பிரிந்து போவரோ என்று அஞ்சும்; இவ்வாறு என்றும் நீங்காத இடும்பையினை என் நெஞ்சம் உடையது என்பதாம்.

நாயகனையே நாடி நின்று தன் நெஞ்சு படும்பாட்டை நாயகி நொந்துரைத்தபடி யிது. வினைமேல் பிரிந்து சென்றபொழுது அவனது வரவை எதிர்நோக்கி நாளும் ஏங்கி யிருந்தமையால் "பெறாமை அஞ்சும்" என்றாள். வந்தடைந்தபின் மீண்டும் பிரிய நேருமோ என்று கவன்று நின்றமையால் "பெறின் பிரிவஞ்சும்" என்றாள். இவ்வாறு ஓயாக் கவலையோடு என்றும் உளமுளைந்து வருகின்றமையால் "என் நெஞ்சு அறா இடும்பைத்து" என்றாள்.

பெறாமையை முதலில் குறித்தது பருவமறிந்து வராமையால் நேர்ந்த வருத்த மிகுதி தோன்ற.

"குக்கூ வென்றது கோழி அதனெதிர்
துட்கென் றன்றென் தூய நெஞ்சம்
தோள் தோய் காதலர்ப் பிரிக்கும்
வாள்போல் வைகறை வந்தன்றால் எனவே" (குறுந்தொகை 157)

கொழுநனை அராவியில் முயங்கிக் கிடந்தாய், கோழி கூவியவுடன் இனி விடிந்துவிடுமே; விடியின் பிரிந்துபட நேருமே என்று நெஞ்சு நடுங்கியுள்ள படியை இதில் ஊன்றி உணர்ந்து கொள்க.

> "நாகாபரணர் திருவெங்கை நாயகர் நல்லடிக்கண்
> பாகாதலரொடு கூடவென்றுந்தி யதிலிருந்து
> நீகாவலை விலக்குவென்றாய் உயிர் நீத்திலனேல்
> கூகாய்! பிரிதல் காண்பேன் விடியிற் கொடுமுன்னமே."
>
> (திருவெங்கைக்கோவை)

கூகை கூவுதலால் காதலர் விலக நேர்ந்ததென்று களவு நிலையில் பெருமையைய அஞ்சி ஒரு காதலி இதில் வருந்தியிருத்தல் காண்க. கொடி = காகம். இரவில் தனக்கு இடர் செய்தமையால் பகலில் காக்கைகளால் துயரடைவாய் என அதனை இகழ்ந்து புலம்பினாள்.

பருவ காலங்களில் மருவ இயலாமல் பிரியநேரின் அது உயிர் வாதனையாயிருக்கும் ஆதலால் நெஞ்சு அஞ்சும், என்றும், இடும்பைத்து என்றும் குறித்தாள்.

> "மன்னுயிர் எல்லாம் மகிழ்துணை புணர்க்கும்
> இன்னிள வேனில், இளவர சாளன்;
> அந்திப் போதகத்து அரும்பிடர்த் தோன்றிய
> திங்கட் செல்வனும் செவ்வியன் அல்லன்;
> புணர்ந்த மாக்கள் பொழுதிடைப் படுப்பினும்,
> தணந்த மாக்கள் தந்துணை மறப்பினும்,
> நறும்பூ வாளியின் நல்லுயிர் கோடல்
> இறும்பூ தன்றிஃது அறிந்தீ மின்னென" (சிலப்பதிகாரம்)

பெறுதபோதும், பெற்றுப் பிரிந்தவிடத்தும் விரக வேதனை காதலர் உயிரை வாட்டும் என இதனானுணர்த்தி நிற்றல் அறிக.

நாயகன் பிரிவினை யஞ்சி நாயகி யாண்டும் கவலை கூர்ந்திருப்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை மாண்டவிபால் உணரப்படும்.

## கதை.

மாண்டவி என்பவள் குசத்துவசன் என்னும் அரசனுடைய அருமைத்திருமகள். அவன் விதேக நாட்டு வேந்தனாகிய சனகனுடைய தம்பி, சாங்காசியம் என்னும் நகரிலிருந்து அரசு புரிந்த

வன். அவ் ஆண்டகையின் நீண்ட தவப்பேற்றால் இம் மாண்டவி பிறந்தாள். இவள் பேரழகும் பெருங் குணங்களு முடையவள். "முழுமதி நிகர்த்த வதனபங்கயம், முத்தனைய முறுவல், வெற்பின் எழில்குடி கொண்டனைய கொங்கை, இலவிதழ், காந்தளங்கை, அழகு வீற்றிருக்கத் தெய்வத்தோன் அணங்கு" என எவரும் வியந்து புகழ இவள் விளங்கியிருந்தாள். சனகன், தனது அருமை மகளாகிய சீதையை இராமனுக்கும், உரிமை மகளாகிய ஊர்மிளையை இலக்குவனுக்கும் மணமுடித்தபின் தன் தம்பியின் புதல்வியராய இவளைப் பரதனுக்கும், இவள் தங்கையாகிய சுருதகீர்த்தியைச் சத்துருக்கனுக்கும் முறையே வதுவை செய்தளித்தான். அளித்த படியை அடியில் பார்க்க.

"குடவளை அலறி எங்கக் குணில் பொரு முரசம் ஆர்ப்ப
உடைதிரைக் கடலந்தானை ஒளிறுவேற் சனகன் போந்து
தடமுலைப் பவளச் செவ்வாய்ச் சீதையைத் தழல் சான்றாக
மடலவிழ் தாரினாற்கு நீரொடும் வழங்கினானே. (க)

உருவ வொடரிக்கட் செவ்வாய் ஊர்மிளை என்னுமாதை
அருவரை யனையதிண்டோள் இலக்குவற்கு அளித்து, நாளும்
மருவலர்க்கடந்த வைவேற் குசத்துவசன் றன் மக்கள்
இருவரைப் பரதனுக்கும் சத்துருக்கனுக்கும் ஈந்தான்" (உ)

(கூர்மபுராணம்)

இவ்வாறு மணந்துகொண்டு இம்மங்கையோடமர்ந்து பரத நம்பி சுரதபோகங்களைத் துய்த்துச் சுகித்துவந்தான். அவ் இன்ப வாழ்க்கையில் இடையே தன் பாட்டனைப் பார்க்க விழைந்து கேகய நாட்டிற்கு அவன் போக நேர்ந்தது. அப் பிரிவில் இவள் பருவரல் கூர்ந்து, மாழ்கியிருந்தாள். உடல் மெலிந்து பகல் மதிபோல் ஒளிகுறைந்திருந்த இவள் ஒருநாள் காலை வேளையில் மேல் மாடத்தின் வெளியே நிலாமுற்றத்தில் கவலையொடமர்ந்து வானினை நோக்கினாள்; அங்கு நிலாவிழந்து நின்ற சந்திரனைக் கண்டாள். தன்னைப்போலவே பிரிவில் வருந்தி மெலிந்திருப்பதாக நினைந்து பதறினாள்.

"மாலை மணந்து காலைப் பிரியும்
காதலர் உடையையோ கறை நீங்கு மதியம்!
இரவே யாயின் நல்லை; பகலே
மெல்லியற் கொடிச்சி நுதலினும்,
புல்லென் றனையால் நோகோ யானே!"

என இன்னவண்ணமாக அல்லலுழந்து புலம்பி இவள் அமைந்திருந்தாள். அவன் மீண்டு வந்தபின், இராமன் வனம்புகுந்தமையையறிந்து விரதமேற்கொண்டு நந்தியம்பதியில் தங்கியிருக்க, இவள் சிந்தை கலங்கித் தெருமந்து நின்றாள். வனவாசம் முடிந்து அயோத்தியையடைந்து இராகவன் முடிபுனைந்து கொண்டபின் அவன் நெடிது மகிழ்ந்து இவளையடைந்து இனிதமர்ந்திருந்தான். அதன்பின் அவளை ஒழியாப்பிரியாது உடனமர்ந்திருந்து இவள் புதல்வர் இருவரைப் பயந்தாள். அவருக்குப் புட்கரன், தக்கன் என்று பெயர். அம்மக்கள் இருவரைப் பெற்றபின்பும் தன் மணாளனைப் பக்கம் அகலாமல் பாலித்து வந்தாள். ஆர்வமீதூர்ந்தமையால் அவன் இடைபிரிய நேருமோ என்று நாளும் நினைந்து வாளாதுளைந்தாள். அவ்வமயம் கேகய தேசத்தின்மீது கந்தருவர் சிலர் படையெடுத்து வந்தார். அவரை வென்றுவர விழைந்து இராமனிடம் விடைபெற்றுப் பரதன் அங்கு விரைந்து சென்றான். நிறைந்த சேனைகளோடெதிர்ந்த அந்நேரலரனைவரையும் போரில் வென்று, புகழ்மாலைகொண்டு, புட்கரம், தக்கசிலை என்னும் தலைநகரங்களிரண்டிலும் தன் மக்களிருந்து ஆட்சி செலுத்தும்படி செய்து அவ் அண்ணல் மீண்டு வந்து தன் அண்ணனை வணங்கியுண்மையை யுரைத்தான். அடியில் வருவன காண்க.

"விம்பமதி வெண்குடைக்கீழ் விரையளியின் இசையகலா
வம்பலர்தார் மைந்தர்க்கும் வளநாடு வளம்படுத்திக்
கம்பமத கரிபரிதேர் காலாளு மிக அருளி
அம்பொனெடு மணிமுடியான் அயோத்திமா நகரடைந்தான். (க)

பனிமதியே நிகர்வதன பங்கயத்துப் பணிமொழியார்
கனகமணி புனைகாம்பிற் கவரிகொடு பணிமாறத்
தினகரன்போல் ஒளிவீசும் செழுமணி யாசனத்தின்மிசை
இனிதிருந்த கனைகழற்கால் இராகவனை அடிபணிந்தான்; (உ)

காரிருண்ட தெனு நிறத்துக் காந்தருவர் கடற்சேனை
போருடைந்து புறங்காட்டப் பொருதவரைத் தொலைத்ததுவும்
வாரிருந்த கனைகழற்கால் மைந்தருக்கு வளநகரம்
ஓரிரண்டு வகுத்ததுவும் உரைத்தனன் அவ் விரைத்தாரான்." (ங)

(உத்தரகாண்டம்)

இவ்வண்ணம் இசைபுரிந்து வந்த அவ் எந்தலை இவ் எந்திழை எந்தி மகிழ்ந்தாள். அகன்றுநின்ற சமயம் அடைய விரும்பியும்,

அருகிருந்தபொழுது பிரிவினையஞ்சியும் அருங்காதலால் பெருங் கவலைகொண்டு ஆர்வ அவலமோடு அலமந்திருந்த இவளது பேரன்பை வியந்து அப்பெருமாறு மகிழ்ந்தான். "பெறாமை அஞ்சும்; பெறின் பிரிவஞ்சும்; என் நெஞ்சு அறா இடும்பைத்து" என்பதை உலகம் இவள்பால் உணர்ந்துநின்றது.

அண்ணல் நிலையினையே ஆற்றுமை யானெண்ணி
உண்ணோய் மிகுமென் னுளம்.

உளமுறு கவலை இதனால் கூறப்பட்டது.

1296. நேர்ந்து தனியிருந்து நெஞ்சுளைந்தாள் அஞ்சனைமுன்
கூர்ந்து நினைந்தேன் குமரேசா—சார்ந்து
தனியே யிருந்து நினைத்தக்கால் என்னைத்
தினிய விருந்ததென் னெஞ்சு. (சு)

இ—ள்.

குமரேசா! தலைவனோடு புலந்து தனித்திருந்த அஞ்சனை ஏன் பலபல நினைந்து பதைத்து நொந்தாள்? எனின், தனியே இருந்து நினைத்தக்கால் என்நெஞ்சு என்னைத்தினியஇருந்ததுஎன்க.

தனியே என்றது கணவனைப் பிரிந்திருந்த நிலையினை.

தினிய = தின்னும்படி. மென்று தின்பது போன்று என் நெஞ்சம் துன்பம் செய்ததென்பாள் "தினிய இருந்தது" என்றாள். தின்றுதலைத் தின்றதென்றது அதன் இன்னுமை தெரிய. அன்று நினைந்து தினிய இருந்ததேயல்லாமல், இன்று புலந்து இனியவா யில்லை என்பாள் இருந்தது என்று இறந்தகாலத்தால் கூறினாள்.

காதலரைப் பிரிந்து தனியே யிருந்து அவரது போக்கினை நினைந்தால் என் நெஞ்சம் என்னைத் தின்பது போன்று துன்பம் செய்தது என்பதாம்.

கணவன் அகன்று நின்றபோது தன்னை இகந்துபோயுள்ள அக்கொடுமையை நினைந்து கவன்றிருந்தவள், அவன் வந்தவுடனே ஒன்றும் நினையாமல் விழைந்து உவந்துகொண்டாள்; கொண்ட

வள் அக்கவலைக்கும் உவமைக்கும் நிலைக்களமாயிருந்த மன நிலையைக் குறித்து இங்ஙனம் உரைந்தாள் என்க.

நேரில் இல்லாதபொழுது அவரது பொல்லாமையையுள்ளி என்னை அல்லற்படுத்தியது; இப்பொழுது அவ் எல்லாவற்றையு மறந்து அவரைப் புல்லி நுகர்கின்றது; இதனை எப்படி நம்புகிறது? எனத் தன் நெஞ்சோடு புலந்து நின்ற படியிது.

தனியே யிருந்தபொழுது என்னைத் தின்னுவதுபோல இன்னல் செய்ததென்பாள் "தினிய இருந்தது" என்றாள். அம்மியிலிட்டு அரைத்தாள்; திரிகையிலிட்டுத் திரித்தாள்; உரலில் போட்டுத் துவைத்தாள் என்பனபோலத் துன்பமிகுதி தோன்றத் தின்பது என்று இங்ஙனம் குறித்தாள்.

தேளால் கொட்டப்பட்டவர் "ஐயோ சுவைத்துத் தின்னுகின்றதே" என்று பல்லைக் கடித்துக்கொண்டு சொல்லுவதுபோலத் தான் பட்ட அல்லல் நிலையை இவ்வாறு சொல்லலானாள். பிரிவின்கண் மனவேதனையோடு இவள் மறுகியிருந்த நிலை இதனால் அறியநின்றது.

"காமம் தாங்குமதி என்போர், தாம் அஃது
அறியலர் கொல்லோ? அனைமதுகையர் கொல்?
யாம் எம் காதலர்க் காணே மாயின்
செறிதுனி பெருகிய நெஞ்சமொடு பெருநீர்க்
கல்பொரு சிறுநுரை போல
மெல்ல மெல்ல இல்லாகுதுமே." (குறுந்தொகை 290)

தனியே இருந்தபொழுது துனிமிகுந்த நெஞ்சோடு ஒரு தலைமகள் பட்ட பாட்டை இதில் உணர்த்தியிருத்தல் காண்க. கல்லில் மோதிய நீர் நுரைபோல, அல்லலில் மோதி என் ஆவி இல்லையாயது என அவள் சொல்லியுள்ள நிலையைப் பார்க்க.

அலந்து தின்னும்படி யிருந்ததேயன்றிப் புலந்து மன்னும்படி இல்லையென மனத்தொடு மாறுகின்றதலால் இது நெஞ்சோடு புலத்தல் ஆயிற்று. காமக் கவலையின் கருத்து நிலை காண்க.

உடையவன் எதிரே ஊடமுடியாமல் உள்ளத்தோடு இங்ஙனம் ஊடியுள்ளமையால் இவளது உயிர்க் காதல் உணரலாகும்.

வெஞ்சினங் கொண்டு வெறுப்பிருந்தாலும் கொண்கனைக் கண்டவுடன் மனைவி நெஞ்சமுருகி நேர்ந்துகொள்வள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அஞ்சனைபால் உணரப்படும்.

## கதை.

அஞ்சனை என்பவள் மலையமான் திருமுடிக்காரியினுடைய அருமைத் திரு மனைவி. அரிய குண நலங்கள் பல அமையப் பெற்றவள். பெரிய பதிவிரதை. இப்புனித வதியோடமர்ந்து, இனிய போகங்களை நுகர்ந்து, திருக்கோவலூர் என்னும் பதியிலிருந்து அவன் அரசுபுரிந்தான். வீரம், கொடை, நியாயம் முதலிய உயர் நலங்களெல்லாம் அவனிடம் இயல்பாக அமைந்திருந்தன. உற்றவர்க்கு உதவல், அற்றவர்க்கு அருளல், பற்றலரைப் படுத்தல் என்னும் இத்தகைய வித்தகச் செயல்களை எத்திறத்தும் கோடாமல் இயற்றிவந்தான். வருங்கால் சேரலிரும்பொறை என்னும் சேர மன்னனுக்கும், பெருநற்கிள்ளி என்னும் சோழனுக்கும் கொடும் போர் மூண்டது. அதில் அரும்பாடு பட்டு அலமந்து நின்ற வளவன் அவனிடம் வந்து துணைவர வேண்டினன். அவன் இசைந்து சென்றான். இவள் துணைபிரிந்த அன்றில் போல் துடித்திருந்தாள். சென்ற அவன் திங்கள் பல கழிந்தும் திரும்பவில்லை. கார்ப் பருவம் வந்து, மழை பொழிந்து, முல்லை முதலிய மலர்கள் மலர்ந்து, எல்லாப் பிராணிகளும் இன்புற்றிருக்கும் இக்காலத்தும் கூட அவர் அன்புற்று வரவில்லையே என்று துன்புற்றுளைந்து செல்லி என்னும் தோழியிடம் இவள் சொல்லி வருந்தினள்.

"உறைகழி ஒள்வாள் மின்னி, உரும் எனும்
அறைகுரல் முரசம் ஆர்ப்பக், கைபோய்
வெஞ்சிலை கோலி வீ:ர்துளி என்னும்
இன்சரம் துரந்தது வானே; கிலனே,
கடியவாகிய களவ நன் மலரொடு
கொடியவாகிய தளவமும், அந்தண்
குலைமேம்பட்ட கோடலும், கோபமோடு

அலைமேம்பட்ட காந்தளும், இவற்றொடு
காயா வெந்துயர் தருமேல் அவரே
பொங்கிரும் புரிசை போக்கற வளைஇக்
கங்குலும்பகலும் காவல் மேவி
மாசறு வேந்தன் பாசறை யோரே;
யானே இன்னே
மயரிய மாக்களைப் போலத்
துயருழந் தழியக் கண்துயி லாவே."

என இங்ஙனம் கடுந்துயரோடு இவள் கலங்கி யிருந்தாள். அவன் அமர்முனையிலிருந்து தமருடன் மீண்டான். அவனைக் கண்டவுடனே இவள் ஆவி குளிர்ந்து அகமகிழ்ந்துகொண்டாள். அதன்பின் இத்தேவியை யகலாமல் மேவி யிருந்து யாவையும் வழங்கி அவன் ஆருயிர் புரந்தான். அவனது ஆட்சியையும் மனை மாட்சியையும், அருந் திறலையும், பெருங்கொடையையும், வியந்து புலவர் பலர் புகழ்ந்து பாடியுள்ளார். அவருள் கபிலர் பாடிய பாடல் ஒன்று இதனடியில் வருவது காண்க.

"கடல்கொளப் படாஅது; உடலுநர் ஊக்கார்;
கழல்புனை திருந்தடிக் காரி! நின் நாடே;
அழல்புறந் தரூஉம் அந்தணர் துவே;
வீயாத் திருவின் விறல்கெழு தானை
மூவருள் ஒருவன் துப்பாகியர் என
ஏத்தினர் தரூஉம் கூழே நும் குடி
வாழ்த்தினர் வரூஉம் இரவலர் துவே;
வடமீன் புரையும் கற்பின் மடமொழி
அரிவை தோளளவு அல்லதை
நினது என இலைநீ பெருமிதத் தையே." (புறம் 122)

நின்நாடு கடலால் கொள்ளப்படாது; பகைவரால் வெல்லப்படாது; வேள்வியைப் பாதுகாக்கும் அந்தணருடையது; மூவேந்தரும் தனித்தனி வந்து துணைவர விரும்பி உனக்கு மனமுவந்து தருகின்ற பெருந்திருவெல்லாம் இரவலருடையதே; அருந்ததியனைய கற்பினையும், இனிய மொழியையுமுடைய மனைவி தோள் மாத்திரமே உனக்குரியதாயுடையை; மற்றவெல்லாம் பிறர்க்கேயுரியனாயுள்ளாய்; இதில் பெருமிதம் எங்குளது? என அப்புலவர் பெருமான் அவனை நோக்கி வினவியிருக்கும் அழகைப் பார்க்க. இதில்

இவளது கற்பும் பொற்பும் குறிக்கப்பட்டுள்ளமை காண்க. இத னல் அவனது அருமையும் பெருமையும் இனிதறியலாகும். அவ னுடைய பட்டத்துக் குதிரைக்குக் காரி என்று பெயர்; அதன் மேலேறிச் சென்று பல போர் முனைகளிலும் வென்று வந்தானாத லால் "காரி யூர்ந்து பேரமர்க் கடந்த, மாரி ஈகை மறப்போர் மலே யன்" எனச் சிறப்புற்று நின்றான். அவன் நீங்கியபோதெல்லாம் தனியே ஏங்கி நீள நினைந்து நெடிது புலந்திருந்த இவள் அவனை நேரே கண்டவுடன் யாதும் கூருமல் ஆர்வமொடு முயங்கி அகமிக மகிழ்ந்தாள். தனியேயிருந்து நினைத்தக்கால் அவரது கொடுமை யையுட்கொண்டு என் நெஞ்சு என்னைத் தின்பதுபோன்று துன் பஞ் செய்தது; அவர் அருகே சார வந்தபோது யாதும் காணேம் என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

நேராத போதவரை நிந்திக்கும் நேரினே
நீரா யுருகுமென் னெஞ்சு.
நினைவழிந்து நேர்ந்தமை இதனால் கூறப்பட்டது.

**1297.** காதலனை யேநினைந்து காந்தினிமுன் நாணிழந்து
கோதுழந்தாள் என்னே குமரேசா—தீதிலா
நாணு மறந்தே னவர்மறக் கல்லாவென்
மாணு மடநெஞ்சிற் பட்டு. (எ)

இ—ள்.

குமரேசா! தன் காதலனையே நினைந்து காந்தினி ஏன் நாணிழந்து நொந்தாள்? எனின், அவர் மறக்கல்லா என் மாணு மட நெஞ்சிற் பட்டு நாணும் மறந்தேன் என்க.

நாணும் என்பதில் உம்மை அதன் சிறப்புணர நின்றது. "உயிரினும் சிறந்த நாணும் நனிமறந்து, உரைக்கலுய்ந்தனனே தோழி" (நற்றிணை 17). இதில் நாண்மறந்தமைக்கு இரங்கி ஒரு தலைவி உளைந்துரைத்துள்ளமை காண்க.

மாணுமை = சிறுமை. மடமை = அறியாமை.

தன்னை மறந்தாரைத் தானும் மறந்துவிடாமல் மானம் கெட்டுப்போய் நினைந்து நின்றதெனை இகழ்ந்து நின்றாள் ஆதலால் "மாணா நெஞ்சு" என்றாள். இன்னாது செய்தார்க்கு இன்னாது செய்ய வேண்டுமென்று எண்ணியறியாமல் மூடமாய் முனைந்து போதலால் "மடம்" என்றாள். புன்மையும் மூடமும் பொருந்தியுள்ளமையால் அவரை மறந்துவிடாமல் தொடர்ந்துள்ளது என்று தன் மனத்தை இவ்வாறு இகழ்ந்து நின்றாள்.

"துறந்தமை கல்லார் காதலர்
மறந்தமை கல்லாது என் மடங்கெழு நெஞ்சே" (ஐங்குறுநூறு 457)

இது, இதனை அடியொற்றிவந்துள்ளமை காண்க.

மேல், நெஞ்சம் தனக்கு இதம் செய்யவில்லை என்றாள்; இதில், அதனால் தான் இழந்துள்ளதை யுரைக்கின்றாள்.

காதலரை மறக்க மாட்டாத என் புல்லிய மடநெஞ்சோடுபொருந்தி எனது உயிரினும் சிறந்த நாணினையும் இழந்தேன் என்பதாம்.

தலைவனைக் கண்டவுடன் புலவி யொழிந்து கலவியை விழைந்துகொண்டாள் ஆதலால் "நாணும் மறந்தேன்" என்றாள். காதல் கைமிகுந்த பொழுது நாணம் மறைந்துபோம் ஆதலால் அது மறக்க நேர்ந்தது.

"சேணும் எம்மொடு வந்த
நாணும் விட்டேம் அலர்க இவ்வூரே." (நற்றிணை 15)

"கன்னிய ரெல்லாம் காமன் தூர்ந்த
கணையுளங் கழியக் கவினழி வெய்தி
இறைவளை நில்லார் நிறைவரை நெகிழ
நாண்மீதூர்ந்து நன்னெஞ்சு நடப்ப" (பெருங்கதை 2,7,55)

"நாணாள் கொல் தோழி நயனில் பரத்தையிற்
றோள் நலமுண்டு துறந்தான் என ஒருத்தி
யாணர் மலிபுனல் நீத்தத் திரும்பிடி
சேண வெரிநிற் சிறந்தானோடு எறினாள்
நாணுக் குறைவிலள் நங்கை" (பரிபாடல் 12)

நாண் மறந்த நிலையை இவை உணர்த்தி நிற்றலறிக.

காதலிகளுடைய நெஞ்சும் நிறையும் காதலர்களுக்குத் தஞ்சமாயிருக்கும் என்பது இதனால் அறிய நின்றது.

"விண்டலங் கலந்திலங்கு திங்களோடு மீதுசூழ்
வண்டலம் பலங்கல் தங்கு பங்கியோடும் வார்சிலைக்
கொண்டலொன் றிரண்டு கண்ணின் மொண்டு கொண்டென் ஆவியை
உண்டதுண்டெனஞ்சினின் றும் உண்டதென் றும் உண்டரோ. (க)

அடர்ந்துவந் தனங்க னைஞ சமுனறு சந்தும அம்பெனும்
விடங்குடைந்த மெய்யினின்று வெந்திடா தெழுந்து வெங்
கடந்துதைந்த காரியானை யன்னகாளை காலடைந்து
உடன் தொடர்ந்து போன ஆவி வந்தவா றென்னுள்ளமே?" (உ)

(இராமாயணம்)

இவை சீதை உரைத்தன. இராமன் கண்களால் மொண்டு கொண்டு தன் ஆவியை உண்டுகொண்டான் என்றும், அவனைத் தொடர்ந்து அது போயுள்ளதென்றும் தன் உள்ளத்தோடு மயங்கி அவ் அம்மை உரையாடியிருக்கும் நிலையை இவற்றுள் ஊன்றிப் பார்க்க. காதலிகள் நெஞ்சொடு நேர்ந்து புலம்பி நிலைகுலைந்து நிற்குந்திறனை இதன் கண்ணும் அறிந்துகொள்க. காமம் தலைக் கொண்டு, மனம் காதலன்மேல் மண்டியுள்ளமையான் நாணம் இவள் காணுள் ஆயினுள். ஆசை விரைந்தெழுந்தபொழுது வெட்கம் மறைந்தொழிந்துபோம் என்க.

அடாத காதல்கொண்ட சூர்ப்பணகை மூக்கு முதலியன அறு பட்டுப் படாத பாடுகள் பட்டும் வெட்கமின்றிக் காமமிக்கு இராம இலக்குவர்களிடம் மன்றாடிய படியைச் சிறிது இங்குக்காணவேண் டும். அடியில் வருவது காண்க.

"பொன்னுருவப் பொருகழலீர்! புழைகாண மூக்கரிவான் பொருள் வேறுண்டோ, இன்னுருவம் இதுகொண்டிங் கிருந்தொழியும் நம்மருங் கே ஏகாள் அப்பால், பின்னிவளை அயலொருவர் பாரார் என்றே அரிந்தீர்; பிழைசெய்தீரோ? அன்னதனையறிந்தன்றோ அன்பிராட்டி பூண்டது நான் அறிவிலேனோ?" (இராமாயணம்)

தன் மூக்கைக் கொய்தது காதற்குறிப்போடு அவர் செய்ததாகக் கருதியுரைத்து அவள் இதில் மறுகியிருத்தல்காண்க. "இத்தகைய பேரழகி வனத்தில் வந்துள்ள நமக்கு வலியவந்து கிடைத்தாள்; இவளைப் பிறர் விரும்பாலும், என்றும் நம்மைவிட்டு இவள் அகலா மலும், இருத்தற்கோர் உபாயம் யாதென ஆராய்ந்து உள்ளன் போடு செய்திருக்கிறீர்கள்; அந்த வுண்மையை உணர்ந்தல்லவா

முன்னையினும் இருமடங்கு உங்கள்மேல் ஆசைகொண்டுள்ளேன் என்று அம்மடமங்கை உரையாடியிருக்கும் திறத்தை ஊன்றிப் பார்க்க. பொருகுழலி! எவ்வாறு மகா வீரனான இராவணனுடைய தங்கை என்பதை அறிந்திருந்தும் யாதும் அஞ்சாமல் துணிந்து தன்னை அலங்காரஞ்செய்து அவ்விங்கங்களின் திறமையையினைந்து. முகத்தைப் பாராமல் காலை நோக்கிப்பேசியது மூக்குப் போனமையால் நேரே மேல் நோக்கக் கூறி என்க. இன்னவாறே இதில் புதைந்துள்ள நன்னயங்களை நாடியறிந்து கொள்க. இன்னணம் பேசினவள் பின்னரும்:

"கண்டாரோ காதலிக்கும் கட்டழகும் விடம் அன்றோ?
கொண்டாரோ கொண்டாடும் உருப்பெற்றால் கொள்ளீரோ?"
"மேக்குயர்ந் நெடுமூக்கும் மடநங்கையர்க்கு மிகையன்றோ?"

என இங்ஙனம் தனக்கு மூக்குப்போனதே மனக்கினியதோர் மாட்சி என்று நினைப்பூட்டி மேலும் மேலும் வாதாடினாள். இதனால் காமமிக்கவர் நாணமற்று அலைவர் என்பது நன்கு புலனாம். இது, முறைகெட்ட காதலாயினும் "நாளும் மறந்தேன், அவர் மறக்கல் லேன்" என்பதை ஒருவாறு உறுதிபெற உணர்த்தி நிற்றலால் ஈண்டு உள்ள நோக்கது.

காதலன் தள்ளி நிற்பினும் காதலி அவனை உள்ளி நிற்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை காந்தினிபால் உணரப்படும்.

## கதை.

காந்தினி என்பவள் காசியரசனுடைய அருமைத்திருமகள். அறிவில் உருவில் உரையில் ஒழுக்கில் உயர் நிலை யுடையளாய் இவள் நிலவியிருந்தாள். "கன்னல் இன்சுவை புளித்திடக்கனிந்திடுந் தீஞ்சொற், பொன்னம் பூஞ்சுணங் கரும்பிய புணர்முலைக்கொடி" என இன்னவண்ணம் எழில் நலங்கனிந்திருந்த இவள் தகுதிக்குத் தகுந்த வரனமையாமையால் பருவமெய்தியும் மணவினை கருதாது தனியமர்ந்திருந்தாள். இளமை சார்ந்து, இன்னொளி தவழ்ந்து, மின்னிளங்கொடிபோல் மிளிர்ந்திலங்கி, விழைந்து வந்தவரெவரை

யும் வேண்டாது விலக்கிக் கன்னிமைகாத்து இவள் மன்னிவரு வதைக் கண்டு மன்னனும் இரங்கி இன்னல்மீக் கூர்ந்து மறுகி நின்றான். விண்ணரமகளிரும் வியந்து நோக்கும் பெண்ணரசி யான இவள் இங்ஙனம் குமரிருந்து வருங்கால் சுவர்க்கன் என்னும் அரசிளங்குமரன் கலைபலபயின்று உலகநிலையை வெறுத்துத் தவநிலையில் தழைத்துநின்றான். அத்தலைமகனது நிலையினை வினவி யறிந்து அரசன் அவனிடம் வலியச்சென்று தனது அருமைமகளை மணந்துகொள்ளும்படி உரிமையோடு விழைந்து வேண்டினான். “யாம் மகள் தருதும் கொள்கெனக் கூறுதல், ஏமவையத்து இயல் பன்று” ஆயினும் காமநிலை கடந்துள்ள அவனது நேம நிலையையும், கன்னிமை கனிந்துள்ள இவளது இன்னெழில் நலனையும் கருதி வேந்தன் அங்ஙனம் வேண்ட நேர்ந்தது. இவளுடைய இயல் நலங்களை முன்னமே அவன் கேள்வியுற்றிருந்தானாதலால் தனக்கு இவள் மனைவியா யெய்துவதை நினைந்து மனமிக மகிழ்ந்து செய்தவ நிலையைச் சோர மறந்து ஆர்வமுற்றெழுந்தான். அவனை உவந்தழைத்துவந்து மிகுந்த சிறப்போடு இவளை அவனுக்கு மணஞ் செய்து தந்தான். அரும்பெறலமிர்தம் அடைந்தவன் போல் பெருங் களிகூர்ந்து மருங்ககலாமல் இவளை மருவிமகிழ்ந்து அவன் உருகியிருந்தான். அளந்தறிவரிய இவளது இளநலம் பருகி அவன் உளங்களித்து வருங்கால் வானம் வளஞ் சுரந்தளித்தது. இடையே பெய்யாதிருந்த மழை இவள் மணமுடிந்தவுடன் இனிது பெய்தமையால் எங்கணும் வளங்கள் மிகுந்தன. இம்மங்கையும் ஓர் புதல்வனைப் பயந்தாள். அவனுக்கு அக்குரூரன் என்று பெயர். எங்கேனும் மழை வறந்தால் அவனை அங்கு அழைத்துச் செல்வர். சென்றவுடன் மழையும் பெய்தருளும். ஒருமுறை துவாரகையில் மழையின்றி யிருந்தபொழுது கண்ணன் அமைச்சருடன் ஆராய்ந்து அவனை அழைத்துச்சென்றான். அடியில்பார்க்க:

“மழைவளம் சுரத்த லின்றி யிருத்தலும் மதிநூற் றேர்ச்சிக்
கிழவரைக் கண்ணன் கேட்ப இன்னணம் கேடில் காசிப்
பொழி புயல் வறத்தல் தன்னால் அந்நகர்புரப்போன் கேள்வி
தழைதரு சுவர்க்கற் கூவித் தன்மகள் தன்னை யீந்தான். (௧)

காந்தினி முறுவல் மாந்திக் கலையில் கலாக்கள் என்னும்
வேந்தர்கோன் மேயயார்ஞல் விண்மழை பொழிந்ததன்றேன்
ஏந்தெழிற் புதல்வரோடும் இசைபெறும் அக்ரூரன்
போந்திடப் பெற்று மனம் மற்றாரிற் புகுவித்தாளே" (கூர்மபுராணம்)

விண்மழை பொழிய இப்பெண் வழிபாடு செய்திருந்த உண்மை இதன் கண்ணுறும் குறிப்புள்ளமை காண்க. இதனால் இவளது கற்பும் காதலும் அப்படி நிலையும் அறியலாகும். இங்ஙனம் இன்பம் நுகர்ந்து வருங்கால் இவள் கொண்கனோடு ஒருமுறை ஊடல் நேர்ந்தது. அவ்வூடல் நிலையில் அவன் அங்கை கூடச்சென்றான். சென்ற அவனையே மீள நினைந்து நாளும் இவள் வருந்தியிருந்தாள். அவன் மீள வந்தான். தன்னை மறந்து அவனை இவள் தழுவி மகிழ்ந்தாள். "அவர் மறக்கல்லா என் மாணா மட நெஞ்சிற் பட்டு நாணும் மறந்தேன்" என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

பேணாரைப் பேணிநின்ற பெய்மனமே நணிநிறை
காணனின் றேறு கலர்ந்து.

நாண்மறந்து மயங்குமை இதனால் கூறப்பட்டது.

---

1298. எள்ளா திரேவதியேன் எண்ணியெண்ணி நாயகனைக்
கொள்ள விழைந்தாள் குமரேசா—தள்ளியே
எள்ளி னிளிவாமென் றெண்ணி யவர்திறம்
உள்ளும் உயிர்க்காதல் நெஞ்சு. (அ)

இ—ள்.

குமரேசா! தன் நாயகனை எள்ளி இகழாமல் இரேவதி ஏன் உள்ளி விழைந்தாள்? எனின், எள்ளின் இளிவாம் என்று எண்ணி உயிர்க்காதல் நெஞ்சு அவர் திறம் உள்ளும் என்க.

எள்ளலாவது சொல்லாலும் செயலாலும் இகழ்ந்துவிடுதல். இகழும்படியான நிலையில் தலைவன் தவறு செய்துள்ளமையால் எள்ளின் என்றாள். அங்ஙனம் எள்ளிவிடின் உடனே அவன் அகன்றுபோவன்; போனால் ஆறாத் துயரோடு தனியே அலமர நேரும்; அதுவேயுமன்றி உலகமும் பழிக்கும் ஆதலால் 'இளிவாம்' என்றாள். என்றதனால் உளவாம் இளிவரவுகளை இவ்வாறு எதிரறிந்து அதனைத் தள்ளி விடுத்து, முதிர் காதலோடு அவனை எதிர்

கொள்ள விரைந்து ஓடாது எண்ணி நின்றமையால் "நெஞ்சு அவர் திறம் உள்ளும்" என்றாள். தன் காதல் நிலைமை நெஞ்சின்மே லேற்றி இவ்வண்ணம் மேதகவோடு ஓதி நின்றாள் என்க.

சாகமாட்டாத மனம் அவரை நோகமாட்டாமல் இங்ஙனம் நொந்து தவிக்கின்றதென்பாள் "உயிர்க்காதல் நெஞ்சு" என்றாள். அவரை எள்ளினால் தனக்கு இளிவரவும், உயிரழிவும் எய்தும் ஆதலால் அது செய்கிலேன் என்பது குறிப்பு.

உயிர்மேல் ஆசைகொண்டுள்ள என் நெஞ்சு காதலரை இகழ்ந்துவிடின் இளிவரவாமென்று கருதி அவர் திறங்களையே நினையாநின்றதென்பதாம்.

தன்னைப் பிரிந்து சென்ற தலைவன் திரும்பிவந்தான்; போன இடத்தில் வேறுசில மகளிரை விழைந்திருந்ததாக அறிந்து சினந் திருந்த தலைவி, அவன் வந்தவுடன் யாதும் புலந்துகொள்ளாமல் விழைந்துகொண்டாள்; அதனைத் தோழி கண்டாள்; நம்மை எள்ளி நின்றாரை யாதும் எள்ளாமல் இங்ஙனம் புல்லியது என்னை? என்று அவள் சொல்லி நகைத்தாள்; அவ்வமயம் அவளை நோக்கி இவள் இவ்வாறு சொல்லுகிறாள் என்க. அவர் திறம் என்றது தலைவனது முனைந்த செயல்களை. அவனை முயங்கி மகிழ்படும் விதங்களை முன் னுற உள்ளியிருந்ததை உள்ளும் என்றதனால் உணர நின்றது.

நாயகன் இகந்து அகன்றாலும் நாயகி அவனையே நினைந்து மகிழ்வாள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இரேவதியால் உணரப்படும்.

கதை.

இரேவதி என்பவள் ஆனர்த்த நாட்டின் அதிபதியாகிய இரே வதன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகள். ஏர்குடி கொண்ட இன்றிறனி மேனியள். அறிவிலும் திருவிலும் சிறந்த பருவம் நிறைந்து பெருமித நிலையில் இவள் மருவியிருந்தாள். நல்லியல்புடைய இம்மெல்லியல் நிலையை முனிவர் சிலர் சென்று பலராமரிடம் இனிது மொழிந்தார். அதனைக் கேட்டவுடனே அவ் வெள்ளைவண்ணர் இக் கிள்ளை மொழியை விழைந்து உள்ளமிக வுருகித் தள்ளருங் காதலோடு தவித்துழந்து தாழாது துடித்தார்.

"அணங்கினைக்கு அணங்கு செய்யும் அளகினார் அந்திலோதி
குணங்கமழ் குருநிலையினோற் கொற்றவன் செவியுறு முன்
மணங்கமழ் தென்றல் தேர்மீரான் வாங்குழையைக் கழைவிற் பூட்டும்
குணம் செவிப் பட்டதன்றேயன் வன்மையார் குவிக்கற்பாலார்"

என்றபடியே களிப்பரிய காமதாபத்தால் கடுந்துயர் கூர்ந்து அவர் கருத்தழிந்து கிடந்தார். அந் நங்கை நிலைமையை பெற்றவர் தெரிந்தார்; உறவினரிருவரை இவேளைகளிடம் உரிமை கூறி விடுத்தார்; அவர் சென்றுணர்த்தினர்; அவன் நன்றாக இசைந்தான். அதன்பின் சிறந்த வைபவத்துடன் அங்குத் திருமணம் நடந்தது.

"ஆனர்த்த நாடுதனை ஆளும் அடல் மன்னன்
ஊனுற்ற வேல்வீரன் இரேவதன் உயிர்த்த
தேனுற்ற இன்மொழி இரேவதியை மைதீர்
வானுற்ற தண்பனை யுயர்த்தவன் மணந்தான்." (பாகவதம்)

இங்ஙனம் இவளை மணந்துகொண்டு அவர் உயர்ந்த இன்பங்களை நுகர்ந்து உளங்களித்து வந்தார். இணைபிரியாது இவர் இணைந்து மகிழ்ந்து வருங்கால் ஒருமுறை கங்காதீரத்தில் கல்வியாளர் சங்கம் ஒன்று கூடியது. பல கலைகளிலும் தலைசிறந்த புலவர்கள் பலர் பலதேசங்களிலுமிருந்து வந்து அவண் நிறைந்திருந்தார். அங்குப் பலராமரும் செல்லத் துணிந்தார். தமது துணைவி இவளிடம் மெல்ல உணர்த்தும்படி நாகவல்லி என்னும் தோழியிடம் அவர் சொல்லி விடுத்தார். அவள் இதமாகச் சென்று நயமாக உரைத்தாள்.

"வரம்பில் கேள்விப் பெரும்பெயர்ப் பனுவல்
பதினெண் மொழியிற் பயன்கொள விரிக்கும்
மதிபுரை கேள்வி மதியோர் அவைஇப்
பிரிவர்நம் காதலர் பிறபுலம் படர்ந்தே."

என இவள் உணர்ந்துருகும்படி அவள் உரைத்துவேண்டினாள். இவள் பிரிவுடன்படாது மறுகிநின்றாள். மறுநாள் இரவு அவரே நேரில் நெருங்கி ஆர்வமொடு முயங்கி அளவளாவியிருந்து அமயமறிந்து கல்வியின் நலத்தைக் கனிவுபெறச் சொல்லினர்.

"நிலையினிற் சலியா நிலைமை யானும்,
பலவுல கெடுத்த ஒருதிறத் தானும்,
நிறையும் பொறையும் பெறுநிலை யானும்,
தேவர் மூவரும் காவ லானும்,

தமனியப் பாரைச் சைலம் ஆகியும்;
அளக்கவென் றமையாப் பரப்பினதானும்
அமுதமும் திருவும் உதவுத லானும்
பலதுறை முகத்தொடு பயிலுத லானும்
முள்ளுடைக் கோட்டு முனையெறி சுறவம்
அதிர்வினை தடியும் அளக்கர் ஆகியும்;
நிறையுளங் கருதி நிகழ்ந்ததை நிகழ்பவை
தருதலின் வானத் தருஐந்து ஆகியும்;
மறைவெளிப் படுத்தலின் கலைமகள் இருத்தலின்
அகமலர் வாழ்தலின் பிரமன் ஆகியும்;
உயிர்பரிந்து அளித்தலின் புலமிசை போக்கலின்
படிமுழுது அளந்த நெடியோன் ஆகியும்;
இறுதியிற் சலியாது இருக்கலானும்
மறுமை தந்துதவும் இருமை யானும்
பெண்ணிடம் கலந்த புண்ணியன் ஆகியும்;
அருள்வழி காட்டலின் இருவிற் ஆகியும்;
கொள்ளுநர் கொள்ளக் குறையாது ஆதலின்
நிறையுளம் நீங்கா துறை அருள் ஆகியும்;
அவை முதலாகி இருவினை கெடுக்கும்
புண்ணியக் கல்வி புலமைகிழ் மாக்கள்
மாதவர் வழுத்தும் கூடற்கு இறைவன்
இருசரண் பெறுகுநர் போலப்
பெருமதி நீடுவர் சிறுமதி நுதலே!”

என இவ்வாறு கல்வியின் பெருமையையும், அதனையடைவ தால் வரும் உயர்வையும் உறுதிபெற வுணர்த்தி இவளை அரிதிற் பிரிந்து அவர் அகன்று போனார். போனவர் ஞான நெறியுடைய அக்கல்வியாளரோடு கலந்து பழகித், திங்கள் ஒன்று கழிந்தபின் அங்கிருந்தபடியே கோகுலத்தை யடைந்தார். அந்நகரில் நடந்த கோவியரது கோலாட்ட விழாவைக் கண்டு களித்து மீண்டார். அவர் காட்சியில் களித்திருந்ததை யறிந்து இவள் கடுத்து நின்றாள். நின்றாலும் யாதும் இகழாது அவரையே நினைந்து நெஞ் சுருகலானாள். “எள்ளின் இளிவாம் என்றெண்ணி அவர் திறம் உள்ளும்” என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

வஞ்சித்து நின்றாரை வாஞ்சிக்கு நெஞ்சமேனைப்
பஞ்சரித்து நிற்கும் பறந்து.

நெஞ்சு நினைந்துழந்தமை இதனால் கூறப்பட்டது.

1299. ஓர்துணையு மில்லையென வன்றுடைந்து இன்னலியேன்
கூர்துயரங் கொண்டான் குமரேசா — நேர்வந்த
துன்பத்திற் கியாரே துணையாவார் தாமுடைய
நெஞ்சந் துணையல் வழி. (௯)

இ — ள்.

குமரேசா! தன் துணைவி புலந்து நின்றபொழுது இன்னலி என் நெஞ்சொடு புலம்பி நின்றான்? எனின், தாம் உடைய நெஞ்சம் துணை அல்வழி துன்பத்திற்கு துணையாவார் யாரே என்க.

இது, தன் நெஞ்சொடு புலந்து தலைவன் கூறுகின்றது.

துணை — உதவி, சகாயம். யார் ஆவார்? என்றது விறு ஒருவரும் ஆகார் என்பதை உணர்த்தி நின்றது.

துன்பத்திற்குத் துணை என்றது துன்பத்தை நீக்குதற்குத் துணை என்றவாறு. பிணிக்கு மருந்து என்பது போல் இது நீக்கம் குறித்து நின்றது.

இங்குத் துன்பம் என்றது மனவேதனையை. அஃதாவது மனைவி ஊடலில் நீடியுள்ளமையான் நேர்ந்த உள்வருத்தம் என்க.

ஒருவனுக்குத் துன்பம் வந்தபொழுது தொடர்புடையேம் என்று உடனமர்ந்து நின்று அவனுக்கு அனுகூலமாய்த் துணை செய்வார் மிகவும் அரியர் ஆதலால் அவ்வுலக இயல்பை நினைந்து புலவி நிலையில் தனக்கு நேர்ந்துள்ள துயர நிலையையும், துணையில்லாமையையும் இங்ஙனம் சொல்லிப் புலந்தான்.

வெள்ளத்தனைய இடும்பையையும் உள்ளத்தால் ஒழித்துவிடலாம் ஆதலால் அங்ஙனம் உற்றுழி உதவ வல்ல அதுவும் உதவாமல் போயதே! இனி அயலாரை நோவதென்? என அவன் நொந்துள்ள நிலையை இதில் நோக்கி அறிந்துகொள்க.

தமக்குத் துன்பம் நேர்ந்த வழி அதனை நீக்குதற்குத் தம்முடைய மனம் துணையாகா வழி வேறு துணையாவார் ஒருவரும் இல்லை என்பதாம்.

புலந்திருந்த தலைவியை இயன்றவரையும் நயந்து தேற்றியும் அவள் இணங்கி யருளாமையால் முடிவில் தலைவன் வருந்தி யுரைத்த படியிது.

இன்பக் காலத்தில் எல்லாரும் வந்து இனியர் போன்று சூழ்ந்து இதம் புரிந்து நிற்பர்; துன்பம் நேர்ந்தபொழுது ஒருவரும் உதவாமல் ஒல்லையில் அகல்வர்; அவ்வமயம் அகலாமல் உழை நின்று உதவுவோரே உரிமையாளர் ஆவர்; அந்தகைய உரிமையாளர் எவரினும் "என்று நீ அன்று நான்" என்றபடி இயற்கையாகவே தொன்று தொட்டு மிகவும் உரிமையாய் அமைந்துள்ள மனமே இன்று இனமாய் நின்று துணை செய்யவில்லையாயின் இனி யாரை நோவது? என அதனை வேறுபிரித்து இங்ஙனம் வெறுத்துக் கூறினன்.

நெஞ்சம் துணையல்லவென்றது ஊடி நிமிர்ந்து நிற்கும் அவளை உவர்த்து நீங்காமல், கூடலை அவாவிக் குதித்து நிற்றலால் என்க.

அவள் புலவி ஒழிந்து இசைந்தருளினும், அல்லது தன் மனம் கலவியை விழையாது அவளை இகழ்ந்து நீங்கினும் தனக்குத் துன்பம் இல்லை ஆதலால் விழைவுற்று நிற்கும் தன் உள்ளத்தை இவ்வாறு குறிப்போடு இளிந்து நின்றான். புறத்திலும் இரங்குவாரில்லை; அகத்திலும் ஆதரிப்பாரில்லை என்று அலமந்து சொல்லியவாறிது.

"நல்லுரை யிகந்து புல்லுரைத் தாஅய்
பெயல்நீர்க் கேற்ற பசுங்கலம் போல
உள்ளம் தாங்கா வெள்ளம் நீந்தி
அரிது அவாவுற்றனை நெஞ்சமே! நன்றும்
பெரிதால் அம்ம நின்பூசல் உயர்கோட்டு
மகவுடை மந்தி போல
அகனுறத் தழீஇக் கேட்குநர்ப் பெறினே." (குறுந்தொகை 29)

நீரைக் கொண்ட பசிய மட்கலம் போல உள்ளம் தாங்கமுடியாத துன்ப வெள்ளத்தில் தோய்ந்து இன்பத்தை அவாவியுள்ள நெஞ்சே! கெழுதகைமையொடு நம்மைத் தழுவிக் கேட்டு உரிமையாக நமக்கு உதவி செய்வார் ஒருவரும் இல்லையே! என ஒரு தலைவன் தன் மனத்தொடு இதில் மறுகியிருக்கும் நிலையைப் பார்க்க.

மகளிர்தானே புலந்துநிற்பர்; ஆடவர்க்கும் புலத்தல் அமையுமோ? எனின், கலத்தலில் கைசெய்து நிற்கும் காதலர்க்குமிகவும் ஆதரம் பயந்துவருதலால் இப்புலவியை அனைவரும் ஆதரித்து நிற்பரென்க. களவுநிலையில், தலைவி குறித்த குறிதப்பிய வழியும்,

கற்புநெறியில், உணர்த்தியும் கேட்காமல் உள்ளம் திமிர்ந்து அவள் ஊடி நின்றவிடத்தும், தலைவனிடம் புலவியும் ஊடலும் பொங்கி யெழும் என்க.

"உணர்ப்புவரை யிறப்பினும், செய்குறி பிழைப்பினும்,
புலத்தலும் ஊடலும் கிழவோற்கு உரிய"
(தொல்காப்பியம், கற்பியல் 15)

தலைவன் புலத்தற்குரிய இடங்களை இஃதுணர்த்தி நிற்றலறிக.

"வயங்கு வெயில் ஞெமியப் பாஅய் மின்னுவசிபு
மயங்கு துளி பொழிந்த பானாட் கங்குல்
ஆராக் காமம் அடூஉ நின்று அலைப்ப
விறுவரை வீழ்நரின் நடுங்கித் தெருவரப்
பாம்பெறி கோலின் தமியை வைகித்
தேம்புதி கொல்லோ நெஞ்சே!
பெறலருங் குரையள் அணங்கியோளே." (அகம் 322)

"குணகடற் றிரையது பறைதபு நாரை
திண்டேர்ப் பொறையன் தொண்டி முன்றுறை
அயிரை ஆர்இரைக்கு அணவந்தாங்குச்
சேயள் அரியோட் படர்தி
நோயை நெஞ்சே நோய்ப்பா லோயே." (குறுந்தொகை 128)

"அன்னநடைப் பேதை அருமை யறியாதே
என்னை வருத்துகின்ற தென்கொலோ—துன்னிய
வஞ்சமே யன்ன மலர்விழியாள் கூடுதியும்
நெஞ்சமே! கட்டுரையாய் நீ" ([illegible])

"எவ்வி யிழந்த வறுமையாழ்ப் பாணர்
பூவில் வறுந்தலை போலப் புல்லென்று
இனைமதி வாழிய நெஞ்சே! மனைமரத்து
எல்லுறு மௌவல் நாறும்
பல்லிருங் கூந்தல் யாருளர் நமக்கே?" (குறுந்தொகை 19)

களவொழுக்கத்திலும், கற்புநிலையிலும் தலைமகன் நெஞ்சொடு புலந்திருக்குந் திறங்களை இவற்றான் உணர்ந்துகொள்க. எவ்வி என்னும் வள்ளலை யிழந்த பாணர்கள் வறியராய் வருந்துவதுபோல் மறுகி வருந்துகின்றனையே! நம் அல்லலை யறிந்து ஆதரித்தற்குரியார் யார் உளர்? என இறுதியில் அவன் சொல்லி வருந்தியுள்ள நிலையைப் பார்க்க.

விரகதாபமானது எரியுற்ற வெண்ணெய் போல் உருக்கி உயிரைத் தட்டழியப்பண்ணும் ஆதலால் அதனைத் துன்பம் என்று குறித்தான். அத்துயர நிலையில் உற்ற மனமும் உதவாதொழிந்த

தென உளைந்து நின்றான் ஆதலால் "தாம் உடைய நெஞ்சம்" என அதன் உறவுரிமை தோன்ற உரைத்தான்.

"தேமிடை காயல் வேலிச் செழுமணற் குவாலும் குன்றும்
பூமிடை தடமும் காவும் புக்கவர்க்கு அரணம் ஆகா;
தாமுடை மனமும் கண்ணும் நிறையும் தம்பால வாகா,
காமுடை மனத்தினோர்கட்கு யாருளர் களைகணாவார்?" (சூளாமணி)

காம நோயுடையார் களைகண் இன்றி யுளைவார் என இஃ துணர்த்தி நிற்றல் காண்க. களைகண் = பற்றுக்கோடு. காமத்தின் இயல்பும், அதனையுற்றவர் மனநிலை குலைந்து மறுகி நிற்கு நிலையும் இதனால் இனிது புலனும். குவால் = மேடு.

தலைவி ஊடி நிமிர்ந்தபொழுது தலைவன் வாடி வருந்துவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கிள்ளி பால் உணரப்படும்.

## கதை.

கிள்ளி என்பவன் உறையூரிலிருந்து அரசுபுரிந்த ஒரு சோழ மன்னன். பெரிய போர்வீரன். வேல் வாள் முதலிய படைக்கலப் பயிற்சியில் மிகவும் சிறந்து யாண்டும் அருந்திறலாளனாய் விளங்கி யிருந்தானாதலால் சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளி எனப் பேர்பெற்று நின்றான். இவனுடைய மனைவி பெயர் சயமதி. அவள் பேரெழிலும் பெருங் குணங்களும் ஒருங்கு நிறைந்து பெரும் போக நிலையமாய்த் திகழ்ந்திருந்தாள். அக் குலமகளோடமர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து இத் தலைமகன் உளமிக மகிழ்ந்தான். "மணிக்குடம் அமுதத்தை யடைத்தனைய தோளினான், கனிக்கிடம் கொடா நலம் ததிர்த்த காரிகை, அணிக்கிடமாகிய அரிவை தன்னொடும், பிணித்திடை விடாதவன் பெற்றவின்பமே" என்றபடி நாளும் களிப்புமீதூர்ந்து இன்பந்திளைத்து வந்தான். ஒருங்கால் இமையமீய நெடுஞ்சேரலாதன் என்னும் சேரமன்னனுக்கும் இவனுக்கும் பகைமை மூண்டது. முதன்முறை போர் என்னும் இடத்திற் போர் தொடங்கியது. இருபெருஞ் சேனைகளும் உறுதியோடு பொருது நின்றது. அம் முனைமுகத்தில் முனைந்து நின்று இவனது படை முதலில் வெற்றியடைந்தது. வினை முடிந்தவுடன் பாசறையில் விளங்கியிருந்த

இவன் மனை வர விழைந்தான். பிரிந்து நாளானமையால் தனது மனைவியை நினைந்து மறுகிவிரைந்தான். இடையிலுள்ள வழியின் நெடுமையை எண்ணியழிந்தான்.

> "ஆடமை புரையும் வனப்பிற் பணைத்தோள்
> பேரமர் கண்ணி இருந்த ஊரே
> நெடுஞ்சேண் ஆரிடை யதுவே; நெஞ்சே
> ஈரம் பட்ட செவ்விப் பைம்புனத்து
> ஓரேர் உழவன் போலப்
> பெருவிதுப் புற்றன்றால் நோகோ யானே;"

என இன்னவெண்ணம் கொண்டு நின்ற இவன் பாகனை விரைந்து தேர்விடும்படி தூண்டி நகரை யடைந்தான். இவனைக் கண்ட வுடனே கருமுகில் கண்ட களிமயில்போல் கவலையெல்லாம் விண்டு அவள் உவகைகொண்டு நின்றாள். இவன் கலந்து மகிழ்ந்து களித்து வந்தான். வருங்கால் இடையே அனங்கலேகை என்னும் கணிகை ஒருநாள் அரசவையில் நடித்தாள். அவளுக்குப் பரிசில் பல தந்து அரசன் உரிமைசெய்து விடுத்தான். அத் தாசி மேல் ஆசைகொண்டு செய்ததாக இவள் ஊடல்மீக்கொண்டாள். பள்ளியறையில் உள்ளதை யுணர்ந்தும் அவள் உளந்திருந்தாது புலந்தாள். இவன் வருந்தி நின்றான். அவளைக் கலந்து மகிழ விழைந்து துள்ளிய உள்ளத்தை இகழ்ந்துகொண்டான். "தாம் உடைய நெஞ்சம் துணையல் வழி துன்பத்திற்கு யாரே துணையாவார்?" எனப்புலவியிடைத் தலைவன் தன்னெஞ்சொடு புலந்துகொள்வன் என்பதை உலகம் காண அன்று இவன் உணர்த்தி நின்றான். அவளும் பின்பு உணர்ந்து இசைந்தாள். இவன் மயங்கி மகிழ்ந்தான். புலந்தும் கலந்தும் இங்ஙனம் களித்து வருங்கால் முன்பு உடைந்துபோன சேர மன்னன் மீண்டும் பெரும்படையோடு திரண்டு வந்தான். இவனும் முனைந்து போர்மேல் மூண்டு போனான். அக் கடும் போரில் இருதிறப்படைகளும் அழிந்தொழிந்தன; முடிவில் அரசரிருவரும் பொருது மடிந்தார். அரசிகளும் அவரோடு உடனுயிர் துறந்தார். அடியில் வருவது காண்க.

> "வருதார் தாங்கி அமர் மிகல் யாவது?
> பொருதாண் டொழிந்த மைந்தர் புண் தொட்டுக்
> குருதிச் செங்கைக் கூந்தல் தீட்டி

திறங்கிளர் உருவிற் பேஎய்ப் பெண்டிர்
எடுத்தெறி அனந்தர் பறைச்சீர் தூங்கப்
பருந்து அருந்து உற்ற தானையொடு செருமுனிந்து
அறத்தின் மண்டிய மறப்போர் வேந்தர்
தாமாய்ந் தனரே; குடை துளங்கினவே;
உரைசால் சிறப்பின் முரைசு ஒழிந்தனவே;
பன்னூறடுக்கிய வேறுபடு பைஞ்ஞிலம்
இடங்கெட ஈண்டிய வியன்கட் பாசறைக்
களங்கொளற்கு உரியோர் இன்றித் தெறுவர
உடனவீழ்ந் தன்றால் அமரே; பெண்டிரும்
பாசடகு மிசையார், பனிநீர் மூழ்கார்,
மார்பகம் பொருந்தி யாங்கமைந் தனரே;
வாடாப் பூவின் இமையா நாட்டத்து
நாற்ற உணவி னோரும் ஆற்ற
அரும்பெறல் உலகம் நிறைய
விருந்து பெற்றனரால் பொலிக நும்புகழே." (புறம் 62)

மேற்குறித்த போர் நிலையும், தன் கணவனது மார்பகம் தழுவி இவள் மாய்ந்துபோனதும், பிறவும் இதில் குறிக்கப்பட்டுள்ளமை காண்க. இதனால் இவளது கற்பும் காதலும் அற்புத நிலையும் அறியலாகும். தார் = முன் படை. அதாவது முன்னணியில் முன்னேறிவருகின்ற முதற்சேனை. பைஞ்ஞிலம் = கூட்டம்.

நெஞ்சம் எனையொழிந்து நீங்கியதேல் யாரினிமேல்
தஞ்சம் எனக்காவார் சார்ந்து.

தலைவன் நெஞ்சொடு புலந்த நிலை இதனால் கூறப்பட்டது.

1300. வஞ்சி அசோகை வறிதிருந்தாள் நந்தகோன்
கொஞ்சியும் நொந்தான் குமரேசா—அஞ்சியார்
தஞ்சந் தமரல்ல ரேதிலார் தாமுடைய
நெஞ்சந் தமரல் வழி. (௰)

இ—ள்.

குமரேசா! அசோகை புலந்திருந்த பொழுது நந்தகோபன் ஏன் நெஞ்சை இகழ்ந்து நொந்தான்? எனின், தாம் உடைய நெஞ்சம் தமர் அல் வழி ஏதிலார் தஞ்சம் தமர் அல்லர் என்க.

தமர் = தம்மவர்; தம்பால் உரிமையான உறவுடையவர் என்றவாறு. ஏதிலார் = அயலார்.

தஞ்சம் = எளிமை, துணை, ஆதரவு, அடைக்கலம், புகலிடம். தஞ்சம் என்னும் சொல் முதலில் எளிமை என்பதை உணர்த்தி

வந்தது. பின்பு பற்றுக்கோடு, புகலிடம், முதலியவற்றைக் குறித்து வரலாயது. "தஞ்சமே எளிமை என்ப தருபற்றுக் கோடுமாமே" என்பது நிகண்டு. "தஞ்சம் எளியன் பகைக்கு" (குறள் 863) என்புழி எளிமை மேல் வந்துள்ளமை காண்க. "தஞ்சம் அருளாய் நீயே" (ஐங்குறுநூறு 50), "தஞ்சம் இல்லை நின் சரணமே சரண்" (இராமா, அகலிகை 20); "தஞ்சம் நற்றுணைவனை தவறிலாப்புகழான்" (இராமா, வீபிடணன் 144), "தாம் பிழை செய்தாரேனும் தஞ்சம் என்றடைந்தோர் தம்மை, நாம் பிழை செய்யலாமோ?" (இராமா, ஒற்றுக்கேள்வி 28), "தஞ்சம் என்றுணர்ந்த வீரர் தனிமையிற் சாதல் நன்றே" (இராமா, மூலபலம 47).

இவற்றுள் தஞ்சம் பற்றுக்கோட்டை உணர்த்தி நிற்றலறிக.

தஞ்சம் தமர் அல்லர் ஏதிலார் என்பதற்கு எளிமையுற்றவிடத்து அயலார் தமராய் நின்று உதவார் என்க. ஏதிலார், தமர் அல்லர்; தஞ்சம்; என்று கொண்டால் அயலார் தமராகார் என்பது எளிதே தெளிவாம் என்று கொள்க.

ஏதிலார் தஞ்சம் அல்லர்; தமர் அல்லர் என்றுகொண்டு, அயலார் ஆபத்தில் துணையாகார்; உறவினர்போல உதவமாட்டார் என்று கொள்க.

தம்முடைய நெஞ்சம் தமக்குத் தமர் ஆய் நின்று உதவாத விடத்து அயலார் ஆதரவாயமர்ந்து உறவாய் ஒருவர்க்கு உதவார் என்பதாம்.

தலைவி புலந்திருந்ததை நினைந்து தன் மனத்தொடு நொந்து தலைவன் உரைத்ததாயிற்று. அவள் யாதும் இணங்காமல் மிகவும் பிணங்கி நிற்ப அவள் மேல் ஆசை மிஞ்சி அலமந்து நின்றவனே தன் நெஞ்சினை இகழ்ந்து இங்ஙனம் புலந்து நின்றான் என்க.

தன்னுடைய மனம் தன் வசமாய் அடங்கி நில்லாமல அவா வியலைந்தமையால் தன்னுடைய நெஞ்சம் துணையல்லை என நெகிழ்ந்து இகழ்ந்தான். ஏதிலார் என்றது காதலியைக் குறிப்பால் இகழ்ந்தவாறு. தனக்கு ஆதரவாகாமல் நோதல் செய்கின்றமையால் அவ்வாறு நொந்து குறித்தான். எண்ணியவாறு காதலியை எய்த

முடியாதபொழுது அவளை எண்ணியுளைகின்ற நெஞ்சை நோக்கிக் காதலர் புண்பாட்டோடு இங்ஙனம் புலம்புவர் என்க.

"வடமலை மிசையோன் கண்ணில் முடவன்
தென்திசை எல்லை விண்புகு பொதியிற்
குருடை நெடுஞ்சுனை நீர்வேட் டாங்கு
வருந்தினை வாழி என்னுள்ளம்! சாரற்
கல்லக வெற்பன மடமகள்
மெல்லியல் வனமுலைத் துயிலுற் றோயே."

வட எல்லையிலுள்ள மேருமலைச்சாரலில் நின்ற குருட்டு முடவன், தென்திசைப் பொதியமலையிலுள்ள சுனை நீரை விரும்பியது போல் அவளது வனமுலைப்போகத்தை விரும்பி வருந்துகின்றாயே இது என்ன மடமை எனத் தன் நெஞ்சை நோக்கி ஒரு தலைவன இதில் புலந்து உரைத்திருத்தல் காண்க.

மனைவி புலந்து நின்றபொழுது தன் மனத்தைக் கணவன் இகழ்ந்துகொள்வன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நந்தகோபன்பால் உணரப்படும்.

## கதை.

ஆயர் குலத்தலைவனாய்க் கோகுலத்திலிருந்து அரசுபுரிந்த நந்தகோபன், அசோதை என்னும் பொற்றொடியை மணந்து ஆர்வ மீதூர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து அதிசுகமாயிருந்தான். நல்ல அறிவும், நயத்தகு சீலமும், இல்லற மாட்சியும் இம்மெல்லியலிடம் இயல்பாக இனிதமைந்திருந்தன. இவள் தரை மன்னுமரமகளின் அரிசமாய்ப் பிறந்திருந்தாள் ஆதலால் சிறந்த வடிவழகோடு விளங்கி நின்றாள். "இமிழ்திரைப்பரவை ஞாலத்து எழில் திகழ் மகளிரேத்தும், அமிழ்துறழ் அலர்மென் சாயல் அசோதை" எனவரும் இதனால் இவளது மாட்சிநிலை யுணருர். இப்பெண்ணரசி கண்ணனைக் கையேந்தி வளர்த்து வருங்கால ஒருநாள் அவன் மண்ணைத் தின்கின்றான் என்று வசுமதி என்னும் தோழிவந்து சொன்னாள். அம்மாயனை விளித்துப்பற்றி உன் வாயைக்காட்டு என இத்தாயவள் கேட்டாள். அவன் வாயைத்திறந்தான்; அண்டங்கள் யாவும் அதனுட்கண்டு இவள் அதிசயித்து அயர்ந்தாள். அன்று இவள் கண்டு வியந்து கருதி மகிழ்ந்தபடியை அடியில் காண்க.

"நங்காய் மண்ணருந்தினையின் குழவியென, இல்லையென நவின்றானைக்
கொங்கார்ந்த செழுங்கமலக் கோதையொருடிகைப்பற்றினள் வாய்காட்டுகெ
அங்கார்ந்த மணிவண்ணன் அம்பவளத் துவர்வாயின் அழகுகாணும் [ன்ன
செங்காந்தள் முகிழ்விரலத் தீங்கிளவி யுலகனைத்தும் தெரியக்கண்டாள்.

விண்கண்டாள்; விண்விளக்கும் வெங்கதிரும் தண்சுடரும் விளங்கக்
கண்டாள்; மண் கண்டாள்; மண்வளைத்த மாகடலும் பேருயர்மால்
வரையும் கண்டாள்; தண்கண்ட வெண்டோட்டுத்தளவமொடு வனங்
கண்டாள்; தனையும் கண்டாள்; பண்கொண்ட வண்டாற்றும் பசுந்
துளவோன் இவனெனவே பரவினாளால். (௨)

முருகொழுகு முகிழ்விரியுமொய்த்துளவோன் மாயையினால் மறைத்த
லோடும், பருகுவனள்போல் நோக்கிப் பழுத்தொழுகும் அன்பின
ளாய்ப் பரவி அன்னை, பொருகளிறு வருக; வளர்போரேறு வருக;
எழிற்பூவை வண்ணன், வருகவெனத் துகிரில் விளை மணிமுத்தம்
கொண்டனனருள் மகிழ்வு பூத்தாள்." (பாகவதம்)

திருவின் செல்வனை இவ்வாறு அருமை மகனாக்கொண்டு, அகமுருகி வந்த இவள்பால் அளவிலின்பங்கொண்டு நந்தன் உள மகிழ்ந்து வந்தான். வருங்கால் ஒருமுறை வடமதுரை மன்னனுக்குத் திறைசெலுத்தும்பொருட்டுப் பரிவாரங்களோடு அவன் படர்ந்து சென்றான். அப்பிரிவிடை நொந்து பெரிதுமலமந்து இவள் மறுகியிருந்தாள். அவன் அங்கிருந்தபடியே பொருளீட்டங்கருதி மறுபுலமடைந்து சிலநாட்கழிந்து மீண்டு வந்து இவளை விழைந் தணைந்து வியந்திருந்தான். பிரிவில் நேர்ந்த பரிபவமெல்லாம் இவளை மருவியவுடனே தீர்ந்ததென மகிழ்ந்து புகழ்ந்தான்.

"மனைக்கவின் நிறைந்த திருப்பெரு வடிவினள்!
உயிரவைத் துடலம் உழன்றன போல
பெரும்பொருள் ஈட்ட நிற்பிரிந் திறந்து
கொன்முனைல் அஞ்சாக் குழியினர் போகும்
சுடுஞ்சுரந் தந்த கல்லதா வெப்பந்
தேவர் மருந்தும் தென்தமிழ்ச் சுவையும்
என்னுயிர் யானையும் இட்டிடைத் தேங்கிக்
குருவியும் குன்றும் குரும்பையும் வெறுத்த நின்
பெருமுலை முயக்க என் னுளத்தினிற் றேடாமுன்
போயின அனைவினை நோக்கி
இகின எனக்கே அற்புதம் தருமே."

என இவ்வண்ணம் இவளது போக நலனைமகிழ்ந்து பாராட்டி மோகமீக்கூர்ந்து அவன் மூழ்கியிருந்தான். இங்ஙனம் கலந்து களித்து வருங்கால் ஒருமுறை இவள் புலந்து சுளித்தாள். அப் புலவி நிலையில் படிகண்டு அவன் போற்றித் தேற்றினான். இவள்

நேருறுதிருந்தாள்; அவன் மாறி வருந்தினான்; இவளே யே காதலித்து நிற்கின்ற தன் நெஞ்சைக் கடிந்து கொண்டான். ஊடலில் நொந்த காதலர் தாமுடைய நெஞ்சம் தமர் அல்ல எனப்புலந்து கொள்வர் என்பதை உலகம் அவன்பால் உணர்ந்து நின்றது.

கொண்ட மனமே கொடுமைசெயின் கொள்ளாமல்
விண்டவரேன் செய்யார் விரைந்து.

உள்ளம் துணை இல்லை என்பது இதனால் கூறப்பட்டது.

---

இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்.

காதலன் கருதாதிருப்பினும் காதலி அவனைக்கருதியுருகுவள். அவனை நாடியே அவள் உள்ளம் ஓடும். தன் மனம் பறிபோய்த் தனிந்து நிற்பள். அதன் விழைவினை இகழ்வள். பிரிவினையஞ்சிப் பெரிதும் கவல்வள். தனியேயிருந்து தளர்ந்து தவிப்பள். நாணந்துறந்து நாதனை விழைவள். அவனை யாண்டும் இகழாள் அவளையே பயன்னரி அவனும் ஏங்குவன். அவன் உளமுயிரெல்லாம் அவள் வயமாகும் என்பதாம்.

காமவெது நெஞ்சொடு புலத்தல் முற்றிற்று.

---

# 131-ம் அதிகாரம் புலவி.

அஃதாவது தலைவியும் தலைவனும் ஒருவரோடொருவர் உள்ளறுகாதலால் ஊடிக்கொள்ளல். முன்பு உளத்தொடு புலந்து நின்றவர், பின்பு வெளிப்படப் பிணங்கி மொழிப்புரையாடுந்திறங்களை இதில் உணர்த்துகின்றார் ஆதலால் நெஞ்சோடு புலத்தலின் பின் இது வைக்கப்பட்டது.

1301. போந்து சயந்தி புலந்துறுமன் புல்லாமல்
கூர்ந்திருந்தாள் மன்னே குமரேசா—சார்ந்துதான்
புல்லா திராஅப் புலத்தை யவருறூஉம்
அல்லனோய் காண்கம் சிறிது. (க)

இ—ள்.

குமரேசா! காதலன் கன்றுடலோயும்படி சயந்தி ஏன் புலந்திருந்தாள்? எனின், புல்லாது இராப் புலத்தை; அவர் உறும் அல்லல் நோய் சிறிது காண்கம் என்க.

இது, தலைவியை நோக்கித் தோழி சொல்லுகின்றது.

புல்லாது = தழுவாமல். இரா = இருந்து. புலத்தை = புலப்பாயாக. இதில் ஐகாரம் முன்னிலை வினைவிகுதி. இகரவிகுதி பெற்றால் புலத்தி எனவரும். இரா என்பது செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். அது அளபெடுத்துப் புல்லாமைக்கும், புலத்தலுக்கும் இடையே யமர்ந்து அவ் இருப்பின் திறத்தை விளக்கி நின்றது. இனி, இரா என்பதைப் பெயராகக் கொண்டால் இரவிற் புலப்பாய் என்பது கொள்க.

அல்லல் நோய் என்றது காம நோயை. உள்ள நிலைகுலைத்து அல்லல் பல விளைக்கும் ஆதலால் விசேடமாக அல்லல் நோய் என நின்றது. "அல்லல் நோய் செய்தான்கட் சென்றாய்" (நெய்தற் கலி 6) என்புழி இது வந்துள்ளமை யறிக.

காண்கம் = காண்போமாக. பன்மை யுரைக்கும் தன்மைச் சொல்லாகிய அம் விகுதி ஏற்றுக் ககரம் இதில் எதிர்காலம் காட்டி நின்றது. முன்னிலையிலுள்ள தலைவியுடன் தன்னையும் உளப்படுத்திச் சொன்னாள் ஆதலால் பன்மையில் குறித்தாள்.

நாயகனை விரைந்து முயங்காமல் அமர்ந்திருந்து பிணங்குவாயாக; அவரடைகின்ற காமதாபத்தை யாம் சிறிது காண்பேம் என்பதாம்.

தலைவரோடு புலந்துகொள்ளும்படி தலைவிக்குத் தோழி உரைத்தபடி யிது. தலைவியை விழைந்து அவர்படுகின்ற பாட்டை இன்று பார்ப்போம்; கொஞ்சம் கொஞ்சம் பிணங்கி நிமிர்ந்திரு என்பாள் "புல்லாது புலத்தை" என்றாள்.

சிறிது என்றாள் புலவியை அதிகமாக நீளவிடலாகாதென்றும் குறிப்பால். அளவறிந்து புலக்க என்பது கருத்து.

புலவியானது கலவிக்குத் தடையாய்க் குறித்து நிற்கும் ஆகலால் அதனைத் தலைவியர் கைக்கொண்டபொழுது தலைவர்கள் இடம் பெறாமல் தவித்து நிற்பர்; அந்நிலை காமக்காட்சியாய்க் களிப்பை விளைக்கும் ஆதலால் "அவருறும் அல்லல் நோய் காண்கம்" என உள்ளம் கொள்ள உணர்த்தி நின்றாள்.

"மலைவீ ழருவியும் மின்னிவேய்ந்த கண்ணுமே
சலவித் தாதாகிய காமக்கை காய்த்திப்
புலவிப்படை பயிலப் புல்லெய்த கோலம்
பலவித் தூக்கம் ஒளிர்க்கத் தக்கின்ற." (சீவகசிந்தாமணி)

புலவியைப் போர்ப்படையாக இதில் குறித்திருத்தலறிக. பூவம்பாது காமன் அம்புகளை. இதனால் புலவி, காமநோயை விளைவிக்குங் கலவியின்பத்துக்குங் கிளர் காரணமாகும்.

காதலன் ஆவல் கொண்டு அலமரும்படி காதலி ஊடலை மேற்கொண்டு உறைந்திருப்பாள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சயந்தியால் உணரப்படும்.

கதை.

சயந்தி என்பவள் சமந்து என்னும் சூரியகுலத்து அரசனுடைய அருமைத் திருமகள். வடிவழகிலும் கலையறிவிலும் இவள் தலைசிறந்தவள். அருந்ததிபோல் சிறந்தவள். ஆரா அமிர்தம் அவயவம் பெற்றனைய சீராள் எனச் செவ்வியிருந்து தெய்வப் பதுமைபோல் சிறந்திருந்த இவளது திவ்விய நிலையை வினவியறிந்து சுகோத்திரன் என்னும் அரசிளங் குமரன் ஆசைமீக் கூர்ந்தான். அவன் புருவு என்னும் சந்திரகுல வேந்தனுடைய அருமைப் புதல்வன். பல கலைகளிலும் வல்லவன். அருந்திறலும் பெருந்தகைமையும் ஒருங்கமையப் பெற்றவன். அக் கோமகன் தன் மாமன் மகள் முதலிய இளமங்கையர் எவரையும் விரும்பாமல் இக் குலமகளையே விழைந்து உளமுருகி நின்றான். அந்நிலையினை அறிந்து அறிஞர் சிலர் வந்து சமந்துவிடம் உரைத்தார். அம் மன்னன் மகிழ்ந்து தன் அருமை மகளை அவனுக்கு உரிமையாக மணஞ்செய்து தந்து வரிசை பல கொடுத்துப் பெருமை செய்து விடுத்தான். இப் பெண்ணரசியோடமர்ந்து எண்ணரிய போகங்களை நுகர்ந்து விண்ணவர் என அவ் அண்ணல் விளங்கியிருந்தான். உருவிலும் திருவிலும் நிறைவாய்த் திருந்த இச் சதிபதிகளின் மனைவாழ்க்கை அன்புருவாய்க் கனிந்து இன்பம் சுரந்து இசைமிகுந்திருந்தது. ஒருமுறை இவனுடைய தாயாகிய அமிர்தசேனை என்பவள் ஓர் அரிய முத்துமாலையை நிலமாய என்னும் தன் தோழியிடம் கொடுத்து இவளிடம் சேர்த்துவரும்படி பணித்

புலவியை உப்பாகவும் அமைத்தது கலவி இன்பத்தைச் சுவை செய்து நிற்கும் அதன் இயல்பு நோக்கி. உப்பு, குறைந்தாலும் மிகுந்தாலும் உணவின் சுவை கெடும்; புலவி, இல்லையானாலும் எல்லையின்றி மிகுந்தாலும் காமம் இனிமை கெடும் என்க.

"சினவல் நின் உண்கண் சிவப்பு அருக்குவார்க்குக
கனிகின்றி ஆடல் கொடுங்கு; தனி கனி
கன்றிடின் காமம் கெடூஉம்" (பரிபாடல் 6)

புலவியை மிகுந்தால காம இன்பம் கெடும் எனத் தலைவியைநோக்கி ஒருத்தி இதில் உணர்த்தி யிருத்தலறிக. கன்றுதல் = மிகுதல்.

கலவி யின்பத்திற்குப் புலவி இனிமை செய்யுமாயினும் அது நிலை திரிந்து நின்றால் அக்காம நலத்தின் இயல்பு குன்றி இன்னாமைமிகும் என்க.

"கலவியாகிய காமத்தின் பயன்
புலவி ஆதலால் பொன்னங் கொம்பனார்
உலவு கண்மலர் ஊடற் செவ்வி நோக்கு
இல்லென் பூவினார் இதயம் போழ்ந்ததே." (சிந்தாமணி 3123)

புலவியின் இயல்பைக்குறித்து இஃதுரைத்துள்ளமை காண்க.

நுகர்ச்சிக்குரிய உணவுகளில் உப்பை அளவறிந்து சேர்த்தல் போல் புணர்ச்சிக்குரிய போக நலத்தில் புலவியை அளவோடு கொள்ளவேண்டுமென்றவாறு. அளவு மீறினால் காமம் கச்சிப் போம் ஆதலால் அங்ஙனம் போகாவண்ணம் அமைந்து நிற்கவேண்டும் என்பான் "புலவி உப்பு அமைந்தற்று" என உணர்த்தி நின்றான். "உப்பமை காமந் துப்பின் அவிடம் உரைத்துமன்றோ," (சிந்தாமணி) என்புழி உப்பு வந்துள்ளமை யறிக. "உருவத்துடியிடையார் ஊடல் உப்பாகத், திருவிற் றிகழ்காமத் தேன் பருகி" என்பதும் காண்க.

"இலவின் இதழ்ச்செய்ய வாய்மங்கை! உப்பமைந்திட்டதுபோல்
புலவி; அதுமிகுந்தற்றதும் நீட்டிடல்; பொன மலர்த்தார்
கிலவிடு மாசடைக் கோமேக்கரேசா செடுங்கிரிமேல்
பலவின் புகழ் மன்னர் வன்தாள் பணிந்தனர் பார்த்தருமே."
(கோடீச்சுரக்கோவை)

இது, புலவியைக் கணிக்குறும்படி தலைவியை நோக்கிப் பாங்கி புணர்த்தது. இவ் அருமைத்திருக்குறளை இதில் இடையமைத்துத் தலைவனது நிலையை அன்பு நலங் கனிய உரைத்திருத்தலறிக.

புலமையை அளவறிந்து கொண்டவர் கலையின் அளவின் பயன் துய்ப்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை சத்தியபாமை பால் உணரப்படும்.

## கதை.

சத்தியபாமை என்பவள் சத்திராசித்து என்னும் அரசனுடைய அருமைத் திருமகள். பெயரியல்புக் கேற்ப உயரிய குணங்களும் ஒளிவளர் மேனியு முடையளாய் இவள் எழில் கனிந்திருந்தாள். "தழைத்த தெள்ளமுதின் சாயற் சத்தியபாமை" என எத்திசையும் இவ் வுத்தமியின் இசை பரந்து நின்றது. பாரரசெல்லாம் மணந்துகொள்ள விழைந்து வந்தும் இப் பேரழகி யாரையும் விழையாமல் அகலவிடுத்துக் குமரிருக்கும் திருமகள் போல் தனியமர்ந்திருந்தாள். இவளது எண்ணமும், தகுதியும் நுண்மதியினறிந்து அம்மன்னன் இவளைக் கண்ணனுக்கே கலியாணம் செய்து தந்தான். அந்தப் பழமையை அடியில் பார்க்க.

"முத்தக முறிந்தசெங் கொம்மை முகிழ்முலைப் பவளச் செவ்வாய்க்
கத்திகை கருமென் கூந்தற் கவின்புனை கொடிக்கும் மேற்கட்
சத்திய பாமை தன்னைத் தருமலர்க் கோடி என்ன
வித்தகக் குறையைப்பக் கண்ணனை மறுத்தமன்னன் விழைவிலோர்க்கான். (௧)

குயில்பொரு முரசம் விம்மக் குடவளை அலறி ஆர்ப்பக்
கனிவுறத் தேர்ந்தமரத் தாளிற் கண்ணனுக்கு அழகும் சான்றுகத்
தனியரும் அழகுவாய்ந்த சத்திய பாமை தன்னை
மணிபெரு வினைய நேராளன் மொழிந்தும் வழங்கினன் மன்னே. (௨)

மெய்த்திருள் கனிந்த கூந்தல் மேவழகுக் குழக்குஞ் செவ்வாய்ச்
சத்தியபாமை அம்மென் தடமுலை செருமுகப் புன்மை
நத்தமும் பகலும் விள்ளாள் நண்ணு காமுறு நலத்தன்பா
வித்தகன் உறையு நாளிற் புகுந்தமை விளம்பலுற்றாம்." (௩)

(கூர்மபுராணம்)

இங்ஙனம் இக்குல மகளை மணந்துகொண்டு அரிய இன்பங்களை நுகர்ந்து அக் குலமகன் உவமகிழ்ந்து வந்தான். "நத்தமும் பகலும் விள்ளாள்" என்றதனால் இவளை அவன் நத்தியிருந்தமை புலனாம். நத்தம் — இரவு. சத்தியாக -- புமாலை. இவளது இயலிலும் செயலிலும் அவன் மயல் மிகுந்து கிடந்தான். மாலும் மாலுறும்படி மருவியிருந்த இவளை அருகுநின்றவ ரெவரும் பெரிதும் பணிந்து வரிசை செய்து வந்தார். இவள் கருதியவா

றெல்லாம் உரிமை பெரிது ஒழுகி அவன் உவந்திருந்தான். எங்கும் இவளை இடைபிரியாது உடனழைத்தே சென்றான். ஒருமுறை அச்சுதனை இந்திரன் கண்டு அமராவதி நகருக்கு வந்தருளும் படி அழைத்திருந்தான். அவ்வமயம் இவளையும் அங்கு உடன் கொண்டு போயினான். பொன்னுலக வளங்களையெல்லாம் புரிந்து நோக்கி வருங்கால் பாரிசாதம் என்னும் தெய்வ மலரைக் கண்டு இத்தேவி ஆவல்கொண்டாள். இவள் கருதி நின்றதைக் கண்ணன் அறிந்தான். உடனே அப் பூந்தருவை வேரோடகழ்ந்து, பாரிடைக் கொணர்ந்து, இவளது அந்தப்புரத்தினருகே வைத்து அழகிய சோலையாக்கி, எந்தவேளையும் இங்கிதகளித்திருக்கச் செய்தான்.

"காரிருங் குழற் கலவை மாமயில்
ஒருங்கு சாயலாள் உள்ளம் நோக்கினான்
வேர் பிடுங்கினான் வேரி மாமலர்ப்
பாரிசாதகம் பைம்பொன் மார்பனே. (க)

செய்ய பொற்றருக் கொண்டு செவ்விசால்
தூய பொற்கொழுந் தன்ன மாதொடு
வையம் வேலை சூழ் மல்லல் மாநகர்
வெய்ய புள்ளின்மேல் விமலன் எய்தினான்; (உ)

நாகணைத் துயில் நம்பி வம்புலாம்
போகியுய்த்த பசும் பொன்னங் கற்பகம்
பாகின் மென்மொழிப் பவளச் செய்யவாய்த்
தோகை பாங்குறு சோலை யாக்கினான்." (ங) (பாகவதம்)

இவள்பால் அவன் வைத்திருந்த அன்புரிமையும் ஆர்வ நிலையும் இதனால் இனிது புலனாம். காதல் நலங்கனிய இம் மாதரசியுடன் கலந்து இங்ஙனம் இன்ப நலங்களைத் துய்த்து வருங்கால் கோவியர் முதலிய மற்றைத் தேவிமார்களிடையும் அமயங் கண்டு மேவி ஒத்தொழுகி வருதற்கு உரிமையாளனாய் மிகவும் விரகுடனே ஒழுகி வந்தான்.

"நம்பால் பிரியும் நாகணையான் நம்பால் விழையுமெனை நறிய
ஐம்பால் மகளிரெல்லாரும் அன்பால் மகிழ வாய் வருசிக
கொம்பால் வகுத்த சிறுமருங்குற் குலவாத தடங்கண மடமாதர்
வம்பார் முகிழ்முலை தழுவி மலராள் கொழுநன் வைகினனால்."

இவ்வாறு வைகி வருங்கால் தன்னைவிட உருக்குமணியை அவன் மிகவும் உவந்து போற்றியதாக ஒருநாள் இவள் அறிந்து புலந்து கருத்தைத் தாழிட்டுக் கொண்டாள். இவளது புலவி நிலை

யை யறிந்து அம்மாயன் நேரில் வராமல் சுவர்ணவதி என்னும் தோழியிடம் கூறி வாயில் வேண்டி நின்றான். அவள் உள்ளே புகுந்து இவளருகமர்ந்து உரிமையுடன் பேசி அவன் வருகையை யுணர்த்திப் புலவியை அளவறிந்து செய்யும்படி அதன் இயல்பினை விளக்கினாள். உடனே இவள் புலவியை ஒழித்தாள்; அத்தலைவனோடு கலவியில் களித்தாள். புலவியை நீளவிடாமல் உப்பைப் போல அளவறிந்து கொள்ளின், அளவிலின்பமாம் என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

ஒப்பும் புலவி உயிரின்பா மிக்கதேல்
உப்பமிகுந்த வுணவு.

புலவியை நீளவிடலாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

1303. சேர்ந்து புலந்தார்பால் செல்லுமெனத் தேசிகையன்
சோர்ந்து புலந்தாள் குமரேசா — ஆர்ந்தே
அலந்தாரை யல்லல்நோய் செய்தற்றால் தம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல். (௩)

இ—ள்.

குமரேசா! தன் காதலன் உள்ளே வந்தபொழுது நீர் கள்ளமாகக் கலந்து புலந்தாரைப் போய் விரைந்து புல்லும் என்று தேசிகை ஏன் புலந்து நின்றாள்? எனின், தம்மைப் புலந்தாரைப் புல்லாவிடல் அலந்தாரை அல்லல் நோய் செய்தற்று என்க.

இது, தலைவனை நோக்கித் தலைவி கூறுகின்றது.

அலந்தாரை = ஆசையால் வருந்தினவரை. அலத்தல் — அழுங்கி வருந்தல். "அலந்தவர்க்கணைய் காதல் தக்கதோ?" (நெய்தற்கலி 31) இதில் அலந்தார் வந்துள்ளமை காண்க.

"மலரவிழ்த் தயிலாற்றேன்; வருந்திருன்றால் மருங்காற்றேன்; மங்குல்வானில் நிலவுமிழ்த் தழலாற்றேன்; நிறையாற்றும் பொறையாற்றேன்; நீர்மையோடும் கலைமயிலை மெழுகுக்க கருங்குழலின் பரமாற்றேன் கையனாகி இலைவிதழ்ச் செந்துவர் வாய் விதிர்க்காம் மனையின் வெறித்து இன்ன சொன்னாள்." ஒருத்தி ஈங்கில் அலந்து அலமந்திருந்த நிலையையறிக.

காமநோயால் யாமமும் துயிலாமல் மகளிர் வருந்துவாராதலால் அலந்தார் என அந்நிலை தெரிய உரைத்தான்.

தம்மை என்றது தலைவனை. புலந்தாரை என்றது பரத்தை யரைக் குறிக்குவாறு. அவரோடு இவ்வமயம் அவன் கலந்து மகிழ்ந்து வந்துள்ளமையான் இங்ஙனம் கவன்று குறித்தாள்.

புல்லா விடல் = தழுவாது நீங்குதல்.

தம்மை அவாவி அவலித்துள்ள மகளிரை முயங்கி யருளாமல் இகந்து கைவிடின் விரகதாப மிகுந்து மரணவேதனையாய் அவர் மறுகி யுழல்வ ராதலால் "விடல், நோய் செய்தது போலும்" என்றாள். அப் பாவச் செயலைச் செய்து பெண் பழி கோடல் அறி வுடை ஆண்கட்கு அழகன்று ஆதலால் அங்குப் போயருள்வது நல்லதென்று வாயில் மறுத்து மனம் புழுங்கிக் கூறியவாறிது.

"அப்புற்ற சென்னியன் தில்லையுறாரின் அவருறுநோய்
ஒப்புற்று எழில்நலம் ஊரன் கவர உள்ளும் புறம்பும்
வெப்புற்று வெய்துயிர்ப்புற்றுத் தம்மெல்லணையே துணையாச்
செப்புற்ற கொங்கையர் யாவர்கொல் ஆருயிர் தேய்பவரே?"
(திருக்கோவையார்)

பிரிந்து தனியே பரத்தையர் அலந்து நோவர் என அவர்க்கு இரங்குவாள் போன்று தலைவன் கொடுமையை யிகழ்ந்து தலைவி இதில் புலந்துரைத்துள்ளமை காண்க.

தம்மைக் காணுமல் புலந்துள்ள மகளிரைப் பொருந்தாது விடுதல், வருந்தி நொந்தாரை மேலும் கொடுந் துன்பம் செய்தல் போலும் என்பதாம்.

பிரிந்துபோய்ப் பரத்தையரைப் பொருந்திவந்த தலைமகனோடு தலைமகள் புலந்து மொழிந்த படி யிது.

தங்களுக்கு மிகவும் இனியாராயுள்ள உரிமை மகளிரை மருவாது கைவிட்டு உரிமையில்லாத இங்கு வந்தால், அத் தருண மங்கையர் வருந்தி நோவர் ஆதலால் அங்கே போய் அவரைத் தழுவிப் பேணுவதே தகுதியாம் எனப் பொங்கிப் புலந்து இங்ஙனம் புகன்றாள் என்க.

புலவி மிகுந்துள்ள பொழுது கலவியின்பம் பெறுமல் கடுந் துயரோடு கவன்றிருக்குந் தனது நிலையை அவ் விலை மகளிர்

மேலேற்றி இக் குலமகள் உரை செய்கின்றாள் ஆதலால் "புலந்தாரைப் புல்லாவிடல், அலந்தாரை அல்லல் நோய் செய்தற்று" என்று இருவகையினும் பொருள்படும்படி விரகுட னுரைத்தாள். இதனால் இவளது உள்ளப் பண்பும், உரையாடும் திறனும் உணரலாகும்.

புலவி நீர்ந்து தலைவனை நேர்ந்துகொள்ளும்பொழுது முன்னிலைப்புறமாக இன்னவாறு பல முறைகளைத் தலைவியர் கையாளுவர். சில அடியில் வருவன காண்க.

> "கதிர்த்த நகைமன்னுஞ் சிற்றவ்வை மார்களைக் கண்பிழைப்பித்து
> எதிர்த்தெங்கு நின்றெப் பரிசளித்தான்? இமையோர் இறைஞ்சும்
> மதுத்தங்கிய கொன்றை வார்சடை யீசர் வண்தில்லை நல்லார்
> பொதுத்தம்பலம் கொணர்ந்தோ புதல்வா! எம்மைப் பூசிப்பதே!"
> (திருக்கோவையார்)

இது, புதல்வன்மேல் வைத்துப் புலவி தீர்தல். தலைவன் பரத்தையரிடமிருந்து வந்ததாகத் தலைவி புலந்து நின்றாள். அந்நிலையினையறிந்த அவன் நேரே போனால் காரியம் பலியாதென்று கருதி வாசலில் விளையாடிக் கொண்டிருந்த புதல்வனை வாரியெடுத் தணைத்து முத்தம் கொடுத்து அது வாயிலாக மெல்ல உள்ளே புகுந்தான்; புகவே, அச் செல்ல மகனை அவள் அள்ளி வாங்கி முகத்தோடணைத்து முத்தமிட்டாள்; இடும்பொழுது நாயகன் வாய்த் தம்பல எச்சிலை அதில் கண்டாள்; காணவே, எல்லார்க்கும் பொதுவான எச்சிலைக் கொண்டுவந்து என்மேல் பூசினாய்; உன் சிறிய தாய்மார்களுக்குத் தெரியாமல் இதனை அவர் எப்படிக் கொணர்ந்து தந்தார்? எனத் தனது இனிய புதல்வனை நோக்கி அவள் வினவியிருக்கும் நிலையைப் பார்க்க. சிற்றவ்வைமார் என்றது பரத்தையரை. தனக்குச் சக்களத்திகளாய் இதுபொழுது தன் நாயகனை ஒக்க நுகர்ந்திருக்கும் உரிமை கருதிப் பரிகசித்த படியிது. பிள்ளையைச் சாக்குவைத்து அவன் உள்ளே வந்ததும், இவள், உள்ள புலவி தணிந்து உரையாடி நின்றதும் ஈண்டு உணர்ந்து மகிழ்தற்குரியன. அடியில் வருவதும் காண்க.

> "அடியவர் உளத்திருள் அகற்றலின் விளக்கும்,
> எழுமலை பொடித்தலின் அனல்தெறும் அசனியும்,

கருங்கடல் குடித்தலின் பெருந்தழற் கொழுந்தும்,
மாவுயிர் வௌவலின் தீவிழிக் கூற்றமும்,
என்றூளம் இருத்தலின் இமையந்துணர் உயிரும்,
நச்சினை கொடுத்தலின் நளிர்தரு ஐந்தும்,
கருவழி நீக்கலின் உயர்நிலைக் குருவும்,
இருநிலங் காத்தலின் மதியுடை வேந்தும்,
ஆகிய மணிவேற் சேவலங் கொடியோன்
வானக மங்கையும், தேன்வரை வள்ளியும்,
இருபுரந் தழைத்த திருநிழல் இருக்கும்
ஒருபரங் குன்ற மருவிய கூடற்,
பெருநதிச் சடைமிசைச் சிறுமதி சூடிய
நாயகன் திருவடி நண்ணலர் போலப்
பொய்பல புகன்று, மெய்யொழித்து, இன்பம்
விற்றுணும் சேரி விடாதுறை யூரன்
ஊருணி ஒத்த பொதுவாய்த் தம்பலம்
நீயும் குதட்டினை யாயிற் சேயாய்!
நரம்பெடுத் தமிழும் பெருமுலைத் தீம்பாற்கு
உள்ளமும் தொடாது விள்ளமு தொழுகும்
குதலைவாய் துடிப்பக் குலக்கடை யுணங்கியும்,
மண்ணுறு மணியெனப் பூழிமெய் வாய்த்தும்,
பொலன்மணி விரித்த வுடைமணி இழக்கியும்,
சுட்டியும் சிகையும் சோர்ந்துகண் பனித்தும்,
பறையும் தேரும் பறிபட் டணங்கியும்,
மறிக்கட் பிணைவினர் இழைக்கும் சிற்றிலில்
சென்றழியாது நின்றயர் காண்பன்;
உறுவதும் இப்பயன்; அன்றேல்,
பெறுகுவது என்பால் இன்றுநின்பேறே." (கல்லாடம் 57)

இதுவும் புதல்வனை முன்னிலையாக் கொண்டு புலவி தீர்ந்த தலைவி புகன்றது. குழந்தாய்! ஊருணி நீர்போல் பலர்க்கும் பொதுவா யுள்ள பரத்தையராது வாய்த்தம்பலத்தை உன் தந்தைபோல் நீயும் மென்றனையாயின், பறையும் தேரும் பறிபட்டுச் சிறுமியர் இழைக் கும் சிற்றிலின்கண் நின்று நீ வருந்தி அயர்வாய்! எனது இனிய முலைப்பாலைப் பெற விரும்பின் இனிமேல் அப்படிச் செய்யாதே! எனத் தலைவன் திருந்தி யொழுகும்படி புதல்வனை முன்னிட்டு அவள் சுட்டி யுரைத்திருக்கும் அழகைப் பார்க்க. இதனிடையே முருகக் கடவுளின் அருமை பெருமைகளை அறிந்து மகிழ்க. தம்பலம் குதட்டாயாயின் என் முலைப்பால் நின் பேறும் என்க.

புலந்திருந்த தலைவி கணவன் வரக் கலந்து மகிழ்வள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மைதேசிகைபால்உணரப்படும்.

## கதை.

தேசிகை என்பவள் சீதரன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகள். அதிசய அழகினள். ஒளி தவழ்ந்து எழில் கனிந்திருந்த இவளைக் கவுசிகன் என்னும் அரசிளங் குமரன் விழைந்து வந்து மணந்து கொண்டான். அவன் பெருங் கவினுடையவன். அருங்கலை விநோதன். ஆண்மையில் மேன்மையில் அளவிடலரியவன். இக் குலமகளோடமர்ந்து உலகவின்பங்களை நுகர்ந்தான். "காமன் என்னவே கவின் குடிகொண்ட அம் மன்னன், பூமின் என்னவே பொலிந்தொளிர் இப் பொலங் கொடியை, ஓவரும் பக விரவென ஒருவுத லின்றித், தேவரும் பெற லரியதோர் இன்பிடைத்திளைத்தான்." இங்ஙனம் சிறந்த போகியா யிருந்து அறந் தவாமல் இவன் அரசு புரிந்து வருங்கால் ஒருநாள் பட்டத்து யானைமேலேறிப் பவனிவந்தான். உருவில் சிறந்த இவனை அரச கோலத்தோடு தெருவில் கண்டபொழுது அங்கு மருவிநின்ற மங்கையரனைவரும் மால் கொண்டுருகினர். அடியில்வருவனகாண்க.

"வீரங் குறைவில் மும்மத வேழ மிசை கொண்டு
தாரும் தோளும் பொங்க மதிக்குடை தன் மேலா
மாரன் கரிமேல் வந்தனன் என்ன மணிப்பொற்றேர்
ஊருந் தெருவில் கவுசிக மன்னன் உலா வந்தான். (க)

இயங்கள் தரங்க நெடுங்கடல் என்ன எழுந்தார்ப்ப
உயங்கு மருங்குல் மடந்தையர்பாடி யுடன்போத
வயங்கள் இவர்ந்திள மைந்தர் மருங்கின் அடுத்தேகப்
புயங்கள் அலங்கல் இலங்க விசும்பிறைபோல் வந்தான். (உ)

மாணு நெடுங்கரி மீது புரந்தனில் வந்தானைக்
காணு மடந்தையர் எதும் உணர்ந்திலர் காமத்தால்
நாணும் இழந்தனர்; தூசும் இழந்தனர்; நன்றுகும்
பூணும் இழந்தனர்; ஆவியிழந்திலர் போனார்கள்." (பிரபுலிங்கலீலை)

இதனால் அவனது எழிலும் திருவும் இன்பநலனும் இனிது புலனும். இவ்வளவு திவ்விய நிலையில் செழித்துச் சென்றவன் இடையே ஓர் இளங் குமரியைக் கண்டு உளங் கரைந்தான். அக் கன்னி அக்கமாதேவி என்னும் பெயரினள். அரம்பையரும் விழைந்து நோக்கும் அரும்பெற லுருவினள். நிறையினும் அறி

விலும் நெறியிலும் சிறந்தவள். அவளை விரைவுடன் அழைத்துவரச் செய்து தனியே ஓர் இனிய மணி மாளிகையில் வைத்து வினயமாகப் புகுந்து கலவியை விழைந்து அவன் கனிந்து வேண்டினன். வேண்டியபடியை அடியில் பார்க்க.

"மடந்தையைக் கனிக்கண்டு அங்கி மருவிய அரக்கே போல
உடைந்து நெக்குருகி ஆற்ற வுள்ளமோடு இளம்பூங் கொம்பே!
கடந்திடற் கரிய காமக் கடல் கடந்தேறக் கொங்கைக்
குடம்தரத் திருவுளத்தில் கோடி என்று அரசு இறைஞ்ச."

இவ்வாறு வணங்கி வேண்டியும் அக் குலமகள் யாதும் இணங்காமல் நீதி பல கூறி நெறியே அகன்றாள். காம நோயுழந்து அக் காவலன் கலங்கியிருந்தான். பின்பு ஆவலோடு இவளிடம் வந்தான். அயலொரு குமரியை விழைந்து அவன் அலமந்து வந்ததை இவள் அறிந்து புலந்தாள். பரிந்து பல மொழிந்து அதன்பின் பொருந்தி யின்பளித்தாள். விழைந்தார்பாற் செல்லும் என்று காதலிகள் புலந்து சொல்லிப் பின்பு புல்லியருள்வர் என்பதை உலகம் இவள் பால் உணர்ந்து நின்றது.

கூடிக் குலாவினர் கோபிப்பா ரிங்குநீர்
நாடி வருதல் நவை.

புலந்து புகன்று தலைவி கலந்தருளியமை இதனால் கூறப்பட்டது.

1304. ஊடினர்பாற் போமென் றுருத்து மதயந்தி
கோடிநின்றாள் என்னே குமரேசா—கூடியே
ஊடி யவரை யுணராமை வாடிய
வள்ளி முதலரிந் தற்று. (௪)

இ—ள்.

குமரேசா! தன் கணவன் வந்தபொழுது மதயந்தி ஊடினவரிடம் போம் என்று ஏன் உருத்து மொழிந்தாள்? எனின், ஊடியவரை உணராமை வாடிய வள்ளி முதல் அரிந்தற்று என்க.

உணராமை = உணர்த்தி யருளாமை. அஃதாவது புலந்திருந்தவரை உணர்ந்து தேற்றிப் புணர்ந்து கொள்ளாமை என்க.

வள்ளி = ஒருவகைக் கொடி. காட்டில் இனிதாய்க் கவினுற் றிருக்கும். இது வள்ளிக்கொடி எனப்படும். "வள்ளி இலதை வள்ளிக் கொடியே" (பிங்கலந்தை). "சுள்ளியும் சூரலும் வள்ளியும் மரலும்" (பெருங்கதை); "வள்ளி வென்ற நுண்ணிடை மைம்மலர்த் தடங்கண்ணார்" (சிந்தாமணி). இவற்றுள் வள்ளி வந்துள்ளமை காண்க.

முதல் = வேர், அடி. அரிந்தற்று = அறுத்தாற்போலும். கொடியை மொழிந்தது மகளிர் வடிவை நினைந்து.

"திருவளர் தாமரை, சீர்வளர் காவிகள், ஈசர் தில்லைக்
குருவளர் பூங்குமிழ் கோங்கு பைங்காந்தள் கொண் டோங்கு தெய்வ
மருவளர் மாலையோர் வல்லியின் ஒல்கி அனநடை வாய்ந்து
உருவளர் காமன்றன் வென்றிக் கொடிபோன் றொளிர்கின்றதே."
(திருக்கோவையார்)

வடிவமைதிக்குக் கொடியை இதில் உவமை கூறி யிருத்தலறிக.

மேல், புலந்தாரைப் புல்லா விடல் பொல்லாதென்றாள்; இதில், அக் கொடிய நிலையை எளிதாகத் தெளிய ஓர் உவமையால் உணர்த்துகின்றாள்.

தம்மோடு ஊடிய மகளிரை ஊடலுணர்த்திக் கூடாதொழிதல் வாடிய கொடியை அடியிலே அறுத்தாற்போலும் என்பதாம்.

ஊடியிருந்த தலைவியிடம் வந்து பணிமொழி கூறிப் பிழையைப் பொறுத்தருளும்படி தலைவன் உணர்த்திவேண்டினான்; வேண்டவே, ஈண்டு ஒருவரும் ஊடுவாரில்லை; உங்களோடு கூடிக் களித்து இடையே ஊடியிருக்கும் அவ்வுரிமைக் கிழத்திகளிடம்போய் உவகை உரையாடி உறவு கொண்டாடுங்கள்; இனந் தெரியாமல் இங்கே வந்து ஏன் பரிசு குலைக்கின்றீர்கள்? என்று உள்ளங் கனன்று அவள் உரைத்தபடி யிது.

ஊடியவர் என்று இங்கே குறித்தது பரத்தையரை. அவரை வாடிய கொடியோடு ஒப்ப வைத்தது பெண்மையும் தன்மையும் கருதி. புலவிக் காலத்தில் மலர் இழந்த பூங்கொடிபோல் மகளிர் அணி மலர் துறந்து அலமந்து நிற்பாராதலால் ஊடியவரை வாடிய வள்ளி என்று குறித்தார். வாடுதல் சீர் பெருமையான் நேர்ந்தது.

"புலவியுள் மகளிர் கூந்தற் போதுகுக் கின்றதேபோல்
குலவிய சிறகர்ச் செங்கட் குருகுயில் குடையக் கொம்பர்
நிலவிய தாது பொங்க நீணில மணலிற் போர்த்துக்
கலவியிற் படுத்த காய்பொற் கம்பலம் ஒத்த தன்றே." (சிந்தாமணி 2711)

வசந்த காலத்தில் சோலையில் குயில்கள் மலர்களை யுதிர்த்தது புலவியில் மகளிர் மாலைகளை உதிர்த்தது போலவும், அவ்வுதிர்ந்த பூக்கள் பரந்து கிடந்தது அவர் தம் கலவியில் விரித்த படுக்கை போலவும் இருந்தன என இஃதுணர்த்தி நிற்றலறிக.

"ஊடிய மனத்தினர், உறாத நோக்கினர்
நீடிய உயிர்ப்பினர் நெரித்த நெற்றியர்
கோடவிழ் கோதையும் துறந்த கூந்தலர்
ஆடவ ருயிரென அருகு போயினர்" (இராமாயணம்)

புலவியில் தலைவியர் நிற்கும் நிலையை இதில் காண்க.

நீர் பெறாமல் வாடிய கொடிக்கு நீரை விடாமல் அதன் வேரை அறுத்ததென்றது, தலைவனைப் பெறாது தவித்துள்ள மகளிரைத் தழுவி யருளாமல் வழுவி வந்ததை நோக்கி. தன்னைப்போலவே பிற மகளிரும் பிரிந்து தயங்கி யிருப்பர் என இங்ஙனம் உயங்கி யுரைத்தாள். வாடிய கொடியை அடி அரிந்ததென்றது தலைவனது கொடுமை கூறியவாறு.

"அயல்புறந் தந்த புனிற்றுவளர் பைங்காய்
வயலைச் செங்கொடி கள்வன் அறுக்கும்
கழனி யூரன் மார்பு பலர்க்கு
இழை நெகிழ் செல்ல லாகும் அன்னாய்!" (ஐங்குறுநூறு 25)

"கரந்தையஞ் செறுவில் துணைதுறந்து கள்வன்
வள்ளை மென்கால் அறுக்கும் ஊரன்
எம்மும் பிறரும் அறியான்
இன்ன னாவது எவன் கொல் அன்னாய்?" (ஐங்குறுநூறு 26)

வள்ளி அரிந்தற்று என்ற அடிகள் மொழியை இது அடியொற்றி வந்துள்ளமை காண்க. கள்வன் = நண்டு. வயலிலுள்ள கொடிகளை நண்டு அறுக்கும் ஊரன் என்று தலைவனைக் குறிப்போடு சிறப்பித்து அவன் இல்லியல் மெல்லியலாரை அல்லற்படுத்து நிலை இதில் சொல்லப்பட்டுள்ளமை யறிக. செறு = வயல்.

கணவன் பிரிவால் வாடியிருந்த தலைவி அவன் வந்தவுடன் ஊடி யுரைப்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை மதயந்தியால் உணரப்படும்.

## கதை.

மதயந்தி என்பவள் உருக்குமிகன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகள். பேரழகோடு நல்ல சீர்மையு முடையவள். சித்திரக் கலைகளில் சிறந்தவள். யாழ் வாசிப்பதிலும் வாய்ப் பாட்டிலும் மிகவும் வல்லவள். இவளுடைய சரீர அமைதியும் சாரீர இனிமையும் யாரும் வியந்து பேசும்படி விளங்கியிருந்தன. "செந்திருவை நிகர் எழிலாள்; தெள்ளமிர்தம் என மொழியாள்; கந்தருவ கானமெனக் கனிந்தொழுகும் இசையுடையாள்" என எங்கும் இசை மிகப் பெற்று இன்பங் கனிந்து இனி தமர்ந்திருந்த இவளை அநிருத்தன் விழைந்து நின்றான். கண்ணன் பேரனாய் வண்ண மிக்கிருந்த அவ் அண்ணலுக்கு இப் பெண்ணமிர்தைத் தந்தை பேணிக் கொடுத்தான்.

"செருக்கியவெண் பிறைக் கோட்டுத் திருகுசின மால் யானை
உருக்குமிதன் மகனுயிர்த்த ஓடரிக்கட் செங்கனிவாய்ப்
புரிக்குழலைத் தயங்குமெழில் பொலியும் வலம்புரி பொறித்த
அரக்கெறி தாமரை மலர்க்கை அநிருத்தற்கு அளித்தனனால்," (பாகவதம்)

இவ்வாறு அமைந்துவந்த இவ் இளங் குமரியை விழைந்து மணந்து கொண்டு உயர்ந்த போகங்களை நுகர்ந்து அவன் மகிழ்ந்துவந்தான்.

"புழுகொழுகு கருங்கூந்தற் பொற்கொழுந்தை அழல் சான்றாய்
அழகொழுகு திணி தடந்தோள் அநிருத்தன் வேட்டனனால்"

என இச் சதிபதிகளுடைய மணநிலையும் எழில் நலனும் இன்ப நுகர்ச்சியும் காதலுலகில் மிகுந்த புகழ்ச்சிக்குரியனவாய்ப் பொங்கி யிருந்தன. உழுவலன்போடு தழுவி நுகர்ந்து இருவரும் இங்ஙனம் உவந்துவருங்கால் வாணாசுரனுடைய அருமைத் திருமகளும், பேரழகியுமாகிய உஷை என்பவள் அக் காளையைத் தனியே கவர்ந்துகொண்டு போய்க் கன்னிமாடத்தில் வைத்துக் கலந்து சுகித்துக் களித்திருந்தாள். அவளது இன்பச் சுவையிலாழ்ந்து அவனும் அங்குத் தங்கிக் கிடந்தான். இவள் இங்குத் தனியே தவித்திருந்தாள. நாள் பல கழிந்தபின் அவளை மணந்துகொண்டு

நகரை யடைந்து கணிகையோ டோர் அந்தப்புரத்தில் வைத்து அமர்ந்து களித்து ஒரு நாள் இவளிடம் வந்தான். இவள் உள்ளம் பிணங்கி உருகி நோக்குகின்றாள். இங்கு பருவி பகிர ஒருவரும் இல்லை; உரியவரிடம் போய் உடல் உசாவிக் கூடிக் குலாவுங்கள் என்று கோடி யுரைத்தாள். "ஊடியவரை உணராமை வாடிய வள்ளி முதலரிந் தற்று" என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

பொருந்தினார் நொந்து புலம்ப இவனேன்
வருந்தி யலைகின்றார் வந்து.

தலைவி புலந்து புகலு நிலை இதனால் கூறப்பட்டது.

---

1305. பூவனைய வுண்கட் புலவி புலந்ததையேன்
கோவுவந்து கொண்டான் குமரேசா—மேவு
நலத்தகை நல்லவர்க் கேஎர் புலத்தகை
பூவன்ன கண்ணா ரகத்து. (௫)

இ—ள்.

குமரேசா! புலவி புலந்ததைக் கோவிந்தன் ஏன் உவந்து கொண்டான்? எனின், பூ அன்ன கண்ணார் அகத்துப் புலத்தகை நலத்தகை நல்லவர்க்கு ஏர் என்க.

நலத்தகை = நல்ல குணங்களுடைய. நலத்தகை என்பதற்கு நன்மையையுடைய அழகு என்றார் நச்சினார்க்கினியர் (சிந்தாமணி). நல்லவர் என்றது இங்கே நாயகரை. "நலத்தகை எழிலுண்கண் நல்லார்" (மருதக்கலி 2) எனப் பெண் குறித்து வந்துள்ளமை காண்க.

நல்லவர் என்றது தவறுகள் இல்லாதவர் என்றவாறு, ஏர் = அழகு. அளபெடை இசை நிறைத்து நின்றது.

புலத்தகை = புலவியாகிய பண்பு. அஃதாவது புலந்திருக்குந்தன்மை.

பூ அன்ன கண்ணார் = குவளைமலர்போலும் கண்களையுடையவர். என்றது தலைவியை. அகத்து = நெஞ்சின்கண்.

மலர்போன்ற கண்களையுடைய தலைவியருளத்துப் புலவி நற்குணங்களமைந்த தலைவர்க்கு ஓர் அழகு என்பதாம்.

புலந்திருந்த தலைவியைப் புலவி நீக்கிக் கலந்து மகிழ்ந்த தலைவன் அதனைப் புகழ்ந்து கூறியவாறிது.

பூ அன்ன கண்ணார் என்றதனால் அவருடைய அழகு இளமை அன்பு பண்பாடு முதலிய நலங்களை இவன் எண்ணியுள்ளமை அறியலாகும். புலவியானது பின்பு கலவி நலங்களை மிகுவித்துத் தலைவனுக்கு அலகிலின்பமாயமைந்திருக்கும் ஆதலால் "புலத்தகை, நல்லவர்க்கு ஏர்" என அதன் நலத்தை வியந்து சொல்லினன்.

இனி, பூவன்ன கண்ணாராகிய பரத்தையரிடத்துப் புலவி, நலத்தகை நல்லவராகிய குலமகளிர்க்கு நலமாம் எனவும் இதற்குப் பொருள் காணலாகும். அங்ஙனங்கொண்டால் பரத்தையரிடத்திருந்துபிரிந்து வந்த தலைமகனைத் தலைமகள் குறிப்பா லிகழ்ந்து தழுவியபடியாம்.

கலவியை நுகர்ந்த தலைவன் தலைவியின் புலவியை உவந்து கொள்வன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை புதவியின்பால் உணரப்படும்.

## கதை.

புதவி என்பவள் விஜயதேசத்து அரசனாகிய கோவிந்தனுடைய அருமைத் திரு மனைவி. மகா பதிவிரதை. நல்ல ரூபவதி. சுதாமன் என்னும் குறுநில மன்னனுடைய அருமைப் புதல்வி. இக் குலமகளை முதலில் அவன் பொழிலிடைக் கண்டு கழிபெருங் காதலோடு கரைந்து நின்றான். இவளும் அவனை விழைந்து நோக்கினாள். இவளது விழியழகி லீடுபட்டு அழலிடைப்பட்ட மெழுகு போல் உளமிக வுருகி அளவறிந் தெழுந்து விழைவொடு நிமிர்ந்தான்.

"ஆற்றலுடைவெங் கொடுங் கூற்றும் அலைவாய்விடமும் கொலை கற்ப
மாற்றம் புகல்வ போலிமையா வுயிர்மேல் நடக்கும் வரிநெடுங்கட்
கோற்றேன் குதலைப் பேதையொடுந் தமியேனுள்ளக் குறையனைத்தும்
சாற்றிப், பொன்னஞ் சுணங்கணிந்த தடமாமுலைமேல் தழுவுதுமே.'

என்றபடி இங்ஙனம் இவளது உளவு தெளிந்து அவன்விழைவுமிகுந்தான். தெய்வாங்கூட்ட எய்திமகிழ்ந்த அவன்பின்புஉலகறியமணந்து இணை பிரியாமல் இவளோடமர்ந்து இன்புற்று வந்தான். அரசியல் முறையில் அவன் பெரிய நிபுணன். தனது மைத்துனனாகிய சச்சந்தனுடைய அரசைக் கட்டியங்காரன் அபகரித்துக் கொண்டமையால், அம் மன்னன் மகனும் தனக்கு அருமை மருமகனுமாகிய

சீவகன் அரசிழந்து அலைந்து பருவம் நிறைந்தபின் இவளிடம் வந்தான். அவனைக் கண்டவுடனே உள்ளமுருகி அள்ளியணைத்து விழிநீர் சிந்தி வெய்துயிர்த்து நின்றாள். நின்ற நிலையை அடியில் பார்க்க.

> "பொன்னங் குவட்டிற் பொலிவெய்தித் திரண்ட திண்டோள்
> மன்னன் மகிழ்ந்து மருமானை விடாது புல்லித்
> தன்னன்பு கூரத் தடந்தாமரைச் செங்கண் முத்தம்
> மின்னும் மணிப்பூண் விரைமார்பம் நனைப்ப நின்றான்."

இதனால் இவனது அழகும் திறலும் அன்பும் பண்பும் அறிய லாகும். இன்னவாறு தழுவிக்கொண்டுபோய் அவனை அரண்மனையி லிருத்திப் பகைவனை வென்று அரசுபெறத் துணிந்து, தன் அரசினைப் பருவம் நிரம்பாத தன் மகனிடம் தந்து விரதுடன் எழுந்தான். அன்று இவன் எழுந்தபடியை அடியில் காண்க.

> "உலந்தநாளவர்க்குத் தோன்றா தொளிக்கு மீன் குளிக்கும் கற்பிற்
> புலந்தவேல் நெடுங்கட் செவ்வாய்ப் புதவி நாட் பயந்த நம்பி
> சிலம்புநீர்க் கடலந் தானைச் சீதத்தந்த அரசு நாட்டிக்
> குலந்தரு கொற்றவேலான் கொடிநகர்காக்க என்றான்." (சிந்தாமணி)

இதில், இக் குலமகளைக் குறித்திருக்கும் நிலைமையை ஊன்றி நோக்குக. மீன் என்றது அருந்ததியை. மரண காலம் நெருங் கினவர்க்கு அருந்ததி நட்சத்திரம் கண்ணுக்குத் தெரியாது ஆதலால் "உலந்த நாளவர்க்குத் தோன்றாது ஒளிக்கு மீன்" என்றான். தெய்வக் கற்பினளாகிய அவ் அருந்ததியும் தோற்கும் கற்பினை யுடையாள் என இப் பொற்புடையாளை அவன் உளங் கனிந்து உரைத்திருத்தலறிக. இதனால் இவளது அருமையும், பெருமையும், இவள்பால் அவன் வைத்துள்ள அன்பும் உரிமையும் நன்கு உணர லாகும். இவளைப் பிரிந்து சென்று, அமர்புரிந்து பகையை வென்று, அரசை மருமகனுக்குத் தந்து மீண்டுவந்தான். இவள் விழைந்து தழுவிமகிழ்ந்துகொண்டாள். அவன்குறிப்புணர்ந்துவிருப்புறநடந்து குலம்புரி கொள்கையோடு நலம்புரிந்து வந்தாள். பொறையிலும் நிறையிலும் பொற்பிலும் சிறந்து அற்புத நிலையளாய் அமர்ந் திருந்தாளாதலால் பிருதிவிசுந்தரி எனப் பிறிதொரு பெயரும் இவள் பெற்று நின்றாள். இக் குலமகளோடமர்ந்து பலவகை நலங்களையுமடைந்து அத் தலைமகன் உளமகிழ்ந்து வந்தான். இடை

யிடையே புலந்திருந்தபோதெல்லாம் அளவறிந்து கலந்து களித்து அளவிலின்பங்களை அவளுக்கு இவள் அளித்துவந்தாள். இவளது புலவி நலனை விழைந்து பலமுறையும் அவன் புகழ்ந்து மகிழ்ந்தான். பூவன்ன கண்ணுறைதத்துப் புலவி தலைவர்க்கு அழகாம் என்பதை உலகம் காண அவன் உணர்த்தி நின்றான்.

இக்கனைய மென்சொல் லிவள்புலவி ஆன்பாலில்
அக்காரஞ் சேர்ந்தற் றமைந்து.

புலவியால் கலவியின்ப மிகும் என்பது இதனுல் கூறப்பட்டது.

1306. இல்போன் விசயனோன் சித்ராங்கி செய்துனியைக்
கொண்டான் உவந்து குமரேசா—கொண்ட
துனியும் புலவியும் இல்லாயிற் காமம்
கனியும் கருக்காயு மற்று. (சு)

இ—ள்.

குமரேசா! சித்திராங்கதை துனி கொண்டபொழுது விசயன் ஏன் உளமுவந்து கொண்டான்? எனின், துனியும் புலவியும் இல்லாயின் காமம் கனியும் கருக்காயும் அற்று என்க.

துனி = பெரும் பிணக்கு. புலவி = சிறு பிணக்கு. காதல் நிலையில் கதித்தெழுகின்ற உள்ளப் பிணக்கு ஊடல் ஆகும். அவ் ஊடல் முதிர்ந்து நீடின் துனியாம்; முதிராது நிற்பின் புலவியாம் என்க. "துனி என் கிளவி புலவி நீடுதல்" (பிங்கலந்தை)

"கூடியும் கூட்டமின்மை குலவிய புலவி என்ப;
ஊடலே, நனுகாராகி உரைமறுத் திருத்தலாகும்;
ஆடவர் நீங்க வுள்ளே அடைத்துறல் துனியே என்பர்;
ஊடலைத் தீர்த்தலின்பேர் உணர்த்தலே ஒல்லலாகும்" (சூடாமணி)

"இன்ன துனியும் புலவியும் ஏற்பிக்கும்
தென்னவன் வையைச் சிறப்பு" (பரிபாடல் 20)

துனி, புலவி, ஊடல் என்னும் இவற்றி னியல்புகளை இவை உணர்த்தி நிற்றலறிக. இல்லாயின் = இல்லை ஆனால். என்றது

அவை இருக்கவேண்டிய அவசியத்தை யுணர்த்தி நின்றது.

துனி இல்லாத காமம் கனியையும்; புலவி இல்லாத காமம் கருக்காயையும் போல்வதாம் என்க. கருங்காய் = இளங்காய்.

இங்கே கனி என்றது பருவமுதிர்ந்துபோய்ப் பதனழிந்துள்ள பழத்தை. பருவமுதிராத காயை அடைமொழியால் விளக்கியது போல் கனியைக் குறியாதது என்னை? எனின், கனிந்துபோனது என அப்பெயரே அதன் முதிர்ந்த நிலையைக் காட்டிநிற்றலால் வேறு கூட்டவில்லை என்க. கழிந்து இழிந்து கசிந்துபோன பழமும், கருங்காயும் புளிப்பும் துவர்ப்புமாய் இளிப்புற்றிருக்கும் ஆதலால் அவை, துனியும் புலவியும் இல்லாத காமத்திற்கு ஒப்பாக வந்தன. எனவே, துனியும் புலவியுமுடைய காமம் முறையே இனிய தீங் கனியும், இன்பழமும் போல இன்பமிகுந்திருக்கும் என்பதாயிற்று. அரும்பு, போது, மலர் எனப் பிரிவின்கண் முன்பு (குறள் 1227) மருவி நின்ற காமம், இங்கே புணர்வின்கண் காய், பழம், கனி என அநுபவமாய் இனிதமைந்துள்ள அருமையையும் அழகையும் அறிந்து கொள்க.

மேல், புலவியைப் புகழ்ந்தான்; இதில், அதனோடு துனியையும் விழைந்து வியந்து கூறுகின்றான்.

துனியும் புலவியும் இல்லையாயின் காம இன்பம், கழிந்த கனியும் கருக்காயும்போல் இழிந்திருக்கும் என்பதாம்.

புலந்திருந்த தலைவியைப் புலவி நீக்கிக் கலந்து மகிழ்ந்த தலைவன், அக் கலவி யின்பத்தைப் புகழ்ந்துரைத்த படியிது.

துனியும் புலவியும் காம பாகங்களாய் நின்று அதனை இனிமைப்படுத்தி இன்சுவைத் தாக்கி இன்பமூட்டும் ஆதலால் அச்சுவையை நுகர்ந்து கண்டவன் அவ் இரண்டையும் வியந்து தன்னுள் இங்ஙனம் உவந்து கொண்டான் என்க.

"பனி யிருங் கங்குலும் பகலும் எல்லாம்
முனிவில னுகர்ந்து முறைமுறை பிழையாது
துனியும், புலவியும், ஊடலும், தோற்றிக்
கனிபடு காமம் கலந்த களிப்பொடு
நற்றுணை மகளிர் கால்வரும் வழிபட
இழுமென் செல்வமோ டின்னுயிர் ஓம்பி
ஒழுகுவனன் மாதோ உதயணன்" (பெருங்கதை 4, 17)

துனி, புலவிகளால் காமம் இனிது கனிந்துள்ளதும், அதனை நுகர்ந்து உதயணன் உளமகிழ்ந்திருந்ததும் இதனால் அறிந்து கொள்ளலாம்.

இன்னுத கனியையும், இனியாத காயையும் முன் எண்ணி விலக்கினமையால் காமம் இனிய கனியாக எண்டெண்ண நின்றது. காம இன்பத்தைக் கனி எனக் கருதியது, இன்சுவை மிகுந்து ஐம்புலன்களையும் இன்புறுத்தி நிற்கும் அதன் இயல்பு நோக்கி.

"கன்னிமை கனிந்து முற்றிக் காமுறக் கமழும் காமத்து
இன்னறுங் கனியைத் துய்ப்பான் எந்தலே பிறர்களில்லே;
பொன்னினல் உடையும் கற்பென்று உரைத்தவர் பொய்யைச் சொன்னர்,
இன்னிசை இவற்கலால் என்னெஞ்சிடம் இல்லே என்ருள்." (சிந்தாமணி)

இது, தேசிகப் பாவை என்னும் தாசி, சீவகனைக்கண்டு காதல் கொண்டு சொன்னது. காமத்தை இனிய நறிய கனி என இதில் இசைத்திருக்கலறிக. காம இன்பத்தைக் கனியச்செய்யும் இயல் பினவான துனி புலவிகளை இனியவாக்கொண்டு காதலர் இன்பம் துய்ப்பர் என்பது கருத்து.

"புலவிதானும் ஓர் கலவியை விளைப்பதோர் புலவி;
கலவிதானும் ஓர் புலவியை விளைப்பதோர் கலவி;
குலவுவார்சிலே மதவன் ஐங்கணையொடு குலவி
இலவுவாயுடை இளையவருடையன இவையே." (சூளாமணி)

புலவியும் கலவியும் காமன் ஐங்கணையொடு குலவி இளமங் கையரிடம் இனிதமைந்துள்ளன என இம் உணர்த்தி நிற்றலறிக. புலவிக்கும் கலவிக்கும் உள்ள உரிமை இதனால் இனிது புலனும்.

புலவியை விழைந்து தலைவன் புகழ்ந்துகொள்வன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அருச்சுனன்பால் உணரப்படும்.

## கதை.

அருச்சுனன் தீர்த்தயாத்திரையை மேற்கொண்டு பல தலங் களுக்கும் சென்று நீராடி முடிவில் மதுரையை யடைந்து அங்கோர் பனிமலர்ச் சோலையில் தங்கியிருந்தான். அவ் வமயம் அந் நகர் மன்னன் மகளாகிய சித்திராங்கதை என்பவள் தோழியர் சில

ருடன் அச் சோலையுட் புகுந்து மறைந்து பிரிந்து இவனிருக்கும் இடத்தை அடைந்தாள். அவ் அரசிளங்குமரியைக் கண்டவுடனே இவன் கடுங் காதல் கொண்டான். அவளும் உளமிருகியுருகி விழைவு மீக் கூர்ந்தாள். உழுவலன்புடன் ஒருவரை யொருவர் இங்ஙனம் விழைந்துநின்ற இவ் இருவரும் கந்தருவ முறையில் கலந்து மகிழ்ந் தார். பின்பு தனது மாலையையும் வாளினையும் உரிமையுற யுணர்த்தி அவளை விரருடன் அகல விடுத்து இரவு முழுவதும் இவன் கவலை யோடு கழித்தான்.

"வழுதி திருமகள் கொடுத்த மையலினால் வடிவமுந்தன் மனமும் வேறாய்ப்
பொழுது விடிவளவுமதன் பூசலிலே கருத்தழிந்து பூவாம் வாளி
உழுதகொடும் புண்வழியே யூசிநுழைந் தெனத் தென்றல் ஊர வூர
விழிதுயிலாவிசயனும்அவ்விபுதருடன் துயிலுணர்ந்து விதியுஞ்செய்தான்"

இவ்வாறு விடிந்தெழுந்து விதிமுறைசெய்து பின் அரச சபை யை எய்தினான். பாண்டியன் இவனைக் கண்டவுடனே பெரிது மகிழ்ந்து உளவு தெரிந்து அருகிருத்தித் தனது அருமை மகளை உரிமையொடு மணந்துகொள்ள வேண்டினான். கருதிய செய்தி யதை நினைந்து இவன் கழிபே ருவகைய னானான். உடனே அரச குலங்களை வரவழைத்து வரிசை பல செய்து அருமறை முறையே அப் பெண்ணரசியை இவ் அண்ணலுக்கு மண்ணும் விண்ணும் புகழ மணஞ்செய்து கொடுத்தான். அவ் வதுவைக் கோலத்தை அடியில்வரும் அதிமதுரப் பாடல்களால் அறியலாகும்.

"தெண்டிரைகைதொழுகழலோன்திருமகட்குவதுவையெனச்சேரசோழர்,
எண்டிசையின் முடி வேந்த ரெல்லோரு முனிகணத்தோரெவரு மீண்ட,
அண்டர்பிரானளித்தசிலை ஆண்டகையை அலங்காரமனைத்துஞ்செய்து,
மண்டபமொன்றினிலறுகால் வண்ணமணிப் பலகையின்மேல்
வைத்தாரன்றே.

கோமடந்தை களிகூரப் புகழ்மடந்தை களிகூரக் கொற்ற விந்தை
மாமடந்தை களிகூர மணவினை யொப்பனைக்குரிய மடந்தைமார்கள்
பூமடந்தை யனையாளைப் பூட்டியவெண் டரளமணிப் பூண்களாலே
காமடந்தை நிகராக்கி நாயகன்றன் வலப்பாகம் நண்ணுவித்தார்.

இந்திரனும் சசியுமென, இறையோனும் உமையுமென, எம்பிரானும்
செந்திருவும் எனக், காம தேவு மிரதியும் என வெஞ் சிலைவ லோனும்,
சந்தணிபூண் முலையாளும்,சதுர்மறையோர்சடங்கியற்றத் தழல் சான்றாகத்
திந்துபியின் குலமுழங்கச் சுரிசங்கின் குழாந்தழங்கத் தாலங்கட்டினார்."

(பாரதம்)

இங்ஙனம் சிறந்த வைபவங்களோடு திருமணம் புரிந்து அம் மங்கையுடன் அங்கேயே தங்கி அளவிலின்பங்களை அனுபவித்து வந்தான். ஒத்த நிலை, ஒத்த எழிலுடைய இவரது காம போகங்கள் தேவ போகங்களினும் சிறந்திருந்தன. பெரும் புண்ணியப் பயனால் பொருந்தியனவெனப் புகழ்ந்து போற்ற நின்றன.

"நோக்கியகண் இமையாமல் நோக்கி நோக்கி, நுண்ணியமென்புலவியிலே நொந்து நொந்து, தேக்கியசெங் கனியிதழா ரமுதுண்டுண்டு, சேர்த்திய கைந் நெகிழாமற் சேர்ந்து சேர்ந்து, தூக்கிய பொற் றுலையின் அநுராகம் மேன்மேல் தொடரவரும் பெரும் போகம் துய்த்தார்: முன்னைப், பாக்கியம் வந்திருவருக்கும் பலித்த தல்லால் பாயல் கலந்து இப்படியார் பயன் பெற்றாரே?" (பாரதம், அருச்சுனன் தீர்த்தயாத்திரை 42)

காமச் சுவையிலாழ்ந்து இவர் தோய்ந்து துய்த்திருக்கும் இன்பானுபவங்களை இதில் ஆய்ந்து உய்த்துணர்ந்து கொள்க. உள்ளங் கலந்து, உயிர் கலந்து இங்ஙனம் மருவி மகிழ்ந்து வருங்கால் இடையே இந்திரப்பிரத்தம் போய்வருவதாக அவளைத் தேற்றியிருத்திவிட்டு இத் தேர் விசயன் வேற்றூர் போனான். போனவன் துவாரகையில் போய்ச் சுபத்திரையை மணந்து சுகித்திருந்தான். அச் செய்தி தெரிந்து இவள் செயிர்த்து நின்றாள். திங்கள் சில கழிந்தபின் இவளிடம் வந்தான். "இங்கு என்ன வரவு!" என்று இவள் பொங்கிப் புலந்தாள். அம் மங்கையின் அருமை பெருமைகளை யுரிமையோடுரைத்து, அவளினும் இவளிடம் ஆவலும் மதிப்பும் தனக்கு அதிகமென்று குறித்து இவளைத் தேற்றியழைத்துத் தன் திருநகர் அடைந்தான். உலூபி முதலிய தேவியர்களுடன் முறையே மேவி வந்தான். இவள் முறையில் புலவியும் துனியும் நலே நிறைந்து நின்றன. அங்ஙனம் புலந்திருந்தபோதெல்லாம் குழைந்து வணங்கிப் புகழ்ந்து திருத்தி இவன் கலந்து வந்தான். அப் புலவிகளால் கலவிநலம் கனிந்து மிகுந்து அலகிலின்பமாய் நிலவி நின்றது; ஆதலால் அவற்றைப் புகழ்ந்து கொண்டாடி இக் குலமகன் அவளை உவந்துகொண்டான். துனியும் புலவியும் இல்லாயின் காமம் இனியாது என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

இனிய புலவியிடை இன்பங் கனியும்
துனியும் சுவையாம் சுரந்து..

துனியும் புலவியும் இனியன என்பது இதனால் கூறப்பட்டது.

1307. ஊடிப் பரவை புறத்திருந்தாள் சுந்தரேன்
வோடி யலைந்தார் குமரேசா—நாடிய
ஊடலி லுண்டாங்கோர் துன்பம் புணர்வது
நீடுவ தன்றுகொ லென்று. (எ)

இ—ள்.

குமரேசா! பரவையார் ஊடி யிருந்தபொழுது சுந்தரர் ஏன் துயர் மிகுந்து வாடி நின்றார்? எனின், புணர்வது நீடுவது அன்றுகொல் என்று ஊடலின் ஆங்கு ஓர் துன்பம் உண்டு என்க.

ஆங்கு = அவ்விடத்து. அஃதாவது ஊடியிருக்கும் அப்பொழுது. ஓர் என்றது அத்துன்பத்தின் புதுமை தோன்றநின்றது.

புணர்வது = புணர்ந்து மகிழ்வது. நீடுவது கொல், அன்று கொல் = நீட்டிக்குமோ? நீட்டியாதோ? கோல் என்பது மூன்றும் கூட்டப்பட்டது. ஒன்றிலும் துணிவு தோன்றாமல் நின்றமையால் இங்ஙனம் ஐயம் தோன்றக் குறித்தான்.

மேல், ஊடலானது காமத்தைக் கனியச்செய்து இன்பம் ஊட்டும் என்றார்; இதில், இன்ப நிலையமான அவ் வூடலினும் ஓர் துன்பம் உண்டு என்கின்றார்.

புணர்ந்து கொள்வது விரைந்து கை கூடுமோ? கூடாதோ? என்னும் வேட்கை மிகுதலால் ஊடலிடத்தேயும் ஓர் துன்பம் காதலர்க்கு உண்டாம் என்பதாம்.

ஈண்டுத் துன்பம் என்றது காமக் கவலையை. தலைவி புலவியை மேற்கொண்டிருந்தபொழுது அவளிடம் கலவி இன்பத்தை விழைந்து அளவில் ஆவலோடு தலைவன் பல முறை அலமந்து நின்றான் ஆதலால் அந் நிலையினை இங்ஙனம் உரைத்தான் என்க.

புலந்திருக்குங்கால் கலந்து மகிழ விழைந்தவன் அது விரைந்து கைகூடாமையால் கடுந் தாக முடையவன் இனிய நீரைக்கண்டும் இறங்குதுறை அறியாமல் பறந்து தவிப்பதுபோல் அலந்து துடிப்பன் ஆதலால் புணர்வது நீடுமோ? என்னும் துன்பம் ஊடலில் உண்டு என்றான்.

மகளிர் புலவி தணிந்து விரைவில் இணங்கின் இன்பமும், இணங்காமல் நீணிமிருந்து நின்றபொழுது துன்பமும் மைந்தர்க்கு உண்டாம் என்பது இதனால் உணர நின்றது.

“இனிய வீங்கிய இளமுலை யிவைகளை வளர்த்தார்,
பனியின் மென்மல ரலர்ந்தன வுவகையிற் பயில்வார்;
கனிபவேல் இவர் கடல்விளை அமிர்தெனக் கனிவார்;
முனிபவேல் இவர் அனங்களைங் கணையென முனிவார்.” (சூளாமணி)

காதலிகள் கனிவாராயின் அமிர்தமாவர்; முனியில் நீடின் காம பாணம்போல் துன்புறுத்துவர் என இதில் உணர்த்தியிருத்தல் காண்க. ஊடல் தணியாதபொழுது ஊடுவர் உள்ளம் கூடலை அவாவிக் கோடிவகையில் ஓடி புழுலுவர் என்றவாறு. புலவியானது காதலனைக் கலவியில் விரையச்செய்யும் என்பது கருத்து.

தலைவி ஊடலில் நீடியிருக்குங்கால் தலைவன் கூடலை விழைந்து தவிப்பன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை சுந்தரர்பால் உரைப்படும்.

## கதை.

சுந்தரமூர்த்தி நாயனார் பரவை நாச்சியாரை மணந்து திருவாரூரிலமர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து அகமிக மகிழ்ந்தார். எழுமையும் தொடர்ந்த உழுவலன்பினராய் விழைவு மிகுந்து உளங் கரைய உயிர் கரைய இவ் இளங் குமரியைத் தழுவி யுவந்து இன்ப மீக் கூர்ந்தார். யோக நிலையில் பரம்பொருளோடொன்றிப் பேரின்பந் துய்க்கும் பரம யோகிகள்போல் இப் பரவையாரோடு பதிந்து இரவுபகலறியாது மருவி மகிழ்ந்து உயரின்பங்களைத்துய்த்து அவர் உளங் களித்து நின்றார்.

“தென்னாவ லூர்மன்னன் தேவர்பிரான் திருவருளால்
மின்னாருங் கொடிமருங்குற் பரவையெனு மெல்லியல்தன்
பொன்னாரு முலையோங்கற் புணர்குவடே சார்வாகப்
பன்னாளும் பயில்யோக பரம்பரையின் விரும்பினார்.”

இன்னவாறு இணை பிரியாது இன்பந்துய்த்து வருங்கால் இடையே பிரிந்து பல தலங்களையும் பார்த்து வருவதாக இவளிடம்

விடைபெற்றுச் சென்றார். சென்றவர் திருவொற்றியூரை யடைந்து அங்குச் சங்கிலியார் என்னும் மங்கையை மணந்து மகிழ்ந்திருந்தார். பிரிவாற்றாமையால் மறுகியிருந்த இவள் அவரைத் தேடி யழைத்து வரும்படி சில சேடியரை விடுத்தாள். அவர் நாடி வந்து நடந்துள்ளதை யுரைத்தார். அதனைக் கேட்டவுடனே இவள் உள்ளந் துடித்தாள்; ஆற்றாமைபோய்ச் சீற்றமீதூர்ந்தாள். அவரது இன்ப நலனையும், இயற்றியுள்ள நிலையையும் எண்ணி யெண்ணி ஏங்கி யுண்ணோய் மிகுந்தாள். உறுதுயரோடு உழந்தலமந்தாள். அடியில் வருவது காண்க.

"மென்பூஞ் சயனத்திடைத் துயிலு மேவார்; விழித்தும் இனிதமரார்;
பொன்பூந் தவிசின் மிசையிலிரார்; நில்லார்; செல்லார்; புறம்பு ஒழியார்;
மன்பூவாளி மழைகழியார்; மறவார்; நினையார்; என் செய்வார்?
என்பூடுருக்கும் புலவியோ? பிரிவோ? இரண்டினிடைப் பட்டார்"
(பெரியபுராணம்)

இவளது விரக தாப நிலை இதனால் இனிதறியலாகும். இங்ஙன மறுகி யுழந்து உருகி நொந்து இவள் அலமந்து கிடந்தாள். திங்கள் சில கழிந்தபின் அவர் திரும்பி வந்தடைந்தார். அடைந்தவர் நேரே வர அஞ்சிக் கோயிலில் தங்கினார்; ஆவலில் அழுந்தினார்; இவளை ஆற்றியருளும்படி அறிஞர்சிலரை ஏவினார். போனவர் அருகே நெருங்கவு முடியாமல் அகன்று வந்துரைத்தார். அவர் கவன்று துடித்தார். பரமன் திருமுன் படுகிடக்கையாய்க் கிடந்து தம் உள்ளக் கிடக்கையைப் பூர்த்திசெய்தருளும்படி உருகிப் பாடினார். அன்று அவர் பாடிய படியை அடியில் பார்க்க.

"அடியேன் அங்குத் திருவொற்றி யூரில் நீரே அருள் செய்ய
வடிவேல் ஒண்கட் சங்கிலியை மணஞ்செய் தணைந்த திறமெல்லாம்
கொடியே ரிடையாள் பரவைதான் அறிந்து தன்பால் யான் குறுகின்
முடிவேன் என்று துணிந்திருந்தாள், என்னான் செய்வ தெனமொழிந்து;

நாய னீரே நானுமக்கிங் கடியே னாகில் நீர் எனக்குத்
தாயி னல்ல தோழருமாந் தம்பிரானா ரேயாகில்
ஆய அறிவும் இழந்தழிவேன் அயர்வு நோக்கி அவ்வளவும்
போயிவ் இரவே பரவையுறு புலவி தீர்த்துத் தாரும் என"
(பெரியபுராணம்) (2)

இதனால் அவரது காமதாபமும் கலவியை விழைந்துள்ள நிலையும் இனிது புலனாம். இவளிடம்போய்ப் புலவியைத் தீர்த்

கருளாவழித் தம் உயிர்போய்விடும் என்று முழுமுதற் பரமனிடம் அவர் அழுது வேண்டியபொழுது, அவ் ஆண்டவன் அருள் சுரந்து ஓர் முதிய அந்தணர் வடிவம் கொண்டு இவளுடைய இல்லை நோக்கி மெல்ல வந்தார். அவர் கோவில் வாசலில் அமர்ந்து ஆவலோடுளைந்து வழிமேல் விழி வைத்து உயிர் ஊசலாடி நின்றார். "இவ வளவில் சேரும் கொல்? இவ்வளவில் காணும் கொல்? இவ் வளவில் காதல் இயம்பும் கொல்? இவ்வளவில், தேனூறு செவ் வாய்த் திரு என்பால் உள்ளன்பு. தானூற நேருமோ தான்?" என இவ்வாறு பலபல நினைந்து அளவிலாவலோடு உளமறுகி நின்றார். வந்தவர் வாயிலையடைந்து கதவைத் தட்டினார்; பாங்கியர் திறந்தார். அவர் பரவையாரிடம் நெருங்கினார்; பெரியீர்! வரவு என்? என இவள் வணங்கிக் கேட்டாள். "சுந்தரர் வந்துள்ளார்; இங்கு வர அஞ்சுகின்றார்; இம் முறை பிழை பொறுத்து அவரை வரவழைத்தருளவேண்டும்" என்று அவர் உறவுடனுரைத்தார், புலந்திருந்த இவள் சினந்து நோக்கினாள்; "அநியாயம்செய்து போன அந்த அழகருக்குச் சந்து செய்ய இந்த இரவு நீர் இங்கு வந்தது நம் பெருமைக்கு நிந்தையாகும்; அவர் வந்த வழியே போகலாம்; இனி இங்கு வரலாகாது" என்று வரைந்துரைத்தாள்.

> "இங்கெனைப் பிரிந்து போகி ஒற்றியூர் எய்தி அங்கே
> சங்கிலித் தொடக் குண்டாருக்கு இங்கொரு சார்வுண்டோ? நீர்
> கங்குலின் வந்து சொன்ன காரியம் அழகிது"

என இக் காரிகை கூறிவிட அப் பெருளாளர் மாறிப் போனார். போனவர் "ஆனவரையும் பார்த்தேன் யாதுமுடியவில்லையே" என்று அம்மானவரிடம் உரைத்தார். அவர் மயங்கி விழுந்தார்; தியங்கி எழுந்தார்; உயங்கி யுளைந்து உரிமையோடு உருகி நோக்கினார்; தேவரீரால் ஆகாதது யாவதுண்டு? அடியேனைக் கேவலஞ் செய்கின்றீர்!

> "வானவர் உய்யவேண்டி மறிகடல் நஞ்சை யுண்டீர்!
> தானவர் புரங்கள் வேவ மூவரைத் தவிர்த்தாட் கொண்டீர்!
> நான்மறைச் சிறுவர்க்காகக் காலனைக் காய்ந்து நட்டீர்!
> யான்மிகை யுமக்கின்றானால் என் செய்வீர் போதாதென்றார்."

இங்ஙனம் ஆவலித்தழுவே அத்தேவதேவர் இரங்கி மீளவும் வந்தார். இவள் உளம் திரும்பும்படி திருவுளஞ் செய்தார்; உண்மை தெரிந்து

இவள் உருகி அழுதாள். "வேதமும் முடியுங்காணு தேடரு செய்ய பாதம், யாமியின் இரவில் வீதி படிந்ததே!" என்று பரிந்து புலம்பி காதலரை விரைந்து வரும்படி விழைந்து விடுத்தாள். தூதர் திரும்பி வந்தார்; அவர் வரும்பொழுதே காயா? பழமா? என்று அவர் வாயைத் திறந்தார். "பழந்தான்" என்று உவந்து மொழிந்தார். அவர் உள்ளங் களித்து அந் நள்ளிரவில் துள்ளி வந்தார். இவள் உழுவலன்புடன் தொழுது முன்னின்றாள். அவர் தழுவி மகிழ்ந்தார்; பின்பு பள்ளி யடைந்து அள்ளி யணைந்து இருவருள்ளமும் ஒன்றாய் இன்ப வெள்ளத்தி லாழ்ந்தார்.

"வண்டலாங் குழலார் முன்பு வன்றொண்டர் வந்து கூடக்
கண்டபோ தள்ளம் காதல் வெள்ளத்தின் கரைகாணாது
கொண்டநாண் அச்சங்கூர வணங்க அக் குரிசிலாரும்
தண்டளிர்ச் செங்கை பற்றிக் கொண்டு மாளிகையுட் சார்ந்தார்.

இருவரும் தம்பி ரானார் தாமிடை யாடிச் செய்த
திருவருட் கருணை வெள்ளத் திறத்தினைப் போற்றிச் சிந்தை
மருவிய இன்ப வெள்ளத் தழுந்திய புணர்ச்சி வாய்ப்ப
ஒருவருள் ஒருவர் மேவு நிலைமையில் உயிர் ஒன்றானார்." (பெரியபுராணம்)

இதனால் இவரது அன்புடைமையும், இன்ப நுகர்ச்சியும் நன்கறியலாகும். நாயனார் இங்ஙனம் நயந்து துய்த்து வேள் விருந்தென இவர் விளங்கி யிருந்தார். இவள் ஊடியிருந்தபொழுது அவர் கூடலை விழைந்து நாடி அலமந்ததை வியந்து இடையிடையே நகைத்து மகிழ்ந்தார். இன்பம் கனிவிக்கும் ஊடலிலேயும் ஓர் துன்பம்உண்டுஎன்பதை உலகம் காண அவர் உணர்த்துகின்றார்.

இவள் புலவியில் தன்னிகரில்லாத் தலைவன் நடுநிசியில் தனி நடந்து தூது வந்தருளிய நிலை பல நூல்களிலும் புகழ்ந்து போற்றப்பட்டுள்ளது. சில அடியில்வருவன காண்க.

"நித்தில மாட நீண்மறு குடுத்தமைம்
மாமுகில் தவழும் மணிமதிற் கமலைப்
பெம்மான் அருமைப் பெருமான் ஆயினும்,
நள்ளிருள் யாமத்து நாவலர் பெருமான்
தள்ளாக் காதல் தணித்தற் கம்ம
பரவை வாய்தலிற் பதமலர் சேப்ப
ஒருகால் அல்ல இருகால் நடந்தும்
எளியரின் எளிய ராயினர்
அளியர் போலும் அன்பர்கள் தமக்கே," (திருவாரூர் நான்மணி மாலை).

"ஒருபெரும் புலவன் ஊடல் தீர்ப்பப்
பரவை வாய்தலிற் பாயிருள் நடுநாள்
பாதம் நோவ இருகால் ஒருகால்
தூதிற் சென்ற நின் துணையடிக் கமலத்து
ஒன்றியம்புவல் கேண்மதி பெரும!" (சிதம்பரமும்மணிக்கோவை)

"அரவகல் அல்குலார்பால் ஆசை தீர்ந்தவர்க்கே வீடு
தருவமென்று அவனில் வேதம் சாற்றிய தலைவன் தன்னைப்
பரவை தன் புலவி தீர்ப்பான் கழுதுகண் படுக்கும் பானாள்
இரவினில் தூதுகொண்டோன் இணையடி முடிமேல் வைப்பாம்."
(திருவிளையாடற்புராணம்).

"அடிமை யானவர்க் கருளையும் தன்னையும் உயிரிற்
படியிலா வகை யளிப்பது பாருளோர் அறிய
வடிவின் மாண்டவன் ஒருத்தி தூதென விறை வழங்க
கொடியின் மாலை செய் வன்றொண்டர் அடிமலர் நுவல்வாம்."
(திருவானைக்காப்புராணம்)

"புலியாசைக் கழை சூழ்ந்து தலைவரா வணக்கூடம் புகுந்து பொற்பூண்
தவிராத கொம்பிரண்டு மேவியொரு வல்லி தொடர் தனையை நீவிக்
குவியாரம் புனை பரவை கொங்கை யானையின் பொருட்டுக் குழைதோய்
சங்கச், செவியானைத் தூதுவிட்ட கவியானை தனைத்தினமும் சிந்தை
செய்வாம்." (திருக்குற்றாலத்தலபுராணம்).

"உரவுநீர்த் திரைக்கடலின் மலரயனே டுலகனைத்தும் உந்திபூத்த
கரியமால் வெண்கேழ லுருவாகித் தனித்தேடி யின்னுங் காணு
முருகுலாந் தாமரைத்தாள் சிவப்பூரப் புரமெரித்த முறுவலானைப்
பரவைபால் தூதேகப் பணித்த நாவலன் மலர்த்தாள் பணிதல் செய்வாம்"
(கூர்மபுராணம்)

"எடுத்த பேருல கெங்குமென் னெண்ணெய்போல்
மடுத்த நான் மறை யாதியை ஆதியில்
கொடுத்த காதற் பரவைமுன் தூதென
விடுத்த சுந்தரன் மெய்ப்பதம் போற்றுவாம்." (சுசீந்தரத்தலபுராணம்).

"மங்குல் நிறத் திரு நெடுமால் வளையெயிற்றுப்பெருங்கேழல்வடிவம் தாங்கி
அங்கனில முழுதுமுழு தறிவரிய கமலமல ரடிகள் சேப்பச்
சங்கணிகைக் குதலைமொழிச் சரவை விழிப் பரவையென்பாள் தன்பாலன்
பால், பொங்கிருளிற்சுந்தரனைநடப்பித்தசுந்தரனைப்போற்றல்செய்வாம்."
(சிவராத்திரிப்புராணம்)

"தாது கொண்ட மலர்ச் சுரியற் பரவை என்பாள் தனத்துணைமேல்மயற்
குளிரின் தளர்வுதீர, வேதுகொண்டு விழையு நெறிவிரும்பி மாலும்
விரிஞ்சனுமுன் தொடராத வெளியையாரும், யாதுகொண்டும் அறிவரிதா
யெங்குமான இரும்பொருளை நெருங்குமிருளிரவில்மீளத், தூதுகொண்டார்
தமை எமையாட்கொள்வீர் என்று சொல்லியவர்பதம் புல்லித் தொழு
தல் செய்வாம்." (சேதுபுராணம்)

"ஏயே இவளை விடாதென்பர் தாமவள் நிறைந்திடையும்
நீயேதும் எண்ணலை யென்கொல் பொலமே? விழுநீர்ப் பழனத்
தூயேறு வந்தவர் செங்கயல் வாய்நக தாயர் அழுதலாற்
போயே யிரந்து கொளற் பாலனன் றன் புலவியையே."

(திருவெங்கைக்கோவை)

பரவையார் புலவி தீரும்படி பரமனார் அவரிடம் தூதுபோன படியை ஒருபடியாக இவை உணர்த்தி நிற்றல் அறிக. ஒரு பொருளையே குறித்து வந்திருப்பினும் கவிகளின் கருத்து வேற்றுமைகளையும், அருத்த நலன்களையும் நுனித்துநோக்கிக் கொள்க. புலவி நீட்டத்தில் கலவி வேட்கை எத்தனை கவன்று துடிக்கும், பின்பு உவந்து துய்க்கும், ஊடல் நிலையும் இங்கு நாடிக் கொள்க.

இனிய புலவியிடை யின்றுணை யொன்று
கனியும் கலவி யவா.

ஊடலில் கூடலவா மிகும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1308. பண்டு பதுமா பதிபுலந்த போதுதயன்
கொண்டு நொந்தான் என்னே குமரேசா—கண்டிநின்று
நோதல் எவன்மற்று நொந்தாரென் றஃதறியும்
காதல ரில்லா வழி. (அ)

இ—ள்.

குமரேசா! பதுமாபதி புலந்தபொழுது உதயணன் என் தன்னை நொந்து தவித்து நின்றான்? எனின், நொந்தார் என்று அஃது அறியும் காதலர் இல்லாவழி நோதல் மற்று எவன் என்க.

இது, தலைவன் புலந்துரைக்கின்றது.

நோதல் எவன் = நோகின்றதனால் என்ன பயன்? ஒருபயனும் இல்லை என்பதாம். தன்உள்ளம் வெறுத்துக் கூறிய படியிது.

காமதாபமானது ஆம்வகையறியாமல் நெஞ்சை நிலைகுலைத்து நிற்கும் ஆதலால் நோவுற நேர்ந்தது.

"நோதக் கன்றே காமம்! யாவதும்
நன்றென உணரார் மாட்டும்
சென்றே நிற்கும் பெரும்பேதைத்தே.", (குறுந்தொகை 78)

என்றதனால் காமத்தின் கடுமையும் கொடுமையும்காணலாகும்.

அஃது என்றது நொந்து படுதலாகிய அந்நிலைமை. அறிதலாவது அந்நிலைமையறிந்து இரங்கித் தலையளி செய்தல்.

நொந்தார் என்றதனால் காமதாபத்தால் மனநிலை குலைந்து இவன் மறுகியுழந்தமை அறிய நின்றது.

காதலர் இல்லாவழி = அன்புடையார் இல்லா இடத்து. வழி ஏழனுருபாய் இடப்பொருளுணர்த்தி நின்றது.

நொந்து வாடுகின்றார் என்றது நமது நோயினை அறிந்தருளும் அன்புடையார் அமையாத இடத்தே நாம் நோகின்றதனால் யாதும் பயனில்லை என்பதாம்.

ஊடியிருந்த தலைவியைத் தன்னாலானவரையும் தலைவன் உணர்த்தித் தேற்றினான்; தேற்றியும் அவள் இணங்கியருளாமல் பிணங்கியே நின்றாள்; அவ்வமயம் அவன் வருந்தியுரைத்தபடியிது.

தன் துன்ப நிலைமை அறிந்து உதவும் அன்புடையார் முன்பே ஒருவன் ஆதரிக்கப்பெறுவான்; அன்பில்லாரிடம் யாதும் பெறான் ஆதலால் அவ் ஆதரவற்ற நிலை தனக்கு அமைந்திருப்பதாக இங்ஙனம் புலந்துரைத்தான். நமது நோயினை அறிந்து இரங்கும் அன்பு காதலியிடம் இல்லை; ஆதலால் இனி நாம் நோதலில் பயனில்லை எனத் தன்னுள் நொந்து கூறுகின்றான் ஆதலால் "காதலரில்லா வழி, நோதல் எவன்?" என்றான்.

"புலவியது எவனோ அன்பிலங்கடையே?" (குறுந்தொகை93) என இதனை அடியொற்றி வந்துள்ளதும் அறிக.

"அன்பிலார் முன்போய் அருமொன் றலமருதல்
என்பயனோ துன்பமது" என்பதும் காண்க.

தலைவி ஊடலில் நீடி நின்றால் தலைவன் உளமுடைந்து வருந்துவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை உதயணன்பால் உணரப்படும்.

## கதை.

காசிமன்னனுடைய அருமைப் புதல்வியாகிய பதுமாபதியை உதயணகுமரன் முதலில் கந்தருவ முறையில் கலந்து பின்பு உலகறிய மணந்து உயரின்பங்களை நுகர்ந்து உளமகிழ்ந்திருந்தான்.

உருவமும் அன்பும் பருவமும் பண்பும் நிறையொத்திருந்த இக் காதலர் காம போகத்தில் கருத்தொத்து ஆழ்ந்து இங்குளும் பகலும் கரைதெரியாமல் களித்து வந்தார். ஒரு நாள் இரவு இந்திர விலாசம் என்னும் இனிய மணி மாளிகையிடை எழில்மிகு தவிசில் தனியமர்ந்து அங்கு அமைந்திருந்த அருமைச் சித்திரங்களை உல்லாசமாகப் பார்த்து வருங்கால் ஒரு அழகிய மாணுருவையும், அதனருகே நின்ற இளமங்கையின் ஓவிய நிலையையும் அக் கோமகன் கூர்ந்து நோக்கினான். அவ் ஓவிய உருவினளை ஆவல்கொண்டு நோக்கினமையால் காரியம் வேறு என்று உள்ளம் சினந்து இவள் ஊடிப் போனாள். அவன் உளைந்து நின்று பின் தொடர்ந்து வந்து உண்மையையுணர்த்தி இவளை உரிமையொடு தேற்றினான். இவள் யாதும் இணங்காமல் மோதி முனிந்தாள். "முகந்தடவிச், சிறகு துடைத்துக், கொண்டை திருத்தி, இனிய உணவுகளை நாளும் பருவந் தவறாமல் பரிந்து வைத்துப் பாதுகாத்து வந்தாலும் கோழிச்சேவல் குப்பை கிளைக்கப் போவதுபோல, எப்படி அணைத்து இன்புறுத்தி வந்தாலும் தப்பி ஒளிந்து கள்ளக் காதல் கொள்வது ஆண்களுக்கு இயற்கை போலும்" என எள்ளி மொழிந்து உள்ளம். புலந்து இவள் தள்ளியிருந்தாள். தன்னால் ஆனவரையும் வணங்கி யுணர்த்தியும் இவள் இணங்கி யருளாமையால் அவன் உணங்கி யுளைந்தான். விரக வேதனையால் மறுகியிருந்த அவன் இறுதியில் வேறொருமுகமாத் திரும்பி தன்னையே வெறுத்துக் கொண்டான் தான் வருந்தி அயர்கின்ற நிலையை அறிந்தருளும் அன்பிலாதவர் முன்பு பரிந்து வேண்டியதனால் யாது பயன்? என இவள் காது கேட்கும்படி அவன் ஓதிப் புலம்பினான். "நோந்தார் என்று அஃதறியும் காதல ரில்லாவழி, நோதல் எவன்?" என்பதை உலகம் காண அவன் உணர்த்தி நின்றான். இங்ஙனம் முகங்கொடாமல் ஊடலில் நீடி இவள் அகந்திரிந்து நிற்குங்கால், அருகேயிருந்த சோலையினின்று ஒரு கூகை அலறியது. உடனே இவள் உள்ளந் திணுக்குற்றுத் துள்ளி ஓடிவந்து அவன்மேல் வீழ்ந்து இறுகத் தழுவிக் கொண்டாள். சமயத்தில் உதவியதென அக் கூகையை வாழ்த்தி ஓகை மிகுந்து அவன் உளங் களிகூர்ந்தான். இவர் கூடியிருந்தநிலையும் ஊடி நின்றபடியும் அடியில் வரும் பாடலில் காண்க.

" பைந்தளிர் அறுகும் பலமுத லாகிய
மன்பெரு வாசமொடு நன்பல அடங்கிய
பயில்வினை அமைப்பையொடு படியமைந் திருத்தி
உருவொடு புணர்ந்த உயரணை மீமிசை
5 இருபுடை மருங்கினும் எழில்பட விரீஇ
ஏமச் செவ்வி எளர் நுகரும்
யாமத் தெல்லையுள் மாமறைப் போறை
உலாவு முற்றத்து ஊழ்சென் றூட
நிலாவிரி கதிர்மணி நின்று விளக்கலும்,
10 பள்ளி தன்னுள் வள்ளிதழ்க் கோதையொடு
மன்னிய முறைத்து நன்னலங் கவர்ந்து
வித்தகர் எழுதிய சித்திரக் கொடியின்
மொய்த்தலர் தாரோன் வைத்து நனி நோக்கிக்
கொடியின் மையும் கொடுந்தாள் மறியும்,
15 வடிவமை பார்வை வகுத்த வண்ணமும்
திருத்தகை அன்னால் விரித்து நன்கு உணர்த்தலின்
மெய்பெறு விசேடம் வியந்தனன் இருப்ப;

பதுமாபதி ஊடல்.

கைவளர் மாதர் கனன்று கனன்று எழுதரும்
காம வேகம் தாண்மியப் பெருகப்
20 புலவி நெஞ்சமொடு கலவியுட் கலங்கிப்
புல்லுதை நெகிழப் புணர்வுநனி வேண்டாள்,
மல்லிகைக் கோதை மறித்தனள் இருந்து:
சூட்டுமுகந் திருத்தி, வேட்டு நறு நீரின்
மயிரும் இறகும் செயிரறக் கழீஇக்,
25 கோனெய் பூசித், தூய்மையுள் நிறீஇப்,
பாலும் சோறும் வாலிதின் ஊட்டினும்,
குப்பை கிளைப்பறுக் கோழி போல்வர்
மக்கள் என்று மறியோர் உரைத்ததைக்
கண்ணிற் கண்டேன் என்று கைந்நெரித்து,
30 ஒண்ணுதல் மாதர் உருகெழு சினத்தள்
தம்மால் வந்த தாங்கரும் வெந்நோய்
தம்மை நோவ தல்லது பிறரை
என்னது நோவல் ஏத முடைத்தெனக்
கருங்கேழ் உண்கண் கயலெனப் பிறழ்ந்து,
35 பெருங்கயத் தாமரைப் பெற்றிய வாகத்
திருநுதல் வியர்ப்பெழுந் திருநிலத் திழிதர,
நிலாவுறு திருமுகம் நிரந்துடன் மழுங்கிக்

கருமயி ரிவர்ந்து காண்டகக் குலாஅய்ப்
புருவம் பலகால் புடைபுடை பெயர,
40 முத்துறழ் ஆலி துத்துவன தவழ்ந்து
பொன்னிறங் குரும்பை நன்னிற மழுங்கத்,
தன்னிறங் கரப்பத் தவாஅ வெம்மையொடு
வீழுனல் கடுப்ப வெய்துயிர்த் தலைஇந்,
காதல்செய் கலங்கள் போதொடு போக்கி,
45 அந்தண் சாந்தம் ஆகத்துத் திமிர்ந்து,
பண்புரை கிளவி பையெனத் திரிய;

உதயணன் ஊடல் தீர்வேண்டல்.

கரும்பேர் கிளவி! கதிர் முகை முறுவற்
பெருந்தடங் கண்ணி! பிழைப் பொன் றுணரேன்;
வருந்தல் வேண்டா வாழிய நங்கை! என்று
50 இரந்தன னாகி, ஏற்பக் காட்டிய
இலம்புடை நறுமலர் எழுதுகொடிக் கம்மத்துச்
சிலம்பிடைத் துங்கிய சேவடி அரத்தம்,
காரிரும் குஞ்சி கவின்பெறத் திவள,
அரவுவாய்க் கிடப்பினும் அலர்கதிர்த் தண்மதிக்
55 குருவுங்கதிர் வெப்பம் ஒன்றும் இல்லை;
சிறியோர் செய்த சிறுமையுண் டெனினும்
தரியாது விடாஅர் தாநனி பெரியோர்;
என்பது சொல்லி எழில்வரை மார்பன்
பொன்புனை பாவை புறக் குடை நீவிச்,
60 செங்கையிற் றிருத்திப் பைந்தோ டணிந்து,
கலம்பல திருத்தி, நலம் பாராட்டிச்,
சாந்த மெழுகிச் சாயல் நெகிழ் பறிந்து
பூம்புறங் கவவப் புனைதா ரோதி,

ஊடல் நீடல்.

பூண்ட பூணொடு பொறையொன்று ஆற்றேன்
65 நீண்டன்மின் பெரும! எனத் தீரிய உரைத்து,
மாடத் தகத்தில் ஆடுவினைக் காவினுள்
கொம்பர் மீமிசைக் கூகை வந்து உலாஅய்
வித்தகக் கைவினைச் சத்தி ஏறி
உட்குத்தக வுரைத்தலும் கட்கின் பாவை
70 நெஞ்சந் துட்கென நெடுவிடை நின்ற
காற்றெறி வாழையின் ஆற்ற நடுங்கி

ஊடல் தீர்தல்.

அஞ்சி லோதி ஆகத்து அசைத்தர
அச்ச முயக்கம் நச்சுவனன் விரும்பி
மெல்லியல் மாதரொடு மேவன கிளந்து
75 புல்லியும் தழீஇயும் புணர்ந்தும் பொருந்தியும்" (பெருங்கதை)

பதுமாபதியும், உதயணனும் அரிய மணி மண்டபத்தில் இனிய பொருள்கள் புடைசூழ இன்புற்றிருந்ததும், இடையே இவள் ஊடி நின்றதும், அவன் பிழையொன்றும் செய்திலேன் பொறுத்தருளாக என்று ஊடல் தீர்த்தருளும்படி பணிந்து வேண்டியதும், இவள் தணியாது பிணிர்த்ததும், அவன் தயங்கி நொந்ததும், அவ்வமயம் கோட்டான் குளறியதைக் கேட்டு உள்ளம் பதறித் துள்ளிப் போய் அவன் மார்பில் வீழ்ந்து இவள் புல்லிக்கொண்டதும், அவன் அள்ளி உவந்து பள்ளியணைந்ததும் இதில் சொல்லியுள்ளமை அறிக.

காதல் நிலைகண்டு கண்ணோடா தூடினர்முன்
நோதல்வீண் சாதல் நலம்

புலவி நீடின் தலைவன் தவித்து வாடுவன் என்பது இதனால் கூறப் பட்டது.

1309. ஏற்ற புலவி யினிதென் றுரோகிதனேன்
கோற்றொடிமுன் கொண்டான் குமரேசா — ஊற்றமைந்த
நீரு நிழல தினிதே புலவியும்
வீழுநர் கண்ணே யினிது. (௯)

இ—ள்.

குமரேசா! தன் மனைவி புலந்த பொழுது அப்புலவியை உரோகிதன் ஏன் இனிது என்றான்? எனின், நீரும் நிழலது இனிதே; புலவியும் வீழுநர் கண்ணே இனிது என்க.

வீழுநர் = விரும்புகின்றவர். வீழ்தல் = விரும்பல். இங்கு வீழுநர் என்றது காதலினை. காதலரை விழைந்து கொள்பவர் என்றவாறு. "வீங்கிறை வடுக்கொள வீழுநர்ப் புணர்ந்தவர்" (மருதக்கலி 1) இதில், வீழுநர் உணர்த்தி நிற்றலறிக.

வீழுநர்கண் இனிது என்றதனால் வீழாதார்கண் புலவி இன்னாதென்பதாயிற்று. ஏகாரம் பிரிநிலை; தேற்றமுமாம்.

மேல், தனிநிலைக்காமல் புலவியில் நிலைத்து நின்ற காதலியை நோக்கான்; இதில், அப்புலவியை நோகின்றான்.

நல்ல தண்ணீர் நம் நிழலிலுள்ளதே இனியது; அதுபோல் இனிய புலவியும் அன்புடையாரிடத்தே இன்பமாம் என்பதாம்.

புலவி நீட்டித்து நின்ற தலைவியைக் குறித்துத் தலைவன் புலந்துரைத்தபடியிது.

உயிராதாரமாய நீரும் நிழலில் இருந்ததாயின் இனியதாய்த் தாகந் தீர்க்கும்; வெயிலிலுள்ளதேல் வெம்மையாய்விடும்; அது போல் கலவிக்கு ஆதாரமாயுள்ள புலவியும் காதல் நலங் கனிந்தாரிடத்து அமையின் சிறந்த இன்பமாம்; அல்லார்கண்ணுயின் அல்லலாம் ஆதலால் நீரையும் நிழலையும் எடுத்துக் காட்டினன்.

நீர் புலவிக்கும், நிழல் காதலிக்கும் ஒப்பாம் என்க. நிழலோடமைந்த நீர் உயிர்க்கு இனிதாதல் போல அன்போடமைந்த புலவி கலவிக்கு இன்பமாம் என்றவாறு. இவளிடம் அன்பில்லாமையால் அவ் இன்பப் பேற்றை யான் அடைந்திலேன் எனப் புலவியில் மிகுந்திருந்த தலைவி கேட்கத் தலைவன் இங்ஙனம் புலந்து மொழிந்தான். விரைந்து இணங்கியருள், இன்றேல் துன்பமிகுந்து துடித்தயர்வன் என்பது குறிப்பு.

புலந்திருந்த தலைவி விரைந்து இசையின் தலைவனுக்குமிகுந்த இன்பமாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது இவ்வுண்மை போகவதியால் உணரப்படும்.

### கதை.

போகவதி என்பவள் சித்திரதன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகள். சிறந்த ரூபவதி. உயர்ந்த குணநலங்களுடையவள். "ஆகமெல்லாம் தெய்வ அமிர்தால் அமைந்தனைய போகவதி என்னும் புனிதவதி" என மாகமங்கையரும் மகிழ்ந்து புகழும்படி எழில் நலங்கனிந்து ஒளி மிகுந்திருந்த இவளை மணந்து கொள்ள விழைந்து முடி மன்னர் பலரும் முயன்றுழந்தார். இவள் எவரையும் விரும்பாமல் குமரிருக்கும் இந்திராணிபோல் கன்னிமாடத்தில் தன்னனைய தோழிகள் சூழ மன்னியிருந்தாள்.

இவளது எழில் அமைதியை வினவியறிந்து உரோகிதன் என்னும் அரசிளங்குமரன் உளமிக உருகி விழைவு மீக்கூர்ந்தான். அவன் சத்திய சீலனாகிய அரிச்சந்திரமன்னனுடைய பேரன். உரோகிதாச்சுவனுடைய அருமைத் திருமகன். அருந்திறலாளன். சிறந்த போர்வீரன். வென்றியல்லது வேறொன்று தெரிகிலா விறலோன் எனத் திசைமுக மெங்கணும் இசைமுகந்து நின்றான்.

"பொய்ம்மையும்வெய்யதீமையுமொழித்துப்புலம்புகொண்டினையவெவ்வுலகு
மெய்ம்மையும் அறனும்நிறுத்திடுஞ்செங்கோல்விறல்அரிச்சந்திரன்மைந்தன்
கைம்மையராகி ஒன்னலர் மகளிர் கலுழ்ந்த நீர்ப்பெருக்கில் நெல்வளர்ந்து
செய்ம்முகத் தோங்கச் சிவவு வாள் விதிர்க்கும் உரோகிதாச்சுவன் எனத்
தெரிப்பார்;

கருங்கொடிக் கவலைக் கிழங்ககழ்பரப்பிற் கானவர் களிறுகோட்படுக்கும்
விரிந்தபல் வளங்கூர் காமரு நாடன் உரோகிதாச் சுவனருள் விடலை
திருந்தலர்மடவார்பவளவாய்ச்செம்மைசேல்விழிக்கீய்ந்து,கட்கருமை
பொருந்துநுண் துகிலுக்கு அளித்திடச்சிரிக்கும் புலவுவேல்உரோகிதன்
என்பார்" (கூர்ம புராணம்)

திருந்தலர் = பகைவர். தன்னை எதிர்த்த பகைவருடைய மனைவியரது வாய்ச்சிவப்பைக் கண்ணுக்குத் தந்து, அக்கண்ணின் கருமையைத் துகிலுக்கு அளிப்பன் என்றது அம்மகளிரது கொழுநரை உயிரழித்து அவர்களை விதவைகளாக்கிப் படியிற் புழுதி படக் கிடந்து அழுது அலமரச்செய்வன் என்றவாறு. இதனால் அக்குல மகனது வீரமும், வழிமுறையும், விழுமிய நிலையும் எளிதறியலாகும். இங்ஙனம் சிறந்திருந்த அவன் இவளை மணந்துகொள்ள விழைந்து அருந்தவர் சிலரை இவளது உளந்தெரிந்துவர விடுத்தான். அவர் வந்து இவள் தந்தையிடம் உணர்த்தினர். அத்தலைமகன் நிலைமையை இக்குலமகள் முன்னதாகவே அறிந்து உள்ளுற விழைந்திருந்தாளாதலால் அச்சொல்லைக் கேட்டவுடனே எல்லையில்லாத மகிழ்ச்சியையடைந்து எய்துவதை எதிர் நோக்கி நின்றாள். அந்நிலையினை யறிந்து நெஞ்சங்களித்து அக்குமரனை யழைத்துத் தமரெல்லாம் மகிழ மிகுந்த சிறப்புடன் இக்குமரியை அவனுக்கு மணஞ்செய்து கொடுத்து அரிய வரிசைகள் பலவு நல்கி அம்மன்னன் உரிமையுடன் விடுத்தான். இப்பெண்ணரசியோடமர்ந்து எண்ணரிய போகங்களை நுகர்ந்து அவ்வண்ணல் இன்புற்று வந்தான். தன் பெயரியல்புக்கேற்ப அவனது ஐம்புலன்களுக்கும் இன்பநிலையமாய்

இவள் அன்பாற்றியிருந்தாள். ஒருநாள் இருவரும் வசந்தமாளிகையில் அமர்ந்து உலக நிலையைப் பற்றி உல்லாசமாகப்பேசி வந்தார். வருங்கால் இடையே மகததேசத்து அரசகுமரியாகிய அமிர்தமாபிரபை என்பவள் அழகிலும் கலையிலும் மிகச்சிறந்தவள் என்று அவன் புகழ்ந்துரைத்தான். உடனே இவள் சினந்தகன்றாள். விநோதமாகப் பேசியது வினையாய் முடிந்ததே யென்று அவன் வருந்தியிருந்தான். இரவு வந்தது. பள்ளியறையில் இவள் முகங்கொடாதிருந்ததைக் கண்டு அவன் அருகு நெருங்கி "நெஞ்சில் ஒன்றும் நினையாமல் நான் வஞ்சமின்றிப் பேசினேன்; நீ வஞ்சமாக நினைந்துகொண்டாய்!" என்று நெஞ்சு நெகிழ்ந்து மொழிந்தான். "வெளியிலுள்ளதெல்லாம் அழகும் கலையுமாய்த் தோன்றும்; வீட்டிலிருப்பது வெறுப்பாயிருக்கும்" என்று இவள் வெதும்பி மொழிந்தாள். புலந்து நிற்கும் இவளது நிலைமையறிந்து அவன் யாதும் பேசாமல் அயலிருந்த அமளியில் அமர்ந்துபடுத்தான். துயில்வரவில்லை; உள்ளன்பு இல்லாரோடு நம் உள்ளத்துயரைச் சொல்லி என்பயன்? என்று நெஞ்சோடுபுலந்து மெள்ள எழுந்தான். இவள் துள்ளி வந்து அவனைப் புல்லிக்கொண்டாள். அவன் உள்ளங்களித்துப் புலவியை உவந்து புகழ்ந்தான். "புலவியும் வீழுநர் கண்ணே இனிது" என்பதை உலகம் காண அவன் உணர்த்தி நின்றான்.

> மெல்லியலென் றெண்ணி மிகவிழைந்தேன் மேலூடிக்
> கல்லியலாய் நின்றாள் கடிந்து.

அன்பிலார் புலவி துன்பமாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

**1310.** ஊடிச் சுதாரை யுளைந்தாள் உடையவனேன்
கூட விழைந்தான் குமரேசா—கோடியே
ஊட லுணங்க விடுவாரோ டென்னெஞ்சம்
கூடுவே மென்ப தவா. (ம)

இ—ள்.

**குமரேசா!** சுதாரை ஊடியிருந்த பொழுது தன் அவாவினை அருக்ககீர்த்தி ஏன் இகழ்ந்து நின்றான்? எனின், ஊடல் உணங்க விடுவாரோடு என் நெஞ்சம் கூடுவேம் என்பது அவா என்க.

உணங்க = மெலிந்துவாட. உணங்கல் = மெலிதல், வாடல், வருந்தல். "உள்ளூன் வாடிய உணங்கல் போன்றன" (மணிமேகலை) "பைந்தினை உணங்கல்" (ஐங்குறுநூறு), "பாதவம் புனல் பெறாது உணங்குவன" (கலிங்கத்துப்பரணி), "வதனமும் மனமும் வாயும் உணங்கினான் உயிரொடியாக்கை ஒடுங்கினான்;" (இராமாயணம்). இவற்றுள் உணங்கல் உணர்த்தி நிற்றலறிக.

தலைவி ஊடி நின்ற பொழுது தலைவன் வாடி வருந்துவன் ஆதலால் "உணங்க விடுவார்" என்றான். "ஊடிய மடந்தைபோல உறுசிலை வாங்க வாரா" (சிந்தாமணி 2185). உணர்த்தினும் உணராமல் ஊடி நிற்கு மங்கைக்கு வளைத்தும் வளையாமல் நிமிர்ந்து நின்ற வில்லை இதில் ஒப்புச் சொல்லியிருத்தலறிக. ஊடலில் தலைவி உள்ள நிலை இதனால் இனிது புலனாம்.

மேல், வீழுநர்கண் புலவி இனிதாம் என்றான்; இதில், வீழாரிடம் அது இன்னாதாயிருக்கும் என்பதை உணர்த்துகின்றான்.

ஊடலில் வாடி வருந்த விடுவாரோடு கூடி மகிழ்வேம் என்று என்மனம் அவாவி யுழல்கின்றதென்பதாம்.

புலவியில் தலைநிமிர்ந்து நின்ற தலைவியிடம் கலவியை விழைந்துழன்ற தலைவன் தன் நெஞ்சினை இகழ்ந்து கூறியவாறிது.

வணங்கி வேண்டியும் இணங்கி முயங்காமல் பிணங்கி நீண்டாள் ஆதலால் இவன் உணங்க நேர்ந்தது. இவ்வாறு அருளின்றி அல்லற் படுத்துகின்ற அவளைப் புல்ல விழைந்து உள்ளம் துள்ளி யுழல்கின்றமையால் "நெஞ்சம் கூடுவேம் என்பது அவா" என்றான். இந்த ஆசை வீண் என்பது குறிப்பு. வேண்டாது விடுவாளை விடாது விரும்பி வெட்கமின்றி வீணே அலைகின்றதென நெஞ்சின் மேல் வைத்துத் தன் வேட்கை நிலையை இங்ஙனம் வெளியிட்டான்.

"உணர்த்த உணரா ஒள்ளிழை மாதரைப்
புணர்த்திய இச்சத்துப் பெருக்கத்திற் றலைந்து" (பரிபாடல்7)

ஊடியமனைவியைக் கூடமுயன்ற கொழுநனது ஆசைப்பெருக்கைப் போல வையையில் வெள்ளம் பெருகி விரைந்தது என இதில் குறித்

திருத்தலாக. புணர்த்திய = புணரும் பொருட்டு. இச்சம் = இச்சை. புலவியில் கலவியை அவாவி நின்ற நிலை இதனால் அறியகின்றது.

> "என்னெஞ்சு பிணிக்கொண்ட அஞ்சிலோதி
> பெருநா ணணிந்த சிறுமெல் லாகம்
> ஒருநாள் புணரப் புணரின்,
> அரைநாள் வாழ்க்கையும் வேண்டலென் யானே."

புணர்ச்சியை விரும்பி ஒருவன் புலம்பியிருக்குநிலையை இதில் அறிந்து கொள்க. கலவியை விரும்பி அளவிலாவலோடு உளமுருகி நின்றமையால், புலவி தீராத நிலையில் தலைவன் இங்ஙனம் தன் நெஞ்சொடு புலந்து சொல்லுகிறான். புலந்து சொல்லுதல் மெல்லிய தலைவிக்கே யன்றி, வல்லாளனான தலைவனுக்கு அமையுமோ? எனின், உணர்த்தியும் கேளாமல் அவள் ஊடல் நீடித்த வழி, உள்ளம் வாடி இவன் புலந்து கொள்வன் என்க.

> "உணர்ப்புவயின் வாரா வூடல் தோன்றின்
> புலத்தல்தானே கிழவற்கும் வரையார்" (இறையனார்)

புலந்து சொல்லும் தன்மை தலைவனுக்கும் உண்டு என்பதை இதில் அறிந்து கொள்க. கிழவன் = தலைவன்.

> "இல்லென் றிரவலர்க்கு ஈதல் செய்யாதவன் இல்லம் எனப்
> புல்லென்று வாடிப் புலம்பல் நெஞ்சே! நமக்கு யார் பொருந்தார்
> வில்லொன்று சேர்பொறி வானவன் வாட விழிஞங் கொண்ட
> கொல்லொன்று வாட்படையான் தமிழ் நாடன்ன கோல்வளையே"
> (பாண்டிக்கோவை)

உள்ளம் உணங்கி ஒருவன் இதில் புலந்து புலம்பி யிருக்கு நிலையைப் பார்க்க. ஊடலில் நீடி நிற்கு மனைவியிடம் கூடலை அவாவிக் கொழுநன் அலமருவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுதாரையால் உணரப்படும்.

## கதை.

சுதாரை என்பவள் அருக்ககீர்த்தி என்னும் அரசனுடைய அருமைத் திருமகள். அதிசய அழகினள். இவளது திருமுகம் மதிமண்டலம் போல் ஒளிமிகுந் திருந்தது. "திங்களும் தாரகையும் வில்லும் செழும்புயலும், தங்கொளி சேர் செவ்வாயுமுண்மையால்—பொங்கொளிசேர், மின்னார்வான் காட்டு முகவொளி

யாள் மெய்ம்மையே, தன்னுவா ரில்லாத் தகைமையாள்" எனத் தழைத்திருந்தாள். இவளது எழில் நிலைக்குத் தகுதியான மணமகனை நேரில் தெரிந்து கொள்ள நினைந்து பாரிலுள்ள அரசிளங் குமாரெல்லாரும் ஒருங்கு வந்து சேரும்படி அரசன் இவளுக்குச் சுயம்வரம் குறித்தான். அமிர்தை விளைந்து நின்ற அமரர் குழாம் போல் இவளை விழைந்து விரைந்து வந்து அரசர் குழாங்கள் நிறைந் திருந்தன. நாழிகை வந்தவுடன் தோழிகள் தொழுதுவர இவள் அணியுடன் எழுந்து அரச மண்டபத்தை யடைந்து அதனிடையே திகழ்ந்த மணிமேடையில் இனிதேறி நின்றாள். அனைவரும் களி மீறி நின்றார். அருகு நின்ற சுவேதவல்லி என்னும் தோழி அரசருடைய பெயர் நிலைகளை வரிசையுறச் சொல்லிவர அறிந்து வந்த இவள் இடையே சிறந்திருந்த விசயன் என்னும் அரசிளங் குமாரனை விழைந்து நோக்கி விழி வாங்காமல் கையிலிருந்த மாலையை வாங்கி அவன் கழுத்தில் வீசினாள். வீசவே அச்சபை முழுவதும் உவகை ஓசைகள் எழுந்தன. அதன்பின் அழல்சான்றாக இக்குலமகளை மணந்து அக்கோமகன் மகிழ்ந்தான். அன்று இவள் கண்டு தெளிந்து மாலை சூட்டி மகிழ்ந்தபடியை அடியில்காண்க.

" வரிகழல் மன்னர் என்னும் மணிநெடுங் குன்றமெல்லாம்
சுரிகுழல் மடந்தை என்னும் தொகையம் மஞ்ஞை நோக்கி
எரிகதிர் ஆழி வேந்தன் திருமகன் என்னும் செம்பொன்
விரிகதிர் விலங்கற்றிண்டோட் குவட்டினை விரும்பிற்றன்றே. (1)

மாதரான் சுதாரை வாட்கண் மலரொடு மணிவண்டார்க்கும்
போதுலாம் பிணையல் வீரன் பொன்வரை யகலம் சூழ
ஏதிலா மன்னர் வாட இருபுடைக் கிளைஞ ரெல்லாம்
காதலால் களித்துச் செல்வக் கடி வினை முடிவித்தாரே. (2)

கழல்வலம் புரிந்த நோன்றாட் கடல் வண்ணன் புதல்வன் காமர்
குழல்வலம் புரிந்த கோதை குழை முகம் வியர்ப்ப வேட்டான்
அழல்வலம் புரிந்து சூழ்ந்தாங்கு அத்தொழில் முடித்த பின்னைத்
தழல்வலம் புரிந்த வேலான் தடமுலை வாரி சார்ந்தான்." (சூளாமணி)

இவளது அழகமைதியும், விழுமிய நிலையும், விழைந்து மணந்த விதமும் இதனால் அறிந்து கொளளலாம். அத்தலைமகன் திவிட்டன் என்னு முடி மன்னனுடைய அருமைப் புதல்வன். அழகிலும் திறலிலும் அறிவிலும் சிறந்தவன். உருவம் பருவ முதலிய நலங்

கள் பலவும் ஒருங்கமைந்திருந்த இச்சதிபதிகள் இருவரும் மருங்க கலாமல் மருவிப் பெரும் போகங்களை நுகர்ந்து மகிழ்ந்தார்.

"மாதாந் சாயலாளும், மணிவண்ணன் சிறுவன் தானும்,
ஓத நீர் இன்ப மென்னும் ஒலிகடற் றாங்க ழுழ்க."

என்றபடி இன்பவெள்ளத்தில் ஆழ்ந்து இவர் திளைத்து வருங்கால், மறுபுலத்தில் சுரதமன் என்னும் அரசன் செய்த பெருவேள்விக்கு அழைத்திருந்தமையால் அங்கு அவன் பிரிந்து சென்றான். வேள்வி முடிந்து விரைந்து வந்தான். இவளுடன் கலந்திருந்தான். ஒரு நாள், தான் சென்றிருந்த தேசத்தின் நிலவளங்களையும், மகளிர் எழில் நிலைகளையும், வியந்து பேசினான். உடனே இவள் உளம்புலந்தாள். "வேள்வி பார்க்க வா சென்றது? பார்க்கப் போனது வேறென்று தெரிந்தது" என்று விம்மிப் புலந்து வெம்மையோடு வெய்துயிர்த்திருந்தாள். உண்மையை யுணர்த்தித் தேற்றியும் இவள் இணங்கியருளாமையால் அவன் உணங்கி வருந்தினான். இரவினில் கலவி விழைவு கதித்தெழுந்தபொழுது தனது மனநிலையை இவள் காது கேட்கும்படி அவன் கடிந்து மொழிந்தான். ஊடல் உணங்க விடுவாரோடு என் நெஞ்சம் கூட அவாவுகின்ற தென்பதை உலகம் காண அவன் உணர்த்தினின்றான்.

புலவிமேல் பொங்கி நிற்கும் பொல்லார்பா லுள்ளம்
கலவிமேல் துள்ளும் களித்து.

தலைவன் விழைந்து புலந்த நிலை இதனால் கூறப்பட்டது.

---

## இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

தலைவி புலவியை விரைந்து மேற்கொள்வள். அதனை அளவறிந்து செய்வள். அயலிருந்து வந்த தலைவனை அகலமொழிவள். அவனது செயலை இகழ்வள். அங்ஙனம் புலந்து நின்றதை அவன் உவந்து கொள்வன். துனியும் புலவியும் இனிதென மகிழ்வன். கலவியில் விரைவன். புலவி தணியாது நின்றால் தலைவியை நோவன். அந்நிலையினை இகழ்வன். கலவி யின்பத்தை விழைந்து கடுத்து நிற்பன் என்பதாம்.

௱௩௧-வது புலவி முற்றிற்று.

## 132-ம் அதிகாரம் | புலவி நுணுக்கம்.

அமைந்துவந்த புலவியை விழைந்துள்ள தலைவியும் தலைவனும் ஒருமனையிலிருந்து புலவியில் நுணுகி நிற்கு நிலை. நுணுக்கம்=மதி நுட்பத்தோடு மருவி நிற்பது. புலவி நிலையை வெளிப்படையாக முன்னர் உணர்த்தினார்; இதில், அப்பிணக்கின் நுணுக்கங்களை யுணர்த்துகின்றார் ஆதலால் அதன்பின் இது வைக்கப்பட்டது.

1311. பண்டு பொருந்தேன் பரத்தவென என்கருமை
கொண்டு புலந்தாள் குமரேசா—கண்டு நின்ற
பெண்ணியலா ரெல்லாருங் கண்ணிற் பொதுவுண்பர்
நண்ணேன் பரத்தநின் மார்பு. (க)

இ—ள்.

குமரேசா! தன்னை மருவ வந்த நாயகனைத் தருமசீலை என் பொருந்தேன் என்று புலந்து நின்றாள்? எனின், பரத்த! பெண்ணியலார் எல்லாரும் கண்ணில் பொது உண்பர் நின்மார்பு நண்ணேன் என்க.

இது, தலைவி புலந்து சினந்தது.

பரத்த=பரத்தைமையை யுடையவனே. என்றது தலைவனை. பரத்தையர் பலரை மருவி வந்ததனால் பரத்த என இங்ஙனம் அவனை வசையோடு குறித்தாள். பரத்தையர்=பொதுப்பெண்டிர்.

பெண்ணியலார் என்றது இங்குப் பரத்தையரை. நாணம் நிறை முதலிய எண்ணியல்புகள் யாதுமின்றி வெறும் பெண் இயல்புமட்டும் உடையார் என இகழ்ச்சிக்குறிப்போடு உரைத்தாள் ஆதலால் பெண்ணியலார் என்றாள். அவ்வேசையர் கண்களால் உண்டு கழித்தமையால் அவ்வெச்சிலை நான் நச்சியுண்ணேன் என்பாள் "நின்மார்பு, நண்ணேன்" என்றாள். நண்ணல்=பொருந்தல்.

பரத்தனே! பெண்ணியல் புடையாரெவரும் தம் கண்களால் பொதுவுரிமையாக உன்னை நுகர்கின்றனர்; ஆதலால் நின் மார்பை நான் பொருந்தேன் என்பதாம்.

ஊரிலிருந்தும் நேரில் வாராமல் சிலநாள் அயலமர்ந்துறைந்து ஒரு நாள் உலாப் போந்து மறுநாள் தனது மலரணைக்கு வந்த தலைமகனைத் தலைமகள் புலந்து கூறியவாறிது.

பவனி வந்த பொழுது பலரும் அவனை விரும்பிப் பார்த்தமையால் "கண்ணிற் பொது உண்பர்" என்றாள். மனையில் தனித் தனி முயங்கியும், தெருவில் ஒருங்கே பார்த்துக் களித்தும் தமக்குப் பொதுவுரிமையாகப் பரத்தையர் அநுபவித்து வருகின்ற ஒன்றை நான் தனி யுரிமையாய்த் தழுவியிருப்பது எங்ஙனம்? என அவனது வழு நிலை தெரிய இங்ஙனம் வைது நொந்தாள்.

அவனை நண்ணுமையால் தான் நலிவுற்றிருப்பினும் அவன் பண்ணியுள்ள குறைகளை எண்ணி உள்ளம் ஊடி ஒதுங்கி நின்றாளாதலால் "நண்ணேன் பரத்த!" எனத் திண்ணிதாகத் தெளிந்துக் கூறினாள்.

"எந்நலம் தொலைவ தாயினும்
துன்னலம் பெரும! பிறர்த்தோய்ந்த மார்பே" (ஐங்குறுநூறு 63)

கலந்து கொள்ளாமையால் என் நலம் தொலைவதாயினும் பிறரைத் தோய்ந்து வந்துள்ள உன் மார்பைத் தோயேன் என ஒருத்தி இதில் உரைத்திருத்தல் காண்க. துன்னல் = நெருங்கல்.

"வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇப்
பழனப் பல்புள் இரியக் கழனி
வாங்குசினை மருதத் தூங்கு துணர் உதிரும்
தேர்வண் விராஅன் இருப்பை யன்ன என்
தொல்கவின் தொலையினும் தொலைக; சார
விடேஎன்; விடுக்குவெ னாயிற் கடைஇக்
கவவுக்கை தாங்கும்; மதுகைய குவவுமுலை
சாடிய சாந்தினை வாடிய கோதையை,
ஆகில் கலங்கழீஇ யற்றும்
வாரல் வாழிய கவைஇநின் தோளே." (நற்றிணை 350)

பிரிவினால் எனது அழகு கெடினும், உன்னை என் அருகே நெருங்கவிடேன்; விடினோ என் கைகள் என்னையுமீறி உன்னைத் தழுவிக்கொள்ளும்; நீயோ பரத்தையரின் இளமுலைகள் தோய்ந்த சந்தனத்தையும், அவர் அழுந்த முயங்கியதால் துவண்டு வாடிய மாலையையும் உடையை; ஆதலால் கழித்தெறிந்த மட்கலங்களைத் தீண்டியது போல் தீட்டுடையதாம்; கூடிய அவரோடு போய் கூடிவாழ்க; இங்கு வாரா தொழிக என இதில் ஒரு குலமகள் தன் தலைவனை நோக்கிப் புலந்து புகன்றிருக்கும் நிலையைப்பார்க்க. அருகே நெருங்கவிட்டால் தன் கைகள் விரைந்து தழுவிக்கொள்

ளும் என்றதனால் அவன்பால் இவளுக்குள்ள உள்ளன்பும், ஊடல் நிலையும் உணரநின்றன.

"பரத்தையர்த்தோய்ந்த மார்பம் பத்தினி மகளிர் தீண்டார்;
திருத்தகைத் தன்று தெண்ணீர் ஆடிநீர் வம்மின்! என்ன,
உரைத்தது என் மனத்தி லில்லை; உயர் வரைத் தேனை யுண்பார்
வருந்தும் காஞ்சிரமும், வேம்பும், வாய்க்கொள்வார் யாவர்சொல்லாய்?"
(சிந்தாமணி)

பரத்தையரைத் தோய்ந்ததனால் நம்மைத் தீண்டலாகாது; நீரில் குளித்துப் புனிதமாய் வாரும் என்று ஒருத்தி உரைக்க, நான் அதை நினைத்ததே யில்லை; இனிய தேனை உண்பவர், இன்னாத வேம்பைத் தின்பாரா? என ஒருவன் அன்பு ததும்ப உரையாடிப் புலவி தீர்த்திருக்கும் அழகை இதில் ஆய்ந்து பார்க்க.

"பூட்டுமான் திண்டேர் புடைத்த மறுகெல்லாம்
பாட்டாதல் சான்றநின் மாயப் பரத்தமை
காட்டிய வந்தமை கைப்படுத்தேன் பண்டெலாம்
கேட்டும் அறிவேன்மன் யான்;
தெரிகோதை யந்நல்லாய்! தேறியல் வேண்டும்
பொருகரை வாய்சூழ்ந்த பூமலி வையை
வருபுன லாடத் தவிர்ந்தேன் பெரிதென்னைச்
செய்யா மொழிவது எவன்?
ஓஓ, புனலாடினையெனவும் கேட்டேன்; புனலாங்கே
நீணீர் நெறிகதுப்பு வாரும் அறலாக,
மாணெழில் உண்கண் பிறழுங் கயலாகக்,
கார்மலர் வேய்ந்த கமழ்பூம் பரப்பாக,
நாணுச் சிறையழித்து நன்பகல் வந்த அவ்
வியாணர்ப் புதுப்புனல் ஆடினாய் முன்மாலைப்
பாணன் புணையாகப் புக்கு." (மருதக்கலி 33)

என்னைப் பிரிந்து போய்ப் பரத்தையரைத் தோய்ந்தாய் என்று ஒரு குலமகள் கூற, ஐயோ! இல்லையே; வையையில் நீராட அல்லவா சென்றேன்; செய்யாததைச் சொல்லுகிறாயே! எனத் தலைமகன் பொய் கூற, "ஆமா நீர் ஆடிய நீரை யான் அறிவேன்; அது கண் கை முதலியன கூடிய புதுமை யுடையது" என அதி விநயமாக அவள் மறுத்துரைத்திருக்கும் அருமையை இதில் அறிந்து கொள்க.

சீலமுடையனாய் நெறி வழுவாமல் நின்றொழுகும் தலைமகன் பரத்தையரைச் சேர்ந்தான் என்றால் இழுக்கன்றோ?' எனின், இரா

னைப்போல் ஏக பத்தினி விரதராய் இருக்கும் அதிஉத்தமத் தலைவர் அருமையானவர்; மனைவி பூப்புற்ற சமயத்தும், மகப்பேறடைந்த காலங்களிலும் காமக் கிழத்திகளாய்த் தமக்கே உரித்தாக அமைந்துள்ள குலப் பரத்தையரிடம் தலைவர் கூடியிருந்திருப்பர்; பூப்புத் தோன்றிய மூன்று நாளும் கழிந்து, நான்காம் நாள் முதல் பன்னிரண்டு நாளும் கருவுண்டாகும் காலம் ஆதலால் அவ்வமயம் யாண்டும் அகலாமல் தலைவியோடு அவர் அமர்ந்துறைவர் என்க.

"பூப்பின் புறப்பாடு ஈராறு நாளும்
நீத்தகன்று உறையார் என்மனார் புலவர்
பரத்தையிற் பிரிந்த காலை யான." (தொல், கற்பியல் 46)

"பரத்தையிற் பிரிந்த கிழவோன் மனைவி
பூப்பின் புறப்பாடு ஈராறு நாளும்
நீத்தகன் றுறைதல் அறத்தா றன்றே." (இறையனார் 34)

கற்பினுட் பிரிந்தோன் பரத்தையின் மறுத்தந்து
அப்பொருட் படுப்பினும் வரைநிலை யின்றே." (இறையனார் 44)

பரத்தையரிடமிருந்து வருதலைக் குறித்து இவை விதித்திருத்தலறிக.

"புலத்தலிற் சிறந்தது கற்பே; அதுதான்
இரத்தலும் ஈதலும் இவையுள் வீடாப்
பரத்தையுள் ளதுவே." (பரிபாடல் 9)

மணந்து கொண்டு இல்லறம் நடத்தும் கற்பொழுக்கம் புலவியால் சிறப்புறும்; அப்புலவி, பரத்தையர் பரமாகப் பதிந்து வரும்; என இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

இங்ஙனம் பரத்தையரிடமிருந்து பிரிந்து வந்தவன் சில முறை தலைவிமுன் நேரே வர அஞ்சித் தோழியிடம் வாயில் வேண்டி நிற்பன். அந்நிலையில் மூன்று அடியில் வருவது காண்க.

"செவியிற் கேட்பினும் சொல்லிறந்து வெகுள்வோள்
கண்ணிற் காணின் என்னாகுவள் கொல்?
நறுவீ ஐம்பால் மகளிர் ஆடும்
தைஇத் தண்கயம் போலப்
பலர்படிந் துண்ணுநின் பரத்தை மார்பே." (ஐங்குறுநூறு 84)

இது, பரத்தையர் இல்லிலிருந்து கலவிக்கோலத்தோடு வந்த தலைமகனை நோக்கித் தோழி சொல்லியது. இந்நிலையைக் காதால்

கேட்டாலும் பொருந்த பொங்கும் இயல்பினளாய என் தலைவி, இதைக் கண்ணுறல் கண்டால் என்னாவாளோ? என்றால் யாதும் செய்ய இயலாது; இங்கு நன்றுதானும் என அவன் நளினமாகச் சொல்லியிருக்கும் அருமையைப்பார்க்க. பலர் படிந்து மூழ்கும் படித்துறை போல நின்மார்பு எல்லார்க்கும் பொதுவாயுள்ளதென அவள் குறித்த இது, அழகன் இங்கு உரைத்துள்ளதை அடியொற்றி வந்துள்ளமை காண்க.

விலைமகளைக் கலந்து வந்தாயென்று தலைமகனோடு குலமகள் புலந்து கொள்வாள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அருகிலே பால் உணரப்படும்.

கதை.

அருமிலை என்பவள் சாமந்தன் என்னும் அரசனுடைய அருமைத்திருமகள். பெயர் ரூபவதி. அவளது எழில் நிலைக்குத்தகுதியான மணமகன் இனமுறையில் அமையாமையால் பருவம் எய்தியும் மணவினையை நினையாமல் இனிய தோழிகளுடன் கூடி இவள் தனியமர்ந்திருந்தாள். இங்ஙனம் இருந்து வருங்கால் துர்ச்சயன் என்னும் அரசிளங்குமரன் தலைமதியெனத் தலைசிறந்து நின்றான். அவன் சந்திர குலத்தோன்றல், சர்வாங்கசுந்தரன். "உச்சமுறும் அரம்பையரும் உளமுருகி மயல் கொள்ளத் துர்ச்சயன் ஓர் வேளெனத் துலங்கினான்" என்றபடி விளங்கியிருந்த அவன் இவளை விரும்பி வந்து மணந்து கொண்டான். ஒத்தஎழிலுடைய இருவரும் உழுவலன்புடன் வாழ்ந்திருந்து உயர்ந்த போகங்களைத் துய்த்து மகிழ்ந்தார். செய்குன்றுகளிலமர்ந்தும், பொய்கை நீராடியும், சோலையிலுலாவியும் காலந்தோறும் புதிது புதிதாகச் சாதுரியலீலைகள் புரிந்து இரதியும் மதனும் போல் இணைபிரியாமல் இன்புற்று வந்தார். ஒருமுறை அவன் பிரிந்தகன்று யமுனையாற்றங்கரையில் தனியே உலாவி நிற்குங்கால் அங்கு ஊர்வசி வந்தாள். அப்பேரழகியைக் கண்டவுடன் அவன் பெருமோகங் கொண்டான். அவனது உருவ நலனை நோக்கி அவளும் உருகி இசைந்தாள். மதுவீழ்வண்டு போல் அவளது இன்பச்சுவையில் ஆழ்ந்து களித்துப்பன்னாட் கழிந்தபின் அவன் தன்னகரடைந்தான்.

அடைந்தவன் சமயங்கண்டு அந்தப்புரத்துட்புகுந்தான். அவனது கள்ளவொழுக்கத்தைத் தெள்ளத்தெளிந்து உள்ளம் புலந்திருந்த இவள் மெள்ள வெழுந்து அயல் ஒதுங்கிநின்று அவனைநோக்கிச் சில உரைகள்புகன்றாள். "புல்லிய மெல்லியலைப் புறத்தேவிட்டு இங்கு உள்ளேவந்தது எதற்கோ? முன்றில்வந்து அனுபவித்த ஒன்றை மறந்து நன்றிகொன்றி வரலாமோ? இதுவரை எவ்வழியிருந்ததோ?" என இவ்வாறு வெவ்வுரையாடவும் தன்களவு வெளியாயதே என்று அவன் வெள்கிநின்றான். இவள் உருகி நோக்கி, "வெருவவேண்டாம்; அயலவளை மருவிய அத்தவறு நீங்கிவருக" என்று அவனை அகலவிடுத்தாள். அன்று இவள் உரைத்துவிடுத்த நிலையை அடியில் பார்க்க.

"கற்பருங்கலம் புகுதரு கணவனை வணங்கி
எற்பிரிந்து நீ யெய்வுழிப் படர்ந்தனை? எனலும்,
வெற்பின் வீங்கிய தடம் புயன் வெள்கினனாகி
நிற்ப, மூரல் பூத்து அணங்கனாள் உணர்ந்திவை நிகழ்த்தும்: (க)
ஊடுகின்றிலன்; வெருவல் நீ! உருப்பசி முலைமேல்,
கூடு தீவினை தவிர்ந்திடக் கண்ணுவர்க் குறுகி
நீடு வேள்விகள் இயற்றெனை நெஞ்சழிந்துருகி
வாடிமன்னவன் கண்ணுவன் மருங்கு போயடைந்தான்." (கூர்மபுராணம்)

இதனால் இவளது நிலைமையும் நீர்மையும் அறியலாகும். மறுமங்கையை மருவிய வழுவினைக் கழுவிவரும்படி தன்கொழுநனை இவள் வழிசெய்தகற்றியதை யறிந்து அனைவரும் வியந்து நின்றார். "பரத்த! பெண்ணியலார் எல்லாரும் கண்ணிற் பொது உண்டமையால், நின்மார்பை நான் நண்ணேன்" என்பதை உலகம்காண இவள் உணர்த்திநின்றாள்.

"புரத்தை எரித்தவர் கோடீச்சுரம்வாழ் புகழிறைவ!
பரத்தை நம்புற்றவர்க் கிண்டென்ன காரியம்? பற்றிடுமவ்
வரத்தை யுறும்பலம் போற்கிடை யாதிங் குறும்பயமென்
கரத்தை விடுவிடு தானையையீதென்ன கைதவமே." (கோடீச்சுரக்கோவை)

பரத்தையரை நம்பினவருக்கு இங்கு என்னவேலை? கையை விடு, ஆடையைவிடு என ஒருத்தி இதில் புலந்திருத்தல் காண்க. இதில், சிலேடை நயம் அமைந்துள்ளமை தெளிந்துகொள்க.

மாயப் பரத்தையர்வாய் வைத்தமையால் இங்குவந்து
தூய வெனைநீ தொடல்.

தலைவி புலந்து புகன்றநிலை இதனால் கூறப்பட்டது.

1312. காதலனார் தும்மியதைக் காமர் சதுரியேன்
கோதென்று கொண்டாள் குமரேசா—வாதாடி
ஊடி யிருந்தேமாத் தும்மினார் யாந்தம்மை
நீடுவாழ் கென்பாக் கறிந்து. (உ)

இ-ள்.

குமரேசா! தன் நாயகன் தும்மியதைச் சதுரி ஏன் இகழ்ந்து சொன்னாள்? எனின், ஊடி இருந்தேமாத் தும்மினார் யாம் தம்மை நீடுவாழ்கென்பாக்கு அறிந்து என்க.

யாம் என்றது தலைவியை. தம்மை என்றது தலைவனை.

நீடுவாழ்க என்பாக்கு அறிந்து = நீடூழி வாழ்க என யான் உரைப்பேன் என்று கருதி. வாழ்க என்பதில் அகரம் தொக்கு நின்றது. பாக்கு வினையெச்ச விகுதி.

காதலரோடு ஊடி யாதும் உரையாடாது இருந்தேம்; அந்நலமிருக்க நெடிது வாழ்வாயாக என யாம் உவந்து உரைப்பேம் என்றுகருதி அவர் கடிது தும்மினார் என்பதாம்.

அமளித்தலத்தில் ஊடியிருந்தபொழுது தலைவன் தும்மினான்; அத்தும்மலைக்குறித்துத் தோழியிடம் தலைவி சொல்லிய படியிது.

ஊடலில் ஒருவரோடு ஒருவர் பேசாமல் மௌனமாயிருப்பர்; அவ் இருப்பு இருவருக்கும் இன்னாது ஆதலால் யாரேனும் முன்னுறப்பேசின், பின்னுறத் தொடர்ந்துகொள்ளலாம் என எதிர் நோக்கி விழைந்திருப்பர்; அந்நிலையில் தலைவனிடம் தும்மல் தோன்றியது; தோன்றவே, தன்னைப்பேசும்படி தூண்டி. மிகவும் சாகசமாய் அது செய்ததாக இவள் பெருமைபாராட்டி இங்ஙனம் பேசினாள் என்க. பேசாமல் தும்மி, என்னைப்பேசும்படி பார்த்தார்; நானா அதற்கு அசைபவள்? எனத் தனது அறிவையும் அடக்கத்தையும் வியந்து கொண்டாடியவாறிது. ஊடலில் அவர் தாம் தோற்றார் என்பது கருத்து. தும்மியபொழுது வாழ்த்துதல் மரபாதலால் தன்வார்த்தையை விழைந்து அது புரிந்ததாக நினைந்து இவ்வணம் புகழ்ந்து கொண்டாள். இயல்பாக நிகழ்ந்த தும்மலை நுட்பமாகக் குறித்துக் கொண்டதனால் இது புலவி நுணுக்கம் என்க.

புலந்திருந்த பொழுது தலைவி வலிந்து பேசும்வகை தலைவன் விரைந்து பலிசெய்வன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை சயந்தரியால் உணரப்படும்.

## கதை.

சயந்தரி என்பவள் சதாயுதன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகள். தன்பெயரியல்புக் கேற்பச் சர்வாங்க சுந்தரி யாய் இவள் தழைத்திருந்தாள். சிறந்த குணவதி. பருவஞ்சிறந்து உருவநலங்கனிந்து உயரிய நிலையில் மருவியிருந்த இக்குலமகள் ஒருநாள் இளமரக்காவிடையமைந்த இனிய பூஞ்சோலையில் தோழி யர் நீங்கத் தனியே உலாவிநின்றாள். அவ்வமயம் சருவகாமன் என்னும் அரசிளங்குமரன் அங்கே தெய்வகதியாய் வந்தான். அவன் இருதுபன்னன் என்னும் அரசனுடைய அருமைத்திரு மகன். பேரழகன். உடன்வந்த வேட்டைத் தோழர்களெல்லா ரும் விலகிநீங்க, நீர்வேட்கையோடு அப்பூங்காவுட் புகுந்து, பொய்கையுள் நண்ணித் தண்ணீர்பருகி வெண்மணல் பரந்து நன் னிழல் பயந்துள்ள மாதவிப்பொதும்பரிடை வந்துநின்றான்.

“மயிலின் ஆடலும் மந்தியின் ஊடலும்
குயிலின் பாடலும் கூடி மலிந்தவண்
வெயிலிரிங்கிய வெண்மணற் றண்ணிழல்
பயிலு மாதவிப் பந்தரொன் றெய்தினன்.”

இங்ஙனம் எய்தி இளைப்பாறிநின்ற அவன், இவளைக் கண்டான். தெய்வமகளோ என்று திகைத்து மையல்மீக்கொண்டான். இவ ளும் அவனை உவந்துநோக்கி உளமுருகி நின்றாள். உழுவலன் போடு உருகிநின்ற இவளைத் தழுவி மகிழ்ந்து, பின்பு உலகறிய மணந்து அளவில்போகங்களை நுகர்ந்து அவன் அரசுபுரிந்து வந் தான். அக்கட்டழகன் கருதியவாறெல்லாம் கலந்தமர்ந்துகளித்து வருங்கால் இவள் திருவயிற்றில் ஒரு குலமகன் பிறந்தான். அவ னுக்குச் சுதாசன் என்று பெயர்.

“இருது பன்னனும் மன்னவன் இனிதுவந் தீன்றான்
சருவகாமனைச் சாற்றுமவ் வேந்தனும் தரைமேல்
பொருது துன்னலரெவரையும் வெருட்டு வண்புகழே
கருதுமானவேற் சுதாசனைக் காதலித்தளித்தான்.” (பாகவதம்)

இவ்வாறு அருமையான மனைவியும், அருமைப்பேறும், நிறைபெருந் திருவும், வளமுறப்பெற்று உயர்புகழோடு நிலவிநின்ற அத்தலைமகன், இக்குலமகளோடு குலாவியிருக்கும் வருங்கால் ஒருநாள் ஊடல் நிகழ்ந்தது. பள்ளியறையில் இருவரும் உள்ளமாடங்கி மௌனமாயுறைந்திருந்தபொழுது அவன் மெள்ளத் தும்மினான். "இது கள்ளத்தும்மல்" என்று இவள் உள்ளே சொல்லிநகைத்தாள்; அதுவே வாயிலாக இவளை அணைத்து ஆர்வமொடு முயங்கி அவன் அகமிக மகிழ்ந்தான். அவன் அம்பரியநிலையை மறுநாள் தோழியிடம் இவள் சொல்லிக்காட்டினாள். ஊடியிருந்தேமாத்தும்மினார் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

புலந்திருந்த போதவர்செய் பொல்லாத சூதின்
நலந்தெரிந்து கொண்டேன் நயந்து.

புலவியில் தலைவன்செய்தநிலை இதனால் கூறப்பட்டது.

1313. போக்குமெய்ந் நீவிப் புனைந்தான் வசந்தையேன்
கூர்ந்து சிவந்தாள் குமரேசா—சேர்ந்துநின்று
கோட்டுப்பூச் சூடினுங் காயும் ஒருத்தியைக்
காட்டிய சூடினீர் என்று. (௩)

இ—ள்.

குமரேசா! கொழுநன் புனைந்து பூச்சூடிய பொழுது வசந்தை ஏன் சினந்து ஊடினாள்? எனின், கோட்டுப்பூச் சூடினும் ஒருத்தியைக் காட்டிய சூடினீர் என்று காயும் என்க.

கோட்டுப்பூ = மரப்பூ. கோடு = மரக்கிளை. கோட்டுப் பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ எனப் பூக்கள் நால்வகைப்படும். சண்பகம் மகிழம் முதலியன கோட்டினும்; மல்லிகை, பிச்சி முதலியன கொடியினும்; தாமரை, குமுதம் முதலியன நீரினும்; குறிஞ்சி, நெருஞ்சி முதலியன நிலம்படர் கொடியினும் தோன்றும் என்க.

ஒருத்தியை என்றது காதலோடு கண்டுவைத்துள்ள அவ்வைப்பாட்டிக்கு என்றவாறு. காட்டிய = காட்டும் பொருட்டு. காயும் = வெகுளும். ஊடும் என்னாது காயும் என்றது அவளது புலவிக்காய்ச்சலின் நிலை தெரிய.

மேல், தும்மலின் தோற்றங்கண்டாள் ; இதில், சூடலில் ஆடல் கொண்டு ஊடல்மிகக்கொள்கின்றாள்.

நான் கோட்டியிருத்தலைச் சூடிமுறையும், எவளோ ஒருத்திக்குக் காட்டவேண்டியே இது சூடினீர் என்று தலைவி வெகுண்டு ஊடுவள் என்பதாம்.

உழுவலன்போடு ஒழுகிவருங்கால் தலைவன் ஒருநாள் மகிழம் பூமாலையை யணிந்தான் ; அதனைக் கண்ட தலைவி, எவளோ பார்க்கும்பொருட்டு அடையாளப் பூவாக இதைச் சூடினீர் என்று சினந்து ஊடினாள் ; அவ்வூடல் நிலையைத் தோழியிடம் இவ்வாறு அவன் உரைத்தான் என்க.

இவள் மகிழ்ந்துகொள்வாள் என்று உவந்து நான் நல்ல மலர்மாலையைச்சூடினேன் ; அதற்கும் ஒருதவறு கண்டு புலந்துகொண்டாள்; இன்னவாறு கண்டதிலெல்லாம் ஐயமுறுகின்ற இவளோடு இனி என்ன செய்வது? எனப் புன்னகைசெய்து புகன்றபடியிது

காரணமில்லாமலே மனங்கனன்று ஊரணங்குகளையெல்லாம் என்மேல் உரையேற்றி இவ் ஆரணங்கு அசதியாடுகின்றாள் என அவன் வாடியுள்ள நிலையை இதில் நாடிக் காண்க.

> "பிணியவிழ் கோதையானோர் பேதைதன்பதிதன்னூடல்
> தணியவத்தடியில் வீழத் தன்னிழல் அணையாள்சென்னி
> மணியிடைக்கண்டு கங்கை மணாளனை ஒப்பீர்! எம்மைப்
> பணிவதேன்? என்றுகைக்கும் பரிவுமேற்பரிவுசெய்தாள்."

(திருவிளையாடல், தருமி—40)

புலவி நீங்கும்படி தலைவன் பணிந்துவேண்டியபொழுது அதிலும் ஓர் தவறு கண்டு, தலைவி மேலும் அதிகமாகப் புலந்திருக்கும் நிலையிது உணர்த்திநிற்றலறிக. புலவி புரியும் நிலை இதனால் இனிது புலனாம்.

தலைவன் உவந்து பூச்சூடினும் தலைவி புலந்துநீடுவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வசந்தைபால் உணரப்படும்.

## கதை.

வசந்தை என்பவள் கலிங்கநாட்டில் சிங்கபுரம் என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்த வசு என்னும் அரசனுடைய அருமைத் திருமனைவி. சிறந்த குணங்களும் உயர்ந்த அழகும் இவளிடம்ஒருங்கு

நிறைந்திருந்தன. இவளோடமர்ந்து இணைபிரியாது அவன் இன்பம் நுகர்ந்து வந்தான். வருங்கால் கபிலை நகரிலிருந்து அரசு புரிந்த குமரன் என்னும் அரசனுக்கும் இவனுக்கும் பகைமை மூண்டு அமர் விளைந்தது. அச்சமர் முனைக்குப் படைகளோடு அவன் போக நேர்ந்தது. அப்பிரிவில் இவள் துணைபிரிந்த அன்றில் போல் துளங்கியிருந்தாள். ஒண்டொடி நெகிழ, உருவம் நிலை குலைய மண்டிய துயருடன் மறுகியிருந்த இவளை அருகுநின்று தோழியர் ஆற்றிவந்தார். அவன் போர்முடிந்து மீண்டுவந்தான்; இவள் ஆரமுயங்கி அகமகிழ்ந்திருந்தாள். இவளது இன்பச்சுவையில் ஆழ்ந்து ஆராமை மீதூர்ந்து போகவேலாடு நாளும் பெருகியிருந்தாதலால் பருவநிலைகளுக்கு ஏற்றவாறு இனியவாகத் தனிநிலையங்களையமைத்து ஆங்காங்கு மருவியமர்ந்து மதனபோகங்களைமண்டி மகிழ்ந்தான். வேனில் வசதிக்காக அழகிய வளிமாடங்களடர்ந்த இனிய பூஞ்சோலையமைத்து, அதனிடையே பளிங்கு மாளிகை சமைத்து, புடைசூழ நறுநீர் வாவிகள் படுத்துப், போகவதிபோல புலங்கொளவைத்து அப்பூங்காவனத்தை வசந்த நிலையம் என இவள் பெயரால் அமைத்து வெயிற்காலங்கள் தோறும் அதில் இவளோடு விழைந்து தங்கி புணர்ந்துவந்தான்.

> "குரவமும் மரவமும் குருந்தும் கொன்றையும்
> திலகமும் வகுளமும் செங்கால் வெட்சியும்
> நரந்தமும் நாகமும் பரந்தலர் புன்னையும்
> பிடவமும் தளவமும் முடமுட் டாழையும்
> குடசமும் வெதிரமும் கொழுங்கால் அசோகமும்
> செருந்தியும் வேங்கையும் பெருஞ்சண் பகமும்
> எரிமலர் இலவமும் விரிமலர் பரப்பி"

நறுநிழல் நிறைந்து நலமுடன் திகழ்ந்த அம் மருமலர்ச்சோலையில் ஒருமுறை அமர்ந்து உவந்து வருங்கால் சண்பகமலரைத் தன் கொண்டையில்சூடி, இவளுக்கும் கொண்டுவந்து சூட்டினான். சூட்டவே, தனக்குமுந்துறச் சூடவில்லையென்று நினைந்து "எந்தக் கூத்தியாள்பார்க்க இந்தக்கோலம் கொண்டதோ?" என்று இவள் சாலவும் சினந்து புலந்துகொண்டாள். "கோட்டுப் பூச் சூடினும், ஒருத்தியைக் காட்டிய சூடினீர்" என்று புலவிமீக் கூர்ந்துதலைவி காயும் என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

பூவைப் புனைந்தேன் புலந்தாள் இதுவுமோர்
வேவென் றெனைநேர் வெதுண்டு.

பூச்சூடினும் புலவியாம் என்பது இதனுல் கூறப்பட்டது.

---

1314. மேருவேன் ஊடி னெளிந்தாள் கொழுநன்பு
கூற வொழிந்தாம் குமரேசா — நேராக
யாரினுங் காதல மென்றேனா வூடினாள்
யாரினும் யாரினு மென்று. (4)

இ-ள்.

குமரேசா! நாயகன் காதலிருந்து ஆர்வவுரையாடியபொழுது மேரு ஏன் வேறுபட்டு ஊடுகின்றாள்? எனின், யாரினும் காதலம் என்றேனா யாரினும் யாரினும் என்று ஊடினாள் என்க.

யாரினும் என்றது உழுவலன்போடு தழுவி வாழுகின்ற காதலர் எவரினும் என்றவாறு. காதலம் = காதலுடையம்.

என்றேனா என்றது, காதலம் என்று நான்சொல்லிய உடனே என்றபடி. ஊடல் நிகழ்ந்த வேகம் தெரிந்தவாறு.

உலகிலுள்ள எவரினும் யாம் மிகவும் காதலுடையம் என்று உவந்து சொல்லினேன்; அவள் மாறுபட்டு வேறுமகளிராயுள்ளார் யாரினும் என்பால் காதலுடையாயினீரோ? என்று புலந்தாள் என்பதாம்.

கலவியில் களித்தெழுந்த தலைவன், தலைவியைநோக்கி உலகில் ஒருவனும் ஒருத்தியுமாய் உள்ளன்புடனுருகி மருவியுள்ள காதலர்கள் எல்லாரினும் நாம் பெரிதும் காதலுடையம்என்று உவந்து சொல்ல, அச்சொல்லை விபரீதமாக அருத்தஞ்செய்துகொண்டு அவள் வெதும்பியூடினாள்; அவ்வூடல்நிலையைத் தோழியிடம் அவன் இங்ஙனம் உரைத்தான் என்க.

யாரினும் என்று அவன் குறித்தது, உலகில் பொதுவாக இருபாலும் நிறைந்துள்ள காதலர்களை. இவள் கருதியது அவனுக்குரிமையான மகளிர்எவரினும் என்று. யாரினும் யாரினும் என அடுக்கியது அவன்முன்புசொல்லிய வார்த்தையை ஆத்திரத்தோடு அள்ளி வீசியபடியிது. முன்னிலையிலுள்ள இவளையும் தழுவிக் காதலம் என்று அவன் கனிந்துசொல்ல, இவள் அதில்வழுவி நிலை

[illegible]

நங்கொண்டு உருத்தாள் என்க. அவன் நேர்மையோடு வெளிப்படையாகச்சொல்லியதில் இவள் ஒளிப்பொன்றை நுட்பமாகக்கற்பித்துப் புலந்தாள் ஆதலால் இது புலவிநுணுக்கம் ஆயிற்று.

> "போர் என்ன வீங்கும் பொருப்பன்ன பொலங்கொள் திண்டோள்
> மாரன் அனையான் மலர்கொய்திருந் தானை வந்தோர்
> கார் அன்ன கூந்தற் குயிலன்னவள் கண்புதைப்ப
> யாரென்னலோடும் அனலென்ன அயிர்த் துயிர்த்தாள்"
>
> (இராமாயணம்)

மலர் பறித்துக்கொண்டிருந்த தன் காதலனை மறைமுகமாகப் பின் வந்து ஒரு காதலி கண்ணினைப் பொத்தினாள்; பொத்தவே அவன், யார்? என்றான்; என்னவே, வேறுபல பெண்களும் இவரை இப்படிப்பொத்தியிருப்பார்கள் போலும்; இல்லையானால் யார்? என்று கேட்பாரா; இவர் ஒழுக்கு இவ்வாறுள்ளது என அவள் உள்ளம் நைந்து பெருமூச்செறிந்து கண்ணீர் சொரிந்திருக்கும் நிலையை இதில் ஊன்றிப்பார்க்க. காதலருடைய சொல்லில் பிழைகண்டு காதலிகள் உள்ளம்புலந்துகொள்ளுந்திறம் இங்ஙனம் பலஉள்ளன.

உரிமையோடு உவந்து உரையாடினும் அதனை மாறுபாடாக எண்ணி நாயகி ஊடல்நேருவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மேருபால் உணரப்படும்.

## கதை.

மேரு என்பவள் சங்கரன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகள். யாரும் நேரிலா அரும் பெறலழகினள். இவளுடைய உருவநலனும், அறிவமைதியும், உழுவலன்பும், விழுமிய பண்பும், எவரும் வியந்து புகழும்படி பெருமிதநிலையில் மருவியிருந்தன.

> "மேருமால் வரையுறு மேன்மை போலவே
> நீருலா முலகிடை நிறைநலங்களோடு
> ஏருலா மகளிர்கள் எவரு நேரிலா
> மேருவாம் குலமகள் மேவி நின்றனள்."

வியக்கத்தக்க வடிவழகோடு இவ்வண்ணம் சிறந்து விளங்கியிருந்த இக்குலமகளை நாபி என்னும் அரசகுமாரன் விழைந்துவந்துமணந்து கொண்டான். அவன் ஆக்கினித்திரன் என்னும் சக்கரவர்த்தியினுடைய அருமைத்திருமகன். அதிமேதாவி. பெரிய போர்வீரன்.

அவ்வீரவள்ளல் இப்பொழுது போர்மேற்போகாது ஆவல் மிகுந்து அரிய போகங்களை நுகர்ந்து நாவலந் தீவு முழுவதும் தனிச்செங்கோல் செலுத்தி இசை திசை பரப்பி இனிது வீற்றிருந்தான். ஒரு முறை திருமாலை நினைந்து அவ்வள்ளல் பெருவேள்வி செய்தான். அதில் அப்பெருமான் எழுந்தருளி உனக்கு வேண்டுவது என்? என வினவ, "நின்போல் ஒரு திருமகன் எனக்கு அருளவேண்டும்" என்று அவன் உரிமையோடு வேண்டினான். என்போல் என்றதனால் யானே வருவன் என்று அருள்புரிந்து சென்றான்; அவ்வாறே அத்திருமால் அமிசமாய் இவள் திருவயிற்றில் ஓர் அருமை மகன் பிறந்தான். அவனுக்கு இடபன் என்று பெயரிட்டு இனிது போற்றினார். அடியில் வருவது காண்க.

"ஆற்றல்வேல் நாபி யென்னி ஆற்றலும், கருணைகூர்ந்து
காற்றெறி சிறைப்புட் பாகன் கருமுகில் என்னத் தோன்ற
மாற்றரு நின்போல் மைந்தன் வழங்கென, யானேவந்து
தோற்றுவ னென்று யேகுந் தொன்முதல் அருளினால். (க)

மடவரல் மேருத்தேவி வனமுலை பொருது விண்ட
தொடையலங்கோதை தாழ்ந்து துயல்வரப் பணைத்துவீங்கும்
அடல்கெழுதிணிதோள் நாபிக்கு ஆழியந்தடக்கையானே
இடபன் என்றுலகமெல்லாம் ஏத்துறத் தோற்றம்செய்தான்." (உ)

(பாகவதம்)

இதனால் அவனது அருந்திருவும், பெருந்தகவும், இன்பநலனும் எழில் வகைப்பேறும் இனிதறியலாகும். இங்ஙனம் பெரும்பாக்கியங்களெல்லாம் ஒருங்கடைந்து தலைமையோடு நிலவிநின்ற அக்குலமகனுக்கு அலகிலின்பங்களை யருளி இத்தலைமகள் அன்பாற்றி வந்தாள். நாளும் நாளும் ஆர்வமீதூர்ந்து இவளோடுகூடி மகிழ்ந்து வருங்கால் ஒருநாள் உள்ளங்களித்து இவளை உவந்துநோக்கி எல்லாரினும் நாம் மிகவும் காதலுடையம் என்று கனிந்து கூறினான். எல்லாரினும் என்றதனால் வேறுபலமகளிரும் உங்களுக்கு உளர் போலும்என்று இவள் உள்ளங்கனன்று உளைந்து புலந்தாள். அவன் மெல்லநகைத்துச் சொல்லைவிளக்கினான். இவள் நல்லதென்று நாணி நயந்து தழுவினாள். யாரினும் காதலம் என்று தலைவன் ஆர்வமொடு சொல்லினும் அதனையுமாறுபட எண்ணித் தலைவியர் ஊடுவர்

என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள். இவளுடைய மகன் பின்னை பேரன்தான் பரதன் என வந்து இந்நில மண்டலம் பரதகண்டம் எனத் தன் பெயரால் என்றும் நின்று நிலவும்படி செங்கோல் செலுத்திச் சீர்மிகப் பெற்றான்.

"இமயப் பொருப்பின் தென்பாலாம் வருடங்காக்கும் நாபி என்போன்
கமலப்பொகுட்டு வீற்றிருக்கு மேரு என்னும் கனங்குழையின்
குமுதச் செவ்வாய் நலம்பருகி (இடபர்) பயந்தான்; கூறுமவன்
அமையா வென்றிப் பரதன் முதல் அரசரொருநூற்றுவர்ப் பயந்தான்."
(கூர்மபுராணம்)

இவளது எழில் நலமும், வழிமுறையும் இதன்கண்ணும் காண்க.

மூச்சு விடுமுன் முனிவள் அதுவுமோர்
சூழ்ச்சியா மென்று துணிந்து.

காதலொடு மொழியினும் புலவி மீதூரும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1315. நின்னை யிவண்பிரியே னென்ன நளாயனியேன்
கொன்னே யழுதாள் குமரேசா—மன்னிய
இம்மைப் பிறப்பிற் பிரியல மென்றேனாக்
கண்ணிறை நீர்கொண் டனள். (ரு)

இ-ள்.

குமரேசா! நின்னைப் பிரிந்தகலேன் என்று காதலன் உவந்து சொன்னபொழுது நளாயனி ஏன் கலங்கி அழுதாள்? எனின், இம்மைப் பிறப்பில் பிரியலம் என்றேனாக் கண்நிறை நீர் கொண்டனள் என்க.

இம்மைப் பிறப்பு = எடுத்துள்ள இப்பிறப்பு. கிட்டிஎட்டியுள்ளமையால் அண்மையில் சுட்டினான். இம்மைக்கு எதிர் மொழி அம்மை. அது மறுமையைக் குறிக்கும்.

பிரியலம் = பிரியேம். பிரியலன் என ஒருமையிற் கூறாது பன்மையிற் குறித்தது, இருவர்செயலும் மருவுதல் கருதி. என்றேனா நீர்கொண்டனள் என்றது, பிரியலம் என்று சொன்னவுடனே அவள் விழிநீர் சொரிந்து அழுதுநின்ற நிலைதெரிய.

நிறை நீர் என்றது அக்கண்ணீரின் மிகுதி நிலை கருதி. பெண்கள் பேதைமைநீர்மையராதலால் பிரிவினை யெண்ணியவுடனே கண்ணீர் சொரிந்து அவர் உருகி யழுதுவிடுவர் என்க.

"கோடுயர் பன்மலை யிறந்தன ராயினும்
நீட விடுமோ? மற்றே; நீடு நினைந்து
துடைத்தொறும் துடைத்தொறும் கலங்கி
யுடைத் தெழு வெள்ளமாகிய கண்ணே." (ஐங்குறுநூறு 358)

பிரிவை நினைந்தபொழுது ஒரு குலமகள் உளமிக உருகிக் கண்ணீர் சொரிந்துள்ளநிலையை இதில் அறிந்துகொள்க.

இம்மையாகிய இப்பிறப்பின்கண் யாம் பிரியேம் என்று காதலியிடம் அன்பினால் சொன்னேன்; சொல்லவே, கண் நிறைய நீரைப்பெருக்கி அவள் அழுதாள் என்பதாம்.

கலவியின்பம் நுகர்ந்து அமளியிலமர்ந்து உளமகிழ் கூர்ந்து ஒருவரோடொருவர் அளவளாவியிருக்குங்கால், தலைவியை நோக்கி அன்பு மீதூர்ந்து இப்பிறப்பில் யாண்டும் நாம் பிரிந்திரேம் என்று தலைவன் இன்புற உரைத்தான்; உரைக்கவே இப்பிறப்பில் பிரியலம் என்றால் மறுபிறப்பில் பிரிந்துவிடுவர் போலும் என நினைந்தேங்கி அவ் வேக்கத்தால் நெஞ்சம் கலங்கிக் கண்ணீர் சொரிந்து கலுழ்ந்தாள்; அந்நிலையினைத் தோழியிடம் மறுநாள் அவன் இவ்வாறு உரைத்தான் என்க. பிரியலம் என்று பிரியமாகச் சொன்னதிலேயே பிரிவை நினைந்து உருகி அழுதாள் என்றதனால் அவளது உளவுரிமை புலனும். இன்னவாறு வெளிப்படையாக நான் இனிது சொல்லினும் அதனைக் குறிப்பாக வேறுகருதிப் புலந்து கொள்கின்றாள்; இதற்கு என் செய்வது? எனத் தலைவன் பரிந்துரைத்த படியிது.

என்றுமுறுதலையும் நுண்ணிதாகச் சூழ்ந்து புலந்தமையால் இது புலவிநுணுக்கம் ஆயிற்று. என்றும் இவ்வாறே ஒன்றி வாழலாமென உறுதிகொண்டிருந்தாள் ஆதலால் இம்மை என்றவுடனே வெம்மையுற்று இங்ஙனம் வெதும்பினாள் என்க.

"அணிற்பல் லன்ன கொங்குமுதிர் முண்டகத்து
மணிக்கே ழன்ன மாநீர்ச் சேர்ப்ப!
இம்மை மாறி மறுமை யாயினும்
நீயா கியர் எங் கணவனை
யானா கியர் நின் நெஞ்சு நேர்பவளே." (குறுந்தொகை 49)

இம்மையிலும் மறுமையிலும் என்றும் நாம் இணைபிரியாதிருக்க வேண்டுமென்று தன் கணவனை விழைந்து புலவி நோக்கோடு வியப்பாக ஒரு குலமகள் இதில் உரைசெய்திருத்தலறிக.

உழுவலன்புடைய தலைவியர் தம் கொழுநரை எழுமையிலும் தழுவியிருக்க விழைவர் என்பது இக்குறள் உணர்த்துகின்றது.

தமயந்தியை மணந்து நளன் இன்பம் நுகர்ந்து வருங்கால், ஒருநாளிரவு பள்ளியறையில் உள்ளங் களித்து அவளைநோக்கி இப் பிறப்பில் உன்னை யாதும் பிரியேன் என்று உல்லாசமாகச் சொல் லாடினன்; சொல்லவே "மறுபிறப்பில் பிரிவீர்போலும்? எழுமை யும் உரிமையாளவன் வேறொருத்தி உடங்கு உளன்; ஒருமையில் உரியனான நான் இனி எதற்கு?" என இன்னவாறு பன்னிப் புலந்து பரிந்து கலங்கினள்; அகலவே அவன் கவலை மீக்கொண்டு வருந்தி வணங்கித் தான் வஞ்சமின்றிச் சொன்னதாக நெஞ்சந் தேற்றி அவளைக்கெஞ்சியமைத்துப் பின்பு கொஞ்சி மகிழ்ந்தான். அவ்வூடல் நிலைகளை அடியில்வரும் பாடல்களில் காண்க.

தமயந்தி புலந்தது.

"தாமரைப் பொகுட்டின்மேய தாக்கணங் கனையாய்! நெஞ்சம்
எழுற வரினும் நின்னை இம்மையிற் பிரியேன் என்ன,
யாம மேகலையினாளும் மறுமையிற் பிரிவை என்றுக்
காமரு குவளைபோலும் கண்பனி யுகுப்ப நின்றாள்.

நளன் புலவி தீர வணங்கியது.

பெய்தொடி, குறும்மைதன்மைகொல்? பிழைத்திலேன் அருளாய்என்னில்
உய்குவம் கொல்லோ? இம்மே யுன்றுயிர் துறப்பல் என்று
மெய்த்துயிர்க் கனிச்சப் போதில் மிதிப்பினும் பனிக்குவாடும்
தெய்வமென் காலப்போது செவ்வரிமேற் சூடினனே.

தமயந்தி புலந்து மொழிந்தது.

குழுமிய பறவையாவும் கூட்டுணைப் பொதுவில் நல்கும்
பழுமர மனைய திண்டோட் பகட்டெழில் தாமமார்ப!
உழுவலன் போடு நின்னை ஒருமையிற் புணர்வ தன்றி
எழுமையும் தொடருமாதர் சீறடி இறைஞ்சு கென்றே;

கிளிபொரு கிளவியாள் பொற் கிண்கிணி சிலம்போடார்ப்பத்
தளிநறுப் பிலிற்று மென்பூந் தடம்புயத் துதைத்தலோடும்
களிசெயப் பொடித்த ரோமம் கண்டகத் துறுத்தில் அந்தோ
அளியசீ றடிகள் நோவென்று அல்லலுற் றழுங்கி னானே.

நளன் வருந்தியது.

உடைதிரைப் பரவைஞாலத் துயர்ந்தவர், தொழும்பு பூண்ட
அடியவர் இழைக்குந் தீமை அருளொடும் பொறுப்ப தல்லால்
கொடியவர் போலச் சீறி ஆருயிர் குறைப்பர் கொல்லோ?
மடலவிழ் கமலப் போதில் வாள்கிடந் தனைய கண்ணாய்!

தமயந்தி புலவி தீர்ந்தது.

அள்ளிலை மலர்ப்பூண் கோதை! அருளெனப் பணிதலோடும்
கள்ளுலா நறியசந்தக் கலவியி னுரைத்த யாவும்
கிள்ளைகள் மிழற்றமாறு கேட்டு இளநிலவு காலும்
முள்ளெயி றிலங்கச் செவ்வி முகிழ்நகை கோட்டி னாளே" (நைடதம்)

புலவி நிலையும், தலைவி இயல்பும், அப்புலவி தீரவேண்டித் தலைவன் பட்டுள்ள பாடும், பிறவும் இதில் ஊன்றி நோக்கி யுணர்ந்து கொள்க. இம்மைப் பிறப்பிற் பிரியலம் என்ற இவ் அருமைத் திருமொழியை யடி போற்றி இப் புலவி நிகழ்ந்துள்ளபடியை நுணுகி அறிந்து கொள்க. இதில், தமயந்தி உதைத்ததாகவும், அவ்வுதையைப் பட்டுக்கொண்டும் அவளது திருவடி நோமோ என்று நளன் கருதி யுருகியதாகவும் தெரியவருகின்றனவே, இது தகுதியாமோ! எனின், காதல் கலந்தவரிடம் பலவகையான விளையாடல்கள் புலவியில் நிகழுமாதலால் அக்காலத்தில் தலைவன் குழைந்து பணிதலும், தலைவி தணியாது சீறி நிற்றலும் அமையும் என்க.

"மனைவி உயர்வும், கிழவோன் பணிவும்,
நினையும் காலைப் புலவியுள் உரிய." (தொல்காப்பியம், பொருள், 227.)

புலவிக் காலத்தில் தலைவன் தலைவியைப் பணிவதுண்டு என இந்நூல் உணர்த்தி நிற்றலறிக. தன்னிகரில்லாத் தலைவரும் தம் இன்னுயிர்த் துணைவியரிடம் இப்பணிவினை புரிந்துகொள்வர் என்க.

"ஆதிபகவன் தனதூடல் தணிப்பான் பணிய, அவ்விறைவன்
பாதம் இறைஞ்சும் அதற்கும், நெற்றிப்பகையும் அல்குற்பகையுமாம்
சீதமதியும், அரவும் விழுந்து செயற்கும் உவகை செயாமல், அலை
மாதுபணியும் அதற்கு மனமகிழும் உமையை வணங்குவாம்."
(பிரபுலிங்கலீலை)

உமாதேவியார் ஊடிய பொழுது அவ்வூடல் தணியும்படி பரமன் பணிந்த அழகும், அப்பணிவில் அம்மை மனமகிழ்ந்த அருமையும், இதில் உரைத்துள்ளமை காண்க. புலவியினிலைமையும், அதில் தலைவர் பணியுறும் பான்மையும் இதனால் இனிது புலனாம்.

பிரியாமையை உரிமையோடு பேணிச் சொல்லினும் தலைவி மறுகிப் புலப்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நளாயனியால் உணரப்படும்.

## கதை.

நளாயனி என்பவள் பெருங்குலக் கற்பும் அரும்பெறலுருவும் பெருந்தகைமையும் ஒருங்கமையப் பெற்றவள். மௌவற்கலியன் என்னும் கொழுநன் இவளை விழைந்து மணந்து இணைந்து மகிழ்ந்து இணைபிரியாதிருந்தான். கலைபல பயின்று, தவநலம் பேணி, மறுமை நோக்கினனாய் அவன் மருவியிருந்தும் இவளுடைய அருமை அழகையும், உரிமை அன்பையும் நோக்கி உள்ளங்கரைந்து எல்லா மறந்து அல்லும் பகலும் இவளைப் புல்லி நுகர்ந்து பூரித்துவந்தான். இங்ஙனம் போகந்துய்த்துவந்த அவ் யோகவான் இவளது உள்ள நிலையைச் சோதிக்க விரும்பித் தள்ளரும் பெருநோயாளனாய்த் தளர்ந்து தோன்றினான். அந்நிலையிலும் இவள் யாதும் மாறாமல் அன்பாற்றிவந்தாள். அழுகி யிருந்த தனது கைவிரல் உண்ணும் பொழுது பரிகலத்தில்விழும்படி புரிந்தான் அவன் பண்ணி யெழுந்தான். அதனை அயலகலவைத்து அம்மிச்சிலையும் இவள் அருவருப்பின்றி யுண்டுவந்தாள். பலவகையிலும் சோதித்து இவளுடைய நிலைமையை நன்குதெளிந்து பின்பு அளவிலன்பு கொண்டான். ஒரு நாள் இவளைநோக்கி உனக்கு வேண்டிய வரங்களைக்கேள்; உவந்து தருகின்றேன் என அவன் விழைந்து கேட்டான். இவள் வேறொன்றும் கேளாமல் "என்றும் உங்களைப் பிரியாதிருக்கும் வரமே தந்தருளவேண்டும்" என்று தாழ்ந்து வேண்டினாள். அவனும் அவ்வாறே அமைந்தருளினான். அதன்பின் இருவரும் ஒருவாறு மருவி உயர்போகங்களை நெடிது துய்த்தார். இவரது அன்பு நிலையையும், இன்ப நுகர்ச்சியையும் குறித்து வியாசர் ஒருமுறை துருபதனிடம் வியந்து கூறியுள்ளார். அடியில் வருவது காண்க.

"காதிற் கலந்த கடைக்கண்ணிதன் கற்பும் அன்பும்
சோதித்தலுன்னித் தணியாத துவக்கு நோயன்
கோதித்த நெஞ்சன் பெருமூப்பினன் கூர்ந்து நாளும்
வாதித்த லன்றி மகிழா மனைவாழ்வு பூண்டான். (க)

கச்சிற் கடங்கா முலையாள் அக் கணவனுண்ட
மிச்சிற் புறத்து விரல் வீழினும் வீழ்தல் மிஞ்சிக்
குச்சித்தலின்றி நுகர்ந்தாள் கொடுங்காமநோய்கொண்
டிச்சித்த இன்பம் நுகராமல் இளைத்த மெய்யாள். (உ)

அன்பன் தெரிவை வழிபாடுகண்டு ஆர்வ மெய்தித்
துன்பம் பயந்த பிணியால் அழி தோற்ற மாற்றித்
தன்பங்கை யீசன் றிறைநல்கமுன் சாபம் வாங்கும்
அன்பன் றனக்கும் கிடையாத வடிவு கொண்டான். (௩)

மின்னே ! உனக்கு மிகு கற்புடைமீனும் ஒவ்வாள் ;
இன்னேவரம் வேண்டுவ வேண்டுக என்னையென்ன,
நின்னோயாம் என்றும் பிரியாநல நேர்க என்றாள்
தன்னேரிலாத மனைவாழ்கிற் றவத்தின் மிக்காள். (௪)

குன்றும் நதியும் மரமும் பைங் கொடியு மாகித்
துன்றுந் துணையாய்ப் பலயோனிகள் தோறும் எய்தி
நின்றும் சரித்தும் அரும்போகம் நெடிது துய்த்தார்
என்றும் பிரியாது இருவோரும் இதயம் ஒத்தே." (பாரதம்) (௫)

குச்சித்தல் = அருவருத்தல்.

இச் சதிபதிகளுடைய உள்ளப் பண்பும், உழுவலன்பும், பல வகை நிலையிலுந் தழுவியிருந்து காமபோகங்களை விழைந்து நுகர்ந்த விதமும் பிறவும் இதனால் இனிதறியலாகும். இவ்வாறு நீள அநுபவித்து வருங்கால் ஒருநாள் வாழ்க்கையின் நிலையாமையையும், காதலாய்ப் பொருந்தியிருந்தவரும் பிரிந்து படும்படி சாதல் நேர்தலையும் குறித்து அவ்வித்தகன் தத்துவநிலையில் சதியோடு உரையாடினான். இதுவரையும் பிரியாதிருந்தோம் ; இனிப் பிரிய நேரும் என்று அவன் கருதிச் சொன்னதாக இவள் மறுகி நினைந்து உருகி அழுதாள். இவளது காதல் நிலையை வியந்து மகிழ்ந்து அம்மாதவன் ஆதரவுகூறி ஆற்றியருளினான். "இம்மைப் பிறப்பில் நாம் பிரியலம் என்றேன் ; உடனே அவள் கண்நிறை நீர் கொண்டனள்" என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

எழுமையும் யாம்பிரியேம் என்றேன் அதன்பின்
வழுவுவர்கொல் என்றாள் அழுது.

பிரியேம் என்னினும் பிழையாம் என்பது இதனால் கூறப்பட்டது.

1316. மாறி மறந்தென மாயா வறிபுலந்து
கூறினள் என்னே குமரேசா — தேறியே
உள்ளினேன் என்றேன்மற் றென்மறந்தீர் என்றென்னைப்
புல்லாள் புலத்தக் கனள். (௬)

இ—ள்.

குமரேசா! என்றும் உன்னை நினைந்து நின்றேன் என்று நாயகன் புகழ்ந்து சொன்னபொழுது நாயகி ஏன் புலந்து கொண்டாள்? எனின், உள்ளினேன் என்றேன் மற்று என் மறந்தீர் என்று என்னைப் புல்லாள் புலத்தக்கனள் என்க.

உள்ளல் = நினைத்தல். புல்லல் = முயங்கல். புல்லாள் = தழுவாள். புலத்தக்கனள் = புலத்தற்குத் தகுதியாயினள். கலத்தற்குத் தகுதியாயிருக்குமவள் அந்நிலைமாறி உடனே புலத்தலைமேற் கொண்டமையான் புல்லாமையும் புலத்தலும் இங்ஙனம் இணைத்துக் கூறினர். என்னை என்றது கள்ளம் யாதுமின்றி உழுவலன்போடு உள்ளுருகி உரைத்த என்னை என்றவாறு.

உன்னை நினைந்திருக்கிறேன் என நான் உரிமையோடு உவந்து கூறினேன் அதற்கு அவள் இடையே என் மறந்து நின்றீர்? என்று என்னைத் தழுவாமல் புலந்து வருந்தினாள் என்பதாம்.

அமளிக்கலத்தமர்ந்து அருள்மொழி ஆடிவருங்கால் முன்பு வினைமேல் பிரிந்துநின்ற சமயமும் நின்னை நினைந்தேயிருந்தேன் என்றான்; நினைந்தேன் என்றால், இடையே மறந்திருந்தீர்கள் போலும் என உடனே தலைவி புலந்துகொண்டாள்; அப்புலவி நிலையைத் தலைவன் உரைத்தபடியிது.

விழைவுமிகுந்து கலவியில் முனைந்து நின்றபொழுது இப் புலவி நிகழ்ந்தது; நிகழவே, உடனே புல்லுதலொழிந்து புலவியில் நீடினாள் ஆதலால் "புல்லாள் புலத்தக்கனள்" என்றான். நினைந் தேன் என்று நான் உவந்து சொன்னேன்; மறந்தீர் என்று வீணாக அவள் புலந்து கொண்டாள்; இவ்வாறு கொள்ளின், இனி நான் என்செய்வது? என இங்ஙனம் இரங்கி நின்றான் என்க.

இடையறாது நினைவிலிருந்தால் நினைந்தேன் என்று சொல்ல அங்கு இடமில்லை; இடையே பலநாள் மறந்திருந்து பின்பு நினைப் புற்ற போதுதான் "உள்ளினேன்" என்று சொல்ல முடியும்; இவர் அங்ஙனம் சொல்லியதனால் நம்மை உள்ளாதிருந்துள்ளார் என அருத்தாபத்தியால் ஊகித்தறிந்து புலந்தமையான் இது புலவி நுணுக்கம் ஆயிற்று. புலவி நிகழும் விசித்திரங்களையும் அதன் நிலைகளையும் இதில் நுணுகி யறிந்து கொள்க.

பொருளீட்ட முதலிய வினை நலங்கருதி அயலே பிரிந்திருந்த போது எம்மை நினைத்ததுண்டோ? எனத் தலைவனை நோக்கி வினவ அதற்கு அவன் பதில் சொல்லுங்கால் இப்புலவி நேர்ந்ததென்க.

"அம்மையிடத்தர் திருவெங்கை வாணர் அணிவரை எங்
கொம்மை முலைத்தட மெல்லாம் பசலை கொளக்கொடுத்துச்
செம்மை மனத்திற் பொருள் விழைந் தார்தரச் சென்றவிடத்து
எம்மை நினைத்ததுண்டோ? இலையோ? சொல் இறையவனே.!"

என இவ்வாறு வினவியபொழுது சில தலைவர்கள் விநயமாகப் பதில் சொல்லுவார். சில அடியில் வருவன காண்க.

"புறந்தாழ் குழலுமை பங்காளர் வெங்கை புரத்தர் அயன்
பறந்தாலும் என்னென்றிருக்கின்றவேணிப் பரமர் தமைத்
துறந்தார் மனமென வெங்கொடுங் காட்டுச் சுரத்திடைநான்
மறந்தால், நினைத்தலும் உண்டு பொன்னே, யுங்கள் வஞ்சியையே."

(திருவெங்கைக் கோவை)

"குன்றாத வண்மைக் குமார குலோத்துங்கன் கோழிவெற்பில்
நன்றாமுமைவிடுத்தேகுமர் நாட்டி னறுங்குழலாள்
ஒன்றாயினானன்றி யென்பார்வையும் என்னுளமும்விட்டுச்
சென்றாலன்றோ அணங்கே! நினைத்தேன் என்று செப்புவதே."

(குலோத்துங்கசோழன் கோவை)

"எனைத்தன் அடிமை யெனத் தடுத் தாண்டருளீசர்வரி
கனைத்துலவும் பொழிற் கோடீச்சுரமின் கருதுமென்னெஞ்
சினைத்தன்றனத்தொரு வார் கொண்டிறுக்கி மற்றிங்குவைத்தால்
நினைத்திடற்கங்கென்னசெய்வேன்? நினைத்திலன் நேரிழையே!"

(கோடீச்சுரக்கோவை)

தம்தலைவியரை என்று மறவாதிருந்த நிலைகளைக் குறித்துத் தலைவர் உரைத்திருக்குந் திறங்களை இவற்றுள் உணர்ந்துகொள்க.

இங்ஙனம் சாதுரியமாகச் சொல்லாமல் "உள்ளினேன்" என்று வெள்ளையாக இவர் உரைத்தமையால் இடையே என்னை மறந்திருந்தீர் கொல்? என்று அவள் புலந்துகொண்டாள்.

காதலன் உள்ளங்கனிந்து சொல்லினும் அதிலும் ஓர் கள்ளங் கண்டு காதலி புலந்து நின்றுள்ளன் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை மாயாவதியால் உணரப்படும்.

## கதை.

மாயாவதி என்பவள் இரதியின் அமிசமாய்ப் பிறந்தவள். அதிசய அழகினள். "வளரொளி அரம்பைமாரும் மலர்விழிமலர்ந்து நோக்கி உளமிக வுருக வந்த உருவினுள்" என எழில் நிலையில் பெருகி நின்றாள். இப்போழுகி ஒருநாள் பிரத்துமனன் என்னும் அரசிளங்குமரனைக் கண்டு ஆசைமீக்கொண்டாள். அவன் கண்ண னுடைய அருமைத் திருமகன். உருக்குமணியின் திருவயிற்றிற் பிறந்தவன். மன்மதனது அமிசமாய் வந்தவன். அவ் அழகனைக் கண்டவுடனே பழைமையான நெழுதகைமையோடு இவள் உள முருகி நின்றாள். அவனும் விழைவுமிகுந்து இவளை உவந்து மணந்து உயர்போகங்களை நுகர்ந்து வந்தான். கலவி நலங்கள் பலவும் புரிந்து காமதேவதைகளாய் இவர் களித்திருந்தார். தொய்யிலெழுதி மைவிழிதீட்டி, மெய் முகம் நீவி, மெல்லிதழ் பருகி, அல்லும் பகலும் ஆராமையோடு பல்வகை லீலைகளையும் விளைத்து முயங்கி இவளது போகவெள்ளத்தில் அவன் மூழ்கிக்கிடந்தான்.

"எழில் வளர் மாயாவதி எனும் பேர்பெற் றிருந்தவள் வின்னகை மங்கை கழைவளர் தோளில் எழுது தீங்கரும்பு கன்னலில் தோளினிற்கதுவத் தழுவுதற் கடங்காத் தடமுலை முகட்டில் தண்மலர்த் தார் வடுப் பொறிப்ப விழைவினில் தழுவி விழிகவர் வனப்பின் வேனிலஞ் செல்வன் வீற்றிருந் தான்." (பாகவதம் 10, 24, 18.)

இச் சதிபதிகள் அன்புமிகுந்து இன்ப நிலையில் இணைந்திருந்த நிலை இதனால் இனிது புலனும். யாண்டும் அயலகலாமல் இங்ஙனம் இன்பந் துய்த்து வருங்கால் ஒரு முறை அவன் அத்தினாபுரியை யடைந்து சிலநாள் தங்கியிருந்து மீண்டு வந்தான். வந்த அன்று இரவு மலரணையில் இவளுடன் மருவியிருந்து உரிமையுரைகள் பல உவந்து

ஆடினான். அவ்வமயம் இடையே உன்னைப் பிரிந்திருக்கின்ற பொழுதும் நினைந்திருந்தேன் என்று அவன் புகழ்ந்து கூறினான். அப்படியானால் பலமுறை மறந்திருந்தீர்கள் போலும் என்று இவள் புலந்து சினந்து புல்லாதொழிந்தாள். அவன் போற்றிப் புகழ்ந்து பின்பு ஆற்றி யமைந்தான். "உள்ளினேன் என்றேன்; ஏன் மறந்தீர்! என்று புல்லாள் புலந்தாள்" என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

நின்னை மறந்தறியேன் என்றேன் அறிந்ததுநீர்
என்னையோ வென்றாள் எதிர்ந்து.

உள்ளினேன்என்றேனும் புலவியாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1317. காதலன்முன் தும்மக் கலங்கிச் சுபாங்கியேன்
கோதென் றழுதாள் குமரேசா—மீதா
வழுத்தினாள் தும்மினேனாக அழித்தழுதாள்
யாருள்ளித் தும்மினீ ரென்று. (எ)

இ—ள்

குமரேசா! காதலன் தும்மிய பொழுது வாழ்த்திய சுபாங்கி உடனே ஏன் இகழ்ந்து அழுதாள்? எனின், தும்மினேன் ஆக வழுத்தினாள், யார் உள்ளித் தும்மினீர் என்று அழித்து அழுதாள் என்க. அழித்து = முன் வழுத்தியதை மறுத்து.

இது, தலைவன் தும்மியதில் தலைவி புலந்தமை புகலுகின்றது.

வழுத்தினாள் = வாழ்த்திச் சொன்னாள். ஒருவன் தும்மிய பொழுது அவன் அருகமர்ந்துள்ள அன்புடையாளர் நூறு என்று வாழ்த்திச் சொல்லுவர்; அஃதாவது நூறு ஆண்டுகளாக நீ சுகமாய் வாழ்க என்பதாம். பிள்ளைகள் தும்மும் பொழுது பெரும்பாலும் தாய்கள் இவ்வாறு காதலோடு கனிந்து சொல்லிவருவர். அன்புசுரந்தெழும் இவ்வழக்கம் மகளிர் மருங்கு இன்றும் வழங்கி வருதல் காணலாம். இந்நிலையில் தான் தும்மிய பொழுது தன் காதலி வாழ்த்தினாள் ஆதலால் "தும்மினேன் ஆக வழுத்தினாள்"

என அவள் சொல்லிய நிலையைத் தலைவன் இங்கு உவந்து சொல்லி
றான். "திருந்திய நம்பியாரத் தும்மினன் தெய்வம் வாழ்த்திற்று"
(சீவகசிந்தாமணி 388). தும்மியபொழுது வாழ்த்தும் வழக்கம்
இதன் கண்ணும் வந்துள்ளமை காண்க.

யார் உள்ளித் தும்மி னீர் = யார் உள்ளியதால் நீர் தும்மினீர்?
நான் தும்மினவுடனே வாழ்த்தி நின்றவள் உடனே மாறி, யாரை
நினைத்ததால் நீர் இங்ஙனம் தும்மினீர் என்று அழுதாள் என்பதாம்.

மருத்துவத்தில் கூடிக்குலாவி யிருந்தபொழுது நாயகி ஊடிக்
கலுழ்ந்த நிலையை நாயகன் உரைத்தபடியிது.

அகன்று நின்று அன்புடையார் நினைத்தால் அங்ஙனம் நினைக்
கப்பட்டவர்க்கு விக்கலும், தும்மலும் விரைந்து தோன்றும் என்
பது உலகவழக்கம்; அவ்வழக்கத்தைப் பழக்கமாய் நன்கு நம்பி
வந்தவளாதலால் இவன் தும்மியவுடனே எவளோ ஒருத்தி நினைத்
ததனாலேதான் இவர் இங்ஙனம் தும்மினார் என்றுநினைந்து சினந்து
"யார் உள்ளித்தும்மினீர்" என்று புலந்தாள். உள்ளி என்பது
உள்ள என்னும் பொருள்மேல் நின்றது.

"நினைப்பவர் போன்று நினையார் கொல் தும்மல்
சினைப்பது போன்று கெடும்." (குறள் 1203)

தலைவன் பிரிந்து நின்றபொழுது ஒருநாள் தனக்குத் தும்மல்
தோன்றி வெளிப்படாதடங்கிவிட "அவர் சரியாக நினைக்கவில்லை
போலும் அதனாலேதான் இத்தும்மல் இப்படி உருப்படாமல் ஒளிந்
தது" என ஒரு தலைவி இதில் உளைந்திருத்தல் காண்க. நினைப்
பிற்கும் தும்மலுக்கும் உள்ள உறவுரிமையிதனாலும் அறியலாகும்.

இங்ஙனமே கண் தோள் புருவங்கள் வலம் துடிப்பின் தீதுஎன்றும்,
இடம் துடிப்பின் நலம் என்றும் மகளிர் எண்ணிக்கொள்வர்.

"மறந்தனன் இதுவும் ஓர் மாற்றம் கேட்டியால்
அறந்தரு சிந்தையென் ஆவி நாயகன்
பிறந்த பார் முழுவதும் தம்பியே பெறத்
துறந்து கான் புகுந்த நாள் வலம் துடித்ததே; (௧)

நஞ்சனையான் வனத் திழைக்கு நாளிடை
வஞ்சனையால் வலம் துடித்த வாய்மையால்
எஞ்சல ஈண்டுதாம் இடம் துடித்ததால்
அஞ்சலென்று இரங்குதற்கு அடுப்பது யாதுஎன்றாள்." (௨)

(இராமாயணம்)

இது, சீதை திரிசடையிடம் உரைத்தது. அநுமான் தூதுவந்து அநுகூலமாகப்போகுமென் றுரித்த தென்க. நிமித்தநிலைகளை மக்கள் நினைத்துவரும் திறங்கள் இன்னவாறு பலவுள்ளன.

தும்மியவுடனே உவந்து வாழ்த்தினவள் அக்கணமே மாறிச் சந்தேகப்பட்டு மறுகியழுதாள் ஆதலால் "அழித்து அழுதாள்" என்றான். இதனால் அவளது நகை அழுகைகளின் வகை புலனாம்.

"வளைபயில் முன்கையோர் மயிலனாள் தனக்கு
இளையவள் பெயரினைக் கொழுநன் ஈதலும்
முளை எயிறு இலங்கிட முறுவல் வந்தது;
களகள வுதிர்ந்தது கயற்கண் ஆலியே." (இராமாயணம்)

தன்மனைவியைக் கூப்பிட நினைந்த கணவன் மறதியாக அவள் தங்கை பெயரைச்சொல்லி அழைத்தான்; அதனைக் கேட்டவள் முதலில் கேலியாக நகைத்தாள்; உடனே மாறி அவளிடம் இவருக்கு உறவுண்டுபோலும் என்று ஐயுற்று அழுதாள்; என ஒரு தலைவியின் புலவி நிலையை யிஃதுணர்த்தி நிற்றல் காண்க.

காதலன் தும்மினும் காதலி புலப்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுபாங்கியால் உணரப்படும்.

## கதை.

சுபாங்கி என்பவள் யதுகுலமன்னனாகிய சுபகனுடைய அருமைத் திருமகள். நல்ல சுந்தரவதி. இவளது அங்கவமைதி எங்கும் வியந்துபேச நின்றது. கலையறிவிலும் தலை சிறந்திருந்தாள். பருவம் எய்தி இன்பநலங்கள் சுரந்து இவள் தனியமர்ந்திருந்த பொழுது அத்தினபுரியில் குரு என்பவன் இளவரசனாய் நிலவியிருந்தான். அவன் சம்வர்ணன் என்னும் சந்திரகுலவேந்தனுடைய அருமைத் திருமகன். சிறந்த அழகன். பலகலைகளையும் வழுவறப் பயின்று தலைமைபெற்று நின்றான். யானையேற்றம், குதிரை ஏற்றம், ஆயுதத்தேற்ற முதலிய அருந்திறல் நிலைகளிலும் உயர்ந்திருந்தான். பேரரசுக்குரிய பெரு நலங்களெல்லாம் இவனிடம் பெருகியிருந்தன. அடியில் வருவது காண்க.

"பொருபெரும்படைத் தொழில்வயப் புரவிதேர் மதமா
மருவருந்தொழில் மன்னர் நீதியின்தொழில் வளங்கூர்

சுருதியின்தொழில் முதலிய தொழிலனைத் தினுக்கும்
குருவெனும் புகழ்க் குருவும் அக்குலத்தில் அங்குரித்தான். (௬)

வருகுலத்தவர் எவரையும் வரிசையால் இன்றும்
குருகுலத்தவர் எனும்படி பேரிசை கொண்டான்
இருகுலத்திறு மாசறு தேசினால் இவனுக்கு
ஒருகுலத்திலும் உரைப்பதற்கு உவமை வேறுண்டோ?" (பாரதம்)

அவனது அறிவும் ஆண்மையும் அருமையும் பெருமையும் இதனால் இனிதறியலாகும். இங்ஙனம் குலதிலகனாய் நிலவியிருந்த அத்தலைமகன் இக்குலமகளது எழில் நலனை வினவியறிந்து விழைவுமீக்கூர்ந்தான். இவளும் அக்கட்டழகனையே நினைந்து காமுற்று நின்றாள். அந்நிலை தெரிந்து வந்து உயர்ந்த சிறப்போடு உலகமறிய இவளை உவந்து மணந்துகொண்டான். அவ் ஆண்டகைக்கு ஏண்டிய இன்பநிலையமா யிவள் இசைந்திருந்தாள். மேகந்தழுவியமின்னல்போல அவனது ஆகம் தழுவி இவள் அகலாது இருந்தாள். இவளது போகவெள்ளத்தில் வீழ்ந்து ஏகபோகமாய் ஆழ்ந்து நாளும் மோகந் தணியாமல் அவன் மூழ்கிக் களித்தான்.

"தாம மார்பனும் தையலும் மெய்யுணர்
வாமி தென்றறி யாது களித்தவர்
தாமம் கொப்புளிக் குந்துகிற் சேக்கைமேல்
காமன் அப்பனைக் கள்ளுக வைகினார்."

என்றபடி அமளியில் வைகிவருங்கால் ஒருநாள் அவனுக்கு விக்கல் தோன்றியது; அவ்வமயம் தும்மலும் எழுந்தது. அதனைக் கண்டவள் எவளோ உங்களை நினைக்கிறாள்; அதனாலேதான், விக்கலும் தும்மலும் இப்படி விரைந்தெழுகின்றன எனப் புலந்துகொண்டாள். "யார் உள்ளித் தும்மினீர்!" என்று தலைவியர் புலந்தழுவர் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

"உடலினேன் அல்லேன் பொய்யா துரைமோ!
யார்அவள் ? மகிழ்ந ! தானே தேரொடு
தளர்நடைப் புதல்வனை யுள்ளி நின்
வளமனை வருதலும் வெளவி யோளோ." (ஐங்குறுநூறு)

வெளியே போயிருந்து சிறிதுபொழுது கழிந்துவந்த தலைவனைப் பார்த்துத் தலைவி புலந்துசொல்லியபடியிது. என்னை விழைந்து வராது போயினும் அருமைக் குழந்தையை நினைந்து கூட வீட்டுக்கு

வாதபடி எவள் உங்களை இப்படிக்கவர்ந்து வைத்திருந்தாள்? ஒளியாமல் சொல்லுங்கள்; கோபம் ஒன்றும் கொள்ளேன்; என அவள் இதில் ஊடியுரைத்திருக்கும் நிலையைப்பார்க்க. உடலல் = பகைத்தல். தலைவருடைய செயலியல்களில் தலைவியர் பலவகையிலும் ஐயமுற்றுப் புலவிகொள்வர் என்பது இதனால் அறியலாகும்.

தும்மினும் என்னைத் துயர்காண்பாள் ஐயமாய்
வெம்மை மிகுந்து வெகுண்டு.

தும்மினும் குற்றம் என்பது இதனால் கூறப்பட்டது.

1318. காவலன்முன் தும்மக் கனகவதி கண்சிவந்தேன்
கோவென் றழுதாள் குமரேசா—மேவுகின்ற
தும்முச் செறுப்ப அழுதாள் நுமருள்ளல்
எம்மை மறைத்திரோ வென்று. (அ)

இ-ள்.

குமரேசா! தும்மலடக்கிய நாயகனைக் கனகவதி என் வெம்மையுரைத்தாள்? எனின், தும்முச்செறுப்ப அழுதாள் நுமர் உள்ளல் எம்மை மறைத்திரோ என்று என்க.

தும்முச் செறுப்ப = தும்மலை அடக்க. செறுத்தல் = வெளிப்படாவகை அடக்கல். "நீரைச் செறுத்து நிறைவுற ஓம்புமின்" (நெய்தற்கலி 29),"செறுத்தோறுடைப்பினும் செம்புனலோடோர்" (நாலடியார்), "செற்றம் செறுத்தோர்" (மணிமேகலை 23), "வல்லாரை வல்லார் செறுப்பவும்"(பரிபாடல் 9). இவற்றுள்செறுத்தல் உணர்த்திநிற்றலறிக.

நுமர் = உம்முடைய உரிமையாளர். என்றது, காமக்கிழத்திகளாக் காத்து வைத்திருக்கும் கள்ளக்காதலிகள் என்றவாறு.

எம்மை என்றது நும்மோடு யாதும் உரிமையில்லாத எம்மை என வெம்மை தோன்ற உரைத்தபடி. அந்தக்கோபத்திலும் என்னை என்னாது பன்மையில் குறித்தது தன் தன்மை தெரிய. மறைத்திரோ? என்றது அம்மறை பொருளை விரகோடு விரைந்து தான் அறிந்துகொண்டதாகத் தருக்கி யுரைத்தவாறு.

மேல், தும்மியதால் புலந்தாள் என்றான்; இதில், தும்மலை யடக்கினாலும் அது விளைந்த தென்கின்றான்.

யான் தும்மலை யடக்கினேன்; உடனே அவள் உமது உறவாளர் உம்மை நினைத்தலை யாம் அறியாவகை மறைக்கின்றீரோ? என்று புலந்து அழுதாள் என்பதாம்.

“யார் உள்ளித் தும்மினீர்!” என்று முன்பு புலந்தாள் ஆதலால் இனித் தும்மலாகாதென்று நாயகன் துணிந்திருப்ப, இடையே தும்மல் மூண்டு கிளர்ந்து அடங்கியது; அடங்கவே உம்முடைய கள்ளக்காதலியர் நினைப்பதை எனக்குத் தெரியாமல் மறைக்கும் பொருட்டே இப்படித் தும்மலை யடக்கினீர்! நன்று நும்கள்ளம் என்று கன்றிப் புலந்துகொண்டாள்; கொள்ளவே அப்புலவி நிலையைத் தலைவன் இங்ஙனம் வருந்திச் சொல்லினான் என்க.

தும்மினாலும் குற்றம்; தும்மலை யடக்கினாலும் குற்றம்; என்றால் இனி இவளோடு நான் என்னதான் செய்வது? எனத் தலைவியின் புலவி நிலையை நினைந்து அவன் இனைந்து கூறியவாறிது.

நும் கள்ளக்காதலிகளை நான் காணாவகை மறைத்தீர்; உமது கள்ளம் தெரிந்ததென்று உள்ளம்புலந்து உருகிக்கலுழ்ந்து பிழையென இகழ்ந்து உழையொதுங்கினாள் ஆதலால் அழுதாள் என்றான். காதலிகளுடைய புலவிக்கும் அழுகைக்கும் ஒரு கரையில்லை என்பது இதனால் அறியலாகும்.

“சிலைமலி வாணுதல் எங்கையது ஆகம் எனச் செழும்பூண்
மலைமலி மார்பின் உதைப்பத்தந்தான் தலை; மன்னர்தில்லை
யுலைமலி வேற்படை யூரனிற் கள்வரில் என்ன வுன்னிக்,
கலைமலி காரிகை கண்முத்தமாலை கலுழ்ந்தனவே.”

(திருக்கோவையார்)

புலவிகொண்டிருந்த தலைவி, தலைவனை மார்பில் உதைத்தாள்; அவன் அது தீரும்வகை கருதித் தன் தலையினைத் தாழ்த்தித் தந்தான்; தரவே, நெஞ்சகத்தில் என் தங்கையாகிய வஞ்சி ஒருத்தியை மறைத்து வைத்திருத்தலால் அவள்மேல் உதைபடுமென்று சென்னியில் ஏற்றான்; இவனைப்போல் கள்ளன் ஒருவரும் இல்லை; அம்மா! என்ன திருடு! என அவள் மேலும் புலந்து கண்ணீர்சிந்தி அழுதிருக்கும் அழகை இதில் ஆய்ந்து பார்க்க. ஆகம் = மார்பு.

அன்புநலந் ததும்ப இன்ப நலங்களை இனிது நுகர்ந்து கனிவுகூர்ந்து வருதற்கு இடமாயிருத்தலால் ஊடலாடலின் தம் பெருமிதமெல்லா மறந்து காலில் விழுந்து பணிந்து சாலவும் புகழ்ந்து படாத பாடுகள் பட்டு அரிவையரிடம் இங்ஙனம் ஆடவர் அமர்ந்து நிற்பாராயினர். இதனால் அவர் தம் உள்ளக்களிப்பும், உரிமையும் உணரலாகும்.

> "கொள்ளைப் போர் வாட்கணாளுக்கு ஒருத்தி, ஓர் குமரனன்னான்
> வள்ளத்தார் அகலந்தன்னை மலர்க் கையால் புதைப்ப நோக்கி,
> உள்ளத்தார் உயிரன்னாள் மேல் உதைபடும் என்று நீர்நும்
> கள்ளத்தாற் புதைத்திரென்றே முன்னையிற் கனன்று மிக்காள்."
> (இராமாயணம்)

ஊடிய காதலி காலால் உதைக்க, மணியணி நிறைந்துள்ள மார்பில் அம்மெல்லிய கால்படின் வருந்துமென்றுநினைந்து காதலன் தன்னுடைய கைகளை முன்னுறக் கவித்தான்; கவிக்கவே, உள்ளே யிருக்கும் கள்ளச்சிறுக்குமேல் உதைபடும் என்றல்லவா? இதமாகப் புதைத்தீர் நன்று நும் கள்ளம் என்று மறுபடியும் அவள் மிகுதி யாகப் புலந்து கொண்டாள் என இஃதுணர்த்தி நிற்றல் காண்க. புலவி நிலையும் மகளிரியல்பும் இவற்றால் இனிது புலனாம்.

தலைவன் அம்மலையுள்ளே யடக்கினும் தலைவி வெம்மையொடு புலந்து கொள்வள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை கனகவதியால் உணரப்படும்.

## கதை.

கனகவதி என்பவள் ஜீமூதகேது என்னும் அரசனுடைய அருமைத் திருமனைவி. அருங்குலக் கற்பினள். பெருங்கவினு டையவள். ஒழுகொளி வண்ணமும் உருவும் செய்கையும் முழு மதியனையவாண்முகமும் மூரலும் விழுமிய நிலையினில் மேவியிருந் தனள். இக் கட்டழகியோடமர்ந்து காஞ்சனபுரம் என்னும் நகரிலி ருந்து அவ்வேந்தன் அரசுபுரிந்துவந்தான். அவன் நல்ல நீதிமான். அருளினது உறையுள்; அறத்தின் வேலி; என ஞாலம் புகழ அவன் நலம்புரிந்து வந்தான். குலம்புரி கொள்கையோ டமர்ந்து நலம் பல புரிந்து நின்ற அத்தலைமகனுக்கு அலகிலின்பங்களையுதவி இக்குலமகள் அன்பாற்றி வந்தாள். திருவும் தேசும் அறிவும்

அன்பும் மருவியிருந்த இச்சதிபதிகளிருவரும் ஒருவராய் உவந்து இன்பநுகர்ச்சியில் பெருகியிருந்தார். வேனிற்காலங்களில் குளிர் பூஞ்சோலைகளிலும், செய்குன்றுகளிலும், உய்யானங்களிலும், உறைந்து அருவியாடியும் நறுமலர்சூடியும் பொய்கையில் நீந்தியும் செய்மது மாந்தியும் மெய்யுருபோக மேவிக் களித்தார். தெருட்டியும், தெளித்தும், மருட்டியும், மகிழ்ந்தும், இடையறவில்லா இன்பப்புணர்ச்சியராயிங்ஙனம் இருந்து வருங்கால் இவள் திருவயிற்றிலிருந்து ஓர் அருமைக்குமரன் பிறந்தான். அவனுக்கு ஜீமூதவாகனன் என்று பெயர். அக்குலமகனை தயாவீரன் என உலகமெலாம் உவந்து புகழப் பெருங் கீர்த்தியோடு பின்பு நிலவி நின்றான். இவ்வண்ணம் பெரும் பாக்கியவதியாயிருந்த இவளிடம் அரும் போகங்களை நுகர்ந்து அவ் அண்ணல் அகமகிழ்ந்து வருங்கால் ஒரு நாள் பஞ்சணையிலிருந்தபடியே தும்மினான்; மறுபடியும் ஒரு தும்மல் எழுந்து செம்மையாக வெளிவராமல் தேய்ந்து அடங்கியது. அடங்கவே இவள் அவனை விரைந்து நோக்கினாள். "நினைந்துள்ள எவளையோ மறைத்ததற்காகவே நீங்கள் இதனை அடக்கினீர்கள்! தெரிந்தது உங்கள் திருட்டுத்தனம்" என்று இடக்குரையாடி எதிரே புலந்தாள். தும்முச்செறுப்பினும் தலைவியரிடம் புலவி நிகழும் என்பதை உலகம்காண இவள் உணர்த்தி நின்றாள்.

தும்மல் வராமல் சுருங்கினும் குற்றமேனின்
அம்மவினி என்செய் வது.

தும்மாதொழியினும் புலவியாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1319. மாசி லுயர்சோதி மாலை தனைபுணர்த்தக்
கூசியேன் காய்ந்தாள் குமரேசா—ஆசையொடு
தன்னை புணர்த்தினுங் காயும் பிறர்க்குநீர்
இந்நீ ராகுதி ரென்று. (௯)

இ-ள்.

குமரேசா! தன்னை நாயகன் வணங்கி புணர்த்திய பொழுது சோதிமாலை ஏன் பிணங்கிக்காய்ந்தாள்? எனின், தன்னை உணர்த்தினும் பிறர்க்கும் நீர் இந்நீர் ஆகுதிர் என்று காயும் என்க.

இது, தலைவன் வணங்கிய பொழுது தலைவி பிணங்கி நின்றது. தன்னை என்றது தலைவியை. உணர்த்தல் = ஊடல் தீர வேண்டல். "உறைத்தும், செறுத்தும் உணர்த்துவானைப் புல்லாது ஊடிப் புலந்து நின்றவள்" (பரிபாடல் 12); "மணங்கமழ் ஐம்பாலார் ஊடலை ஆங்கே, வணங்கி யுணர்ப்பான் துறை" (நெய்தற்கலி 14) இவற்றுள் உணர்த்தல் உணர்த்தி நிற்றலை யறிக.

தவறுடையன் என்று தவறாக எண்ணித் தலைவி ஊடிய பொழுது தலைவன் தனது ஒழுக்க முண்மையை அவள் உளந் தெளிந்தருளும்படி பணிமொழி பகர்ந்து வணங்கி உணர்த்துவன் ஆதலால் "தன்னை உணர்த்தினும்" என்றான்.

புலவி தீரும் வகை பணிந்துணர்த்திப் பரிந்து வேண்டிய விடத்தும் இணங்கியருளாமல் பிணங்கிச்சினந்து நின்றாள் ஆதலால் "உணர்த்தினும் காயும்" என்றான். உம்மை அவ்வுணர்த்தலின் தன்மையுணர நின்றது.

இந்நீர் ஆகுதிர் = இத்தன்மையராய் அமைவீர். அத்தன்மையாவது காதலி புலந்த விடத்துக் காலில் விழுந்து வணங்கி வேண்டுதல்.

மேல், தும்மலை அடக்கி நடுங்கினேன்; இதில், தொழுது துளங்கினேன்.

யான் இவளை வணங்கி யுணர்த்தியபொழுதும் இரங்காமல் பிறமகளிர்க்கும் நீர் இவ்வாறு தானே வணங்குவீர் என்று பிணங்கி வெகுண்டாள் என்பதாம்.

தலைவி புலவியில் நிமிர்ந்திருந்த சமயம், நான் தவறு ஒன்றும் செய்திலேன்; விபரீதமாக நினைந்து என்னை வீணாக வெகுளாதே என்று தலைவன் பணிந்து நின்றான்; நிற்கவே, இப்படித்தானே மற்றவள் எவளாவது புலந்தபொழுது நீர் வணங்கியமைவீர்! உமது மதிப்பும் மாண்பும் மிக அழகாயிருக்கின்றன எனக் கொதித்தாளாதலால் அதனை இங்ஙனம் அவன் உரைத்தான் என்க.

நயந்து புகழ்தல், பயந்து மொழிதல், வியந்து கொண்டாடல் முதலிய இனிய உபாயங்களால் தீராமல் புலவி தலை நிமிர்ந்து நின்றால் அவ்வமயம் தலைவியரைத் தலைவர் தொழுதுவேண்டுவர் ஆதலால் அம்முடிவான உபாயத்தை இங்கு மூண்டு செய்தான்.

"சில்லரிக் கிண்கிணிமென் தெய்வமலர்ச் சீறடியைத்
தொல்லை மணிமுடிமேற் சூட்டினான்—வல்லை
முழுநீலக் கோதை முகத்தே மலர்ந்த
செழுநீல மாருச் சிவப்பு." என வரும் இதில்

ஒரு குலமகன் புலவியில் தன் தலைவியைப் பணிந்திருத்தலறிக.

வசந்தகாலம் ஒன்றில் பனிமலர்ச் சோலையில் உல்லாசமாகச் சீதையோடு இராமன் ஒருமுறை உலாவி வருங்கால் அங்கு நின்ற தென்னங் குரும்பைகளையும், பனங் குரும்பைகளையும் வியந்து நோக்கினான்; அங்ஙனம் நோக்கி வருவதைக் கண்டு சனகி சங்கை கொண்டு "மங்கையர் கொங்கைகளை ஒத்திருக்கின்ற அவற்றை ஏன் இங்ஙனம் விறைந்து பார்க்கிறார்?" என்று அத்தேவி புலந்து கொண்டாள்; கொள்ளவே அவ்வள்ளல்பணிந்துஉள்ளதையுணர்த்தி உவந்தருளும்படி உருகி வேண்டினான். அதன்பின் அப்புலவி தணியலாயது. அடியில் வருவதுகாண்க.

"பட்டிகை யுடுத்த பங்கயவல்குற் படர்முலைப் பவளவாய்ச் சீதை
இட்டிடை மெலிய துண்டுகிற்றோகை யிருநிலத்தைவரப் பெயர்ந்து
கட்டழ குடைய காளையோடாடிக் காமர்மென் செழுமலர் கொய்து
வட்டிகை நிட்டும் ஓவமு நாண மாதவிப் பந்தரினடைந்தாள்.

மடலவிழ் பெண்ணைக் குரும்பையை நோக்கும் வள்ளலை முனிந்து பைந்தோகை, படைமலி நெடுங்கண் சிறிதுசேப்பூரப் பைந்துழாய்த்துயல் வருந்தோளாய், அடிமலர் நீவித் தொழுததை முனியின்உய்யுமா றரிதெனவிறைஞ்ச, விடுகதிர்முத்து முருந்தமு நாண வெண்ணிலா நகை முகிழ்த்தனளால்" (கூர்மபுராணம்)

புலவி நிலையும், தலைவன் பணிவும் இதில் நிலவியுள்ளமை காண்க.

பணிவினும் புலவி தணியாது காயும் என்றால் இது நியாயமாமோ? எனின், தணிந்து கொள்ளினும் தம் வேட்கை நிலையை வெளியே காட்டாமல் காதலர்க்குக் கலவிசுவை மீறும்படி கள்ளமாய்ப் பலர் தள்ளி நிற்பர் என்க. ஒன்று அடியில் வருவது காண்க.

"உமிழ்தேன் பிலிற்றும் ஒள்ளிணர்க் கூந்தல்,
அமிழ்துகு மழலை அம்மென் றீஞ்சொல்,
சில்லரித் தடங்கண் மெல்லியல் ஒருத்தி
வரிசிலைத் தடக்கைக் குரிசில் மற்றெருவன்
பொன்னெடு மார்பிற் பொலன்கலன் இமைப்பத்
தன்னுருத் தோற்றம் தரிக்கலள் வெகுண்டு,
மாலா யினனென வணங்கினை யிரத்தலின்,
தோலா மொழியை வாழிய பெரிதெனப்

புலந்தனள் எழுதலும், கலங்கினன் வெரீஇக்,
கண்மலர் சிவப்ப மெய்பசப்பு எய்தலின்
தானும் மாலாந் தன்மையள் கொல்லெனத்
தேறினன் தாழ்ந்து சிலம்படி திருத்திப்
பஞ்சியிற் பொலிந்த குஞ்சியன் றிரப்பக்,
கூடினள் அல்லள்; கூடாள் அல்லள்;
கைம்மிகு சீற்றமும் காதலும் அலைப்ப
வெள்ளப் புணர்ச்சியின் வேட்கை யுள்ளடக்கி
உள்ளப் புணர்ச்சியன் மாடினள் நிற்பது
தாதவிழ் தெரியற் சாக்கியர் பெருமான்
காதல் உட்கிடப்பக், கல்லாறிந் தற்றே." (திருவாரூர் நான்மணிமாலை)

அணுகி யமர்ந்து இனிமையா யுரையாடிக் கொண்டிருந்தபொழுது நாயகன் மார்பிலணிந்திருந்த பொற்பதக்கமணியில் நாயகியின் உருவம் தோன்ற, அதனைக் கண்டவள் எவளையோ ஒரு அழகியை அவன் நெஞ்சுள் ஒளித்து வைத்திருப்பதாகக் கருதிப்புலந்து காய்ந் தெழுந்தாள்; எழவும் நின்மீது மாலாயினேன் மன்னித்து அருள் என அவன் வணங்கினான்; வணங்கவும் மால் என்றது சாலவும் பொருந்தும்; மார்பில் அக்கள்ள மாயன் வைத்திருப்பதுபோலவே நீரும் ஒருத்தியை உள்ளே வைத்திருக்கிறீர்; பொய்யா மொழியீர்! அவளோடு கூடி நீடு வாழ்வீராக; என்று மேலும் ஊட, அவன் காலில் விழுந்து வேண்டினான்; உடனே புலவி ஒழிந்து கலவியை விழைந்தாள்; விழைந்தும் அவ் வேட்கையை வெளிக் காட்டாமல் உள்ளங் கரந்து கள்ளஞ் செய்து நின்ற நிலையை இதோதுணர்ந்து நிற்ற லறிக. காதல் நலங்கனிந்து, பேதைமை கலந்து, மேதகவோடு புலவி விளைந்திருக்குந் தன்மையையும், காதலர் அதனை விழைந்துகொள் ளும் வன்மையையும், இதில் ஊன்றி நோக்கி யுணர்ந்து கொள்க.

காதலன் பணியினும் காதலி புலவி தணியாள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சோதிமாலையால் உணரப்படும்.

## கதை.

சோதிமாலை என்பவள் திகிட்ட மன்னனுடைய அருமைத் திருமகள். தனது பெயர் நிலைக் கேற்ப ஒளிவளர் மேனியளாய் எழில் நலங் கனிந்து இளமை ததைழ்ந்து இனிதமர்ந்திருந்தாள். அரச திருவோடு அரும்பெற லுருவும் பெருங்கலையறிவும் ஒருங்

தலைமையைப் பெற்றுப் பெருந்தகவுடன் பொருந்தி விளங்கினாள். இக் குலமகள் அழகிய தோழிகளுடன் விழுமிய மாடத்தில் கன்னிமை காத்து மன்னி வருங்கால், தந்தையானவன் வரனை நேரில் அறிந்து கொள்ள விரும்பி மன்னவர் சுயவரம் குறித்து உலகமறிய விடுத் தான். அத் திருமுரசம் கண்டவுடன் அரசகுமாரர்கள் ஆவலோடு விரைந்தடைந்தனர். குறித்த நாளில் மணமண்டபத்தில் அணியணி யாக அனைவரும் நெருங்கி யிருந்தனர். நல்ல முகூர்த்தத்தில இப்பெண்மணியைஅலங்கரித்துப் பாங்கியரும் செவிலியரும் பக்கம் சூழ்ந்து மிக மேன்மையோடு அழைத்து வந்தார்.

"பொன்னேநன்மணிக்கொம்பே! பூமிமேல் ஆரணங்கே! போற்றிபோற்றி; அன்னே எம் அரசர் குலத்தவிர் விளக்கே! ஆரமிர்தே! போற்றி யுன்றன் மின்னேர்நுண்ணிடைநோமால்மென்மலர்மேல்மென்மெலவே ஒதுங்காய் என்று மன்னோர் செய் அயில்நெடுங்கண்மங்கைமார்போற்றிசைப்பமாடம் புக்காள்." (சூளாமணி)

இன்னவாறு பன்னருஞ்சிறப்புடன் வந்த இக்கன்னி மணமா ளிகை புகுந்த பொழுது மன்னரெல்லாரும் உருகிநோக்கிப் பெரு மால் கொண்டார். இடையேயமைந்திருந்த மணி மேடையை நோக்கி எழிலொழுக இவள் நடந்து செல்லுங்கால் அவர் கண்ணிமை யாது களித்து என்றுறுதனவெல்லாம் எண்ணி யேங்கி யிருந்தார்.

"வண்டுவழி செல்ல, வயமன்னர் மறிசெல்லக்,
கண்டவர்கள் கண்கள் களி கொண்டுருகு செல்ல,
எண்டிசையும் ஏத்தொலியொ டின்னொலிகள் செல்ல,
விண்டமலர் அல்லிமிசை மெல்லநனி சென்றாள். (க)

அம்மெல் அடிதாம் அரசர் ஆவியொடு நோவச்,
செம்மெல்லிதழ் வாயொடவர் சிந்தனை துடிப்ப,
வெம்முலைக ளோடவர்கள் காதல்மிக வீங்க,
மைம்மலர் நிகர்க்கு மணி மாளிகை யடைந்தாள்." (சூளாமணி)

இங்ஙனம் அடைந்தவள் பீடமீதேறிப் பீடுபெற நிற்ப அருகு நின்ற ஒருத்தி அரசர் நிலைகளை வரன்முறையுரைத்துவந்தாள்; வருங்கால் விழிபரப்பி நோக்கி வந்த இவள் இடையிருந்த ஓர் அழகனை நோக்கி விழைவுமீக்கூர்ந்து மாலையை வீசினாள். அவன் அருக்ககீர்த்தி என்னும் விஞ்சையர் வேந்தனுடைய அருமைத் திருமகன். ஏந்தெழிலுடைய வன். அமிததேசன் என்னும் இனிய பெயரினன். அறிவும் உருவும்

அமைதியும் பொலிவும் பெரிதும் சார்ந்து மருவியிருந்த அவனை உரிமையாக இவள் உவந்து வரைந்து கொண்ட பொழுது பிறரெல்லாரும் தாங்களும் அவாவுடன் ஏங்கலானார்.

"புனைவுதா னிகந்த கோதைப் பொன்னனாள் பூமிபாலர்
நினைவுதான் முகந்து காளை வடிவெனும் நிகளம் சேர
வினைகள் தாம் விளையுமாறியாம் வேண்டிய வாறு வாரா
இனையதால் வினையின் தன்மை யென நினைந்தாறினாரே." (சூளாமணி)

அனைவரும் இவ்வகை யாற்றியமர விதிமுறை இவளை அவன் மணந்து மகிழ்ந்து அதிபோகங்களை நுகர்ந்து சில நாள் அங்கமர்ந்திருந்து பின்பு இவளோடெழுந்து தன் எழில் நகரடைந்தான்.

"சோதியம் பெயரினாளும் சுடரவன் புதல்வன் றானும்
காதலிற் களித்துத் தங்கள் கனவரை யுலகம் சார்ந்தார்."

இங்ஙனம் சேர்ந்தவர் ஆர்ந்த ஆர்வத்தோடு தோய்ந்து நாளும் இன்ப வெள்ளத்தில் ஆழ்ந்திருந்தார். போக பூமியில் பொருந்தினார் என வளர்ந்திருந்து, ஏகபோகமா யிணை பிரியாது இவர் இருந்து வருங்கால், ஒருநாள் இனிய அமளியில் இளமுலை தழுவி யுளமகிழ்கூர்ந்த பின் புலவி நிகழ்ந்தது. இருவரும் உல்லாசமாயுரை யாடி வருங்கால் கந்தருவ மகளிருள் அமிர்தவதி எனச் சிறந்திருந்த ஒருமங்கையின் எழில் நலங்களையும் கலை நிலையையும் குறித்து அவன் புகழ்ந்து பேசினான். பேசவே அவள் மீது ஆசைபோலும் என்று இவள் அகம் புலந்து சினந்தெழுந்தாள். வெறும் வார்த்தையே யன்றி வேறு யாதும் நான் விழைந்து கொண்டதில்லை; உண்மையிது; உணர்ந்தருள் என அவன் வணங்கி யுணர்த்தினான். தம் தலைமையை மறந்து இங்ஙனம் என்னைத் தாழ்ந்தீராயின் எங்கும் இந் நிலைமைதானே நீளச் செய்வீர்! ஆளழகு நன்று! என மேலும் சினந்து அவள் மிகுந்து பிணங்கினாள். பிழைஇலன் எனத் தலைவன் தாழ்ந்து உணர்த்தினும் தலைவி காய்ந்து புலப்பள்என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

தொழுது புகன்றேன் துனியா யதுவும்
பழுதென் றழன்றாள் பரிந்து.

வணங்கினும் புலவி நுணங்கியெழும் என்பது இதனால்கூறப்பட்டது.

1320. சார்ந்தவன் நோக்கினன் சாருமதி காய்ந்துமுன்
கூர்ந்திகழ்ந்தாள் என்னே குமரேசா — நேர்ந்து
நினைத்திருந்து நோக்கினுங் காயும் அனைத்துநீர்
யாருள்ளி நோக்கினீ ரென்று. (௰)

இ—ள்

குமரேசா! காதலன் கனிந்து நோக்கிய பொழுது சாருமதி என் புலந்து கூறினாள்? எனின், நினைத்து இருந்து நோக்கினும் காயும் அனைத்தும் நீர் யார் உள்ளி நோக்கினீர் என்று என்க.

இது, விழைந்து காணினும் புலவி விளைந்தமை தெரிகின்றது.

காய்தல் = கோபித்தல். காய்வள் என்னாது காயும் என அஃறிணைவாய்பாட்டால் குறித்தது அவளது பெண்மையும் பேதைமையும் தெரிய. நினைத்து = உருவநலனை எண்ணி.

அனைத்தும் = அவயவங்கள் எல்லாவற்றையும். முகம் கண் செவி இதழ் தோள் முதலிய உறுப்புக்களை விருப்பமொடு ஊன்றிப் பார்த்தான் ஆதலால் "அனைத்தும் நீர் நோக்கினீர்" என்றாள். வேறு மகளிரை நினைந்துகொண்டு தன்னை அவரோடு ஒப்புப் பார்ப்பதாகச் சினந்தாள் ஆதலால் "யார் உள்ளி?" என்றாள். எந்தச் சிறுக்கிகளை உள்ளே எண்ணி, வெளியே இந்தப் பார்வை பார்க்கிறீர்கள்? என்பாள் இங்ஙனம் வினயமாக உரைத்தாள்.

ஒன்றும் பேசாமல் அமர்ந்திருந்து அவளை ஆசையொடு பார்த்தாலும் இவ்வளவு தூரம் யாரை நினைந்துகொண்டு என்னை யிப்படிப் பார்க்கிறீர் என்று சினந்து தலைவி புலந்து கொள்வள் என்பதாம்.

யாது செய்யினும் என்ன சொல்லினும் எல்லாவற்றையும் குற்றங்களாகவே கொள்கின்றாள்; இனி ஒன்றும் பேசலாகாதென்று வாயை மூடிக்கொண்டு மௌனமாயிருந்து தலைவியை ஆவலோடு பார்த்தான்; பார்க்கவே யாரையோ மனதில் நினைத்துவைத்து அல்லவா இமைகொட்டாமல் நம்மை இப்படி ஒப்பு நோக்குகிறார் என்று அவள் வெப்புற்றுப் புலந்தாள் ஆதலால் அப் புலவி நிலையைத் தோழியிடம் தலைவன் இங்ஙனம் உரைத்தான் என்க.

தனது சொல் செயல்கள் எல்லாவற்றிலும் அவள் பிழைகளைக் கற்பித்துக் கொள்கின்றமையால் அதற்கு வழியில்லாமல் வாய்ப்ப நாடிச் சிறிதுநேரம் வாய் பேசாமல் அமர்ந்து பார்த்தான் ஆதலால் "நினைத்து, இருந்து நோக்கினும்" என்றான். சும்மா இருந்தா லும் தவறு என்றால் அம்மா! இனி இவளோடு நான் யாது செய்வது என்று வேதனையோடு இவ்வாறு வெதும்பி மொழிந்தான்.

தும்மினும் குற்றம்; தும்மலை அடக்கினும் குற்றம்; மலர் சூடினும் குற்றம்; அளவளாவி அன்புரை யாடினும் குற்றம்; உண்மை பேசினும் குற்றம்; வணங்கினும் குற்றம்; நோக்கினும் குற்றம்; மௌனமா யிருப்பினும் குற்றம்; இனி இவளோடு என்ன தான் செய்வது? எனப் புலவி நிலையில் தலைவியுடன் தலைவன் புலம்பி யிருக்கும் நிலைகளை முறையே இதில் ஊன்றி யுணர்ந்து கொள்க.

உழுவலன்புடைய தலைவியர் காதல் நலங் கனிந்து தலைவ ரோடு புலந்துகொள்ளு நிலைமையும், அமளியிலிருந்து அவர் அமளி செய்யுந் திறமையும், அப் புலவியில் கலவி யின்பத்தை அவாவித் தலைவர் படும் பாடும் இதனால் இனிதறிந்து கொள்ளலாம்.

தனது மாமன் மகளாகிய இலக்கணையை மணந்து சீவகன் இன்பந் துய்த்து வருங்கால் ஒருநாள் பஞ்சணையில் அவளது விஞ்சிய அழகை வியந்து நோக்கினான்; நெடுநேரம் இமையாது பார்த்தமையால் கண்களில் நீர் கசிந்து ததும்பியது; ததும்பவே வேறு எவளையோ நினைந்தழுகிறதாக அவள் சினந்து புலந்தாள்; அவன் உண்மையை வணங்கி யுணர்த்தினான்; உணர்த்தியும் அவள் இணங்கி யருளாமையால் அவன் உணங்கி யுளைந்து உருகி மறுகி னான். பின்பு அவள் இரங்கி இணங்கவே அவன் அணைந்து மகிழ்ந் தான். அவ் ஊடல் நிலையை அடியில் வரும் பாடல்களில் காண்க.

சீவகன் நோக்க, இலக்கணை புலந்தது.

"மாதர்தன் வனப்பு நோக்கி மகிழ்ந்துகண் இமைத்தல் செல்லான்
காதலித் திருப்பக் கண்கள் கசிந்துநீர் வரக்கண்டு அம்ம!
பேதைமை பிறரை யுள்ளி அழுபவர்ச் சேர்தல் என்றாள்
வேதனை பெருகி வேற்கண் தீயுமிழ்ந் திட்ட வன்றே. (க)

### அவள் புலந்து செய்தது.

நாறு சாந்தழித்து, மாலை பரிந்து, நன்கலன்கள் சிந்திச்,
சீறுபு செம்பொனாழி மணிவிரல் நெரித்து, விம்மா
ஏறியும் இழிந்து மூன்றும் புருவங்கள் முரிய நொந்து,
தேறுநீர் பூத்த செந்தாமரைமுகம் வியர்த்து நின்றாள். (௨)

### அவன் வணங்கி வேண்டியது.

இற்றது என் ஆவி என்று எரிமணி யிமைக்கும் பஞ்சிச்
சிற்றடிப் போது புல்லித் திருமகன் கிடப்பச், சேந்து
பொற்ற தாமரையிற் போந்து கருமுத்தம் பொழிய வேபோல்
உற்றுமை கலந்து கண்கள் வெம்பனி யுகுத்த வன்றே. (௩)

### வண்டுகளிடம் வாய்விட்டது.

கொண்டபூண் நின்னைச்சார்ந்து குலாய்க் கொழுந் தீன்ற கொம்பே!
கண்டுகண் கரிந்து நீரா யுகுவது காக்க லாமே?
பண்டு யான்செய்த பாவப் பயத்தை யார்க்குரைப்பன்? தேன்காள்!
வண்டுகாள்! வருடி நங்கை வரந்தர மொழிமின் என்றான். (௪)

### பூவையும் கிளியும் பொங்கி மொழிந்தது.

பூவையும் கிளியும் கேட்டுப் புழைமுகம் வைத்து நோக்கிக்
காவலன் மடந்தை யுள்ளம் கற்கொலோ? இரும்புகொல்லோ?
சாவம்யாம் உருகி ஒன்றும் தவறிலன் அருளு நங்கை
பாவை யென்று இரந்து மென்ற பறவைகள் தம்முட்டாமே. (௫)

### பூவை கிளியை அச்சுறுத்தியது.

பெற்றகூழ் உண்டு நாளும் பிணியுழந் திருத்தும் பேதாய்!
முற்றிழை சொல்லின் நங்கை மூன்றுநாள் அடிசில் காட்டாள்;
பொற்றொடித் தத்தையீரே! பொத்து நும் வாயை என்றே
கற்பித்தார் பூவையார்தங் காரணக் கிளவி தம்மால். (௬)

### கிளி இரங்கி வருந்தியது.

பழியொடு மிடைந்த தேனும் சிறடி பாவினாற்கு
வழிபடு தெய்வ மாகி வரங்கொடுத் தருளல் வேண்டும்;
ஒழிபடைக் களிறுபோல உயங்கவு முருகி நோக்காப்
பிழிபடு கோதை போலாம் பெண்டிரைக் கெடப்பிறந்தான். (௭)

### அது சாகலோ, இவள் ஆகம் நேர்ந்தது.

ஈன்றதா யானுமாக இதனைக் கண்டு உயிரை வாழேன்
நான்றியான் சாவல் என்றே நலக்கிளி நூலின் யாப்ப
மான்றவள் மருண்டு நக்காள்; வாழிய வரம்பெற்றேன் என்று
ஆன்றவன் ஆரப் புல்லி அணிநலம் பரவினானே." (௮)

(சீவக சிந்தாமணி.)

சீவகன் விழைந்து நோக்கியதும், அவன் மனைவி புலந்ததும், அவளை வணங்கி அவன் வேண்டியதும், அவள் விரைந்து இணங்காமையால் அவன் வண்டுகளிடம் முறையிட்டதும், அதனைக்கண்டு கிளி வருந்திப் பேசியதும், அக்கிளியைப் பூவை இகழ்ந்து சொன்னதும், அது சாகத் துணிந்ததும், அதன் அன்புரிமையைக் கண்டு அவளை வியந்து சிரித்ததும், சிரிக்கவே புலவி நீங்கியதென்று உளமிக வுவந்து உடனே அவளை இவன் தழுவி மகிழ்ந்ததும் இதில் நுணுகி புணர்ந்து கொள்க. "நோக்கினும் காயும்" என்ற அடிகள் வாக்கை அடியொற்றி இது வந்துள்ள அழகை ஆய்ந்து பார்க்க.

காதலன் கனிந்து காணினும் காதலி புலந்து நீளுவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சாருமதிபால் உணரப்படும்.

## கதை.

சாருமதி என்பவள் கண்ணனுடைய அருமைத் திருமகள். உருக்குமணியின் திருவயிற்றில் பிறந்தவள். பேரழகும் பெருங் குணங்களும் ஒருங்கமையப் பெற்றவள். "நேரொவரும் எதிருளையா நிறையெழிலும் பொறை நலனும், சாருமதி யினிதமைந்து தண்மதி போல் தழைத்திருந்தாள்" என இங்ஙனம் இன்பநலங்கள் கனிந்து இசைமிகுந்திருந்த இவளை விசாலாக்கன் என்னும் அரசிளங்குமரன் விழைந்து நின்றான். அவன் கிருதவன்மா என்னும் அரசனுடைய அருமைத் திருமகன். கலையறிவிலும் கவினிலும் தலைசிறந்தவன். சிலையாண்மையிலும் நிலையான புகழ் பெற்றவன். உருவ முதலிய பலவகையிலும் நிறையொத்திருந்த அத் தலைமகனுக்கு இக்குலமகளை உவகையோடு மணஞ்செய்துகொடுத்தார். அடியில்வருவதுகாண்க.

"தெய்வக்கமல மலர் துறந்து தெண்ணீர் விதர்ப்பநாடளிக்கும்
வைவேற் றடக்கை மன்னவர் பொன் மனைவந் துதித்த மடமாது
பௌவத்திரையிற் கிளைக்குமிளம் பவளக் கொடிபோல் விளங்குமொரு
கொவ்வைச்செவ்வாயமுதுகுமென் குதலைத் தீஞ்சொல் மகப்பெற்றாள்.

மன்றற் கோதை திருவயிறு வாய்த்த சாருமதி என்னும்
கொன்றைக் குழலைக் கொழுங்குருதி குமிழி யெழுவேற் கிருதவன்மா
என்றிப்புவனம் ஈரேழு மிசைக்குந் திறல் மன்னவனுயிர்த்த
வென்றிக் களிற்று விசாலாக்கன் விரிதார் புனைந்து வேட்டனனால்".
(பாகவதம்)

இவ்வாறு மணந்து கொண்டு இவ்வழகியோ டமர்ந்து அளவி லின்பங்களை அவன் நுகர்ந்து வந்தான். ஒருவா துவந்து மருவி யிருந்து பரம நலங்களில் இருவரும் திளைத்து வருங்கால் ஒரு நாள் அவன் இரதமூர்ந்து போசகடம் என்னும் நகரில் நடந்த விழாவினைக் காணச் சென்றான். இவள் தனியே மறுகி யிருந்தாள். அவன் மீண்டு வந்து இனி யாண்டும் யான் வழுவி யகலேன் என இவளைத் தழுவித் தேற்றி மகிழ்ந்தான். மறுநாள் இரவு அமளியில் அமர்ந்திருக்கும் பொழுது எதிரே யிருந்த நிலைக் கண்ணாடியில் இரு வருருவமும் எழிலோடு தோன்றின. அதில் இவளது உருவத் தோற்றத்தை அவன் ஊன்றி நோக்கினான். நாளும் பழகியது தானே; இன்று புதிதாக இந்தக் கடும் பார்வை எதற்கு? போன இடத்தில் பழகிய எவளையோ நினைந்து கொண்டே என் உருவோடு ஒப்புப் பார்க்கின்றார்; என உள்ளம் கனன்று உருத்தெழுந்து "போதும்கூட - இருந்தது" என்று இவள் புலந்துபோனாள். போகவே யான் யாதொரு தவறும் செய்யவில்லையேயென்று அவன் பரிந்து நின்று பணிந்து மொழிந்தான். அதன்பின் தணிந்தமர்ந்தாள். உவந்து நோக்கினும் அனைத்தும் நீர் யார் உள்ளி நோக்கினீர் என்று தலைவியர் காய்வர் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது

காதலோடு பார்த்தாலும் காய்ந்து புலந்தக்கால்
ஏதுநான் செய்வே னினி.

பேசாதிருப்பினும் புலவி கூசாது வரும் என்பது இதனால் கூறப் பட்டது.

## இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்.

அயல்முகம் பார்த்ததால் இந்த அழுங்க லாகாதென்று தலைவனை நோக்கித் தலைவி புலந்து மொழிவள். அவன் தும்மினும் அதில் தோடம் காண்பள். மாலையைச் சூடினும் அது சாலம் என்பள். நல்லது சொல்லினும் அல்லதாகக் கொள்வள். அன்பொடு பேசினும் வன்பொடு சீறுவள். உள்ளினேன் என்றால் கள்ளமே என்பாள். வழுத்தினும் வழுவென் றுரைப்பள். தும்மலை யடக்கினும் வெம்மை என்பள். வணங்கினும் வருந்திப் பிணங்குவள். உவந்து நோக்கினும் புலந்து கூறுவள் என்பதாம்.

௱௩௨-வது புலவி நுணுக்க முற்றிற்று.

# 133ம் அதிகாரம் ஊடலுவகை.

அஃதாவது தலைவியும் தலைவனும் ஊடலை விரும்பி உவந்து கொள்ளுதல். புலவியின் பயனைப் பொங்கி யெழுந்த கலவி யின்பத்தை நுகர்ந்து அதன் அளவில் கலங்கலை யறிந்தபின்பு இவ்வூடலி உவகை விளையும் ஆதலால் புலவிநுணுக்கத்தின்பின் இதுவைக்கப்பட்டது. புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என்னும் காமபாகங்கள் ஐந்தனுள் முன்னைய நான்கையும் முறையே யுணர்த்திப் பின்னின்ற ஊடலை நெஞ்சொடுபுலத்தல் முதலாகப் பல படியாகப் பகுத்து விளக்கி, முடிவில் அதன் உவகை நிலையைப் படியறிந்து மகிழ அடிகள் இதில் சுவையுற உணர்த்தலானார்.

> "புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்
> ஊடல் இவற்றின் நிமித்தம் என்றிவை
> தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே." (தொல்காப்பியம்)

என ஆசிரியர் தொல்காப்பியனார் ஊடலை இதன்கண் இறுதியில் வைத்துள்ளமை காண்க. இதனால் அவ்வாதுபேர் இலக்கணத்துக்கு நேர் இலக்கியமாய் இஃதமைந்துள்ளமை இனிது புலனாம். இன்ன நிலத்திற்கு இன்ன செயல் உரிமையாம் என வரையறை செய்திருத்தலால் இவை திணைக்கு உரிப்பொருள் என்றார். திணை = நிலம். அது, மலை வனம் காடு கடல் நாடு எனப்பிரிந்து ஒருங்கே கூடியிருக்குமாதலால் அச்சார்பு பற்றிப் பேர் பெற்று நிற்கும். நிற்கவே மலைசார்ந்த இடம் குறிஞ்சி; வனம்சார்ந்தது பாலை; காடு சார்ந்தது முல்லை; கடல் சார்ந்தது நெய்தல்; நாடு சார்ந்தது மருதம் என வந்து மேலே குறித்த புணர்தல் முதலியவற்றிற்கு முறையே உரிமையாம். ஆகவே இவ்வூடல் மருத நிலத்திற்கு உரித்தென்பது உணர நின்றது. காதலர் ஒழுக்கில் கூடலும் ஊடலும் மிகவும் சிறந்தன ஆதலால் அவை முதலிலும் முடிவிலும் இதமுற நின்றன. முதன் முதல் கூடுதல் குறிஞ்சிக்கு உரிமை ஆகலான் அந் நிலத் தெய்வமாகிய முருகப்பெருமான் கந்தருவ முறையில் வந்து வள்ளித்தாயை மணந்து மகிழ்ந்ததை இது முந்துறக்கொண்டது. கூடல்போலவே ஊடலும் அன்புகலந்து கனிந்து இன்ப நிலையமாய் இனிதமர்ந்திருக்குமாதலால் ஊடலுவகை எனவைத்து இறுதியில் உறுதிபெற உணர்த்துகின்றார்.

1321. ஓர்தவறும் காணாமல் ஊடித் தபதியேன்
கூர்துனிமுன் கொண்டாள் குமரேசா—வேறொன்றும்
இல்லை தவறவர்க் காயினு மூடுதல்
வல்ல தவரளிக்கு மாறு. (க)

இ—ள்.

குமரேசா! தன் கணவனிடம் தவறு இல்லாதிருந்தும் தபதி ஏன் ஊடி நின்றாள்? எனின், தவறு அவர்க்கு இல்லை ஆயினும், அவர் அளிக்குமாறு ஊடுதல் வல்லது என்க.

இது, தலைவி ஊடலை உவந்தமையை யுரைக்கின்றது.

அவர் என்றது தலைவனை. தவறு=குற்றம். அஃதாவது பரத்தையர் விழைவு முதலிய களவுகள். தவறுடைமை, ஊடலுக்குக் காரணமாகுமாதலால் அத் தவறில்லாமையை வெளியாக எடுத்துக் காட்டினாள். "அனைத்தோளாய், நீயாரைப் போலத் திறனின் றுடற்றுதி, காயும் தவறிலேன் யான்" (மருதக்கலி 22). தன்னோடு ஊடிய தலைவியை நோக்கி நான் ஒரு தவறும் செய்திலேனே! வீணே சீறுகின்றாயே! என ஒரு தலைவன் இதில் கூறியிருத்தலறிக.

அளிக்கும் ஆறு=அளிபுரிகின்ற விதம். ஆறு வல்லது என்க. தான் ஊடியதற்குக் காரணம் கூறியவாறிது.

தவறு இல்லை ஆயினும் ஊடுதல் வல்லது என்றதனால் அவ் வூடலைத் தலைவியர் உவந்துகொண்டாடும் நிலை உணர நின்றது.

நாயகனிடம் யாதொரு தவறும் இல்லை ஆயினும் அவர் தலையளி செய்கின்ற நிலை என்னை ஊடும்படி செய்கின்றதென்பதாம்.

காரணமின்றி ஊடிநின்ற தலைவி தோழியிடம் கூறியபடியிது. நாயகர் வெளியே எங்கும் போகவில்லை; யாதொரு தவறும் காணேம்; உல்லாசமாக உவந்து குலாவி வருகின்றார்; அப்படியிருக்க நீ ஏன் இடையிடையே ஊடி நிற்கின்றாய்? என்று அவள் வினவியபொழுது இங்ஙனம் தனதுமனநிலையை உரைத்தாள் என்க.

நான் சிறிது பிணங்கினாலும் அவர் பெரிதும் வணங்கிப் பேணிப் புகழ்ந்து போற்றி செய்கின்றார் ஆதலால் அவ் அளியுடை

மையே யான் ஊடுங் களித்தற்கு வழியாயுள்ளது என்பாள் "அவர் அளிக்குமாறு ஊடுதல் வல்லது" என்றாள். அவர் அன்பு செய்யு நிலையைக் கண்டு, இன்ப நிலையில் இவ்வளவு பெரியமுள்ளவர் பிறரிடமும் இவ்வாறு கழிபெருங் காதலொடு இழிய நேருமே என்று கருதி இங்ஙனம் ஊடினேன் என்பதாம்.

இனி, அவர் உளமுருகும் அளிபுரிதலை விரும்பியே வழுவறியா வழியும் அளவறிந்து நான் ஊடுகின்றேன் எனினுமாம்.

"இசைபட வாழ்பவர் செல்வம் போலக்
காண்டொறும் பொலியும் கதழ்வாய் வேழம்
இருங்கேழ் வயப்புலி வெரீஇ அயலது
கருங்கால் வேங்கை ஊறுபட மறலிப்
பெருஞ்சினம் தணியும் குன்ற நாடன்,
நனி பெரிது இனிய னாயினும் துனிபடர்ந்து
ஊடலுறுவேன் தோழி! நீடு
புலம்புசேண் அகல நீங்கிப்
புலவி யுணர்த்தல் வன்மை யானே" (நற்றிணை 217)

இது, தோழியை நோக்கித் தலைவி யுரைத்தது. தலைவர் யாதொரு தவறும் இன்றி இனியராயிருப்பினும் புலவி நீங்கும்படி பணிந்து குழைந்து அவர் படுகின்ற பாட்டைப் பார்க்க வேண்டி நான் ஊடுகின்றேன் என அவள் இதில் உணர்த்தியிருத்தல் காண்க. "தவறு அவர்க்கு இல்லை யாயினும் அவர் அளிக்குமாறு ஊடுதல் வல்லது" என்ற இவ் அருமைத்திருக்குறளை அடியொற்றி இது வந்துள்ளமை யறியலாகும். புகழ்நிற்கும்படி ஈதலைச் செய்து வாழ்பவர் செல்வம் போலப் பொலிந்து தோன்றுகின்ற யானையைக் கண்டு வெருவிப் புலி அயலோட, அது வேங்கைமரத்தை சிதைத்துச் சினம் தணியும் நாடன் என்றதன் உட்கருத்து என்னை? எனின், புலவிக் காலத்தில் தனக்குப் பயந்து தலைவன் ஒதுங்க, அவனது கள்ளத் தனமான பரத்தைமையை இகழ்ந்து தலைவி உள்ளந் தணிவள் என்பதை உள்ளுறையுவமையால் ஊகித்துணர்ந்து கொள்ள என்க.

தவறு இல்லாதிருந்தும் ஊடலை வேண்டுமென்று தானாக விழைந்து உவந்துகொண்டமையால் இது ஊடலுவகை ஆயிற்று. ஊடுதலைக் காதலிகள் உவந்துகொள்ளுந் திறம் இதனால் உணர நின்றது. இவ் வுவகை நிலையால் அவ்வூடலின் உயிர் நிலை புலனாம்.

"கட்கினியாள் காதலன் காதல் வகைபுனைவாள்
உட்குடையாள் ஊர்நாண் இயல்பினாள்—உட்கி
இடனறிந் தூடி இனிதின் உணரும்
மடமொழி மாதராள் பெண்." (நாலடியார்)

ஊடி முயங்குதலும் பெண்மைக்கு ஓர் அழகாக இவ்வுணர்ச்சி நிற்றல் காண்க. தன் கொழுநனிடம் பிழையொன்றும் இல்லை ஆயினும் ஏதாவது ஒன்றைக் கற்பித்துக்கொண்டு தலைவி ஊடுவள் என்பதாம், அங்ஙனம் ஊடியபொழுது அவன் உவந்து தொழுது விழைந்து வேண்டுவன் என்பதும் இதில் உணர்ந்துகொள்க.

" அமிர்தவ நோக்கத்து அணங்கொருத்தி பார்ப்பக்
கமழ்கோதை கோலாப் புடைத்துத் தன் மார்பில்
இழையினைக் கையாத்து இறுகிறுக்கி வாங்கிப்
பிழையினை யென்னப், பிழையொப்பாங் காணாள்
தொழுது பிழைகேட்கும் தாயவனைக் காண்மின்." (பரிபாடல் 12).

தனது நாயகனைப் பூமாலையால் புடைத்து, முத்து வடத்தால் கைகளை இறுக்கிக்கட்டி ஒருத்தி ஊடலாடியதும், அவன் தொழுது வேண்டியுள்ளதும் இதில் காண்க. தவறு இல்லாதவிடத்தும் ஊடல் நிகழ்வதும், ஆடவர் தொழுது அது தீர வேண்டுவதும், ஆர்வ ஊடலாகக் காதலர் அதனை ஆதரித்து நிற்பதும் இதனால் அறியலாகும்.

காதலன்பால் உல்லாசமாய்க் காதலி ஊடிக் களிப்பள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தபதியால் உணரப்படும்.

## கதை.

தபதி என்பவள் தபனன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகள். சூரியனுடைய அருட்கலையால் பிறந்தவள். "நேரிலாப் பேரழகும் நிறை நலனும் உயர் திருவும் நிறைந்து தெய்வ, ஆரமிழ்தம் பொதி சாயல் அருந் தபதி என அவனி தொழ இருந்தாள்." இங்ஙனம் சிறந்திருந்த இவள் எவரையும் மணந்துகொள்ள இசையாமல் கன்னிமையோடு கனிந்து நின்றாள். ஒருநாள் சுரதிகம் என்னும் அழகிய பூஞ்சோலையில் புகுந்து தனியே உலாவி வந்தாள். வருங்கால் அங்குத் தெய்வீகமாய் வந்த அரசிளங்குமரன் இவளைக் கண்டான். அவன் சந்திரகுலத் தோன்றல். சுந்தர வடிவினன். சிறந்த போர் வீரன். சம்வர்ணன் என்னும் பெயரினன். இவளைக் கண்டவுடனே கரைகாணாக் காதலாய் நெஞ்சமுருகி நிலை

குனிந்து நின்றாள். இவளது திவ்விய சவுந்தரியத்தை நோக்கித் தெய்வ மகளோ! என்று முதலில் ஐயங்கொண்டான். பின்பு நன்கு மையலொடு பார்த்து மறுகலானான். தங்கக் கலசங்கள் போல் பொங்கி விம்மிப் பொம்மலொடு திகழ்ந்த கொங்கை முதலிய அவயவங்களைக் கூர்ந்து நோக்கி மானுடமகள் என்றே துணிந்தான்; அத் துணிவினைத் தன் உள்ளத்துள்ளே சொல்லி மகிழ்ந்தான்.

> "நின்றறி கல்வி யொன்றிய மாந்தர்
> புனைபெருங் கவியுட் டருபொருள் என்ன
> ஓங்கிப் புடைபரந்து அமுதமுள் ளூறிக்
> காண்குறி பெருத்துக், கச்சது கடிந்தே,
> எழுத்தாமணி பொன்பூ மலைஎன யாப்புற்று
> அணிபெறு முலைமேல் கோதையும் ஒடுங்கின;
> செங்கோல் அரசன் முறைத் தொழில் போல
> அமுதமும் கடுவும் வாளும் படைத்த
> மதர்விழித் தாமரை மலர்ந்திமைத் தமர்த்தன;
> செய்குறை முடிப்பவர் செனனம் போலப்
> பதமலர் மண்மிசைப் பற்றிப் படர்ந்தன;
> அமுதம் பொடித்த முழுமதி என்ன
> முகம் வியர்ப் புறத்தின; உள்ளமும் சுழன்றன;
> அணங்கின ளாமென நினையல்
> பிணங்கி வீழ்ந்து மாழ்குறு மனனே!"

சூடியமாலை வாடிக், கண்கள் இமைத்துக், கால்நிலம்தோய்ந்து, முகத்தில் வியர்வை அரும்பி, மனம் சுழன்று நிற்றலால் இவள் தேவ அணங்கு அல்லள்; பூவுலக மங்கையே எனத் தன் நெஞ்சைத் தேற்றி இங்ஙனம் நெகிழ்ந்துருகி நின்ற அவனை இவளும் மகிழ்ந்து நோக்கி மாலுறலானாள். உறவே இருவரும் ஒருமுக மாகி மருவி புவந்து பின்பு உலகறியமணந்து உயர்போகங்களை நுகர்ந்து வந்தார். அரச மாட்சிகளனைத்தையு மறந்து இவளது போக வெள்ளத்தி லேயே அவன் மூழ்கிக் களித்தான். அவனுக்கு இன்ப நிலையமாயினி தமர்ந்திருந்த இவள், கலவி நிலையில் சுவை மிகும்படி தருணங் கண்டு இடையிடையே புலவியை மேற்கொண்டு வந்தாள். புலந்த போதெல்லாம் அவன் அலந்து நின்று பணிமொழியாடித் தலையளி செய்து தழுவி மகிழ்ந்தான். அரசர் ஒருபிழையும் செய்யாதிருந் தும் நீங்கள் ஏன் இந்தவாறு ஊடி நிற்கிறீர்கள் என்று ஒருநாள் சந்திரசேனை என்னும் தோழி கேட்டாள். அவர் அளி செய்து

வருகிலேயே ஊடலுக்கு எனக்கு வழி செய்கின்றதென இவள் தொழுது செய்து நகைத்தாள். "அவர் அளிக்குமாறு ஊடுதல் வல்லது" என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள். இவ்வாறு ஊடிப் புலாவிக் கூடிக்குலாவி நீடிய போகங்களை நிலைபெறுவதில் காதலாடலோடு களித்து வந்த இவளது திருவயிற்றிலிருந்து தான் குரு என்னும் ஒரு திருமகன் பிறந்து மகாபுலமையோங்கும் வென்றுத் தன் பெயரால் குரு குலம் என என்றும் நிலவி நிற்கும்படி சந்திரகுலத்தில் பெரும் புகழோடு பெருகியிருந்தான்.

அண்ணல் புரியும் அருளேயென் னூடலையிவ்
வண்ணம் வளர்த்து வரும்.

ஊடலின் காரணம் இதனால் கூறப்பட்டது.

---

1322. ஊட லினிதென் றுவந்து புலவியேன்
கோடி யிருந்தாள் குமரேசா—நீடிய
ஊடலிற் றோன்றுஞ் சிறுதுனி நல்லளி
வாடினும் பாடு பெறும். (உ)

இ—ள்.

குமரேசா! இடையே வாடுதல் நேர்ந்தும் ஊடலை இனிது என்று புலவி ஏன் உவந்து கொண்டாள்? எனின், ஊடலில் தோன்றும் சிறுதுனியால் நல் அளி வாடினும் பாடுபெறும் என்க.

இது, ஊடலால் முடிவில் மேன்மை யுண்டென்கின்றது.

துனி = வெறுப்பு. சிறுதுனி என்றது நெடிது நில்லாமல் கடிதினீங்கும் இயல்பு நோக்கி. அளி = அன்பின் பெருக்கம்; அஃதாவது மனங்கனிந்து நிற்கும் காதல் என்க. வாடினும் என்றதனால் அவ் அளியின் தளர்வும், எளிதில் வாடாமையும் தெளிவுற நின்றன. பாடு பெறும் = மேன்மையடையும்.

கூடிமகிழ்தற்கு இடையூறாய் ஊடல் நீடி நிற்குங்கால் காதலனுக்குச் சிறிது மனவெறுப்பு உண்டாகும் ஆதலால் "ஊடலில் சிறுதுனி தோன்றும்" என்றாள். அத்துனியால் அவனது அன்பு நிலை குறையினும் பின்பு கலவியில் கழிபேருவகை யுடையனாய் உளமுருகி நிற்பனாதலால் "துனியால் அளிவாடினும் பாடுபெறும்" என்றாள். "களிப்பர் குளிப்பர் காமம் கொடிவிட, அளிப்ப துனிப்ப

ஆங்காங் காமே" (பரிபாடல்) என்றதனால் அணியும் துணியும் ஆரமுடன் காதலிடம் கைகலந்துள்ளமை காணலாகும்.

ஊடலானுண்டாம் சிறிய வெறுப்பால் காதலருடைய நல்ல அருள் வாடினாலும் பின்பு பெருமையடையும் என்பதாம்.

புலவியால் தலைவருடைய மனநிலை மாறுபடுமே; அதனை ஏன் செய்கின்றாய் என்ற தோழிக்குத் தலைமகள் கூறியபடியிது.

புலவிக் காய்ச்சலால் முதலில் சிறிது மனநிலைதிரியினும்பொன் சுட்டு ஆறியது போல் காதலர் வெம்மை விரைவில் நீங்கி விழைந்தருள்புரிவர் ஆதலால் ஊடலை நான் உவந்துகொண்டேன் என இங்ஙனம் அவள் உரைத்தாள் என்க.

ஊடலை ஓர் இன்ப ஆடலாகத் தலைவியர் உவந்து கொள்வர் என்பதும், அவ்வமயம் கூடலை அவாவி வணக்க முதலியன செய்து தலைவர் வாடி மறுகுவர் என்பதும், பின்பு கூடி மகிழ்ந்து குலாவி யருள்வர் என்பதும் இதனால் அறிய நின்றன.

"சேல்தான் திகழ்வயற் சிற்றம்பலவர் தில்லைநகர்வாய்
வேல்தான் திகழ்கண் இளையார் வெகுள்வர்; மெய்ப்பாலன் செய்த
பால்தான் திகழும் பரிசினம்; மேவும் படிறு உவவேம்;
கால்தான் தொடல், தொடரேல்! விடு! தீண்டல்! எம் கைத்தலமே."
(திருக்கோவையார்)

இது பள்ளியறையில் ஊடல் நிகழ்ந்தபொழுது தலைவன் பணிந்து வேண்டத் தலைவி உடனே இணங்காமல் மேலும் பிணங்கிச் சிணுங்கியுள்ள தென்க. இளையார் என்றது காமக்கிழத்திகளை. படிறு=கள்ளம். "கோடி ஒரு வெள்ளை; குமரி ஒரு பிள்ளை என்ற பழமொழிப்படி மகப்பேறடைந்து பால் படிந்த மெய்யோடு கிழமாயுள்ள எம்மை இப்படிக் கெஞ்சிக் கொஞ்சுவதைக் கண்டால் உமது கள்ளக் காதலிகள் உள்ளம் கொதிப்பர்; இங்கு எள்ளளவும் இடமில்லை; அங்கே போங்கள்; ஐயோ! விடுங்கள் கையை" என அவள் புலந்து மொழிந்திருக்கும் அழகைப் பார்க்க.

இங்ஙனம் உரைக்குங்கால் சில தலைவியர் உவமைநிலையில் தம் உள்ளம் தொனிக்கும்படி விநயமாகச் சொல்லுவர். அது உள்ளுறையுவமை என்று சொல்லப்படும். ஒன்று அடியில் வருவது காண்க.

"மதியமுடல் குறைந்த வெள்ளாங் குருகினம்
பைங்கால் கடவிச் செங்கயல் ஆரந்துண்டு
கழுக்கடை யன்னதன் கூர்வாய்ப் பழிப்புலவு
எழில்மதி விரித்தவெண் தளையிதழ்த் தாமரை
மலர் மலர் துடைக்கும் வயலணி யூர!
பொன்னணிமாடம் பொலிநகர்க் கூடல்
ஆவண வீதி யணையவர் அறிவுறின்
ஊருணி யன்ன நின் மார்பகம் தோய்ந்த என்
இணைமுலை நன்னர் இழந்தன அதுபோல்
மற்றவர் கவைமன மாழ்கிச்
செற்றநிற் பகர்வர் இக் கால் தீண்டலையே." (கல்லாடம்)

புலவி நீரும்படி வணங்கிய நாயகனை நோக்கி என் காலைத் தொடாதீர்கள் என்ற தலைவி இதில் குறித்திருக்கும் உள்ளுறை உவமையை ஊன்றிப்பார்க்க. சந்திரன்போன்ற வெண்மையான கொக்குகள் காலால் கடவிக் கண்டு சேல் மீன்களை உண்டு அப்புலால் நாற்றத்தைத் தாமரை மலரில் துடைக்கும் நீர்மையுடைய ஊரனே! என்றது, சிறந்த அவன் இழிந்தபரத்தையரை மறைந்து நுகர்ந்து அத் தீட்டோடு வந்து புனிதமான தன்னைத் தோய நேர்ந்துள்ளான் என அவனது தீய ஒழுக்கத்தைக் குறிப்பால் சுட்டித்தன் தூய்மையைப் புலப்படுத்தித் தீண்டாமையை விளக்கினாள் என்க.

ஊடலானது முடிவில் உலவிலா இன்பமே தரும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை புவனைபால் உணரப்படும்.

## கதை.

புவனை என்பவள் வடமதுரையிலிருந்து அரசுபுரிந்த தசாருகன் என்னும் அரசனுடைய அருமைத் திரு மனைவி. அம் மன்னன் எதுகுல மரபினன். மதிநலமுடையவன். உருவிலும் திருவிலும் உயர்ந்திருந்த அவன் தனது பெருமித நிலைக்குத் தகுந்த தேவியை நாடி அரசிளங் குமரிகள் பலரையும் ஆராய்ந்து வந்து முடிவில் இக் குலமகளை விழைந்து நின்றான். சாமசந்தன் என்னும் குறுநில மன்னனுடைய அருமைக் குமரியாகிய இவள் அதிரூபவதியாயமைந்திருந்தாளாதலால் முதிர்காதலோடு புகுந்து விதிமுறையே மணந்துகொண்டான். சிறந்த அதிபதி யாய்த் திகழ்ந்திருந்த அவனுக்குத் தகுந்த குணவதியான இப் பதிவிரதை இனிய மண மகளாயமைந்த நிலையை வியந்து அனைவரும் மகிழ்ந்து புகழ்ந்தார்.

"வடுவிலாப் பெரும்புகழ் வயங்க வையகத்
திடுபெயர்த் தாரகன் என்னு மாண்பினான்;
தொடுகழற் றாளினான் புலவுச் சோரியேய்
அடுகடற் றானையான் ஆளி மொய்ம்பினான்; (௧)

நாளினின் மனுவருமுறை நடாத்தும் ஆணையான்;
வாளினில் தெவ்வர்தம் வலியை மாற்றினான்;
தோளினில் வரைகளைத் துளக்கும் ஆற்றலான்;
வேளினின் வனப்பினான் தவத்தின் மேன்மையான். (௨)

இத்தகை மன்னவன் இளநிலா நகை
முத்தணி முகிழ்முலை முளரி வாண்முகக்
கொத்தலர் நறுங்குழற் கோதை வேல்விழி
மெய்த்தவக் கொடியினை விதியின் வேட்டனன்." (௩)

(பிரமோத்தர காண்டம்)

அக் குலமகனது பெருமையும், இத் தலைமகளது நிலைமையும் இதனால் இனிது புலனும். இத்தகைய ஒத்த நலமும், ஒத்த எழிலுமுடைய இவ் உத்தமியோடமர்ந்து காமபோகங்களை அவன் துய்த்து மகிழ்ந்தான். "அங்கைகள் ஆகமீ தணைய ஆம்பல்வாய், பொங்கிய அமிர்தினைப் பொருந்தி யுண்டிடக், கொங்கைகள் மார்பகம் குளித்து மண்டிட, மங்கையு மன்னனு மருவி மாந்தினர்" என இங்ஙனம் இவர் உருகி யணைந்து உவந்து நுகர்ந்து உழுவலன்போடு ஒழுகிவருங்கால் ஒருநாள் இவள் ஊடிநின்றாள். அவன் அருகில் நெருங்கிப் பருகும் அன்போடு உருகி மொழிந்து உணர்த்தித் தேற்றினான். இவள் உணர்ந்தருளாமல் புலந்து கலுழ்ந்து பொங்கியிருந்தாள். காமம் கனிந்த கருந்தடங் கண்ணின், இமைநீர் வெம்பனி முலைமுகம் நனைப்பப், புலவியில் நிமிர்ந்து அவள் உளம் நிமிர்ந்து நின்றபொழுது இவன் கலவியை விழைந்து கடுத்துத் துடித்து அடுத்தலமந்து ஆர்வவுரைகள் பல ஆடலானான். ஆடவே இவள் ஊடல் நீங்கி உவந்தருளினாள்; அவன் கூடி மகிழ்ந்து குலாவி யருளினான். ஊடலால் தலைவனது நல்லளிவாடினும் பின்பு அது பாடு மிகப் பெற்று பயன் பெரிது பயந்து நலம் பல தரும் என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

தேடி யடைந்த திரவியம்போல் தேரன்பை
ஊடி யடைந்தே னுடன்.

ஊடலால் உள்ளன்பு வளரும் என்பது இதனால் கூறப்பட்டது.

1323. கண்ட புலவியினைக் காந்திமதி யின்பமெனக்
கொண்டாடு கின்றாள் குமரேசா — மண்டிப்
புலத்தலிற் புத்தேணா டுண்டோ நிலத்தொடு
நீரியைந் தன்னா ரகத்து. (௩)

இ—ள்.

குமரேசா! புலவியை இன்ப நிலையாகக் காந்திமதி ஏன் அன்போடு கொண்டாடுகிறாள்? எனின், புலத்தலின் புத்தேள் நாடு உண்டோ நிலத்தொடு நீர் இயைந்தன்னார் அகத்து என்க.

இது, புலவி சுவர்க்க போகத்தினும் இனிது என்கின்றது.

புத்தேள்நாடு = தேவருலகம். புத்தேள் = தேவன்.

நிலத்தொடு நீர் இயைந்து அன்னார் = நிலத்தோடு நீர் கலந்தது போன்றவர். என்றது காதலரை. நீர் தனது நிலத்தோடு சேர்ந்த பொழுது தன்னிலைமாறி அந்நிலத்தின் தன்மையாய் நிலவி நிற்கும்; அதுபோல் தான் சேர்ந்த காதலியின் மயமாகவே காதலன் கனிந்து நிற்பன் ஆதலால் அந்நீர் நிலை இங்கு உவமையாய் வந்தது. நிலம் காதலிக்கும்; நீர், காதலனுக்கும் ஒப்பாகக் கொள்க. "நிலத்தியல்பான் நீர் திரிந்து அற்றாகும்" (குறள் 452) என்றதும் காண்க. மனங்கலந்த காதல் நிலைக்கு நிலங்கலந்த நீர் நிலையை உவமை காட்டியிருக்கும் நுட்பத்தைக் கூர்ந்து உணர்ந்து கொள்க. "செம்புலப் பெயல்நீர் போல, அன்புடை நெஞ்சம் தாங்கலந் தனவே" (குறுந்தொகை 40). அன்பின் கலப்பிற்கு நிலம்பெய் நீரை உவமை குறித்துள்ள உண்மையை இதனால் அறிக.

நிலத்தொடு நீர் கலந்தது போன்ற காதலரிடத்துப் புலந்து கொள்ளுதல் போல் தெய்வவுலகத்திலும் இன்பமில்லை என்பதாம்.

புலந்து நின்று இன்பம் நுகர்ந்த தலைவி அப்புலவியை வியந்து தோழியிடம் உவந்துரைத்தபடியிது.

உயிரொன்றாய் மருவியுள்ள உரிமைக் காதலரோடு ஊடி நுகரும் காம இன்பம் தேவபோகத்தினும் சிறந்தது என்பாள் "புலத்தலின் புத்தேள் நாடு உண்டோ?" என்றாள். யாண்டும் இன்ப நிலையமாய் நீண்டுள்ளமையால் புத்தேளுலகத்தை மீண்டு எண்ணி

நின்றாள். காணவனுபவித்த பேரின்பத்திற்கு ஓரின்பமுறும் நோகா தென்று உள்ளங் களித்து உவந்து கூறிய வாறிது.

காமபோகத்தில் ஊடலானது மிகவும் உயர்ந்த இன்பம் பயந்து நிற்கும் என்பது இதனால் உணரலாகும்.

"காமம்வீ றின்பக் கடலாமே; காதலரின்
ஏம விருக்கையே அக்கரையாம்—ஏமத்தின்
டாம்பாலே தோன்று மணிமுடலீ, ஆம்பரலில்
தெற்றித் தெறிப்பாம் துளி ஒளியாய் கண்ணீர்த்
துற்றுகப்பாய்ப் பெற்ற மகவு." (முன்னிலை 27)

ஊடலானது காம இன்பமாகிய கடலலையில் துள்ளியெழுந்த முத்தொளிபோல் உள்ளது என இஃதுணர்த்தி நிற்றல் அறிக.

புலவியும் கலவியும் நிலவி இவ்வாறு பேரின்பமயமாயுள்ளமை யான் வேறொன்றையும் கருதாது காதலருடன் கூடிவாழ்வதையே காதலிகள் ஆதரங்கொள்வாராயினர். தாம் பிறந்த இடம் அரச குடும்பமாயிருந்தாலும் அதனை விரும்பாது புகுந்த இடம் எளிதாயி னும் அதில் இங்ஙனம் பொருந்தி விளையும் இவ்வின்பம் ஒன்றையே விழைந்து மற்றெல்லாவற்றையும் அவர் மறந்து விடுவர் என்க.

"இராமழை பெய்த விரவீரத்துள்
பனைநுகம் கொண்டு யானையேர் பூட்டி
வெள்ளி விதைத்துப் பொன்னே விளையினும்,
வேண்டேன் பிறந்தகத்து ஈண்டிய வாழ்வே;
செங்கேழ் வரகுப் பசுங்கதிர் கொய்து,
கன்று காத்துக் குன்றில் உணக்கி,
உடுபதர் போக்கி முற்றுறவினோர்க்குதவிக்
காடுகழி இந்தனம் பாடுபார்த்தெடுத்துக்
குப்பைக் கீரை உப்பின்று வெந்ததை
இரவல் தாலம் பரிவுடன் வாங்கிச்
சோறது கொண்டு பீறல் அடைத்தே
ஒன்றுவிட்டு ஒருநாள் தின்று கிடப்பினும்
நன்றே தோழிநம் கணவன் வாழ்வே."

எவ்வளவு எளிமையுடையதாயினும் கணவனோடு கூடிவாழும் வாழ்க்கையே அரசவாழ்வினும் கோடிமடங்கு இன்பமாம் எனத் தன் தோழியிடம் ஒரு குலமகள் உரைத்திருக்கும் அருமையை

இதில் அறிந்துகொள்க. இதனால் காதல் வாழ்க்கையின் இன்ப நிலை இனிது புலனாம். கலவியைக் களிக்கும் புலவி இன்பம் தேவ போகத்திலும் சிறந்ததாம் என்பது கருத்து.

புலவியை மிகவும் தலைவியர் உவந்துகொள்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை காந்திமதியால் உணரப்படும்.

## கதை.

காந்திமதி என்பவள் நாகராசனுடைய அருமைத் திருமகள். கண்கொள்ளாக் கட்டழகு வாய்ந்தவள். "காந்திமதி எதிர்காணக் கவினெழுத திருமுகத்தாய், காந்திமதி" என வந்திய புகழுடன் இவள் இனிதமர்ந்திருந்தாள். இவளுடைய இளமை எழில்களைச் சூரவாதித்தன் என்னும் சோழ மன்னன் வினவி யறிந்து மனமிக வுருகினான். அவன் உறையூரிலிருந்து அரசுபுரிந்தவன்.

எழு மாமுழ வாரணத் துச்சிமே லிருந்தோன்
வாழி குக்குடமுயர்த்தொரு மயில்மிசை வருவோன்
ஆழி மாதவ னென வுயி ரனைத்தையும் அளித்துக்
கோழி மீதினி லிருந்தவன் பெரும்புகழ் குயிற்றி."

இங்ஙனம் அருந் திறலோடு சிறந்திருந்த அவன் தெய்வ அருளால் ஒரு முறை பாதலத்தை யடைந்து அங்கு விளங்கியிருந்த நாக மன்னனைக் கண்டான். காணவே அவனது வடிவழகையும் குண நலங்களையும் நோக்கி மகிழ்ந்து அப் பாதல வேந்தன் ஆதரமிகுந்தான். பின்பு தனது குலமகளை அத் தலைமகனுக்கு மணஞ்செய்து தந்தான். அவன் பெற்று மகிழ்ந்து பேரின்பந் துய்த்து வந்தான். அரச போகங்கள் யாவையு மறந்து அவளது சாத போகங்களிலேயே நிலைத்துச் சுகித்திருந்தான். அல்லும் பகலும் அயலகலாமல் புல்லி யுறைந்து பொங்கி விழைந்த அவனுக்கு இன்பநிலைய மாயமர்ந்து ஐம்புலன்களும் களிக்க இவள் அன்பாற்றி வந்தாள்.

"காரும் மாலையும் மயங்கிடக் கருங்குழல் சரிய
வேரும் முத்தமும் சொரிந்திட மேகலை மிழற்றக்
கூர வேல்விழி சிவந்திட விளர்த்திடக் குமுதம்
வாரமுலை நாஞ்சிலான் உழுதனன் மார்பை."

இவ்வண்ணம் ஆகமொன்றிப் போகம்நுகர்ந்து வருங்கால் ஒரு நாள் அன்புமீதூர்ந்து அவன் ஆர்வ முரையாடி "என் அருமைக் கனியே! உன்னை நான் எழுபிறப்பிலும் பிரியேன்" என்றான். அதன்பின் வழுவியகல்வீர் போலும் என்று இவள் உளமிக மறுகி அழுது புலந்து அலமந்து நின்றாள். அடியில்வருவன காண்க.

"அன்னமே எழு பிறப்பினும் உனைப்பிரிந் தகலேன்
என்னவே புகழ்ந் துரைத்தனன் எழுபிறப் பிகந்த
பின்னராயினும் என்னை நீர் அகன்றனம பிணிக்கும்
கன்னிமாருடன் புணருவீர் எனச்சொலிக் கலுழ்ந்தாள். (௧)

வாடினான் மலர்த்திருமுகம் கருகினான் வருந்தி
யூடினான் அவனூடலை யுணர்த்தினான் உணர்ந்து
கூடினா ரவரிருவரும் கலவியிற் குளித்துத்
தேடினார்தமை யறிகிலார் இராப்பகல் சிறிதும்." (௨)

(செவ்வந்திப்புராணம்)

இச் சதிபதிகள் புலந்து கலந்து காமபோகத்தில் பாவசாரய்க் களித்துத் திளைத்திருக்கு நிலையை இதில் குறித்திருத்த லறிக. தம்மைத் தேடினார் அறிகிலார் என்றதனால் அவ் இன்ப வெள்ளத் தில் ஆழ்ந்து யாவும் மறந்து அழுந்தி யிருந்தமை புலனும். இவ்வாறு ஊடி யுளைந்தும் கூடி மகிழ்ந்தும் நாடிய இன்பங்களை நன்கு நுகர்ந்து இவர் நாள்கழித்து வந்தார். அன்புருதும்பி இன்ப நிலையில் இங்ஙனம் உளங்களித்து வருங்கால் அடிக்கடி இவள் புலந்துகொள்ளுவதைச் சவுமினி என்னும் தோழியறிந்தாள். ஒரு பிழையுமின்றி உழுவலன்புடன் உவந்து தழுவிவரும் அரசரோடு ஏன் இப்படிப் புலவிகொள்ளுகின்றாய் என அவள் புன்னகையுடன் கேட்டாள். என் ஆருயிர்த் தலைவரோடு புலந்துகொள்ளுதல் பேரின்பமாம் என இவள் பேணியுரைத்தாள். "புலத்தலிற் புத்தேள் நாடுண்டோ" என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

உள்ளத் துணைவரோ டூடினேன் பேரின்ப
வெள்ளந் திளைத்தேன் விரைந்து.

புலவியால் அலகிலின்பம் விளையும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1324. நேர்ந்த புலவியிலென் னெஞ்சுடைந்த தென்றுசதி
கூர்ந்துசொன்ன ளென்னே குமரேசா—சார்ந்துவந்து
புல்லி விடாஅப் புலவியுட் டோன்றுமென்
னுள்ள முடைக்கும் படை. (௪)

இ—ள்.

குமரேசா! புலவியில் நிமிர்ந்திருந்த சதி உளமுடைந்து

என் கலவியில் விரைந்தாள்? எனின், புல்லி விடாப் புலவியுள், என் உள்ளம் உடைக்கும் படை தோன்றும் என்க.

இது, புலவி கலேயும் நிலை புகல்கின்றது.

புல்லல் = தழுவுதல், பொருந்துதல். "புல்லி அவன் சிறி துளித்தக்கால்" (நெய்தற்கலி 5), "புல்லி யாற்றுப் புரையோள்" (ஐங்குறுநூறு 486), "பொழிந்தது காதல் பூண்டு புல்லுகை விடாது செல்ல" (சிந்தாமணி). இவற்றுள் புல்லல் உணர்த்தி நிற்றலறிக. புல்லி விடா என்றது கணவனைத் தழுவிக்கொண்டு பின் நழுவவிடாமைக்குக் காரணமாகிய என்றவாறு.

புலவியானது பின்பு தலைவனைக் கைநெகிழ விடாவகை கலவியில் கனிவூட்டும் ஆதலால் "புல்லி விடாப் புலவி" என்றாள். புல்லி விடாமைக்கு ஏதுவான என அப் புலவியின் நிலை தெரிய இங்ஙனம் விசேடித்துரைத்தாள். அளபெடை இசை நிறைத்து நின்றது. இனி, தலைவனைப் புல்லியிருக்கும் கலவி நிலையை விட்டுப் புலவியுள் தான் உள்ளம் உடைக்கும் படை தோன்றும் எனவும் இதற்குப் பொருள் கொள்ளலாகும். தோன்றும் = வெளிப்படும்.

என் உள்ளம் என்றது புலந்துநின்ற தன் நெஞ்சின் திட்பத்தை நினைந்து. உடைக்கும் என்றதனால் அவ் வுள்ளம் புலவியில் பூண்டிருந்த உறுதிநிலை புலனும். அவ் வுறுதியும் உடைந்ததென்பதாம். எவ்வளவு விடாப் பிடியாக ஊடியிருந்தாலும் நாயகன் நெருங்கி இனிய மொழி யாடின் அவ்வளவு மறந்து ஆர்வமோடு அவனை அணைந்துகொள்வள் என்பது இதில் உணர்ந்துகொள நின்றது.

> "குளிரும் பருவத்தே யாயினும் தென்றல்
> வளியெறியின் மெய்யிற் கினிதாம்—ஒளியிழாய்!
> ஊடி யிருப்பினும் ஊரன் நறுமேனி
> கூடல் இனிதாம் எனக்கு" (ஐந்திணையைம்பது)

புலவியினும் கலவியவா தன்னுள் நிலைபெற்றுள்ள நிலையை ஒரு தலைவி இதில் உரைத்திருத்தலறிக.

காதலரைத் தழுவிக்கொண்டு பின்விடாமைக் கேதுவாகிய புலவியுள்ளே என் மன நிலையைக் குலைக்கும் படைக்கலம் உள்ளதென்பதாம். அதனால் புலவியில் நிலைத்திருக்கமுடியவில்லை என்பது குறிப்பு.

புலந்து நின்ற தலைவி தன் நெஞ்சம் நெகிழ்ந்த நிலையைக் குறித்து உரைத்தபடியிது.

புலவியை மேற்கொண்டு தலைவி வலித்திருந்த பொழுது தலைவன் வந்து வணங்கி இனிய மொழிகளைக் கனிவு தோன்றக் கூறினான்; கூறவே அவள் மனநிலை மாறி இரங்கி யிசைந்தாள் ஆதலால் அந் நிலையினை எண்ணி "என் உள்ளம் உடைக்கும் படை புலவியுள் தோன்றும்" என்றாள். இங்கே படை என்றது காதல னுடைய பணிமொழிகளை. வாள், கோடரி, சம்மட்டி முதலிய வல்லாயுதங்கள் கடிய பூட்டை உடைத்தெறிவதுபோல் வலிதாய்ப் புலந்து பூண்டிருந்த தன் நெஞ்சை அவனது இன் சொல் எளிதா இளக்கிவிட்டமையால் "உடைக்கும் படை" என அதனை வியந் துரைத்தாள். புலவிநிலையும், அந் நிலையில் தலைவன் செய்யும் இயல்பும் இதனால் இனிது புலனாம்.

தலைவி புலந்திருந்த பொழுது அதனை நீக்குதற்குப் பலவகை உபாயங்களைத் தலைவன் கையாளுவன். சில சமயம் அரிய விருந் தினரை உடன் அழைத்து வருவன்; வரவே அப் புதியவரை உப சரிக்கும் நிமித்தம் மனங் கனிந்து இனிய உணவுகளை உளவாக்கி விருந்து புரிவள்; அப் புரிவில் ஊடல் ஒழிந்துபோம்; போகவே அதன்பின் ஏகபோகமாய் இருவரும் இன்புற்றிருப்பர். இவ் வகையில் தனக்கு இதமாய்வந்த அவ் விருந்தை அவன் உள்ளுற உவந்து உரிமையோடு புகழ்ந்து கொள்ளுவன்.

> "பரவே எதிர்ந்த நமக்கு விருந்தின்று போல என்றும்
> வரவே புணர்த்த வெம் மாதவம் வாழிய வாணன் தஞ்சைக்
> குரவேய் கருமுகிற் கொந்தளபாரக் குரும்பைக் கொங்கை
> அரவேய் நுடங் கிடையாள் விழிநூர் சிவப் பாற்றுதற்கே."
>
> (தஞ்சைவாணன்கோவை)

> "திருந்தும் அரவப் பணியாளர் வெங்கைச் செழுஞ் சிலம்பில்
> அருந்தும் அமுதம் மருந்தாய்ப் பிணிகளைத் தாங்கு, முத்தும்
> முருந்தும் அனைய நகையாள் இதய முனிவகற்றும்
> விருந்து வருக தில் என்றும் எப்போதும் எம் வீட்டினுக்கே."
>
> (திருவெங்கைக்கோவை)

விருந்து வரவால் ஊடல் தீரப் பெற்றவன் அதனை உவந்து கொண்டாடியதை இவற்றுள் காண்க. இங்ஙனம் விருந்தொடு

வருவதும், புதல்வனோடு புகுவதும், தனியே போந்து யான் யாதொரு தவறும் செய்யவில்லை என்று பொய்மொழி புகன்று மெய் குழைந்து நிற்பதும், இன்னவாறு நன்னயமான முறைகள் பலவும் புலவி தீரும் வகையில் தலைவர் புரிவர் என்க.

"விருந்தெதிர் கொள்ளவும், பொய்ச்சூள் அஞ்சவும்,
அரும்பெறற் புதல்வனை முயங்கக் காணவும்,
ஆங்கவிந் தொழியுமென் புலவி, தாங்காது
அவ்வவ் விடத்தா னவ்வை யவை காணப்
பூங்கண் மகளிர் புனைநலம் சிதைக்கும்
மாய மகிழ்நன் பரத்தைமை
நோவென் றோழி கடனமக் கெனவே". (மருதக்கலி 10)

ஊடி. புறந்திராமல் நாயகனை ஏன் விரைந்து உவந்துகொண்டனை? என்று வினவிய தோழியை நோக்கி ஒரு தலைவி உரைத்தபடி யிது. இவ்வாறு விருந்து முதலிய உபாயங்களால் புலவி தீர்ந்து கலந்து மகிழ்ந்து வருங்கால் மீண்டும் இடையே ஊடல் நிகழ்ந்து நீடி நின்றது; அந் நிலையில் தலைவன் பணிமொழி பகர்ந்து பணிந்து பல வேண்டினான். சில அடியில்வருவன காண்க.

"நல்லார் விருந்தின் மறந்தீர் திரும்பவும் நான்முன் செய்த
பொல்லாமையை நினைந்தீரென் செய்வேன்? புதிதாப் பகலை
அல்லாக்கும் ஆழிக் குலோத்துங்க சோழன் அளகையன்னீர்!
எல்லாக்குறையும் பொறும் பணிந்தேனும் மிணையடியே."
(குலோத்துங்கசோழன்கோவை)

" அறத்தாறறியும் திருவெங்கை வாணர் அணிவரைமேல்
வெறுத்தாலுனை முனி வாற்றுநர்தாம் சிலர் வேறுளரோ?
ஒறுத்தார் பெறும் இன்பமு நினையாமல் ஒருவர் பிழை
பொறுத்தார் புகழும் அறிந்திலையே மலர்ப் பூங்கொடியே!"
(திருவெங்கைக்கோவை)

"கானலை நீரென் றலையுற்ற மான்வரிற் காசினியில்
வானலை வெள்ளம் வெகுண்டிடுமோ முன் வரலெனவே?
மானலை யுற்றேன் பிழைபொறுத்தாள் என்றன் வந்தனம்கொள்;
ஊனலை சூலத்தர் கோடீச் சுரமன்ன ஒண்டொடியே!"
மானல்—காணுதல். (கோடீச்சுரக்கோவை)

புலவி தீரவேண்டித் தலைவியரிடம் தலைவர் படும் பாடு இவற்றுள் நாடிப் பார்க்க. இங்ஙனம் பரிந்து குழைந்து பணிந்து

மொழியவே அவள் உள்ளம் இரங்கி ஊடல் ஒழிந்து உவந்து கொண்டாள் ஆகலால் அம் மெல்லிய செயல்களை உள்ளம் உடைக்கும் படை எனச் சொல்லி நின்றாள். ஊடலில் வணங்குதல் ஆடவர்க்கோர் அணி என்பது இதனால் அறிய நின்றது. "உணங்கா விளம்பொழிற் கூடற்பிரான் உமை யூடற்கன்றி, வணங்காமுடித் தம்பிரான்" என்னும் இதில் தன்னிகரில்லாத் தலைவனிடமும் இவ் ஒருடல் வணக்கம் ஊடாடியுள்ளமை யுணரலாகும்.

"புலியினத ளுடையானும், பொன்னுடை புனைந்தானும் பூவினானும்
நலியும் வலத்தாரல்லர்; தேவரினிங் கியாவரினி நாட்ட லாவார்?
மெலியுமிடை தடிக்குமுலை வேயிளந்தோட் சேயரிக்கண் வென்றிமாதர்
வலியவந்தும் புலவியினும் வணங்காத மகுடநிரை வயங்க மன்னோ."

(இராமாயணம்)

இது, இராவணனது நிலையைக் குறித்தது. திரி மூர்த்திகளாலும் வெல்லமுடியாத விறலினன்; புலவியிலும் வணங்காத தலையினன் என அவனது வணங்காமுடித் தன்மையை உணர்த்தியிருக்கும் அழகைப்பார்க்க. இக் கவியினது உட் கருத்தையும் நுட்பங்களையும் ஊன்றி நோக்கி உய்த்துணர்ந்து கொள்க.

ஊடலுவகையும் ஆடவர் அதில் வாடி வணங்கும் வகையும் இவற்றால் நன்கறியலாகும். இன்னும் ஒன்று அடியில்வருவது காண்க.

"அழல்நறுந் தேறல் சுழல்வண்டு ஒப்பிக்,
குறிவெங் காதலன் பொறியாப் புறுத்த
தமனிய வள்ளத்துத் தன்னிழல் நோக்கிப்
பிறள்முகம் இதுவெனப் பெண்மையின் மயங்கிக்
கள்ளினுள் தோன்றுமிவ் வொள்ளிழை மாதரைப்
பண்டும் ஒருகால் கண்டகத் தடக்கிய
வையப் பரத்தையைக் கையொடு கண்டேம்
இனிப்போ யுண்ணும் எழையம் அல்லம் என்று
அணித்தகு நுதல்வியர்த் தரையெழுத் தளைஇத்
துனிப்புறு கிளவி பனிக்கடற் பிறந்த
அரும்பெறலமிழ்தென விரும்பும் வேட்கையன்

அவிழ்குரற் கூந்தல் அங்கை யடைச்சிக்
கள்ளமிர்தேவின் கதிர்விடு நெடுமுகத்து
ஒள்ளணி காணிய உள்ளி வந்ததை
உணராது புலத்தல் புணர்குவை யாயினென்

உள்ளகம் சுடுமென உள்ளவிழ்ந் தெழுதரும்
காமக் கட்டுரை கனியென வளைஇத்
தாமக் கோதையொடு தாழ்சிகை திருத்தி
வளர்ந் தேந்திளமுலை மருங்கிவர்ந்து கிடந்த
பொலங்கல மணிப்பூண் பொலியப் புல்லி, அவள்
மனங்கொளத் தேற்றும் ஓர் மைந்தனைக் காண்மின்." (பெருங்கதை)

கணவன் பெயர் எழுதிய பொற் கிண்ணத்தில் மதுவை வார்த்துப் பருகிக் கொண்டிருந்த ஒரு தலைவி தன் முக நிழலை அம்மதுவுள் கண்டு வேறொரு காமக் கிழத்தி மறைந்துள்ளாள் என மயங்கி ஊட, அத் தலைவன் நகைத்து, கள்ளின் தேவதையாகிய வாருணி தேவியே உன் முக அழகைப் பார்க்க விழைந்து வந்துள்ளாள்; அதனை யறியாமல் நீ யென்னை புலந்துகொள்வது நலமாகுமா? என நயந்துதழுவி, நன்கலன் புனைந்து, குழல் முடித்து, குடங்கை யணைத்து, அளிபுரிந்து அளவளாவி விழைவொடு தேற்ற அவள் உளமகிழ்ந்துகொண்டபடியை இஃதுணர்த்தி நிற்றலறிக.

காதலனுடைய இனிய மொழியால் காதலி புலவி நீங்கி ஆதரமிகுவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை சதியின்பால் உணரப்படும்.

## கதை.

சதி என்பவள் திதியன் என்னும் சிற்றரசனுடைய அருமைத் திருமகள். சிறந்த கட்டழகு வாய்ந்தவள். செவ்வி நிறைந்த பருவமடைந்திருந்த பொழுது இவளது திவ்விய வுருவ நிலையை வினவி யறிந்து அரசிளங் குமாரர்களனைவரும் உளமுருகி நின்றார். மதுவை நாடியலையும் வண்டினங்கள் போலக் கன்னிமை காத்து மன்னி நின்ற இவளை நாடி மன்னவர் பலரும் மறுகி யலைந்தார். இவள் ஒருவருக்கும் இசையாமல் உறுதி கொண்டிருந்தாள். இங்ஙனம் இருந்து வருங்கால் ஒரு நாள் முனிவர் சிலர் வந்து தனது தந்தையிடம் உரையாடி நின்றார். அவர் பல தேசங்களையும், அதிபதிகளையும், நிதி வளங்களையும், நதி நிலைகளையும் குறித்து உல்லாசமாய்ச் சொல்லி வரும்பொழுது விதர்ப்ப தேசத்து அரசிளங்குமாரனாகிய சத்தியாதனனைப்பற்றி மிகவும் வியந்து பேசினார். அவன் உத்

தம குணவான்; சித்தசனும் நாணும் புத்தெழிலுடையவன். அவ னைக் குறித்துக் கனிவு தோன்ற முனிவர் புகன்றார். "வினய வென் றியான்; விதர்ப்பதேசாதிபன்; எழிலால், தனையொவ் வாதவேள் காமுறும்சத்தியாதனனே" என இத்திறம்புகன்று மேலும் கூறினர்.

"அறிவில், நீதியில், வாய்மையில், அமைச்சினில், அழகில்,
பிறிதில் கல்வியில், பெருமையில், இருதிப் பெருக்கில்,
செறியுமூதாண் உடைமையில், வீரத்தில் திறல்வேல்
எறியும் ஊறஞ்சாக் கடற்படை யுடைமையின், இசையில்; (க)
மற்றும் இன்னன தரும் இறைமாட்சியில், மலிவிற்
கொற்ற வேந்தரின் அவனியில் நிகரிலாக் குரிசில்."
(பிரமோத்தர காண்டம்)

என அவனது அருமை பெருமைகளை இன்னவாறு அவர் சொன்ன வுடனே அரண்மனையுள்ளிருந்து கேட்டுக் கொண்டிருந்த இவள் அவன் மேல் வேட்கைமீக் கொண்டாள். முனிவரகன்றபின் இவ ளதுநிலைமையை அன்னையறிந்தாள்; தன் மன்னனுக்கு உரைத்தாள். அவன் உடனே அக்கோமகனுக்கு உணர்த்தினன். அக்குலக் கும ரன் இத்தலைக் குமரியை முன்னமே விழைந்திருந்தானாதலால் இதனை யறிந்தவுடன் அரும்பெறலமிர்தம் எளிதடைந்தவன்போல் கழிபே ருவகையனாய் விரைந்துவந்து இவளை விதிமுறை மணந்துகொண் டான். அரிய சீதனங்களோடு இச் சதியையும் பெற்று அப் பதி தன் பதியை யடைந்தான். ஒத்த காதலோடு உள்ளங் கலந்து இவளுடன் துய்த்து மகிழ்ந்து சுகித்திருந்தான். பொழிலிடை யமர்ந்தும், புனலிடையாடியும், நறுமலர் சூடியும், நாளு நாளும் புதிது புதிதான போகங்களை நுகர்ந்து இச் சதிபதிகளிருவரும் சாலவும் களித்துவந்தார். இன்ப வெள்ளத்தில், இங்ஙனம் திளை த்துவருங்கால் இடையிடையே இவள் ஊடி நின்றாள். அங்ஙனம் ஊடியபோதெல்லாம் அருகணைந்து அவன் உருகி வேண்டினன். "பொன்னங் கொடியே! மலர்த்திருவே! பொற்பூந்தருவே! புத்தமிர்தே!, இன்னவாறு நீ யூடின் எளியே னுயிரை அளியின் றிக், கன்னல் மாரன் கணைதுவிக் கையே கொள்வன் மெய்யே காண், அன்ன நடையும் மென் மொழியும் ஆவி யுருக்கும் அருட் கொம்பே!" என இன்னவண்ணம் அவன் இன்னுரையாட உடனே இவள் புன்னகையோடு நன்னலம் புரிந்தாள். அவன் மன்னிய

போகம் மாந்தி மகிழ்ந்தான். தலைவனுடைய இனிய மொழிகள் உள்ளம் உடைக்கும் படையாய்ப் புலவியுள் தோன்றும் என்பதை உலகம் காண இவள் உணர்த்தி நின்றாள்.

ஊடு முளமும் உடைந்த தவர்குழைந்து
பாடு மொழியால் பரிந்து.

ஊடல் நீக்கும் திறம் இதனால் கூறப்பட்டது.

---

1325. அன்று புலந்தவன் றும் அங்கவனே னின்பநலம்
குன்று தவர்தான் குமரேசா—ஒன்றும்
தவறில ராயினுந் தாம்வீழ்வார் மென்றோள்
அகறலி னாங்கொன் றுடைத்து. (ரு)

இ—ள்.

குமரேசா! புலவியில் அகன்று நின்ற அங்கன் அதனை ஏன் புகழ்ந்து கொண்டான்? எனின், தவறு இலர் ஆயினும் தாம் வீழ்வார் மென்தோள் அகறலின் ஆங்கு ஒன்று உடைத்து என்க.

இது, ஊடலை உவந்து தலைவன் உரைக்கின்றது.

தவறு = குற்றம். இலர் ஆயினும் என்றது அகலாமைக்கு ஏதின்மையை எண்ணியபடி. அகறல் = நீங்கல். "அழிபடரலைப்ப அகறலோ கொடிதே" (நெய்தற்கலி 15) இதில் அகறல் உணர்த்தி நிற்றலறிக. ஆங்கு = அகன்று நின்ற அந் நிலையில். ஒன்று = ஓர் இன்பம். உடைத்து = உடையது.

தாம் வீழ்வார் = தாம் விரும்பி மருவு மகளிர். மென் தோள் என்றது தழுவிக் கிடந்த அதன் செழுதகைமையை நினைந்து. தாம் வீழ்வார் மென் தோள் துயில் தாமரைக் கண்ணான் உலகினும் இனியது (குறள் 1103) ஆதலால் அதனை இடை அகறல் மிகவும் அரிய செயல் ஆயினும் அதனால் பின்பு விளையும் இன்ப நலம் கருதி இசைய நேர்ந்தான்.

"தவறு அவர்க்கு இல்லை யாயினும் ஊடுதல் வல்லது" என முன் (குறள் 1321) தலைவி உவந்து நின்ற ஊடலை இங்கே தலைவன் அங்கீகரித்து நயந்து மகிழ்ந்து கொண்டான் என்க.

சோரம்போதல் முதலிய தவறுகள் யாதொன்றும் தன்னிடம் இல்லாதவிடத்தும் தலைவி புலந்து நின்றால் தலைவன் அதனை உடன் பட்டுத் தணிந்து நிற்பன் என்பது இதனால் அறிய நின்றது.

"தவறில ராயினும் பனிப்ப மன்ற
இவறுதிரை திளைக்கு மிடுமணல் நெடுங்கோட்டு
முண்டக நறுமலர் கமழும்
தொண்டி யன்னோள் தோளுற்றோரே" (ஐங்குறுநூறு177)

தொண்டி என்றது சோநாட்டிலுள்ள ஒரு துறைமுகப் பட்டினம். அது பல்வகை நலங்களு மல்கி இன்ப நிலையமாய்ப் பண்டிருந்ததாதலால் தலைவிக்கு இங்கு உவமையாய் வந்தது. அவள் தோளுற்ற தலைவன் தவறு இலனாயினும் ஊடலில் உள்ளடங்கி ஒளிவன் என இஃதுணர்த்தி நிற்றல் காண்க. பனிப்ப = நடுங்குவர். அடிகள் மொழியை இது அடியொற்றிவந்துள்ளமை யறியலாகும்.

சிறிது அகன்று நின்று பின்பு வந்து கலந்தால் அக் கலவியில் அலகில் இன்பம் விளையும் ஆதலால் அவ் விளைவினை யறிந்து தலைவன் ஊடலை இங்ஙனம் விழைந்து நின்றான்.

"சுணங்கறைப் பயனும் ஊடலுள்ளதுவே; அதனால்,
அகறலறியா அணியிழை நல்லார்,
இகல்தலைக் கொண்டு துனிக்கும் தவறிலர்" (பரிபாடல் 9)

கூட லின்பம் ஊடலிலுள்ளது; அது தலைவன் அயல் அகலுத லறியாத நிலையில் மகளிர் அறியார் என இஃதுணர்த்தி நிற்றலறிக. சுணங்கறை = புணர்ச்சி. ஊடலகற்சி கூடலில் உயர்ச்சியாம் என்பது இதனால் உணர நின்றது.

தம்மிடம் தவறு இலராயினும் தம் காதலிகளுடைய மெல்லிய தோள்களைத் தழுவாமல் சிறிது அகன்று நிற்றலில் அங்கே ஓர் இன்பம் காதலர்க்கு உள்ளது என்பதாம்.

ஊடி யகலுதற்குரிய பிழை சிறிதுமின்றி உயர்வோடமர்ந் திருந்த தலைவன் ஊடலை விழைந்து மேற்கொண்டு அதனால் அடைந்த இன்பநலத்தை உவந்து கூறியபடி யிது.

நாயகி புலந்து சினந்தபொழுது பயந்தவன்போல் பணிந்து மெலிந்து நாயகன் ஒதுங்கி அகல்வனாயின் உயிரொன்றான அவ் வரிவையை நினைந்து உள்ளம் கனிந்து உழுவலன்போடு அவனைத் தழுவ நேர்வள்; நேரவே அதில் கழிபேரின்பம் கனிந்திருக்கும் ஆதலால் அச் சுவையை அநுபவித்தறிந்து "அகறலின் ஒன்று உடைத்து" என உவகைமீக் கூர்ந்து இங்ஙனம் உரைத்தான் என்க. ஒன்று என்றது இன்னபடி என அளவறிந்து சொல்ல முடியாத ஓர் பேரின்பம் என்றவாறு. ஊடலுணர்வி லுளதாம் இன்ப நலனை உவந்து கூறினமையால் இது ஊடலுவகையாயிற்று. புலவி நிலையில் அளவிலின்பம் விளையும் என்பது இதனால் அறிய நின்றது. அடியில் வருவது காண்க.

"புலவித் திரைபொரச், சீறடிப் பூங்கலஞ் சென்னி யுய்ப்பக்,
கலவிக் கடலுள் கலிங்கம் சென்றெய்திக், கதிர்கொண்முத்தம்
நிலவி நிறைமது வார்ந்து, அம்பலத்து நின்றோன் அருள்போன்று
உலவியலாத் தனம் சென்றெய்தலாயின ஊரனுக்கே." (திருக்கோவையார்)

புலவியில் தலை சாய்ந்து நின்றவன் பின்பு கலவியில் கண்ட இன்ப நிலையை உணர்த்தியபடியிது. புலவி அலைப்பக் கலை நெகிழ்த்தும் கலவியில் ஆழ்ந்து அலகிலின்பம் தோய்ந்தமையை இதில் ஆய்ந்து காண்க. கலை = ஆடை. முத்தமது வார்ந்து = இதழ் பருகி. உலவு இயலாத் தனம் என்றது, இறைவன் அருள் போன்று என்றும் தளராமல் தலை நிமிர்ந்துள்ள வனமுலை என்றவாறு. சிலேடை நயப்படச் சொல்லியிருக்கும் இதன் உள்ளுறை நலங்களை ஊன்றி நோக்கிப் புலவியின் பயனை யுய்த்துணர்ந்து கொள்க.

எவ்வாறாவது சிறிது ஊடிக்கொள்வது நல்லதென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை அங்கன்பால் உணரப்படும்.

## கதை.

அங்கன் என்பவன் சந்திரகுல வேந்தன். அருமையில்வந்தவன். பேராண்மையும் பெருங்கவினுமுடையவன். இவன் இளவரசனாய் நிலவியிருக்கும் பொழுது சிந்து தேசத்து மன்னன் மகளாகிய சவுந்தனி என்பவளுக்குச் சுயம் வரம் நிகழ்ந்தது. அரசிளங் குமரர் பலரும் ஆவலோடு வந்து வதுவை மாளிகையில் ஒருங்கே நெருங்கி யிருந்தனர். இவ் அங்கனும் அங்குச் சென்றிருந்தான். குறித்த

முகூர்த்தத்தில் அக் குலமகளை அலங்கரித்து அற்புதமாய் விளங்கி யிருந்த அவ் அழகிய மணி மண்டபத்திற்குங் கொண்டுவந்தார். அக் கட்டழகியைக் கண்டவுடனே கண்டோர் மனமும் களித்து மன்னரசரெல்லாரும் மால் கொண்டெழுந்து மறுகி மொழிந்தார்.

"தொண்டை வாய் முத்த மூரற் றுடியிடை அறல்மென் கூந்தல்
ஒண்டொடி வனப்பு வாய்ந்த வுருவு நம் கண்களாரக்
கண்டுழி வியர்த்து நெஞ்சம் களிப்புற ஒற்றர் கூறப்
பண்டு நாம் கேட்டவாற்றிற் பதின் மடங் காயிற்றென்பார். (க)

வன்றுறை கழித்த ஒள்வாள் மாறிலைவத்தனைய வுண்கண்
அள்ளிக்கொண்டுயிரை யின்னே அருந்திடா தொழியினன்றே
தெள்ளமிர்தனைய தீஞ்சொற் சேயிழை யுத்தரீயத்
துன்றுறை கொடிய கூற்றம் உயிர்குடித்திடுவ தென்பார்" (உ)

இன்னவாறு பல பன்னி மயங்கி மன்னரெல்லாரும் மையல் கூர அக் கன்னி எழுந்து அச் சபை முழுவதையும் நன்னயமுடனயந்து நோக்கினாள். இவ் அண்ணல் மீதே தன் கண்ணினை யூன்றிக் கையிலிருந்த மாலையைக் கருத்துடன் வீசினாள். அது இவனது கழுத்தில் வந்து விழுந்தது. இவன் களித்தெழுந்தான்; அனைவரும் வியந்தார்; மணவினை நடந்தது. அரிய பல வரிசைகளோடு அவ் அழகியைப் பெற்றுத் தனது அணிநகரடைந்து அளவில் போகங்களை நுகர்ந்து இவன் உளமகிழ்ந்து வந்தான். இவன் விழைந்தவாறெல்லாம் குழைந்திணங்கிக் கூடி யமர்ந்து அவள் குலாவியிருந்தாள். அவளது போக வெள்ளத்தில் மூழ்கி நீந்தியும் ஆவலடங்காமல் மேலு மேலும் ஆழ்ந் தோய்ந்து இவன் மோகமீக் கூர்ந்தான். பொழிலிடையமர்ந்தும், பொய்கையி லுலாவியும், செய்குன்றுறைந்தும், அருவியாடியும், மருமலர் சூடியும், குங்குமம் குழைத்துக் கொங்கைகளில் எழுதியும், பொங்கிய காதலோடு போகந் துய்த்து வருங்கால் ஒருநாள் சண்பகச் சூழலில் இன்ப ஆடல்கள் புரிந்து தங்கியிருக்கும் சமயம் "இங்கு நாம் முன்பு விளையாடி யுள்ளோம்" என இளமையில் இவன் தோழர்களோடு உல்லாசமாக யுலாவி யாடியதை நினைந்து அவளிடம் உவகையோடுரைத்தான். நாம் என்றதனால் வேறு மங்கையரோடு கூடியிருந்து கள்ளம் புரிந்து களித்து வந்துளார் என்று அவள் மாறுபட எண்ணி உள்ளங் கனன்று ஊடி யெழுந்து இவனை உருத்து நோக்கினாள்.

" தங்கள் புலவித் தலையில் தணித்திருந்த
மங்கை வதன மணியரங்கில்—அங்கண்
வடிவாள்மேல் கால்வளைத்து வார்புருவம் என்னும்
கொடியாடக் கண்டாரோர் கூத்து "

என்றபடி அவள் பார்த்தபொழுது இவன் பருவரலாழ்ந்து சிறிதய லகன்றிருந்தான். பின்பு அருகு வந்து உரிமை புரையாடி யுண்மையை புணர்த்தினான். அவள் உணர்ந்திசைந்தாள்; இவன் புணர்ந்துவந்தான். ஊடி யகன்று பின் கூடி நுகர்ந்தபோது கலவியில் பேரின்பம் கண்டான் ஆதலால் பிழையின்றி நீங்கிவந்த தனது பேற்றை வியந்து கொண்டான். " தவறு இலராயினும், தாம் வீழ்வார் மென்றோள் அகறலின் ஆங்கொன்றுடைத்து " என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

ஊடி யகன்றேன் உயிரின் புடனேபின்
நீடி யடைந்தேன் நிலைத்து.

ஊடலால் இன்பம் நீடும் என்பது இதனால் கூறப்பட்டது.

1326. ஊடுதலால் பேரின்ப முற்றாரேன் நீலகண்டர்
கூடுதலை விட்டும் குமரேசா—நாடி
உணலினு முண்ட தறலினிது காமம்
புணர்தலி னூட லினிது. (௬)

இ—ள்.

குமரேசா ! திருநீலகண்டர் கூடலொழிந்து ஊடல்கொண்டிருந்தும் ஏன் பேரின்பம் அடைந்தார்? எனின், உணலினும் உண்டது அறல் இனிது; காமம் புணர்தலின் ஊடல் இனிது என்க.

இது, ஊடல் நலனை ஓர் உவமையால் உணர்த்துகின்றது.

உணல் = உண்ணுதல். இன் உருபு எல்லைப்பொருளது.

உண்டது = உண்டவுணவு. அறல் = அற்றுப்போதல்.

அஃதாவது சீரணித்தல். அசீரணத்தோடு ஒருவன் உண்பானாயின் அவ்வுணவு அவனுக்கு நஞ்சுபோல் துன்பம் பயக்கும் ஆதலால் அறல் இனிது என அதன் அறுதியை உறுதிபெற வுரைத்தார்.

"பசியின்றி யுண்பவன் படுவி லங்கெனச்
சுசியின்றிச் சுவைகுன்றித் தொடர்ந்த நோயனாய்
அசியுறும் தவமிகும் தவல மெய்துவான்;
புசியுறு நிலையினைப் போற்றிக் கொள்கவே"

உண்டது அறாது உண்பவனுக்கு உண்டாம் துயர்களை இஃது உணர்த்தி நிற்றலறிக. புசித்தல்=உண்டல்.

உண்டது அறல் இனிது என்றது பட்டினி கிடக்க விட்டு வைத்தல் மிகவும் நல்லது என்றவாறு. இப்பசி பின்பு சுவையையும் உணவையும் வளர்த்து வளமுறச்செய்தல்போல் ஊடலும் முடிவில் காமபோகத்தைக் கனிவித்து ஏமம் பயக்கும் ஆதலால் அதற்குக் காட்டாக வந்தது. புலவியில்லாத கலவி பசியில்லாத உணவுபோல் புன்மையுறும் என்க. காதலோடு கனிந்த அகவாழ்க்கையில் கருதி நடக்க வேண்டிய முறைமைக்குப் புற வாழ்க்கையி லிருந்து ஓர் பொருள் நிலையைக் குறித்துக் காட்டிப் புலனுகர்வில் நலனமர்ந் தொழுகும்படி உறுதி கூறியிருக்கும் அருமையை ஊன்றிப் பார்க்க.

பசி காமங்களை இயல்பாகவுடைய உயிர்கள் இன்னவகையில் இன்ன நிலையில் இன்னவாறு நன்னயமுடன் ஒழுகிவரவேண்டு மென்றவாறிது. "அற்றதறிந்து கடைப்பிடித்து மாறல்ல, துய்க்க துவரப் பசித்து" என்றதும் ஈண்டெண்ணத்தக்கது.

மேலும் மேலும் உண்பதினும் முன் உண்டது அறும்படி அமர்ந் திருப்பது இனிதாம்; அதுபோல், காமபோகம் இணைபிரியாது புணர்தலினும் இடையே ஊடி நிற்பது இன்பந்தரும் என்பதாம்.

நெடிதாக ஊடியிருந்து பின்பு கூடிமகிழ்ந்த தலைவன் அவ் வூடல் நிலையை உவந்து கூறியபடியிது.

பசியானது உணவில் மிகுந்த உருசியையும், உண்டலில் வேட் கையையும் உண்டுபண்ணும்; அதுபோல் புலவியானது காமநுகர்ச் சியில் அதிக இன்பத்தையும், ஆர்வத்தையும் விளைக்கும் ஆதலால் அதனை ஒப்புக்காட்டி இதன் உறுதியை இங்ஙனம் உணர்த்தியருளி னார். பொருந்தல் நிலையில் கண்ட இன்பானுபவத்திற்கு அருந்தல் நிலையில் ஒன்றை ஆதாரவு காட்டியது யாவரும் எளிதில் தெரிந்து இருவகை நிலையிலும் இன்புற நின்று நன்கு ஒழுகவேண்டியென்க.

உண்ணாது நிற்றல், ஊடலுக்கும்; உண்டல், கூடலுக்கும்; ஒப் பாந் கொள்க. பசித்து உண்டலில் மகிழ்ச்சியும் ஆரோக்கியமும்

மருவி நிற்கும்; ஊடிக் கூடலில் காமஇன்பமும், கனிந்த அன்பும் கைவளர்ந்து நிற்கும் என்க.

பசியறியாமல் உண்டவன் மந்தப்பட்டு நோய்வாய்ப் படுதல் போல் புலந்து கொள்ளாது ஓயாமல் கலந்து வந்தவன் காம போகத்தின் சுவையினை யிழந்து கடைப்படுவான் என்றவாறு. "இழி வறிந்து உண்பான்கண் இன்பம்போல் நிற்கும், கழிபேரி ரையான் கண் நோய்" (குறள் 946) என்ற தூய்மையான மெய்த்தகலை இங்கு உய்த்துணரவைத்து இஃதுணர்த்தி நிற்கும் அழகை யூன்றிப்பார்க்க. ஊடலானது காமபோகத்திற்கு உறுதியாக இனிமைதரும் ஆத லால் அதனை உவந்து பேணிக்கொள்ளவேண்டும் என்பது கருத்து.

கூடல் ஒழிந்து இடையே ஊடி நின்றவர் பின்பு பேரின்ப முடையராய் நீடி மகிழ்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை திருநீலகண்டர்பால் உணரப்படும்.

## கதை.

திருநீலகண்டர் என்பவர் சிதம்பரத்தி லிருந்தவர். குயவர் மரபினர். நல்ல சிவ பத்தி யுடையவர். இறைவன் நஞ்சுண்டரு ளிய அருள் நிலையை வியந்து அடிக்கடி திருநீலகண்டா என்று சொல்லி வருவர் ஆதலால் அப் பெயரானே இவர் அழைக்கப் பெற்றார். தமது குலத் தொழிலின்படி மட் கலங்களை யுளவாக்கி விற்று மிக்க செல்வம் படைத்துச் சுமதி என்னு மனைவியுடன் இல்லறத் தமர்ந்து இன்பந் துய்த்து வந்தார். இளமை நலங் கனிந்து வளம்பொருந்திருந்த இவர் ஒருநாள் மதனலேகை என்னுந் தாசியைக் கண்டு மையல்மீக் கொண்டு கையிலுள்ளவெல்லாம் தந்து கலந்து களித்து வந்தார். இவரது களவொழுக்கத்தை யறிந்து மனைவி வருந்திப் புலவி மிகுந்து மறுகி யிருந்தாள். மறுநாள் இரவில் கலவி கருதி இவர் அருகில் நெருங்கினார். அவள் ஒருவி ஒதுங்கினாள். இவர் விழைந்து தழுவ விரைந்தார். "எம் மைத் தீண்டாதீர்! திருநீலகண்டத்தின் மீது ஆணை" என்றாள். இவர் உடனே திகைத்தார்; ஆணை நிலையை நினைந்து அஞ்சினார்; எம்மை என்று பன்மையில் சொன்னமையால் இனி வேறு எந்த மகளிரையும் தீண்டுவதில்லை என்று துணிவு செய்துகொண்டார்.

உல்லாசமாக சேர்ந்த ஊடல் உறுதியாய் நீண்டு நின்றது. மனை வாழ்க்கையில் இருவரு மனமொத்து வாழ்ந்துவந்தார்; ஆயினும் கூடுதலை மட்டும் யாதும் நாடவில்லை. பருவம் முதிர்ந்தது; பேரூடலோடு இங்ஙனம் இவர் பொருகி வருவதைப் பரமன் உலகினுக்கு உணர்த்த வேண்டி ஓர் அடியவர்போல் வேடங் கொண்டுவந்து இவரிடம் திரு ஓடு ஒன்று தந்து பின் வந்து பெறுவதாக அகன்று போனார். திங்கள் சில கழிந்து மீண்டு வந்து தமது ஓட்டைத் தரும்படி அவர் உவந்து கேட்டார். இவர் வைத்த இடத்தே தேடிப் பார்த்தார்; காணேர்; கலங்கி வருந்தினார்; வெளியே வந்தார்; "சுவாமி! தந்த ஓடு எந்த வகையோ மறைந்து போயது; அதனினும் சிறந்தது ஒன்று தருகின்றேன்;" என்றார். வந்தவர் சினந்தார். நீ நய வஞ்சகன்; அடைக்கலமாகக்கொடுத்த என் கலத்தை மறைத்துவைத்துக்கொண்டு என்னை ஏமாற்றுகின்றாய்! அதனை 'நீ எடுக்கவில்லை என்று சிவ சந்நிதியிலுள்ள வாவியில் மூழ்கிச் சத்தியம் செய்துகொடு" என்றார். இவர் சரி என்றிசைந்தார். ஊரவர் திரண்டார்; இவர் குளத்தில் இறங்கப் போகும் பொழுது நீர் தனியே செய்தால் போதாது; உமது பிள்ளையையும் உடன் பிடித்துச் சத்தியம் செய்துகொடும் என்றார். இவர் பிள்ளை இல்லையே என்றார். பிள்ளை இல்லையானால் பெண்டாட்டியைப் பிடித்துச் சொல் என்று மன்றாடி மன்றாடினார். இல்லாளைத் தீண்டக் கூடாது என்று தமக்குள் சேர்ந்துள்ள நீண்ட ஊடலை அன்று வெளியறியச் சொல்லினார். அப்படியானால் இடையே ஒரு கோலைப் பிடித்துக்கொண்டு முழுகிச் சொல்லும் என்றார். அவ்வாறே முழுகி யெழுந்தார்; இருவரும் இளமை எழிலோடு வெளியில் விளங்கினார்; கண்டவரனைவரும் வியந்து திகைத்தார். வந்தவர் மறைந்தார். உடனே உமாதேவியாருடன் விடைமேல் தோன்றினார்; அனைவரும் உவந்து துதித்தார். பரமர் இவரை நோக்கி இந்த இளமை நலனோடு எம்பால் வந்து நீவிர் இருவரும் என்றும் இன்பம் துய்த்திரும் என்று திருவாய்மலர்ந்தருளினார். அவ்வாறே இவர் ஆரா இன்பம் ஆர்வமீதூர்ந்து அங்கு அனுபவிக்கலானார். "காமம் புணர்தலின் ஊடல் இனிது" என்பதை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார். இவர் ஊடி யிருந்து பின்பு பேரின்பம்

தூய்த்த நிலையைக் குறித்து அறிஞர் பலரும் வியந்து பாடியுள்ளார். சில அடியில் வருவன காண்க.

"ஆனதங் கேள்வ ராங்கோர் பரத்தைபால் அணைந்து நண்ண
மானமுன் பொருவந்த ஊடலால் மனையின் வாழ்க்கை
ஏனையவெல்லாம் செய்தே யுடனுறை விசையா ராணுர்
தேனலர் கமலப் போதிற் றிருவினும் உருவ மிக்கார். (க)

மூண்ட அப் புலவி தீர்க்க அன்பனார் முன்பு சென்று
பூண்டயங்கிளமென் சாயற் பொற்கொடி யனையார் தம்மை
வேண்டுவ இரந்துகூறி மெய்யுற வணையும் போதில்
தீண்டுவீ ராயின் எம்மைத் திருநீல கண்டம் என்றார். (உ)

ஆதியார் நீல கண்டத் தளவுதாம் கொண்ட ஆர்வம்
போதிய ஆணை கேட்ட பெரியவர் பெயர்ந்து நீங்கி
ஏதிலார் போல நோக்கி எம்மை யென்றதனுல் மற்றை
மாதரார் தமையும் என்றன் மனத்தினும் தீண்டேன் என்றார். (௩)

விறலுடைத் தொண்டனாரும் வெண்ணகைச் செவ்வாய் மென்றோள்
அறலியற் கூந்தலாளா மனைவியும் அருளின் ஆர்ந்த
திறலுடைச் செய்கை செய்து சிவலோகமதனை யெய்திப்
பெறலரு மிளமை பெற்றுப் பேரின்பம் உற்றாரன்றே." (பெரிய புராணம்)

"மதிநுதற் பவள வாய்க்கருந் தடங்கட்
குவிமுலைப் பசும்பொற் கொடிதனை யமையாக்
காதல் மீதூரக் கலவிசெய் திடுவான்
புகும்பொழு தவளொரு பொருளமையுட் கிடப்பப்
படர்முதிர் வேனிற் பகற்கொடும் பாலை
நிலத்துநீர் வேட்டோ னீரரிதினிற் பெற்று
உண்புழி உண்ணாது ஒல்லையில் தடுக்கும்
செயலென எமைநீ தீண்டேல் என்று
நின்மேல் ஆணை நிகழ்த்திட நீங்கிப்
புணரி யுண்டெழுந்த புயல்நிகர் வளர்குழல்
அம்துணை முகில்போன்று அழகுறுங் காறும்
தீண்டா தொருபூஞ் சேக்கையில் துயின்று
மாறு வன்பு வளர்மனத் தவன்." (திருவெங்கைக் கலம்பகம்)

"சொல்லச் சிவன்திரு வாணைதன் தூமொழி தோணகையை
ஒல்லைத் துறந்துரு மூத்ததற் பின்னுமை கோனருளால்
வில்லைப் புரைநுத லாளொடிளமை பெற்றின்ப மிக்கான்
தில்லைத் திருநீல கண்டக் குயவனுஞ் செய்தவனே."
(திருத்தொண்டர் திருவந்தாதி)

இவர் ஊடியிருந்ததும், பின்பு நீடிய இன்பம் நிலைத்து நின்றதும், இவற்றுள் குறிக்கப்பட்டுள்ள நிலைகளும் கூர்ந்து காண்க.

வாடியபின் நீரால்வளர்பயிர்போல் காம வின்பம்
ஊடியதால் ஓங்கி யுறும்.

ஊடல் இனிது என்பது இதனால் கூறப்பட்டது.

1327. நேர்ந்த புலவியெதிர் நோத பத்திராய்
கூர்ந்துவென்றான் என்னே குமரேசா—சேர்ந்தெழுந்த
ஊடலிற் றோற்றவர் வென்றா ரதுமன்னுங்
கூடலிற் காணப் படும். (எ)

இ—ள்.

குமரேசா! புலவியில் மெலிந்திழிந்த பத்திராயு பின்பு ஏன் கலவியில் உயர்ந்து வந்தான்? எனின், ஊடலில் தோற்றவர் வென்றார்; அது கூடலில் காணப்படும் என்க.

இது ஊடல் வணக்கம் உயர்வாம் என்கின்றது.

தோற்றவர் = எதிர்ந்து நில்லாமல் மெலிந்து சாய்ந்தவர்.

"புலியடு மதுகை மைந்தர் புதுப்பிழை உயிரைப்புக்கு
நலிவிட அமுதவாயால் நச்சுயிர்த் தயிற்க வல்லார்
மெலிவுடை மருங்குல் மின்னின் அலமரச் சிலம்பு விம்மி
ஒலிபடவுதைக்குந்தோறு மயிர் புளகுதிக்கின்றாரை" (இராமாயணம்)

ஊடலில் மெலிந்துசாய்ந்து அத்தோல்வியை மகிழ்ந்து ஆடவர் புளகிதம் கொண்டிருக்கு நிலையை இதில் அறிந்து கொள்க.

அது என்றது வென்றியின்பத்தை. மன்னும் என்பது கூடல் நிலையைக் குறித்து நின்றது.

தோல்வி வென்றி என்ற போர் வாக்கியங்களை இங்கே குறித்தது காமக்கலகத்தில் கைகலந்து நிற்கும் நிலை தெரிய என்க.

"பள்ளியின் மைந்தரோடும் ஊடிய பண்பு நீங்கி
ஒள்ளிய கலவிப் பூசல் உடற்றுதற் குருத்த நெஞ்சர்
மெள்ளவே இமையை நீக்கி அஞ்சன விழுது வேய்ந்த
கள்ளவாள் நெடுங்கண் என்னும் வாளுறை கழிக்கின்றாரை."
(இராமாயணம்)

அமளியில் புலவி கொண்டிருந்த தலைவி கலவியை அவாவியுள்ள நிலையை உணர்த்தியபடியிது. இதில் போர்முறை தொனிக்க உரைத்திருக்கும் அழகைப்பார்க்க. தோல்வியில் சிறுமையும் கவலையும் உண்டாம்; வெற்றியில் பெருமையும் மகிழ்ச்சியும் விளையும்; அங்ஙனம் இருப்பத் தோற்றவர் மேன்மையடைவர் என உணர்த்தி இடநிலையை விளக்கியிருக்கும் அருமையை இதில் ஆய்ந்து பார்க்க.

வீரப்போரில் சிறிதும் பின்னிடாமல் மூண்டு முன்னேறி நிற்றலே வெற்றியாம்; காமப்போரில் கடுமை காட்டாமல் மெலிந்து பின்சாய்தலே மேலான வென்றியாம் என்க. தோற்றவர் வென்றார் என்றான்; அவ்வெற்றி வெளிப்படையாய்த் தெரியுமோ? என்றார்க்கு, அது, இன்ன இடத்தில் காணப்படும் என இடம் காட்டினான்.

மேல், ஊடல் இனிது என்றான்; அவ் இனிமையை எய்தி அனுபவிக்கும் நிலையை ஈதில் உணர்த்துகின்றான்.

ஊடலின் கண்ணே தோல்வி யடைந்தவர் வென்றவராவர்; அவ்வெற்றி யின்பம் புணர்ச்சியின்கண் உணரப்படும் என்பதாம்.

காதலர் இருவரும் ஊடிநின்ற பொழுது முதலில் கலவியை விழைந்து வாயிழந்தவரே தோற்றவராவர் ஆதலால் அந்நிலையினை யடைந்தவன் கலவியிலடைந்த இன்பத்தை வியந்து கூறியபடியிது.

தலைவி புலந்திருந்த பொழுது தலைவன் உறுதிகொண்டு நிற்க முடியாமல் நிலைதிரிந்து புலவி தீரும்படி அவளை வணங்கினான்; வணங்கவே அவள் இணங்கியருளினாள்; உடனே அணைந்து மகிழ்ந்தான்; அக்கலவியில் கழிபேரின்பம் கண்டான்; காணவே தன் தோல்வியால் விளைந்த மேன்மையை இங்ஙனம் அவன் வியந்து புகழ்ந்து நயந்து கொண்டாடினான் என்க.

தனது தேவியாகிய கேமசரி ஒருமுறை ஊடியிருந்த சமயம் சீவகன் மிகவும் வாடி மெலிந்து அவளை வணங்கிவேண்டினான்; வேண்டவே அவள் இணங்கியருள அவன் அணைந்து நுகர்ந்து அளவிலின்பமடைந்து அவளை உவந்து புகழ்ந்தான். அன்று அவன் பாவிப் புகழ்ந்தபடியை அடியில் பார்க்க.

> "கொந்தழல் வேற்கணால் என் ஆவி கூட்டுண்ட கொம்பே!
> செந்தழை யலங்கல் ஏந்திச் சீறடி பரவ வந்தேன்
> உய்ந்தினிப் பணிசெய்வேனோ? உடம்பொழித்தேகுவேனோ?
> பைந்தழை யல்குற் பாவாய்! பணிஎனப் பரவினானே. (க)
>
> வீணையும் குழலும் பாலும் அமுதமும் கரும்பும் தேனும்
> பாணியாழ் கனியும் வென்ற பைங்கிளி மழலைத் தீஞ்சொல்
> வாணிக மகளிர்தாமே வாணிகம் வல்லர் என்னாப்
> பூண்முலை பொதிர்ப்பப் புல்லிப் புனைநலம் பருகினானே." (உ)
>
> (சீவக சிந்தாமணி)

புலவியில் எதிர்சாய்ந்த சீவகன் கலவியில் வென்று களித்து உரையாடியிருக்கு நிலையை இதில் ஊன்றி புணர்ந்து கொள்க. அவள் வணிக மங்கையாதலால், ஊடலை அளவறிந்து, முதலுக்கு மோசம் வாராமல் கூடி மகிழ்ந்தாள் என அவளைக் குறித்து வியந்திருக்கும் அழகைக் கூர்ந்துபார்க்க.

"தோற்றுரோ வெல்வர் துணைமிசையார் கோட்டியானை
ஏற்றுக் கழல் தொடியார் மிக்காரை யார்வரைவர்
போற்றளி கூடல் கரி." (இன்னிலை 29)

அடிகள் திருமொழியை இது அடியொற்றி வந்துள்ளமை யறியலாகும்.

ஊடலில் சாதனை செய்யாமல் முந்திக்கொள்வது நலம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பத்திராயுவின் பால் உணரப்படும்.

கதை.

பத்திராயு என்பவன் வச்சிரவாகு என்னும் அரசனுடைய அருமைத் திருமகன். சிறந்த அழகன். நிறைந்த கல்விமான். நல்ல போர் வீரன். இவனுடைய தாய்பெயர் சுமதி. இவன் பிறந்திருந்த பொழுது அரசன் இளையமனைவியின் மையலிலாழ்ந்து தாயோடு இவனை வேறுதுக்கிவிட்டான். அவள் பெருந்துயரோடு இவனை எடுத்துக்கொண்டு வருந்தி யகன்று மறுபுலம் சார்ந்து ஓர் வணிகன் போற்ற வாழ்ந்து வந்தாள். இவன் பருவமடைந்து அருவலி யுடையனு யமைந்து நின்றான். இங்ஙனம் நிற்குங்கால் மகத மன்னன் படையெடுத்து வந்து வச்சிரவாகுவின் நகரை வளைத்து அடுசமர் விளைத்து அல்லற்படுத்தி யனைத்தையும் அழித்து அவனைச் சிறைபிடித்துச் சென்றான். செல்லுங்கால் வழியிடையே தற்செயலாய் வில்லுங்கையுமாய் நின்ற இவன் நில்லென்று தடுத்தான்; நெடும் போர் மூண்டது; அவ் அமரில் மகதர் பதியை வென்று தன் தந்தையைச் சிறை மீட்டி இம்மைந்தன் விடுத்தான். மகன் என்பதை அறியாமல் அம்மன்னன் இவனை மனங்கனிந்து வாழ்த்திப்போனான். இவன் தாயிடம்வந்து தகவுடனிருந்தான். இவ் அரசிளங் குமரனது உண்மை நிலையைநிடததேசத்து மன்னனாகிய சந்திராங்கதன் விடபர் என்னும் முனிவர் மூலம்

தெரிந்து வியந்து மகிழ்ந்து தனது அருமைத் திருமகளாகிய கீர்த்திமாலினி என்பவளை இவனுக்கு மணஞ்செய்து கொடுக்க விழைந்தான். அவ்விழைவினை அமைச்சர் சிலரிடம் உரைத்து விடுத்து இவனை அழைத்து வந்து பெருஞ்சிறப்போடு பேணிவைத்து விதிமுறையாகத் தன் பெண்ணை விழைந்து தந்தான். பேரழகியாகிய அக்குமரியும் இக்குமாரனும் பெருங்காதலோடு மருவிமகிழ்ந்தார். இச்சதிபதிகளிருவரும் ஆர்வமீதூர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து அதிமேன்மையோடு அங்கு அமர்ந்திருந்தார்.

> "பையராவணைப் பச்சை மேகமும்
> செய்ய தாமரைத் திருவும் போலவே
> ஐய நுண்ணிடை அணங்கும் அண்ணலும்
> துய்ய பூவணைத் துறக்க மேவினார். (க)
>
> குங்குமம் செறி குவவுக் கொங்கைமேல்
> தங்கி யின்பமார் சலதி மூழ்கினான்;
> அங்கவன் புயத் தடங்கி மாதரும்
> பொங்கு காதலம் புணரி மூழ்கினாள்." (பிரமோத்தரகாண்டம்)

இங்ஙனம் போகம் துய்த்து இவன் பொருந்தி வருங்கால் மாமன் ஓர் சூழ்ச்சிசெய்து வச்சிரவாகுவைத் தன் நகர் வந்து போம்படி விருந்துக்கு அழைத்தான். அவன் மந்திரிகளோடு வந்து சேர்ந்தான்; விருந்து நடந்தது; பின்பு உல்லாசமாய்க் கலியாணமாலில் உவந்திருக்கும் பொழுது இவனை அவன் கண்டான். வியந்து நோக்கி, விரைந்தெழுந்து, விழைந்து தழுவி "என்மானத்தையும் உயிரையும் காப்பாற்றிய இவ் அருமைமகன் நும் மருமகனோ? என உரிமையொடு வினவி நிடதர்வேந்திடம் இவனது குலமுறையை விசாரித்தான். அடியில்வருவன காண்க.

> "கண்டவுடன் வச்சிரவாகென்னு மடல்வேந்தனகம் களித்து நோக்கித்
> திண்டிறலாய்! வடிவாட்கைச்சேவகனே! இவண்வருக வருகவென்று
> வண்டமர்தார் நிடதர்பிரான் தனைமுகம்பார்த்திவன்கொடியமகதன் தன்னை
> ஒண்டிறலும் படைச் செருக்குமழித் தெனைக்காத் துயிரளித்த வரவோன்
> என்றான்.
>
> பின்னுமுவந்துரைக்கின்றான் இவனை அருந்தவப் பயன்போல் பெற்றோன்
> யாவன், மன்னுமிவன்பதியேது? மரபேது? எற்குதவி செய வந்ததேது?
> பொன்னமரும்புயத்தோய்! நின்மருகனிலை யெனக்கு அடைவே புகறிஎன்
> னப், பன்னினங்கது கேட்ட நிடதர்பிரான்முறுவலித்துப் பகரலுற்றான்."

அவ் அரசன் சொல்லால் உண்மை தெரிந்து உள்ளமுருகித் தன் பிள்ளையென்று அள்ளியணைத்து முன் எள்ளி விடுத்ததை யெண்ணி யேங்கித் தள்ளருந்துயரோடு தவித்துப் புலம்பினன்.

"கடுங்கானத் திடைதனியே உமைவிடுத்து வரப்பணித்த கடிய நெஞ்சக்
கொடும்பாவி தனை மகதனீ கொல்லாமல் உயிரளித்தகுமரா! எண்டு
கடுங்காமல் உயிர்பொருந்தப் புல்லவுநீ கருணைசெய்தாய்! ஞாலமென்னை
அடுங்காலன்என்பதலால் அரசனென்றுசொலத்தகுமோ? அந்தோஅந்தோ"

என இந்தவண்ணம் புலம்பி நின்ற அவனைச் சந்திராங்கதன் தேற்றி யருளினன். அதன்பின் தனது மனைவி, மகன், மருகி என்னும் இவர்களோடு தேரேறிநகரம்சேர்ந்து இவனுக்கு முடி சூட்டிவைத்து அவன் ஆறி யிருந்தான். இத்தலைமகன் அக்குலமகளோடமர்ந்து அலகில் போகங்களை நுகர்ந்து அரசு புரிந்து வந்தான். அவளது இன்பநுகர்ச்சியிலாழ்ந்து அன்பாடல்கள் பல ஆற்றி அளவளாவி வருங்கால் இடையிடையே ஊடல்கள் நிகழ்ந்தன. அவள் ஊடிய போதெல்லாம் இவன் கொடுமையாய் நீடி நில்லாமல் குழைந்து வணங்கி எதிர்சாய்ந்து வந்தானதலால் அவள் விழைந் திணங்கி மென்போகமருளி அன்போடு மேவியிருந்தாள். ஆவியென அமர்ந் திருந்த அத்தேவியின் புலவியுணர்ந்து தொலைவு புரிந்து பேரின்பம் துய்த்துப் பெருமகிழ்ச்சியடைந்துவந்த இவன் அவ் இன்பநிலையை விழைந்து இனிது புகழ்ந்து ஊடலை யுவந்து அன்பாற்றி வந்தான். ஊடலில் தோற்றவர் கூடலில் வெல்வார் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

ஊடலெதிர் சாய்ந்த வுரவோர் உயிரின்பம்
கூடலெதிர் காண்பர் குளிர்ந்து.
ஊடலில் நீடலாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

1328. ஊடல் இனிதென் றுவந்தேன் வசுமன
கூடல் விழைந்தான் குமரேசா—நாடியே
ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வெயர்ப்பக்
கூடலிற் றோன்றிய வுப்பு. (அ)

இ—ள்.

குமரேசா! ஊடல் நிலையை வசுமன ஏன் மிகவும்

உவந்து கொண்டான்? எனின், நுதல்வெயர்ப்பக்கூடலில் தோன்றிய உப்பு ஊடிப் பெறுகுவம் என்க.

இது, கலவியின்பம் புலவியில் விளையும் என்கின்றது.

நுதல் = நெற்றி. வெயர்ப்ப = என்றது கலவிக் காலத்தில் வெயர்வை தோன்றுமாதலால் அவ் இயல்பு நோக்கி.

"உள்ளுடை மயக்காலுண்கண் சிவந்து, வாய்வெண்மை யூறித்
துள்ளிடைப் புருவம் கோட்டித் துடிப்ப, வேர் பொடிப்பத் தூய
வெள்ளிடை மருங்குலார்தம் மதிமுகம் வேறொன் றாகிக்
கள்ளிடைத் தோன்ற நோக்கிக் கணவரைக் கவல்கின்றாரை."
(இராமாயணம்)

களிப்புங் கலவிகளில் வேர்வை முதலியன தோன்றி வெறி மிகுந்து மகளிர் நிற்கு நீர்மை நிலைகளை யிவை துணர்த்தி நிற்றலறிக.

உப்பு என்றது இங்கே இனிமையை. ஐம்புலன்களும் ஆர நுகரும் இன்சுவையுடையதாதலால் காம இன்பம் உப்பு என நின்றது.

"அலைகட லமிர்தினை வெறுக்கும் ஆயிழை
இலவித ழமுதமே யினிதெனா வுண்டிடும்
கொலையயிராவதம் துறக்கும் கோல்வளை
முலையயிராவதம் மூயங்கி மேவுமே" (கந்தபுராணம்)

எல்லா நலங்களையும் வெறுத்து விடுத்து இந்திராணியின் இன்பம் ஒன்றையே இந்திரன் விழைந்து நுகர்ந்துள்ளமையை இதில் உணர்ந்து கொள்க.

பெறுகுவம் கொல்லோ? என்றது அப் பேற்றினது அருமையை எண்ணி வியந்தவாறு. பன்மையில் குறித்தது தான் வேறு அவள் வேறு என்னும் தன்மை சிறிதுமின்றி ஒருமையில் மருவியுள்ள தனது தலைவியையும் உடன் தழுவி என்க.

" ஆடல் மயிலியலி அன்பன் அணியாகம்
கூடுங்கால் மெல்லென் குறிப்பறியான்—ஊடல்
இளிவந்த செய்கை இரவாளன் யார்க்கும்
விளிவந்த வேட்கை யிலன் "

கலவியில் அறிவழிந்தவசமாகியும், புலவியில் கெஞ்சிப்பணிந்து கொஞ்சிக் குலாவியும் ஒரு தலைவன் இருந்த நிலையைக் குறிப்பாக இது உணர்த்தி நிற்றல் காண்க.

நெற்றி வெயர்க்கும்படி கலவியில் கனிந்த இனிமையை இன்னும் ஒருமுறை ஊடி எய்தமுடியுமோ? என்பதாம்.

முன்னொருமுறை ஊடியிருந்து அவ்வேகத்தோடு கூடிமகிழ்ந்த தலைவன் அக் கூடலில் தானடைந்த இன்பத்தை மீண்டும் பெற விழைந்து ஈண்டு வியந்து மொழிந்தபடி யிது.

புலவி நீக்கித் தலைவியோடு கலந்து நுகர்ந்தபொழுது அலகி லின்பம் விளைந்ததாதலால் "நுதல் வெயர்ப்பத் தோன்றிய உப்பு" என அந் நுகர்ச்சி நிலையை இங்ஙனம் விளக்கி யுரைத்தான். கலவிப் போரில் விழி சிவத்தல், இதழ் வெளுத்தல், நுதல் வெயர்த்தல் முதலியன தலைவியிடம் நிகழும் ஆயினும் வெயர்வையானது புறத்தே வெளிப்படையாய்த் தோன்றி இன்ப எழுச்சியில் விளையு மாதலால் அதனையே முன்னுற எண்ணி மொழிந்தான். "கொங்கை ஏர் பூட்டிக் குறுவியர் நீர் அங்கடைத்துக், காதல் வரம்பொழுக்கிக், காமப் பயிர் விளைத்தாள்" என்பதூஉம் காண்க.

"கோடும் இளம்பிறையில் குறுகிய முத்துதிரக்,
கொங்கை வடம்புரளச், செங்கழுநீர் அளகக்
காடு குலைந்தலையக், கைவளை பூசலிடக்,
கலவி விடாமடவீர்! கடைதிறமின் திறமின்" (கலிங்கத்துப்பரணி)

தொண்டைக் கனிவாய் துடிப்பச், சுடர் நுதல்மேல்
வெண்டரள மென்ன வெயர்வரும்பக்,—கெண்டைக்
கடைசிவப்ப நின்றாள் கழல்மன்னர் வெள்ளைக்
குடைசிவப்ப நின்றான் கொடி." (நளவெண்பா)

தலைவியர் நுதல் வெயர்க்கும் நிலையை இவை யுணர்த்திநிற்றலறிக. கலவியில் மிகுந்த இன்பம் விளைதலால் புலவியைக் காதலர் போற்றி மகிழ்வர் என்பது இதனாலறியலாகும்.

"எளிவருங் கொழுநர் புயமும் நுங்களிரு
குயமு மண்டியெதிர் எதிர்விழும்
தெளிவருங் கலவி, புலவி போலினிய
தெய்வமாதர்கடை திறமினோ." (தக்கயாகப்பரணி)

கலவி யின்பம் புலவிபோல் இனியது என இஃதுணர்த்தி நிற்றலறிக. குயம் = முலை. புயமும் குயமும் மருவி நுகரும் பொழுது உணர்வு கலங்கிப் பரவசமாவாதலால் தெளிவு அருங்

கலவியென நின்றது. கலவியின் இனிமைக்குப் புலவியை இதில் உவமை கூறியிருத்தலால் அதன் இன்பநிலை இனிது புலனாம்.

ஊடலின்பத்தைத் தலைவன் நாடி விழைவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை வசுமனுபால் உணரப்படும்.

கதை.

வசுமனு என்பவன் சூரியகுலத்தோன்றல். அரியச்சுவன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகன். பெருங்கொடையாளன். அருந்திறலுடையவன். வில் வேல் முதலிய படைக்கலன்கள் எல்லாவற்றையும் நன்கு பயின்றவன். யாண்டும் அஞ்சா நெஞ்சினன். எத்துணைப்படை எதிர்த்துவரினும் தனியே நின்று வெல்லவல்லனாய் விளங்கியிருந்தமையால் அசகாயசூரன் என எங்கும் இவன் இசைபெற்று நின்றான். இவனது பெருந்திறலை வியந்து அரசர் பலரும் அடங்கி அடிதொழுது வந்தார். இவன் ஆட்சியில் நாடெங்கும் செழித்திருந்தது. அடியில்வருவது காண்க.

"கரும்பறுத்தடைத்த கனைகுரற்சகடு நெற்கதிர்ப்பண்டியும் நெருங்கி
விரிந்திடம் பெறாத வியனகர் புரக்கும் விறல் அரியாசுவன் சிறுவன்
பருந்துவீழ்ஞாட்பிற் கூற்றெதிர்ப்படினும் பாயொளிப் பருதிவேல்திரியா
இரிந்திடவுடற்றும் வசுமனு என்னும் இசைதிசை யளந்திடும் வேந்தன்"
(கூர்மபுராணம்)

இவனது பெருந்திருவும் அருந்திறலும் இதனாலறியலாகும். விழுமிய நிலையில் இளவரசனாய் இங்ஙனம் விளங்கியிருந்த இவன் இந்திரசேனை என்னும் மங்கையை மணந்து இன்பமிக் கூர்ந்தான். எழில்நலங்களில் சிறந்திருந்த அவ் அரசிளங் குமரியோடமர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து ஆர்வமிகுந்து வந்தான். ஒருவாமை யிருவரும் மருவிக் களித்து மதன லீலைகளில் திளைத்துவருங்கால் இடையிடையே ஊடியிருந்து பின்பு கூடி மகிழ்ந்தார். ஒருமுறை ஊடல் நிகழ்ந்தபொழுது நெடுநேரம் நாடியிருந்த இவன் அவள் அயர்ந்து உறங்கிவிட்டதாக நினைந்து அயலே கண்ணயர்ந்தான். அவள் யாதும் துயிலாமல் இவன் முதலில் வந்து தழுவுவன் என்று எதிர்பார்த்திருந்தாள். பார்த்தபடி வாராமையால் உள்ளே ஆர்த்தி மிகுந்தாள். வலியப்போய் மருவவும் நாணினாள்; கலவியில்மனம் மிகவும் வலிந்து நின்றமையால் கனவு கண்டு பயந்தவள்போல்

துள்ளி எழுந்து அவன் மேல் புல்லி விழுந்தாள்; அவன் அள்ளி யணைத்து உள்ளமுறவுவந்தான். தன் கள்ளந்தெரிந்திலன் என அவள் மெல்ல நகைத்து மேவி மகிழ்ந்தாள்.

"புலவியில் துயின்றாள் நீண்டின் முனிந்திடும் பூவை என்று
மலரணைப் புறத்துத் தானும் துயிறல்போல் கிடப்ப வாய்ந்த
கலவியின் வேட்கை தூண்டக் கனவினில் வெருவினாள்போல்
முலைமுகடமுந்த வேந்தன் முழவுத்தோள் புல்லினாளே. (க)

புல்லலு மகிழ்ச்சிகூரப் புணர்முலை குழைய மோந்து
மெல்லிதழ் அமுதமாந்தி மேகலை நெகிழ்த்த லோடும்
நல்லெழில் கனிந்த கோதை நகையுளத் தடக்க லாற்றாள்
முல்லைமென் முகையுநாண வரும்பின முறுவல் பூத்தாள்." (உ)

இங்ஙனம் புலவியில் மலிந்து கலவியில் கனிந்து இக் காதலர் இருவரும் களித்து வந்தார். புலந்து கலந்தபொழுது மிகுந்த இன்பம் விளைந்து நின்றமையால் அப் புலவி நிலையை இவன் பெரிதும் விழைந்து உறுதிபெற நயந்து உள்ளுற உவந்தான். "நுதல் வெயர்ப்பக் கூடலில் தோன்றிய உப்பு, ஊடிப் பெறுகுவம்" என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

ஊடி மருவு முயரின்பை யென்ஞான்றும்
நாடி யுருகு நயந்து.

ஊடலை விழைந்துவந்த நிலை இதனால் கூறப்பட்டது.

---

1329. பண்டேனோ ஊடுதலைப் பாண்டியன்முன் வேண்டியுளங்
கொண்டாடி நின்றான் குமரேசா—தண்டாமல்
ஊடுக மன்னோ ஒளியிழை யாமிரப்ப
நீடுக மன்னோ விரா. (கூ)

இ—ள்.

குமரேசா! தன் தேவியின் ஊடலை விழைந்து பாண்டியன் ஏன் இரவை உவந்து நின்றான்? எனின், ஒளி இழை ஊடுக மன்னோ யாம் இரப்ப இரா நீடுக மன்னோ என்க.

இது, ஊடலை அவாவித் தலைவன் உவந்துரைக்கின்றது.

ஒளி இழை = ஒள்ளிய ஆபரணங்களையுடையவள். என்றது தலைவியை. பொன்னினும் மணியினும் செய்த அணிகளை யணிந்திருந் தமையால் அவளை ஒளியிழை என்றான். இழை = அணிகலன். ஒளி = பொன்னொளியும், மணி யொளியும் என்க. யாம் என்றது தலைவனை. தன் பெருமிதம் தோன்றப் பன்மையில் குறித்தான். இரப்ப = கெஞ்சி யுரைக்க. காதலி புலந்திருந்தபொழுது காதலன் அலந்து நின்று மறுகி மன்றாடியவன் ஆதலால் இரப்ப என்றான்.

ஊடுக, நீடுக, என வியங்கோள் வாசகத்தால் வேண்டி நின்றது அவ் ஊடலும் இரவும் இன்ப நிலையமாய்த் தனக்கு இசைந்துள்ளமையான் என்க. மன் இரண்டும் மிகுதிப் பொருள் குறித்து நின்றன. ஓகாரங்களால் அவன் உள்ளத்தார்வம் உணரலாகும்.

இரா நீடுக = இரவுக்காலம் நீண்டு நிற்க. நீடலும் குறுகலும் இன்றித் தன்னிலையில் அது நிலைத்தவரினும் இவன் ஆசை மிகுதி யால் இரவினை நோக்கி இங்ஙனம் பேசலானான்.

ஊடுதலால் வரும் பேற்றை முன் உவந்து நின்றான்; இதில், அது விளைந்து பலன் படிதற்குரிய காலத்தை விழைந்துவந்தான்.

ஒளியமைந்த அணிகளையுடைய காதலி ஊடுவாளாக; அவ் ஊடல் நீங்கும் வகை யாம் கெஞ்சி யுரையாடும்படி இரவு நீள வேண்டும் என்பதாம்.

ஊடலின் பயனை அனுபவித்திருந்த தலைமகன் அந்நிலையினை மீளவும் பெற விழைந்து உவந்து கூறியபடி யிது.

காதலரிருவர் கருத்தொத்துக் கூடுங்கால் உண்டாம் இன்பம் போல் அவர் ஊடி நின்றபொழுதும் உள்ளே உவகை விளையும் ஆதலால் அவ் விளைவினை இங்ஙனம் விழைந்துகொண்டான் என்க.

"யானூடத் தானுணர்த்த யானுணரா விட்டமன்
தானூட யான் உணர்த்தத் தானுணரான்—தேனூறும்
கொய்தார் வழுதிக் குளிர்சாந் தணியகலம்
எய்தற்கு இராக்கழிந்த வாறு."

ஊடியும் உணர்த்தியும் தம்முள் உல்லாசமாய் ஆர்வ ஆடல் புரிந்து காதலர் இரவைக் கழித்திருக்கு நிலையை இதில் அறிந்துகொள்க.

காம போகம் விளையும் காலம் ஆதலால் இரவைவேண்டினான். பிரிந்து அகன்றவர் இரவை இகழ்ந்து நிற்பினும், கலந்து புலந்தவர்க ளுக்கு அளிப்படுத்தலால் அதனை அவர் விழைந்து போற்றுவர் என்க.

> "கலந்தவர்க்கு இனியதோர் கள்ளுமாய்ப், பிரிந்து
> உலந்தவர்க்கு உயிர் சுடும் விடமுமாய், உடன்
> புலந்தவர்க்கு உதவிசெய் புதிய தூதுமாய்,
> மலர்ந்தது நெடுநிலா மதனன் வேண்டவே." (இராமாயணம்)

புலவி முதலிய நிலையிலுள்ளவர்க்கு நிலவு விளைக்கும் நிலைகளை யுணர்த்தி நிற்கும் இதனமுதைப் பார்க்க. ஒரு நிலவே இனிய கள்ளாய், கொடியவிடமாய், புதிய தூதாய் நிலவிநின்றதென அதன் நிலையை விளக்கிக் காதல் நிலையை யுணர்த்தியுள்ள நுட் பத்தை இதில் ஊன்றி யுணர்ந்து கொள்க.

> "கலவியுறு குமரர் யார்க்கும் கண்ணிய விருந்தோடுண்டும்
> பலகலை கேள்வி ஆய்ந்தும் பகற்பொழுதினிது நீங்கும்;
> அலர்முலை மங்கலார்தம் அலத்தக மலர்த்தாள் நீவிப்
> புலவிகள் தீர்த்தும் சேர்ந்தும் நள்ளிருட்பொழுது போமால்." (நைடதம்)

இரவுப்பொழுது புலவியாலும், கலவியாலும் இனிது கழியும் என நைடத நாட்டின் இன்ப நிலையை இஃதுணர்த்தி நிற்றலறிக.

ஊடல் நேரும் இரவினைக் காதலன் மிகவும் உவந்துகொண் டாடுவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இராசேச பாண்டியன்பால் உணரப்படும்.

## கதை.

இராசேச பாண்டியன் என்பவன் மதுரையிலிருந்து அரசுபுரிந் தவன். இராசேந்திர பாண்டிய மன்னனுடைய அருமைத்திரு மகன். அரும்பெறலழகன். அருந்திறலாளன். பலகலைதெளிந்த நலமிகு புலமையன். பெரிய போர்வீரன். அறிவும் ஈகையும் அடு போராண்மையும் செறிவும் சீலமும் செறிந்திருந்த இப்பெருந்தகை யாளன் வசுமதி என்னும் அதிரூபவதியை மணந்து அரியபோகங் களை நுகர்ந்து அரசுபுரிந்து வந்தான். இவன் ஆட்சியில் எல்லா வுயிர்களும் இன்புற்றிருந்தன. "பெற்ற ஓர் மகனைப் பேணி முன் காக்கும் பேரன்புத் தாயென ஞாலம், உற்ற பல்லுயிரும் உள

மகிழ்ந்திருக்க உரிமையிழேனோம்பினன்" என இவன் ஓம்பி நின்றான். இவனுடைய தேவி சிறந்த குணங்களோடு சர்வாங்க சுந்தரியாயும் அமைந்திருந்தாள். ஒத்த எழில், ஒத்த நலமுடைய இத்தம்பதி களிருவரும் உழுவலன்போடுமருவி அரிய இன்பங்கள் நுய்த்து யாண்டும் ஒருவாறிருந்தார். காலநிலைகளுக்கு இசைந்தவாறு தகுந்த இடங்களிலமர்ந்து சிறந்த நலங்களை மேவியுவந்தார். இள வேனிற்காலம் வந்தபோதெல்லாம் வையையருகே யமைத்திருந்த உய்யானத்தை யடைந்து உளங்களித்திருந்தார். அரிய கனி மரங்களும், இனிய நீர்நிலைகளும், புடையெங்கும் பொலிய இடையே யிருந்த சந்திரகாந்த மாளிகையில் தங்கி இந்திரபோகங்களையுடைய வராய் இவர் இசைந்துலாவி இன்பமீதூர்ந்தார்.

"சண்பகம் பனசம் பூகம் சந்தனம் தமாலம் தேமா
விண்பக நிமிரும் கோங்கு வெள்ளில் மந்தாரம் சுற்றுக்
கண்புக வரிதாய் வாசம் காவதம் கமழும் சோலை
பண்பயில் வண்டுந்தேனும் கிள்ளையும் படிவதம்மா"

என்றபடி படிந்திருந்த இத்தகைய கடிபொழிலிலமர்ந்து காம நுகர்ந்து வருங்கால் ஒருநாளிரவு ஊடல் நிகழ்ந்தது. பகலில் ஒரு காமக்கிழத்தியோடு நதியில் இவன் நீராடியதாக அவள் மாறு பட்டுப் புலந்து கொண்டாள். கொள்ளவே இவன் அமளித்தலத் தமர்ந்து அவளை அருகணைத்துக் கண்ணொடு கண்ணிணைத்து, ஒண் ணுதல் நீவி, மெய்யாக அங்ஙனம் நான் யாதொருபிழையும் செய்ய வில்லையே யென்று மெல்லுரையாடி மிகவும் தேற்றினான். அவள் தெரியும் எனக்கு அந்திருடு என்று பெரிதும் பிணங்கினாள்.

"திருமருங் கணைந்து வருபுனல் வையை
வரைபுரண்டென்னத் திரைநிரை துறையகத்து
அணங்கெடுத் தேந்திய அரும்பு முகிழ் முலையோன்
மதிநுதற் பெருமதி மலர்முகத் தொருத்தியை
ஆட்டியும் அணைத்தும் கூட்டியும் குலவியும்
ஏந்தியும் எடுத்தும் ஒழுக்கியும் ஈர்த்தும்
முழுக்கியும் தழுத்தியும் முலையொளி நோக்கியும்
விளிமொழி எற்றும் விதலையில் திளைத்தும்
பூசியும் புணர்த்தும் பூட்டியும் சூட்டியும்
நிறுத்தியும் நிறைத்தும் செறித்தும் செறித்தும்
எழுதியும் தப்பியும் இயைத்தும் பிணித்தும்
கட்டியும் கலத்தியும் கமழ்த்தியும் மறைத்துச்
செய்தன வெல்லாம் செய்யலர் போல"

பையவந்து இங்கே பாசாங்கு செய்வது ஐய! போதும் என அவள் கையை யொதுக்கி வெய்துயிர்த்தாள். இவன் செய்வதறியாது திகைத்து நின்று பின்னரும் பலமுறை ஓர்ந்தருளுமாறு சேர்ந் துணர்த்தினான். முடிவில் உணர்ந்திரங்கி அவள் உவந்திசைந்தாள். இவன் கலந்து மகிழ்ந்து களித்திருந்தான். சின்னாள் கழிந்தபின் அவள்வயிற்றில் ஒரு புதல்வன் பிறந்தான்; அவனுக்கு இராசகம் பீரன் என்று பெயர். அம் மகப்பேறு கண்டு அவளை மிகப் பேணி வந்தான். அவளது ஊடல் நிகழ்ச்சியையும் கூடல் நுகர்ச்சியையும் இவன் உள்ளூற விழைந்து உவந்துகொண்டான். "ஒளியிழை ஊடுக; யாம் இரப்ப இரா நீடுக" என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

ஊட லுணர்த்த வுறுமிரவே யின்பநலம்
நீட விளைக்கு நிலை.

ஊடிய இரவு பீடுடையதென்பது இதனால் கூறப்பட்டது.

1330. ஊடி யுருக்குமணி யுள்ளிசைந்தாள் கண்ணனேன்
கூடி மகிழ்ந்தான் குமரேசா—கோடியே
ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின். (ய)

இ—ள்.

குமரேசா! ஊடி யிருந்த உருக்குமணியைக் கூடிக் கண்ணன் ஏன் பேரின்பம் அடைந்தான்? எனின், ஊடுதல் காமத் திற்கு இன்பம்; கூடி முயங்கப் பெறின் அதற்கு இன்பம் என்க.

இது, ஊடலில் இன்பம் விளையு நிலையை யுணர்த்துகின்றது.

காமம் என்பது அத்துச் சாரியையும், குவ்வுருபும் பெற்றுக் காமத்திற்கு என நின்றது. ஊடுதலை விழைந்து காதலன் உவந்து மொழிந்ததனால் அதில் பலவகை யின்பநலன்கள் விளைந்துவரும் என்பது விளங்கி நின்றது.

ஊடிநின்றபொழுது மகளிராடும் சாகச உரைகள் உள்ளன்பு ததும்பி உவகை கூரும்படி யிருக்கும் ஆதலால் அவ்வூடலாடலை

ஆடவர் நிலையும் அவாவி நிற்பர். அவ் வினய மொழிகளில் சில அடியில் வருவன காண்க.

"அரும்பாலகா! முன்னம் பூமணம், சொற்பொருள், ஆகமுயிர்,
கரும்பாம் சுவை, எள்ளும் எண்ணெயும், போலொத்த காதலரைப்
பெரும்பாலில் நல்லன்னம் கங்காசலத்தைப் பிரிப்பதுபோல்
சுரும்பாம் புலவர் யமன் ஆலை செக்கெனத் தோன்றினையே! (க)

அரும்பாக்கிய கொங்கை பாலாக்கியும் உங்கள் அப்பன் நெஞ்சை
இரும்பாக்கி என்னெஞ்சைப் பித்தனாயாக்கி அவ் வத்திழையைக்
கரும்பாக்கி என்னையும் வேம்பாக்கி இவ்வண்ணம் கண்டனையே
பெரும்பாக்கியமல்லவோ மகனே யுனைப் பெற்றதுவே". (உ)

தன் புதல்வனை முன்னிலைப்படுத்திக் கணவனை மனைவி பழித்த படியிது. பிள்ளைப் பேற்றை எய்தியிருந்தபொழுது அவன் கள்ளம் போய் நின்றமையைக் குறித்து உள்ளம் புலந்து இவள் எள்ளி மொழிந்திருக்கும் இயல்பைப் பார்க்க. உரைத்துள்ள உவமைகளால் காதலுரிமையை ஊன்றி யுணர்ந்துகொள்க.

"செய்யாள் வளர்மயிலைக்கு ளென் ஆசைத் திரவியமே!
மெய்யார்தனக்குடத்தேனைத்தா வாழ்ந்தனர் மேவுதந்தை
கையாடிய தனம் பிள்ளை புசிக்கக் கடனெனவே
ஐயா வுனக்களித்தேன் அதனுல் வெறுப்பாயினரே".

என்பதும் காண்க. இங்ஙனம் வருவது பாலனைப் பழித்தல் என்னும் துறையாம். ஈன்றணிந் தாய சமயம் அயல்முகம் பார்த்து வந்த காதலனை நளினமாக இகழ்ந்து இவ்வாறு வினயமாக மொழிந்துள்ளமையால் மகளிரது இனிய சாகச நிலை எளிது புலனும்.

"பழனப் பன்மீன் அருந்த நாரை
கழனி மருதின் சென்னிச் சேக்கும்
மாநீர்ப் பொய்கை யாணர் ஊர!
தூயர் நறியர் நின் பெண்டிர்
பேஎய் அனையம்யாம் சேய் பயந்தனமே." (ஐங்குறுநூறு 70)

பெண்டிர் என்றது பரத்தையரை. தூயர் நறியர் என்றது இகழ்ச்சிக் குறிப்பு. வாவியிலுள்ள மீனினை உண்ண விரும்பி வயல் அருகில் நின்ற மருதமரத்தில் நாரை தங்கும் ஊர! என்றது பரத் தையரை நாடி அயலே அவன் ஏங்கி நின்ற பாங்கு தெரிய.

"வெறிகொ ளினச் சுரும்பு மேய்ந்ததோர் காவிக்
குறைபடு தேன் வேட்டுங் குறுகும்—நிறைமது சேர்ந்
துண்டாடுந் தன்முகத்தே செவ்வி யுடையதோர்
வண்டா மரைபிரிந்த வண்டு."

என்பதும் ஈண்டு எண்ணத் தக்கது. சிறந்த செந்தாமரையில் நிறைந்த தேனிருக்க அதனைத் துறந்து அயலேபோய் இழிந்த குவளையுள் கழிந்த தேனை விழைந்து குறுகும் வண்டு என்றது தன்னைப் பிரிந்து அயலொளிந்து மயலொடு திரிந்த தனது நாயகனது பட்டி யொழுக்கத்தைச் சுட்டி என்க.

காதலியளின் ஊடல் நிலையும், உரையாடுந்திறனும் உள்ளன்பும் இவற்றால் இனிது உணரலாகும். இங்ஙனம் காமநலம் கனிந்து கழிபேருவகையூட்டி விழைவூக்கிநிற்றலால், ஊடுதல் இன்பம் என உவந்துகொண்டான்.

அதற்கு = அவ் வூடலுக்கு. காம நலம் கனியும்படி செய்த இனிமை நோக்கி அதற்கு என்று சுட்டினான்.

பெறின் என்றது பருவம் தவறாமல் இருவரும் ஒருமுகமாய் மருவ அமையும் அருமை நோக்கி.

"கலவி வித்தாக வூடிக் கட்புனல் குளிக்கும் நல்லார்
புலவிதீர் செவ்வி நோக்கிப் புணர்முலைப் போகம் துய்த்தும்"
(திருவிளையாடற்புராணம்)

ஊடலில் பக்குவம் தெரிந்து கூடி மகிழ்ந்துள்ளதை யிது குறித்திருத்தலறிக. இன்ப நுகர்ச்சியில் தலை சிறந்துள்ள காதலர்க்கு ஊடல் ஊட்டும் உவகைநிலையும் ஆதரவும் இதனால் அறியலாகும்.

"கற்பிணை நெறியூ டற்பிணைக் கிழமை
நயத்தகு மாயின் வியத்தகு குமா" (பரிபாடல்)

தேவியாது அன்பு பொருந்திய ஊடலுரிமையை உவந்து கொண்ட குமா? என முருக மூர்த்தியை இதில் குறித்திருக்கும் அழகைப் பார்க்க. இதனால் ஊடலுவகையின் உயர்வு புலனும்.

மேல், ஊடல் விளைவை விழைந்து நின்றான். இதில், அதன் பயனை நுகர்ந்து உவந்து கொண்டான்.

காம நுகர்ச்சிக்கு ஊடலானது இன்பமாம்; அத்தகைய ஊடலுக்கு இன்பமாவது பருவமறிந்து காதலர் கூடி முயங்கலே என்பதாம்.

ஊடியிருந்த காதலி அளவறிந்து இணங்க அவளோடு கருத்தொத்துக் கூடி மகிழ்ந்த தலைவன் அவ் இன்ப நிலையை உவந்து கூறியபடியிது.

ஊடல் முறுகினும், அருகினும் காமம் சுவை கெடும் ஆதலால் அவ் இருவகை நிலைக்கும் இடையே நல்ல பக்குவத்தில் காதலர் இருவரும் ஒருமுகமாய் மண்டிக் கலந்துகொள்ளின் அக் கலவி அலகிலின்பமாய் விளையுமாதலால் அவ் இன்ப நலனை அனுபவித்து இங்ஙனம் உளமகிழ்ந்து உரைத்தான் என்க.

பாலுக்குச் சீனிபோல் காமத்துக்கு ஊடல் சுவை பயக்கும் ஆதலால் "ஊடுதல் காமத்திற்கு இன்பம்" என்றான்.

"புருவச் சிலைநுதற் பொன்துஞ்சு மல்குல்
உருவத் துடியிடையார் ஊடல் உப்பாகத்
திருவிற் றிகழ்காமத் தேன் பருகித் தெவ்வர்
பொருவற்கரிய புலக்கடலுள் ஆழ்ந்தார்" (சிந்தாமணி)

ஊடல் இனிமை செய்யக் காமத்தேன் பருகிப் புலன் நுகர்ச்சியாகிய கடலில் திளைத்தார் என இஃது உணர்த்தி நிற்றலறிக.

"ஊடுமா மடவார் செம்பஞ் சூட்டுதாட் சுவடு மேனி
கூடுமா றேற்ற பின்னர்க் குவிமுலை குழையப் புல்லிப்
பாடுசால் அல்குல் மூழ்கு மது வொன்றே யின்பம் பாரில்
நீடுயிரெவைக்கும் போதித் திடுதி யிவ்வண்ணம் நீயும்."
(உறையூர்ப்புராணம்)

புலவி திருத்தி நுகரும் கலவி கழி பேரின்பமாம்; அதனை உலகம் உவந்து கொள்க என இதில் உணர்த்தியிருத்தல் காண்க.

"ஊடற் கடற்புகுந்து ஒள்ளிழையார் சொல்லமுதம்
தேடரு முத்தமும் சேர்த்தெடுத்து—நாடரிய
அன்புப் புணையூர்ந்து ஆடவரும் நங்கையரும்
இன்பக் கடல ரிசைந்து." (உலகியல் விளக்கம்)

"கறங்குபறை காணா வுறவூனைக் காதற்
பிறங்கறை நாவாரும் அஃதே—திறமிரங்கி
ஊடி யுணர்வாரே தாமிசைவர் பல்காலம்
ஈடிலதோ ரின்ப விருந்து." (இன்னிலை 28)

"நிலவுப்பயன் கொள்ளு நெடுநிலா முற்றத்துக்
கலவியும் புலவியும் காதலற் களித்து" (சிலப்பதிகாரம்)

ஊடி யுணர்ந்து கூடி முயங்கப் பெற்றவரே நீடிய இன்பத்தை நிலையாயனுபவிப்பர் என இவை யுணர்த்தி நிற்றலறிக.

ஊடிக் கலந்த இன்ப நலனைக் காதலர் மிகவும் விழைந்து உவந்துகொள்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கண்ணன்பால் உணரப்படும்.

## கதை.

கண்ணன் துவாரகையில் அமர்ந்து அறம் பல தழைக்க அரசு புரிந்து, எண்ணிய போகங்கள் யாவும் நுகர்ந்து, இன்புற்று வருங் கால் ஒருநாள் மேன்மாடத்து நிலாமுற்றத்தில் தனது அருமை மனைவியாகிய உருக்குமணி தேவியோடு கூடி உல்லாசமாய் மேவி யிருந்தான். வசந்த கால மானதால் இளந்தென்றல் வீசக், குளிர் மதி நிலவொளி பரப்ப, அருகே மருவிய பூஞ்சோலையிலிருந்து மலர் மணம் வந்து கமுவ அலகிலின்பனுய் அளியாடல் புரிந்து அக மிக மகிழ்ந்து நின்றான். "மலர் வீற்றிருந்த மடமாது மானக் கவரி மருங்கிரட்டக், குலவத்தொடுத்த மல்லிகைப் பூங் கோதை கமழ மந்தார, அலரில் தவழ்ந்த பசுந்தென்றலந்தீங் கொழுந்து முருகுயிர்ப்ப, நிலவுப் பயன் கொள் முற்றத்து நெடியோன் செம் மாந்திருந்தனனால்." இவ்வண்ணம் காதலியோடு களித்தமர்ந்து ஆர்வவுரையாடி வருங்கால் இடையே அவளை இனிது நோக்கி "நீ கன்னியா யிருக்கும் பொழுது மன்னரெல்லாரும் உன்னை விரும்பி வந்தும், அவரனைவரையும் வெறுத்து விட்டு என்னையே விழைந்து ஏங்கினாயே! ஈதென்னை?" எனப்புன்னகைசெய்தான்.

"ஆலமும்அமுதும்வென்றுவெங்கூற்றை அமர்க்குசீவல்லையேல்வருகென்று
ஓலைவிட்டுலவி மதர்க்கும் வேற்றடங்கண் ஒண்டொடி வண்டுபாட்டயரும்
மாலைதாழ்கூந்தற் செய்யவா யுருக்குமணியொடு மணிநிற வண்ணன்
கோலநீள்முடியும் குலமுமற்றில்லா என்னை நீ விழைந்ததென் குறித்தே?"
(கூர்மபுராணம்.)

என இன்னவாறு இவன் வினவியவுடனே அவள் மனமிக மறு கினள்; நம்மைச் சோதனை செய்யச் சூதுடன் கேட்டார் என்று வேதனையிருந்தாள்; உள்ளமும் உயிரும் ஒன்றாய் மருவியும் இன்

றும் கள்ளம்கொண்டு காவுசெய்துள்ளாரே எனக் கண்ணீர்சிந்திக் கடிதுபுலந்தெழுந்து அயலேபோயயர்ந்துவிழுந்து மயலொடுபுலம்பி மறுகிக்கிடந்தாள். இவன் உருகி வருந்தி, யருகி லடைந்து, அவளை அள்ளி யணைத்து, ஆர்வமொடெடுத்து, மடியிலிருத்திக், கண்ணீர் துடைத்து, முதுகு தைவந்து, மறுமுகமனோர்ந்து அதிவிநயமாக அளிபுரிந்து நோக்கி "விநோதமாகப் பேசினேன்; வினையாய் நினைந் தாய்! பொறுத்தருள்" என்று போற்றி வேண்டினான். வேண்டியும் அவள் வெகுண்டு பிணங்க மீண்டும் இவன் விழைந்து மொழிந்து மெய் குழைந்துணர்த்தினான்.

"கொடிவார்புருவம் கூத்தாடக் குருகு பரந்த நெடுவானில்
பொடியார் வளர்காண் மதிநுதல்வேர் பொடிப்பப் பவளஇதழ்துடிப்பக்
கடியார் குவளை மலர்க்கருங்கட் கடை சேப்பூரப் புலந்துரைக்கும்
வடியார்அமுத மென்மழலை மாதர்க் கிவ்வாறு இயம்பினனால்"

இங்ஙனம் நெடிது ஆதரித்துரைத்தமையால் அவள் ஊடல் நீங்கி உள்ளூற இணங்கினாள். அவள் கனிந்து இணங்கவே இவன் கழிபேருவகையனாய்க் கலந்து நுகர்ந்தான். களிப்பு மீக்கூர்ந்தான். இக் கண்ணன் கலந்து மகிழ்ந்த வண்ணத்தை அடியில் காண்க.

"அலைவா யெழுந்த மணிகொழிக்கும் அஞ்செங் கதிர்கள் தவழ்ந்தனபோல்
சிலையார் அலங்கற் றிருமார்பில் தேங்கொள் கலவைச் செழுஞ்சாந்தம்
முலையால் எழுதும் மடமாதின் முறுவல் மாற்றி இன்புற்றுன்
மலையாற் பொழியு மழைகாத்து மண்காத்தளிக்கு மறைமுதலே."
(பாகவதம், உருக்குமணி யூடல் தீர்த்த அத்தியாயம் 13)

புலவி திருத்திக், கலவியின்பம் துய்த்து, இவன் களித்துள்ள நிலையை இஃதுணர்த்திநிற்றல் காண்க. காதலி ஊடி யிருந்தபோ தெல்லாம் அளவறிந்து இணங்கவே இவன் உளமுவந்து கூடிப் பேரின்பங்கள் நுகர்ந்தான்; அவளது இன்பநிலையை நயந்து பெரி தும் விழைந்து அவ் ஊடலை நாளும் பேணி வியந்தான். "ஊடுதல் காமத்திற்கு இன்பம்; கூடிமுயங்கப் பெறின் அதற்கு இன்பம்" என்பதை உலகம் காண இவன் உவந்து உணர்த்தி நின்றான்.

பால்காய இன்பம் பயப்பதுபோல் காமநலம்
மேலூட இன்ப மிகும்.

ஊடலே கூடலுக்கு இன்பம் என்பது இதனால் கூறப்பட்டது.

இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்.

தலைவனிடம் தவறில்லையாயினும் தலைவி ஊடலை விழைந்து கொள்வள். அதனை வியந்து புகழ்வள். ஊடல் இன்பம் தெய்வவுலகத்திலும் இல்லை என்பள். ஊடல் நீங்கும் உபாயம் சொல்லுவள். ஓயாது கூடி நுகர்வதினும் சிறிது ஊடி நிற்பது இனிது. பசியால் உணவின்பம் உயர்தல் போல் ஊடலால் கூடலின்பம் மிகும். ஊடலில் மெலிந்தவர் கூடலில் உயர்ந்து மகிழ்வர். ஊடலின்பத்தையே காதலர் மிகவும் உவந்து நிற்பர். ஊடல் நேர்ந்த இரவே கோடி இன்பமாம். காமநலம் கனியச் செய்யும் ஆதலால் ஊடலை இன்பநிலையமாக் காதலர் உவந்து கொள்வர் என்பதாம்.

கங-கூவது ஊடலுவகை முற்றிற்று.

கற்பியல் முற்றிற்று.

காமத்துப்பால் முற்றிற்று.

வள்ளுவப்போர் எம்மையன் வாய்மொழியும் மாணடியும்
உள்ள இனிக்கும் உளம்.

## இந் நூலின் தொகைப் பொருள்.

மலர்தலை யுலகில் மன்னுயிர்த் தொகைகள்
அளவில அவற்றுள் உளமலிந் துயர்ந்த
மக்கள் தாமே மதிநல முடையர்,
இகமும் பரமும் தகவுடன் அறிவர்;

அவர்தாம்,

ரு அறநெறி வழாமல் அருள்புரிந் தொழுகித்
தன்னுயி ரென்ன மன்னுயி ரோம்பி
ஊழ்முறை பேணி ஆள்வினை யாற்றிப்
பொருள்மிகப் படைத்துப் புண்ணியம் போற்றிப்
பருவமும் உருவமும் பண்பும் ஒத்த

௰ அழகிய மங்கையை விழைவொடு மணந்துதம்
ஐம்புல னின்பம் ஆர நுகர்ந்தவ்
இம்பரின் னிலையின் எளிமை தெரிந்து
செம்பொரு ளுணர்ந்து தெளிவு மிகுந்து
முடிவி லின்ப முதல்வனை விழைந்து
௧௫ படிமை புகுந்து பரமினி துறவே
ஒடிவறு கருணையா லுள்ளுற வுணர்ந்து
தெய்வப் புலமைத் திருவள் ளுவப்பேர்
ஐயன் உலகம் உய்ய அருளிய
முப்பால் அருந்தி அப்பா லுணர்ந்தே
௨௰ எப்பாலும் இன்பம் தப்பாமல் எய்தப்
பாலொடு செந்தேன் பண்பொடு கலந்து
சாலவும் இன்பம் சார்ந்திடச் செய்த
கோலமீதாமெனக் குமரேச வெண்பா
என்னும் இந்நூல் இருந்தமிழ்க் கடலுள்
௨௫ துன்னிய அமிர்தம் தோன்றிய தென்ன
இந்நாள் எழுந்த தென்றும்
மன்னுல கின்புற மன்னுக மகிழ்ந்தே.

உயிர்கள் படிமுறையொழுகிப் பரமினிதுறும்படி வள்ளுவப்பெருந்தகை அருளிய முப்பாலைச் சுவைசெய்து இருந்தமிழ்க் கடலுள் அரும்பெறல் அமிர்தம்போல் பெருங் கனிவுடன் எழுந்துள்ள இந்நூல் எலலாரும் இன்புற என்றும் நின்று நிலவும் என்பதாம். அப்பால் என்றது முத்திநிலையை. இந்நூலின் பண்பும் பயனும் இன்ப நலனும் உணர்த்தி அன்பு நலம் கனிய வழிபாடுசெய்தபடியிது. இதனால் இதன் அருமையும் பெருமையும் உரிமையும் புலனும்.

வாழ்த்து.

செந்திற் பெருமான் திருவருளால் செங்கதிர்போல்
வந்தெழுந்த இந்நூல் மன்பதைக்கு—நந்தாத
இன்ப ஒளியை யினிதருளி எஞ்ஞான்றும்
இன்பமுற வாழ்க இசைந்து.

---

அடுத்தபக்கம் பார்க்க;

## இந்நூலைக் குறித்து அறிஞர்கள் அனுப்பியுள்ள அபிப்பிராயங் களுள் சிலவற்றின் சுருக்கங்கள்.

---

### மகா மகோபாத்தியாயர், உ. வே. சாமிநாதையரவர்கள்.

"இந்நூல் மிகவும் பாராட்டற்பாலது. தமிழ் நாட்டி லுள்ள அன்பர்கள் எல்லாரும் இந்நூலை வாங்கிப் படித்து இன்புறுவார்கள் என்று நான் நம்புகின்றேன்".

### K. G. சேஷையரவர்கள் ஹைகோர்ட்டு ஜட்ஜு (Retired)

"இந்நூலை வாசித்து யான் பெரு மகிழ்ச்சியுற்றேன். இதன் அருமையும், பெருமையும் பெரிதும் பாராட்டற்பாலன. சொல் நயத்திலும், பொருள் நயத்திலும் இந்நூல் சிறந்து விளங்குகின்றது. இதில் அடங்கியுள்ள கல்வி நலங்களைத் துய்த்து நல்லறிவு மல்கி எல்லாரும் இன்புறுவார்கள் என்று நம்புகின்றேன்."

### Rao Sahib. வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்கள் G.B.V.C.

"இந்நூல் சொல்நயம், பொருள்நயம், தொனிநயம் முதலிய, பன்னயமும் மலிய இலகியுள்ளது. சுருக்கமான திருக்குறளும், அதன் பெருக்கமான இந்நூலும் முறையே வித்தும் மரமும் ஒத்திருக்கின்றன. தமிழறிந்த ஆடவர், மகளிர், இளையோர், முதியோர் முதலிய எல்லாரும் எளிதாகவும் இனிதாகவும் படித்து இம்மை மறுமைப் பயன்கள் இரண்டும் எய்தும்படி இந்நூல் இயற்றப் பெற்றிருக்கிறது".

### தமிழாசிரியர், ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள்.

"இந்நூலின் செய்யுட்களெல்லாம் மிக்க நயமுடையனவாயும், பொருத்தமான கதைகளைக் கொண்டனவாயும் திகழ்கின்றன. உரையின் நடை இன்பம் விளைக்கின்றது. இந்நூலினைக் கற்போர், கல்வியின் பல்வகை நலங்களை ஒருங்கே துய்ப்பர்."

### K. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் M. A. M. L.

"இந் நூலாசிரியரது தெளிவான இனிய தமிழ் நடையும், சொற்பொருள் விளக்குந் திறனும் கற்றார் யார்க்குங் கழிபேருவகை தரும் பான்மையன. திருக்குறட் பெரு நூலை எளிதாகவும், விளக்கமாகவும், திட்பமாகவும் உணர்ந்து இன்புறுதற்கு இந் நூல் சிறந்த கருவியாகும் என்பது என் கருத்து".

## மதிப்புரைகள்.

பல்லாவரம், சுவாமி வேதாசலம் அவர்கள்.

*"அரும்பெறல் மணிகளான திருக்குறட்பாக்களின் விழுமிய பொருள்களைத் தெளிவுற விளக்கி இந் நூல் எழில்மிகுந்துள்ளது."*

தமிழ்ச் சங்கம், மதுரை.

*"இது அரிய பெரிய நூல். பொய்யாமொழியின் 1330 அருங் குறள்களுக்கும் ஒவ்வோர் உண்மைச் சரித நிகழ்ச்சியை மிகப் பொருட் பொருத்தமுற இணைத்து வெண்பாவை முற்றுவித்துச் செல்லுந் திறம் வியந்து பாராட்டற்பாலது. பொழிப்புரை, கருத்துரை, விசேடவுரை, கதை விளக்க முதலிய இன்றியமையாத பலவகைக் குறிப்புகளும் தக்க மேற்கோள்களுடன் அழகுற இதில் அமைந்துள்ளன."*

C. V. கிருஷ்ணசாமி ஐயரவர்கள்.
*(Secretary Civil Justice Committee, Calcutta)*

*"இந் நூலாசிரியருடைய சிறந்த அறிவும், விரிந்த புலமையும், சுவை ததும்பிய சொல் வன்மையும் இதனால் எவர்க்கும் இனிது புலனும்."*

திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்கள்.

*"இந் நூல் புலவர்கள் அறிவுக்கு விருந்தென அமைந்துள்ளது தமிழுலகமுழுவதும் பெரிதும் பரவவேண்டுமென்று நாம் பெரிதும் விரும்புகின்றோம்."*

S. சோமசுந்தர பாரதி யவர்கள் M. A. B. L.
அண்ணாமலை யூனிவர்சிட்டி.

*இந் நூல் புது மொழிப் புத்தமுதாம் என்பது புனைந்துரை யன்று. உரையும் பாட்டும் ஒருங்கினிய நடைநலனும் பொருள் வளமும் பொருந்தி மிளிர்கின்றன.*

S. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள் B. A. L. T.
Educational Officer.

*"இந் நூலின் அருமை பெரிதும் பாராட்டற்குரியது. இதன் தெளிதீந் தமிழ்நடை, தமிழ்க் கல்வி நிரம்பப் பெறுதோர்க்கும் இன்பமும் பயனும் ஈய வல்லது."*

# மதிப்புரைகள்.

வானமாமலை மடாதிபதி ஸ்ரீலஸ்ரீ ஜீயர் சுவாமியவர்கள்.

"இந்நூலின் சொல் நயங்களையும், பொருள் நயங்களையும், கதைகளின் பொருத்தத்தையும் கண்டு பெரிதும் வியந்து உளமிக மகிழ்ந்தோம். தமிழுலகத்திற்கு இந்நூல் பேருதவி தரும் என்று உறுதியாய் நம்புகின்றோம்."

திருக்குறுங்குடி மடாதிபதி ஸ்ரீலஸ்ரீ ஜீயர் சுவாமியவர்கள்.

"இந்நூல் பொய்யாமொழியினைத் தழுவி, உலகம் உய்யும் வகை அரிய நலங்களை அறிவுறுத்திச், சொற்சுவை பொருட் சுவைகள் சுரந்து, இதிகாச புராணாதி கதைகளுடன் கலந்து, தேனும் பாலும் கன்னலும் அமுதும் ஒத்துக் களித்திருக்கின்றது. இந் நூலாசிரியரது கவித்திறமும், புலமை நிலையும், பெரிதும் மேம் பட்டனவாகக் கருதி மிகுதியும் இன்புறுகின்றோம்."

திருவாவடுதுறை ஆதீனம், பழனிக்குமாருத் தம்பிரான் அவர்கள்.

"திருக்குறட் குமரேச வெண்பா என்னும் அரிய பெரிய நூலும், அதன் உரையும் நம் தமிழுலகமுழுவதும் நன்கு மதித்துப் போற்றும் மாட்சிமையுடையன. இவ்வுண்மை அப் புனித நூலைக் கண்ணுறுவோர் எவர்க்கும் இனிது புலனாம்."

H. A. POPLEY.

*Secretary–National religious work, South India.*

"The author has tried to be simple and exact, and has produced a work that will be of real use to people in the Tamil country who desire to study this wonderful classic and to apply its teachings to everyday life.

I trust that the work will have a large circulation and heartily commend it to all Tamil scholars and to the Tamil public."

SIR, T. N. SIVAGNANAM PILLAI, K.T.

*Minister for Development Madras Government.*

"The Commentary appended to each stanza is an interesting and novel departure from the traditional mode of annotating Kural, and deserves every praise for its lucidity of exposition, exhaustiveness and wealth of illustrations and parallels from equally renowned Tamil classics. I am sure therefore that this work will form an invaluable addition to every library, Public, and private".